# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

இரண்டாம் மடலம் - இரண்டாம் பாகம்

VOL. II - PART II

க. இராமகிருட்டினன், இ.ஆ.ப.
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

முனைவர் இரா. மதிவாணன்
முதன்மைப் பதிப்பாசிரியர்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு
2000

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## இரண்டாம் மடலம் – இரண்டாம் பாகம்

## (கா-கூ)

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOLUME II - PART II

சு. இராமகிருட்டிணன், இ.ஆ.ப.,
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

முனைவர். இரா. மதிவாணன்
முதன்மைப்பதிப்பாசிரியர்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு
சென்னை – 8.
2000

செ.சொ.பி. அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு-5
முதற்பதிப்பு : துலை (ஐப்பசி); தி.பி. ௨௦௩௧; நவம்பர் 2000



**A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. II, Part-II**

**விலை உருபா 300.00/-**

குறியீட்டெண்: Colon No. P.J1-J, 314" K.M4

**Published by:**
Directorate of Tamil Etymological
Dictionary Project,
Govt. Museum Campus,
Egmore, Chennai - 600 008.

**Copies available at:**
International Institute of Tamil Studies
Tharamani,
Chennai - 600 113.

**Printed at:**
Royapettai Stationery and Printing and Allied Products Producers
Industrial Co-op. Society Ltd.,
Royapettai, Chennai - 600 014.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககத்தை உருவாக்கிய
மாண்புமிகு தமிழக முதலமைச்சர்

'ஐந்தமிழறிஞர்'

# கலைஞர் மு. கருணாநிதி

அவர்கள்






விலைமதிக்க ஒண்ணாத சொல்லாய்வுச் செம்மல்
உலகேத்தும் பாவாணர் ஒண்புலமை நோக்கி
இலகுமொழிச் செந்தமிழ்க்கு ஆக்கங்கள் சேர்த்த
கலைஞரே எங்கட்குக் கண்:

அலைகடல் போன்றதோர் ஆழ்ந்ததமிழ் உள்ளம்
மலைமுகடு போன்றதோர் மாபெரும் சீர்த்தி
கலைஞர் முதல்வராய் வாய்த்திருப்ப தெங்கள்
தலைமுறை பெற்றநற் பேறு:

— முதன்மைப்பதிப்பாசிரியர்

மு. கருணாநிதி
முதலமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.
நாள்: 4.10.2000

## அணிந்துரை

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி இரண்டாம் மடலம்–இரண்டாம் பாகம் – ஐந்தாம் தொகுதி நூல் வெளிவருவது அறிந்து மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன்.

தனித்தமிழ் இயக்கத்துக்கு வித்தூன்றி, தம்காலத்திலேயே அதனை நிலைநாட்டிய பெருமைக்குரியவர் மறைமலையடிகள். அவருக்குப்பின் அந்த இயக்கத்தை மேலும் வலுப்படுத்திப் பல்வேறு ஊர்களில் கிளைகளை நிறுவி, பலரையும் தனித்தமிழ்ப் பெயர் தாங்கவைத்து ஒரு மறுமலர்ச்சியை உண்டாக்கியவர் ஞா. தேவநேயப் பாவாணர். புலவர்கள் அளவிலும், ஆர்வமுடைய அன்பர்கள் அளவிலும் நின்ற தமிழ் இயக்கத்தை நாடெங்கிலும் செயற்படுத்தி, பட்டி தொட்டிகளில் எல்லாம் பைந்தமிழ் உணர்வைப் பரப்பிய பெருமை திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு உண்டு என்பதை எந்த வரலாற்றறிஞரும் மறைத்துவிட முடியாது.

பாவாணரின் தமிழ் உணர்வைப் போற்றி அவரது சொல்லாராய்ச்சித் திறன் தமிழுக்கு ஆக்கமாக முகிழ்க்க வேண்டும் என்ற உணர்வுடன் 8.5.1974 அன்று செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககம் என்ற அமைப்பை நிறுவி, அதற்குப் பாவாணர் அவர்களையே இயக்குநர் ஆகவும் நியமித்தது அன்றைய கழக அரசு.

அலுவலக அமைப்பு, உரிய வசதிகள், தக்கார் பணியமர்த்தம் என்றவாறு இத்திட்டப் பணிகள் நடைபெற்றன. இவ்வேளையில், 1976 – இல் அரசு கலைக்கப்பட்டது. அதன்பின் சொல்லாராய்ச்சிப் பணிகள் தொய்வடைந்தன. இதற்கிடையில் பாவாணர் 1981 – இல் இயற்கை எய்தினார். 1974 – இல் அகரமுதலி இயக்ககம் தொடங்கப்பட்டாலும், 13.5.1996 வரை இருபத்திரண்டு ஆண்டுகளில் இத்திட்டத்தின்கீழ் இரண்டு தொகுதி நூல்கள் மட்டுமே வெளியிடப்பட்டிருந்தன. ஆனால், 1996– இல் தமிழ் ஆட்சிமொழித் துறை எனப் புதிய அமைச்சகம் உருவாக்கப்பட்டு, முனைவர்

தமிழ்க்குடிமகன் அதன் அமைச்சராக நியமிக்கப்பட்டதையும் தொடர்ந்து நான்காண்டுகளில் மூன்று தொகுதி நூல்கள் உருவாக்கப்பட்டுள்ளன. 1997 – இல் மூன்றாம் தொகுதிநூல் வெளிவந்தது. 16.1.2000 அன்று நான்காம் தொகுதிநூல் வெளியிடப்பட்டது. இப்போது , 2000 செப்டம்பரில் ஐந்தாம் தொகுதிநூல் 680 பக்கங்கள் கொண்ட பெரிய தொகுதியாக வெளியிடப்படுகிறது.

காலத்தால் அழியாது ஞாலம் முழுவதும் பரந்துள்ள தமிழ் மொழியின் சொல்லாட்சி மாண்புகள் மேலும்மேலும் மெருகடைவதற்கு வழிவகுக்கும் வண்ணம் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி திட்டத்தின் எஞ்சியுள்ள நூல் தொகுதிகள் அனைத்தும் விரைவில் வெளிவருதற்குத் தேவையான முயற்சிகளைத் தொடர்ந்து மேற்கொள்ளுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

இந்த அகரமுதலி இயக்கக நூல்களின் வெளியீட்டுப்பணிகளுக்கு ஊக்கமளித்து, அடுத்தடுத்து நூல்கள் வெளிவருவதற்கு உதவிவரும் தமிழ் ஆட்சிமொழித்துறை அமைச்சர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், இப்பணியில் அயராது ஈடுபட்டுள்ள சான்றோர்களுக்கும் என் உளமார்ந்த பாராட்டுகள் உரித்தாகுக.

அன்புள்ள,

(மு. கருணாநிதி)

முனைவர் **மு. தமிழ்க்குடிமகன்,**
எம்.ஏ., பி.எச்.டி.,
தமிழ் ஆட்சிமொழி, தமிழ்ப் பண்பாடு,
இந்து சமயம் மற்றும்
அறநிலையத் துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

நாள் : 17.9.2000
தி.பி.2031 சிலை (புரட்டாசி) 2.

# முன்னுரை

என் நினைவுகளைப் பின்னோக்கி ஓடவிட்டால் அவை வியப்பாகவும் இருக்கின்றன; பெருமிதமாகவும் இருக்கின்றன. 1957–ஆம் ஆண்டில் பாவாணர் எழுதிய "ஒப்பியன் மொழிநூல்" என் கைக்குக் கிடைத்தது. அதுவும் பழைய புத்தகக் கடையில் – உரூபா ஒன்று விலையில் – திருச்சிராப்பள்ளியில் நான் மாணவனாக இருந்தபோது. அந்த நூல் என் வாழ்வில் எவ்வளவு பெரிய மாறுதலை உண்டாக்கிவிட்டது?

திராவிட இயக்க நெஞ்சில் ஊன்றப்பட்ட தனித்தமிழ்க் கன்று – இன்று அந்த மரத்தின் நிழலில் நாற்பதாண்டுக் கால வாழ்வு – தக்க நேரத்தில் அடையாளம் கண்டு அழைப்பு. என்னை இப்பணிக்கு ஆளாக்கிய ஐந்தமிழறிஞர் கலைஞர் அவர்களை நெஞ்சில் நிறுத்தி, கண்களில் நன்றிக் கண்ணீர் கசிய, உள்ளத்தில் பெருமிதம் பொங்க நிமிர்ந்து நின்று, கைகளைக் குவிக்கிறேன். பாவாணரின் அன்பனையே பாவாணர் வழியிலான சொற்பிறப்பியல் அகரமுதலிக்கு மூன்றாம் முறையாக முன்னுரை வழங்கிட வாய்ப்பு நல்கிய மாண்புமிகு முதல்வர் அவர்களுக்கு என் நன்றி மலரைக் காணிக்கையாக்குகிறேன்.

பாவாணரிடம் பழகத் தொடங்கிய பிறகு அவர் அமைத்த உலகத் தமிழ்க் கழகத்தில் முகவை மாவட்ட அமைப்பாளராகி 1969–இல் பறம்புக்குடியில் மாநாட்டை நடத்தி இயக்கத்துக்கு மிகப் பெரிய விளம்பரத்தை உருவாக்கினோம்.

பாவாணரின் அனைத்து நூல்களும் ஆராயப்பட்டன. அவற்றைப் படித்த பிறகு அவர் வாயிலாக மறைமலையடிகள் நூல்களைப் படித்தோம்.

பாவாணரது விருப்பப்படி அவரது "கொள்கைப் படைப்பாக" விளங்கும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தைச் செயற்படுத்த முனைந்தோம். பலரது வேண்டுகோளையும் ஏற்று 1974–இல் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககம் தொடங்கிய பெருமை அனைத்தும் மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்களையே சாரும்.

புதிய அமைச்சகத்தின் சார்பில் "இயக்ககம்" சீரமைக்கப்பட்டு, கணினி ஏந்துகளுடன் இன்று மூன்று தொகுதிகள் வந்துவிட்டன.

"இந்த இரண்டாயிரத்தில் மற்றொரு தொகுதியையும் கொண்டுவந்துவிட வேண்டும்" என்று கடந்த தொகுதியில் எழுதினேன். சொன்னபடியே எட்டே மாதத்தில் அடுத்த தொகுதி. முதன்மைப் பதிப்பாசிரியர் இரா. மதிவாணன், பதிப்பாசிரியர்கள், சொல்தொகுப்பாளர்கள் அனைவர்க்கும் என் பாராட்டுகள்.

இப்போது 'கூ' வரை வந்துள்ளோம். இன்னும் இருக்கிறது வேலை; நம்முன் நீண்டு கிடக்கிறது சாலை. இதில் நடந்து இறுதி இலக்கினை எய்துவதற்குள் எத்தனை நாள் ஆகுமோ!

மேலைநாட்டார் பல்வேறு துறைகளில் நமக்கு வழிகாட்டியும், வளஞ்சேர்த்தும் உள்ளனர். தமிழுக்கு அவர்கள் செய்த தொண்டுகள் அளப்பரியவை, எனினும் அவர்கள் வழிகாட்டிய ஆய்வில் சில மயக்கங்கள் உள்ளன. தில்லியும், கல்கத்தாவும் ஆங்கிலேயர் ஆட்சியின் தலைநகர்களாக இருந்தமையால், "சமற்கிருதமே" இந்தியாவின் ஒரே தொன்மொழி என்றும், இந்திய இலக்கியங்கள் அனைத்துக்குமே சமற்கிருதமே மூலப் பிறப்பிடம் என்றும், இந்திய மொழிகள் அனைத்துமே சமற்கிருதத்திலிருந்து பிறந்தவைதான் என்றும், தவறான எண்ணம் அவர்களிடம் ஏற்பட்டுவிட்டது.

இந்தப் போக்கினை மாற்றி, இந்தியாவில் தமிழும், சமற்கிருதமும் தொன்மை மொழிகள் (Ancient Languages) என்றும், திராவிட மொழிகள் அனைத்துக்கும் தமிழே தாய் என்றும் நிலைநாட்டுவதற்குப் பலரும் முயல வேண்டியதாயிற்று. கால்டுவெல் போன்றவர்கள் தந்த துணையுடன் பாவாணர் போன்ற அறிஞர்கள்தாம் இதனை எவராலும் மறுக்கவொண்ணாச் சான்றுகளுடன் மெய்ப்பித்தனர்.

வடமொழி தேவமொழி எனும் ஏமாற்றையும், ஆங்கிலம் உலகமொழி எனும் மயக்கத்தையும் தகர்த்தவர் பாவாணர். அதனை வலுவான சான்றுகளுடன் நிலை நிறுத்துவதுதான் இந்தச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி.

பாவாணர் திட்டம் 12 மடலங்கள் – 31 தொகுதிகள். முதன்மடலத்தை ஐந்துக்குப் பதில் மூன்றில் அடக்கிவிட்டனர். தற்போது இரு தொகுதிகள் வந்துள்ளன. எனவே, மேலும் 24 தொகுதிகள் வெளியிடப்பட்டாக வேண்டும். இறுதி இலக்கு எங்களை மலைக்கச் செய்கிறது.

அடுத்த தொகுதி திசம்பருக்குள் வந்துவிட வாய்ப்புள்ளது. கணினிப் பயன்பாடும், பதிப்பாசிரியர்கள், சொல் தொகுப்பாளர்களின் அயரா உழைப்பும் இந்த நம்பிக்கையை வெற்றிபெறச் செய்யும் என்று கருதுகிறேன்.

பாவாணர் கருதியபடி முழுமையாக முடிக்க இன்னும் 50 ஆண்டுகள் ஆகலாம். பதிப்பாசிரியர்களின் எண்ணிக்கையை விரிவுபடுத்தினால் நூல் தொகுப்பினை விரைவு படுத்தியதாக அமையும். ஏப்பிரல் 2001–ல் இதுபற்றிய சிந்தனையை முடிவாக்கி அரங்கேற்றுவோம்.

மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்களின் ஒவ்வொரு சொல்லும் – கட்டளையும் சட்டமுமாகும் காலம் இது.

இத்தொகுப்பில் 'குறி' என்ற ஒரு சொல் எத்தனை வகையான பொருள்களை உள்ளடக்கியுள்ளது என்பதனைக் கண்டால் வியப்பாக இருக்கும்.

**குறி[1]–த்தல்** *kuṟi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. கருதுதல்; to design, intend, contemplate, consider, think. *"கொலைகுறித் தன்ன மாலை" (அகநா.364).* 2. ஊழ்கம் செய்தல்; to meditate. *"ஞானியர்தாங் குறியெட்டக் காத்தார்" (அட்டப். திருவேங்கடமா.*

*57).* 3. வரையறுத்தல் (பிங்.); to determine, ascertain. 4. கோடு வரைதல்; to draw, as a line. *"புழுக் குறித்தது எழுத்தானாற் போல" (ஈடு,2.4:3).* 5. குறித்துக் கொள்ளுதல்; to note down, to make the first draft in writing, to sketch an outline in painting, to trace. இந்நூலின் அரும்பதங்களைக் குறிக்க. 6. சுட்டுதல்; to refer to, denote, suggest. specify. 7. பற்றுதல்; to pertain, relate to. *எதைக் குறித்துப் பேசினாய்?".* 8. இலக்கு வைத்தல்; to aim at, as in shooting. *"வெய்யோன் குறித்தெறி பிறங்கல்" (கந்தபு.கயமுகன்வ.38).* 9. அடைதல்; to reach, attach oneself to. *"குரவன் பதத்தைக் குறித்து" (சைவச. பொது.125).* 10. மதித்தல்; to regard, fancy. *"குறித்துச் சிவனெனக் கோபுரத்தை" (சைவச.பொது.126).* 11. சொல்லுதல்; to narrate briefly, tell. *"உற்றதுங் குறித்தான்" (கம்பரா. அகலிகை.41).* 12. முன்னறி வித்தல்; to foretell, predict, forebode. 'தீச்சகுனம் பொல்லாங்கைக் குறிக்கும்'. 13. ஊதியொலித்தல்; to blow, as a conch; to sound *"வலம்புரி குறித்து" (பாரத. பதினேழாம்.12).*

ம., க. குறி; தெ.,து. குறி.

*[குல் → குறு → குறி.]*

**குறி**[2] *kuṟi* பெ.(n.) 1. அடையாளம் (பிங்.); mark, sign, stamp, emblem. 2. இலக்கு; aim, mark to shoot at. *"கூரிய குணத்தார் குறிநின்றவன்" (தேவா. 356:3).* 3. குறியிடம் (தொல்.பொருள்.130); (Akap.) secret appointment by lovers. 4. நினைத்த இடம்; goal, destination. *"சென்று மீளாக்குறி" (கம்பரா. கடிமண.49).* 5. நோக்கம்; motive, intention. 6. குறிப்பு; suggestion, hint, insinuation. 7. மதக் கொள்கை; doctrine. *"குறிபலவுங் கொளுவினார்" (பெரியபு.திருநா.38).* 8. முன்னறிந்து கூறும் தன்மை; omen, presage, prognostic. *"குறியிறைப் புதல்வரோடு" (குறுந்.394).* 9. கூட்டம், அவை; assembly, village council. *"மத்யஸ்தரைக் கொண்டு குறிகூட்டி" (சோழவமி.55).* 10. தடவை; turn, occasion. *"ஒருகுறி கேட்போன்" (நன்.42).* 11. காலம்; time, days, season, as in, இக்குறி–now-a-days. 12. ஒழுக்கம்; character, principle of conduct. குறிகெட்டவன் (இ.வ.). 13. ஆண்குறி அல்லது பெண்குறி; generative organ. 14. அடி; stripes, lashes. 15. இலக்கணம்; definition, accurate description. *"குறியறிந் தோரே" (தொல்.பொருள்.47).*

*[குல் → குறு → குறி.]*

**குறி**[3] *kuṟi*, பெ.(n.) குறியாடு; a sheep.

*[குறு → குறி.]*

**குறி**[4] *kuṟi*, பெ.(n.) உணர்தல், தெளிதல் என்னும் இரு வகையில் நோயின் தன்மை அறிவிக்கும் சின்னங்கள்; symptoms of diseases they are of two kinds subjective and objective (சா.அக.).

*[குல் → குறு → குறி.]*

**குறி**[5] *kuṟi*, பெ.(n.) அளவு; measure. *"ஸர்வேஸ் வரனுக்கும் கைக்குறி யாப்பை வாங்குவது இங்கேயிறே" (ஈடு.1,4,6).*

*[குல் → குறி.]*

வேறெந்த அகரமுதலியும் தாராத விளக்கத்தினைத் தருவது – அந்தச் சொல் எப்பொருளில் எந்த இடத்தில் ஆளப்படுகிறது என்ற 'மேற்கோளை'யும் தருவது – தமிழ்ச் சொல்லுக்கிணையான ஆங்கிலச் சொல்லைத் தருவது – விளக்கத்தினை ஆங்கிலத்திலும் தருவது, என்ற முறையில் சிறப்புப்பெறும் இந்த அகரமுதலி தமிழர்களுக்கு மட்டுமின்றி ஆங்கிலம் மட்டுமே அறிந்து, தமிழைப் படிக்க நினைப்பார்க்கும் வழிகாட்டுவதாகும்.

மாண்புமிகு முதல்வர் கலைஞர் அவர்கள் அணிந்துரை வழங்கிச் சிறப்பித்துள்ளார்கள். இப்பணி சிறப்புடன் நடைபெற வாழ்த்தும் அவர்களுக்கு நன்றி கூறிக் கொள்கிறேன்.

இதில் ஈடுபட்டுள்ளவர்கள் மேலும் முனைப்புடன் செயற்பட வேண்டுகிறேன்.

அன்புடன்,

19.9.2000

**(மு. தமிழ்க்குடிமகன்)**

# வண்ணப்படங்களின் பட்டியல்

# வண்ணப்படங்களின் பட்டியல்

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## கா

**கா[1]** *kā*, ககரமெய் முன்னும் ஆகார உயிர் பின்னுமாகிய, ஒலிப்பு வடிவும் கூட்டெழுத்து வரி வடிவும் கொண்ட, தமிழ் நெடுங்கணக்கில் சார் பெழுத்துகளுள் ஒன்றாகிய வல்லின அசை யெழுத்து; opened syllable of velar voiceless plosive and long vowel (k + ā - kā, vowel consonant) grammatically grouped with *cārbu eluttu*, a classification among Tamil alphabets.

*[க் + ஆ – கா.]*

**கா[2]–த்தல்** *kā-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1.காவல் செய்தல்; to guard, keep guard over, watch. *"சிறைகாக்கும் காப்பு எவன் செய்யும்?" (குறள்,57).* 2. கெடாது பேணுதல்; to keep safe from harm or loss. குளிர்ப்பதனத்தில் பழங்களைப் பல நாள் காத்து வைக்கலாம் (உ.வ.). 3. அழியாது காத்தல்; to keep safe from danger or death. இடையன் ஆடுகளைக் காத்து வளர்க்கிறான் (உ.வ.). 4. உயிருடன் வைத்துப் பேணுதல்; to keep alive. முடமான சிறுவனை அவன் தாய் காத்து வருகிறாள் (உ.வ.). 5. நடைமுறையில் இருக்குமாறு செய்தல்; to keep in existence. பாவாணர் அறக்கட்டளையை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் காத்து வருகிறது (உ.வ.). 6. பாதுகாத்தல்; to preserve, shelter. *"காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்" (திருமுரு.இறுதி.8).* 7. அரசாளுதல்; to govern,rule,reign *"மன்னுயிர் காக்கு மாயிரத் தோரெட் டரசுதலைக் கொண்ட" (சிலப்.5:163,164).* 8. பின் பற்றுதல்; to observe, as vow, a fast. அவள் நோன்பு காத்தாள் (உ.வ.). 9. அரண்காப்புச் செய்தல்; to keep watch. 10.பேணி வளர்த்தல், பேணிக் காத்தல்; to tend, to nourish. 11. கவனித்துப் பேணுதல்; to take care of. 12. ஆடுமாடு முதலியன மேய்த்தல்; to graze cattle. மாடுகாத்த மாயவன் (உ.வ.).

**ம.**கா, காக்குக; **க.** கா, காய், காயு; **தெ.** காச்சு; **து.** காபுனி; **கோத.** காவ்; **துட.** கோவ்; **குட.** கா; **கொலா.** கய்; **பர்.,கட.** காப்; **கோண்.** கேபனா; **கூ.** காப; **குவி.** காசலி; **குரு.** காப்ன; **மா.** க்வபெ; **பிரா.** க்வாப்ங்க்; **பட.** காலு.

*[கல் → கள் → கவ்(வு) → கா. கவ்வுதல் = பிடித்தல், பேணிக்காத்தல். இதிலிருந்து தோன்றிய 'கா' வினையடி பாதுகாத்தல் பொருளுடையதாயிற்று. கவ்வுதல் நெருங்குதல் பொருள் தருதலின், துணையாக வழங்கும் செறிவு (அடர்த்தி)ப் பொருளும் தந்தது.]*

**கா[3]– த்தல்** *kā-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. விலக்குதல்; to prohibit. *"எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை" (குறள்,429).* 2. தடுத்தல்; to restrain. *"குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயுங் காத்த லரிது" (குறள்,29).* 3. தீமை வரவொட்டாமல் காப்பாற்றுதல்; to rescue, safeguard. *"கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்" (கம்பரா.பால.வேள்வி.41).*

**ம.** காக்குக

*[கல் → கள் → கவ் → கா = செறிதல், செறித்தல், தீங்கு வராமல் தடுத்தல், விலக்குதல்.]*

**கா[4]–த்தல்** *kā-*, 4செ.கு.வி. (v.i.) எதிர்பார்த்திருத்தல்; to wait for, to maintain. அவனுக்காகக் காத்திருந் தாள் (உ.வ.).

**குட.** க

*[கா[2] → கா[4].]*

**கா[5]–த்தல்** *kā-*, 4 செ.கு.வி. (v.i.) கா என்னும் ஏவல்;imperative verb. *"காதலையா னின்னடியே வணங்க" (மருதூரந்.84).*

*[கல் → கள் → கவ் → கா.]*

**கா**[6] *kā,* பெ.(n.) காப்புநிலை (திவா.); preservation, protection.

*[கா² → கா⁶]*

**கா**[7] *kā,* பெ.(n.) 1. காக்கப்படுஞ் சோலை, பூந்தோட்டம்; forest, pleasure grove garden. இளமரக்கா காட்சிக்கினியது (உ.வ.). 2. மரங்களும் புதர்களும் அடர்ந்த பெரிய நிலப்பரப்பு, காடு; forest, jungle, wood. *"கடிமரந் துளங்கிய காவும்" (புறநா. 23:9).* 3. விரும்பியதைத் தருவதாகக் கருதப்பட்ட கற்பகமரம் (அக.நி.); the kalpaka tree. 4. ஆல்; the banyan tree (சா.அக.).

**ம.** கா, காப்பு, காவு; **க.** கா; **தெ., து.** கான.

*[கா⁵ → கா⁷]*

**கா**[8] *kā,* பெ.(n.) 1. செறிவு, அடர்த்தி; thickness, density. 2. தோட்சுமை (அக.நி.); a load or pack, hung at either end of a pole and carried on the shoulders. *'காவினது ஒருதலைக்கண்ணே பதலை தூங்க' (புறநா.103, உரை).* 3. இருபக்கமுஞ் சுமை தாங்கும் காவடித் தண்டு; pole with ropes hung on each end, used to carry loads or gifts to a temple easily on the shoulder. *"காமமு நாணு முயிர்காவாத் தூங்கும்" (குறள்,1163).* 4. துலாக்கோல் (வின்.); lever or beam for a well-sweep; lever of a steelyard; scales 5. 100 பலம் கொண்ட நிறையளவு; a standard weight = 100 பலம். *"பனையென் அளவும் காவென் னிறையும்" (தொல்.எழுத்து.தொகை.27).* 6. பூ அல்லது இதழ் முதலியன வைக்கும் பெட்டி; receptacle, basket, as for betel or flowers. *"இவர்தரு மெல்லிலைக் காவும்" (சீவக.826).*

**ம.** காவு, காவடி; **க.** காகடி, காவடி; **தெ.** காவடி, காடி (நுகம்); **து.** காவடி; **கொலா.** காவரி; **பர்.** காங்; **கட.** காசல்; **கொண.** காஞ்த்; **குவி.** காச.

*[கல் → கள் → கவ் → கா = செறிவு, அடர்த்தி, சுமை, எடை, சுமை தூக்கும் பெட்டி.]*

**கா**[9] *kā,* இடை (part.) ஓர் அசைச்சொல்; a poetic expletive. *"புறநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா" (நன்.இடை.22 உரை).*

*[கா² → கா⁹. கா என்னும் கடிவினை பேணிக்காத்தல், துணையாதல் பொருள் தருதலின் உண்கா (உண்ணத் துணையாகு), செல்கா (செல்லத் துனையாகு) என்னும் சொற்களில், துணைவினையாகப் பெருக ஆட்சி பெற்றதால் துணைவினைகளாக வருபவை உரிச்சொற்களாகவும் அசைச் சொற்களாகவும் வளரும் என்னும் நெறிமுறைக் கிணங்க அசைச்சொல்லாயிற்று.]*

**கா**[10] *kā,* பெ.(n.) கல்விக்குத் தெய்வமான கலைமகள்; goddess of learning; Brahma's spouse.

**ம.** கா

*[கா² → கா¹⁰.]*



கா

**கா**[11] *kā,* பெ.(n.) தென்னை, பனை இவற்றின் கள் (த.சொ.அக.); toddy.

*[கல் → கள் = கூடுதல், சேர்தல், திரளுதல், ஊறுதல். கள் → கவ் → கா = ஊறிய கள்.]*

**கா**[12] *kā,* பெ.(n.) 1. துன்பம்; distress. 2. வலி; pain,ache.

*[கா = செறிவு, அடர்த்தி, மிகுதி, துன்பம், வலி.]*

**கா**[13] *kā,* பெ.(n.) உளுந்து; blackgram (சா.அக.).

*[காய் → கா.]*

**கா**[14] *kā,* பெ.(n.) காக்கை கரைதலைக் குறிக்கும் ஒலிக்குறிப்புச் சொல் (கருநா.); onomatopoeic expr. to refer to the cawing of crows.

**க.** கா

**காக்கசந்தி** *kākkašandi,* பெ.(n.) உளுந்து; blackgram (சா.அக.).

க. கா

*[காய் → கா → காக்கம் + (சத்தி) சந்தி.]*

**காக்கட்டான்** *kākkaṭṭāṉ,* பெ.(n.) 1. கொடிவகை; mussell-shell creeper. 2. கொடிக்காக்கட்டான் (L.); sky-blue bindweed.

மறுவ. காக்கணம், காக்கணங்கொவ்வை, காக்கணத்தி, கருவிளை, சங்குப்பூ, காக்கணா, கருவிளை.

ம. காக்கணம், காக்காய் வல்லி.

*[கா² → காக்கு → காக்கணம் → காக்கட்டான். காக்கட்டான் – இதனைக் காக்கரட்டான் என்பது விலக்கத்தக்க கொச்சை வழக்கு.]*

**வகைகள்:** 1. வெண்காக்கணம், 2.நீலக்காக் கணம், 3. கருங்காக்கணம் 4.இரட்டைக்காக்கணம்.

**காக்கடா** *kā-k-kaḍā,* பெ.(n.) தீப்பந்தம்; flambeau.

*[கா → காக்கு → காக்கடம் → காக்கடா. காக்கு= செறிவு, எரிவு, அனல்.]*

**காக்கண்டம்** *kākkaṇḍam,* பெ.(n.) காவடி; pole or stave of wood used for carrying burdens (சேரநா.).

ம. காகண்டம்

*[கா + கண்டம்]*

**காக்கண்டல்** *kā-k-kaṇḍal,* பெ.(n.) சதுப்புநில மரவகை; calycine mangrove (சா.அக.).

*[கா + கண்டல்]*

**காக்கணக்கிரியம்** *kākkaṇa-k-kiriyam,* பெ.(n.) காட்டுச்சுரை; forest bottle - gourd (சா. அக.).

*[காக்கணம் + கிரியம்.]*

**காக்கணங்கொவ்வை** *kākkaṇaṅkovvai,* பெ.(n.) ***காக்கட்டான்*** பார்க்க; see *kākkaṭṭāṉ.*

*[காக்கணம் + கொவ்வை]*

**காக்கணத்தி** *kākkaṇatti,* பெ.(n.) ***காக்கட்டான்*** பார்க்க; see *kākkaṭṭāṉ.*

*[காக்கணம் → காக்கணத்தி.]*

**காக்கணம்** *kākkaṇam,* பெ.(n.) 1. ***காக்கட்டான்*** பார்க்க; see *kākkaṭṭāṉ.* 2. கருப்பு, சிவப்பு புள்ளிகளைக் கொண்ட ஒருவகைத் தொழுநோய்; a kind of leprosy with black and red spots.

மறுவ. காக்கம்

ம. காக்கணம்

*[கா⁴ → காக்கு → காக்கணம் (அடர்ந்து வளரும் கொடி). கா = செறிவு, அடர்த்தி. காக்கண விதையின் கருப்பு சிவப்பு புள்ளிகளைப் போல் தொழுநோயின் வெளி அடையாளம் காணப்படுவதால் காக்கணம் தொழுநோயைக் குறித்தது.]*

**வகைகள்:** 1. வெண்காக்கணம், 2.நீலக்காக் கணம், 3. கருங்காக்கணம் 4.இரட்டைக்காக்கணம்.

**காக்கணா** *kākkaṇā,* பெ.(n.) ***காக்கட்டான்*** பார்க்க; see *kākkaṭṭāṉ.*

*[காக்கணம் →காக்கணா.]*

**காக்கத்துவான்** *kākkattuvāṉ,* பெ.(n.) கிளிவகை; cockatoo.

*[கா + கத்துவான்.]*


காக்கத்துவான்

**காக்கம்** *kākkam,* பெ.(n.) சவரிக் கொடி; bitter snake-gourd. 2. கொவ்வைக் கொடி ; a common creeper of the hedges.

*[கா² → காக்கு → காக்கம் (செறிந்து படரும் கொடி).]*

**காக்கரட்டான்** *kākkaraṭṭāṉ.* பெ.(n.) ***காக்கட்டான்*** பார்க்க; see *kākkaṭṭāṉ.*

*[காக்கட்டான் → காக்கரட்டான் (கொ.வ.).]*

**காக்கரை** *kākkarai,* பெ.(n.) கரிசல் நிலம் (மதுரை); black, stiff, clayey soil, cracking widely in dry weather, requiring a good soaking before being ploughed.

**தெ.** கக்கரை

*[கார் + கரை = காக்கரை.]*

**காக்களி** *kākkaḷi,* பெ.(n.) தேட்கொடுக்கி என்னும் மூலிகை; Indian heliotrope (சா.அக.).

*[கா + கொளி–காக்கொளி →காக்களி.]*

**காக்கறை மூக்கறை** *kākkaṟai-mūkkaṟai,* பெ.(n.) 1. அசடன் (இ.வ.); nincompoop (Loc) 2. அறிவற்றவன்; fool.

**ம.** காக்கரம் பூக்கரம் (ஒழுங்கற்ற நிலை)

*[காக்கறை + மூக்கறை.]*

காக்கறை மூக்கறை என வரும் எதுகை குறித்த மரபிணைச் சொல் 'எதனையும் காக்கும் திறனற்றவன்' [காப்பில் அறை போயவன்], 'புகழ் பெறத்தக்க தோற்றம் இழந்தவன்' எனப் பொருள் தருவதாகும் [மூக்கு அறை – மூக்கிழந்த தோற்றம்].

**காக்கன்**[1] *kākkaṉ,* பெ.(n.) 1. கடல்மீன் வகை (M.M.); a sea-fish, grey, attaining 1½ ft. in length. 2. காக்கை; a crow. 3. கருப்பன்; a black man.

**ம.** காக்கன்

*[கரு →காக்கு → காக்கன்.]*

**காக்கன்**[2] *kākkaṉ,* பெ.(n.) 1. காப்பவன்; protector. 2. தாய்மாமன்; maternal uncle. 3. மதிக்கத்தக்கவன்; respectable person.

**குச்.** காகா

*[கா → காக்கன்.]*

**காக்கன்போக்கன்** *kākkaṉ-pōkkaṉ,* பெ.(n.) 1. ஊர் பேர் தெரியாதவன்; stranger, unknown person. *"காக்கனுக்கும் போக்கனுக்கும் பூத்தாயோ முல்லை" (நாட்டுப்பா).* 2. தீயவன்(வின்.); idle vagrant.

**க., து.** காகபோக

*[காக்கறையன் = காக்கன். போக்கறையன் = போக்கன். இவ்விடைக் குறைச் சொற்கள் காக்கன் போக்கன் என எதுகை குறித்த இணைமொழி வடிவுற்றமை காணலாம்.]*

**காக்காச்சி**[1] *kākkācci,* பெ.(n.) 1.கடலிலும் ஆற்றிலும் வாழ்வதும், ஆறுவிரலம் நீளமுடையதுமான வெளிறிய மீன்வகை; a sea and river fish, silvery, attaining 6 in. in length. 2. 11¼ விரலம் வளரக்கூடிய கடல்மீன் வகை; a sea-fish, roseate, attaining 11¼ in. in length. 3. ஒருவகைக் கிளிஞ்சில்; cockle.

*[கார்[2] → காக்கு → காக்காச்சி.]*


காக்காச்சி

**காக்காச்சி**[2] *kākkācci,* பெ.(n.) காக்கையினத்தில் பெண்பால் (பேச்சு வடி.); female crow.

*[காக்கை + ஆச்சி – காக்காச்சி.]*

**காக்காந்தோல்** *kākkāntōl,* பெ.(n). குதிகாலில் உண்டாகும் கொப்புளவகை(நெல்லை.); abscess in the heel.

**மறுவ.** காக்காய்க்கொப்புளம், காக்காய்த்தோல், காக்காய்த்தோலி, காக்காய்ப்புண்.

*[கார்[2] → காக்கு → காக்கன் + தோல் – காக்கந்தோல் → காக்காந்தோல். காக்கு = திரட்சி (செறிவு). இதனைக் காக்காய்த்தோல் என்று செ.அக. குறித்திருப்பது கொச்சை வழக்கு.]*

**காக்காய்** *kākkāy,* பெ.(n.) ***காக்கை*** பார்க்க; see *kākkai. 'காக்காய் உட்காரப் பனம்பழம் விழுந்தது' (பழ.).*

*[கா+கா–காக்கா → காக்கை → காக்காய் → (ஐகார ஈறு ஆய் ஈறாகத் திரிவது கொச்சை வழக்கு.).]*

**காக்காய்க்கடி** *kākkāy-k-kaḍi,* பெ.(n.) பெரும்பாலும் சிறுவரிடையே காணப்படும் தின்பண்டம் போன்ற வற்றை எச்சில் படாமல் துணியால் மூடிக் கடிக்கும் முறை; practice of splitting sweets nuts etc; in which the object is not directly bitten but through a cloth (prevalent among children). அந்த வெல்லக்கட்டியில் எனக்குக் காக்காய்க்கடி கடித்துத்தா (உ.வா).

*[காக்காய் + கடி.]*

**காக்காய்க்கால்** *kākkāy-k-kāl,* பெ.(n.) 1. காய்ந்த வயலிற் காணும் வெடிப்பு (இ.வ.); splits or clefts in dried fields of wet cultivation. 2. காக்கையின் கால்போற் காணும் வயிரக்குற்ற வகை (உ.வ.); flaw in a gem, esp. a diamond, so called from its resembling a crow's foot. 3.குழந்தைகள் வரைபடம், கிறுக்கலான கையெழுத்து; drawing made by children, ugly hand-writing. 4.எழுத்து வரிப்பிளப்பைக் குறிக்கும் புள்ளடி(இ.வ.); caret (loc.). 5. மிளகுக் கொடி, வெற்றிலைக் கொடி போன்றவற்றின் கணுக்களில் தோன்றும் சிறிய பற்று வேர்; roots at the nodes of climbers like betel vine, pepper vine etc. 6.கற்றை கட்டுவதில் ஒரு வகை; one of the nodes of binding the sheaves of corn.

ம. காக்கக்கால்

*[காக்கை → காக்காய் + கால் (கோணலான கோடு).]*

**காக்காய்க்கால் தையல்** *kākkāy-k-kāl-taiyal,* பெ.(n.) தையல்வேலைப்பாடுகளுள் ஒன்று; feather-stitching.

*[காக்கை → காக்காய் + கால் + தையல்.]*

**காக்காய்க் குளியல்** *kākkāy-k-kuḷiyal,* பெ.(n.)முழு உடம்பையும் நனைக்காமல் தண்ணீரை அள்ளித் தெளித்துக் குளித்தல்; have wash in a hurry. காக்காய்க்குளியல் போட்டு விட்டு ஐந்து நிமிடத்தில் வந்துவிடுகிறேன் (உ.வ.).

க. காகச்நான

*[காக்கை → காக்காய் + குளியல்.]*

**காக்காய்க்குறவன்** *kākkāy-k-k-kuṟavaṉ,* பெ.(n.) காக்கை தின்னும் ஓர் இனத்தார்; crow eating people.

மறுவ. காக்கைக் குறவன்

ம. காக்கக்குறவன்

*[காக்கை → காக்காய் + குறவன்.]*

**காக்காய்க்கொப்புளம்** *kākkāy-k-koppuḷam,* பெ.(n.) ***காக்காந்தோல்*** பார்க்க; see *kākkāntōl.*

*[காக்கை → காக்காய் + கொப்புளம்.]*

**காக்காய்க்கொல்லி** *kākāy-kolli,* பெ.(n.) ***காக்கைக் கொல்லி*** பார்க்க; see *kākkai-k-kolli.*

*[காக்கை → காக்காய் + கொல்லி.]*

**காக்காய்ச்சிப்பி** *kākkāy-c-cippi,* பெ.(n.) ஏரிகளிலும் குளங்களிலும் காணும் நத்தை வகை; cockles in lakes and tanks (சா.அக).

மறுவ. காக்கைச்சிப்பி

*[காக்கை → காக்காய் + சிப்பி. காக்கை நிறம், கறுப்பு நிறச் சிப்பி. ]*



காக்காய்ச்சிப்பி

**காக்காய்ச்சோளம்** *kākkāy-c-cōḷam,* பெ.(n.) ***காக்கைச்சோளம்*** பார்க்க; see *kākkai-c-cōḷam.*

மறுவ. காக்கைச்சோளம்

ம. காக்கச்சோளம்; க. காகெஜோள.

*[காக்கை → காக்காய் +சோளம் - காக்காய்ச்சோளம். 'காக்கை' கருநிறம் குறித்தது.]*

**காக்காய்த்தாளி** *kākkāy-t-tāḷi,* பெ.(n.) கருங்காலி வகை (L); Ceylon ebony.

மறுவ. காக்கைத்தாளி

*[காக்கை → காக்காய் + தாளி.]*

**காக்காய்த்தும்பை** *kākkāy-t-tumbai,* பெ.(n.) ***காக்கைத்தும்பை*** பார்க்க; see *kākkai-t-tumbai* name of a plant, Malabar catmint(சேரநா.).

மறுவ. காக்கைத்தும்பை

ம. காகத் தும்ப; க. கரிதும்பெ.

*[காக்கை → காக்காய் + தும்பை.]*

**காக்காய்த்தோல்** *kākkāy-t-tōl,* பெ.(n.) ***காக்காந் தோல்*** பார்க்க; see *kākkāi-t-tōl.*

*[காக்கு → காக்கன் → காக்காய் + தோல். காக்கு - திரட்சி (கொ.வ.).]*

**காக்காய்த்தோலி** *kākkāy-t-tōli,* பெ.(n.) ***காக்காந்தோல்*** பார்க்க; see *kākkāi-t-tōl.*

*[காக்காய்த்தோல் → காக்காய்த்தோலி.]*

**காக்காய்நீர்** *kākkāy-nīr,* பெ.(n.) இளநீர் போன்ற தெளிவான தண்ணீர் (இ.வ.); clear, limpid water (loc.).

*[கால் + காய் – காக்காய் + நீர். வழுக்கை ஒருசிறிதும் திரளாத இளநீர் கால்காய் (தேங்காயின் காற்பகுதி வளர்ச்சி எனப்படுதலின் இது இப்பெயர் பெற்றது.)]*

**காக்காய்ப்பாலை** *kākkāy-p-pālai,* பெ.(n.) மரவகை(L.); cluster-flowered croton.

மறுவ. காக்கைப்பாலை

*[காக்கை → காக்காய் + பாலை.]*

**காக்காய்ப்பிசின்** *kākkāy-p-pisiṉ,* பெ.(n.) கருவேலமரத்தினின்று வடியும் கொற கொறப்பான கரிய போலிப்பிசின்; gum-like back extrusion

மறுவ. காக்கைப்பிசின்

*[காக்கை → காக்காய் + பிசின். 'காக்கை' கருநிறம் குறித்தது.]*

**காக்காய்ப்புண்** *kākkāy-p-puṇ,* பெ.(n.) ***காக்காந் தோல்*** பார்க்க; see *kākkān-tōl.*

*[கா² → காக்கு → காக்கன் → காக்காய் + புண். காக்கு - திரட்சி.]*

**காக்காய்ப்பூ** *kākkāy-p-pū,* பெ.(n.) 1. தொட்டிகளில் வைத்து வளர்க்கும் ஒரு பூஞ்செடி (M.M.); sispara creeper, herbaceous pot plant, which bears small purple flowers. 2. அனிச்சம்; the plant hibiscus furcatus(சேரநா.).

ம.காக்கப்பூ

*[காக்கை → காக்காய் + பூ. 'காக்கை' கருநிறம் குறித்தது.]*

**காக்காய்ப்பொன்** *kākkāy-p-poṉ,* பெ.(n.) ***காக்கைப்பொன்*** பார்க்க; see *kākkai-p-poṉ.*

*[காக்கை → காக்காய் + பொன்.]*

**காக்காய்பிடி-த்தல்** *kākkāy-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ***கால்கைபிடி-த்தல்*** பார்க்க; see *kāl-kai-piḍi-.*

ம. காக்கபிடிக்குக; க. காக்காய் கிடி; தெ. காக்கா பட்டு.

*[கால் + கை → கால்கை → காக்கை → காக்காய் + பிடி. காலும் கையும் பிடித்து, நயமாகத் தாழ்ந்து, இனிமையாகப் பேசிப் பிறரை வயப்படுத்துதலை, கால்கை பிடித்தல் என்பர். இது காக்காய் பிடித்தல் எனத் திரிந்தது. கடுங்கொச்சை வழக்கு.]*

**காக்காய் மரங்கொத்தி** *kāyāy-maraṅkotti*, பெ.(n.) ஒருவகை மரங்கொத்தி; the Malabar great black woodpecker (சேரநா.).

ம. காக்க மரங்கொத்தி

*[காக்கை → காக்காய் + மரங்கொத்தி. 'காக்கை' கருநிறம் குறித்தது.]*



காக்காய் மரங்கொத்தி

**காக்காய்மீன்**[1] *kākkāy-mīṉ*, பெ. (n.) கொருக்கை என்னும் கடல்மீன்வகை; a kind of sea - fish.

*[காக்கை → காக்காய் + மீன். 'காக்கை' கருநிறம் குறித்தது.]*



காக்காய்மீன்

**காக்காய்மீன்**[2] *kākkāy-mīṉ*, பெ. (n.) பொன்னிறப் பிசின்; gold-coloured gum (சா.அக.).

*[காக்காய் + மீன் = காக்காய்மீன். செவுள்களின் பசை போன்ற தாகலாம்.]*

**காக்காய்முள்** *kākkāy-muḷ*, பெ. (n.) 1. கூடுகட்டக் காக்கை பயன்படுத்தும் முள்; thorns used by crows in building their nests. 2. ஆனை நெருஞ்சி (M.M.). crow thorn, elephant caltrop pedalium murex.

ம. காக்கமுள்ளு

*[காக்கை → காக்காய் + முள்.]*

**காக்காய்மூக்கன்** *kākkāy-mūkkaṉ*, பெ.(n.) நீண்ட மூக்குள்ளவன் (இ.வ.); man with sharp long nose.

ம. காக்கமூக்கன்

*[காக்கை → காக்காய் + மூக்கன்.]*

**காக்காய்மூக்கி** *kākkāy-mūkki*, பெ.(n.) கருமுகிற் செய்நஞ்சு(வின்.); a prepared arsenic.

*[காக்கை → காக்காய் + மூக்கி.]*

**காக்காய்மூக்கு**[1] *kākkāy-mūkku*, பெ.(n.) நட்ட தென்னை நெற்றினின்று தோன்றும் முளை; sprout from a coconut seedling just as it begins to grow, resembling a crow's beak.

*[காக்கை → காக்காய் + மூக்கு.]*

**காக்காய்மூக்கு**[2] *kākkāy-mūkku*, பெ.(n.) கருமுகிற் செய்நஞ்சு (யாழ். அக.); a prepared arsenic.

*[காக்கை → காக்காய் + மூக்கு.]*

**காக்காய்வடை** *kākkāy-vaḍai*, பெ.(n.) நீத்தார் நினைவுநாளில் அல்லது ஈமை இறுதி நாளில் தென் புலத்தார்க்குப் படைக்கும் வடை; cake offered to manes at the end of the last rites or annual ceremony of the deceased ancesstors.

*[காக்கை → காக்காய் + வடை. காக்கைக்கு இடும் வடை எனப் பொருள்படும்.]*

**காக்காய்வல்லி** *kākāyvalli*, பெ.(n.) **காக்கணம்** பார்க்க see *kākkaṇam* (சா.அக.).

*[காக்காய் + வல்லி.]*

**காக்காய்வலிப்பு** *kākkāy-valippu,* பெ.(n.) ***கால்கை வலிப்பு*** பார்க்க; see *kālkai-valippu.*

**ம.** காக்கவலி

*[கால் + கை ~ காக்கை + வலிப்பு ~ காக்கை வலிப்பு → காக்காய் வலிப்பு எனத் திரிந்தது. கடுங்கொச்சை வழக்கு.]*

**காக்காய்வெருட்சி** *kākkāy-verutci,* பெ.(n.) காக்கைகட்கு மன வெருட்சியை உண்டாக்கும் வௌவால் வகை (M.M.); lit., crow-terror, vampire bat of which crows are scared.

*[காக்கை → காக்காய் + வெருட்சி.]*

**காக்காரர்** *kā-k-kārar,* பெ.(n.) பல்லக்கின் காத்தண்டு களைச் சுமப்போர் (வின்.); palanquin - bearers; persons who carry loads suspended from a pole on their shoulders.

*[கா + காரர் – காக்காரர்.]*

**காக்காவல்லி** *kākkā-valli,* பெ.(n.) கொடிவகை (விவசா.நூன்மு.7); a kind of creeper.

*[கார்² → காக்கு → காக்கன் → காக்கா + வல்லி.]*

**காக்காவெனல்** *kā-k-kā-v-enal,* பெ.(n.) காக்கை கரையும் ஒலிக்குறிப்பு; onom. expression signifying the cawing of the crow.

**Skt.** kāka

**க.**காகா

*[கா + கா+ எனல்.காக்கையின் 'காகா' என்னும் தொடரோசை. தொல்லை தரும் வெற்றோசை என்பது குறிப்பு.]*

**காக்கி¹** *kākki,* பெ.(n.) 1. கருநிறத்துப் பெண்; a woman of black colour. 2. காக்கை; crow.

*[காருக்கி→காக்கி. ஒ.நோ. கருக்கன் (ஆ.பா.) → கருக்கி (பெ.பா.).]*

**காக்கி²** *kākki,* பெ.(n.) ஒருவகைப் பழுப்பு நிறத்துணி; light drabor chocolate - coloured cloth produced by boiling myrobalans and sulphate of iron together.

*[கால் → காக்கு → காக்கி.]*

**காக்குத்துவான்** *kākkuttuvān,* பெ.(n.) ***காக்கத் துவான்*** பார்க்க; see *kākkattuvān.*

*[காக்கத்துவான் → காக்குத்துவான் (கொ.வ.).]*

**காக்குநாயகன்** *kākku-nāyagan,* பெ.(n.) 1. ஒரு குடி;a community in TamilNadu; 2. ஒரு படை முதல்வர்;a main of the army. *"இருப்பைபாக்கிழான் தாழி காக்குநாயகன், ஏறி அருளப் பண்ணின முதலியார் காக்கு நாயகர்க்கு காக்கு நாயகன் விசையன் செம்பிய தரையன் வைத்த" (SII.vi.330-4 p.328).*

*[காக்கு + நாயகன்.]*

**காக்குறட்டை** *kākkurattai,* பெ.(n.) காக்கண வகை (மலை.); mussell-shell creeper.

**மறுவ.** கருங்காக்கணம்

*[காக்கரட்டை → காக்குறட்டை.]*

**காக்கை¹** *kākkai,* பெ.(n.) 1. கருநிறமுடையதும் கா கா வென்று கத்துவதுமான இந்தியப் பறவை; country crow. *"காக்கை கரவா கரைந்துண்ணும்" (குறள்,527).* 2. 23 ஆம் நாண்மீன், பறவை (அவிட்டம்) (திவா.); the 23rd nakšatra.

**ம.** காக்க; **க.** காகி, காகி, காகெ; **தெ.**காகி; **து.**காக்கெ காக; **கோத.** காக் காய்க்; **துட.** காக்; **குட., பட.,** காகெ; **கொலா.** காக; **பர்.** காகன்; **கட.** காகன்; **கோண்.** காகா்; **கூ.** காக; **குவி.** காவ்வ, காவ; **குரு.** காகா; **மா.** க்வக்வெ; **பிரா.** காகொ. **Skt.** kāka; **Nep.** kāk.

**Beng.**kāk, **Guj.** kagto; **H.U.,** howā; Punj.kā; **Kash.** kāv, **Sind.** kāngum; **Mar.** kāvḷā; **Ass.** Kāyuri, **Ori.** kuvā, kāvu. **Aust.** koa.

# காக்கை வகைகள்



சாம்பல் கழுத்துக் காக்கை



கடற் காக்கை



அண்டங்காக்கை



மணியங்காக்கை



சிறுவெண் காக்கை



நீர்க் காக்கை

***kâka, kâga,*** a male crow, ***kâki,*** a female crow. Cf. D. ***kâge,*** etc.; ***kâ3, kâvu 3***. As Samskrita, in the ***Amarakôśa*** alone, has nine other names for the crow, it is certain that ***kâka, kâki,*** and ***kâga*** have been borrowed from D. wherein ***kâge*** and its dialectical forms are the only names for the crow, that is so very common also in the South of India (K.K.E.D.XX).

*[கா + கா → காக்கா → காக்கை. காகாவெனக் கத்துதலால் காக்கை எனப்பெயர்பெற்றது. காகா வெனும் அஃறிணை உயிர் ஒலிக் குறிப்பினின்று தோன்றிய சொல் (மு.தா.2).]*

**வகைகள்:**

1. காக்கை, 2. அண்டங் காக்கை, 3. சீமைக் காக்கை, 4. நீர்க் காக்கை, 5. மணியங் காக்கை.

**காக்கை[2]** *kākkai,* பெ.(n.) பேணிக்காத்தல், பாதுகாத்தல்; preserving, protecting. *"மண் காக்கைக்கு மாய்க்கைக்கும்" (அஷ்டப். திருவரங் கத்தந்.9).*

*[கா[2] → காக்கை (காத்தல்).]*

**காக்கைக் கண்** *kākkai-k-kaṇ,* பெ.(n.) 1. ஒருக் கணிப்பு கண்; squint - eye. 2. கூர்ந்து நோக்குதல்; fixing one's eyes or one spot, close attention.

ம. காக்கத்ரும்டி; க. காகெகண்ணு.

*[காக்கை + கண்.]*

**காக்கைக்கண்ணன்** *kākkai-k-kaṇṇaṉ,* பெ.(n.) காக்கை போல் செருகட் பார்வையுடையோன், மாறுகண்ணன்; squint-eyed or cross-eyed person. *"கற்புளார் செயலை நொய்து கழறினன் காக்கைக் கண்ணன்" (சிவதரு.சுவர்க்கநரகசே.31).*

*[காக்கை + கண்ணன். காக்கை ஒரு கண்ணைச் சாய்த்து நோக்கும் இயல்புடையதாதலின் மாறுகண்ணுள்ள வனைக் காக்கை கண்ணன் என்பது உலகியலாயிற்று.]*

**காக்கைக்கரிச்சான்** *kākkai-k-kariccāṉ,* பெ.(n.) 1.ஈயத்தண்டுச்செடி; a plant with lead like stem. 2. கறுப்புக் கரிசலாங்கண்ணி; black eclipse plant (சா.அக.).

*[காக்கை + கரிச்சான்.]*

**காக்கைக் கருப்பி** *kākkai-k-karuppi,* பெ.(n.)1. மிகக் கருப்பு நிறத்தவள்; a female of utter dark complexion. 2. அழகற்றவள்; an ugly woman.

ம. காக்கக்குடிக்கி

*[காக்கை + கருப்பு + இ.]*

**காக்கைக் கருப்பு** *kākkai-k-karuppu,* பெ.(n.) மிகக் கருப்பு; utter dark complexion.

ம. அட்டக் கருப்பு

*[காக்கை + கருப்பு.]*

**காக்கைக்குணம்** *kākkai-k-kuṇam,* பெ.(n.) காக்கைக்குரிய ஐந்து தன்மைகள் (திருக்கோ. 235;உரை). characteristics of a crow being five.

*[காக்கை + குணம். காக்கைக்குணங்கள்: மடியின்மை, கலங்காமை, நெடுகக் காண்டல், பொழுதிறவா திடம்புகுதல், மறைந்த புணர்ச்சி.]*

**காக்கைக் குயில்** *kākkai-k-kuyil* பெ.(n.) கருங் குயில்; the black Indian cukkoo bird.

ம. காக்ககுயில்; து. காக்குயில்; Skt. kākajāta.

*[காக்கை + குயில்.]*



காக்கைக் குயில்

**காக்கைக்குரல்** *kākkai-k-kural,* பெ.(n.) 1. காக்கை கரைதலின் ஒலி; the cry of a crow. 2. கரகரத்த குரல்; a harsh or coarse sound. 3. வசை இசை (அபஸ்வரம்); solecism.

**ம.** காகச்வரம்

*[காக்கை + குரல்.]*

**காக்கைக் குறவன்** *kākkai-k-kuṟavaṉ,* பெ.(n.) 1. காக்கை தின்னுங்குறவன்; crow eating kuṟava. 2. அழகில்லாத கருப்பு நிற ஆள்;a black ugly person. 3.***காக்காய்க் குறவன்*** பார்க்க; see *kākkay-k-kuṟavaṉ.*

**ம.** காக்க குறவன்

*[காக்கை + குறவன்.]*

**காக்கைக்கொடியாள்** *kākkai-k-koḍiyāḷ,* பெ.(n.) மூதேவி, சோம்பலுக்குரிய பெண்தெய்வம் (திவா.); the goddess of ill-luck, who has a crow on her banner.

**மறுவ.** முகடி, தவ்வை

*[காக்கை + கொடி + ஆள் = காக்கைக்கொடியாள். காக்கை வடிவம் பொறித்த கொடியுடையவள்.]*

**காக்கைகொல்லி** *kākkai-kolli,* பெ.(n.) கொடிவகை; coculus-indicus.

**மறுவ.** பேன்கொட்டை

*[காக்கை+ கொல்லி. இதன் விதை மிகுந்த நச்சுத்தன்மையுடையது; மயக்கந்தர வல்லது.]*

**காக்கைச் சுரம்** *kākkai-c-curam* பெ.(n.) ***கால்கை வலிப்பு*** பார்க்க; see *kālkaivalippu.*

**ம.** காகச்வரம்

*[கால்கைச்சுரம் → காக்கைச்சுரம்.]*

**காக்கைச் சுள்ளி** *kākkai-c-cuḷḷi,* பெ.(n.) 1. சிறிய மிளாறுகள்; small twigs.2. காகம் கூடு கட்டப் பயன்படுத்துவது போன்ற சிறு குச்சிகள்;small sticks collected by crows to build their nests.

**ம.** காக்கச் சுள்ளி

*[காக்கை + சுள்ளி = காக்கை கூடு கட்டுதற்குப்பயன் படுத்தும் சுள்ளி.]*

**காக்கைச்சேல்** *kākkai-c-cēl,* பெ.(n.) நல்ல தண்ணீரில் வாழும் கெண்டை மீன்வகை; a fresh - water coast-fish, yellowish, attaining 3 in. in length, very pugnacious.

*[கால்காய் + சேல் – காற்காய்ச்சேல் → காக்கைச் சேல். கால்காய் = இளநீர் (தெளிவான நீர்). காற்காய்ச் சேல்மீனை காக்கைச்சேல் என்பது கொச்சை வழக்கு.]*

**காக்கைச் சோளம்** *kākkai-c-cōḷam,* பெ.(n.) கருஞ்சோளம்;blcak cholam.

**ம.** காக்கச்சோளம்

*[காக்கை + சோளம். நிறத்தால் பெற்ற பெயர். அளவில் சிறிய சோளம்.]*

**காக்கைத் தனம்** *kākkai-t-taṉam,* பெ.(n.) 1. கெட்ட இயல்பு; bad notion. 2. காக்கையின் இயல்பு; the character of a crow.

**க.** காகுதன

**Skt.** kākatra

*[காக்கை + தனம்.]*

**காக்கைத் தும்பை** *kākkai-t-tumbai,* பெ.(n.) கருந் தும்பை; name of a plant, Malabar catanint (சேரநா.).

**ம.** காக்கத்தும்ப; **க.** கனிந்தும்பை.

*[காக்கை + தும்பை.]*

**காக்கைநஞ்சு** *kākkai-nañju,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு; a prepared arsenic.

*[காக்கை + நஞ்சு.]*

**காக்கைப்பலா** *kākkai-p-palā,* பெ.(n.) ஒருவகைப் கருப்புப் பலா; a black variety of Jack fruit.

*[கார்[2] → காக்கு → காக்கன் + பலா – காக்கன்பலா → காக்கைப்பலா (கொ.வ.). (நெருங்கக்காய்க்கும் இயல்பு பற்றிக் காக்கன் பலா எனப்பட்டது).]*

**காக்கைப்பலி** *kākkai-p-pali,* பெ.(n.) தென்புலத்தார் (இறந்த முன்னோர்) பொருட்டுக் காக்கைக்கு இடும் சோற்றுருண்டை; ball of rice and other ingredients placed to crows for the soul of the dead persons by the relatives. “காக்கைக்குப்பலி காட்டிய வாறே” (திருமந்.191).

*[காக்கை + பலி]*

**காக்கைப் பார்வை** *kākkai-p-pārvai,* பெ.(n.) ஒற்றைப்பார்வை; an oblique look (சா.அக.).

*[காக்கை + பார்வை]*

**காக்கைப் புள்ளி** *kākkai-p-pulli,* பெ.(n.) சிறிய கருத்த புள்ளி, மச்சம்; a small black spot.

*[காக்கை + புள்ளி]*

**காக்கைப் பேச்சு** *kākkai-p-pēccu,* பெ.(n.) கெட்ட பேச்சு; evil talk.

க. காகுநுடி

*[காக்கை + பேச்சு.]*

**காக்கைப்பொன்** *kākkai-p-pon,* பெ.(n.) 1. பொன் னிறத்தில் இருக்கும் ஒருவகைப்பித்தளை; kind of tinsel, resembling gold leaf, used for decoration at weddings and other festivals. ஒருவன் ஒரு குழகனைப் பண்ணி அதன்கழுத்திலே காக்கைப் பொன்னைத் தொற்றி (ஈடு,3:1.10). 2. பொன்னிறப் பிசின்; a gum having gold colour(த.சொ.அக.). 3. மின்னு (அப்பிரக)த் தகடு; mica in flakes (சா.அக.).

ம. காக்கபொன்னு; க. காகிபங்கார; தெ. காகிபங்காரு.

*[காக்கை + பொன். பளபளக்கும் எளிய மாழைத்தகடு, காக்கையின் கண்களுக்குக் கவர்ச்சியாகத் தோன்றுமாதலின் காக்கை விரும்பும் பொன் என்னும் பொருள் குறித்ததாகலாம்.]*

**காக்கைபாடினியம்** *kākkai-pāḍiṉiyam,* பெ.(n.) காக்கைபாடினியார் இயற்றிய யாப்பிலக்கண நூல்; an ancient work on Tamil prosody by *kākkaipāḍiṉiyār,* not extant, only a few *sutras* of which are found quoted in the old commentaries.

*[காக்கை + பாடினி + அம் – காக்கைபாடினியம்.]*

**வகைகள்:** 1. பெருங்காக்கை பாடினியம் 2. சிறுகாக்கை பாடினியம்.

**காக்கைபாடினியார்** *kākkai-pāḍiṉiyār,* பெ.(n.) காக்கை பாடினியம் என்னும் யாப்பிலக்கணஞ் செய்த பழைய ஆசிரியர் (தொல்.பொருள்.மரபு. 98, உரை); author of *kākkaipāḍiṉiyam* a Tamil prosodi.

*[காக்கை + பாடினி + ஆர் –காக்கைபாடினியார். காக்கையை வியந்து பாடியதால் பெற்ற சிறப்புப்பெயர். 'ஆர்' உயர்வுப்பன்மையீறு.]*

**காக்கைபாடினியார் நச்செள்ளையார்** *kākkai-pāḍiṉiyār-naccellaiyār,* பெ.(n.) காக்கை கரை தலைப் பாராட்டிப்பாடியமை பற்றிக் காக்கை பாடினி எனப் பெயர் பெற்றவரும் பதிற்றுப் பத்தின் ஆறாம் பத்தினை இயற்றியவருமானபெண்பாற் புலவர்; a famous poetess, author of the sixth decade of *Padirru-p-pattu,* so named because she vividly described the cawing of a crow.

*[காக்கை + பாடினி + ஆர் +நல் + செள்ளை + ஆர். 'ஆர்'உ.ப. ஈறு. நச்செள்ளை என்பது இயற்பெயர். பதிற்றுப்பத்தில் ஆறாம்பத்தினைப் பாடியவர். மேலும், குறுந்தொகை 210, புறம் 278 ஆகியவையும் இவர் பாடியவை. “விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே” என்னும் குறுந்தொகை வரிகளால், காக்கை பாடினியார் என்று சிறப்புப் பெயர் பெற்றார்.]*

**காக்கைமரங்கொத்தி** *kākkai-maraṅkotti,* பெ.(n.) ஒரு வகை மரங்கொத்தி; the Malabar great black wood pecker.

ம. காக்கமரங்கொத்தி

*[காக்கை + மரங்கொத்தி.]*

**காக்கைமல்லி** *kākkai-malli,* பெ.(n.) நுணா; wild jasmine (சா. அக.).

ம. காக்கமல்லி

*[காக்கை + மல்லி.]*

**காக்கைமனம்** *kākkai-maṉam,* பெ.(n.) தீய மனம்; evil mind.

க. காகுமன

*[காக்கை + மனம்.]*

**காக்கைமாசி** *kākkaimāci,* பெ.(n.) ***காகமாசி*** பார்க்க; see *kāga-māśi.*

*[காக்கை + மாசி.]*

**காக்கைமீன் கொத்தி** *kākkaimīṉ-kotti,* பெ.(n.) ஒரு வகை மீன் கொத்தி; brown headed stork hilled king fisher.

ம. காக்க மீன்கொத்தி

*[காக்கை + மீன்கொத்தி.]*

**காக்கைமுகம்** *kākkai-mugam,* பெ.(n.) காக்கை போன்ற முகம்; crow-faced.

**skt.** kākamukha

*[காக்கை + முகம்.]*

**காக்கைமூக்கன்** *kākkai-mūkkaṉ,* பெ.(n.) நீண்ட, கூர்மையான மூக்குள்ளவன்; a person with long nose.

ம. காக்க மூக்கன்

*[காக்கை + மூக்கன்.]*

**காக்கைமூக்கு** *kākkai-mūkku,* பெ.(n.) குறடு, இடுக்கிப்பொறி; pincers, tongs.

ம. காக்கவா; பட. காக்கெ மூக்கு.

*[காக்கை + மூக்கு.]*

**காக்கை மெய்ப்பாடு** *kākkai-meyppāḍu,* பெ.(n.) ***காகசத்துவம்*** பார்க்க; see *kāga-sattuvam.*

*[காக்கை + மெய்ப்பாடு.]*

**காக்கைவலி** *kākkai-vāli,* பெ.(n.) ***கால்கை வலிப்பு*** பார்க்க; see *kāl-kai-valippu.*

ம. காக்கவலி

*[கால் + கை + வலி – கால்கை வலி→காக்கைவலி (கொ.வ.).]*

**காக்கைவளையல்** *kākkai-vāḷaiyal,* பெ.(n.) ஒரு வகைக் கருப்பு நிறக் கண்ணாடி வளையல்; a kind of black glass bangle.

ம. காக்கவளை

*[காக்கை + வளையல்]*

**காகவிருந்தம்** *kāgavirundam,* பெ.(n.) ஒருவகை வைரம்; a kind of Diamond. *"ஒன்றிற் கட்டின வயிரங்காக விருந்தமும் உருளையுமாக ஐஞ்சும்" (SII.ii.79-143 p.396).*

*[காகம் + விருந்தம்.]*

**காக்கைவிளக்கு** *kākkai-viḷakku,* பெ.(n.) ஒரு வகை இரும்பு விளக்கு; a kind of iron lamp.

ம. காக்கவிளக்கு

*[காக்கை + விளக்கு]*

**காக்கைவேலி** *kākkai-vēli,* பெ.(n.) வேலிப்பருத்தி; headge-cotton.

*[காக்கை + வேலி.]*

**காகக்கரிப்பன்** *kāga-k-karippaṉ,* பெ.(n.) கருங் கையாந்தகரை; a black - coloured eclipse plant. *"கவிர் முடக்கற்றான் காகக்கரிப்பனீர் வல்லி" (தைலவ.தைல.94).*

*[காக்கை + கருப்பன் - காக்கைக்கருப்பன்→ காக்கைக்கருப்பான்→ காகக்கரிப்பன் (கொ.வ.).]*

**காகக்கல்** *kāga-k-kal,* பெ.(n.) கறுப்புநிறக் காந்தக்கல்; black load stone (சா.அக.)

*[காக்கை + கல் - காக்கைக்கல்→காகக்கல்.]*

**காகக்குடம்** *kāga-k-kuḍam,* பெ.(n.) எள் (த.சொ.அக.); sesame.

*[காகம் + குடம் = காகக்குடம்.]*

**காகச்சிலை** *kāga-c-cilai,* பெ.(n.) காந்த ஆற்றல் உள்ள ஒருவகை இரும்புக்கட்டி (வின்.); black load-stone, magnetic oxide of iron.

**மறுவ.** கருமுகிற்சிலை

*[கா² → காக்கு → காக்கன் + சிலை - காக்கஞ்சிலை → காகச்சிலை (கொ.வ.).]*

**காகச்சுக்கான்** *kāga-c-cukkāṉ,* பெ.(n.) கருஞ் சுக்கான் (வின்.); black marble.

*[காக்கை + சுக்கான் - காக்கைச்சுக்கான் → காகச்சுக்கான் (கொ.வ.) 'காக்கை' கருநிறம்குறித்தது.]*

**காகசகுட்டம்** *kāgaša-kuṭṭam,* பெ.(n.) கொப்புளங்கள் சிவந்த நிறத்துடனுண்டாகிப் பின் கறுத்துக் கிராம்பு முகிழினுருவத்தைப் பெற்று உடைந்து காயமாகும் தொழுநோய்வகை (சீவரட்.151.); kind of leprosy, with reddish shinning spots followed by an eruption of dark nodules.

*[காக்கை + குட்டம் - காக்கைக் குட்டம் → காக்கசக்குட்டம் → காகசகுட்டம் (கொ.வ.). 'காக்கை' கருநிறம் குறித்தது. காக்கையின் பிறப்பைப்போல் முதற்சிவந்து பின்பு கறுப்பதால் இப் பெயர் பெற்றது (த.சொ.அக.).]*

**காகசத்துவம்** *kāga-šattuvam,* பெ.(n.) மகளிரின் பத்து மெய்ப்பாடுகளுள் ஒன்று (கொக்கோ. 4.26.); (Erot.) the natural disposition of a women, classed under the crow type, one of the *ten-cattuvams.*

**Skt.** satva > **த.** சத்துவம்.

*[காக்கை→ காகம் + சத்துவம்.]*

**காகசிஞ்சை** *kāgašiñjai,* பெ.(n.) குன்றிக்கொடி (த.சொ.அக); climber of crab's eye.

*[காக்கை→ காகம் + (செஞ்சி) சிஞ்சை.]*

**காகசுரம்** *kāga-šuram,* பெ.(n.) (இசை.) இசைக் குற்றவோசை (திருவாலவா.57:14.); (Mus.)cawing note, a defect in singing.

*[காக்கை→காகம் + சுரம். 'காக்கை' கருநிறம் குறித்துக் குற்றப்பொருள் உணர்த்திற்று.]*

**காகத்துரத்தி** *kāga-t-turatti,* பெ.(n.) ஆதொண்டை (மலை.); thorny caper.

*[காக்கை+துரத்தி-காக்கைத்துரத்தி → காகத்துரத்தி.]*

**காகத்துவசத்தாள்** *kāga-t-tuvašattāḷ,* பெ.(n.) **காக்கைக்கொடியாள்** பார்க்க; see *kākkai-k-koḍiyāḷ.*

**Skt.** twaja< **த.** துவசம்

*[காக்கை→ காகம் + துவசத்தாள்.]*

**காகதாலியம்** *kāga-tāliyam,* பெ.(n.) **காகதாலீயம்** பார்க்க; see *kāga-tālīyam. "விளங்கிலிரோ... காக தாலிய மென்பதுவே" (வெங்கைக்கோ.10).*

*[காகம் + தாலம் - காகதாலம் → காகதாலியம். தாலம் = பனைமரம்.]*

**காகதாலீயம்** *kāga-tālīyam,* பெ.(n.) காக்கை பனையில் வந்து அமர, பனம்பழம் வீழ்ந்தது போல எதிர்பாராமல் இயல்பாக ஒத்து நிகழும் நிகழ்வு; illustration of the sitting of the crow on the palm-tree followed by the fall of palm-fruit as an instance of post hoc ergo propter hoc. *"காகதாலீயம்போல் வாதனையின் வசத்திலுளங் கலந்து நிற்குமேகமுற" (ஞானவா.உற்ப.66).*

*[காகதாலியம் → காகதாலீயம். காக்கை உட்கார்ந்ததால்தான் பனம்பழம் கீழே வீழ்ந்தது என வலியப் பொருத்தியுரைக்கும் ஏரணத்தாரின் வலக்காரக்கூற்று.]*

**காகதுண்டம்** *kāga-tuṇḍam,* பெ.(n.) அகில்; eagle-wood. *"ஏந்தெழிற் காகதுண்டம்" (சூளா.சீய.105)*

*[காக்கை → காகம் + துண்டம்.காக்கை கருநிறம் குறித்தது. துண்டம் = அகிற்கட்டையின் துண்டு.]*

**காகதேரி** *kāga-tēri,* பெ.(n.) மணித்தக்காளி (மலை.); black nightshade.

*[காக்கை → காகம் + தேரி. காக்கை கருநிறம் குறித்தது.]*

**காகந்தி** *kāgandi,* பெ. (n.) காவிரிப்பூம்பட்டினம்; *Kāviri-p-pūm-paṭṭiṉam* so named after one of its kings Kakantaṉ. *"ககந்தன் காத்தலிற் காகந்தியென்றே" (மணிமே.22:37).*

*[ககந்தன் → காகந்தி.]*

**காகநதி** *kāga-nadi,* பெ. (n.) காவிரியாறு; river Kāviri (த.சொ.அக.).

*[காகம் + நதி. காக்கையால் உண்டாக்கப்பட்ட ஆறு. நீர் → நீத்தம் → நத்தம் → நத்தி → நதி. 'நதா' எனில் ஒலியெழுப்புதல்; அதனால் ஒலியெழுப்பி ஓடும் ஆறு. நதி என்றாயிற்று என்பர் வடநூலார். ஒலிக்குறிப்பு எல்லா மொழிக்கும் பொதுவானதாதலின் இது பொருந்தாது.]*

**காகநாசம்** *kāga-nāšam,* பெ. (n.)1. நரிமுருங்கை; a short or stunted variety of coral tree. 2. தவசு முருங்கை; Tranquebar gendarussa. 3. காக்கை கொல்லி, ஒருவகைக் கொடி; crow - killer (சா.அக.).

*[காக்கை → காகம் + (நாற்று → நாத்து → நாச்சு → (நாச்சம்) → நாசம்.]*

**காகநாசனி** *kāga-nāšaṉi,* பெ.(n.)சேவகனார் கிழங்கு; plough root (சா. அக.).

*[காக்கை → காகம் + நாசனி.]*

**காகநாசி** *kāga-nāši,* பெ.(n.)1. பாற்சொற்றி (மூ.அ.); Indian guttapercha. 2. சிறுகொவ்வை (மலை.); crow's beak.

*[காக்கை → காகம் + நாசி.]*

த.நாஎி > வ.நாசி.

**காகநாசிகை** *kāga-nāšigai,* பெ.(n.) சிறுகோவை; crow's beak(சா.அக.).

*[காக்கை → காகம் + நாசிகை.]*

**காகநிமிளை** *kāgā-nimiḷai,* பெ.(n.) 1. கருநிமிளை (மூ.அ.); antimony.2. ஈயக்கரடு; an alloy of tin and antimony. 3. காக்கைப்பொன்; brass tinsel or brass leaf glittering like gold (சா.அக.).

*[காக்கை → காகம் + நிமிளை.]*

**காகநீலை** *kāganīlai,* பெ.(n.) நாவல்மரம்; a kind of jaumoon-plum tree.

*[காகம் + (நீலம்) நீலை.]*

**காகநேரி** *kāganēri,* பெ.(n.) மணித்தக்காளி (மலை.); black nightshade (த.சொ.அக).

*[காகம் + நேரி.]*

**காகப்புள்** *kāga-p-puḷ,* பெ.(n.) 1. காக்கை; crow. 2. 23ஆம் நாண்மீன், பறவை (அவிட்டம்) (பிங்.); the 23rd star *Aviṭṭam.*

*[காக்கை → காகம் + புள். புள் = பறவை.]*

**காகபதம்** *kāga-padam,* பெ.(n.) 1. அறுபத்தையாயிரத்து ஐந்நூற்று முப்பத்தாறு (65,536). கணங்கொண்ட காலவகை (பரத.தாள.27); (Mus.) one of ten varieties of *kālam.* 2. வயிரக்குற்றங் களுளொன்று; a kind of diamond fault. காகபாதம் பார்(உ.வ.). 3. எழுத்து விரிப்பிளப்பைக் குறிக்கும் புள்ளடி (உ.வ.); caret.

*[காக்கை → காகம் + (பாதம்) பதம்.]*

**காகபரணி** *kāga-barani,* பெ.(n.) நரிப்பயறு; a variety of greengram (த. சொ.அக.).

*[காக்கை → காகம் + பரணி.]*

**காகபலம்** *kāga-palam,* பெ.(n.) 1. வேம்பு; neem. 2. நாவல்வகை; a kind of jamboo.3. எலுமிச்சை; lime tree (சா.அக.).

*[காக்கை → காகம் + பலம்.]*

**காகபலி** *kāga-pali,* பெ.(n.) 1. பகலில் உணவு கொள்ளுதற்கு முன்பு காகத்துக்கு இடும் உணவு; ball of rice thrown to crows by Hindus just before their mid-day meal.2. இறந்தவர் (ஆன்மாவு)க்காக காகத்துக்கு இடும் உணவு; ball of rice and other ingredients placed to crows for the soul of the dead person by the relatives.

மறுவ. காக்கைப்பலி

*[காக்கை → காகம் + பலி.]*

**காகபாடாணம்** *kāga-pāḍāṇam,* பெ.(n.) ***காக்கை நஞ்சு*** பார்க்க; see *kākkai-nañju.*

**Skt.** pāsāṇa > த. பாடாணம்.

*[காக்கை → காகம் + பாடாணம்]*

**காகபாதம்**[1] *kāga-pādam,* பெ.(n.) 1. பன்னிருவகை வயிரக்குற்றங்களுள் ஒன்று; a flaw in diamond, one of 12 *vayira-k-kuṟṟam.* *"காகபாதமும் களங்கமும் விந்துவும்"* (சிலப். 14:180.).

*[காக்கை → காகம் + பாதம்.]*

**காகபாதம்**[2] *kāga-pādam,* பெ.(n.) எழுத்து வரிப்பிளப்பைக் குறிக்கும் புள்ளடி (இ.வ.); caret.

*[காக்கை → காகம் + பாதம். விடுபட்டுப்போன எழுத்து அல்லது சொல்லை இடைச்செருக இடப்படும் காக்கையின் கால் போன்ற அடையாளக் குறி.]*

**காகபிந்து** *kāga-pindu,* பெ.(n.) கரும்புள்ளி; black dot. *"வயிரம், ரக்தபிந்துவும் காகபிந்துவும் உடையன"* (S.I.I.ii,78).

மறுவ. காக்கைப்புள்ளி

**Skt.** bindu > த. பிந்து

*[காக்கை → காகம் + பிந்து.]*

**காகபீலி** *kāga-pīli,* பெ.(n.) குன்றிக்கொடி; crab's eye creeper(சா.அக.).

*[காகம் + பீலி. பீலி = தழைத்த கொடி.]*

**காகம்** *kāgam,* பெ.(n.) 1. காக்கை; crow. *"காகபந் தரிற் கருமுகிற் காளிமங்களுலும்" (கந்தபு.ஆற்றுப். 13.)* 2. 23 ஆம் நாண்மீன் பறவை (அவிட்டம்); the 23rd star (aviṭṭam). *``புடையுறு காகம் வசுக்கை நாள் பறவைபுள்ளு மாவணியு மேயவிட்டம்'' (சாதகசிந். காலநிகண். 20).* 3. கீரி;mongoose. 4. கற்பகமரம்; kalpaga tree.

மறுவ. காணுகம்

*[காக்கை → காக்கய் → காக்கம் → காகம்.]*

**காகமஞ்சி** *kāga-mañji,* பெ.(n.) காட்டுச் சாதிக்காய்; wild nut-meg (சா.அக.).

*[காகம் → மஞ்சி.]*

**காகமர்த்தம்** *kāga-marttam,* பெ.(n.) ஒருவகைக் கொம்மட்டி; a kind of colocynth (சா.அக.).

*[காகம் → மருத்தம்.]*

**காகமல்லிகை** *kāga-malligai,* பெ.(n.) ***காட்டு மல்லிகை*** பார்க்க; see *kāṭṭumalligai.*

ம. காகமாலிக

*[காக்கை + மல்லிகை.]*

**காகமலடி** *kāga-maladi,* பெ.(n.) ஐவகை மலட்டுப் பெண்களுள் ஒருத்தி; one of the five classes of barren women (சா.அக.).

*[காகம் + மலடி.]*

இரண்டு பிள்ளைப் பெற்றுப் பிறகு பிளளை பெறாதவள். ஐவகை மலடு: 1 ஆதி மலடு 2. காகமலடு 3. கதலிமலடு 4 கருப்ப மலடு 5.ஆண்மலடு

**காகமாசி** *kāga-māśi,* பெ. (n.) 1. கருந்தக்காளி; black *takkāḷi* plant. 2.செம்மணித்தக்காளி; a red variety of nightshade. *"சதபுட்பி துஸ்பரிசமுண்டி வீழி சங்கரத்தை வாராகி காகமாசி" (தைல. தைலவ.76.).* 3.மணித்தக்காளி; black nightshade. *"காகமாசிப் பாதுகைமோரடமுருக்கு" (தைலவ. தைல.135) (த.சொ.அக.).*

*[காக்கைமாசி→ காகமாசி.]*

**காகமாசிகம்** *kāga-māśigam,* பெ. (n.) வழுதலை; brinjal (சா.அக.).

*[காகம் → மாசிகம்.]*

**காகயவம்** *kāgayavam,* பெ.(n.) பதர்; chaff.

*[காகம் + (அவம்) யவம்.]*

**காகரி** *kāgari,* பெ.(n.) திப்பலி (மலை.); long pepper.

**Skt.** krkara

*[ஒருகா. கருங்கரை→ காகரை → காகரி]*

**காகருகம்** *kāgarugam,* பெ.(n.) 1.எள்ளுச்செடி; sesame seed plant. 2.எட்டி; nux vomica.3. குருவிச்சை; a parasitic plant (சா.அக.).

*[கரு→ கருக்கல் → கருக்கலகம் → காகருகம்.]*

**காகருடி** *kāgaruḍi,* பெ.(n.) 1. பன்றி; pig 2. குயில்; Indian cuckoo (சா.அக.)

*[கரு + கருளி → காக்கருளி → காகருடி.]*

**காகருபலா** *kāgaru-palā,* பெ.(n.) பூசணிக்காய்; pumpkin (சா.அக.).

*[காகல் → காகரு + பலா (கொ.வ.) .]*

**காகல்** *kāgal,* பெ.(n.) கருமை; black.

*[கரு → கருகல் → காகல்.]*

**காகலிநிசாதம்** *kāgali-niśādam,* பெ.(n.) ஏழாம் இசை வகையுள் ஒன்று; highest variety of the seventh note of the gamut, one of the *cōtaccuram.*

*[காகளி → காகலி + நிசாதம்.]*

**காகலீரவம்** *kāgalīravam,* பெ.(n.) குயில்; Indian cuckoo (சா.அக.)

*[காகல் + ஈரவம்(நிலவு).]*

**காகலூகம்** *kāgalūgam,* பெ.(n.) ஆந்தை; owl (சா.அக.).

*[காகல் + ஊகம்.]*

**காகலோத்திரம்** *kāgalōttiram,* பெ.(n.) அரக்காம்பல்; red Indian water-lily (சா.அக.).

*[காகல் + ஒத்திரம்.]*

**காகவல்லாரி** *kāga-valtāri,* பெ.(n.) குன்றிச்செடி; creeper Indian Licorice (சா.அக.).

*[காகம் + வல்லாரி.]*

**காகவாகனன்** *kāga-vāgaṉaṉ,* பெ.(n.) ***காகவூர்தியான்*** பார்க்க; see *kāga-v-ūrdiyāṉ.*

*[காகம் + வாகனன்.]*

**காகவிருந்தம்** *kāga-virundam,* பெ.(n.) வயிரமணி வகை; a variety of diamond. *"வயிரம் காகவிருந்தமும் உருளையுமாக ஐந்தும்" (S.I.I.II. 79–143 பக்.396).*

*[காக்கை → காகம் + விருந்தம்.]*

**காகவூர்தியான்** *kāga-v-ūrdiyāṉ,* பெ.(n.) காக்கையை ஊர்தியாகக் கொண்ட சனி (காரி)க் கடவுள்; Sāturn, as riding a crow.

*[காக்கை → காகம் + ஊர்தியான்.]*

**காகவேப்பிலை** *kāga-vēppilai,* பெ.(n.) கறுப்பு வேப்பிலை; false wampee tree (சா.அக.).

*[காக்கை → காகம் + வேப்பிலை.]*

**காகவோசை** *kāga-v-ōšai,* பெ. (n.) காக்கை கத்துவது போன்ற காட்டோசை; cawing note, a defect in singing. *"வினைபடு காகவோசை" (திருவாலவா.57:26.)*

*[காக்கை → காகம் + ஓசை. காக்கை கருநிறம் குறித்துக் குற்றப்பொருள் உணர்த்துகிறது. இசைவாணர்க்கு ஒவ்வாத ஓசைக்குற்றம். இதனை அவச்சுரம் என்பர்.]*

**காகளம்**[1] *kāgaḷam,* பெ.(n.)1. எக்காளம்; trumpet. *"கல்லென விரங்குறு கரடி காகளம்" (கந்தபு. சரவண.9).* 2. பித்தளையாலான நீண்ட குழலிசைக் கருவி (கோயில் விழாக்களிலும், மதிப்புரவு வரவேற்பு நிகழ்ச்சிகளிலும் இயக்கப் பெறும்.); a kind of cornet (with a heavy sound, used in temple processions, and in welcome ceremonies). *"அக நாழிகைச் சென்னடைக்கு அடுத்தன தட்டழி, மத்தளி, கரடிகை, தாளம், காகளம் ஏற்றி" (பார்த்திப சேகரபுரச் செப்பேடுகள் கி.பி.9 ஆம் நூற்றாண்டு)* 3.புள்ளோசை; bird's noise (த.சொ.அக.).

**Skt.** kahala

*[காகாளம் → காகளம்.]*


காகளம்

**காகளம்**[2] *kāgaḷam,* பெ.(n.)1. தொண்டையின் எலும்பு முருந்து; the thyroid cartilage (சா.அக.). 2. ஒருவகைக் கழுத்தணி;a kind of necklace.

*[காகாளம் → காகளம்.]*

**காகளி** *kāgaḷi,* பெ.(n.) இன்னிசை; a musical, melody, tune.

*[கா + களி. கா = பெரிய. காகளி = பெருங்களிப்பு மிகப் பாடுவது.]*

**காகா** *kākā,* பெ.(n.) 1. காக்கையின் ஓசை; the cawing of crow. 2. நாணல்; reeds (சா.அக.).

*[கா + கா – காகா = கால்காலாக (குச்சிக் குச்சியாக) இருக்கும் நாணலும் இப்பெயர் பெற்றது.]*

**காகாங்கி** *kākāṅgi,* பெ.(n.) சிறுகோவை; a small variety of crow creeper of the clitcrea genus (சா.அக.)

*[காகம் → காகாங்கி.]*

**காகாசி** *kākāši,* பெ.(n.) ஒருவகைக் கடல்மீன்; a kind of sea-fish (சா.அக.).

*[காக்காச்சி – காகாசி.]*

**காகாண்டம்** *kākāṇḍam,* பெ.(n.) வெள்ளைக் கரும்பு; white sugar-cane (சா.அக.).

*[ஒருகா. கோ + கண்டம் – கோகண்டம் → காகண்டம்.]*

**காகாரி** *kākāri,* பெ.(n.) ஆந்தை; owl. (த.சொ.அக.).

*[காகல்(கருமை) → காகாலி + காகாரி.]*

**காகாலன்** *kākālaṉ,* பெ. (n.) அண்டங்காக்கை; raven.

*[கருங்காலன் → காகாலன்.]*

**காகாவிரிச்சி** *kākā-viricci,* பெ. (n.) குருதியுண்ணும் வாவல் பறவை (யாழ்ப்.) ; a kind of vampire-bat of black colour and bristling hair (J.).

மறுவ. காகாபிசாசு

*[காக்கை→ காக்கா→ காகா + (வெருட்சி) விரிச்சி (கொ.வ.). காக்கைகளை அஞ்சியோடச் செய்யும் இயல்புடைய வாவல்பறவை என்பது கருத்து.]*

**காகாளம்** *kākāḷam,* பெ.(n.) ***காளம்*** பார்க்க; see *kāḷam.*

*[கா+காளம். கா = பெரியது. காளம் = எக்காள இசைக்கருவி.]*

**காகிவெல்லம்** *kāgi-vellam,* பெ. (n.) பழுப்பு வெல்லம் (மதி.கள.ii,112); crude jaggery.

*[காக்கை–காக்கி (தரம் குறைந்தது). காக்கி + வெல்லம் – காக்கிவெல்லம் → காகிவெல்லம்.]*

**காகு** *kāgu,* பெ.(n.) கூறப்படாத அல்லது வேண்டாத பொருளைத் தரக்கூடிய சொல்லின் ஓசை வேறுபாடு. (குறள்,1318, உரை); modulation of voice which indicates an implied meaning.

க.காவு

*[காவு→காகு. (களத்தில் கதிரடிக்கும்போது தவசங்களில் சேர்ந்துவிடும் கதிர்பொதி கூளங்கள் காவு எனப்படும்.இது காகு எனத் திரிந்தது.)]*

**காகுத்தன்** *kāguttaṉ,* பெ.(n.) காகுத்தக் குலத்தில் தோன்றிய இராமன்; *Rama,* the hero of the *Rāmāyana,* as a Kakutstha. *"உற்ற ஞாலத்தொரு நகர் காகுத்தன்,அற்றமில் கவியாற் றந்தது" (சேதுபு.சேதுச.11.) (த.சொ.அக.).*

**காகுளி**[1] *kāguḷi,* பெ. (n.) 1. பேய் கத்தினாற்போல் அஞ்சத்தக்க வல்லோசையில் பாடுவது (கல்லா. 21:40); harsh demoniac sound produced while singing. *வெள்ளை காகுளி கீழோசை வெடிகுரனாசி" (திருவிளை.விறகு.30).* 2.மிடற்றில் எழும் தாழ்வு ஓசை (பிங்.); guttural sound.

*[காவு → காகு → காகுளி.]*

காவு = தவசங்களில் கலந்துள்ள கதிர்பொதி கூளங்கள், குப்பையாகக் கருதப்படும் கதிரின் புடைக்கூறுகளான கொம்மை. இவை வேண்டாதவையென உழவர் களால் நீக்கப்படுதலின் விரும்பத்தகாத ஓசை காகுளி எனப்பட்டது. இதனோடு விரும்பத்தக்க காகளி இசையை ஒப்பாகக் கருதிச் செ.அக. காகுளி என்னும் சொல்லுக்கு மூன்றாம் பொருளாக 'இசை' எனப் பொருள் தந்திருப்பது தவறு.

**காகுளி**[2] *kāguḷi,* பெ. (n.) மெத்தை, இருக்கை (பிங்.); bed, seat.

*[காவு → காகு→ காகுளி=கதிர் பொதிவளங்களான காவு கொம்மை உள்ளடைத்த மெத்தை.]*

**காகூவெனல்** *kā-kū-enal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr.as in wailing.

*[கா + கூ + எனல். 'கா' 'கூ'என்பன வெற்றோசைக் குறிப்புகள். கந்தரனுபூதியில் "கூகாவென வென்கிளை கூடியழ" என மாற்றிக் கூறினமை காண்க.]*

**காகொடி** *kākoḍi,* பெ.(n.) எட்டிமரம் (மலை.); nux vomica tree (சா.அக.).

*[கா + கொடி (கொடியது).]*

**காகோடகி** *kākōḍagi,* பெ.(n.) வாலுளுவை (மலை.); spindle tree.

*[ஒருகா. கார் → கா + கோடகி.]*

**காகோடி** *kākōḍi,* பெ. (n.) ***காகொடி*** பார்க்க; see *kākoḍi.*

*[கா + கோடி. கொடு → கொடி → கோடி (கொடியது). கா = பெரிய.]*

**காகோடியன்** *kā-kōḍiyaṉ,* பெ.(n.) கழைக்கூத்தன் (அக.நி.); strolling dancer.

*[கா + கோடியன். கா = தண்டு, தடி, கழை. கோடியன் = கூத்தன்.]*

**காகோதம்** *kākōdam,* பெ.(n.) ***காகோதரம்*** பார்க்க; see *kākōdaram.* *"கங்குலிரைதேருங் காகோத ராசனும்" (திருப்பு.).*

*[கால்கொள் உதரம் → காகோதரம் → காகோதம்.]*

**காகோதரம்** *kākōdaram,* பெ.(n.) பாம்பு (பிங்.); snake, that which moves on its belly in a zigzag way.

*[கால்கொள் + உதரம் (வயிறு) – காகோதரம் (கொ.வ.) வயிற்றைக் காலாகக் கொண்டது.]*

**காகோலம்** *kākōlam,* பெ. (n.) அண்டங்காக்கை (உரி.நி.); black jungle crow, raven.

*[கார் + கோலம் – கார்க்கோலம் → காகோலம் (கருநிறத்தது).]*

**காகோளி** *kākōḷi,* பெ.(n.) 1.அசோக மரம் (திவா.); tree *aśōkā.* 2. தேட்கொடுக்கி (மலை.); Indian tutnsole. 3. கொடியரசு (மலை.); wild pipal.

*[கா (பெரிய) + கோளி (பூவாது காய்க்கும் மரம்).]*

**காங்கயநாடு** *kāṅgayanāḍu,* பெ. (n.) கொங்கு நாட்டின் 24 நாடுகளுள் ஒன்று; one of the 24 *nāḍu* of *kongu* country.

*[காங்கயம் + நாடு.]*

**காங்கயம்** *kāṅgayam,* பெ.(n.) ஈரோடு மாவட்டத்திலுள்ள ஒரு வட்டத்தின் தலைநகரம்; capital of taluk in Erode dt.

*[கங்கை → கங்கையர் → காங்கையர் → காங்கேயம் காங்கயம்.]*

**காங்கயம்காளை** *kāṅgayam-kāḷai,* பெ.(n.) வேளாண் வேலைகளுக்கு உகந்த காளைகள்; bulls fit for agriculture.

*[காங்கயம் + காளை.]*

**காங்கி** *kāṅgi,* பெ. (n.) பேராசைக்காரன்; avaricious person. *"மற்றவன் கைத்துண்பான் காங்கி யெனப் படுவான்" (நான்மணிக்.61).*

*[காங்கு→ காங்கி. காங்குதல் = பேராசை கொள்ளுதல்.]*

**காங்கிசை** *kāṅgiśai,* பெ.(n.) விருப்பம்; desire. *"காங்கிசை மிக்க மறக்கொடி வெற்றியில்" (திருப்பு.263).*

*[காங்கு + இசை.]*

**காங்கு**[1] *kāṅgu,* பெ.(n.) 1. கருநீல நிறம்; dark blue colour. *"காங்கிட்ட கச்சையுமாய்க் கானவர்கள் வந்து கண்டு" (கூளப்ப.66).* 2.கருநீலப்புடைவை; dark blue colour saree.

*[கங்கு → காங்கு.]*

**காங்கு**[2] *kāṅgu,* பெ.(n.) கோங்கு (L.); common caung.

*[கோங்கு →காங்கு.]*

**காங்கு**[3]**–தல்** *kāṅgu-,* 5 செ.கு.வி.(v.i) பேராசை கொள்ளுதல்; to get arathicious.

*[கா =பெரிதாதல். கா →காங்கு.]*

**காங்கு**[4] *kāṅgu,* பெ.(n.) பெரும்பானை; large earthen pot.

*[த. காங்கு > Chin. kang]*

*[கா (பெரியது) → காங்கு.]*

**காங்குப்புடவை** *kāṅgu-p-puḍavai,* பெ.(n.) நிறமூட்டப்பட்ட புடவை(G.Sm.D.i.265); a kind of coloured saree.

ம.காங்கி; க.காங்கு காகு; து. காங்கு

*[காங்கு + புடவை.]*

**காங்கூலம்** *kāṅgūlam,* பெ.(n.) ஆட்காட்டிவிரல், பெருவிரல், நடுவிரல் ஆகியவை ஒட்டிநிற்க மோதிரவிரல் முடங்கிச் சுண்டுவிரல் நிமிர்ந்து

நிற்கும் 33 இணையாவினைக்கை வகைகளுள் ஒன்றான நாட்டிய நளிநயக்கை (சிலப்.3;18, உரை); (Nāṭṭya) a gesture with one hand in which the thumb, the forefinger and the middle finger are joined and bent forward while the ring-finger is folded and the little finger is held upright, one of 33 *iṇaiyā-viṉaikkai.*

*[ஒருகா. நாஞ்சில் → நாங்கில் → நாங்கூலம் → காங்கூலம் (கொ.வ.). நாஞ்சில் = ஏர்.]*

வகை: 1. குவிகாங்கூலம், 2. முகிழ்காங்கூலம், 3. விரிகாங்கூலம்.

**காங்கெயம்** *kāṅgeyam,* பெ.(n.) பொன்; gold. *"காங்கெயத் தொழிற் கம்மியர்" (இரகு. திக்கு.189).*

*[கங்கம் → காங்கெயம் (கங்க நாட்டில் கிடைத்த பொன்.]*

**காங்கெயர்** *kāṅgeyar,* பெ.(n.) 1. கங்கநாட்டினர்; inhabitants of the country ruled by the Gangas. *"பொப்பண காங்கெயர்கோன்" (சிலப்.பக்.11).* 2. உரிச்சொல் நிகண்டு செய்த ஆசிரியர்; name of the author of the Uriccol-nikaṇḍu. *"முந்துகாங்கெய னுரிச்சொல்" (ஆ.நி.)*

*[காங்கம் → கங்கயர் → கங்கெயர் (கொ.வ.).]*

**காங்கேயம்** *kāṅgēyam,* பெ.(n.) கோரைக் கிழங்கு; *kōrayroot* (சா.அக.).

*[கங்கம் → காங்கேயம்.]*

**காங்கேயர்** *kāṅgēyar,* பெ.(n.) 1. திருச்செங்கோட்டிற்கு அருகில் மோரூரில் வாழ்ந்த கொங்கு வேளாளர் தலைவர்; a leader kongu vēlālar who lived at Morur.

*[கங்கம் – கங்கயம்–காங்கயம்–காங்கேயர்.]*

கொங்கு நாட்டு வேளாளர்களில் காங்கேயர் குடி வள்வண்மை மிக்கது. மோரூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த குறுநிலத் தலைவர்கள். திருச்செங்கோடு நகரில் நிலத்தம்பிரான் கோயிலிலும், மலைமேல் உள்ள உமையொரு பாகர், வேலவர் கோயிலிலும் பல திருப்பணிகள் செய்துள்ளனர். சிலப்பதிகாரத்திற்கு உரையெழுதிய அடியார்க்கு நல்லாரை ஆதரித்தவர்கள். "காங்கேயர் கோனளித்த சோற்றுச் செறுக்கல்லவோ மூன்றுரை கண்டதுவே" என்று அடியார்க்கு நல்லார் உரை போற்றும். திருச்செங்கோடு திருப்பணி மாலையும் பாம்பலங்காரர் கோவையும் இவர்களைப் பற்றிய கூடுதல் விவரம் தரும் நூல்கள்.

**காங்கேயன்** *kāṅgēyaṉ,* பெ.(n.) 1. முருகன்; God Muruga. *"ஈங்கனம் நமது கண்ணினெய்திய குமரன் கங்கை தாங்கினள் கொண்டு சென்று சரவணத் திடுதலாலே காங்கெயனெனப் பெயர்பெற்றான்" (கந்தபு. திருவிளை.16).* 2. வீட்டுமன் (சூடா.); Bishma. *"காங்கேய னுள்ளிட்ட காவலர்கள்" (பாரத வெண். ஸ்ரீவாசுதேவன் 46.).*

*[கங்கை → கங்கையன் → காங்கேயன்.]*

**காங்கை** *kāṅgai,* பெ. (n.) வெப்பம்,சூடு; heat, feverishness, pyrexia (radiation of heat). திருச்சியை விட மதுரை காங்கையான இடம் (உ.வ.)

**மறுவ.** வெம்மை, வெக்கை, சூடு, உருப்பம், உருமம்.

**க, பட** காங்கெ; **தெ.**காக.

*[காய் → காய்ங்கு → காங்கு → காங்கை (வே.க.186).]*

*காய் > வ. காச் (kāś)*

**ய.ச.**போலி எ.டு. இயை → இசை. நெயவு–நெசவு, நேயம் → நேசம், வாயில் → வாசல்.

இங்கனம் யகர சகரப் போலியால் ஒளிவீசுதலைக் குறிக்கும் காய் என்னும் தென்சொல் வடமொழியில் 'காச்' என்று திரிந்துள்ளது. வடமொழியில் இச் சொல்லிற்கு வேரில்லாமலிருப்பதுடன், இதிலுள்ள சகரம் தமிழ்ச் சகரமாய் இருப்பதும் கவனிக்கத் தக்கது. ப்ர என்னும் முன்னொட்டுப் பெற்று இச்சொல் ப்ரகாச் என்று பெரிதும் வழங்குகிறது (செல்வி 78. பிப்ரவரி, 285).

**காங்கையன்** *kāṅgaiyaṉ,* பெ.(n.) நீலச் செய்நஞ்சு(வின்.); a prepared arsenic.

*[காங்கு = எரிதல், காய்தல். காங்கு → காங்கை → காங்கையன்.]*

**காச்சக்கீரை** *kācca-k-kīrai,* பெ.(n.) புளிச்சைக்கீரை (வின்); Indian brown hemp.

தெ.காசி

*[கச்சல் → காச்சல் + கீரை காச்சக்கீரை. கச்சல் = இளமை.]*

**காச்சகம்** *kāccagam,* பெ.(n.) பேய்ப் புடல்; devil's gourd (சா.அக.).

*[காய் – காய்ச்சகம் – காச்சகம்.]*

**காச்சகற்கீரை** *kāccagaṟkērai,* பெ.(n.) முன்னைக் கீரை; leaves of the Indian headache tree (சா.அக.).

*[காய் – காய்ச்சு + அகல் + கீரை.]*

**காச்சரக்கிழங்கு** *kāccara-k-kḷaṅgu,* பெ.(n.) மஞ்சள் முள்ளங்கி; carrot (சா.அக.).

*[காய் – காய்ச்சல் – காச்சல் → காச்சலம்→காச்சரம்+ கிழங்கு.]*

**காச்சரக்கு** *kāccarakku,* பெ.(n.) ***காச்சக்கீரை*** பார்க்க; see *kācca-k-kīrai* (சா.அக.).

*[காச்சக்கீரை→ காச்சரக்கு.]*

**காச்சல்** *kāccal,* பெ.(n.) ***காய்ச்சல்*** பார்க்க; see *kāyccal.*

*[காய்ச்சல் → காச்சல்.]*

**காச்சலம்** *kāccalam,* பெ.(n.) தேவதாரு; red cedar (சா.அக.).

*[கா (பெரியது) + காச்சலம்.]*

**காச்சி**[1] *kācci,* பெ.(n.) துவரை (மலை.); common dhal.

*[காய் → காய்ச்சி → காச்சி (அடர்ந்து காய்ப்பது).]*

**காச்சி**[2] *kācci,* பெ.(n.) காய்ச்சிய உப்பு என்னும் வளையலுப்பு; glass-gall (சா.அக.).

*[காய்ச்சி→ காச்சி.]*

**காச்சிக்கிழங்கு** *kācci-k-kiḻaṅgu* பெ.(n.) பெரு வள்ளிக் கிழங்கு; white yam (சா.அக.).

*[காய் → காச்சி + கிழங்கு.]*

**காச்சிகம்** *kāccigam,* பெ.(n.) துவரை; common dhal (சா.அக.).

*[காச்சி → காச்சிகம்.]*

**காச்சிரம்** *kācciram,* பெ.(n.) நிலப் பனைக் கிழங்கு; root of ground palm (சா.அக.).

*[காய் → காய்ச்சி → காச்சி → காச்சிரம்.]*

**காச்சிலை** *kāccilai,* பெ.(n.) கஞ்சா இலை; Ganjah leaf (சா.அக.).

*[காஞ்சம் → கச்சம் → காச்சம் + இலை.]*

**காச்சுப்பீச்செனல்** *kāccu-p-pīcceṉal,* பெ.. (n.) ***காச்சுமூச்செனல்*** பார்க்க; see *kāccu-mūcceṉal.*

*[காச்சு + பீச்சு + எனல். காச்சு பீச்சு என்பன ஒலிக்குறிப்பு குறித்த எதுகை மரபிணைச் சொல்.]*

**காச்சுமூச்செனல்** *kāccu-mūcceṉal,* பெ. (n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom.expr. signifying noise or clamour, as in a family of children and women.

*[காச்சு + மூச்சு + எனல். காச்சுமூச்சு என்பன ஒலிக்குறிப்புக் குறித்த எதுகை மரபிணைச்சொல்.]*

**காச்சுரக்கை** *kāccurakkai,* பெ.(n.) உலர்ந்த சுரைக் குடுக்கை; dried bottle-gourd (சா.அக.).

*[காய்ச்சுரக்கை → காச்சுரக்கை.]*

**காச்சுரை** *kāccurai,* பெ.(n.) புளிச்சைக்கீரை(வின்.); Indian brown hemp.

*[காய்ச்சற்கீரை → காச்சிரக்கு → காச்சுரை (கொ.வ.)]*

**காச்சுவா** *kāccuvā,* பெ.(n.) சிற்றா மல்லி; short-tubed Arabian jasmine (சா.அக.).

**காச்சுறுக்குக்கீரை** *kāccuṟukku-k-kīrai*, பெ.(n.) புளிச்சைக்கீரை; Indian brown hemp (சங்.அக.).

*[காய்ச்சுரை → காச்சிறுக்கு + கீரை.]*

**காச்சொறிக்கீரை** *kāccoṟi-k-k-īrai*, பெ. (n.) புளிச்சைக் கீரை; Indian brown hemp (சா.அக.).

*[காய்ச்சுரை → காச்சொறி + கீரை.]*

**காசகம்** *kāśagam*, பெ.(n.)1. கல்; stone. 2.காரச் சாம்பல்; alkaline ashes (சா.அக.).

*[காய்ச்சு → காச்சுகம் → காசகம்.]*

**காசகுப்பி** *kāśa-kuppi*, பெ.(n.) காரச் சாம்பலினாற் செய்த குப்பி; a glass bottle made out of alkaline ashes (சா.அக.).

*[காய்ச்சு → காச்சம் → காசம் + குப்பி.]*

**காசண்டி** *kāśaṇḍi*, பெ.(n.) வாயகன்ற ஏனம்; a kind of vessel with a wide mouth. *"கெண்டிகை காசண்டி செப்புக் கும்பம்" (பிரபோத.11:31).*

மரா. காசகண்டி

*[கா + கெண்டி – காகெண்டி → காசெண்டி → காசண்டி (கொ.வ.) கா. = பெரியது.]*

**காசத்துரு** *kāśatturu*, பெ.(n.) பறவைக் கொல்லிப் பூடு; a plant so called from being an enemy of bird (சா. அக.)

*[காசம் + சத்துரு.]*

**காசதிலகம்** *kāśa-tilagam*, பெ.(n.) கருப்பு உப்பு; a black salt.

*[கா → காசம் + திலகம்.]*

**காசநீர்** *kāśa-nīr*, பெ.(n.) தலையில் சேர்ந்து காசநோயை விளைக்கும் ஒருகெட்டநீர் (வின்.); a morbid fluid collected in the head supposed to cause asthma.

*[காசம் + நீர்.]*

**காசப்புல்** *kāśa-p-pul*, பெ.(n.) பொன்னிறமான ஒரு புல்வகை; a yellow or gold - coloured grass (சா.அக.).

*[காசம் + புல்.]*

**காசபித்தம்** *kāsā-pittam*, பெ.(n.) ஒருவகை நோய்; a kind of disease.

*[காசம் + பித்தம்.]*

இந்த நோய் வந்தால் இருமல் அதிகமாகி உடம்பிளைத்து, குரல் கம்மி, வாயில் நீரூறி, நெஞ்சு கனத்து, விக்கல் ஏற்படும் (சா. அக.).

**காசபிந்து** *kāśabindu*, பெ.(n.) 1. கருவிழி யிலேற்படும் ஒருவகைக் கண்ணோய்; disease of the cornea of the eye. 2. கருவிழியில் புள்ளிகளை உண்டாக்கும் ஒருவகைக் கண்ணோய்; a disease causing spots on the black of the eye (சா.அக.).

*[காசம் + (விந்து) பிந்து.]*

**காசம்**[1] *kāśam*, பெ.(n.) 1. பொன்; gold. 2. கல்நஞ்சு; a mineral poison. 3. பளிங்கு; crystal.

*[காய்ச்சு → காசு → காசம் (கொ.வ.).]*

காய்ச்சி வடிவமைக்கப்பட்ட பொன்னும் பொற் காசும் காசு-காசம் எனப்பட்டது. காய்ச்சி வடிக்கப்படும் கல்நஞ்சுக்கும் அதுவே பெயராயிற்று.

**காசம்**[2] *kāśam*, பெ.(n.) 1. நாணல்; a large corse grass. 2. வானம்; sky. *"காச மாயின வெல்லாங் கரந்து" (கம்பரா.யுத்த. மருத்து.40).* 3. வெளி; space. 4. கருமை; blackness.

வ. ஆகாச

*[கா = நீட்சி, உயரம். கா → காயம் → காசம் (நீண்ட நாணல்.) (வே.க.5) இச்சொல் பரந்த வானத்தையும் திறந்த வெளியையும் குறிப்பதாயிற்று. காயம் பார்க்க; see kāyam.]*

**காசம்**[3] *kāśam,* பெ.(n.) 1. பெரும்பாலும் நுரையீரலைத் தாக்கி உடலை இளைக்கச் செய்யும் ஈளை நோய்; tuberculosis. 2. கோழை (பிங்.); phlegm. 3. கண்ணோய் வகை; a disease of the eyes, cataract, affection of the optic nerve. *"கண்ணின் காசகாமலாதி தோஷம்" (சி.சி.2:85, சிவாக்.).*

*[கால் → கார் → காய் → காசம் (வெளிவருவது). காலுதல் - வெளிவருதல், உமிழ்தல்.]*

**காசமர்த்தகம்** *kāśamarttagam,* பெ. (n.) பெரும் புல்; a kind of large grass. *"களாவிழுது காசமர்த் தகம்" (தைலவ.தைல.76).*

*[காசம் + மருத்தகம்.]*

**காசமல்லிகை** *kāśa-malligai,* பெ.(n.) நத்தைச் சூரி; (lit) oyster knife (சா.அக.).

*[காசம் + மல்லிகை.]*

**காசரம்** *kāśaram,* பெ. (n.) 1. எருமை; buffalo. 2. நாணல்; reed. 3. காட்டெருமை; wild buffalo (சா.அக.). 4. இருள்; darkness.

*[காசம் (நீட்சி) + காசரம்.]*

**காசரளி** *kāśarali,* பெ.(n.) ஆற்றரளி; a kind of oleander (சா.அக.).

*[காசம் + அரளி.]*

**காசரிமுத்திரை** *kāśarimuttirai,* பெ.(n.) மூன்றங்குலத் தொலைவில் கண்ணுக்கு நேராகப் பார்வையை நாட்டி அசைவற்றிருக்கும் நிலை (யோகஞானா.34); a posture in which the gaze is fixed steadily on a spot in front about three inches from the eyes.

*[காசாரம் (இருள்) → காசரி + முத்திரை.]*

**காசலைக் கீரை** *kāsarai-k-kīrai,* பெ. (n.) கொடிக் காசலை; a kind of edible greens.

*[காசல் → காசலை + கீரை.]*

**காசல் கீரை** *kāśal-kīrai,* பெ. (n.) ஒருவகைக் கீரை; a kind of edible greens (சா.அக.).

*[காசல் + கீரை.]*

**காசவெளி** *kāśaveli,* பெ. (n.) ஒருவகைக் கண் நோய்; a kind of eye disease.

*[காசம் + வெளி. வலி → வெளி. (கொ.வ.)]*

எழுத்தைப் பார்த்த பின் மனிதரைப் பார்த்தால் இருள் போலத் தோற்றமளிக்கும் ஒருவகை கண்நோய் (சா. அக.).

**காசறை**[1] *kāśarai,* பெ.(n.) 1. மணத்தி மான் (கத்தூரி மான்); musk deer. *"காசறைக் கருவும்" (சிலப்.25;52).* 2. மான் மணத்தி; musk. *"காசறைத் திலகக் கருங்கறை" (சிலப்.28:27).* 3. மயிர்ச்சாந்து; pomatum. *"குழன்மேல் வாசக்காசறை வழியப்பெய்து" (திருவிளை.திருமணப் 156).* 4. மயிருக்கிடும் எண்ணெய்; hair-oil.

*[காசு + அறை.]*

**காசறை**[2] *kāśarai,* பெ.(n.) மணி (அக.நி.); gem, precious stone.

*[காசு + அறை.]*

**காசறைக்கரு** *kāśarai-k-karu,* பெ.(n.) மான் மணத்தி மானின் குட்டி; fawn of the musk deer. *"காசறைக் கருவு மாசறு நகுலமும்" (சிலப்.25.52).*

*[காசறை + கரு. கன்று → கறு → கரு (கொ.வ.).]*

**காசா**[1] *kāśā,* பெ.(n.) காயாமலர்; flower of kāyā tree. *"காசா கடன்மழை யனையானை" (கம்பரா. கங்கை.53).*

ம. காயாவு

*[காயா → காசா (கொ.வ.)]*

**காசா**[2] *kāśā,* பெ.(n.) 1. எருமை (பிங்); buffalo. 2. நாணல் (மலை.); kaus a large and coarse grass.

*[காயா → காசா (கொ.வ.).]*

**காசா**[3] *kāšā,* பெ. (n.) பொன்னாவாரை; occidental cassia (சா.அக.).

*[காயா→ காசா.]*

**காசாக்கு-தல்** *kāšākku-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தன் வருவாயையே குறியாகக் கொண்டு எதையும் விற்றுப் பணம் சேர்த்தல்; cashing on something. நடிகையின் தந்தை மகளின் புகழைக் காசாக்கு வதில் குறியாக இருக்கிறார் (உ.வ.).

*[காசு + ஆக்கு.]*

**காசாசை** *kāšāšai,* பெ. (n.) பணத்தாசை; love of money. *"காசாசை சற்று மிலாதவனாய்" (தனிப்பா.).*

*[காசு + ஆசை.]*

**காசாண்டி** *kāšāṇḍi,* பெ. (n.) 1. ஒருவகைச் செம்பு (த.சொ.அக.) ; a kind of copper. 2. வாயகலமுள்ள ஒருவகை ஏனம்; a kind of copper vessel with a wide mouth.

**மரா.** காசண்டி

*[காசண்டி → காசாண்டி.]*

**காசாம்பாரை** *kāšām pārai,* பெ.(n.) மீன் வகை; a kind of fish.

*[காசம் → காசாம் + பாரை. காசம் → காசாம் (கருநிறம்). பாரை = கடற்பகுதிகளில் நீண்டிருக்கும் பாறைகளின் உட்புறத்தில் இரைதேடும் மீன் வகை. பார் = நீட்டுப்பாறை = பாரை → பார் = பாறைகளின் அருகிலுள்ள மீன்.]*



காசாம்பாரை

**காசாம்பூவண்ணன்**[1] *kāšām-pū-vaṉṉaṉ,* பெ.(n.) ***காயாம்பூவண்ணன்*** பார்க்க; see *kāyām-pū-vaṉṉaṉ.*

*[காயாம்பூ → காசாம்பூ + வண்ணன் (கொ.வ.).]*

**காசாம்பூவண்ணன்**[2] *kāšām-pū-vaṉṉaṉ,* பெ.(n ) 1. துரிசு (மூ.அ.); vitriol. 2. காய்ச்சல் நஞ்சு ((மூ.அ.); a mineral poison.

*[காயாம்பூ → காசாம்பூ + வண்ணன் (கொ.வ.)]*

**காசாமுந்திரிகை** *kāšā-mundirigai,* பெ.(n.) கொடி முந்திரி; common grape vine (சா.அக.).

*[காசா + முந்திரிகை.]*

**காசாயக்குடி** *kāšāya-k-kuḍi,* பெ. (n.) சிற்றூரில் உள்ளோர் இடும்பணிகளை அவ்வப்போது செய்யும் கட்டுப்பாட்டோடு, சிற்றூர்ப் பொதுவிடத்தில் வீடுகட்டிக்கொண்டு வாழும் தொழிலாளிகள்; a kind of village labour.

*[காசு + ஆயம் + குடி.]*

**காசாயம்** *kāšāyam,* பெ.(n.) அரசு காசாகப் பெறும் சுங்கவரி; வழிநடைச் சுமைச் சாரிகை வரி; revenue in money. *"பொன்வரி காசுக் கடமை உள்ளிட்ட பல காசு ஆயங்களும்" (தெ.கல்.தொ.*VII *கல்.82).*

*[காசு + ஆயம்.]*

**காசாயேலம்** *kāšā-y-ēlam,* பெ .(n.) சிவப்பு ஏலக்காய்; a red variety of cardamom (சா.அக.).

*[காசு → காசா + ஏலம்.]*

**காசாளர்** *kāšāḷar,* பெ.(n.) வங்கி, அலுவலகம் முதலியவற்றில் பணம் தருதல், பெறுதல் ஆகிய வற்றையும் அவை தொடர்பான பிற பணிகளையும் செய்பவர்; cashier.

*[காசு + ஆளர்.]*

**காசி**[1] *kāši,* பெ.(n.) சிவ நகரங்கள் ஏழில் ஒன்று; *vāraṉāši* the sacred city on the Ganges, one of catta-puri, an abode of Siva.

[காழ் → காசு → காசாயம் (காவித்துணி)→காசாயி →காசி (துறவி). துறவிகள் வாழும் ஊர்.]

காசி என்பதற்கு வடமொழியாளர் காசிய என்னும் முனிவன் பெயரால் அமைந்த ஊர் என்றும் (காசு → காசி) எனத் திரிந்த திரிபால் பொன் என்னும் பொருளில் அமைந்த ஊர் என்றும் பெயர்க்காரணம் கூறுவர்.

பொன்போல் ஒளிவிடும் நகரம் என்பதும் பொருந்தவில்லை. உலக அழிவின் போது அண்டவெளியிலுள்ள அண்டபேரண்டங்கள் அனைத்தும் தன்னுள் ஒடுங்கும் சிவன், குடிகொண்டிருத்தலால் காய்தல் எரிதல், காய் - காசி எனப் பெயர் வந்ததாகக் கூறுவாரும் உளர்.

காசாயம் என்பது காவித்துணி. பிராகிருத மொழியில் காவித்துணி அணிந்த பெண் துறவியை,காசவி என்றும் ஆண் துறவியை,காசவ என்றும் வழங்கினர். **Pkt.** காசாயிய → காவித்துணி. **Pkt.** *kāhiya,kāthika.*An ascetic telling long-drawn scriptural stories at the houses of house holders.

காவித்துணி உடுத்துதல் பழந்தமிழ் முனிவர் மரபு. இல்லங்கள் தோறும் வாயிலில் நின்று அறநெறிகளும் அறநெறிக்கதைகளும் கூறி நற்பண்புகள் வளர வழிவகுத்த காரணத்தால் 'காசிய' என்றழைக்கப்பட்ட முனிவர்களின் பெயராலே இந்நகருக்குக் காசி எனப் பெயரமைந்தது என்பர்.

**காசி²** *kāśi,* பெ.(n.) சீரகம்(மலை.); cumin.

[காய் → காசு → காசி.]

**காசி³** *kāśi,* பெ.(n.) 1. முட்டுப்பாடு; difficulty. தண்ணீருக்குக் காசியாயிருக்கிறது. 2. பல்லாங்குழி யாட்டத்திற் காய்கள் சேர்தற்குரிய நடுக்குழிகள்; the hollow in the centre of each row of *pallāṅguḷi.*

**தெ.** காசி

[காய் → காய்ச்சி (வெம்மை, வறுமை) → காசி (கொ.வ.).]

**காசி⁴** *kāśi,* பெ.(n.) 1. சிறுசெப்புக்காசு; a small copper coin. 2. ஒருவகைத்தாது; a kind of mineral.

[காசு → காசி (கொ.வ.).]

**காசிக்கம்பு** *kāśi-k-kambu,* பெ.(n.) ஆடவை (ஆனி)யில் விதைத்துக் கன்னி (புரட்டாசி)யில் அறுவடை செய்யும் கம்புப்பயிர் (G.SM.D.i.219); a variety of kambu, sown in *Aṉi* and harvested in *Puraṭṭāśi.*

[காய்ச்சல் →காய்ச்சி(கோடைக்காலம்) → காசி + கம்பு]

எல்லாப் பயிர்களும் பொதுவாகக் கடக (ஆடி)த் திங்களில் விதைக்கப்படினும் இக் கம்பு ஒரு மாதம் முன்னதாகக் விதைக்கப்படுதலின் இப் பெயர் பெற்றதாகலாம்.

**காசிக்கமலம்** *kāśi-k-kamalam,* பெ.(n.) பட்டை தீட்டிய வயிரக்கல் வகை; a variety of cut diamond.

[காசு → காசி + கமலம்.]

காசு = பொற்காசு. பொன்போல் ஒளிவிடும் இயல்பால் பெற்ற பெயராகலாம்.

**காசிக்கல்** *kāśi-k-kal,* பெ. (n.) ***காகச்சிலை*** பார்க்க; see *kāga-c-cilai.*

[காய்ச்சு → காச்சி → காசி + கல்.]

**காசிக்கலம்பகம்** *kāsi-k-kalambagam,* பெ.(n.) குமரகுருபரர் இயற்றிய சிற்றிலக்கிய நூல்களுள் ஒன்று; a *kalampagam* poem on Vārañaši by *Kumara-kuru-parar.*

[காசி + கலம்பகம்.]

**காசிக்குப்பி** *kāśi-k-kuppi,* பெ.(n.) உழை மண்ணால் (உவர் மண்)செய்யப்பட்டு கங்கை நீர் அடைத்த குப்பி (வின்.); a phial containing holy water taken from the Gangas at *Vārañaši* and other places.

[காசி + குப்பி.]

இது புடமிடவும், மருந்து அடைத்து வைக்கவும் பயன்படும்.

**காசிகண்டம்** *kāśi-kaṇḍam,* பெ.(n.) அதிவீரராம பாண்டியன் இயற்றிய காசியின் பெருமை கூறும் தொன்ம நூல்; as *tala-purāṇam* in Tamil by *Ativīrarāmapāṇḍiyan* on *vārañaśi.*

*[காசி + கண்டம்.]*

**காசிச்சம்பா** *kāśi-c-cambā,* பெ.(n.) நெல்வகை (A); a kind of paddy.

*[காசி + சம்பா.]*

**காசிச்சாரம்** *kāśi-c-cāram,* பெ.(n.) ஒருவகைத் தாதுப்பு; a mineral salt.

மறுவ. அணங்கன்

*[காயம் → காசம் → காசி + சாரம்.]*

**காசிச்சீரம்** *kāśi-c-cīram,* பெ.(n.) 1. சிறு சீரகம்; cumin seed as opposed to. 2. பெருஞ்சீரகம்; sweet - fennel (சா.அக.).

*[காசி + சீரம். சீரகம் → சீரம்.]*

**காசிச்செம்பு** *kāśi-c-cembu,* பெ.(n.) ஒருபாதி செம்பினாலும் மறுபாதி பித்தளையினாலும் செய்யப்பட்ட (கங்கைநீர் கொணர்தற்குரிய) ஏனம்; *vārañaśi* water-pot, made partly of copper and partly of brass.

*[காசி + செம்பு.]*

**காசிடு-தல்** *kāśiḍu,* 20 செ.கு.வி. (v.i.) பணஞ்செலுத்துதல்; to remit. *"நெல்லுக்குத் தலை அகப்படி காசு இடவும்" (தெ.இ.க.தொ. VII.1039,18).*

*[காசு + இடு.]*

**காசித்தும்பை** *kāśi-t-tumbai,* பெ.(n.) 1. செடிவகை (வின்.); garden balsam. 2. பேய்த்தும்பை; cucus.

*[காய் → காய்ச்சி → காசி + தும்பை (காய்க்கும் தும்பை).]*


காசித்தும்பை

**காசிதாக்கியம்** *kāśitākkiyam,* பெ.(n.) கொம்புப் புடலை; common snake-gourd (சா.அக.).

*[காசி (கருப்பு, கருங்கோடு)+ (தூக்கியம்) தாக்கியம்.]*

**காசிப்பட்டு** *kāśi-p-paṭṭu,* பெ.(n.) ஒருவகைப் பட்டாடை; Benares silk.

*[காசி + பட்டு.]*

**காசிமணிமாலை** *kāśi-maṇi-mālai,* பெ.(n.) ***காசுமணி மாலை*** பார்க்க; see *kāśu-maṇi-mālai.*

*[காசுமணிமாலை → காசிமணிமாலை (கொ.வ.).]*

**காசியரளி** *kāśi-y-araḷi,* பெ.(n.) தங்க அரளி; a species of oleander with yellow flowers (சா.அக.).

*[காசி + அரளி.]*

**காசியலரி** *kāśi-y-alari,* பெ.(n.) அலரிவகை (இ.வ.); a kind of oleander.

*[காசி + சாரம்.]*

**காசியாத்திரை** *kāśi-yāttirai,* பெ.(n.)1. காசிச் செலவு; pilgrimage to vārañaśi. 2. திருமணத் துக்குமுன் நோன்புமுடிவில் மணமகன் நிகழ்த்தும் ஒரு சடங்கு; mock pilgrimage before the beginning of a marriage ceremony. (wherein the bridegroom leaves the bride's house in the role of a pilgrim to Benares, when the girl's father meets him and begs him to accept the hands of his daughter).

*[காசி + யாத்திரை]*

மாப்பிள்ளை காசிக்குச் செல்வது என்பது தமிழ் மரபன்று. இஃது ஆரிய வரவால் கடன் பெற்ற சடங்கு.

**காசிலவணம்** *kāši-lavaṇam,* பெ.(n.) ***காசிச்சாரம்*** பார்க்க; see *kāši-c-cāram.*

*[காசி + லவணம்.]*

**காசிலிக்கீரை** *kāšili-k-kīrai,* பெ.(n.) புளிச்சக்கீரை (சுவை.ர.448); Indian brown hemp.

*[காசல்(சிவப்பு) + காசிலி + கீரை.]*

**காசின் வாய்** *kāšiṉvai,* பெ.(n.) ஒரு காசுக்கு இவ்வளவு (வட்டி) என்ற படிமுறை; rate as part a *kāsū. "ஆட்டை வட்டம் காசின் வாய் அரைக் காற்காசு பொலிசைக்காக" (SII.ii.26-3 p.129).*

*[காசு + இன் + வாய்.]*

**காசினி[1]** *kāšiṉi,* பெ.(n.) நிலவுலகம் (பு.வெ.9:42. உரை); earth. *"காசினி யளந்து" (கந்தபு. இந்திரனருச்.9).*

*[கா + இன் + இ – காயினி → காசினி. (பசுமையான சோலைகள் நிறைந்த நிலவுலகம்). கா – சோலை, இன் – சாரியை, இ – ஒருமையீறு.]*

**காசினி[2]** *kāšiṉi,* பெ. (n.) 1. அரைக் கீரை; a pot-herb. 2. சிக்கரி, சிவந்த முள்ளங்கிச் செடி; chicory; wild endive (சா.அக).

*[காசல் → காசிலி → காசினி.]*

**காசினிக்குப் பாண்டம்** *kāšiṉikku-p-pāṇḍam,* பெ.(n.) பூசணிக்காய்; pumpkin (சா.அக.).

*[காசல் (சிவப்பு) + நிறக்கும் + பாண்டம்– காசினிக்குப்பாண்டம் (கொ.வ.).]*

**காசு[1]** *kāsu,* பெ. (n.) 1. குற்றம்; defect, fault. *"காசறு விரையே" (சிலப்.2:74).* 2. கவறாடுங் கருவி (திவா.); dice.

*[கள் → காள் → காய் → காசு. காசு = கருநிறமுடையது, குற்றமுடையது.]*

புளியங்கொட்டை போன்ற வித்துகளை, தாயக்கட்டைக் காய்களாகப் பயன்படுத்தியதால் சூதாடும் கருவியையும் குறித்தது.

**காசு[2]** *kāsu,* பெ.(n.) 1. முற்காலத்தில் ஓர் உருபாயில் 320 பங்கில் ஒன்றான குறைந்த மதிப்புடைய செப்புக்காசு; a copper coin of lowest value i.e., 1/320th of a rupee in olden days. *"நெஞ்சே உனையோர் காசாமதியேனான் காண்" (தாயு.உடல் பொய்.72).* 2. ஆங்கிலேயர் காலத்தில் ஓர் உருபாவில் 192 பங்கில் ஒன்றான செப்புக்காசு; a copper coin of the value of 1/192th of a rupee in English period. 3. இக்கால இந்திய உருபாவில் 100 பங்கில் ஒன்றான காசு; one hundredth of a present rupee.

ம. காசு; **கோத்.** காச்; **E.** cash; **L.z** casca; **OF.** casse.

*[காய்ச்சு → காசு. காய்ச்சு = காய்ச்சிச் செய்யப்பட்டது.]*

**காசு[3]** *kāsu,* பெ.(n.) 1. பொன் (ஆ.நி.); gold. 2. அச்சுத்தாலி; necklace of gold coins. *"காசும் பிறப்புங் கலகலப்ப" (திவ்.திருப்பா.7).* 3. ஒரு பழைய பொன்நாணயம்; an ancient gold coin = 28 gr. troy. 4. கைப்பணம்; coin, cash, money. *"ஏரி மீன்காசு, இநவரி வகைத்த காசு, பட்டோலைக் காசு மற்றுமெப் பேர்ப்பட்ட பல காசாயங்களும்"* (S.I.I.i.60-5 பக் 89). 5. மணி; gem. *"நாண்வழிக் காசு போலவும்" (இறை. 2 உரை,பக்.29).* 6. மணிமேகலை என்னும் அணிகலன்; girdle strung with gems. *"பட்டுடை சூழ்ந்த காசு" (சீவக.468).* 7. பல்லாங்குழியாட்டத் திற் காய்கள் சேர்தற்குரிய நடுக்குழிகள்; the hollow in the centre of each row of *pallāṅkuḷi.*

*[காய்ச்சு → காசு (காய்ச்சி உருக்கிய பொன்னால் செய்யப்பட்டது). இது பளப்பளப்புடைய பிறவற்றுக்கும் ஆகிவந்தது.]*

**காசு[4]** *kāsu,* பெ. (n.) வெண்பாவின் இறுதிச்சீர் வாய் பாட்டுள் ஒன்று (யா.கா.செய். 7); a formula of a foot of two nērašai the letter ending in 'u' occuring in

the last foot of a *veṉbā*. எ–டு : மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன் நன்கலம் நன்மக்கட் பேறு.

*[காசு – நேர்நேர் வாய்ப்பாடு. அதாவது குற்றியலுகரம் ஈறு கொண்ட நேரசை + நேரசைச் சீராகிய ஈற்றுச்சீர்.]*

**காசு**[5] *kāšu*, பெ.(n.) கோழை (பிங்.); phlegm.

*[கால் → காள் → காய் → காசு.(கொ.வ.)காலுதல் = உமிழ்தல், வெளியிடுதல்.]*

**காசுக்கட்டளை** *kāšu-k-kaṭṭaḷai*, பெ.(n) பணவிடை (ஈழநா.); money order.

மறுவ. பணவிடை

*[ காசு + கட்டளை.]*

**காசுக்கட்டி**[1] *kāsu-k-kaṭṭi*, பெ.(n.) தங்கக்கட்டி; mass of gold.

*[காசு + கட்டி.]*

**காசுக்கட்டி**[2] *kāsu-k-kaṭṭi*, பெ.(n.) ஒருவகைக் கூட்டு மருந்துச் சரக்கு; a compound of a catechu formed with the juice of tender coconuts, areca-nuts, and other spices.

*[காய்ச்சு → காசு + கட்டி.]*

**காசுக்கட்டி**[3] *kāsu-k-kaṭṭi*, பெ.(n.) மரவகை; downy-foliaged cutch.

*[காசு + கட்டி.]*

**காசுக்கடமை** *kāšu-k-kaḍamai*, பெ.(n.) பணமாகச் செலுத்தும் வரி (S.I.I.II.114); tax payable in money. *"கடமை, குடிமை, காசுக் கடமை ஒடுக்கும்படி" (S.I.I.ii.22 பக் 114).*

*[காசு + கடமை. காசு = பணம். கடமை = செலுத்தக் கடமைப்பட்டிருக்கும் வரி.]*

**காசுக்கடை** *kāšu-k-kaḍai*, பெ. (n.) 1. பணம் மாற்றுங் கடை; money - changer's shop. 2. பொன் வெள்ளி விற்கும் இடம்; shop dealing in gold and silver. 3. வட்டிக்கடை; money lending shop. 4.அடகுகடை; pawn broker's shop.

*[காசு + கடை – காசுக்கடை. காசு – தொடக்கத்தில் பொற்காசை மட்டும் குறித்து நாளடைவில் பொதுவாகப் பணத்தைக் குறிப்பதாயிற்று.]*

**காசுக்கல்** *kāšu-k-kal*, பெ.(n) நிறைகல்; standard weight for weighing jewels. *"காசு கல்லால் துளைநிறை செம்பொன் முக்கழஞ்சு" (S.I.I.III.45).*

*[காசு + கல். காசின் எடைக்குச் சமமான நிறுத்தல் அளவு, எடைகல்.]*

**காசுக்கள்ளன்** *kāšu-k-kaḷḷaṉ*, பெ.(n) இவறன் (உலோபி) (இ.வ.); miser.

*[காசு + கள்ளன்.]*

**காசுக்காரச்செட்டி** *kāšu-k-kāra-c-ceṭṭi*, பெ.(n.) செட்டிகளுள் ஒரு பிரிவினராகிய பொன்வாணிகர்; a sub - division of the Tamil Chetti caste who are by profession money-changers, dealers in coins, gold, silver and gems.

*[காசு + காரன் + செட்டி – காசுக்காரச்செட்டி. காசு = பணம், செல்வம், கைப்பணமாகவே இருக்கும் பெரிய முதலீடு.]*

**காசுக்காரன்** *kācu-k-kāraṉ*, பெ.(n.) 1. காசுக் கடைக்காரன்; money-changer. 2. பணக்காரன்; rich man.

*[காசு + காரன் – காசுக்காரன்.]*

**காசுகட்டு–தல்** *kāšu-kaṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. செப்புக்காசால் விளையாடுதல் (வின்.); to play with copper coins. 2. பணம் வைத்துச் சூதாடுதல் (இ.வ.); to bet, wager, as in gambling.3. வணிகம் முடிந்தபின் விற்பனைத் தொகையைக் கணக்குப் பார்த்தல்; to count the total sale-amount.4.பணம் செலுத்துதல்; to pay or deposit.

*[காசு + கட்டு.]*

**காசுகொள்ளா விறையிலி** *kāšu-koḷḷā-v-iṟai-y-ili*, பெ.(n.)ஒருவகை வரியுமின்றி அளிக்கப்பட்ட நிலம்;

# காசு வகைகள்






பெருவழுதி




சேரர்காசு




குட்டுவன்




கொல்லிரும்பொறை




மாக்கோதை




மலையமான்




காரிக்காசு

land granted free of tax. *"காசு கொள்ளா விறையிலியக விட்ட நிலம்" (S.I.I.V, 989. 35-37).*

*[காசு + கொள்ளா + இறை + இலி.]*

**காசுசங்கம்** *kāsusaṅgam,* பெ. (n.) வளையலுப்பு; salt used in the manufacture of bangles known as glass gall (சா.அக.).

*[காய்ச்சு → காசு + சங்கம்.]*

**காசுமண்** *kāśu-man* பெ. (n.) காவிக்கல்; (parav); red ochre, used with water or oil.

*[காசு + மண். காசுமண். காசு = செந்நிறம். காவிநிறம் பொன்னின் நிறம்,காவி நிறத்துக்கும் ஆகிவந்தது.]*

**காசுமணிமாலை** *kāśumaṇi-mālai,* பெ. (n.) காசுகளும், மணிகளும் கோர்த்த மாலை; necklace decorated with *kāsu* & gems.

*[காசு + மணி + மாலை.]*

**காசுமரி** *kāsumari,* பெ.(n.) 1. பெருங்குமிழ்; kāshmere tree. 2. நன்னாரி; Indian sarsaparippa. 3.கொடிமுந்திரிகை; grap-vine (சா.அக.).

*[காசு (செந்நிறம்) + மரி(மருவியது. பொருந்தியது.]*

**காசுமாலை** *kāśu-mālai,* பெ.(n.) பெண்கள் அணியும், வட்ட வடிவப் பொற்காசுகளைக் கோத்துச் செய்யப்பட்ட கழுத்தணிகலன்; necklace of gold coins worn by women.

*[காசு + மாலை. காசு = பொற்காசு.]*


காசுமாலை

**காசோலை** *kāśōlai,* பெ.(n.) சேமித்து வைத்திருக்கும் பணத்திலிருந்து குறிப்பிட்ட தொகையைத் தான் குறிப்பிடுபவருக்கு வழங்கு மாறு வங்கிக்கு அனுப்பும் ஆணைத்தாள்; cheque.

*[காசு + ஓலை.]*

**காஞ்சச்சம்** *kāñcaccam,* பெ. (n.) புங்கமரம்; puṅgu tree (சா.அக.).

*[காய்ச்சு → காஞ்சு → காஞ்சச்சம்.]*

**காஞ்சம்** *kāñcam,* பெ.(n.) துருசு; blue vitriol (சா.அக.).

*[காஞ்சு → காஞ்சம்.]*

**காஞ்சன்** *kāñcaṉ,* பெ. (n.) சாதிலிங்கம்; vermilion (சா.அக.).

*[காய்ச்சு – காஞ்சு (சிவப்பு) → காஞ்சன்.]*

**காஞ்சனகம்** *kāñcaṉagam,* பெ. (n.) மந்தாரை; mountain ebony (சா.அக.).

*[காய்ச்சு → காஞ்சு → காஞ்சல் → காஞ்சலகம் → காஞ்சனகம்.]*

**காஞ்சன காரிணி** *kāñcaṉa-kāriṇi,* பெ.(n.) தண்ணீர்விட்டான் கிழங்கு; water root (சா.அக.).

*[காஞ்சு → காஞ்சனம் + காரிணி.]*

**காஞ்சனத்தூள்** *kāñcaṉa-t-tūḷ,* பெ. (n.)1. பொன் மணல்; gold ore. 2.பொன் அராவிய தூள்; gold filings (சா.அக.).

*[காஞ்சனம் + தூள்.]*

**காஞ்சனம்**[1] *kāñcaṉam,* பெ.(n.) 1.தாமரைக் கொத்து; bunch of lotus. 2. மருதோன்றி; fragrant nail dye. 3. செஞ்சந்தனம்; red sandal. 4. பொன்னூமத்தை; yellow thorn - apple. 5. நீர் விளா; water feronia. 6. காட்டாத்தி; mountain ebony. 7.சண்பகம்; champak. 8.மஞ்சள்; turmeric.

9. பொன் (திவா.); gold. 10. புன்கு (பிங்.); pungu tree.

*[காய் → காய்ச்சு → காஞ்சு → காஞ்சனம் (காய்ச்சி உருக்கிச்செய்த பொற்காசு போன்ற செந்நிறப்பூக்களைக் கொண்ட மரம்.)]*

**காஞ்சனம்**[2] *kāñcaṉam,* பெ.(n.)1.பொன் (திவா.); gold.2. தங்கம்; refined gold.3.இலிங்கச் செய்நஞ்சு; an arsenic poison.

*[காய் → காய்ச்சு → காய்ஞ்சு → காஞ்சு → காஞ்சனம் (கொ.வ.). (இது வடதமிழ் வழக்காகக் காய்ச்சி உருக்கிச் செய்த பொற்காசைக் குறித்தது. காசு – தென் தமிழ். காஞ்சு, காஞ்சனம் வடதமிழ்.]*

**காஞ்சனி** *kāñjaṉi,* பெ. (n.) 1.மஞ்சள் (பிங்.); turmeric. 2. பொன்னிறம் (பிங்.); colour of gold. 3. ஊமத்தை ; datura plant. 4.காட்டாத்தி; mountain ebony. 5.கொடிப்புன்கு; hog creeper. 6.சண்பகம்; Indian magnolia (சா.அக.)

*[காய் → காய்ச்சு → காய்ஞ்சு → காஞ்சு → காஞ்சனி.]*

பொறகாசைககுறித்த சொல் அந் நிறமுள்ள பிறவற்றுக்கும் ஆகிவந்தது. இது வடதமிழ்த் திரிபாகிய கொச்சை வழககு.

**காஞ்சா** *kāñjā,* பெ. (n.) கஞ்சா எனப்படும் கஞ்சரங் குல்லை; Indian hemp.

*[கஞ்சாம் குல்லை → கஞ்சரம் → கஞ்சா → காஞ்சா (கொ.வ.).]*

**காஞ்சான்** *kāñjāṉ,* பெ. (n.) 1. கண்டிப்புள்ளவன் (நாஞ்.); strict man. 2. இவறன் (உலோபி) (இ.வ.); miser.

*[காய் → காஞ்சான்.]*

**காஞ்சான்கட்டு–தல்** *kāñjāṉ-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) உளுத்துப்போதல் (யாழ்); to become rotten.

*[காஞ்சான் + கட்டு.]*

**காஞ்சி**[1] *kāñji,* பெ.(n.)1.ஆற்றுப் பூவரசு; river portia. *"குறுங்காற் காஞ்சிக் கொம்பர்" (சிறுபாண்.179).* 2. காஞ்சிப்பூமாலை; garland of *kāñji* flowers worn by soldiers while defending themsleves against the onslaught of the enemy. *"காஞ்சிசூடி நின்றனன்" (திருவாலவா. 43:8.).* 3. **காஞ்சித் திணை** பார்க்க; see *kāñji-t-tiṇai. "கண்ணிய காஞ்சித் துறையென மொழிப" (பு.வெ.4, தலைப்பு நூற்பா ).* 4. வேற்றுமன்னன் படையெடுத்து வரும்போது அரசன் காஞ்சியென்னும் பூவைச் சூடித் தன் காவ லிடத்தைக் காக்கும் புறத்துறை (பு.வெ.4:1); theme describing the defence of a fortress on the approach of an enemy by a king decked with kāñji flower appropriated to the occastion. 5. நிலையாமை; instability, transiency. *"காஞ்சி சான்ற செரு"* (பதிற்றுப். 84:19). 6. செவ்வழிப்பண் வகை (திவா.); an ancient secondary melody-type of the *ševvaḷi* class. 7. கோவை மாவட்டவழியோடிக் கொடுமுடிக்கு அருகில் காவிரியுடன் கலக்கும் நொய்யலாறு; a tributary of the *Kāviri* flowing through Coimbatore district. *"காஞ்சிவாய்ப் பேரூர்" (பெரியபு. ஏயர்கோன். 88).* 8. மருதப்பண்; melody - type peculiar to agricultural tracts. *"தண்காஞ்சி மென்சினைப் பூங் கொம்பர் ஆடல் சார்ந்தசைய வதன் மருங்கு சுரும்பு தாழ்ந்து பண்காஞ்சி யிசைபாடும் பழனவேலிப் பணைமருதம் புடையுடைத்தாய்" (பெரியபு. திருக்குறிப்.86).* 9. பாலாற்றுக்கும் சேயாற்றுக்கும் இடையில் உள்ள காஞ்சிமாநகரம்; the great city of *Kāñjipuram* between *Pālāru* and *Sēyāru. "கங்கை காளிந்தி யிடைப்படுந் தலத்தின் முற்படுங் காஞ்சி மாநகரம்" (கந்தபு.நகர.76).*

*[காப்ச்சு → காஞ்சு → காஞ்சி = (பொன்னிறமுடையது. நிறத்தாலும் அழகாலும் பெருமையாலும் சிறந்தவற்றுக்கு ஆகிவந்தது. காஞ்சி என்னும் பூவரசு மரங்கள் இருந்த பகுதி காஞ்சி நகராகப் பெயர்பெற்றது.)]*

**காஞ்சி**[2] *kāñji,* பெ. (n.) 1. நாதாங்கி (வின்.); staple of bolt. 2.மகளிர் இடையில் அணியும் ஏழு கோவையுள்ள அணி; woman's waist - girdle con-

sisting of seven strings of beads of bells *"காஞ்சி யெழுகோவை" (சிலப்.4:30,உரை).*

*[கா : அகலம், விரிவு. கா→காஞ்சி : வாய்விரிந்தது, அகன்றது. வாயகன்றிருத்தலால் நாதாங்கியையும், மகளிர் இடுப்பிலணியும் காஞ்சி அணிகலனையும் குறித்தது.]*

**காஞ்சி[3]** *kāñji*, பெ.(n.) மயிர்; hair *"காஞ்சியொடு கேசமொரு பொருட்கிளவி யாகும்" (காஞ்சிப்பு. தழுவக்.70.).*

*[குஞ்சி → காஞ்சி (கொ.வ.).]*

**காஞ்சி[4]** *kāñji*, பெ.(n.) 1. பெருமை; greatness. 2.அறிவு; knowledge, wisdom.

*[கா : விரிவு, பெருக்கம் கா → காஞ்சி.]*

**காஞ்சிகம்** *kāñjigam*, பெ.(n.) 1. அரிசி, வாற் கோதுமை முதலிய தவசங்களிலிருந்து வடித்த காடி; a sour liquid with a vinous smell produced from the acetus fermentation of powdered rice, barley or other grains.2.கழுநீர்; water of cleansed rice.3.தோட்டத்துக் களை; a destructive weed in garden. 3. காடி; vinegar.

மறுவ. கொல்லைப்பல்லி (சா.அக.).

*[கஞ்சி → காஞ்சி → காஞ்சிகம்.]*

**காஞ்சிகா** *kāñjigā*, பெ. (n.) ***காஞ்சிரங்காய்*பார்க்க;** see *kāñjiraṅkāy*.

க., து. காசர.

*[காஞ்சிரம் + காய் - காஞ்சிரங்காய் → காஞ்சிகா (கொ.வ.).]*

**காஞ்சிகை** *kāñjigai*, பெ.(n) 1. சிறுபாலை; a kind of *pālai*. 2. பலாசு; Bengal kino (சா.அக.).

*[காஞ்சி → காஞ்சிகை.]*

**காஞ்சித்திணை** *kāñji-t-tiṇai*, பெ.(n.) 1. அகத்திணை ஏழனுள் பெருந்திணைக்குப் புறனாகி வீடுபேறு நிமித்தமாகப் பல்வேறு நிலையாமைகளைச் சாற்றும் புறத்திணை (தொல்.பொருள்.78); major theme inculcating a belief in the instability of earthly things as a necessary preliminary to attain liberation. 2. வீரன் காஞ்சிமலர் மாலை அணிந்து பகைவர்முன் எதிரூன்றி நிற்றலைக்குறிக்கும் புறத்திணை; major theme describing a warrior defending his position wearing a garland of kāñji flowers. *"வட்கா ரெதிரூன்றல் காஞ்சி" (பிங்.).*

*[காஞ்சி + திணை.]*

அகத்திணை ஏழனுள் பெருந்திணைக்குப் புறனாகியது காஞ்சித்திணை. அஃது ஒன்றற்கொன் றுரிமையாதல், யாக்கை செல்வம் இளமை முதலிய பலநெறியானும் நிலையாதவுலக இயற்கைக்குப் பொருந்திய நெறியினை யுடையது (இலக்.வி.614. உரை).

எண்வகை மணத்தினும் நான்கு மணம் பெற்ற பெருந்திணை போல இக்காஞ்சியும் அறமுதலாய மும்முதற்பொருளும் அவற்றது நிலையின்மையுமாகிய ஆறனுள்ளும், நிலையின்மை மூன்றற்குமுரித்தா யெல்லாத் திணைகட்குமொத்த மரபிற் றாகலானும், "பின்னர் நான்கும் பெருந்திணைபெறு" மென்ற நான்குஞ் சான்றோ ரிகழ்ந்தாற் போல அறமுதலியவற்றது நிலையின்மை யுணர்ந்து அவற்றை அவரிகழ்தலானும் ஏறிய மடற்றிற முதலிய நான்கும் பொருந்தாக்காம மாயினவாறு போல உலகியல் நோக்கி நிலையாமை நாற் பொருளன்றாகலானும் உரிப் பொருளிடம் மயங்கி வருதலன்றித் தனக்கு நிலமில்லாத பெருந்திணை போல அறம்பொருளின்பம் பற்றி யன்றி வேறு நிலையாமை யென்றோர் பொருளின் றாதல் ஒப்புமையானும் காஞ்சித்திணை பெருந்திணைக்குப் புறத்திணையெனப் பட்டது (த.சொ.அக.).

**காஞ்சிதம்** *kāñjidam*, பெ.(n.) கூத்துக்குரிய நடை வகையுள் ளொன்று (சிலப்.ப.81); a kind of pase,

*[காஞ்சி[1] + காஞ்சிதம்.]*

**காஞ்சிப்புராணம்** *kāñji-p-purāṇam*, பெ.(n.) 18ஆம் நூற்றாண்டில் காஞ்சிபுரத்தைப்பற்றிச் சிவஞான முனிவர், கச்சியப்ப முனிவர் ஆகிய இருவராலும்

இயற்றப்பெற்ற தொன்மம் (புராணம்); a Saiva puranā about *Kāñjivaram* by *Siva-ñana-munivar* and Kacciyappa-munivar, 18th c.

*[காஞ்சி + புராணம்.]*

த.பழைய. > **Skt.** purna > purāṇa > த.புராணம்.

**காஞ்சிபுரம்** *kāñji-puram,* பெ. (n.) ***காஞ்சி***[1] பார்க்க; see *kāñji.*

*[காஞ்சி + புரம் – காஞ்சிபுரம். காஞ்சி = ஆற்றுப் பூவரசு மரம், அம் மரம் மிகுந்த ஊர்.]*

**காஞ்சிமாலை** *kāñji-mālai,* பெ.(n.) 1. தொண்ணூற்றாறு சிற்றிலக்கியங்களுள் ஒன்று, அது காஞ்சிமாலை சூடிப் பகைவரைத் தடுத்தற்கு எதிரூன்றி நிற்றலைக் கூறும் இலக்கியம். (தொன்.வி.283, உரை); poem on the firm stand of warriors wearing the *kāñji* garland ready to face the assailing enemy. 2. படை முன் எதிர்த்து நிற்கும் வீரர் சூடும் மாலை; a kind of garland worn warrior (த.சொ.அக.).

*[காஞ்சி + மாலை.]*

**காஞ்சியம்** *kāñjiyam,* பெ.(n.) வெண்கலம்; bell metal.

*[கஞ்சு → காஞ்சு → காஞ்சியம்.]*

**காஞ்சியெதிர்வு** *kāñji-y-edirvu,* பெ.(n.) எதிரூன்றுஞ் சேனையை மேலிடாது தடுக்கும் வீரனுடைய திறமையைக் கூறும் புறத்துறை (பு.வெ.4:2.); theme of a warrior defending himself against the onslaught of his enemies.

*[காஞ்சி + எதிர்வு.]*

**காஞ்சிரக்கொட்டை** *kāñjira-k-koṭṭai,* பெ.(n.) காஞ்சிரமரத்தின் கொட்டை; nut of kāñjiram .

*[காஞ்சிரம் + கொட்டை. சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி போன்றவை எட்டிக்கொட்டை என்று குறித்திருப்பது தவறு.]*

**காஞ்சிரங்காய்** *kāñjiraṅ-kāy,* பெ.(n.) கருநாடக மாநிலத்தில் வளரும் நச்சு மரத்தின் காய்; a poisonous nut of a tree known as *kāšaraka* in Karnataka, *kāñjiram* in Tamilnadu, and *kāññire* in Malayalam. *"கற்பகத்தைச் சேர்ந்தோர்க்குக் காஞ்சிரங்கா யீந்தேல்" (வாக்குண்.2).*

ம. காஞ்சிரா; க. காசரக.

*[காஞ்சி → காஞ்சில் → காஞ்சிலம் → காஞ்சிரம் + காய் காஞ்சிரங்காய்.]*

பூவரச மரத்தைப்போல் தோற்றமளிக்கும் நச்சுமரத்தின் காய். இதனை எட்டிமரத்தின் காய் என உரையாசிரியர்கள் குறித்திருப்பது தவறு. இது எட்டியைப்போல் கசப்புடையதன்று. தின்றால் ஓரளவு இனிப்பதும், உண்டாரைக் கொல்வதுமாகிய பழங்களைக் காய்க்கும் மரம். மேலைமலைத் தொடர்களில் வளரும் பாங்குடையது. இதனைச் சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியும், சாம்பசிவம் மருத்துவ அகரமுதலியும், பிற அகரமுதலிகளும் எட்டிக் கொட்டை எனக் குறித்திருப்பது தவறு.


காஞ்சிரங்காய்

**காஞ்சிரம்** *kāñjiram,* (n.) ***காஞ்சிரை*** பார்க்க;see *kāñjirai.* "*காஞ்சிர மரத்தி னல்ல தீங்கனி பழுப்பவும்" (திருவிளை.எல்லா.11).*

*[காஞ்சில் → காஞ்சிலம் → காஞ்சிரம்.]*

**காஞ்சிரை** *kāñjirai,* பெ.(n) ***காஞ்சிரங்காய்*** பார்க்க; see *kāñjiraṅ-kāy.*

*[காஞ்சில் → காஞ்சிலம் •→ காஞ்சிரம் → காஞ்சிரை.]*

**காஞ்சிரைப் புல்லுருவி** *kāñjirai-p-pulluruvi,* பெ.(n.) காஞ்சிர மரத்தின்மேல் முளைக்கும் புல்லுருவி; a parasite on the *kāñjiram* tree (சா.அக.).

*[காஞ்சிரை + புல்லுருவி.]*

**காஞ்சில்** *kāñji,* பெ.(n.) பூவரசமாத்தின் வகை; a kind of pivaram tree.

*[காய்தல் (எரிதல், கொல்லல்)→காஞ்சு→ காஞ்சில்.]*

**காஞ்சினி** *kāñjiṉi* பெ.(n.) 1. மஞ்சள்; turmeric. 2. கொக்குச் சிறகு; stork's feather. 3. சண்பகம் ; Indian magnolia champak. 4. காட்டாத்தி; mountain ebony. 5. மஞ்சிட்டி (மலை.); Indian madder (சா.அக.).

*[காஞ்சு → காஞ்சினி.]*

**காஞ்சுகம்**[1] *kāñjugam,* பெ.(n.) சட்டை (பிங்.); jacket, shirt.

ம. காஞ்சுகம்; **Skt.** kāñcuka

*[கஞ்சுகம் → காஞ்சுகம்.]*

**காஞ்சுகம்**[2] *kāñjugam,* பெ. (n.) முருங்கை; drum stick (சா.அக.).

*[காஞ்சு → காஞ்சுகம் மேற்சட்டைபோன்ற புறப்பட்டை கொண்ட காய்.]*

**காஞ்சுகன்** *kāñjugaṉ,* பெ.(n.) சட்டையிட்ட மெய்க் காப்பாளன்; lit., he who wears a jacket, king's attendant, body guard. *"காஞ்சுகர் வினைசெய்ய" (திருவிளை. திருமணப்.108).*

*[காஞ்சுகம் → காஞ்சுகன்.]*

**காஞ்சுகி**[1] *kāñjugi,* பெ.(n.) ***காஞ்சுகன்*** பார்க்க see *kāñjugaṉ. "காஞ்சுகன் அவன்முன்வரு காஞ்சுகி வன்கண் மாக்கள்" (திருவிளை.கல்லா.4.).*

*[காஞ்சுகன் → காஞ்சுகி.]*

**காஞ்சுகி**[2] *kāñjugi,* பெ.(n.) சட்டை (பிங்.); jacket.

*[காஞ்சுகம் → காஞ்சுகி.]*

**காஞ்சொறி** *kāñjoṟi,* பெ.(n.) செந்தொட்டி; scorpion leaf.

மறுவ. செந்தட்டி, காண்டுதி

**வகைகள் :**

1. எருமைக் காஞ்சொறி. 2. பூனைக் காஞ்சொறி. 3. வெள்ளைக் காஞ்சொறி. 4. சிறு காஞ்சொறி. 5. பெருங் காஞ்சொறி. 6. கறுப்புக் காஞ்சொறி. 7. எட்டிக் காஞ்சொறி.


காஞ்சொறி

**காஞ்சோன்றி** *kāñjōṉṟi,* பெ.(n.) ***காஞ்சொறி*** பார்க்க; see *kāñjōṟi.*

*[காஞ்சொறி → காஞ்சோன்றி.]*

**காட்சி** *kāṭci,* பெ.(n.) 1.கண்ணுறல்; sight, view. *"தரும மூர்த்தியைக் காட்சியே யினிக்கடன்" (கம்பரா. யுத்த. விபீடண.18).* 2.தோற்றம்; form, appearance. *"கையென லாயிற்றன்றே... மணியின் காட்சி" (கம்பரா. சுந்தர. திருவடி.47).* 3. தோன்றி யருளல்; vision of a deity, sight of a great personage; audience. *"எதிரேநின்று காட்சி தந்தருளி"*

(பெரியபு. மெய்ப்பொ.23). 4. கண்காட்சி; exhibition. 5.புதுமையான நிகழ்ச்சி; attractive object of sight. அஃது ஒரு கண்கொள்ளாக் காட்சி யாயிருந்தது. (உ.வ.). 6. நேர்த் தோற்றம்; perception. *"மருடீர்ந்த மருளில் காட்சி யைவகை யாகும்" (மணிமே.27:14).* 7. அறிவு; knowledge. *"மாசறு காட்சி" (குறள்,199).* 8. தலைவன் தலைவியை முதன்முதற் காணுதலைக் கூறும் ஒரு கைக்கிளைத் துறை (பு.வெ.11:ஆண் பால்.); theme describing the first sight of a maiden by a man who falls in love with her. 9.வீரருக்கோ, வீரரின் கற்பில் சிறந்த மனைவியருக்கோ எடுத்த நடுகல்லை ஆராய்ந்து காணும் புறத்துறை (தொல்.பொருள்.60; உரை; சிலப்.25 அரும்.); (purap.) theme describing the choice of a suitable stone for a memorial of a warrior or of a virtuous wife who chose not to survive her deceased husband. 10. நடுகல்லை வீரர் வணங்குவதைக் கூறும் புறத்துறை (தொல்.பொருள். 60, உரை); (purap.) theme describing the actual sight of the memorial stone. 11.ஒரு பொருளைக் கண்ட இடம்; place, site, where something was once seen or found. *"கண்டு நின்று வந்த காட்சியு மிதுவே" (கல்லா.6:28).* 12.அழகு; beauty. *"அணங்கு மெய்ந்நின்ற வமைவரு காட்சி" (பொருந. 20).* 13. தன்மை; nature. *"கற்குழித்து நெறிசெயுங் காட்சியே" (சேதுபு. அவை.4).* 14. திருவடிப்பேறு *"கணக்கறிந் தார்க்கன்றி கைகூடா காட்சி" (திருமந்.303).* 15. வேடிக்கை; joke. கண்டதே காட்சி (பழ.). 16. வியப்பு; wonder. 'காட்சிமேய வக்கழதிற் கதலிகை (கந்தபு. திருநகர.23). 17. தேற்றம்; precisim. ஆடும்பவுசியவன் பொய்க்காட்சியாகாது போலேயறி (ஒழிவி. பொதுகரி. 34).

*[காண் + சி – காட்சி. 'சி' பண்புப்பெயரீறு.]*

**வகைகள்:**

1. ஐயக் காட்சி, 2. திரிபுக் காட்சி, 3. விகற்பக் காட்சி, 4. பொறி வாயில் காட்சி, 5. மனக் காட்சி, 6. நுகர்வு காட்சி, 7. ஓகக் காட்சி (சா. அக.).

**காட்சிகொடு-த்தல்** *kāṭci-koḍu-,* 5 செ.கு.வி.(v.i.) தோற்றமளித்தல்; to appear or manifest oneself, as God to worshippers, to give audience, as a king to his subjects. *"பேதையுந் தாமுமாங் காட்சிமுன் கொடுத்தார்"* (பெரியபு.அமர்நீதி.46).

*[காட்சி + கொடு.]*

**காட்சிப்பொருள்** *kāṭci-p-poruḷ,* பெ.(n.) கட்புலனாற் காணும் பொருள் (தொல். பொருள்.1. உரை.); thing seen, object of sight opp. to *karuttu-p-poruḷ.*

*[காட்சி + பொருள்.]*

**காட்சிமறைத்தல்** *kāṭci-maṟaittal,* பெ.(n.) தோற்ற மறைப்பு (தரிசனாவரணீயம்) (சூடா.); (Jaina.) that which causes the obscuration or clouding of the appearance.

*[காட்சி + மறைத்தல்.]*

**காட்சியணி** *kāṭci-y-aṇi,* பெ.(n.) அணியிலக் கணங்களுள் ஒன்று (அணியி.19.); (Rhet.) a kind of rhetoric.

*[காட்சி + அணி.]*

ஒரு பொருளின் செயல் முதலியன மற்றோர் பொருளுக்கு நன்மையோ தீமையோ புலப்பட நிகழ்வதாகக் கூறும் அணிவகை (தண்டி.88).

**காட்சியர்** *kāṭciyar,* பெ.(n) ***காட்சியவர்*** பார்க்க; see *kāṭci-y-avar.*

*[காட்சியவர் → காட்சியர்]*

**காட்சியவர்** *kāṭci-y-avar,* பெ.(n.) அறிஞர்; the wise. *"புன்மையில் காட்சியவர்" (குறள்.174).*

*[காட்சி + அவர். காட்சி = அறிவு.]*

**காட்சியளவை** *kāṭci-y-aḷavai,* பெ.(n.) எதிரும் தோற்றம் காண்டலளவை (சி.போ.சிற்.1; 1, ப.15) perception; means of perception.

[காட்சி + அளவை. இதனை வடமொழியாளர் காட்சிப் பிரமாணம் எனத்திரித்துக் கொண்டனர்.]

**காட்சியறிவு** *kāṭci-y-aṟivu,* பெ.(n.) தெளிவான அறிவு; perceptual cognition.

[காட்சி + அறிவு.]

**காட்சியுணர்வு** *kāṭci-y-uṇarvu,* பெ.(n.) ***காட்சியறிவு*** பார்க்க; see *kāṭci-y-aṟivu.*

[காட்சி + உணர்வு.]

**காட்சியெருதுக்காசு** *kāṭici-y-erudu-k-kāšu,* பெ.(n.) ஒரு பழைய வரி (S.I.I.II.,425); an ancient tax probably on bulls kept for sale. *"காட்சி எருது காசும் ஊர்க்கழஞ்சுக்காசும் உட்பட இவ்வூர் இறைகட்டின காணிக்கடன்" (S.I.I.ii.92-1 பக் 425).*

[காட்சி + எருது +காசு.]

**காட்சியோகு** *kāṭci-y-ōgu,* பெ.(n.) மெய்யுணர்வு பெறுதற்கான நிலை; realisation of true insight thought and conduct. *"கட்படு மிமைத் துணை காட்சி யோகினை நுட்பமனதாகவே நுதலிக் காட்டினோன்" (கந்தபு. மோனநீங்.33).*

[காட்சி + ஒகு.]

**காட்சிவரி**[1] *kāṭci-vari,* பெ.(n.) தன்வருத்தத்தைப் பலருங் காணும்படி நடிக்குங் கூத்து (சிலப்.8: 106,உரை); (Dram.) dance, exhibiting sorrow and distress.

[காட்சி + வரி]

(வரி:காமங்கண்ணிய இசைப்பாட்டு. அப் பாட்டின் மெய்ப்பாடு துலங்கச் செய்யும் நளிநயம் காட்சி வரி எனப்பட்டது.)

**காட்சிவரி**[2] *kāṭci-vari,* பெ.(n.) திரைப்படக் காட்சிகளுக்காக வாங்கப்படும் வரி; entertainment tax.

[காட்சி + வரி. வரி : வாங்கப்படும் வரிப்பணம்]

**காட்சிவாதி** *kāṭci-vādi,* பெ.(n.) உலகியற் பொருண்மையன்றி வேறு பொருண்மையில்லை யெனக் கூறும் உலகியலாளர் (சி.போ.பா.அவை.ப. 40); materialist, who holds that perception is the only means of acquiring knowledge.

[காட்சி + வாதி. வாளுதல் : பேசுதல். வாள் → வாளி→வாதி(பேசுபவன்).]

கண்ணால் கண்டு தெளிவதுதான் 'அறிவு' என்னும் கொள்கையோன் (சா.அக).

**காட்டகத்தமிர்து** *kāṭṭagattamirdu,* பெ. (n.) ***காட்டகத்தமிழ்து*** பார்க்க; see *kāṭṭagattamiḻdu.* *"காட்டகத்தமிழ்துங் காண்வரக் குவவி" (சீவக.2110).*

[காடு + அகத்து : காட்டகத்து + அமிழ்து.]

**காட்டகத்தமிழ்து** *kāṭṭagattamidu,* பெ.(n.) மக்கட்குப் பயன்படும் காட்டுப்பொருள்கள்; forest produce.

[காடு + அகத்து – காட்டகத்து + அமிழ்து.]

அரக்கு, உலண்டு, தேன், மயிற்பீலி, நாவி போன்றவை.

**காட்டகத்தி** *kāṭṭagatti,* பெ.(n.) வீழிச்செடிப்புதர் (மலை.); a straggling shrub.

[காடு + அகத்தி –காட்டகத்தி.]

**காட்டகம்** *kāṭṭagam,* பெ.(n) காழகில்; aloe wood. (சா.அக.)

[காடு → அகம்– காட்டகம்.]

**காட்டகி** *kāṭṭagi,* பெ. (n.) காட்டுக் கொன்றை; wild kondra (சா.அக.).

[காட்டகம் → காட்டகி.]

**காட்டசை** *kāṭṭašai,* பெ.(n.) காட்டுச்சீரகம்; purple fleabane. *"நீர்முத்தங் காட்டசை சத்தி யெல்லெண்" (தைலவ.தைல.69).*

*[காடு + அசை – காட்டசை. அசை : சீரகம்.]*

**காட்டட்டம்** *kāṭṭaṭṭam,* பெ.(n.) வெண்பாதிரி; white flowered fragrant trumpet tree (சா.அக.).

*[காட்டு + அட்டம்.]*

**காட்டணம்** *kāṭṭaṇam,* பெ.(n.) பெருங்குமிழ் (மலை.); coomb teak.

*[காடு + ஆணம். காட்டாணம் →காட்டணம்.]*

**காட்டத்தி** *kāṭṭatti,* பெ.(n.) 1. பேயத்தி (மலை.);devil fig. 2.மரவகை; gaub.

*[காடு + அத்தி – காட்டத்தி.]*



காட்டத்தி

**காட்டதாதி** *kāṭṭatādi,* பெ.(n.) படர் முன்னை அல்லது கொடிமுன்னை; spreading or creeper premna (சா.அக.).

*[காடு + அதைதி– காட்டதைதி→ காட்டதாதி.]*

**காட்டதிமதுரம்** *kāṭṭadi-maduram,* பெ.(n.) காட்டில் விளையும் அதிமதுரம் என்னும் வேர்; root of wild Indian liquorice as opposed to. நாட்டு அதிமதுரம் (சா.அக.).

*[காடு → காட்டு + அதிமதுரம்.]*

**காட்டப்பெறு–தல்** *kāṭṭa-p-peṟu-,* 18 செ.குன்றாவி. (v.t.) உரிமை கொண்டாடுதல்; to lay claim. *"இந்நிலத்துக்கு வேலிக்காசும் நீர்விலைக் காசும் சில்லிறை சோறு மாட்டுள்ளிட்டு. எப்பேர்ப்பட்டதுங் காட்டப் பெறாதோமாகவும்" (S.I.I.III,68-5).*

*[காட்டு →காட்ட(வி.எ.) + பெறு.]*

**காட்டம்**[1] *kāṭṭam,* பெ.(n.) 1 விறகு (திவா.); fire wood. 2. காய்ந்த குச்சி; small stick, as of pipal tree, used in ritual. *"தண்டே குண்டிகை வெண்குடை காட்டம்"* (சிலப்.23:77).

த.கட்டை > **Skt.**karṭa > த.காட்டம் (கொ.வ.).

**காட்டம்**[2] *kaṭṭam,* பெ.(n.) 1. உறைப்பு (இ.வ.). pungency, anything hot to the taste. 2.புளிப்பு; sourness. 3.எரிநோவு; burning sensation. சாராயம் மிகக் காட்டமாக இருக்கிறது (உ.வ)

**க., தெ.** காட்டு

*[கடு →கடுப்பு → காட்டி → காட்டு → காட்டம். கடுப்பு உறைப்பு.]*

**காட்டம்**[3] *kāṭṭam,* பெ. (n.) வெண்கலம் (வின்.); bell-metal.

*[த. கண்டி > தெ.கண்ட்டெ காட்டெ> த.காட்டம். வெண்கலமணி செய்யப்பட்ட மாழையும் வெண்கலமணியின் பெயர் பெற்றது.]*

**காட்டம்**[4] *kāṭṭam,* பெ.(n.) பதினைந்து மணித்துளி கொண்டகாலம் (கால்மணிநேரம்) (விணி.291); quarter hour.

*[காட்டை →காட்டம். காட்டை பார்க்க; see kāṭṭai.]*

**காட்டம்**[5] *kāṭṭam,* பெ.(n.) 1. சினம்; anger. என்மீது காட்டமாக இருக்கிறார் (உ.வ.). 2. மிகுதி (அக.நி.); abundance.

**தெ.** காடு

*[காட்டம்[2] → காட்டம்[5].]*

**காட்டரண்** *kāṭṭaraṇ,* பெ.(n.) நால்வகை அரண்களுள் காடாகிய அரண்(திவா.); forest, as a source of defence, one of four kinds of *araṇ.*

*[காடு + அரண் – காட்டரண்.]*

**காட்டலரி** *kāṭṭalari,* பெ. (n.) 1. அலரிவகை (L.); willow-leaved water croton. 2. நச்சுப்பாலுள்ள ஒரு மரம்; jungle mango. 3.பாலைவகை (L.); mango-like cerbera.

*[காடு + அலரி – காட்டலரி.]*

**காட்டவரை** *kāṭṭavarai,* பெ.(n.) காட்டுமொச்சை (மூ.அ.); country-bean.

*[காடு + அவரை – காட்டவரை.]*



காட்டவரை

**காட்டவீணை** *kāṭṭa-viṇai,* பெ.(n.) மரத்தால் செய்த வீணை; *viṇā,* made of wood.

*[காடு + வீணை.]*

**காட்டவுரி** *kāṭṭavuri,* பெ. (n.) 1.அவுரி வகை; silvery-leaved indigo. 2. புனல் முருங்கை; three-leaved indigo.

*[காடு + அவுரி – காட்டவுரி.]*

**காட்டழகியவாணன்** *kāṭṭaḻagiya-vāṇaṉ,* பெ. (n.) ஒருவகைநெல் (இ.வ.); a kind of coarse paddy.

*[காடு + அழகு+ வாணன்.]*

**காட்டழல்** *kaṭṭaḻal,* பெ.(n.) காட்டுத்தீ (சூடா.); forest conflagration.

*[காடு + அழல். அழல் = தீ, நெருப்பு.]*

**காட்டா** *kāṭṭā,* பெ.(n.) ***காட்டான்²*** பார்க்க; see *kāṭṭāṉ*

*[காடு + ஆ → ஆன் → ஆ = மாடு, பெற்றம்.]*

**காட்டாக்கி** *kāṭṭākki,* பெ.(n.) கட்டையைக் கடைந்துண்டாக்கும் நெருப்பு; fire produced from fuel by churning. *"காட்டாக்கிற் றோன்றி" (சி.போ.9.3:2).*

*[காடு + அக்கி – காட்டக்கி → காட்டாக்கி (கொ.வ.).]*

*[த. அழல் (தீ) > அழனி* **Skt.** *> agni >* **தெ.** *அக்கி > த. அக்கு → அக்கி.]*

**காட்டாகு** *kāṭṭāgu,* பெ. (n.) கொடிமுல்லை; eared-jasmine (சா.அக.).

*[காடு + ஆகு.]*

**காட்டாசாரி** *kāṭṭāšāri,* பெ.(n.) தச்சன்(வின்.); carpenter.

*[காடு + ஆசாரி – காட்டாசாரி.]*

**காட்டாஞ்சி** *kāṭṭāñji,* பெ.(n.) மரவகை (L.); entire-leaved staff tree.

ம. காட்டாடு

*[காடு + ஆஞ்சி – காட்டாஞ்சி.]*

**காட்டாடு** *kāṭṭāḍu,* பெ.(n.)காட்டில் வாழும் ஆட்டைபோன்ற விலங்கு; jungle sheep, barking deer.

*[காடு + ஆடு – காட்டாடு]*

**இது ஆட்டைப்போல் தாவும், நரியைப் போல் ஊளையிடும்.**



காட்டாடு

**காட்டாணி** *kāṭṭāṇi,* பெ.(n.) ***காட்டேணி*** பார்க்க; see *kāṭṭēṇi.*

*[காட்டேணி → காட்டாணி.]*

**காட்டாத்தி** *kāṭṭātti,* பெ.(n.) திருவாத்தி; holy mountain ebony. *"காட்டாத்திப் பூமார்ச் சாலஞ் சடிலை வீரை" (தைலவ. தைல. 51).*

**ம.** காட்டத்தி; **க.** காடத்தி.

*[காடு + ஆத்தி - காட்டாத்தி.]*

**காட்டாதளை** *kāṭṭādaḷai,* பெ. (n.) ***காட்டாமணக்கு*** பார்க்க; see *kāṭṭāmaṇakku* (சா.அக.).

*[காடு + ஆதளை.]*

**காட்டாதாரிகம்** *kāṭṭadārigam,* பெ.(n.) கொடியத்தி; creeper fig (சா.அக).

*[காடு + ஆதரிகம்.]*

**காட்டாமணக்கு** *kāṭṭāmaṇakku,* பெ.(n.) 1. ஆமணக்கு வகை (பதார்த்த.541); common physic nut. 2.பேயாமணக்கு (L.); red physic nut.

**மறுவ.** காட்டாதளை, காட்டாமணத்தி.

**ம.** காட்டாவணக்கு

*[காடு + ஆமணக்கு - காட்டாமணக்கு.]*



காட்டாமணக்கு

**காட்டாமணத்தி** *kāṭṭāmanatti,* பெ.(n.) ***காட்டா மணக்கு*** பார்க்க; *kaṭṭāmaṇakku.*

*[காடு + ஆமணத்தி.]*

**காட்டாமணி** *kāṭṭāmaṇi,* பெ.(n.) ***உத்தாமணி*** பார்க்க; see *uttāmaṇi* (சா.அக.).

*[காடு + ஆமணி.]*

**காட்டாரியம்** *kāṭṭāriyam,* பெ.(n.) கேழ்வரகின் வகை; (G.Sm.D.i, i :217); dry - crop ragi.

*[காடு + ஆரியம் - காட்டாரியம்.]*

**காட்டாரை** *kāṭṭārai,* பெ. (n.) ***கல்லாரை*** பார்க்க; see *kallārai* (சா.அக).

*[காடு + ஆரை.]*

**காட்டாலம்** *kāṭṭālam,* பெ. (n.) பேயால மரம்; wild banyan tree, demonfig (சா.அக.).

**ம.** காட்டால்

*[காடு + ஆலம்.]*

**காட்டாவரை** *kāṭṭāvarai,* பெ. (n.) ***காட்டாவிரை*** பார்க்க; see *kāṭṭāvirai.* mountain downy senna (சா.அக.).

*[காடு + ஆவரை.]*

**காட்டாவிரை** *kāṭṭāvirai,* பெ. (n.) மலையாவாரை; small-stipuled downy rachis glandular senna.

*[காடு + ஆவிரை - காட்டாவிரை.]*

**காட்டாள்** *kāṭṭāḷ,* பெ.(n.) 1. நாகரிகமற்ற முரட்டாள்; rustic, savage, uncivilised rude man. 2. காட்டில் இருப்பவன், வேடன்; a forest-dweller, hunter.

**ம.** காட்டாள்; **க., து.** காட.

*[காடு + ஆள் - காட்டாள்.]*

**காட்டாள் காசு** *kāṭṭāḷ-kāśu,* பெ.(n.) வரிக்கூறு செய்பவர்களுக்கு நிலத்தை அடையாளம்

காட்டுவதற்கான கூலி; payment for identifying the land for the tax assessers. *"வரிக்கூறு செய்வார்களுக்கும் சொல்ல காட்டாள் காசு 25" (S.I.I.VIII,263-9).*

*[காட்டாள் + காசு.]*

**காட்டாளத்தி** *kāṭṭāḷatti,* பெ.(n.) இசையின் விரிவோசை (சிலப்:3:26,உரை.); systematic elaboration of a musical mode in all its variation.

*[காடு + ஆளத்தி – காட்டாளத்தி. ஆளத்தி என்னும் தமிழ்ச்சொல் வடமொழியில் ஆலாபனை ஆயிற்று.]*

**காட்டாளை** *kāṭṭāḷai,* பெ.(n.) ஒருவகைச் சுழல் வண்டு; a whirling beetle (சா.அக.).

**காட்டாறு** *kāṭṭāṟu,* பெ.(n.) 1. காட்டில் ஓடும் ஆறு; a forest-river. 2. மழைக் காலத்தில் மட்டும் ஓடும் ஆறு; the river where water flows only in rainy season.

ம. காட்டாறு

*[காடு + ஆறு.]*

**காட்டான்**[1] *kāṭṭāṉ,* பெ.(n.)1. நாகரிகமாகப் பழகும் இயல்பு இல்லாதவன்; person of rough manners, rustic. 2. அயலான்(யாழ்ப்.); stranger.

ம. காட்டன், காடன்; **கா.து.** காட

*[காடு + ஆன் – காட்டான். 'ஆன்' ஆண்பாலீறு.]*

**காட்டான்**[2] *kāṭṭāṉ,* பெ.(n.)காட்டு மாடு; wild cow. *"வெல்லரிய கரடி காட்டான் பூனை" (அறப். சத.62.).*

ம. காட்டி, க. காட்டா

*[காடு + ஆன் – காட்டான். ஆன் = மாடு,பெற்றம்.]*

**காட்டான்கரையான்**[2] *kāṭṭāṉ-karaiyāṉ,* பெ.(n.) பட்டிக்காட்டான்(நெல்லை.); rustic.

*[காட்டான் + கரையான்.]*

**காட்டானை** *kāṭṭāṉai,* பெ.(n.) காட்டில்வாழும் யானை (பழக்கப்படுத்தப் படாதயானை); wild elephant.

ம. காட்டான

*[காடு + யானை.]*

**காட்டி**[1] *kāṭṭi,* பெ.(n.)(வியங்கோள்) காட்டுக. இகரவீற்று வியங்கோள், (த.சொ.அக). optative mood with final 'I'.

**காட்டி**[2] *kāṭṭi,* பெ.(n.) பன்றி (அக.நி.); pig.

**காட்டிக்கொடு-த்தல்** *kāṭṭi-k-koḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கற்றுக் கொடுத்தல்; to put one in the way, to teach or show the method of doing anything. 2.தன்பக்கத்தானொருவனை எதிரி கைக்கொள்ளும் நிலைமையை உண்டாக் குதல்; to play false, to accuse; to betray, as a person to his enemy. 3.சோதனை முறையைக் கையாண்டு வெளிப்படுத்துதல்; reveal. பையில் வைத்திருக்கும் பேனாக் கத்தியைக்கூட இந்த மின்கருவி காட்டிக் கொடுத்துவிடும்(உ.வ.).

*[காட்டு → காட்டி + கொடு.]*

**காட்டிக்கொள்ளு-தல்** *kāṭṭi-k-koḷḷu-,* 16 செ.குன்றாவி. (v.t.) இல்லாததை உள்ளதுபோலக் காட்டிக் கொள்ளுதல்; try to pass for; put on airs. அவன் தன்னை அறிவாளி போலக் காட்டிக் கொண்டான் (உ.வ.).

*[காட்டு → காட்டி + கொள்.]*

**காட்டிச்சி** *kāṭṭicci,* பெ.(n.) கல்லத்தி; stone fig (சா.அக.).

*[காடு + இச்சி.]*

**காட்டிஞ்சி** *kāṭṭiñji,* பெ. (n.) 1. இஞ்சிவகை (L.); wild ginger. 2. சரணை (மலை.); purslane - leaved trianthema.

ம. காட்டிஞ்சி

*[காடு + இ ஞ்சி – காட்டிஞ்சி]*

**காட்டிண்டு** *kāṭṭiṇḍu,* பெ.(n.) copious narrow-leaved soap pod.

*[காடு + இண்டு – காட்டிண்டு.]*

**காட்டிமறை–த்தல்** *kāṭṭi-maṟai-,* 4 செ.குன்றாவி. (v.t.) எளிதில் கிடைப்பது போல் தோற்றுவித்து ஏமாறச்செய்தல்; to tantalise a person by presenting something desirable to his view and snatching it away just at the moment of his taking it *"கருணை மூர்த்தி காட்டி மறைத்தலும்" (திருவிளை வாதவூ.54.)*

*[காட்டு → காட்டி (வி.எ.) + மறை.]*

**காட்டியானை** *kāṭṭiyāṉai,* பெ.(n.) காட்டில் வாழும் யானை(திவா.); wild elephant.

*[காடு + யானை – காட்டியானை. ஒ.நோ. கற்றி யானை.]*


காட்டியானை

**காட்டியும்** *kāṭṭiyum,* இடை.(part.) காட்டிலும்; a case-sign, the ablative of comparison. *"என்னைக் காட்டியு முண்டோ" (குருகூர்ப். 96.).*

*[காட்டிலும் → காட்டியும் (கொ.வ.). **காட்டில்**[1] பார்க்க; see kāttil – காட்டாஞ்சி.]*

**காட்டிருப்பை** *kāṭṭiruppai,* பெ.(n.) காட்டிலுப்பை பார்க்க; see *kāttiluppai.*

*[காட்டிலுப்பை → காட்டிருப்பை.]*

**காட்டிருள்** *kāṭṭiruḷ,* பெ.(n.) கனத்த இருள்; பேரிருள்; pitch-darkness, thick darkness.

*[காடு + இருள்.]*

**காட்டில்**[1] *kāṭṭil,* இடை.(conj.) உறழ்ச்சிப் பொருள் காட்டும் இடைச்சொல்; than. *"ஒழிந்த பெருத்த உறுப்புகளில் காட்டில் பெரிய அழகையுடைய" (சீவக.1461,உரை).*

ம. காட்டில்

*[காண் → காட்டு → காட்டில். ஒன்றை ஒப்புமையாகக் காட்டும்போது எனப் பொருள்படும் இடைச்சொல் 'அதனைவிட'என்னும் உறழ்ச்சிப்பொருள் தந்தது.]*

**காட்டில்**[2] *kāṭṭil,* வி.எ.(adv.) 1. அளவில்; when *"தவநெறி என்னுங் காட்டில் பக்தியைச் சொல்லிற் றாமோ"(ஈடு, 10.4:1).* 2. உடன்; as soon as, at the very instant. 'ஒரு குயில் ஒருகாற் கூவுங்காட்டில் விடிந்ததோ' (திவ்.திருப்பா.18, வியா.171.).

*[காட்டில்[1] → காட்டில்[2].]*

**காட்டிலந்தை** *kāṭṭilanai,* பெ. (n.) இலந்தை மரவகை; a species of jujube.

ம. காட்டிலந்த

*[காடு + இலந்தை.]*

**காட்டிலம்** *kāṭṭilam,* பெ. (n.) வாழை வகை (மலை.); a kind of plantain.

*[காட்டேலம் → காட்டிலம். ஏலவாழையின் வகைகளுள் ஒன்று.]*

**காட்டிலமிர்து** *kāṭṭilamirtu,* பெ.(n.) ***காட்டகத் தமிழ்து*** பார்க்க; see *kāṭṭagattamiḷdu.*

*[காட்டகத்தமிழ்து → காட்டகத்தமிந்து → காட்டிலமிர்து. சீவக.2110 உரையில் காட்டிலமிர்து என ஆண்டிருப்பது கொச்சை வழக்கு.]*

**காட்டிலவு** *kāṭṭilavu,* பெ. (n.) 1. கோங்கிலவு; false traganth. 2. பாறையிலவு; large flowered silk cotton (சா.அக.).

மறுவ. காட்டுப்பருத்தி

*[காடு + இலவு – காட்டிலவு.]*

**காட்டிலா** *kāṭṭilā*, பெ. (n.) 1. வெள்ளெருக்கு; white flowered giant swallow wort. 2.வாழை;plantain tree (சா.அக).

*[காடு + ஈலை – காட்டீலை → காட்டிலா.]*

**காட்டிலுப்பை** *kāṭṭiluppai*, பெ.(n.) 1. காட்டிலுப்பை மரம்; wild mowah 2. கற்பாலை; East Indian star apple. 3. பாற்சோற்றிப் பாலை; oval mowah (சா.அக.).

*[காடு + இலுப்பை.]*

**காட்டிலும்¹** *kāṭṭilum*, இடை. (conj.) உறழ்ச்சிப் பொருள் குறிக்கும் இடைச்சொல்; than. அதைக் காட்டிலும் இது நல்லது (உ.வ.).

*[காண் → காட்டு → காட்டில் → காட்டிலும். காட்டில் பார்க்க;see kaṭṭil.]*

**காட்டிலும்²** *kāṭṭilum*, வி.எ.(adv.) உடன்; as soon as, at the very instant.விடியுங்காட்டிலும் வந்தான் (உ.வ.).

*[காண் → காட்டு → காட்டில் → காட்டிலும். காட்டில் பார்க்க; see kaṭṭil.]*

**காட்டிலுமிழி** *kāṭṭil-umiḻi*, பெ.(n.) நாகர வண்டு (வின்.); a large kind of beetle.

*[காட்டில் + (உமுறி)உமிழி. உமுறி = ஓசையெழுப்புவது.]*

**காட்டிலேபோ–தல்** *kāṭṭil-e-pō-*, 8 செ.கு.வி. (v.i.) வீணாய்க்கழிதல் (யாழ்ப்.); to be lost, wasted.

*[காடு + இல் + ஏ – காட்டிலே + போ.]*

காடு = இடுகாடு. இச் சொல் மறைந்தொழிதல், கழிந்துபோதல், பயனற்றுப்போதல் என்னும் பொருள்களின் அடியாக வீணாகப்போதலைக் குறித்தது.

**காட்டினாவாடை** *kāṭṭiṇāvāḍai*, பெ.(n.) நன்னாரி; Indian sarsaparilla (சா.அக.).

**காட்டீஞ்சு** *kāṭṭīñju*, பெ. (n.) காட்டீந்து பார்க்க; see *kāṭṭīndu.*

*[காட்டீந்து → காட்டீஞ்சு.]*

**காட்டீந்து** *kāṭṭīndu*, பெ.(n.) ஈச்சம்பனை; wild date-palm.

மறுவ. காட்பீச்சை

ம. காட்டீந்தல்

*[காடு + ஈந்து – காட்டீந்து.]*

**காட்டீரகம்** *kāṭṭīragam*, பெ. (n.) கொட்டைமுந்திரி; cashew nut (சா.அக.).

**காட்டீருள்ளி** *kāṭṭīruḷḷi*, பெ. (n.) நரிவெங்காயம்; jungle onion or jackal onion.

க. காடீருள்ளி

மறுவ. காட்டு வெள்ளை வெங்காயம்.

*[காடு + ஈருள்ளி – காட்டீருள்ளி.]*

**காட்டீலை** *kāṭṭīlai*, பெ.(n.) 1. வாழை; plantain tree. 2. கடுக்காய்; gallnut.

*[காடு + ஈலை.]*

**காட்டு¹–தல்** *kāṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. காண்பித்தல்; to show, exhibit, display. *"எம்மில்லங் காட்டுதும்" (நாலடி,293.).* 2. அறிவித்தல்; to reveal, disclose, set forth. *"காணாதாற் காட்டுவான்" (குறள்,849).* 3. நிறுவுதல்; to prove. *"நிறைமொழி மாந்தர்.... மறைமொழி காட்டிவிடும்" (குறள்,28).* 4. நினைவூட்டுதல்; to remind. *"முறுவற் குறிகாட்டி முத்தே யுலகை முடிப்பாயோ" (கம்பரா. கடல் காண்.8.).* 5.திருவமுது படைத்தல்; to offer to a deity. *"ஆழ்வார்க்குக் காட்டுகின்ற திருவமுர்தும்" (S.I.I.III.49-3:102).* 6.நிழலுருச் செய்தல்; to reflect, as a mirror or water. *"அடுத்தது காட்டும் பளிங்கு*

போல்" (குறள்.706.). 7. உண்டாக்குதல்; to create, bring to pass. "களையாத துன்பமிக் காரிகைக்குக் காட்டி" (சிலப். 19:17). 8. அறிமுகஞ் செய்வித்தல்; to introduce. "செவ்வழி யுள்ளத் தோனைக் காட்டுதி தெரிய வென்றான்" (கம்பரா. கிட்கிந் அனுமப்.23.). 9. நறுமண முதலியன ஊட்டுதல்; to apply, as incense or perfume to the hair. "ஆவிகாட்டி.... சோர்குழல்" (கம்பரா. கிட்கிந். நாடவி.59.). 10. வெப்பம் உறைக்கச் செய்தல்; to heat, as a vessel of ghee. நெய்ப்பாத்திரத்தை நெருப்பிற்காட்டி உருக்கினான் (உ.வ.). 11. மீட்டுத்தருதல்; to bring back. "ஆழிகாட்டியென் னாருயிர் காட்டினாய்" (கம்பரா. சுந்தர. பிணிவீட்டு.34).

ம. காட்டுக; க. காணிசு; காணிபின்சு; து. காணுசாபுனி, காணிசாவுனி; குட., கோத. காட்; துட. கோட்.

[காண் (த.வி)→ காட்டு (பி.வி.).]

**காட்டு²** *kāṭṭu,* பெ. (n.) 1.காண்பிக்கை; showing; exhibition, presentation. 2.சான்று; instance, example. "கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்" (நன்.22.). 3. துணைக்கருவி; means, implements. "இவ்வுடலே காட்டொடுங்க காணாதே" (சி.போ.3.5:1.). 4.ஒளி (சி.சி.5:4.); brightness, light.

[காண் → காட்டு. ஏவலடியே பெயராகிக் காட்டுதலையும், காட்டுதற்கும் காணுதற்கும் காரணமாகிய பொருள்களையும் பொருளால் புடைபெயர்ந்து சுட்டியது.]

**காட்டு³** *kāṭṭu,* பெ.(n.) உறைப்பு; pungency, acridity.

தெ.காட்டு

[காட்டம் → காட்டு.]

**காட்டு⁴** *kāṭṭu,* பெ.(n.) குப்பை; rubbish. காட்டுக் "களைந்து கலங்கழீஇ"(ஆசாரக்.46).

தெ.காட்டு

**காட்டுஓமவல்லி** *kāṭṭumavalli,* பெ.(n.) ஓமவல்லி வகை; a variety of ōmavalli (சா.அக).

[காடு + ஓமவல்லி.]

**காட்டுக்கசகசா** *kāṭṭu-k-kaša-kašā,* பெ.(n.) கசகசா வகை; wild poppy.

[காடு + கசகசா]


காட்டுக்கசகசா

**காட்டுக்கஞ்சாங்கோரை** *kāṭṭu-k-kañjāṅkōrai,* பெ.(n.) செடிவகை (மூ.அ.); sage tea plant.

[காடு + கஞ்சு + அம் + கோரை. காட்டுக்கஞ்சாங் கோரை. 'அம்' சாரியை 'ஆம்' என நீண்டது.]

**காட்டுக்கட்டை** *kāṭṭu-k-kaṭṭai,* பெ.(n.) பலவகை மரங்களின் விறகு; firewood of various kinds.

[காடு + கட்டை.]

**காட்டுக்கடலி** *kāṭṭu-k-kaḍali,* பெ.(n.) பூனைப் பிடுக்கன் செடிவகை(வின்.); roughish round-leaved Indian linden.

[காடு + கடலி]

**காட்டுக்கடலை** *kāṭṭu-k-kaḍalai,* பெ.(n.) புதர்ச்செடிவகை (வின்.); rough small - leaved spider flower shrub.

ம. காட்டுகடலை

[காடு + கடலை – காட்டுக்கடலை.]

**காட்டுக்கடன்** *kāṭṭu-k-kaḍaṉ,* பெ.(n.) ஈமக்கடன்; obsequies or funeral rites at the burning ghat.

மறுவ. காட்டுக்கிரியை.

[காடு + கடன்.]

**காட்டுக்கடுகு** *kāṭṭu-k-kaḍugu,* பெ.(n.) நாய் வேளை (M.M.937); a sticky plant that grows best in sandy places.

ம. காட்டுகடுகு

*[காடு + கடுகு.]*

**காட்டுக்கண்ணி** *kāṭṭu-k-kaṇṇi,* பெ.(n.) முட்டை நாறி; claw-flowered laurel (சா.அக.).

*[காடு + கண்ணி.]*

**காட்டுக்கத்தரி** *kāṭṭu-k-kattari,* பெ.(n.) செடிவகை; hedge caper.

*[காடு + கத்தரி.]*

**காட்டுக்கத்தூரி** *kāṭṭu-k-kattūri,* பெ.(n.) பெட்டகத் துத்தி எனும் மூலிகைச் செடி (மலை.); musk mallow, hairy shrub.

*[காடு + கத்தூரி – காட்டுக்கத்தூரி.]*

Skt. kastūri > த. கத்தூரி.

**காட்டுக்கதலி** *kāṭṭu-k-kadali,* பெ. (n.) காட்டு வாழை (மூ.அ.); wild plantain.

*[காடு + கதலி.]*

**காட்டுக்கப்பற்கிழங்கு** *kāṭṭu-k-kappaṟ-kiḻaṅgu,* பெ.(n.) காட்டுக்கிழங்கு; a wild root (சா.அக).

*[காடு + கப்பற்கிழங்கு.]*

**காட்டுக்கம்பம்புல்** *kāṭṭu-k-kambam-pul,* பெ. (n.) ஒருவகைக் கம்பம் புல்; a wild coraly (சா.அக.).

*[காடு + கம்பம் + புல்.]*

**காட்டுக்கமுகு** *kāṭṭu-k-kamugu,* பெ.(n.) இலங்கைக்கமுகு; betel palm of srilanka (சா.அக).

ம. காட்டுகமுகு

*[காடு + கமுடு.]*

**காட்டுக் கரந்தை** *kāṭṭu-k-karandai,* பெ.(n.) ஒரு வகைக் கரந்தை; wild sweet basil of the Sphoeranthes genus (சா.அக.).

*[காடு + கரந்தை.]*

**காட்டுக்கருணை** *kāṭṭu-k-karuṇai,* பெ. (n) 1. ஒரு வகைப் பூடு. (பதார்த்த.417); purple stalked dragon, s.sh., synantherias sylvatica. 2. சேனைக்கிழங்கு வகை (வின்.); tahiti arrow-root.

*[காடு + கருணை – காட்டுக்கருணை.]*

**காட்டுக்கருப்பூரக்கிச்சிலிக்கிழங்கு** *kāṭṭu-k-karuppūra-k-kiccili-k-kiḻaṅgu,* பெ.(n.) காட்டுப் பூலாங் கிழங்கு; forest orange root of Curcuma genus (சா.அக.).

*[காடு + கருப்பூரம் + கிச்சிலி + கிழங்கு.]*

**காட்டுக்கரும்பு** *kāṭṭu-k-karumbu,* பெ.(n.) பேய்க்கரும்பு; wild sugarcane (சா.அக.).

ம. காட்டுகரிம்பு

*[காடு + கரும்பு.]*

**காட்டுக்கருமிளகு** *kāṭṭu-k-karu-miḷagu,* பெ.(n.) மிளகுவகை; kind of pepper.

ம. காட்டுகரிமுளகு

*[காடு + கருமிளகு.]*

**காட்டுக்கருவா** *kāṭṭu-k-karuvā,* பெ. (n.) 1. காட்டில வங்கம்; jungle cloves. 2. சீனமிளகு; China pepper.

ம. காட்டுகறுவா

*[காடு + கருவா – காட்டுக்கருவா. கருவேல் → கருவா (கொ.வ.) ஒரு சிறிய மரம்.]*

**காட்டுக்கருவேப்பிலை** *kāṭṭu-k-karuvēpilai,* பெ.(n.) கறிவேப்பிலை வகை(L.); axil flowered shrubby Indian wampee.

மறுவ : ஆனாந்தளை

*[காடு + கருவேப்பிலை.]*

**காட்டுக்கரையாம்பூ** *kāṭṭu-k-karaiyāmbū*, பெ.(n.) மலைநாவல்; clove-like black plum (சா.அக).

*[காடு + கரையாம்பூ.]*

**காட்டுக்கல்** *kāṭṭu-k-kal*, பெ. (n.) 1. ஒருவகை முருட்டுக்கல் (வின்.); a rough unshaped stone. 2. வெள்ளைக்கல்; white stone. (சா.அக.).

*[காடு + கல் –காட்டுக்கல்.]*

**காட்டுக்கல்லுண்டை** *kāṭṭu-k-kalluṇḍai*, பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[காடு + கல் லுண்டை.]*

**காட்டுக்கழுதை** *kāṭṭu-k-kaḻudai*, பெ.(n.) காட்டில் வாழும் (பழக்கப்படுத்தப் படாத) கழுதை; a wild-ass.

ம. காட்டுகழுத

*[காடு + கழுதை.]*

**காட்டுக்கள்ளி** *kāṭṭu-k-kaḷḷi*, பெ. (n.) மலைக்கள்ளி; hill kaḷḷi (சா.அக).

*[காடு + கள்ளி.]*

இதன் இலைகளை வதக்கிக் காயம், புண் முதலியவற்றில் வைத்துக் கட்ட எரிச்சல் நீங்கும்.

**காட்டுக்கற்றாழை** *kāṭṭu-k-kaṟṟāḻai* பெ.(n.) ஆனைக் கற்றாழை; wild aloe or hill aloe.

*[காடு + கற்றாழை.]*



காட்டுக்கற்றாழை

**காட்டுக்கனி** *kāṭṭu-k-kaṉi*, பெ.(n.) காட்டெலுமிச்சை; Indian wild lime (சா.அக).

*[காடு + கனி.]*

**காட்டுக்காசினி** *kāṭṭu-k-kāśiṉi*, பெ.(n.) காட்டில் விளையும் காசினி; wild endive (சா.அக.).

*[காடு + காசினி.]*

**காட்டுக் காட்டாமணி** *kāṭṭu-k-kāṭṭāmaṇi*, பெ.(n.) காட்டு உத்தாமணி; wild hedge twiner.

*[காடு + காட்டாமணி.]*

**காட்டுக்காய்ச் சாறுமுட்டி** *kāṭṭu-k-kāy-cāṟu muṭṭi*, பெ.(n.) ஓர் அவுரிப் பூடு; curved podded five-leaved indigo (சா.அக).

*[காடு + காய் + சாறுமுட்டி.]*

**காட்டுக்காய்ச்சுரை** *kāṭṭu-k-kāy-c-curai*, பெ.(n) 1.சுரை வகை; a species of bottle gourd. 2.புளிச்சைவகை (வின்.); deccan hemp. 3. முட்புளிச்சை (M.M.83); thorny hemp bendy, herbaceous plant.

*[காடு + காய்ச்சுரை.]*

**காட்டுக்காய்வள்ளி** *kāṭṭu-k-kāy-vaḷḷi*, பெ.(n.) 1. வள்ளி காய் (மூ.அ.); cultivated yam, dioscorea sativa. 2. காய்ச்சீரக வள்ளிவகை (வின்.); cummin yam.

*[காடு + காய்வள்ளி.]*

**காட்டுக்காரை** *kāṭṭu-k-kārai*, பெ.(n.) மலைக்காரை; gland petioled saw-leaved olive linden (சா.அக).

ம. காட்டுகார

*[காடு + காரை.]*

**காட்டுக்காளை** *kāṭṭu-k-kāḷai,* பெ.(n.) மாட்டு வகையைச் சார்ந்த ஒரு காட்டு விலங்கு; a wild animal of the cow family.

ம. காடுகாள

*[காடு + காளை.]*

**காட்டுக்கானாங்கோழை** *kāṭṭu-k-kāṉāṅ-kōḻai,* பெ.(n.) கானாவாழை (மூ.அ.); calf's grass.

*[காடு + கானாங்கோழை.]*

**காட்டுக்கானாவாழை** *kāṭṭu-k-kāṉā-vāḻai* பெ.(n.) கானா வாழைவகை (யாழ்.அக.); a species of calf's grass.

*[காடு + கானாவாழை]*

**காட்டுக்கிச்சிலி** *kāṭṭu-k-kiccili,* பெ.(n.) 1.காட்டெலுமிச்சை; (L.) wild lime. 2. காட்டில் விளையும் கிச்சிலிப்பழம்; wild orange (சா.அக).

*[காடு + கிச்சிலி.]*

**காட்டுக்கிட்டம்** *kāṭṭu-k-kiṭṭam,* பெ.(n.) மலைக் கிட்டம்; iron crust; spongy stones such as prunice etc. found in mountains or mountainous tracts. (சா.அக.).

*[காடு + கிட்டம்.]*

**காட்டுக்கிராம்பு** *kāṭṭu-k-kirāmbu,* பெ.(n.) நீர்க் கிராம்பு (மூ.அ.); primrose-willow.

*[காடு + கிராம்பு – காட்டுக்கிராம்பு (கொ.வ.). குறும்பூ → குறும்பு → கிராம்பு (கொ.வ.).]*

**காட்டுக்கிரியை** *kāṭṭu-k-kiriyai,* பெ.(n.) ***காட்டுக் கடன்*** பார்க்க; see *kāṭṭu-k-kaḍaṉ.*

மறுவ. ஈமக்கடன்

Skt. kriya> த. கிரியை.

*[காடு + கிரியை.]*

**காட்டுக்கிள்ளை** *kāṭṭu-k-kiḷḷai,* பெ. (n.) நகுதாளி யிலை; common cherry nutmeg (சா.அக).

*[காடு + கிள்ளை.]*

**காட்டுக்கிளுவை** *kāṭṭu-k-kiḷuvai,* பெ. (n.) கற்பூரக் கிளுவை; hill kiluvai or hill mango.

*[காடு + கிளுவை.]*

**காட்டுக்கீரை** *kāṭṭu-k-kīrai,* பெ.(n.) காட்டி லுண்டாகும் பலவகைக் கீரை (வின்.); wild greens of different kinds.

*[காடு + கீரை.]*

**காட்டுக்கீழாநெல்லி** *kāṭṭu-k-kīḻā-nelli,* பெ. (n.) பூலாவகை. (L.); black-honey shrub, large, often scandent.

*[காடு + கீழ் + ஆம் + நெல்லி.]*

**காட்டுக்குணம்** *kāṭṭu-k-kuṇam,* பெ.(n.) விலங் கியல்பு (யாழ்.அக.); rudeness; savagery.

*[காடு + குணம்.]*

**காட்டுக்குதிரை** *kāṭṭu-k-kudirai,* பெ. (n.) 1. காட்டில் வாழும்குதிரை; a wild-horse. 2. வரிக்குதிரை; a zebra.

ம. காட்டுகுதிர

*[காடு + குதிரை.]*

**காட்டுக்குமிழ்** *kāṭṭu-k-kumiḻ,* பெ. (n.) 1. மரவகை; French mulberry of the Western ghauts. 2. பாமரக் குமிழ்; false white teak.

ம. காட்டு குமிழ்

*[காடு + குமிழ்.]*

**காட்டுக்குயின்** *kāṭṭu-k-kuyiṉ,* பெ. (n.) மரவகை; a kind of tree.

**ம.** காட்டுகுருந்த

*[காடு + குயின்.]*

**காட்டுக்குருக்கு** *kāṭṭu-k-krukku,* பெ. (n.) ***காட்டுநெருஞ்சில்*** (புதுவை) பார்க்க; see *kāṭṭu-neruñjil.*

*[காடு + குருக்கு.]*

**காட்டுக்குருந்து** *kāṭṭu-k-kurundu,* பெ.(n.) காட்டெலுமிச்சை (மலை.); Indian wild lime.

**மறுவ.** காட்டு நாரத்தை.

**ம.** காட்டுகுருந்த

*[காடு + குருந்து.]*

**காட்டுக்குருந்தோட்டி** *kāṭṭu-k-kuruṇdōṭṭi,* பெ.(n.) ஆனைக்குருந்தோட்டி; forest morning mellow (சா.அக).

*[காடு + குருந்தோட்டி.]*

**காட்டுக்குறிஞ்சி** *kāṭṭu-k-kuṟiñji,* பெ. (n.) குறிஞ்சா; country ipecacuanha (சா.அக.).

*[காடு + குறிஞ்சி.]*

**காட்டுக்கூந்தல்** *kāṭṭu-k-kūndal,* பெ. (n.) புல்வகை (யாழ்.அக.); a kind of grass.

*[காடு + கூந்தல்.]*

**காட்டுக்கொஞ்சி** *kāṭṭu-k-koñji,* பெ.(n.) கொழிஞ்சிச் செடிவகை (மூ.அ.); opal orange.

*[காடு + கொழுஞ்சி → காட்டுக்கொழுஞ்சி (கொ.வ).]*

**காட்டுக்கொட்டை** *kāṭṭu-k-koṭṭai,* பெ.(n.) காட்டாமணக்கு; physic nut.

*[காடு + கொட்டை.]*

**காட்டுக்கொடி** *kāṭṭu-k-kodi,* பெ. (n.) 1. கசப்புள்ள ஒருவகைக் கொடி; broom-creeper. 2. நன்னாரி வகை (L); square branched sarsaparilla. 3. வாயு விளங்கம்; wind-berry climber.

*[காடு + கொடி.]*

**காட்டுக்கொடிமுந்திரிகை** *kāṭṭu-k-kodi-mundirigai,* பெ.(n.) முந்திரி வகை (L.); jungle grape-vine.

*[காடு + கொடி + முந்திரிகை.]*

**காட்டுக்கொய்யா** *kāṭṭu-k-koyyā,* பெ. (n.) மலைச் சிறுகொய்யா; wild guava of Ceylon (சா.அக.).

*[காடு + கொய்யா.]*

**காட்டுக்கொழுகி** *kāṭṭu-k-koḻugi,* பெ. (n.) சிறு கீரை; pig-greens (சா.அக.).

*[காடு + கொழுகி.]*

**காட்டுக்கொழுஞ்சி** *kāṭṭu-k-koḻuñji,* பெ.(n.) 1.கொள்ளுக்காய் வேளை; purple wild indigo. 2. காட்டெலுமிச்சை; a species of wild lime.

*[காடு + கொழுஞ்சி.]*

**காட்டுக்கொள்** *kāṭṭu-k-koḷ,* பெ.(n.) 1. கருங் காணம் (மூ.அ.); black horse-gram. 2. காலியாந் துவரை (L.); black dhal, low twining weed.

*[காடு + கொள் – காட்டுக்கொள். கொள் = வளைவு வளைந்த காய்.]*

குதிரைக் கொள்ளைப்போல் இருக்கும், மருந்துக்குப் பயன்படும்.

**காட்டுக்கொன்றை** *kāṭṭu-k-kōṉṟai,* பெ. (n.) 1.கருங்கொன்றை; rox-bugh's cassia. 2. மலைக் கொன்றை; hill cassia (சா.அக).

மறுவ. காட்டுக்கொன்னை

*[காடு + கொன்றை.]*

**காட்டுக்கோங்கு** *kāṭṭu-k-kōṅgu,* பெ. (n.) கோங்கு மரவகை; prussic-acid tree.

*[காடு + கோங்கு.]*

**காட்டுக்கோதிகம்** *kāṭṭu-k-kōdigam,* பெ. (n.) சிறுகுமிழ்; small Kashmir tree (சா.அக.).

*[காடு + கோதிகம்.]*

**காட்டுக்கோதுமை** *kāṭṭu-k-kōdumai,* பெ.(n.) 1.வாற்கோதுமை; barley or tail wheat. 2.காட்டில் விளையும் கோதுமை; wild wheat.

*[காடு + கோதுமை.]*

**காட்டுக்கோரை** *kāṭṭu-k-kōrai,* பெ.(n.) பெருங்கோரை; large sedge grass (சா.அக.).

*[காடு + கோரை.]*

**காட்டுக்கோவை** *kāṭṭu-k-kōvai,* பெ.(n.) 1.பெருங் கோவை; large flowered bryony. 2.இராமக்கோவை அல்லது கருங்கோவை; Rama's caper or black caper.

*[காடு + கோவை.]*

**காட்டுக்கோழி** *kāṭṭu-k-kōḻi,* பெ.(n.) 1.சம்பங் கோழி; jungle-fowl. 2. கற்கவுதாரி (M.M.); common sand-grouse. 3. சாம்பற் காட்டுக்கோழி; grey jungle fowl or Indian woodcock. 4. சிவப்பு காட்டுக் கோழி; red jungle fowl. 5. சிறகுகோழி; red spur fowl (சா.அக.).

ம. காட்டுகோழி; க. காடுகோழி; து. காடுகோரி.

*[காடு + கோழி.]*



காட்டுக்கோழி

**காட்டுச்சங்கம்** *kāṭṭu-c-caṅgam,* பெ. (n.) நாகர வண்டு; a kind of beetle (சா.அக.).

*[காடு + சங்கம்.]*

**காட்டுச்சண்பகம்** *kāṭṭu-c-caṇbagam,* பெ.(n.) நீலகிரிச் சண்பகப்பூ; white-stalked fruited tulip tree of the Nilgiris.

*மறுவ. காட்டுச்சம்பங்கி*

*[காடு + சண்பகம் - காட்டுச்சண்பகம். செம் → செம்பகம் → சம்பகம் →சண்பகம்.]*

**காட்டுச்சதகுப்பை** *kāṭṭu-c-cadakuppai,* பெ. (n.) சதகுப்பை போலவே இருக்கும் கடைச்சரக்கு; a plant akin to common dill (சா.அக.).

*[காடு + சதகுப்பை.]*

**காட்டுச்சந்தனம்** *kāṭṭu-c-candaṉam,* பெ. (n.) தேவதாரு என்னும் மரவகை; red cedar.

*[காடு + சந்தனம் - காட்டுச்சந்தனம். சாந்து → சாந்தனம் → சந்தனம்.]*

**காட்டுச்சம்புநாவல்** *kāṭṭu-c-cāmbu-nāval,* பெ. (n.) காட்டுப் பெருநாவல்; munro's wax rose apple (சா.அக.).

*[காடு + சம்புநாவல்.]*

**காட்டுச்சருக்கரை** *kāṭṭu-c-carukkarai,* பெ.(n.) நிலச் சருக்கரைக் கிழங்கு; ground sugar-root (சா.அக.).

*[காடு + சருக்கரை.]*

**காட்டுச் சல்லாத்து** *kāṭṭu-c-callāttu,* பெ.(n.) சல்லாத்துக்கீரை; garden lettuce or cabbage lettuce (சா.அக.).

*[காடு + சல்லாத்து. உனானி மருத்துவத்தில் பயன்படும் இலை.]*

**காட்டுச்சாதி** *kāṭṭu-c-cādi,* பெ.(n.) 1. காட்டில் விளையும் மரங்கள்; forest trees in general. காட்டுச்சாதியில் செய்த மேசை (உ.வ.). 2. காட்டுச் சாதிக்காய்; jungle nutmeg. 3. காட்டுச்சாதி பத்திரி; wild mace.

ம. காட்டு ஜாதி

*[காடு + சாதி – காட்டுச்சாதி. சாதிக்காய் மரம்.) இது பால் மர வகையைச் சார்ந்ததாகலின் யாதிக்காய் → சாதிக்காய் எனத் திரிந்தது. த. யா > Skt. > sati த. சாதி.]*

**காட்டுச்சாம்பல்** *kāṭṭu-c-cāmbal,* பெ. (n.) 1. சிறுமர வகை (இலம்பிலி) (L.); munro's rose wax apple. 2. காட்டுச் சம்புநாவல் பார்க்க; see kāṭṭu-c-cambu-nāval.

மறுவ. இலம் பிலி

*[காடு + சாம்பல். வெண்ணிறத் தோற்றத்தால் பெயரிடப்பட்ட மரம்.]*

**காட்டுச்சாயவேர்** *kāṭṭu-c-cāyavēr,* பெ. (n.) காட்டு இம்பூறற்செடி; wild chay root (சா.அக).

மறுவ. பாப்பன் பூண்டு.

*[காடு + சாயவேர்.]*

**காட்டுச்சார்வளை** *kāṭṭu-c-cārvaḷai,* பெ. (n.) ***காட்டுச்சாரணை*** பார்க்க; see *kāṭṭu-c-cāraṇai.*

*[காடு + சார்வளை.]*

**காட்டுச்சாரணை** *kāṭṭu-c-cāraṇai,* பெ. (n.) மூக்கரைச் சாரணை; white trianthema (சா.அக.).

*[காடு + சாரணை.]*

**காட்டுச்சாரை** *kāṭṭu-c-cārai,* பெ.(n.) மருகு; marjoram (சா.அக.).

*[காடு + சாரை. இதன் எண்ணெய் பல் வலிக்கு மருந்தாகும்.]*

**காட்டுச்சிகை** *kāṭṭu-c-cigai,* பெ. (n.) 1. காட்டுச் சீயக்காய்; sensitive tree. 2.பேய்ச்சீயக்காய்; rusty mimosa (சா.அக.).

*[காடு + சிகை.]*

**காட்டுச்சிலந்தி** *kāṭṭu-c-cilandi,* பெ.(n.) காட்டுச் செருந்தி; forest gold champak (சா.அக.).

*[காடு + சிலந்தி.]*

**காட்டுச்சிவிகை** *kāṭṭu-c-civigai,* பெ.(n.) பாடை (திருமந்.153); bier. *"காட்டுச்சிவிகையொன்றேறி" (திருமந்.197).*

*[காடு + சிவிகை.]*

**காட்டுச்சிறுகீரை** *kāṭṭu-c-cirukīrai,* பெ.(n.) காட்டில் விளையும் சிறுகீரை வகை; fine-leaved amarnath.

*[காடு + சிறுகீரை.]*

**காட்டுச்சிறுதுளசி** *kāṭṭu-c-ciṟu-tuḷasi,* பெ.(n.) சிறிய இலைகள் உள்ள ஒருவகைத் துளசிச் செடி; a variety of basic.

ம. காட்டுச்செறு துளசி

*[காடு + சிறு+ துளசி.]*

**காட்டுச்சீரகம்** *kāṭṭu-c-cīragam,* பெ.(n.) சிற்றிலைச் சீரகம்; wild cumin (சா.அக.).

ம. காட்டுசீரகம்

மறுவ. நெய்ச்சிட்டி

*[காடு + சீரகம். கசப்புச் சுவையுடையது. பலவகை மருத்துவக் குணமுடையது.]*

**காட்டுச்சீரகவள்ளி** *kāṭṭu-c-cīraga-vaḷḷi,* பெ.(n.) 1. காயா வள்ளி; humped yam (சா.அக.). 2. ***காட்டுக் காய் வள்ளி–***[1] பார்க்க; see *kāttu-k-kāy-valli-*[1] (சா.அக.).

*[காடு + சீரகவள்ளி.]*

**காட்டுச்சுண்டை** *kāṭṭu-c-cuṇṭai,* பெ.(n.) ஒருவகைச் சிறுமரம்; Indian tree potato.

*[காடு + சுண்டை.]*

காய் பழுத்து முதிர்ந்ததும் தானாகவே உள்ளீரம் சுண்டிச் சுருக்கம் விழுந்து சுருங்கிப் போவதால் சுண்டைக்காய் எனப் பெயர் பெற்றது.

**காட்டுச்சுரை** *kāṭṭu-c-curai,* பெ.(n.) கசப்புச்சுரை; false calabash (சா.அக.).

*[காடு + சுரை.]*

**காட்டுச்சுள்ளி** *kāṭṭu-c-cuḷḷi* பெ.(n.) 1. ஒருவகை முள்ளி; Mysore prickly nail-dye. 2. சிறு விறகு; small tie wood.

*[காடு + சுள்ளி.]*

**காட்டுச்சூட்டி** *kāṭṭu-c-cūṭṭi* பெ.(n.) மந்திர விச்சைக்குப் பயன்படும் பூடுவகை (M.M.); mandrake.

*[காடு + சூட்டி.]*

**காட்டுச்சேங்கொட்டை** *kāṭṭu-c-cēṅkoṭṭai,* பெ.(n.) பெரியசேங்கோட்டை; glabrous marking nut (சா.அக.).

மறுவ. தேன்சேரான்

*[காடு + சேங்கொட்டை.]*

**காட்டுச்சேப்பங்கீரை** *kāṭṭu-c-cēppaṅkīrai,* பெ.(n.) அடிக்காம்பு வெண்மையாகவும், இலை நீள்வட்டமாகவும் உள்ள சமையலுக்குதவும் கீரை; a vegetable green with white pedicle at the bottom; leaves oval and edible (சா.அக).

*[காடு + சேப்பங்கீரை.]*

**காட்டுச்சேம்பு** *kāṭṭu-c-cēmbu,* பெ. (n.) காட்டில் விளையும் சேப்பங்கிழங்கு; Egyptian yam, jungle variety of colo casia (சா.அக.).

ம. காட்டுச்சேம்பு

*[காடு + சேம்பு.]*

**காட்டுச்சேரான்** *kāṭṭu-c-cērāṉ,* பெ.(n.) கருஞ்சாரை; jungle marking nut (சா.அக).

*[காடு + சேரான்.]*

**காட்டுச்சேனை** *kāṭṭu-c-cēṉai,* பெ.(n.) நிலவாவிரையில் ஒருவகை (வின்.); a species of senna growing wild.

ம. காட்டுச்சேன

*[காடு + சேனை–காட்டுச்சேனை.]*

**காட்டுச்சோளம்** *kāṭṭu-c-cōḷam,* பெ.(n.) அடவிச்சோளம்; wild sage; wild cholum (சா.அக.).

ம. காட்டுசோளம்

*[காடு + சோளம்.]*

**காட்டுடுகு** *kāṭṭuḍugu,* பெ. (n.) ஒடுகு மரம் (கருப்பு ஆச்சா); twin-leaved false copaiba.

மறுவ. காராச்சா

*[காடு + உடுகு.]*

**காட்டுத்தகரை** *kāṭṭu-t-takarai,* பெ.(n.) நாற்றத்தகரை (மூ.அ); wild fetid cassia.

ம. காட்டுதகர

*[காடு +தகரை.]*

**காட்டுத்தம்பட்டன்** *kāṭṭu-t-tampaṭṭaṉ,* பெ. (n.) காட்டுவாளவரை; wild sword-bean.

*[காடு + தம்பட்டன்.]*

**காட்டுத்தமரத்தை** *kāṭṭu-t-tamarattai,* பெ.(n.) மலைத் தமரத்தை; hill carambola (சா.அக.).

*[காடு + தமரத்தை.]*

**காட்டுத்தர்பார்** *kāṭṭu-t-tarpār,* பெ. (n.) ஒரு முறையும் இன்றித் தன்னிச்சையாக நடைபெறும் ஆட்சி; anarchy. குற்றவாளியை விட்டுக் குற்றம் சுமத்தியவனைத் தண்டிக்கும் காட்டுத்தர்பார் (உ.வ.).

*[காடு + தர்பார். காட்டாட்சி.]*

**காட்டுத்தனம்** *kāṭṭu-t-tanam,* பெ.(n.) முருட்டுத் தன்மை; recklessness, being rude and uncivilised; rusticity. காட்டுத்தனமாகக் காரை ஒட்டுவான் (உ.வ.).

*[காடு + தனம் – காட்டுத்தனம். தன்மை → தனம்.]*

**காட்டுத்தாரா** *kāṭṭu-t-tārā,* பெ.(n.) வாத்துவகை; (யாழ்ப்.); wild duck.

ம. காட்டுதாராவு

*[காடு + தாரா.]*



காட்டுத்தாரா

**காட்டுத்தாளி** *kāṭṭu-t-tāḷi,* பெ.(n.) கொடிவகை. (மூ.அ.); purple moon flower.

*[காடு + தாளி.]*

**காட்டுத்திப்பிலி** *kāṭṭu-t-tippili,* பெ. (n.) திப்பிலி வகை (L.); long pepper.

ம. காட்டுதிப்பிலி

*[காடு + திப்பிலி.]*

**காட்டுத்தினை** *kāṭṭu-t-tiṉai,* பெ. (n.) தினைவகை (மூ.அ.); forest millet.

*[காடு + தினை.]*

**காட்டுத்தீ** *kāṭṭu-t-tī,* பெ. (n.) காட்டில் பற்றிய பெருந்தீ; forest conflagration.

ம. காட்டுத்தீ; க. காடுகிச்சு, காடுரி.

*[காடு + தீ.]*

**காட்டுத்துத்தி** *kāṭṭu-t-tutti,* பெ. (n.) துத்திவகை. (M.M.399); bristly-leaved Jew's mallow.

ம. காட்டுதுத்தி

*[காடு + துத்தி.]*

**காட்டுத்தும்பை** *kāṭṭu-t-tumbai,* பெ.(n.) ஒருவகைச்செடி; wild dead nettle .

ம. காட்டுதும்ப

*[காடு + தும்பை.]*

**காட்டுத்தும்மட்டி** *kāṭṭu-t-tummaṭṭi,* பெ.(n.) பேய்த்தும்மட்டி; wild melon.

ம. காட்டுதும்மட்டி

*[காடு + தும்மட்டி.]*

**காட்டுத் துரிஞ்சில்** *kāṭṭu-t-turiñjil,* பெ. (n.) கற்றுரிஞ்சில்; stone sirissa (சா.அக.).

*[காடு + துரிஞ்சில்.]*

**காட்டுத்துவரை** *kāṭṭu-t-tuvarai,* பெ.(n.) 1.துவரை வகை (மூ.அ.); jungle dhal. 2.இரும்புலி; Cochin-China eboney.

ம. காட்டுத்துவர

*[காடு + துவரை.]*

**காட்டுத்துளசி** *kāṭṭu-t-tuḷasi,* பெ. (n.) துளசி வகை (மூ.அ.); wild basil.

ம. காட்டுத்துளசி

*[காடு + தும்மட்டி.]*


காட்டுத்துளசி

**காட்டுத்தெங்கு** *kāṭṭu-t-teṅgu,* பெ.(n.) பனை வகையைச் சேர்ந்த ஒரு வகை மரம்; single leaved sugar palam.



ம. காட்டுதெங்கு

*[காடு + தெங்கு.]*



**காட்டுத்தேக்கு** *kāṭṭu-t-tēkku,* பெ. (n.) சிறுதேக்கு; small kind of teak (சா.அக.).

ம. காட்டுதேக்கு




*[காடு + தேக்கு.]*

**காட்டுத்தேற்றா** *kāṭṭu-t-tēṟṟa,* பெ. (n.) காட்டுத் தேற்றான்கொட்டை; forest water-cleaning nut (சா.அக).

*[காடு + தேற்றா.]*

**காட்டுத்தேன்** *kāṭṭu-t-tēṉ,* பெ.(n.) காட்டில் கட்டும் தேன்; honey found collected in forests, wild honey or wood honey (சா.அக.).

*[காடு + தேன்.]*

**காட்டுத்தொட்டியன்** *kāṭṭu-t-toṭṭiyāṉ,* பெ.(n.) நரி எலி முதலியவற்றை உண்ணும் தொட்டியரினத்தைச் சார்ந்தவன் (நெல்லை); a sub - division of the Toṭṭiya caste, who eat jackals and rats.

*[காடு + தொட்டியன்.]*

**காட்டுநத்தை** *kāṭṭu-nattai,* பெ. (n.) காட்டில் வாழும் நத்தை; a kind of snail found in forests (சா.அக.).

*[காடு + நத்தை.]*

**காட்டுநறுவள்ளி** *kāṭṭu-naṟuvaḷḷi,* பெ.(n.) ***காட்டுக் காய்வள்ளி*** பார்க்க; see *kāṭṭ-k-kāyvaḷḷi* (சா.அக).

*[காடு + நறுவள்ளி.]*

**காட்டுநறுவிலி** *kāṭṭu-naṟuvili,* பெ. (n.) பெரு நறுவிலி; large or broad-leaved sebesten (சா.அக).

*[காடு + நறுவிலி.]*

**காட்டுநாடு** *kāṭṭu-nāḍu,* பெ.(n.) காட்டினுள்ளாகிய குடிவாழ்பகுதி; inhabited region in a forest. *"காட்டுநாட் டேமென" (புறநா.150. 19).*

*[காடு + நாடு.]*

**காட்டுநாபி** *kāṭṭu-nābi,* பெ.(n.) காட்டுக் கலப்பைக் கிழங்கு; forest plough root (சா.அக).

*[காடு + நாபி.]*

**காட்டுநாய்** *kāṭṭu-nāy,* பெ.(n.) கட்டில் வாழும் நாய்; a wild-dog.

ம. காட்டுநாய், காட்டுபட்டி.

*[காடு + நாய்.]*

**காட்டுநாயகர்** *kāṭṭu-nāyakar,* பெ.(n.) கேரளத்து மலபார் பகுதியில் வாழும் ஒரு இனத்தார்; name of a hill tribe of North Malabar.

ம. காட்டுநாயகன்

*[காடு + நாயகர்.]*

**காட்டுநாரகம்** *kāṭṭu-nāragam,* பெ.(n.) காட்டுக் கொழுஞ்சி; raceme-flowered wild lime (சா.அக).

*[காடு + நாரகம்.]*

**காட்டுநாரங்கம்** *kāṭṭu-nāraṅgam,* பெ.(n.) நாயெலுமிச்சை; dog wood apple (சா.அக).

*[காடு + நாரங்கம்.]*

**காட்டுநாரஞ்சி** *kāṭṭu-nārañji,* பெ. (n.) குருந்து; obtuse-leaved wild lime (சா.அக.).

*[காடு + நாரஞ்சி.]*

**காட்டுநாரத்தை** *kāṭṭu-nārattai,* பெ. (n.) காட்டு நாரத்தை (மலை.); Indian wild lime.

ம. காட்டு நாரத்தை

*[காடு + நாரத்தை.]*

**காட்டுநிலாவிரை** *kāṭṭu-nilāvirai,* பெ.(n.) வெள்ளைப் பொன்னாவிரை; Italian senna (சா.அக.).

*[காடு + நிலம் + ஆவிரை]*

**காட்டு நீரடிமுத்து** *kāṭṭu-nīraḍimuttu,* பெ.(n.) காட்டுநீர் வெட்டி; forest tamana oil tree (சா.அக).

*[காடு + நீரடி + முத்து.]*

**காட்டுநீரூறி** *kāṭṭu-nīrūṟi,* பெ.(n.) மணிப்புல்லாஞ்சி; Indian snow berry (சா.அக.).

*[காடு + நீரூறி.]*

**காட்டுநூறன்கிழங்கு** *kāṭṭu-nūṟaṉ-kiḻaṅgu,* பெ.(n.) காட்டுக்கிழங்கு வகை; forest prickly yam (சா.அக.).

*[காடு + நூறன்கிழங்கு.]*

**காட்டுநெரிஞ்சில்** *kāṭṭu-neriñjil,* பெ.(n.) ஆனை நெரிஞ்சில்; elephant *neriñjil* (சா.அக.).

மறுவ. காட்டுக்குருக்கு, காட்டுநெருஞ்சி.

ம. காட்டுநெரிஞ்ஞில்

*[காடு + நெரிஞ்சில்.]*

**காட்டுநெல்** *kāṭṭu-nel,* பெ.(n.) காட்டில் வளரும்நெல்; wild paddy.

மறுவ. காட்டுநெல்லு

ம. காட்டுநெல்லு

*[காடு + நெல்.]*

**காட்டுநெல்லி** *kāṭṭu-nelli,* பெ.(n.) நெல்லிவகை (மூ.அ.); emblic myrobalan.

ம. காட்டுநெல்லி

*[காடு + நெல்லி.]*

**காட்டுநேர்வாளம்** *kāṭṭu-nērvāḷam,* பெ.(n.) மலையாமணக்கு; coral plant.

*[காடு + நேர்வாளம் – காட்டு நேர்வாளம். நீர்வாளம் → நேர்வாளம். மலையாமணக்குக்குக் காட்டு நீர்வாளம் என்னும் பெயரும் உண்டு.]*

**காட்டுநொச்சி** *kāṭṭu-nocci,* பெ. (n.) 1.நொச்சி மர வகை; tall chaste tree. 2. நீர்நொச்சி; water peacock's foot tree.

ம. காட்டுநொச்சி

மறுவ. மயிலடி நொச்சி

*[காடு + நொச்சி.]*

**காட்டுநோய்** *kāṭṭu-nōy,* பெ. (n.) மாட்டுக்கு ஆண்டின் முதல் மழையில் முளைக்கும் புல்லினால் ஏற்படும் கழிச்சல் நோய்; dysentery amoung cattle due to eating the first-grown grass after the annual rain.

க. காடுரோக (கெட்டநோய்)

*[காடு + நோய்.]*

**காட்டுப்பச்சிலை** *kāṭṭu-p-paccilai,* பெ.(n.) காட்டு வெள்ளங்கு என்னும் மரவகை; forest rose wood (சா.அக).

*[காடு + பச்சிலை.]*

**காட்டுப்பச்சைப்பயிறு** *kāṭṭu-p-paccai-p-payiṟu,* பெ.(n.) காட்டுப் பாசிப்பயறு; wild green gram (சா.அக.).

*[காடு + பச்சைப்பயிறு.]*

**காட்டுப்பசு** *kāṭṭu-p-pasu,* பெ. (n.) ***காட்டா*** பார்க்க; see *kāṭṭā.*

**Skt.**pasu > த.பசு.

*[காடு + பசு.]*



காட்டுப்பசு

**காட்டுப்பஞ்சு** *kāṭṭu-p-pañju,* பெ. (n.)காட்டிலவு (L.); false tragacanth.

*[காடு + பஞ்சு.]*

**காட்டுப்படை** *kāṭṭu-p-paḍai,* பெ. (n.) காடுவாழ் மக்களினின்று திரட்டப்பெற்ற படை (குறள், 762, உரை); forest - force, one of six kind of forces.

*[காடு + படை.]*

**காட்டுப்பயற்றங்கொடி** *kattu-p-payaṟṟaṅkoḍi,* பெ.(n.) காட்டுத்தட்டைப் பயற்றின் கொடி; kidney bean creeper (சா.அக.).

*[காடு + பயற்றங்கொடி.]*

**காட்டுப்பயறு** *kāṭṭu-p-payaṟu,* பெ.(n.) பயறுவகை; wild green gram.

**ம.** காட்டுபயறு

*[காடு + பயறு.]*

**காட்டுப்பயிர்** *kāṭṭu-p-payir,* பெ.(n.) 1. தானே விளையும் பயிர் (வின்.); wild uncultivated crops, vegetables that grow of themselves. 2. புன்செய்ப் பயிர் (இ.வ.); dry crop. 3. புல்; grass.

**க.** காடஅசறு

*[காடு + பயிர்.]*

**காட்டுப்பருத்தி** *kāṭṭu-p-parutti,* பெ.(n.) 1.காட்டிலவு; false tragacanth. 2.கத்தூரி வெண்டை (I.P.); musk mallow. 3. மலை வெண்டை; hill rose mallow (சா.அக.).

**ம.** காட்டுப்பருத்தி; **க.** காடுகத்தி

**மறுவ.** காட்டுப்பஞ்சு.

*[காடு + பருத்தி.]*

**காட்டுப்பலம்** *kāṭṭu-p-palam,* பெ.(n.) சவ்வரிசி; sago (சா.அக).

*[காடு + பலம்.]*

**காட்டுப்பலா** *kāṭṭu-p-palā,* பெ.(n.) பலாவகை; jungle jack.

**மறுவ.** கானற்பலா

*[காடு + பலா – காட்டுப்பலா]*

**காட்டுப்பன்றி** *kāṭṭu-p-paṉṟi,* பெ. (n.) வாயின் இருபுறமும் வெளியே நீண்டிருக்கும் இரு கோரைப்பற்களைக் கொண்ட பன்றி வகை (பதார்த்த.854); wild boar.

**மறுவ.** மிறுதாறு

**ம.** காட்டுபன்னி; **க.** காடகந்தி

*[காடு + பன்றி.]*



காட்டுப்பன்றி

**காட்டுப்பாகல்** *kāṭṭu-p-pāgal,* பெ.(n.) பழுபாகல் (மூ.அ.); prickly carolah.

*[காடு + பாகல்.]*

**காட்டுப்பாதை** *kāṭṭu-p-pādai,* பெ.(n.) 1.காட்டிற் செல்லும் வழி; path in jungles. 2. நாட்டுப்புறத்து வழி; country track.

*[காடு + பாதை.]*

**காட்டுப்பாலை** *kāṭṭu-p-pālai,* பெ.(n.) வெட்பாலை; downy oleander (சா.அக.).

*[காடு + பாலை.]*

**காட்டுப்பாலை வள்ளி** *kāṭṭu-p-pālai-valli,* பெ.(n.) ஒருவகைக் காட்டு மூலிகை; a forest milk creeper. (சா.அக.)

*[காடு + பாலைவள்ளி.]*

**காட்டுப்பிரண்டை** *kāṭṭu-p-pirandai,* பெ.(n.) பிரண்டை வகை (L.); pedate seven-leaved vine.

ம. காட்டுப்பிரண்ட

*[காடு + பிரண்டை.]*


காட்டுப்பிரண்டை

**காட்டுப்பிராய்** *kāṭṭu-p-piray,* பெ.(n.) மரவகை (பதார்த்த.117); a species of mercury.

*[காடு + பிராய்.]*

**காட்டுப்பிள்ளை** *kāṭṭu-p-piḷḷai,* பெ.(n.) ஆதரவற்ற குழந்தை (வின்.); a neglected orphan, foundling.

*[காடு + பிள்ளை.]*

**காட்டுப்பீ** *kāṭṭu-p-pī,* பெ.(n.) குழந்தை பிறந்தவுடன் கழிக்கும் உடற்கழிவு (மலம்) (வின்.); first black excrement of a new-born child or calf.

*[காடு + பீ.]*

**காட்டுப்புகையிலை** *kāṭṭu-p-pugai-y-ilai,* பெ.(n.) புகையிலை வகை; wild tobacco.

ம. காட்டுபுகயில

*[காடு + புகை + இலை.]*

**காட்டுப்புங்கு** *kāṭṭu-p-puṅgu,* பெ.(n.) மணிப்புங்கு; rusty soap-nut (சா.அக.).

*[காடு + புங்கு.]*

**காட்டுப்புடல்** *kāṭṭu-p-puḍal,* பெ.(n.) பேய்ப்புடல்; devils gourd (சா.அக.).

*[காடு + புடல்.]*

**காட்டுப்புத்தி** *kāṭṭu-p-putti,* பெ.(n.) அறியாமை, மூடவறிவு (வின்.); stupidity, senselessness.

*[காடு + புத்தி – காட்டுப்புத்தி. த. புலம் → புந்தி. > Skt. buddhi. > த. புத்தி]*

**காட்டுப்புரசு** *kāṭṭu-p-purašu,* பெ. (n.) வெள்ளைப் புரசு; bastard satin wood (சா.அக.).

*[காடு + புரசு.]*

**காட்டுப்புளி** *kāṭṭu-p-puḷi,* பெ. (n.) கொடுக்காய்ப் புளி; sweet babool (சா.அக.).

*[காடு + புளி.]*

**காட்டுப்புளிச்சை** *kāṭṭu-p-puḷiccai,* பெ.(n.) 1. புளிச்சைக்கீரை (மூ.அ.); Indian brown hemp. 2. முட்புளிச்சை; thorny hemp bendy.

*[காடு + புளிச்சை.]*

**காட்டுப்புறா** *kāṭṭu-p-puṟā,* பெ.(n.) 1. கபோதம் என்னும் புறாவகை (மூ.அ.); wood-pigeon. 2. காட்டில் வாழும் ஒருவகைப் புறா; turtle-dove.

ம. காட்டுப்ராவு

*[காடு + புறா.]*



காட்டுப்புறா

**காட்டுப்புன்னை** *kāṭṭu-p-puṉṉai,* பெ.(n.) சேர நாட்டில் வளரும் நீண்ட மரவகை (L.); Malabar poon.

ம. காட்டுபுன்ன

*[காடு + புன்னை.]*

**காட்டுப்பூசுணி** *kāṭṭu-p-pūšuṇi,* பெ.(n.) காட்டுப் பறங்கிக்கொடி; jungle pumpkin creeper (சா.அக.).

*[காடு + பூசுணி.]*

**காட்டுப்பூலாங்கிழங்கு** *kāṭṭu-p-pūlāṅkiḻaṅgu,* பெ.(n.) காட்டுக் கருப்பூரக் கிச்சிலிக் கிழங்கு; wild orange root.

*[காடு + பூலாங்கிழங்கு.]*

**காட்டுப்பூலிகம்** *kāṭṭu-p-pūligam,* பெ.(n.) ஒருவகைக் காட்டுப்புல்; a variety of wild grass (சா.அக.).

மறுவ. பீனசப்புல்

*[காடு + பூலிகம்.]*

**காட்டுப்பூவம்** *kāṭṭu-p-pūvam,* பெ.(n.) பூவம் மரவகை (L.); longan.

*[காடு + பூவம்.]*

**காட்டுப்பூவரசு** *kāṭṭu-p-pūvarašu,* பெ.(n.) ஒருவகைப் பூவரசு; false fern tree.

ம. காட்டுபூவரசு; க. காடுகூவரசு;

*[காடு + பூவரசு.]*

**காட்டுப்பூவாணன்** *kāṭṭu-p-pū-vāṇāṉ,* பெ.(n.) நெல் வகை (A); a kind of paddy.

*[காடு + பூவாணன்.]*

**காட்டுப்பூளை** *kāṭṭu-p-pūḷai,* பெ. (n.) 1. பாறையிலவு large-flowered and capsuled silk cotton. 2.பூளைக் கொடி; forest wool plant (சா.அக.).

ம. காட்டுபூள

*[காடு + பூளை.]*

**காட்டுப்பூனை** *kāṭṭu-p-pūṉai,* பெ.(n.) கோழி களைத் தெரியாமல் தூக்கிப்போகும் பூனை; wild cat.

ம. காட்டுபூச்ச, காட்டுபோக்கன்; க. காடுபெக்கு; படு. காடுகொத்தி.

*[காடு + பூனை.]*



காட்டுப்பூனை

**காட்டுப்பெண்சாதி** *kāṭṭu-p-peṇ-šādi,* பெ. (n.) வைப்பாட்டி; concubine. பெண்சாதி வேம்பும் காட்டுப் பெண்சாதி கரும்பும் (வின்.).

*[காடு + பெண்சாதி.]*

**காட்டுப்பேய்ப்புடல்** *kāṭṭu-p-pēyppuḍal,* பெ.(n.) காட்டுப்புடல் பார்க்க; see *kāṭṭū-p-pūḍal.*

*[காடு + பேய் + புடல்.]*

**காட்டுப்பேரிகை** *kāṭṭu-p-pērigai,* பெ.(n.) கிலுகிலுப்பை; a species of rattle-wort (சா. அக.).

*[காடு + பேரிகை.]*

**காட்டுமஞ்சரி** *kāṭṭu-mañjari,* பெ.(n.) காட்டில் வளரும் சிறுமரவகை (L.); dichotomous flowered hill oilve.

*[காடு + மஞ்சரி.]*

**காட்டுமஞ்சள்** *kāṭṭu-mañjal,* பெ.(n.) ஒருவகை மஞ்சள்;wild turmeric.

ம. காட்டு மஞ்ஞள்

*[காடு + மஞ்சள்.]*

**காட்டுமந்தாரை** *kāṭṭu-mandārai,* பெ.(n.) ***காட்டாத்தி*** பார்க்க; see *kāṭṭātti.*

*[காடு + மந்தாரை.]*

**காட்டுமயிரங்காய்** *kāṭṭu-myiraṅgāy,* பெ.(n.) காட்டுமாங்காய்; jungle mango (சா. அக.).

*[காடு + (மயிலங்காய்) மயிரங்காய்.]*

**காட்டுமயிலம்** *kāṭṭu-mayilam,* பெ.(n.) நொச்சி மரவகை; tall chaste tree.

மறுவ. காட்டுமயிலை

*[காடு + மயிலம்.]*

**காட்டுமரம்** *kāṭṭu-maram* பெ.(n.) 1. காட்டில் வளரும் மரவகை; forest trees in general. 2. காட்டு மா மரம்; wild mango tree (சா.அக.).

*[காடு + மரம்.]*

**காட்டுமரவள்ளிக்கிழங்கு** *kāṭṭumara-vaḷḷi-k-kiḻaṅgu,* பெ.(n.) மலைச் சக்கரைவள்ளி; mountain sweet potato.

*[காடு + மரம்வள்ளி + கிழங்கு.]*

**காட்டுமரி** *kāṭṭumari,* பெ.(n.) காட்டில் வளரும் உமரிச்செடி; marsh samphire.

*[காடு + உமரி.]*

**காட்டுமருக்கொழுந்து** *kāṭṭu-marukkoḻundu,* பெ.(n.) மணமில்லா மருக்கொழுந்து; southern-wood.

மறுவ. பனிதாங்கி

*[காடு + மருக்கொழுந்து.]*

**காட்டுமல்லி** *kāṭṭu-malli,* பெ.(n.) நீண்ட மர மல்லிவகை; Indian cork.

மறுவ. காட்டுமல்லிக

*[காடு + மல்லி.]*

**காட்டுமல்லிகை** *kāṭṭu-malligai,* பெ.(n.) 1.மல்லிகை வகை(பதார்த்த.478); wild jasmine. 2.சிறு மல்லிகை; narrow-leaved jasmine and rivers (சா.அக.).

ம. காட்டுமல்லிக

*[காடு + மல்லிகை.]*

**காட்டுமழை** *kāṭṭu-maḻai,* பெ.(n.) நாட்டில் ஆறாகப் பெருக்கெடுக்கும் வகையில் மலைக்காட்டிற் பெய்யும் மழை; rain in mountain - forest flooding the streams and rivers.

*[காடு + மழை.]*

**காட்டுமனிதன்** *kāṭṭu-maṉidaṉ,* பெ.(n.) ***காட்டு மாந்தன்*** பார்க்க; see *kaṭṭu-māndaṉ.*

ம. காட்டுமனுழ்யன்

*[காடு + மனிதன்.]*

**காட்டுமா**[1] *kāṭṭu-mā,* பெ. (n.)1. சாரப்பருப்பு மரம் (L.) ; Cuddapah almond. 2. மரவகை (K.R.); buchanan's mango. 3. புளிமா (L.); Indian hog-plum. 4. உதளை; jungle mango.

ம. காட்டுமாவு

*[காடு + மா – காட்டுமா. மா =மாமரத்தின் வகையைச் சார்ந்ததாகப் பொதுமக்களால் கருதப்பட்ட மரவகை. இதன்காய் ஊதா நிறமாக இருக்கும்.]*

**காட்டுமா**[2] *kāṭṭu-mā,* பெ.(n.)1. காட்டுக்குதிரை; wild horse. 2. காட்டில் வாழும் விலங்கின் பொதுப்பெயர்; name refering to animals living in forest.

*[காடு + மா.]*

**காட்டுமாசிகம்** *kāṭṭu-māšigam,* பெ.(n.) பொத்தைக்கள்ளி; stout spurge (சா.அக.).

*[காடு + மாசிகம்.]*

**காட்டுமாஞ்சரி** *kāṭṭu-māñjari,* பெ.(n.) பசலை; dichotomus flowered will olive (சா.அக.).

*[காடு + மாஞ்சரி.]*

**காட்டுமாடு** *kāṭṭu-māḍu,* பெ.(n.) ***காட்டா*** (இ.வ.) பார்க்க; see *kāṭṭā.*

**ம.** காட்டுமாடு

*[காடு + மாடு.]*

**காட்டுமாதளை** *kāṭṭu-mātalai,* பெ.(n.) மலைத் தணக்கு; wild anaur (சா.அக).

*[காடு + மாதளை.]*

**காட்டுமாந்தன்** *kāṭṭu-māndaṉ,* பெ.(n.) 1. நாகரிக மற்றவன்; wild, uncivilized man. 2. காட்டில் வாழும் குரங்கு போன்ற மனிதன், வாலில்லாக் குரங்கு; lit., man of the woods, chimpanzee, orangoutang.

*[காடு + மாந்தன்.]*

**காட்டுமாம்பருப்பு** *kā ṭṭu-māmparuppu,* பெ.(n.) சாரப்பருப்பு; the seed of Cuddapah almond (சா.அக.).

*[காடு + மாம்பருப்பு.]*

**காட்டுமாவிரை** *kāṭṭu-māviral,* பெ.(n.) சாரப்பருப்பு (மூ.அ.); the seed of Cuddapah almond (சா.அக.).

*[காடு + மாவிரை.]*

**காட்டுமாவிலங்கை** *kāṭṭu-māvilaṅgai,* பெ.(n.) சின்னமாவிலங்கை(L.); a species of garlic pear.

*[காடு + மாவிலங்கை.]*

**காட்டுமிராண்டி** *kāṭṭu-mirāṇḍi,* பெ.(n.) ***காட்டு மாந்தன்*** பார்க்க; see *kāṭṭu-māndaṉ* மிராண்டி வாழ்க்கை; savage life.

**Skt.** mriga > **த.** மிருகம் + ஆண்டி – மிராண்டி.

*[காடு + மிருகம் + ஆண்டி.]*

**காட்டுமிளகு** *kāṭṭu-miḷagu,* பெ.(n.) 1. வால்மிளகு; wild pepper, flat branched pepper. 2.முள்ளுக் கரணைஅல்லது கிச்கிலிக்கரணை; forest pepper (சா.அக.).

**ம.** காட்டுமிளகு

*[காடு + மிளகு.]*

**காட்டுமுசுக்கை** *kāṭṭu-mušukkai,* பெ.(n.) பித்தத்தைப் போக்கும் குணமுடைய கீரை; bristly bryony (சா.அக.).

*[காடு + முசுக்கை.]*

**காட்டுமுசுட்டை** *kāṭṭu-mušuṭṭai,* பெ.(n.) மலைக் கொட்டை; mountain bind weed creeper (சா.அக.).

*[காடு + முசுட்டை.]*

**காட்டுமுந்திரி** *kāṭṭu-mundiri,* பெ.(n.) 1. காட்டுக் கொடிமுந்திரிகை; jungle grape vine. 2. காட்டுக் கொட்டை முந்திரிச் செடி; wild cashew nut.

**மறுவ.** காட்டு முந்திரிகை

*[காடு + முந்திரி.]*

**காட்டுமுயல்** *kāṭṭu-muyal,* பெ.(n.) காட்டில் வாழும் முயல்; jungle hare (சா.அக.).

**மறுவ.** முளவு, முளவுமா

*[காடு + முயல்.]*



**காட்டுமுயல்**

**காட்டுமுருக்கு** *kāṭṭu-murukku,* பெ.(n.) 1.பலாசு; dhak tree, gum lac tree. 2. பூனை முருக்கு; bastard kino.

*[காடு + முருக்கு.]*

**காட்டுமுருங்கை** *kāṭṭu-muruṅgai,* பெ.(n.) 1.பலாசு; dhak tree. 2. வனமுருங்கை; wild Indian horse radish. 3. ஆடாதோடை(L); Malabar-nut tree. 4.மாவிலங்கை (மலை.); garlic pear. 5. புனல் முருங்கை; oval-leaved Indigo. 6. பூனைமுருங்கை; jungle moringa. 7. பவளப்பூலா; coral berry tree. 8. கசப்பு முருங்கை; bitter moringa.

*[காடு + முருங்கை.]*

**காட்டுமுல்லை** *kāṭṭu-mullai,* பெ.(n.) காட்டு மல்லிகை (சித்.அக.); wild jasmine.

*[காடு + முல்லை.]*

**காட்டுமுள்ளங்கி** *kāṭṭu-muḷḷaṅgi,* பெ.(n.) முள்ளங்கி வகை (M.M.237); forest country radish. 2. நாறு கரந்தை; a forest plant.

*[காடு + முள்ளங்கி.]*

**காட்டுமுள்ளி** *kāṭṭu-muḷḷi,* பெ.(n.) பெருமுள்ளி; large nail-dye (சா.அக.). 2. மரமல்லிகை; Indian cork.

*[காடு + முள்ளி. முள்ளுடையது.]*

**காட்டுமுன்னை** *kāṭṭu-muṉṉai,* பெ.(n.) பேய் முன்னை; oriental nettle (சா.அக.).

*[காடு + முன்னை.]*

**காட்டுமூக்கிரட்டை** *kāṭṭu-mūkkiraṭṭai,* பெ.(n.) மூக்கிரட்டைக்கீரை; spreading hog weed (சா.அக.).

*[காடு + மூக்கிரட்டை.]*

**காட்டுமூங்கில்** *kāṭṭu-mūṅgil,* பெ.(n.) சிறுமூங்கில் (L.); swollen node-ringed semi-solid bamboo.

மறுவ. கல்மூங்கில்

*[காடு + மூங்கில்.]*

**காட்டுமூரி** *kāṭṭu-mūri,* பெ. (n.) நாகர வண்டு(யாழ். ஆக.); a kind of beetle.

*[காடு + மூரி.]*

**காட்டுமூலிகை** *kāṭṭu-mūligai,* பெ.(n.) காட்டில் வளரும் மருந்திற்குப் பயன்படும் செடி கொடிகள்; syluan herbs (சா.அக.).

*[காடு + மூலிகை.]*

**காட்டுமைச்சீரகம்** *kāṭṭu-maiccīrakam,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin (சா.அக.).

*[காடு + மைச்சீரகம்.]*

**காட்டுமொச்சை** *kāṭṭu-moccai,* பெ.(n.) காட்டவரை (மூ.அ); country bean.

*[காடு + மொச்சை.]*

**காட்டுயானை** *kāṭṭuyāṉai,* பெ.(n.) காட்டில் வாழும் யானை; wild elephant.

*[காடு + யானை.]*

**காட்டுயேணி** *kāṭṭu-y-ēṇi,* பெ.(n.) காட்டுஆ ஆன் அல்லது காட்டெருது; wild cow or wild ox (சா.அக.).

*[காடு + ஏணி.]*

**காட்டுரோகம்** *kāṭṭu-rōgam,* பெ.(n.) **காட்டுநோய்** பார்க்க; see *kāṭṭu-nōy.*

*[காடு + ரோகம்.]*

**காட்டுவக்கு** *kāṭṭu-vakku,* பெ.(n.) மலைவிராலி; fish poison cedar (சா.அக.).

*[காடு + வக்கு.]*

**காட்டுவரகு** *kāṭṭu-varagu,* பெ.(n.) வரகுவகை (சித்.அக.); wild *varagu.*

ம. காட்டு வரகு

*[காடு + வரகு.]*

**காட்டுவருச்சம்** *kāṭṭu-varuccam,* பெ.(n.) கடலாத்தி; falcate trumpet flower (சா.அக).

*[காடு + வருச்சம்.]*

**காட்டுவல்லாரை** *kāṭṭu-vallārai,* பெ.(n.) காட்டில் விளையும் வல்லாரை; Indian penny wort (சா.அக.).

*[காடு + வல்லாரை.]*

**காட்டுவல்லி** *kāṭṭu-valli,* பெ.(n.) 1. காட்டில் படரும் கொடி; any forest spreading creeper. 2. பேய்ச் சீந்தில்; moon-creeper. 3. *காட்டுக்காய் வள்ளி* பார்க்க; bulbous rooted yam.

*[காடு + வல்லி.]*

**காட்டுவள்ளி** *kāṭṭu-valli,* பெ.(n.) 1. *சீரகவள்ளி* (L.); cultivated yam, cuminyam. 2. வள்ளிக்கொடி வகை (A.); five leaved yam. 3. காய்வள்ளி; malacca yam. 4. மலைவல்லிக் கிழங்கு; otaheite potato. 5. காட்டு நூறன் கிழங்கு; mouse root.

*[காடு + வள்ளி.]*

**காட்டுவாகடத்தான்** *kāṭṭu-vāgadāttan,* பெ.(n.) கண்டங்கத்தரி; wild thorny brinjal (சா.அக).

*[காடு + வாகடத்தான்.]*

**காட்டுவாகை** *kāṭṭu-vāgai,* பெ.(n.) வாகை மரவகை; siris.

மறுவ. அடுக்குவாகை

ம. காட்டுவாகை

*[காடு + வாகை.]*

காட்டுவாகை

**காட்டுவாதுமை** *kāṭṭu-vādumai,* பெ.(n.) கசப்பு வாதுமை; wild or bitter almond (சா.அக.).

*[காடு + வாதுமை.]*

**காட்டுவாரி** *kāṭṭu-vāri,* பெ.(n.) காட்டாறு; jungle stream.

*[காடு + வாரி – வார்தல் = நீருதல். வாரி = நெடுகப் பாய்ந்தோடும் ஆறு.]*

**காட்டுவாழ்புங்கம்** *kāṭṭu-vāḻ-puṅgam,* பெ.(n.) செந்நாய்; a red variety of ferocious dogs; hound (சா.அக.).

*[காடு + வாழ் + புங்கம்.]*

**காட்டுவாழை** *kāṭṭu-vāḻai,* பெ.(n.) வாழைவகை; wild plantain.

ம. காட்டுவாழ; க. காடுபுளெ.

*[காடு + வாழை .]*

**காட்டுவிலங்கு** *kāṭṭu-vilaṅgu,* பெ.(n.) காட்டில் வளரும் உயிரி; a wild animal. 2. நாகரிகமற்றவன்; an uncivilised man.

ம. காட்டுசந்து; க. கான்மிக.

*[காடு + விலங்கு.]*

**காட்டுவிளா** *kāṭṭu-viḷā,* பெ.(n.) நாய் விளா அல்லது நாயெலுமிச்சை; dog wood apple (சா.அக.).

*[காடு + விளா.]*

**காட்டுவிறட்டி** *kāṭṭu-viṟaṭṭi,* பெ.(n.) மருந்துப் புடத்திற்குச் சிறந்ததாகச் சொல்லப்படும் காட்டு எருமுட்டை; dung of cattle, naturally found dried in forests (சா.அக.).

*[காடு + விறட்டி. வறட்டி → விரட்டி.]*

**காட்டுவெக்காலி** *kāṭṭu-vekkāli,* பெ.(n.) கானமடக்கு மரம்; patridge pea tree (சா.அக.).

*[காடு + வெக்காலி.]*

**காட்டுவெங்காயம்** *kāṭṭu-veṅgāyam,* பெ. (n.) நரிவெங்காயம் ; Jackal onion.

ம. காட்டுவெங்காயம்; க. காடீருள்ளி.

*[காடு + வெங்காயம்.]*



காட்டுவெங்காயம்

**காட்டுவெங்குகம்** *kāṭṭu-veṅgugam,* பெ.(n.) மலைப்பச்சை; long - leaved gamboge (சா.அக.).

*[காடு + வெங்குகம்.]*

**காட்டுவெண்டை** *kāṭṭu-veṇḍai,* பெ.(n.) பேய் வெண்டைச் செடி; white wild musk mallow.

*[காடு + வெண்டை.]*

**காட்டுவெள்வெங்காயம்** *kāṭṭu-veḷ-veṅgāyam,* பெ.(n.) நரிவெங்காயம்; jungle onion.

*[காடு + வெள் + வெங்காயம்.]*

**காட்டுவெள்ளரி** *kāṭṭu-veḷḷari,* பெ.(n.) பேய்க் கொம்மட்டி (மலை.); bitter cucumber.

ம. காட்டுவெள்ளரி

*[காடு + வெள்ளரி.]*

**காட்டுவெள்ளாகிகம்** *kāṭṭu-veḷḷāgigam,* பெ.(n.) மலை முருங்கை; bitter moringa (சா.அக.).

*[காடு + வெள்ளாகிகம்.]*

**காட்டுவெற்றிலை** *kattu-verrilai,* பெ.(n.) குருவிஞ்சி; box-leaved ivory wood. 2. மலை வெற்றிலை; hill betel.

ம. காட்டுவெற்றில

*[காடு + வெற்றிலை.]*

**காட்டுவெறிப்புகையிலை** *kāṭṭu-verippugaiyilai,* பெ.(n.) 1. மலைப் புகையிலை; wild or mountain to-bacco. 2. காட்டுப் பெரிய புகையிலை; larger wukd tobacco (சா.அக.).

*[காடு + வெறிப்புகையிலை.]*

**காட்டுவேந்தன்** *kāṭṭu-vēndaṉ,* பெ.(n.) கற்செய் நஞ்சு; a kind of arsenic (சா.அக.).

*[காடு + வேந்தன்.]*

**காட்டுவேப்பிலை** *kāṭṭu-vēppilai,* பெ.(n.) கறிவேம்பு; curry-leaf tree. 2. செடிவகை; a species of wampee.

மறுவ. கறிவேப்பிலை

*[காடு + வேப்பிலை – காட்டுவேப்பிலை.]*

**காட்டுவேம்பு** *kāṭṭu-vēmbu,* பெ.(n.) வேப்ப மரத்தையொத்த ஒரு வகை மரம்; a kind of tree.

ம. காட்டுவேப்பு

*[காடு + வேம்பு.]*

**காட்டுழாய்** *kātuḷāy,* பெ.(n.) நாய்த்துளசி; white basil.

மறுவ. கஞ்சாங்கோரை

*[காடு + துழாய்.]*

**காட்டுள்ளான்** *kāṭṭuḷḷāṉ,* பெ.(n.) ஒருவகைக் குருவி; wood snipe.

*[காடு + உள்ளான்.]*


காட்டுள்ளான்

**காட்டுள்ளி** *kāṭṭuḷḷi,* பெ.(n.) நரிவெங்காயம்; jungle onion. *"ஈருளி காட்டுள்ளி நிம்பத்தின் சள்ளிகத் தூரிகை" (தைல.தைலவ.135).*

மறுவ. காட்டுவெங்காயம்

க. காடுள்ளி

*[காடு + உள்ளி.]*

**காட்டுனா** *kāṭṭuṉā,* பெ.(n.) மயிலைமரம்; peacock's foot tree (சா.அக.).

*[காடு + உனா.]*

**காட்டூசிமல்லி** *kāṭṭūši-malli,* பெ.(n.) காட்டிவளரும் ஊசி மல்லிகை; cured jasminum growing in forest (சா. அக.).

*[காடு + ஊசிமல்லி.]*

**காட்டெரு** *kāṭṭeru,* பெ.(n.) காட்டில் உலர்ந்து கிடக்கும் எரு; forest manure, esp. dried dung of cattle. *"நிலந்திருத்திக் காட்டெருவும் போட்டு" (அருட்பா,VI, உறுதிகூறல்,2:2,)*

*[காடு + எரு.]*

**காட்டெருக்கு** *kāṭṭerukku,* பெ.(n.) மலை யெருக்கு; hill swellow-wort.

*[காடு + எருக்கு.]*

**காட்டெருமை** *kāṭṭerumai,* பெ.(n.) 1. எருமை யினம்; wild buffalo. 2. எருக்கு; madar. 3. திருகுகள்ளி; milk-hedge. 4. சதுரக்கள்ளி (மலை.); spuare spurge. 5. கூவைக்கிழங்கு; East Indian arrowroot 6.காட்டுவெள்ளை வெங்காயம்; jungle white onion.

ம. காட்டெரும; க. காடெம்மெ, காடெர்மெ; பட. காடெம்மெ.

*[காடு + எருமை – காட்டெருமை.]*


காட்டெருமை

**காட்டெருமைக்கள்ளி** *kāṭṭerumai-k-kaḷḷi,* பெ.(n.) 1. சதுரக்கள்ளி; square spurge. 2. எருக்கு; madar plant.

*[காட்டெருமை+ கள்ளி.]*


காட்டெருமைக்கள்ளி

**காட்டெருமைத்தொக்கு** *kāṭṭerumai-t-tokku,* பெ.(n.) நச்சுப்புல்; a poisonous grass (சா.அக.).

*[காடு + எருமை + தொக்கு.]*

**காட்டெருமைப்பால்** *kāṭṭerumai-p-pāl,* பெ.(n.) 1. எருக்கம் பால்; milky juice drawn from madar plant. 2. திருகுகள்ளிப் பால்; milky juice of *Tirugukaḷḷi.* 3.சதுரக்கள்ளிப்பால்; milky juice of square spurge. 4.கூகைநீறு; flour of Indian arrow root.

*[காடு + எருமை + பால்.]*

**காட்டெலி**[1] *kāṭṭeli,* பெ.(n.) 1. காட்டில் வாழும் எலி; jungle rat. 2. மலையெலி; mountain rat (சா.அக.).

**ம.** காட்டெலி

*[காடு + எலி.]*

**காட்டெலி**[2] *kāṭṭeli,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin seed.

*[காடு + எலி.]*

**காட்டெலிச்செவி** *kāṭṭeli-c-cevi,* பெ.(n.) 1. உண்ணத்தகுதியுடைய சிவப்பு எலிச்செவிக் கீரை; rat's ear plant. 2. எலிச்செவிக் கள்ளி; a kind of sedge (சா.அக.).

*[காட்டெலி + செவி.]*

**காட்டெலுமிச்சை** *kāṭṭelumiccai,* பெ.(n.)1. காட்டு நாரத்தை; Indian wild lime. 2. காட்டுக்கொழுஞ்சி; wild lime organge. 3. நாய்விளா; musk lime. 4. மலை நாரத்தை (M.NA.D.i:30); trifoliate winged lime.5. கசப்பு எலுமிச்சை;wild bitter lime 6. மலை எலுமிச்சை;mountain lime.

**க.** காடுலிம்பெ, காட்டுநிம்பெ.

*[காடு + எலுமிச்சை.]*

**காட்டெள்** *kāṭṭeḷ,* பெ.(n.) 1. காட்டில் தானாகவே விளையும் எள்; wild gingally. 2. பேய்எள்; kersem or niger seed. 3. ஒருவகைப் புல் (M.M.310); ram til.

**ம.** காட்டெள்ளு **க.** காடெள்ளு காடெள்.

*[காடு + எள்.]*

**காட்டெறி** *kāṭṭeṟi,* பெ.(n.) கள்ளி; spurge plant (சா.அக.).

*[காடு + எறி.]*

**காட்டெறும்பு** *kāṭṭeṟumbu,* பெ.(n.) ஒரு வகை பெரிய எறும்பு; a kind of big ant.

**ம.** காட்டுறும்பு

*[காடு + எறும்பு.]*

**காட்டேணி** *kāṭṭēṇi,* பெ.(n.) காட்டில் வாழும் எருது; bison.

*[காடு + ஏணி – காட்டேணி. ஏண் = உயரம், உயர்வு, செம்மை, திரட்சி, அழகு. ஏண் → ஏணி (நல்ல தோற்ற முடையது). நாட்டு எருதுகளைவிடக் காட்டெருது மிகுந்த வலிவும் தோற்றப்பொலிவுமுடையதாகலின் இப் பெயர் பெற்றது. இச்சொல் இக்காலத்தில் காட்டாணி எனத் திரிபுற்றது.]*

**காட்டேலம்** *kāṭṭēlam,* பெ.(n.) பேரேலம் (பதார்த்த.1030); greater cardamom.

*[காடு + ஏலம்.]*

**காட்டேறி** *kāṭṭēṟi,* பெ.(n.) தீண்டிவருத்தும் பெண்ணாகக் கருதப்படும் அணங்கு, பேய்; an evil spirit.

**ம.** காட்டேரி

*[காடு + ஏறி – காட்டேறி. காடு = துன்பம், கொடுமை. கொடுமை செய்யும் இயல்பு தன்னுள் ஏறப்பெற்றவள் காட்டேறி.]*

**காட்டை**[1] *kāṭṭai,* பெ.(n.) 1. திசைகாட்டும் குச்சி; direction, point of compass. 2. திசை(திவா.); direction. 3. எல்லை(சூடா.); limit, boundary. 4. 12 நொடி கொண்ட கால அளவு; a measure of time-12 seconds. 5. நுனி (வின்.); point, extremity, top, tip, apex. 6. மேலானது; that which is great and beautiful. 7. இடம்; place.

*[காடு → காட்டை (காட்டிலுள்ள சிறுகுச்சி). இதனைக் காட்டுத்துரும்பு எனவும் கூறுவர். புதுமனைக்கு அடிமானம்*

*(கடைகால்) - அளவுக்குறி இடுவோரும், கோயில், அரண் மனை, நகரம் ஆகியவற்றைச் சமைப்போரும் சரியான கிழக்குத்திசை அறிதற்காக அவ்வூரில் கதிரவன் செவ்விய உச்சிக்கு வரும் நாள் பார்க்க நட்டுவைக்கும் குச்சியைக் காட்டை (காட்டுத்துரும்பு)என்பர். குச்சியின் நிழலை அளந்து பகற்காலத்தில் நாழிகை குறிக்கும் பழங்கால இயல்பு பற்றி இச்சொல் மிகச்சிறு கால அளவையும் குறித்தது. இச்சொல் வடமொழியில் kāṣṭa எனத்திரிந்தது.]*

| | | |
|---|---|---|
| கணம் | - | இமையளவு (கண்ணிமைக்கும் நேரம்) |
| 4 கணம் | - | 1 உயிர் |
| 4 உயிர் | - | 1 நொடி (மாத்திரை - seconds) |
| 12 நொடி (மாத்திரை) | - | 1 காட்டை |
| 2 காட்டை | - | 1 விநாழி (24 seconds) |
| 60 விநாழி | - | 1 நாழிகை (24 minutes) |
| 3¾ நாழிகை | - | முழுத்தம் |
| 2 முழுத்தம் | - | 1 யாமம் |
| 4 யாமம் | - | 1 பொழுது |
| 2 பொழுது | - | 1 நாள் |

**காட்டொலிவம்** *kāṭṭolivam*, பெ.(n.) சீமைமர வகை (விவிலி.ரோம.11,17); wild olive.

*[காடு + ஒலிவம்.]*

**காட்டொளி** *kāṭṭoḷi*, பெ.(n.) ஒளிப்புல்; grass, luminous in the dark (சா.அக.).

*[காடு + ஒளி.]*

**காட்டோமம்** *kāṭṭōmam*, பெ.(n.) காட்டில் விளையும் ஓமம்; jungle sison (சா.அக.).

*[காடு + ஓமம்.]*

**காட்டோலை** *kāṭṭōlai*, பெ.(n.) பனையோலை; palmyra leaf (சா.அக.)

*[காடு + ஓலை.]*

**காட்பு** *kāṭpu*, பெ.(n.) மரவயிரம்; hardness, as of timber. *"காட்புடைச் சிலையின்"* (கந்தபு. சிங்க.194).

*[காழ் → காழ்ப்பு → காட்பு (கொ.வ.).]*

**காடகச்சக்கரம்** *kāḍaga-c-cakkaram*, பெ.(n.) சித்திரப்பாவகை (யாப்.வி.497); a kind of metrical composition.

*[காடகம் + சக்கரம்.)*

**காடகம்**[1] *kāḍagam*, பெ.(n.) ஆடை (திவா.); cloth.

*[காழகம் → காடகம் (கொ.வ.). காழகம் பார்க்க; see kāḻagam.]*

**காடகம்**[2] *kāḍagam*, பெ.(n.) காட்டுமுள்ளி; large nail dye (சா. அக.).

*[காடு → காடகம்.)*

**காடசத்திரி** *kāḍaśattiri*, பெ.(n.) பழமுண்ணிப் பாலை; edible paulay (சா.அக.).

*[கடு → காடு → காட + சத்திரி.]*

**காடபந்தம்** *kāḍa-pandam*, பெ.(n.) தீவட்டி; large torch for festive occasions (சா. அக.).

*[கடு → காடு → காட + பந்தம்.]*

**காடம்** *kāḍam*, பெ.(n.) 1. உறுதி; strength. 2. கடினம்; hard. 3. அடர்த்தி; density. 4. மிகுதி; abundence (த.சொ.அக.).

*[கடு→ காடு + அம்.]*

**காடம்பரம்** *kāḍambaram*, பெ.(n.) 1. பிரைகுத்திய பாலின் மேற் படரும் ஆடை; the surface or skin of coagulated milk. 2. கடப்பம் பூவினின்று வாலையைக் கொண்டு இறக்கிய ஒருவகை மது; a spirituous liquor distilled from the flowers of *Kadamba*. 3.கடப்பமரம் நன்றாகப் பூத்துத் தேன் பொருந்திய காலத்து, அம்மரத்தின் குழிகளில் தங்கி நிற்கும் மழைத்தண்ணீர்; the rain water that collected in

the hollow spots of the tree (Nauclea Kadamba) when the flowers are in full bloom and are found impregnated with honey. 4. மது; a spirituous liquor in the general. 5. யானை மதம்; the fluid which issues from the temple of an elephant in rut. 6. குயில்; Indian cuckoo; preaching crow.

*[கடு→ காடு + அம்பரம்.]*

**காடமர்செல்வி** *kāḍamar-šelvi,* பெ.(n.) கொற்றவை; *Korravai,* as dwelling in the forest. *"காடமர்செல்வி கழிபெருங்கோட்டமும்" (மணிமே. 6:53).*

*[காடு + அமர் + செல்வி.]*

**காடர்** *kāḍar,* பெ.(n.) 1. காட்டில் வாழும் குடிகள்; hill tribes, dwellers in the forest. *"குன்றகஞ் சேர்ந்த காடரில்" (இறை.23, உரை. பக்.126).* 2.ஆனை மலையில் வாழும் ஓரினத்தார்; hill tribes occupying the Anaimalai hills, of strong build with woolly hair and African features.

*[காடு → காடர் (காட்டில் வாழ்பவர்).]*

**காடவர்** *kāḍavar,* பெ.(n.) கடிலம் ஆற்றங்கரையிலமைந்த சேந்தமங்கலத்தைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த குறுநில மன்னர் குடி; local chieftien, who ruled from Sendamangalam on the banks of kadilam river in Villuppuram dt. *"சகல புவனச் சக்கரவர்த்திகள் காடவராயன் கோப்பெருஞ்சிங்கன்".*

**காடவன்[1]** *kāḍavaṉ,* பெ.(n.) பல்லவர்களின் சிறப்புப்பெயர்(பெரியபு.ஐயடிகள்.7); title of the Pallava kings.

*[காடு + அவன் – காடவன். காடுகளை அழித்து விளைநிலங்களாக மாற்றிய வேளாண் மரபின் பழங்கிளை மரபினன். வடதமிழராகியும் பிறகு பல்லவராகியுங் கூட மறவாமல் புனைந்து கொண்ட மரபுப்பெயர்.]*

**காடவன்[2]** *kāḍavaṉ,* பெ.(n.) கழற்சிங்கனின் சிறப்புப்பெயர்(பெரியபு.ஐயடிகள்.7); title of the Kalar-šiṅgaṉ king.

*[காடு + அவன் – காடவன். காடுகளை அழித்து விளைநிலங்களாக மாற்றிய வேளாண் மரபின் பழங்கிளை மரபினர். வடதமிழராகியும் பிறகு பல்லவராகியுங் கூட மறவாமல் புனைந்து கொண்ட மரபுப்பெயர்.]*

**காடவிளக்கு** *kāḍā-viḷakku,* பெ.(n.) பெருவிளக்கு (வின்.); lamp formed by putting oil and wick in large vessels for illumination on great occasions.

*[அகடு + விளக்கு – அகட்டுவிளக்கு → அகடவிளக்கு → காடவிளக்கு (கொ.வ.). அகடுவிளக்கு வயிறு பெருத்த அல்லது அகன்று பெரிய வடிவுடைய விளக்கு.]*


காடவிளக்கு

**காடன்** *kāḍaṉ,* பெ.(n.) மீன்வகை (வின்.); a species of fish (w.).

*[கடு→காடு→காட + அன்.]*

**காடா** *kāḍā,* பெ.(n.) நன்றாக முறுக்கிய கடினத் தன்மையுள்ள தடித்த இழைகளால் நெய்யப்பட்ட துணி; fabric woven with coarse yarn. ஒரு மீட்டர் காடா வாங்கிவா.

*[கடுவு → கடா → காடா.]*

**காடாக்கினி** *kāḍākkini,* பெ.(n.) 1.பெருநெருப்பு (வின்); great fire,conflagration. 2. மருந்து எரிப்பதற்காக இருவிரல் கனமுள்ள 4 அல்லது 5 விறகால் எரிக்கும் பெருநெருப்பு; a strong fire produced in order to prepare medical powder, from four or five sticks each as thick as two fingers and encircling the melting pot containing herbs.

*[காடு + அக்கினி.]*

**காடாந்தகாரம்** *kādāndakāram,* பெ.(n.) கனத்த இருள், பேரிருள்(சி.சி.2,58, சிவாக்.); pitch darknes, thick darkness.

*[காடு + அந்தகாரம்.]*

Skt. antakara. த. அந்தகாரம். ***காட்டிருள்*** *பார்க்க; see kaṭṭiruḷ.*

**காடாய்ப்போ—தல்** *kāḍāy-p-pō,* 8 செ.கு.வி. (v.i.) மரமடர்ந்துநிலம் பயனின்றி ஒழிதல்; to lie waste, grow woody as land.

**மறுவ.** காடுபற்றுதல், காடமண்டுதல்.

*[காடு + (ஆகி) ஆய் + போ = காடாய்ப்போ).]*

**காடாரம்பம்** *kāḍārambam,* பெ.(n.) புன்செய் நிலப்பகுதி(G.TN.D.1,293); dry tract, rain-fed land where only dry crop can be raised, opp. to *nīr-ārambam* (நீராரம்பம்).

**க.** காடாரம்ப; **தெ.** காடாரம்பமு.

*[காடு + ஆரம்பம் → காடாரம்பம். ஏர் → ஏரம்பம் – ஆரம்பம் (கொ.வ.). ஏரம்பம் பார்க்க; see ērambam.]*

**காடாரம்பற்று** *kāḍāram-paṟṟu,* பெ.(n.) காட்டுப் புறம் (யாழ்.அக.); forest region.

*[காடாரம்பம் + பற்று – காடாரம்பற்று.]*

**காடாவிளக்கு** *kāḍā-viḷakku,* பெ.(n.) ***காடவிளக்கு*** பார்க்க; see *kāḍa-viḷakku*

*[காடவிளக்கு → + காடாவிளக்கு.]*

**காடாற்று—தல்** *kāḍāṟṟu,* 8 செ.கு.வி.(v.i.) இறந்தவரை எரியூட்டிய பின்னர் நெருப்பை நீர்விட்டு ஆற்றியபின் புதுப்பானையில் அங்கம் (எலும்பு முதலியன) சேர்த்தல்;to perform the ceremony connected with quenching the fire when a corpse has been burnt, and collecting the bones in a new earthern pot. *"இரண்டு மூன்று நாளுறுங் காடாற்றாமுன்" (மச்சபு. பிண்டி.19).*

*[காடு + ஆற்று – காடாற்று. காடு = சுடுகாடு, ஈமம். ஆற்றிச் சூடுதணிக்கும் கடன்.]*

**காடி**[1] *kāḍi,* பெ.(n.) 1. புளித்த கஞ்சி (பதார்த்த.49); fermented gruel or rice-water. 2. புளித்தகள்; vinegar. 3. கஞ்சி; gruel. *"காடி கொண்ட கழுவுறு கலிங்கத்து" (நெடுநல்.134).* 4. புளித்த பழச்சாறு ; acetous fermentation of sweet fruits. *"துப்புர வில்லார் துவரத் துறவாமை யுப்பிற்குங் காடிக்குங் கூற்று" (குறள்.1050.).* 5. ஊறுகாய்; pickles. *"கயிறுபிணித்துக் காடிவைத்த கலனுடைமூக்கின்" (பெரும்பாண்.57.)* 6. சோறு. (அக.நி.); rice food.

**ம., தெ.** காடி

*[கடு → கடி → காடி. கடு → உறைப்பு அல்லது புளிப்பு மிகுதி.]*

**காடி வகைகள்:**

1. பழக்காடி 2. அரிசிக் காடி 3. கள்ளுக் காடி 4. சருக்கரைக் காடி 5. கடலைக் காடி 6. ஈச்சங் காடி 7. பனங் காடி 8. தென்னங் காடி 9. திராட்சைக் காடி 10. கஞ்சிக் காடி 11. ஆறு மாதக் காடி 12. சீமைக் காடி (சா.அக.).

**காடி**[2] *kāḍi,* பெ.(n.) நெய் (பெரும்பாண்.57, உரை); ghee.

*[கடி → காடி. கடி = மிகுதி. நறுமணமிகுதி. நறுமணமுள்ள நெய்.]*

**காடி**[3] *kāḍi,* பெ.(n.) 1. கழுத்து; neck; nape of the neck. *"காடியின் மிதப்ப வயின்ற காலை" (பொருந.115).* 2. மிடா முதலியன வைப்பதற்குத் தரையில் கழுத்துப்போலமைக்கப்பட்ட மேடை (பெரும்பாண். 57,உரை); neck-like elevation on the floor for placing big pots. 3. மூளை; brain.

*[கடி → கடிகை → காடிகை→ காடி (கொ.வ.). கடி = கடித்தல், இறுக்கப்பிடித்தல், சுருக்குதல், சிறிதாக்குதல். சிறிய வாயினையுடைய பானை.]*

**காடி**[4] *kāḍi,* பெ.(n.) தவசம் அளக்கும் முகத்தலளவுள் ஒன்று; a measure of capacity for grain. *"எழுத்துச்*

*சடையன் பக்கல் ஆயிரக்காடி நெல் கொண்டோம்" (S.I.I.III,6-1 pg.9).*

*[கடிகை → காடிகை → காடி. கடிகை = குறிப்பிட்ட அளவுக்குரிய மட்பாண்டம்.]*

**காடி**[5] *kāḍi,* பெ.(n.) வண்டி; cart, carriage.

**க., தெ.** காடி; **ப., H.** gāḍi.

*[சகடு→சாகாடு → காடு → காடி (கொ.வ.). சாகாடு = சகடம் (வண்டியின் சக்கரம்). சக்கரத்தைக் குறித்த சொல், வண்டியைக் குறிப்பதாயிற்று. வடபுலத்து மொழிகளில் பொதுவாக அனைத்து ஊர்திகளுக்கும் பொதுப் பெயராயிற்று. இதனை உருதுச்சொல் என்பது பொருந்தாது.]*

**காடி**[6] *kāḍi,* பெ.(n.) 1. அகழி; trench of a fort. 2. கோட்டையடுப்பு; a fireplace in the form of a long ditch. 3. மாட்டுக்கொட்டில்(உ.வ.); manger. 4. மர வேலையின் பொளிவாய்; groove in wood-work, rabbet. மரத்தில் காடிவெட்டினான் (உ.வ.).

*[அகழ் → அகழி → காழி → காடி. (கொ.வ.). குழி, பள்ளம் அல்லது வெட்டுவாயைக் குறித்த பழந்தமிழ்ச்சொல். காடி எனத் திரிந்து கொச்சை வழக்காயிற்று.]*

**காடிக்காரம்** *kāḍi-k-kāram,* பெ.(n.) நெருப்புக்கல் (மூ.அ.); nitrate of silver, lunar, caustic.

**மறுவ.** ஆயக்கல் (சா.அக.)

*[கடி → காடி + காரம் – காடிக்காரம். காடி = உறைப்பு, எரிதல்.]*

**காடிக்கூழ்** *kāḍi-k-kūl,* பெ.(n.) புளிக்கவைத்த கூழ்; sour pap (சா.அக.).

*[காடி[1] + கூழ்.]*

**காடிகம்** *kaḍigam,* பெ.(n.) சீலை (சூடா.); cloth, stiff-ened with starch or gruel.

*[காழ் → காழகம், காழ் = வித்து. ஆடைகளுக்குச் செந்நிறம் ஊட்டுதற்குப் பயன்பட்ட வித்து. செந்நிறம் ஊட்டப்பட்ட துணி காழகம் எனப்பட்டது.]*

**காடிச்சத்து** *kāḍi-c-cattu,* பெ.(n.) புளித்த காடியை வாலையிலிட்டு இறக்கிய மயக்கமூட்டும் பொருள்; the intoxicating principle obtained from fermented liquors (சா.அக.).

*[காடி + சத்து.]*

**காடிச்சால்**[1] *kāḍi-c-cāl,* பெ.(n.) காடி வைக்குஞ் சால், மட்பாண்டம் (சினேந்.172.); broad-mouthed pot-keeping sour rice-water.

*[காடி + சால்.]*

**காடிச்சால்**[2] *kāḍi-c-cāl,* பெ.(n.) மரவேலையின் பொளிவாய்; groove in woodwork, rabbet.

*[காடி[6] + சால்.]*

**காடிச்சால்மூலை** *kāḍi-c-cāl-mūlai,* பெ.(n.) வேள்விச்சாலையில் காடி வைக்கப்படும் வட கிழக்குத் திசை; north-eastern corner where waste water is emptied in a pot at sacrifice. *"காடிச்சால் மூலையில் தேவதையை ஆசிரயித் தாராகில்" (திவ். கண்ணிநுண்.வ்யா. அவ.பக்.5).*

*[காடி + சால் + மூலை.]*

வடகிழக்குத் திசையில் முதன்முதலாகப் பொன்னேர் கட்டத்தொடங்குதல், அறுவடை தொடங்குதல் போன்றன தொன்றுதொட்டுப் பழந்தமிழர் வழக்கமாதலின் வடபுலத்து ஆரியரும் இதனை மேற் கொண்டிருக்கலாம்.

**காடிச்சோறு** *kāḍi-c-cōṟu,* பெ.(n.) 1. புளித்த கஞ்சி; sour gruel. 2. புளித்தகஞ்சியின்று எடுக்கப் பட்ட சோறு; rice taken out of sour kañji.3. சொண்டிச் சோறு; an intoxicating liquor extracted from the fermentation of boild-rice.

**மறுவ.** குசாண்டிச் சோறு, ஊறவைத்த சோறு.

*[காடி + சோறு.]*

**காடித்தாய்** *kāḍi-t-tāy,* பெ.(n.) காடிக் காதி; mother of vinegar (சா. அக.).

*[காடி + தாய்.]

**காடித்தெளிநீர்** *kāḍi-t-teḷi-nīr,* பெ.(n.) தெளிய வைத்த காடிநீர்; vinegar (சா. அக.).

*[காடி + தெளிநீர்.]*

இது நோய்களுக்குக் கொடுக்கவும், புடம் போடுவதற்கு மருந்துகளை அரைக்கவும் பயன்படும். இது கருங் குருவை அரிசியிலிருந்துசெய்யப்படும்.

**காடித்தேன்** *kāḍi-t-tēṉ,* பெ.(n.) தேனிலிருந்து செய்யப்படும் காடி; vinegar prepared from honey (சா. அக.).

*[காடி + தேன்.]*

**காடிநீர்** *kāḍi-nīr,* பெ.(n.) 1. காடி; vinegar. 2. கழுநீரை வெயிலில் வைத்து வடித்தெடுக்கப் படும் புளித்த நீர்; rice-water fermented by exposing it to the Sun (சா. அக.).

*[காடி + நீர்.]*

**காடிப்பால்** *kāḍi-p-pāl,* பெ.(n.) பனங்கள்; palmyra toddy. (சா.அக.)

*[காடி[1] + பால்.]*

**காடிபுளி** *kāḍi-p-puḷi,* பெ.(n.) வியர்வையிலுள்ள ஒருவகைப் புளிப்பு; the sour substance found in sweat (சா.அக.).

*[காடி[1] + புளி.]*

**காடிமூலி** *kāḍi-mūli,* பெ.(n.) பருத்தி; cotton (சா.அக.).

*[காடி + மூலி.]*

**காடியடுப்பு** *kāḍi-y-aḍuppu,* பெ.(n.) பெருகச் சமைப்பதற்காக ஆழமற்ற நீண்ட கால்வாய் போன்று குழிவெட்டி அமைக்கப்பட்ட அடுப்பு, கோட்டையடுப்பு; a fire place in the form of a long ditch used for cooking on a large scale.

**மறுவ.** கோட்டையடுப்பு.

*[காடி[6] + அடுப்பு.]*

**காடியலகு** *kāḍi-y-alagu,* பெ.(n.) பொளிவாய் செதுக்குங் கருவி(C.E.M.); groove cutter.

*[காடி[6] + அலகு. அலகு = உளியின் வாய்.]*

**காடியிலை** *kāḍiilai,* பெ.(n.) புளித்தகீரை; Indian brown hemp (சா.அக.).

*[காடி + இலை. காடி = புளிப்பு.]*

**காடியிழைப்புளி** *kāḍi-y-iḻaippuḷi,* பெ.(n.) ருச்சுக் கருவி வகை (C.E.M.); plough-plane.

*[காடி[6] + இழைப்பு + உளி.]*



காடியிழைப்புளி

**காடியுளி** *kāḍi-y-uḷi,* பெ.(n.) இழைப்புளி வகை (C.E.M.); rabbet-plane.

*[காடி[10] + உளி.]*



காடியுளி

**காடிவெட்டு-தல்** *kāḍi-veṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) பள்ளந்தோண்டுதல், குழிவெட்டுதல், துளை செய்தல் (வின்.); to scoop, cut into hollowness.

*[காடி[6] + வெட்டு.]*

**காடு**[1]**–தல்** *kāḍu,* 5 செ.குன்றாவி (v.t.) அலைக்கழித்தல், துன்புறுத்துதல்; to treat harsly, give trouble.

க. காடு; து. காட்யுனி, காடியுனி.

**காடு**[2] *kāḍu,* பெ.(n.) 1. மரங்கள் செறிந்த நிலப்பகுதி; forest; jungle. *"காடே கடவுண் மேன" (பதிற்றுப்.13:20.).* 2. மிகுதி; excessiveness, abundance. எங்கும் வெள்ளக்காடாயிருக்கிறது (உ.வ.). 3. நெருக்கம்; density. *"தாமரைக் காடு போன்றார்" (சீவக. 2199).* 4. செத்தை (பிங்.); chaff, straw, etc., 5.சோலை; park. *"அரம்பையங் காட்டுக்கு" (மருதூரந். 22).* 6. கடற்கரை; sea shore. கட்டுமரத்தை மேற்கில் வலித்துக்கொள் அதோ காடு தெரிகிறது (மீனவ.).

ம., க., தெ., து. காடு.

*[கடு → காடு. கடு = அடர்த்தி, மிகுதி, செறிவு.]*

**காடு**[3] *kāḍu,* பெ.(n.) 1. சுடுகாடு; burning-ghat, burial ground. *"நெய்தல் கல்லென வொலிக்குங் காடு" (பு.வெ.10, காஞ்சிப் 6, கொளு).* 2. இடம்; place, tract of land. வயற்காடு, பட்டிக்காடு (பிங்.). 3. புன்செய்நிலம்(C.G.); dry land. *"காடுகாரையுழுது பிழைப்பு" (தனிப்.).* 4. சிறிய ஊர் (பிங்.); small village.5. எல்லை (பிங்.); border, boundary. 6. நான்கு அணைப்புள்ள ஒரு நிலவளவு; a measure of 4 *anaippu* = more than 2 acres.7. தாழி (பரணி) நாண்மீன்; *paraninakstra.* 8. முரட்டுத்தன்மை; roughness.

*[கடு → காடு. கடு = மிகுதி, செறிவு, அடர்த்தி மரங்களின் செறிவு மிக்க இடம் காடு எனப்பட்டது.)]*

காடுவெட்டி நிலந்திருத்தியபோது விளைநிலம், விளைநிலத்தையடுத்த ஊர் எல்லை; ஊரெல்லையிலுள்ள சுடுகாடு ஆகிய பொருள்களில் புடைபெயர்ந்தது. ஓர் உழவன் அரைநாளில் உழும் நிலப்பரப்பு ஓர் அணைப்பு எனப்படுதலால் இரண்டு உழவர்கள் ஒருநாளில் அல்லது ஓர் உழவன் இரண்டுநாளில் உழும் நான்கு அணைப்புநிலம் ஒரு சாறுயால் காடு என்னும் நில அளவாகக் கருதப்பட்டது.

**காடு**[5] *kāḍu,* இடை (part.). ஒரு தொழிற்பெயர் ஈறு; an ending of verbal nouns, as in. (எ–டு) சாக்காடு.

*[காடு[2] → காடு[3].]*

இடம் குறித்த சொல் சிறுபகுதியையும் குறித்தலான் தொடர்புடையது என்னும் பொருளில் புடைபெயர்ந்து முதற்சொல்லின் பொருளை விரிப்பதற் காகப் பெயரீறு வடிவுற்றது. ஒ.நோ. தூக்கம் → தூக்காடு, நோவு → நோக்காடு.

**காடு**[4] *kāḍu,* இடை.(part.) வளப்பம், இடம், தன்மை, நிலைமை ஆகிய பொருள்களைச் சுட்டும் பெயரீறு; a noun suffix denoting fertility, situation, nature and state.

*[கடு → காடு.]*

வளப்பம் குறித்த பெயரீறு - மலைக்காடு, வயற்காடு, பருத்திக்காடு, மாங்காடு

தன்மை குறித்த பெயரீறு - வெள்ளக்காடு

இடம் குறித்த பெயரீறு - இடுகாடு, சுடுகாடு

நிலைமை குறித்த பெயரீறு - கரம்பைக்காடு, புற்காடு, புழுதிக்காடு, மணற்காடு, புதர்க்காடு, புகைக்காடு, பிணக்காடு.

**காடுகட்டு**[1]**–தல்** *kāḍu-kaṭṭu,* 5 செ.கு.வி.(v.i.) விலங்கு, பறவைகளைக் குறித்தவிடத்தில் வராமல் தடைசெய்தல்; to prevent, with incantations, wild beasts and birds of prey from frequenting a particular place. *"காக மணுகாம லெங்குங் காடுகட்டி" (குற்றா.குற.23.).*

*[காடு + கட்டு. காடு = எல்லை, அரண், பாதுகாப்பு, வேலி, அமைப்பு]*

**காடுகட்டு**[2]**–தல்** *kāḍu-kaṭṭu,* 5 செ.கு.வி.(v.i.) செடிகளும் மரங்களும் வளர்ந்து அடர்ந்திருத்தல்; to over grow of Vegetation.

ம. காடுகெட்டுக

*[காடு + கட்டு. காடு = எல்லை, அரண், பாதுகாப்பு, வேலி, அமைப்பு]*

**காடுகரை** *kāḍu-karai,* பெ.(n.) வயலும் அதனைச் சார்ந்த பகுதியும்; cultivable land and adjacent area. காடுகரையெல்லாஞ் சுற்றி வந்தேன், களைப்பாயிருக்கிறது (உ.வ.).

*[காடு + கரை.]*

**காடுகலை—த்தல்** *kāḍu-kalai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வேட்டைக்காரர்கள் விலங்கு பறவைகளைக் கலைத்தெழுப்புதல்; to beat the bush for starting the game. 2. வேலைக்காரரை அச்சுறுத்தல்; to threaten subordinates or servants by calling them to a strict account.

*[காடு + கலை.]*

**காடுகாட்டு[1]—தல்** *kāḍu-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ஏமாற்றுதல் (வின்.); to show the burning ghat, to deceive, disappoint. 2. கொல்லுதல் (யாழ்.அக.); to kill.

*[காடு + காட்டு.]*

விளைநிலம் காட்டுவதாக அழைத்துச்சென்று விளைச்சலுக்குதவாத புதர்க் காடுகளைக் காட்டி ஏமாற்றுதல் பொருளிலும், இடுகாட்டைக் காட்டுதல் எனக் கொல்லுதல் பொருளிலும் புடைபெயர்ந்தது.

**காடுகாட்டு[2]—தல்** *kāḍu-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) வெறிச்சென விடுதல் (யாழ்.அக.); to be desolate.

*[காடு + காட்டு.]*

**காடுகாள்** *kāḍu-kāḷ,* பெ.(n.) ***காடுகிழாள்*** பார்க்க; see *kāḍukiḻāḷ.* கோயில் ஊர்எல்லையில் உள்ளது (நெல்லை). *“காடுபோக்கில் அரைமாவும், காடுகாள் வாரத்து அரைமாவும்” (தெ.கல்.தொ.19, கல்.71)*

H. Gadakali

*[காடு + கிழாள் – காடுகிழாள்→ காடுகாள் (தொகுத்தல் திரிபு). காடுகிழாள் என்பது காடு காளென மருவிற்று. வரலாற்றுச் சிறப்பு மிக்க உச்சயினி மாநகரக எல்லையிலுள்ள மாகாளிகோயில் இன்றளவும் கடகாளி காமந்திர், காடுகாள் மந்திரம் (கோயில்) என வழங்கி வருதல் குறிப்பிடத்தக்கது.]*

**காடுகி** *kāḍugi,* பெ.(n.) சிற்றெழுத்தாணிப்பூண்டு; a small variety of style plant (சா.அக.).

*[காடு → காடுகி.]*

**காடுகிழவோள்** *kāḍu-kiḻavōḷ,* பெ.(n.) 1. ***காடுகிழாள்*** பார்க்க; see *kāḍu-kiḻāḷ.* *“காடு கிழவோட் கரைத்திருந்த சாந்தை” (யாப்.வி.93).* 2. (பரணி) நாண்மீன் (திவா.); the second star presided over by Durga.

*[காடு + கிழவோள்.]*

**காடுகிழாள்** *kāḍu-kiḻāḷ,* பெ.(n.) கொற்றவை (திருமுருகு.259. உரை); *Koṟṟavai,* as godess of the forest.

மறுவ. காடுகிழவோள், காடுகாள்.

*[காடு + (கிழவோள்) கிழாள் – காடுகிழாள்.]*

பாலை நிலத்தின் தெய்வமாகவும் ஊரெல்லைத் தெய்வமாகவும் வழிபடப்பட்டுவரும் கொற்றவை வழிபாடு இந்தியப் பெருநிலம் முழுவதிலும் பரவிய ஒன்றாகும். உதயணன் ஆண்ட உஞ்சை (உச்சயினி) மாநகரத்துக் காடுகிழாள் இன்றும் அம் மொழியில் கடகாள் எனப்படுதல் காண்க. நெல்லை மாவட்டத்துக் கொற்றவை கோயில்கள் காடுகாள் கோயில் என்றே வழங்கப்படுகின்றன.

**காடுகிழாள்வெயில்** *kāḍu-kiḻāḷ-veyil,* பெ.(n.) பொழுதுசாயும்போது தோன்றும் மஞ்சள்வெயில் (சிலப்.4:5,உரை); refracted light at sunset.

*[காடு + கிழாள் + வெயில். கொற்றவையை வழிபட்டால் வெம்மை தணியும் என்னும் நம்பிக்கையால் மாலை நேரத்து வெயில் காடுகிழாள் வெயில் எனப் பெயர் பெற்றது.]*

**காடுகெடு—த்தல்** *kāḍu-keḍu-,* 4 செ.கு.வி.(v.i.) காடழித்தல்; to clear the forest. *‘காடுகெடுத்து நாடாக்கி’ (தொல். பாயி.உரை).*

மறுவ. காடழித்தல், காடுவெட்டுதல், காடுகொல்லுதல்.

*[காடு + கெடு.]*

**காடுகெழுசெல்வி** *kāḍu-keḻu-celvi,* பெ.(n.) கொற்றவை; *Koṟṟavai* as dwelling in the forest. ‘காடுகெழு செல்விக்குப் பரணிநாட் கூழுந் துணங்கையுங் கொடுத்து’ (தொல்.பொருள்.461. உரை).

*[காடு + கெழு + செல்வி.]*

***காடுகிழாள்*** பார்க்க; see *kāḍukiḻāḷ*

**காடுகொல்(லு)—தல்** *kāḍu-kol-*,13 செ.கு.வி(v.i.) காட்டை வெட்டி யழித்தல்; to clear the forest. *"காடுகொன்று நாடாக்கி" (பட்டினப்.283).*

*[காடு + கொல்.]*

**காடுகொள்(ளு)—தல்** *kāḍu-koḷ(ḷu)-*, 16 செ.கு.வி. (v.i.) வேளாண் நிலமாக இருந்த பகுதி பயிரிடப் படாமையால் புல் பூண்டுகள் மரங்கள் முளைத்து காடாக மாறுதல்; covering arable land with jungle growth.

*[காடு + கொள்.]*

**காடுகோள்** *kāḍu-kōḷ,* பெ.(n.) வேளாண் நிலம் காடுபற்றுகை, காடாக மாறுகை; arable land co vered with jungle growth. *'ஏரி உடைந்து காடுகோளாய்ப் பாழ்கிடந் தமையில்' (S.I.I.IV,133-2 pg.9).*

*[காடுகொள் → காடுகோள்.ஒ.நோ. கடல்கோள்.]*

**காடுதரிசு** *kāḍu-tarišu,* பெ.(n.) செடிகள் முளைத் துத் தரிசாகக் கிடக்கும் நிலம்; waste land with bushy growth. *"நஞ்சை, புஞ்சை, நத்தம், செந்தலைக்கை, கரைகாடு, காடுதரிசு, மாவடை, மரவாடை, பாசிவிலை, ஆயந்தற்கு" (SII.V.410-10 pg.137).*

*[காடு + தரிசு.]*

**காடுபட்டி** *kāḍu-paṭṭi,* பெ.(n.) ***காடுவெட்டி**²*. பார்க்க; see *kāḍu-veṭṭi* *"காடுபட்டிகள் நந்திப் போத்தரையர் (S.I.I. III,124-3 Pg.261).*

*[காடு + (வெட்டி) பட்டி.]*

**காடுபடு—தல்** *kāḍu-paḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. நிரம்புதல்; to abount, as wealth. *"ஐசுவரியம் அவனுக்குக் காடுபடும்படியிறே அவன் பார்த்தது" (ஈடு.5,9,5.).* 2. வீணாதல்; to go waste. *'இப்பரப் பெல்லாம் . . . காடுபட்டுக் கிடக்குமோ' (ஈடு.1.1:1).*

*[காடு + படு. காடு = செறிவு, அடர்த்தி மிகுதி.]*

**காடுபலியூட்டு—தல்** *kāḍu-pali-y-ūṭṭu-*, 5 செ.கு.வி. (v.i.) வேடர் குறவர் முதலியோர் காட்டில் உள்ள தெய்வங்களுக்குப் பலியிடுதல்; to sacrifice cock, etc., to the forest deities before hunting to ensure a good game. *"காட்டிலுறை தெய்வங்கள் விரும்பியுண்ணக் காடுபலியூட் டென்றான், கவலை யில்லான்" (பெரியபு. கண்ணப்ப.50).*

*[காடு + பலி + ஊட்டு]*

**காடுபடுபொருள்** *kāḍu-paḍu-poruḷ,* பெ.(n.) காட்டில் கிடைக்கும் அரக்கு, இறால் தேன், மயிற்பீலி, நாவி போன்றவை; forest produce, as *arakku, iṟāl, tēṉ, mayir-pīli-nāvi.*

**மறுவ.** காடுபாடுதிரவியம்

*[காடு + படு + பொருள்.]*

**காடுபற்று—தல்** *kāḍu-paṟṟu-*, 5 செ.கு.வி.(v.i.) காடாக மாறுதல்; to become forest.

*[காடு + பற்று.]*

**காடுபார்த்த கொம்பு** *kāḍu-pārtta-kombu,* பெ.(n.) மாடுகளின் குற்ற வகையில் ஒன்று (பெரியமாட்.16); a defect in cattle.

*[காடு + பார்த்த + கொம்பு.]*

**காடுபிறாண்டி** *kāḍu-piṟāṇḍi,* பெ.(n.) காடுவாரி (யாழ்.அக); garden rake.

*[காடு + பிறாண்டி]*

**காடுமறை—தல்** *kāḍu-maṟai-*, 4 செ.கு.வி.(v.i.) இறத்தல்; to die. கொண்ட கணவரும் போய்ச் காடு மறைந்தார்(உ.வ.).

*[காடு + மறை.]*

**காடு மேடு** *kāḍu-mēḍu,* பெ.(n.) மேடாயுள்ள கரம்பு நிலம் (இ.வ.); rough, uneven waste land.

**க.** காடுமேடு

*[காடு + மேடு.]*

**காடுமேய்—தல்** *kāḍu-mēy-*, 2 செ.கு.வி. (v.i.)வீணாய்த் திரிதல் (இ.வ.); to wander uselessly, aimlessly.

*[காடு + மேய்.]*

**காடுவசாதியாய்த்திரி–தல்** *kāḍuva-cādi-y-āy-t-tiri-,* 3 செ.கு.வி. (v.i) மலைவாழ்நர் கோலத்தோடு திரிதல்; to be slovenly, negligent of one's dress. 2. யாருமற்ற ஏதிலியாய்த்திரிதல்; to be vagrant, as a neglected orphan.

*[காடுவாழ்சாதி → காடுவசாதி + ஆய் + திரி(கொ.வ.).]*

**காடுவாரி** *kāḍu-vāri,* பெ.(n.) 1. செத்தைவாருங் கருவி; garden rake. 2. கண்ட பொருளெல்லாஞ் சேர்ப்பவன்; one who scrapes up all he can. 3. பிழைப்புக்கென்று எத்தொழிலையுஞ் செய்பவன்; he who resorts to any kind of profession however low to maintain himself.

*[காடு + வாரி]*

**காடுவாழ்சாதி** *kāḍu-vāḷ-cādi,* பெ.(n.) ***காடு வாழ்நர்*** பார்க்க; see *kāḍu-vāḷnar. "காடுவாழ் சாதியு மாகப்பெற்றான்" (திவ். நாய்ச்சி.12.8.).*

Skt. jati > த.சாதி.

*[காடு + வாழ் + சாதி. ]*

**காடு வாழ்த்து**[1] *kāḍu-vāḷttu,* பெ.(n.) எல்லோரும் இறந்துபோகவும் தான் இறப்பின்றி நிலைபெற்ற புறங்காட்டை வாழ்த்தி உலகவியல்பை விளக்கும் ஒரு புறத்துறை(தொல். பொருள். புறத்.24); (*Puṟap.*) theme of praising the burning ghat, as perpetually impressing upon the minds of people the transitoriness of earthly things.

*[காடு + வாழ்த்து.]*

பிறப்பெடுத்த எல்லா உயிர்களும் இறந்து படுதலால் நிலையாமையே நிலையாகிவிட்ட உலகியல்பைச் சுட்டிக்காட்டி மக்களை அறநெறிப்பாற் படுத்தும் பாடல் வகைமையது.

**காடுவாழ்த்து**[2] *kāḍu-vaḷttu,* பெ.(n.) காட்டுத் தெய்வங்களை வேடர்கள் வாழ்த்துதல்; praising the forest dwelling gods, as the hunters

*[காடு + வாழ்த்து.]*

**காடுவாழ்நர்** *kāḍu-vāḷnar,* பெ.(n.) காட்டில் வாழும் பழங்குடிமக்கள்; savage tribe, as forest dwellers.

*[காடு + வாழ்நர்.]*

**காடுவெட்டி**[1] *kāḍu-veṭṭi* பெ.(n.) 1. மரம்வெட்டு பவன்; wood cutter, one who clears the forest. 2. நாகரிக மற்றவன் (வின்.); savage, uncivilized man.

ம., க. காடுவெட்டி.

*[காடு + வெட்டி.]*

**காடுவெட்டி**[2] *kāḍu-veṭṭi* பெ.(n.) சிறியமண் வெட்டி (யாழ்.அக.); a kind of small hoe.

*[காடு + வெட்டி.]*

**காடுவெட்டி**[3] *kāḍu-veṭṭi* பெ.(n.) பல்லவ அரசர் களுக்குரிய சிறப்புப்பெயர்களுள் ஒன்று; a title of Pallava king. *"வக்ரிமாதித்த வாணதாயின் விண்ணயந்தாலும் காடுவெட்டித் தமிழ்பேரயன் ஆணத்தியாலும்" (தெ.கல்.தொ.).*

ம. காடுவெட்டி

*[காடு + வெட்டி.]*

**காடுறைநிலை** *kāḍuṟai-nilai,* பெ.(n.) வாழ்க்கை யின் மூன்றாவது நிலை (வானப்பிரத்தம்) (சுக்கிர, நீதி 219); the third stage of life, "living in the forest".

*[காடு + உறை + நிலை.]*

**காடெழுகரம்பு** *kāḍeḷu-karambu,* பெ.(n.) செடி கொடிகள் மண்டிக் காடாக எழுந்துநிற்கும் சமனில்லாத நிலப்பரப்பு; un cultivable land. *"ஏரிக்கு மேற்கு காடெழு கரம்பு" (தெ.கல். தொ.17,கல்.304).*

*[காடு + எழு + கரம்பு.]*

**காடேறு–தல்** *kāḍeṟu,* 5 செ.கு.வி. (v.i.) 1. காட்டிற்கு ஓடுதல்; to flee away to a forest. *"காடேறி நாடேறித் திரிவார் கண்டீர்" (தமிழ்நா. 235).* 2. சாகுந்தறு வாயில் நோய்த்தெளிவு உண்டாதல்; to seemingly disappear, as a disease, just before the death of a person who suffered from it.

க.காடுவாய்

*[காடு + ஏறு]*

**காடை**[1] *kāḍai,* பெ.(n.) தவிட்டுநிற இறகுகளை யுடைய குறும்பூழ்ப்பறவை (திவா.); rain quail.

ம. காட; **க., து.** காடெ; **Skt.** cāsa.

*[காடு → காடை (காட்டில் அண்டி வாழ்வது).].*

**வகைகள் :** 1. பெரியகாடை 2. கருங்காடை 3. நீல காடை 4. மலைக்காடை 5. வண்ணக்காடை 6. சரலைக் காட்டுக் காட்டுள் காடை 7. குறுஞ்சான் காடை 8. குறுங் காடை.



காடை

**காடை**[2] *kāḍai,* பெ.(n.) கொங்கு வேளாளர் குடிகளுள் ஒன்று; a clan of *koṅgu veḷāḷar.* கொங்கு வேளாளர் குடிகளுள் பல பறவையின் பெயரில் அமைந்துள்ளன. ஆந்தை குலம், காடை குலம் போன்றன. காடை குலம், சாகாடை, பனங்காடை என இருவகைப்படும். *"எழுமாத்தூர் இருந்து வாழும் சாகாடைச் சிற்றன்; அவன் இதில் பட்டான்" (செங்கம். நடுகற்கள்).*

**காடைக்கண்ணி** *kāḍai-k-kaṉṉi,* பெ.(n.) காடை யின் கண்போன்ற தினைவகை (பதார்த்த.1400); common millet, having the colour of quail's eyes.

**மறுவ.** கவந்தலைக்கண்ணியரிசி

*[காடை + கண்ணி.]*

**காடைக்கழுத்தன்** *kāḍai-k-kaḻuttaṉ,* பெ.(n.) ஐந்து திங்களில் விளையக்கூடிய நெல்வகை (வின்.); quail-neck paddy maturing in five months, raised in the southern Tamil districts (W.).

ம. காடகழுத்தன் (ஒருவகை நெல்)

*[காடை + கழுத்தன். காடையின் கழுத்தின் நிறமுள்ள கதிர்களையுடைய நீளமான நெல்வகை.]*

**காடைக்கழுத்தி** *kāḍai-k-kaḻutti,* பெ.(n.) முன்னைமரம்; Indian head-ache tree.

*[காடை + கழுத்தி.]*

**காடைக்கறுப்பன்** *kāḍai-k-kaṟuppaṉ,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy. *"பொன்னாயகன் சொற்காடைக் கறுப்பன்" (பறாளை. பள்ளு).*

*[காடை + கறுப்பன்.]*

**காடைக்கொக்கு** *kāḍai-k-kokku,* பெ.(n.) காடை இனத்தைச் சார்ந்த ஒருவகைப் பறவை; the green sand piper.

ம. காடக்கொக்கு, காடக்கொற்றி.

*[காடை + கொக்கு.]*

**காடைக்கொம்பன்** *kāḍai-k-kombaṉ,* பெ.(n.) நெல்வகை (நெல்லை); a kind of paddy.

*[காடை + கொம்பன்.]*

**காடைச்சம்பா** *kāḍai-c-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை (பதார்த்த.818); a kind of camba paddy.

*[காடை + சம்பா = காடைச்சம்பா.]*

**காடைத்தனம்** *kāḍai-t-taṉam,* பெ.(n.) முரட்டுக் குணம்; rowdyism. அவன் செய்யும் காடைத்தனத் தால் பல உயிர்கள் அழிந்தன (இலங்.வழ).

*[கடு → காடு → காடை + தனம்.]*

**காடைப்புடம்** *kāḍai-p-puḍam,* பெ.(n.) காடை யளவாக ஒரே எருவிட்டு எரிக்கும் மருந்துப்புடம்

# காடை வகைகள்



கட்டுக் காடை



குறுங்காடை



சரளைக் காடை



குறுஞ்சாண் காடை



வண்ணக் காடை



கருங்காடை



நீலமார்புக் காடை



மலைக்காடை



பெரிய காடை

(மூ.அ); a measure determining the strength of fire in the calcination or reduction of metals with a single dried dung cake.

[காடை + புடம்.]

**காடைமீன்** *kāḍai-mīṉ,* பெ.(n.) வெண்மையான சிறு கடல்மீன்; a small whitish or silvery sea-fish. (சா.அக).

[காடை + மீன்.]



காடைமீன்

**காடையன்**, *kāḍaiyaṉ;* பெ.(n.) வன்முறையைக் கையாள்பவன்; gangster, rowdy.

[கடு → காடு → காடை → காடையன்.]

**காடையிறகு** *kāḍai-y-iṟagu,* பெ.(n.) நாடகம் நடிப்போர் தலையிலணியும் பலவண்ண இறகு (வின்.); crest made of variegated feathers worn by stage players (W.).

[காடை + இறகு.]

**காடோடி** *kāḍōḍi,* பெ.(n.) 1. காட்டில் திரிபவன்; one who roams about in forest, savage, rustic. 2. வீட்டில் தங்காமல் வெளியில் திரிபவன்; an idle wandere r, vagrant.

ம. காடோடி

[காடு + ஓடி.]

**காண்[1] (ணு)-தல்** *kāṇ-,* 16 செ.குன்றாவி.(v.t.) 1. பார்த்தல்; to see, perceive, view. *"காணிற் குடிப்பழியாம்"* *(நாலடி,84).* 2. இறைவன் பெரியமனிதர், முழுநிலவு போன்றவற்றைக் காணுதல்; to gain sight of, as a deity, a great person, the moon. *"திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" (திவ்.இயற்.3:1).* 3.கண்டறிதல்; to discover, find out. *"காணாதாற் காட்டுவான் தான்காணான்" (குறள்,849).* 4. உண்டாக்குதல்; to make, create. *"முனைவன் கண்டது" (தொல். பொருள்.மரபு.95).* 5. பொறி யாலறிதல்; to perceive by the sensse. அவன் பேச்சைக் கண்டு (திருவாலவா.16:28). 6. ஆராய்தல்; to consider, investigate. *"அறம் பொருள் கண்டார் கணில்" (குறள்:141).* 7. தானே நுகர்ந்து அறிதல்; to experience. 8. மதித்தல்; to regard. *"தானெனக் கண்டும்" (கல்லா.51:7).* 9. வணங்குதல் (பிங்.); to worship, venerate, reverence. 10. புறங்காணுதல்; to put to flight, drive away, as seeing the back of enemies. *"நிலவுக் காண்பது போல" (கலித்:119.4.).* 11. பெறுதல்; to attain, abtain, get. *"முற்று மிடங்கண்டபின்" (குறள்,491.).* 12. சொல்லுதல்; to tell say. *"யாவருங் கண்ட நெறி" (ஆசாரக்.17).* 13. ஒத்திருத்தல்; to look like, resemble. *"மழைகாணு மணிநிறத்தோய்" (கம்பரா. அயோத். குகப்.26).* 14. பொருந்துதல்; to be fit. *"மற்காணுந் திரடிண்டோள்" (கம்பரா. குக.26).*

[கண்(ணு)-தல் → காண்(ணு)-தல், கண்(ணு)தல் = பொருந்துதல்.]

**காண்[2](ணு)-தல்** *kāṇ-,* 12 செ.கு.வி.(v.i.) 1. உண்டாதல், பலித்தல்; to accrue, result. இவ்வாண்டு விளைச்சல் எவ்வளவு காணும்? (உ.வ.). 2. கண்ணுக்குத் தெரிதல்; to appear, to be found, to become visible evident. *"காண்கின்ற நிலமெல்லாம் யானே யென்னும்" (திவ். திருவாய்.5.6:3).* 3. போதியதாதல்; to be sufficient. இப்பொருள் எத்தனை நாளைக்குக் காணும் (உ.வ.).

[காண்[1] → காண்[2].]

**காண்[3]** *kāṇ,* பெ.(n.)1.காட்சி; sight. *"காண்பிறந் தமைந்த காதல்" (கம்பரா.திருவடிதொழு.70).*

2. அழகு; beauty. *"காண்டக... முகனமர்ந்து" (திருமுருகு.250).*

*[காண்[1] → காண்[3]]*

**A.S.** cnawan; **ICE.** kna; **Russ.** znate; **L.** nosco, gnosco; **G.** gignosko; **Sans.** jna(all from a base GNA, a secondary form of GAN or KAN, to know. *(செல்வி.78 சிலை 245).* **Chin.** kān.

காண் என்னும் சொல் ஆங்கிலத்திலும் அதன் இனமொழிகளிலும் கன் (cun) கான் (con) கென் (ken) கெஅன் (can) என்று திரிந்துள்ளது. கீன் (keen) என்று திரிந்துள்ளதாகவும் கீற்று (skeat) கூற்றினின்று தெரிகிறது.

காணுதல் என்னும் சொல் தமிழில் புறக்கண்ணாற் காணுதலையும், அகக்கண்ணாற் காணுதலையும் குறிக்கும். முன்னது பார்த்தல், பின்ன அறிதல். திருத் தானிய மொழிகளில் காண் என்பதன் திரிசொற்களெல்லாம் பின்னதையே உணர்த்துகின்றன.

**Cun.**, **A.S.** cunnan, to know, **ME.** cunnen, to know, **ON.** cunna, to know, **Ice.** kunna, *to know*, **Sw.** kunna, to know, **Dan.** kunde, to know, **M., Goth.** kunnan, to know.

செய்வான் (செய்ய) என்னும் எதிர்கால வினையெச்சத்தின் (முற்றெச்சத்தின்) 'வான்' ஈறு மலையாளத்தில் 'ஆன்' ஈறாகத் திரியும். அதுவே 'அன்' என்று குறுகியும் பின்னர் 'என்' என்று திரிந்தும் பழைய ஆங்கிலத்தில் நிகழ்கால வினையெச்ச (Infinitive) ஈறாக வழங்கினதாகத் தெரிகின்றது. ஆங்கில இன மொழிகளில் அவ்விரண்டும் 'அ' எனக் கடைக்குறைத்துள்ளன. E. cunning, 1. kowing, skilful, ME cunning conning, Northern form cunnand, Ice. kunnandi. 2. Knowledge, skill, M.E. conninge, Ice. cunnandi, AS. cunnung, temptation, trial.

E. *con*, A secondary verb, formed from AS cunnan, to know: it signifies accordingly 'to try to know' and may be regarded as the desiderative of 'to know'- Skeat's. Etymological Dictionary of the English Language, p.126. con, 1. to learn, learn to know, study. 2 to commit to memory.-- The Random House Dictionary, p.303. To con (the passage) (Shakespeare) = to learn by heart.

**E.** ken, to know. Every man kens (knows) best where his own shoe pinches, (prov.). ME kennen, to make known, see, know, discern. OE. *cennen to make known*, declare, Ice. kenna, to know, Sw. kanna, Dan. kjende, Du. kennen, G. kennen.

E. can, to know, to know how to, to be able.; G., Ice., Goth. kann.; Cf. AS cunnan, to know, to know how to do, to be able; Ice. kunna, to know, to be able; Sw. kunna, to know, to be able; Dan. kunde, to know, to be able.

முதற்கண், 'கான்' (con, kon) என்னும் திருத்தானியச் சொல் முதலெழுத்துயிர் முன் பின்னாக முறைமாறி 'க்னா' (cna, kna) என்னும் 'க்னோ' என்றும் திரிந்தது.

AS. cnawan, **Ice.** kna, ON. kna, ME knowen, E. know, OHG. chnaan, cnahan.

ககரம் சில மொழிகளில் 'ga' என்னும் எடுப்பொலியாக (voiced sound) மாறுகின்றது.

L. gna; gnarus, knowing, having knowledge of, acquainted with; O. Irish, gnath, known, accustomed, W. gnawd, a custom.

கிரேக்கத்தில் இவ்வெடுப்பொலிக் ககரம் (ga) இரட்டிக்கின்றது.

GK. gignnōskō.

சமற்கிருதத்தில் எடுப்பொலிக் ககரம் (ga) ஜகரமாகத் திரிகின்றது. Skt. jna (ஜ்ஞா). g-j ந-ஞ போலித் திரிபு.

வ. ஜ்ஞான - இந். ஜான்.

ஜகரம் சில மொழிகளில் ஸகர எடுப்பொலியாக (za) மெலிந்து விடுகின்றது.

**Russ.** znafe, to know, **Pers**. far-zān, knowledge.

இவ்வெல்லாத் திரிபுகட்கும் மூல வேர் GEN (கென்) எனக் குறிக்கின்றார் கீற்று (Skeat)

மேலையார் இன்னும் மொழிகளைச் சரியாய் ஆராயவில்லை. இற்றை அறிவியல்களெல்லாம் மேலையார் கண்டவையே. ஆயின் மொழிகள் வரலாற்றிற்கு முந்திய பண்டைக் காலத்தன வாதலால், அவர்களின் ஆராய்ச்சிக்குட்பட்டதன்று. பொறிக் கருவிகள் எத்துணைச்சிறந்தனவாயினும் மாந்தன் கையாளாவிடின் இயங்கா. இயக்கிய பின்பும் இறுதிவரை மாந்தன் உடனிருத்தல் வேண்டும். துலையுங் கணிப்பானும் கெட்டிருப்பின் தவறான நிறையுங் கணக்குங் காட்டும். தவறான வழியைக் கையாளின் எவ்வினையும் வெற்றியாய் முடியாது.

கால்டுவெல் தமிழ் நாட்டின் இருண்ட காலத்தில் வந்ததனால், தமிழர் வெளி நாட்டினின்று வந்த வந்தேறிகள் என்றும், திரவிட மொழி சித்தியத்திற்கு இனமென்றும், தவறாக முடிவு செய்துவிட்டார். இந்தைரோப்பிய மொழிகளின் அடிப்படை தமிழே. அவற்றின் கொடு முடியே சமற்கிருதம். ஆகவே, ஐரோப்பிய மொழியமைப்பின் அல்லது வரலாற்றின் திறவுகோல் தமிழிலேயே ஆழப்புதைந்து கிடக்கின்றது. இதைக் கண்டுபிடிக்கும்வரை மேலையர் மொழியாராய்ச்சி யெல்லாம் விழலுக்கு நீரிறைத்தலும் வானத்து மீனுக்கு வன்றூண்டிலிடுதலுமேயாகும்.

தமிழரின் முன்னோர் மாந்தன் பிறந்தகமாகிய குமரி நாட்டில் தோன்றியவர். தமிழ் வடக்கே சென்று திரவிடமாய்த் திரிந்தது. திரவிடம் வடமேற்கிற் சென்று ஆரியமாக மாறிற்று. அவ்வாரியம் ஐரோப்பாவின் வடமேற் கோடியை முட்டித் தென்கிழக்காகத் திரும்பி இந்தியா என்னும் நாவலந்தேயம் வந்து சேர்ந்தது.

ஆதலால், அடிப்படைத் தமிழ்ச் சொற்கள் திநூத்தானியத்தில் தமிழுக்கு நெருங்கியும், இலத்தீனில் சற்றுத் திரிந்தும், கிரேக்கத்தில் அதனினும் மிகத் திரிந்தும், வேதமொழியிலும் சமற்கிருதத்திலும் மிகமிகத் திரிந்தும் உள்ளன.

எ-டு.

| தமிழ் | ஆங்கிலம் | இலத்தீன கிரேக்கம் | வேதமொழி/ சமற்கிருதம் |
|---|---|---|---|
| அகரம் (மருத நிலம், மருதநிலத்தூர்) | Os. ax, akkar | L. ager (field) aj (to drive) | GK. agros, ajras |
| உகை–அகை (செலுத்து) | E.acker | G.ago | |
| கும் (கூடு) | com, co,con. col, cor. | com cum | sum |
| மன் | man | - | manu |
| முழுகு | | L.mergo | majj |
| வலி (வலம்) | – | L. Valeo | bala, |

வல்லின மெய்யெழுத்துக்களுள், எடுப்பிலா (voice less) வொலிகளே எடுப்பொலிகளினும் முந்தியவை. தமிழில் தனி அல்லது இயற்கை யெடுப்பொலிகள் இல்லை. மெல்லின மெய்யொடு கூடிய செயற்கை யெடுப்பொலிகளே உள. தமிழ் எடுப்பிலா வொலிகள் திரவிடத்திலேயே எடுப்பொலிகளாகத் திரிந்து விடுகின்றன.

எ–டு.

| தமிழ் | தெலுங்கு |
|---|---|
| குடி (வீடு கோயில்) | guḍi |
| கும்பு (கூடு) | gumpu |

ஆதலால், ஆரியத் திரிபைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. காண் என்பதன் திரி சொற்கள், இலத்தீன கிரேக்கத்தில் இருத்தல், முன்னவற்றினும் பின்னவை தமிழுக்கு நெருக்கமாயிருத்தலை உணர்த்துதல் காண்க.

கால்டுவெலார், தொல்காப்பியமும் பத்துப்பாட்டு எட்டுத் தொகைகளும் தமிழர்க்கும் தெரியாது மறைந்து கிடந்த காலத்தில், வழி காட்டியுமின்றித் தன்னந்

தனிமையாய் ஆராய்ந்த போதும், தமிழின் தொன்மை முன்மைகளையும் மூலத் தன்மையையும் உணர்ந்து, தம் திரவிட ஒப்பியலிலக்கண நூலின் இறுதியில், சொல்லியல் உறவுகள் (Glossarical Affinities) என்னும் பகுதியில், கீழ் வருமாறு வரைந்துள்ளார்.

"kan, the eye; kan (in the preterite kandu), to see; also secondarily, to mark, to consider, to think. In the latter sense it comes kannu in Tamil, but the base remains unchanged. In (kanu, kannu) Telugu, the ordinary n, the nasal of the dental row, is used instead of n, the cerebral nasal. Comp. the Welsh ceniaw, to see; English ken, view, power of reach of vision, to ken, to know by sight. In Webster's 'English-Dictionary' kanna was said to be 'an eye' in Sanskrit; whereas it is exclusively a Dravidian word. This error may be compared with Klaproth's representing kuruta, blind, as a Sanskrit word, istead of referring it to the DRavidian languages, to which alone it belongs. There is a curious word in Sanskrit kana, one-eyed which seems to have some Dravidian relationship. It becomes in Bengali kana, blind which, in form at least, is identical with the Dravidian negaive kana, that sees not. Possibly the Dravidian kan, to see, kannu, to consider, may have some ulterior connection with the Gothic kunna-an, to know; Greek gno-nai; Sans. na; Latin gna (gnarus); Old High German chann. The different shades of meaning which are attributed to Greek to gno-nai and eide-nai; seem to corroborate this supposition; for the latter is represented as meaning to know by reflection, to know absolutely, whereas the former means to perceive, to mark, and may therefore have an ulterior connection with the Dravidian root".

-- Caldwell's Dravidian Comparative Grammar, University Edition, p.591.

காணம் அல்லது காட்சியென்றும் மூலச்சொல் சிறவாது, ஞானம் என்னும் அதன் திரிசொல்லே சிறந்து உண்மையான ஒளிக்கல்லினும் போலிக்கல்லே பொலிந்து தோன்றுவது போலும்; எனினும், சமற்கிருத்திற்கு ஞானத்தைத் தந்தது தமிழே என்னும் புகழ் நிலைத்து நிற்கும் (செல்வி. 78 சனவரி 251).

**காண்**[4] *kāṇ,* இடை.(int.) முன்னிலையில் வரும் ஓர் உரையசை; expletive of the 2nd pers, meaning behold. *"துவ்வாய் காண்" (குறள், 1294).*

*[காண்–[1] → காண்–[4].]*

**காண்கம்** *kāṇgam,* வி.மு.(v.fin.) காண்போம்; let us see *"வானுயர் நெடுமணலேறி யானாது காண்கம் வம்மோ" (ஐங்குறு.199).*

*[காண் → காண்கம்.]*

**காண்கை** *kāṇgai,* பெ.(n.) 1.அறிவு; knowledge. *"பொய்யா.. காண்கையர்" (முல்லைப். 56).* 2. காணுதல்; seeing. *"அவர்க்குத் தோன்றியது பொய்யாகக் காண்கையிலே தோன்றாத" (ஒழிவி. யோகக்.1).*

க. காண்கெ, காணிகெ.

*[காண் → காண்கை.]*

**காண்கொடு–த்தல்** *kāṇ-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) பார்க்கும்படிச் செய்தல்; to enable to see. *"கனவினுட் காண்கொடாக் கண்ணும்" (புறத்திரட்டு, 1524).*

*[காண் + கொடு.]*

**காண்டகம்**[1] *kāṇḍagam,* பெ.(n.) 1. காடு (பிங்.); jungle, desert, woods. 2.நோய் (மூ.அ.); sickness, malady, disease. 3.நிலவேம்பு; ground neem. 4. கல்யானைக் கொம்பு; the tusk of reinoceros. 5. நீர்; water. 6. சீந்தில்; moon-creeper (சா. அக.).

*[காள் → காண் → காண்டு → காண்டம். → காண்டகம். காள் = கருமை, இருள், இருண்டகாடு, துன்பம், நோய்.]*

**காண்டகாகம்** *kāṇḍakāgam,* பெ.(n.) பாகல்; spiked bitter cucumber (சா.அக).

*[கண்டு = முள். கண்டு → கண்டகம் → காண்டகம் + ஆகம்.]*

**கண்டகிகம்** *kāṇḍakigam,* பெ.(n.) நந்தியா வட்டம்; Indian rose bay (சா.அக.).

*[கண்டு (திரட்சி, வட்டம்) → கண்டகி → காண்டகிகம் + (கொ.வ).]*

**காண்டகுண்டம்** *kāṇḍakuṇḍam,* பெ.(n.) ஒருவகைக் கோரைப் புல்; a variety of sedge grass (சா.அக.).

*[கண்டு = முள். கண்டு → கண்டகம் → காண்டகம் + உண்டம்.]*

**காண்டகை** *kāṇḍagai,* பெ.(n.) காட்டுக்கருணை; a species of forest elephant yam (சா.அக.).

*[கண்டு → காண்டு → காண்டகை.]*

**காண்டஞ் சூலி** *kāṇḍañjūli,* பெ.(n.) கரிச்சுள்ளி; Indian purple nail dye (சா.அக.).

*[காண்டம் + சூலி.]*

**காண்டம்**[1] *kāṇḍam,* பெ.(n.) 1. காடு (திவா.); jungle, desert, wilderness. 2.மலை (பிங்.); mountain, hill. 3.மலை வேம்பு; hill margose. 4. நிலவேம்பு; ground neegn. 5.சீந்தில்; moon-creeper. 6.வஞ்சிமரம்; South Indian willow.

*[காள் → காண் → காண்டு → காண்டம். காள் = கருமை, இருள். இருளடர்ந்த காடு, காடடர்ந்தமலை.]*

**காண்டம்**[2] *kāṇḍam,* பெ.(n.) 1. நீர்; water, sacred water. *"திருத்திவா யதுக்கிய குங்குமக் காண்டமும்" (கல்லா. 49:16).* 2. கோல் (சூடா.); staff, rod. 3. அடித் தண்டு (யாழ்.அக); stem, stalk. 4.அம்பு (சூடா.); arrow. 5. படைக்கலன் (சூடா.); weapon. 6. நூலுட் பெரும்பிரிவு(பிங்.); a large section of a book. 7. முடிவு (சூடா); end, limit. 8. சமயம்; opportunity, season. 9.திரள் (அக.நி.); collection, multitude, assemblage.

*[கண்டம் → காண்டம் → கண்டம் = வெட்டப்பட்ட சிறுதுண்டு,துணி, சிறுபகுதி.]*

கண்டம் என்னும் சொல்லை *khaṇḍa*என்றும் காண்டம் என்னும் சொல்லை *kāṇḍa* என்றும் முதலெழுத்தை வேறுபடுத்தி வடமொழியாளர் மயக்கியிருக்கின்றனர்(வ. வ. 114.)

**காண்டம்**[3] *kāṇḍam,* பெ.(n.) 1.அணிகலச்செப்பு; jewel-box, 2. கமண்டலம்; ewer.

*[கண்டம் → காண்டம். கண்டம் = பகுதி, துண்டு,சிறியது.]*

**காண்டம்**[4] *kāṇḍam,* பெ.(n.) 1.திரைச்சீலை (பிங்.); curtain. 2.ஆடை (சூடா.); cloth, garment.

*[கண்டம் → காண்டம். கண்டம் = வெட்டப்பட்ட பகுதி. கள் = வெட்டு, நீக்கு. கள் → கண்டு → கண்டம்.]*

**காண்டம்**[5] *kāṇḍam,* பெ.(n.) அறிவு (புத்தி) (அக.நி); mind, intellect.

*[காண் → காண்டம்.]*

**காண்டம்**[6] *kāṇḍam,* பெ.(n.) நீர்க்காக்கை; water crow.

*[காருண்டம்→காண்டம்.]*

**காண்டம்**[7] *kāṇḍam,* பெ.(n.) முகமன் (த.சொ. அக.); flattery, greetings.

*[காண்கு →காண்டு→காண்டம்.]*

**காண்டம்பலா** *kāṇḍam-palā,* பெ.(n.) காட்டுப் பலா; wild-jack fruit (சா.அக).

*[கண்டு → கண்டம்→ காண்டம் + பலா.]*

**காண்டம்பனை** *kāṇḍa-mpaṇai,* பெ.(n.) மலைக் கமுகு; hill areca-nut palm of Travancore (சா.அக).

*[காண்டம் + பனை.]*

**காண்டமந்திரம்** *kāṇḍa-mandiram,* பெ.(n.) நளனுக்குத் தெரிந்திருந்ததாகக் கூறப்படுவதும், குதிரையை விரைவாக வானில் ஓடச்செய்வதுமான மந்திரம்; the art of making horse run faster with

the aid of mantrams. It is said that Nala an expert in the art and was aware of this Mantram.

*[காண்டம் (விரைவு, முடுக்கம்) + மந்திரம்.](சீவக.793. உரை)*

**காண்டமோசனம்** *kāṇḍa-mōšaṉam,* பெ.(n.) திருமறையின் ஒவ்வொரு காண்டத்தையும் பாடிமுடிக்குங்காற் செய்யும் செயல்கள் (திருவானைக். கோச்செங்.14.); ceremony performed at the close of the study of a *kāṇḍa* of a Vēda.

*[காண்டம் + மோசனம்.]*

**காண்டல்** *kāṇḍal,* பெ.(n.) ***காண்டலளவை*** பார்க்க; see *kāṇḍal-aḷavai. "காண்டல் கருத–லுவம மாகமம்"(மணிமே.27:9.).*

*[காண் →காண்டல்.]*

**காண்டலளவை** *kāṇḍal-aḷavai,* பெ.(n.) கண்ணால் பார்த்தல், கண்கூடாகப் பார்த்தல்; perception; means of perception. *"காண்டவனை நோக்குபு சுகத்திறைவன்" (சேதுபு. கத்துரு.77).*

*[காண்டல் + அளவை.]*

**காண்டவதகனன்** *kāṇḍava-dagaṉaṉ,* பெ.(n.) பாண்டவரில் நடுப்பிறந்த அருச்சுனன்; Arjuna, who burnt down the kāṇḍava forest.

*[காண்டவம் + தகனன்.]*

**காண்டவம்** *kāṇḍavam,* பெ.(n.) தேவர் தலைவனுக்கு விருப்பமானதும் அருச்சுனனால் நெருப்பூட்டப்பட்டதுமான ஒரு காடு; a forest, sacred to Indra and burnt by Arjuna as an offering to Agni (சா.அக.). *"காண்டவத்தைக் கனலெரிவாய் பெய்வித்தானை" (திவ்.பெரியதி.2–5–2).*

*[கண்டு → காண்டு (பகுதி) → காண்டவம்.]*

**காண்டவம்**[2] *kāṇḍavam,* பெ.(n.) நிலவேம்பு; ground neem (சா.அக.).

*[கண்டு → காண்டு → காண்டவம்.]*

**காண்டாதிநெய்** *kāṇḍādi-ney,* பெ.(n.) நிலவேம்பு முதலியவற்றால் ஆன நெய்வடிவாயுள்ள ஒரு கூட்டு மருந்து (வின்); medicinal preparation of chiretta, etc with ghee as vehicle.

*[காண்டாதி + நெய்.]*

**காண்டாமிருகம்** *kāṇḍā-mirugam,* பெ.(n.) கல்யானை; rhinoceros.

**மறுவ.** கால்யானை

**ம.** காண்டாமிர்கம்

*[காண்டு → காண்டம் + மிருகம்.]*

**காண்டாமிருகரத்தம்** *kāṇḍā-miruga-rattam,* பெ.(n.) 1. வேங்கைமரம்; Indian kino tree. 2. பெருமரவகை; (L.); dragon's-blood tree. 3. பிரம்பு வகை.(L.); dragon's blood cane. 4. பிசின் வகை. (வின்.);resin from these trees.

*[காண்டா மிருகம் + அரத்தம். ஒரு மரத்தின் பிசினில் செய்த அரக்கு.]*

**காண்டாவனம்** *kāṇḍā-vaṉam,* பெ.(n.) ***காண்டவம்***[1] பார்க்க; see *kāṇḍavam*[1]. *"காண்டா வன மென்பதோர் காடு"(திவ். பெரியதி.2.4:2).*

*[காண்டவம் → காண்டாவனம்.]*

**காண்டாவனன்** *kāṇḍā-vaṉaṉ,* பெ.(n.) இந்திரன்; Indra the lord of *Kāṇḍava.*

*[காண்டாவனம் → காண்டாவனன்]*

**காண்டிகை** *kāṇḍigai,* பெ.(n.) நூற்பாப் பொருளைச் சுருக்கமாக விளக்கும் உரைவகை; brief exposition of the salient points in a text. *"சூத்திரம் புரைதப*

வுடன்படக் காண்டிகை புணர்ப்பினும்" (தொல். பொருள்.மரபு.102).

[கண்டு - தொகுப்பு, பிரிவு. கண்டு → கண்டி கண்டிகை → காண்டிகை.]

**காண்டியகாலம்** *kāṇḍiya-kālam,* பெ.(n.) முதுவேனிற்காலம்; mid summer (சா.அக.).

[காண்டியம் (வெப்பம்) → காலம்.]

**காண்டியம்** *kāṇḍiyam,* பெ.(n.)வெக்கை; intensity of heat; heat as felt in the hot season.

[காள் → காண்டு → காண்டியம்.]

**காண்டிர்** *kāṇḍir,* பெ.(n.) முன்னிலைப் பன்மையசை; "வேளைத் தரு வள் காண்டிர்" (கந்தபு. காமதகன.13).

[காண் → காண்டி → காண்டிர்.]

**காண்டில்** *kāṇḍil,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு; a kind of prepared arsenic (சா.அக).

[காள்→ காண்டு (வெப்பம்) → காண்டில்.]

**காண்டிவம்** *kāṇḍivam,* பெ.(n.) **காண்டீவம்** பார்க்க; see *kāṇḍīvam.* "காண்டிவங் கரத்தேந்தி" (பாரத.காண்டவ.8.).

[காண்டீவம் → காண்டிவம்.]

**காண்டீபன்** *kāṇḍīban* பெ.(n.) காண்டீவன் பார்க்க; see *kāṇḍīvan.*

[காண்டீவம் → காண்டீபன்.]

**காண்டீரம்** *kāṇḍīram,* பெ.(n.) யானைத்திப்பிலி; a big variety of *tippali* (சா.அக).

[கண்டு → கண்டீரம்→ காண்டீரம்.]

**காண்டீவம்** *kāṇḍīvam,* பெ.(n.) அருச்சுனன்வில்; Arjuna's bow. 2.சிலையோரை (தனு ராசி) (வின்.); sagittatius, a constellation of the zodiac.

மறுவ. காண்டிவம், காண்டிபம், காண்டீபம்

[கா → காண்டு → காண்டீவம்.]

**காண்டீவன்** *kāṇḍīvan* பெ.(n.) காண்டீவம் என்னும் வில்லையுடைய அருச்சுனன் (பிங்.); Arjuna, as armed with *kāṇḍīvam.*

மறுவ. காண்டிபன்

[கா → காண்டு → கண்டீவன்.]

**காண்டு**[1] *kāṇḍu,* பெ.(n.) கூப்பிடு தொலைவு (வின்); earshot; hearing distance.

[காண்→ காண்டு.]

**காண்டு**[2] *kāṇḍu,* பெ.(n.) 1. சினம்; anger. 2.துன்பம்; difficulty. உனக்கு அதைச் செய்ய என்ன காண்டு? (உ.வ.)

க. காண்டு; தெ. காடு (gadu)

[காள் + காண்டு.]

**காண்டுமதம்** *kāṇḍu-madam,* பெ.(n.) துன்பம் (யாழ்.அக.); suffering, pain.

[காள் → காண்டு + மதம்.]

**காண்டை**[1] *kāṇḍai,* பெ.(n.) 1. கற்குகை, கம்பாழி (சூடா.); cave, cavern. 2.தவம் செய்வோர் இருப்பிடம் (பிங்.); dwelling of a sage, hermitage.

[காள் →காண்டை.]

**காண்டை**[2] *kāṇḍai,* பெ.(n.) காண் என்னும் ஓர் ஏவல்வினை; imperative. "முயங்கு முறைநாள் கழிதலுறாமைக் காண்டை" (கலித்.12).

[காண் →காண்டை.]

காண் என்பது காண்டையெனத் திரிந்தது என்பர் நச்சினார்க்கினியர்.

**காண்டைப்பாய்** *kāṇḍaippāy,* பெ.(n.) பார்ப்பாய்; seeing second person. "தகையது காண்டைப்பாய் நெஞ்சே" (கலித்.87).

[காண் → காண்டை + பாய்.]

**காண்பவன்** *kāṇbavaṉ,* பெ.(n.) அறிபவன்; one who knows. *"காண்பவன் முதலிய திறமும்" (கந்தபு.கடவுள்வா.6).*

*[காண் → காண்பவன்.]*

**காண்பி-த்தல்** *kāṇbi,* 1 பி.வி.(v.caus.) 1. காட்டுதல்; to show, exhibit, display. 2. மெய்ப்பித்தல், சரியென்று காட்டுதல்; to prove, demonstrate.

*[காண் + பி .-(பி.வி.ஈறு)]*

**காண்பு** *kāṇpu,* பெ.(n.) காட்சி; seeing, sight. *"கார்ப்பெய றலைஇய காண்பின் காலை" (புறநா.119:1).*

*[காண் → காண்பு]*

**காண்பொங்கல்** *kāṇ-poṅgal,* பெ.(n.) ***காணும் பொங்கல்*** பார்க்க; see *kāṇum-poṅgal.*

**மறுவ.** காணும்பொங்கல், கருநாள்.

*[காண் + பொங்கல்.]*

**காண்போர் மாடம்** *kāṇbōrmāḍam,* பெ.(n.) பொதுமக்கள் வசதியாக இருந்து நல்ல காட்சிகளைப் பார்க்க ஒதுக்கப்பட்ட இடம்; viewers gallery.

*[காண்போர் + மாடம்.]*

**காண்வரி** *kāṇ-vari,* பெ.(n.) பிறர் காணும்படி அடிக்கடி வந்து நடிக்குங் கூத்து; dances performed at frequent and repeated intervals by expert dancers on the stage. *"கருநெடுங் கண்ணி காண்வரிக் கோலமும்" (சிலப். 8:83).*

*[காண் + வரி.]*

**காண்வா-தல் (காண்வருதல்)** *kāṇ-vā-,* 18 செ.கு.வி. (v.i.)காட்சிவருதல்; to come into view; to be sighted. *"காண்வர வியன்றவிக் கவின்பெறு பனித்துறை" (கலித்.127:14).*

*[காண் + வா.]*

**காணடி-த்தல்** *kāṇ-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) காணாமல் செய்தல், போக்கடித்தல் (இ.வ.); to lose.

*[காணா + அடி.]*

**காணநாழி** *kāṇa-nāḻi,* பெ.(n.) ஒரு பெய்தல் அளவு; a measure of capacity. *"காண நாழியால் நிசதி அட்டக்கடவ நெய் இருநாழி" (SII.XIV.10-19 pg.6).*

*[கணம் → காணம் + நாழி.]*

**காணப்பத்தியம்**[1] *kāṇa-p-pattiyam,* பெ.(n.) கொள்ளுக்கஞ்சி பத்தியம்; regimen in which horse-gram conjee is prescribed as a diet for paetients (சா.அக.).

*[காணம் + பத்தியம்.]*

**காணபத்தியம்**[2] *kāṇa-pattiyam,* பெ.(n.) பிள்ளையாரை முதற்கடவுளாக வழிபடுஞ்சமயம்; the religion of the *Gaṇapati* adoing him as the Supreme Being.

**மறுவ.** காணாபத்தியம்

*[கணம் (கூட்டம்) + பதி = கணபதி→காணபத்தியம்.]*

**காணம்**[1] *kāṇam,* பெ.(n.) வளைந்த காயிலுள்ள கொட்பயிறு; horsegram. *"ஆரமாடங் காணம் வெந்தநீர் படிபடி பெய்" (தைலவ.தைல.72).* 2. பழைய நிறுத்தலளவையுள் ஒன்று (கல்.); an ancient weight. 3. பொன் (திவா.) ; gold. 4. தாண 'மொத்த வடிவிலுள்ள பழைய பொற்காசு; an ancient gold coin. *"ஒன்பதுகாப் பொன்னும் நூறாயிரங் காணமுங் கொடுத்து" (பதிற்றுப். 60, பதி.).* 5. பொருள்; wealth, riches. *"மேற்காண மின்மையால்" (நாலடி, 372).* 6. பாகம்; share.

**ம.** காணம்

*[கோணம் →காணம்.]*

**காணம்**[2] *kāṇam,* பெ.(n.) 1. வட்டமான செக்கு(சூடா.); oil-press. *"காணக் கடையில் வருமெண்ணெயென" (தைலவ.கடவு.3.);* 2. ஒரு செக்களவுள்ள முகத்தலளவை (வின்.); a measure of capacity, as much as will fill an oil -press. 3. நிலம்; land. (தொல்.சொல். சேனா.20).

**ம.** காணம்; **க., து.** காண; **தெ.** கானக, கானகு, காறுக.

H. khāna; Guj. khāṇa; Beng. khāni; Sinh. khāṇi; Pkt. khāyaṇa; Skt. khātanam, khātani.

*[கோணம் →காணம்.]*

செக்குகள் பெரும்பாலும் மரத்தைச் செதுக்கிச் செய்யப்பட்டிருக்கும். கருங்கல்லால் ஆன செக்குகளும் உண்டு. மரத்தால் ஆனவை மரக்காணம் என்றும் கல்லால் ஆனது கல்காணம் என்றும் அழைக்கப்படும்.

**காணம்போடு-தல்** *kāṇam-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) 1. செக்காட்டி எண்ணெய் பிழிதல்; to extract oil by an oil-press, as from coconuts, etc. காணம் போடுவதற்காகக் கடலை உடைக்கிறார்கள் (உ.வ.). 2. குழந்தைகளைப்போல் அடிக்கடி ஏதேனும் தின்று கொண்டேயிருத்தல் (இ.வ.); to eat frequently, as children.

*[காணம்² + போடு.]*

**காணல்** *kāṇal,* பெ.(n.) 1. காண்கை; beholding. *"காணலுறுகின்றேன்" (திவ். இயற். 4:41.).* 2. மனத்தால் குறிக்கை (சூடா.); seeing with the mind's eye, thinking, considering. 3. வணங்குகை (உரி.); reverencing, worshipping. 4. தோற்றம்; appearance. 5. பெரியோரை நேர்காணல்; visiting people.

*[காண் → காணல்]*

**காணலன்** *kāṇalan,* பெ.(n.) பகைவன்; enemy, as one whose sight is unbearable. *"காணலற் செற்ற காளை" (பாரத. வேத்.20).*

*[காண் + அல் + அன்.]*

**காணலிங்கம்** *kāṇa-liṅgam,* பெ.(n.) சிவனின் ஏவலர்களாகிய கணங்களால் உருவாக்கப்பட்ட சிவலிங்கம் (சைவவி.203); Siva-lingam established by the celestial hosts of šiva.

*[கணம் → காணம்+ லிங்கம். கணம் – சிவகணங்கள்.]*

**காணவட்டம்** *kāṇa-vaṭṭam,* பெ.(n.) ஊர் அலுவலர்க்கும், பணியாளர்க்கும் நாள்தோறும் எண்ணெய் ஆட்டும் செக்கார் கொடுக்கும் எண்ணெய் வரி (W.G.); a small quantity of oil given daily, as a perquisite by the oil - mongers to the villaged officers and servants.

*[காணம் + வட்டம்.]*

**காணன்** *kāṇaṉ,* பெ.(n.) ஒருகண் குருடன், ஒற்றைக்கண்ணன்; one-eyed man. *"கஞ்சன், குணிகூனன், காணனிரு கண்ணுமில்லான்" (சைவச.ஆசாரி.10).*

ம. காணன்; Skt. kāṇa.

*[காண் + அல் + அன்–காணலன்→ காணன்.]*

**காணா** *kāṇā,* பெ.(n.) சிறுபாம்பு; small reptile of the snake species.

*[குள் → குண் → குண்ணு→குண்ணா→ காணா.]*

**காணாக்கடி** *kāṇa-k-kaḍi,* பெ.(n.) 1. இன்னது கடித்தது என்று அறிய முடியாத நஞ்சுக்கடி; bite or sting of a reptile in the dark. 2. சிறுபாம்புக் கடி; bite of a reptile named kāṇā.

*[காண் + ஆ + கடி. 'ஆ' எதிர்மறை இடைநிலை.]*

**காணாக்கண்ணிடு-தல்** *kāṇā-k-kaṇṇiḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) பார்த்தாலும் பாராதது போல் இருத்தல்; to overlook, connive. *"இவன் செய்த குறையைத்தான் காணாக்கண்ணிட்டி ருக்கை யன்றிக்கே" (ஈடு. 6.10:10).*

*[காண் + ஆ + கண்ணிடு.]*

**காணாக்காட்சி** *kāṇā-k-kāṭci,* பெ.(n.) காண்பதற்குரிய அரிய காட்சி; a rare spectacle, a wonderful sight, exhibition, as not seen before.

*[காண் + ஆ + காட்சி.]*

**காணாக்கிரகணம்** *kāṇā-k-kiragaṇam,* பெ.(n.) கீழுலக ஒளிமறைப்பு (பாதாளக்கிரகணம்)(வின்.);

கண்ணால் காணமுடியாத ஒளிமறைப்பு; invisible eclipse.

*[காண் + ஆ + கிரகணம்.]*

**காணாக்கிரகம்** *kāṇā-k-kiragam,* பெ.(n.) ***காணாக்கோள்*** (வின்) பார்க்க ; see *kāṇa-k-kōḷ.*

*[காண் + ஆ + கிரகம்.]*

**காணாக்கோல்** *kāṇā-k-kōl,* பெ.(n.) திடீரென வந்து தைக்கும் அம்பு; arrow shot unseen. *"காணாக்கோலாகவந்து தைக்கிறபடி" (திவ்.இயற். திருவிருத்.75,வியா.).*

**ம.** காணாக்கோல்

*[காண் + ஆ + கோல்]*

**காணாக்கோள்** *kāṇā-k-kōḷ,* பெ.(n.) மறைவாக உள்ள கோள்; phenomena of the heavens, sometimes visible and sometimes not, opp. to *kāṇuṅ-kōḷ.*

**மறுவ.** காணாக்கிரகம்

*[காண் + ஆ + கோள். **கரந்துறைகோள்** பார்க்க]*

**காணாத்தலம்** *kāṇā-t-talam,* பெ.(n.) ஆண்பெண் குறிப்பொது(வின்); private parts, genitals, as kept concealed from view.

*[காண் + ஆ + தலம்]*

**காணாதகண்** *kāṇāda-kaṇ,* பெ.(n.) அறிவுக்கண் (ஞானக்கண்); mind's eye. *"காணாத கண்ணுடன்" (திருமந் :1610).*

*[காண் + ஆ + கண் – காணாதகண். ஆ–எ.இ.நி.]*

**காணார்** *kāṇār,* பெ.(n.) 1. குருடர்; blind men. *"காணார் கேளார் கான்முடப் பட்டோர்" (மணிமே.13:111.).* 2. பகைவர்; enemies.

*[காண் + ஆ + அர்.]*

**காணாவுயிர்** *kāṇā-v-uyir,* பெ.(n.) கண்ணால் தெளிவாகக் காண்பதற்கரிய நுண்ணிய உடம் புள்ள உயிரி; an insect too small to be seen. *"காணாவுயிர்க்குங் கையற் றேங்கி" (மணிமே.3: 89).*

*[காண் + ஆ + உயிர்.]*

**காணி[1]–த்தல்** *kāṇi-,* 4 செ.குன்றாவி.(v.t.) காட்டுதல் (நாஞ்); to show.

**ம.** காணிக்கு; **க.** காணிசு; **தெ.** கனுபின்சு.

*[காண் → காணி]*

**காணி[2]** *kāṇi,* பெ.(n.) 1. காணியாட்சி (வின்.); landed property, estate, possession. 2.கொடிவழியுரிமை; right of possess, hereditary rights. *"மனுமுறைக் காணி வேந்தரைக் கொல்லக் கருதினாய்" (சேதுபு. இராமதீ.48).*

**ம., க., தெ., து.** காணி.

*[காண் → காணி]*

**காணி[3]** *kāṇi,* பெ.(n.) 1. நில அளவில் ஒரு வேலியில் ஐந்தில் ஒரு பகுதி; 400 குழிப்பரப்பு;an area of 400 kuzhi; one fifth of a veli in land measure. 2. நகரப் பரப்பில் ஒரு குடும்பில் 320இல் ஒரு பங்கு; 4 குழி; 2 பெருங்கோல் சதுரம் (22 x 22 அடி); ***குடும்பு*** பார்க்க; see *kuḍumbu* . 3.நிலம்; land. *"ஊரிலேன் காணியில்லை" (திவ்.திருமாலை.29).*

ஒரு பெருங்கோல் (11 அடி) சதுரம் ஒரு குழி ஆகும். 100 குழி = ஒரு மா; 400 குழி = 1 காணி. 2000 குழி = ஒரு வேலி. காணி என்பது 20 பெருங்கோல் சதுரம் (220 அடி X 220 அடி).

*[காண் → காணி]*

**காணி[4]** *kāṇi,* பெ.(n.) 1/80 மதிப்புடைய கீழ்வாய் இலக்க எண்; a fraction of value 1/80. *"முந்திரி மேல் காணி மிகுவதேல்" (நாலடி.346).*

பழந்தமிழரின் பின்ன முறை கணக்குகளை எளிதில் செய்யும் வண்ணம் அமைந்தவை. ஒரு முழு எண்ணை 320 பகுதியாகப் பகிர்ந்து, அதில் ஒரு பகுதி முந்திரி எனப்படும். முந்திரியை மேலும் 320 கூறிட்டால் அதில் ஒரு கூறு கீழ்

முந்திரி எனப்படும். கீழ் முந்திரியை மேலும் 320 கூறிட்டால் அதில் ஒரு கூறு கீழ்க்கீழ் முந்திரி ஆகும்.

| | | |
|---|---|---|
| முந்திரி | = | 1/320 |
| கீழ் முந்திரி | = | 1/320 X 1/320 |
| கீழ் கீழ் முந்திரி | = | 1/320 X 1/320X 1/320 |
| முந்திரி | = | 1/320 |
| காணி | = | 1/80 |
| மா | = | 1/20 |
| மாகாணி | = | 1/20+1/80 = 1/16 = வீசம் |
| அரை | = | 1/2 கால் = 1/4; பாழ் = 0 |

**காணி**[5] *kāṇi,* பெ.(n.) பொன்னாங்காணி (தைலவ. தைல.); a plant growing in damp places.

*[பொன்னாங்காணி → காணி]*

**காணிக்கடன்** *kāṇi-k-kaḍaṉ,* பெ.(n.) நிலவரி; land tax. *"இவ்வூர் இறை கட்டின காணிக்கடன்" (S.I.I.III,35).*

**ம.** காணிக்கடன்

*[காணி + கடன்]*

**காணிக்கல்** *kāṇi-k-kal,* பெ.(n.) எல்லைக்கல்; boundary stone. *"காணிக்கல்லின் கீழே இரண்டு செப்புத்தவலை அகப்பட்டது" (மதி.கள 1:177).*

*[காணி + கல்]*

**காணிக்காரன்** *kāṇi-k-kāraṉ,* பெ.(n.) 1. சிற்றூர்ப் பங்காளி (இ.வ.); hereditary proprietor of land, coparcener in village lands held in common. 2. தென்பாண்டி நாட்டிலுள்ள மலைவாழ் மக்களின் ஓரினம் (G.Tn.D.7.); a hill tribe in Tirunelveli district and Thiruvidhangur; one belonging to that tribe.

**ம.** காணிக்காரன்; **க.** காணிகாற.

*[காணி + காரன்.]*

**காணிக்கை**[1] *kāṇikkai,* பெ.(n.) தெய்வத்திற்கும் திருவடியார்க்கும் படைக்கும் அன்பளிப்புப் பொருள்; voluntary offering, commonly in money, gold, fruits; gifts to a temple or church or greatmen; present to a guru or other great person. *"வேதாள நாதன் மகிழுங் காணிக்கை யாகி" (சேதுபு. வேதாள. 34).*

**ம.**காணிக்க; **க.,து.**காணிகெ; **தெ.**காநுக.

*[காணி → காணிக்கை]*

**காணிக்கை**[2] *kāṇikkai,* பெ.(n.) கடன்; debt, loan. *"காணிக்கையானேன் ... மாலையை வைத்து நான் காணிக்கை தீர்ந்த மறு மாதம்" (விறலிவிடு.296).*

*[காணி → காணிக்கை]*

**காணிக்கைச்சாசனம்** *kāṇikkai-c-cāśaṉam,* பெ.(n.) ***காணிக்கை முறி*** பார்க்க; see *kāṇikkai-muṟi. "இம்முடிக் காணிக்கைச் சாசனந் தந்தனனே"* (பெருந்தொ.1338).

*[காணிக்கை + சாசனம்]*

**காணிக்கைத்தட்டு** *kāṇikkai-t-taṭṭu,* பெ.(n.) காணிக்கை வாங்கு தட்டு; salvar for receiving gifts.

*[காணிக்கை + தட்டு]*

**காணிக்கைமுறி** *kāṇikkai-muṟi,* பெ.(n.) உரிமை முறி; document conferring a right to properties.

மறுவ. காணிக்கைச் சாசனம்

*[காணிக்கை[1] + முறி]*

**காணிக்கோல்** *kāṇi-k-kōl,* பெ.(n.) 11' 0" பண்டைய நிலம் அளக்கும் கோல்; an ancient linear measure to measure lands.

| | | |
|---|---|---|
| 6 விரல் | = | 1 சாண் (8 1/4 அங்குலம்) |
| 2 சாண் | = | 1 முழம் (16 1/2 அங்குலம்) |
| 2 முழம் | = | 1 கோல் (சிறுகோல்) (2' 9") |
| 4 கோல் | = | 1 காணிக்கோல் (11'–0") |

*[காணி + கோல்.]*

**காணிச்சாறு** *kāṇi-c-cāṟu,* பெ.(n.) 1. பொன்னாங் காணிச்சாறு; the juice of the leaves of the eclipse plant. (சா.அக.)

*[காணி² + சாறு]*

**காணித்தாய வழக்கு** *kāṇi-t-tāya-vaḻakku,* பெ.(n.) பங்காளிகளின் நிலவழக்கு (யாழ்ப்.); dispute between coparceners about heriditary land.

மறுவ. காணித்தாயம்

*[காணி + தாயம் + வழக்கு.]*

**காணித்துண்டு** *kāṇi-t-tuṇḍu,* பெ.(n.) நிலத்தின் சிறுபகுதி (வின்.); piece or strip of land.

*[காணி + துண்டு.]*

**காணிநிலம்**[1] *kāṇi-nilam,* பெ.(n.) உரிமைநிலம் (வின்.); land in full ownership.

மறுவ. காணிப்பூமி

*[காணி + நிலம்.]*

**காணிநிலம்**[2] *kāṇi-nilam,* பெ.(n.) ஒரு காணி நிலம்; land measuring one *kāṇi.* *"காணி நிலம் வேண்டும்" (பாரதி).*

மறுவ. காணிப்பூமி

*[காணி + நிலம்.]*

**காணிப்பற்று** *kāṇi-p-paṟṟu,* பெ.(n.) உரிமை ஊர்; village in full ownership. *"குருகுலராயன் காணிப்பற்று மணவிலிருக்கை" (கல்.).*

*[காணி + பற்று.]*

**காணிப் பிடிபாடு** *kāṇi-p-piḍipāḍu,* பெ.(n.) நில விளைவு ஓலை (பத்திரம்) (M.E.R.66 of 1916,p.123); deed of lease for cultivation.

*[காணி + பிடிபாடு.]*

**காணிப்பூமி** *kāṇi-p-pūmi,* பெ.(n.) ***காணிநிலம்*** பார்க்க; see *kāṇi-nilam.*

*[காணி + பூமி.]*

**காணிப்பேறு** *kāṇi-p-pēṟu,* பெ.(n.) நிலச் சொத்து படைத்திருப்பதால் உண்டாகும் பெருமை(W.G.); the dignity of a land-holder, a term used in conveyances of mirasi rights.

*[காணி + பேறு.]*

**காணிமாறு-தல்** *kāṇi-māṟu-,* 5 செ.கு.வி.(v.i.) உரிமைநிலத்தை இழக்கச் செய்தல்; to disposses a person of his land. *'கருப்பூரில் துரோகம் செய்தாரைக் காணிமாறின நிலமும்' (S.I.I.V, 708-5, 298).*

*[காணி + மாறு.]*

**காணிமானியம்** *kāṇi-māṉiyam,* பெ.(n.) 1. குடிவழி மானியம் (சர்வமானியம்) ; hereditary land exempt from all taxes. 2. ஊர்ப் பங்காளிகளுக்குப் பொதுவான மானியம்; inam land enjoyed in common by the whole community of mirasdars in a village.

*[காணி + மானியம்.]*

**காணிமேரை** *kāṇi-mērai,* பெ.(n.) நில உடைமை யாளர், விளைவைப் பொறுத்து அதிகப்படியாகப் பெற்றுக் கொள்ளும் விளைவின் பகுதி (W.G.); a portion of the produce claimed extra by mirasdars as their customary perquisite.

*[காணி + மேரை.]*

**காணியாட்சி** *kāṇi-y-āṭci,* பெ.(n.) உரிமை நிலம்; hereditary right to land, to offices, to fees, to an estate or to a kingdom; domain obtained by inheritance; that which is held as free and hereditary property; estate, one's own possession. *'மேலைத் தெருவில் ஒரு மடமும் காணியாட்சியும் கொடுத்த அளவுக்கு' (S.I.I.i, 124).*

மறுவ. காணாசி (கொ.ஆ.)

**க., தெ.** காணயாசி.

*[காணி + ஆட்சி.]*

**காணியாட்சிமிராசு** *kāṇi-y-āṭci-mirāšu,* பெ(n.) ஊர்நிலவுரிமை (C.G.); proprietary right in village lands.

*[காணி + ஆட்சி + மிராசு]*

**காணியாட்சியூர்** *kāṇi-y-āṭci-y-ūr,* பெ. (n.) குடிவழியுரிமையுள்ள ஊர்; hereditary village.

*[காணி +ஆட்சி + ஊர்.]*

**காணியாண்மை** *kāṇi-y-āṇmai,* பெ.(n.) காணியாட்சி (புது.கல்வெட்டு.745); hereditary right to land etc.

*[காணி + ஆண்மை.]*

**காணியாளன்**[1] *kāṇi-y-āḷaṉ,* பெ.(n.) 1. காணி யாட்சியுள்ளவன்; proprietor of land. 2. உழவின் மேல் ஊக்கமுள்ள குடி (சிலப். 5:43,உரை); hard working agriculturist. 3. அந்தணரில் ஒருவகுப்பார் (G.Tj.D.78); a sub-division of Smartha Brahmans.4. வேளாளருள் ஒரு வகுப்பார் ( G.Tj.D.81); a sub-division of *Vēḷāḷas.*

**ம.** காணியாளன்; **க.** காணியால.

*[காணி + ஆளன்.]*

**காணியாளன்**[2] *kāṇi-y-āḷaṉ,* பெ.(n.) ஒருவகை மீன்; a kind of fish. *"வயலி னுதிக்குங் காணி யாளனும்" (பறாளை . பள்ளு.16).*

*[காணி + ஆளன்.]*

**காணிவெட்டி** *kāṇi-vetti,* பெ.(n.) வரிவகை; a kind of tax. இவ்வூர்ப் பிடாகை ஒபாதி இறை என்றும் நீர்விலை என்றும் தவணைக்காடி என்றும் நெலெ இத்தன் என்றும் ஆயம் அந்தராயமென்றும் இறையிலிக்காசு என்றும், மாவிறையென்றும் உள்ச்சேவக மென்றும் காணிவெட்டி என்றும்" (S.I.I.V.1003-4 pg.383).

*[காணி + வெட்டி.]*

**காணீலம்** *kāṇilam,* பெ.(n.) கொடிவேலி; Ceylon leadwort (சா.அக.).

*[காள் + நீலம்.]*

**காணுகம்** *kāṇugam,* பெ.(n.) காகம்; crow (த.சொ.அக.).

*[காள் → கானகம் (கருப்பு) → காணுகம்.]*

**காணுங்கோள்** *kāṇuṅ-kōḷ,* பெ.(n.) கண்ணுக்குப் புலனாகும் கோள் (வின்.); visible planets, opp. to *kaṇā-k-kōḷ.*

*[காணும் + கோள்.]*

**காணும்**[1] *kāṇum,* இடை. (part.) முன்னிலைப் பன்மையில்வரும் ஓர் அசை; expl. in the 2nd pers. pl. in compounds.நீர்பேங்காணும் (தஞ்சை.).

*[காண் → காணும்]*

**காணும்**[2] *kāṇum,* வி.மு.(v.fin.) போதுமானது; sufficient. இந்த அரிசி இரண்டு மாதத்துக்குக் காணும் (உ.வ.).

*[காணுதல் - பார்வைக்கு ஒப்பாயிருத்தல், நிறைவளித்தல்.]*

**Chin.** kān; **Gothic.** kunnama.

**காணும்பொங்கல்** *kāṇum-poṅgal,* பெ.(n.) மாட்டுப் பொங்கலை அடுத்து ஒருவரை ஒருவர் கண்டு நலம் உசாவும் கொண்டாட்ட நாள்; the day of social visit, following the *māṭṭu-poṅgal.*

**மறுவ.** காண்பொங்கல்

*[காண்பொங்கல் → காணும்பொங்கல்.]*

**காணும்பொழுது** *kāṇum-poḻudu,* பெ.(n.) கதிரவன் தோற்றம்; sunrise. *"படுத்திருந்து காணும்பொழுதி லெழுந்து" (தெய்வச். விறலி.44.).*

*[காண் + உம் + பொழுது.]*

**காணுமோர்** *kāṉumōr,* பெ.(n.) காண்போர்; those who see. *"செலவு பெரிதினிது நிற்காணு மோர்க்கே"(பதிற்றுப். 83: 5).*

*[காண் → காணுமோர்]*

**காத்தட்டி** *kāttaṭṭi,* பெ.(n.) ஆதொண்டை (வின்.) என்னும் முட்செடி வகை; thorny creeper.

மறுவ. காற்றோட்டிக்கொடி, காத்தொட்டி; காத்தோட்டி

*[காற்றோட்டி → காத்தட்டி.]*

**காத்தடி** *kā-t-taḍi,* பெ.(n.) காவடித்தண்டு (வின்.); pole for carrying burdens.

*[கா + தடி.]*

**காத்தண்டு**[1] *kā-t-taṇḍu,* பெ.(n.) காவடியின் தண்டு (குறள்,1163,உரை); pole for carrying on the shoulder weights balanced at both ends.

மறுவ.சீர்

*[கா + தண்டு.]*

**காத்தண்டு**[2] *kā-t-taṇḍu,* பெ.(n.) 1. தோட்டத்தில் விளையும் தண்டாகிய கீரைத்தண்டு; a kind of garden green. 2.வாழைத்தண்டு; amaranthus blitum (சா.அக.).

*[கா + தண்டு.]*

**காத்தய்யன்** *kāttayaṉ,* பெ.(n.) ஓர் ஊர்த் தெய்வம்; a village deity. *"பாரிய காத்தய்யா" (பஞ்ச.திருமுக. 655).*

*[கா + அய்யன்.]*

**காத்தவராயன்** *kātta-varāyaṉ,* பெ.(n.) 1. ஊரில் காணப்படும் சிறு தெய்வங்களுள் ஒன்று; a village deity. 2. காவல் புரிபவன் (W.G.); watchman, guard.

*[காத்தான் +அரையன்.]*

**காத்தாயி** *kāttāyi,* பெ. (n.) சிற்றூரில் காணப்படும் சிறு பெண் தெய்வங்களுள் ஒன்று; a village goddess.

*[காத்தாள் →ஆயி.]*

**காத்தான்** *kāttāṉ,* பெ.(n.) ***காத்தவராயன்*** பார்க்க; see *kāttava-rāyaṉ.*

**காத்தானம்** *kāttāṉam,* பெ.(n.) மரப்பொந்து; the hollow of a tree (சா.அக).

*[கா→ தானம்.]*

**காத்தி** *kātti,* பெ.(n.) காவென்னும் அடியாற் பிறந்த ஓர் ஏவல் வினைமுற்று; imperative finite verb. *"நன்று காத்தி யென்றி ராமனு மெதிர் செல நடந்தான்" (இராமா. கரன்.148).*

*[கா → காத்தி.]*

**காத்திடல்** *kāttiḍal,* தொ.பெ.(vbl.n.) காத்தல்; to guard. *"ஒருசத்தி... காத்திடலால்" (கந்தபு. திருநகர.65).*

*[கா → காத்து + இடல்.]*

**காத்திரம்** *kāṉttiram,* பெ.(n.) சினம் (பிங்.) anger.

*[ஆத்திரம் → காத்திம்.]*

**காத்திரன்** *kāttiraṉ,* பெ.(n.) வலியோன் (யாழ்.அக.); strong man.

*[கா → காத்திரன்.]*

**காத்திரு-த்தல்** *kāttiru-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. எதிர்பார்த்திருத்தல்; to wait, expect, watch for, look for. 2. காவல்பூண்டிருத்தல்; to safeguard, as one's property. *"பொருள் காத் திருப்பனேல் அ ஆ இழந்தான்"(நாலடி, 9).*

து.காதொநுநி

*[கா + இரு.]*

**காத்தூட்டு-தல்** *kāttūṭṭu,* 5 செ.குன்றாவி. (v.t.) தன் கொள்கையை அடிக்கடி பயன்படுத்தி மகிழ் வூட்டுதல்; to make frequent use of one's dogma in such a way as to make it pleasant. *'அது நிலைநிற்கைக்காகவும் அத்தைக் காத்தூட்டு கைக்காகவும்' (திவ்.திருப்பா.29.வியா.).*

*[காத்து + ஊட்டு.]*

**காத்தூலம்**[1] *kāttūlam,* பெ.(n.) பழங்காலத்து வழங்கிய துகில் வகை(சிலப்.14:108,உரை); a garment of ancient times.

*[கா = பாவல், அகலம். கா + தூலம்.]*

**காத்தூலம்**[2] *kāttūlam,* பெ.(n.) அதிகமாய்க் கள்ளைக் குடிப்பதால் ஏற்படும் உடல் பாரிப்பு; stoutness of the body through drinking too much of toddy (சா.அக.).

*[கா + தூலம்.]*

**காத்தை** *kāttai,* இடை.(part.) ஓர் அசை நிலை (தொல்.சொல்.426, உரை); an expletive.

*[ஆத்தாள் → ஆத்தை → காத்தை.]*

**காத்தொட்டி** *kāttoṭi,* பெ.(n.) ஆதொண்டைச் செடி; thorny creeper.

*[காற்றொட்டி → காத்தொட்டி.]*

**காதகம்** *kāḍagam,* பெ.(n.) 1. கொலை; killing. 2. துன்புறுத்துதல்; harrassing.

*[கொல் → கோறு → சாறு → சாது → சாதுகம் → சாதகம்.]*

**காதகன்** *kāḍagaṉ,* பெ.(n.) 1. கொடுந்திறல் படைத்தவன்; astute man. 2. கொலையாளி; murderer (பிங்.).

*[காது → காதுவன் → காதகன்.]*

**காதடை-த்தல்** *kāḍaḍai-,* 4 செ.கு.வி.(v.i.) நோய், பசி முதலியவற்றால் செவி கேளாது போதல்; to experience a choking sensation in the ear owing to fatigue,hunger, disease etc.

ம. காதடயுக

*[காது + அடை.]*

**காதடைப்பு** *kāḍaḍaippu,* பெ.(n.) பசி, நோய் முதலியவற்றால் காதுகேளாமை; deafness occasioned by *fatigue*, disease, etc.,

*[காது + அடைப்பு.]*

**காதணி** *kāḍaṇi,* பெ.(n.) காதுக்கிடும் அணிகலன் (திவா.); ear ornament.

*[காது + அணி.]*

**காதம்**[1] *kāḍam,* பெ.(n.) 1. பண்டைய நீட்டல் அளவு; a linear measure of ancient times. *"ஆறைங்காதம்" (சிலப்).* 2. ஏழரை நாழிகை வழி; a distance of walk of three hours.

க. காவத, காவுத; ம.காதம்; து.காவுத.

*[கா(நீட்சி) → காவு → காவதம்.]*

**காதம்**[2] *kāḍam,* பெ.(n.) 1. கள்; toddy. 2. நாற் சதுரமான துரவு(கிணறு); small, square well.

*[கள் → கதம் → காதம்.]*

**காதம்**[3] *kāḍam,* பெ.(n.) 1. கொலை (வின்.); killing, slaughter, murder.

*[கொல் → கோறு → காறு → காது → காதம்.]*

**காதம்பம்**[1] *kāḍambam,* பெ.(n.) 1. அன்னப் புள்வகை (வின்.); a kind of swan with dark grey wings. 2. கானாங்கோழி (பிங்.); a kind of wood-fowl with long legs. 3. தயிரேடு; cream on curded milk.

*[கது = (சிறியது) → கதும்பம் → காதம்பம்.]*

**காதம்பம்**[2] *kāḍambam,* பெ.(n.) 1. கரும்பு; sugarcane. 2. அம்பு; arrow (சா.அக.).

*[காழ் → காடு → காது → காதம்பம்.]*

**காதம்பரம்** *kātambaram,* பெ.(n.) 1. தயிரேடு; cream deposited on curdled milk. 2. சருக்கரை; sugar (சா.அக.).

*[காழ்→காடு → காது → காதம்பரம்.]*

**காதம்பரி** *kādambari,* பெ.(n.) ஆதிவராக கவியால் வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட தமிழ்க் காவியம் (செந்.5:492); Tamil rendering of the Sanskrit *Kādambari* of *Bāna* by *Adi-varāgakavi.*

*[கடம்பு (மரம்) → காதம்பரம் (கடம்பு மலர்) → காதம்பரி.]*

பாணபட்டர் என்பவரால் வடமொழியில் இயற்றப்பட்ட நூல்.

**காதரம்** *kādaram,* பெ.(n.) 1. அச்சம்; timidity, want of courage. *"காதரந் தீர்த்தருளும்" (திருக்கோ. 117).* 2. தீவினைத் தொடர்பு; effect of evil deeds upon the soul. *"காதரமடைந்தாள் போலக் கவலையுஞ் சிறிதுதோன்ற" (திருவிளை.வலை.3.).*

*[காத்திரம்→காதரம்.]*

**காதரவு** *kādaravu,* பெ.(n.) பாதுகாப்பு; protection. *"காதரவு செய்துநலங் கற்பித்து" (அருட்பா, 1,நெஞ்சறி.170).*

*[காத்தல் → அரவு → காத்தரவு → காதரவு (ஆதரவு).]*

**காதரன்** *kādaran,* பெ.(n.) அச்சமுடையவன் (பிங்.); timid person.

*[காதரம் → காதரன்.]*

**காதரி** *kādari,* பெ.(n.) மரமஞ்சள்; tree-turmeric (சா.அக.).

*[காதுதல் (சினத்தல், எரிதல், மஞ்சள்நிறம்) → காத்தரி → காதரி.]*

**காதல்[1]** *kādal,* பெ.(n.) 1. அன்புடைமை; warm attachment, fondness, love, affection. *"காதல் வேண்டி யெற்றுறந்து போதல் செல்லா வுயிர்" (அக.நா.55)* 2. காமவிச்சை; lust. 3.இறையுணர்வு; reverence, devotion. *"காதலா னெஞ்சமன்பு கலந்திலேன்" (திவ்.திருமாலை,26).* 4. வேட்கை; desire, longing. *"காதலாற் காம பூமிக் கதிரொளி யவரு மொத்தார்" (சீவக.189).* 5. ஆவல் (வின்.); earnestness, intentness, eagerness. 6.மகன்; son, as an object of love. *"இராவணன் காதல்" (கம்பரா.பிரமா. 164).* 7. சிற்றிலக்கிய வகை; a kind of poem with amorous theme. *"கூளப்ப நாயக்கன் காதல்"*

ம., க. காதல்; தெ.காதிலி; கூ. காதி.

*[கதுவுதல் = பற்றுதல், அணைத்தல் அன்பு செலுத்துதல். கது → கதுவு→ கதுவல் → காதல். ஒ.நோ. நல் = செறிவு, நெருக்கம், அன்பு. க. நல்லை = காதலி, மனைவி.]*

**காதல்[2]** *kādal,* பெ.(n.) 1. கொல்லுகை (சூடா.); killing. 2. தாக்குகை; fighting. *"காலனென்மேற் காதலையானின் புறந்தோற்றிமாற்று" (மருதூ.84).* 3. தறிக்கை (வின்.); cutting in pieces, breaking. snapping. 4. ஆந்தை முதலியவற்றின் ஒலி; cry, chirp of certain birds, as ominous. 5. எதிராப்பு (வின்.); peg for driving out nails.

*[காது → காதல்.]*

**காதலம்** *kādalam,* பெ.(n.) ஒருவகைமீன்; a kind of fish. (சா.அக)

*[கது → கதலம்–காதலம்.]*

**காதலவர்** *kādalavar,* பெ.(n.) 1. அன்புக் குரிய மனைவிமக்கள் முதலியோர்; wife, children, etc., as objects of one's affection. 2.சுற்றத்தார்; relatives. *"கைம்மக வோடுங் காதலவ ரொடும்" (பரிபா.15:47).*

*[காதல் → காதலவர்]*

**காதலன்** *kādalan,* பெ.(n.) 1. அன்புள்ளவன் (பிங்.); lover, suitor. 2.கணவன்; husband. *"காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி" (மணிமே.2:42).* 3. நண்பன்; intimate friend, choice associate. *"தீயின் காதலன் விடை கொண்டேகி" (கந்தபு. திருவவ.10).* 4. மகன்; son. *"அறத்தின் காதலன்" (பாகவ.1.6:1).*

ம. காதலன்; க. காதல்.

*[காதல் → காதலன்.]*

**காதலான்** *kādalan,* பெ.(n.) **காதலன்** பார்க்க; see *kādalan. "கரை காணாக் காதலான்" (கம்பரா. குகப்.26). "காதலான் காதல் போல" (சீவக.1666).*

*[காதல் → காதலன்.]*

**காதலி[1]–த்தல்** *kādali-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. அன்பு கூர்தல்; to love, delight in; to be fond of; to be warmly attached to. *"காதலித் தாதுநா மென்னு மவாவினை"*(நாலடி, 181). 2. விரும்புதல்., to long for, desire. *"கந்தவேள் புராணந் தன்னைக் காதலித் தோதுவார்" (கந்தபு பாயி. நூற்பய.).*

*[காதல் → காதலி.]*

**காதலி[2]** *kādali,* பெ.(n.) 1. அன்பு கொண்டவள்; a beloved woman, sweet heart. 2. மனைவி; wife. *"காதலி தன்னொடு கைதொழு தெடுத்து" (மணிமே.13:20).* 3. மகள்; daughter. *"காதலிதன் காதலனைக் கண்ணுற்றான்"(நள.கலிநீ.67).* 4. தோழி; lady's maid. *"காதலி மாரொடும் – பெருகுங் காதலைப் பேசுகின் றார்சிலர்" (கந்தபு. திருக்கல்.21).*

*[காதல்→காதலி.]*

**காதலித்தவன்** *kādalittavaṉ,* பெ.(n.) **காதலித் தோன்** *(சூடா.)* பார்க்க; see *kādalittōṉ.*

*[காதலி → காதலித்தவன்.]*

**காதலித்தோன்** *kādalittōṉ,* பெ.(n.) அன்பன் (பிங்.); friend, lover.

*[காதலி→ காதலித்தோன்.]*

**காதலோன்** *kādalōṉ,* பெ.(n.) 1. அன்பன், கணவன்,தலைவன்; lover, husband. *"தாம்வந்த னர்நங் காத லோரே" (ஐங்குறு.270.).* 2. மகன் (ஐங் குறு.); son.

*[காதலன்→ காதலோன்.]*

**காதவம்[1]** *kādavam,* பெ.(n.)வான்கோழி (யாழ்.அக.); turkey fowl.

*[கது→ கதுவம்→ காதவம்.]*

**காதவம்[2]** *kādavam,* பெ.(n.)1. சீந்தில்; moon, creeper. 2.நிலவேம்பு; ground neem. 3.ஆல்; ban-yan.

*[கதம்(சாறு)→ கதவம்→ காதவம்.]*

**காதளிகம்** *kādaḷigam,* பெ.(n.) சிறுசின்னி; birch-leaved acalypha (சா.அக).

*[காழ் → காடு → காது → காதுளி→ காதளிகம்.]*

**காதற்பரத்தை** *kādaṟ-parattai,* பெ.(n.) சேரிப் பரத்தையின் மகளாய்த் தலைவனது காதற்குரிமை பூண்டு அவனையே சார்ந்திருப்பவள் (ஐங்குறு.90, உரை.); (Akap.) woman of the courtezan class warmly attached to a hero and not residing in his quarters, dist. fr. *iṟ-parattai. "யாரையு நயவா வியல்பிற் சிறந்த சேரிப்பரத்தையர் மகளி ராகிக் காதலிற் புணர்வோர் காதற் பரத்தையர்"(அகப். அகத்.114.).*

*[காதல் + பரத்தை.]*

**காதற்பாங்கன்** *kādaṟ-pāṅgaṉ,* பெ.(n.) தலை வனுக்கு உற்ற நண்பன்; intimate friend of the hero. *"மன்னவன் றனக்குக்... காதற் பாங்க னாதலின்" (மணிமே.28, 125).*

*[காதல் + பாங்கன்.]*

**காதற்பிள்ளை** *kādaṟ-piḷḷai,* பெ.(n.) காதலிக்குப்பிற வளர்ப்பு மகன்; foster child. *"அரசர் காதற் பிள்ளையாய்" (பெரியபு. தடுத்தாட்.6).*

*[காதல் + பிள்ளை.]*

**காதற்ற முறி** *kādaṟṟa-muṟi,* பெ.(n.) செலுத்தற் குரியதை செலுத்தித் தீர்த்துக் கிழித்துவிட்ட ஒலையாவணம் (வின்.); cancelled bond written on a palmyra leaf.

*[காது + அறு + முறி – காதற்றமுறி.]*

**காதற்றோழி** *kādaṟṟōḻi,* பெ.(n.) *தலைவியின் அன்புக்குரிய பாங்கி (திருகோ.50,அவ.);* confidant of a heroine.

*[காதல் + தோழி.]*

**காதறு[1]–தல்** *kādaṟu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. காதின் துளை அறுதல்; to have the perforated lobe of the

ear cut or torn. 2. ஆவணம் தீர்க்கப்பெற்றுக் கிழிபடுதல்; to be cancelled, as a bond, by mutilation. 3. செருப்பின் வாரறுதல் (இ.வ.); to snap, as the thong of a sandal. 4.ஊசித்துளை முறிதல்; to have the eye of a needle broken. *"காதற்ற வூசியும் வாராது காணும்"(பட்டினத். திருப்பா. பொது. 10.).* 5. கவணிற் கல்வைக்கும் இடம் அற்றுப்போதல்; to have that part of the sling snapped from which the stone is generally thrown. *"காதறு கவண தேய்க்கும்" (ஐங்குறு. பக்.143. பாட்டு,1).* 6.பகை கொள்ளுதல் (யாழ்.அக.); to become inimical.

*[காது + அறு.]*

**காதறு[2]–த்தல்** *kādaṟu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. காதின் துளையை அறுத்தல்; to rend the ear, as by tearing off the ear-rings. *'காதறுத்த கூலி கைமேலே' (வின்.).* 2. ஆவணத்தை அறுதியாகத் தீர்த்துக் கிழித்துவிடுதல்; to cancel a bond, as by mutilating it.

*[காது + அறு.]*

**காதறுப்பான்** *kādaṟuppāṉ,* பெ.(n.) காதைச் சுற்றி வரும் புண் (வின்.); a sore that appears around the ear.

*[காது + அறுப்பான்.]*

**காதறை[1]** *kādaṟai,* பெ.(n.)1. காதறுபட்ட ஆள்; one whose ear has been cut off or mutilated. 2. காதுக்குழி; cavity of the ear. 3. கெட்டது; that which is spoiled. 4. செவிடு; deaf.

**Fin.** kūro;**Karel.** kūmeh;**Es.** kurt;**Livonian.** kūrli;**Q.** karu.

*[காது + அறு – காதறு → காதறை.]*

**காதறை[2]** *kādaṟai,* பெ.(n.) சம்பங்கிப்புல்; fragrant champak grass (சா.அக.).

*[கா = பரவுதல், மணம் பரவுதல். கா → காதல் → காதறை.]*

**காதறை கூதறை** *kādaṟai-kūdaṟai,* பெ.(n.) ஒழுக்கங்கெட்டவள் (இ.வ.); a disreputable woman.

*[காதறை + கூதறை.]*

**காதறைச்சி** *kādaṟaicci,* பெ.(n.) சண்டை பிடிப்பவள். (யாழ்.அக.); quarrel some woman, as one who rends the ear.

*[காது + அறு – காதறு → காதறைச்சி.]*

**காதன்** *kādaṉ,* பெ.(n.) கொலை செய்பவன் (வின்.); murderer.

*[காதுதல் = வெட்டுதல். காது → காதன்.]*

**காதன்மை** *kādaṉmai,* பெ.(n.) 1. அன்பு; affection, attachment. *"காதன்மை கந்தாவறி வறியார்த் தேறுதல்" (குறள், 507).* 2. விருப்பம்; desire. *"காதன்மை கையல் லதன் கட் செயல்"(குறள்; 832).*

*[காதல் → காதன்மை.]*

**காதாங்கி** *kādāṅgi,* பெ.(n.) பாற்சொற்றிப்பாலை (மலை.); Indian guttapercha.

*[கதம் (சாறு, பால்) → காதம் → காதாங்கி.]*

**காதார்–தல்** *kādār-,* 2 செ.குன்றாவி.(v.t.) 1. காதில் அணிகலன் அணிதல் (தேவா.); towear on the ear as a jewel. "காதார் குழையாட". 2. தன் செவிப் புலன் நிரம்புதல்; to near tothe full satisfaction of the ears.

*[காது + ஆர் – காதார் = காதார.]*

**காதித்தம்** *kādittam,* பெ.(n.) 1. கஞ்சா; ganjah. 2. குறிஞ்சா; Indian ipecacuanha (சா.அக.).

*[காதித்தல் + கதித்தம் – காதித்தம்.]*

**காதிதம்** *kādidam,* பெ.(n.) ஓர் எண்ணை அதனாலேயே ஒருமுறையேனும் பலமுறையேனும் பெருக்கிவந்த தொகை(வின்.); result arising from the multiplication of a number by itself.

*[காது = மோதுதல், பெருக்குதல். காது → காதிதம் (பெருக்கல்).]*

**காதிரைச்சல்** *kādirai-c-cal,* பெ.(n.) காதடைப் பால் உண்டாகும் குமுறல் (வின்.); ringing in the ear.

*[காது + இரைச்சல்.]*

**காதில்விழு—தல்** *kādil-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) காதுக்குச் செய்தியெட்டுதல்; to reach one's ears, to be heard.

ம. காதில் வீழுக

*[காது→ காதில் + விழு.]*

**காதிலடிபடு—தல்** *kādil-aḍi-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) அடிக்கடி செய்தி கேட்கப்படுதல்; to be heard frequently,as news.

*[காது→காதில் + அடி +படு.]*

**காதிலி** *kādili,* பெ.(n.) செவிடன், செவிடி; deaf person.

*[காது+ இலி]*

**காதிலோது—தல்** *kādil-ōdu-,* 5 செ.குன்றாவி. (v.t.)1. மந்திரம் சொல்லிக்கொடுத்தல்; to initiate a disciple by whispering a mantra in his ear. 2.மறைபொருள் (இரகசியம்) சொல்லுதல்; to whisper in the ear, as secrets. 3. கோட் சொல்லுதல் (உ.வ.); to back-bite, to carry tales

*[காதில் + ஒது.]*

**காதிற்சவ்வு** *kādiṟ-cavvu,* பெ.(n.) காதிலுள்ள குருத்து; ear-rum, tympanum.

*[காதில் + சவ்வு.]*

**காது[1]** *kādu,* பெ.(n.) 1. ஒலியைப்பற்றும் செவி; ear. *"வடிந்துவீழ் காதினள்"(சிலப்.4:51).* 2. ஊசி முதலியவற்றின் துளை; hole through which thread, rope, hook, pin or shaft is passed; as the eye of a needle. *"காதற்ற ஊசியும்" (பட்டினத். திருப்பா.பொது.10.).* 3.கவண்கல் வைக்குமிடம்; the groove in a sling in which is placed the sling-stone. *"காதறு கவணதேய்க்கும்"(ஐங்குறு. பக்.143, பாட்டு,1).* 4.புகையிலையின் காம்பு (இ.வ.); part near the stem of a tabacco leaf. 5. ஏனங்களின் விளிம்புப்பிடி; ear of a jar; projection in the rim of a vessel serving as a handle. 6. அடித்து இறுக்கப்படும் ஆப்பு(வின்.); small wedge to hold in its place a tenon, a handle, a peg.

ம.காது

**H., V., Guj., Ben., Ori.** kān; **Punj.** kash, kan; **Sind.** kann; **Ass.** kaṇu. **Afri. Koraofanian.** ki-t kicu; **Charian.** ku-wo; Hansa. ka-nne; **Nigero-cameroonian.** n-kki.

*[கது → காது (மு. தா. 210.]*

**காது[2]—தல்** *kādu-,* 5 செ.குன்றாவி(v.t.) 1. கொல்லுதல்; to kill, slay, murder. *"அவுணர் தங்கிளையைக் காதி" (கந்தபு.விடை.43).* 2. வெட்டுதல்; to cut. *"குயத்தாற் காதி" (கந்தபு. வில்வலன் வாதாவிவதை.15).* 3. பிரிவு செய்தல் (வின்.) ; to divide, dissect.

க., பட. காது; து.காதுநி.

**Fin.** kātā; **Karel.** koada; **ED.** kāduma; **Jap.** katsu; **Q.** fatikaca.

*[கொல் → கோறு → கோது → காது.]*

**காது[3]** *kādu,* பெ.(n.) கொலை (சூடா.); murder.

*[கொல் → கோறு → கோது → காது.]*

**காதுக்கரப்பான்** *kādu-k-karappāṉ,* பெ.(n.) காதின் வெளிப்புறத்திற் காணும் நோய் (M.L.); inflammation of the external part of the ear.

*[காது + கரப்பான்.]*

**காதுக்கற்சட்டி** *kādu-k-kaṟ-caṭṭi,* பெ.(n.) காதுள்ள மாக்கற் சட்டி (உ.வ.); eared vessel made of soap-stone.

*[காது + கல் + சட்டி.]*

**காதுக்கிண்ணம்** *kādu-k-kiṇṇam,* பெ.(n.) விளிம்பிலே பிடிப்புள்ள கிண்ணம்; vessel with projections in the rim for lifting.

*[காது + கிண்ணம்.]*

**காதுக்குடைச்சல்** *kādu-k-kuḍaiccal,* பெ.(n.) காதுநோய்வகை (M.L.); inflammation of the ear.

*[காது + குடைச்சல்.]*

**காதுக்குத்தல்** *kādu-k-kuttal,* பெ.(n.) ***காதுக் குத்து*** பார்க்க; see *kadu-k-kutu.*

*[காது + குத்தல்.]*

**காதுக்குத்து** *kādu-k-kuttu,* பெ.(n.) உட்காதில் உண்டாகுங் குத்து நோய் (M.L.); ear-ache.

மறுவ. காதுக்குத்தல்

*[காது + குத்து.]*

**காதுக்குறும்பி** *kādu-k-kurumbi,* பெ.(n.) 1. காதுப் பீளை; ear-wax,cerumen. 2. குறும்பி வாங்கி; ear-cleaner.

*[காது + குறும்பி.]*

**காதுகடி-த்தல்** *kādu-kadi,* 4 செ.கு.வி.(v.i.) 1. மந்தணம் (ரகசியம்)மாகச் சொல்லுதல்; to whisper in the ear.

ம. காதுகடிக்குக

*[காது + கடி.]*

**காதுகன்** *kādugan,* பெ.(n.) 1.கொலைகாரன்; murderer. 2. கொடியோன்(சங்.அக.); wicked person.

*[கொல் → கோறு → கோது → காது → காதுகன்.]*

**காதுகிழி-த்தல்** *kādu-kili-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஆவணத்தை அறுதியாக்கிக் கிழித்தல் (இ.வ.); lit, to tear the ear, to tear the top of a bond written on a palmyra-leaf as far as the hole through which it is filed, to tear the stamped part of an indenture or bond, in token of its discharge.

*[காது + கிழி.]*

**காதுகிள்ளு-தல்** *kādu-killu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. ***காதுகிழி-*** (இ.வ.) பார்க்க; see *kādu-kili-* 2.***காதுகுத்து-***[2] பார்க்க; see *kādu-kuttu-.*

*[காது + கிள்ளு.]*

**காதுகுடை-தல்** *kādu-kudai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. காதிற் குடைச்சல்நோய் உண்டாதல் ; to have itching or tingling pain in the ear. 2. காதுக்குறும்பி எடுத்தல்; to clear the ear of wax. 3. காதில் குறுகுறுப்பு ஏற்படும் போது பறவை இறகால் தடவுதல்; to rule with birds feather when he ear feels for it.

ம. காதுகுத்து

*[காது + குடை.]*

**காதுகுத்தல்** *kādu-kuttal,* பெ.(n.) 1. காதுகுத்துந் திருவிழா; ear-boring ceremony. 2. காதுநோய் வகை; a disease of the ear.

*[காது + குத்தல்.]*

**காதுகுத்து[1]-தல்** *kādu-kuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. காதில் அணிகலன் அணிய துளை போடுதல்; to bore the ear for wearing ear ornaments.*"கேசவ நம்பீ யுன்னைக் காதுகுத்த" (திவ்.பெரியாழ்.2,3:1,).* 2.வஞ்சித்தல்; to beguile, deceive, mislead.

ம. காதுகுத்துக

*[காது + குத்து.]*

**காதுகுத்து[2]-தல்** *kādu-kuttu-,* 5 செ.கு.வி. (v.i.) காதுக்குள் நோவெடுத்தல்; to feel pain in the inner part of the ear.

*[காது + குத்து.]*

**காதுகுத்துகிறவர்** *kādu-kuttukiravar,* பெ.(n.) காதுகுத்துந் தொழிலையுடைய தட்டாரில் வகை யினர்; a class of goldsmith whose profession is to perforate the ear-lobes.

*[காது + குத்துகிறவர்.]*

**காதுகுளிர்-தல்** *kādu-kuli-,* 2 செ.கு.வி.(v.i.) செவிப்புலனுக்கு இன்பமாதல்; to experience a pleasant sensation in the ear, as in hearing sweet music; to hear good news.

*[காது + குளிர்.]*

**காதுகை** *kādugai,* பெ.(n.) கொல்லுகை; killing. *"மால்க ளிற்றினைக் காதுகை நீக்கி" (கந்தபு. மார்க்கண் 283).*

*[காது² → காதுகை.]*

**காதுகொடு-த்தல்** *kādu-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.i.) கவனித்துக்கேட்டல்; to give ear, hearken, listen, give attention to.காது கொடுத்துக் கேட்டேன் குவா குவா சத்தம் (உ.வ.).

ம. காதுகொடுக்குக

*[காது¹ + கொடு.]*

**காதுச்சில்லறை** *kādu-c-cillaṟai,* பெ.(n.) காதணிவகை; ear-ornament.

*[காது + சில்லறை.]*

**காதுச்சோணை** *kādu-c-cōṇai,* பெ.(n.) ***காதுத் தண்டு*** பார்க்க; see *kādu-t-taṇḍu.*

*[காது + சோணை.]*

**காதுசெய்-தல்** *kādu-sey-,* 1. செ.கு.வி. (v.i.) ***காதுவளர்-*** பார்க்க; see *kadu-vaḷa*‡ *"காது செய்வான் கூதைசெய்து" (திவ். திருவாய்.9. 1:9).*

*[காது + செய்.]*

**காதுடம்** *kāḍuḍam,* பெ.(n.) வாலைப்பூ நீறு; distilled liquid extracted from a solution of fuller's earth (சா.அக.).

*[காது → காதுளம் → காதுடம்.]*

**காதுடனிருக்கான்** *kāduḍaṉirukkāṉ,* பெ.(n.) தூக்கணாங்குருவி; Indian tailor-bird (சா.அக.).

*[காது + உடல்(கூடு) +இருக்கான்]*

**காதுண்டி** *kāduṇḍi,* பெ.(n.) குறுஞ்சூலி மரம்; toon tree (சா.அக.).

*[கோது → கோதுண்டி → கோதுண்டி.]*

**காதுணம்** *kāduṇam,* பெ.(n.) பாகல்; balsam pear (சா.அக.).

*[காதுதல் → கோதுண்டி → கோதுண்டி.]*

**காதுத்தண்டு** *kādu-t-taṇḍu,* பெ.(n.) காது மடலின் பகுதி (உ.வ.); lobe of the ear.

*[காது + தண்டு.]*

**காதுதூர்-தல்** *kādu-tūr-,* 2 செ.கு.வி.(v.i.) காதுமடலின் துளை தூர்தல்; the hole made for the ear ring in the ear lobe getting closed. *"வாமன நம்பியுன் காது தூரும்" (திவ்.பெரியாழ்2,3:8).*

*[காது + தூர்.]*

**காதுநறுக்கு-தல்** *kādu-naṟukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***காதுகிழி*** பார்க்க; see *kādu-kiḻi-.*

*[காது + நறுக்கு.]*

**காதுப்பானை** *kādu-p-pāṉai,* பெ.(n.) விளிம்புப் பிடியுள்ள பானை; vessel with projections in the rim serving as handle.

*[காது + பானை.]*

**காதுப்பி** *kādu-p-pi-,* பெ.(n.) ***காதுக்குறும்பி*** பார்க்க: see *kadu-k-kuṟumbi.*

*[காது + பீ.]*

**காதுப்பூ** *kādu-p-pū,* பெ.(n.) பூவடிவான காதணிவகை (வின்.); flower-shaped ear-ornament of women.

*[காது + பூ.]*

**காதுப்பூச்சி** *kādu-p-pūcci,* பெ.(n.) செவிப் பாம்பு (யாழ்ப்.); typhlope, as crawling into the ear.

*[காது + பூச்சி.]*

**காதுபெருக்கு-தல்** *kādu-perukku-,* 5 செ.கு. வி. (v.i.) ***காதுவளர்-*** பார்க்க; see *kadu-vaḷar-.* *"காதுபெருக்கித் திரியவுங் காண்டி" (திவ். பெரியாழ்.2.3:10).*

*[காது + பெருக்கு.]*

**காதுமடல்** *kādu-maḍal,* பெ.(n.) புறக்காது; external ear, conch.

*[காது + மடல்.]*

**காதுமந்தம்** *kādu-mandam,* பெ.(n.) செவிப்புலன் நன்றாகச் கேளாமை; dullness of hearing.

*[காது + மந்தம்.]*

**காதுவலி** *kādu-vali,* பெ.(n.) ***காதுக்குத்து***[2] பார்க்க; see *kadu-k-kuttu.*[2]

*[காது + வலி.]*

**காதுவளர்-த்தல்** *kādu-vaḷar-,* 4 செ.கு.வி.(v.i.) காதின் அடித்தண்டிலுள்ள துளையைப் பெருக்குதல்; to enlarge the perforation of the ear for wearing ear-rings.

*[காது +வளர்.]*

**காதுவிடாய்** *kādu-viḍāy,* பெ.(n.) பசி முதலியவற்றால் உண்டாகுஞ் செவியடைப்பு; weakness, lassitude in hearing caused by hunger, sickness, etc.

*[காது + விடாய்.]*

**காதுவிடு-தல்** *kādu-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) ***காதுவெட்டு-*** பார்க்க; see *kadu-vettu-.*

*[காது + விடு.]*

**காதுவெட்டு[1]-தல்** *kādu-veṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***காதுகிழி-*** பார்க்க; see *kādu-kiḻi-,*

*[காது + வெட்டு.]*

**காதுவெட்டு[2]-தல்** *kādu-veṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ஏனத்தில் துளை விழுதல்; to punch a hole, as in an embossed stamp.

*[காது + வெட்டு.]*

**காதெழுச்சி** *kādeḻucci,* பெ.(n.) தேவையற்ற சதை வளர்ந்து காதைச் செவிடுபடுத்தும் நோய் வகை; a tumour visible in meatus causing loss of hearing.

*[காது + எழுச்சி.]*

**காதெளிவு** *kāteḷivu,* பெ.(n.) பொற்றலைக் கையாந்தகரை; verlisinia marigold (சா.அக.).

*[கா + தெளிவு.]*

**காதை[1]** *kādai,* பெ.(n.) 1. வரலாறு; story narrative. *"காதைகள் செப்பென" (சீகாலித்.4. நான்மு.155).* 2. சொல் (திவா.); word term vocable.3. கதை; tale. *"காதைமுகங்கண்டலராகம தாடகமா மெழிற் காரிகையாள்" (புலியூரந்.22.) "காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்" (இராமா.நாட்டு.51).*

*[கதை → காதை.]*

**காதை[2]** *kādai,* பெ.(n.) 1. பாட்டு (நீல.); poem. 2.கதையைக் கொண்ட பகுதி (*சிலப்.பதி.63, உரை*); division of a poem containing a narrative.

*[கதை → காதை.]*

**காதை[3]** *kādai,* பெ.(n.) 1. கொலை (வின்.); killing, murder. 2. தாளத்தின் அடிப்பு; beating time, as of the right palm on the left.

*[காதுதல் - மோதல். காது → காதை.]*

**காதைகரப்பு** *kādai-karappu,* பெ.(n.) ஒரு செய்யுளை முடிய எழுதி அதன் ஈற்று மொழியுள் முதலெழுத்துந் தொடங்கி ஒரோர் எழுத்து இடையிட்டுப் படிக்கப் பிறிதொரு செய்யுள் வரப் பாடும் மிறைக்கவி (இலக். வி.690.உரை); stanza so composed, that, by begining with the first letter of the last word and reading backwards every alternate letter only, a new stanza is formed.

*[காதை + கரப்பு.]*

**காதைநெறி-த்தல்** *kādai-neṟi-,* 4 செ.கு.வி.(v.i.) உற்றுக்கேட்கும்படி குதிரை முதலிய விலங்குகள்

காதை நிமிர்த்தல் (வின்.); to cock the ear, as horses on hearing a frightful noise.

*[காதை + நெறி.]*

**காதோதி** *kādōdi,* பெ.(n.) தீய எண்ணத்தோடு கமுக்கமாகப் பேசுவோன் (வின்.); malicious whisperer.

*[காது + ஓதி.]*

**காதோலை** *kādōlai,* பெ.(n.) 1.காதுக்கிடும் பனங்குருத்தின் ஓலைச்சுருள்; small roll of a palmyra leaf often stained with magenta, used by women as an ornament inserted in the lobe of the ear. 2. மகளிர் காதணிவகை; ear ornament made of gold, gems, diamond, etc. worn by women.

**ம.** காதோல

*[காது + ஓலை.]*

**காதோலை கருமாரி** *kādōlai-karumāri,* பெ.(n.) தமிழ் நாட்டில் ஏழுகன்னிமார் வணக்கத்தின்போது படைக்கப் பெறும் ஓலை வளையமும் கறுப்பு வளையல்களும்; ring of palm leaf and black bangled placed for the worship of seven virgius.

*[காது + ஓலை + கருமாரி.]*

**காந்தஊசி** *kānta-ūśi,* பெ.(n.) ***காந்தவூசி*** பார்க்க; see *kāndavūsi.*

*[காந்தம் → ஊசி.]*

**காந்தக்கம்பி** *kānda-k-kambi,* பெ.(n.) 1. இடிதாங்கி; lightning rod. 2. மின்கம்பி; electric wire.

**ம.** காந்தக்கம்பி

*[காந்தம் + கம்பி.]*

**காந்தக்கல்** *kānda-k-kal,* பெ.(n.) அயக்காந்தம் (வின்.); magnet, loadstone.

**ம.** காந்தக்கல்லு

*[காந்தம் + கல்.]*

**காந்தக்கழி** *kānda-k-kaḻi,* பெ.(n.) 1.கழியைப்போற் செய்த காந்தம்; bar-magnet. 2. மாத்திரைக் கோல்; magic wand; magnetic rod (சா.அக.).

*[காந்தம் → கழி.]*

**காந்தகன்** *kāndagan,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு; a kind of arsenic (சா.அக).

*[காந்தம் → காந்தகன்.]*

**காந்தச்சவளை** *kānda-c-cavaḷai,* பெ.(n.) காந்த மணல்; magnetic iron ore (சா.அக).

*[காந்தம் → சவளை.]*

**காந்தச்செம்பு** *kānda-c-cembu,* பெ.(n.) ஊதைச் செம்பு; an alchemical copper prepared from magnetism (சா.அக.).

*[காந்தம் → செம்பு.]*

**காந்தசத்துரு** *kānda-śatturu,* பெ.(n.) காந்தத்துக்கு மாற்றுச்சரக்கு (வின்.); that which counteracts the magnetic power, as blue vitriol, sal-ammoniac, saltpetre.

*[காந்தம் + சத்துரு.]*

**காந்தசிந்தூரம்** *kānda-śindūram,* பெ.(n.) காந்தத்தைப் புடமிட்டுச் செய்யப்படும் சிந்தூரம் (பாதார்த்த.1205); loadstone powder of red colour prepared by chemical process (red-oxide).

*[காந்தம் + சிந்தூரம்.]*

**காந்தப்பர்** *kāndappar,* பெ.(n.) ***காந்தருவர்*** பார்க்க; see *kāndaruvar.*

*[காந்தருவர் → காந்தப்பர்.]*

**காந்தப்பெட்டி** *kānda-p-peṭṭi,* பெ.(n.) திசையறி கருவி (வின்.); mariner's compass, engineers compass.

**ம.** காந்தப்பெட்டி

*[காந்தம் + பெட்டி.]*

**காந்தபசாசம்** *kānda-pašāšam,* பெ.(n.) காந்தக் கல்; loadstone, magnet. *"காந்த பசா சம்போ லவ்வினையைப் பேராம லூட்டும்" (சி. போ.சிற்.2.2:2)*

*[காந்தம் + பசாசம்.]*

**காந்தபற்பம்** *kānda-parbam,* பெ.(n.) காந்தத் திஷின்று செய்யப்படும் பொடி; load stone powder made by chemical process.

*[காந்தம் + பற்பம்.]*

**காந்தபுராணம்** *kānda-purāṇam,* பெ.(n.) பதினெண்தொன்மத்துள் ஒன்று; a chief purāṇa, one of the 18 purāṇas.

மறுவ. காந்தம்

*[கந்தபுராணம் → காந்தபுராணம்.]*

**காந்தம்**[1] *kāndam,* பெ.(n.) 1. ***காந்தக்கல்*** பார்க்க; see *kanda-k-kal. "நாராசத் திரிவிற் கொள்ளத் தகுவது காந்தம்" (மணிமே.27;56).* 2. ஒருவகைப் பளிங்கு; a class of crystals, as šūriyā-kandam, šantira-kāndam. 3. அழகு (உரி.நி.); beauty, loveliness, attractiveness. 4. உலகநடையைக் கடவாது பொதுவாக யாவரும் மகிழும்படி புகழ் வதாகிய செய்யுட்குணம் (தண்டி.22); (Rhet.) description within conventional limits, satisfying the aesthetic sense, a merit of poetie composition. 5.மின்சாரம்; electricity.

Skt kānta.

*[காந்து → காந்தம்.]*

**காந்தம்**[2] *kāndam,* பெ.(n.) ***காந்தபுராணம்*** (திவா.); பார்க்க; see *kāndapurāṇam.*

**காந்தம்பிடி—த்தல்** *kāndam-pidi-,* 4 செ.கு.வி. (v.i.) ***காந்தம் வலி—*** பார்க்க; see *kāndam-vali*

*[காந்தம் + பிடி.]*

**காந்தம்வலி—த்தல்** *kāndam-vali-,* 4 செ.கு.வி. (v.i.) காந்தம் இரும்பை இழுத்தல்; to attract an iron piece with magnetic force.

*[காந்தம் + வலி.]*

**காந்தமண்** *kānda-maṇ,* பெ.(n.) காந்தச் சத்துள்ள செம்மண்(வின்.); magnesite wherein is found carbonate of magnesia, red earth.

*[காந்தம் + மண்.]*

**காந்தமண்ணுப்பு** *kāndamaṇṇuppu,* பெ.(n.) வேதியுப்பு; epsom salt (சா.அக).

*[காந்தமண் + உப்பு.]*

**காந்தமணி** *kānda-maṇi,* பெ.(n.) ***காந்தக்கல்*** (வின்.) பார்க்க; see *kānda-k-kal.*

*[காந்தம் + மணி.]*

**காந்தமயமலை** *kānda-maya-malai,* பெ.(n.) காந்தமும் இரும்பும் கலந்து கிடைக்கப் பெற்ற மலை; mountain containing magnet mixed with iron ore (சா.அக.).

*[காந்தம் + அயம் + மலை.]*

**காந்தமலை** *kānda-malai,* பெ,(n.) நிலப்பகுதியின் வடகோடியிற் காந்தமயமாயுள்ளதாகக் கருதப் படும் மலை (வின்.); mountain far north regarded as the centre of attraction to the magnet; the magnetic pole.

*[காந்தம் + மலை.]*

**காந்தமூட்டு—தல்** *kānda-mūṭṭu-,* 5 செ.கு.வி (v.i.) காந்த சக்தி கொடுத்தல்; inducing magnetism (சா.அக).

*[காந்தம் + ஊட்டு.]*

**காந்தர்ப்பம்** *kāndar-p-pam,* பெ.(n.) ***காந்தருவம்*** பார்க்க; see *kāndaruvam. "காந்தர்ப்ப மென்ப துண்டால் .... மறைகளே வகுத்த கூட்டம்" (கம்பரா. சூர்ப்பண.54).*

*[காந்தருவம் → காந்தர்ப்பம்]*

**காந்தருப்பம்** *kāndaruppam,* பெ.(n.) ***காந்தர்ப்பம்*** பார்க்க; see *kāndarppam. "காந்தருப்பம் மெனுங் கடவுண் மாப்படை" (கம்பரா.மூலபல.182).*

*[காந்தர்ப்பம் → காந்தருப்பம்]*

**காந்தருவப்புணர்ச்சி** *kāndaruva-p-puṇarcci,* பெ.(n.) ***காந்தருவம்,*** 1 (சங்.அக.) பார்க்க; see *kāndaruvam1.*

*[காந்தருவம் + புணர்ச்சி.]*

**காந்தருவம்** *kāndaruvam,* பெ.(n.) 1. காதலர் தம்முள் மனமொத்துக் கூடுங்கூட்டம் (தொல். பொருள்.92, உரை); a form of marriage which results entirely from love and which has no ritual whatever, as common among Gandharvas. 2. இசைப்பாட்டு (சூடா.); music. 3. காந்தருவமறை; musical composition. *"வில்வேதமமல் காந்தருவ வேதம்" (காஞ்சிப்பு. சனற்.41).* 4. யாழ்; harp.

*[காந்தருவம் → காந்தருவம்.]*

**காந்தருவர்** *kāndaruvar,* பெ.(n.) 1. யாழிசைப்போர் கந்தருவர் (சிலப்.5:176,உரை.); Gandharvas. 2. பாடுவோர் (கல்.); songsters, minstrels.

*[காந்தருவம் (யாழ்) → கந்தருவர் → காந்தருவர் (யாழோர்).]*

**காந்தருவி** *kāndaruvi,* பெ.(n.) பாடுபவள்; songstress. *"தளிச்சேரிப் பெண்டுகளுக்கும் காந்தருவி களுக்கும் நாயகஞ்செய்ய" (S.I.I.II,66-13 pg.276).*

*[காந்தருவம் → காந்தருவி.]*

**காந்தல்** *kāndal,* பெ.(n.) 1.காந்துகை; burning. 2.உமி, ஓலை முதலியவற்றின் எரிந்த கருகல்; burnt flakes of straw, palm leaves, paper, chaff etc. 3.காய்ந்த பயிர் (வின்.); growing crop scorched by the sun.4. சினம் (வின்.); anger.

ம. காந்தநள

*[காந்து → காந்தல்.]*

**காந்தலாடம்** *kāndalāḍam,* பெ.(n.) குதிரை லாடத்தைப்போற் செய்து வலுவூட்டிய இரும்பு; horse-shoe magnet (சா.அக.).

*[காந்தம் + லாடம்.]*

**காந்தவட்டை** *kānda-vaṭṭai-,* பெ.(n.) காந்தலூசி பொருத்திய வட்டத்தட்டு; circular instrument fitted with magnetic needle.

*[காந்தம் + வட்டை — காந்த வட்டை.]*

கட்டடங்களின் நிலையைத் தரையில் குறித்திடப் பொறியாளர்களும், கடலில் பயணம் செய்யும்போது திசையறிவதற்கு மாலுமிகளும் பயன்படுத்துகின்றனர்.



காந்தவட்டை

**காந்தவண்டி** *kānda-vaṇḍi,* பெ.(n.) இருப்புப் பாதையிற் செல்லும் மின்வண்டி; electric train; electric tramcar.

*[காந்தம் + வண்டி.]*

**காந்தவர்** *kāndavar,* பெ.(n.) காந்தருவர், பதினெண்கணத்துள்ஒரு தொகுதியார் (திவா.); a celestical group of singers. *"காந்தவர் சேனை யெல்லாம்" (உத்தரரா.கந்திருவ.43).*

*[காந்தருவர் → காந்தவர்.]*

**காந்தவிளக்கு** *kānda-viḷakku,* பெ.(n.) ஊர் வலங்களில் தலைமேல் தூக்கிச் செல்லும் எரிவளி விளக்கு; gas light carried over persons.

*[காந்தம் + விளக்கு.]*

**காந்தலூசி** *kānda-v-ūsi,* பெ.(n.) காந்தம் ஏற்றிய திசை காட்டும் முள்; magnetic needle; steel pointer of a compass.

*[காந்தம் + ஊசி.]*

**காந்தவை-த்தல்** *kānda-vai-,* 4 செ.கு.வி.(v.i.) தீயவைத்தல்; allowing to be scorched (சா.அக.).

*[காந்தல் + வை.]*

**காந்தள்** *kāndaḷ,* பெ.(n.) 1. செங்கோடல் கார்த்திகைப்பூ; Malabar glory lily,red or white species. *"காந்தள் மலராக்கால்"(நாலடி,283).* 2. காந்தள் மலரணிந்து வேலன் வெறியாடுவதைக் கூறும் புறத்துறை (தொல்.பொருள்.60); theme of describing a dance of one possessed by the spirit of *skandā* and wearing the *kāndaḷ* flower. 3. முருகக்கடவுளுக்குரிய காந்தளைச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை (பு.வெ.6:9); theme of singing the praises. 4. சவர்க்காரம் (வின்.); soap.

ம. காந்தல்

*[காந்தல் → காந்தள் (வே.க. 185).]*

**காந்தள் வகைகள்:**

1. செங்காந்தள் 2. வெண்காந்தள் 3. சிறுகாந்தள் 4. கருங்காந்தள் 5. நரிக்காந்தள் 6. காய்க்காந்தள் (சா.அக.).

**காந்தள் மலரான்** *kāndaḷmalarāṉ,* பெ.(n.) உழுமண்; fuller's earth (சா.அக.).

*[காந்தள் + மலரான்.]*

**காந்தளம்** *kāndaḷam,* பெ.(n.) கலப்பைக் கிழங்கு; plough root (சா.அக.).

*[காந்தள் → காந்தளம்.]*

**காந்தளிகம்** *kāndaḷigam,* பெ.(n.) சின்னிமரம்; lirch-leaved acalypha (சா.அக.).

*[காந்தள் → காந்தளிகம்.]*

**காந்தளூர்ச்சாலை** *kāndaḷūr-c-cālai,* பெ.(n.) கேரள நாட்டைச் சார்ந்த விழிஞ்சம் அல்லது நெய்யாற்றின் கரைப் பக்கத்தில் இருந்ததாகச் சொல்லப்படும் ஒரு பழைய ஊர்; name of a old place, said to be near viḻiñjam or Neyyaṟṟinkara of kerala.

*[காந்தளூர் +சாலை.]*

திருவனந்தபுரத்திலுள்ள வலிய சாலையே காந்தளூர்ச்சாலை என்ற கருத்தும் உண்டு.

**காந்தற்சோறு** *kāndaṟ-sōṟu,* பெ.(n.) கரிந்த சோறு; rice partly charred by over-heating.

*[காந்தல் +சோறு.]*

**காந்தன்** *kāndaṉ,* பெ.(n.) கணவன்; husband. *"திருமடந்தை காந்தன்"(கம்பரா.நகர்நீங்.95).*

*[காந்து → காந்தன்.]*

**காந்தாரக்கிராமம்** *kāndāra-k-kirāmam,* பெ.(n.) தேவர் உலகத்து வழங்குவதாகக் கருதப்படும் இசைப்பண்வகை (பரத. இராக.80); a musical note of the celestials.

*[காந்தாரம் + கிராமம்.]*

**காந்தாரபஞ்சமம்** *kāndāra-pañcamaṉ,* பெ.(n.) பாலையாழ்த்திறங்களுள்ஒன்று (சிலப்.4,75, உரை.); an ancient secondary melody type of the palai class.

*[காந்தாரம் + பஞ்சமம்.]*

**காந்தாரம்**[1] *kāndāram,* பெ.(n.) 1.ஐம்பத்தாறு நாடுகளுள் ஒன்று; Kandahar, a country north - east of Peshawar, one of ancient 56 *nāḍu.* *"காந்தார மென்னுங் கழிபெரு நாட்டு" (மணிமே. 9:12).* 2. ஏழிசைகளுள் ஒன்று (பரத. இராக,42); third note of the gamut, one of *śatta-śuram.* 3.பாலை யாழ்த்திறவகை (சிலப்.8, 35, உரை.); an ancient secondary melody-type of the *pālai* class.

*[காந்தருவம் → காந்தாரம்.]*

**காந்தாரம்**[2] *kāndāram,* பெ.(n.) காடு(திவா.); jungle, forest, wood.

*[கான் → காந்து →காந்தாரம். ஒ.நோ. மன் → மந்து (அரசன்).]*

**காந்தாரி** *kāndāri,* பெ.(n.) 1. காந்தார நாட்டு இளவரசி; துரியோதனன் தாய்; name of a princess of Kandahar, mother of Duryōdana. *"காந்தாரி*

# காந்தள்



செங் காந்தள்



வெண் காந்தள்



கானாங் கோழை

கிளையோ டின்றேகெடும்" (பாரத.சூதுபோர்.222). 2. கொடியவள் (வின்.); hard-hearted cruel woman. 3. சிவனார் வேம்பு; wiry indigo. "அரிக்காந்தி காந்தாரி நவ மொவ்வொண்றுக் கவ்வி" (தைலவ. தைல.135). 4. பத்து நாடியிலொன்று (சிலப்.3:26, உரை);a principal tubular vessel of the human body one of taca-naḍi. 5. ஒருவகைப் பண் (பரத.இராக.56); a specific melody-type. 6. சத்திசாரம் (வின்.) a kind of salt, of burning and acrid nature.

*[காந்தாரம் → காந்தாரி.]*

**காந்தாரிசெம்மல்** *kāndāri-šemmal,* பெ.(n.) துரியோதனன்(சூடா.); Duriyodana, the son of Kandhari.

மறுவ. காந்தாரிமைந்தன்

*[காந்தாரி + செம்மல்.]*

**காந்தாரிமிளகாய்** *kāndāri-miḷagāy,* பெ.(n.) சீமை மிளகாய் (சு.வை. ர. 509); a kind of chilly.

ம. காந்தாரிமுளகு

*[காந்து → காந்தாரி + மிளகாய்.]*

**காந்தாரியுப்பு** *kāndāri-y-uppu,* பெ.(n.) ஒருவகை உப்பு; an acrid salt.

*[காந்தாரி + உப்பு.]*

**காந்தாள்** *kāndāḷ,* பெ.(n.) காந்தன் பார்க்க; see *kāndan.*

*[காந்து (ஒளி) + ஆள்.]*

**காந்தாளம்** *kāndāḷam,* பெ.(n.) சினம் (வின்.); anger.

*[காய் → காந்து → காந்தாளம்.]*

**காத்தாளிகம்** *kāndāḷigam,* பெ.(n.) சின்னி;Indian copper leaf, m.sh.,

*[காந்தாளம் → காந்தாளிகம் (வே.க.186).]*

**காந்தானம்** *kāndāṉam* பெ.(n.) நாய்வேளை; dog mustard (சா.அக.).

*[காந்து → காந்தானம்.]*

**காந்தி**[1] *kāndi,* பெ.(n.)1. ஒளி (சூடா); brightness, light, glare. 2.அழகு(பிங்.); beauty. 3.ஒளிக்கதிர் (வின்.); ray. 4. வெப்பம் (மூ.அ.) heat. 5. காவிக்கல் (வின்.); ochre. 6. வைடூரியம் (வின்.); cat's-eye.

*[காந்து → காந்தி.]*

**காந்தி**[2] *kāndi,* பெ.(n.) ஒரு சொல்லணி வகை (யாழ்.அக.); a figure of speech.

*[காந்து → காந்தி.]*

**காந்திகொள்(ளு)–தல்** *kāndi-koḷ-,* 16 செ.கு.வி. (v.i.) உடம்பு வெப்பமாதல் (வின்.); to become morbidly inflamed, as the bodily system from neglect of bathing, from taking hot medicine, etc.

*[காந்தி + கொள்.]*

**காந்திப்போ–தல்** *kāndi-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) சோறு முதலியவை கரிந்துபோதல்; to be charred, as rice or curry by over-heating.

*[காந்தி +போ.]*

**காந்தியெரி–தல்** *kāndi-y-ēri-,* 4 செ.கு.வி.(v.i.) தலையிலும் உடம்பிலும் வெப்பத்தால் எரிச்சல் உண்டாதல்; to experience burning sensation, as the head or any other part of the body.

*[காந்தி +எரி.]*

**காந்தியெறி–த்தல்** *kāndi-y-eṟi-,* 4 செ.கு.வி. (v.i.) வெப்பம் தாக்குதல்; to strike hot, as rays of the sun etc.

*[காந்தி +எறி.]*

**காந்து**[1]**–தல்** *kāndu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. எரி வெடுத்தல்; to burn, smart as a sore. கைப்புண் காந்துகிறது. 2. வெப்பங்கொள்ளுதல்; to feel burn-

ing sensation in the body. 3. கருகுதல்; to be scorched,charred, reduced to cinder. சோறு சாந்திப் போயிற்று. 4.மனங்கொதித்தல்; to be hot with indigation. *"புத்திபோய்க் காந்துகின்றது" (கம்பரா. சடாயுகா.37).* 5. ஒளிவிடுதல்; to shine, give out lustre, emit rays. *"பரம்பிற் காந்து" (கம்பரா. நாட்டுப்.7.).* 6. பொறாமை கொள்ளுதல்; to burn with envy. அவளைக் கண்டு காந்து கிறான். 7.வீணாய் எரிதல்; to burn without use, as oven.

**ம.** காந்துக

*[காய்→ காய்ந்து→காந்து→காந்துதல்(வே.க. 185).]*

காந்து – L. Candeo, to glow with heat, to shine, glitter, to be of a shining white.

இலத்தீன் வினைச் சொற்களைத் தன்மை யொருமை யீறாகிய 'o' அல்லது நிகழ்கால வினையெச்ச ஈறாகிய 're' சேர்த்துக் குறிப்பது மரபு. இவற்றை நீக்கின் எஞ்சி நிற்பது வினைமுதனிலை என அறிக.

L. *Candela, a wax or tallow candle*, A.S. *candel*, OE. Candel, An, OF. candel (1)e E.candle (f. candere, to glow) cylinder of wax, tallow spemaceti, etc., enclosing wick, for giving light. L. candidus, shining white, white, candidum, n.white colour, a.honest, straight forward. E. candid, white, fair, sincere, honest, E.candescent, glowing with white heat, f. L. candeseere, f. candere, be white. L. candidaus, clothed in white; a candidate for office, who among the Romans was always clothed in white, for the consulship. E. candidate, one who offeres himself or is put forward to be elected to an office, orig. white-robed.

L. candor, whiteness, sincerity, E. candour, open-mindedness, frankness, impartiality. E.chandler, dealer in candles. ME., AF. chandeler, OF. chandelier f. L. candela.

இலத்தீன் தகர முதற் சொல்லாயிருந்தது, பிற்காலத்தில் ஆங்கிலப் பிரெஞ்சு மொழியிலும் இடையாங்கிலத்திலும் சகர முதற் சொல்லாகத் திரிந்து விட்டமையை நோக்குக. இச்சகர முதற் சொல்லே வேத மொழியிலும் சமற்கிருதத்திலும் முதலுயிர் குறுகியும் குறுகாதும் உள்ளது.

Skt. cand, to shine, be bright; to gladden. canda, *the moon*, L. *candaka, pleasing*, W; *the moon* W., moon light, W. candira, the moon, Bham, ii, 120.

candra, glittering, shining (as gold), having the brilliancy or hue of light (said of gods, of water (RV. x.121, 9; TS.vi) & of Soma), RV.; VS., TS. vi; TBr. 1; m. the moon. Candra, lunar. Scand, to shine. Scandra, shining, radiant.

இங்ஙனம் திகழ்தலையும் திகழும் திங்களையும் குறிக்கும் வடசொற்கள், காந்து என்னும் தென்சொல்லை அடிமூலமாகவும், இலத்தீன் வழியாக வந்த திரிசொல்லை நேர்முகமாகவும், கொண்டனவாயிருத்தல் காண்க.

ஒ.நோ. திகழ் → திங்கள், தகம் தங்கம். 'திகழ்' என்னும் வடிவம் இறந்துபட்டது. புரன் ‚பிறன்→ பிறழ் என்னும் திரிபில் இடைப்படு சொல் இறந்து பட்டமை காண்க.

தகுதல் = எரிதல், விளங்குதல், தகதகவென்று சொலிக்கிறது என்னும் வழக்கை நோக்குக. ஆரியர் வருகைக்கு முற்பட்ட பழம்பாண்டி நாடும் தனித் தமிழிலக்கியமும் முற்றும் மறைந்து போனமையால், பல இணைப்புண்ட சொற்களை இன்று காட்ட இயலவில்லையென்பதை அறிக *(செல்வி பெப்ரவரி 78 பக்.286).

**காந்து²–தல்** *kāndu-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1.சினத்தல்; to be angry with. *"காந்தி மலைக்குத்து மால்யானை" (வள்ளுவமா.11).* 2. சுட வைத்தல் (யாழ்ப்); to heat. 3. சுவறச்செய்தல் (யாழ்ப்.); to absorb, exhaust by evaporation, as water, rain. *4.பல்லினாற் கறுவுதல்* (யாழ்ப்.); to bite off, scrape out with the teeth, as a coconut.

**ம.** காந்துக

*[காய்→ காய்ந்து→காந்து.]*

**காந்துகம்** *kāndugam,* பெ.(n.) வெண்காந்தள் (சூடா.); white *kāndal* flower.

*[காந்து → காந்துகம்.]*

**காந்துகன்** *kāndugan,* பெ.(n.) 1. பந்தடிப்போன்; one who plays with ball. 2. தின்பண்டம் விற்பவன்; one who sells snacks (த.சொ.அக.).

*[கந்து → கந்துகன் → காந்துகன்.]*

**காந்தை** *kāndai,* பெ.(n.) 1. மனைவி; beloved woman, wife. *"குலக்காந்தை யொருத்தி" (பெருந்தொ. 1581).* 2. பெண்; woman. *"காந்தையருக் கணியனைய சானகியார்" (கம்பரா. இராவணன்வ 241).*

*[கந்து → காந்து → காந்தை → காந்து - பற்றுக்கோடு.]*

**காந்தைக்கண்** *kāndai-k-kaṇ,* பெ.(n.) இரண்டு இமைகளையும் விரித்து விழித்து உள்ளக் குறிப்பைக் காட்டும் கண்(பரத.பாவ.9); an expressive ocular movement which consists in opening both the eyes wide.

*[காந்தை + கண்.]*

**காப்பரிசி** *kāppariśi,* பெ.(n.) 1. பிறந்த குழந்தைக்குக் காப்பிடும் நாளில் வழங்கும் பாகுகலந்த அரிசி; rice mixed with treacle generally distributed on the occasion when a new-born baby is provided with bangles. 2. மணவிழா முதலிய காலங்களில் காப்பு நாண் கட்டும்போது கையிலிடும் அரிசி (இ.வ.); rice held in the hands of a person on his marriage occasion, when a string is tied round his wrist, with mantras to ward off evil. 3. இயேசு பிறந்த பதின்மூன்றாம் நாள் விழாவில் கோயிலில் வழங்கும் பாகு கலந்த அரிசி (R.C.); rice mixed with treacle distributed in Roman Catholic churches on the Epiphany, the 13th day after the nativity.

ம. காப்பரி

*[காப்பு + அரிசி.]*

**காப்பவிழ்-த்தல்** *kappavil-,* 2. செ.கு.வி. (v.i.) மணம் முதலிய விழாவில் கையில் கட்டிய காப்பு நாணை நீக்குதல்; to untie the ceremonial string from the wrist with appropriate ceremonies.

*[காப்பு + அவிழ்.]*

**காப்பன்** *kāppaṉ,* பெ.(n.) காவலாளி; guard. *"கடையருங் கணக்கருங் காப்பரு முளப்பட" (பெருங் உஞ்சைக். 32:82).*

*[கா → காப்பன்.]*

**காப்பாடு-தல்** *kāppāḍu-,* 5. செ.குன்றாவி.(v.t.) மறைத்துக்காத்தல்; to conceal, screen. *"துறைவன் கொடுமை நம்முணாணிக் காப்பா டும்மே" (குறுந்.9).*

தெ. காபாடு

*[காப்பு + ஆடு.]*

**காப்பாள்** *kāppāḷ,* பெ.(n.) காவல்வீரன்; one who defends, guards. *"மாரிக் குன்றத்துக் காப்பாளன்" (ஐங்குறு.206).*

*[காப்பு + ஆள்.]*

**காப்பாற்று-தல்** *kāppāṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.i.) உதவி செய்து காப்பாற்றுதல்; to preserve, guard, watch, take care of, protect, save. உன்னைக் கடவுள் காப்பாற்றுவார் (உ.வ.).

ம. காப்பாற்றுக, காப்பாத்துக; க.,தெ. காபாடு.

*[காப்பு + ஆற்று.]*

**காப்பிடு-தல்** *kāppiḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1.நெற்றியில் திருநீறு அல்லது மண்ணைக் குழைத்திட்டுக் காப்புச் செய்தல்; to rub sacred ashes or earth on the forehead, as a means of protection. *"சீரார் செழும்புழுதிக் காப்பிட்டு" (திவ்.இயற். சிறிய.ம.16).* 2. காப்புநாண் கட்டுதல்; to

tie a string, round the wrist of a person on occasions like marriage, with mantras to ward off evil. 3. பிறந்த குழந்தைக்கு ஐந்தாவது, ஏழாவது, ஒன்பதாவது நாளில் காப்புப் பூட்டுதல்; to provide a new born baby with bangles and anklets on the 5th, 7th or 9th day after its birth. 4. திருக்காப்புச் சாத்துதல்; to close the temple doors after worships. 5. ஆவணங்களில் அரச முத்திரை இடுதல்; to impress documents with the royal seal.

*[காப்பு → காப்பிடு.]*

**காப்பியக்கலித்துறை** *kāppiya-k-kalitturai* பெ.(n.) நெடிலடி நான்காய்வரும் கலித்துறை (வீரசோ.யாப்.18,உரை.); a variety of *kalitturai* verse.

*[காப்பியம் + கலித்துறை.]*

**காப்பியக்குடி** *kāppiya-k-kudi* பெ.(n.) 1. பழைய தமிழ்க் குடியின் பெயர்; name of an ancient Tamil clan. 2. சீர்காழிக்கு அருகிலுள்ள ஓர் ஊர். (சிலப்.30:83, கீழ்க்குறிப்பு); an ancient village near *Sirkāli*.

தெ. காப்புலு

*[காப்பு - காவல், காப்பியம் - உழவுத் தொழில். காப்பியன் - உழவன். காப்பியம் + குடி – காப்பியக்குடி - உழவர்குடி.]*

**காப்பியம்** *kāppiyam,* பெ.(n.) நால்வகை உறுதிப்பொருளையும் கூறுவதாய்க் கதைபற்றி வரும் தொடர்நிலைச் செய்யுள்; a narrative poem dealing with *aram, porul, inpam and vidu* describing the exploits of a hero, being of two kinds, viz peru-ṅ-kāppiyam and śiru-kāppiyam. *"காப்பியக் கவிகள்" (சீவக,1585).*

ம. காப்பியம்

skt. kāvya

*[காப்பு + இயம்.]*

**காப்பியன்** *kāppiyan,* பெ.(n.) 1. உழவன்; farmer. 2. வெள்ளிமுனி (பிங்.); Sukra, the son of Kavi or Bhrgu.

ம. காப்பியன்.

*[காப்பு → காப்பியன்.]*

**காப்பிரிக்கோழி** *kāppiri-k-kōli* பெ.(n.) மயிர்ச்சுருள் அடர்ந்த சிறகுகளையுடைய கோழிவகை; frizzled fowl, having curly feathers.

ம. காப்பிரிக்கோழி

*[காப்பிரி + கோழி.]*

**காப்பிரிமிளகாய்** *kāppiri-milagāy,* பெ.(n.) குடைமிளகாய் (M.M.170). bell-pepper.

*[காப்பிரி + மிளகாய்.]*

**காப்பிலியர்** *kāppiliyar,* பெ.(n.) திருநெல்வேலி போன்ற தென்மாவட்டங்களில் குடியேறிய கவந்தன் என்றழைக்கப்படும் கன்னட இனத்தவர்; a caste of Kanarease cultivator, found chiefly in Madura and Tirunalvelly districts, using the title Kavandan.

*[காப்பு→காப்புளார்→ காப்பிலியர்.]*

**காப்பிலியெலுமிச்சை** *kāppili-y-elumiccai* பெ.(n.) காட்டெலுமிச்சை (யாழ்ப்.); Indian wild lime.

*[காப்பிலி + எலுமிச்சை.]*

**காப்பீடு** *kāppidu,* பெ.(n.) 1. காப்பாற்று; safeguarding, protecting. 2. காக்கப்படுவது (சங்.அக.); that which is protected. 3.உயிர் போனால் தொகை வழங்கும் திட்டம்; insurance scheme.

*[காப்பு +இடு – காப்பிடு → காப்பீடு.]*

**காப்பு** *kāppu,* பெ.(n.) 1.காவல் (பிங்.); watching. 2. காவலாயுள்ளது; that which serves as a

protective. *"கண்ணேறு காத்திட்ட காப்பென" (குமர.பிர.மதுரைக்101).* 3. ***காப்புநாண்*** பார்க்க; see *kāppu-nāṉ.* 4. மூலிகை கெடாமல் இருக்கவும் அதன் கெட்ட குணங்கள் நீங்கவும் அதைச் சுற்றிக் கட்டும் மந்திரக்கயிறு; string or cord tied round medicinal plants with mantras either by way of preserving them from injury, or by way of atteuanting their pernicious effects, before using them in medicine. 5. தொடங்கிய செயல் இனிது முடிய வேண்டி நூலின் தொடக்கத்திற் செய்யும் கடவுள் வணக்கம்; invocation of deities at the commencement of a poem to facilitate its successful completion. 6. ***காப்புப்பருவம்*** (இலக்.வி.806) பார்க்க; see *kāppu-p-paruvam.* 7. திருநீறு; sacred ashes, as an amulet. *"விருத்தனாகிக் கூனிவந்துயர் காப்பிட்டான்" (திருவாலவா.38, 56).* 8. கைகால்களில் அணியும் வளை; bangle, bracelet, anklet. *"மைந்தரும்... காப்பணியாக் கொள்ளுங் கலைசையே" (கலைசைச்.53).* 9. வேலி (பிங்.); fence, hedge. 10. மதில்; surrounding wall, fortification. *"திருத் துஞ்சுந் திண்காப்பின்" (பட்டினப்.41).* 11. கோட்டையின் உள்ளுயர் நிலம் (பிங்.); Mound within a fort. 12. கதவு (பிங்.); door. 13. கதவின் தாழ்; bolt of a door. *"கதவுதனைச் காப்பவிழ்க்கப் புரிந்து" (அருட்பா.4. அருட்பிர.26).* 14. அரசமுத்திரை; royal seal. *"ஓலைமுகடு காப்பியாத்து" (கலித்.94).* 15. ஏட்டுக்கயிறு; the running cord connecting the leaves of a cadjau manuscript. *"புத்தகத்தின் காப்பொருவி வாசித்து" (விநாயகபு.62:15).* 16. காவலான இடம்; place of special protection. *"கெடில வீரட்டமும் ... உறைவார் காப்புக்களே".* 17. ஊர்; village, as in a pastoral region. *"கடிகொ ளிருங்காப்பின்" (கலித்.110).* 18. திசை நாயகர்கள்; guardian deities of the eight points of the compass. *"காப்புக் கடைநிறுத்தி" (சிலப். 28:231).* 19. சிறை; prison. *"பங்கயன் காப்பினை.... விடுத்தனன்" (கந்தபு. அயனைச்சிறைநீ.12).* 20. காலணி; sandals. *"காப்பணி தாளன்" (திருவிளை. பழியஞ்.13).* 21. அரசன் நுகர்தற்குரிய பொருள்கள்; objects of enjoyment by a king. *"மஞ்சனத்தை யுள்ளுறுத்த காப்பும்" (சீவக.1873).*

**ம.** காப்பு; **க., தெ., து.** காபு.

*[கா→ காப்பு]*

**காப்புக்கட்டிப்போடு–தல்** *kāppu-k-kaṭṭi-pōḍu.* 19 செ.குன்றாவி.(v.t.) 1. செயலை இடையில் நிறுத்துதல் (வின்.); to leave a business half done. 2. பின் வரும் நிகழ்விற்காக முன்னமே மற்றொரு செயலை நிறுத்தி வைத்தல்; to reserve keep back anything for subsequent use.

*[காப்பு +கட்டி +போடு.]*

**காப்புக்கட்டு¹–தல்** *kāppu-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. மஞ்சணூற்காப்பு அணிதல்; to tie an amulet; a yellow string on the arm in token of a vow and as a pledge of its fulfilment. 2. மூலிகைக்குக் காப்புநாண் கட்டுதல் (இ.வ.); to tie a string round herbs in order to dispel any evil curse. 3. ஊக்கத்துடன் செயலைத் தொடங்குதல் (வின்.); to engage in a pursuit. with earnestness. 4. கோயிலில் திருவிழாத் தொடங்குதல்; to commence a temple festival.

**ம.** காப்புகட்டுக

*[காப்பு + கட்டு.]*

**காப்புக்கட்டு²–தல்** *kāppu-k-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.t.) கொங்கு நாட்டில் பொங்கல் நாளுக்கு முதல்நாள், வீட்டின் முகப்பில் பூளைப்பூ, ஆவாரம் பூ, வேப்பிலை ஆகிய மூன்றையும் கொத்தாகச் செறுகி வைத்தல்; inserting the bunch containing, pūḷai, avārai and neem.

*[காப்பு + கட்டு.]*

**காப்புக்கடவுள்** *kāppu-k-kaḍavuḷ,* பெ.(n.) திருமால் (பிங்.); Višṇu, as preserver.

*[காப்பு + கடவுள்.]*

**காப்புக்கரப்பறி-தல்** *kāppu-k-karappaṟi-,* 4 செ.கு.வி.(v.i.) பொருளறிந்து ஏட்டெழுத்தைப் படித்தல்; to read intelligently, as without confounding the letters கா and கர–காப்புக்கரப்பறியாமல் வாசிக்கிறான் (வின்.).

*[காப்பு +கரப்பு + அறி.]*

தமிழ் எழுத்துகளில் ா,ர ஆகிய இரு எழுத்துகளும், அடிக்கோடின்றி முன்பு எழுதப்பட்டன. இடத்திற்கேற்பப் பொருள் வேறுபாடு அறிந்து காப்பு என்றும் படிக்க வேண்டும். திண்ணைப்பள்ளியில் தொடக்கக் கல்வி பயிலும் மாணவர்களைக் "காடு, கரடு பிரித்துப் படிக்கக் கற்றுக் கொண்டானா வெனக்" கேட்பதும் மரபு. இன்றும் ர், ரி, ரீ என்றே ரகரத்திற்கு அடிக்கோடின்றி எழுதுகிறோம்.

**காப்புக்காடு** *kāppu-k-kāḍu,* பெ.(n.) காவற் கட்டுள்ள காடு; reserved forest.

ம. காப்புக்காடு

*[காப்பு + காடு.]*

**காப்புச்செய்-தல்** *kāppu-c-cey-,* 1 செ.கு.வி. (v.i.) ஓலைச்சுவடியைக் கட்டிவைத்தல்; to tie up, as a cadjan bundle. *"உடன்காப்புச் செய்து" (தணிகைப்பு.அகத்.167).*

*[காப்பு +செய்.]*

**காப்புத்தடை** *kāppu-t-taḍai,* பெ.(n.) கோயில் திருவிழாக்கள் தொடங்குவதற்குக் காப்புக் கட்டியபின் யாரும் ஊரை விட்டு வெளியே செல்லக்கூடாதென்ற மரபு; the practice of staying in the village and not going out after the temple celebration commenced.

*[காப்பு + தடை.]*

**காப்புதாரி** *kāppu-tāri,* பெ.(n.) தற்காப்புரிமை (C.G.); right of private defence. ***காப்புரிமை*** பார்க்க; see *kāpurimai.*

*[காப்பு + தாரி.]*

**காப்புதாரிக்காடு** *kāppu-tāri-k-kāḍu,* பெ.(n.) ***காப்புக்காடு*** (C.G.) பார்க்க; see *kāppu-k-kāḍu.*

*[காப்பு + தாரி + காடு.]*

**காப்புநாண்** *kāppu-nāṇ,* பெ.(n.) விழாக் காலங்களில் காப்பாகக் கையில்கட்டும் மஞ்சள் நனைத்த கயிறு; string tied round the wrist of a person with mantras to ward off evils, as an amulet, in times of marriage, illness, etc. *"காப்பு நாண் கட்டக் கனாக்கண்டேன்" (திவ்.நாய்ச்.6,4.).*

*[காப்பு + நாண்.]*

**காப்புப்பணம் கட்டு-தல்** *kāppu-p-paṇam-kaṭṭu,* 5.செ.கு.வி. (v.i.) தெய்வத்துக்கு நேர்ந்துகொண்ட பணத்தை மஞ்சள் தோய்த்த துணியிற் கட்டி வைத்தல்; to tie up a coin in a piece of cloth dyed in saffron, as a vow to a deity in any temple.

*[காப்பு + பணம் + கட்டு.]*

**காப்புப்பருவம்** *kāppu-p-paruvam,* பெ.(n.) பிள்ளைத்தமிழ் கூறும் பத்துப் பருவங்களுள் முதற்பருவம், (இலக்.வி.808,உரை.); the first section of Piḷḷai-t-tamiḻ.

*[காப்பு + பருவம்.]*

**காப்புமறம்** *kāppu-maṟam,* பெ.(n.) காவல்வீரர்; military guard. *"காப்புமறம் தான்விட்டான் அக்கோ" (பதிற்றுப்.90,பதி.).*

*[காப்பு + மறம்.]*

**காப்புமாலை** *kāppu-mālai,* பெ.(n.) தெய்வங் காப்பதாக மூன்று ஐந்து அல்லது ஏழு செய்யுளாற்

பாடப்படும் ஒரு சிற்றிலக்கியம் (இலக்.வி, 832); a poem of three, five or seven verses in which the *protection of deities is implored.*

*[காப்பு + மாலை.]*

**காப்புவாவரிசி** *kāppuvā-v-ariśi* பெ.(n.) கார் போகரிசி (சு.வை.ர.227); seed of scurfy pea.

*[கார்புகா + அரிசி – காப்புவாவரிசி.]*

**காப்பொன்** *kā-p-pon,* பெ.(n.) நூறு பலம் நிறையுள்ள பொன்; a weight of gold = 100 palam *"அவர்க்கு ஒன்பதுகாப் பொன்னுங்...கொடுத்து" (பதிற்றுப்.60,பதி.).*

**க.**கப்பொன்

*[கா +பொன்.]*

**காபட்டியம்** *kāpaṭṭiyam,* பெ.(n.) இரண்டகம், கபடத்தன்மை; guile, deceit.

*[கவடு → கவட்டியம் → கபாட்டிய→ காபட்டியம் (கொ.வ.).]*

**காபணங்கட்டு–தல்** *kāpaṇam-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ***காப்புப்பணம் கட்டுதல்*** பார்க்க; see kāppu-p-paṇam-kaṭṭu-,

*[காப்புப்பணம் கட்டு → காபணங்கட்டு.]*

**காபணம்** *kāpaṇam,* பெ.(n.) ஒற்றடம் (இ.வ.); fomentation.

**ம.**காபணம்; **தெ.**காபடமு.

*[கப்பணம்→காபணம்.]*

**காபாலம்**[1] *kāpālam,* பெ.(n.) 1.நான்முகன் மண்டை ஓட்டைக் கையிலேந்திச் சிவன் ஆடுங் கூத்து; dance of Siva with the skull of Brahma in his hand. *"தலையங்கை கொண்டுநீ காபால மாடுங்கால்" (கலித்.1).* 2.சிவனியத்தின் அகப்புறச் சமயம் ஆறனுள் ஆதன் என்றும் உள்ளதாய்ப் பலவாய்ப் பரந்து இருப்பதென்றும், பச்சைக்கொடி பிடித்து மக்களின் தலையோட்டில் ஐயமேற்றுண்பவர் முத்தராய்ச் சிவசமம் ஆவரென்றும் கூறும் சமயம் (சி.போ.பா.அவை.); one of the minor Saivite systems which holds that souls are eternal, plural, and Omnipresent, enjoins taking alms in human skull with green flags in hand, as a necessary stage for becoming the mukta or perfected soul and promises the later Siva like bliss, one of six akappuraccamayam.

**க.**கப்பாள

**Aust.** cobbra (skull).

*[கப்பாளம்→காபாலம்.]*

**காபாலம்**[2] *kābālam,* பெ.(n.) குட்டநோய் (தொழுநோய்); leprosy (சா.அக.).

*[கரும்+கொப்புளம்–கருங்கொப்புளம்→ கப்புளம் →காபாலம் (கொ.வ.).]*

**காபாலி**[1] *kābāli,* பெ.(n.) 1. சிவன்; Siva. "விடையேறு காபாலி யீசன்" (திவ்.பெரியாழ் 1.3:2). 2.காபால சமயத்தான்; one who holds the kapala doctrine. *"இம்மொழியைக் காபாலி யியம்புமுன்" (பிரபோத. 18.29).*

**ம.**காபாலி

*[கன்னப்புலம்→கப்பாளம்→கபாலி→காபாலி.]*

**காபாலி**[2] *kābāli,* பெ.(n.) திருகுதாளி என்னும் செடி வகை; twisted tali. *'தில்லை முள்ளும் திருகுதாளியும்' (பழ.).*

*[கவல்→கவலி→காபாலி.]*

**காபாலிகம்** *kābāligam,* பெ.(n.) ***காபாலம்*** பார்க்க; see *kābālam. "இவ்விரதங் காபாலிக மென்பது" (பிரபோத,18:25).*

*[காபாலி → காபாலிகம்.]*

**காபினி** *kāpi,* பெ.(n.) ஒருவகைப் பண்(பரத. இராக.55); a musical mode.

*[ஒருகா. காப்பு → காப்பு→ காப்பினி→காபினி.]*

**காபோதி** *kābōdi,* பெ.(n.) 1. கண்ணிலி; blind person. 2.அறிவிலி; illiterate ignorant person. *"அறிவிலாத காபோதி" (திருப்பு 530).*

*[கண்போகி→கபோகி→ கபோதி→காபோதி.]*

**காம்பி** *kāmbi,* பெ.(n.) நீரிறைக்குங்கருவி (திவா.); an ancient water-lift.

*[காராம்பி → காம்பி.]*

**காம்பிரம்** *kāmpiram,* பெ.(n.) முருக்குமரம் (மலை.); palas tree.

*[காள் → காம்பு→ காம்பிரம்.]*

**காம்பிலி** *kāmbili,* பெ.(n.) வடநாடுகளுள் ஒன்று; of an ancient kingdom in N.India. *"காம்பிலிக் காவன்மன்னன்" (சீவக.611).*

**மறுவ.** காம்பிலியம்

*[காப்பு→காப்பிலி → காம்பிலி (உழவர் ஊர்).]*

**காம்பு[1]–தல்** *kāmbu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. அரிசி பயறு முதலிய உணவுப் பொருள்கள் நீண்ட நாளுக்குப்பின் சுவையற்றுப்போதல்; to become insipid, as food stuff.

*[குமுல் → கமல் → காமல் → காம்பு.]*

**காம்பு[2]** *kāmbu,* பெ.(n.) 1. இலை, பூ முதலியவற்றின் தாள் (சூடா.); flower-stalk, peduncle, pedicel, leaf-stalk. 2.மலர்க்கொம்பு (சூடா.); flowering branch.3.கருவிகளின் கைப்பிடி; straight handle, shaft, haft. *"கரிய காம்பினையுடைய வேல்" (மலைபடு.490,உரை.).* 4.மூங்கில்; bamboo. *"காம் பேர்தோட் பேதைக்கு"(குறள்,1272).* 5. ஆடைக்கரை; coloured borders of a cloth. *"காம்பு துகிலவை கீறி" (திவ்.பெரியாழ். 2.7:3) (திவா.).* 6. ஒருவகைப் பட்டாடை; a kind of silk cloth. "பொற்சுரிகை காம்பு சனவளை" (திவ்.பெரியாழ்.1,3,8). 7. பூசனி (மலை.); pumpkin. 8.அம்புச்சிறகு (நாமதீப); the feather end of an arrow.

**தெ.**காமு; **க., து.,**காவு; **ம.**காம்பு

*[கம்பு → காம்பு.]*

**காம்புக்கிண்ணம்** *kāmbu-k-kiṇṇam,* பெ.(n.) 1. கைப்பிடியுள்ள ஏனம்; small cup with a handle. 2. அகப்பை (யாழ்.அக.); ladle.

*[காம்பு + கிண்ணம்.]*

**காம்புச்சத்தகம்** *kāmbu-c-cattagam,* பெ.(n.) ஒலைவாருஞ் சிறுகத்தி (யாழ்ப்); iron handled curved knife, used in basket-making.

*[காம்பு +சத்தகம்.]*

**காம்புச்சல்லடை** *kāmbu-c-calladai,* பெ.(n.) சல்லடைவகை; colander.

*[காம்பு +சல்லடை.]*

**காம்புப்புகையிலை** *kāmbu-p-pugai-y-ilai,* பெ.(n.) காம்புடன் கூடிய புகையிலை (வின்.); tabacco leaf with a part of its stem.

*[காம்பு +புகை + இலை.]*

**காம்போதி** *kāmbōdi,* பெ.(n.) ஒரு பண் (திவா.); a specific melody-type.

*[கமம்→ காம் + பொதி+ காம்பொதி→காம்போதி.]*

**காமக்கடப்பு** *kāma-k-kaḍappu,* பெ.(n.) காம மிகுதி; inordinate passion, uncontrollable lust. *"காமக் கடப்பினுட் பணித்த கிளவி" (தொல்.பொருள்.160).*

*[காமம் + கடப்பு.]*

**காமக்கடவுள்** *kāma-k-kaḍavuḷ* பெ.(n.) 1. வழிபடு தெய்வம்; the particular manifestation of god which one chooses to worship as the god of one's choice. *"கண்டு மயரறுக்குங் காமக் கடவுள்" (பரிபா.15.37).* 2. மன்மதவேள், மதன், காமவேள்; Kāma, the God of love.

*[காமம் + கடவுள்.]*

**காமக்கண்ணி** *kāma-k-kaṇṇi,* பெ.(n.) காஞ்சியில் கோயில் கொண்டிருக்கும் காமாட்சியம்மன்; lit., she who has love-inspiring eyes, a name of Parvati as enshrined at Kānji param. *"காமக் கண்ணியாம் பெயரெய்துவை" (காஞ்சிப்பு. வீராட்.45).*

*[காமம் + கண்ணி.]*

**காமக்கலகம்** *kāma-k-kalagam,* பெ.(n.) 1.புணர்ச்சி; copulation. *"காமக்கலகந் தெளிந்த பின்" (தனிப்பா.1. 82:164).* 2. ஊடல்; lovers tiff.

*[காமம் +கலகம்.]*

**காமக்கவலை** *kāma-k-kavalai,* பெ.(n.) காம மிகுதியால் தோன்றும் நோய்; mental distress caused by sexual desire.

*[காமம் + கவலை.]*

**காமக்காய்ச்சல்** *kāma-k-kāyccal,* பெ.(n.) காமநோய்; love sickness.

*[காமம் + காய்ச்சல்]*

**காமக்காணி** *kāma-k-kāṇi,* பெ.(n.) ***காமக்கிழவு*** (சாச.தமிழ்க்.147) பார்க்க; see *kāma-k-kiḻavu.*

*[காமம் + காணி.]*

**காமக்கிழத்தி** *kāma-k-kiḻatti,* பெ.(n.) ஒருவர்க்கே உரிமை பூணுங் குலப்பரத்தை மகளாய்க் காமங்காரணமாகத் தலைமகனால் வரைந்து கொள்ளப்பட்டவள் (நம்பியகப்.113.); faithful concubine or mistress.

*[காமம் + கிழத்தி.]*

**காமக்கிழவு** *kāma-k-kiḻavu,* பெ.(n.) ஊர் உரிமை (சாச.தமிழ்க்.21,2); proprietory right to a village.

*[காமம் + கிழவு. கிழவு = கிழமை, உரிமை.]*

**காமக்கிழான்** *kām-k-kiḻan,* பெ.(n.) ஊர்க் காணியாளன் (சாச.தமிழ்க்.147); proprietor of a village.

*[காமம் + கிழான்.]*

**காமக்குறிப்பு** *kāma-k-kuṟippu,* பெ.(n.) 1. காதலிற்றோன்றும் மெய்ப்பாடு; bodily changes wrought by love. 2. காதலை வெளியிடும் சைகை; amorous gestures.

*[காமம் + குறிப்பு.]*

**காமக்கூட்டம்** *kāma-k-kuṭṭam,* பெ.(n.) தலைவனுந் தலைவியும் தம்முள் அன்பொத்துக் கூடுங் கூட்டம்; literary theme expounding clandestine intercourse between lovers before marriage.

*[காமம் + கூட்டம்.]*

**காமக்கொடி** *kāma-k-koḍi,* பெ.(n.) ***காமக்கண்ணி*** பார்க்க; see *kāma-k-kaṇṇi. "கச்சிப்பொலி காமக்கொடியுடன் கூடி" (தேவா.772,4).*

*[காமம் + கொடி.]*

**காமக்கோட்டத்தி** *kāma-k-kōṭṭatti,* பெ.(n.) உமை (சூடா.); Parvadi, who dwells in *kāmakkōṭṭam.*

*[காமக்கோட்டம் → காமக்கோட்டத்தி.]*

**காமக்கோட்டம்** *kāma-k-kōṭṭam,* பெ.(n.) 1.காஞ்சியிலுள்ள காமக்கண்ணி கோயில்; temple of Kamaksi at *Kāñjiparam. "காமக்கோட்டங் காவன் மெச்சி" (சிலப்.5:95,உரை).* 2. கோயில்களில் இறைவிக்கான தனிக்கோயில்; separate temple for Goddess.

*[காமம் + கோட்டம்.]*

**காமக்கோட்டி**[1] *kāma-k-kōṭṭi,* பெ.(n.)1.மலைமகள் (திவா.) Parvati, as enshrined at *Kāñjiparam.* 2. ***காமக்கோட்டம்*** பார்க்க; see *kāmakkōṭṭam. "உமையமர் காமக் கோட்டியை" (கந்தபு.நகரப்.78).*

*[காமம் + கோட்டி.]*

**காமக்கோட்டி**[2] *kāma-k-kōṭṭi,* பெ.(n.) காமப்பித்து (நெல்லை); mad, craving for sexual union.

*[காமம் +கோட்டி.]*

**காமகாண்டம்** *kāma-kāṇḍam,* பெ.(n.) காமன் வில்லாகப் பயன்படும் ஒருவகைப்பூ; a kind of flower used by Kāma as a bow. *"கயக்க ணின்ற பூவின்மிக்க காமகாண்டம்" (கந்தபு.காமத.62.)*

*[காமம் + காண்டம்.]*

**காமசாரி** *kāmaśāri,* பெ.(n.) 1. அடைக்கலாங் குருவி; domestic sparrow. 2. காமுகன்; one who has mad craving for sexual union. 3. தன் விருப்பப்படி உருவெடுத்து உலாவருவது; one who roam round with desired outlook.

*[காமம் + சாரி.]*

**காமசாலை** *kāma-sālai,* பெ.(n.) சிற்றின்பத்துக்குரிய இடம்; a place intended for amorous dalliance. *"தோகையர் மாதவக் காமசாலையுமே கணக்கில்லவே" (அரிச்.பு.நகரச். 14).*

*[காமம் +சாலை.]*

**காமத்தீ** *kāma-t-ti,* பெ.(n.) காமமாகிய நெருப்பு; venereal principle manifesting itself in the form of sexual desire.

மறுவ. காமாக்கினி

*[காமம் +தீ.]*

**காமத்துப்பால்** *kāmattu-p-pāl,* பெ.(n.) காமத்தைப் பற்றிக் கூறும் 25 அதிகாரங்களைக் கொண்ட திருக்குறட் பகுதி; section of a book treating of love, in 25 chapters in Thirukkural.

*[காமம் + அத்து +பால்.]*

**காமத்துப்பாலோர்** *kāmattu-p-pālōr,* பெ.(n.) ஒழுக்கமிலார் (திவா.); lascivious persons.

*[காமம் + அத்து + பாலோர்.]*

**காமதகனன்** *kāma-tagaṉaṉ,* பெ.(n.) சிவன் (திவா.); Siva, as one who burnt Kāma, god of love.

மறுவ. காமநாசன்

*[காமம் + தகனன்.]*

**காமதேவன்** *kāma-dēvaṉ,* பெ.(n.) காதல்தெய்வமாகிய காமன், மன்மதன்; Indian Cupid, the god of love. *"முயன்றுன்னை நோற்கின்றேன் காமதேவா" (திவ்.நாய்ச்.1,2).*

ம. காமதேவன்

*[காமம் + தேவன்.]*

**காமதேனு** *kāma-dēṉu,* பெ.(n.) விரும்பியதை யளிக்கும் தேவருலக ஆன் கறவை; celestial cow, which supplies every want. *"போனக மமைந்த தெனவக் காமதேனு... சொலுமே" (தாயு.மௌன.7).*

ம. காமதேனு

*[காமம் + தேனு.]*

**காமநாசன்** *kāma-nāsaṉ,* பெ.(n.) சிவன்(பிங்.); siva, the destroyer of love.

*[காமம் + நாசன்.]*

**காமநிலம்** *kāma-nilam,* பெ.(n.) இன்பம் துய்க்கும் நிலம்; world of enjoyment, paradise. *"காதலாற் காமபூமிக் கதிரொளி யவரு மொத்தார்" (சீவக.159).*

*[காமம் + நிலம்.]*

**காமநீர்** *kāma-nīr,* பெ.(n.) காமமிகுதியால் தோன்றும் நீர்; veneral secretion as semen, virile. *"கீண்ட பாறொறுமூறிய காமநீ ரொழுகிற் றென்ப" (கந்தபு.அசுரர்தோற்.15).*

*[காமம் +நீர்.]*

**காமநூல்** *kāma-nūl,* பெ.(n.) 1. காமம் பற்றிய நூல்; science of sex. 2. ***காமகாண்டம்*** பார்க்க; (சிலப்.2:44.உரை.) see *kāma-kāṇḍam.*

*[காமம் + நூல்.]*

**காமநோய்** *kāma-nōy,* பெ.(n.) காமத்தால் உண்டாகும் நோய்; love-sickness. *"உரவோர்கட் காமநோ யோஒ கொடிதே" (நாலடி,88).*

*[காமம் + நோய்.]*

**காமப்பற்று** *kāma-p-paṟṟu,* பெ.(n.) காமவிருப்பு; sexual desire. *"பாரிடை யுயிருங் காமப் பற்றுவிட் டிருந்த தன்றே" (கந்தபு.மேரு.17).*

*[காமம் + பற்று.]*

**காமப்பால்** *kama-p-pāl,* பெ.(n.) முலைப்பால்; mother's milk. *"காமப்பால் விட்டரைப்பாய்" (சங்.அக.).*

*[காமம் + பால்.]*

**காமப்பித்து** *kāma-p-pittu,* பெ.(n.) அறிவினை யழிக்குந் தீராப் பெருங்காமம்; inordinate passion or lust; maddening passion 2. காமமிக்கவன்; person given to inordinate lust.

*[காமம் + பித்து.]*

**காமப்புணர்ச்சி** *kāma-p-puṇarcci,* பெ.(n.) இயற்கைப் புணர்ச்சி (தொல். பொருள்.498); first union of lovers brought about by destiny..

*[காமம் + புணர்ச்சி.]*

**காமப்பூ** *kāma-p-pū,* பெ.(n.) மதனகாமப்பூ என்னும் ஒருவகைக் கொடி (மலை.); cowslip creeper.

*[காமம் + பூ.]*

**காமப்பேய்** *kāma-p-pēy,* பெ.(n.) ***காமப்பித்து*** பார்க்க; see *kāma-p-pittu.*

*[காமம் +பேய்.]*

**காமப்பைத்தியம்** *kāma-p-paittiyam,* பெ.(n.) ***காமப்பித்து*** பார்க்க; see *kāma-p-pittu.*

*[காமம் + பைத்தியம்.]*

**காமப்போர்** *kāma-p-pōr,* பெ.(n.) புணர்ச்சி; sexual union.

*[காமம் + போர்.]*

**காமபாணம்** *kāma-pāṇam,* பெ.(n.) காமன் அம்பு; arrow of God for love. *"காம பாணம் படப்பட" (இரகு.மட்சி.1.).*

*[காமம் + பாணம்.]*

**காமபாலன்** *kāma-bālaṉ,* பெ.(n.) பலராமன்; Balaraman, the brother of Krishna, as the fulfiller of his followers' desires. *"காம பாலனுஞ் சொன்னான்"(பாரத.உலா.க.3)*

*[காமம் + பாலன்.]*

**காமபூமி** *kāma-pūmi,* பெ.(n.) **காமநிலம்** பார்க்க; see *kāma-nilam. "காதலாற் காமபூமிக் கதிரொளி அவருமொத்தார்" (சீவக. 189).*

*[காமம் + பூமி.]*

**காமம்** *kāmam,* பெ.(n.) 1. விருப்பம்; desire. *"காமம் வெகுளி மயக்கம்"(குறள். 360).* 2. உறுதிப் பொருள்களுள் ஒன்றான இன்பம்; happiness in love, one of three kinds of beneficence. *"காமத்தின் மன்னும் வழிமுறையே நிற்றுநாம்" (திவ்.இயற்.பெரியதி.ம. 10.37).* 3. புணர்ச்சியின்பம்; sexual pleasure. *"காமத்திற் செம்பாக மன்று"(குறள்,1092).* 4. காமநீர்; venereal secretion. *"மெய் பொடித் திருங்காம மிக்கொழுக்கும்" (உபதேசகா. அயமுகி. 25).* 5. விரும்பிய பொருள்; object of desire *"தாம் வேண்டுங் காமமே காட்டுங் கடிது"(திவ். இயற்.2,92).* 6. பிறப்போரைக்கு (இலக்கினத்துக்கு) ஏழாவது இடம் (சங்.அக.); the seventh house from the ascendant. 7.**காமமரம்** (மூ.அ.) பார்க்க; see *kāma-maram.*

*[கமம் : நிறைவு, மகிழ்வு, விருப்பம் "கமம் நிறைந்தியலும்" (தொல்.) கமம் → காமம்.]*

வடமொழியாளர் காம் என்னும் சொல்லுக்கு 'கம்' என்பதை வேராகக் காட்டுவர். ஆயின் வடமொழியில் 'கம்' இடைச்சொல்லாகவும், ஆம், நலம் என்னும் பொருள்களில் வழங்குவதாகவும் நான்காம் வேற்றுமை உருபாகவும் வழங்குகிறது.

**காமமரம்** *kāma-maram,* பெ.(n.) சவ்வரிசி தரும் மரவகை (மூ.அ.); sago ferm palm.

*[காமம் + மரம்.]*

**காமமலடி** *kāma-malaḍi,* பெ.(n.) கனவினால் கருப்பம் சிதைவுற்றவள் (சைவச. பொது. 241, உரை); woman who has had an abortion because of a dream.

*[காமம் + மலடி.]*

**காமர்**[1] *kāmar,* பெ.(n.) 1. விருப்பம்; desire. *"காமர் கடும்புனல்"(கலித்.39).* 2. அழகு; beauty. *"காமர் வண்ண மார்பிற் றாருங் கொன்றை" (புறநா.1:1).*

*[காமம் → காமர்.]*

**காமரசி** *kāmarasi,* பெ.(n.) **நெருஞ்சி** (மலை.) பார்க்க; see *neruñji.*

*[காமம் + அரசி.]*

**காமரம்**[1] *kāmaram,* பெ.(n.) 1. அடுப்பு (திவா.); fireplace for cooking. 2. அத்த நாள் (சூடா.); the 13th star.

*[கமர்→கமரம்→காமரம்.]*

**காமரம்**[2] *kāmaram,* பெ.(n.) 1. இசை (பிங்.); singing, music, melody. 2. **சீ**காமரம் என்னும் பண்; a musical mode. *"தும்பி காமரஞ் செய்யும்" (சிறு பாண்.77).*

*[கமரம்→காமரம்.]*

**காமரம்**[3] *kāmaram,* பெ.(n.) **அகில்** (மலை.) பார்க்க; see *agil.*

*[கார்[3] + மரம்.]*

**காமரம்**[4] *kāmaram,* பெ.(n.) **ஆல்**[1] (வின்.) பார்க்க; see *āl.*

**காமரம்**[5] *kāmaram,* பெ.(n.) காவடித் தண்டு (யாழ்ப்.); shoulder pole for carrying heavy timber.

ம. காமரம்

*[காவு + மரம்.]*

**காமரம்**[6] *kāmaram,* பெ.(n.) வண்டு (யாழ்.அக.); beetle.

*[கா+அமர்+அம் = காவமரம்→காமரம் (பூஞ்சோலையில் அமரும் வண்டு).]*

**காமரி** *kāmari,* பெ.(n.) ***புளிநறளை*** (மலை.) பார்க்க; see *puḷi-naraḷai.*

*[கமர்→கமரி→காமரி]*

**காமரீசம்** *kāmarīšam,* பெ.(n.) ***புல்லுருவி*** (மலை.) பார்க்க; see *pulluruvi.*

*[கமர்→கமரிசம்→காமரீசம்]*

**காமரு** *kāmaru,* பெ.(n.) விருப்பம் பொருந்துகின்ற, விரும்பத்தக்க; likeable.

*[காம் + மரு (மருவு) – காமரு. (வ.மொ.வ.115).]*

**காமரூபம்** *kāma-rūbam,* பெ.(n.) 1. பண்டைய இந்தியாவின் 56 நாடுகளுள் ஒன்று; இன்றைய அசாம் பகுதி; an ancient country, now part of Assam. 2. விரும்பிய படி மேற்கொள்ளும் உருவம்; form assumed at pleasure. *"காமரூபங் கொண்டெழுந்தளிப்பான்" (திவ்.திருவாய்.10,1,10)*

*[காமம் + உருவம் – காமவுருவம்→காமரூபம்.]*

**காமரூபி** *kāma-rūpi,* பெ.(n.) 1. நினைத்த உருவங் கொள்பவன்; one able to assume any form at pleasure. 2. ***பச்சோந்தி*** பார்க்க; (திவா.);see *paccōnti.*

*[காமம் + உரூபி.]*

**காமல்லிகை** *kā-malligai,* பெ.(n.) ***வனமல்லிகை*** (பதார்த்த.478) பார்க்க; see *vaṉa-malligai.*

*[கா + மல்லிகை.]*

**காமலீலை** *kāma-līlai,* பெ.(n.) ***காமவிளையாட்டு*** பார்க்க; see kāma-viḷai-y-āṭṭu.

ம. காமலீல

*[காமம் + லீலை.]*

**காமலை** *kāmalai,* பெ.(n.) ***காமாலை*** பார்க்க; see *kāmālai. "பந்தியங் காமலை குட்டங்கள்" (மருதூ. 32.)*

*[காமாலை→ காமலை.]*

**காமவர்த்தனி** *kāma-varttaṉi,* பெ.(n.) பண்வகைகளுள் ஒன்று (சங்.சந்.47); a primary raga.

*[காமம் + வர்த்தனி.]*

**காமவல்லி** *kāma-valli,* பெ.(n.) 1. கற்பகத்திற் படருங்கொடி; fabled creeper of gold that twines round the celestial kalpaga tree. *"எரிமணிப் பளிக்கு மாடத் தெழுந்ததோர் காம வல்லி" (சிந்தா.காந்த.57.).* 2. பெண்; woman. *"இலங்கார் வலவடக் கொங்கை வெற்பாலிணை நீலவுண்கட் பொலங் காமவலவடக் கொங் காமவல்லி கடைந்த வப்போது" (வாண.54).*

*[காமம் + வல்லி.]*

**காமவாயில்** *kāma-vāyil,* பெ.(n.) இயற்கையன்பு; love as the gateway to conjugal happiness. *"உருவு நிறுத்த காம வாயில்" (தொல். பொருள்.273).*

*[காமம் + வாயில்.]*

**காமவிடாய்** *kāma-viḍāy,* பெ.(n.) கலவி விருப்பம்; thirst for sexual union. *"ஆறேனோ வெய்தாமக் காம விடாய்" (நள.சுயம்.44).*

*[காமம் + விடாய்.]*

**காமவிளையாட்டு** *kāma-viḷaiyāṭṭu,* பெ.(n.) புணர்ச்சி வேட்கைக் கேளிக்கைச் செயல்கள்; love sports.

மறுவ. காமலீலை

*[காமம் + விளையாட்டு.]*

**காமவின்னிசை** *kāma-v-inniśai,* பெ.(n.) செந்துறைப் பாட்டின்வகை (யாப்.வி.538); a kind of sen-durai verse.

*[காமம் + இன்னிசை.]*

**காமவெறி** *kāma-veṟi,* பெ.(n.) ***காமப்பித்து*** பார்க்க; see *kāma-pittu.*

*[காமம் + வெறி.]*

**காமவேதம்** *kāma-vēdam,* பெ.(n.) ***காமநூல்*** பார்க்க; see *kāma-nūl.*"காமவேதத்தைக் கருங் கடைக் கண்களான் மொழிவார்" (பாரத. அருச்சுனன்தவ. 62).*

*[காமம் + வேதம்.]*

**காமவேழம்** *kāma-vēḻam,* பெ.(n.) ***நாணல்*** *(பிங்.)* பார்க்க; see nāṇal.

*[காமம் + வேழம்.]*

**காமவேள்** *kāma-vēḷ,* பெ.(n.) காமன் ; Kāma, the Indian cupid. *"கருப்புவின் மலர்க்கணைக் காம வேளை"(திவ்.நாய்ச்.1,10)*

*[காமம் + வேள்.]*

**காமற்கடந்தோன்** *kāmaṟ-kaḍandōṉ,* பெ.(n.) புத்தன் (மணிமே.5:102). Buddha, as having conquered Kāma the Buddhistic God of evil.

*[காமம் → காமன் + கடந்தோன்.]*

**காமற்காய்ந்தோன்** *kāmaṟ-kāyndōṉ,* பெ.(n.) 1. அருகன் (திவா.); Arhat. 2. சிவன்; śiva.

*[காமன் + காய்ந்தோன்.]*

**காமன்**[1] *kāmaṉ,* பெ.(n.) 1. காதற்கடவுள்; the Indian cupid. *"பண்டாரங் காமன் படையிவள் கண்காண்மின்" (பரிபா.11.123உ.).* 2. புத்த சமயத்திற் கூறும் தீமைவிளைக்கும் தெய்வம்; the Buddhistic god of evil. 3. ஒருவகை வரிக்கூத்து (சிலப். 3,13, உரை); a kind of masquerade dance.

*[கமம் → காமம் → காமன்.]*

**காமன்**[2] *kā-maṉ,* பெ.(n.) வண்டு (சூடா.); beetle, that abides in a grove. 2. திப்பிலி (திவா.); long pepper.

*[கா+மன்–காமன்.]*

**காமன்கொடி** *kāmaṉ-kōḍi,* பெ.(n.) காமவேளின் அடையாளமான மீன் (பிங்.); fish, as the emblem of *Kāma's* banner.

*[காமன் + கொடி.]*

**காமன்பண்டிகை** *kāmaṉ-paṇḍigai,* பெ.(n.) காமனை எரிக்கும் திருவிழா; a spring festival in the lunar month of Magam to commemorate the burning of *Kāma* bySiva.

*[காமன் + பண்டிகை.]*

**காமன்ரதி**[1] *kāmaṉ-rati,* பெ. (n.) கருந்துளசி; black basil (சா. அக.).

*[காமன் + ரதி. Skt.rati>த.ரதி.]*

**காமன்வில்** *kāmaṉ-vil,* பெ. (n.) கரும்பு (பிங்.); sugar -cane, as Kāmā's bow.

*[காமன் + வில்.]*

**காமனம்** *kāmaṉam,* பெ. (n.) திப்பிலி; long pepper (சா.அக.).

*[காமன் + அம்.]*

**காமனாள்** *kāmaṉāḷ,* பெ. (n.) காமன் திருநாள் கொண்டாடும் பருவம்; spring season.

*[காமன் + நாள்.]*

**காமனி** *kāmaṉi,* பெ.(n.) நவச்சாரம்; Ammonium chloride (சா. அக.).

*[கமம் → கமணம் → கமணி → காமணி.]*

**காமனூர்தி** *kāmaṉ-ūrdi,* பெ.(n.) தென்றல் (பிங்.); south breeze, as the vehicle of Kāmā.

*[காமன் + ஊர்தி.]*

**காமனை**[1] *kāmaṉai,* பெ.(n.) சிறு கிழங்கு (மலை.); goa potato.

*[கா+மனை.]*

**காமனை**[2] *kāmaṉai,* பெ.(n.) விருப்பம்; desire. *"காமனைகள் பூரித்து" (தேவா. 134:9).*

*[கமம் → காமம் → காமன் → காமனை.]*

**காமனைங்கணை** *kāmaṉai-ṅ-kaṇai,* பெ.(n.) காமனின் ஐந்து அம்புகள்; Kāmā's five arrows.

க. காமபாண

*[காமன் + ஐங்கணை.]*

**காமனின் ஐந்து அம்புகள் :**

1. தாமரை மலர் 2. அசோகுமலர் 3. மாமலர் 4. முல்லைமலர் 5. கருங்குவளை மலர்

**காமாட்சி** *kāmāṭci,* பெ.(n.) காஞ்சியிலுள்ள அம்மன் (சிவரக. தேவிமேரு. 13); Pārvadi worshipped at Kanjipuram, as having love - inspiring eyes.

Skt. kāmāksii

*[கமம் + காமம் (விருப்பம்) + அட்சி.(கண்) Skt. atssa>த.அட்சி : கண்.]*

**காமாட்சிக்கீரை** *kāmāṭci-k-kīrai,* பெ.(n.) கீரைவகை; a kind of greens.

*[காமாட்சி + கீரை.]*

**காமாட்சிப்புல்** *kāmāṭci-p-pul,* பெ.(n.) 1. புல்வகை (I.P.); black khus-khus grass. 2. காவட்டம்புல் (வின்.); citronella grass. 3. சுன்னாறிப்புல் (M.M. 765); roussa oil grass. 4. கருப்பூரப்புல் (M.M.); lemon grass.

*[காமாட்சி + புல்.]*

**காமாட்சிப்புல் தைலம்** *kāmācci-p-pul-tailam,* பெ.(n.) காவட்டம் புல்லை, மற்றக் கடைச் சரக்குகளோடு சேர்த்து அணியமாக்கும் மருந்து எண்ணெய்; a medicated oil extracted from the root of citronella mixed with other ingrediants and used for colic and sprain (சா.அக.).

மறுவ. காவட்டம்புல் எண்ணெய்.

*[காமாட்சி + புல் + தைலம்.]*

*காவட்டம் புல் எண்ணெய் பார்க்க; see kavaṭṭam-puleṇṇai.*

**காமாட்சியம்மாள் கை விளக்கு** *kāmāṭci-y-ammāl-kai-viḷakku,* பெ.(n.) வீட்டின் முன்சுவர்ப் பக்கத்தில் மாடப்புரையில் வைக்கும் விளக்கு (இ.வ.); hand - lamp put in a niche of the front wall of a house.

*[காமாட்சி + அம்மாள் + கை + விளக்கு.]*

**காமாட்சி விளக்கு** *kāmāṭci-viḷakku,* பெ.(n.) திருமணம் முதலிய விழாக்களில் பயன்படுத்தும் பாவை விளக்கு (E.T.); brass lamp in the form of a woman who holds with both her hands, a hollow vessel for oil and wick, used during marriage occasions.

*[காமாட்சி + விளக்கு.]*



காமாட்சி விளக்கு

**காமாட்டி** *kāmāṭṭi,* பெ.(n.) 1. மண்வெட்டுவோன்; labourer, one who works with a hoe, digger of earth. 2. மூடன்; fool, idiot, dunce. *"உன் பிள்ளை பரதன் காமாட்டி யானானே" (இராமநா. அயோத்.6).*

**ம.** காமாட்டி; **க.,தெ.** காமாடி; **ம** காமாட்டி; **து.** காமாதெ. **மரா.** காமாட்கி

**Mar.** kāmāṭhi

*[கம்மம் (உழவு) + ஆள் - கம்மாள் → கம்மாளி → கம்மாத்தன் → கம்மாத்தி → கம்மாட்டி → காமாட்டி..]*

**காமாடு-தல்** *kāmāḍu,* 5 செ.குவி .(v.i.), காமவின்பம் நுகர்தல்; to indulge in sexual pleasures.

*[காமம் + ஆடு.]*

**காமாதுரன்** *kāmādduraṉ,* பெ.(n.) காம ஆசை மிக்கவன்; libidinous person. ***காமி*** பார்க்க; see *kāmi.*

**Skt.** kāmātura

*[காமன்+ஆதுரன். Skt. ātura>த.ஆதுரன்.]*

**காமாந்தகன்** *kāmāṉdagaṉ,* பெ.(n.) சிவன்; Siva, the destroyer of Kāmā.

**ம.** காமந்தகன்; **க.** காமாந்தக.

*[காமன் + அந்தகன்]*

**காமாப்பலகை** *kāmā-p-palagai,* பெ.(n.) மரக்கலத்தின் சுற்றுப் பலகை (வின்.); top board around the side of a boat.

*[ககம் → காமம் + பலகை - காமப்பலகை → காமாப்பலகை.]*

**காமாரி** *kāmāri,* பெ.(n.) 1. சிவன் (பிங்.); Siva, the enemy of *Kāmā.* 2. காளி; Durgā. *"காமாரி திருமுன்னர்ச் சாந்திகனைக் காட்டுறலும்" (உபதேசகா. உருத்திராக்க. 162).*

**ம., க.** காமாரி.

**Skt.** kāmāri

*[காமம் + மாரி.]*

**காமாலை** *kāmālai,* பெ.(n.) பித்தம் அதிக மாவதால் ஏற்படும் ஒருவகை நோய்; jaundice. *"காமாலை சோகை சுரம்" (திருப்பு. 153).*

**ம.** காமால, காமில; தெ. காமிலா; து. காமால, காமெலி;

**Skt.** kāmala; **Mar.** kāmiṉ, kāmiṉi

**மறுவ.** காமாலை, மஞ்சள் காமாலை.

*[கமம் → காமம் + ஆலை.]*

**காமி[1] - த்தல்** *kāmi-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1.விரும்புதல்; to desire. *"தப்புதி யறத்தை யேழாய் தருமத்தைக் காமி யாதே" (கம்பரா. நிந்த. 54).* 2. காமங் கொள்ளுதல்; to have sexual desire.

**ம.** காமிக்குக

*[காமம் → காமி.]*

**காமி[2]-த்தல்** *kāmi-,* 1 பி.வி. (v.caus.) காண்பித்தல், காட்டுதல்; to show, exhibit, display.

*[காண்பி → காமி]*

**காமி[3]** *kāmi,* பெ.(n.) காமம் மிக்கவன் ; lustful person. *"களிமடி மானி காமி கள்வன்" (நன். 38).*

**ம., க.** காமி

**Skt.** kāmin

*[காமம் → காமி]*

**காமி[4]** *kāmi,* பெ.(n.) 1. உவர்மண்; fuller's earth. 2. பொன்னிமிளை; gold - coloured antimony.

*[கம் → கம்மு → காமு → காமி.]*

**காமிகம்** *kāmigam,* பெ.(n.) சிவனிய நூல்கள் இருபத் தெட்டுள் ஒன்று; an ancient Saiva scripture in Sanskrit,one of 28 Sivagamam. *"காமிக மாதி யைந்து முற்பவித்து" (சைவச. பொது.331).*

**ம.** காமிகம்; **க.** காமிகாகம்

Skt. kāmika

*[காமம் → காமிகம்.]*

**காமிண்டன்** *kāmiṇḍaṉ,* பெ.(n.) 1. காவலன்; king, captain. 2. தலைவன்; chief.

*[மிண்டு = வலிமை. மிண்டன் = வல்லோன். கா + மிண்டன் (தமி.வ.300).]*

**காமியக்கல்** *kāmiya-k-kal,* பெ.(n.) கோமேதகம் (வின்.) cinnamon stone.

*[காமியம் + கல்.]*

**காமினி** *kāmiṉi,* பெ.(n.) காமம்மிக்கபெண்; lustful woman. *"கஞ்சமலராலனைய காமினி" (உத்தரரா. அசுவமே.65.).*

**ம., க.** காமினி

**Skt.** kāmin

*[காமி² + காமினி.]*

**காமீனி** *kāmīṉi,* பெ.(n.) பிறப்போரையிலிருந்து ஏழாமிடத்துள்ள கோள் (சா. அக.); the planet in the seventh house from the ascendant.

*[காமி² → காமீனி.]*

**காமுகன்¹** *kāmugaṉ,* பெ.(n.) 1. பல பெண்களோடு உடலுறவு கொள்ள மிகுந்த விருப்பம் உள்ளவன்; lustful person. *"காமுகர்ப் படுவ மாதர் கண்களும்" (கம்பரா.நாட். 5).* 2. நாகரிகன் (பிங்.); polite, polished man.

**ம.** காமுகன்; **க.** காமுக; **து.** காமுகெ

**Skt.** kāmuka

*[காமம் → காமுகன்.]*

**காமுகன்²** *kāmugaṉ,* பெ.(n.) 1.திருமால்; Viṣṇu. 2. ***காமதேவன்*** பார்க்க; see *kāma-dēvaṉ.*

**Skt.** kāmuka

*[காமம் → காமுகன்.]*

**காமுண்டன்** *kāmuṇḍaṉ,* பெ.(n.) படைத்துறை மறவரின் பதவிப் பெயர்; designation of the chief of an army formation.

*[சாமன் → சாமந்தன் → சாமுண்டன் → காமுண்டன்.]*

**காமுருகி¹** *kāmurugi,* பெ.(n.) கொடியவள் (யாழ்.அக.); wicked woman.

*[காமம் → உருகி.]*

**காமுருகி²** *kāmurugi,* பெ.(n.) ஓணான் (வின்.); blood - sucker.

*[கா → முருகி.]*

**காமுறு – தல்** *kāmuṟu-,* 20 செ.குன்றாவி.(v.t.) 1.விரும்புதல்; to desire, wish for. *"இன்பமே காமுறுவ ரேழையார்" (நாலடி, 60).* 2.வேண்டிக் கொள்ளுதல்; to beseech, pray for. *"கனைகதிர்க் கனலியைக் காமுற லியைவதோ" (கலித் 16).*

*[காமம் + உறு –.]*

**காமூச்சு** *kāmūccu,* பெ.(n.) முக்கால் நாழிகை வழி (யாழ்.அக.); distance which would take 18 minutes to walk.

*[கா = முக்கால், மூச்சு = நாழிகை. கா + மூச்சு.]*

ஒரு காதத் தொலைவில் பத்தில் ஒரு பகுதி நடப்பதற்கு ஆகும் காலம்.

**காய்¹ – தல்** *kāy-,*4 செ.கு.வி (v.i.) 1. நீர் முதலியன வெப்பமுறுதல்; to become hot. 2. சுடுதல்; to burn; to be warm, as body in temperature. சுரத்தால் உடல் காய்கிறது. 3. உலர்தல்; to wither, as vegetables by the sun; to parch, as the lips or mouth; to dry, as the ground. வெயிலிற் காய்ந்த பொருள். 4. மெலிதல் (வின்.); to be dried up, as the humours of the body; to become emaciated. 5. வயிறு பசியால் வருந்துதல்; starving due to hunger.

**ம.** காயுக; **க.** காய்; **தெ.** காகு; **து.** காயுனி; **குட., கோத்.** காய்; **துட.** கேகாய்; **கொலா., நா.** காங்க்; **பர்.** காபிட்; **கோண்.** காசனா; **குரு.** காய்னா; **மா.** க்வெ; **கூ.** காந்த.

**Fin.** kajo; **Es.** kajastada; **Jap.** kaga; **Q.** jaya.

*kây,* to be hot, to burn. The **Tel.** *kâ-gu* (also *kâ-lu*), **Can.** *kây-u,* to burn, and the **Can.** *kâge,* heat, compared with the Tamil *kâṅ-gei,*

show that the ultimate root is *kâ,* to which *y* or *gu* is added dialectically as a formative. The only **Sans.** word which seems to be related to this **Drav.** one is *kâm-a,* to desire; and we should not, perhaps, have suspected this to be related, were it not for its connection with the Hebrew *hâm-ad,* to desire, and the derivation of that word from *hâm-am* (base *hâm*), to be warm. Comp. with the Dravidian *kâ* or *kây*, the Greek *kai-w* (*kai-ô*) (Attick *ká-w) (ka-ô)* to burn, to be hot. The words seem identical. Liddell and Scott represent *kaiw (kaiô)* to be connected with the Sanskrit such, to dry. How much more nearly it appears to be connected with the Dravidian *kây*. Besides, the Dravidian languages have another word which seems to have a real relation to sush-a - viz., *suḍ-u,* to burn. To heat, or be hot, to burn, to boil. Comp. Finnish *keite, keitta,* to boil, to cook; Hungarian *keszil.* Comp. especially the Indo-European affinities of this word.

*[கனல் → கனய் → காய்.]*

**காய்²-தல்** *kāy-,* 2 செ.குன்றாவி. (v.i.) 1. எரித்தல்; to burn, consume. *"மதவேள் தன்னுடலங் காய்ந்தார்" (தேவா. 15:6).* 2. அழித்தல்; to kill, destroy. *"கஞ்சனைக் காய்ந்தானை" (திவ். பெரியதி. 7.6.5).* 3. விலக்குதல், to remove, do away with, lay aside. *"கோப முதலிய குற்றங் காய்ந்தார்" (பெரியபு அப்பூதி .2).* 4. வெறுத்தல்; to be prejudice to dislike, hate. *"காய்த லுவத்த லகற்றி யொருபொருட்க ணாய்தல்" (அறநெறி.22).*

ம. காயுக

*[கனல் → கனய் → காய்.]*

**காய்³-த்தல்** *kāy-,*4 செ.கு.வி(v.i.) மரம்செடி முதலியன காய்களைக் கொள்ளுதல்; to bear fruit.

ம. காய்க்குக; க. காய்; தெ. காசு, கான்சு; து. காயுனி.

*[கள் → காள் → காழ் → காய். (மு.தா.244).]*

**காய்⁴-த்தல்** *kāy-,*2 செ.கு.வி(v.i.) நுகர்வு முதிர்தல்; to be of ripe experience. *"உணரு மாண் பினாற் காய்த்தவர்" (கம்பரா. விபீடண.95).*

*[கா → காய்.]*

**காய்⁵** *kāy,* பெ.(n.) 1. முதிர்ந்து பழுக்காத மரஞ் செடிகளின் பலன்; unripe fruit. *"கனி யொழிய ... நற்கா யுதிர்தலு முண்டு" (நாலடி, 19).* 2. மூவசைச் சீரின் இறுதியிலுள்ள நேரசை; the last metrical division in a word of three syllables sounding like kāy. *"ஆம்கடை காயடையின்" (காரிகை, உறுப்பு. 7).* 3. ***காய்ச்சீர்*** பார்க்க; see *kāy-c-cīr.* 4. பழுக்காத புண்கட்டி; unripe boil. கட்டி இன்னும் காயாக இருக்கிறது. 5. முதிராது விழுங் கரு (உ.வ.); aborted foetus. 6. சதுரங்கம் முதலிய விளையாட்டில் பயன்படும் காய்; chessman, die. 7. திருமண விழாவின்போது செய்யப்படும் பருப்புத் தேங்காய்ப் பணிகாரம் (இ.வ.); a preparation in the form of a cone made of pulse mixed with treacle, one of the many important eatables exhibited in a marriage.

ம., குட., **கோத.** காய்; **க.** காய், காய, காயி; **தெ.** காய; **து., பட.** காயி; **துட.** கோய; **கொலா.** கைக்; **நா.** காய்க்; **கோண்.** காயா, கைய; **கூ.** காவு; **குவி.** கைய்; **குரு.** கேன.

*[கா → காய்.]*

**காய்⁶** *kāy,* பெ.(n.) 1. புண்ஆறிய வடு; cicatrice form a wound. அடிபட்டு உடம்பிற் காயுண்டாயிற்று. 2. உடம்பில் உண்டாகும் வெடிப்பு; callous humour, excrescence, wart.

**Mhr.** ghāya

*[கா → காய்.]*

**காய்⁷-த்தல்** *kāy-,* 4 செ.கு.வி. (v.i.) தழும் புண்டாதல்; to become callous; to form hard bunches, knots, warts excrescences on the body,

as from wounds, from walking, from using tools. கையெல்லாம் காய்த்துப்போயிற்று.

*[கா → காய்.]*

**காய்க்கட்டி** *kāy-k-katti*, பெ.(n.) பழுக்காத கட்டி; undeveloped abscess (சா.அக).

*[கா → காய்.]*

**காய்க்கடுக்கன்** *kāy-k-kaḍukkaṉ*, பெ.(n.) அக்கமணி வைத்துக்கட்டிய கடுக்கன்(யாழ்ப்.); ear ring with rudrākša pendants, the water falling from which during baths is believed to have a purifying effect.

*[காய் + கடுக்கன்.]*

**காய்க்கரு** *kāy-k-karu*, பெ.(n.) 1. முதிராத கரு; child not fully developed. 2. சிதைந்த கரு; aborted child (சா.அக.).

*[காய் → கரு.]*

**காய்க்கழலை** *kāy-k-kaḻai*, பெ(n) கெட்டியானதும், பழுக்காததுமாகிய கழலைக்கட்டி; a hard fibrous tumour (சா.அக).

*[காய் → கழலை.]*

**காய்க்கறியமிது** *kāy-k-kari-y-amidu*, பெ.(n.) கடவுட்குப் படைக்குங் கறி; vegetable curry, as an offering to a deity. *"அப்பக் காய்க் கறியமிதுக்கு மிளகு முக்காற் செவிடும்" (SII.II.26-13 pg.127).*

*[காய் + கறி + அமுது.]*

**காய்க்கீரை** *kāy-k-kīrai*, பெ.(n.) முருங்கைக் கீரை; moringa leaf (சா.அக).

*[காய் + கீரை.]*

**காய்க்குடல்** *kāy-k-kuḍal*, பெ.(n.) 1. புடைவளர்ச்சி கொண்ட குடல்; appendages of the intestines. 2. நெஞ்சங்குலையோடு சேர்ந்த குடல்; entrails. 3. கெட்டிக் குடல்; a condition of the bowels in which evacuations are not freed easy. 4. காயினுள்ளிருக்கும் சக்கை; soft pithy substance inside certain fruits such as jack, pumpkin etc (சா.அக.). (உ-ம்) பலா, பறங்கி, பூசணி முதலியன.

*[காய் + குடல்.]*

**காய்க்கும் பருவம்** *kāykkum-paruvam*, பெ.(n.) 1. காய்தோன்றுங் காலம்; fruit -bearing season. 2. பிள்ளைபெறும் பருவம் (வின்.); age of child bearing.

*[காய்க்கும் + பருவம்.]*

**காய்க்குலை**[1] *kāy-k-kulai*, பெ.(n.) நெஞ்சங் குலையோடு கூடிய ஈரற்குலை; the heart including the lungs and the liver (சா.அக.).

*[காய் + குலை.]*

**காய்க்குலை**[2] *kāy-k-kulai*, பெ.(n.) காய்களுள்ள கொத்து; bunch of unripe fruits. *"காய்க்குலைத் தெங்கும்" (சிலப் 13: 193).*

*[காய் + குலை.]*

**காய்கண்டிதம்** *kāy-kaṇḍitam*, பெ.(n.) வேளைச் செடி ; five leaved cloeme (சா. அக.).

*[காய் + கண்டிதம்.]*

**காய்கறி** *kāy-kari*, பெ.(n) உணவுக்குரிய மரக்கறிகள்; unripe fruits, vegetables and the like used for preparing curry.

ம. காய்கறி; து. காயிகசிப்பு

*[காய்+கறி.]*

**காய்கொள்(ளு)-தல்** *kāy-kollu-*, 16 செ.கு.வி. (v.i.) 1. காய்த்தல்; to bear fruit. 2. காயாதல்; to take the shape of a fruit (சா.அக.).

து. காயிபோபுனி

*[காய்+கொள்.]*

**காய்ங்கனி** *kāy-ṅ-kaṉi*, பெ.(n.) காயும் கனியும் (தொல். எழுத். 48, உரை.); fruits ripe and unripe.

ம. காய்கனி.

*[காய் + உம் + கனி.]*

**காய்ச்சல்** *kāyccal,* பெ.(n.) 1. உலர்ச்சி; heating, drying. புதுநெல்லை இரண்டு காய்ச்சல் போட்டுக் குத்தவேண்டும் (உ.வ.). 2. வெப்பம்; heat, warmth, dryness. 3. காய்ச்சல் நோய்; fever, inflammatory state of the system. 4. மனவெரிச்சல், hatred, rancour.

**ம.** காய்ச்சல்; **க.** காகலு.

*[காய் + காய்ச்சல்.]*

**காய்ச்சல்வெள்ளம்** *kāyccal-vellam,* பெ.(n.) புழுதிப்பருவத்தில் விதைத்தபின் வயலிற் பாய்ச்சும் பாசனநீர் (நாஞ்சில்); water let into a field after sowing in a dry condition.

*[காய்ச்சல் + வெள்ளம்.]*

**காய்ச்சலடக்கி** *kāyccal-adakki,* பெ.(n.) காய்ச்சல் நோயைப் போக்கும் மருந்து; febrifuge, antidote for fever.

*[காய்ச்சல் + அடக்கி.]*

**காய்ச்சற்கட்டி** *kāyccar-katti,* பெ.(n.) காய்ச்சல் நோயால் வயிற்றில் உண்டாகுங் கட்டி; enlarge-ment of the spleen, etc., ague-cake.

*[காய்ச்சல் + கட்டி.]*

**காய்ச்சற்காரன்** *kāyccar-kāran,* பெ.(n.) 1. காய்ச்சல் நோய் உள்ளவன்; one who suffers from fever. 2. பணம் இல்லாதவன்; one who suffers from penury. 3. பொறாமையால் மனவெரிச் சலுள்ளவன் (இ.வ.); a jealous or rancorous person.

*[காய்ச்சல் + காரன்.]*

**காய்ச்சற்பாடு** *kāyccar-pādu,* பெ.(n) 1. நிலக் கடலை பருப்பின் நன்றாகக் காய்ந்தநிலை; condition of being fully dried, as ground - nut kernels ready for crushing, opp. to īrappādu, நெல் காய்ச்சற் பாடானது (உ.வ.). 2. நெல் முதலியவற்றை யுலர்த்துதலால் உண்டாகும் அளவுக் குறைவு; reduction in quantity, as of paddy, etc., when dried. 3. பொருளிழந்து ஏங்கிநிற்கும் நிலை; barrenness, impoverished state.

*[காய்ச்சல் + பாடு.]*

**காய்ச்சி** *kāycci,* பெ.(n.) துவரை (இ.வ.) pigeon - pea, dhal.

*[காய் → காய்ச்சி.]*

**காய்ச்சிக்கிழங்கு** *kāycci-k-kilangu,* பெ.(n) ***காச்சிக்கிழங்கு*** (நாஞ்சில்) பார்க்க; see *kacci-k-kilangu.*

*[காய் + காய்ச்சி + கிழங்கு.]*

**காய்ச்சிப்பதப்படுத்து—தல்** *kāycci-ppada-p-paduttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. மாழைகளை அடிப்பதற்கு இசையும்படி நைப்புண்டாக முன்ன தாகவே பதமாகக் காய்ச்சுதல்; the process of applying heat to a metal and then cooling it very slowly for purposes of removing its brittleness and increasing its ductility and malleability. 2. துவைச்சல்; the process of giving the requisite temper or degree of hardness of softness as to iron or steel (சா.அக.).

*[காய்ச்சி + பதம் + படுத்து.]*

**காய்ச்சிரக்கு** *kāyccirakku,* பெ.(n.) காட்டுக் காய்ச்சுரை; wild sour greens (சா.அக.).

*[காய் + சரக்கு– காய்ச்சரக்கு → காய்ச்சிரக்கு (கொ.வ.).]*

**காய்ச்சிரங்கு**[1] *kāy-c-cirangu,* பெ.(n.) பழுக்காத கட்டி; unripe boil or abscess (சா. அக.).

*[காய் + சிரங்கு.]*

**காய்ச்சிரங்கு**[2] *kāy-c-cirangu,* பெ.(n.) ***காசிலிக் கீரை (சு.வை.ர. 448)*** பார்க்க; *kāśili-k-kīrai.*

*[காசிலி → காச்சிலி → காச்சிரங்கு (கொ.வ.).]*

**காய்ச்சிவடி—த்தல்** *kāyccivadi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வாலையிலிட்டிறக்கல்; distilling. 2. நெருப்பிற் கொதிக்கவைத்து வடிகட்டுதல்; filtering after boiling (சா.அக.).

*[காய்ச்சி + வடி.]*

**காய்ச்சீர்** *kāy-c-cīr*, பெ.(n.) நேரீற்று மூவசைச்சீர் (யாப். வி.1); metrical foot of three ašai, ending in kāi

*[காய் + சீர்.]*

**காய்ச்சு[1] – தல்** *kāyccu-*, 5 செ. குன்றாவி. (v.t.) 1. காயச் செய்தல்; to boil. கஞ்சி காய்ச்சினாள். 2. சமைத்தல்; to cook. 3. தீயாற் சூடாக்குதல்; to heat by fire. 4. உலர்த்துதல் (வின்.); to dry, warm, as in the sun or by putting near the fire. 5. கடிதல்; to scold, reprove, take to task. 6. நையப்புடைத்தல்; to beat, belabour. முதலாளி அவளை நன்றாகக் காய்ச்சிவிட்டார் (உ.வ.). 7. சாயமிடுதல். (யாழ்.); to dye, tinge, as a cloth.

**ம.** காயிக்குக; **பட.** காசு.

**Fin.** keittā; **Es.** keeta; **Mari.** kūam; **Jap.** gutaguta; **Q.** janchay.

*[காய் → காய்ச்சு-.]*

**காய்ச்சு[2]** *kāyccu*, பெ.(n.) தீயிற் காய்ச்சுகை; heating, as metal or a stone; boiling, as a liquid. அதனைத் தீயில் இரண்டு காய்ச்சுக் காய்ச்சினான்.

**ம.** காச்சு

**Fin.** kahi; **Lap.** gaske; **Komi.** kos; **Jap.** kaseru; **Mordvin.** koske.

*[காய் → காய்ச்சு.]*

**காய்ச்சு[3]** *kāyccu*, 5 செ.குன்றாவி.(v.t.) உருக்குதல்; to melt. பொன்னை காய்ச்சிக் கம்பியாக்கினான் (உ.வ.).

**ம.** காயிக்குக; **க., து.** காசு; **தெ.** கான்சு.

**Fin.** kesa; **Mordvin.** kiga; **Mong.** ges, geske; **Karel.** keza.

*[காய் → காய்ச்சு.]*

**காய்ச்சுக்கட்டி** *kāyccu-k-kaṭṭi* பெ.(n.) **காசுக் கட்டி** பார்க்க; see *kāšu-k-kaṭṭi*

*[காய்ச்சு + கட்டி.]*

**காய்ச்சுக்கல்** *kāyccu-k-kal*, பெ.(n.) போலி மாமணி (இரத்தினம்) (வின்.); lit., dyed or tinged stone, counterfeit gem.

*[காய்ச்சு + கல்.]*

**காய்ச்சுக்குப்பி** *kāyccu-k-kuppi*, பெ.(n.) செய்நீர் (திராவகம்) காய்ச்சி இறக்கும் குப்பி (வின்.); glass vessel used in sublimation, elembic, still.

**ம.** காசகுப்பி

*[காய்ச்சு + குப்பி.]*

**காய்ச்சுகுறி** *kāyccu-kuṟi*, பெ.(n) கொதிவரும் சூட்டின் வரம்பு; the temperature at which boiling commences (சா. அக).

*[காய்ச்சு + குறி.]*

**காய்ச்சுசாரம்** *kāyccu-šāram*, பெ.(n.) வளையலுப்பு; glass-gall (சா.அக.).

*[காய் → காய்ச்சு + சாரம்.]*

**காய்ச்சுண்டி** *kāyccuṇḍi*, பெ.(n.) காசுக்கட்டி; black catechu (சா.அக).

**மறுவ.** காய்ச்சுண்டை

*[காய்ச்சு + சுண்டி.]*

**காய்ச்சுநீர்** *kāyccu-nīr*, பெ.(n.) வெந்நீர்; hot water (சா.அக.).

*[காய்ச்சு + நீர்.]*

**காய்ச்சு நீருப்பு** *kāyccu-nīr-uppu*, பெ.(n.) கடல் நீரைக் காய்ச்சியெடுத்த உப்பு ; commom salt obtained by boiling sea-water (சா.அக.).

**மறுவ.** கடலுப்பு

*[காய்ச்சு + நீர் + உப்பு.]*

**இனவகை .** கடலுப்பு, கவட்டுப்பு, கல்லுப்பு

**காய்ச்சுப்பு** *kāyccuppu*, பெ.(n.) 1. சவட்டுப்பு (மூ.அ.); common salt, extracted from soils by filtration and evaporation or by boiling. 2. உவர்நீரைக் காய்ச்சியெடுக்கும் உப்பு (வின்.); salt obtained from salt water.

*[காய்ச்சு + உப்பு.]*

**காய்ச்சுமண்** *kāyccu-maṇ*, பெ.(n) வளையல் செய்வதற்குரிய மணல் (G.TP.D 175); fine sand obtained by washing alkaline earth, for making glass -armlets.

*[காய்ச்சு + மண்.]*

**காய்ச்சுரை**[1] *kāy-c-curai,* பெ.(n.) புடமிட்ட பொன் (தைலவ. தைல); gold purified by fire.

*[காய்ச்சு + உரை.]*

**காய்ச்சுரை**[2] *kāyccurai,* பெ.(n.) 1. ***புளிச்சைக் கீரை (மூ.அ.)*** பார்க்க; see *puḷi-c-cai-k-kīrai.* 2. பேய்ச் சுரை; bitter gourd. 3. காட்டுக் காய்ச் சுரை; wild sour greens (சா.அக).

*[காய் + சுரை.]*

**காய்ச்சுலவணம்** *kāyccu-lavaṇam,* பெ.(n.) ***காய்ச்சுப்பு (வின்.)*** பார்க்க; see *kāy-c-cuppu.*

*[காய்ச்சு + உலவணம். த. உலவணம்>Skt.lavana.]*

**காய்ச்சுறுக்கு** *kāyccuṟukku,*பெ.(n.) ***புளிச்சைக் கீரை*** பார்க்க; see *puḷi-ci-cai-k-kīrai.*

*[காய்ச்சுரை → காய்ச்சுறுக்கு(கொ.வ.).]*

**காய்ச்செண்ணெய்** *kāyccennai,* பெ.(n.) 1. மருந்து கலந்த எண்ணெய்; oil boiled with drugs. 2. ஊற்றிய விளக்கெண்ணெய்; hot-drawn castor-oil (சா.அக.).

*[காய்ச்சு + எண்ணெய்.]*

**காய்சரக்கு** *kāy-šarakku,*பெ.(n.) 1. உலர்ந்த மருந்துச் சரக்கு; dried herbs or drugs. 2. ஊமத்தை, தும்மப் பேரி காயாகவே இருக்கும் மருந்துச் சரக்கு; unripe medicinal fruit such as datura, bitter-apple etc (சா. அக.).

*[காய் + சுரக்கு.]*

**காய்சினவழுதி** *kāy-šina-vaḻudi,* பெ.(n.) தலைச் சங்கத்தின் தொடக்கத்திலிருந்த பாண்டியன் (இறை, 1,உரை); the first Pāṇḍyaṉ of the first Tamil Sangam.

*[காய் + சினம் + வழுதி. காய்சினம் = கடுஞ்சீற்றம். வழுதி = பாண்டியர்களின் குடிப்பெயர்.]*

**காய்த்த** *kāytta,* இடை.(part.) ஓர் உவமவாய்பாடு; a particle of comparison. வெயிலொளி காய்த்த விளங்குமணி (தொல். பொருள். 291, உரை.).

*[காய் → காய்த்த (முதிர்தல், நிறைதல்,முழுமையாக ஒப்புதல்).]*

**காய்த்தனியம்** *kāy-t-taṉiyam,* பெ.(n.) முசுக் கட்டை; Indian mulberrry tree (சா.அக.).

மறுவ. கம்பளிகொண்டான்

*[காய் + தனியம்.]*

**காய்த்தானியம்** *kāy-t-tāṉiyam,* பெ.(n.)1. முதிரை (வின்.); pulses, containing seeds in pods or legumes, dist, fr. *katir-t-tāṉiyam.* 2. முசுக்கட்டை (மூ.அ.); Indian mulberry.

*[காய் + தானியம்.]*

**காய்த்து-தல்** *kāyttu-,* 5 செ.குன்றாவி.(v.i.) 1. எரியச்செய்தல்; to ignite, cause to burn. *"காய்த்திய பொற்றொடி யேவ" (சிலம்பு 21; 55).* 2. சினத்தல் (சிலப், 21:55 அரும்.). 3. ***காய்ச்சு-***[1,2,3] பார்க்க; see *kāyccu-*[1,2,3.]

*[காய் → காய்த்து.]*

**காய்த்தும்பை** *kāy-t-tumbai,* பெ.(n.) ***கறித்தும்பை*** (வின்) பார்க்க; see *kaṟi-t-tumbai.*

*[காய்+தும்பை.]*

**காய்த்தொட்டி** *kāy-t-toṭṭi,* பெ (n) ஆதொண்டை; thorny caper (சா.அக.).

*[காய் + தொட்டி.]*

**காய்நீர்** *kāy-nīr,* பெ.(n.) வெந்நீர் (பதார்த்த. 78); warm-water.

ம. காய்நீர்

*[காய்+நீர்.]*

**காய்நீர்க்கயம்** *kāy-nīr-k-kāyam,* பெ.(n) ***காய்நீரூற்று*** பார்க்க; see *kāy-nīrūṟṟu* (சா.அக).

*[காய் + நீர் + கயம் (நீர்நிலை).]*

**காய்நீரூற்று** *kāy-nīr-ūṟṟu,* பெ.(n) வெந்நீரூற்று; hot water spring (சா. அக.).

மறுவ. காய்நீர்க்காயம்

*[காய் + நீர் + ஊற்று.]*

**காய்ந்த பதம்** *kāynda-padam,* பெ.(n) உலர்ந்த பதம்; dried state (சா.அக.).

*[காய்ந்த + பதம்.]*

**காய்ந்தமீன்** *kāynda-mīṉ,* பெ.(n) கருவாடு; dried fish (சா.அக.).

*[காய்ந்த + மீன்.]*

**காய்ந்துபோ-தல்** *kāyndu-pō-,* 8 செ.கு.வி.(v.i) உலர்தல்; growing dry (சா.அக.).

*[காய்ந்து + போ.]*

**காய்ந்தெரியான்** *kāynderiyāṉ,* பெ.(n) கருஞ்செம்பை; common sesban (சா.அக.).

*[காய்ந்து + எரியான்.]*

**காய்நெரிஞ்சில்** *kāy-neruñjil,* பெ.(n) நெருஞ்சில் வகையுள் ஒன்று; downy fuinjuifoil voine (சா.அக.).

*[காய் + நெரிஞ்சில்.]*

**காய்ப்ப** *kāyppa,* (இடை.) (part.) ஓர் உவம உருபு (தொல் பொருள். 286); a particle of comparison.

*[காய் → காய்ப்ப.]*

**காய்ப்பலா** *kāy-p-palā,* பெ.(n) கறிக்குதவும் பலா; edible jack as distinguished from other varieties of non-edible fruit (சா.அக.).

*[காய் + பலா.]*


காய்ப்பலா

**காய்ப்பழம்** *kāy-p-paḻam,* பெ.(n) முற்றும் பழுக்காத பழம் (இ.வ.); fruit not fully riped.

*[காய் + பழம்.]*

**காய்ப்பறங்கி** *kāy-p-paṟaṅgi,* பெ.(n) கோழி நோய்களிலொன்று (சங்.அக.); a disease of fowls.

*[காய் + பறங்கி.]*

**காய்ப்பனை** *kāy-p-paṉai,* பெ.(n.) சாறெடுக்காத பெண்பனை (G.Tn.D.307); fruit - bearing palmyra which has not been tapped, one of five varieties of idarayiṭṭam-paṉai.

*[காய் + பனை.]*

**காய்ப்பாகல்** *kāy-p-pāgal,* பெ.(n) 1. பாகற்கொடி; spiked bitter cucumber. 2. ஒருவகைக் கசப்பு பாகல்; a bitter variety of (pāgal) bitter-gourd (சா.அக.).

*[காய் + பாகல்.]*

**காய்ப்பாலை** *kāy-p-pālai,* பெ.(n) பாற்சோற்றிப் பாலை; Indian gutta-percha (சா.அக.).

*[காய் + பாலை.]*

**காய்ப்பு**[1] *kāyppu,* பெ.(n.) 1. வெறுப்பு (வின்.) dislike, aversion, disgust. 2. மட்டமான இரும்பு (யாழ்ப்.); hard inferior iron.

ம. காய்ப்பு

*[காய் → காய்ப்பு.]*

**காய்ப்பு**[2] *kāyppu,* பெ.(n) மரஞ்செடி முதலியன பலன்தருகை; produce of a tree, crop of fruit or grain.

ம. காய்ப்பு; தெ. காபு.

*[காய் → காய்ப்பு.]*

**காய்ப்பு**[3] *kāyppu,* பெ.(n) 1. தோலின் தடிப்பு; callousness of skin. 2. தழும்பு (ஈடு, 4,2,5 ஜீ.); scar, callous excrescence.

*[காய் → காய்ப்பு.]*

**காய்ப்புக்காய்-த்தல்** *kāyppu-k-kāy-,* 4 செ.கு.வி. (v.i.) உடம்பின் தோல் உரம் பெறுதல்; the hardening

of the skin through friction or constant rubbing in the affected part (சா.அக.).

*[காய்ப்பு + காய்.]*

**காய்ப்பு மரம்** *kāyppu-maram,* பெ.(n) காய்த்த மரம், காய்களுள்ள மரம்; fruit bearing tree.

*[காய்ப்பு + மரம்.]*

**காய்ப்புரசு** *kāyp-purašu,* பெ.(n) 1. காட்டுப் புரசு; dhak tree. 2. வெள்ளைப் புரசு; a rare white variety of Palaus having medicinal virtues (சா.அக.).

*[காய்+ புரசு.]*

**காய்ப்புளிச்சை** *kāy-p-puḷiccai,* பெ.(n.) ***காய்ச்சுரை***[1] (பாண்டி) பார்க்க; see *kāy-c-curai.*

*[காய் + புளிச்சை.]*

**காய்ப்பூவரசு** *kāy-p-pūvarašu,* பெ.(n) காட்டுப் பூவரசு; false fern tree (சா.அக.).

*[காய் + பூவரசு.]*

**காய்பசி** *kāy-paši,* பெ.(n) 1. மிக்க பசி; extreme hunger. *"காய்பசிக் கடும்பேய்"* (மணிமே. 6:82). 2. வருத்தும் பசி; agonising hunger.

*[காய் + பசி.]*

**காய்பலம்** *kāy-palam,* பெ.(n) 1. தான்றி; belleric myrobalan. 2. தேக்கு; teak (சா.அக.).

*[காய் + பலம்.]*

**காய்பிடி-த்தல்** *kāypiḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) ***காய்கொள்(ளு)-தல்*** பார்க்க; see *kāykoḷ(ḷu).*

**து.** காயிபோபுனி

*[காய் + பிடி.]*

**காய்ம்பனை** *kāy-m-paṉai,* பெ.(n) காய்க்கும் பனை (யாழ்ப்.); fruit - bearing palmyra.

*[காய்க்கும் + பனை - காய்த்திருக்கும்பனை → காய்ம்பனை.]*

**காய்ம்பாளை** *kāy-m-pāḷai,* பெ.(n) பெண் பனையின் பாளை (வின்.); flower calyx of the fruit bearing palmyra tree.

*[காய்க்கும் + பாளை - காய்க்கும் பாளை → காய்ம் பாளை.]*

**காய்மகாரம்** *kāy-maġāram,* பெ.(n) பொறாமை (வின்.); envy, jealousy impelled by selfishness.

**த.** நமது > **தெ.** மனதி > மம.

*[காய் + மகாரம். மம = நமது அல்லது எனது என்னும் தன்னல உணர்வு. மம + காரம் - மகாரம்.]*

**காய்மடி** *kāy-maḍi,* பெ.(n) ஆவின் வன்முலை (வின்.); hard udder of a cow, yeilding milk with difficulty.

*[காய் + மடி.]*

**காய்மடை** *kāy-maḍai,* பெ.(n) 1.சிறுதெய்வத் திற்குப் படைக்கும் கனிவகைப் படையல் (யாழ்ப்.); offering of fruits, commonly to a ferocious deity. 2.சிற்றுண்டி; light repast.

**மறுவ.** பலகாரம்

*[காய் + மடை. மடுத்தல் = உண்ணுதல். மடு → மடை (உணவு). பழங்களையே மடுத்தற்குரிய, உண்ணுதற்குரிய உண்டியாகப் படைப்பது வழக்கம். இது பழ ஆகாரம் பலகாரம் எனத் திரிந்தது.]*



காய்மடை

**காய்மண்டை** *kāy-mandai,* பெ.(n) 1. வறட்சியான தலை; parched head. 2. கரப்பான், சொறி இவையுள்ள தலை; a popular name for favus, porrigo (சா.அக.).

*[காய் + மண்டை.]*

**காய்மரம்** *kāy-maram,* பெ.(n) ***காய்ப்புமரம்*** (பிங்.) பார்க்க; see kāyppu-maram.

*[காய்[2] + மரம் – காய்மரம். (வி.தொ.).]*

ஆண்டுதோறும் அல்லது பருவந்தோறும் காய்க்கும் மரங்களும் ஆண்டு மாறி அல்லது பருவம் மாறிக் காய்க்கும் மரங்களும் காணப்படுவதால், காய்ப்பு நிலையிலுள்ள மரங்களைக் காய்மரம் எனப் பிரித்தறிய நேர்ந்ததால் இப் பெயர் வழங்கலாயிற்று.

**காய்முந்திரி** *kāy-mundiri,* பெ.(n) கொட்டை முந்திரி; cashew-nut fruit (சா.அக.).

து. காயன (நன்கு முதிராத முந்திரி)

*[காய் + முந்திரி. காய் = கொட்டை.]*



காய்முந்திரி

**காய்முருங்கை** *kāy-murungai,* பெ.(n) உணவுக் குதவும் முருங்கை; edible horse radish (சா.அக.).

*[காய்[3] + முருங்கை. காய் = காய்கறியாக உண்ணத்தக்கது.]*

**காய்முள்ளங்கி** *kāy-mullangi,* பெ.(n) உண்பதற் குரிய முள்ளங்கி; edible Indian radish (சா.அக.).

*[காய் + முள்ளங்கி.]*

**காய்மை** *kāymai,* பெ.(n) ***காய்மகாரம்*** (வின்.) பார்க்க; see *kāy-magāram.*

*[காய் → காய்மை]*

**காய்மைகரி-த்தல்** *kāymai-kari-,* 4 செ.கு.வி. (v.i.) பொறாமைப்படுதல் (வின்.); to be envious.

*[காய்மை + கரி. காய் → காய்மை = மனவேக்காடு, பொறாமை. கரித்தல் = வெறுப்போடு புலப்படுத்துதல். பொங்கிப்புகைந்து பேசுதலைக் கரித்துக்கொட்டுதல் என வழங்குதலை ஒப்பு நோக்குக.]*

**காய்மைக்காரி** *kāymai-k-kāri,* பெ.(n) பொறாமைப் பட்டவள் (வின்.); envious woman.

*[காய்மை + காரி. காய் – காய்மை = மனவேக்காடு, பொறாமை, கரு → கரி → காரி = செய்பவள், செயற்பாட்டுக் குரியவள்.]*

**காய்வலாகம்** *kāy-valāgam,* பெ.(n) மஞ்சள் நிறக்காய்காய்க்கும் நக்குவாரத்தீவின் தென்னை; tree, yielding yellow coconuts (சா.அக.).

*[காய் + வலாகம்.]*

**காய்வள்ளி** *kāy-valli,* பெ.(n) 1. ***காட்டுவள்ளி*** (L) பார்க்க; see *kāttu-valli.* 2. சீரகவள்ளி வகை. (M.M.463); Malacca yam. 3. வெற்றிலை வள்ளி (வின்.); betel yam. 4. கிழங்கு வகை (M.M.53); humped yam.

ம. காய்வள்ளி

*[காய்[3] + வள்ளி.]*

**காய்வாசியம்** *kāy-vāsiyam,* பெ.(n) நாறாக் கரந்தை; a variety of sweet basil (சா.அக.).

*[காய் + வாசியம்.]*

**காய்வாழை** *kāy-vālai,* பெ.(n) ஒரு குலையில் 40 முதல் 80 வரை காய்களையுடைய வாழை வகை (G. Sm.D.i,215); large green plantain of 40 to 80 plantains to a bunch.

*[காய் +வாழை.]*

காய் வாழை என்பது பழுக்காய் ஆவதற்கு முன்பே கருக்காய் அல்லது செங்காய் நிலையில் பயன் கொள்ளப்படும் வாழை வகை.

கச்சல், கருக்காய், பைங்காய், செங்காய், குங்காய், பழுக்காய் என்பன கனிக்கு முந்தைய காய்நிலைகள்.

**காய்விழு—தல்** *kāy-viḻu-,* 2 செ.கு.வி. (v.i) கருச்சிதைந்து விழுதல்; to miscarry, abort. நேற்று எருமைக்குக் காய் விழுந்துவிட்டது (கொங்.).

மறுவ. கன்றுவீசுதல், விசிறுதல், இறங்குதல், களைதல்.

*[காய்+விழு-.]*

காய் என்பது ஆகுபெயராகி முற்றாத நிலை - முதிராதநிலையில் வயிற்றிலுள்ள கருவை குறித்தது. காய்விழுதல் சிறப்பாகக் கருச்சிதைவையே குறித்தது. இது விலங்கினத் துக்கும் மாந்தரினத்துக்கும் பொதுவான மரபுச்சொல்லாட்சி.

**காய்வு** *kāyvu,* பெ.(n) 1. உலர்வு; dryness. 2. எரிச்சல்; burn. *"பொய்க்காய்வு காய்தி என் நெஞ்சு" (குறள்.1246).* 3. சூடு; heat. 4.மெலிவு; weakness (சா.அக.). 5. கடுஞ்சினம்; angry.

ம. காய்வு

*[காய் → காய்வு. (சொ.ஆ.க.55).]*

**காய்வெட்டிக்கள்** *kāyveṭṭi-k-kaḷ,* பெ.(n.) பாளைக்குப் பகரமாகக் காயை வெட்டி இறக்கும் பனங்கள்; toddy drawn from the tree by cutting the tender fruit instead of spath so as to make the juice flow from the central part (சா.அக.).

*[காய் + வெட்டி + கள்.]*

**காய்வெட்டு** *kāyveṭṭu,* பெ(n) நன்கு பழுக்காத பழம்; unripe fruit.

*[காய் + வெட்டு]*

**காய்வேளை**[2] *kāy-vēḷai,* பெ(n) கை வேளை; five-leaved cleome.

*[காய்மை + வேளை.]*

வகைகள் :

1. இரும்புக் காய்வேளை 2. கொள்ளுக்காய்வேளை 3. சிவப்புக்காய்வேளை 4. பூனைக்காய்வேளை 5. முட்காய் வேளை 6. கருப்புக் காய் வேளை (சா.அக.).

**காயக்கட்டு** *kāya-k-kaṭṭu,* பெ(n) புண் புரைகளுக்குக் கட்டும் துணிக்கட்டு; bandage for a wound (சா.அக.).

க. காயகட்டு (கட்டுப்படுத்துவது)

*[காயம் + கட்டு.]*

**காயக்கம்**[1] *kāyakkam,* பெ.(n) அளவிறந்த காதல்; stupor due to extreme love-passion. *"உன்னை மருவிய காயக்கங் கொஞ்சமோ" (மதுரகவி.62).*

ம. காயக்கம்

*[காயகம்[2] → காயக்கம்.]*

வெப்பநாட்டில் காய்தல், எரிச்சலையும் வெறுப்பையும் சினத்தையும் குறிக்கும். குளிர்நாட்டில் காய்தல் - உவத்தலையும் காதலையும் குறிக்கும். இச் சொல் குளிர்நாட்டு இடவழக்காய் உருப்பெற்றுப் பரவியதாகலாம். குளிர் நாட்டில் வெப்பம் அல்லது வெயில் விருப்பத்திற்கு உரியதாகும்.

**காயக்கம்**[2] *kāyakkam,* பெ.(n) சூழ்ச்சி (விறலி விடு. 507); artfulness.

*[தெ. காயகமு, காயக்கம்.]*

**காயக்கரணம்** *kāya-k-karaṇam,* பெ.(n) உடலுறுப்புச் செய்கையால் (சைகையால்) உள்ளக் குறிப்புக் காட்டல் (அபிநயம்); bodily gestures, as exhibited in dancing. *"காயக் கரணமுங் கண்ணிய துணர்தலும்" (மணிமே. 2.25).*

ம. காயக்கரணம்

*[காயம் + கரணம்: காயம் = உடம்பு. கரணம் மெய்ப்பாடு (அவிநயம்) நளிநயம்.]*

**காயக்கி** *kāyakki,* பெ.(n) மெல்லியள்; woman of slender build. *"நளனைக் கண்டு மண மாலையிட்ட காயக்கி நீர்தாமோ" (கூளப்ப.173).*

*[தெ. காயகமு → காயக்கி. காய்தல் = உலர்தல், மெலிதல். மெலிந்தவள் காயக்கி எனப்பட்டாள்.]*

**காயக்கிலேசம்** *kāya-k-kilēšam,* பெ.(n) உடலை வருத்தியொடுக்குகை; mortification of body. *"காயக் கிலேச முணர்ந்த பயனன்றே" (ஔவைகு. உள்ளுணர்.5).*

*[காயம்+கிலேசம் காயம்=உடம்பு வ. கிலேச=துன்பம், வருத்தம். வ. கிலேச < த.கிலேசம்.]*

**காயக்கோல்** *kāya-k-kōl,* பெ.(n) அறுவை மருத்துவக் கருவிவகை (தஞ்.சா.iii,40); a surgicol instrument.

*[காயம் + கோல். காயம் = உடம்பு. கோல்=கைக்கருவி. எழுதுகோல், கத்தரிக்கோல் போன்ற சொல்லாட்சிகளில் கைக்கருவி என்னும் பொருளில் **கோல்** ஆளப்பட்டிருத்தல் காண்க. உடம்பில் அறுவை மருத்துவம் செய்யும் கருவியும் கருவித் தொகுதியும் **காயக்கோல்** எனப் பண்டைக்காலத்தில் பெயர் பெற்றது.]*

**காயகம்** *kāyagam,* பெ.(n) 1.இசை; music. 2. அளவுக்கதிகமான காதல்; delusion in love, libidinous fascination. *"உனக்கே னிந்தக் காயகமே" (தனிப்பா.ii, 156: 391).*

**ம.** காயமு

*[காய் → காயகம். காய்தல் சினத்தலை உணர்த்தியது போன்றே முரண் பொருள் தந்து உவத்தலையும் குறித்தது. **காய்தல்** பார்க்க see kāy-.]*

**காயகம்²** *kāyagam,* பெ.(n) வாணிகம்; profession, trade.

**தெ.** காயகமு.

*[காய் → காயகம். (விளைந்து முற்றிய தவசம், வித்து, பயறு, கொட்டை, நெற்று முதலியவை).]*

**காயகம்³** *kāyagam,* பெ.(n) மகளிர் ஈன்றணிமை யில் உட்கொள்ளும் மருந்து; a herbaceous drug prescribed for a lying-in-woman (சா.அக.).

**தெ.** காயமு

*[காய் → காயகம். (மருந்தாகும் காய்கறி மூலிகை வகை).]*

**காயகற்பம்** *kāya-kaṟbam,* பெ.(n) உடல் வலிமைக்கும், நீண்டவாழ்நாளுக்குமாக உண்ணும் மருந்து; medicine for strengthening the body and prolonging life. *"காயகற்பந் தேடி நெஞ்சு புண்ணாவர்" (தாயு.பரிபூரண.10).*

**ம.** காயகல்பம்

*[காயம்+கற்பம். காயம்=உடம்பு. கற்பம்=கல்வத்தில் அரைத்த மருந்து.]*

**காயகன்** *kāyagaṉ* பெ.(n) 1. பாடுவோன்; songster, vocal musician. *"கலைமுழு துணர்ந்த செல்வக் காயகன்" (திருவாலவா. 54.12).* 2.மயக்குவோன் (வின்); fascinator, amorous, wheedler.

**H.**gāyak;**Skt.**gāyak.

**Aust.** gayandi (bullroares).

*[கூ → கூவு → காவு → காவகன் → காயகன்.]*

**காயங்கட்டு-தல்** *kāyaṅ-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i) புண்ணுக்கு மருந்திட்டுக் கட்டுதல்; to dress a wound.

**தெ.** காயமு

*[காயம் + கட்டு-. காய் → காயம் = வீக்கம், புண்]*

**காயங்கழியாத நாயகி** *kāyaṅ-kāḻiyāta-nāyaki,* பெ.(n) புளிச்சிறுகீரை; soursorrel (சா.அக.).

*[காயம் + கழியாத + நாயகி.]*

**காயச்சம்** *kāyaccam,* பெ.(n) சிற்றீந்து; small date (சா.அக.).

*[காய் → காயச்சம்.]*

**காயசன்னி** *kāya-šaṉṉi,* பெ.(n) காயம் பட்டதனால் உண்டாகும் குளிர்க்காய்ச்சல்; traumatic tetanus.

*[தெ. காயமு + சன்னி.]*

**காயசித்தி¹** *kāya-šitti,* பெ.(n) 1. சித்தரின் மூலிகைக் கற்பத்தால் நரைதிரையின்றி நெடு நாளிருக்கச் செய்யுஞ் பேறு (சித்தி); power of securing the body

by magical medicaments against age and its effects, as loss of teeth, grey hairs, decay of mental or physical powers. *"சித்தரானவர் காயசித்தி முதலெய்திடுவார்" (குற்றா.தல. நூற்பய.16).* 2. சிறுமை பெருமை (அணிமா மகிமா) முதலிய பேறுகள் (சித்திகள்). (வின்.); super-normal powers of the soul over its physical vesture, as reducing it to an atom or enlarging it to any size at pleasure.

*[காயம் = உடம்பு. சித்தி = பேறு. காயம் + சித்தி.]*

**காயசித்தி**[2] *kāyaśitti,* பெ.(n) பொன்னாங்காணி கீரை; a kind of green.

*[காயம் + சித்தி.]*

**காயசித்திக்கடியான்** *kāyaśittikkaḍiyāṉ,* பெ.(n) காந்தக்கல் (வின்.); load stone.

*[காயசித்திக்கு+அடியான்.]*

**காயசித்தியுப்பு** *kāya-šitti-y-uppu,* பெ.(n) அமரியுப்பு (வின்.); urine salt.

*[காயம்+சித்தி+உப்பு.]*

**காயடி–த்தல்** *kāyaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) விரையடித்தல்; to castrate.

**மறுவ.** விதையடித்தல்

*[காய்+அடி–.]*

காய்-ஆகுபெயராய் இனப்பெருக்கத்திற்குக் காரணமாகிய விலங்குகளின் விதையைக் குறித்தது.

**காயத்தவசம்** *kāyattavašam,* பெ.(n.) 1. நெற்று அல்லது கொட்டையில் அடங்கியுள்ள பருப்பு வகை; pulses, seeds contained in pods or legumes. 2. தவசம்; grains (ingeneral).

**ம.** காயதான்யம்; **தெ.** காயதான்யமு.

*[காய்+தவசம்.]*

**காயத்தானியம்** *kāyattāṉiyam,* பெ.(n.) **காயத்தவசம்** பார்க்க; see *kāyattavašam.*

**ம.** காயதான்யம்; **தெ.** காயதான்யமு.

*[காய் + தானியம்.]*

**காயத்திரி**[1] *kāyattri,* பெ.(n.) அந்தணர் நாள்தோறம் ஓதும் மந்திரம்; Gayatri, the sacred mantra of 24 syllables in the Gayatri metre recited by Brahmans in their daily worship.

*[கூ → கூவு → காவு → காவன் (கவிபாடுபவன்) காயன் → காயதன் → காயத்தம் → காயத்திரி.கா→ கான (வடதமிழ்ச்சொல்).]*

*ஓரடிக்குப் பன்னிரு அசைகள் கொண்ட ஈரடி கட்டளைக் கலித்துறையாகவோ, ஓரடிக்கு எட்டு அசைகள் கொண்ட மூன்றடி (சிந்தடி) கலித்துறையாகவோ பாடப்படும் பாடல் வகைக்கு வடமொழியாளர் **காயத்திரி** எனப்பெயர் சூட்டினர். ஆயின் இது முற்றிலும் கட்டளைக்கலித்துறை யாப்பமைதி கொண்டது. எழுத்துகளுக்கு மாத்திரை வகுப்பதும் அதற்கேற்ப சீர்களுக்கு அசையலகு கொள்வதும் முற்றிலும் தமிழ்யாப்பமைதிக்கே உரியது. இது இசைத்தமிழின் தாக்கத்தால் இயற்றமிழிலும் அமைந்த இலக்கணப்பாங்கு. மேலையாரிய மொழிகளில் எழுத்துகளுக்கு மாத்திரை வகுக்கும் பாங்கு யாண்டும் நிலவியதில்லை.*

*வடமொழியில்* Gāthā- *a verse not belonging to Vedas but to the epic poetry of legends' என்று கூறப்பட்டுள்ளது.* Gāthaka, Gāyaka *இரண்டும் பாடுபவனைக் குறிக்கும். காயத்திரி என்பது பாகதம் (Pkt) எனப்படும் வடதமிழ்ச்சொல்.*

"Om bhur bhuvas suva
Tat savitur Varenyam
Bhargo Devasya Dheemahi
Dhiyo yo nah Prachodayat"

" மாணிக்கவாசகர் வரலாறுங்காலமும்" (1930) என்னும் நூலில் (பக்கம் 675) மறைமலையடிகள் இம் மந்திரம் பற்றித் தந்துள்ள ஆய்வுரை:

'தீத்திரளையான ஞாயிற்றினையும், அஞ்ஞாயிற் றினை ஓர் உடம்பாய் கொண்டு 'பர்க்கன்' எனப் பெயர் பூண்டு விளங்குஞ் சிவபெருமானையும் வழுத்துங் காயத்திரி மந்திரமானது, விசுவாமித்திரரையும் அவர் தங்குடி யினரையும் ஆசிரியராய்க் கொண்ட இருக்குவேத மூன்றாம்

மண்டிலத்தின் இறுதிக் கண்ணதான 62ஆம் பதிகத்தின் 10வது செய்யுளாய் அமைந்திருத் தலையும் இம் மூன்றாம் மண்டிலத் தொடக்கத்திலுள்ள பதிகங்களுந் தீக்கடவுண் மேலனவாயிருத்தலையும், தீக்கடவுண் மேலனவாய் இம்மூன்றாம் மண்டிலத்தினும் ஏனை மண்டிலங்களிலும் பாடப்பட்டுக் கிடக்கும் பதிகங்கள் பெரும்பாலனவற்றில் மட்டுமே 'பரதர்' என்னுந் தமிழக் குடியினர் பெயர் எடுத்துக் கூறப்படுதலையும், இருக்கு வேதத்தில் தீக்கடவுண் மேலும் உருத்திரர் மேலும் பாடப்பட்டிருக்கும் பதிகங்களின் ஆசிரியர் பெரும்பாலும் விசுவாமித்திரக் குடியினைச் சேர்ந்த முனிவராயிருத் தலையும் உற்று நோக்க வல்லார்க்குத் தீக்கடவுளையுஞ் சிவபிரானையும் பாடிய அம்முனிவரரெல்லாரும் பண்டைத் தமிழ் வகுப்பினரே யாதல் தெற்றென விளங்கா நிற்கும்'.

**காயத்தீர்த்தம்** *kāya-t-tirttam,* பெ.(n) பொரும் பிலிச்செடி; a kind of horse gram plant (சா.அக.).

*[காயம் + தீர்த்தம்.]*

**காயத்துக்குயிர்** *kāyattukkuyir,* பெ. (n) காந்தம்; loadstone as mainstay of life (சா.அக.).

*[காயம் + அத்து + கு + உயிர்.]*

**காயத்தேனுகம்** *kāya-tēṇugam,* பெ. (n) நாகமல்லிகை; snake - jasmine (சா.அக.).

*[காயம் + தேனிகம்.]*

**காயத்தையிருத்தி** *kāyattai-y-irutti,* பெ.(n) பூவழலை (மூ.அ.); fuller's earth.

மறுவ. உழமண், உவர்மண்.

*[காயம் + அத்து + ஐ +இருத்தி.]*

காயம் = உடம்பு. அத்து-சாரி யை. 'ஐ'-இரண்டன் உருபு.

**காயத்தையுருக்கி** *kāyattai-y-urukki,* பெ.(n) அத்திபேதி (மூ.அ.); iron ochre.

*[காயம் + அத்து + ஐ + உருக்கி. காயம் = உடம்பு. அத்து சாரியை. 'ஐ', இரண்டன் உருபு]*

**காயநூல்** *kāya-nūl,* பெ.(n) உடற்குறிகளைக் கொண்டு வருங்காலம் உரைக்க உதவும் நூல்; treatise relating to marks on the body, and the good or bad fortune indicated thereby, *"காய நூன்முறை யுரைத்திடும்" (கந்தபு. மார்க்கண். 71).*

*[காயம் + நூல்.]*

காய்த்தல் = பருத்தல், பெருத்தல். காயம் = பருத்தவுடல். காயம் = உடம்பு. காயநூல் = உடலில் உள்ள மச்சங்கள் பிற அடையாளங்களைக்கொண்டு நன்றும் தீதுமாகிய எதிர்காலம் கணித்துரைக்கும் நூல்.

**காயப்பத்திரி** *kāya-p-pattiri,* பெ (n) ஞாழல். (நாநார்த்த.); cinnamon

*[காயம் = உடற்பகுதி. காயம் + பத்திரி. பத்திரி = இலை. தாழைமரத்தின் இலை வடிவில் தோற்றம் தருவதால் காயப் பத்திரி எனப்பட்டது.]*

**காயப்பெண்** *kāya-p-peṇ,* பெ (n) கனவிற்றோன்றி மயக்கி வருத்தும் மோகினி என்னும் ஆவிப் பெண் (வின்.); a female spirit believed to appear in dreams and excite passion, succubus.

*[காயம் + பெண்.]*

காயம் = உடம்பு. காயப்பெண் = உண்மையான மண்ணுலகப் பெண்போன்ற வடிவில் தோன்றும் கனவுக்கன்னி.

**காயம்**[1] *kāyam,* பெ. (n) 1. உறைப்பு. (பிங்.) pungent. 2. மிளகு; pepper. *"காயத்தின் குழம்பு தீற்றி" (சீவக் 788).* 3. குழம்பில் வெந்த கறித் துண்டு; sliced vegetables for curry. *"நெய்கனி குறும்பூழ் காயமாக" (குறுந். 389).* 4. கறிக்கூட்டுச் சரக்கு; curry stuffs, condiments, seasoning. *"காயங்களான் இனிய சுவைத்தாக்கி" (குறள், 253, உரை.).* 5. உள்ளி; garlic. *"காயமுங் கரும்பும்" (சிலப். 25:45).* 6 பெருங்காயம்; asafoetida. 7. ***ஐங்காயம்*** பார்க்க; see *aiṅkāyam.* 8. ***காய மருந்து*** பார்க்க; see *kāyamarundu.*

ம.காயம்; தெ.காயமு.

*[காய்தல் = வேதல், எரிதல் உறைப்பு. காய் → காயம்.]*

*ஐங்காயம் = கடுகு, ஓமம், வெந்தயம், உள்ளி, பெருங்காயம்.*

**காயம்**[2] *kāyam*, பெ.(n.) 1. அடி, குத்து, வெட்டு முதலியவற்றாலான புண்;wound, injury to the flesh, bruise, contusion. 2. வடு;scar, cicatrice. *"காயமிலை மையரவர்க்கு" (குமர. பிர. மதுரைக் கலம்.13).*

**ம.** காயம்,காய; **க.,து.**காய; **தெ.** காயமு;

**Pkt. Mar.** khaya; **குயி., குவி.** கஹ, காவெ; **பர்.** காவ்; **பாலி.** காத; **வ.** காத; **நேப்.** காஉ.

*[கள் → கப் → கவ் → (கச்சு – கடித்தல், துண்டாக்கல்) கப் → காய் → காயம்.]*

வடதிராவிட மொழிகளான குயி,குவி, பர்சி ஆகியவற்றில் 'கவ்' என்பதற்கு இணையான காவெ, காவ் என்பனவே இடம் பெற்றிருத்தல் காண்க.

**காயம்**[3] *kāyam*, பெ.(n) உடல்;body. *"மாகாயமாய் நின்ற மாற்கு "(திவ். இயற். மூன்றாந்.13).*

**ம.** காயம்

**Skt.** kāya.

*[கா+அம் – காயம். கா=விரிவு, பருமன். 'அம்'பருமைப்பொருள் பின்னொட்டு, இங்குப் பெயரீறாயிற்று.]*

காயம் = பருத்த உடம்பு, பருவுடல். மெய்யியலார் நுண்ணுடல் எனக் கொண்ட சொல்லாட்சிக்கு எதிரானது, இதனைப் பூதவுடல் என்பதும் ஒப்பு நோக்கத்தக்கது.

**காயம்**[4] *kāyam*, பெ.(n.) 1. விண்வெளி, கரிய வானம்; space,sky. *"விண்ணென வரூஉங் காயப்பெயர்" (தொல். எழுத்து. 305).* 2. கரிய காயாமலர்; dark purple flower of kāyā. 3. கருமை; dark.

*[காள் → காய் → காயம். (வேக. 125).]*

காள்=கருமை.காயம்=கரிய (கருநீல வானம்) இஃதோர் நிறங்குறித்த பெயராதலின் கருநீல வண்ணமுடைய மலர் காயாம்பூ எனப்பட்டது, ஆகாயம் என்னும் விண்வெளியைக் குறித்தது.

**காயம்**[5] *kāyam* பெ.(n.) 1. செறிவு; density. 2. திண்மை; strong. 3. உறுதி; certainity. அவன் வருவது காயம் இல்லை (உ.வ.).

*[காள் → படு(முற்றுதல், செறிதல்) + அம்.]*

**காயம்படு–தல்** *kāyam-paḍu-*, 20 செ.கு.வி. (v.i) புண்படுதல்; to be wounded or bruised.

*[காயம்+படு.]*

**காயமருந்து** *kāya-marundu*, பெ. (n.) கருவுயிர்த்த வட்க்குக் கொடுக்குங் காரமருந்து; a medicinal preparation of vegetable stimulants given to a lying-in woman.

*[காயம் + மருந்து. காயம்=உறைப்பு, காரம்]*

**காயமலர்** *kāya-malar*, பெ.(n.) காயாம்பூ, dark purple flower of kāyā. *"காயமலர் நிறவா" (திவ். பெரியாழ். 1,5,6).*

**மறுவ.** காயா, காயம்

*[காயம் + மலர். காயம் = கருநீல நிறம்.]*

**காயமேரை** *kāya-mērai*, பெ.(n.) அரசின் வரிபோக எஞ்சிய விளைச்சலில் குடிகளிடமிருந்து ஊர்த்தச்சர், கொல்லர் முதலிய தொழிலாளிகள் அடையும் கூலி (G.sm.D.ii, 49); a perquisite of the village establihsment from the produce remaining with the ryot after the claims of Governments are satisfied.

**ம.** காயமேர

*[காயம்+மேரை.]*

*(காயம் = உறுதி. காயமேரை = உறுதிப்படுத்தப்பட்ட வழக்கமான விளைச்சல் பங்கு. மேரை = பணிமேற் கொண்டகுழுத்தலைவனுக்குரிய பங்கு. மேலை → மேரை மேலாள், தலைவன்.)*

**காயல்** *kāyal*, பெ.(n.) 1. கரிய உப்பங்கழி (சூடா.) stretch of salt water close to the coast and separated from the sea by sand spits, back-water, lagoon. [ம.காயல்] 2. கழிமுகம் (பிங்.); mouth of an ebbing stream. 3. உப்பளம் (சூடா.); salt-

pans. 4. பொருநை முகத்திலுள்ள (தாமிரபரணி) ஒரூர்; a village in Tuttukudi district once a famous port at the mouth of the Tāmaraparaṇi, where Marco polo landed. "தென்காயற் பதியானே சீதக்காதி (தனிப்பா. 1:238,9).

ம., க. காயல்.

[கா = விரிதல், பரவுதல். கா → காய் → காயல் = நிலத்துள் ஊடுருவிப் பரந்த நிலை.]

**காயலான்** *kāyalāṉ,* பெ.(n.) ஒரு முகம்மதிய இனம்; lit., native of the port Kayal, Moorman, Tamil-speaking Muhammadan merchant.

[காயல் → காயலான். காயல் எனும் கழிமுகத்தின்வழி வணிகம் மேற்கொண்டவன்.]

**காயவேகம்** *kāya-vēgam,* பெ.(n.) 1. சினம் (வின்.); anger, spleen, fretfulness. 2. பசி (யாழ்.அக.); hunger.

[காயம்+வேகம். காயம் = உடம்பு. காயவேகம் = உடம்பின் பசிவேகத்தையும் மனத்தில் பொங்கும் சீற்றத்தின் வேகத்தையும் குறித்தது.]

**காயவை-த்தல்** *kāyavai,* பி.வி.(caus.v.) 1. சூடேற்றுதல், கொதிக்கச் செய்தல்; to boil. 2. உலரச் செய்தல்; to dry.

க. காயிசு; படா. காசு.

[காய்+அ+வை. 'வ' பி.வி.ஈறு.]

**காயா¹** *kāyā,* பெ.(n.) காயாமரம் (திவா.); iron wood tree.

[கள் → காள். காய் → காயா. (வேக.125) கருநீல நிறமுடைய மலர் கொண்டதாதலின் பெற்ற பெயர்.]

**காயா²** *kāyā,* பெ.(n.) 1. செடிவகை; oblong cordate - leaved tree bilberry. 2. பீக் கொஞ்சி; coromandel eugene myrtle.

[காயர் → காயா. கருநீல நிறத்தால் பெற்ற பெயர்.]

**காயாகாயம்** *kāyā-kāyam,* பெ. (n.) உடற்றழும்பு; scar on the body.

[காயம் + காயம் – காயாகாயம்(உடம்பிலுள்ளதழும்பு). காயம்= உடம்பு, புண்.]

**காயாசூடகம்** *kāyā-śūḍagam,* பெ. (n) நிழலில் உலர்த்துகை; drying anything in the shade without exposing it to direct sunlight (சா.அக.).

[காய் → காயா (வெயிலிற் காயாமல்.) காயா + சூடு + அகம்.]

**காயாணி** *kāyāṇi,* பெ.(n) ஆணிக் காய்ப்பு; a hard thorny excrescence in the toe or foot (சா. அக.).

[காய் + ஆணி.]

**காயாதபூமரம்** *kāyāda-pū-maram,* பெ.(n.) 1. வேங்கை; Indian dragon's blood. 2. பூத்தும் காய்க்காத மரம்; tree not bearing any fruit though blossomed (சா.அக.).

[காயாத + பூமரம்.]

**காயாதிகலை** *kāyādi-kalai,* பெ.(n.) இடது மூக்குத் துளையில் மூச்சுப்பயிற்சி செய்யும் ஒக நிலை (சந்திரகலை) நிலாக் கலை; the vital air passing from the left nostril (சா.அக.).

[காயம் + ஆதி + கலை.]

**காயாப் பேரீஞ்சு** *kāyā-p-pēriñju,* பெ.(n.) காட்டுப் பேரீச்சை மரம்; barren date tree. 2. சீமையீச்சை; english fern-palm (சா.அக).

[காயா (பேரீந்து) + பேரீஞ்சு.]

**காயாபுரி** *kāyāpuri,* பெ. (n) உடம்பு; the human body. as compard to a fort (சா.அக.).

[காயம் + புரி – காயபுரி → காயாபுரி.]

**காயாபுரிக்கோட்டை** *kāyāpuri-k-kōṭṭai,* பெ.(n) 1. உடம்பின் தோல்; the outer covering of the body. 2. ஆன்மாவைப் பற்றி நிற்கும் கோசங்கள்; the sheaths encircling the soul (சா.அக.).

[காயம் + புரி + கோட்டை.]

**காயாம்பூ** *kāyāmbū,* பெ.(n) காயாமலர்; dark purple flower.

[காய் → காயா→காயாம்பூ (வே.க.125).]

**காயாம்பூவண்ணன்** *kāyāmbū-vaṇṇaṉ,* பெ.(n.) திருமால்; lit, He of purple colour like kāyā flower, viṣṇu. *"காயாம்பூ வண்ணனிவை கழறு மன்றே" (கூர்மபு. இராமனவதா.1).*

*[காயா + பூ + வண்ணன். காயா= கருநீலமலர்.]*

**காயாமரம்** *kāyā-maram,* பெ.(n) ஒருபொழுதும் காய்ப்பில்லாத மரம்; barren tree. *"காயாமரமும் வறளாங் குளமும்" (பட்டினத்.திருப்பா.திருவேகம். மா.21).*

*[காய்[2] + ஆ + மரம். 'ஆ'–எதிர்மறை இடைநிலை.]*

**காயாமை** *kāyāmai,* தொ.பெ. (verb.n.) சினவாமை (கோ.அக.); unprovoked angerless.

*[காய் → காயாமை.]*

**காயாவரசு** *kāyā-v-arašu* பெ.(n) காய்க்காத அரசமரம்; a peepul tree not bearing fruit. (சா.அக.).

*[காயா + அரசு.]*

**காயிகம்** *kāyigam,* பெ.(n) உடம்பினாற் செய்வது; bodily activity. *" அன்னவைதாங் காயிகமே வாசிக மானதமேயாம்" (விநாயகபு.83:78).*

*[காயம்+இகம்–காயிகம். காயம்=உடம்பு. இகம்= தொடர் புடையது.]*

**காயின்சுணை** *kāyiṉ šuṇai,* பெ.(n) பூனைக்காலி; cowhage plant (சா.அக.).

*[காய் + இன் + சுணை.]*

**காயின்பனை** *kāyiṉ-paṉai,* பெ.(n) பெண்பனை; female palmyra tree. (சா.அக).

*[காய் + இன் + பனை. (காய்க்கும் பனை).]*

**கார்[1]–த்தல்** *kār-* 4 செ.கு.வி.(v.i.) கறுப்பாதல்; to darken, grow black. *"கார்க்கின்ற மெய்யவுணர்" (கந்தபு, பானுகோ.122).*

*[குல்→கல் → கால் → கார்.]*

**கார்[2]–த்தல்** *kār-,* 4 செ.கு.வி.(v.i.) 1. உறைத்தல் (பிங்.); to be pungent, acrid, hot to the taste. 2. உப்புக்கறித்தல்(வின்); to be very saltish or brackish.

*[கள் → காள் → காய் → கார் = கார்த்தல். கள் = செறிவு, உறைப்பு, கார்ப்பு.]*

**கார்[3]–த்தல்** *kār-,* 4 செ.குன்றாவி.(v.t.) வெறுத்தல்; to hate. *"பாலர்கள் கார்ப்பார்" (ஏலா.54).*

*[ கள்→காள்→காய்→கார்.]*

உறைத்தல் பொருள் வெறுத்தல் பொருளில் வளர்ந்தது.

**கார்[4]–த்தல்** *kār-,* 4 செ.குன்றாவி.(v.t.) அரும்புதல்; to bud. *"வண்கொன்றைகள் கார்த்தனவே" (திவ். இயற். திருவிருத்.68).*

*[ கால்→கார் = நீளுதல், வளர்தல், அரும்புதல்.]*

**கார்[5]** *kār,* பெ.(n) 1. கருமை; blackness. 2. கரியது; that which is black. *"களங்கனியைக் காரெனச் செய்தாரு மில்" (நாலடி,103).* 3. முகில்; cloud. *"கார்கலந்த மேனியான்" (திவ். இயற் பெரியதிருவந். 86).* 4. மழை; rain. *"வைகறை கார்பெற்ற புலமே போல்" (கலித்.38).* 5. நீர்(பிங்.); water. 6. ***கார்ப்பருவம்*** பார்க்க; see *kār-p-paruvam. "காரு மாலையு முல்லை" (தொல். பொருள். 6.).* 7. கார்நெல்; paddy harvested in the rainy season. *"காரரிசி மந்தம்" (பதார்த்த. 799).* 8. கருங்குரங்கு (பிங்.); black monkey. 9. வெள்ளாடு (பிங்.); goat. 10. ஆண்மயிர்(பிங்.); men's hair. 11. எலிமயிர் (பிங்.); rat's hair. 12.கருந்தொழுநோய் (கருங்குட்டம்); black reprosy. *"காரக் குறைந்து" (கலித். 65).* 13. இருள்; darkness, gloom of night. *"காரடுகாலை" (பரிபா: 12.85).* 14. அறிவு மயக்கம்; ignorance, illusion. *"களவென்னுங் காரறி வாண்மை" (குறள், 287).*

ம., க., து.கார் தெ.காரு.

*[கரு → கார் (வே.க.124.).]*

**கார்[6]** *kār,* பெ.(n) 1. திப்பிலிக் கட்டை; root of long pepper. 2. பசுமை; greenness. (சா.அக). 2. அரும்புதல்; to bud. *"வண்கொன்றைகள் கார்த் தனவே" (திவ். இயற்.திருவிருத். 68).*

*[கால் → கார் நீளுதல், வளர்தல், அரும்புதல், அரும்பும் பசுமை.]*

**கார்[7]** *kār,* பெ.(n.) 1. எலி; rat.2. எலிமயிர்; rat's hair. 3. ஆண்களின் தலைமயிர்; men's hair.

*[குல் →கல் →கால்→ கார். கருநிறத்தால் பெற்ற பெயர்.]*

**கார்[8]** *kār,* பெ.(n.) கலப்பையின் கொழு; plough share.

*[கால்→கார் (நீண்டது).]*



கார்

**கார்[9]** *kār,* பெ.(n.) ஆறாச்சினம், அடங்காச்சீற்றம்; uncontrollable anger. *"காரார் குருந்தோடு" (திணைமாலை.112).*

*[கார்[2] → கார்[9].]*

**கார்க்காய்** *kār-k-kāy,* பெ.(n.) கருங்கோள் (இராகு.) (வின்.); ascending node.

*[கார்+காய்.]*

கார்=கருமை. காய்-திரட்சி குறித்த வடிவொப்புப் பொருள் தாவலால் விண்ணில் உலவும் கோள் குறித்த சொல்லாயிற்று. புலப்படாத கருங்கோள் என்பதும் கருத்தாகலாம்.

**கார்க்குவளை** *kār-k-kuvaḷai,* பெ.(n.) மழைக் காலத்தில் பூக்கும் குவளைப்பூ; water-lily flowering in rainy season (சா.அக.).

*[கார்+குவளை.]*

**கார்க்குழல்** *kār-k-kuḻal,* பெ.(n.) கருமையான கூந்தல்; black tresses.

ம. கார்குழல்

*[கார்+குழல்.]*

**கார்க்குறட்டை** *kār-k-kuṟaṭṭai,* பெ.(n.) ***நீலக்காக்கணம்*** (மலை.) பார்க்க; see *nīla-k-kākkaṇam.*

*[கார்+குறட்டை.]*

**கார்க்கை** *kārkkai,* பெ.(n) துவரை; common dhall (சா.அக.).

*[கார்+கை.]*

கார்ப் பருவத்தில் பயிராகும் புன்செய்ப் பயிர்.

**கார்க்கொள்** *kār-k-koḷ,* பெ.(n) ***கருங்காணம்*** பார்க்க; see *karuṅ-kāṇam.*

*[கார் + கொள்.]*

*கார் = கருமை. கொள் = காணம் என்னும் பயறுவகை.*

**கார்க்கோடகன்** *kār-k-kōḍagaṉ,* பெ.(n.) 1. எட்டு பெரிய பாம்புகளுள் ஒன்றான கடவுட்பாம்பு (நள. கலிநீங். 13); a divine serpent, one of *aṣṭa-māgam.* 2. இரக்கமற்றவன் (தாட்சிணிய மற்றவன்) (உ.வ.); a hard - hearted unfeeling man; strict, exacting person. 3. கருடக்கல் (வின்.); mineral stone used in snake-bite.

மறுவ. கார்க்கோடன்

*[கார் + கோடகன். கார் = கருமை. கோடகன் = எதனையும் விழுங்குபவன்.]*

**கார்க்கோடம்** *kār-k-kōḍam,* பெ. (n) பிரண்டை; adamant creeper (சா.அக.).

*[கார்க்கோடகன் → கார்க்கோடம் (பாம்பு போல் நீண்டது).]*

**கார்க்கோடல்** *kār-k-kōḍal,* பெ.(n.) கருங்காந்தள்; brown-backed acute-leaved mangrove. *"கார்க்கோடற் பூக்கள்" (திவ். நாய்ச். 10:1).*

*[கார் + கோடல். கார் = கருமை. கோடு (கிளை) →கோடல் → மரக்கிளை பூங்கொத்து.]*

**கார்க்கோடன்** *kār-k-ōḍaṉ,* பெ.(n.) ***கார்க் கோடகன்*** (சங்.அக.) பார்க்க; see *kār-k-kōḍagaṉ.*

*[கார் +(கோடகன்) கோடன்.]*

**கார்க்கோணி** *kār-k-kōṇi,* பெ.(n.) தேட்கொடுக்கி; Indian turn sole (சா.அக.).

*[கார் + கோணி.]*

**கார்க்கோலம்** *kār-k-kōlam* பெ.(n.) கார்ப்போக வரிசி ; hazel-leaved psorales (சா.அக.).

*[கார் + கோலம்.]*

**கார்க்கோலி** *kār-k-kōli,* பெ.(n.) கோரைப்புல்; sedge grass (சா.அக.).

*[கார் + காலி – கார்க்காலி → கார்க்கோலி.]*

**கார்க்கோழி**[1] *kār-k-kōḻi,* பெ.(n.) கருங்கோழி; black fowl. *"காட்டிடைமேய்ந்த கார்க்கோழி யோய்ப்புற்று" (தேவா. 890,9).*

தெ. காருகோடி

*[கார் + கோழி. கார் = கருமை.]*

**கார்க்கோழி**[2] *kār-k-kōḻi,* பெ(n.)1. கருங்காணம்; black horse-gram. 2. கருஞ்சீரகம்; black cumin. 3. நிலப்பனை என்னும் கிழங்கு வகை; ground palm (சா.அக.).

*[கார் + கோழி.]*

கார் = கருமை. பழங்காலத்தமிழ் (சித்த) மருத்துவர் தாம் மருத்துவத்தில் கையாளும் மருந்துச் சரக்குகளின் பெயரைப் பிறர் அறியாவண்ணம் குழூஉக் குறியிட்டு வழங்குவது மரபாதலின் கருங்காணம் வட்டமாக இருப்பது நோக்கி கார்க்கோளி, (கோளி = வட்டம்) என்றனர். அது கார்க்கோழி எனத் திரிந்தது. சீரகத்தின் நீட்சிக்குக் கோழியிறகை உவமையாக்கிக் கார்க்கோழி எனக்கருஞ் சீரகத்தைக் குறித்துள்ளனர்.

**கார்க்கோழிகம்** *kār-k-kōḻigam,* பெ.(n.) தேட் கொடுக்கி; Indian turn sole (சா.அக.).

*[கார் + கோழிகம்.]*

**கார்க்கோழினி** *kār-k-kōḻiṉi,* பெ.(n) கருங் கொள்; black gram, horse gram (சா.அக.).

*[கார்கோழி→ கார்க்கோழினி.]*

**கார்காத்த வேளாளர்** *kār-kātta-vēḷāḷar,* பெ.(n.) வேளாளரில் ஒரு வகையார்; an endogamous division of velalas, who developed wet cultivation by constructing dams and forming lakes.

*[கார் + காத்த + வேளாளர்.]*

கார் = மழை. மழையை வேளாளர் காத்தனர் என்று மதுரைத்தலபுராணம் கூறுவது பொருந்தாது. மழை வெள்ளத்தை அணையிலும் ஏரியிலும் தேக்கி, வெள்ளத்தை ஆண்டு முழுவதும் காத்து நன்செய் வேளாண்மையைப் பெருக்கியவர்கள் என்பதே உண்மை வரலாறாகும்.

**கார்காய்** *kārkāy,* பெ.(n.) 1. கருநாகம்; a black serpant. 2. நளித் (கார்த்திகைத்) திங்களில் காய்க்கும் மாங்காய்; mango yielding in November. (சா.அக.).

*[கார் + காய்.]*

**கார்காரெனல்** *kār-kār-eṉal,* பெ.(n.) சின மிகுத்தற் குறிப்பு (இ.வ.); expr. of sething with anger

*[கார் + கார் + எனல். கார் கார் –ஒலிக்குறிப்பு.]*

**கார்காலம்** *kār-kālam,* பெ.(n.) மழைக்காலமான மடங்கல் (ஆவணி), கன்னி (புரட்டாசி) மாதங்கள்; rainy season, the months of *Avaṉi* and *puraṭṭāśi* one of six paruvam.

ம. கார்க்காலம்; க., து. கார்கால; தெ. காருகாலம்.

*[கார் + காலம். கார் = மழை.]*

**கார்காலவங்கி** *kār-kāla-vaṅgi* பெ.(n.) பழுபாகல்; buffalo carolah.

*[கார் + காலம் + வங்கி. வங்கி = வழுதுணங்காய், கத்தரி. கத்தரிக்காய் போன்ற பாகற்காய்.]*

**கார்கோல்** *kar-kōl,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin (சா.அக.).

*[கார் + கோல்.]*

**கார்கோள்[1]** *kār-kōḷ,* பெ.(n.) 1. கடல்; lit.,that which is absorbed by the clouds, sea. *"கார்கோண் முகந்த கமஞ்சூண்... மாமழை"* (திருமுருகு. 7). 2. **ஓமை** (ட.) பார்க்க; see *ōmai*

*[கார் + கோள். கொள் → கோள்.]*

*கார் = கரிய மழைமேகம். கார்கோள் = கரிய மழைமேகங்கள் நீராவிவடிவில் நீரை உறிஞ்சிக் கொள்ளுந்தற்கு இடமாகிய கடல்.*

**கார்கோள்[2]** *kār-kōḷ,* பெ.(n.) காரி (சனி.) (யாழ்.அக); saturn.

*[கார் + கோள்.]*

*கார் = கரிய. கோள் = கோளவடிவிலுள்ள அண்டம்.*

**கார்கோளி** *kār-kōḷi,* பெ.(n.) 1. முத்தக்காசு (மலை.); straight sedge. 2. **கார்க்கோழி** பார்க்க; see *kar-k-kōḻi*

*[கார் + கோளி.]*

**கார்கொளி** *kārkoḷi,* பெ.(n.) தேட்கொடுக்கு; (கோ.அக.); Indian turn sole.

மறுவ. கார்கோணி

*[கார் + கொளி.]*

**கார்சினம்** *kār-šiṉam,* பெ.(n) குருதிக் கக்கல் கழிச்சல் நோய்; a disease characterised by evacuation and vomitting of dark bloody matter (சா.அக.).

*[கார் + சினம்.]*

**கார்த்தம்** *kārttam,* பெ.(n) காமம்; sexual passion. (சா.அக.).

*[கார் → கார்த்தம் (மிகுதி).]*

**கார்த்தவீரியன்** *kārtta-viriyaṉ,* பெ.(n.) **கார்த்தவீரியார்ச்சுனன்** (திவா) பார்க்க; see *kārtta-viriyār-c-cuṉaṉ.*

*[கார்த்தவீரியன்(மருஉ).]*

**கார்த்தவீரியார்ச்சுனன்** *kārtta-viriyārccuṉaṉ,* பெ.(n) பரசுராமனால் கொல்லப்பட்டவனும், ஆயிரம் கைகளையுடையவனுமான மன்னன்;a puranic thousand - armed emperor, who was sleain by Parašurama, and whose capital was Mahismati.

மறுவ. கார்த்தவீரியன்

*[கருத்த → கார்த்த + வீரன் + அருச்சனன். ஆரியரின் இனப்பகைவன்.]*

**கார்த்தன்** *kārttaṉ* பெ.(n.) துரிசு (யாழ்.அக.), verdigiris.

மறுவ : செம்புக்களிம்பு

*[கார் → கார்த்தன்.]*

**கார்த்தாளி** *kārttāḷi,* பெ.(n) தாளி வகை; a kind of *tāḷi* (சா.அக).

*[கார் + தாளி.]*

**கார்த்திகேயன்** *kārttikēyaṉ,* பெ.(n) **கார்த்திகையன்** பார்க்க; see *karttigaiyan.*

*[கார்த்திகையன் → கார்த்திகேயன்.]*

**கார்த்திகை[1]** *kārttigai,* பெ.(n) காந்தள்; November flower (சா.அக.).

*[கார் → கார்த்திகை.]*

**கார்த்திகை** *kārttigai,* பெ.(n) ஒரு விண்மீன் (திவா.); the constellation pleiades, part of mēša-rāši and iḍaba-rāši. 2. நளிமாதம் (சைவச. ஆசாரி. 79); the eighth month of the Indian calendar. 3.

***கார்த்திகைப்பூ*** (இலக். வி. 192, உரை.). பார்க்க; see *kārttigai-p-pū*. 4. நளி (கார்த்திகை) மாதத்தில் வீடுதோறும் விளக் கேற்றிக் கொண்டாடும் முழுமதி நாள்; the full-moon day in the month of Karttigai when every house is beautifuly lit with lamps. 5. துர்க்கை (திவா.); Durga.

ம. கார்த்திக; து. கார்திக.

*[கார் → கார்த்திகை.]*

**கார்த்திகை அரிசி** *kārttigai-arisi*, பெ.(n) ***கார்த் திகைக் காசு*** பார்க்க; see *kārttigai-k-kāšu.*

*[கார்த்திகை → கார்த்திகையன்.]*

**கார்த்திகைக்காசு[1]** *kārttigai-k-kāšu*, பெ.(n). ***கார்த்திகைக் காணிக்கை*** (S.I.I. i. 90) பார்க்க see *kārttigai-k-kāṇikkai*

*[கார்த்திகை + காசு.]*

**கார்த்திகைக்காசு[2]** *kārttigai-k-kāšu*, பெ.(n). ஒரு வகை வரி; a kind of tax. "கார்த்திகை அரிசி, கார்த்திகைக் காசு, கார்த்திகைப் பச்சை, வேலிப்பயறு, நீர்நிலக்காசு, தறியிறை, கடையிறை, காலக்கப்பாட்டம், தட்டார்ப்பாட்டம்...... மற்றுமெப்பேர்பட்டப் பல காசாயங்களும்" (SII.i.62-15 pg.90).

ம. கார்த்திகக்காசு

*[கார்த்திகை → காசு.]*

**கார்த்திகைக் காணிக்கை** *kārttigai-k-kāṇikkai*, பெ.(n) ஒரு பழைய வரி (கல்.); an ancient money tax.

மறுவ. கார்த்திகைக்காசு

ம. கார்திகக் காணிக்க

*[கார்த்திகை+காணிக்கை.]*

**கார்த்திகைக்கார்** *kārttigai-k-kār*, பெ.(n) நெல் வகை; a kind of paddy. *"சித்திரைக் கார், நவிரைக்கு நூறுகுழிக்கு" (SII.vii.122-2 pg.51).*

*[கார்த்திகை+கார்.]*

**கார்த்திகைக்கிழங்கு** *kārttigai-k-kilaṅgu*, பெ.(n.) ***கலப்பைக் கிழங்கு*** பார்க்க; *kalappai-k-kilaṅgu.*

ம. கார்திகக் கிழங்ங்நு

*[கார்த்திகை+கிழங்கு.]*

**கார்த்திகைக்கூம்பு** *kārttigai-k-kūmbu*, பெ.(n.) கார்த்திகை மதிய நாட்களில் சிறுகோயில்களில் முன்னிரவில் கூம்பு வடிவில் அமைத்து கொளுத்தப்படும் சருகு; cone shaped fuel, burnt in the night of Karthigai full moon night.

*[கார்த்திகை+கூம்பு.]*

**கார்த்திகைக்கொடி** *kārttigai-k-koḍi*, பெ.(n) ***கார்த்திகைக் கிழங்கு*** பார்க்க; see *kārtigai-k-kilaṅgu* (சா.அக.).

*[கார்த்திகை+கொடி.]*

**கார்த்திகைக்கொள்ளி** *kārttigai-k-koḷḷi*, பெ.(n.) கார்த்திகைத் திருநாளில் அனற்பொறிதட்டி விளையாடுதற்குரிய அகத்திக் கொள்ளி (இ.வ.); firebrand of awatti, used by children to scatter sparks in sport in the evening of the *tiru-k-kārttigai*

மறுவ. அகத்திக் கொள்ளி, அகத்துக் கொள்ளி.

*[கார்த்திகை+கொள்ளி.]*

**கார்த்திகைச்சம்பா** *kārttigai-c-cambā*, பெ. (n.) நான்கு முதல் ஆறுமாதங்களில் விளையக்கூடிய சம்பா நெல்வகை; a kind of *cambā* paddy, maturing in four to six months.

*[கார்த்திகை+சம்பா.]*

**கார்த்திகைச்சேவகன்** *kārttigai-c-cēvagaṉ* பெ.(n.) கருநாவிக் கிழங்கு; black aconite (சா.அக.).

*[கார்த்திகை + சேவகன்.]*

**கார்த்திகைத் தேவிமார்** *kārttigai-t-tēvimār*, பெ.(n) ***கார்த்திகைப் பெண்கள்*** பார்க்க; see *kārtti-gai-p-peṇgaḷ.*

*[கார்த்திகை+தேவிமார்.]*

**கார்த்திகை நோன்பு** *kārttigai-nōṉbu,* பெ.(n.) முருகனைக் குறித்துக் ஒவ்வொரு திங்களும் கார்த்திகை நாளன்றும் கடைப்பிடிக்கும் நோன்பு; monthly fast in honour of Skanda, when the moon is in conjunction with pleiades.

ம. கார்த்திக விரதம்

*[கார்த்திகை + நோன்பு.]*

**கார்த்திகைப் பச்சை** *kārttigai-p-paccai,* பெ.(n.) பழைய வரிவகை (S.I.I.i, 62-15 pg.90); an ancient tax.

*[கார்த்திகை + பச்சை.]*

**கார்த்திகைப்பூ** *kārttigai-p-pū,* பெ.(n.) காந்தள் மலர்; Malabar glory lily blossoming in Karttigai.

ம. கார்த்திகப்பூ

*[கார்த்திகை + பூ.]*

**கார்த்திகைப் பெண்கள்** *kārttigai-p-peṇgaḷ,* பெ.(n) அறுவராகிய கார்த்திகைப் பெண்கள் (வின்.); the six presiding deities of the constellation pleiades.

மறுவ. கார்த்திகையறுவர்

*[கார்த்திகை + பெண்கள்.]*

**கார்த்திகைப்பொரி** *kārttigai-p-pori,* பெ.(n) கார்த்திகைத் திருநாளிற் வழங்கும் நெற்பொரி; fried paddy mixed with treace, used in the Karttigai festival.

*[கார்த்திகை + பொரி.]*

**கார்த்திகையறுவர்** *kārttigai-y-aṟuvar,* பெ.(n.) ***கார்த்திகைப் பெண்கள்*** பார்க்க; see *kārttigai-p-peṇgaḷ.*

*[கார்த்திகை + அறுவர்.]*

**கார்த்திகையன்** *kārttigaiyaṉ,* பெ.(n.) கார்த்திகை மகளிரால் வளர்க்கப்பட்ட முருகக் கடவுள் (சூடா.); Skanda, as nursed by the six áesiding deities of the constellation leiades.

*[கார்த்திகை → கார்த்திகையன்.]*

**கார்த்திகைவறட்டி** *kārttigai-varaṭṭi,* பெ.(n.) மாதக் கார்த்திகைதோறுந் திண்ணைப் பள்ளிக் கூடத்து ஆசிரியருக்குக் கொடுக்கும் எருமுட்டை. (இ.வ.); cowdung cakes given to the pial school teacher, on the eve of the monthly Karttigai.

*[கார்த்திகை+வறட்டி.]*

**கார்த்திகைவாளை** *kārttigai-vāḷai,* பெ.(n.) பதினாறு விரலம் நீளமுடையதும் வெள்ளி நிறமுடையதுமான கடல் மீன்வகை; ribbon-fish, silvery, attaining at least 16 in.in length,

*[கார்த்திகை+வாளை.]*

**கார்த்திகை விளக்கீடு** *kārttigai-viḷakkīḍu,* பெ.(n.) கார்த்திகை விழாவின்போது வீடு முதலி யவற்றில் விளக்கேற்றுகை; lighting of lamps in the evening of *tirukkarttigai.*

*[கார்த்திகை+விளக்கீடு.]*

இவ்விழா விளக்கணி (தீபாவளி) யோடு ஒப்பிடத் தக்கது. ஐப்பசி (அமாவாசையன்று) தீபாவளி வரும். கார்த்திகை மதியத்தன்று கார்த்திகை விளக்கீடு நடைபெறும். தீபாவளி வடபுலத்தில் பெருஞ்சிறப்போடு, இரவு முழுவதும் விளக்கணி வைத்துக் கொண்டாடப்படும். விளக்கணி விழாவின் பிற பழக்க வழக்கங்கள் தமிழ் நாட்டில் பெரிதும் ஊடுருவிய போதும், விளக்கேற்றும் பழக்கம் நுழையவில்லை. அது கார்த்திகை நாளில் மட்டுமே சிறப்பாக நடைபெறுகிறது.

**கார்த்திகை விளக்கு** *kārttigai-viḷakku,* பெ.(n) திருக்கார்த்திகை விழாவின்போது ஏற்றப்படும் விளக்கு; lights of the kārttigai festival, placed at the gate and other parts of the house.

ம. கார்த்திக விளக்கு

*[கார்த்திகை+விளக்கு.]*

**கார்த்துளசி** *kārttuḷaśi,* பெ.(n.) கருந்துளசி; black variety of basil (சா.அக).

*[காரு → கார் + துளசி.]*


கார்த்துளசி

**கார்நாள் உரும்** *kārnāḷ-urum* பெ.(n.) மழைக் காலத்து இடி (கோ.அக.); thunder of the rainy season.

*[கார் →நாள் + உரும்.]*

**கார்நாற்பது** *kār-nāṟpadu,* பெ.(n.) பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றானதும், கார்காலம் வந்ததும் தலைவன் வாராமையால் வருந்தும் தலைவி கூற்றாகக் கண்ணங் கூத்தனாரால் 40 செய்யுளிற் பாடப் பெற்றதுமான நூல்; an ancient love poem of forty stanzas by kaṇṇaṉ-kūttāṉār in which the long-expected approach of the rainy season is described by a love-lorn lady pining for the sight of her lover, one of Patiṉeṉ-kīḻ-k-kaṇakku.

*[கார் + நாற்பது.]*

**கார்நாற்றம்** *kār-nāṟṟam,* பெ.(n.) தலைப்பெயல் மழையால் மண்ணிற்றோன்றும் மண்ணின் மணம்; earthy odour caused by fresh drizzle. *"கானாற்றுங் கார்நாற்றம்" (பரிபா. 20:10).*

*[கார்+நாற்றம்.]*

**கார்நிதி** *kār-nidi,* பெ.(n.) பேய்ப்பீர்க்கு; wild bitter gourd (சா.அக).

*[கார்+நிதி]*

**கார்நிறக்கல்** *kār-niṟa-k-kal,* பெ.(n) முகில் வண்ணக் கல்; a dark-grey stone (சா.அக.).

*[கார்+நிறம்+கல்.]*

**கார்நிறம்** *kār-niṟam,* பெ.(n) 1. தசைநிறச் சிவப்புக்கல் (குருவிந்தக்கல்); lit., a red stone of the colour of flesh. 2. கறுப்பு நிறம்; dark colour (சா.அக.).

*[கார் + நிறம்.]*

**கார்நெல்** *kār-nel,* பெ.(n) நெல்வகை; a kind of paddy.

*[கார்+நெல்.]*

**கார்நொச்சி** *kār-nocci,* பெ.(n) கருப்பு நொச்சிச் செடி; black species (சா.அக.).

*[கார்+நொச்சி.]*

**கார்ப்படிகன்** *kār-p-paḍigaṉ,* பெ.(n.) கோயில் உள்ள இடங்களுக்குச் சுற்றுலா செல்வோன் (யாத்திரைக்காரன்) (யாழ்.அக.); pilgrim.

*[ கார்+(படிவன்) படிகன். கார்= கார்ப்பருவம். படிகன்= நோன்பு மேற்கொண்டவன்.]*

**கார்ப்பருவம்** *kār-p-paruvam,* பெ.(n.) கார்காலம் பார்க்க; see *kār-kālam.*

*[கார்+பருவம். கார்=மழை.]*

**கார்ப்பாசி** *kār-p-pāsi,* பெ.(n.) ***இலைப்பாசி*** பார்க்க; see *ilai-p-pāśi* (சா.அக.).

*[கார் + பாசி.]*

**கார்ப்பாளன்** *kārppāḷaṉ,* பெ.(n.) கொடியவன்; wicked person, sinner. *"வெள்ளி வெற்பெடுத்த கார்ப்பாள னுக்கும்" (அருட்பா, ii, சிகாமணி.4).*

ம. கார்ப்பாளன்

*[கார்ப்பு+ஆள்+அன். கார்ப்பு - கடுமை, கொடுமை]*

**கார்ப்பான்** *kārppāṉ,* பெ.(n.) கரிசலாங் கண்ணி (மூ.அ.); a plant growing in moist places eclipta prostata

*[கார் → கார்ப்பான்.கார்=கருமை.]*

**கார்ப்பிகம்** *kārppigam,* பெ.(n.) கருப்பப்பை; uterus womb(சா.அக.).

*[கருப்பம் → கார்ப்பம் → கார்ப்பிகம் (கொ.வ.).]*

**கார்ப்பீகம்** *kār-p-pīgam,* பெ. (n.) பருத்தி; Indian cotton shrub (சா.அக.).

H.kapps.

*[கால் + பூ - காற்பூ → கார்ப்பூ → கார்ப்பீகம் (பருத்திப்பூ, பருத்தி) காற்பூ என்பது குச்சிப்பூ எனப் பொருள்படும்..]*

**கார்ப்பு** *kārppu,* பெ. (n.) 1. அறுசுவையுள் ஒன்றான உறைப்பு (சூடா.); pungency, one of six tastes. 2. உவர்ப்பு (pt;d.); salt-ness.

*[கார் → கார்ப்பு.]*

**கார்ப்புப்பு** *kārppuppu,* பெ.(n.) காரமான உப்பு; a caustic or corrosive salt of any kind (சா.அக.).

*[கார்ப்பு+உப்பு.]*

**கார்ப்புரம்** *kārppuram,* பெ.(n.) 1. நீர்; water. 2. பொன்; gold (சா. அக).

*[கார்ப்பு+உரம்.]*

**கார்ப்பெயல்** *kār-p-payal,* பெ.(n.) கார்காலத்து மழை; heavy rain, as in the rainy season. *"கார்ப் பெயற் கலித்த பெரும்பாட் டீரத்து" ( புறநா. 120).*

*[கார்+பெயல். கார்=கார்காலம், மழைக்காலம். பெயல்=மழை.]*

**கார்பாலை** *kār-pālai,* பெ. (n.) ***காட்டிலுப்பை*** பார்க்க; see *kāṭṭiluppai.*

*[கார்+பாலை.]*

**கார்புகா** *kārpugā,* பெ. (n) ***கார்போகி*** பார்க்க; see *kār-pōgi.*

*[கார்+(போகி) புகா.]*

**கார்புரவு** *kār-puravu,* பெ.(n.) கார்நெற் சாகுபடி; cultivation of the paddy, harvest.ஊர் அளந்த கோல்*"சுந்தர பாண்டியனாலேஅளந்து கார்புரவுக்கு முன் இறுக்கும் கடமைக்கு" (S.I.I.viii, 169-5 pg.79).*

*[கார்+புரவு.]*

**கார்போகம்** *kār-pōgam,* பெ. (n.) ***கார்போகி*** (பதார்த்த. 1020) பார்க்க; see *kar-pōgi.*

*[கார்+போகம்.]*

**கார்போகரிசி** *kār-pōgariśi,* பெ.(n) கார்போகியின் விதை; seed of scurfy pea.

*[கார்போகி+அரிசி. கார்+போகம்=கார்ப் பருவத்தில் விளைந்தது.]*

**கார்போகி** *kār-pōgi,* பெ.(n.) 1. பூடுவகை; scurfy pea. 2. கார்ப்பருவத்தில் விளையும் ஒருவகை நெல்; a kind of paddy

*[கார்+போகி . போகு → போகி. கார்போகி- கார்போகத்தில் (பருவத்தில்) விளைந்தது.]*

**கார்போகு** *kār-ppōgu,* பெ. (n.) ***கார்போகி-***[1] பார்க்க; see *kār-pōgi.*

*[கார்+(போக.)போகு.]*

**கார்மணி** *kār-maṇi,* பெ. (n.) 1. கரிசலாங்கண்ணி. (மலை); a plant growing in moist places. 2.காராமணிப்பயறு; cow-gram (சா.அக.).

*[கார்+மணி.]*

**கார்மணித் தக்காளி** *kārmaṇi-t-takkāḷi,* பெ.(n) கருப்பு நிறமான மணித்தக்காளி; black berried solanum.

*[கார் + மணி + தக்காளி.]*

**கார்மலி** *kār-mali,* பெ. (n.) கடல் (வின்.); sea

*[கார்+மலி கார்=கருமை, கார்மலி = கருநிறம் படர்ந்தது.]*

**கார்மழை** *kār-maḻai,* பெ. (n.) கார்காலத்தில் பெய்யும் மழை; monsoon rain.

க. கார்மாழு, காரமளெ, கார்மளெ.

*[கார்+மழை.]*

**கார்மறுநிலம்** *kār-maṟu-nilam,* பெ. (n.) இருபோக நிலம்; double crop land. *"ஊர் விழுக்கட்டோபாதி கார்மறுநிலம் அரேகால் முக்காணி" ( SII. iv.422-4 pg.125).*

*[கார்+மறு+நிலம். கார்ப்பருவத்துக்கு அடுத்த மறு பருவத்திலும் விளைச்சல் எடுக்கத்தக்க நிலம்.]*

**கார்மனத்துவம்** *kār-maṉattuvam,* பெ.(n.) பிறர்க்குத் தீங்கிழைக்கும் மனத்தன்மை; evil-mindedness (சா.அக.).

*[கருப்பம் + மனத்துவம்.]*

**கார்முகம்** *kārmugam,* பெ. (n.) 1. வில்;bow. *"கார் முகங்கான்ற ... விசிகம்" (ஞானா. 20,19).* 2. பஞ்சு கொட்டும் வில்; bow for cleaning cotton. *"கார்முகம் வீசிட மாசறு துவட்பஞ்சு" (திருப்பு.44).* 3. மூங்கில் (மலை.) bamboo. 3. முகில்; cloud (சா.அக.).

*[கார்+முகம். கார்=முகில். கார்முகம்= மழை மேகக்காலத்தில் முகம் காட்டும் வானவில். வானவில் வடிவில் செய்யப்பட்ட பருத்தி கொட்டும் விற்கோல்.]*

**கார்முகன்** *kār-mugaṉ,* பெ. (n.) ஒருவகை செய் நஞ்சு (சங்.அக.); a prepared arsenic.

*[ கார்+முகன்=கார்=கருமை, நஞ்சு.]*

**கார்முகில்** *kār-mugil,* பெ.(n.) கருக் கொண்ட முகில்; black cloud heavy with rain *"நீலக்கார் முகில் கமலம் பூத்து" (கம்பரா.வாலிவ. 75).* 2. ஒருவகைச் செய்நஞ்சு; a prepared arsenic.

ம. கார்முகில்; தெ. காருமொகுலு.

*[கரு+முகில்– கார்முகில்.]*

**கார்முகில் வண்ணம்** *kār-mugil-vaṇṇam,* பெ. (n.) தீமுறுகற் செய்நஞ்சு; a dark grey- coloured arsenic (சா.அக.).

*[கார் + முகில் + வண்ணம்.]*

**கார்முகில் வன்மை** *kār-mugil-vaṉmai,* பெ. (n.) ஒருவகைச் செய்நஞ்சு; a prepared arsenic.

*[கார் + முகில் + வன்மை]*

**கார்முகிற் சுண்ணம்** *kār-mugircuṇṇam,* பெ. (n.) ஒரு வகைக் கறுப்புச் சுண்ண மருந்து; a dark compound of calcium carbonate prepared by calcination (சா.அக.).

*[கார்+முகில்+சுண்ணம்.]*

**கார்முல்லை** *kār-mullai,* பெ. (n.) தலைவியைப் பிரிந்த தலைவன் வருமுன் அவன் வருதற்குரிய கார்காலத்தின் அறிகுறியாக முகில் முன் வந்ததைக் கூறும் புறத்துறை (பு.வெ.10, முல்லைப்.2.); theme describing the approach of a dark clouds, reminding an expectant wife that the time has come for her husband to return.

*[கார் + முல்லை. கார் = கார்காலம்.]*

**கார்மேகம்** *kār-mēgam,* பெ.(n.) கருங்குரங்கு; black-faced monkey.

*[கார் + முகம் . கார்முகம் → கார் = கருமை.]*

**கார்வண்ணர்** *kār-vaṇṇar,* பெ.(n.) அசுரர் (பிங்.); asuras, as dark in complexion.

*[கரு → கார் + வண்ணர். கார் = கருமை.]*

**கார்வண்ணன்** *kār-vaṇṇaṉ* பெ.(n.) கார்முகில் வண்ணத் திருமால் (பிங்.); Viṣṇu, as dark in complexion like clouds.

*[கார் + வண்ணன். கார் = கருமை.]*

**கார்வலயம்** *kār-valayam,* பெ.(n.) பெருங்கடல் (வின்.); ocean.

*[கார் + வலயம் - கார்வலயம்]*

**கார்வழலை** *kār-vaḻalai,* பெ.(n.) பெரிய பாம்பு (உரி.நி.); black cobra.

*[கார் + வழலை. கார் = கருமை.]*

**கார்வா** *kārvā,* பெ.(n.) 16.5, 12, 16 விரலம் அள்வுள்ள கடல்மீன் வகைகள்; species of sea fish.

*[கால் → கார் → கார்வா. கால் = நீட்சி]*



கார்வா

**கார்வாய்சன்னி** *kārvāy-s-anni,* பெ.(n.) பெண்களுக்கு உண்டாகும் ஒருவகை இசிவு நோய்; a kind of delirium peculiar to women (சா.அக.).

*[கார் + வாய் + சன்னி.]*

**கார்வினை** *kār-vinai,* பெ.(n.) பாழ்வினைத் தொழில் (பாவத்தொழில்); sinful action. *"கொடுங்கார் வினை... புரியல்" (புலியூரந். 2).*

*[கார் + வினை – கார்வினை.]*

**கார்வெள்ளி** *kār-veḷḷi,* பெ.(n.) மட்ட வெள்ளி. (C.G.); impure silver.

*[கார் + வெள்ளி. கார் = கருமை, தரக் குறைவு.]*

**கார்வை** *kārvai,* பெ.(n.) இசையில் பண்நீட்சி (நாத நீட்சி); a prolonged musical note, as in a harmonium.

*[கால் → கார் → கார்வை. கால் = நீட்சி, கால நீட்டிப்பு.]*

**காரக்கட்டி** *kāra-k-kaṭṭi,* பெ.(n.) காடிக்காரம் (இ.வ.); nitrate of silver, lunar caustic.

*[காரம் + கட்டி.]*

**காரக்கருணை** *kār-k-karuṇai,* பெ.(n.) ***காறுகருணை*** (M.M.289) பார்க்க; see *kāṟu-karuṇai.*

*[கார் + கருணை–காரக்கருணை. கார் = காரல் சுவை.]*

**காரக்கல்** *kāra-k-kal,* பெ.(n.) ஒருவகை நஞ்சுகல் (வின்.); a kind of caustic mineral.

ம. காரக்கல்லு

*[கார் = கருநிறம், நஞ்சு. கார் → காரம் + கல்]*

**காரக்கழிச்சல்** *kāra-k-kaḻiccal,* பெ.(n.) செரியாமல் வயிற்றுப்போக்கு ஏற்படுதல்; a kind of diarrhoea.

*[காரம் + கழிச்சல். காரம் = மிகுதி.]*

**காரக்காஞ்சிரம்** *kāra-k-kāñjiram,* பெ.(n.) ஒரு வகை மருந்துச்செடி. (M.M.161); medicinal herb.

ம. காரக்காஞ்சிரம்

*[காரம் + காஞ்சிரம்.]*

**காரகக்கருவி** *kāraga-k-karuvi,* பெ.(n.) தொழிலை இயற்றுவிக்குங் கருவி (தொல். சொல். 74, உரை); that which is instrumental in bringing about action.

*[கருத்தல் = செய்தல். கரு → காரம் + கருவி.]*

**காரகம்**[1] *kāragam,* பெ.(n.) வேற்றுமையுருபேற்ற பெயர் வினைகொண்டு முடியும் நிலை (பி.வி.8); the relation of a noun to a verb denoted by the case-ending.

*கருத்தல் = செய்தல், கரு → கார் → காரகம். ஏற்ற வினையைப் பயனிலையாகக் கொண்டு முடியும் பாங்கு.*

**காரகம்**[3] *kāragam,* பெ.(n.) தோல்நோய் (மேகநோய்); secondary syphilis.

*[கரு + அகம் – காரகம்.]*

**காரகவரிக்கொம்பு** *kār-aga-vari-k-kombu,* பெ.(n) உட்புறத்தே கறுப்புவரிகொண்ட மாட்டின் கொம்பு (இ.வ.); horn of an ox with black streaks inside it.

*[கார் +அகம் + வரி + கொம்பு.]*

**காரகவெட்டை** *kāraga-veṭṭai,* பெ.(n) ***காரகம்***[2] (இராசவைத்.) பார்க்க; see *kāragam*[2].

*[காரகம்[2] + வெட்டை.]*

**காரகவேது** *kāraga-v-ēdu,* பெ.(n) தொழினிகழ்ச்சிக்குக் கருவியாகவுள்ள ஏது (தண்டி, 58, தலைப்பு.); efficient cause, actually producing the effect, dist. fr. ñābaga-v-ēdu, as. வாணிகத்தான் ஆயினான்.

*[காரகம் + ஏது. காரகம் = தொழில், நிகழ்ச்சி. ஏது = காரணம். ஏந்து → ஏது.]*

**காரகன்** *kāragaṉ,* பெ.(n.) 1. செய்வோன்; agent, doer. 2. படைப்போன்; creator. *"காரகன்றனையும்" (சிவதரு. சிவஞான.31).*

*[கரு → (தருகன்) → காருகன் – காரகன். கருத்தல் = செய்தல்.]*

**காரகில்** *kār-agil,* பெ.(n.) அகில்வகை (சிலப்.14: 108, உரை); a kind of eagle-wood , used as incense.

*[கார் + அகில்.]*

**காரங்கட்டு—தல்** *kāraṅ-kaṭṭu-,* 5 செ.கு.வி. (v.i) 1. நீலச்சாயத்தை உறுதியாக்குதல் (வின்.); to strengthen the blue dye by adding the necessary ingredients. 2. உறைப்புமருந்து கூட்டுதல்; to prepare caustics.

*[காரம் + கட்டுதல். காரம் பார்க்க; see kāram.]*

**காரங்கூட்டு—தல்** *kāraṅ-kūṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) சாயமருந்து சேர்த்தல் (வின்.); to prepare dyer's lye.

*[காரம் + கூட்டு.]*

**காரங்கொடு—த்தல்** *kāraṅ-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) காரமருந்தை உண்பித்தல் (உ.வ.); to give pungent medicines, as to a lying-in woman.

*[காரம் + கொடு.]*

**காரச்சாயம்** *kāra-c-cāyam,* பெ.(n) ஒருவகைக் கலப்புச் சாயம் (யாழ்ப்.); a compound colour for dyeing.

*[காரம் + சாயம்.]*

**காரச்சீலை** *kāra-c-cīlai,* பெ.(n) புண்ணுக்கிடும் மருந்துச் சீலை (உ.வ.); corrosive plaster, blister.

*[காரம் + சீலை.]*

**காரச்சேர்வை** *kāra-c-cērvai,* பெ.(n) தீப்பற்றுள்ள மருந்தின் சேர்க்கை (பாண்டி); cauteriser.

*[காரம் + சேர்வை.]*

**காரச்சேவு** *kāra-c-cēvu,* பெ.(n) எண்ணெய்யில் பொறித்த காரப்பண்டம்; a kind of comestibles.

*[காரம் + சேவு.]*

**காரசாரம்** *kāra-šāram,* பெ.(n) வேண்டிய அளவோடு அமைந்த காரச்சுவை; pungency, the quality of being pungent and palatable. *"கார சாரஞ்சேர் சாற்றிலே கலந்த சோற்றிலே" (அருட்பா, vi, அவாவறுப்பு.).*

*[காரம் + சாரம். சாரம் = சார்ந்த சுவை.]*

**காரடம்** *kāraḍam,* பெ.(n) கண்கட்டுக் கலை (கண் கட்டு வித்தை); juggling, legerdemain.

ம. காரடம்; க.தூரட்; தெ.தூர.

**காரடை** *kār-aḍai,* பெ.(n) அரிசிமாவில் செய்யும் ஒருவகை அடை; a kind of rice cake.

*[கார் + அடை. கார் = கார் அரிசி.]*

**காரடையாநோன்பு** *kāraḍaiyā-nōṉbu,* பெ.(n.) கும்பமும் (மாசி) மீனமம் (பங்குனி) கூடும் நாளில் கணவரின் நீண்ட வாழ்நாளுக்காக மகளிர் கைக்கொள்ளும் ஒரு நோன்பு; a ceremonial fast observed by women when the Sun passes from Aquarius to Pisces, praying for the longevity of their husbands.

*[காரடை+ஆம்+நோன்பு. (மகர ஈறு கெட்டது).]*

கார் அரிசியில் செய்த காரடை வைத்து வழிபடும் நோன்பு.

**காரண்டம்** *kāraṇḍam,* பெ.(n.) 1. நீர்க்காக்கை (சூடா.); little cormorant. 2. கடுகு; mustard.

*[கார்+அண்டம். கார்=கருநிறம். அண்டம் = மிகுதி. கருநிறம் மிகுந்த காக்கையும், கடுகும் காரண்டம் எனப்பட்டது.]*

**காரண்டலம்** *kāraṇḍalam,* பெ.(n.) நீர்க்காக்கை; water-crow (சா.அக.).

*[காரண்டம் → காரண்டலம்.]*



காரண்டலம்

**காரண்டவம்** *kāraṇḍavam,* பெ.(n.) நாரைவகை (பாண்டி); a kind of crane.

*[கார் + அண்டம் + அம் = காரண்டவம்.]*

**காரண்டவைப்பு** *kār-aṇḍa-vaippu,* பெ.(n.) கார்முகிற் செய்நஞ்சு; a prepared arsenic (சா.அக.).

*[கார்+அண்டம்+ வைப்பு.]*

**காாரணக்குரவன்** *kārana-k-uravan,* பெ.(n.) விழுப்பொருள் உணர்த்தும் ஆசிரியன் (வின்); spiritual teacher whose sole object is the spiritual benefit of his disciple, opp. to *kāriya-guru*

*[காரணம் + குரவன்.]*

**காரணக்குறி** *kārana-k-kuri,* பெ.(n.) 1. காரணப் பெயர்; noun conveying the etymological sense. opp to iḍu-kuri. 2. முன்னறிகுறி (வின்.); presage, omen, prognostic. *"மழைக்குக ணென்பது காரணக்குறியென விழுத்தான்" (கம்பரா. காட்சி.6).*

*[காரணம்+குறி.]*

**காரணக்குறிமரபு** *kārana-k-kuri-marabu,* பெ.(n.) காரணம்பற்றித் தொன்றுதொட்டு வழங்கும் பெயர்ச்சொல் (நன். 275); noun used in its etymological sense and sanctioned by long usage. (எ.டு.) அவன், அவள், பறவை, விலங்கு.

*[காரணம்+குறி+மரபு.]*

**காரணக்குறியாக்கம்** *kārana-k-kuri-y-ākkam,* பெ.(n.) காரணம்பற்றிப் படைத்துக்கொள்ளும் பெயர்ச்சொல் (நன். 275, விருத்.); noun used in its etymological sense to suit an occasion. (எ.டு.) பொன்னன், பூணன்.

*[காரணக்குறி + ஆக்கம்.]*

**காரணகர்த்தா** *kārana-karttā,* பெ.(n.) ***காரணகருத்தன்*** பார்க்க; see *kārana-karuttan*

*[காரணம் + கர்த்தா.]*

த. கருத்தன் **Skt.**> kartha

**காரணகருத்தன்** *kārana-karuttan,* பெ.(n.) முதற்கடவுள் (வின்.); the supreme being, the cause of all things.

*[காரணம் + கருத்தன்.]*

**காரணகுரு** *kārana-guru,* பெ.(n.) ***காரணக் குரவன்*** பார்க்க; see *kāranak-kuravan.*

*[காரணம்+குரு]*

த. குரவன் **Skt.**> guru.

**காரணச்சிறப்புப்பெயர்** *kārana-c-cirappu-p-peyar,* பெ.(n.) காரணத்தால் ஓரினத்தில் ஒன்றற்குச் சிறப்பாக வரும் பெயர்ச்சொல் (நன்.62, உரை); noun used in its etymological sense and applicable to a particular object in a class or group, dist. fr. kārana-p-peyar. (எடு.) முடி, (முடியப்படுவது), கழல் (காலில் கட்டப்படுவது).

*[காரணம் + சிறப்பு + பெயர்.]*

**காரணச்சொல்** *kārana-c-col,* பெ.(n.) கதை (பிங்); story, narrative.

*[காரணம் + சொல். காரணம் = ஒன்றோடொன்று தொடர்புறுத்தல். சொல் = சொல்லுவது – ஆகுபெயராய் சொல்லப்படும் கதையைக் குறித்தது.]*

**காரணப்பெயர்** *kārana-p-peyar,* பெ.(n.) ஒரு காரணம்பற்றி வழங்கும் பெயர் (நன். 62, உரை); derivative name, dist. fr. *iḍu-kuri-p-peyar.* (எடு.) பொன்னன்

*[காரணம் + பெயர்.]*

**காரணப்பொதுப்பெயர்** *kārana-p-podu-p-peyar,* பெ.(n.) பலபொருட்குப் பொதுவாக வழங்கும் காரணப்பெயர்ச்சொல் (நன். 62, உரை); noun used in its etymological sense and applicable to a class or group, dist. fr. *kārana-c-cirappu-p-peyar.* (எடு.) அணி (அணியப்படும் கலன்கள் அனைத்தையும் குறிப்பது).

*[காரணம் + பொது + பெயர்.]*

**காரணம்** *kāranam,* பெ.(n.) 1. மூலம்; principle, origin, source, cause, of three kind viz., முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணம். 2. ஏது; reason, ground of an assertion or argument. *"கல்லார்க்கொன் றாகிய காரணம்" (நாலடி, 265).* 3. நோக்கம்; motive, object. நீ

அவனை வருத்துங்காரணம் என்ன? 4. வழிவகை (உபாயம்); means. *"இதனைத் தீருங் காரணம் யாது" (கம்பரா. நாகபா.234).* 5. சிவனியநூல்; 28ல் ஒன்று (சைவச.பொது.331, உரை); an ancient šaiva scripture in šanskrit.

**மறுவ.** கரணியம், வயணம்.

*[கரு → கார் → காரணம். (மு.தா.176).]*

கரணம் - காரணம். கரு + அணம் = கரணம். கருத்தல் - மேகம் கருத்தலைக் குறிக்கும். கரு - கார். மேகம் சூல்கொள்ளும்போது கருத்திருத்தலின் மக்களின் சூலும் கரு, கருப்பம் எனப்படும்.

மேகம் கருத்து மழை பொழிவது உலகவினைகட்கெல்லாம் காரணமா யிருத்தலின் கரு என்பது காரணத்தையும் குறிக்கும்.

"வானின்றுலகம் வழங்கி வருதலான்" என்றார் வள்ளுவரும்.

காரணம், கருவி என்பன கரு என்னும் ஒரு வினைத் தொழிற்பெயர்கள். திரிகரணம் = முக்கருவி. அந்தக்கரணம் = உட்கருவி. கரணம் = அணம் விகுதி. கருவி - வி = விகுதி. கரணத்தின் நீட்டம் காரணம். கருவி மேகத்தின் தொகுதியையும் உணர்த்தும். (எ-டு) 'கருவி மாமழை' 'கருவி தொகுதி' - தொல்காப்பியம். கரு → கார். கார் + அணம் - காரணம். கார் + இயம் - காரியம். இயம் தொழிற் பெயர் விகுதி (செல்வி. பரல் 6 சிலம்பு 18, பக். 256, 257).

**காரணமரபு** *kārana-marabu,* பெ.(n.) ***காரணக் குறிமரபு*** (நன்.275) பார்க்க; see *kārana-k-kuri-marabu.*

*[காரணம் + மரபு.]*

**காரணமறிநிலை** *kāranam-ari-nilai,* பெ.(n.) அணிவகை (யாழ்.அக.); a figure of speech.

*[காரணம் + அறி + நிலை.]*

**காரணமாலை** *kārana-mālai,* பெ.(n.) பின் தொடர்ந்து வருவனவற்றிற்கு முன்தொடர்ந்து வருவனவற்றைக் காரணங்களாகவேனும் காரியங்களாகவேனுஞ் சொல்லும் அணி (அணியி.46.); a figure of speech in which a chain of causes and corresponding effects occur.

*[காரணம் + மாலை. மாலை = நிரல்படவரும் தொடர்ச்சி.]*

**காரணமொழி** *kārana-moli,* பெ.(n.) விருதாகக் கொள்ளும் மொழி (பாண்டி); motto, emblem.

*[காரணம் + மொழி.]*

**காரணவன்[1]** *kāranavan,* பெ.(n.) மூலமான கடவுள்; one who is the first cause, God. *"ஏழுலகும் பரவுங் காரணவன்" (திருவாலவா. 27,32).*

*[காரணம் + அவன்.]*

**காரணவர்[1]** *kāranavar,* பெ.(n.) 1. ஊர்ப் பெருமக்கள்; land holders of the village. *"சுந்தரபாண்டிய நல்லூர்க் காரணவரோம்'* (S.I.I.V.105). *நாயனார் பண்டாரத்தார்க்கு விடுதீட்டுக் குடுத்த பரிசாவது"* 2. குடும்பத் தலைவர் (நாஞ்.); head of a family.

*[காரணம் → காரணம் → காரணவன். கருத்தல் = செய்தல், பணியாற்றுதல், மேற்பார்த்தல், கணக்குகளை எழுதுதல். கரு காரணம் (செய்கை, தொழிற்படுதல்) ஒ.நோ. அரு → அரண் → அரணம்.]*

**காரணவாக்கியம்** *kārana-vākkiyam,* பெ.(n.) ***காரணமொழி*** பார்க்க; see *kārana-moli.*

*[காரணம் + வாக்கியம்.]*

**காரணவாகுபெயர்** *kārana-v-āgu-peyar,* பெ.(n.) திருவாசகம் என்றாற்போலக் காரணம் காரியத்திற்கு ஆகிவரும் பெயர்ச்சொல் (நன்.290, உரை); a noun literally signifying cause, used figureatively to denote the effect, as Tiruvasāgam, dist. fr. *kāriya-v-āgu-peyar.* (எடு.) திருவாசகம் – அடை அடுத்த வாசகமென்னு முதற் காரணத்தின் பெயர் அதன் காரியமாகிய ஒரு நூலுக்கு ஆகியது). வாசகம் – காரணம் (கருவி), திரு – அடைமொழி.

**மறுவ.** கருவியாகு பெயர்

*[காரணம் + ஆகுபெயர்.]*

**காரணவாராய்ச்சி** *kāraṇa-v-ārāyccí,* பெ.(n.) காரணம் குறைவின்றி யிருந்தும் காரியம் பிற வாமையைச் சொல்லும் அணி (அணியி.35); figure of speech in which an antecedent cause is represented as not producing its effect.

*[காரணம்+ஆராய்ச்சி. காரணவாராய்ச்சி - நிலைமொழி யிறுதி மகரமெய்கெட்டு வருமொழி முன்னர் 'வகர உடம்படுமெய் தோன்றியது.*

**காரணவிடுகுறி** *kāraṇa-v-iḍu-kuṛi,* பெ.(n.) முக்கணன் என்றாற்போலச் சொல்லின் காரணங் கருதியவழிப் பிள்ளையார் முதலிய பலர்க்குஞ் செல்லினும், இடுகுறிபோல ஒருபொருட்கே (சிவனுக்கே) செல்லும் பெயர்ச்சொல் (நன் 62, உரை); noun used in its etymological sense but restricted in application, as Mukkaṇaṉ for šivan. (எடு). முக்கண்ணன், முள்ளி (முள்ளுடைய பலவற்றிற்கும் பெயராயினும் ஒரு வகைச் செடிக்கே பெயராயிற்று).

*[காரணம் + இடுகுறி.]*

**காரணவிலக்கணை** *kāraṇa-v-ilakkaṇai,* பெ.(n.) காரணத்தைக் காரியமாகக் கூறும் அணி (வின்.); a figure of speech which states the cause as the effect.

*[காரணம் + இலக்கணை.]*

**காரணவொழிப்பு** *kāraṇa-v-oḻippu,* பெ.(n.) அவநுதியணிவகை (யாழ்.அக.); a kind of avanudi-y-aṇi

*[காரணம் + ஒழிப்பு.]*

**காரணன்** *kāraṇaṉ,* பெ.(n.) 1. மூலமானவன்; one who is the first cause, as the Supreme Being. *"ஆழியிடைத் துயிலுங் காரண (பாரத. மூன்றாம்போ. 17).* 2. தலைவன் (பிங்.); chief, ruler, lord.

*[காரணம்+அன்.]*

**காரணாதிமூலி** *kāraṇadi-mūlí* பெ.(n) பொன்னூமத்தை; yellow coloured datura.

*[காரணம்+ஆதி+மூலி.]*

**காரணி**[1] *kāraṇi,* பெ.(n.) மலைமகள் (யாழ்.அக.); pārvati.

*[காரணம்→காரணி (அனைத்துப் பொருள்களின் தோற்றத்துக்கும் காரணமானவள்.]*

**காரணி**[2] *kārāṇi,* பெ.(n.) கல்லாரை; a creeper to be found very rarely at the foot of the hills (சா.அக.).

*[கரு → காரணி.]*

**காரணிக்கன்** *kāraṇikkaṉ,* பெ.(n.) கணக்கன். (கல்.); accountant.

*[கரணிக்கன் → காரணிக்கன்.]*

**காரணிகன்** *kāraṇigaṉ,* பெ.(n.) அறம் கூறுவோன்; judge, arbitrator, umpire. *"நமக்கோர் காரணி கனைத் தரல் வேண்டும்" (இறை. 1, உரை).*

*[காரணிகன் → காரணிகன்.]*

**காரணீகன்** *kāraṇīgaṉ,* பெ.(n.) மூல காரண மானவன்; one who is the first cause. *"தெரிமறையிற் காரணீகனார்" (சீறாப். கட. 10).*

*[காரணிகன் → காரணீகன்.]*

**காரத்தண்ணீர்** *kāra-t-taṇṇír,* பெ.(n.) 1. உறைப் பான நீர்; pungent water. 2. சோடா நீர்; soda water. 3. ஓம நீர்; omum water.

*[காரம் + தண்ணீர்.]*

**காரத்தி** *kāratti,* பெ.(n.) 1. புளிக்கரணை; sour-sorrel. 2. கருப்பு அத்தி; black fig. 3. கார முடையது; that which is pungent. 4. கார்ப்புப்பு; caustic or corrosive of any kind (சா.அக.).

*[கார்+அத்தி.]*

**காரத்திராவகம்** *kāra-tirāvagam,* பெ.(n.) காரமான செய்நீர்; an acid with a pungent taste (சா.அக.).

*[காரம்+ Skt. dhravaka> த திராவகம்.]*

**காரத்திரி** *kāra-t-tiri,* பெ.(n.) அறுத்த புண் முதலியவற்றில் உட்செலுத்தும் காரமருந்து தோய்த்த சீலைத்திரி (உ.வ.); a kind of seton with a corrosive

or caustic preparation on it, inserted as in an abscess.

*[காரம் + திரி.]*

**காரத்திரியூசி** *kāra-t-tiri-y-ūši,* பெ.(n.) காரத் திரியை உடம்பினுட் செலுத்தும் ஊசி; seton needle.

*[காரத்திரி + ஊசி]*

**காரத்திற்காரம்** *kārattiṟkāram.* பெ.(n) 1. நாயுருவி; Indian burr. 2. செந்நாயுருவி; red Indian burr of the Aspera genus (சா.அக.).

*[காரத்தில் + காரம்.]*

**காரதாளி** *kāratāḷi,* பெ.(n.) நிலப்பனை; ground palm (சா.அக.).

*[காரம்+தாளி.]*

**காரநீர்** *kāra-nīr,* பெ.(n) சாயநீர்வகை (வின்.); dyer's lye.

*[காரம் + நீர்.]*

**காரநெய்** *kāra-ney,* பெ.(n.) கார மருந்துகள் சேர்ந்த நெய்; oil boiled with pungent drugs (சா.அக.).

*[காரம்+நெய்.]*

**காரப்பசை** *kāra-p-pašai,* பெ.(n.) குன்றிமணியை யும் சீனிக்காரத்தையும் அரைத்து சேர்த்துத் தட்டார் பயன்படுத்தும் ஒருவகைப் பசை (வின்.); cement or solder of kuṉṟi-maṇi and alum, used by gold or silver smiths.

*[காரம் + பசை.]*

**காரப்பொடி[1]** *kāra-p-poḍi,* பெ.(n.) 1. எரிவுண்டாக் கும் மருந்து; caustic powder. 2. பற்றாசு (இ.வ.); solder.

*[காரம் + பொடி.]*

**காரப்பொடி[2]** *kāra-p-poḍi,* பெ.(n.) சிறுமீன் வகை; a small sea-fish.

*[காறல் + பொடி காறப்பொடி → காரப்பொடி.]*

மீன் குழம்பு செய்வதற்கேற்ற சிறுமீன்; இதன் உலர்ந்த கருவாடும் இதே பெயரில் வழங்கும். நெத்திலிப் பொடி என்றும் கூறுவர்.

**காரம்[1]** *kāram,* பெ.(n.) 1. உறைப்பு (சூடா); pungency. 2. காரவுப்பு . (வின்.); caustic, corrosive. 3. சாம்பலுப்பு; alkali, soda, potash, impure carbonate of soda. 4. துணிகளின் அழுக்கைப் போக்கும் காரம்; washerman's lye, lixivium. 6. சீனிக்காரம்; alum. 7. வெண்காரம்; borax. 8. ***அக்கரகாரம்*** (தைலவ தைல. 112) பார்க்க; see *akkara-kāram.* 9. அழிவு; ruin, destruction. *"பாவங்கள் யாவையுங் கார மாக்குதலால்" (திருக்காளத். பு. 26,4).* 10. திருநீறு; sacred ashes. *"காரமென் றுரைப்பர்" (திருக்காளத். பு:26,4).* 11. சினம்; anger. அவன் என் மீது காரமாயிருக் கிறான். 12. மரவைரம் (மூ.அ); core of timber, hard or solid part of a tree.

**ம., கோத.** காரம்; **க., குட., து.,**பட.கார; **தெ.**காரமு; **பிரா.** கரேன்.

**Skt.** ksāra; **Pali., Pkt.** khāra.

*[கரி → கார் → காரம் (செல்வி.78, பக்.284).]*

காரச்சீலை, காரச்சேவு, காரத்துளி, (பூந்தி), காரப்பகை, காரப்பொடி, காரமருந்து முதலியன வேகத்தையும் உறைப்பையுமுடைய பொருட் பெயர்கள்.

கரி என்னும் வினையடியால் பிறந்த தொழிற் பெயர். கரி + அம் - காரம்; முதனிலை திரிந்து விகுதி பெற்ற தொழிற்பெயர். ஒ.நோ. படி + அம் - பாடம். தவி + அம் - தாவம். கரித்தல் மிகுதல், காரம் மிகுதி.

கரி என்பது கடி என்னும் உரிச்சொல்லின் திரிபு. ட-ர போலி. ஒ.நோ. படவர் → பரவர். முகடி → முகரி. உப்புக்கரிக்கும் உப்புக் கடுக்கும் என்பன ஒரு பொருள் பற்றிய உலக வழக்கு. கடி என்னும் உரிச்சொற் பொருள்களுள் மிகுதியும் ஒன்று.

காரம் என்னும் சொல் முதலாவது மிகுதியை உணர்த்திப் பின்பு உறைப்பு மிகுதியை உணர்த்தும் (செல்வி. பரல். 6. சிலம்பு 18. 1981 பக்.255).

**காரம்[2]** *kāram,* இடை (part.) 1. ஆகாரம் என்றாற் போல எழுத்தோடு சேர்ந்துவரும் சாரியைகளில்

ஒன்று. (நன். 126); a particle added to the sounds of letters when pronouncing, as ākāram. 2. ஒலிக்குறிப்போடு சேர்த்து வரும் ஒரு சாரியை; kind of connective cotters.

*['காரம்'-ஒலிக்குறிப்பாய் எழுத்துச்சாரியையாயிற்று. நெட்டுயிர் மற்றும் உயிர்மெய் நெட்டெழுத்து ஆகியவற்றுக்கே இஃது எழுத்துச்சாரியையாய் வருதல் மரபு.]*

**காரம்**[3] *kāram,* பெ. (n.) பொன் (பிங்.); gold.

*[காள் → கார் → காரம், எரிதற்பொருள் நிறத்திற்காகிச் செம்பொன்னைக் குறித்தது.]*

**காரம்**[4] *kāram,* பெ.(n.) தொழில்; act. *"எண்ணார்ந்த காரங்க ளில்லகத்தே பயின் றாயேல்" (நீலகேசி, 280).*

*கரு + செய். கருதல் - செய்தல். கரு → கார்+அம்- காரம். கரு → கருமம் என்பதே தமிழ் மரபுக்கேற்ற தொழிற்பெயர். வருபவர்களை (வரு → வார்) வாராங்க (தரு → வார்) தாராங்க என வழங்கும் கிளை மொழி வட்டாரத் திரிபினையொத்து கருபவர்களை (செய்பவர்களை) காராங்க என்னும் சொல்லாட்சியும் தோன்றியதன் விளைவாகத் தமிழறியா வடபுலத்தாரிடை கரு → கார் → கார்யம் என்னும் சொல் புதிதாகத் தோன்றி வடமொழிச் சொல்லென்றே பெயர் பெற்றுவிட்டது. இது மீண்டும் தமிழில் புகுந்து காரியம் எனத் திரிந்தது. இதனை வடதமிழ்த் திரிபு என்பர். வடதமிழ் என்பது பழங்காலத்தில் பிராகிருத மொழியைக் குறித்தது.*

*கரு → காரு → கார் என நெடுமுதலாகத்திரிந்த பின் 'அம்' சொல்லாக்க ஈறு பெற்றது.*

**காரம்**[5] *kāram,* பெ.(n.) 1. உறுதி; certainly. 2. வலிமை; strength. 3. முயற்சி; effort. 4. மிகுதி; surplus. 5. கடுமை; rigour. 6. உரிமை; responsiblity. 7. உடைமை; property.

*[கடு → காரம். (வே.க.189).]*

**காரம்பம்** *kārambam,* பெ.(n.) காட்டுத்திப்பிலி; wild long-pepper.

*[காரு → காரம்பு → காரம்கக்-.]*

**காரம்பூசு-தல்** *kāram-pūsu,* 5 செ.கு.வி. (v.i.) நிறங்கெடாதபடி சாயத்துக்குச் சீனிக்காரமிடுதல்; (வின்.); to imbue cloth with alum so that it may retain colour.

*[காரம் + பூசு-.]*

**காரம்பை** *kārambai,* பெ.(n.) ஞாழல்; cinnamon.

*[கார் → காரம்பை = கொடிவகை.]*

**காரம்போடு-தல்** *kāram-pōḍu-,* 19 செ.கு.வி (v.i.) 1. ஆடை முதலியவற்றிற்குக் காரம் வைத்தல்; to apply caustic, lye-alkali, as in washing clothes. 2. உணவுப் பொருளுக்குக் காரம் சேர்த்தல்; to add pungent ingredients to eatables.

*[காரம் + போடு-.]*

**காரமருந்து** *kāra-marundu,* பெ.(n.) 1. பிள்ளை பெற்ற பெண்களுக்குக் கொடுக்கும் காரமருந்து; a medicinal preparation of vegetable stimulants given to women after child-birth. 2. தோலை எரித்துத் தின்னும் மருந்து (கால்.வி.); caustic.

*[காரம் + மருந்து.]*

**காரல்** *kāral,* பெ.(n.) ***காறல்*** பார்க்க; see *kāṟal.*

*[காறல் → காரல்.]*

**காரவல்லி** *kāra-valli,* பெ.(n.) பாகல்(சூடா.);balsam-pear; ***காறல் வல்லி*** பார்க்க; see *kāṟal-valli.*

*[காறல் - காரம் + (வள்ளி) வல்லி - காரவல்லி.]*

**காரவி** *kāravi,* பெ.(n.) 1. கருஞ்சீரகம்; black cumin. 2. சதகுப்பி; dill. 3. ***காயப்பத்திரி*** பார்க்க; see *kāya-p-pattiri.* 4.மயிற்சிகை; peacock feather.

*[கார் + அவி - காரவி. கார் - கருமை. அவி - சிறியது, சிறிய வடிவுடைய சீரகம்.]*

**காரள-த்தல்** *kār-aḷa-,* 3 செ.கு.வி (v.i.) நெல்லளத்தல்; to measure paddy. *"கோயிலில் காரளக்கும் ராஜராஜப் பல்லவரையனுக்கு" (S.I. I.ii. 310).*

*[கார் + அள. கார் - கார்காலத்து நெல் (காலவாகு பெயர்).]*

**காரற்கத்தரி** *kāraṟ-kattari,* பெ.(n.) கத்திரிச் செடிவகை; brinjal.

*[கார் → காரல் + கத்தரி.]*


காரற்கத்தரி

**காரறிவு** *kār-aṟivu,* பெ(n.) மயக்கம் பொருந்திய அறிவு; knowledge, wanting in discrimination or clouded by bias; confused intellect. *"காரறி வாளர்முன்" (நாலடி, 311).*

*[கார் + அறிவு, கார் : கருமை.]*

**காரறு-த்தல்** *kār-aṟu-,* 4 செ.கு.வி. (v.i.) கார் நெற்பயிரை அறுவடைசெய்தல்; to reap kār paddy.

*[கார் + அறு. கார் : கார்காலத்து அறுவடைக்குரிய நெல்.]*

**காரன்**[1] *kāraṉ,* இடை. (part.) வேலைக்காரன் பணக்காரன் என்பவற்றிற்போல, வினைமுதல் உடைமை முதலிய பொருளில் வரும் ஆண்பாற் பெயர் ஈறு (விகுதி); masculine termination of certain nouns, meaning doer, possessor, as வேலைக்காரன், பணக்காரன். ***காரம்***[4] பார்க்க; see *kāram*[4]

***[கரு → காரன்.]***

காரி (பெ.பா.). வீட்டுக்காரன் என்பது உரிமையும், பணக்காரன் என்பது உடைமையும், காவற்காரன் என்பது வினையுடைமையும் (குலப் பெயராயின் வினையுரிமையும்) அண்ணன் காரன் என்பது உறவுரிமை உணர்த்தும் பெயர்களாம். தோட்டக்காரன், வண்டிக்காரன், மாட்டுக்காரன் என்பன உரியவனைக் குறிக்காவிடத்துப் பொறுப்புரிமைக் காரனைக் குறிக்கும். உரியவன் சொந்தக்காரன்.

காரன் காரியீற்றுப் பெயர்கள் நூற்றுக்கணக்கின.

காரன் - வ. கார

வடமொழியாளர் இவ்வீற்றை வடசொல்லாக்கு வதற்கு 'க்ரு' (செய்) என்னும் முதனிலையினின்று திரித்துச் செய்பவன் என்று பொருள் கூறுவர். ஆட்டுக்காரன், கோழிக்காரன், சொந்தக்காரன், தண்ணீர்க்காரன், நாழிமணிக்காரன், புள்ளிக்காரன், முட்டைக்காரன், வெள்ளைக்காரன் முதலிய பெயர்கட்குச் செய்பவன் என்னும் பொருள் பொருந்தாமை காண்க. வேலைக்காரன், கூலிக்காரன் என்பனவும் வினையுடைமையே குறிக்கும்.

செய்வானைக் குறிக்கும் வடமொழியீறுகள் கார, காரு, காரி, காரின் (செய்பவன்), காரிண் (செய்பவள்) எனப்படும் வடிவில் நிற்கும் (வே.க.189).

**காரன்**[2] *kāraṉ,* பெ.(n.) ஒருவகைச்செய்நஞ்சு(வின்.); a prepared arsenic.

*[கார் + அன் – காரன். கார் : கருமை, கருநிறத்து நஞ்சு.]*

**காரன்னம்** *kār-aṉṉam,* பெ.(n.) கரிய அன்னப் பறவை (சீவக. 930, உரை.); black swan.

*[கார்+அன்னம்.]*

**காரா**[1] *kār-ā,* பெ.(n.) 1. எருமை; buffalo. *"செங்கண் வன்கட் காரா" (தஞ்சைவா. 380).* 2. நாக்கும் முலைக்காம்பும் கருநிறமாக உள்ள ஆவகை; cow with black tongue and black nipple

**தெ.** காராவு; **உருது.** காரா; **ம.** காராம்பசு.

*[கார் + ஆன் – காரான் → காரா. கார் : கருமை. ஆன் : பெற்றம். (பசு)] **காரான்** பார்க்க; see kārāṉ.]*

**காரா**[2] *kār-ā,* பெ.(n.) கருநிற ஆ; black cow. *"கன்றுபிரி காராவின் றுயருடைய கொடி" (கம்பரா. குகப். 66).*

**தெ.** காராவு

*[கரு → கார்+ஆ. ஆன் = பெற்றம், கறவை. ஆன் = ஆ னகர மெய்யீறு கெட்டுக் கடைக்குறையாயிற்று.]*

**காராக்கருணை** *kārā-k-karuṇai,* பெ.(n.) ***காறாக்கருணை*** பார்க்க; see *kāṟā-k-karuṇai*

*[கார் + ஆ + கருணை. ஆ – எ.ம.இ.நி.]*

**காராச்சா** *kār-ācca,* பெ.(n.) ***காட்டுடுகு*** பார்க்க; see *kāṭṭuḍugu.*

*[கார் + ஆச்சா.]*

**காராஞ்சி** *kārāñji,* நீரிறைக்கும் ஒருவகை இறைப்புச்சால் (இ.வ.); a kind of water-lift.

*[காராம்பி → காராஞ்சி.]*

**காராஞீலி** *kārā-ñili,* பெ.(n.)1. மரவகை; Travancore wood-oil tree. 2. மரவகை; wild durian.

*[கரு → கார் → காராம் + நீலி.]*

**காராடு–தல்** *kār-āḍu-,* 5 செ.கு.வி.(v.i) கறுவிப் பேசுதல் (நெல்லை.); to talk with rankling nature.

*[கார் + ஆடு–.]*

**காராடு** *kār-āḍu,* பெ.(n) வெள்ளாடு (நன்.267, விருத்.); goat.

*[கார் + ஆடு. கார் = கருநிறம்.]*


காராடு

**காராடை** *kār-āḍai,* பெ.(n.) வண்ண உறைப்புள்ள ஆடை; deep-dyed cloth. *"காராடை போர்த்த வெம்புத்தா" (நீலகேசி, 259).*

*[காரம்+ஆடை.]*

**காராண்கிழமை** *kārāṇ-kiḻamai,* பெ.(n.) உழவடை உரிமை (M.E.R. 103 of 1916); occupancy right in a field.

*[காராண்மை+கிழமை.]*

கரு → செய்தல். கரு → கார் → காராண்மை = நேரடியாகத்தாமே செய்யும் உழவுத் தொழில், உழுதுண்ணும் வேளாண்மை. உழுதுண்போர் காரளர் என்றும் உழுவித்துண் போர் வெள்ளாளர் என்றும் பெயர் பெற்றனர்.

**காராண்மை** *kār-āṇmai,* பெ.(n.) 1. நிலத்தைப் பயிரிடுங் குடியுரிமை (T.A.S.i,7); cultivator's right. 2. ஒரு பழைய வரி; an ancient tax. *"கங்கபாடி பதிநாட்டு ஆலூர் முன் உடையாரை மாற்றக் காராண்மை மீகாட்சியும், மிகுதிக் குறைமையும் உள்ளடங்க" (S.I.I. ii, 92-1, 425).*

ம. காராழ்ம

*[கார்+ஆண்மை. கரு → கார் → காராண்மை. கருத்தல் = செய்தல். காராண்மை = நேரடியாகத் தாமே செய்யும் உழவுத்தொழில். அத் தொழில் செய்தற்கான உரிமை. இச் சொல் காராளர் கட்டிய வரியையும் குறித்தது.]*

**காராம்பி** *kār-āmbi,* பெ.(n.) எருது பூட்டி நீரிறைக்கும் கருவிவகை (பிங்.); water lift, used with oxen.

*[காரான்+ஆம்பி–காராம்பி. காரான்=கருநிறத்து எருமை அல்லது எருது.]*

**காராமணி** *kārāmaṇi* பெ.(n.) ஒருவகைப் பயறு (பிங்.); chowlee bean.

தெ. காராமணி.

*[கார் + ஆம் + மணி. மணி = மணிபோன்ற பயறு.]*

**காராமணிக்காய்** *kārāmaṇi-k-kāy,* பெ.(n.) ஒருவகை மரம்(l); whirling nut.

*[காராமணி+காய்.]*

**காராளம்** *kār-āḷam,* பெ.(n.) ஊழிமுடிவில் இறைவன் உயிர்களைத்தன்னுள் ஒடுக்கிக் கொள்ளும் செயல்; the act of the god Siva absorbing the souls in to himself at the time of the universal dissolution.

மறுவ. காராணம்

*[காரு+கார் → ஆளம் → காராளம் ஒ. நோ. ஏர் → ஏராளம்.]*

உலகங்கள் அழியும் போது படைக்கப்பட்ட அனைத்தும் இறைவனின் வாயில் புகும் என்பது மெய்யியலர் கருத்து. அறிவியலாரும் இதனைக் கருந்துளையில் (black hole) அனைத்து அண்டங்களும் உட்புகும் என்பர். காராவம் எனும் சொல் காராணம் → காரோணம் எனத்திரிந்தது. **காரோணம்** பார்க்க see *kārōṇam*

**காராளர்**[1] *kār-āḷar*, பெ.(n.) உழுதுண்ணும் உழவர், உழுதூண் குடிகள்; peasants, tillers of the soil.

ம. காராளர்

*[கார்+ஆள்+அர் – காராளர். கரு → கருத்தல் = செய்தல். தாமே நிலத்தில் இறங்கி உழவுத் தொழில் செய்யும் உழவர் காராளர் எனப்பட்டனர். உணவுப்பொருள் விளைத்து உலகு புரக்கும் உழைப்பாளரை பிங்கல நிகண்டு சூத்திரர் எனக் குறித்திருப்பது முற்றிலும் தவறானது.]*

**காராளர்**[2] *kārāḷar*, பெ.(n.) 1. சேலம், தென்னார்க் காடு மாவட்டங்களிலுள்ள மலைவாழ் மக்களான ஒரு வேடர் இனத்தார் (E.T); a tribe of hunters and cultivators in the hills of Salem and South Arcot.

*[கரு = கார் + ஆள் + அர் – காராளர் = கடிய உழைப்பாளர். கரு – கருத்தல் = செய்தல், உழைத்தல்.]*

**காரான்** *kār-āṉ*, பெ.(n.) 1. எருமை, buffalo. 2. நாவும் காம்பும் கருத்திருக்கும் மாடு *"ஈன்றணிக் காரான் (குறுந். 181).*

*[கார் + ஆன். கார் = கருமை. ஆன் = மாடு.]*

**காரானை** *kār-āṉai*, பெ.(n.) கடலின்மீது குவிந்து கீழிறங்கி நீரைமுகந்து பெருந்தூண்போல நிற்கும் முகில் (யாழ்ப்.);the cloud brought down to the surface by a waterspout at sea.

*[கார் + ஆனை. கார் + கருமை. ஆனை = யானைபோல் பருத்துத் திரண்ட கார் மேகம்.]*

**காரி**[1] *kari*, பெ.(n.) 1. கருமை (பிங்.); blackness. 2. கருநிறமுடையது (திவா.); that which is black. 3. கரிக்குருவி; king-crow. *"கட்சியுட் காரி கலுழும்" (பு.வெ.1:3).* 4. காக்கை. (திவா).crow. 5. காரி (சனி); saturn. *"காரி வாரத்தில்" (குற்றா. தல.மூர்த்தி.30).* 6. நஞ்சு; venom, poison. *"காரியுண்டிக் கடவுள தியற்கையும்" (மலைபடு.83).* 7. கரிய எருது; black bull. *"சுரிநெற்றிக் காரி" (கலித். 101, 21).).* 8. காரீயம் (சங்.அக.); black lead. 9. கண்ணன்; kannan. *"செங்கட் காரி" (பரிபா.3:81).*

10. ஐயனார் (திவா); Aiyanar. 11. வைரவன் (திவா); Vairavan. 12. கடைவள்ளல்களுள் ஒருவன்; a chief famed for liberality, one of seven *kaḍai-vaḷḷalgaḷ*. *"கழறொடித் தடக்கைக் காரியும்" (சிறுபாண். 95).* 13. காரிநாயனார்; *Kārināyaṉār*. *"காரிக்கு மடியேன்" (தேவா. 737,8).* 14. காரி வள்ளலின் குதிரை; horse of the chief *Kāri*. *"காரிக் குதிரைக் காரியும்" (சிறுபாண். 110).* 15. ஓர் ஆறு ; a river. *"காரியாற்றுக் கொண்ட" (மணிமே. 19: 126).*

*[கார் → காரி. கார் – கருமை. இ– உடைமை குறித்த பண்பீறு.]*

**காரி**[2] *kāri*, பெ.(n.) **கண்டங்கத்தரி** (மலை) பார்க்க; see *kāṇḍaṅkattari*

*[கார் + இ – காரி (கருநிறமுடையது).]*

**காரி**[3] *kāri*, பெ.(n.) செய்பவன்; doer, generally used in compounds. *"பாவகாரிகளைப் படைத்தவன்" (திவ். பெரியாழ். 4.4:1).*

*[கரு → கருத்தல் = செய்தல். கரு – கார் + இ – காரி 'இ' உடையவனைக் குறித்த சொல்லாக்க ஈறு.]*

**காரி**[4] *kāri*, இடை (Part.) வேலைக்காரி, பணக்காரி என்பவற்றிற் போல வினைமுதல் உடைமை முதலிய பொருளில் வரும் ஒரு பெண்பாற் பெயர் இறுதி (விகுதி.); fem termination of certain nouns, meaning doer, possessor, as *vēlai-k-kāri, paṇa-k-kāri*

*[கரு → கருத்தல் = செய்தல். கரு → கார் + இ – காரி. 'இ'– உடையவரைக் குறித்த பெண்பாலீறு.]*

**காரி**[5] *kāri*, பெ.(n.) பதினாறுபடியளவு (**தைலவ தைல.** 114); a grain measure 16 paḍi.

*[கரு = பெரியது. கரு – கார் – காரி. (அளவில் பெரியது).*

**காரி**[6] *kāri*, பெ.(n.) 1. களர்; blackish soil 2. முதுநிலம்; waste land. 3. கீழ்மகன் ; low-born person. 4. வெண்காரம் (சங்.அக.); borax.

*[கள் → காள் → காரி. காள் → கருமை. கருமை = பயனின்மை கீழ்மை.]*

**காரி**[7] *kāri*, பெ.(n.) தொழிற்சாலை (அக.நி.); workshop.

H. kārkāna

*[கரு = செய்தல், தொழில். கடு → காரி.]*

**காரி**[8] *kāri*, பெ.(n.) காரி மன்னர் விடுத்த செப்பு நாணயங்கள்; copper coins issued by *kāri*.

**காரிக்கத்தளை** *kāri-k-kattalai*, பெ.(n) பழுப்பு கலந்த சாம்பல் நிறமும் 5 அடி நீளமும் உடைய கடல்மீன் வகை; a sea-fish that ascends tidal rivers and estuaries, brownish-grey, attaining at least 5 ft. in length.

*[காரி + கத்தளை.]*


காரிக்கத்தளை

**காரிக்கன்** *kārikkaṉ*, பெ.(n.) வெளுக்காத ஒருவகைத் துணி; unbleached plain cotton cloth, mostly imported.

**தெ.** காரிகமு.

**மறுவ.** காரிக்கம்

*[காரிக்கன் → காரிக்கம்.]*

**காரிக்கிழமை** *kāri-k-kiḻamai*, பெ.(n.) ஞாயிற்றுக் கிழமைக்கு முந்திய நாள் (சனிக்கிழமை) ;saturday.

*[காரி + கிழமை.]*

காரி = கரியது. 'கரியவன்' என்று சிலப்பதிகாரத் துள்ளும் (10:102), 'மைம்மீன்' என்று புறநானூற்றுள்ளும் (117) வந்திருத்தல் காண்க. மை = கறுப்பு.

**காரிக்குதிரை** *kāri-k-kudirai*, பெ.(n.)1. ஐயனாரது குதிரை (பிங்.); Aiyanar's horse. 2. வள்ளல் காரியின் குதிரை; name of the horse of kāri, an ancient chieftien. 3. கருப்புக் குதிரை; black horse.

*[காரி + குதிரை.]*

**காரிக்கூன்** *kāri-k-kūṉ*, பெ.(n.) ஒருவகைக் காளான்; agaric, a fungus.

*[காரிக்கு + ஊன்.]*

**காரிகம்**[1] *kārigam*, பெ.(n.) ***காரகம்***[3] (M.l) பார்க்க; see *kāragam*.

*[காரகம் → காரிகம்.]*

**காரிகம்**[2] *kārigam*, பெ.(n.) காவிக்கல் (திவா.); red ochre, red dye.

*[காரகம் → காரிகம்.]*

**காரிகம்**[3] *kārigam*, பெ.(n.) ***காரிகை*** (யாழ்.அக.). பார்க்க; see *kārigai*.

*[காரிகை → காரிகம்.]*

**காரிகை**[1] *kārigai*, பெ. (n) 1. பெண்; woman, lady. *"காலை யெய்தினிர் காரிகை தன்னுடன்" (சிலப். 11:67).* 2. அழகு; beauty, comeliness, *"கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்கு" (குறள், 1272).* 3. ஒப்பனை அணி; ornament. *"கழல்யாப்புக் காரிகை நீர்த்து" (குறள், 777).*

*[கரு = கார். கருமை, அழகு. கறுப்பு மிக்குள்ளது அழகு என்பது பண்டைத்தமிழ்க் கருத்தாகலின் கருமைக்கு அழகு பொருள் உண்டாகியது. கரு → கார் → காரிகை (அழகிய பெண்).]*

**காரிகை**[2] *kārigai*, பெ.(n.) யாப்பருங்கலக் காரிகை, 11–ம் நூற்றாண்டில் அமிதசாகரரியற்றிய ஒரு யாப்பிலக்கண நூல்; a treatise on prosody in *kali-t-turai* verse by *Amidasāgarar*, 11th.c.

[காரிகை[1] → காரிகை[2] – பெண்ணை விளித்துப் பாடும், பா வகையில் அமைந்த வெண்பாக்களைக் கொண்டது.]

**காரிகை[3]** *kārigai,* பெ.(n.) இருபது அருமணங் கொண்ட ஒருநிறை (சுக்கிரநீதி, 105); a weight of 20 arumanams.

[கரு = பெரியது. கரு → காரி → காரிகை.]

**காரிகை[4]** *kārigai,* பெ. (n.) துன்பம் (வேதனை) (நாா்த்த.); torment; extreme suffering; torture.

[கரு → காா். (கருமை, துன்பம்) காா் → காரிகை (துன்பம்).]

**காரிடம்** *kār-iḍam,* பெ.(n.) காா்காலம்; rainy season. *"பயில்வித் தெல்லாம் காரிட மதனிற் காட்டு மங்குரம்" (சி.சி. 1:9).*

[காா் + இடம். காா் = மேகம், மழை.]

**காரிண்டு** *kār-iṇḍu,* பெ.(n.) துறட்டிச்செடி; prickly climbing cockspur.

[காா் + இண்டு.]

**காரிதம்** *kāridam,* பெ.(n.) பிறவினை; causalverb. *"விப்பிவரிற் காரிதமாம்" (பிரயோக. 35).*

[காா் → காரிதம்.]

**காரிதாய்** *kār-tāy,* பெ.(n.) வைரவரின் தாய், காடுகிழாள் (பிங்.); Durga, as mother of Bhairava.

[காரி (வைரவா்) + தாய்.]

**காரிநாயனாா்** *kāri-nāyaṉār,* பெ.(n.) அறுபத்து மூவருள் ஒருவரும், கோவைச் சிற்றிலக்கியம் ஒன்றின் ஆசிரியருமாகிய ஒரு நாயனாா் (பெரியபு.); name of a cononized *śaiva* saint, author of a Tamil *kōvai* work, one of 63.

[காரி + நாயனாா்.]

**காரிப்பிள்ளை** *kāri-p-piḷḷai,* பெ.(n.) ***காரிப்புள்*** (சூடா.) பாா்க்க; see *kāri-p-puḷ.*

[காரி + பிள்ளை.]

**காரிப்புள்** *kāri-p-puḷ,* பெ.(n.) கரிக்குருவி வகை (பிங்.); a species of king crow.

[காரி + புள், காரி = கருமை.]

**காரிமாறன்** *kāri-māṟaṉ,* பெ.(n.) காரியின் மகனான நம்மாழ்வாா் (திவ். திருவாய். 4.5:11); *Nammāḻvār,* son of *Kāri.*

[காரி + மாறன். காரி = மாறனாரின் தந்தையாா் பெயா்.]

**காரிமை** *kārimai,* பெ.(n.) ***கொடுவேலி*** (மலை.) பாா்க்க; see *koḍu-vēli.*

[காா் → காரிமை.]

**காரியக்கடிசு** *kāria-k-kaḍišu,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு (கற்பாசாணம்) (வின்.); a mineral poison.

[காா் → காரியம் + (கடிது) கடிசு.]

**காரியக்காரன்** *kāriya-k-kāraṉ,* பெ.(n.) கைத்திறம் வாய்ந்தவன், சூழ்ச்சி நயம் மிக்கவன்; a clever man, a man of ability.

ம. காா்ய கா்த்தாவு (பணியாள்); க. காரெகார; தெ. காா்ய காண்டு.

[காரியம் + காரன்.]

**காரியசிவதத்துவம்** *kāriya-śiva-tattuvam,* பெ.(n.) சிவ உண்மைகளுள் ஒன்று (சி.சி.1:66, ஞானப்.) ; a siva-tattuvam.

[காரியம் + சிவம் + தத்துவம்.]

**காரியம்[1]** *kāriyam,* பெ.(n.) 1. செயல்; action. 2. செயற்பாடு, செய்யப்பட்ட செயல்; performed action.

மறுவ. கருமியம்

ம. காா்யம்; க., து. காா்ய; தெ. காா்யமு.

Skt. kārya

[கரு → காா் → காரியம். கரு – செய்தற்பொருள்.]

**காரியம்[2]** *kāriyam,* பெ.(n.) சாணம் (சைவ. சந், 61); cow dung.

[காா் → காரியம்.]

**காரியமொழி** *kāriya-moḻi,* பெ.(n.) செய்தல் என்னும் பொருளிலிருந்து விரிந்து காரியத்தைக்

குறிக்குஞ்சொல். (தொல் சொல் 112, உரை); a term meaning action in general.

**மறுவ.** காரியவாசகம்

*[காரியம் + மொழி.]*

**காரியவிலக்கு** *kāriya-vilakku,* பெ.(n.) விலக்கணி வகை (யாழ்.அக.); a kind of vilakkaṇi.

*[காரியம் + விலக்கு.]*

**காரியவேது** *kāriya-v-ēdu,* பெ.(n.) காரியம் ஏதுவாய்நின்று காரணமுண்மையை விளக்குகை (சி.சி. அளவை. 10, சிவஞா.); inference of a cause from an effect.

*[காரியம் + ஏது.]*

**காரியாசான்** *kāri-y-āšāṉ,* பெ.(n) சிறுபஞ்சமூலம் என்னும் நூலின் ஆசிரியர்; the author of širu-pañja-mūlam.

*[காரி + ஆசான்.]*

**காரியார்** *kāriyār,* பெ.(n.) கணக்கதிகாரம் என்னும் நூலின் ஆசிரியர்; the author of the kaṇakkadikāram, a mathematical treatise.

*[காரி + ஆர் – காரியார்.]*

**காரியிண்டு** *kāri-y-iṇḍu,* பெ.(n.) வெள்ளிண்டு; shining - leaved soap - pod.

*[கார் + இண்டு.]*

**காரிருள்** *kār-iruḷ,* பெ.(n.) மிக்க இருள்; dense darkness. *"கயவன் காரிருட் டான் வர" (மணிமே. 23,94).*

*[கார் + இருள்.]*

**காரிலவணம்** *kār-ilavaṇam,* பெ.(n.) (பிடாலவணம்) (யாழ்.அக.); a salt bitnoben.

*[கார் + இலவணம்.]*

**காரியக்கல்** *kār-iya-k-kal,* பெ.(n.) கரிவளி (கரியமிலவாயு) நிறையப் பெற்ற கருநிறமான ஒருவகை ஈயக்கல்; graphite, a form of carbon.

*[கார் + ஈயம் + கல்.]*

**காரீயம்** *kār-īyam,* பெ.(n.) ஈயவகை (பதார்த்த. 1175, தலைப்பு); black lead.

*[கார் + ஈயம்.]*

**காரு** *kāru,* பெ.(n.) 1. கம்மாளன்; artisan. 2. கம்மத் தொழில்; artisanship, smithery.

*[கரு – கருத்தல் = செய்தல், கரு → காரு (செய்பவன்).]*

**காருகால்** *kārukāl,* பெ.(n.) நறுமணப் புகைத்தட்டு, pan for burning incense. *"காரு காலிலே கருமுகை பூத்தாற் போலே" (திவ். பெரியாழ். 3.6:7, வியா.ப.686).*

*[கரு → காரு + கால். கால் = அடிப்பீடம், புகைத்தற்கான அடித்தட்டு.]*

**காருகோலரிசி** *kāru-kōlariši,* பெ.(n.) கார் போகரிசி; seed of scurfy pea.

*[கரு → காரு + கோல் + அரிசி.]*

**காருசம்** *kārušam,* பெ.(n.) 1. காட்டெள்; wild sesamum. 2. நாவி; Indian aconite. 3. நுரை; froth 4. ஓவியம்; painting. 5. காவிக்கல்; red achre.

*[கார் → காருவம். காருயம் → காருசம்.]*

**காருண்ணி** *kāruṇṇi,* பெ.(n.) ஆடுதின்னாப் பாளை (இரு.நூற்); āḍutiṉṉāppāḷai.

*[கார் + உண்ணி.]*


காருண்ணி

**காருப்பு** *kār-uppu,* பெ.(n.) கடுந்திலாலவணம் (வின்.) ; salt obtained from the sesame seed.

மறுவ. மரவுப்பு.

ம.,தெ. காருப்பு.

*[கார் → காருப்பு.]*

**காரூகம்** *kār-ūgam,* பெ.(n.) கருங்குரங்கு. (திவா);black monkey.

*[கார் + ஊகம். கார் = கருமை. ஊகம் = குரங்கு.]*



காரூகம்

**காரூமத்தை** *kār-ūmattai,* பெ.(n.) கறுப்பு நிறமுள்ள ஊமத்தை (வின்.); purple stramony.

*[கார் + ஊமத்தை.]*

**காரெட்டு** *kār-eṭṭu,* பெ.(n.) பதினொராந்திரு முறையைச் சேர்ந்ததும், முகிலைச் சிவனோடு ஒப்பிட்டு எட்டு வெண்பாக்களால் நக்கீரதேவர் இயற்றியதுமான நூல்; a poem of eight venba stanzas by Nakkira-tēvar included in padinorantirumurai, wherein siva is compared to a cloud.

*[கார் + எட்டு, கார் = முகில். காரெட்டு = கார்முகிலைச் சிவனொடு ஒப்பிட்டுப் பாடிய எட்டு வெண்பாக்கள்.]*

*[கார் → காரிமை.]*

**காரெலி** *kār-eli,* பெ.(n.) கறுப்பெலி (சூடா.); black rat.

ம. காரெலி

*[கார் + எலி.]*

**காரெள்** *kār-el,* பெ.(n.) எள்ளின்வகை; a black species of sesame.

ம., க. காரெள்ளு

*[கார் + எள்.]*

**காரெனல்** *kār-eṉal,* பெ.(n) 1. ஒளிமழுங்குதற் குறிப்பு; expr. signifying lack-lustreness. *"காரெனொக்கற் கடும்பசி யிரவல"(புறநா. 141:6).* 2. கருநிறமாகை; darkening, growing black. *"களங்கனியைக் காரெனச் செய்தாரு மில்" (நாலடி, 103).*

*[கார் + எனல். கார் = கருமை. எனல் = என்றாதல்.]*

**காரேலம்** *kār-ēlam* பெ.(n.) ஏலவகை (சங்.அக.); a kind of cardamom.

*[கார் + ஏலம்.]*

**காரை**[1] *kārai* பெ.(n.) 1. காட்டுச் செடிவகை; a low shrub with sharp axilliary spines met with in scrubby jungles and common waste places. *"முட்காற் காரை" (புறநா. 258).* 2. மதுக்காரை ; emetic-nut. 3. காறல்மீன்; a sea-fish. 4. ஆடை; cloth. *"யானைப்பாகர் ஆடையைக் காரை யென்றலும்" (நேமிநா. சொல். 10, உரை).*

ம. கார; க. காரெ; தெ.கார; து. காரெ, காரி; குட. காரெமர.

*[கால் → கார் → காரை. கால் = நீட்சி. காரை = நீண்முள் கொண்ட செடி, நீண்முள் மீன், நீண்ட ஆடை.]*

**காரை**[2] *kārai* பெ.(n.) 1. சுண்ணச்சாந்து; mortar, plaster for building. *"காரையினால்விளக்குறு மேனிலத் தோகையர் கீதமும்" (திருப்போ.சந் அலங்க.17).* 2. பல்லில் இறுகப்பற்றிய ஊத்தை (உ.வ.); concretions that encrust the teeth, tartar.

க. காரெ; தெ.கார.

*[கள் → காள் → கார் → காரை. கள் = குறுகப்பற்றுதல், கட்டுதல், திரட்சியாதல், காரை = இறுகப் பற்றுவது.]*

**காரை**[3] *kārai,* பெ.(n.) பாகல் (இராசவைத்.); balsam pear.

*[கள் → காள் → கார் → காரை. கள் = முள். காரை = முட்புறம் கொண்ட காய்.]*

**காரைக்கட்டுவீடு** *kārai-k-kaṭṭu-vīḍu,* பெ.(n.) சுண்ணாம்பு அல்லது சிமிட்டிக் காரை கொண்டு செங்கற்களாற் கட்டப்பட்ட வீடு; building of brick and mortar.

*[காரை+கட்டு+வீடு.]*

*காரை = இறுகப்பற்றுவது. காரை பார்க்க; see kārai*

**காரைக்காலம்மையார்** *kāraikkāl-ammaiyār,* பெ.(n.) அறுபத்துமூன்று நாயன்மாருள் ஒருவரும், கருநாடக இசை எனப்படும் பண்டைத் தமிழிசைக்குத் தாயானவரும் பதினொராந் திருமுறையுட் சில சிற்றிலக்கியங்களுக்கு ஆசிரியருமான சிவனடியார் (பெரிய.); name of one of 63 canonizad šaiva saints, mother of karnataka music, authoress of certain works included in the *Padinorān-tirumuṟai.*

மறுவ. காரைக்காற் பேயார்

*[காரைக்கால் + அம்மையார். காரைக்கால் - ஊர்ப்பெயர்.]*

**காரைக்காற்பேயம்மையார்** *kāraikkāṟ-pēy-ammaiyāṟ,* பெ.(n.) ***காரைக்காலம்மையார்*** (ஐங்குறு. முகவுரை,ப. 14). பார்க்க; see *kāraikkāl-ammaiyār.*

*[காரைக்கால் + பேய் + அம்மையார்.]*

**காரைக்காற்பேயார்** *kāraikkāṟ-pēyār,* பெ.(n.) ***காரைக்காலம்மையார்*** (யாப்.வி.93) பார்க்க; see *karaikkal-ammaiyār.*

*[காரைக்கால் + பேயார்.]*

**காரைச்செங்காரி** *kārai-c-ceṅkāri,* பெ.(n.) *மரவகை* (a); Java almond

*[காரை+செம்+காரி.]*

**காரொக்கல்** *kārokkal,* பெ.(n.) வறிய சுற்றம்; poor relation.

*[கருத்தல் = செய்தல். கரு → கார் + ஒக்கல்.]*

**காரொளி** *kār-oḷi,* பெ.(n.) கருந்தாரை (யாழ். அக.); black stripe, as on cattle.

*[கார் + ஒளி.]*

**காரோடன்** *kārōḍaṉ,* பெ.(n.) 1. ஆய்தவுறை செய்வோன் (திவா); sheath-maker. 2. சாணைக் கல் செய்வோன்; whetstone maker. *"சிறுகாரோ டன் பயினொடு சேர்த்திய கற்போல்" (அகநா.1).*

*[காரை + ஒடன் - காரோடன், காரை = இறுகப்பற்றுவது. இறுகிக் கட்டியானது. வன்மையானது. காரோடன்-பிடிப்புள்ள அல்லது இறுக்கமான மேலுறை. மேலுறையை ஒடு என்பர். காரோடு செய்பவன் காரோடன். வன்மையான ஒடுபோன்ற சாணைக்கல் காரோடன் எனப்பட்டது. 'அன்' ஒன்றன்பாலீறு.]*

**காரோணம்** *kārōṇam,* பெ.(n.) உலகமுடிவின் போது சிவன், ஆன்மாக்களைத் தம்முள் அடக்கிக் கொண்ட ஊர்களாகக் கருதப்பட்ட நாகை, கச்சி, குடந்தை போன்ற திருத்தலங்களின் பொதுப்பெயர் (தேவா.); sacred shrines, where šiva had absorbed the souls into Himself at the time of the universal dissolution, as *Nāgai, Kacci, Kuḍandai.*

*[கார் → காரணம் → காராணம் → காரோணம்.]*

கார் = கருமை, இருள். இறைவன் உலக உயிர்களை ஊழி முடிவில் தன்னுள் ஒடுக்கிக் கொள்ளும் போது இருண்ட வாயில் புகுதலாக மெய்யியலார் புனைந்துரைப்பர். ஏரால் விளைந்த மிகுவிளைச்சல் ஏராளம் எனப்பட்டது போலக் காரால் (கருத்த இருளால்) விளைந்த நிறம் காராளம் → காராணம் எனப்பட்டது. இதுவே காரோணம் எனத் திரிந்து சிவனின் ஐந்தொழில்களுள் தன்னுள் ஒடுக்கிக் கொள்ளுதலுக்குப் பெயராகி ஊர்ப் பெயருமாயிற்று.

**கால்**[1]**(லு)-தல்** *kāl-,* 5 செ.கு.வி (v.i.) 1. வெளிப்படுதல் (திவா); to flow , as saliva from the mouth, poison from a serpent's fang; to issue, as blood from a vein. *"உருமுகான் றென்னப் பல்லியங்களு மார்த்தன" (கந்தபு. முதனாட். 3).* 2.

குதித்தல்; to leap forth, as a water fall. *"விடர்கா லருவி வியன்மலை" (சிறுபாண். 170).* 3. கக்குதல் (திவா.); to vomit, disgorge. [ம. காலுக] 4. தோற்றுவித்தல்; to bring to public view; to reveal; to shoot forth, as ears of corn. *"பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பரிதி" (பெரும்பாண். 2).*

ம. காலுக; **க.,பட.**காறு.

*[குல் → தோன்றல், கருத்துவேர். குல் → கல் → கால் = தோன்றுதல், வெளிவருதல், பாய்தல், ஓடுதல், பரவுதல், வீசுதல்.]*

**கால்**[2] *kāl*, பெ.(n.) 1. வெளிப்படும் அல்லது தோன்றும் முளை(பிங்.); shoot, sprout. *"நிலத்தில் கிடந்தமை கால்காட்டும்" (குறள்,959).* 2. மரக் கன்று (பிங்.); sapling. 3. மகன் (பிங்.); son. 4. முளை போன்ற குறுந்தறி (சூடா.); peg, pin, stake.

*[குல் → தோன்றல் கருத்துவேர். குல் → கல் → கால் (தோன்றல்).]*

கன்று என்னும் இளமைப் பெயர் நிலைத் திணைக்கும் விலங்கினத்திற்கும் பொதுவாயிருத் தலையும், சிறு பிள்ளைகளைக் கன்று கயந்தலை என்னும் உலக வழக்கையும் காண்க. கன்று, குட்டி, பிள்ளை என்னும் மூவிளமைப் பெயர் இருதிணைக்கும் பொதுவாக வழங்குதலும் உண்டு.

**கால்**[3] *kāl*, பெ.(n.) 1. மூலம், பிறப்பிடம்; place of origin, source. *"மணிக்கா லறிஞர்" (கல்லா.முரு.).* 2. இடம்; place, room. *"புனல்கால் கழீஇய பொழில்" (பெரும்பாண். 380).* 3. அடிநிலம்; basement. கடைக்கால், நாற்றங்கால், பள்ளக்கால். 4. இடப் பொருளுருபு; particle donating place. *"கண் கால் கடை இடை தலை வாய் திசைவயின்" (நன் 302).* 5. வில்லின் அடி, குதை, முனை; point, end, as of a bow. *"ஒருதனு விருகால் வளைய" (தேவா: 142 : 14).* 6. கால் போன்ற அடிப்பாகம்; lower part, base, bottom. *"களைகால் கழாஅலின்" (புறநா. 120).* 7. பாதம்; foot, leg of a person, animal or thing. *"காலிற்குப் போடச் செருப்பில்லை என்பார்க்கும்" (தனிப்பா.).* 8. நெசவுத்தறியின் கான்மிதி; treadle in a loom. *"காஞ்சிபுரம் போனால் காலாட்டிக் கொண்டு சாப்பிடலாம்" (பழ).* 9. குடையைத் தாங்கும் பிடி; shaft, handle. *"குடைக்கால் போல்" (நாலடி. 368).* 10 காடு; forest. 11. தமிழில் நாலிலொன்றைக் குறிக்கும் 'வ' என்னும் பின்னவெண்குறி; the symbol,'வ' to denote ¼ in Tamil. *"காலெனப் பாகென" (பரிபா.372).*

ம., க. காலு, கால்; **தெ., பட.** காலு; **து.** காலு, காரு; **கோத., குற., கை., கொண்., கட., கொலா.,** கால்; **இரு.** கால்லு; **குரும்.** கால; **துட.**கோல்; **குட.** காலி; **கோண்.** கால், காடு; **கூ.** காடு; **பர்.** கேல்; **குரு.**கெட்ட; **மா.** க்வெடு.

*[குல் – தோன்றல் கருத்துவேர். குல் → கல் → கால்– தோன்றுமிடம் (இடப்பொருள்).]*

**கால்**[4] *kāl*, பெ.(n) 1. பந்தல் தாங்கும் கம்பு; pole, staff. *"வந்த வேலையை விட்டுவிட்டுப் பந்தற் காலைப் பிடித்தானாம்" (பழ.).* 2. மண்டபந் தாங்கும் தூண்; post. *"தருநிரை நிமிருங் கால்களாய்" (கந்தபு. வரைபுனை. 6).* 3. விழாத் தொடக்கத்திற்கு அடையாளமாகப் பந்தற்கால் போல் நாட்டுங்கோல் (கம்பு); pole. *"கால்கோள் விழாவின் கடைநிலை சாற்றி" (சிலப். 5:144).* 4. இவர் கொடிகள் பற்றும் பற்றுக்கோடு (சூடா.); prop, support. 5. மண்டபக் கால்போல உடம்பைத் தாங்கும் உறுப்பு, பாதம்; leg. *"கழாஅக் கால் (குறள், 840).* 6. முழங்கால்; knee. 7. உடம்பில் நாலிலொரு பங்கான முழங்கால் போன்ற காற்பகுதி;quarter, one fourth of a whole. 8. காலால் நடக்கும் நடை; pace, as of a horse. *"காறூய்மை இல்லாக் கலிமாவும்" (திரிகடு. 46).* 9. நடையால் அமையும் பாதை (பிங்.); path, way, road. 10. கால்போற் கட்டிலைத் தாங்கும் உறுப்பு; leg of the cot. *"கட்டிற்கால் போல் நால்வர் (உ.வ.).* 11. வண்டிக்குக் கால் போன்ற சக்கரம்; wheel of the cart. 12. சக்கரமுள்ள வண்டி; cart with wheel. *"கலத்தினும் காலினும்" (சிலப். 2:7).* 13. தேர்ச் சக்கரம்; car-wheel, carriage-wheel (க.காலி) *"கடலோடா கால்வ னெடுந்தேர்" (குறள். 496).* 14. பூவின் தாள்; stem of a flower. *"திரள்கால் ... அலரி" (நாலடி, 199).* 15. கால்போல் தாங்கும் வாசல் நிலை; door-frame. வாசற்கால் (உ.வ). 16. வாசற் கால் போன்ற எழுத்துவரி; the symbol 'ா' in Tamil alphabet. *'புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதினர்' (தொல். எழுத்து. 17. உரை).* 17. கால்போன்ற சடைப்

பிரிவு; lock of hair in plaiting. இரண்டுகாற் பின்னல்; இரட்டைக் காற் சடை. 18. பிரிவு; division. *'தேசிக் குரிய கால்களும்' (சிலப். 3:16, உரை).* 19. இனமுறை; degree of consanguinity or affinity. இரண்டாங் கால்முறை. 20. குடும்பம், சரவடி, இனவழி; family, relation-ship. கால்வழி. 'பழைய காலைத் தூர்க்காதே, புதுக்காலை வெட்டாதே' (பழ.) 21. கால்போல் ஊன்றும் மழைப் பெயல்; the descent of rain. மழைக் கால் ஊன்றி விட்டது (உ.வ.) 22. கால்போல் ஊன்றும் ஆலவிழுது; aerial root, as of the banyan. *'கான் மரம்' (திவா).* 23. கால்போல் நீண்டு விழும் சுடர்க்கதிர்; ray. *"நிலாக்கால் விடுதலை" (மீனாட். பிள்ளை. ஊசற். 11).* 24. கால்போல் நீண்டு செல்லும் நீர்க்கால்; irrigation channel; streamlet. *"சரயுவும் பல காலி னோடியும்" (கம்பரா. நாட்டு. 60).* வாய்க்கால், ஆற்றக்கால், வெள்ளக்கால், பள்ளக்கால். 25. மரக்கால்; a measure of capacity for grain. *"கால் பெருத்துப் பொலி சிறுத்தாலும்" (திருவிருத். 58. வியா. ப. 324).* 26. அளவு (கருவியாகு பெயர்); measure, degree. 27. இருநூற்று நாற்பது இழை கொண்ட அகலம்; breath of 240 threads.

ம.,க கால்; **தெ., து.பட.,**காலு.

*[குல்–தோன்றல் கருத்துவேர். குல் → கல் → கால்– தோன்றல் வளர்தல்–நீட்சிப் பொருள்.]*

*kāl*, foot; Tuda *kōl*; Tuḷu *kār*. Comp. Mongol *k'ul*; Ostiak *kur*, Tungusian *chalgan, halgan*; Permian *kok;* Ossete *kach, koch*; Vogul *lal;* Korean *pal;* Canton-Chinese *koh;* Hung. *gyalog,* on foot (C.G.D.F.L. Pg.617); **Gk.** kuklos; **Russ.** koleso.

**கால்[5]** *kāl*, பெ.(n.) கருநிறம்; black colour. *"கால்தோய் மேனிக் கண்டகர்" (கம்பரா. உயுத் வானர. 21).*

ம.கால

**skt.**kāla

*[கல் → கால்(வே.க.119).]*

**கால்[6]** *kāl*, பெ.(n) 1. காற்று; wind, air, any of the vital airs. *"கால்கடிப் பாகக்கடலொலித் தாங்கு" (பதிற்றுப். 68,1).* 2. ஊதைநோய்; rheumatic affection. *"காற்கானோய் காட்டி" (நாலடி, 372).* 3. ஐந்து முதற்பொருளுள் ஒன்றாகிய காற்று (பஞ்சபூதம்); the five elements.

க. காளி, காள்; **தெ.**காலி; **து.** காலி, காளி; **கொலா.** கலி; **நா.** களி; **குவி.** காலி; **குரு.** காலி; **பட.** காயி.

**Fin.** keli; **Karel.** keli; **Mong.** kei.

**Dan.** gal; **Ice.** gola, galinn; **Norw.** galen; **F.** galerne.

*[குல்–தோன்றல் கருத்துவேர் குல் → கல் → கால் (காலுதல்)–ஒழுகுதல், ஓடுதல், வெளிப்படுதல், தோன்றுதல்.]*

**கால்[7]** *kāl*, பெ.(n.) 1. பொழுது (பிங்.); time. 2. செவ்வி; bloom, freshness. beauty. *"கான்மலியும் நறுந்தெரியல்" (பு.வெ. 8:18).* 3. தடவை; turn. *"சென்றே யெறிப வொருகால்" (நாலடி, 24).* 4. காலன் (சூடா); Kala, minister and attendant of Yama. 5. கூற்றுவன்; Yama. *"காலொக்குஞ் சில" (இரகு. யாகப். 71).*

ம.கால்.

கால்-நீட்சி. இங்குக் கால நீட்சியைக் குறித்துப் பொழுதின் பெயராயிற்று. பிறகு நல்ல நேரம் (செவ்வி), பணி தொடங்கு நேரம் (தடவை), காலம் (வாழ்நாள்) கணிக்கும் காலன் பொருள்களில் தாவிற்று.

**கால்[8]** *kāl*, இடை. (part.) 1. ஏழுருபுளொன்று. (நன். 302); a locative ending. 2. ஒரு வினையெச்ச ஈறு; ending of the verbal participle meaning if, provided, while, when. *"பழவினை வந்தடைந்தக் கால்" (நாலடி, 123).*

*[கால்-இடம். இடப் பொருள் உணர்த்திய சொல் அப்பொருட்குரிய வேற்றுமை உருபாயிற்று. அதேசொல் வந்தவிடத்து சென்றவிடத்து என்னும் சொல்லாட்சிகளை ஒருபுடை தழுவி வந்தக்கால், சென்றக்கால் என வினையெச்ச ஈறாயிற்று. வந்தாக்க, போனாக்க என்று மக்கள் பேசும் கொச்சை வழக்கு விலக்கற்பாலது.]*

**கால்கட்டு** *kāl-kaṭṭu,* பெ. (n.) ***காற்கட்டு*** பார்க்க; see *kāṟkaṭṭu.*

ம. கால்கெட்டு ; க.காலுகட்டு

*[கால் + கட்டு.]*

**கால்கடியன்** *kāl-kaḍiyaṉ,* பெ.(n) வல்லவன்; lit., fleet-footed person, person of ability, *'கால்கடி யரானவர்கள் ஏத்தப்புக்கால்' (ஈடு,3.1:7).*

*[கால்+கடியன்.]*

**கால்கடு-த்தல்** *kāl-kaḍu-,* 4 செ.கு. வி. (v.i.) தாள் (கால்)நோதல்; to have an aching sensation in the leg.

*[கால்+கடு-.]*

**கால்கழிகட்டில்** *kāl-kaḻi-kaṭṭil,* பெ.(n.) பாடை; bier. *"கால்கழி கட்டிலிற் கிடப்பி" (புறநா. 286).*

*[கால்+கழி+கட்டில்.]*

**கால்கழுவு-தல்** *kāl-kaḻuvu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. பாதபூசை செய்தல்; to wash the feet of a guru or saint. 2. மலங்கழுவுதல். (உ.வ.); to wash oneself after evacuation.

*[கால்+கழுவு-.]*

**கால்கிளர்-தல்** *kal-kiḷar-,* 3 செ.கு.வி. (v.i.) 1. ஒடுதல்; to run. "கல்லென் சுற்றமொடு கால் கிளர்ந்து திரிதரும்" (பெரும்பாண். 21). 2. படையெடுத்துச் செல்லுதல்; to set out on an expedition, as an army. *"அரைசு கால் கிளர்ந் தன்ன" (கலித். 149:3).*

*[கால்+கிளர்]*

**கால்கூசு-தல்** *kāl-kūsu-,* 5 செ.கு.வி.(v.i.) பிறவிடஞ் செல்ல மனங்கூசுதல்; to feel shy of entering a house, as of a stranger.

*[கால்+கூசு -]*

**கால்கெஞ்சு-தல்** *kāl-keñju-,* 5 செ.கு.வி. (v.i.) அடிவருந்துதல்(இ.வ.); to feel exhausted and unable to proceed further as after a hard, long walk.

*[கால்+கெஞ்சு.]*

**கால்கைப்பிடிப்பு** *kāl-kai-p-piḍippu,* பெ.(n.) ஊதைநோய்; rheumatism.

*[கால்+கை+பிடிப்பு.]*

**கால்கைவலிப்பு** *kāl-kai-valippu,* பெ.(n.) மூளைக்கு ஏற்படும் பாதிப்பினால் கைகால்கள் வெட்டிவெட்டி இழுப்பதும் வாயில் நுரை தள்ளி நினைவை இழக்கச் செய்வதுமான ஒரு நோய்; epilepsy.

*[கால்+கை+வலிப்பு.]*

**கால்கைபிடி-த்தல்** *kāl-kai-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) இசைவாக நடந்து வயப்படுத்துதல்; cajole, coax by word and deed.

*[கால்+கை+பிடி.]*

காலும் கையும் பிடித்து நயமாகத் தாழ்ந்து, இனிமையாகப் பேசிப் பிறரை வயப்படுத்துதலை, கால்கை பிடித்தல் என்பர்.

**கால்கொள்(ளு)-தல்** *kāl-koḷ-,* 7 செ. குன்றாவி. (v.t.)1. திருவிழா முதலியவற்றுக்குத் தொடக்கஞ் செய்தல்; to commence, as a festival; to begin. *"இந்திர விழாவிற்குக் கால்கொண்டு" (சிலப். 6:6, உரை).* 2. கல்லில் கடவுள் வடிவமைக்கத் தொடங்குதல்; to begin sculpturing the image of a deity in stone. *"பத்தினிக் கற்கால் கொண்டனன்" (சிலப். 26: 254, அரும்.).* 3. இடங் கொள்ளுதல்; to spread, increase. *"முலைகால் கொளக் கண்டு" (தஞ்சைவா.53).*4.ஏற்றுவித்தல் (ஆரோகணஞ் செய்தல்); to get into; to mount, as a horse. *"மயிலின்மேற்கால்கொளுங் குகனை" (அருட்பா, V, தரிசன).* 5. பெருக்கெடுத்தல்; to be filled, flooded. கால்கொண்டு நீர்வருகிறது. (இ.வ.).

*[கால்+கொள்.]*

**கால்கெடு-தல்** *kālkeḍudal,* 17 செ.குன்றாவி. (v.t.) வழிமரபு அற்றுப்போதல்; to put an end to the generation of a clan

*[கால்+கெடு.]*

**கால்கோள்** *kālkōl,* பெ.(n.) 1. தொடக்கம்; beginning, commencement, as planting a pole for a festival. *"கால்கோள் விழவின் நிலைசாற்றி" (சிலப்.5:144).* 2. போரில் இறந்த வீரனுருவைக் கல்லில் வகுக்கத் தொடங்குதலைக் கூறும் புறத்துறை (தொல்.பொருள். 60); theme of commencing the sculpture of the figure of a warrior who died in battle, on a memorial stone.

*[கால்கொள் → கால்கோள்.]*

**கால்சாய்–தல்** *kāl-šāy-,* 1 செ.கு.வி. (v.i.) அடியோடழிதல்; to perish utterly, to be completely ruined. *"குலமுழுதுங் கால்சாயப் பெயர்ப்ப னன்றே" (பிரயோத.38:28).*

*[கால்+சாய்.]*

**கால்சிதை–தல்** *kāl-šidai-,* 4 செ.கு.வி. (v.i.) காலாற் பறண்டுதல்; to scratch with the legs. *"கால்சிதைந்து நீலவல்லேறு பொராநின்ற வானம்". (திவ். இயற். திருவிருந்.7).*

*[கால்+சிதை.]*

**கால்சீ[1]–த்தல்** *kāl-šī-,* 4 செ.குன்றாவி. (v.t.) காலினாற் கீறுதல்; to scratch, as a fowl. கோழி கால்சீத்து உண்ணும் (உ.வ.).

*[கால்சீறுதல் → கால்சீ–த்தல்..]*

**கால்சீ[2]–த்தல்** *kal-si-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. அடியோடு போக்குதல்; to root out, exterminate. *"மாவிருள் கால்சீப்ப" (பரிபா.10:112).* 2. துடைத்தல்(வின்.); to efface, obliterate, brush away.

*[கால்+சீ.]*

**கால்செய்வட்டம்** *kāl-šey-vaṭṭam,* பெ.(n.) பேராலவட்டம்(பிங்.); large circular fan.

*[கால்+செய்+வட்டம்.]*

**கால்தடுக்கு–தல்** *kāl-taḍukku-,* 5 செ.கு.வி. (v.i)அடியிடறுதல்; to stumble.

*[கால்+தடுக்கு.]*

**கால்தாங்கு–தல்** *kāl-tāngu-,* 5 செ.கு.வி. (v.i) காலை இழுத்துநடத்தல்; to have the feet drawn up, stiffened, as by a fall, by disease; to hobble, limp, as bullock, because of pain in the hoof. மாடு கால்தாங்கி நடக்கிறது (உ.வ.).

*[கால்+தாங்கு.]*

**கால்தாழ்–தல்** *kāl-tāl-,* 2 செ.கு.வி. (v.i.) 1.சுணங்குதல், காலந்தாழ்த்தல்; to delay. *'இழந்தவையடைய மீட்பதாகச் சொல்லிப்போன நெஞ்சினாரும் அங்கே கால்தாழ்ந்தார்' (ஈடு,7.3:4).* 2. ஈடுபடுதல்; to be absorbed, engrossed. *'ஒரோகுணங்களிலே கால்தாழ்ந்து' (ஈடு,4.2:4).* 3. மூழ்கிவிடுதல்; to be immersed, drowned; to be steeped thoroughly. *"புண்ணீர் வெள்ளத்து காறாழ்ந்து" (திருவிளை. பழியஞ்சி.10).*

*[கால்+தாழ்.]*

**கால்நடை** *kāl-naḍai,* பெ.(n.) 1. காலால் நடக்கை; walking, going by foot. அவர்கள் குமரியிலிருந்து சென்னைக்குக் கால்நடையாகவே வந்தனர் (உ.வ.). 2. ஆடுமாடுகள் (உ.வ.); cattle, sheep and goats.

**ம.** கால்நட; **க.** கால்நடெ; **தெ.** கால்நட, காலிநட.

*[கால்+நடை.]*

**கால்நடைதருவார்** *kāl-naḍai-taruvār,* பெ.(n) நடக்குந்திறனுள்ளவர்; those who are able to walk. *'கால்நடை தருவார் காலிலே விழுந்து' (ஈடு,6.1: ப்ர.).*

**தெ.** கால்நடவாடு (நடப்பவர்)

*[கால்+நடை+தருவார்.]*

**கால்நோக்கு** *kāl-nōkku,* பெ.(n.) கோள்களின் (கிரகங்களின்) காற்பகுதிப் பார்வை (சங்.அக.); one fourth aspect of a planet.

*[கால்+நோக்கு]*

**கால்நோய்** *kāl-nōy* பெ.(n.) காலில் உண்டாகும் நோய் (M.L); lymphangitis in the leg.

*[கால்+நோய்.]*

**கால்பந்து** *kālpandu,* பெ.(n.) ***காற்பந்து*** பார்க்க; see *kāṟpandu.*

**து.** கால்செண்ட்

*[கால்+பந்து.]*

**கால்பரப்பு–தல்** *kāl-parappu-,* 5 செ.கு.வி (v.i.) 1. கால் வைத்தல்; to set foot, as on the ground. 2. நிலைகொள்ளுதல்; to settle down, rest, as in a place.

*[கால் + பரப்பு.]*

**கால்பரி–தல்** *kāl-pari-,* 4 செ.கு.வி. (v.i.) அறுபடுதல்; to break, to give way, as a rope. *"கயிறுகால் பரிய" (மணிமே. 4:31).*

*[கால்+பரி.]*

**கால்பாதை** *kāl-pādai-,* பெ. (n.) ***கால்வழி*** பார்க்க; see *kālvaḻi.*

**தெ.** காலிடொங்க

*[கால்+பாதை]*

**கால்பாவு–தல்** *kāl-pāvu-,* 5 செ.கு.வி. (v.i.) ***கால்பரப்பு–தல்*** பார்க்க; see *kāl-parappu-.* *"நெருப்பிலே கால் பாவினாற்போலே" (திவ். திருமாலை, 4:24).*

*[கால்+பாவு.]*

**கால்பிடி–த்தல்** *kāl-piḍi-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. காலை வருடுதல்; to press and rub the legs to induce sleep, to shampoo. 2. காலைப் பற்றிக் கெஞ்சுதல்; to fall at one's feet for a favour. *'பால்குடிக்கக் கால்பிடிக்க வேண்டி யிருக்கிறது' (ஈடு).* 3. தொண்டு புரிதல்; to do service. *"கேசவ நம்பியைக் கால்பிடிப்பா ளென்னு மிப்பேறு" (திவ். நாய்ச். 1:8).* 4. வாய்க்கால் வெட்டுதல்; to excavate or dig a channel. 5. விதையடித்தல்; to castrate.

**ம.** கால்பிடிக்குக

*[கால்+பிடி.]*

**கால்பின்னு–தல்** *kāl-piṉṉu-* 5 செ.கு.வி. (v.i.) 1. கால்கள் முறுக்கிக் கொள்ளுதல்; to become cross-legged, as a result of extreme physical debility. 2. முட்டிக்கால் தட்டுதல்; to be knock-kneed, as a donkey from carrying too heavy a burden.

*[கால்+பின்னு.]*

**கால்மட்டம்** *kāl-maṭṭam,* பெ.(n.) கட்பார்வையின்றிக் காலால் தடவிநடக்கை (யாழ்ப்.); feeling the way with the feet, as a blind man.

*[கால்+மட்டம்.]*

**கால்மடக்கு** *kāl-maḍakku,* பெ.(n.) கடப்புக்கால். (M.L); club-foot in which the heel is elevated and the foot bent or turned inward.

*[கால்+மடக்கு.]*

**கால்மர–த்தல்** *kāl-mara-,* 3 செ. கு.வி. (v.i.) கால் உணர்ச்சியற்றுக் கட்டைபோலாதல்; to get benumbed, as the feet.

*[கால்+மர.]*

**கால்மாடு** *kāl-māḍu,* பெ.(n.) 1. செல்வம் என்று பொருள்படும் மாடு என்னும் சொல்லினும் வேறாகிய வளர்ப்பு விலங்கு; cattle as distinguished from *māḍu* meaning gold. *"இராசராசதேவர் கொடுத்த கால்மாட்டிலும்' (S.I.I. II, 2, 49).* 2.காலின் பக்கம் (உ.வ.); place near the foot of a bed, or of a person in bed. கண்ணனின் கால்மாட்டில் அர்ச்சுனன் அமர்ந்திருந்தான் (உ.வ.).

*[கால்+மாடு. கால்மாடு=கால்நடையாகிய மாடு.]*

**கால்மிதி** *kal-midi,* பெ.(n) 1. அடிவைப்பு; a pose of foot in dancing 2. அடிச்சுவடு; track, footmark, footprint. 3. அடிவைக்கும் படி அல்லது படிக்கட்டு, கிணற்றுப் படிக்கட்டு (இ.வ.); well-staircase, steps cut for the feet inside the well. 4. காலிற்பட்ட

தூசியைத்துடைத்துக் கொள்வதற்காக இடப்படும் தென்னைநார்த் தடுக்கு; door-mat.

*[கால்+மிதி.]*

**கால்முளை–த்தல்** *kāl-muḷai-,* 4 செ.கு.வி. (v.i.) குழந்தை நடைகற்கத் தொடங்குதல் (உ.வ.); to begin to walk, as a child.

*[கால்+முளை.]*

**கால்மெட்டி** *kāl-meṭi-,* பெ.(n.) கால் பெருவிரலுக்கு அடுத்த விரலில் இடும் வெள்ளி வளையம்; a silver ring worn on the second toe.

ம. காலுங்கர

*[கால்+மெட்டி]*

**கால்மெட்டிடுகை** *kāl-meṭṭidugai,* பெ.(n) திருமணத்தில் மணமகன் கால்விரலில் கணையாழி இடுதல் (இ.வ.); putting a ring, mostly of silver, on the bridegroom's toe during marriage.

*[கால்+மெட்டி+இடுகை – கால்மெட்டியிடுகை – கால்மெட்டிடுகை.]*

**கால்மேலுறை** *kāl-mēl-uṟai,* பெ.(n.) கணுக்காலுறை (பாண்டி); gaiter, spat.

*[கால்+மேல்+உறை.]*

**கால்யா–த்தல்** *kāl-yā-,* 6 செ.கு.வி. (v.i.) நெருங்குதல்; to be close, crowded. *"கால்யாத்த பல்குடி கெழீஇ" (பெரும்பாண். 399).*

*[கால்+யா–. யாத்தல்= கட்டுதல், நெருங்குதல் → கால்யாத்தல் = நெருங்குதல், கூட்டமாதல்.]*

**கால்யா[1]–த்தல்** *kāl-yā-,* 4 செ. குன்றாவி. (v.i.) 1. மறைத்தல்; to conceal. *"சொன்றி ... வறைகால் யாத்து" (பெரும்பாண். 133).* 2. தேக்குதல்; to fill with water, as a channel. *"நீர்கால் யாத்தல்" (குறள், 1038,உரை).*

*[கால்+யா– யாத்தல்=கட்டுதல், செயற்பாடு ஒடுங்குதல்.]*

**கால்வடம்** *kāl-vaḍam,* பெ.(n.) காலணிவகை; foot-ornament strung with pearls. *'திருக்கால் வட மொன்றிற் கோத்த' (S.I.I.ii, 79-205 pg. 397).*

*[கால்+வடம்.]*

**கால்வயம்** *kāl-vayam,* பெ.(n.) துவரை; dhall (சா.அக).

*[கால்+வயம்.]*

**கால்வழி** *kāl-vaḻi,* பெ.(n.) 1. ஒற்றையடிப் பாதை; footpath. 2. காற்சுவடு; footprint. *"யானைக் கால் வழி" (புறநா. 368).* 3. **கால்வாசி[2]** பார்க்க; see *kāl-vāśi.[2]* 4. குடிவழி; lineage, family. *"நோய் பழியிலாததோர் கால்வழியில் வந்தவளுமாய்" (அறப்.சத.2).*

க., பட.காலுகாரி; தெ. காலிதாரி, காலி தோவ, காலிபாட.

*[கால்+வழி.]*

**கால்வழி நூல்வழி** *kāl-vaḻi-nūl-vaḻi* பெ.(n) வழிவழிவரும் மருத்துவ நூன்முறை; hereditary or customary, practice and theory as in *'கால்வழியும் நூல்வழியும் கண்டு தேரே' (சா.அக.).*

*[கால் + வழி + நூல் + வழி.]*

**கால்வளைவி–த்தல்** *kāl-vaḷavi-,* பி.வி. (v.caus.) வளைத்தல்; to bend, as the bow. *"சிலைகால் வளைவித்து" (திவ். பெரியதி. 8.6:4).*

*[கால்+வளைவி–.]*

**கால்வாங்கு[1]–தல்** *kāl-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i) 1. காலை வெட்டுதல்; to have the leg cut off. 2. கால் வழுக்குதல்; to slip, slide. 3. உயிர்மெய் நெடில் பெரும்பாலானவற்றில் நெடிற்குறியாகக் காலைவரைதல்; to write the symbol 'ா' to denote the lengthening to of vowel-consonants in the Tamil alphabet.

*[கால்+வாங்கு.]*

**கால்வாங்கு[2]—தல்** *kāl-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பின்வாங்குதல்; to retrace one's steps, withdraw *"கண்ண நீரோடே யாய்த்துக் கால்வாங்குவது" (திவ். திருமாலை, 15, வியா.).* 2. இறத்தல் (உ.வ.); to die.

*[கால்+வாங்கு.]*

**கால்வாசி** *kāl-vāśi,* பெ.(n.) 1. நாலில் ஒருபங்கு; a fourth part, quarter, 2. அடிவைத்த பலன்; lit., the nature or quality of one's foot as gauged from the weal or woe that accompanies a person's first entry in any concern, the nature of one's entry in any concern on which its good or evil prospects are supposed to depend. அவன் கால்வாசி நல்லது.

**ம.** கால்வாசி; **து.** காலம்ச, காலம்சொ.

*[கால்+வாசி. பகுதி → பாதி → பாசி → வாசி. வாசி (பங்கு,பகுதி) = பிறப்பியம் (ஜாதகம்) கணிப்போர் வரைந்த ஓரைக்கட்டத்தில் நற்பயனுக்கு உரிய பகுதிக்கட்டம்.]*

**கால்வாதம்** *kāl-vādam,* பெ.(n.) ***காலூதை*** பார்க்க; see *kāl-ūdai.*

*[கால்+(ஊதை) வாதம்.]*

**கால்வாய்** *kāl-vāy,* பெ.(n.) வாய்க்கால்; channel branching from a river or tank, for irrigation. *"கால்வாய்த் தலையின் கண்கள் போலும்" (பாரத. முதற்போ. 72).*

**ம. கால்வாய்; க.** காலுவெ, கால்வெ; **தெ.** காலுவ., காலவ; **து.** காலிவெ; பட. காவெ.

**skt.** khalla

*[கால்+வாய்.]*

**கால்வாய்க் கோமாரி** *kāl-vāy-k-kōmāri,* பெ.(n.) கால்நடையின் கால் குளம்புகளில் காணும் கோமாரி நோய்வகை; disease that affects the foot and mouth of cattle.

*[கால்+வாய்+கோமாரி.]*

**கால்வாயடுப்பு** *kālvāy-aḍuppu,* பெ.(n) காடியடுப்பு; a fire-place or oven in the form of a ditch, cooking trench.

*[கால்+வாய்+அடுப்பு.]*

**கால்வாயன்** *kāl-vāyaṉ,* பெ.(n) தெரிந்து பேசும் வன்மையற்றவன் (இ.வ.); one who cannot hold his own in a learned discussion, insufficiently educated person; a person of little knowledge and poor speech.

*[கால்+வாயன். ஒரு செய்தியின் காற்பகுதி மட்டும் விளங்கிக் கொள்ளும் தெளிவில்லாதவன், பேதை.]*

**கால்வார்—த்தல்** *kāl-vār-,* 4 செ.கு. வி. (v.i.) கொடிக்காலில் கடக (ஆடி) மாதத்தில் அகத்தி விதையை ஊன்றுதல்(இ.வ.); to sow seeds of *agatti* in a betel garden in the month of *āḍi.*

*[கால்+வார்-]*

**கால்வாரி** *kāl-vāri,* பெ.(n.) மாட்டுக் குற்றவகை (பெரிய.26); a defect in cattle.

*[கால்+வாரி.]*

**கால்விடு[1]—தல்** *kāl-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. கால்கள் செயலறுதல்; to have the feet crippled. 2. முட்டுக்கொடுத்தல்; to place a support, as to a falling roof. 3. தொலை உறவாதல் (C.G.); to be removed to some degrees in relationship.

*[கால்+விடு.]*

**கால்விடு[2]—தல்** *kāl-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) அறவொழித்தல்; to renounce or give up entirely, to forsake.

*[கால்+விடு.]*

**கால்விரல்** *kāl-viral,* பெ.(n.) மாந்தரது காலின் முற்பகுதியில் அமைந்துள்ள ஐந்து விரற் பகுதிகளுள் ஒன்று; toe.

ம. கால்விரல்; க.,பட. கால்பெரலு; தெ. காலுவெள்ளு, காலுவ்ரேலு; து. கார்பெரல், காலுபெரல்.

*[கால்+விரல்.]*

**கால்விலங்கு** *kāl-vilaṅgu,* பெ.(n.) *காற்கட்டு* பார்க்க; see *kāṟkaṭṭu.*

ம. காலவிலங்ங

*[கால்+விலங்கு.]*

**கால்விழு-தல்** *kāl-viḻu-,* 20 செ.கு.வி.(v.i) 1. மழைக்கால் இறங்குதல்;to descend, as rain clouds on the horizon. கால்விழுந்த மேகம் மழைவெள்ளத்தைத் தரும் (பு.வெ.9,16, உரை. 2. ஒளிவீசுதல்; to shed rays of light. *"நிலாக்கால் விழுந்தனைய" (மீனாட். பிள்ளைத். ஊசற். 1).*

*[கால்+விழு.]*

**கால்விழுந்துபோ¹-தல்** *kāl-viḻundu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) பாரிச ஊதை (பாரிசவாயு) முதலியவற்றால் கால் அசைவற்றுப் போதல்; to be rendered powerless, as one's legs by paralytic attack.

*[கால்+விழுந்து+போ.]*

**கால்விழுந்துபோ²-தல்** *kāl-viḻundu-pō-,* செ.கு.வி. (v.i.) முழுவதும் செயலற்றுப் போதல்; to be spent up or thoroughly exhausted, as at the time of death. 2. சாய்ந்து விழுதல்; turn turtle. *கொட்டகை கால்விழுந்து போனது (உ.வ.).* 3. அமிழ்தல்; to be ruined. *அக் குடும்பம் கால்விழுந்து போயிற்று (உ.வ.).*

*[கால்+விழுந்து + போ.]*

**கால்வீச்சு** *kāl-viccu,* பெ.(n.) கால் வீசி நடக்கை; sweeping motion of legs as in strut generally due to one's arrogance.

*[கால்+வீச்சு.]*

**கால்வீசு¹-தல்** *kāl-višu,* 5 செ.கு.வி. (v.i,) ஒளிக்கதிர் வீசுதல்; to shed rays, as the moon.

*[கால்+வீசு.]*

**கால்வீசு²-தல்** *kāl-višu,* 5 செ.கு.வி. (v.i.) காற்றடித்தல்; to blow, as the wind. *"கால்வீசி மின்னிப் படர்ந்து" (தாயு.சுகவாரி.8).*

*[கால்+வீசு-.]*

**கால்வெடிப்பு** *kāl-veḍippu,* பெ.(n) காலிற்காணும் பித்தவெடிப்பு (M.L); fissure in feet, as due to excess of bile in one's system.

*[கால்+வெடிப்பு]*

**கால்வை-த்தல்** *kāl-vai-,* 4 செ.கு.வி. (v.i.) உள்நுழைதல்; lit., to place the foot, to step in, enter. அவன் வீட்டில் நான் கால்வைக்கமாட்டேன்.

ம. கால்வய்க்குக, கால்குத்துக; க.காலிடு; பட.கால்பீ.

*[கால்+வை.]*

**காலக்கட்டம்** *kālakkaṭṭam,* பெ. (n.) ஒரு கால எல்லை; a period or length of time.

ம. காலகட்டம்

*[காலம் + கட்டம்]*

**காலக்கடவுள்** *kāla-k-kaḍavuḷ,* பெ.(n.) 1. காலன்; Yama, as the deity that puts an end to life. 2. அழிப்புக்கடவுளான சிவன்; Siva, as the god of destruction. *"காலக்கடவுட் குயர்கமா வலனே" (தொல். பொருள். 81, உரை).*

*[காலம்+கடவுள்.]*

**காலக்கடப்பு** *kāla-k-kaḍappu,* பெ.(n.) காலத்தின் வேகம், காலவோட்டம் (தக்கயாகப். 447); passage of time.

*[காலம்+கடப்பு.]*

**காலக்கணிதம்** *kāla-k-kaṇidam,* பெ.(n.) காலக்கணக்குப்பற்றிய விண்நூல்; astronomy. *"காலக் கணிதமுங் கலைகளின் துணிவும்" (மணிமே. 2:29).*

*[காலம்+கணிதம்.]*

**காலக்கணிதர்** *kāla-k-kaṉidar,* பெ.(n.) காலத்தைக் கணித்தற்குரிய கணியர்; astronomers. as calculators of time. *"மாலைக் காரரும் காலக்கணிதரும்" (மணிமே. 28,40).*

*[காலம்+கணிதர்.]*

**காலக்கந்தம்** *kāla-k-kandam,* பெ.(n.) 1. தும்பைப்பூ; leucas flower. 2. காட்டத்தி; false mangosteen. 3. பிசினத்தி; gum fig. 4. கருவேல்; black babool. (சா.அக.).

*[காலம்+கந்தம்.]*

**காலக்கழிவடை** *kāla-k-kaḻivadai,* பெ.(n.) 1. காலங்கடந்து; that which is unlimited by time.. 2. காலக்கழிவானது; that which is time-barred.

*[காலம்+கழிவடை.]*

**காலக்கழிவு** *kāla-k-kaḻivu* பெ.(n.) 1. காலத்தாழ்வு; delay, postponement, putting off. *"ஞானக்கைதா காலக்கழிவு செய்யேலே" (திவ். திருவாய். 2.9:2).* 2. வீண்பொழுது போக்குகை; wasting or killing time.

*[காலம்+கழிவு.]*

**காலக்கனல்** *kāla-k-kaṉal,* பெ.(n.) ***காலத்தீ*** பார்க்க; see *kāla-t-tī. "காலக்கனல் கட்கடை கக்குங் கணங்கள்" (கூர்மபு. அந்தகா. 102).*

*[காலம்+கனல்.]*

**காலக்கினிதகன்** *kālakkiṉitagaṉ* பெ.(n.) காட்டுத்தீ; jungle fire (சா.அக).

*[காலம்+அக்கினி+தகன்.]*

**காலக்குறி** *kāla-k-kuṟi,* பெ.(n.) பருவத்துக்குரிய அடையாளம்; seasonal indications, sign of weather.

*[காலம்+குறி.]*

**காலக்கேப்பை** *kāla-k-kēppai,* பெ.(n.) இராகி வகை (விவசா.3.); a species of ragi.

*[காலம்+கேப்பை.கேழ்வரகு → கேப்பை(மரூஉச் சொல்).]*

**காலக்கொடுமை** *kāla-k-koḍumai,* பெ.(n.) காலத்தின் தீமை; evil time , harmful of the times.

ம. காலக்கேடு

*[காலம்+கொடுமை.]*

**காலக்கோட்டரிசி** *kāla-k-ōṭṭariśi,* பெ.(n.) கவிழ்தும்பை; stooping leucas (சா.அக.).

*[காலம்+கோட்டு+அரிசி.]*

**காலகஞ்சம்** *kāla-kañjam,* பெ.(n.) ஈரல்; liver (சா.அக.).

*[காலம்+கஞ்சம்.]*

**காலகட்கம்** *kāla-kaṭkam,* பெ.(n.) ஒரு நிரயம் (நரகம்) (சி.போ.பா. 2:3, ப 203); a hell.

*[காலம்+கட்கம்.]*

**காலகண்டகம்** *kāla-kaṇḍagam,* பெ.(n) 1. நச்சுக் குருவி; a species of venomous sparrow. 2. தண்ணீர்ப் பாம்பு; water snake (சா.அக.).

*[காலம்+கண்டகம்.]*

**காலகண்டம்**[1] *kālakaṇḍam,* பெ.(n.) 1. தாழ்ந்த குரலுடைய ஒரு பறவை; a species of bird of sylviadae family with a low voice. 2. பாடும் பறவைகள்; singing birds in common. 3. வயிற்றின் வலப்பக்கச் சதை; the mascular portion on the right side of the abdomen.

*[காலம் + கண்டம் – காலம் = நீளுதல், தாழ்தல், தொங்குதல்.]*

**காலகண்டம்**[2] *kāla-kaṇḍam,* பெ.(n.) 1. கார் வழலை என்னும் கருநாகம்; black cobra. 2. ஆண் குருவி; cock- sparrow. 3.மயில்; pea-cock.(சா.அக.).

*[காலம்+கண்டம். காலம் = கருப்பு, அழகு.]*

**காலகத்தூரி** *kāla-kattūri,* பெ.(n) 1. கருப்பு மான்மணத்தி; black must. 2. கத்தூரி வெண்டை; musk benday (சா.அக.).

*[காலம்+கத்தூரி.]*

**காலகம்** *kalagam,* பெ.(n.) 1. சேங்கொட்டை; dhoby's nut. 2. கருவிழி; black part of the eye. 3. தண்ணீர்ப்பாம்பு; water snake. 4. பேய்; evil spirit. 5. பெண்காக்கை; female crow. 6. கரும்புள்ளி; dark spot. 7. தேள்; scorpion. 8. பால் புளிப் பதனால் ஏற்படும் ஒருவகைப் புழு; a small worm found in the fermentation of milk 9. சியா மாப்பறவை; syama bird (சா.அக.).

*[கால் → காலகம்.]*

**காலகரந்தகம்** *kāla-karandagam,* பெ.(n.) 1. பாம்பு; snake. 2. நீர்ப்பாம்பு; water snake. (சா.அக).

*[கால் + கரந்தகம் – கால்கரந்தகம் → காலகரந்தகம்.]*

**காலகாலம்** *kālakālam,* பெ.(n.) 1. உரிய காலம்; proper time. 2. காலந்தோறும்; all times, time after time.

*[காலம் + காலம்.]*

**காலகரு** *kāla-karu;* வெ.(n.) காழகில்; black aloe-wood (சா. அக.).

மறுவ. சோம்பரம்

*[கால்+அகரு.]*

**காலகாலம்** *kāla-kālam,* பெ.(n) வறுமை மிகுந்த; time of famine (சா.அக.).

மறுவ. காலங்கறுப்பு

*[காலம்+காலம்.]*

**காலகாலன்** *kāla-kālan,* பெ.(n.) சிவன்; Siva, as one who subdued Yama. *"காலகாலனைக் கம்பனெம் மானை"* (தேவா. 1048,1).

ம. காலகாலன்

*[காலன் + காலன் – காலகாலன் : காலனுக்குக் காலன், எமனுக்கு எமன். நான்காம் வேற்றுமைத் தொகை.]*

**காலகுணத்தான்** *kāla-gunattān,* பெ.(n.) அலரி; oleander (சா.அக.).

*[காலம்+குணத்தான்.]*

**காலகுந்தி** *kāla-kunti,* பெ.(n.) கழற்சிக் கொடி; molucca-bean (சா.அ க.).

*[காலம்+குந்தி.]*

**காலகூடகம்** *kāla-kūdagam,* பெ.(n.) ஒரு நச்சு மூலிகை; the name of a poisonous plant. (சா.அக.).

*[காலம்+கூடகம்.]*

**காலகூடம்** *kāla-kūdam,* பெ.(n.) 1. பாற்கடலில் தோன்றிய நஞ்சு; the poison that came out when the ocean of milk was churned;deadly poison. 2. எட்டிமரம்; nux-vomica tree.

*[காலம்+கூடம்.]*

**காலக்கோட்டிநஞ்சுச்சுண்ணம்** *kāla-kōtti-nanju-c-cunnam,* பெ.(n.) நஞ்சுக் கொடியினின்று அணியமாக்கும் சுண்ணம்; an alkaline compound prepared from the navel - cord of the first - born child. (சா.அக.).

*[காலம்+கோட்டி+நஞ்சு+சுண்ணம்.]*

*மறுவ. குடற்சுண்ணம்*

**காலங்கடந்தோன்** *kālan-kadanton,* பெ. (n.) காலங்கடந்த கடவுள்; God, as unlimited by time. "காலாதீதனான ஈசுவரன்" (சி.சி.2:54, சிவாக்.)

*[காலம்+கடந்தவன்.]*

**காலங்கடத்து–தல்** *kālankadattu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நேரத்தை வீணடித்தல்; to spend time just like that. 2. காலம்கழித்தல்;to pass one's time, to delay.

ம. காலம்கழியுக

*[காலம்+கடத்து.]*

**காலங்கண்டவன்** *kālan-kandavan,* பெ.(n.) அகவையிலும் துய்ப்பிலும் (அனுபவத்திலும்) முதிர்ந்தவன்; aged and experienced person.

ம. காலம்கண்டவன்

*[காலம்+கண்டவன்.]*

**காலங்கழி—தல்** *kālaṅ-kaḻi,* 4 செ.கு.வி. (v.i.) பொழுதுபோதல்; to pass away, as time.

ம. காலம்கழியுக

*[காலம்+கழி.]*

**காலங்கழி—த்தல்** *kālāṅ-kaḻi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. காலந்தாழ்த்துதல்;to delay. 2.வாழ்நாள் போக்குதல் (திருக்கருவைக்கலித்.); to pass one's life-time. 3. வாழ்தல்; to make a living.

ம. காலம்கழிக்குக; து. காலகளெபுனி

*[காலம்+கழி.]*

**காலங்கறுப்பு** *kālaṅ-karuppu,* பெ.(n.) வறுமைக்காலம்; famine time. (சா.அக.).

*[காலம்+கறுப்பு.]*

**காலங்காட்டி** *kālaṅ-kāṭṭi,* பெ.(n) விடியற்காலம்; the break of the day as the first appearance of light in the morning (சா.அக.). அவன் காலங்காட்டியே எழுந்து வேலைக்குப் போய்விட்டான் (இ.வ.).

*[காலம் + காட்டி.]*

**காலங்காண்—தல்** *kālāṅkāṇ-,* 16 செ.கு.வி. (v.i) 1. காலத்தை அறிந்து கொள்தல், தெளி வடைதல்;to know the proper time, to be cleared.

ம. காலங்காண்

*[காலம்+காண்]*

**காலங்கார்த்தாலே** *kālaṅ-kārttālē,* கு.வி.எ. (adv.) விடியற் காலையில், புலர்காலையில் (உ.வ.); very early in the morning.

*[காலம்+காலத்தாலே - காலங்கார்த்தாலே. **காலத்தாலே** பார்க்க. see kālattālē.]*

**காலங்காலம்** *kālaṅkālam* பெ.(n.) பலதலை முறைகளை உள்ளடக்கிய நீண்டகாலம்; long duration, period of many generations.

*[காலம்+காலம்.]*

**காலங்கிட்டு—தல்** *kālaṅ-kiṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ***காலங்கூடுதல்*** பார்க்க; see *kālaṅ-kūḍudal.*

*[காலம்+கிட்டு-.]*

**காலங்கூடல்** *kālaṅ-kūḍal* பெ.(n.) இறத்தல்; dying (சா.அக.).

*[காலம்+கூடல்.]*

**காலங்கூடு—தல்** *kālaṅ-kūḍu-* 5 செ.கு.வி. (v.i.) 1. இறக்குங்காலம் நெருங்குதல்; to approach or overtake, as death nearing one's end.2. வரையறுக்கப்பட்ட காலம் முடிதல்; to complete the allotted period.

ம. காலம் கூடுக; து. காலபர்புனி.

*[காலம்+கூடு.]*

**காலங்கெட்ட காலம்** *kālaṅkeṭṭakālam,* பெ.(n.) அல்லலுறும் காலம், தீய காலம்; in auspicious time.

ம. காலவேல

*[காலம் + கெட்ட + காலம்.]*

**காலச்சக்கரம்** *kāla-c-cakkaram,* பெ.(n.) 1.காலச் சுழற்சி; rotation of time. 2.அன்றாட வாழ்க்கை முறை; typical day to day life. ஏதோ காலச் சக்கரம் நடக்கிறது. நானும் வாழ்கிறேன் (உ.வ.).

மறுவ. காலவட்டம்

ம. காலசக்ரம்; தெ. காலசக்ரமு; து. காலசக்ர.

*[காலம் + சக்கரம்.]*

**காலசங்கம்** *kāla-śaṅgam,* பெ.(n.) வைகறை (யாழ்.அக.); dawn, early morning.

*[காலம் = விடியற்காலம். காலம் + சங்கம். சங்கு சங்கம்.காலசங்கம் + விடியல் = சங்கு என்பது விடியற் காலையை உணர்த்தியதாகலாம்.]*

**காலசந்தி**[1] *kāla-šandi,* பெ.(n.) ஒரு நாளின் ஆறு பாகங்களுள் (யாமங்களுள்), இரண்டிரண்டு கூடுஞ் சந்திக் காலங்களில் கோயில்களிலே செய்யும் பூசை; lit.,junction of times,worship in temples in the interval between every two of the six parts into which a day is divided.

*[காலம் + சந்தி. காலம் = நாளின் முக்காலப் பிரிவு, அதாவது 20 நாழிகைக்கு ஒருமுறை (8 மணிக்கு) நடத்தும்,கோயிற்பூசைக்குரிய காலம்.]*

**காலசந்தி**[2] *kala-šandi,* பெ.(n.) ***காலைசந்தி*** பார்க்க; see *kālai-šandi.*

*[காலை → கால + சந்தி – காலசந்தி. காலை = காலைநேரம்.]*

*நாடொறும் 8 மணி இடைவெளிக்கு ஒருமுறை நிகழ்த்தும் முக்காலப் பூசைகளுள் முதற்பூசையாகிய வைகறை 4 மணிப்பூசை, காலை சந்தி எனப்பட்டது.*

**காலசம்** *kālašam,* பெ.(n.) 1. பேராலவட்டம்; large circular fan. 2.காற்று; wind.

*[கால் + அசை – காலசை → காலசம். கால் = காற்று. அசை = காற்று வரும் பொருட்டு அசைப்பது.]*

**காலஞ்செய்–தல்** *kālañ-cey-,* 1. செ.கு.வி. (v.i.) இறத்தல்; to cease to exist, to die."காலாந்தரத் திருவர் தங்காலஞ் செய்ய"(திருவாச. 12:11).

**மறுவ.** காலமாதல்

**ம.** காலம்செய்யுக

*[காலம் + செய். காலம் = காலத்தின் இறுதி. காலஞ்செய் = தம் வாழ்நாள் இறுதியை முடித்துக்கொண்டது.]*

**காலஞ்செல்(லு)–தல்** *kālañ-cellu-,* 1 செ.கு.வி. (v.i.) 1.இறந்துபோதல்; to depart this life, die. 2.காலத்தாழ்வுப்படுதல் (யாழ்ப்.); tobe late, 3. காலயிறுதியாதல்(உ.வ.); tobe time barred by limitation.

*[காலம் + செல்.]*

**காலஞ்சொல்லு–தல்** *kālañcollu-,* 1 செ.கு.வி. (v.i.) வாழ்நாளின் நன்மை தீமைகளை முன்ன தாகவே கூறுதல்; predicting events good or bad of one's life-time (சா.அக.).

*[காலம் + சொல்லு.]*

**காலஞ்சொல்லி** *kālañ-colli,* பெ.(n.) காகம், பல்லி; crow, lizard.

**ம.** காலம்சொல்லி

*[காலம் + சொல்லி.]*

**காலசாகம்** *kālašāgam* பெ.(n.) 1.கறிவேப்பிலை; curry leaf. 2. துளசி; holy basil (சா.அக.).

*[காலம் + சாகம். காலம் = கருமை.சாகம் = இலை,தழை, தளிர்.]*

**காலசாரம்** *kālašāram,* பெ.(n.) அணில்; squirrel. (சா.அக.).

*[காலம் + சாரம் – கால சாரம் = கரிய வரிகளைக் கொண்டது. மூவரி அணில் எனப்படுதல் காண்க. காலம் = கருமை, சாரம் = வரி, சாரை, கோடு.]*

**காலசாலி** *kālasāli,* பெ.(n.) கருப்பரிசி; black rice.(சா.அக.).

*[காலம் + சாலி. சாலி = நெற்பயிர்ப் பொது. காலம் = கருமை.]*

**காலடி**[1] *kāl-aḍi,* பெ.(n.) 1. உள்ளங்கால்;sole of the foot. 2. காற்சுவடு; step or trace of the foot, footprint."*நடந்த பெருங்காலடி மேலடி" (தனிப்பா.ii,4:7.).*

**ம.** காலடி

*[கால்[1] + அடி.]*

**காலடி**[2] *kāladi,* பெ.(n.) 1. சேரநாட்டுப் பெரியாற்றங் கரையிலுள்ள சிற்றூர்; a village on the bank of the Periyar in Kerala. 2. ஆதிசங்கரர் பிறந்த ஊர்; a town in the Chera country, the birth-place of Sankara.

**ம.** காலடி

*[கால் + அடி – காலடி. கால் – ஆற்றின் ஊற்றுக்கால் அல்லது வாய்க்கால் பக்கத்தில் அமைந்த சிற்றூர்.]*

**காலடி**[3] *kāladi,* பெ.(n.) மிக்க அண்மை; close proximity (சா.அக.).

*[கால் + அடி(கால் அடியெடுத்து வைக்கும் தொலைவு).]*

**காலடியில்** *kāl-adi-y-il,* கு.வி.எ. (adv.) 1. மிக அண்மையில்; in close proximity. இதோ, காலடி யில் உள்ளது அவ்வூர் (உ.வ.). 2. பாதுகாப்பில்; under one's protection. அவன் என் காலடியில் வாழ்பவன் (உ.வ.).

*[கால்[1] + அடியில்.]*

**காலணி** *kāl-aṇi,* பெ.(n.) 1. காலில் அணியும் அணி கலன்; anklet,ankle rings or bells. *"கரந்தியான் கொண்ட காலணி" (சிலம்பு.16, 127.).* 2. செருப்பு; slipper.

**ம.** காலணி

*[கால்[1] + அணி.]*

**காலத்தவணை** *kālattavaṇai,* பெ.(n.) வரையறுக் கப்பட்ட காலவெல்லை; prescribed time limit.

**மறுவ.** காலவரம்பு

*[காலம் + தவணை.]*

**காலத்தால்** *kālattāl,* கு.வி.எ.(adv.) 1. உரிய பொழுதில்; seasonably, in proper time. *"காலத் தால் தக்க தறிவதாந் தூது."(குறள்,686).* 2.காலம் புலர; early, betimes.*"காலத்தாற் கொண் டும்மின்"(நாலடி,20.).*

*[காலம் + அத்து + ஆல்.]*

**காலத்தாலணையும்பெயர்** *kālattāl-aṇaiyum-peyar,* பெ.(n.) பருவ முதலிய காலங்களா லணையும் பெயர் (எ.டு.) வேனிலான்; proper name based on the names of seasons etc.,

*[காலத்தால் + அணையும் + பெயர்.]*

**காலத்தாலே** *kālattālē,* கு.வி.எ.(adv.) காலையில்; in the morning. காலத்தாலே வாருங்கள் (இ.வ.).

*[காலம் + அத்து + ஆல் + ஏ. காலம் = புலர்காலம், புலர்காலை. 'அத்து'– சாரியை. ஆல் – மூன்றன் உருபு. ஏ – பிரிநிலை ஏகாரம்.]*

காலத்தாலே என்னும் சொல் பார்ப்பனர் நாவில் கார்த்தாலே எனத்திரிந்தது. இக்கொச்சை வழக்கு விலக்கத்தக்கது. இது போன்ற காத்தாலே என்னும் பொதுமக்கள் கொச்சைவழக்கும் கடிபத்தக்கது.

**காலத்தாழ்வு** *kāla-t-tālvu,* பெ.(n.) காலக்கழிவு; delay, loss of time.

**மறுவ.** காலச்சுணக்கம், தடைவு.

**தெ.** காலயாபநமு

*[காலம் + தாழ்வு.]*

**காலத்திரயம்** *kāla-t-tirayam,* பெ.(n.) இறப்பு நிகழ்வு, எதிர்வு என்னும் மூவகைக் காலம்; three fold division of time.

**Skt.** *kālatraya*

*[காலம் + திரயம்.]*

**வ.** த்ரியம்(மூன்று) > **த.** திரயம். ***முக்காலம்*** பார்க்க; see *mukkālam.*

**காலத்தீ** *kāla-t-tī,* பெ.(n.) ஊழித்தீ; destructive fire that is believed to prevail at the dissolution of the universe.

*[காலம் + தீ. காலத்தீ – காலமுடிவில்(ஊழிக்கால முடிவில்) அனைத்தையும் அழிக்கும் தீ.]*

**காலத்தேவை** *kāla-t-tēvai,* பெ.(n.) பழைய வரிவகை (புதுக்கல்.399); an ancient tax.

*[காலம் + தேவை.]*

*வேளாண்மைப் பருவகாலங்களில் அறுவடை முதலிய கூலித் தொழிலுக்குப் பணியாளரை மற்றொரு ஊரார் பணிக்கு அழைப்பதற்காக அவ்வூர்த் தலைவர்க்கோ, ஊரவைக்கோ செலுத்திய வரியாகலாம்.*

**காலதண்டம்** *kāla-tandam,* பெ.(n.) காலனின் தண்டாயுதம்; Yama's staff. *"காலதண்டஞ் சுழற்றி" (உபதேசகா. சிவபுண்ய.222.).*

*[காலன் + தண்டம்.]*

**காலதர்** *kāl-adar,* பெ.(n.) சாளரம்; window, as an air passage. *"காலதர் மாளிகை"(சிலம்பு:5, 8.).*

*[கால் + அதர். கால் = காற்று. அதர் = வழி. காலதர் = காற்று வரும் வழி.]*

**காலதாமதம்** *kāla-t āmadam,* பெ.(n.) ***காலத் தாழ்வு*** பார்க்க; see *kāla-t-tālvu.*

*[காலம் + தாமதம்.]*

**காலதிண்டுகம்** *kāla-tindugam,* பெ.(n.) கருங்காலி; a black variety of ebony (சா.அக.).

*[காலம் + திண்டுகம்.]*

**காலதீமை** *kāla-tīmai,* பெ.(n.) காலக்கொடுமை; effect of bad time.

*[காலம் + தீமை.]*

**காலதுரிதம்** *kāla-turidam,* பெ.(n.) ***காலவிரைவு*** பார்க்க; see *kāla-viraivu.*

*[காலம் + துரிதம்.]*

**Skt.** drita > த. துரிதம்.

**காலந்தள்ளு–தல்** *kālan-tallu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. உழைத்து வாழ்தல்; to pass one's days, maintain oneself. *"பிச்சைவேண்டிக்... காலந் தள்ளாமல்." (தனிப்பா.i:396.7).* 2. காலந்தாழ்தல்; to delay. 3. வீண்காலம் போக்குதல்; to waste time.

*[காலம் + தள்ளு.]*

**காலந்தாழ்த்து–தல்** *kālan-tālttu-,* 5 செ.கு.வி. (v.i.) காலத்தாழ்வு செய்தல்; to make delay.

*[காலம் + தாழ்த்து.]*

**காலந்தோறும்** *kālandōrum,* வி.எ.(adv.) உரிய காலங்களில், எப்பொழுதும் ; ateverypropertime,at alltimes,timeaftertime.

ம. காலந்தோறும்

*[காலம் + தோறும்.]*

**காலநியமம்** *kāla-niyamam,* பெ.(n.) ***காலக்கடன்*** பார்க்க ; see *kāla-k-kadan.*

ம. காலநியமம்

*[காலம் + நியமம்.]*

**காலநுட்பம்** *kāla-nutbam,* பெ.(n.) காலத்தின் நுண்ணிய பகுதி; a moment of time.

*[காலம் + நுட்பம்.]*

**காலநெடுமை** *kāla-nedumai,* பெ.(n.) காலநீட்டிப்பு; delay.

*[காலம் + நெடுமை.]*

**காலநேமி** *kāla-nēmi,* பெ.(n.) 1. காலவட்டம்; the wheel of time. *"காலநேமிப் பிரமையிற் றிரிவன்" (கைவல்ய. தத். 19).* 2.திருமாலாற் கொல்லப்பட்ட ஓர் அரசன்; an asura slain by Visnu. *"காலநேமி காலனே"(திவ். திருச்சந்.31).*

*[காலன் + நேமி.]*

**காலநேரம்** *kāla-nēram,* பெ.(n.) 1. ஒருவருடைய நலந் தீங்கிற்குக் காரணமாகக் கணியத்தின்படி கொள்பயன்(வின்.); time with reference to the influence of planets upon one's fortune or health. 2. வினையாற்றுதற்குரிய சூழலமைந்த நேரம்; appropriate time for action.

ம. காலவேல

*[காலம் + நேரம்.]*

**காலநோக்காடு** *kāla-nōkkādu,* பெ. (n.) பெண்களுக்குக் கருமுதிரும் காலத்திற் காணும் வயிற்றுவலி; pain in the uterus or its adjacent parts due to the pressure exerted by the distended womb during the progressive period of pregnancy (சா.அக.).

*[காலம் + நோக்காடு.]*

**காலநோய்** *kāla-nōy,* பெ.(n.) தட்பவெப்ப நிலையையும், பருவகாலங்களையும் பற்றாகக் கொண்டு ஏற்படும் நோய்கள்; diseases of periodical type brought about by the variation of atmospheric heat or humidity with the change of seasons or other climatic conditions (சா.அக.).

*[காலம் + நோய்.]*

**காலப்படிகம்** *kāla-p-paḍigam,* பெ. (n.) 1. கருப்புப் படிகக்கல்; black crystal. 2. காசுமீரக்கல்; Kashmir stone(சா.அக.).

*[காலம் + படிகம்.]*

**காலப்பண்** *kāla-p-paṇ,* பெ.(n.) அவ்வக் காலத்திற்கு உரிய பண்; mode appropriate to a particular time.

*[காலம் + பண். காலம் = பொழுது. பொழுதுக்கேற்பப் பாடுதற்காக வகைசெய்யப்பட்ட தமிழ்ப்பண்கள்.]*

**காலப்பயிர்** *kāla-p-payir,* பெ.(n.) பருவத்தில் விளையும் பயிர்; lit.,seasonal crop, wet-season crop,opp.to kōḍai-p-payir.

*[காலம் + பயிர். காலம் = பருவம்.]*

**காலப்பழக்கம்** *kāla-p-paḻakkam,* பெ. (n.) 1. பழமையான பழக்கவழக்கம்; time-honoured usage. 2. நாட்பட்ட பழக்கம்; long-standing habit, or practice.

ம.காலப்பழக்கம்

*[காலம் + பழக்கம். காலம் = பழமை.]*

**காலப்பாடு** *kāla-p-pāḍu,* பெ.(n.) காலநிலைமை; condition of the times. *"கள்ளமில் காலப் பாடும் கருமமுங் கருதே னாகில்"* (கம்பரா. உத்த. இராவணன் வதை.7).

*[காலம் + பாடு. படுதல் = உண்டாதல், படு → பாடு = உண்டாகும் நிலைமை.]*

**காலப்பூ** *kāla-p-pū,* பெ.(n.) நன்னாரி; Indian sarsaparilla (சா.அக.).

*[காலம் + பூ.]*

**காலப்பூப்பு** *kāla-p-pūppu,* பெ.(n.) பெண்கள் சரியான அகவையில் பருவமடைதல்; maturity of girls at their proper age.(சா.அக.).

*[காலம் + பூப்பு.]*

**காலப்பெயர்** *kāla-p-peyar,* பெ.(n.) 1. காலத்தைக் குறிக்கும் பெயர்ச் சொல் (நன்.290); noun denoting time, as சித்திரை 2. காலத்தினடியாக வந்த பெயர்(நன்.132, உரை.); name derived from a noun denoting time, as ஆதிரையான்.

*[காலம் + பெயர் – காலப்பெயர். காலம் உணர்த்தும் சொல்லால் பெற்ற பெயர்.]*

**காலப்பொல்லாங்கு** *kāla-p-pollāṅgu,* பெ.(n.) கெட்ட காலம் (இ.வ.); evil times, hard times.

*[காலம் + பொல்லாங்கு. பொல்லாங்கு = தீமை,கேடு.]*

**காலப்போக்கு** *kāla-p-pōkku,* பெ.(n.) **காலப்பாடு** (மீனாட்.சரித்.ii, 160.) பார்க்க; see *kāla-p-pāḍu.*

*[காலம் + போக்கு.]*

**காலபடர்** *kāla-paḍar,* பெ.(n.) காலதூதர்; Yama's messengers. *"காலப் படரெனப் படரிற் பட்டார்" (திருவிளை. யானையெய்.32).*

*[காலன் + படர். படை → படையன் → படையர் → படர் = படையாள், படைமறவர்.]*

**காலபரணம்** *kāla-paraṇam,* பெ.(n.) தகரை என்னும் மூலிகை; ringworm plant (சா.அக.).

மறுவ. காலபர்ணம்

*[காலம் + பரணம்.]*

**காலபரணி** *kāla-paraṇi,* பெ.(n.) 1. நந்தியாவட்டம்; common wax flower. 2. கருந்தாளி; a dark kind of Ipomaea (சா.அக.).

*[காலம் + பரணி.]*

**காலபரிபாகம்** *kāla-pari-pāgam,* பெ.(n.) காலத்தின் பக்குவநிலை; fairness of time.

*[காலம் + பரி + பாகம். பரி = வளைவு, முழுமை. பாகம் = பக்குவப்படுதல். பரிபாகம் = முற்றும் பக்குவப்பட்ட நிலை.]*

**காலபலன்** *kāla-palaṉ,* பெ.(n.) காலநிகழ்ச்சி; events good or bad occurring in one's life time. (சா.அக.)

*[காலம் + பலன்.]*

**காலபாசம்** *kāla-pāšam,* பெ.(n.) கயிற்றின் வடிவான காலன் கைக்கருவி; Yama's noose, as an instrument of death.

*[காலன் + பாசம். பாந்தள் = கயிறு. பாந்தள் → பாந்தன் → பாத்தம் → பாசம். (கொ.வ.).]*

**காலபுருடன்** *kāla-puruḍaṉ,* பெ.(n.) சமயத்திற் கேற்ப ஒழுகுபவன்; time-server. இது காலபுருடர் நட்புத் தீதென்றது (குறள்,819,மணக்.)

*[காலம் + புருடன்.]*

Skt puruša > த. புருடன் (ஆண்).

**காலபூதம்** *kāla-pūdam,* பெ.(n.) கோழி; fowl. (சா.அக.).

*[காலம் + பூதம் – கால பூதம் = காலத்தை அறிவிப்பது. பூதம் = தோன்றுதல், தோன்றச் செய்தல், அறிவித்தல்.]*

**காலபேதம்** *kāla-bēdam,* பெ.(n.) நற்காலம் மாறிய நிலை; change of times, mostly for the worse. அவனுடைய காலபேதத்தாலே இப்படி நேர்ந்தது.

*[காலம் + பேதம்* **Skt.** bedai > த. பேதம் வேறு → வேறி → வேதி → பேதி → பேதம். த. வேறி → வேதி > **Skt.bedai.***]*

**காலபைரவர்** *kāla-pairavar,* பெ.(n.) ***காலவயிரவர்*** பார்க்க; see *kāla-vayiravar.*

*[காலம் + பைரவர்.]*

த. வயிரவர் > **Skt.** Bairava.

**காலபோகம்** *kāla-pōgam,* பெ.(n.) 1. பருவத்திற் குரிய பயிர், கனி முதலிய நிலைத்திணை விளைச்சல்; crop of grain fruit, etc., proper to a season. 2. வினை கொண்டு இன்பதுன்பக் காலப் பயனை நுகர்கை (வின்.); enjoyment or suffering at the destined time, resulting from the actions of previous birth.

*[காலம் + போகம். பாகம் → போகம் (கொ.வ.).]*

*பாகு → பாகம் (பக்குவப்பட்ட நிலை). வடமொழியாளர் 'புஜ்' என்பதனடியாக புஜ் → போஜ் → போக என மூலம் காட்டுவது பொருந்தாது. பயிர் விளைச்சலும் வினைப்பயனும் பக்குவப்படுதலன்றி உண்பதோ நுகர்வதோ ஆகா. இயற்கையில் விளைந்த அத்தனையும் உண்ணுதற் குரியனவல்ல.*

**காலம்** *kālam,* பெ.(n.) 1. காலைப்பொழுது; time, duration. *"காலம் உலகம் உயிரே உடம்பே" (தொல்.கிளவி.58).* 2. விடியற்காலம்; dawn. அவர் காலத்தாலே எழுந்து போய்விட்டார் (ஆம்பூர் வழக்கு). *"காலமே தேவனைத் தேடு" (வே.சா.).* 3. தக்க நேரம்; proper time. *"காலங் கருதி இருப்பர் கலங்காது ஞாலங் கருது பவர்" (குறள், 485).* 4. நற்காலம்; fortune. தமிழுக்கு இன்னும் நற்காலம் வரவில்லை (உ.வ.). 5. குறித்த காலம்; fixed time. அக்காலத்துப் போலும் பாண்டிய நாட்டைக் கடல் கொண்டது. (இறை.1.உரை). 6. தீக்காலம், கேடுகாலம்; evil times. அவனுக்கும் ஒரு காலம் வரும் (உ.வ.). 7. இளமைக் காலம்; early stage of life. சென்றது காலம், சிதைந்த திளமை நலம்" (திருக்கருவை. வெண்.). 8. வாழ்நாள்; life time. மறைமலையடிகள் காலமுழுவதும் தமிழுக்கே பாடுபட்டார், அவர் காலமாகி விட்டார். 9. இறப்புக் காலம்; time of death. அவனுக்குக் காலம் நெருங்கிவிட்டது. 10. இளவேனில், முதுவேனில், கார், கூதல், முன்பனி, பின்பனி என்னும் அறுவகை இயற்கைக் காலம்; season of the year. 11. உழவுத் தொழிலுக்குச் சிறந்த மழைக் காலம் அல்லது கோடையல்லாக் காலம்; wet season. காலச் சோளம், காலக் கேழ்ப்பை, காலப் பயிர் இவை முறையே கோடைச் சோளம், கோடைக் கேழ்ப்பை, கோடைப் பயிர் என்பவற்றிற்கு எதிர். 12. இறப்பு, நிகழ்வு, எதிர்வு

என்று இலக்கணங்கூறும் மூவகைத் தொடர்ச்சிக் காலம்;tense, three in number viz., past, present and future. 13. வெயில் மழை பனி என்னும் மூவகை இயற்கை வேறுபாட்டுக் காலம் (தொல்.புறத்.20. சோ.சு.பா.உரை). 14. சவுக்கம் (விளம்பம்), முடுக்கம் (துரிதம்), நடுப்பம் (மத்திமம்) என்னும் மூவகைப் பாட்டியக்கக் காலம்;tempo, a manure of time, three in number. 15. ஒரு முரலிற்கு (சுவரத்திற்கு) இருமாத்திரையும், ஒரு மாத்திரையும், அரைமாத்திரையும், கால் மாத்திரையும் எடுக்கும் முதற்காலம், இரண்டாங்காலம், மூன்றாங்காலம், நாலாங்காலம் என்னும் நால்வகை முரற் பயிற்சிக் காலம்; the element of time measure which speicifies duration being of term varieties. 16.கழகக் காலம், பிற்காலம் என்னும் கற்காலம், இரும்புக் காலம் என்னும் பல்வேறு வகையிற் பகுக்கப்படும் வரலாற்றூழிக் காலம்;historic period. 17. காலமெய்ப் பொருள்;the element time.

**மறுவ.** கால், பொழுது, வேளை, கொன், செவ்வி, அற்றம், ஏல்வை, சமையம், நேரம், ஞான்று, பதம், போழ்து, காலை, பாணி, போது, வேலை.

**த.** கால்→**வ.** கால

*[கால் (நீட்சி) →காலம்.]*

இடம் உண்மையின் இருத்தலின் தொடர்ச்சியே காலம். அது ஒரே தன்மையது. அழியும் பொருள்களை நோக்கியே இறப்பு நிகழ்வெதிர்வு என்றும், கதிரவன் திங்கள் தோற்ற மறைவும் தட்ப வெப்ப நிலை வேறுபாடும் பற்றியே சிறுபொழுதும் பெரும்பொழுதுமாகவும் அது பகுக்கப்படும். எதிர்வெல்லாம் நிகழ்வாகிப் பின்பு இறப்பாகிவிடும் (தமிழர் மதம் பக்.108).

சமற்கிருத ஆங்கில அகரமுதலி தொகுத்த மானியர் உவில்லியம்சு தென்சொல்லை வடசொல்லாகக் காட்டும் கலையிலும், அதற்கேற்றவாறு பொருந்தப் பொய்த்தலிலும் வடமொழியாளரை விஞ்சும் வகையில், வடமொழித் தாது பாடத்தில் (Dhatupatha) உள்ளவாறு kal to sound, to count என்று எடுத்துக் கூறி of L.Calculo என்று இனமொழிச் சொல்லோடு ஒப்பு நோக்கிச் சொல்கின்றார். ஒலித்தலுக்கும் எண்ணுதல் அல்லது கணக்கிடு தலுக்கும் யாதொரு தொடர்புமில்லை.

Calculus என்பது சிறுகல் என்று பொருள்படும் இலத்தீன் சொல். பண்டைக் காலத்திற் சிறு கூழாங்கற்களைக் கொண்டு எண்ணிப் பழகியதனால், calculate என்னும் வினைச்சொல் தோன்றிற்று. L. Calx கல். Gk. khalis. L. Culus என்பது சிறுமைப் பொருளீறு (dim.suf). இஃது எல்லா ஆங்கில அகர முதலிகளிலும் கூறப்பட்டுள்ளது. ஆகவே, காலம் என்னும் சொல்லிற்கு calculate என்னுஞ் சொல் மூலமாகாது.

கூழாங்கற்களைக் கொண்டு எண்ணிப் பழகிய காலத்தில் கணிக்கப்பட்டவை, காய்கறிகளும் காசும் போன்ற காட்சிப் பொருள்களேயன்றி, காலமும் நாளும் போன்ற கருத்துப் பொருள்களல்ல.

தமிழிற்போல், கால், காலை என்ற சொற்கள் வடமொழியில் இல்லை. இவ்விரு சொற் போன்றே காலம் என்னும் சொல்லும் தமிழில் அடிப்படைச் சொல்லாகத் தொன்றுதொட்டு இருவகை வழக்கிலும் வழங்கி வருகின்றது (கால் →காலம். ஒ.நோ. வால் →வாலம்).

**உலக வழக்கு:** காலக் கொடுமை, காலங்கண்டவன், காலங்கடத்தல், காலங்கடத்துதல், காலங்கழிதல், காலங்கழித்தல், காலங்காட்டி, காலங் காலத்தாலே, காலங்கிட்டுதல், காலங்கூடுதல், காலங்கூடி வருதல், காலங்கெடுதல், காலஞ்செய்தல், காலஞ்செல்லுதல், காலஞ்சொல்லி, காலத்தாலே, காலத்தின் கோலம், காலந்தள்ளுதல், காலந்தாழ்தல், காலந்தாழ்த்தல், காலப் பயிர், காலம் பண்ணுதல், காலம் பார்த்தல், காலம் பெற, காலம் போதல், காலம் போக்குதல், காலமல்லாக்காலம், காலமழை, காலமறிதல், காலமாதல், காலம் மாறுதல், காலமெல்லாம், கால வரம்பு, காலவரையறை, கால வழக்கம்.

அந்தக்காலம், இந்தக்காலம், எந்தக்காலம், ஆங்காலம், போங்காலம், வருங்காலம், ஆயிரங்காலத்துப் பயிர், ஊறுகாலம், நல்லகாலம், கெட்டகாலம், கேடுகாலம், நீண்டகாலம், பஞ்சகாலம், பனிக்காலம், பேறுகாலம், போனகாலம், வந்தகாலம், மழைகாலம், வெயிற்காலம்.

பழமொழிகள்:

1. காலஞ் செய்கிறது ஞாலஞ் செய்யாது. 2. காலத்திற் கேற்ற கோலம். 3. காலத்திற் கேற்றபடி பெருச்சாளி காவடியெடுத் தாடினதாம். 4.காலமல்லாக் காலத்திற் காய்த்ததாம் பேய்ச்சுரைக்காய். 5. காலமறிந்து ஞாலம் ஒழுகு. 6. காலமறிந்து பிழையாதவன் வாலறுந்த குரங்காவான். 7. காலம்போம் சொல் நிற்கும், கப்பல் போம் துறை நிற்கும். 8. காலம்போன காலத்தில் மூலம் வந்து குறுக்கிட்டது.

மரபுக்கூற்று : காலமெல்லாம் பாடுபட்டும் கையில் கால் துட்டைக் காணோம் - செய்யுள் வழக்கு (இலக்கணம்). இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம், முக்காலம், காலப்பெயர், கால மயக்கம், கால மலைவு, காலவழு, கால வழுவமைதி, காலவாகு பெயர், கால விடைநிலை.

*தொல்காப்பிய நூற்பாக்கள் :*

வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்

(தொல்.வினை.1).

காலந் தாமே மூன்றென மொழிப

(தொல்.வினை 2).

இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா
அம்முக் காலமுங் குறிபொடுங் கொள்ளும்
மெய்ந்நிலை யுடைய தோன்ற லாறே

(தொல்.வினை 3).

குறிப்பினும் வினையினும் நெறிபடத் தோன்றிக்
காலமொடு வருஉம் வினைச்சொ லெல்லாம்
உயர்திணைக் குரிமையும் அஃறிணைக் குரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓரன்ன வுரிமையும்
அம்மூ வுருபின தோன்ற லாறே

(தொல்.வினை 4).

மாரைக் கிளவியும் பல்லோர் படர்க்கை
காலக் கிளவியொடு முடியும் என்ப

(தொல்.வினை 10).

அதுச்சொல் வேற்றுமை யுடைமை யானும்
..... .... .... ....
அப்பால் காலங் குறிப்பொடு தோன்றும்

(தொல்.வினை 16).

அன்மையின் இன்மையின் உண்மையின்
வன்மையின்
..... .... .... ....

(தொல்.வினை 17)

என்ன கிளைவியுங் குறிப்பே காலம்
"...காலக்கிளவியுயர்திணை மருங்கில்..."

(தொல்.வினை 18).

"... காலக் கிளவி யஃறிணை மருங்கில்..."

(தொல்.வினை 24).

"அன்ன மரபின் காலங் கண்ணிய..."

(தொல். வினை 32).

நிலனும் பொருளுங் காலமுங் கருவியும்
..... .... .... ....
செய்யும் செய்த என்னுஞ் சொல்லே

(தொல்.வினை 32).

செய்தென் எச்சத் திறந்த காலம்
எய்திடன் உடைத்தே வாராக் காலம்

(தொல்.வினை 37).

முந்நிலைக் காலமுந் தோன்றும் இயற்கை
எம்முறைச் சொல்லும் நிகழுங் காலத்து
மெய்ந்நிலைப் பொதுச்சொல் கிளத்தல் வேண்டும்

(தொல்.வினை 42).

வாராக் காலத்தும் நிகழுங் காலத்தும்
ஓராங்க வருஉம் வினைச்சொற் கிளவி
இறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள என்மனார் புலவர்.
"... செய்வதில்வழி நிகழுங் காலத்து ..."

(தொல்.வினை 45)

"வாராக் காலத்து வினைச்சொற் கிளவி..."

(தொல்.வினை 48).

"இறப்பே எதிர்வே ஆயிரு காலமும் ..."

(தொல்.வினை 50).

எனைக் காலமும் மயங்குதல் வரையார்

(தொல்.வினை 51).

தொல்காப்பியம் கி.மு. 6-ஆம் அல்லது 7-ஆம் நூற்றாண்டில் தோன்றியதாயினும் "மொழிப", "என்ப", என்மனார் புலவர்", "வரையார்" என்னும் ஆசிரியர் கூற்றுக்களாலும்,

"செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்

புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்" என்னும் பனம்பாரனார் கூற்றாலும், அதில் (தொல்காப்பியத்தில்) கூறப்பட்டுள்ள பண்டை இலக்கணமெல்லாம் தலைக்கழகக் காலத்தின வென்றும், இந்திய ஆரியரின் முதல் நூலாகிய இருக்கு வேதத்திற்கு முற்பட்டதும், வேத ஆரியரின் முன்னோர் இந்தியாவிற்கு வருவதற்கும் முந்தியதுமான, முதுபழந் தொன்மையானவென்றும், தெற்றெனத் தெரிந்து கொள்க.

இதுகாறுங் கூறிய இருவகை வழக்குச் சொற்களே போதுமாதலின் இலக்கணமல்லாத செய்யுட் சொற்கள் இங்குக் காட்டப்படவில்லை.

இருபத்தாறு செய்யுளுறுப்புக்களைக் கூறும் செய்யுளியல் முதல் நூற்பாவில், "கேட்போர் களனே காலவகை எனாஅ" என்று தொல்காப்பியர் கூறியிருப்பதை ஊன்றி நோக்குக (செல்வி. மார்ச், 78 பக்.881-882).

**காலம்பண்ணிப்போ-தல்** *kālam-paṇṇi-p-pō-*, 8 செ.கு.வி.(v.i.) ***காலம்பண்ணு-*** (வின்.) பார்க்க; see *kālam-paṇṇu-*

*[காலம் + பண்ணி +போ.]*

**காலம்பண்ணு-தல்** *kālam-paṇṇu-*, 11 செ.கு.வி. (v.i.) வாழ்நாள் முடிதல் (வின்.); to live out one's time,to die.

மறுவ. காலஞ்செல், காலஞ்செய், காலமாகு, காலம் அடை.

*[காலம் + பண்ணு. பண்ணுதல் - செய்தல், முடித்தல்.]*

**காலம்பார்-த்தல்** *kālam-pār-*, 4. செ.கு.வி. (v.i.) 1.நேரம் பார்த்தல்; to look out for a suitable time, watch for an opportunity *(கம்பரா. ஊர்தே.222).* 2. ஒருவனது இறுதிக்காலத்தைக் கணக்கிடுதல்; to calculate the time of death. *"காலனுங் காலம் பார்க்கும்" (புறநா.41).*

*[காலம் +பார்.]*

**காலம்பிறக்கக் காட்டியும்** *kālam-pirrakkak kāṭṭiyam*, வி.எ.(adv.) விடிவதற்கு முன் (கொ.வ.); before dawn (சா.அக.).

*[காலம் + பிறக்கம் + காட்டியும். பிறக்கும் → பிறக்கம்.]*

**காலம்புரளல்** *kālam-puraḷḷal* பெ.(n.) காலம் வேற்றுமைப்படல்; change of times to worse.

**காலம்பெற** *kālam-peṟa*, கு.வி.எ. (adv.) 1. தக்க காலத்தில்; at the right time. *"காலம் பெற வென்னைக் காட்டுமின்கள்" (திவ்.திருவாய்.7.3:6).* 2. விடியற்காலையில்; early in the morning *"காலம் பெறநீறணி மாமுனி"(கோயிற்பு வியா.15).*

*[காலம் + பெற.]*

**காலம்போக்கு-தல்** *kālam-pōkku-*, 5. செ.கு.வி. (v.i.)காலங்கழித்தல்; to spend time.

ம. காலம்போக்குக

*[காலம் + போக்கு.]*

**காலம்மாறு-தல்** *kālam-māru-,-*, 5. செ.கு.வி. (v.i.) பருவம் மாறுதல்; change of season (சா.அக.).

*[காலம் + மாறு.]*

**காலம்விடு-தல்** *kālamviḍudal*, 18 செ.குன்றாவி (v.t.) நாள்விடுதல்; to leave out.

*[காலம் + விடு.]*

**காலமடை-தல்** *kālam-aḍai-*, 4 செ.கு.வி (v.i.) இறத்தல்; to die as reaching the end of one's time.

*[காலம் + அடை.]*

**காலமயக்கம்** *kāla-mayakkam*, பெ.(n.) காலவழுவமைதி (புறநா.138,உரை); deviation in the use of tense sanctioned by usage.

*[காலம் + மயக்கம்.]*

**காலமயக்கு** *kāla-mayakku*, பெ. (n.) 1. ***காலமயக்கம்*** பார்க்க; see *kāla-mayakkam*. 2. பிரிந்த தலைவன் வருதற்குரிய கார்காலம் இஃதன்றெனத் தலைவிக்குத் தோழி காலத்தை மயக்கிக் கூறும் அகத்துறை (திவ்.இயற்.திரு விருத்.7, பெரியவாச்.); theme of a confidante convincing the heroine that the winter season when her lord should return has not arrived, though it is actually otherwise.

*[காலம் + மயக்கு.]*

**காலமல்லாக்காலம்** *kālam-allā-k-kālam,* பெ.(n.) அகாலம்; unseasonable, improper time. காலமல்லாக்காலத்தில் காய்ச்சுதாம் பேய்ச்சுரைக் காய் (பழ.).

**ம.** காலமல்லாக்காலம்

*[காலம் + அல்லா + காலம். அல்லாத → அல்லா (ஈ.கெ.எ.ம.பெ.எ.).]*

**காலமல்லிகை** *kāla-malligai,* பெ.(n.) துளசி; holy basil.

**மறுவ.** கறுப்பு மல்லிகை

*[காலம் +, மல்லிகை.]*

**காலமலைவு** *kāla-malaivu,* பெ.(n.) ஒரு காலத்துக் குரியதை மற்றொரு காலத்துக் குரியதாகக் கூறும் வழு (தண்டி.117,உரை.); mistake in regard to time as in the statement that the lotus blooms at night.

*[காலம் + மலைவு. காலமலைவு, ஈறு போதல் என்பதற்கேற்ப ஈற்று மகரமெய் கெட்டது.]*

**காலமழை** *kāla-malai,* பெ.(n.) பருவமழை; seasonal rain.

*[காலம் + மழை - காலமழை. ஈறு போதல் என்பதற்கேற்ப ஈற்று மகரமெய் கெட்டது.]*

**காலமறி[1]-தல்** *kālam-ari-,* 2 செ.கு.வி.(v.i.) 1. வினைசெயற்கேற்ற காலத்தையறிதல்; to ascertain the time suitable for the accomplishment of one's object. *"கருவியாற் கால மறிந்து செயின்" (குறள்,483).* 2. முக்காலத்தும் நிகழ்வனவற்றைத் தமது சிறப்பு ஆற்றலால் அறிதல்; to know of events past, present or future, intuitively or by spiritual vision, as yogis.

*[காலம் + அறி.]*

**காலமறி[2]-தல்** *kālam-ari-,* 2 செ.கு.வி.(v.i.) பருவமடைதல்; attainment of puberty (சா.அக.).

*[காலம் + அறி.]* •

**காலமா-தல்** *kālam-ā-,* 6.செ.கு.வி.(v.i.) *காலமாகு-தல்* பார்க்க; see *kālam-āgu-.*

**Fin.** kalma (death), kalmisto (cemetery); **Karel.** kalma; **Es.** kalm; **Jap.** karu.

*[காலம் + ஆ(கு) - காலமாகு → காலமா.]*

**காலமாகு - தல்** *kālam-āgu-,* 6 செ.கு.வி.(v.i.) வாழ்நாள் முடிந்ததால் இறந்துபோதல்; to pass away, as having one's life time spent out.

**மறுவ.** காலம்அடை, காலம் செய், காலம் பண்ணு, காலம்செல், காலம் ஆ(தல்),

*[காலம் + ஆகு. காலம் = வாழ்நாட்காலம். ஆகுதல் = தீர்தல், முடிதல்.]*

**காலமாறு** *kāla-māru,* கு.வி.எ.(adv.) காலை தோறும் (வின்.); every morning.

*[காலை + மாறு - காலைமாறு → காலமாறு. மாறு மாறிவரும் அல்லது மறித்து வரும் நிலை.]*

**காலமாறுபாடு** *kāla-māru-pādu,* பெ.(n.) 1. கால வேறுபாடு; change of circumstances. 2. தீய காலம்; times of misfortune.

*[காலம் + மாறுபாடு.]*

**காலமானம்** *kāla-māṉam,* பெ.(n.) கால அளவு; measure of time.

**ம.** காலமானம்; **து.** காலமான

*[காலம் + மானம். மானம் = அளவு.]*

**காலமுகம்** *kāla-mugam,* பெ.(n.) 1. கருப்பு முகம்; black - face. 2. கருங்குரங்கு; black faced monkey (சா.அக.).

*[காள் → காளம் → காலம் + முகம். காளம் = கருப்பு.]*

**காலமுணர்ந்தோன்** *kālamuṇarndōṉ,* பெ.(n.) முக்காலங்களையும் உணரும் திறமுள்ளவன்; one to whom the past, present and future are equally manifest

**ம.** காலவேதி

*[காலம் + உணர்ந்தோன்.]*

**காலமுன்** *kāla-muṉ,* பெ.(n.) காலத்தால் முற்பட்டது; priority in point of time. கால முன்னாகச் சொல்லார், இடமுன்னாகச் சொல்லுவர் (தொல்.சொல்.279, இளம்பூ.).

**காலமூர்த்தி** *kāla-mūrtti,* பெ.(n.) இதளியம்; quick-silver (சா.அக.).

*[காலம் + மூர்த்தி.]*

**காலமூலம்** *kāla-mūlam,* பெ.(n.) 1. கருப்புச் சித்திரமூலம் என்னும் மூலிகை; a black variety of lead wort (சா.அக.).

*[காலம் + மூலம்.]*

**காலல்** *kālal,* பெ.(n.) 1. கொப்புளித்தல்; blistering. 2. கொப்புளமெழும்பல்; rising in blisters (சா.அக.).

*[கால் → காலல்.]*

**காலலம்பு-தல்** *kāl-alambu-,* 5 செ.கு.வி (v.i.); 1. கால்கழுவுதல்; to wash one's feet. 2. கால் கழுவுதல் (மலம் கழுவுதல்)to wash after stools.

*[கால் + அலம்பு.]*

**காலவகை** *kāla-vagai,* பெ.(n.) 1. காலக்கூறு; times, seasons. 2.காலவேறுபாடு; circumstances depending on time. *``வழுவல கால வகை யினானே''(நன்.462).*

*[காலம்' + வகை.]*

**வகைகள் :**

நிமிடம், காட்டை, கலை, முகூர்த்தம், சாமம், பகல், இரவு, நாள், வாரம், பட்சம், மாதம், இருது, அயனம், வருடம், சந்தி, அம்சம், சந்திஊழி, சதுர்ஊழி, மகாஊழி, பிரளயம், கற்பம், பரார்த்தம், பரம் என இருபத்து மூன்று வகைகள் என்பர்.

**காலவட்டம்** *kāla-vaṭṭam,* பெ.(n.) 1. கோள்கள் சுழன்று வருதற்குரிய மண்டலம்; sphere in which planets move. 2.கோள்நிலையால் ஒருவனுக்கு உண்டாகும் பலன்; the influence of planets on one's life at different periods. 3. விடாது சுழன்றுவரும் காலம்; cycle of time, whirling of time.

*[காலம் + வட்டம்.]*

**காலவம்** *kālavam,* பெ.(n.) நெருப்பு (அக.நி.); fire.

*[கனல் → கால் → காலுதல் = எரிதல். கால் → காலுவம் → காலவம்.]*

**காலவயிரவர்** *kāla-vayiravar,* பெ.(n.) 1. சிவ மூர்த்தங்களுள் ஒன்று (காஞ்சிப். சிவபுண். 34); a manifestation of Śiva.

*[காலம் + வயிரவர்.]*

**காலவரையறை** *kāla-varai-y-aṟai,* பெ.(n.) 1. காலம் அறுதியிடல்; fixing a time. 2.காலஅளவு; time-limit; specified period. 3.வரலாற்றுக் காலத்தை அறுதியிடல்; settlement of a historical date.

மறுவ. கால வரை.

*[காலம் + வரை + அறை.]*

**காலவழக்கம்** *kāla-vaḻakkam,* பெ.(n.) நடப்பு வழக்கமுறை; time-honoured usage.

*[காலம் + வழக்கம்.]*

**காலவழு** *kāla-vaḻu,* பெ. (n.) ஒரு காலச்சொல் தன்னோடு இயையாக் காலமொடு புணருங் குற்றம் (தொல். சொல். 11, சேனா); incorrect use of tense, as the past for the future.

*[காலம் + வழு – காலவழு. ஈறுபோதல் என்பதற்கேற்ப நிலைமொழி ஈற்று மகரமெய் கெட்டது.]*

*காலத்தை முறைபிறழக்கூறுதல் (எ.டு.) நேற்றுண்பேன்.*

**காலவழுவமைதி** *kāla-vaḻu-v-amaiti,* பெ.(n.) காலவழுவை இலக்கணமுடையதாக அமைப்பது (நன்.383); deviation in the use of tenses, sanctioned by usage.

*[காலம் + வழு + அமைதி – காலவழுவமைதி. மகரமெய்

கெட்டது. வழுவமைதி எனபதில் வகரமெய் உடம்படு மெய்யாகத் தோன்றியது.]

(எ-டு.) மலை நிற்கின்றது, தெய்வமிருக்கின்றது- மலைக்கு நிற்றலும், தெய்வத்திற்கு இருத்தலும். முக்காலத்தினும் உள்ளனவாதல் காண்க. இவ்வாறு முக்காலத்திலும் ஒத்த இயல்புடைய பொருள்களை நிகழ்காலத்தால் கூறுவது காலவழுவமைதி.

**காலவளவு** *kālavaḷavu,* பெ.(n.) 1. காலத்தைக் குறிக்கும் அளவு; measure of time. 2.காலக்கட்டம்; a period or length of time.

ம. காலயளவு

*[காலம் + அளவு]*

**காலவாகுபெயர்** *kāla-v-āgu-peyar,* பெ.(n.) ஒரு காலத்தின் பெயர் அக்காலத்தோடு இயைபுடைய பொருளுக்கு ஆகிவருவது (நன்.390); noun literally signifying time or season used figuratively to denote anything connected therewith, as the month Karttigai for a plant which blossoms in the month. கார்த்திகை என்னும் மாதப் பெயர் அம்மாதத்தில் பூக்கும் கார்த்திகைப் பூவிற்கு ஆகி வந்தது. (கார்த்திகைப்பூ = காந்தள்.)

*[காலம் + ஆகுபெயர் - காலவாகுபெயர். நிலைமொழியீற்று மகர மெய் கெட்டு வகர உடம்படுமெய் தோன்றியது.]*

*எ-டு. காரறுத்தது, கார்த்திகை மாதம்.*

**காலவிடைநிலை** *kāla-v-iḍai-nilai,* பெ.(n.) காலத்தைக்காட்டும் இடைநிலை; tense - sign.

*[காலம் + இடை + நிலை - காலவிடைநிலை. நிலைமொழியீற்று மகரமெய் கெட்டு வகர உடம்படுமெய் தோன்றியது.]*

**காலவித்தியாசம்** *kāla-vitiyā-šam,* பெ.(n.) ***காலவேறுபாடு*** பார்க்க; see *kāla-vēṟupāḍu.* என் காலவித்தியாசம் துன்பப்படுகிறேன் (உ.வ.).

Skt. vityasa > த. வித்தியாசம்.

*[காலம் + வித்தியாசம்.]*

**காலவிதி** *kāla-vidi,* பெ.(n.) தீவினை(உ.வ.); misfortune.

*[காலம் + விதி - காலவிதி. நிலைமொழியீற்று மகரமெய் கெட்டது.]*

**காலவிரயம்** *kāla-virayam,* பெ. (n.) ***காலவிழப்பு*** பார்க்க; *kāla-viḻappu.*

*[காலம் + விரயம்.]*

**காலவிருத்தி** *kāla-virutti,* பெ.(n.) கழற்கொடி என்னும் மூலிகை; bonduc nut creeper.

மறுவ. கழற்சிக்கொடி.

*[காலம் + விருத்தி.]*

**காலவிரைவு** *kāla-viraivu,* பெ.(n.) 1. காலத்தின் வேகம்; rapid flux of time. 2. வேகம்; quickness.

மறுவ. காலதுரிதம்.

*[காலம் + விரைவு.]*

**காலவிழப்பு** *kāla-viḻappu,* பெ.(n.) ஒரு பயனுமில்லாமல் வீணேகாலம் போகை; waste of time.

*[காலம் + இழப்பு.]*

**காலவெள்ளெழுத்து** *kāla-veḷḷeḻuttu,* பெ.(n.) குறிப்பிட்ட காலத்தில் உண்டாகும் பார்வைக் குறைபாடு; defective sight which generally occurs above the age of 37, presbyopia (சா.அக.).

*[காலம் + வெள்ளெழுத்து.]*

**காலவேகம்** *kāla-vēgam,* பெ.(n.) காலத்தின் நிலை; state of time.

மறுவ. காயவேட்டம்

*[காலம் + வேகம்.]*

**காலவேறுபாடு** *kāla-vēṟu-pāḍu,* பெ.(n.) காலப்போக்கு பார்க்க; see *kāla-p-pākku.*

*[காலம் + வேறுபாடு.]*

**காலவைரவன்** *kāla-vairavaṉ,* பெ.(n.) பைரவ மூர்த்தி; a form of Bhairava.

*[காலம் + வைரவன்.]*

**காலளப்பான்** *kāl-aḷappāṉ,* பெ.(n.) தவசமளப் போன்; one who measures grain with a mara-k-kal. *'காலளப்பானுக்குத் திருக்கொட்டாரத்திலே காலளவும் பெரிய கோவிலுக்கு அமுதுபடி யெடுக்கிறது' (கோயிலோ.90).*

*[கால்1 + அளப்பான்.]*

கால் -மரக்கால் என்னும் முகத்தல் அளவை

**காலளவு** *kāl-aḷavu,* பெ.(n.) நாலில் ஒரு பங்கு; one fourth of anything (சா.அக.).

ம. காலளவு

*[கால் + அளவு.]*

**காலளவுகொள் கூலி** *kā-laḷ-avu-koḷkūli,* பெ. (n.) ஊர்ப்பொது மரக்காலாக ஊர் அவையாரிடத்து இருக்கும் மரக்காலை, மக்களோ, வணிகரோ நெல்லளப்பித்துக் கொள்வதற்கு அவையார் பெறும் கூலி–வரிக் காசு; a tax collected for using the measurement common to the village. 'குணமே நகைபுரத்துக் காலளவு கொள்கூலி உள்ளிட்ட அங்காடிப் பாட்டத்துக்கு வைக்கக் கடவ காசு நாற்பது'. (தெ.கல்.தொ.iv.கல்.223).

*[கால் + அளவு + கொள் + கூலி.]*

**காலளவுப் பாட்டம்** *kāl-aḷavu-p-pāṭṭam,* பெ.(n.) காலளவின் பேரில் வாங்கிய ஒரு பழைய வரி. (I.M.P.CG.1023); an ancient tax on kāl-aḷavu.

ம. காலளபாட்டம்

*[கால் + அளவு + பாட்டம்.]*

*கால் - மரக்கால் என்னும் முகத்தல் அளவை. பாட்டம் நன்செய் நிலவரி.*

**காலற்றநாள்** *kāl-aṟṟa-nāḷ,* பெ.(n.) ஆரல் (கார்த்திகை), மானேறு (உத்தரம்) கடைக்குளம் (உத்தராடம்) என்னும் மூன்று விண்மீன்கள் (சோதிடகிரக.40); the three naksatras Krttigai (v.i.) Uttaram, Uttrāḍamm.

*[கால் + அற்ற + நாள்.]*

வானத்து 27 நாண் மீன்களை மாதம் காண்பதற்காக பன்னிரண்டு ஓரை (ராசி)க் குழுக்களாக மேழம் விடை (மேஷம் ரிஷபம் முதலியனவாக) எனப் பெயரிட்டு வகுத்த போது ஒரு குழுவில் 2¼ நாண்மீன்களை அடக்க நேர்ந்தது. மேற்கண்ட மூன்றும் காற்பகுதி நாண்மீன்களாக வகுபடாமல் நின்றதால் காலற்ற நாள் (நாள்- நாண்மீன்) எனப் பெயர் பெற்றன.

**காலறு–தல்** *kāl-aṟu-,* 20 செ.கு.வி. (v.i.) பிறங்கடை (சந்ததி) அற்றுப்போதல் (திருக்களிற்றுப். 97உரை); the become extinct as a family, lineage.

*[கால் + அறு.]*

**காலறுவான்** *kāl-aṟuvāṉ,* பெ. (n.) பிறங்கடை (சந்ததி) யற்றுப்போவான் என்று பொருள்படும் ஒரு வசைச்சொல்; a term of abuse meaning one whose line will become extinct. "எள்ளளவுங் கைக்கூலி தான் வாங்கிடுங் காலறுவான்" (தனிப்பா.i.108:47).

*[கால் + அறுவான்.]*

*கால் = கால்வழி, கொடிவழி, அடுத்துவரும் தலைமுறை.*

**காலன்**[1] *kālaṉ,* பெ.(n.) 1. எருமை, buffalo. 2. வழலையுப்பு; universal salt. (சா.அக.).

*[கால் = கருமை. கால் + அன் – காலன் = கருமையானது.]*

**காலன்**[2] *kālaṉ,* பெ.(n.) 1. காலத்தை முடிவு செய்யும், அல்லது கால முடிவில் வருங் கூற்றுவன் (யமன்) Yama. *"கால னென்னும் கண்ணிலி யுய்ப்ப"* (புறநா.240:5) 2. காலதூதர் (சீவக.1487,உரை) Yama's messenager. 3. காலன் கொடை ; gift made with a view to propitiate Yama. *"காலன்கொண்டு" (ஈடு.10.3:5)* 4. காரி, சனி; saturn. 5. கரந்துறை கோள்களுள் ஒன்று (வின்.); one of the unseen heavenly bodies. 6. ஒருவகை செய்நஞ்சு (மூ.அ); a mineral poison.

*காலன் > வ. கால*

ம. காலன்; து. கால.

*[காலம் → காலன் (காலமறிந்து உயிர்களைக் கவர்பவன்).]*

**காலன்கொம்பு** *kālankombu* பெ.(n.) மாட்டுக் கொம்பு (வின்.); ox horn.

*[காளை → காலன் + கொம்பு (கொ.வ.).]*

**காலன்கொள்-(ளு)-தல்** *kālaŋ-kollu-,* 16 செ.கு.வி. (v.i.) கொடை வாங்குதல்; accept a gift made for the purpose of propitiating Yama to avert death. *"காலன்கொண்டு மோதிரமிடுவாரை போலே" (ஈடு,10.3:5).*

*[காலன் + கொள்(ளு).]*

**காலனுண்ட கற்பம்** *kālaŋ-unda-karpam* பெ.(n.) நாகச் செய்நஞ்சு; a poisonous compound of zinc (சா.அக.).

*[காலன் + உண்ட + கற்பம்.]*

**காலனூர்** *kālaŋ-ūr,* பெ.(n.) நிரயம் (நரகம்) (திவ்.திருச்சங்.அக); hell, the abode of Yama.

ம. காலனூர்

*[காலன் + ஊர்.]*

**காலனையுதைத்தோன்**[1] *kālaŋai-y-udaittōŋ,* பெ.(n.) ***காலக்கடவுள்*** பார்க்க; see *kāla-k-kadavul.*

*[காலன் + ஐ + உதைத்தோன்.]*

**காலனையுதைத்தோன்**[2] *kālaŋai-y-udaittōŋ,* பெ.(n.) சிவனார் வேம்பு என்னும் மூலிகை; Shiva's neem (சா.அக.).

*[காலனை + உதைத்தோன்.]*

**காலனை வென்றோன்** *kālaŋai-veŋrōŋ* பெ.(n.) ***காலனை உதைத்தோன்*** பார்க்க; see *kālaŋai udaittōŋ.* (சா.அக.).

*[காலனை + வென்றோன்.]*

**காலா** *kālā,* பெ.(n.) ஒருவகைக் கடல்மீன்; a sea fish called Indian sturgeon (சா.அக.).

ம. காலா

**Fin.,Es.** kala; **Mong.** kalimu; **Jap.** karei; **Q.** caiwa.

*[காளன் → காலன் → காலா.]*

காலா மீன்வகை நிறம் அல்லது நீட்சி குறித்து இப்பெயர் பெற்றிருக்கலாம். கால் - கருமை நீட்சி.

வகைகள் 1. பொலன் காலா. 2. தாழங் காலா. (தாழைக் காலா). 3. வரிக்காலா. 4. போலிக்காலா.



காலா

**காலாகாலம்** *kālākālam,* பெ.(n.) உரிய காலம், ஏற்ற காலம்; seasonable and un-seasonable occasions, proper time.

ம. காலாகாலம்

*[காலம் + காலம்]*

**காலாகுரு** *kālā-guru,* பெ.(n.) காரகில்; black agil wood (சா.அக.).

*[காலா + குரு.]*

**காலாகோலம்** *kālā-kōlam,* பெ.(n.) அலங்கோலம்; disorder, mass, medly.

ம. காலாகோலம்

*[காலம் + கோலம்.]*

*கோலம் - புனைவு, விளைவு, வேறுபாடு.*

**காலாங்கம்** *kālāṅgam,* பெ.(n.) கருத்தவுடம்பு; dark blue body (சா.அக.).

*[காள் → கால் + அங்கம்.]*

**காலாங்கரை** *kālāṅ-karai,* பெ.(n.) ஏரிக்கு நீர் கொண்டுவரும் கால்வாய் (இ.வ.); inlet to lakes, tanks etc.

*[கால் + அம் + கரை → காலாங்கரை.]*

கால் = நீர்க்கால், வாய்க்கால், கரையுயர்த்திய கால்வாய்.

**காலாங்கன்** *kālāṅgaṉ,* பெ.(n.) ஒரு செய்நஞ்சு (யாழ்.அக.); a prepared arsenic.

*[கால் = கருப்பு, நஞ்சு.கால் → காலங்கன் → காலாங்கன்.]*

**காலாங்கித் தங்கம்** *kālāṅgi-t-taṅgam,* பெ.(n.) மாற்றுயர்ந்த தங்கம்; a kind of superior gold with high refinement (சா.அக.).

*[கால் + அங்கி + தங்கம்.]*

**காலாங்கி நாதர்** *kālāṅgi-nādar,* பெ.(n.) சீனநாட்டைச் சேர்ந்தவரும் போகர் என்னும் சித்தருடைய குருவுமான ஒரு சித்தர்; the preceptor of Bogar also a Chinese (சா.அக.).

*[காலாங்கி + நாதர்.]*

கால் = காற்று. காலங்கி = காற்றைத் தன் கூறாக உடையவர்.

**காலாசு** *kālāsu,* பெ.(n.) காலுறை, காற்கலசம்; greave. *"காலாசோ டறவெறிந்த கனைகழற்கால்" (சீவக.2236).*

*[கால்[1] + ஆசு = பற்றுக்கோடு, உறை.]*

**காலாட்டம்[1]** *kālāṭṭiam,* பெ.(n.) 1. நடைச்சுருக்கு; shortened walk. 2. நட்பு, முயற்சி; friendship.

*[கால் + ஆட்டம்]*

**காலாட்டம்[2]** *kāl-āṭṭam,* பெ.(n.) முயற்சி (வின்.); activity in business and consequent prosperity.

*[கால் + ஆட்டம்.]*

*ஆட்டம் = செயல்,முயற்சி*

**காலாட்படை** *kālāṭpaḍai,* பெ.(n.) தேர், யானை, குதிரை ஆகிய ஊர்திகளன்றி காலால் நடந்து செல்லும் படை; infantry.

**மறுவ.** பந்தி

**ம.** காலாற்ப்பட; **தெ.** காலரி.

*[காலாள் + படை. காலாட்டம் = செயல்,முயற்சி]*

**காலாடி** *kāl-āḍi,* பெ.(n.) 1. முயற்சியுடையோன் (வின்.); energetic man, one who is active in business. 2. சில இனத்தின் தலைவர்க்குரிய பட்டப் பெயர், title given to the chief of the šāliya weavers Paḷḷās etc. 3. நீர் பாய்ச்சும் ஊர் ஊழியக்காரன் (இ.வ.) ; village servant attends to the distribution of water for irrigation 4. தொழிலற்றுத் திரிபவன் (உ.வ.) vagrant; idle and disorderly person.

*[கால் + ஆடி. ஆடி = ஆடுதல், செய்தல், பணியாற்றுதல், ஈடுபடுதல், கெடுதல்.]*

**காலாடு[1]–தல்** *kāl-āḍu-,* 5.செ.கு.வி. (v.i.) முயற்சியாற் செல்வஞ் செழித்திருத்தல்; to become prosperous by industry. *"காலாடு போழ்திற் கழிகிளைஞர்'.....பலராவர்" (நாலடி,113).*

*[கால் + ஆடு.]*

காலாடுதல் = விரைந்து செயற் படுதல். ஓய்வின்றி உழைத்தல், பொருள் திரட்டல்.

**காலாடு[2]–தல்** *kālāḍu-,* 5 செ.கு.வி.(v.i) 1. கால் நடுங்குதல்; trembling of the leg. 2. நடத்தல்; to stroll. 3. மூச்சாடுதல்; symptom of respiration said of a dying person (சா.அக.).

**க.** காலாடு

*[கால் = நடக்கும் உடலுறுப்பாகிய கால், காற்று. கால் + ஆடு.]*

# காலாமீன் வகைகள்



பொன் காலா





தாழங் காலா



வரிக் காலா



போலிக் காலா

**காலாடுநீர்** *kāḍu-nīr,* பெ.(n.) கணுக்காலாளவு நீர்; water up to the level of ankle (சா.அக.).

*[கால் + ஆடு + நீர்.]*

**காலாணி** *kāl-āṇi,* பெ.(n.) 1. காலில் முள் அழுத்த லான் உள்ளங்காலில் தோன்றும் தடிப்புத்தோல்; callosity of the sole caused by the frequent prickling of thorns and sharp-edged stone. 2. மேற்கூரை தாங்கும் முளைக்கட்டை; peg in the beam of a house supporting the roof.

ம. காலாணி

*[கால் + ஆணி – காலாணி = ஆணி. ஆணிபோன்று மரத்துப் போய் வலிக்கும் பகுதி.]*

**காலாணிக்குடிசை** *kāl-āṇi-k-kuḍiśai,* பெ.(n.) மூலைக்கட்டைகளின் மேல் அமைக்கப்படுங் குடிசை (C.G); hut resting for its support mainly on posts.

*[காலாணி + குடிசை.]*

*ஆணிக்கால்–நிலைக்குத்து ஊன்றுகால். ஆணிக்கால் –காலாணி என முன்பின்னாகத் தொக்கது.*

**காலாணியறு –தல்** *kāl-āṇi-y-aṟu-,* 4. செ.கு.வி. (v.i.) வலிமை, செல்வம் முதலியன குன்றித் தளர்தல்; to become weak, destitute or poor 'காலாணி யற்றுப்போனவன்' (வின்.).

*[காலாணி + அறு.]*

*ஆணிக்கால் = ஊன்றுகாலான அடிப்படை, வலிமை, செல்வம், பாதுகாப்பு முதலியன. ஆணிக்கால் காலாணி என மாறியாது.*

**காலாதீதம்** *kālā-tīdam,* பெ.(n.) 1. ***காலக் கழிவடை*** பார்க்க; see *kāla-k-kaḻvaḍai*

*[காலம் + அதீதம்.]*

**Skt.** adita > த. அதீதம்

**காலாதீதன்** *kālā-tīdaṉ,* பெ. (n.) ***காலங் கடந்தோன்*** பார்க்க; see kālaṉkaḍandōṉ.

*[காலம் + அதீதன்]*

**Skt.**adita > த. அதீதன்

**காலாந்தகன்** *kālāndagaṉ,* பெ.(n.) 1. சீவன்; Siva as the slayer of yama. *"காலாந்தகனும் வெருவுந் திறற்காளை" (பாரத. அருச்சுனன் தீர். 81).*

*[காலம் + அந்தகன்.]*

**காலாந்தம்** *kālāndam,* பெ. (n.) கால முடிவு. (இரு.நூ.) ; termination of period.

*[காலம் + ஆந்தம். அந்தம் → ஆந்தம்.]*

**காலாந்தரம்**[1] *kālāndaram,* பெ.(n.) வேறுபட்ட காலம்; another occasion. *"காலாந் தரத்திருவர் தங்காலஞ் செய்ய" (திருவாச.12:11).*

**தெ.** காலாந்தரமு

*[காலம் + அந்தரம்.]*

**காலாந்தரம்**[2] *kālāndaram,* பெ.(n.) இடைப்பட்ட காலம்; intervening time, intervel

*[காலம் + அந்தரம்.]*

**காலாயுதம்** *kāl-āyadam,* பெ.(n.) கோழி (பிங்.); cock as using the feet as weapons. "காலாயுதக் கொடியோன் கையாயுத" விழியாள் (தனிப்.).

*[கால் + ஆய்தம்.]*

*காலாயுதம் – கோழிப் போரில் காலையே படைக்கலமாகக் கொண்டு போரிடும் இயல்பு காரணமாகக் கோழிக்குக் காலாயுதம் என்பது காரண சிறப்புப் பெயராயிற்று.*

**காலாரி** *kālāri,* பெ.(n.) காலனை அழிப்பதற்காக சிவன் எடுத்த உருவம்; Siva as the destroyer of Yama.

*[காலன் + அரி – காலனரி → காலாரி. அரிதல் = கொல்லுதல்.]*

**காலாவதிப்பட்டம்** *kālāvadi-p-paṭṭam,* பெ.(n.) கடக மாதத்து விதைப்புப் பருவம்; a sowing season.

*[காலம் + அவதி + பட்டம் – காலவதிப்பட்டம் → காலாவதிப்பட்டம்.]*

*ஆடிப்பட்டம் – இப்பட்டத்தில், சம்பா, பொன்னி, கிச்சலிச் சம்பா முதலிய நெற்கள் பயிரிடப்படும்.*

**காலாழ்** *kāl-āḻ*, பெ. (n) சேறு (திவா.); mud.

*[கால் + ஆழ்.]*

**காலாழி** *kāl-āḻi*, பெ.(n.) மோதிரம், கால்விரற்செறி; toe ring. *"கண்டிய தேசத்திற் பண்டுநான் பெற்ற காலாழி" (குற்றாலக்.குற.123:14).*

ம. காலாழி

*[கால் + ஆழி– காலாழி. ஆழி - வட்டம், வளையம், விரற்செறி.]*

**காலாள்**[1] *kāl-āḷ*, பெ.(n.) காலாட் படைவீரன்; foot soldier, infantry. "பகடுதேர் புரவி காலாள்"(பாரத. பதினோராம் போ.6)

ம.,க.காலாள்

*[கால் + ஆள். காலாள் (தரைப்படை மறவன்.]*

**காலாள்**[2] *kāl-āḷ*, பெ.(n.) 2.பாசனக்காலில் நீர் பாய்ச்சுவோன்; one who attends to the supply of water from channels for irrigation purposes.

*[கால் - நீர்க்கால், வாய்க்கால் காலாள் – வாய்க்கால்வழி நீர்பாய்ச்சும் பணி செய்வோன்.]*

**காலாறு**[1]**–தல்** *kāl-āṟu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. நடை ஒய்ந்திருத்தல்; to rest from walking. 2. காலில் அரத்தவோட்டம் உண்டாக உலாவுதல்; to walk about for overcoming numbness of feet. குதிரை சிறிது காலாறட்டும் (உ.வ.).

ம. காலாறுக

*[கால் + ஆறு.]*

**காலாறு**[2] *kāl-āṟu*, பெ.(n.) வண்டு; beetle as having six legs. *"செந்தா மரையினிற்றேன் காலாறு பாயுங் கலைசையே" (கலைசைச்.13).*

*[கால்[1] + ஆறு[1]. காலாறு - ஆறுகால்கள் உள்ள வண்டினம்.]*

**காலாறு**[3] *kāl-āṟu*, பெ.(n.) சிற்றாறு; rivulet, stream. *"காவிரியாய் காலாறாய்க் கழியு மாகி" (தேவா.1227).*

மறுவ.கையாறு

*[கால் + ஆறு.]*

காலாறு என்பது நீர்க்காலாகப் பிரிந்துக் கொண்டு வந்த சிற்றாறு அல்லது கையாறு.

**காலாறு பறவை** *kāl-āṟu-paṟavai*, பெ.(n.) ஆறுகால் வண்டு; six legs beetle (சா.அக.).

*[கால் + ஆறு + பறவை.]*

காலாறு பறவை

**காலான்பெட்டி** *kālāṉpetty* பெ.(n.) கற்காரைத் தூண்கள் அமைக்கப் பயன்படும் மரம் அல்லது இரும்புத் தகட்டாலான பெட்டி (பொ.வழ) (கட்.தொ.வரி). wooden planks or iron sheets used while making concrete in construction works.

*[கால் + ஆன் + பெட்டி. கால் - தூண்.]*

**காலி**[1] *kāli*, பெ.(n.) பாம்பின் கீழ்வரிசைப் பற்களிலொன்று; one of the fangs of a snake in the lower row of teeth (சா.அக.).

*[கீழ் → கீழி → கீலி → காலி.]*

**காலி**[2] *kāli*, பெ.(n.) 1. ஆக்கூட்டம்; herd of cows as being quardrupeds. *"காலிப்பின் போவார்க் கோர்". 2. ஆ; cow. "கன்றுமுட்டி யுண்ணச் சுரந்த காலி யவைபோல்"(தேவா.745:3).*

ம.காலி

*[கால் → காலி - கால்நடை.]*

**காலி**[3] *kāli*, பெ.(n.) 1. வன்கொடுமை;vicious life. "காலிச் சிறுநெறிபோய்க் கழிவீர்"(திருநூற்.33). 2. பயனற்றவன்; worthless fellow; ஒன்றுக்கும் உதவாத காலிப்பயல் (உ.வ.). 3.அடங்காக் கொடியவன்; uncontrollable rogue. "இந்தக் காடு காலிகளின் கூடாரமாகி விட்டது" (உ.வ.).

[கள் → காள் → கால் - கருநிறம், தீமை, வன்கண்மை, அடாவடித்தனம். கால் + இ - காலி (அடாவடித்தனம் கொடுமை நிரம்பியவன். 'இ' உடையவனைக்குறித்த ஈறு).]

**காலி**[4] *kāli*, பெ.(n.) 1. பூனைக்காலி (தைலவ.); cow-hage. 2. புனமுருங்கை வகை(மலை.); palas tree.

[கால் - கருமை, நீட்சி. கால் → காலி.]

**காலி**[5] *kāli* பெ.(n.) 1. கழிவு நாள்; days spent. 2. உள்ளே ஒன்றுமில்லாதது; empty. காலிப்பெட்டி (உ.வ.). 3. வெற்றிடம்; vacant. வீடு காலி (உ.வ.).

Fin. kaligu, kali; Mong. galzai; Q. kalichi.

[கால் - தீர்தல், கழிதல். கால் → காலி.]

**காலி**[6] *kāli-*, பெ. (n.) 1. காலுள்ளது; that which has legs. முக்காலி, நாற்காலி. 2. காலுள்ளவள்; she who has legs. ஒடுகாலி. 3. கால்நடை; cattle. கன்றுகாலி.

ம. காலி

[கால் + இ. 'இ' உடைமைக் குறித்த ஈறு. பெண்பால் ஈறுமாம் 'கன்றுகாலி' மோனைக் குறித்து வந்த மரபிணை மொழி.]

**காலி**[7]**-த்தல்** *kāli-*, 4 செ.கு.வி (v.i) கோள்கள் தோன்றுதல் (வின்); to rise with lustre above the horizon as sun, moon,etc.

[குல் → தோன்றல்கருத்துவேர். குல் → கல் - கலித்தல், தோன்றுதல். கலி பார்க்க; see kāli.]

**காலி**[8]**-த்தல்** *kāli-*, 4 செ.கு.வி (v.i.) உதித்தல்; to rise (இரு.நூ.).

[காலுதல் - தோன்றுதல் → கால் → காலு → காலி]

**காலிகம்** *kāligam*, பெ.(n.) கரி; coal (இரு.நூ.).

[கால் - கருமை. கால் → காலிகம்.]

**காலிகயம்** *kālikayam*, பெ.(n.) சிறியாணங்கை வேர்; rattle snake root (சா.அக.).

[காலி + கயம்.]

**காலிகை** *kāligai*, பெ.(n.) 1. கருமை; blackness. 2. கருஞ்சந்தனம்; black sandal. 3. கள்; toddy. 4. காக்கை; crow. 5. நரி; fox. 6. புடலங்கொடி; snake gourd creeper. 7. அத்திமரம்; fig tree (சா.அக.).

[கால் - கருமை. காலி → காலிகை 'சிறுமை' சிறுமைப்பொருள் பின்னொட்டு.]

**காலிகோபுரம்** *kāli-kōburam*, பெ.(n.) திருப்பதி திருக்காளத்தி முதலிய மலைகளின்மேல் முகப்பிலுள்ள காற்றுக்கு அணையாகும் கோபுரம் (இ.வ.); towers of great height at the entrance of temples especially in Tiruppati and Tiru-k-kalatti, as standing exposed to the violence of wind.

[கால் - காற்று. த.கால் > தெ. காலி (காற்று). காலி + கோபுரம் – காலிகோபுரம் (காற்றுக்கு ஈடுகொடுத்து எழும்பி நிற்கும் உயர்ந்த கோபுரம்).]

**காலிங்கம்** *kāliṅgam*, பெ.(n.) 1. வெள்ளைப் பூண்டு; garlic. 2. யானை; elephant. 3. பாம்பு; snake. 4. ஒருவகை வெள்ளரி; a species of cucumber. 5. வெட்பாலை; dysentry rosebay. 6. ஒரு வகைச் சுரை; a kind of gourd (சா.அக.).

[கால் - கருமை, கார்ப்பு. கால் → காலங்கம் → காலிங்கம்.]

**காலிங்கராயன்சம்பா** *kāliṅga-rāyaṉ-šambā* பெ.(n.) நான்குமுதல் ஆறுமாதங்களில் விளையும் சம்பாநெல்வகை (இ.வ.); a kind of paddy maturing in 4 to 6 months.

[காலிங்கராயன் + சம்பா.]

**காலிங்கி** *kāliṅgi*, பெ.(n.) வெட்பாலையரிசி; dowry oleander.

[கால் → காலிங்கி.]

**காலிங்கை** *kāliṅgai* பெ. (n.) காலிங்கி பார்க்க; see *kalingi* (சா.அக.).

[காலி → காலிங்கை.]

**காலிடு-தல்** *kāliḍu*, 20 செ.கு.வி (v.i) கால்வைத்தல்; to set foot, enter. *'அவர்கள் தாங்களுங் காலிடமாட்டாபூமி'* (ஈடு.1,3,9).

ம. காலிடுக

[கால் + இடு. இடுதல் - வைத்தல், காலடி எடுத்து வைத்தல் உட்புகுதல்.]

**காலிமனை** *kālimaṉai,* பெ.(n.) வீடு கட்டுவதற் கான காலி இடம் (முகவை.) (கட்.தொ.வரி.); vacant plot for house construction.

*[கால் = மாடு. வெளிவரல், உமிழ்தல். கால் → காலி.]*

**காலிமாடு** *kāli-māḍu,* பெ.(n.) காட்டில் வளர்க்கப்படும் கால்நடை; stray cattle herded in woods.

**மறுவ.** காலிய மாடு; காலியன்மாடு.

*[காலி + மாடு. கால் → காலி = கால்போன போக்கில் செல்வது, கண்டபடிதிரிவது, கட்டுக்கடங்காதது.]*

**காலியகம்** *kāliyagam,* பெ.(n.) ஒருவகை மஞ்சள்; a kind of turmeric (சா.அக.).

*[காலி + அகம்.]*

**காலியம்** *kāliyam,* பெ.(n.) விடியல் (சங்.அக.); day-break.

*[கால் → காலை + அம் – காலையம் → காலியம்.]*

**காலியமாடு** *kāliya-māḍu,* பெ. (n.) ***காலிமாடு*** (வின்.) பார்க்க; see *kāli-māḍu.*

*[காலி + மாடு – காலியமாடு.]*

**காலியன்மாடு** *kāliyaṉ-māḍu,* பெ.(n.) ***காலிமாடு*** பார்க்க; *kāli-māḍu.*

*[காலி → காலியன் + மாடு.]*

**காலியாங்குட்டி** *kāliyāṅ-kuṭṭi,* பெ.(n.) 1. ஒரு வகைப் பாம்பு; a common harmless snake. 2.தீங்கு செய்யும் ஆற்றல் அற்ற உயிரி; any innocuous reptile.

*[காலி + ஆம் + குட்டி – காலியாங்குட்டி. காலி = தீங்கற்ற வளர்ப்புக் கால்நடைகள்.]*

**காலியாந்துவரை** *kāli-y-ām-tuvarai,* பெ.(n.) துவரைவகை (m.m.274); black dhal, low turning weed.

*[காலி + ஆம் + துவரை. கால் → காலி = கருப்பு நிறமுள்ளது.]*

**காலியூர்க்கோட்டம்** *kāliyūr-k-kōṭṭam,* பெ.(n.) பல்லவர் ஆட்சியில் பிரிக்கப்பட்ட தொண்டை மண்டலத்தின் இருபத்து நான்கு பிரிவுகளில் ஒன்று; one among 24 divisions of districts in the administration of the Pallava kings *"செயங்கொண்ட சோழமண்டலத்துக் காலியூர் கோட்டத்து உக்கலாகிய ஸ்ரீ விக்கிரமாபரண சதுர்வேதி மங்கலம்" (தெ.கல்.தொ.3.1.கல்.4).*

*[காலியூர் + கோட்டம்.]*

**காலிராசி** *kālirāśi,* பெ.(n.) இலங்கை காலிப்பட்டணத்தில் விளையும் பாக்கு; betel-nut obtained from Galle town in Ceylon (சா.அக.).

*[காலி + ராசி.]*

**காலிராணுவம்** *kāli-rāṇuvam,* பெ.(n.) காலாட் படை; infantry, foot soldiers. ***காலாட்படை*** பார்க்க; see *kālāṭpaḍai.*

*[கால்[1] + இராணுவம்.]*

**காலில் விழு–தல்** *kālil-viḻu-,* 2 செ.கு.வி.(v.i) 1. காலில் விழுந்து வணங்குதல்; to fall prostrate, do homage at one's feet. 2. மன்னிப்பு வேண்டுதல்; to seek forgiveness 3. புகலடைதல்; to take refuge.

*[கால் + இல் + விழு. இல் – இடப் பொருள் உருபு.]*

**காலிலி[1]** *kāl-ili,* பெ. (n.) 1. முடவன், முடத்தி; one who is lame. 2. பாம்பு (சூடா.); snake as having no legs. 4.காற்று (சூடா.); wind 3. மீன் (யாழ்.அக.); fish.

**க.** காலிலி

*[கால் + இலி → இல் → இல்லி → இலி (இல்லாதது).]*

**காலிவாசம்** *kāli-vāśam,* பெ.(n.) செங்குளவி; red-wasp (சா.அக.).

*[காலி + வாசம்.]*

**காலிறங்கு[1]–தல்** *kāl-iṟaṅgu-,* 5 செ.கு.வி (v.i) யானைக் கால் உண்டாதல்; to develop elephantiasis. 2. மழைக்காலிறங்குதல்; to descend in torrents, as a cloud heavy with water.

*[கால் + இறங்கு.]*

**காலிறங்கு[2]–தல்** *kāl-iṟaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1.மழைத்தாரை இறங்குதல்; to descend in torrents, as a cloud heavy with water. 2. சீலையின் விளிம்புகள் குறுக்கிழை கோடுகொள்ளுதல்; to have cross threads on the borders of coloured cloths worn by Indian women.

*[கால் + இறங்கு.]*

**காலிறால்** *kāl-iṟāl,* பெ.(n.) கால்நீண்ட இறால் மீன்வகை (M.M.373); prawn with long legs.

*[கால் + இறால் – காலிறால் (கால் நீண்ட இறால்).]*



காலிறால்

**காலுக்கழுத்து** *kālu-k-kaḻuttu,* பெ.(n.) கணைக்கால்; ankle. *'திருக்காலுக் கழுத்தின் காறை 2–ம்' (S.I.I.iv,81).*

மறுவ. கெண்டைக்கால், கணுக்கால்.

*[கால் + உக்கழுத்து. உ= மேற்பகுதி. கால் = பாதம். உக்கழுத்து = பாதத்தின் மேற்பகுதியாகிய கெண்டைக்கால், கணைக்கால்.]*

**காலுக்குக்காலாய்** *kālukku-k-kālāy,* வி.எ. (adv.) குடிவழியாய் (இ.வ); hereditarily.

மறுவ. வாழையடி வாழையாய்

*[காலுக்கு + காலாய்.]*

*கால் = கால்வழி, குடிவழி. காலுக்குக்கால் – குடிவழிக்குக் குடிவழியாய், வாழையடி வாழையாக.*

**காலுதல்** *kāludal,* பெ.(n.) கக்குதல், பொழிதல், வடிதல், விடல், விளம்பித்தல்; vomit, shower, flow pour drop.

**Fin.** karaba; **Es.** karata; **Mong.** xarai; **Jap.** karugaru.

*[கால் → காலுதல்.]*

**காலுழற்றி** *kāl-uḻaṟṟi,* பெ.(n.) காலிற் காணும் ஊதை (வாத) நோய் (வின்.); sparms in the leg.

*[கால்[1] + உழற்றி. கால் = காற்று, ஊதை.]*

**காலுளைவு** *kāl-uḷaivu,* பெ.(n.) கால்நோவு; ache or pain in leg as from cold.

*[கால் + உளைவு]*

**காலுறை** *kāl-uṟai,* பெ.(n.) காலுக்குப்போடும் உறை; socks.

ம. காலுற, கால்மேச.

*[கால் + உறை.]*

**காலூதல்** *kāl-ūdal,* பெ.(n.) கால் வீக்கமடைதல்; swelling of the leg (சா.அக.).

*[கால் + ஊதல்.]*

**காலூதை** *kāl-ūdai,* பெ.(n.) நோய்வகை (கடம்ப. 4.இலீலா.129); a disease.

*[கால் + ஊதை.]*

**காலூர்–தல்** *kāl-ūr-,* 2 செ.கு.வி (v.i.) 1. பயண அறிகுறியாகக் காலில் தினவுண்டாதல்; to feel an itching sensation in feet as foreboding an impending journey. 2. ஓடியாடப் பிள்ளைகள் விரும்புதல்; to be impatient, restless to walk run or move about, as a child.

*[கால்[1] + ஊர்தல்.]*

**காலூரம்** *kāl-ūram,* பெ.(n.) தவளை (சது.); frog.

*[கால் + ஊரம் – காலூரம் (நீரில் காலுதைத்து ஊர்வது).]*

**காலூன்று–தல்** *kāl-ūnru-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நிலையுறுதல்; to set foot firmly on the ground to become established. 2. **காலிறங்கு** பார்க்க; see *kāl-irangu. "ககனவட்டத்தினின்று காலூன்றி மழை பொழியும்" (தாயு.சித்தர்க.4).* 3. பந்தற்கால் நாட்டுதல்; to have a decorated post planted in front of house as a preliminary to a marriage festival,etc.

க.,பட. காலூறு

*[கால் +ஊன்று–.]*

**காலூனம்** *kāl-ūnam,* பெ.(n.) கால் முடமாதல்; impaired state of leg (சா.அக.).

*[கால் + ஊனம்.]*

**காலெடு[1]–த்தல்** *kāl-edu-,* 4 செ.கு.வி (v.i.) 1. வாய்க்கால் வெட்டுதல்; to dig irrigation channels 2. பின்னும்படி மயிரை வகிர்ந்தெடுத்தல்; to divide the hair into locks for braiding it.

*[கால் + எடு – கால் = வாய்க்கால்,வரிசை,வகிடு.]*

**காலெடு[2]–த்தல்** *kāl-edu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. தொடங்குதல்; to commence as setting forth 2. இசைந்துகொடுத்தல்; to yield, give consent. *"ஒன்றின் நினைவுக்கு ஒன்று காலெடுக்க அமைந்திருக்கை" (ஈடு,6,1,4).*

*[கால் + எடு–.]*

**காலேகம்** *kālēgam,* பெ.(n.) 1. முத்து; pearl. *"காலேகஞ் செம்பொன் வளமனை பாழாக வாரி" (பு.வெ.3,15).* 2. காலேகவண்ணம் (வின்.) பார்க்க; see *kālēgavannam.*

*[கால் (காற்று, எரிதல்) → காலேகம் (சிவப்பு).]*

**காலேகவண்ணம்** *kālēgavannam,* பெ.(n.) 1. செவ்வேள்; red sesamum seed. 2. செவ்வள்ளி; red sweet potato (சா.அக.).

*[காலேகம் + வண்ணம்.]*

**காலேகவண்ணம்[2]** *kālēgavannam,* பெ.(n.) கலவைச் சாந்து; paste compound of narious perfumes.

*[காலேகம் + வண்ணம்.]*

**காலேசம்** *kālēsam,* பெ.(n.) ***காலேயம்[1]*** பார்க்க; see *kālēyam. "குஞ்சர முதலிய காலேசங்களும்" (தொல்.பொருள். 152,உரை).*

*[கால்[1] → காலேசம்.]*

**காலேணி** *kāl-ēni,* பெ.(n.) குறுக்குப் படிகளைக் கொண்ட இரு கால்களுடைய ஏணி (வின்); ladder with two supporting legs.

*[கால்[1] + ஏணி. கால் = நெடுங்கால், நெடுங்கழை.]*

**காலேந்திரம்** *kālēndiram,* பெ. (n.) ***கால யெந்திரம்*** பார்க்க; see *kāla-endiram.* காலத்தைப் புலப்படுத்தும் இயந்திரம்; a contrivance to show time as the sun dial or the hour glass. *"காலேந்திரமுங் கைவயிற் பிரியா நூலேந்திரமும்" (பெருங்.இலாவாண. 2:153).*

மறுவ.காலக்கடிகை,நாழிகைவட்டில்; காலயெந்திரம்

*[காலம் + இயந்திரம் – காலேந்திரம் (வடமொழிப்புணர்ச்சி).]* ***காலயெந்திரம்*** பார்க்க; see *kāla-endiram.*

**காலேயகம்** *kālyēgam,* பெ.(n.) 1. மரமஞ்சள்; tree turmeric. 2.குடலின் ஒரு பகுதி; a part of the intestnes 3. காமாலையைப் போன்ற ஒருவகை நோய்; a disease like jaundice. (சா.அக.).

*[காலுதல் = ஒளிசிந்துதல். கால் → காலேகம் → காலேயகம் (சிவப்புமஞ்சள்).]*

**காலேயம்** *kālēyam,* பெ.(n.) ஆ, யானை முதலிய புல்லுண்ணும் நாற்காலுயிரிகள்; herbivorous quadruped. *"புல்லினா னின்புறுஉங் காலேயம்" (நான்மணி.67).*

*[கால் → காலி → காலியம் (கால்நடைகள்). காலேயம் - (வடமொழித் திரிபு). காலியம் எனின் முற்றுந்தமிழாம்– **காலியம்** பார்க்க; see kāliyam.]*

**காலேயம்**[2] *kālēyam,* பெ.(n.) 1. அகில் (மலை) eagle wood. 2.கத்தூரிமஞ்சள் (மலை) yellow zedoary.

*[கால் = கருநிறம். கால் → காலியம் → காலேயம் (வடமொழித்திரிபு).]*

**காலை**[1] *kālai,* பெ.(n.) 1. நேரம், பொழுது (பிங்.); time. "மாலைவாராராயினும் மாணிழை-காலை காண்குவமென" (சிலப். வேனில்.116.) 2. வாணாள்; life-time. *"நோகோ யானே தேய்கமா காலை" (புறநா.234).* 3.தகுந்த நேரம்; season, opportunity. *"காலைய தறிந்தனை" (கந்தபு. திருவவ.14).* 4. முறை; occasion, turn. *"முக்காலைக் கொட்டினுள்" (நாலடி,24).* 5. விடியல்; early part of the morning. *"காலைக்குச் செய்தநன் றென்கொல்" (குறள்,1225).* 6.ஞாயிறு; sunday. *"காலை யன்ன சீர்சால் வாய்மொழி" (பதிற்றுப்.21,4).* 7. பகல்; day-time. *"எல்லியிது காலையிது வென்ப தறிகல்லாள்" (சீவக.1877).* 8. பள்ளியெழுச்சி முரசம்; waking-drum. "மேல் வந்தான் காலைபோல்....துயிலோ வெடுப்புக" (கலித்.70).

ம. கால; து. கால்தெ, கல்தெ.

**Skt.** kālya

*[கால் = வெளிவரல், ஒளி சிந்துதல், விளக்கம் பெறல், செப்பம். கால் → காலை.]*

**காலை**[2] *kālai,* செ.கு.வி.எ (adv) 1. இளங்காலை நேரம், முன்னதாகவே (வின்.); early, betimes, early in life. 2. அப்பொழுதில்; when, while *"அடுங்காலை நீர்கொண்டு வெப்பம்போல்" (நாலடி,68).*

*[கால் + காலை.]*

**காலை**[3] *kālai,* பெ.(n.) வேலி அடைப்பு (யாழ்ப்.); enclosure, area enclosed.

ம. காலா

*[கால் = கோல், குச்சி, கம்பு, கழை. கால் → காலை (கம்புகள் நட்டு அடைத்த வேலி). காலுடையது காலி என வழங்கி அதுவே காலை எனவும் திரிந்தது. கோடையிலும் பட்டையில் பால் வடியும் மரம் பாலை எனப்படுவதை ஒப்பு நோக்குக.]*

**காலை**[4] *kālai,* பெ.(n.) மீன்வகை; a kind of fish. *"உறுகிழாத்தி காலைபாலை" (பறாளை.பள்ளு.75).*

*[கால் → காலை.]*

**காலை**[5] *kālai,* பெ.(n.) தொழுவம்; cow shed.

*[காலி = மாடுள் காலி → காலை.]*

**காலை**[6] *kālai,* பெ.(n.) 1. நேற்று; yesterday. 2. நாளை; tomorrow.

**H.Punj.**,kal,kala; **Sind.** kālha, kālha; **Guj.** gāli, kālā, jalikāl; **Beng.** gatakāla; **Ass.** kāli; **On.** gate kāli.

*[கால் = (ஒளி) உமிழ்தல். கால் → காலை (விடியற்காலை, மறுநாள் காலை, நாளை. கால் = நேரம் உமிழ்தல், கழிந்த நாள், நேற்று.).]*

உடலுழைப்புத் தொழிலாளர்கள் கடு வெயிலுக்கு அஞ்சி, பொழுது விடியுமுன் கருக்கலிலேயே வேளாண்மை வேலைகளைத் தொடங்குவர். நாளை வா என்பதை விடியலில் அதாவது காலையில் வா என்பது மரபு. ஆதலின் காலை எனும் சொல் நாளை எனப் பொருள் தந்தது.

**காலைக்கடன்** *kālai-k-kaḍan,* பெ.(n.) குளித்தல், பல்துலக்குதல் போன்ற காலைச் செயல்கள்; morning observances.

*[காலை[1] + கடன்.]*

**காலைக்கரிப்பான்** *kālaik-karippāṉ,* பெ.(n.) உளுந்து; black gram. (சா.அக.).

*[காலை + கரிப்பான் – காலைக்கரிப்பான்.]*

*கால் = காற்று, ஊதை. ஊதை (வாதம்) நோய்க்கு உளுந்து மருந்தாகும் தன்மையுடையது எனும் கருத்தில் காலைக் கரிப்பான் எனப்பட்டது.*

**காலைக்குளியல்** *kālai-k-kuḷiyal,* பெ.(n.) கதிரெழுமுன் குளிர்நீரில் குளித்தல்; taking a bath in a cold water before sun rise. (சா.அக.).

*[காலை + குளியல்.]*

**காலைச்சுற்று-தல்** *kālai-c-cuṟṟu-,* 5 செ.குன்றாவி (v.t.) தொடர்ந்து பற்றுதல்; to cling to one, to hold persistently. "பாம்பு காலைச்சுற்றுகிறது".

*[காலை[1] + சுற்று-.]*

**காலைச்செபம்** *kālai-c-cebam,* பெ.(n.) ***காலை வாழ்த்து*** பார்க்க; see *kālai-vāḻttu.*

*[காலை + செபம்.]*

**காலைஞாயிறு** *kālai-ñāyiṟu,* பெ.(n.) தோன்றும் ஞாயிறு (உதயசூரியன்); rising sun. *"காலை ஞாயிற்றுக் கதிர்போற் றோன்றிய" (மணிமே.9:45).*

*[காலை + ஞாயிறு.]*

**காலைநொச்சி** *kālai-nocci,* பெ.(n.) கருநொச்சி; a variety of nocci (சா.அக.).

*[காலை + நொச்சி.]*

**காலைப்பசி** *kālai-p-paśi,* பெ.(n.) காலை நேரத்தில் உண்டாகும் கொடிய பசி; vigorous hunger in early morning (சா.அக.).

*[காலை + பசி.]*

**காலைப்பனி** *kālai-p-paṉi,* பெ.(n.) விடியலில் பெய்யும் பனி; morning dew (சா.அக.).

*[காலை + பனி.]*

**காலைப்பித்தம்** *kālai-p-pittam,* பெ.(n.) காலையில் தலையிலேறி நிற்கும் பித்தம்; aggravated condition of bile prevailing in the morning rising to the head (சா.அக.).

*[காலை + பித்தம்.]*

**காலைமுரசம்** *kālai-muraśam,* பெ.(n.) பள்ளி யெழுச்சி முரசு; morning drum sounded to awaken kings. "காலை முரசக் கனைகுர லோதையும்" (சிலப்.13,140).

*[காலை + முரசம்.]*

**காலைமுழவு** *kālai-muḻavu,* பெ.(n.) ***காலை முரசம்*** (சிலப்.3,27 உரை) பார்க்க; see *kālai-muruśam.*

*[காலை + முழவு.]*

**காலையடை–த்தல்** *kālai-y-aḍai-,* 4. செ.கு.வி. (vi) வேலியடைத்தல் (யாழ்ப்.); to make an enclosure.

*[காலை + அடை–.]*

**காலையது பண்பு** *kālaiyatupaṉbu,* பெ.(n.) சூரியனது வெம்மை (கோ.தமி.கை.); heat of the sun.

*[காலை + அது + பண்பு.]*

**காலையந்தி** *kālai-y-andi,* பெ.(n.) விடியலை யடுத்த அந்திப்பொழுது; morning twilight. *"காலை யந்தியும் மாலை யந்தியும்" (புறநா.34.8).*

*[காலை + அந்தி = காலையந்தி (விடியலின் தொடக்கப்பொழுது)]*

**காலையாங் குலைச்செடி** *kālaiyāṉ-kulaiceḍi,* பெ.(n.) ***எலியோட்டிச் சோபி*** பார்க்க; see *eliyōṭṭic-cōbi* (சா.அக.).

**காலைவாழ்த்து** *kālai-vāḻttu,* பெ.(n.) விடியற்காலையில் செய்யும் கடவுள் வழிபாடு; morning prayer.

*[காலை + வாழ்த்து.]*

**காலைவிழிப்பு** *kālai-viḻippu,* பெ.(n.) விடியற் காலையில் விழித்துக் கொள்ளல்; waking up early in the morning (சா.அக).

*[காலை + விழிப்பு.]*

**காலைவெள்ளி** *kālai-veḷḷi,* பெ.(n.) விடியலில் தோன்றும் வெள்ளி விண்மீன்; Venus as the morning star.

*[காலை + வெள்ளி.]*

**காலொட்டு–தல்** *kāl-oṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) குறைவைக் காட்டாமற் சரிப்படுத்துதல் (இ.வ); lit. to restore a lame leg, to make up for deficiencies.

*[கால் + ஒட்டு–.]*

**காலொற்று–தல்** *kāl-oṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) காற்று வீசுதல்; to blow gently, as the wind. *"கடிகாவிற் காலொற்ற வொல்கி" (கலித்.92,51).*

*[கால் + ஒற்று. கால் = காற்று.]*

**காலோட்டு–தல்** *kāl-ōṭṭu-,* 5 செ.கு.வி (v.i.) மூச்சு வரும்படிச் செய்தல்; inhale artificial respiration (சா.அக.).

*[கால் + ஓட்டு.]*

**காலோட்டூதை** *kālōṭṭūdai,* பெ.(n.) மூச்சுத் திணறும்படிச் செய்யும் ஊதை நோய்; rheumatism marked by difficulty of respiration (சா.அக.).

*[காலோட்டு + ஊதை.]*

**காலோடிகையோடி** *kālōḍi-kaiyōḍi,* பெ.(n.) தொழிலற்றுத் திரிபவன் (நெல்லை); vagabond, vagrant.

*[கால் + ஓடி + கை + ஓடி.]*

கால் போன போக்கில் திரிந்து கைபோன போக்கில் ஏதோ செய்து எப்படியோ அலைபவன்.

**காலோடு[1]-தல்** *kāl-ōḍu-,* 5 செ.கு.வி (v.i.) 1.வழுக்குதல்; to slip as the leg. *"காலோடு மிடங் களையுடைய" (மலைபடு.215,உரை.).* 2. செயலில் முயற்சி உண்டாதல்; to pursue a business actively with keen interest. அந்தச் செயலில் எனக்குக் காலோடவில்லை.

*[கால் + ஓடு-.]*

**காலோடு[2]** *kāl-ōḍu,* பெ.(n.) கூடல்வாய் ஓடு (இ.வ.); gutter tiles.

*[கால் + ஓடு. கால் = கால்வாய்.]*

**காலோதம்** *kāl-ōdam,* பெ.(n.) 1. காலில் நீர் இறங்குவதாற் காணும் வீக்கம்; swelling in the leg due to morbid collection of fluid in the surface membrane of the skin. 2. யானைக்கால்; elephantiasis of the leg. 3. அண்டங்காக்கை; Indian raven.

*[கால் + ஓதம்.]*

**காலோமம்** *kāl-ōmam,* பெ.(n.) அகில்; lign aloe (சா.அக.).

*[கால் + ஓமம்.]*

**காலோர்** *kālōr,* பெ.(n.) காலாட்கள்; infantry. *"காலோர் காப்ப" (மதுரை.441).*

*[கால் → காலோர்.]*

**காலோலம்** *kāl-ōlam,* பெ.(n.) அண்டங்காக்கை; Indian raven (சா.அக.).

*[கால் = கருப்பு. கால் + ஓலம்.]*

**காவட்டம்** *kāvaṭṭam,* பெ.(n.) வாசற்கதவு (கட்.தொ.வரி.); front door.

*[காவு + வட்டம் → காவட்டம்.]*

**காவட்டம்புல்** *kāvaṭṭam-pul,* பெ.(n.) காமாட்சிப் புல் (மலை); citronella grass.

*மறுவ : காவட்டை.*

*[காவட்டை + புல் – காவட்டம் புல்]*

**காவட்டம்புல்லெண்ணெய்** *kāvaṭṭampul-eṇṇai,* பெ.(n.) கற்பூரப்புல் எண்ணெய்; oil of lemon grass (சா.அக.).

*[காவட்டம்புல் + எண்ணெய்.]*

**காவட்டு** *kāvaṭṭu,* பெ.(n.) ***கா[1]*** (நாஞ்.) பார்க்க; see *kā[1]*

*[காவு → காவட்டு.]*

**காவட்டை** *kāvaṭṭai,* பெ.(n.) ***காவட்டம்புல்*** பார்க்க; see *kāvaṭṭam-pul.*

ம. காவட்ட

*[காவட்டம் → காவட்டை.]*

**காவடி** *kāvaḍi,* பெ.(n.) 1.காவு தண்டு; pole or stave of wood used for carrying burdens. 2. வேண்டுதலுக்கு எடுக்குங் காவடி; a decorated pole of wood with an arch over it, carried on shoulders with offerings mostly for Muruga's temple commonly with some parade. 3. காவு தடியிற் கொண்டுபோகும் பொருள் (வின்.); that which is carried on the shoulders with a pole.

ம.காவு; காவடி; க. காவடி,காகடி; தெ.,து. காவடி; பிரா. காவட்; கொலா. காவரி; மா. கொவெ; பெங். கவரி.

*[காவு + தடி → காவடி]*


காவடி

**காவடிக்காரன்** *kāvaḍikkāraṉ,* பெ.(n.) காவடி எடுப்பவர் (இரு.நூ.); one who carries *kāvaḍi.*

ம. காவடிக்காரன்; க. காவடிகார.

*[காவடி + காரன்]*

**காவடிச்சிந்து** *kāvaḍi-c-cindu,* பெ. (n.) காவடி எடுக்கும் போது முருகனைப் புகழ்ந்து பாடும் நாட்டுப்புற இசைப்பா வகை; a type of folk-song usually in praise of Lord Muruga, intended to be sugn by pilgrims carrying 'kāvaḍi' as an offering.

ம. காவண்டம்; தெ. காவடெடப்பாலு.

*[காவடி + சிந்து.]*

**காவடியாட்டம்** *kāvaḍi-y-āṭṭam,* பெ.(n.) காவடியைத் தோளில் சுமந்து கொண்டு ஆடும் ஆட்டம்; a ritual dance of the devotees of Lord Muruga carrying kāvaḍi.

ம. காவடியாட்டம், காவடி துள்ளல்.

*[காவடி + ஆட்டம்.]*

**காவடியெடு-த்தல்** *kāvaḍi-y-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) வேண்டுதலின் பொருட்டு காவடி எடுத்தல்; to carry 'kāvaḍi' with offering unfulfilment of a vow.

தெ. காடின்சு

*[காவடி + எடு.]*

**காவடித் தண்டு** *kāvaḍi-t-taṇḍu,* பெ.(n.) இரு முனையிலும் சுமைகளைத் தொங்க விட்டு தோளில் வைக்க ஏதுவாக உள்ள நீண்ட கொம்பு;Pollor staue of wood used for carrying burdens.

ம. காவு, காவடி; க. காவடி, காகடி; தெ.,து. காவடி; பிரா. காவட; கொலா. காவரி; மா. கொவெ; பெங். கவரி.

*[காவடி + தண்டு.]*

**காவடிதூக்கு-தல்** *kāvaḍitūkku-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ***காவடியெடு-த்தல்*** பார்க்க; see *kāvaḍiyeḍu.*2. முகமன் கூறுதல்; to flatter.

*[காவடி + தூக்கு.]*

**காவணப்பத்தி** *kāvaṇa-p-patti,* பெ.(n.) மண்டபத்தின் அழகிய மேற்றளம்; ornamental roof of a mansion. *"குறட்டின்மேலே திருக்காவணப் பத்தித் திருமண்டபமும்" (கோயிலொ.14).*

*[காவணம் + பத்தி.]*

**காவணம்**[1] *kāvaṇam,* பெ.(n.) 1.பந்தல்; shed with a flat roof, pandal. "காவணங்களிற் றோன்றின பச்சிளங் கமுகம்" (பாரத. திருட்.56.). 2. சோலை; grove, tope. *"காவண மிலங்கு மந்தண் காசி" (காசிக. வியாதன்சா. 23).*

ம. காவணம்; க.காவண.

*[கா[3] + அணம்.]*

**காவணம்**[2] *kāvaṇam,* பெ.(n.) மண்டபம்; open hall. *"தேவாசிரியம் என்னுந் திருக்காவணம்" (பெரியபு. திருக்கூட்டச்.2).*

*[கா - அகற்சி,பரப்பு. கா + அணம்- காவணம் (அகன்ற மண்டபம்). 'அணம்' சொல்லாக்க ஈறு.]*

**காவணம்**[3] *kāvaṇam,* பெ.(n.) தெள்ளுக்கொடி; negro bean (சா.அக.).

*[கா - அகற்சி, நீட்சி. கா + அணம்.]*

**காவணம்**[4] *kāvaṇam,* பெ.(n.) புழுக்கூடு; nest of an insect as wasp. (சா.அக)

*[காவணவன் (புழு.) காவணன் → காவணம்.]*

**காவணவன்** *kāvaṇavaṉ,* பெ.(n.) ஒருவகைப் புழு(யாழ்ப்.); a small insect that spreads among

trees and growing corn, binds leaves to its nest and thus destroys the crop.

*[காவணம் → காவணவன்.]*

காவணம் = பந்தல், குடியிருப்பதற்காக இலைகளைக் குடிலாக அடைத்துக் கொள்ளும் புழு வகை.

**காவத்திரம்** *kāvattiram,* பெ.(n.) ஈரப்பலா; monkey jack (சா.அக.).

**மறுவ.** ஈரப்பலா, ஆசினிப்பலா

*[காய் → காயு → காவு + திரள். (திரளம் → திரம்).]*

*திரண்டு உருண்ட வடிவத்தால் பெற்ற பெயராகலாம். காயாகவே உண்ணப்படுவது வழக்கம்.*

**காவதம்** *kāvadam,* பெ.(n.) காதம்; distance of about elevan kilometers. *"காவதங் கடந்து" (சிலப்.10:36).*

**ம.** காவதம்; **க.** காவித, காவத; **து.** காவுத.

**Fin.** kaukama(distant); **Karel.** kaugoi; **Es.** kaua, kauva, kavva; **Mordvin.** kuvat; **Mansi.** koy, xow.

**skt.** gavyūta

*[கா = அகற்சி, நீட்சி. கா → காவு → காவதம் (குறிப்பிட்ட எல்லை உள்ள தொலைவு.]*

**காவதன்** *kāvadaṉ,* பெ.(n.) வரிக்கூத்து வகை (சிலப்.3:13.பக்.88); a masquerade dance.

*[கா–காவு = பொழில், பூங்கா, எழில். காவு → காவதன் (எழில் மிகும் கூத்துவகை).]*

**காவம்** *kāvam,* பெ.(n.) காட்டழல்; big forest fire kindled by friction (சா.அக.).

*[கா → காவம். கா = காடு.]*

**காவல்**[1] *kāval,* பெ.(n.) 1. பாதுகாப்பு; defence, protection, preservation, keeping. *"காவலன் காவல்" (மணிமே.22,209.).* 2.வேலி (பிங்.) ; enclosing fence, hedge. 3. மதில் (பிங்); surrounding wall, fortification. *"காவல் வேவக் கணையொன் றெய்தார்" (தேவா.1087,10).* 4.சிறை; prison, jail. "அவனைக் காவலில் வைத்தார்கள்". 5. காவலாள்; watchman, guard. 6. பரண் (உரி.நி.); platform raised for watching fields. 7. காக்கப்படும் நாடு; dominion of a king as protected by him. *"காவல் குழவிகொள் பவரி னோம்புமதி" (புறநா.5,6).* 8. கவசம்; coat of mail. *"வான்புலங்காவல் கொண்டார்" (சீவக.793).*

**ம., க.** காவல்; **தெ.**காவலி.

*[கா + அல் – காவல்.]*

**காவல்**[2] *kāval,* பெ.(n.) தம்பட்டம்; a kind of drum.

*[காவல் = காவலுக்காக அடித்து முழக்கப்படும் தோற்கருவி.]*

**காவல்**[3] *kāval,* பெ.(n.) தண்ணீர்; water.

*[கூவல் → காவல். (கிணற்றுநீர்) (கொ.வ.).]*

**காவல்கட்டு** *kāval-kaṭṭu,* பெ.(n.) 1. தக்க காப்பு; strong guard, strict watch. 2. நோயாளியின் பத்தியப் பாதுகாப்பு (யாழ்ப்.); strict attention to the diet of a sick person.

**மறுவ.**கட்டுக்காவல்

*[காவல் + கட்டு. கட்டு = கட்டுப்பாடு.]*

**காவல்கா–த்தல்** *kāval-kā-,* 4 செ.குன்றாவி (v.t) காவற்றொழில்செய்தல்; to watch, guard, protect.

**க.** காவல்குடு

*[காவல் + கா.]*

**காவல்காரன்** *kāvalkāraṉ,* பெ.(n.) **காவற்காரன்** பார்க்க; see *kāvaṟkāraṉ*.

*[காவல் + காரன்.]*

**காவல்செய்**[1]**–தல்** *kāval-sey-,* 1 செ.குன்றாவி (v.t.) 1.பாதுகாத்தல்; to guard, defend. 2. சிறைவைத்தல்;

to imprison, put in jail. confine. *"கணிகை மகளையும் காவல்செய் கென்றனன்" (மணிமே.22,214).*

**க.** காவலிடு

*[காவல் + செய்.]*

**காவல்செய்²–தல்** *kāval-sey-,* 1.செ.கு.வி. (v.i) களத்துநெற்குவியலில் அடையாளம் வைத்துப் பூதம் முதலிய அணுகாதபடி பாதுகாப்புச் செய்தல் (யாழ்ப்.); to protect a heap of grain from demons by passing a straw rope over the heap in the field or making diagrams with the rope on the ground or placing on the heap a handful of moist cow dung.

*[காவல் + செய்–.]*

**காவல்துறை** *kāvalturai,* பெ.(n.) ***காவற்றுறை*** பார்க்க; see *kāvarrurai.*

*[காவல் + துறை.]*

**காவல்தெய்வம்** *kāvalteyvam,* பெ.(n.) ***காவற்றெய்வம்*** பார்க்க; see *kāvarreyvam.*

*[காவல் + தெய்வம்.]*

**காவல்பரண்** *kāvalparan,* பெ.(n.) ***காவற்பரண்*** பார்க்க; see *kāvarparan.*

**து.** காவல் தொம்ப

*[காவல் + பரண்.]*

**காவல்புரப்பு** *kāval-purappu,* பெ.(n.) அரசுக்குக் எதிராகச் செய்த குற்றத்திற்காக விலக்கப்பட்ட காவற்காரனுக்கு மாற்றாக அமர்த்தப்பட்ட புதிய காவற்காரன் ஆண்டுதோறும் செலுத்திவரும் வரி (R.T.); an annual tax paid by a watchman appointed in the place of another dismissed for an offence against the government.

*[காவல் + புரப்பு.]*

**காவல்மரம்** *kāvalmaram,* பெ.(n.) ***காவன்மரம்*** பார்க்க; see *kāvanmaram.*

*[காவல் + மரம்.]*

**காவல்மாளிகை** *kāval-māligai,* பெ.(n.) காவற்காரர்கள் தங்கியிருந்து காவல் புரிவதற்காக அமைக்கப்பட்ட சிறுகோபுரம்; watch tower, a small turret where sentinels or watch guards are stationed.

**ம.**காவல் மாளிக

*[காவல் + மாளிகை. மாளிகை = உயரமான இருப்பிடம்.]*

**காவல்மாற்று–தல்** *kāval-mārru-,* 5 செ.குன்றா.வி. (v.t.) இளைப் பாறுதற் பொருட்டுக் காவலாளரை முறைமாற்றி வேலைக்கு வைத்தல்; to relieve the guard, change sentinels.

*[காவல் + மாற்று.]*

**காவல்மிராசு** *kāval-mirāšu,* பெ.(n.) காவல் செய்வதற்காகப் பெறும் வழிவழியான மரபுரிமை; hereditary right of watchmen.

*[காவல் + மிராசு.]*

**காவல்மேரை** *kāval-mērai,* பெ.(n.) காவலுக்காகக் கொடுக்குங் களஉரிமை; share of produce given to the village watchman on the threshing floor. (R.T.).

*[காவல் + மேரை.]*

**காவல்வழக்கு** *kāval-valakku,* பெ.(n.) காவற் காரனுக்குக் கொடுக்கும் வரி (R.T.)customary fees paid to watchmen.

*[காவல் + வழக்கு.]*

**காவலம்** *kāvalam,* பெ.(n.) 1. தோண்டிப்பூ மரம்; blood drop ordure tree. 2. பூந்தாளி; stringing fruited ordure tree (சா.அக.).

*[கா → காவலம்.]*

**காவலர்** *kāvalar,* பெ.(n.) **1.** அரசர்; king. **2.**கணவர்; husband. **3.** காவற்காரர்; guard (இரு.நூ.).

**காவலளி–த்தல்** *kāvalali,* 4 செ.குன்றாவி.(v.t.) ***காவல் செய்–தல்*** பார்க்க; see *kāvalcey.*

துு. காவல் தீபுனி

*[காவல் + அளி.]*

**காவலறை** *kāval-arai,* பெ.(n.) 1. காக்கப் படுவதாகிய கருவூலம்; public treasury as guarded. *"காவ லறையழித் தரும்பொருள் கவர்ந்தே" (திருவாலவா.25,4).* 2. காவல்காத்து நிற்கும் அறை; watch house.

ம.கவாலற.

*[காவல் + அறை.]*

**காவலன்** *kāvalaṉ,* பெ.(n.) 1. பாதுகாப்போன்; protector, guardian. "அருட்கா வலன்பா லொன்றி" (தாயு.காண்பே.2). 2.அரசன்; king. *"காவலன் காவா னெனின்" (குறள்,560).* 3. மெய்காப்போன் (சூடா.); bodyguard.4.கணவன்; husband. *"பொலங்குழையார் காவலர்சொற் போற்றல் கடன்" (இலக்.வி.658,உரை).*

*[காவல் → காவலன்.]*

**காவலாள்** *kāva-lāḷ,* பெ.(n.) ***காவற்காரன்*** பார்க்க; see *kāvārkāraṉ.*

க. காவலவ; தெ. காவலிகாடு, காவலிவாடு.

*[காவல் + ஆள்.]*

**காவலாளன்** *kāval-āḷaṉ,* பெ.(n.) ***காவற்காரன்*** பார்க்க; see *kāvarakāraṉ.*

*[காவல் + ஆளன்.]*

**காவலாளி** *kāvalāḷi,* பெ.(n.) 1. ***காவற்காரன்*** பார்க்க; see *kāvarkāran* 2. கணவன் (யாழ்ப்); husband.3. கோலாமீன்; fish known as kōlāmiṉ.

ம.காவலாளி

*[காவல் + ஆளி.]*

காவல் - பாதுகாப்பு. கோலா மீன் முன்கூட்டியே தம் பகை அறிந்து குறிப்புணர்த்தும் தன்மையால் பெற்ற பெயராகலாம்.

**காவலாளி** *kāvalāḷi,* பெ.(n.) இரவிலும், விழிப்பாக நோயாளிகளைப் பாதுகாக்கும் ஆண் அல்லது பெண்; a male or female waking in the night and nursing the patients. (சா.அக.).

*[காவல் + ஆளி.]*

**காவலி** *kāvali,* பெ.(n.) காவல் வேலை; police duty.

*[காவல் → காவலி. (இ.வ.).]*

**காவலிடு–தல்** *kāvaliḍu,* 17 செ.குன்றாவி.(v.t.) ***காவல் செய்–தல்*** பார்க்க; see *kāvalcey.*

க. காவலிடு

*[காவல் + இடு]*

**காவலிரு–த்தல்** *kāvaliru,* 3 செ.கு.வி.(v.i.) ***காவல்கா–த்தல்*** பார்க்க; see *kāvalkā.*

க.,பட. காவலிரு

*[காவல் + இரு.]*

**காவவுசில்** *kāvavusil,* பெ.(n.) வாழை; plantain tree (சா.அக.).

மறுவ. காவற்கலி

*[காவு + உசிலம்.]*

**காவற்காரன்** *kāvaṟkāraṉ,* பெ.(n.) காவல் காப்பவன்; a guard, watcher.

க. காவலுகார

*[காவல் + காரன்.]*

**காவற்குதிரை** *kāvaṟkudirai,* பெ.(n.) காவலுக்குப் பயன்படுத்தப்படும் குதிரை; horse of a cavalry.

க. காவலுகுதுரெ

*[காவல் + குதிரை.]*

**காவற்பரண்** *kāvaṟparaṉ,* பெ.(n.) பயிருக்கு அழிவை உண்டாக்கும் விலங்கு ஆகியவற்றை விரட்ட அமைக்கப்படும் பரண்; a thatched and raised platform for the guard to oversee the field and protect it from animals and birds.

து. காவல் தொம்ப

*[காவல் + பரண்.]*

**காவற்றுறை** *kāvarrurai,* பெ.(n.) சட்டம் ஒழுங்கு ஆகியவற்றை நடைமுறைப்படுத்த உதவும் துறை; police department.

*[காவல் + துறை.]*

**காவற்றெய்வம்** *kāvarreyvam,* பெ.(n.) ஊர்த்தெய்வம் (கிராமத் தெய்வம்); village deity.

*[காவல் + தெய்வம்.]*

ஒவ்வொரு தீவிற்கும் ஊருக்கும் காவல்தெய்வம் இருந்தது. நாவலந் தீவிற்குச் 'சம்பாபதி' என்னும் நாவல் மகளும், மதுரைக்கு மதுராபதியும் காவல் தெய்வம். நாவல் தெய்வ இருக்கை காவிரிப்பூம்பட்டினமென்று மணிமேகலை கூறுவதால் சோழநாடு முதற் காலத்திற் பனிமலை வரை பரவியிருந்தமை உய்த்துணரப்படும்.

அரசர் சிலர் ஒவ்வொரு பூதத்தைத் தமக்குக் காவல் செய்ய அமர்த்தியிருந்தனர். முசுகுந்தச் சோழன் காவற் பூதப்படிமை, புகார் நடுச் சதுக்கத்தில் நிறுத்தப்பட்டிருந்தது. முனியன் என்பது காவற் பூதங்களுள் ஒன்று. எல்லம்மன், எல்லைக் கறுப்பன் என்பன சிற்றூர்க் காவல் தெய்வங்கள் (தமிழர் மதம். 85,86).

**காவன்** *kāvaṉ* பெ.(n.) சிலந்திப்பூச்சி (பிங்.); spider.

ம. காவன்

*[கா → காவன்.] (பந்தல் போல் வலை பின்னுவது)*

**காவன்மகள்** *kāvaṉ-magaḷ,* பெ.(n.) தினைப்புனம் காவல் புரியும் பெண்;women watching the crop in the form.

*[காவல் + மகள்.]*

**காவன்மகளிர்** *kāvaṉ-magaḷir,* பெ.(n.) போரில் தோற்ற பகைவரின் மனையோராய்ச் சிறைபிடிக்கப் பட்ட மகளிர் (சீவக.154, உரைவிசேடக் குறிப்பு); captive wives of enemies.

*[காவல் +மகளிர்.]*

**காவன்மரம்** *kāvaṉ-maram,* பெ.(n.) பகைவர் அணுகாத வண்ணம் வளர்த்துக் காக்கப்படும் காவன் மரம்; tree planted and well guarded as a symbol of sovereign power or dominion, in ancient times.

*[காவல் + மரம்.]*

பண்டைத் தமிழரசர் ஒவ்வொரு மரத்தைக் கடி மரம் அல்லது மகாவல் மரமாகக் கொண்டு அதைப் பகைவர் அண்டாதபடி கருத்தாய்க் காத்து வந்ததனாலும், கா என்னும் சோலைப் பெயர்க்குக் காத்தற் பொருளுமிருப்பதாலும் ஒவ்வொரு திருப்பதியிலும் கடவுளுருவிற்கு நிழல்தந்து நிற்கும் மரம் தலமரம் எனப் போற்றப்படுதலினாலும் முற்காலத்தில், மக்கள் அடிமுதல் முடிவரை கிழங்கும் பாலும் கீரையும் பூவும் காயும் கனியும் நிழலும் உறையுளுமாகப் பலவகைப் பயனுதவிக் காத்த மரங்களையும் சோலைகளையும் தெய்வங்களாக வழிபட்டு வந்தனர் என ஊகிக்க இடமுண்டு (சொல்.கட்.18).

**காவன்முரசம்** *kāvaṉ-murašam,* பெ.(n.) காத்தற்றொழிலுக்கு அறிகுறியான அரசனின் முரசு; royal drum. *"காவன் முரசம் நாட்காலையிலே முழங்க" (பு.வெ.9:14 உரை).*

*[காவல் + (முரசு + அம்) முரசம்.]*

**காவன் முரசு** *kāvaṉ-murašu,* பெ.(n.) காவன் முரசம் பார்க்க; see *kāvaṉmurašam.*

*[காவல் + முரசு.]*

**காவன்முல்லை** *kāvaṉ-mullai,* பெ.(n.) அரசனாட்சியைச் சிறப்பிக்கும் புறத்துறை (பு.வெ.8:24); Puram theme of extolling the king's rule.

*[காவல் + முல்லை = காவன் முல்லை. முல்லை = கற்பின் அடையாளப்பூ; அறநெறி பிழையாமை; அரசனின் உயர்பண்பினைக் காட்டும் முல்லைத் துறையில் பாடத்தக்க பெருமையுடைய அரசாட்சிச் சிறப்பு என்பது அதன் பொருள்.]*

**காவனிகுதி** *kāvanigudi,* பெ.(n.) காவற்காரர் செலுத்தும் வரி; (CG) duty paid by village watchmen for enjoyment of their privileges.

*[காவல் + நிகுதி.]*

**காவாளி** *kāvāḷi,* பெ.(n.) ***காய்வேளை*** பார்க்க; see *kāyvēḷai.*

*[காய்வேளை → காவாளி.]*

**காவளை** *kāvaḷai,* பெ.(n.) ***காய்வேளை*** பார்க்க; see *kāyvēḷai.*

*[காய்வேளை → காவளை.]*

**காவா** *kāvā,* பெ.(n.) காட்டுமல்லிகை (M.M.38); wild jasmine.

*[கா – காவு (காடு) காவான் → காவா = காட்டிலிருந்து கிடைத்த மல்லிகை.]*

**காவாங்கரை** *kāvaṅ-kaḷai,* பெ.(n.) வாய்க்காற் கரை (இ.வ.); bank of a channel.

*[கால்வாய் + கரை → காவாங்கரை.]*

**காவா** *kāvāy,* பெ.(n.) புல்வகை (வின்.); a kind of grass.

*[கலை → காலை → காவாய்.]*

**காவாரம்** *kāvāram,* பெ.(n.) நீர்ப்பாசி; duck weed. (சா.அக.).

*[கா → காவாரம்.]*

**காவாலன்கொடி** *kāvālaṅ-koḍi,* பெ.(n.) கவலைக்கொடி; star flower swallow wort. (சா.அக.).

*[கவலை → காவலான் + கொடி.]*

**காவாலி**[1] *kāvāli,* பெ.(n.) இளமை, வீண் பிதற்றல், ஏய்ப்பவன்; young of chap, trailor, bluff, rogue (இரு.நூ.).

*[கவல் → கவலி → காவாலி.]*

**காவாலி**[2] *kāvāli,* பெ.(n.) சிவன்; šiva. *"கற்றா னஞ்சாடு காவாலி"* *(பதினொ.சிவ. திருவந்.90).*

*[வ.கபாலம் – கபாலி > த.காவாலி.]*

**காவாலி**[1] *kāvāli,* பெ.(n.) திருநீற்றுப் பச்சை; holy ashes leaf (சா.அக.).

*[கா + ஆலி.]*

**காவாளர்** *kāvāḷar,* பெ.(n.) காவடி சுமப்போர் (சிலம்பு.15:20.5); carriers of *kāvaḍi.*

*[காவு + ஆளர்.]*

**காவாளி** *kāvāḷi,* பெ.(n.) காவடிக்காரர் (இரு.நூ.); carriers of *kāvaḍi.*

*[காவு + ஆளி.]*

**காவாளை** *kāvāḷai,* பெ.(n.) 1. காட்டுமல்லிகை; wild jasmine. 2. காய்வேளை (இரு.நூ.); five leaved clesme.

*[கா + வேளை → காவேளை → காவாளை.]*

*மறுவ : காவாளி (மலை)*

**காவாறு** *kāvāṟu,* பெ.(n.) கட்டடச் சாரம் (முக்.வழ.); supporting rafters.

*[கா + ஏறு → காவேறு – காவாறு (கொ.வ.).]*

**காவி**[1] *kāvi,* பெ.(n.) 1. காவிக்கல் (பிங்.)red ochre 2. ஆடையிலேறும் பழுப்பு; light yellowish-brown colour in garments consequent on frequent washing. 3. தாம்பூலம் முதலியவற்றால் பல்லில் ஏறும் பழுப்பு நிறம்; colour of the teeth as from chewing betel. 4.கருங்குவளை; blue nelumbo. *"காவி சேருங் கயற்கண்ணாள் பங்கா" (திருவாச. 32:5).* 5. அவுரி மருந்துருண்டை (மூ.அ) indigo cake.

**ம.,க.,தெ.,து.**காவி

*[கரு → கா → காவு → காவி. கருநிறம் மங்கிய நிறத்தைக் குறித்தது.]*

**காவி**[2] *kāvi,* பெ.(n.) கள் (பிங்); toddy.

*[கால் → காவு → காவி.]*

**காவி**[3] *kāvi,* பெ.(n.) கருநொச்சி (யாழ்.அக.); villow leaved justicia.

*[கா → காவு → காவி.]*

**காவிக்கருப்பி** *kāvi-kkruppi* பெ.(n.) கொடிவேலி; Ceylon lead wort (சா.அக.).

*[காவி + கருப்பி.]*

**காவிக்கல்[1]** *kāvi-k-kal,* பெ.(n.) ஒருவகைச் சிவப்புக் கனிமம்; ochre reddle red stone. "அடலுறுநற் காவிக்கல்" (பதார்த்த.1132).

**து.** காவிகல்லு

*[காவி[1] + கல்.]*

**காவிக்கல்[2]** *kāvikkal,* பெ.(n) 1. செம்மண்; red achre (red check) 2. செங்குழுநீர்க் கல்; stone of the colour of red Indian water lily.

*[காவி + கல்.]*

**காவிக்கொள்(ளு)தல்** *kāvi-k-kol-,* செ.குன்றாவி. (v.t.) தோளால் சுமந்து கொள்ளுதல் (கோ.தமி.கை.).

*[காவி →காவு →காவி + கொள்.]*

**காவிகம்[1]** *kāvaigam* பெ.(n.) கருந்தினை; black millet (சா.அக.).

*[கருப்பு →கப்பு →காவி →காவிகம். (கொ.வ.).]*

**காவிகம்[2]** *kāvigam,* பெ.(n.) சேங்கொட்டை; dhoby's nut (சா.அக.).

*[கருப்பு → காவிகம்.]*

**காவிச்சீமைச்சுண்ணாம்பு** *kāvi-c-cimai-cunnāmbu,* பெ.(n.) சிவப்பும் மஞ்சள் நிறமும் கலந்த சுண்ணாம்பு; hydrated brown and yellow limonites. (சா.அக.).

*[காவி + சீமை + சுண்ணாம்பு.]*

**காவிச்சீலை** *kāvi-c-cilai,* பெ.(n.) செம்மண்சீலை; a dark red cloth (சா.அக.).

*[காவி + சீலை.]*

**காவிதம்** *kāvidam,* பெ.(n.) கருங்குவளை; black water-lily. (சா.அக.).

*[கருப்பு →கப்பு →காவி →காவிகம்.]*

**காவிதி** *kāvidi,* பெ.(n.) 1. வேளாளர்க்குப் பாண்டியர் கொடுத்துவந்த ஒரு பட்டம் (தொல். பொருள்.30,உரை); ancient title bestowed on Velalas by Pāndya kings. 2. வணிகமாதர்பெறும் பட்டவகை; title conferred on Vaisya ladies. *"எட்டி காவிதிப் பட்டந் தாங்கிய மயிலியல் மாதர்" (பெருங்.இலாவாண.3:144).* 3. அமைச்சர் (திவா.) ; minister. 4. கணக்கர் இனம் (சூடா.); accountants caste. 5.வரி தண்டும் அரசுத்தலைவர்; collector of revenues.

**மா.** கவதி (முடித்திருத்துவோர்); **க.** கவிதி.

*[கா →காவு →காவுதி →காவிதி. (தோளில் தொங்கவிடும் மெல்லிய நீள்துண்டு அல்லது மேலாடை. ஒருவரைப் பெருமைப்படுத்துவதற்காக அணிவிக்கும் மேலாடையின் பெயர், அவர் பெறும் பதவிக்கு ஆகுபெயராயிற்று).]*

காவிதி என்னும் மேலாடை அணிந்த அமைச்சர் பதவியும் அமைச்சரும் காவிதியாயினர். (காவுதல் = சுமத்தல்). தோளில் அணிவிக்கப் பட்ட விலையுயர்ந்த ஆடை காவிதி எனப்பட்டது. குச்சரமொழியில் தோளில் துண்டு தாங்கிய துறவியை 'காவட' என்றும், 'காபடி' என்றும் வழங்குதல் காண்க. இடது தோளில் தொங்கும் மேலாடை (மெல்லிய சரிகை நெடுந்துண்டு. "புடைவீழ்ந்துகில் இடவயின் தழீஇ" (நெடுநல்.181) என நக்கீரரும் குறிப்பிடுதல் காண்க.

**காவிதிக்காணி** *kāvidikāni,* பெ.(n.) காவிதிப் பட்டம் பெற்றாருக்கு அரசோ, ஊர்ச் சபையினரோ அளிக்கும் இறையிலிநிலம்;tax free lands granted to people with *kāvithi* title. *"இவ்வூர் மத்யஸ்தன் தம்பிமார் காவிதிக்காணி" (தொகல்.தொ. xix. கல்.63).*

*[காவிதி + காணி.]*

**காவிதிகணை** *kāvidi-k-anai* பெ.(n.) காவிதிப் பட்டம் பெற்றோர் பெறும் கணையாழி மோதிரம்;*kanayāli* ring given to people with *kāvithi* title. *"சுந்தரபாண்டிய ஈஸ்வரத்து தேவரடியாள தேவன் கருதாச் சிலைக் காவிதி மகள் காவிதி கணை பெற்றாள்" (தெ.கல்.தொ.14, கல். 83).*

*[காவிதி + கணை.]*

**காவிதிப்புரவு** *kāvidi-p-puravu,* பெ.(n.) அரசராற் காவிதியர்க்குக் கொடுக்கப்பட்ட ஊர் (நன்.

158,மயிலை.); land bestowed upon the kings ministers.

*[காவிதி + புரவு.]*

**காவிதிப்பூ** *kāvidi-p-pū*, பெ.(n.) காவிதி யென்னும் பட்டத்துடன் அரசர் அளிக்கும் பொற்பூ (தொல். எழுத்து. 154,உரை); gold flower, the badge of the title *kāvidi*.

*[காவிதி + பூ.]*

**காவிதிமை** *kāvidimai*, பெ.(n.) கணக்கவேலை; accountant's work. காவிதிமை செய்ய ஒருவனுக்கு அரையன் மணவிலிங்கனான செம்பியன் பெருங் காவிதிக்குப் பங்கு அரையும் (S.I.I.ii.277).

*[காவிதி → காவிதிமை.]*

**காவிதோய்-த்தல்** *kāvi-tōy-*, 4. செ.குன்றாவி. (v.t) வண்ணமூட்டுதல்; dye or tinge with ochre, as ascetic's cloth.

*[காவி + தோய்-.]*

**காவிப்பட்டை** *kāvi-p-pattai*, பெ.(n.) சுவர்களிலிடுஞ் செம்மண்பட்டை (தஞ்.); strips of red wash alternating with white made on festive occasion on walls of temples etc.

*[காவி + பட்டை.]*

**காவிப்பாய்** *kāvi-p-pāy*, பெ.(n.) பாய்மரத்தின் அடிக்கட்டைக்கு அடுத்த பாகத்திற் கட்டப்படும் பாய் (M.Navi.83);top-sail

*[காவி + பாய்.]*

**காவிபிடி-த்தல்** *kāvi-pidi-*, 4. செ.கு.வி (vi) பழுப்புநிறம் ஏறுதல்; to acquire an yellowish brown colour as cloth by daily washing in water, to acquire a reddish colour as teeth from betel as from octure.

*[காவி + பிடி.]*

**காவிமண்** *kāvi-man*, பெ.(n.) செம்மண்; red ochre in the shape of loose earth.

*[காவி + மண்.]*

**காவிமரம்** *kāvi-maram*, பெ.(n.) பாய்மரத்தின் அடிக்கட்டைக்கு மேலுள்ள பாகம் (M.Navi.81); top mast.

*[காவி + மரம்.]*

**காவியடை-தல்** *kāviadai-*, 2 செ.கு.வி. (v.i.) ***காவியேறுதல்*** பார்க்க; see *kāvi-yēṟ-*, (சா.அக.).

*[காவி + அடைதல்.]*

**காவியம்** *kāviyam*, பெ.(n.) ஒக இருக்கையுள் ஒன்றான கும்பகம்; suppression of breath in yoga practice (சா.அக.).

*[குவி → கவி → கவியம் → காவியம்.]*

**காவியம்** *kāviyam*, பெ.(n.) ***காப்பியம்*** பார்க்க; see *kāppiyam.*

*[த. காம்பியம் >Skt. kAvya > காவியம்.]*

**காவியன்** *kāviyam*, பெ.(n.) ***காப்பியன்*** பார்க்க; see *kāppiyan*.

*[காப்பியன் → கவியன்.]*

**காவியேறு-தல்** *kāviyēṟu-*, 5 செ.கு.வி. (v.i.) செந்நிறமடைதல்; to acquire a reddish-brown colour as the teeth. (சா.அக.). **2.** ஆடையில் நீர்ப்பழுப்பேறுதல்; to have the yellowish - brown colour produced as in white cloth by constant washing.

மறுவ : காவியடைதல், காவி பிடித்தல்.

*[காவி + ஏறு-.]*

**காவிரம்** *kāviram*, பெ.(n.) கருப்பறுகு; black panic grass (சா.அக.).

*[கருப்பு → கப்பு → காவு → காவிரம்.]*

**காவிரி** *kāviri*, பெ.(n.) தமிழ் நாட்டில் ஓடும் ஆறு; a river in Tamilnadu.

மறுவ.காவேரி பொன்னி

*[கா + விரி. கா - சோலை. விரி - விரிந்திருத்தல்.*

*இருபுறமும் சோலை அடர்ந்திருக்க ஓடும் ஆறாதலின் காவிரி எனப் பெயர்பெற்றது. மணலோடு பொன் கொண்டுவரும் என்னும் கருத்தினால் பொன்னி என்றும் காவிரிக்குப் பெயரிட்டனர்.]*

**காவிரிப்பட்டினம்** *kāviri-p-paṭṭiṉam,* பெ.(n.) ***காவிரிப்பூம்பட்டினம்*** பார்க்க; see *kāviri-p-pūmpaṭṭiṉam.*

*[காவிரி + பட்டினம்.]*

**காவிரிப்பூம்பட்டினம்** *kāviri-p-pūm-paṭṭṉam,* பெ.(n.) சோழர்க்குரிய தலைநகரமும் பழைய துறைமுகப் பட்டினமுமாகிய புகார் நகரம்; ancient sea port and capital of the Chola kingdom the Khaberis of Ptolemy. *“காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்கண்ணனார்” (அகநா.107).*

**மறுவ.** காவிரிப்பட்டினம்

*[காவிரி + புகும் (பூம்) பட்டினம்.]*

**காவிரிபுதல்வர்** *kāviri-pudalvar,* பெ.(n.) வேளாளர் (சிலப்.148.உலை); *Vēḷāḷās* as the sons of the soil, fertilised by the Kaveri.

*[காவிரி + புதல்வர்.]*

**காவில்லி** *kā-villi,* பெ.(n.) 1. தோண்டிப் பூடு; blood drop ordue tree. 2. பூந்தாளி; stringing fruited ordue tree (சா.அக.).

*[கா + வில்லி.]*

**காவிளாய்** *kāviḷāy,* பெ.(n.) ***காவிளை*** (மலை.) பார்க்க; see *kāviḷai.*

*[காவிளை → காவிளாய்.]*

**காவிளை** *kāviḷai,* பெ.(n.) 1. வேளை; an annual herb growing in waste lands 2. ***கொழிஞ்சி*** பார்க்க; see *koḻiñji.*

**மறுவ.** காவிளாய்

*[காய்வேளை → காவிளை.]*

**காவீரம்** *kāvīram,* பெ.(n.) 1.அலரி; oleander. 2. மஞ்சள்; saffron(சா.அக.).

*[கரவீரம் → காவீரம்.]*

**காவு[1]-தல்** *kāvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தோளாற் காத்தண்டு சுமத்தல்; to carry on the shoulder as a palanquin; a pole with a weight at each end. *“காவினெங் கலனே” (புறநா.206).* 2. சுமத்தல்; bear or sustain anything heavy on the arms or on the head *“ஊனைக்காவி யுழிதருவர்” (தேவா.338:1).*

**Fin.** kantaa; **Es.** kanda.

*[கா → காத்தல் = சுமத்தல். கா = காவுதல்.]*

**காவு[2]-தல்** *kāvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) விரும்புதல்; to long for, desire. *“தேனைக்காவி யுண்ணார் சிலதெண்ணர்கள்” (தேவா.338:1).*

*[அவ்வு → கவ்வு → காவு = (விரும்புதல்.)]*

**காவு[3]-தல்** *kāvu-,* 5. செ.குன்றாவி (v.t.) 1. கடி; to bite. 2. உண்ணு; to eat.

*[கவ்வு → காவு (தின், உண்) காவு – கா எனத் திரிந்து வடபுலத்து மொழிகளில் வழங்குகிறது.]*

**காவு[4]** *kāvu,* பெ.(n.) 1. சிறுதெய்வங்களுக்கு இடும் பலி; sacrifice offered to inferior deities. காளிக்குக் காவுகொடுத்தார்கள். 2.காவுப் பொட்டுக் குரியமை; magic ointment used for mark on the forehead.

*[கவ்வுதல் → கடித்தல், தின்னுதல்,உண்ணுதல். கவ்வு → காவு (உண்ணுதற்குரிய பொருள்.]*

**காவு காவு என** *kāvu-kāvu-eṉa-,* இடை. (part) உண்ணுதற்குரிய வேட்கையோடு ; with an eagerness to eat. போடப் போட எல்லாச் சோற்றையும் காவுகாவு என்று தின்றுவிட்டான் (உ.வ.).

*[காவு + காவு + என.]*

**காவுதடி** *kāvu-taḍi,* பெ.(n.) காவடித்தண்டு; pole for carrying burdens on the shoulders.

*[காவு[1] + தடி.]*

**காவுப் பொட்டு** *kāvu-p-poṭṭu,* பெ.(n.) பூசாரி நெற்றியிலிடும் மைப்பொட்டு (வின்.); a mark of magic ointment worn on the forehead by the temple priest.

*[கருப்பு → கப்பி → காவு + பொட்டு.]*

**காவுவோர்** *kāvuvōr,* பெ.(n.) பல்லக்குச் சுமப்பவர்; palanquin bearers.

*[காவு¹ → காவுவோர்.]*

**காவெட்டு** *kāveṭṭu,* பெ.(n.) ***காய்வெட்டு*** பார்க்க; see *kāveṭṭu.*

*[காய்வெட்டு→காவெட்டு]*

**காவேட்டைக்காரன்** *kāvēṭṭai-k-kāran,* பெ.(n.) ஊராளி இனத்தில் வேட்டைக்காரர் தலைவன்; head huntsman of the Urāḷi caste who distributes every animal that is killed.

*[கா + வேட்டைக்காரன். கா=தலைவன்.]*

**காவேரம்** *kāvēram,* பெ.(n.) குங்குமம்; a red powder used for mark on the forehead (சா.அக.).

*[கரவீரம் → காவேரம்.]*

**காவேரி** *kāvēri-,* பெ.(n.) காவிரி பார்க்க; see *kāviri.*

*[காவிரி → காவேரி.]*

*kâvêr-i,* turmeric, also the river kâvêri (Cauvery) (from its muddy colour): assumed root *kav,* to paint. Greek name of the same river, XáBnpos (*Kabêros*). Possibly this word may be of Sanskrit origin. I may suggest, however, the possibility of the origin of the name of the river Kâvêṛi, from the Dravidian *Kâvi,* red ochre, or *kâ* (*kâ-vu*), a grove, and *êr-u,* Tel. a river, or *êr-i,* Tam. a sheet of water. A celebrated temple on the banks of the river exhibits this latter word *kâ*-viz., Tiruvânei-(*k*) *kâ,* near Trichinopoly, 'the sacred grove of the elephant' (C.G.D.F.L. Pg.569).

**காவேரிப்பட்டணம்** *kāvēri-p-paṭṭaṇam,* பெ.(n.) காவேரியின் பெயரால் அமைந்த நகரம்; a city in the name of Kāvēri.

Pkt.paṭṭaṇa> த. பட்டணம்.

*[காவேரி + பட்டணம்.]*

**காவேரிமணல்** *kāvēri-maṇal,* பெ.(n.) இரும்புப் பொடி கலந்த மணல் (வின்.); iron sand.

*[காவேரி + மணல்.]*

**காவேரிமான்மியம்** *kāvēri-maṉmiyam,* பெ.(n.) காவிரியின்பெருமை கூறும் ஒரு தொன்மம் (புராணம்); name of a purana on the Kavēri river.

*[காவேரி + மான்மியம்.]*

**காவோலை** *kāvōlai,* பெ.(n.) முற்றிய ஓலை; ripe palm leaf. *"ஒலிகாவோலை" (நற்.38).*

*[காழ் + ஓலை – காழோலை → காவோலை.]*

**காழ்¹ –த்தல்** *kāḷ-,* 4 செ.கு.வி (vi) 1. முற்றுதல்; to become hard, mature. "காழ்த்த மரம்" (திரிடுக.75) 2. மனக்காழ்கொள்ளுதல்; to be firm, strong in mind, implacable. *"காழ்த்த பகைவர் வணக்கமும்" (திரிகடு.24).* 3.அளவுகடந்து மிகுதல்; to increase beyond measure, abound. *"ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க்கு" (குறள்,760.).* 4. உறைத்தல் (திவா.); to be pungent, acrid.

*[கர் → காள் → காழ்.]*

**காழ்²–த்தல்** *kāḷ-,* செ.கு.வி (vi) கொல்லத் துணிதல்; to determine to kill. *"அவன் கருமங் காழ்த்தமை கண்டவர் தம்முளான்" (சீவக. நாமக.213) (த.சொ.அக.).*

*[காள் → காழ்.]*

**காழ்³** *kāḷ,* பெ.(n.) 1. மரக்காழ் (திவா.); hardness, solidity, close grain as of timber core. 2. மன உறுதி; strength of mind. *"காழிலா மம்மர்கொள் மாந்தர்" (நாலடி,14).* 3. கட்டுத்தறி; post to which a cow is tied. *"கவைத்தாம்பு தொடுத்த காழ்முன் நல்கல்" (பெரும்பாண்.214).* 4. தூண்; pillar. *"மாத்திரட்டிண்காழ்" (நெடுநல்.111).* 5. ஓடஞ் செலுத்தற்குரிய தண்டு; oar. "வணங்குகாழ் வங்கம் புகும்" (கலித்.92:47) 6. இருப்புக் கம்பி; iron rod. *"காழிற் சுட்டகோழூன்" (பொருந.105).* 7. யானையை செலுத்தும் பரிக்கோல்; elephant goad. *"காழ்வரை நில்லாக் கடுங்களிற் றொருத்தல்" (கலித்.2:26).* 8.கதவிற் செறியுந் தாழ் (திவா.); bolt bar as of a door. 9. விறகு (பிங்.); fire wood. 10.

காம்பு; handle, stem. "காழெஃகம்" பிடித் தெறிந்து (பதிற்றுப்.90:37) 11. கழி (சிறுபாண்.133, உரை)rafter.

*[கள் → காள் → காழ்.]*

**காழ்**[4] *kāḷ,* பெ.(n.) 1. ஒளி (திவா.); brightness, lustre. 2. செம்மணி (இரத்தினம்); gem. "பருக்காழுஞ் செம்பொன்னும்" (பு.வெ.914). 3. முத்து; pearl. *"பரூஉக்கா ழாரம்" (சிலப்.4:14.).* 4.பளிங்கு (பிங்.); crystal. 5.மணிவடம்; garland of pearls, of gems. *"முப்பத்திருகாழ்" (சிலப்.6:87).* 6. பூமாலை; garland of flowers *"ஒருகாழ் விரன்முறை சுற்றி" (கலித்.54:7).* 7.நூற்சரடு; thread, string. *"திருக்கோவை காழ்கொள" (பரிபா.6:15).* 8. முத்துவடம்; string of pearls. *"காழ்விரி வகையார மீவரு மிளமுலை" (கலித்.4).*

*[கள் → காய் → காழ் (முரட்சி, முத்து). முத்தைக் குறித்த சொல் முத்தின் ஒளியையும் அழகையும் குறித்தது.]*

**காழ்**[5] *kāḷ,* பெ.(n.) 1. விதை; seed. *"வித்திடினுங் காஞ்சிரங்காழ் தெங்காகா" (நாலடி.243).* 2. கொட்டை; stone, nut, kernl as of fruits. *"ஈந்தின்காழ் கண்டன்ன" (பெரும்பாண்.130).* 3. கனித்தோல் (பிங்.); skin as of fruit, rind. 4. பருக்கைக்கல் (திவா.); gravel.

*[கள் → காள் → காழ். (திரட்சி) முற்றிய வித்து.]*

**காழ்**[6] *kāḷ,* பெ.(n.) 1. கருமை; blackness *"கதுப்புவிரித் தன்ன காழக நுணங்கறல்" (சிறுபாண்.6).* 2. குற்றம்; blemish, defect, fault *"எக்காழு மிகந்துல கின்பமுற" (காஞ்சிப்பு. கழுவாய் 300).* 3. **இரும்பிலி மலை** பார்க்க; see *irumbili malai.*

*[காள் → காழ் → கருமை (வே.க.121).]*

**காழ்**[7] *kāḷ,* பெ.(n.) மரத்துண்டு; piece of wood. "தேய்வை வெண்காழ்" (புறநா.369:19).

*[காள் – காழ் → திரட்சி, வன்மை.]*

**காழ்கொள்(ளு)–தல்** *kāḷ-koḷ-,* 16 செ.கு.வி (v.i.) முதிர்தல்; to mature, come to a climax. *"நிறையு முண்டோ காமங் காழ்கொளின்" (மணிமே. 5:20).*

*[காழ் + கொள் (ளு)–.]*

**காழ்கோளி** *kāḷ-kōḷi,* பெ.(n.) ***நெட்டிலிங்கம்*** (L) பார்க்க; see *neṭṭliṅgam.*

*[காழ் +கோளி.]*

**காழ்ப்பு** *kāḷppu,* பெ.(n.) 1. உறைப்பு (திவா.); pungency. 2. மரத்தின் உறுதியான நடுப்பகுதி; close grain as of the heart of timber. 3. நீங்கா வெறுப்பு; implacable hatred. *"காழ்ப்பு மருட்கை மதத்தோடு" (சேதுபு. மங்கல. 15).* 4. தழும்பு (இ.வ).; scar. 5. சாரம்; essence *"வெளிறுங் காழ்ப்பு மாகச் சொல்லி" (ஈடு. 6,7,1).*

**ம.** காம்பு

*[காழ் → காழ்ப்பு.]*

**காழ்வை** *kāḷvai* பெ.(n.) அகில்; eagle wood. *"ஆரங்காழ்வை கடியிரும்புன்னை" (குறிஞ்சிப். 93) (த.செ.அக.).* 2. அகிற் பூ ; flower of agil tree (சா.அக.).

*[காழ் → காழ்வை.]*

**காழகம்**[1] *kāḷagam,* பெ.(n.,) மியான்மர் நாடு; Burmah Myanmar. *"காழகத்தாக்கமும்" (பட்டினப். 191) (திவா.).*

**மறுவ.** பர்மா

*[காழ்வை (அகில்) + அகம் – காழகம்.]*

**காழகம்**[2] *kāḷagam,* பெ.(n.)1.ஆடை; cloth. *"புலராக் காழகம் புலரவுடீஇ" (திருமுரு. 184).* 2. கையுறை; glove put on while handling an arrow *"வினைமாண் காழகம் வீங்கக் கட்டி" (கலித்.7).*

*[காழ்[3] +அகம். காழ், கருநிறம், கருநிற முடைய ஆடை, கருநிறக் கையுறை.]*

**காழகம்**[3] *kāḷagam,* பெ.(n.) கருமை; blackness. *"காழகமூட்டடபட்ட" (சீவக 1230).*

*[கால் → காழ் → காழகம். (வேக.121).]*

**காழகம்**[4] *kāḷagam,* பெ.(n.) கழுதை (அக.நி.); ass.

**தெ.**காடிதெ

*[காள் → காழ் → காழகம் (காள்காள் எனக்கத்துவது).]*

**காழம்** *kāḷam,* பெ.(n.) நீலநிற ஆடை; a blue garment. *"காழமிட்ட குறங்கினன்" (கம்பரா. கங்கைப். 31).*

*[காழகம் → காழம்.]*

**காழி[1]** *kāḻi,* பெ.(n.) மிகுவலி, உறுதி; great strength, toughness, hardness. *"காழிக்கிளர் நாவலந் தீவில்" (ஞானவா.கற்கடி.8).*

*[காழ் → காழி.]*

**காழி[2]** *kāḻi,* பெ.(n.) சீர்காழி என்னும் ஊர்; place name cirgāḻi.

*[சீர்காழி → காழி. ]*

**காழிப்பிரான்** *kāḻipirāṉ* பெ.(n.) சம்பந்தன்; Saint Sambandan.

*[சீர்காழி→காழி. காழி + பிரான்.]*

**காழியர்கோன்** *kāḻiyarkōṉ* பெ.(n.) திருஞான சம்பந்தர்; Šaiva Saint, Gnanasambandar. *"கண்ணாருங் காழியர்கோன் கருத்தார் வித்த" (தேவா.170:1).*

மறுவ. காழிப்பிரான்

*[சீர்காழி→ காழி → காழியர் + கோன்.]*

**காழோர்** *kāḻōr* பெ.(n.) கரிக்கோலினராகிய யானைப்பாகர் ; mahouts. *"காழோர் வாலுவர் கடுந்தே ரூருநர்" (சிலப். 22:12).*

*[காழ்[2] → காழோர்.]*

**காளக்கவி** *kāla-k-kavi,* பெ.(n.) **காளப்புலவர்** பார்க்க; see *kāla-p-pulavar*

*[காளம் = எக்காளம். காளம் + கவி.]*

**காளகண்டம்[1]** *kāḷa-kaṇḍam,* பெ.(n.) குயில் (பிங்.); koel, kuil, Indian cuckoo.

*[காளம் + கண்டம் → காளகண்டம் = கரிய கழுத்துடையது. காளம் = கருமை, கண்டம் = கழுத்து.]*

**காளகண்டம்[2]** *kāḷa-kaṇḍam,* பெ.(n.) 1. மயில்; peacock. 2. கரிக்குருவி; wagtail. 3. ஊர்க் குருவி; sparrow. 4. வேங்கைமரம்; East Indian kino tree.

ம. காளகண்டம்

*[காளம் + கண்டம் – காளகண்டம். காளம் = கருநிறம், கருநீலநிறம் கொண்ட கண்டம் (கழுத்து) கொண்ட மயிலும் கரிக்குருவியும் இந்நிறத்தன எனக் கருதினர். கருநிற அடிப்பகுதி கொண்டதால் வேங்கைமரத்தையும் சுட்டியது.]*

**காளகண்டன்** *kāḷa-kaṇḍaṉ,* பெ.(n.) சிவன் (உரி.நி.); Siva, as having azure - coloured neck.

ம. காளகண்டன்

*[காளம் + (கண்டம்) கண்டன் → காளகண்டன். காளம் = நஞ்சு. கண்டம் = தொண்டை.]*

**காளகண்டி[1]** *kāḷa-kaṇḍi,* பெ.(n.) காளி; Durga.

*[காளம் = கறுப்பு, நஞ்சு. கண்டம் = தொண்டை. கண்டம் → கண்டி (கண்டம் உடையவள்)]*

**காளகண்டி[2]** *kāḷakaṇḍi,* பெ.(n.) ஏழு அமங்கல நாள்களுள் ஒன்று; one of the seven inauspicious days. *"கருதுங் கலிகாள கண்டியுந் தீதெனக் காட்டினரே" (விதான. குணாகுண. 78,79.) (த.சொ.அக.).*

*[காளம் + கண்டி]*

**காளகந்தம்** *kāḷakandam,* பெ.(n.) வெள்வேல்; white babool (சா.அக.).

*[காளம் + கந்தம்.]*

**காளகம்[1]** *kāḷagam,* பெ.(n.) 1.சோறு; boiled rice. 2. ஈரல்; liver. 3. சிவப்புச்சோளம்; red maize (சா.அக.).

*[காளம் → காளகம் (வெந்தது, சிவந்தது).]*

**காளகம்**[2] *kāḷagam,* பெ.(n.) 1.கருமை; blackness. *"காளக வுடையினள்" (சீவக. 320).* 2. சேங்கொட்டை (L); marking-nut. 3. ***மருக்காரை*** (மலை.) பார்க்க; see *marukkārai.*

காளம்>வ. காலக்க

*[காளம் → காளகம் (வே.க.121.) காளம் → கருப்பு.]*

**காளகம்**[3] *kāḷagam,* பெ.(n.) எக்காளம் (வின்.); long trumpet, ram's horn.

*[கால் → கார் → காளம் → காளகம் = நீண்ட இசைக்கருவி, எக்காளம். கால் = நீட்சி.]*

**காளகன்று** *kāḷa-kaṉṟu,* பெ.(n.) ***காளைக்கன்று*** பார்க்க; see *kāḷai-k-kaṉṟu.*

*[காளை + கன்று = காளகன்று. (கொ.வ.).]*

**காளகன்னாதம்** *kāḷakaṉṉadam,* பெ.(n.) 1.கறுப்புக்கல் நாதம்; fossil exudation from black granite stone. 2. வெண்கல் மலை; white stone mountain (சா.அக).

*[காளம் + கல் + (நதம்) நாதம்.]*

**காளகாசம்** *kāḷakāšam,* பெ.(n.) அவுரி; Indigo plant (சா.அக.).

*[காளம் + காசம்.]*

**காளகாதம்** *kāḷa-kādam,* பெ.(n.) வன்னிமரம்; arjuna penance tree.

மறுவ. பரம்பை (சா.அக.)

*[காளம் + காதம்.]*

**காளகூடம்** *kāḷa-kūḍam,* பெ.(n.) 1.பாற்கடலில் தோன்றிய நஞ்சு (ஆலகாலம்) (பிங்.); poison from the sea of milk kept by Siva in his throat in order to save the Devas from destruction. 2. ஒரு நிரயம்; a hell. *"கோளனைக் காளகூட நரகிற் கவிழ்த்தனர்" (குற்றா.தல.கவுற்.60.).*

ம. காளகூடம்

*[காளம் = நஞ்சு, கருமை, துன்பம். கூடம் = ஒன்று கூடும் இடம். காளம் + கூடம்.].*

**காளச்சிலை** *kāḷa-c-cilai,* பெ.(n.) வைடூரியம் (சங்.அக.); cat's eye, a variety of chalcedony.

*[காழ் → காழம் → காளம் + சிலை – காளச்சிலை = கட்டியான கல்.]*

**காளச்சீரகம்** *kāḷa-c-cīragam,* பெ.(n.) ***காட்டுச்சீரகம்*** பார்க்க; see *kāṭṭu-c-cīragam.*

ம. காளசீரகம்

*[காள(ம்) + சீரகம்.]*

**காளசத்திரம்** *kāḷašattiram,* பெ.(n.) பாக்கு; areca nut (சா.அக.).

*[காளம் + சத்திரம்.]*

**காளசுந்தரி** *kāḷašundari,* பெ.(n.) 1. உமை; Goddess Uma. 2. காளி, கொற்றவை; *kāḷi,* Parvati.

*[காளம் + சுந்தரி.]*

**காளசூரம்** *kāḷašūram,* பெ.(n.) சிவதைவேர்; Indian falap (சா.அக.).

*[காளம் + சூரம்.]*

**காளத்தி** *kāḷatti,* பெ.(n.) வட ஆர்க்காடு மாவட்டத்தில் சிவன் கோயில் கொண்டுள்ள ஓர் ஊர்; a Siva shrine in north Arcot-district. *"மகிழ்ச்சி பொங்கக் காளத்தி கண்டு கொண்டு" (பெரியபு. கண்ணப்ப. 100).*

*[காளம் + அத்தி → காளத்தி (கருங்குன்று.]*

**காளத்தீசுவரர்** *kāḷattīšuvarar,* பெ.(n.) திருக்காளத்தியில் கோயில் கொண்டிருக்கும் சிவன் (சா.அக.);a Siva shrine in *Thirukkāḷatti.*

**காளத்தீர்க்கி** *kāḷa-t-tīrkki,* பெ.(n.) 1.குளிரி; water archer. 2. மயில்விசிறி; fan made for peacock's feather. 3. நச்சு முறிக்கும் மருந்து; antidote (சா.அக.).

*[காளம் + தீர்க்கி. காளம் = நஞ்சு.]*

**காளப்புலவர்** *kāḷa-p-pulavar,* பெ.(n.) ஊது காளத்தை விருதாகப் பெற்ற புலவன்; (தக்கயாகப். பக்.) 277 poet whose presence is proclaimed by blowing a trumpet as mark of honour.

*[காளம் = எக்காளம். காளம் + புலவர்.]*

அரசனால் அல்லது புரவலரால் அரசப் பெருங் குடி மக்களுக்கு உள்ளது போன்ற உயர் மதிப்பு நடைமுறைகளைப் புலவர்களுக்கும் நடைமுறை களாகத் தந்து பெருமை படுத்தப் படுவது உண்டு. வருகையின்போதும் புறப்பாடின்போதும் எக்காளம் ஊதுவோர் உடன்வரச் செய்யும் பெருமை பெற்ற புலவர்.

**காளபந்தம்** *kāḷa-pandam,* பெ.(n.) ஒருவகை விளக்கு; a kind of light (த.சொ.அக.).

*[காளம் + பந்தம்.]*

**காளபம்** *kāḷabam,* பெ.(n.) போர் (சூடா.); battle, fight, warfare.

*[காளகம் → காளவம் → காளபம் (கொ.வ.).]*

**காளம்[1]** *kāḷam,* பெ.(n.) 1.கருமை; blackness. *"காளமா கிருளை" (சீவக. 2245).* 2. நஞ்சு (திவா.); poison, venom. 3. பாம்பு. (சங்.அக.); serpent. 4. எட்டிமரம் (சூடா.); strychnine. 5. அவுரி (மலை.); Indian indigo.

*[காள் → காளம். (வே.க. 120.)]*

*kāla, krishna,* black; a black colour. Gt. (p.520) and Cl. (p.501) derive *kāla* from D. *kāl*3. Cf.D. kad, etc., kandu 6, kari 3, kare 7, kare, kargu 2 and 3, karpu, kalgu, *kāgu, kāḍigĕ, kāḍu*3, from which themes probably also *krishna* is derived (K.K.E.D. XXVIII).

**காளம்[2]** *kāḷam,* பெ.(n.) 1.நல்விளைவுக்குக் காரணமான பெருமழை (வின்.); heavy shower productive of good crops. 2. முகில் (சது.); cloud.

*[காள் → காளம் (வே.க.120.) காளம் = கருமை, கார்மேகம், மழை]*

**காளம்[3]** *kāḷam,* பெ.(n.) 1. சூலம்; trident. 2. கழு; impaling stake.

ம. காளம்

*[காழ் → காழம் → காளம். காழ் = குத்துக்கோல், சூலம்.]*

**காளம்[4]** *kāḷam,* பெ.(n.) ஊதுகொம்பு; trumpet, horn. *"சங்க படகம் பேரிதாரை காளம் தாளம்" (பெரியபு. திருஞான. 620.).*

ம. காளம்

*[கால் → காள் → காளம் (நீண்ட இசைக்கருவி, ஊது கொம்பு)]*

**காளம்[5]** *kāḷam,* பெ.(n.) திருமாலின் சக்கரப் படை (ரஹஸ்ய. 65.); Visnu's discus.

*[கோளம் → காளம்]*

**காளம்[6]** *kāḷam,* பெ.(n.) 1.சிறுசின்னி; birch leaved acalypha. 2. கழுகு; eagle (சா.அக.).

*[காள் → காளம்.]*

**காளம்பிடி-த்தல்** *kāḷam-piḍi,* 4 செ.கு.வி.(v.i.) எக்காளமூதுதல்; to blow the trumpet. *"குலக்கவிக்குக் காளம் பிடித்திடிற் சின்னம்படும்" (தமிழ்நா. 83.).*

*[காளம் + பிடி-.]*

**காளமுகி** *kāḷa-mugi,* பெ.(n.) ***காளமுகில்*** பார்க்க; see *kāḷa-mugil.*

ம. காளமுகி

*[காளமுகில் → காளமுகி (கொ.வ.)]*

**காளமுகில்** *kāḷa-mugil,* பெ.(n.) கல்மழை பொழியும் முகில்; a cloud which rains hail-stones one of seven kinds.

மறுவ. காளமேகம்

*[காழ் → காழம் → காளம். (திரண்ட பனிக்கட்டி, ஆலங்கட்டி). காளம் + முகில். (காளமுகில் = ஆலங்கட்டி, பொழியும் முகில்.).]*

**காளமேகத்தி** *kāḷa-mēgatti*, பெ.(n.) கருநாகம்; black cobra (சா.அக.).

*[காளம் + மேகத்தி.]*

**காளமேகப்புலவர்** *kāḷa-mēga-p-pulavar*, பெ.(n.) விரைந்து பாடும் பாவலராக (ஆசுகவி)வும், இரட்டுற மொழிதலில் வல்லவராகவும், வரதன் என்னும் இயற்பெயருடையராகவும் பெருமுகிற் போற் பாடல்களைப் பொழிபவராகவும், 15 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த புலவர்; a distinguished Tamil poet of the 15th c., called from his pouring forth poems in great abundance, his real name being. Varadan. *"இருந்தால் இருந்தேன் எழுந்தேனே யாகில் பெருங்காள மேகம் பிளாய்" (தனிப்பா.).*

*[காளமேகம் + புலவர். கருமழை பொழியும் காளமேகம் போலப் பாடல்களை விரைந்து பாடும் புலவர்.]*

**காளமேகம்**[1] *kāḷa-mēgam*, பெ.(n.) 1.ஆலங்கட்டி மழை பொழியும் கருமேகம்; cloud which showers hail-stones. 2. காளமேகம் என்னும் பெயர் பெற்ற புலவர். **காளமேகப்புலவர்** பார்க்க; see *kāḷa-mēga-p-pulavar*. *"ஆசுகவியால் அகில உலகெங்கும் வீசுபுகழ்க் காளமேகமே" (தனிப்பா.).*

ம. காளமேகம்

*[கார் → காள் → காளம் + மேகம் – காளமேகம்.]*

**காளமேகம்**[2] *kāḷamēgam*, பெ.(n.) 1.தேற்றான் கொட்டை; marking nut. 2. செங்குன்றி; red Indian licorice (சா.அக.).

*[காளம் = கருமை. காளம் + மேகம் (படர்ந்தது).]*

**காளயுத்தி** *kāḷayutti*, பெ.(n.) ஆண்டு வட்டம் அறுபதுள் 52 ஆம் ஆண்டு; the 52nd year of the Indian cycle of 60 years.

மறுவ. காளயுத்தி

**காளவஞ்சரம்** *kāḷavañcaram*, பெ.(n.) காள வஞ்சர மலை; a mountain. *"கந்த மாதநமும் உயர் காளவஞ்சர – மந்தமில் சித்திரகூடம்" (வேதாரணி யபு. குசுமார.6) (த.சொ.அக.).*

*[காளம் + வெம் + சுரம் – காளவெஞ்சுரம் → காளவஞ்சரம்.]*

**காளவடிவழகி** *kāḷa-vaḍivaḻagi*, பெ.(n.) பொன்னாங்காணி; Mari-gold verbesina (சா.அக.).

*[காளம் + வடிவழகி.]*

**காளவாசல் காற்றாடி** *kāḷavāšal-kāṟṟāḍi*, பெ.(n.) சுண்ணாம்புக் காளவாயில் எரியும் கல்கரியை நன்றாக எரியச் செய்யக் காற்றைச் செலுத்தும் எந்திரம் (பொ.வழ.); wind blower in lime-kiln.

*[காளவாசல் + காற்றாடி.]*

**காளவாய்**[1] *kāḷa-vāy*, பெ.(n.) கழுதை (பிங்.); ass, as being trumpet-mouthed.

*[காளம் = எக்காளம். காளம் + வாய் – காளவாய் (எக்காளம் போன்று தொடர்ந்து கத்தும் கழுதை.]*

**காளவாய்**[2] *kāḷavāy*, பெ.(n.) சுண்ணாம்புக் காளவாய், செங்கல்கள் சுடுஞ்சூளை; kiln for lime or bricks.

மறுவ. காளவாசல்

ம. காளவாய்

*[கால் → காள் → காளம் + வாய் (நீண்ட வாயுள்ள வடிவில் அமைக்கப்பட்ட சுண்ணாம்புச் சூளை.]*

**காளவாய்க்கல்** *kāḷavāy-k-kal*, பெ.(n.) சுட்ட புதுச்செங்கல் (வின்.); bricks fresh from the kiln.

*[காளவாய்[2] + கல்.]*

**காளவாயன்** *kāḷavāyaṉ*, பெ.(n.) கூச்சலிட்டுக் கத்துபவன் (வின்.); person with a trumpet tongue or a loud voice; one who blabs out secrets, babbler.

*[காளவாய் + அன்.]*

**காளவிளக்கு** *kāḷa-viḷakku*, பெ.(n.) திருவிழா முதலிய காலங்களில் பயன்படுத்தும் பெருவிளக்கு;

lamps used for the illumination of gardens and grounds on great festive occasions.

*[காளம் + விளக்கு. காளம் = நீட்சி, பருமை.]*

**காளன்**[1] *kāḷaṉ,* பெ.(n.) கருநிறமுடையவன்; a black man. 2. இயற்பெயர்; a proper noun.

ம., பட. காளன்.

*[காள் + அன்.]*

**காளன்**[2] *kāḷaṉ,* பெ.(n.) மாழைகளை உருக்கும் உலைக்களம்; a fire-place where double bellows are used for melting metals (சா.அக.).

*[காளம் = உலை.]*

**காளன்**[3] *kāḷaṉ,* பெ.(n.) மாசாத்தாவின் படைத் தலைவனாகிய மாகாளான் (கந்தபு. மகாசாத். 67.); the commander-in - chief maha-sāsta.

*[மாகாளன் → காளன். (முதற்குறை)]*

**காளன்**[4] *kāḷaṉ,* பெ.(n.) பச்சடிவகை (இ.வ.); a savoury fluid treated with vegetables and spices in curd.

ம.காளன்

**காளா** *kāḷā,* பெ.(n.) மீன்வகை (m.m. 761.); robaul fish.

*[காளம் → காளா.]*



காளா

**காளாஞ்சி**[1] *kāḷāñji,* பெ.(n.) 1.தம்பலந் துப்புங் கலசம்; spittoon. 2. தாம்பூலமெடுக்குங் கலம்; betel-holder. *"பைம்பொனிற் றிகழ்தணிகை காளாஞ்சி"* (பிரபோத. 11, 31).

ம., க., தெ. காளாஞ்சி.

*[காள் → காளம் → காளாஞ்சி.]*

**காளாஞ்சி**[2] *kāḷāñji,* பெ.(n.) ஊதைநோய் வகை (வின்.); a kind of rheumatism.

*[காள் → காளாஞ்சி.]*

**காளாஞ்சி**[3] *kāḷāñci,* பெ.(n.) 1. எச்சிற் பழக்கம்; spitting habit. 2.காளசி; liquid of tambool. 3. தாம்பூலக் கமலம்; solid of tambool. 3. வாதநோய்; rheumatism (இரு.நூ.).

*[காள் → காளாஞ்சி.]*

**காளாபிடாரி** *kāḷāpiḍāri,* பெ.(n.) ஊரின் நடுவில் அமைக்கப்பெறும் சிற்றூர்த் தெய்வம் (பெண். தெய்வம்.);village female deity. *"இவ்வூர் நடுவிற்சேரி திருமணி மண்டகமுடைய காளாபிடாரிக்கு நாங்கள் விற்றுக்கொடுத்த.... " (கல்வெட்டு).*

**காளாம்பி**[1] *kāḷāmbi,* பெ.(n.) காளான்; mushroom. *"பூழி பூத்த புழற்கா ளாம்பி"* (சிறுபா. 134).

*[காள் → காளான் → காளாம்பி.]*

**காளாம்பி**[2] *kāḷāmbi,* பெ.(n.) கருங்காளான்; black mushroom.

*[காள் + ஆம்பி.]*

முதலிற் கரிய ஆம்பியையே குறித்த காளாம்பி, காளான் என்னும் இருபெயர்களும், பின்னர் வெள்ளாம்பிக்கும் காறாம்பிக்கும் பொதுப் பெயராகி விட்டன. "ஆவுதை காளாம்பி போன்ற" (களவழி. 36). இதில் "காளாம்பி" வெள்ளாம்பியைக் குறித்தது. காளான் என்று இருவகை ஆம்பியையுங் குறிப்பது இன்றைய உலக வழக்கு. காறாம்பியைப் பேய்க்காளான் என்பர் (வே.க.120).

**காளாமுகம்** *kāḷā-mugam,* பெ.(n.) மாவிரதத்தைப் பெரும்பாலும் ஒத்த சிவசமய உட்பகுதி; one of the minor systems of Saivasm closely allied to Maviradam.

*[காளன் = சிவன். காளன் → காளம் → காளமுகம்.]*

**காளாமுகர்** *kāḷāmugar,* பெ.(n.) சிவனியரில் ஒரு சாராரான காளாமுகவகுப்பினர் (பிங்.); Saiva sect following the *kaḷamugam* system.

*[காளாமுகம் → காளாமுகர்.]*

**காளான்** *kāḷāṉ,* பெ.(n.) சதுப்பு நிலங்களில் மழைக்குப்பின் தோன்றும் பச்சையமில்லாத செடிவகை; fungus mushroom, it is found largely grown in swampy soils, but generally shoots out from the earth a few days after the rain (சா.அக.).

**Fin.** kūkunen; **Kolami.** kūku; **Jap.** kū.

*[காள் → காளான்.]*

**காளான்சக்களத்தி** *kāḷāṉ-šakkaḷatti,* பெ.(n.) முறிவெட்டி என்னும் பூஞ்சைக்காளான் (வின்.); a kind of sea-fungus.

*[காளான் + சக்களத்தி.]*

**காளான்சம்பா** *kāḷāṉ-šambā,* பெ.(n.) காளான் நாற்றமுள்ள சம்பா நெல்வகை (பதார்த்த. 815); a kind of paddy with fungus odour.

*[காளான் + சம்பா.]*

**காளான் வகைகள்:**

1. அவற்காளான், 2.கடற் காளான், 3. குடைக் காளான், 4. நகக்காளான், 5. நிலக்காளான்,6.வரிக்காளான், 7.புற்றுக்காளான், 8. பேய்க்காளான்,9.மரக்காளான், 10. மஞ்சட் காளான், 11. பச்சரிசி காளான், 12. புழுங் கரிசிக்காளான், 13. மிதிகாளான், 14. மலைக்காளான், 15. வலைக்காளான், 16. பொரிக்காளான், 17. கறிக்காளான், 18. இலைக்காளான், 19. நாய்க்குடைக்காளான், 20. குப்பைக்காளான், 21. முட்டைக்காளான்.

**காளான்பஞ்சு** *kāḷāṉ-pañju,* பெ.(n.) தீத்தட்டிப் பஞ்சு; touch wood prepared from fungus growing on trees (சா.அக.).

*[காளான் + பஞ்சு.]*

**காளி**[1] *kāḷi,* பெ.(n.) 1.கூளித்தலைவியாகிய கரிய பாலைநிலத் தெய்வம்; Durga, as being black. *"சீற்றக் காளிக டொகையும்" (கந்தபு. அசுரர்யாக. 40).* 2. மலைமகள் (சது.); *Pārvati.* 3. அரிமா (சது.); lion. 4. காற்றுக்கடவுளான காளரின் ஆற்றல் (சித். சா.ஞானபா.வியா.4); the Sakti of *kāḷa,* the *Vāyumūrtti.* 5. துணைத்தொன்மம் 18-ல் ஒன்று (திவா.); a secondary Purana one of 18 upa-purnam. 6. பரிமளகந்தி (பாரத. குருகுல.100); Parimaḷakandi, the mother of Vyasa 7. பாம்பின் நச்சுப்பல் நான்கனுள் ஒன்று (சீவக. 128, உரை); a poisonous fang of a serpent, one of four naccuppal. 8. எட்டி (மூ.அக.); strychnine. 9. கரிய மணித்தக்காளி (இராசவைத்.); black night - shade.

**தெ.** காளிக

*[காள் → காள் → காளி. (வே.க.120).]*

**காளி**[2] *kāḷi,* பெ.(n.) 1.காட்டுமுருக்கு (L.); palas tree. 2. கக்கரி (மலை.); kakri melon.

*[கால் (நீட்சி) → காள் → காளி.]*

**காளிக்கங்கூட்டு-தல்** *kāḷikkaṅ-kūṭṭu-,* 5 செ.கு.வி (v.i.) கருஞ்சாயங் கூட்டுதல் (வின்.); to prepare dark blue dye by compounding the necessary ingredient.

*[காளிக்கம் + கூட்டு-. காளிக்கம் = கரிய வண்ணம்.]*

**காளிக்கம்**[1] *kāḷikkam,* பெ.(n.) கருஞ்சாயம் (யாழ்.அக.); dark. blue dye for cloth.

*[காளிகம் → காளிக்கம்.]*

த.காளிக்கம்> வ.காலிக்க; E.calico.




# காளான் வகைகள்



முட்டைக் காளான்



நாய்க் குடைக் காளான்



குப்பைக் காளான்



கறிக் காளான்



பொரிக் காளான்



வலைக் காளான்



மஞ்சட்காளான்



மரக்காளான்

**காளிக்கம்**[2] *kāḷikkam,* பெ.(n.) செம்புக் கனிமம் உள்ள மலை; a mountain containing copper ores.

*[காள் → காளிக்கம்.]*

**காளிக்கமெழுது-தல்** *kāḷikkam-eḻudu-,* 5 செ.கு.வி. (v.i.) *சீலைத்துணியில்* கருஞ்சாய வரி எழுதுதல் (வின்.); to delineate on chintz with *kāḷikkam pigment.*

*[காளிக்கம் + எழுது-.]*

**காளிக்கோட்டம்** *kāḷi-k-kōṭṭam,* பெ.(n.) காளிக்கோயில்; *kāḷi* temple.

*[கள் → காளம் → காளி. கள் = கருப்பு கள்ளம், களங்கம், காளாண்ட (black mushroom) முதலிய சொற்கள் கருப்பு என்னும் மூலப்பொருளைக் கொண்டவை]*

காளி வணக்கம் முற்காலத்தில் மிகச் சிறந்திருந்தது. வங்காளத்தில் உள்ள காளிக் கோட்டம் என்னும் இடப்பெயர் இன்று காளிக்கட்டம் (culcutta) - கல்கத்தா என்று திரிந்து வழங்குகின்றது. கோட்டம் = அரண், கோயில். கோடு+அம் = கோட்டம். கோடுதல் = வளைதல். கோடிய (வளைந்த) மதிலாற் சூழப்பெற்றது கோட்டம் (தொழிலாகு பெயர்). கோடு + ஐ = கோட்டை. தமிழர் அல்லது திராவிடர் பண்டு வடஇந்தியா வரை பரவியிருந்தனர் என்பதற்குக் காளிக்கோட்டமும் ஒரு சான்றாம் (ஒப்.மொழி. பக்.204).

**காளிகம்**[1] *kāḷigam,* பெ.(n.) துணைத்தொன்மம் 18-ல் ஒன்று (பிங்.); a secondary *Purāṇam.*

*[காளி → காளிகம்.]*

**காளிகம்**[2] *kāḷigam,* பெ.(n.) 1. கரிய மணித்தக்காளி (மலை.); black night-shade. 2. முகில்; cloud (த.சொ.அக.).

*[காளி → காளிகம் (வே.க.121).]*

**காளிகை** *kāḷikai,* பெ.(n.) ஒரு தெய்வப் பெண்; an angel (த.சொ.அக.).

*[காளி → காளி.]*

**காளிங்கம்** *kāḷingam,* பெ.(n.) அணிகலன்வகை; a kind of jewel. *"தெள்ளொளிய காளிங்கஞ் சோதி கிடப்பத் தொடுத்து"* (பதினொ. திருக்கை. உலா, 121).

*[காள் → காளிங்கம்.]*

**காளிங்கராயன்** *kāḷinga-rāyaṉ,* பெ.(n.) சோழ, பாண்டியர் காலத்து அரசுத்துறைத் தலைவர் சிலர்க்கு வழங்கிய பட்டப்பெயர் (கல்.); an ancient tittle borne by high officials of the time of Cōlās and *Pāṇḍiyās.*

*[காளிங்கன் + அரையன்.]*

**காளிங்கன்** *kāḷingaṉ,* பெ.(n.) 1.கலிங்கநாட்டில் உள்ளவன்; inhabitant of the Kalinga country. 2. யமுனை ஆற்றில் கண்ணனால் அடக்கப்பட்ட ஒரு கொடிய பாம்பு; a serpent in the river Jamuna subdued by Krishna.

*[கலிங்கன் → காலிங்கன் → காளிங்கன்.]*

**காளிச்சக்கரம்** *kāḷi-c-cakkaram* பெ.(n.) காளி உருவம் பதித்த பழைய காசுவகை; an ancient gold coin, as stamped with the figure of *Kāḷi*

*[காளி + சக்கரம் (வட்ட வடிவக்காசு).]*

**காளித்தனம்** *kāḷi-t-taṉam,* பெ.(n.) கொடிய இயல்பு (இ.வ); cruelty, hard heartedness.

*[காள் → காளி → தனம்.]*

**காளிதம்** *kāḷidam,* பெ.(n.) களிம்பு; verdigris, dross. *"தாமிரத்துக்குக் காளிதஞ் சகசமா யிருக்குமாறு"* (சி.சி. 2,79. மறை.).

*[களி → களிதம் → காளிதம்.]*

**காளிதாசன்** *kāḷi-dāsaṉ,* பெ.(n.) வடமொழிப் பெரும்புலவர் ஒருவர்; *Kaḷidāsa* a famous Sanskrit poet and dramatist. *"வான்றிசைக் காளிதாசன் வடமொழி"* (இரகு. பாயி.8).

[காளி + தாசன் (காளிக்கு அடியவன்).]

விக்கிரமாதித்தன் அவையிலிருந்த தன்வந்திரி, சபணகர், அமரசிங்கர், சங்கு, வேதாளை காப்பரர், வராகமிகிரர், வரருசி என்னும் எண்மரினும் மேம்பட்டவராய் மேகதூதம், இரகுவம்சம், குமாரசம்பவம், மிருதிசுந்தரிகை முதலிய நூல்களை இயற்றிய வடமொழிப் புலவர்.

**காளிந்தி**[1] *kāḷindi,* பெ.(n.) 1.வாகை; sirissa tree. 2. குளிரி; water archer. 4. நீர்ப்பசு; water cow (சா.அக.). 5. தேக்கு; teak.

[காள் → காளிந்தி.]

**காளிந்தி**[2] *kāḷindi,* பெ.(n.) யமுனை; the Jamuna.

[காள் → காளி → காளிந்தி (கருநிறக் கலங்கல் நீரோடும் ஆறு).]

**காளிப்பணம்** *kāḷi-p-paṇam,* பெ.(n.) வெள்ளையர் ஆட்சிக்கு முன்னர் ஓர் உருபா 320 காசாகப் பிரிக்கப்பட்டிருந்த காலத்தில் உருபாயில் எட்டில் ஒரு பங்கான 40 காசு; a coin of Pre-British period, 1/8 th of a rupee.

[காளி + பணம் (காளி உருவம் பொறித்த காசாகலாம்).]

வெள்ளையர் ஆட்சிக்கு முன்பு தமிழகத்தில் ஓர் உருபாவுக்கு இணையான வெள்ளிப் பணம் 320 காசாகப் பிரிக்கப்பட்டிருந்தது. புதுக்கோட்டை மன்னர் காலத்திலும் 320 விடுகாசுகளாகவே அம்மன்காசு என்னும் பெயரில் வழங்கி வந்தது. காளிப்பணம் இதில் எட்டில் ஒரு பங்காகும். வெள்ளையரின் 12 காசு ஓர் அணா, 16 அணா ஓர் உருபா என்ற பகுப்பில் காளிப்பணம் எட்டில் ஒரு பங்கான இரண்டு அணாவுக்குச் சமமாகும். சென்னை அகரமுதலியில் காளிப்பணத்தை 3 அணா 4 காசு எனக் குறித்திருப்பது பொருத்தமன்று. பழைய 320 காசுகளில் எட்டில் ஒரு பங்கு நாற்பது காசு. இதனை வெள்ளையர் காலத்து 40 காசாகக் கருதியது தவறு. அம்மன்காசுகளும் வெள்ளையர் காலத்துக் காசுகளும் சமமதிப்பு உடையவை அல்ல.

**காளிமம்**[1] *kāḷimam,* பெ.(n.) அறியாமை; ignorance. *"கருதியத் தடத்து மூழ்குமானவர் தங்கருத்துறு காளி மந்திரும்"* (சேதுபு. சடாயுதீ. கரு.).

[காள் = கருமை, இருள், அறியாமை. காள் → காளிமம்.]

**காளிமம்**[2] *kāḷimam,* பெ.(n.) 1.கறுப்பு; blackness, black colour. *"தனது காளிமங் கழிப்ப"* (கந்தபு. திருநகரப். 72). 2. களிம்பு; verdigris, dross. *"தாம்பிர காளிம மென்ன"* (பிரபோத. 46,8).

வ. காலிமன்

[காளிமை → காளிமம் (வே.க.121).]

**காளிமை** *kāḷimai,* பெ.(n.) **காளிமம்** பார்க்க; see *kāḷimam.* *"காளிமைப் பிழம்பு போத"* (கம்பரா. நாகபா. 217).

வ.காலிமா

[காளி → காளிமை (வே.க.121)]

**காளிமோகம்** *kāḷi-mōgam,* பெ.(n.) திருநீற்றுப் பச்சை; holy ashes leaf (சா.அக.).

[காளி + மேகம் – காளிமேகம் → காளிமோகம் (சொ.வ).]

**காளியம்** *kāḷiyam,* பெ.(n.) பளிங்கு; crystal (சா.அக.).

[காள் → காளியம்.]

**காளியன்** *kāḷiyaṉ,* பெ.(n.) கண்ணன் தன் கால்களைத் தலையில் மிதித்தாடப்பெற்ற பாம்பு; a serpent on whose hood Krishna danced. *"காளியன் பொய்கை கலங்க"* (திவ். பெரியாழ். 3:9,7).

[காளி → காளியன்.]

**காளை**[1] *kāḷai,* பெ.(n.) 1.இளவெருது; steer, young bullock. 2. எருது (பிங்.); bull, ox. 3. கட்டிளமைப் பருவத்தினன் (திவா.); young man, in his prime. 4. ஆண்மகன் (திவா.); man. 5. பாலைநிலத் தலைவன் (திவா.); chief of desert-fact. 6. மறவன்; warrior. *"உரவுவேற் காளையும்"* (புறநா. 334).



# காளான் வகைகள்


பேய்க் காளான்


புற்றுக் காளான்


வரிக் காளான்


நிலக் காளான்


கடற் காளான்


அவற்காளான்


குடைக் காளான்


நகக் காளான்

ம.காள

[காழ் → காள் + ஐ → காளை (திரட்சிவண்ணம் பெற்றது)]

**காளை**[1] *kāḷai*, பெ.(n.) 1.இளவெருது; steer, young bullock. 2. எருது (பிங்.); bull, ox.

ம.காள

[காழ் → காள் + ஐ → காளை (திரட்சிவண்ணம் பெற்றது)]

**காளை**[2] *kāḷai*, பெ.(n.) 1. கட்டிளமைப் பருவத்தினன் (திவா.); young man, in his prime. 2. ஆண்மகன் (திவா.); man. 3. பாலை நிலத் தலைவன் (திவா.); chief of desertract. 4. மறவன்; warrior. *"உரவு வேற்காளையும்" (புறநா. 334).*

மறுவ.விடலை, மீளி.

[காழ் → காள் +ஐ → காளை (திரட்சிவண்ணம் பெற்றது)]

**காளைக்கன்று** *kāḷai-k-kaṉṟu*, பெ.(n.) ஆவின் ஆண்கன்று; bull-calf.

மறுவ. காளகன்று

[காளை + கன்று.]

**காளைப்பாம்பு** *kāḷai-p-pāmbu*, பெ.(n.) நஞ்சில்லாத ஒருவகைப் பாம்பு; bull snake.

ம. காளப் பாம்பு

[காளை + பாம்பு]

**காளைப்போர்** *kāḷai-p-pōr*, பெ.(n.) காளைச் சண்டை; bull fight.

ம. காளக்களி, காளப்போரு.

[காளை + போர்.]

**காளைமாடு** *kāḷai-māḍu*, பெ.(n.) எருது; ox, bullock.

[காளை + மாடு]

**காளையங்கம்** *kāḷai-y-aṅgam*, பெ.(n.) போர் (சது.); battle, fight, warfare.

[காளை + அங்கம்.]

**காளையம்** *kāḷaiyam*, பெ.(n.) பேராரவாரம்; uproar, tumult as in a battle. *"இதனிலும் பெரியதோர் காளையம் விளையுமா காண்மினோ"* (கலிங். 479).

மறுவ. காளகம்

க., து. காளஎக.

[காள் → காளயம் → காளையம்.]

**காளைவண்டி** *kāḷai-vaṇḍi*, பெ.(n.) மாட்டு வண்டி; a bullock-cart.

ம. காளவண்டி

[காளை + வண்டி.]

**காற்கட்டு**[1]**-தல்** *kāṟ-kaṭṭu*, 5 செ.குன்றாவி (v.t.) 1. செயலின்பொருட்டு வற்புறுத்துதல்; to press one to do a thing, as by preventing him from going further. *"என்னையே காற்கட்டி அவிழ்த்துக் கொள்ள வேணும்" (ஈடு. மகாப்ர.).* 2. திருமணம் செய்தல்; to marry, marriage being regarded as a hobble to one apt to stray.

[கால் + கட்டு → காற்கட்டு.]

**காற்கட்டு**[2] *kāṟ-kaṭṭu*, பெ.(n.) 1.காலுக்கிடும் கட்டு; fetters on the leg. 2.தடை; obstruction. 3. திருமணம்; marriage, as fetters.

ம. கால்கட்டு; க. கால்கட்டு.

[கால் + கட்டு.]

**காற்கடுப்பு** *kāṟ-kaḍuppu*, பெ.(n.) காலுளைச்சல்; aching pain in the feet, as from cold or too much walking.

[கால் + கடுப்பு]

**காற்கடுவன்** *kāṟ-kaḍuvaṉ,* பெ.(n.) குழந்தைகட்கு வரும் கால்நோய்வகை (பாலவா. 687.); a disease of feet in children, chronic eczema.

*[கால் + கடுவன்.]*

**காற்கடைகொள்(ளு)-தல்** *kāṟkaḍai-koḷ-,* 16 செ.கு.வி. (v.i.) பொருட்படுத்தாதிருத்தல்; to discard, despise. *"அறிந்து வைத்துக் காற்கடை கொள் வாயே" (திவ்.திருப்பா. 7, வியா.).*

*[கால் + கடை + கொள்(ளு)-.]*

**காற்கணை** *kāṟ-kaṇai,* பெ.(n.) ***காற்கோமாரி***(இ.வ.) பார்க்க; see *kāṟkōmāri.*

*[கால் + கணை.]*

**காற்கயிறு** *kāṟ-kayiṟu,* பெ.(n.) கால்விலங்கு (பாண்டி); fetters.

*[கால் + கயிறு.]*

**காற்காசு** *kāṟkāśu,* பெ.(n.) ஒரு சின்னக்காசு; a coin (இரு.நூ.).

*[கால் + காசு.]*

**காற்காந்தல்** *kāṟ-kāndal,* பெ.(n.) காற்புண் (M.L.); abscess in the foot.

*[கால் + காந்தல்.]*

**காற்காப்பு** *kāṟ-kāppu,* பெ.(n.) காலில் அணியும் காப்பு; anklet.

*[கால் + காப்பு.]*

**காற்காறை** *kāṟ-kāṟai,* பெ.(n.) தெய்வப் படிமங்களின் காலில் அணிவிக்கும் அணிகலன்; foot-rings for the idol. *"திருக்காற் காறை நாற்பொன் ஐங்கழஞ்சு" (S.I.I. ii, 397).*

*[கால் + காறை.]*

**காற்குடைச்சல்** *kāṟ-kuḍaiccal,* பெ.(n.) காலுளைச்சல்; rheumatism, aching pain in the legs.

*[கால் + குடைச்சல்.]*

**காற்குப்பாயம்** *kāṟ-kuppāyam,* பெ.(n.) காற் சட்டை; troussers.

ம.கால்க்குப்பாயம்; க. கால்குப்பச.

*[கால் + குப்பாயம்.]*

**காற்குழைச்சு** *kāṟ-kuḻaiccu,* பெ.(n.) மாடு, குதிரை களின் காற்குளம்புக்கு மேலிடத்துள்ள மயிர்க்கரண (கால். வி. 74); fetlock.

*[கால் + குழைச்சு.]*

**காற்குளம்** *kāṟkuḷam,* பெ.(n.) பூசநாள்; the eighth naksatra. *"குருவினாள் கொடிறு சூழ்வண்டு காற்குளம்பூசம்" (சாதக.சிந்.காலநிக.16.) (த.சொ. அக.).*

*[கால் + குளம்.]*

**காற்கூலி** *kāṟ-kūli,* பெ.(n.) நடைக்கூலி; wage of walking. *"அடுத்தடுத்துப் பின்சென்றா லீவது காற்கூலி" (தமிழ்நா. 33).*

*[கால் + கூலி.]*

**காற்கொட்டை** *kāṟ-koṭṭai,* பெ.(n.) காலுக்கு இடும் திண்டு (வின்.); small bolster for the legs and feet.

*[கால் + கொட்டை.]*

**காற்கோமாரி** *kāṟ-kōmāri,* பெ.(n.) கால்நடை களுக்கு வரும் கால்நோய் வகை (கால்.வி. 51); soreness of hoofs, a foot disease of cattle.

*[கால் + கோமாரி.]*

**காற்கோள்** *kāṟ-kōḷ* பெ.(n.) காலமாறுபாட்டால் நீர்ப்பாசனமின்றிக் கவனிப்பாரற்றுக் கிடந்த நிலம்; waste land. *"இந்நாற்பால் எல்லைக்கும் உட்பட்ட நிலம் காற்கோளாய்க் கிடந்தமையால்" (தெ.கல். தொ.51, கல். 465).*

*[கல் + கோள் – கற்கோள் → காற்கோள்.]*

**காற்சட்டை** *kāṟ-caṭṭai,* பெ.(n.) கால்களுக்கு இடும் சட்டை; trousers, pantaloons.

ம.காற்சட்ட

*[கால் + சட்டை.]*

**காற்சப்பை** *kāṟ-cappai,* பெ.(n.) 1.கால்நடைகட்குக் காலிலும் வாயிலும் வரும் தொற்று நோய்வகை (M.M. D.24); foot and mouth disease in cattle . 2. ***சப்பை*** பார்க்க; see *hips.*

*[கால் + சப்பை.]*

**காற்சரி** *kāṟ-cari,* பெ.(n.) பாதசரம், கொலுசு (கலித். 85:1, உரை.); an ornament for ankles.

*[கால் + சரி.]*

**காற்சவடி** *kāṟ-cavaḍi,* பெ.(n.) காலில் அணியும் அணிகலன் (சிலம்பு. 6:84, உரை.); a kind of ank let.

*[கால் + சவடி.]*

**காற்சவுரம்** *kāṟ-cavuram,* பெ.(n.) முகமழிப்பு (யாழ்.அக.); shaving the face only.

**காற்சிப்பு** *kāṟcippu,* பெ.(n.) இடுப்புச் சந்தெலும்பு (வின்.); hip bone.

*[கால் + சிப்பு.]*

**காற்சிலம்பு** *kāṟ-cilampu,* பெ.(n.) காலணி வகை; tinkling anklets.

ம. கால்ச்சிலம்பு

*[கால் + சிலம்பு.]*

**காற்சுவடு** *kāṟcuvaḍu,* பெ.(n.) அடிவைப்பின் குறி (உ.வ.); foot-print.

ம. கால்ச்சுவடு, கால்பாடு.

*[கால் + சுவடு.]*

**காற்சுற்று** *kāṟ-cuṟṟu,* பெ.(n.) மகளிர் கால்விரலில் அணியும் அணிவகை; small circular metal ring mostly of silver worn by women on the toes.

*[கால் + சுற்று.]*

**காற்செபம்** *kāṟcebam,* பெ.(n.) தினை; millet (சா.அக.).

*[கால் + சேவம் – காற்சேவம் → காற்செபம் (கொ.வ.).]*

**காற்செருப்பு** *kāṟ-ceruppu,* பெ.(n.) காலுக்கு இடும் செருப்பு; leather, sandals, slipers, shoe etc.

ம. காலுமெட்டு

*[கால் + செருப்பு.]*

**காற்செறி** *kāṟceṟi,* பெ.(n.) கால் விலங்கு; iron fetters put on the legs of the prisoner (கோ.தமி.அக.).

*[கால் + செறி.]*

**காற்பங்கு** *kāṟ-paṅgu,* பெ.(n.) கால் பாகம்; one fourth part.

*[கால் + பங்கு.]*

**காற்படம்** *kāṟ-paḍam,* பெ.(n.) 1.விரலை யடுத்திருக்கும் காலின் அடிப்பக்கம்; forepart of the sole of the foot. 2. புறவடி; the instep down to the toes.

ம. கால்படம்

*[கால் + படம்.]*

**காற்படு-தல்** *kāṟ-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) அழிதல்; to perish. *"எவையுங் காற்படப் புடைபெயர் கடல்" (கம்பரா. எழுச்சி.10).*

*[கால்[5] + படு-.]*

**காற்படை[1]** *kāṟ-paḍai,* பெ.(n.) 1.கோழி; cock, as using its foot for a weapon. *"காற்படைக் கொடியினன்" (கல்லா. 60:11).* 2. காலாட்படை; infantry.

மறுவ. காலாயுதம்

*[கால் + படை.]*

**காற்படை[2]** *kāṟ-paḍai,* பெ.(n.) கட்டடக் கால் கோளில் தரைக்கு மேலுள்ள பகுதி (M.E.R. 127 &

1926.); the portion of the basement of a building above the ground.

*[கால் + படை.]*

**காற்பந்து** *kārpandu,* பெ.(n.) 1. காலால் உதைத்து விளையாடுவதற்குப் பயன்படுத்தும் பந்து ; foot ball. 2. கால் பந்தால் ஆடும் ஒரு விளையாட்டு; a game played with foot ball.

**க.** கால்செண்டு

*[கால் + பந்து.]*

**காற்பரடு** *kāṟ-paraḍu,* பெ.(n.) புறவடி; the roof or upper part of the foot.

*[கால் + பரடு.]*

**காற்பாசியம்** *kārpāśiyam,* பெ.(n.) 1. ***காய்ப் பருத்தி*** பார்க்க ; see *kāy-p-parutti.* 2. பருத்தி; Indian cotton plant (சா.அக.).

*[காய்ப்பருத்தி → காற்பாசியம் (கொ.வ.).]*

**காற்பாதை** *kāṟ-pādai,* பெ.(n.) ஒற்றையடிப்பாதை; foot-path.

*[கால் + பாதை.]*

**காற்பிடி-த்தல்** *kāṟ-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) விதையடித்தல் (வின்.); to geld, castrate.

**மறுவ.** காயடித்தல்

*[கால் + பிடி-.]*

**காற்பிடிப்பு** *kāṟ-piḍippu,* பெ.(n.) ஊதை நோயால் காலிற்காணும் பிடிப்புநோய்; rheumatic stiffness in legs.

*[கால் + பிடிப்பு.]*

**காற்பித்தவெடிப்பு** *kāṟ-pitta-veḍippu,* பெ.(n.) காலில் உண்டாகும் பித்தவிரி (M.L.); fissure in the foot, cracked foot.

*[கால் + பித்தவெடிப்பு.]*

**காற்புத்தி** *kārputti,* பெ.(n.) தாளகம்; yellow sulphure of arsenic. *"காற்புத்தி யோரை நீயோர் காசென மதித்து" (தைல. தைலவ. 80).*

*[கால் + (பொடித்து) புத்தி.]*

**காற்புரவு** *kāṟ-puravu,* பெ.(n.) ஆற்றுப்பாசன நிலம்; land irrigated by channels.

**ம.** கால்ப்புரவு

*[கால்[1] + புரவு = காற்புரவு. கால் = வாய்க்கால், புரவு = நிலம்.]*

**காற்புள்ளி** *kāṟ-puḷḷi,* பெ.(n.) பொருள் தெளிவிற்காகச் சொற்களைப் பிரித்துப் படிக்கும்போது இடும் (,)குறி; punctuation mark, which indicates the least separation between parts of a sentance.

*[கால்[1] + புள்ளி.]*

**காற்பெட்டி** *kāṟ-peṭṭi,* பெ.(n.) 1.வண்டியின் பின்பெட்டி (நெல்லை); back-box in a carriage for putting in things. 2. நான்கு கால்களைக் கொண்ட சிறுபெட்டி; a wooden-chest with tour small legs.

**ம.** கால்ப்பெட்டி

*[கால்[1] + பெட்டி.]*

**காற்பெய்-தல்** *kāṟ-pey-,* 1 செ.கு.வி. (v.i.) ஓடுதல்; to run away. *"கருவினை காற் பெய் தனவே" (சீவக. 3102).*

*[கால்[5] + பெய்-.]*

**காற்றகண்டுய்யாமூலி** *kāṟṟagaṇḍu-y-yāmūli,* பெ.(n.) பிரண்டை; adama creeper; bone-setter (சா.அக.).

*[கால் + தகண் + துயியா + மூலி.]*

**காற்றகற்றி** *kāṟṟagāṟṟi,* பெ.(n.) காற்று வெளியேற்றி; air-pump (சா.அக.).

*[காற்று + அகற்றி.]*

**காற்றடக்கி** *kāṟṟaḍakki,* பெ.(n.) 1. நீர்க்குமிழி; bubble in water. 2. துருத்தி; bellows (சா.அக.).

*[காற்று + அடக்கி.]*

**காற்றடர்த்தி** *kāṟṟaḍartti,* பெ.(n.) காற்றின் நெருக்கம்; density of air (சா.அக.).

*[காற்று + அடர்த்தி.]*

**காற்றடுக்கி** *kāṟṟaḍukki,* பெ.(n.) முட்டிக்கால் தட்டி நடப்பவன்; a knock-kneed person.

மறுவ. கவட்டைக்கால், கழுதைக்கால், பின்னக்கால்.

*[கால் + தடுக்கி]*

**காற்றண்டம்** *kāṟṟaṇḍam,* பெ.(n.) ஊதையால் (வாதத்தால்) வீங்கிய அண்டநோய் வகை (இ.வ.); a kind of swelling of the scrotum, dist. fr. *nīr-aṇḍam.*

*[காற்று + அண்டம்.]*

**காற்றண்டை** *kāṟṟaṇḍai,* பெ.(n.) காலணிவகை; tinkling trinket for ankles.

*[கால்[1] + தண்டை.]*

**காற்றருந்து-தல்** *kāṟṟarundu-,* 5 செ.கு.வி. (v.i.) 1.காற்றையுட்கொள்ளுதல்; to feed on air, as snakes. 2. சோம்பியிருத்தல் (வின்.); to be gaping, listless, idle.

*[காற்று + அருந்து.]*

**காற்றழும்பு** *kāṟṟaḻumbu,* பெ.(n.) வலியோடு கூடிய கால்வீக்கம், சூட்டுக் கொப்புளம் (இ.வ.); bunion, inflamed swelling on foot.

*[கால்[1] + தழும்பு.]*

**காற்றறை** *kāṟṟaṟai,* பெ.(n.) காற்றுக்கொண்ட க்ண்ணறை (சா.அக.); air-cell.

*[காற்று + அறை.]*

**காற்றன்** *kāṟṟaṉ,* பெ.(n.) நீலநிறத் துரிசு (சங்.அக.); blue vitriol.

*[கால் = கருமை, நீலம். கால் → காற்றன்.]*

**காற்றாடவை[1]-த்தல்** *kāṟṟāḍavai-,* 4 செ.கு.வி (v.i.) நிழலிலுணர்த்துதல் (சா.அக.); drying in the shade by exposing to the breeze (சா.அக.).

*[காற்று + ஆட + வை-,]*

**காற்றாடவை[2]-த்தல்** *kāṟṟāḍa-vai-,* 4 செ.குன்றாவி. (v.i.) காற்றுப்படுமாறு பண்டங்களை வைத்தல்; to expose to open air; to air a thing.

*[காற்று + ஆட + வை-.]*

**காற்றாடி[1]** *kāṟṟāḍi,* பெ(n.) சுழல்கறங்கு (திவா.); that which whirls in the wind. 2. ***காற்றாடிப்பட்டம்*** பார்க்க; see *kāṟṟaḍi-p-paṭṭam.* 3. கறங்கின் சுழற்சியால் நீரிறைக்கும் இயந்திரப்பொறி; windmill. 4. நிலையில்லாதவன் (வின்.); restless, fid gety person; waverer. 5.சவுக்குமரம்; whip tree. 6. மரவகை; silk oak.

ம. காற்றாடி

*[காற்று + ஆடி.]*

**காற்றாடி[2]** *kāṟṟāḍi,* பெ.(n.) நிலையில்லாதவன்; unsteady person (த.சொ.அக.).

**காற்றாடி[3]** *kāṟṟāḍi,* பெ.(n.) விசிறி (ஞானபூசா. 28. உரை.); fan.

*[காற்று + ஆடி.]*

**காற்றாடிப்பட்டம்** *kāṟṟāḍi-p-paṭṭam,* பெ.(n.) காற்றில் பறக்கவிடும் பட்டம்; paper-kite.

*[காற்றாடி + பட்டம்.]*

**காற்றாய்ப்பற-த்தல்** *kāṟṟāy-p-paṟa-,* 3 செ.கு.வி. (v.i.) 1.விரைந்தோடுதல்; to roam, fly about as the wind. 2. சுறுசுறுப்பாய்த் தொழில் செய்தல்; to be over-active in gaining one's ends; to be industrious, zealous.

*[காற்று → காற்றாய் + பறத்தல்.]*

**காற்றிகம்** *kāṟṟigam,* பெ.(n.) காயாங்குலை; a barren tree (சா.அக.).

*[கால் → காற்று → காற்றிகம்.]*

**காற்றில்லாக் கடல்** *kāṟṟillā-k-kaḍal,* பெ.(n.) அமைதிக் காற்று நிலவும் நிலநடுக்கோட்டுக்கு அருகே உள்ள கடல் பகுதி; a region near the equator where calm winds prevail, doldrum.

ம. காற்றில்லாக் கடல்

*[காற்று + இல்லா + கடல்.]*

**காற்றிளவல்** *kāṟṟiḷaval,* பெ.(n.) இளங்காற்று (யாழ்.அக.); gentle breeze.

*[காற்று + இளவல்.]*

**காற்றிற்கரைந்தறு-தல்** *kāṟṟiṟ-karaindaṟu-,* 4 செ.கு.வி (v.i.) காற்றின் ஈரத்தைக் கொண்டு கரைந்து அற்றுப் போதல்; a melting or dissolution in the air or in a moist place.

*[காற்றில் + கரைந்து + அறு-.] (சா.அக.)*

**காற்றிறங்கியிரு-த்தல்** *kāṟṟu-iṟanki-yiru-,* 2 செ.கு.வி. (v.i.) கடல் தொழிலாளர் நடுக்கடலில் தொழிற்படும்போது காற்றுத் தானாக இறங்கி வீசுதல், மழை வருவதற்கு முந்திய நிலை.

*[காற்று + இறங்கி + இரு-.]*

**காற்றிறுக்கம்** *kāṟṟiṟukkam,* பெ.(n.) 1.காற்ற முத்தம்; air-pressure 2. காற்றடர்த்தி; density of air. 3. காற்றாடா இடம்; non ventilated place (சா.அக.).

*[காற்று + இறுக்கம்.]*

**காற்றின்தோழன்** *kāṟṟiṉ-tōḻaṉ,* பெ.(n.) தீ (சூடா.); fire, as the friend of wind.

*[காற்று + இன் + தோழன்.]*

'இன்' சொற்சாரியை. காற்றால் மண்டி எரியும் இயல்பு கருதித் தீயைக் காற்றின் தோழன் என்றனர்.

**காற்றினாள்** *kāṟṟiṉāḷ,* பெ.(n.) காற்றைக் கடவுளாகக் கொண்ட விளக்கு (சுவாதி) விண் மீன்; *Svādi,* the 15th naksatra, as having wind-god for its presiding deity, Arcturus.

*[காற்றின் + நாள்.]*

நாள் - நாண்மீன் (நட்சத்திரம்.) கதிரவக்காலப் (சூரிய மான) பகுப்புக்குக் காரணியமான இருபத்தேழு நாண்மீன்களுள் ஒன்றான விளக்குமீன் (சுவாதி) காற்றைக் கடவுளாகக் கொண்டது என்பது பிற்காலத் தொன்ம (புராண) வழக்கு. விளக்கு எரிதற்குக் காற்றுத் துணையாவது இயற்கை.

**காற்று[1]-தல்** *kāṟṟu-,* 5 செ.கு.வி. (v.i) வெளிப் படுத்துதல்; to make manifest, reveal, put forth. *"பொலிகதிர் காற்றியும்" (கல்லா.13).*

*[கால் (வெளிப்படுதல், வீசுதல்) கால் + து – காற்று → காற்றுதல்.]*

**காற்று[2]-தல்** *kāṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அழித்தல்; to destroy, ruin. *"ஆற்றல் காற்றுஞ் செயல்" (தணிகைப்பு. நந்தியுப. 120).*

*[கால் = வெளிப்படுதல், வீசுதல், கால் + து – காற்று = புறந்தள்ளு, வீழ்த்து, அழித்துவிடு.]*

**காற்று[3]-தல்** *kāṟṟu-,* 5 செ.கு.வி. (v.t.) போக்குதல்; to remove, to drive. *"அடர்மலவாற்றல் காற்றுஞ் செயறலை நின்ற வின்பத்தருவுரு முதன்மை போற்றி" (தணிகைப்பு. நந்தியுப. 121) (த.சொ.அக.).*

*[காறு → காற்று.]*

**காற்று[4]** *kāṟṟu,* பெ.(n.) 1.உலகில் வெளியெங்கும் நிறைந்திருக்கும் வளி; air, wind. *"காற்றிய மானன் வானம்" (திருவாச. 5:63).* 2. உயிர்ப்பு; breath. மூச்சுக்காற்று (சூடா. 3:49). 3. குதம்வழி வெளிப் படும் காற்று (குசு); gas generated in bowels by indigestion, etc. flatulence. காற்றுப் பரிகிறது (உ.வ.).

ம.காற்று; க. காளி,காள்; தெ.,குவி.,குரு. காலி; கோத. காற்று; துட.கோற்ற்; குட.கதி,களா; கொலா.கலி; நா. களி; பிரா.காற்றோ (மேற்குக் காற்று); பட. காயி.

*[கால் = வெளிப்படுதல், வீசுதல், உலாவுதல். கால் = காற்று.]*

kârr-u (pronounced kâttr-u), wind. Probably from *kâl*, one of the meanings of which is wind, with the formative addition of *du (kâl-du=kâttru)*; Tel. *gâli*. Comp. Kangazian (a Turkish dialect) *kat*, wind; Sojoten (a Samoïede dialect) *kat*; other Samoïede dialects *chat*, *kada* (also a storm, *charru*); Georg. *kari*; Jurazen *chada* *(C.G.D.F.L. Pg.616)*.

காற்று வகை:

1.வேற்றம் (வாதம்) வளி 2. சூறாவளி 3. சுழல் 4. காற்று 5. அன்றமை 6.ஆவி 7.வெம்பாவி 8. நீராவி 9. புயல் 10. உயிர் 11. கொண்டல் கிழக்கினின்று வீசும் மழைக்காற்று; தென்றல் தெற்கினின்று வீசும் இனியமென் காற்று; கோடை மேற்கினின்று வீசும் வெப்பமான வன்காற்று; வாடை வடக்கினின்று வீசும் குளிர் காற்று.

**காற்றுக்கடுவல்** *kāṟṟu-k-kaḍuval,* பெ.(n.) பெருங் காற்று (யாழ்.அக.); violent wind.

*[காற்று + கடுவல். கடுவல் = கடுமை.]*

**காற்றுக்கண்** *kāṟṟu-k-kaṇ,* பெ.(n.) 1.காற்றுக் கண்ணறை; air-cell. 2. பிதுங்கிய கண்; gas eye in fishes. 3. முண்டகக்கண்; goggle-eye (சா.அக.)

*[காற்று + கண்.]*

**காற்றுக்கரப்பு** *kāṟṟu-k-kaṟappu,* பெ.(n.) பேய்க் கோளாறு; demoniacal possession. அவளைக் காற்றுக்கரப்பு பிடித்து ஆட்டுகிறது (இ.வ.).

**மறுவ.** காற்றுக்கருப்பு, காற்றுக்கறுப்பு, காற்றுச்சேட்டை.

*[காற்று + கறுப்பு → காற்றுக்கறுப்பு → காற்றுக்கரப்பு.]*

**காற்றுக்கறுப்பு** *kāṟṟu-k-kaṟuppu,* பெ.(n.) பேய் பிசாசுகள் (இ.வ.); ghosts and evil spirits.

*[காற்று + கறுப்பு. காற்று = தீயஆவி. கறுப்பு = பேய்.]*

**காற்றுக்காலம்** *kāṟṟu-k-kālam,* பெ.(n.) கடக (ஆடி) மாதத்தில் பெருங்காற்று வீசுங்காலம்; windy weather, especially in the month of *āḍi*.

*[காற்று + காலம்.]*

**காற்றுக்குழாய்** *kāṟṟu-k-kuḻāy,* பெ.(n.) 1.காற்று செல்லும் குழல்கள்; air-tube. 2. குரல்வளை; trachea (சா.அக.).

*[காற்று + குழாய்.]*

**காற்றுக்கொள்(ளு)-தல்** *kāṟṟu-k-koḷ-,* 16 செ.கு.வி. (v.i.) வெளிப்பரவுதல்; to gain publicity, as an affair taking wind; செய்தி காற்றுக் கொண்டது (இ.வ.).

*[காற்று + கொள்-.]*

**காற்றுச்சங்கை** *kāṟṟu-c-caṅgai,* பெ.(n.) **காற்றுக் கறுப்பு** பார்க்க; see *kāṟṟu-k-kaṟuppu.*

**மறுவ.** காற்றுக்கறுப்பு

*[காற்று + சங்கை.]*

**காற்றுச்சிகிச்சை** *kāṟṟu-c-cigiccai,* பெ.(n.) காற்றைக்கொண்டு நோய்களைப் போக்குதல்; the theropeutic employment of air (சா.அக.).

*[காற்று + சிகிச்சை.]*

**காற்றுச்சேட்டை** *kāṟṟu-c-cēṭṭai,* பெ.(n.) பேய் பிசாசு களின் தீங்கு; mischief of evil spirits (சா.அக.).

*[காற்று + சேட்டை.]*

**காற்றுத்திங்கள்** *kāṟṟu-t-tiṅgaḷ,* பெ.(n.) விளக்கு விண்மீன் (சா.அக.).

*[காற்று + திங்கள்.]*

**காற்றுத்துளைக்கல்** *kāṟṟu-t-tuḷai-k-kal,* பெ.(n.) காற்றறைபட்ட துளைகளையுடைய செங்கற்கள். இவற்றால் சுவரில் விரிசல் விழ வாய்ப்பு ஏற்படும் (பொ.வ.); bricks with air bubbles; well develops crackes, when built with such bricks, porous bricks.

*[காற்று + துளை + கல்.]*

**காற்றுநாள்** *kāṟṟu-nāḷ,* பெ.(n.) சோதிநாள் (இரு.நூ.) விசாகம்; the day of *visāka,* the 16th naksatra.

**காற்றுநோவு** *kāṟṟu-nōvu,* பெ.(n.) கால்நடைகளுக்கு வரும் வெக்கைநோய்; rinderpest. (M.CM.D.24).

*[காற்று + நோவு.]*

**காற்றுப்பரி-தல்** *kāṟṟu-pari-,* 2 செ.கு.வி. (v.i.) குதத்தின் வழியாகக் காற்று வெளியேறுதல்; generating gas through anus (சா.அக.).

*[காற்று + பரிதல்.]*

**காற்றுப்பு** *kāṟṟuppu,* பெ.(n.) காறியுமிழ்கை; spitting, expectoration. *"நகையொடு கொட்டாவி காற்றுப்புத் தும்மல்" (ஆசாரக். 74).*

*[கால் + துப்பு. கால் = வெளியிடுதல்.]*

**காற்றுப்பெயர்-தல்** *kāṟṟu-p-peyar-,* 2 செ.கு.வி. (v.i.) காற்றுக்காலந் தொடங்குதல்; to set in, as monsoon. காற்றுப் பெயர்ந்துவிட்டது.

*[காற்று + பெயர்.]*

**காற்றுப்பேத்தை** *kāṟṟu-p-pēttai,* பெ.(n.) ஓர் அடி நீளமுடையதும் பச்சை கலந்த நிறமுடையதுமான கடல்மீன்வகை; a sea-fish, greenish, attaining 1ft. in length.

*[காற்று + பேத்தை.]*

**காற்றுப்பை** *kāṟṟu-p-pai,* பெ.(n.) நுரையீரல்; the lungs (சா.அக.).

*[காற்று + பை.]*

**காற்றுப்போக்கி** *kāṟṟu-p-pōkki,* பெ.(n.) காற்று உலாவும்படி வைக்கும் காலதர்; a contrivance for free ventilation of air. 2. உடம்பில் ஏற்படும் வாயுவைப் போக்கும் மருந்து; a medicine which relieves flatulence (சா.அக.).

*[காற்று + போக்கி.]*

**காற்றுப்போ-தல்** *kāṟṟu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. அடைப்பினின்றும் காற்று வெளியேறுதல்; to let air escape, as from bladder. 2. குதம்வழிக் காற்றுப் பரிதல்; to let gas through anus.

*[காற்று + போ-.]*

**காற்றும் கடலுமாக இரு-த்தல்** *kāṟṟum-kaḍalu māga-iru-,* 3 செ.குன்றாவி. (v.t.) கடுமை யான காற்றும், கொந்தளிப்புமான கடலுமாக இருத்தல் (கட.பர.க.சொ.அக.); tempestuous and turbulent.

*[காற்று + கடலும் + ஆக + இரு-.]*

**காற்றுமழை** *kāṟṟu-maḻai,* பெ.(n.) காற்றோடு கூடிவரும் மழை; tempest.

*[காற்று + மழை.]*

**காற்றுமாரியாயி** *kāṟṟu-māri-y-āyi,* பெ.(n.) புண்கட்டி (M.L.); syphilitic node, congenital or acquired.

*[காற்று + மாரி + ஆயி.]*

**காற்றுமுட்டை** *kāṟṟu-muṭṭai,* பெ.(n.) காற்றூதி, குழந்தைகள் விளையாடும் ஊதாம்பை; balloon, children's plaything.

மறுவ. ஊதாம்பை

*[காற்று + முட்டை. காற்றூதுவதால் முட்டை வடிவில் பருத்துத் தோன்றும் ஊதாம்பை.]*

**காற்றுமுந்துநாள்** *kāṟṟu-mundu-nāḷ,* பெ.(n.) காற்றைத் தெய்வமாகக் கொண்ட விளக்கு (சுவாதி) விண்மீனை முற்பட்ட நாளாகவுடைய சுளகு (விசாகம்) விண்மீன் (சூடா.); Viśakha, the 16th naksatra, as succeeding *Karināḷ.*

*[காற்று + முந்துநாள்.]*

**காற்றுவாகு** *kāṟṟu-vāgu,* பெ.(n.) காற்றடிக்குந் திசை; direction of wind (சா.அக.).

*[காற்று + வாகு = வாக்கு → வாகு.]*

**காற்றுவாங்கு–தல்** *kāṟṟu-vāṅgu-,* 5 செ.கு.வி. காற்றைத் துய்த்தல் (அனுபவித்தல்); to take an airing, enjoy, breeze. கடற்கரைக்குக் காற்று வாங்கப் போனேன் (உ.வ.).

*[காற்று + வாங்கு–.]*

**காற்றுவாட்டம்**[1] *kāṟṟu-vāṭṭam,* பெ.(n.) 1. காற்றுக்கு நேர்முகம்; windward. 2. காற்றடிக்கும் திசை (உழ.நெ.க.செ.); direction of wind.

*[காற்று + வாட்டம்.]*

**காற்றுவாரி** *kāṟṟu-vāri,* பெ.(n.) கதவிலிருக்கும் சிறுசாளரம் (இ.வ.); small ventilator without shutters in a door.

*[காற்று + வாரி.]*

**காற்றுவாரிப்பந்தல்** *kāṟṟu-vāri-p-pandal,* பெ.(n.) காற்றுமிகுதியாக வரும்படி அமைக்கும் பந்தல்; shed with an upward slope as to let in breeze plentifully.

*[காற்று + வாரி + பந்தல்.]*

**காற்றுவாரிப்பலகை** *kāṟṟu-vāri-p-palagai,* பெ.(n.) காற்றின் வரவைத் தடுக்க அமைக்கப்படும் முகட்டுச் சாளரப்பலகை (இ.வ.); movable wooden shutter of a ventilator or of a window near the roof.

*[காற்றுவாரி + பலகை.]*

**காற்றேறு** *kāṟṟēṟu,* பெ.(n.) காற்றினால் தோன்றும் ஒருவகை முத்துக் குற்றம் (சிலம்பு. 14: 193, உரை); a flaw in pearls.

*[காற்று + ஏறு.]*

**காற்றொடுக்கம்** *kāṟṟoḍukkam,* பெ.(n.) காற்று வீசாது ஒடுங்குகை (வின்.); calm, full, subsidence of wind.

*[காற்று + ஒடுக்கம்.]*

**காற்றொதுக்கு** *kāṟṟodukku,* பெ.(n.) காற்றடைப்பு (வின்.); shelter from the wind.

*[காற்று + ஒதுக்கு.]*

**காற்றொழில்** *kāṟṟoḻil,* பெ.(n.) (அற்பம்) வேலை; menial service, as performed by footmen. *"காற்றொழி லென்று கருதற்க" (நாலடி. 193).*

*[கால்[1] + தொழில். கால்→காற்று. காற்றடிக்கும் குறுகிய நேரத்தில் எளிமையாகச் செய்யக்கூடிய வேலை.]*

**காற்றோட்டம்** *kāṟṟōṭṭam,* பெ.(n.) காற்றின் தடையில்லா ஓட்டம் (வீச்சு); ventilation, free circulation of air. இது காற்றோட்டமில்லாத வீடு (உ.வ.).

*[காற்று + ஓட்டம்.]*

**காற்றோட்டி** *kāṟṟōṭṭi,* பெ.(n.) கொடிவகை; thorny caper. 2. செடிவகை; Ceylon caper.

*[காற்று + ஓட்டி. காற்றால் அலைக்கழிக்கப்படாமல் தழையடர்த்தியில்லாத கொடிவகை.]*

**காறடி** *kāṟaḍi,* பெ.(n.) மருக்காரை (மலை.); emetic nut.

*[காறு + அடி.]*

**காறல்**[1] *kāṟal,* பெ.(n.) 1.தொண்டையில் உண்டாகும் கரகரப்பு; pungency, bitter musty flavour producing a tendency to hawk and spit, an itching sensation in the throat. 2. காறும் பொருள்; pungent substance, that which causes irritation in the throat. 3. ***காறற்கொட்டி*** (மலை.) பார்க்க; see *kāṟaṟkoṭṭi*

**ம.** காறல்

**Fin.** karvas; **Lap.** kārvās; **Komi.** kurit; **Jap.** karami; karasa, karō; **Q.** jarachiy.

*[காறு → காறல். கால் → காறு (வெளிவரச்செய் காறித்துப்பும் உணர்வு உண்டாக்குதல். கரிப்பு, கரிப்புடைய பொருள்.]*

**காறல்**[2] *kāṟal,* பெ.(n.) கடல்மீன்வகை; a sea - fish, silvery.

ம. காறல்

*[காறு → காறல். காறல் : கரிப்புச்சுவை.]*



காறல்மீன்

**காறற்கத்தரி** *kāṟaṟ-kattari,* பெ.(n.) கத்தரிவகை; a kind of brinjal.

*[காறல்1 + கத்தரி. காறல் → கரிப்புச்சுவை.]*

**காறற்கொட்டி** *kāṟaṟ-koṭṭi,* பெ.(n.) ஒருவகை மருந்துச் செடி (மலை.); a medicine plant.

*[காறல் + கொட்டி.]*

**காறாக்கருணை** *kāṟā-k-karuṇai,* பெ.(n.) 1. சேனைச்செடி (K.R.); tuberous - rooted herb. 2. சேனைச் செடிவகை (பதார்த்த. 416.); Tahiti arrow root.

*[காற்று + ஆ + கருணை.]*

**காறாப்பி-த்தல்** *kāṟāppi-,* 4 செ.கு.வி. (v.i.) ***காறியுமிழ்*** (யாழ்ப். ) பார்க்க; see *kāṟi-yumiḻ-.*

*[காறு + (ஆப்பு) ஆப்பி.]*

**காறாயல்** *kāṟāyal* பெ.(n.) ***காறாயில்*** பார்க்க;see *kāṟāyil.*

*[காறு + அயல்.]*

**காறாயில்** *kāṟāyil* பெ.(n.) ஒரு சிவத்தலம்; a place famous for its Siva temple. *"கடனாகை நள்ளாறு காறாயல் கோளரியூர் மடனாக முத்தீனும் வாய்மையூர் மறைக்கானம்" (கந்தபு. கந்தவி. 118.) (த.சொ.அக.).*

*[காறை + இல்.]*

**காறித்துப்பு-தல்** *kāṟittuppu,* 12. செ.குன்றாவி (v.t.) ***காறியுமிழ்-தல்*** பார்க்க; see *kāṟi-y-umiḻ.*

ம. காறித்துப்பு

*[காறி + துப்பு.]*

**காறியுமிழ்-தல்** *kāṟi-y-umiḻ-,* 2 செ.கு காறித்துப்புதல்; to hawk and spit.

ம. காறித்துப்புக; பட. காரியுகி.

*[காறி + உமிழ்-. **காறல்** பார்க்க; see kāṟa*

**காறு**[1]**-தல்** *kāṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1 சுவையாதல்; to taste bitter musty or ra... stale food. 2. கோழையை மிடற்றினின்று ... முயலுதல்; to hawk, bring up phlegm.

ம. காறுக; க., பட.காறு (வாந்தியெடு); தெ.... த்ராயு; து. கார்.

*[கால் → காறு.]*

**காறு**[2]**-தல்** *kāṟu-,* 5 செ.கு.வி.(v.i.) கறுத்தல், blackened. *"காறு கண்டத்தர்" (தேவா. 10... :3).* 2.காழ் (வைரம்) கொள்ளுதல்; to harbour revenge. *"காறின வுள்ள நோவ" (கம்பரா. இராவணன்கள. 20).*

க.,ம.காறு.

*[கால் → காள் (கருநிறம்) → காறு (கருமை).]*

**காறு**[3] *kāṟu,* பெ.(n.) கால அளவு; limit, point, measure, or extent of time, often used as on adverbial suffix. *"அன்னை சொற்காறாம்.... ஆண்டு போய் முடிந்த" (கம்பரா. மீட்சி. 140.).*

*[கால் → காறு (நீட்சி). கால நீட்சி]*

**காறு**[4] *kāṟu,* பெ.(n.) 1. கொழு; ploughshare. 2.ஈட்டி போன்ற கருவி (சலாகை); bar. வெள்ளிக்காறு.

**M.E.**scheien; **E.** shear; **DU.** gar; **A.S.** sceren; **ICE.** skera; **Dan.** skhere; **Gk.** keirein; **O.Ir.** sear-ain; **Gael.** szar; **Welsh.** ysgar.

*[கால் → காறு (காலநீட்சி, நீண்ட ஈட்டி, கலப்பைக்கொழு)]*

# காறல் மீன் வகைகள்






சலுவட்டக் காறல்



வரிக்காறல்



மண்டைக் காறல்



கானாக் காறல்



இலைக்காறல்



குறிப்புக் காறல்

**காறுகருணை** *kāṟu-karuṇai,* பெ.(n.) கருணைக் கிழங்கு (பதார்த்த. 415); elephant yam.

*[காறு + கருணை.]*

**காறுகாறெனல்** *kāṟu-kāṟeṉal,* பெ.(n.) சீறுதற் குறிப்பு; expr. of seething anger. *"இவ்வூரிலுள்ளார் என்னோடு காறுகாறென்று" (திவ். பெரியாழ். 3.1,7 வியா. ப. 521).*

*[காறு + காறு + எனல். காறு காறு – ஒலிக்குறிப்பு சினக்குறிப்பைச் சுட்டியது.]*

காறும் - இதுகாறும், சாகுங்காறும்.

**காறுமரம்** *kāṟumaram,* பெ.(n.) கேழ்வரகு பயிரில் களையெடுக்க உதவும் மூன்றடி உயரமுள்ள கருவி (உ.ழ.நெ.க.அக.); a tool (3 feet high) used in weeding ragi crop.

*[காறு + மரம்.]*

**காறுவடி-த்தல்** *kāṟu-vaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கொழுமுனை தீட்டுதல் (வின்.); to sharpen, to coulter of a ploughshare.

*[காறு + வடி. காறு = கொழு, கொழுமுனை.]*

**காறை** *kāṟai,* பெ.(n.) 1. பெண்களும் குழந்தைகளும் கழுத்தில் அணிந்துகொள்ளும் ஒருவகை அணி; gold or silver collar necklet for women and children. *"கழுத்தினிற் காறையொடும் ... பொலிந்த விருட்டிகேசன்"* (திவ். பெரியாழ். 1:8,3). 2. வண்டிக் குடத்தைச் சுற்றியிடும் இரும்புவளையம் (இ.அ.); iron rings round the hub of a cart-wheel. 3. வண்டி; cart. *"காறைமுரி போருக்குக் காப்பிட வேணுமிறே" (திவ். திருப்பா. 24. ஆறா.).* 4. பூஞ்சாளம்;mustiness mould. 5. வைக்கோல் முதலியவற்றின் தாள்; a blade of grass or straw.

*[கால் = நீளுதல். கால் → காறு (நீட்டுதல்) → காறை.]*

**காறைக்குட்டி** *kāṟai-k-kuṭṭi,* பெ.(n.) ஒருவகைக் கடல்மீன்; ஓர் அடி நீளமும் வெளிர்சிவப்பு நிறமும் உடையது; a sea fish - pale dull red, attaining 1ft in length.

*[காறை + குட்டி. காறை = காறல் சுவை.]*

**காறைச்செம்பு (இலை)** *kāṟai-c-cembu, (ilai)* பெ.(n.) செம்பு சேர்த்த மூலிகை; an unknown drug, so called probably of its containing copper (சா.அக.).

*[காறை + செம்பு + இலை.]*

**காறைமீன்** *kāṟai-mīṉ,* பெ.(n.) ஒருவகைக் கடல்மீன்; palankeen boy's fish (சா.அக.).

*[காறை + மீன்.]*

**காறையாடு-தல்** *kāṟaiyāḍu-,* 5 செ.குன்றாவி. ( v.t.) சார்ந்திருத்தல் (இரு.நூ.); dependence.

*[காறை + ஆடு.]*

**காறையெலும்பு** *kāṟai-y-elumbu,* பெ.(n.) கழுத்தெலும்பு; collar bone, clavicle.

ம. காறயெல்லு

*[காறை + எலும்பு. காறை = கட்டியானது. கட்டியான = உறுதியான எலும்பு.]*

**கான்**[1] *kāṉ,* இடை (part.) எழுத்துச் சாரியைகளில் ஒன்று (தொல். எழுத்து. 134); a particle used to facilitate the pronounciation of letters in Tamil, as in அஃகான்.

*[கான் – தனித்த எழுத்தைப் பலுக்கும் இடர்ப்பாடு தணிப்பதற்காகச் சேர்க்கப்படும் துணைச்சொல். இதனை எழுத்துச்சாரியை என்பர்.]*

**கான்**[2] *kāṉ,* பெ.(n.) 1.நீர்வழி (சலதாரை); gutter. 2. வாய்க்கால்; channel. 3. மரக்கலத்தின் அறை; cabin in a ship's, hold.

ம. கான

*[கால் → கான்.]*

**கான்**[3] *kāṉ,* பெ.(n.) 1.காடு (திவா.); jungle. 2. மணம்; smell, odour. கான்பொழில் (மதுரைக்.

337). 3. பூ; flower, blossom. *"கான்முகம் புதைத்த தெண்ணீர்" (சீவக. 2415).*

ம. கான்; க. கான்,கான,கானி, காறு; தெ.,து. கான

*[கா→ கான். கா - விரிவு, படர்வு அடர்வு]*

த.கான்>Skt.gāna

**கான்**[4] *kāṉ*, பெ.(n.) இசை; music. *"கான்பாட தங்குமறை யோசை" (சொக்க. உலா. 9).*

*[கா - பிரிதல், பரவுதல். கா → கான் - பரவும் ஒசை, இசை.]*

த.கான்>Skt.gāna

**கான்குடம்** *kāṉkuḍam*, பெ.(n.) நறும்பிசின்; fragrant gum or resin (சா.அக.).

*[கான் → கூடு → கூடம் → குடம்.]*

**கான்செறி** *kāṉceṟi*, பெ.(n.) கால்விரலணிகளுள் ஒன்று;(சிலப். 6:83, உரை.); ring usually worn on the second toe.

*[கால் + செறி]*

**கான்படுபொருள்கள்** *kāṉ-paḍu-porulgal*, பெ.(n.) அரக்கு, இறால், தேன், மயிற்பீலி, நாவி போன்று காட்டில் உண்டாகும் அரும்பொருள்கள் (பிங்.); products of the forest viz., like honey, peacock feathers.

மறுவ. கான்படுதிரவியம்

*[கான்[3] + படு + பொருள்கள்.]*

**கான்பூழை** *kāṉ-pūḻai*, பெ.(n.) **கான்புலி** (பிங்.) பார்க்க; see *kāṉ-puli.*

மறுவ. கான்புலி

*[கான் + பூழை. பூசை → பூழை.]*

**கான்மரம்** *kāṉ-maram*, பெ.(n.) **ஆல்**[1] (திவா.) பார்க்க; see *āl*[1].

*[கால்[1] + மரம்.]*

**கான்மலைப்பட்சி** *kāṉmalai-p-paṭci*, பெ.(n.) மீனம்பர்; ambergiris (சா.அக.).

*[கான் + மலை + பட்சி.]*

**கான்மா**[1] *kāṉmā*, பெ.(n.) பன்றிப்புடல்; short snake-gourd (சா.அக.).

*[கான் + மா.]*

**கான்மா**[2] *kāṉ-mā*, பெ.(n.) காட்டுப்பன்றி; (வி.); wild boar.

மறுவ. கானமா

*[கான்[3] + மா.]*

**கான்மாறு-தல்** *kāṉ-maṟu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. கழிந்துபோதல்; to pass a way, disappear, as the rays of the sun. *"சுடர்கான் மாறிய செவ்வி நோக்கி" (சிறுபாண். 171).* 2. கால்மாற்றுதல்; to change to leg. *"கான்மாறியாடிய படலம்" (திருவிளை).*

*[கால்[5] + மாறு-.]*

**கான்முகில்** *kāṉmugil*, பெ.(n.) காட்டுமல்லிகை; wild jasmine (சா.அக.).

*[கான் + முகில்.]*

**கான்முரி-தல்** *kāṉmuri-*, 4 செ.கு.வி (v.i.) அடியோடு கெடுதல்; to be utterly ruined, as getting the leg broken. *"பேதையான் வீழ்வானேற் கான்முரியும்" (நான்மணி. 74).*

*[கால்[5] + முரி-.]*

**கான்முளை**[1] *kāṉ-muḷai*, பெ.(n.) மகன்; son, child, as offshoot of the family. *"பின்னர்க் கான்முளை மன்னுத லிலரே" (ஞானா. 21:12).*

*[கால்[1] + முளை.]*

ஒரு மரத்தின் அடியில் முளைக்கும் முளையைப் போன்று மகனிருத்தலின் அவனுக்குக் கான் முளை என்றும் பெயர் (சொல்.கட்.8).

**கான்முளை²** *kāṉmuḷai,* பெ.(n.) 1.அனுமன்; Hanuman. *"கஞ்சமார் கண்ணன் காலிற் கான்முளை கரங்கள் கூப்பி"* (சேதுபு. இராமனரு. 82). 2. புதல்வன்; son. *"விழிக்குங்கண் வேறில்லா வெங்கானென் கான்முளையைச் சுழிக்கும் வினையாலேகச் சூழ்வாய்" (இராமா. நகர்நீ. 49) (த.சொ.அக.).*

*[கால் + முளை.]*

**கான்மோதிரம்** *kāṉ-mōdiram,* பெ.(n.) ***கான்செறி*** பார்க்க; see *kāṉ-sēri*

*[கால் + மோதிரம்.]*

**கான்யாறு** *kāṉ-y-āṟu,* பெ.(n.) முல்லை நிலத்துள்ள யாறு; river in a sylvan tract. *"விரவுமல ரணிந்த வேனிற் கான்யாற்று" (ஐங்குறு. 367).*

*[கான்³ + யாறு.]*

**கான்றருகன்** *kāṉṟarugaṉ,* பெ.(n.) பாதிரிமரம்; trumpet flower tree (சா.அக.).

*[கான் + தரு – கான்தரு → கான்தருகன்.]*

**கான்றல்¹** *kāṉṟal,* பெ.(n.) 1.வாயிலெடுத்தல் (திவா.); vomiting. 2. இருமிக் கோழை துப்புகை; coughing and ejecting phlegm. *"வெண்ணரை பொரக்கான்று"* (வேதாரணி. வீரசேன. 24).

*[கால் → கான் → கான்றல்.]*

**கான்றல்²** *kāṉṟal,* பெ.(n.) கொப்புளித்தல்; gargling (சா.அக.) (ஆ.ரேகவை. 10–2).

*[கால் → கான்று → கான்றல்.]*

**கான்றியம்** *kāṉṟiyam,* பெ.(n.) வெப்பம்; heat.

*[காந்து → கான்றியம்.]*

**கான்று–தல்** *kāṉṟu-,* 5 செ.கு.வி.(v.i.) வாயா லெடுத்தல்; to vomit.

ம. கான்றுக; பட. காரு.

*[கால் → கான் → கான்று.]*

**கான்றை¹** *kāṉṟai,* பெ.(n.) ஒருவகை முட்செடி; a thorny shrub (சா.அக.).

*[கான்று → கான்றை]*

**கான்றை²** *kāṉṟai,* பெ.(n.) மரவகை; a kind of tree. *'கான்றையுஞ் சூரையுங் கள்ளியு மடர்ந்து (மணிமே. 6:81).*

*[கான்று → கான்றை.]*

**கானக்குதிரை¹** *kāṉa-k-kudirai,* பெ.(n.) 1.மரை, கடம்பை; elk. 2. மாமரம்; mango tree.

*[கானம் + குதிரை.]*

**கானக்குதிரை²** *kāṉa-k-kudirai,* பெ.(n.) 1.காட்டு மான்வகை (பிங்.); yak. 2. காட்டுக்குதிரை (வின்.); wild horse.

*[கானம்² + குதிரை.]*



கானக்குதிரை

**கானக்குறத்தி** *kāṉa-k-kuṟatti,* பெ.(n.) 1. வல்லாரை; Asiatic or Indian pennywort (சா.அக.). 2. தேன்; honey (கோ.தமி.கை.).

*[கானம் + குறத்தி.]*

**கானக்குறத்திமுலைப்பால்** *kāṉa-k-kuṟatti-mulai-p-pāl,* பெ.(n.) தேன் (வின்.); honey.

*[கானம்² + குறத்தி + முலைப்பால்.]*

**கானக்குன்று** *kāṉa-k-kuṉṟu,* பெ.(n.) ஒரு கனிமச் செய்ந்நஞ்சு; a mineral poison (சா.அக.).

*[கானம் + குன்று.]*

**கானக்கைதை** *kāṉa-k-kaitai,* பெ.(n.) காட்டுத் தாழை; forest screw-pine.

ம. கானகைத

*[கானம்² + கைதை (தாழை வகை).]*

**கானக்கோழி** *kāṉa-k-kōḻi,* பெ.(n.) காட்டுக்கோழி; grey jungle fowl. *"கானக்கோழியும் நீர்நிறக் காக்கையும்" (சிலப். 10,116).*

மறுவ. கானகக்கோழி

ம. கானக்கோழி

*[கானம்² + கோழி.]*



கானக்கோழி

**கானக்கோழிப்பூ** *kāṉa-k-kōḻippū,* பெ.(n.) கானாங் கோழியின் கொண்டை; crest of Guinea fowl (சா.அக.).

*[கானம் + கோழி + பூ.]*

**கானகக்கமுகு** *kāṉaga-k-kamugu,* பெ.(n.) ஒரு வகைப் பாக்கு மரம்; a kind of wild areca nut tree.

ம. கானகக்கமுகு

*[கானகம் + கமுகு.]*

**கானகக்கல்** *kāṉaga-k-kal,* பெ.(n.) கருப்புக்கல் (வின்.); a kind of metallic ore.

மறுவ. கானக்கல்

*[கானகம்¹ + கல்.]*

**கானகக்கறுப்பி** *kāṉaga-k-kaṟuppi,* பெ.(n.) கருங்கொடிவேலி; black-flowered leadwort.

*[கானகம் + கறுப்பி.]*

**கானகக்குவடு** *kāṉaga-k-kuvaḍu,* பெ.(n.) மரகதப்பச்சை; emerald stone (சா.அக.).

*[கானகம் + குவடு.]*

**கானகக்குறத்தி** *kāṉaga-k-kuṟatti,* பெ.(n.) 1.நிலப்பனை; ground-palm. 2. கொம்புத்தேன்; honey collected on the branches of trees (சா.அக.).

*[கானகம் + குறத்தி.]*

**கானகக்கூத்து** *kāṉaga-k-kūttu,* பெ.(n.) கூத்து வகை; a kind of dancing. *"கானகக் கூத்துங் கழைக்கூத்தும் ஆடுபவராகச் சாதி வரையறை யிலராதலின்" (தொல். பொருள். 91, உரை).*

*[கானகம்¹ + கூத்து.]*

**கானகக்கூபன்** *kāṉaga-k-kūbaṉ,* பெ.(n.) நாகப்பச்சை என்னும் துணை மருந்துச் சரக்கு; a peculiar green stone forming one of the 120 kinds of natural substances (சா.அக.).

*[கானகம் + கூபன்.]*

**கானகச்சங்கம்** *kāṉaga-c-caṅgam,* பெ.(n.) **நாகவண்டு** (யாழ்.அக.) பார்க்க; see *nāga-vaṇḍu.*

*[கானகம்¹ + சங்கம்.]*

**கானகச் சாரங்கம்** *kāṉaga-c-cāraṅgam,* பெ.(n.) கலைமான் கொம்பு; stag's horn (சா.அக.).

*[கானகம் + சாரங்கம்.]*

**கானகச்சிப்பி** *kāṉaga-c-cippi,* பெ.(n.) கிளிஞ்சில்; bivallur-shell (சா.அக.).

*[கானகம் + சிப்பி.]*

**கானகச்சீதம்** *kāṉaga-c-cīdam,* பெ.(n.) 1.கரு வண்டு; black beetle. 2. காட்டில் நிலவும் குளிர்ச்சி; chillness in forest (சா.அக.).

*[கானகம் + சீதம். சீதம் = குளிர்ச்சி.]*

**கானகச்சீரம்** *kāṉaga-c-cīram,* பெ.(n.) கருஞ் சீரகம்; black cumin (சா.அக.).

*[கானகம் + சீரகம் → சீரம்.]*


கானகச்சீரம்

**கானகச்சேவகன்** *kāṉaga-c-cēvagaṉ,* பெ.(n.) 1.எலி; rat. 2. காட்டுப் பன்றி; wild boar (சா.அக.).

*[கானகம் + சேவகன்.]*

**கானகத்தட்டான்** *kāṉaga-t-taṭṭāṉ,* பெ.(n.) செவ்வட்டைவகை (யாழ்.அக.); tawny leech.

*[கானகம் + தட்டான்.]*

**கானகத்ததிபதி** *kāṉaga-t-tadipadi,* பெ.(n.) தூதுவளை; three-lobed night shade (சா.அக.).

*[கானகத்து + அதிபதி.]*

**கானகத்தி** *kāṉagatti,* பெ.(n.) வரகு; a kind of millet (சா.அக.).

*[கான் + அகத்தி.]*

**கானகத்தின் முத்து** *kāṉaga-t-tiṉ-muttu,* பெ.(n.) ஒருவகை மூலிகை; an unknown plant (சா.அக.).

*[கானகத்தின் + முத்து.]*

**கானகத்தீயம்** *kāṉaga-t-tīyam,* பெ.(n.) வெள்ளீய மணல்; lead-ore (சா.அக.).

*[கானகம் + அத்து + ஈயம்.]*

**கானகத்துச் சோதி** *kāṉagattu-c-cōdi,* பெ.(n.) சோதிமரம்; a forest tree imagined to be luminous in the dark (சா.அக.).

*[கானகம் + அத்து + சோதி.]*

**கானகத்துநெல்லி** *kāṉagattu-nelli,* பெ.(n.) கருநெல்லி; black species of Indian goosberry (சா.அக.).

*[கானகம் + அத்து + நெல்லி.]*

**கானகத்துப்புல்** *kāṉagathu-p-pul,* பெ.(n.) 1.காவட்டம்புல்; citronella. 2. காட்டுப்புல்; forest grass in common (சா.அக.).

மறுவ. கானகப்புல்

*[கானகம் + அத்து + புல்.]*

**கானகத்தும்பி** *kāṉaga-t-tumbi,* பெ.(n.) 1. கரு வண்டு; black beetler. (சா.அக.). 2. கருவண்டு வகை (வின்.); a kind of black beetle.

ம. கானகத்தும்பி

*[கானகம் + தும்பி.]*


கானகத்தும்பி

**கானகத்துமா** *kāṉaga-t-tumā,* பெ.(n.) காட்டு மாமரம்; jungle mango (சா.அக.).

*[கானகம் + அத்து + மா.]*

**கானகத்துவெண்பல்** *kāṉaga-t-tu-veṇpal,* பெ.(n.) கரடி; bear (சா.அக.).

*[கானகம் + அத்து + வெண்பல்.]*

**கானகத்தூமம்** *kāṉaga-t-tūmam,* பெ.(n.) 1. கற் செய்நஞ்சு; a kind of arsenic (சா.அக.) 2. கல்நஞ்சு (வின்.); a mineral poison.

*[கானகம்[1] + தூமம்.]*

**கானகநாடன்[1]** *kāṉaga-nāḍaṉ,* பெ.(n.) முல்லை நிலத் தலைவன் (திவா.); chief of a sylvan tract.

*[கானகம் + நாடன்.]*

**கானகநாடன்[2]** *kāṉaga-nāḍaṉ,* பெ.(n.) 1. குறிஞ்சிநிலத் தலைவன்; chief of a mountain tract. *"கானக நாடன் வரவும்" (ஐங்குறு. 217).*

மறுவ. கானநாடன், மலையன், வெற்பன், சிலம்பன், பொருப்பன்.

*[கானகம் + நாடன்.]*

**கானகப்பச்சை** *kāṉaga-p-paccai,* பெ.(n.) 1. மரகதப் பச்சை; emerald green (சா.அக.). 2. ஒரு வகைப் பச்சைமணி (வின்.); a kind of emerald.

மறுவ. கானகக்குவடு

ம. கானகப்பச்ச

*[கானகம் + பச்சை.]*

**கானகம்[1]** *kāṉ-agam,* பெ.(n.) காடு; forest, wood. "கானகத்தே நடக்குந் திருவடி (திருவாசக. 40:8). 2. கருஞ்சீரகம் (மலை.); black cumin.

ம. கானகம்

*[கான்[1] + அகம்.]*

**கானகம்[2]** *kāṉagam,* பெ.(n.) கால் நகம் (வின்.); toe-nail.

ம. கானகம்

*[கால்[1] + நகம்.]*

**கானகம்[3]** *kāṉagam,* பெ.(n.) 1.குறிஞ்சிநிலம்; mountainous tract. 2. வஞ்சிமரம்; country willow. 3. பெண்யானை; female elephant. 4. காட்டு மல்லிகை; jungle jasmine. 5. சிற்றகத்தி; small sesban (சா.அக.).

*[கான் + அகம் – கானகம் (காடு, மலை, யானை, காடுபடு பொருள்கள்.]*

**கானகவல்லி** *kāṉaga-valli,* பெ.(n.) இருவாட்சி (சா.அக.);moon-creeper.

மறுவ. கானகவாட்சி

*[கானகம் + வல்லி.]*

**கானகவிருத்தி** *kāṉaga-virutti,* பெ.(n.) தினை; millet (சா.அக.).

*[கானகம் + விருத்தி.]*

**கானங்கோழி** *kāṉaṅ-kōḻi,* பெ.(n.) 1. ***கானக்கோழி*** (இறை. 1,18) பார்க்க; see *kāṉak-kōḻi.* 2. வழுக்கைத் தலையையுடைய புள்வகை (வின்.); bald coof.

*[கானம்[2] + கோழி.]*

**கானடா** *kāṉaḍā,* பெ.(n.) ஒரு பண்வகை; a musical node.

ம. கானட

*[கான் + நாடு – கானாடு → கானடம் → கானடா (முல்லைப்பண் (வின்.).]*

**கானத்தி** *kāṉatti,* பெ.(n.) 1.காட்டத்தி; forest fig tree. 2. காட்டில் முளைக்கும் செடி; forest plant in common (சா.அக.).

*[கான் + அத்தி.]*

**கானத்தூபம்** *kāṉa-t-tūbam,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு (கற்செய்நஞ்சு); a kind of arsenic (சா.அக.).

*[கானம் + தூபம்.]*

**கானத்தேறு** *kāna-t-tēṟu,* பெ.(n.) மஞ்சள் (கலை.); turmeric.

*[கானம்² + தேறு.]*

**கானத்தை** *kāṉattai,* பெ.(n.) மிளகு; black-pepper (சா.அக.).

*[கானம் → கானத்தை.]*

**கானநாடன்** *kāṉa-nāḍaṉ,* பெ.(n.) முல்லைநிலத் தலைவன் (சூடா.); chief of a sylvan tract.

*[கானம்² + நாடன்.]*

**கானநாடி** *kāṉa-nāḍi,* பெ.(n.) காளி; *Kāḷi* *"கான நாடி திருமுன்றில்" (தக்கயாகப். 80).*

*[கானம் = காடு. கானம் + நாடு + இ → கானநாடி. காட்டுக்கடவுளான பெண் தெய்வம். 'இ' பெண்பாலீறு.]*

**கானப்படம்** *kāṉa-p-paḍam,* பெ.(n.) 1.காடெழுதின கேடயம்; shield adorned with the picture of a forest. *"கானப் படமுங் காழூன்று கடிகையும்" (சிலப். 14:173).* 2. யானை, சிங்க முதலிய படமெழுதின கிடுகு; wooden frame with figures of elephant, lion, etc. painted thereon. 3. பெருவாரல் வலை (சிலப். 14:173, அரும்.); net with large meshes.

*[கானம்² + படம்.]*

**கானப்பயறு** *kāṉa-p-payaṟu,* பெ.(n.) கொள்ளு; horse-gram (சா.அக.).

மறுவ. காணம்

*[கானம் + பயறு.]*

**கானப்பலா** *kāṉa-p-palā,* பெ.(n.) காட்டுப்பலா (சங்.அக.); jungle jack.

ம. கானப்பலா

*[கானம்² + பலா.]*

**கானப்பால்** *kāṉa-p-pāl,* பெ.(n.) தில்லைப்பால்; tiger's milk spurge (சா.அக.).

*[கானம் + பால்.]*

**கானப்பாலை** *kāṉa-p-pālai,* பெ.(n.) காட்டுப்பாலை; wild *pālai* (சா.அக.).

*[கானம் + பாலை.]*

**கானப்பேர்** *kāṉa-p-pēr,* பெ.(n.) காளையார் கோயில்; *kāḷaiyārkōil,* as a forest city in Sivagangai district. *"அருங்குறும் புடுத்த கானப்பேர்" (புறநா. 21:6).* •

*[கானம் + பெரு + எயில் – கானப்பேரெயில் → கானப்பேர். கானப்பேரெயில் (ஊரின்பெயர்)* ***கானப்பேரெயில்*** *பார்க்க; see kāṉa-p-pēreyil.]*

**கானப்பொட்டு** *kāṉa-p-poṭṭu,* பெ.(n.) கமேலா மரத்தின் காய்களிலிருந்து உதிரும் பொடி; kamela dye or scarlet croton (சா.அக.).

மறுவ. கபிலப்பொடி

*[கானம் + பொட்டு.]*

**கானபலை** *kāṉapalai,* பெ.(n.) கனுப்பாலை என்னும் ஏழிலைப் பாலை; seven leaved milky plant (சா.அக.).

*[கனுப்பாலை → கானபலை.]*

**கானம்¹** *kāṉam,* பெ.(n.) தேர் (சூடா.); car.

*[கா = பெரியது. கா = கானம். பெரிய வடிவுடைய தேர்.]*

*kânana, kântâra,* a wood, a forest. There is no proper root in *Sk.* to derive these words from. They may have been formed of *D. kâḷa1,* etc (K.K.E.D.XXIII).

**கானம்²** *kāṉam,* பெ.(n.) 1.காடு (திவா.); woodlan grove, forest tract. 2. நந்தவனம்; flower-garden.

*"காலுங் கானமுங் கடிமல ரேந்த"* (*சிலப். 14:114*). 3. மணம் (திவா.); fragrant scent. odour. 4. தொகுதி; heap,crowd, collection, bevy. *"செங்காற் பறவைக் கானத்து"* (மணிமே. 5:129). 5. பேதை (சூடா.); ignorant, rude person.

**ம.** கானம்; **க.** கா; **தெ., து.** கான.

**Skt.** kānana

*[கா = பிரிவு, அகற்சி, பரப்பு.]*

**கானம்**[3] *kāṉam,* பெ.(n.) 1.இசைப்பாட்டு (திவா.); song, musical composition. 2. வானம்பாடி (சூடா.); skylark.

*[கா → கான் + அம் – கானம்.]*

**கானம்புல்** *kāṉambul,* பெ.(n.) கூரைவேயப் பயன்படும் புல்வகைகளுள் ஒன்று (நெல்.வழ.);a grass used as thatch.

*[கான் + அம் + புல்.]*

**கானமடக்கு** *kāṉa-madakku,* பெ.(n.) காட்டு வெக்காலி; partidge pea tree (சா.அக.).

*[கான் + அ + மடக்கு.]*

**கானமயிலை** *kāṉa-mayilai,* பெ.(n.) 1.பாய் விரிமூலி; wild ramboutan. 2. பசலைக்கொடி; Indian spinach (சா.அக.). 3.மரவகை (L.); wild ramboutan.

**ம.** கானமயில

*[கான் + அ + மயிலை.]*

**கானமல்லிகை** *kāṉa-malligai,* பெ.(n.) காட்டு மல்லிகை (இலக்.வி.170, உரை.); wild jasmine.

*[கானம்[2] + மல்லிகை.]*

**கானமா** *kāṉamā,* பெ.(n.) காட்டுப்பன்றி; wild pig (சா.அக.).

*[கானம் + மா.]*

**கானமூர்த்தி** *kāṉa-mūrtti,* பெ.(n.) மேள வகைகளுள் ஒன்று (சங்.சந். 47); a primary *rāga.*

*[கானம் + மூர்த்தி.]*

**கானமௌவல்** *kāṉa-mouval,* பெ.(n.) காட்டு மல்லிகை (மலை.); wild jasmine.

*[கானம்[2] + மௌவல்.]*

**கானயூகம்** *kāṉa-yūgam,* பெ.(n.) காட்டுக் குரங்கு (வின்.); wild monkey.

*[கானம்[2] + ஊகம்.]*

**கானல்**[1] *kāṉal,* பெ.(n.) 1.மணம்; scent, odour. *"கானலங் காவும்"* (பரிபா. 16:17) 2. கடற்கரை; seashore. *"புலவு மணற் பசுங்கானல்"* (பட்டினப். 94). 3. கடற்கரை சோலை; grove or forest on the sea-shore. *"கானலுங் கடலுங் கரையுந் தேர்வுழி"* (மணிமே. 25:196). 4. கழி(திவா.); salt marsh. 5. உப்பளம் (பிங்.); salt-pan. 6. உவர்நிலம் (பிங்.); saline soil. 7. மலைசார்ந்த சோலை (திவா.); forest on the slope of a hill.

**ம., க.** கானல்.

*[கான் + அல் – கானல்.]*

**கானல்**[2] *kāṉal,* பெ.(n.) 1.வெப்பம்; heat. இங்கே கானலடிக்கிறது (உ.வ.). 2. சூரியன் ஒளிக்கதிர் (திவா.); sun's ray. 3. ஒளி; light, lustre, brightness. *"தேங்கு கானற் கிளிச்சிறை"* (இரகு. நகர. 67). 4. பேய்த்தேர் (திவா.); mirage. 5. பரல் நிரம்பிய நிலம் (பிங்.); gravelly soil.

**ம.** கானல்

*[கனல் → கானல்.]*

**கானல்கன்னி** *kāṉal-kaṉṉi,* பெ.(n.) 1.காட்டு மருக்கொழுந்து; southern-wood. 2. காட்டுத் தெய்வமகள்; virgin goddess of the forest (சா.அக.).

*[கானல் + கன்னி.]*

**கானல்தெங்கு** *kāṉal-teṅgu,* பெ.(n.) காட்டுத் தென்னை; wild coconut palm.

ம. கானல்தெங்கு

*[கானல் + தெங்கு.]*

**கானல்நீர்** *kāṉal-nīr,* பெ.(n.) பேய்த்தேர்; mirage.

ம. கானல்சலம்

*[கானல் + நீர்.]*

**கானல்மிளகாய்** *kāṉal-miḷakāy,* பெ.(n.) ஊசிமிளகாய்; a kind of chilli (சா.அக.).

*[கானல் + மிளகாய்.]*

**கானல்வரி**[1] *kāṉal-vari,* பெ.(n.) 1. கழிக்கரைக் காதற் பாடல் (சிலப். 6:35, உரை.); love-songs of fishermen, sung in coastal regions. 2. இசைப் பாவகையுள் ஒன்று; (சிலப்.கடலாடு. 35. உரை) (த.சொ.அக.);one of the musical poems.

ம. கானல் வரிப்பாட்டு

*[கானல்[1] + வரி.]*

**கானல்விலங்கு** *kāṉal-vilaṅgu,* பெ.(n.) 1.கொக்குமந்தாரை; taper pointed mountain ebony. 2. காட்டுப் பன்றி; wild boar (சா.அக.).

*[கானல் + விலங்கு.]*

**கானல்வீசு-தல்** *kāṉal-vīsu-,* 5 செ.கு.வி.(v.i.) 1.***கானலோடு*** (வின்.); பார்க்க; see *kāṉalōḍu.* 2. ***கானலடி*** பார்க்க; see *kāṉalaḍi.*

*[கானல்[2] + வீசு .]*

**கானலடி-த்தல்** *kāṉal-aḍi-,* 4 செ.கு.வி.(v.i.) வெக்கையடித்தல்; to have heat-wave, radiation of heat.

*[கானல்[2] + அடி-.]*

**கானலோடு-தல்** *kāṉal-ōḍu-,* 5 செ.கு.வி.(v.i.) பேய்த்தேரோடுதல் (வின்.); to have the mirage float before the eyes.

*[கானல்[2] + ஓடு-.]*

**கானவன்** *kāṉavaṉ,* பெ.(n.) 1.குறிஞ்சி, முல்லை அல்லது பாலைநிலத்து மகன் (பிங்.); inhabitant of a mountain, forest or desert tract. 2. குரங்கு (உரி.நி.); monkey.

*[கானம்[2] → கானவன்.]*

**கானவாரணம்** *kāṉa-vāraṇam,* பெ.(n.) காட்டுக்கோழி; jungle fowl. *"கான வாரண மீனுங் காடாகி" (புறநா. 52:16).*

*[கானம்[2] + வாரணம்.]*

**கானவாழை** *kāṉa-vāḻai,* பெ.(n.) நீர்வாழை (பிங்.); traveller's palm.

*[கானம்[2] + வாழை.]*

**கானவிருக்கம்** *kāṉa-virukkam,* பெ.(n.) பாதிரி (மலை.); trumpet flower.

*[கானம்[2] + விருக்கம்.]*

**கானவிருடி** *kāṉa-v-iruḍi,* பெ.(n.) சிற்றாமுட்டி; rose-coloured sticky mallow (சா.அக.).

*[கானம் + இருடி.]*

**கானவைப்பு** *kāṉavaippu,* பெ.(n.) முல்லைநிலம்; forest tract.

*[கான் + அ + வைப்பு.]*

**கானற்குன்று** *kāṉaṟ-kūṉṟu,* பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு; a kind of mineral poison (சா.அக.).

*[கானல் + குன்று.]*

**கானற்பலா** *kāṉaṟ-palā,* பெ.(n.) கல்வருக்கை (சங்.அக.); anjeli.

*[கானல் + பலா.]*

**கானற்பேய்ச்சி** *kāṉaṟ-pēycci,* பெ.(n.) பேய்த் தும்பை; devil lucas (சா.அக.).

*[கானல் + பேய்ச்சி.]*

**கானனம்** *kāṉaṉam,* பெ.(n.) காடு (பிங்.); forest, woods, grove.

ம. கானனம்; க. கானன.

*[கான் + அன் + அம். 'அன்' சொற்சாரியை. 'அம்' சொல்லாக்க ஈறு.]*

**கானனீர்** *kāṉaṉīr,* பெ.(n.) கானலில் தோன்றும் நீர்த்தோற்றம் (தாயு. பொருள்வ.6); mirage, as mistaken for a sheet of water.

மறுவ. கானற்சலம்

*[கானல்[2] + நீர்.]*

**கானனுசாரி** *kāṉ-aṉušāri,* பெ.(n.) நன்னாரி (மலை.); Indian sarsaparilla.

*[கான்[3]+அனுசாரி]*

**கானா** *kāṉā,* பெ.(n.) வாச்சிய வகை; a kind of trumpet. *"வாங்காலுங் கானாவும் (மான்விடு. 239).*

*[கால் (நீட்சி) → கான்→ கானா.]*

**கானாங்கள்ளி** *kāṉāṅ-kaḷḷi,* பெ.(n.) இலைக்கள்ளி; spiral five tubercled spurge. *"கூட்டியே திருகு கள்ளி கானாங் கள்ளி கடசாதே படர்ந்திருந்த முள்ளிக் கள்ளி" (வைர.163.) (த.சொ. அக.).*

ம. கானங்கள்ளி



கானாங்கள்ளி

**கானாங்கீரை** *kāṉāṅ-kīrai,* பெ.(n.) ***கானாங் கோழை*** பார்க்க; see *kāṉāṅ-kōḻai*

*[கான்[3] + ஆம் + கீரை.]*

**கானாங்கெளிறு** *kāṉāṅ-keḷiṟu,* பெ.(n.) நன்னீரில் வாழும் மீன்வகை (சங்.அக.); a fresh-water fish.

*[கான்[3] + ஆம் + கெளிறு.]*

**கானாங்கெளுத்தி** *kāṉāṅ-keḷutti,* பெ.(n.) கடல்மீன்வகை; a kind of sea fish.

*[கான்[3] + அம் + கெளுத்தி.]*



கானாங்கெளுத்தி

**கானாங்கோழி** *kāṉāṅ-kōḻi* பெ.(n.) 1.காட்டுக் கோழி (தொல். எழுத்து. 405, உரை.); jungle fowl. 2. வான்கோழி (வின்.); turkey.

*[கான்[3] + ஆம் + கோழி.]*

**கானாங்கோழை** *kāṉāṅ-kōḻai,* பெ.(n.) 1.கானா வாழைவகை (M.M.); calf's grass. 2. பூடு வகை (வின்.); common spiderwort.

*[கான்[3] + ஆம் + கோழை.]*

**கானாங்கோனான்[1]** *kāṉāṅkōṉāṉ,* பெ.(n.) குழப்பம் (வின்.); want of method, confusion.

*[கானல் + கோனன் – கானாங்கோனன்→ கானாங்கோனான்.]*

**கானாங்கோனான்[2]** *kāṉāṅ-kōṉāṉ,* பெ.(n.) எவ்வகையாரும் (யாழ்.அக.); all and sundry.

*[கானான் + கோனான் – கானாங்கோனான். கானன், கோனன் இயற்பெயர்கள். யாரேனும் இருவர் இயற்பெயர்களை அடுக்கிச் சொல்வது எவனாயிருந்தாலும் என்று பொருள்படு வதாயிற்று.]*

**கானாத்தடி** *kāṉā-t-taḍi,* பெ.(n.) ***கானா*** (வின்.) பார்க்க; see *kāṉā.*

*[கானா + தடி.]*

**கானாமுசல்** *kāṉā-mušal,* பெ.(n.) வேகமாய்ப் பறக்கும் பறவை வகை (M.M.); jungle hare, stone - plover, swift like a hare.

*[கான்[3] + ஆம் + (முயல்) முசல்.]*

**கானாமுருங்கை** *kāṉa-muruṅgai,* பெ.(n.) காட்டு முருங்கை; jungle moringa, senna-leaved french honeysuckle.

*[கான்[3] + ஆம் + முருங்கை. கான் = காடு.]*

**கானாமொச்சை** *kāṉā-moccai,* பெ.(n.) காட்டு மொச்சை; country bean (சா.அக.).

*[கானம் + மொச்சை.]*

**கானாவதி** *kānāvati,* பெ.(n.) திப்பிலி; long pepper (சா.அக.).

*[கானம் + அத்தி – கானாத்தி → கானாவதி.]*

**கானாவாழை** *kāṉ-ā-vāḻai,* பெ.(n.) ***கானாங் கோழை*** பார்க்க; see *kāṉaṅ-kōḻai.*

*[கான்[3] + ஆம் + வாழை.]*

**கானாவு** *kāṉāvu,* பெ.(n.) காட்டுக்குன்றி; wild cats eye crab (சா.அக.).

*[கான் + ஆவு.]*

**கானாவேளை** *kāṉāvēḷai,* பெ.(n.) 1. தைவேளை; ஒரு மூலிகை; a black variety of *vēḷai* or five leaved clome (சா.அக.). 2.செடிவகை (வின்.); a plant.

*[கானம் + வேளை.]*

**கானாழி** *kāṉāḻi,* பெ.(n.) 1.வெள்வங்கம்; white lead-tin. 2. கால்நாழிஅளவு; an Indian measure of capacity i.e. 28/4 or 7 cubic inches. 3. பட்டணம் படியில் (இரண்டு லிட்டர்) கால்படி; according to Madras measure, 1/4 measure (சா.அக.).

*[கால் + நாழி.]*

**கானாழிகை** *kāṉāḻikai,* பெ.(n.) கால்நாழிகை; an Indian time measure 4/24 or 6 minutes (சா.அக.).

*[கால் + நாழிகை.]*

**கானான்** *kāṉāṉ,* பெ.(n.) ஒருவகைக் கொடி (இராசவைத்.); a kind of creeper.

*[கான் + ஆன்.]*

**கானிகம்** *kāṉigam,* பெ.(n.) மணித்தக்காளி; black-berried solnum (சா.அக.).

*[கான் → கானிகம்.]*

**கானித்தம்** *kāṉittam,* பெ.(n.) ஏலம்; cardamom (சா.அக.).

*[கான் → கானித்தம்.]*

**கானியமேனிக்கல்** *kāṉiya-mēṉi-k-kal,* கரும் புள்ளிக்கல் என்னும் கானகக்கல்; a mineral stone with black dots arising on it from the presence in it of metallic remnants (சா.அக.).

*[கானிய + மேனி + கல்.]*

**கானிருப்பியம்** *kāṉiruppiyam,* பெ.(n.) அணு மூலுதுவரை; a kind of dhardocl (சா.அக.).

*[கான் + இருப்பியம்.]*

**கானிலம்** *kāṉilam,* பெ.(n.) கொடுவேலி (மலை.); Ceylon leadwort.

*[கான்[3] + நிலம்.]*

**கானீயம்** *kāṉīam,* பெ.(n.) 1.கக்கரிக்காய்; wild cucumber. 2. காட்டில் தோண்டியெடுக்கும் காரீயம்; graphite (சா.அக.).

*[கான் + ஈயம்.]*

**கானெள்** *kāṉ-el,* பெ.(n.) காட்டெள் (இ.வ.); ramtil.

*[கான்² + எள் - கானெள். கான் = காடு.]*

**கானெறி** *kāṉeṟi,* பெ.(n.) 1.சாளரம்; window as passage for air. *"கானெறி யாயினானே" (சீவக. 2291).*

*[கால்³ + நெறி]*

**கானை**[1] *kāṉai,* பெ.(n.) மாட்டின் காலிற்காணும் நோய் வகை (இ.வ.); foot disease in cattle.

*[கால் + நோய் - கால்நோய் → கானோய் → கானை.] (கொ.வ)*

**கானை**[2] *kāṉai,* பெ.(n.) கானப்பேர் எனும் ஊர்; place name *kāṉappēr. "கானையம் பதியடைந் தார்" (திருவாலவா. 27).*

*[கானப்பேர் → கானை (மரூஉ.)]*

**கானோக்கு** *kāṉōkku,* பெ.(n.) காற்பங்குப் பார்வை (கணி); quarter vision. *"கோள்களின் நோக்கறியு மிடத்துக் கோள்கள் நின்ற ஒரை (இராசி). முதல் மூன்றும் பத்தும் கானோக்கு; கானோக்கிற் சனிவலியன்" (இரகுநாதையர் பஞ்சாங்கம்) (த.சொ.அக.).*

*[கால் + நோக்கு → கானோக்கு.]*

**கி** *ki,* பெ.(n.) 'க்' என்னும் மெய்யெழுத்தும் 'இ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து பிறந்த உயிர்மெய் யெழுத்து; the syllable formed by adding front short vowel (i) to the velar voiceless stop (k), one of the secondary alphabet of Tamil language.

*[க் + இ - கி. உயிர்மெய்க் குறிலெழுத்து.]*

**கிக்கிரி** *kikkiri,* பெ.(n.) மீன்கொத்திப் புள் (யாழ். அக.); king fisher.

ம. கிக்கிரி

*[கீள் + கிளி → கீள்கிளி → கிக்கிரி (கொ.வ.).]*

**கிக்கிலம்** *kikkilam,* பெ.(n.) மலைதாங்கி என்னும் மூலிகை; sickle leaf (சா.அக.).

*[குறு + கிலம் - குறுக்கிலம் → குக்கிலம் → கிக்கிலம் (கொ.வ.).]*

**கிகண்டம்** *kigaṇḍam,* பெ.(n.) மயிற்றோகை; peacock's tail (சா.அக.).

*[கிகண்டம் → கிகண்டம்.]*

**கிகிணி**[1] *kikiṇi,* பெ.(n.) காக்கணம் கொடி (திவா.); mussel-shell creeper (செ.அக.).

ம. கிகிணி

*[காக்காணம் → காக்கனி → கக்கிணி → கிகிணி (கொ.வ.).]*

**கிகிணி**[2] *kikiṇi,* பெ.(n.) வலியன் என்னும் கரிக் குருவிப் புள் (பிங்.); king-crow.

*[கீள் = பிளத்தல், கொத்துதல். கீல்கு → கீற்கு → கீற்குணி → கிக்குணி → கிகிணி (கொ.வ.).]*

**கிகீதி** *kigīdi,* பெ.(n.) காடை; quail (சா.அக.).

*[கு+கூவி - குகூவி → கிகீதி.]*

**கிங்கரன்** *kiṅgaraṉ,* பெ.(n.) ஏவலாள்; servant, attendant. *"நமனார், கிங்கரர்" (பதினோ.பொன் வண்.66).*

ம. கிங்கரன், கிங்கணன் (குறைந்த செல்வம் உள்ளவன்); க. கிங்கர; தெ. கிங்கருடு; து. கிங்கரெ; skt. *kiṅkara.*

*[கீழ் + கருமன் - கீழ்கருமன் → கிக்கருமான் → கிக்கரன் → கிங்கரன் (கொ.வ.).]*

**கிங்கரி** *kiṅgari,* பெ.(n.) 1. ஏவலாளனின் மனைவி; wife of a servant. 2. வேலைக்காரி; a maid servant.

ம. கிங்கரி

*[கிங்கரன் (ஆ.பா.) - கிங்கரி (பெ.பா.) (கொ.வ.)]*

**கிங்கிணி** *kiṅgiṇi,* பெ.(n.) 1. காற்சலங்கை (பிங்.); tinkling ornament for the ankle. 2. அரைச் சலங்கை; girdle of small bells. *"மாணிக்கக் கிங்கிணி தன்னரை யாட" (திவ்.பெரியாழ்.1:8,2).* 3. கிலு கிலுப்பை வகை; a species of rattle wort.

ம. கிங்கிணி, கிங்ஙிணி; க., தெ., து. கிங்கிணி; skt. kiṅkiṇi.

*[கிண்+கிணி – கிண்கிணி → கிங்கிணி. ஒலிக்குறிப்புச் சொல் அவ்வொலி யெழுப்பும் காற்சலங்கைக்கும் கிலுகிலுப்பைக்கும் ஆயிற்று.]*

**கிங்கிணிப்பாலை** *kiṅgiṇi-p-pālai,* பெ.(n.) ஊசிப் பாலை (நாநார்த்த.); needle-leaved swallow-wort.

*[கிண் + கிணி + பாலை – கிங்கிணிப்பாலை. கிண்கிணி– ஒலிக்குறிப்புச்சொல் காற்றால் இலைகள் ஒலியெழுப்பும் பாலை மரத்துக்குப் பெயராயிற்று.]*

**கிங்கிணிமாலைநெல்** *kiṅgiṇi-mālai-nel,* பெ.(n.) நெல்வகை(A.); a kind of paddy.

*[கிண்கிணி – கிங்கிணி + மாலை + நெல்.]*

**கிங்கிரம்** பெ.(n.) 1. குதிரை; horse. 2. யானை; elephant. 3. வண்டு; beetle (சா.அக.).

ம. கிங்கிரம்

*[கருங்கரம் →கங்கரம் → கிங்கிரம்.]*

**கிங்கிரை** *kiṅgirai,* பெ.(n.) அரத்தம் (குருதி); blood (சா.அக.).

*[செம் + குரு –செங்குரு →செங்கிரை → கிங்கிரை (கொவ.).]*

**கிங்கிலியன்** *kiṅgiliyaṉ,* பெ.(n.) **கிங்கரன் (வின்.)** பார்க்க; see *kiṅgaraṉ.*

*[கிங்கரன் → கிங்கிரி + அன் – கிங்கிரியன் → கிங்கிலியன் (கொ.வ.).]*

**கிங்கினி** *kiṅgiṉi,* பெ.(n.) தண்ணீரைக் கட்டும் சிறுவீடுகொள் பயறு; a kind of jungle gram capable of binding water (சா.அக.).

*[குறுங்கொள் → குங்கொணி → கிங்கினி (கொ.வ.).]*

**கிச்சடி** *kiccaḍi,* பெ.(n.) 1. ஒருவகைச் சிற்றுண்டி (கோயிலொ.31); a dainty made of rice and split pulse boiled together with ghee and spices. 2. கறிவகை; curry prepared with fresh curds, coconut and green chillis. 3. கூழ்வகை (வின்.) a kind of rice gruel for sick people and children.

ம. கிச்சடி; க. கிச்சடி, கிசடி, கிச்சிடி; தெ. கிச்சிடி; பிரா. கிச்ச.

Mar.,H. khicaḍi

*[குய் → குய்க்கல் → குத்தலி → குச்சடி → கிச்சடி. கஞ்சி வடிக்காமல் புழுங்கக் காய்ச்சும் தன்மைக் கருதி கிச்சடி எனப்பட்டது. குய்த்தல் = சுடுதல், வேகவைத்தல்.]*

**கிச்சம்மாள்வெட்டு** *kiccammāḷ-veṭṭu,* பெ.(n.) பழைய நாணய வகை (பணவிடு.142); an ancient coin.

*[கிச்சம்மாள்+ வெட்டி.]*

**கிச்சல்** *kiccal,* பெ.(n.) அக்குளில் அல்லது விலாப்ப ந்தில் விரலால் தொட்டுக் கூச்சம் உண்டாககுதல்; tickling with a view to make one laugh.

*[குத்து → குச்சு→ கிச்சு → கிச்சல்.]*

**கிச்சலாட்டம்** *kiccal-āṭṭam,* பெ.(n.) தொல்லை தருதல் (வின்.); molestation, disquietude, vexation.

ம. கிச்சலாட்டம்; க. கித்தாட.

*[கிச்சல் + ஆட்டம் – கிச்சலாட்டம். கிச்சல் பார்க்க; see kiccal.]*

**கிச்சாட்டம்** *kiccāṭṭam,* பெ.(n.) **கிச்சலாட்டம்** (வின்.) பார்க்க; see *kiccal-āṭṭam*.

*[கிச்சலாட்டம் → கிச்சாட்டம்.]*

**கிச்சான்** *kiccāṉ,* பெ.(n.) சிறுபையன்; small boy.

*[குள் → குச்சு → குச்சன் → கிச்சன் → கிச்சான் (குள் = மாணவன், சிறுவன்).]*

**கிச்சிகம்** *kiccigam,* பெ.(n.) காட்டுக்கொளுஞ்சி; wild lemon (சா.அக.).

*[கிச்சில் → கிச்சிகம்.]*

**கிச்சிகா** *kiccigā,* பெ.(n.) காட்டுக்கொளுஞ்சி; wild lemon (சா.அக.).

*[கிச்சிகம் → கிச்சிகா.]*

**கிச்சிலி** *kiccili,* பெ.(n.) 1. கொழிஞ்சி; sylhet orange. 2. நாரத்தை (மலை.); seville orange. 3. கிச்சிலிக் கிழங்கு (யாழ்ப்.); spiked garland flower. 4. பூலாங்கிழங்கு (தைலவ.தைல.59); long zedoary.

மறுவ. கிச்சலி, கொளுஞ்சி, கொழுச்சி, கொழுச்சில்

தெ. கிச்சிலி, கித்தலி.

*[கொழிச்சில் → கொச்சில் → குச்சில் → குச்சிலி → கிச்சிலி.]*

**கிச்சிலிக்கரணை** *kiccili-k-karaṇai,* பெ.(n.) காட்டுமிளகு (L.); lopez root.

*[கிச்சிலி + கரணை. கரணை = கருத்திருப்பது. கிச்சிலி = கொத்துச்செடியாயிருப்பது.]*



கிச்சிலிக்கரணை

**கிச்சிலிக்கிழங்கு** *kiccili-k-kiḻaṅgu,* பெ.(n.) மணம் தரும் வேருள்ள செடிவகை (தைலவ.தைல. 119,உரை).; camphor zedoary.

ம. கிச்சிலிக்கிழங்ங்கு

*[கிச்சிலி + கிழங்கு. கிச்சிலி – இங்கு நறுமணப் பொருள் தந்தது.]*



கிச்சிலிக்கிழங்கு

**கிச்சிலிக்குடிநீர்** *kiccili-k-kuḍi-nīr,* பெ.(n.) நாரத்தைத் தோலினின்று வடித்த குடிநீர்; tincture of orange peel (சா.அக.).

*[கிச்சிலி + குடி + நீர்.]*

**கிச்சிலிக்குருவி** *kiccili-k-kuruvi,* பெ.(n.) ஒருவகைக் குருவி; a kind of king-fish (சா.அக.).

*[கிச்சிலி + குருவி.]*



கிச்சிலிக்குருவி

**கிச்சிலிச்சம்பா** *kiccili-c-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை (இ.வ.); a variety of small camba paddy.

ம. கிச்சிலிச்சம்பா

*[கிச்சடி செய்தற்கேற்ற அரிசிவகைக்குரிய நெல்வகை.]*

**கிச்சிலிச்சோறு** *kiccili-c-cōṟu,* பெ.(n.) முகமதியர் விருந்திற் படைக்கும் ஒருவகைச் சோறு (உ.வ.); a kind of food, served in Mohammadan feasts.

*[கிச்சடி → கிச்சிலி + சோறு.]*

**கிச்சிலிப்படிகம்** *kiccili-p-padigam,* பெ.(n.) தும்புராமரம்; Indian tooth-ache tree (சா.அக.).

*[கிச்சிலி + படிகம்.]*

**கிச்சிலிப்பனை** *kiccili-p-panai,* பெ.(n.) குமுதிப் பனை; Malayan sugar-palm.

*[கிச்சிலி + பனை.]*

**கிச்சிலிப்புளிப்பு** *kiccili-p-pulippu,* பெ.(n.) கிச்சிலி அமிலம்; citric acid occurring free in oranges, lemons etc. (சா.அக.).

*[கிச்சிலி + புளிப்பு.]*

**கிச்சிலிப்பூத்தைலம்** *kiccili-p-pū-t-tailam,* பெ.(n.) கிச்சிலிப் பூவினின்று எடுக்கும் எண்ணெய்; oil extracted from orange flower (சா.அக.).

*[கிச்சிலிபூ + தைலம்.]*

**கிச்சு** *kiccu,* பெ.(n.) நெருப்பு; fire. *"கிச்சிடையிடு மெனக் கிளக்கின் றார்இலர்" (கம்பரா. பிணி வீட்டு. 3).*

க. கிச்சு, கிர்சு, கிழ்சு; தெ.கிச்சு; து., பட. கிச்சு; குட. தித்; கோத. திச்; நா., பர். கிச்; குரு. கிச்ச்; மா. சிசு.

*[குய் → குய்ச்சு → குச்சு → கிச்சு. குய் = சுடுதல், எரிதல்.]*

**கிச்சுக்கிச்சுத்தம்பலம்** *kicci-k-kiccu-t-tambalam,* பெ.(n.) ***கீச்சுக் கீச்சுத் தாம்பாளம்*** பார்க்க; see *kīccu-k-kīccu-t-tāmbāļam.*

*[கீச்சுக் கீச்சு → கிச்சுக்கிச்சு + (தாம்பாளம்) தம்பலம்.]*

**கிச்சுக்கிச்சுப் பண்ணு-தல்** *kiccu-k-kiccu-p-pannu-,* 5 செ.குன்றாவி.(v.t.) ***கிச்சுக்கிச்சு மூட்டு தல்*** பார்க்க; see *kīccu-k-kīccumūttu.*

*[கிச்சு + கிச்சு + பண்ணு.]*

**கிச்சுக்கிச்சுமூட்டு-தல்** *kiccu-k-kiccu-mūttu,* 5 செ.குன்றாவி.(v.t.) கூச்சமுண்டாகும்படி பிறர் உறுப்புகளைத் தொடுதல் (உ.வ.); to tickle with a view to make one laugh.

ம. கிக்கிணிக்குக; பட. திலிதிருசு.

*[கிச்சு + கிச்சு + மூட்டு. கிச்சுக் கிச்சு = ஒரு பொருள் குறித்து வந்த மரபிணைச் சொல்.]*

**கிச்சுக்கிச்செனல்** *kiccu-k-kiceenal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom, expr. signifying chirping, as lizards.

*[கிச்சு + கிச்சு + எனல்.]*

**கிச்சுடர்** *kiccudar,* பெ.(n.) சக்கரவாளம் (அக.நி.); a mythical range of mountains beyond the earth.

*[கிழ் + சுடர்.]*

**கிசம்** *kisam,* பெ.(n.) தளிர்; tender leaf. sprout.

*[கிள் → கிளம் → கிசம்.]*

**கிசலம்** *kiśalam,* பெ.(n.) ***கிசயம்*** பார்க்க; see *kiśayam.*

*[கிள் → கிளம் → கிசம் → கிசலம்.]*

**கிசலயம்** *kiśalayam,* பெ.(n.) தளிர்; tender leaf, sprout *"கிசலயம்புரை சீறடி" (கந்தபு. இரணியன்யு. 56).*

*[கிசலம் → கிசலயம்.]*

**கிசலை** *kiśalai,* பெ.(n.) ***கிசம்*** பார்க்க;see *kiśam.*

*[கிசம் → கிசலை.]*

**கிசனி** *kiśani,* பெ.(n.) மரக்கிளையினின்றும் பறந்தெழுவதாகிய ஒருவகைப் பறவை இயங் கோட்டம் (காசிக.திரிலோ.6); rising in flight from a branch, one of the movements of a bird.

*[ஓசனித்தல் → ஓசனி → கோசனி → கிசனி.]*

**கிசாலம்** *kiśālam,* பெ.(n.) தளிர் (யாழ்.அக.); sprout.

*[கிசலம் → கிசாலம்.]*

**கிசில்** *kiśil,* பெ.(n.) கீல்; tar, pitch (வின்.).

*[கசி → கிசில் → கிசில்.]*

**கிசில்பூசு—தல்** *kišil-pūšu-,* 5 செ.கு.வி.(v.i.) கப்பலிற் சந்துகளைப் பற்றுவைத்தடைத்தல் (பாண்டி); to caulk.

*[கசி → கிசில். கிசில் + பூசு.]*

**கிசிற்கயிறு** *kišir-kayiru,* பெ.(n.) தாரெண்ணெய் பூசின கயிறு (வின்.); tarred rope.

*[கிசில் + கயிறு. கசி → கசில் → கிசில் + கயிறு. கசியும் எண்ணெய் கசில் அல்லது கிசில் எனப்பட்டது (கொ.வ.).]*

**கிசுகிசு—த்தல்** *kišukišu-,* 7 செ.கு.வி.(v.i.) பிறர் கேட்காதவாறு ஒருவருடைய காதில் மெதுவாக ஒன்றைச் சொல்லுதல்; கமுக்கம் (இரகசியம்) பேசுதல்; to whisper, something in to the ears, tell a secret, in whispering voice. அவருடைய காதில் அவள் ஏதோ கிசுகிசுத்தாள்.

பட. குசுகுசு

**கிசுகிசுத்தான்** *kišu-kišuttān,* பெ.(n.) வாலில்லாக் காற்றாடி (யாழ்ப்.); small paper-kite without a tail.

*[கிசுகிசு – ஒலிக்குறிப்புச்சொல். கிசுகிசு → கிசு கிசுத் தான். ஒலிக்குறிப்புச் சொல்லடியாகப் பிறந்த பெயர்ச்சொல். அண்மையில் பறக்கும்போது மெல்லிய ஓசையெழுப்பும் காற்றாடி.]*

**கிசுகிசுப்பான்** *kišu-kišuppān,* பெ.(n.) வாலுள்ள காற்றாடி (யாழ்ப். ); a paper kite with a tail.

*[கிசுகிசு = ஒலிக்குறிப்புச்சொல். கிசுகிசு → கிசுகிசுப்பான் = தொலைவில் பறக்கும்போது மெல்லிய ஓசையெழுப்பும் காற்றாடி.]*

**கிசுகிசுப்பு** *kišu-kišuppu,* பெ.(n.) 1. ஒருவருடைய சொந்த வாழ்க்கையைப் பற்றி மறைவாகப் பேசிக் கொள்ளும் பேச்சு; juicy talk, about a person's private life. அந்தப் புது நடிகையைப்பற்றிப் பல கிசுகிசுப்புகள் வரத்தொடங்கிவிட்டன (உ.வ.). 2. பிறர் கேட்காத படியான மெல்லிய ஓசை; whisper, soft voice. கிசுகிசுப்பான குரலில் கேட்டான்.

*[கிசு + கிசு – கிசுகிசு → கிசுகிசுப்பு]*

**கிசுகிசெனல்** *kišukišenal,* பெ.(n.) ஒலிக்குறிப்பு; onom. expr. signifying firing as a rocket, rustling as a starched garment when walking briskly.

*[கீச்சுக்கீச்சு = கிச்சுக்கிச்சு. கிசுகிசு + எனல்.]*

**கிஞ்சகா** *kiñjagā,* பெ.(n.) கொடிக் காசரைக்கீரை; a kind of edible greens (சா.அக.).

*[கஞ்சகா → கிஞ்சகா.]*

**கிஞ்சனன்** *kiñjaṉaṉ,* பெ.(n.) அறிவிலான் (யாழ்.அக.); ignorant man (செ.அக.).

*[கிளிஞ்சிலான் → கிஞ்சலன் → கிஞ்சணன் (கொ.வ.). → கிளிஞ்சில் போன்று உள்ளீடில்லாதவன், அறிவிலி.]*

**கிஞ்சபன்னி** *kiñja-paṉṉi,* பெ.(n.) நாயுருவி (மலை.); a plant growing in hedges and thickets.

*[குஞ்சம் → குஞ்ச → கிஞ்ச + பன்னி. பன்னி = பன் வைத்த கருக்கருவாள் போல் கூர்முனை தெரிவது.]*

**கிஞ்சம்**[1] *kiñjam,* பெ.(n.) 1. சிறிது; small quantity. 2. சிறுமை (சங்.அக.); smallness, littleness.

*[கொஞ்சம் → கிஞ்சம் (கொ.வ.).]*

**கிஞ்சம்**[2] *kiñjam,* பெ.(n.) 1. புளி (வின்.); tamarind. 2. புளிமா (மலை.); Indian logplum.

*[குஞ்சம் → கிஞ்சம். குஞ்சம் = கொத்து. கொத்து, கொத்தாகக் காய்க்கும் புளி.]*

**கிஞ்சல்** *kiñjal,* பெ.(n.) சுருக்கம்; limit, bounds 'கிஞ்சலிலா வஞ்சிடத்தும்' (ஒழிவி.பொதுவி.33).

*[கொஞ்சம் → கொஞ்சல் → கிஞ்சல் (கொ.வ.).]*

**கிஞ்சள்** *kiñjaḷ,* பெ.(n.) ஆரைக்கீரை; a kind of edible greens (சா.அக.).

*[கஞ்சல் → கிஞ்சள்.]*

**கிஞ்சன்** *kiñjaṉ,* பெ.(n.) ஏழை; poor, destritute man, as having very little.

*[கிஞ்சு → கிஞ்சன்.]*

**கிஞ்சனன்** *kiñjaṉaṉ,* பெ.(n.) ஏழை (நிகண்டு); poor, dsestitute man, as having very little.

*[கிஞ்சன்+ அன்– கிஞ்சனன்.]*

**கிஞ்சாரு** *kiñjāru,* பெ.(n.) நெல்லின் முள்; paddy's spinke (சா.அக.).

*[ குள்→ குஞ்சல் → குஞ்சாரு→ கிஞ்சாரு.]*

**கிஞ்சி**[1] *kiñji,* பெ.(n.) 1. வேம்பு (மலை.); margosa tree.2. திருவாத்திமரம்;holy mountain ebony.

*[கிழிஞ்சி→ கிஞ்சி (கிழிந்தயிலை முனைகளை உடையது).]*

**கிஞ்சி**[2] *kiñji,* பெ.(n.) 1. முதலை; crocodile. 2. வெள்ளைக் கழற்கொடி; white species of bonduc creeper. 3. மிகச் சிறியது; very little (சா.அக.).

*[கிழிஞ்சி→கிஞ்சி]*

**கிஞ்சிக்கிஞம்** *kiñji-k-kiññam,* பெ.(n.) சிற்றறிவு; shallow knowledge.

*[குஞ்சு + குஞ்சம் → குஞ்சிக்கிஞம்.]*

**கிஞ்சிக்கிஞர்** *kiñji-k-kiññar,* பெ.(n.) சிற்றறிவினர் (இரு.நூ.);people of shallow knowledge.

*[குஞ்சு → குஞ்சர் → குஞ்சுகுஞ்சர் → கிஞ்சிக்கிஞர்.]*

**கிஞ்சிக்கினம்** *kiñjikkiṉam,* பெ.(n.) **கிஞ்சிஞ்ஞம்** பார்க்க; see *kiñciññam.*

*[கிஞ்சிக்சினம்→கிஞ்சிக்கினம்].*

**கிஞ்சிக்கினன்** *kiñjikkiṉaṉ,* பெ.(n.) **கிஞ்சித்தன்** பார்க்க see *kiñcittaṉ.*

*[கிஞ்சிக்கினம் → கிஞ்சிக்கினன்.]*

**கிஞ்சிகம்** *kiñjigam,* பெ.(n.) திருவாத்தி;holy mountain ebony (சா.அக.).

*[கிஞ்சி →கிஞ்சிகா.]*

**கிஞ்சிகா** *kiñjigā,* பெ.(n.) வேப்பமரம்; neem tree (சா.அக.).

*[கிஞ்சி → கிஞ்சிகா.]*

**கிஞ்சிஞ்ஞத்துவம்** *kiñjiññattuvam,* பெ.(n.) சிற்றறிவுடைமை (சி.சி.4,21,ஞானப்.); state of being limited in knowledge. opp. to carvaññattuvam.

*[கிஞ்சு →கிஞ்சுத்துவம். **கிஞ்சுத்துவம்** பார்க்க;see kiñsuttuvam.]*

**கிஞ்சிஞ்ஞம்** *kiñjiññam,* பெ.(n.) சிற்றுணர்வு; limited knowledge opp to carvagññam.

*[கிஞ்சு→கிஞ்சம்.]*

**கிஞ்சித்தாகப்பேசு-தல்** *kiñjittāga-p-pēšu-,* 5 செ.குன்றாவி.(v.t.) இழித்துக் கூறுதல் (வின்.); to speak in disparagemant of.

*[கொஞ்சம் → கிஞ்சம் → கிஞ்சித்து + ஆக + பேசு– (கொ.வ.). இது கிளைமொழிப் பேச்சு வழக்காதலின் குறைத்துப் பேசுதல், தாழ்த்திப் பேசுதல் என்பதே செவ்விய வழக்கு.]*

**கிஞ்சித்து**[1] *kiñjittu,* பெ.(n.) சிறுமை; any thing narrow, limited and mean, smallness.

*[கொஞ்சம் →கிஞ்சம் →கிஞ்சித்து (கொ.வ.) • குறைந்த அளவு]*

**கிஞ்சித்து**[2] *kiñjittu,* (adv.) கொஞ்சமாக; in small quantity, a little.

*[கொஞ்சம் → கிஞ்சம் → கிஞ்சித்து.]*

**கிஞ்சித்து**[3] *kiñjittu,* பெ.(n.) 1. புளிமா (மலை.); log plum. 2. திப்பிலி மூலம்; root of long-pepper (சா.அக.).

*[கிஞ்சு → கிஞ்சித்து.]*

**கிஞ்சித்தும்** *kiñjittum,* வி.எ.(adv.) சிறிதும்; even a little, not one bit. *அவனுக்கு ஏழைகள் மீது இரக்கம் கிஞ்சித்தும் கிடையாது.*

*[கொஞ்சம் → கிஞ்சம் → கிஞ்சித்தும்.]*

**கிஞ்சித்துவம்** *kiñjittuvam,* பெ.(n.) சிற்றறிவு (யாழ்.அக.); limited knowledge.

*[கொஞ்சம் → கிச்சம் → கிஞ்சித்து → கிஞ்சித்துவம்.]*

**கிஞ்சித்தேனும்** *kiñji-t-tēṉum,* கு.வி.எ.(adv.) சிறிதும்; even a little. கிஞ்சித்தேனும் இரக்கமில்லாதவன் (உ.வ.).

*[கொஞ்சம் → கிஞ்சம் → கிஞ்சி + ஏனும் - கிஞ்சிற்றேனும் → கிஞ்சித்தேனும்.]*

**கிஞ்சிதம்** *kiñjitam,* பெ.(n.) ***கிஞ்சித்து*** பார்க்க; see *kiñjittu.*

*[கிஞ்சித்து → கிஞ்சிதம்.]*

**கிஞ்சில்**[1] *kiñjil,* வி.எ.(adv.) 1. கொஞ்சம்; very little *'ஆமது கிஞ்சிலும் கிடையாது'* (ஞானவா.வைராக். 74). *'கிஞ்சளவு கேட்கலுமாம்' (ஒழிவி.பொது.24).*

*[கொஞ்சம் → கிஞ்சம் → கிஞ்சல் → கிஞ்சில் (கொ.வ.).]*

**கிஞ்சில்**[2] *kiñjil,* பெ.எ.(adj.) சிறிதான; a little. *'கிஞ்சளவு கேட்கலுமாம்' (ஒழிவி.பொது.24).*

*[கொஞ்சம் → கிஞ்சம் → கிஞ்சல் → கிஞ்சில் (கொ.வ.).]*

**கிஞ்சில்**[3] *kiñjil,* பெ.(n.) கீழ்மை (யாழ்.அக.); lowness.

*[கீழ் → கீழ்ஞ்சல் → கிஞ்சல் → கிஞ்சில்.]*

**கிஞ்சு**[1] *kiñju,* பெ.எ.(adj.) சிறிதான; a little *'கிஞ்சளவு கேட்க லுமாம்' (ஒழிவி.பொதுவி.24).*

*[கொஞ்சம் → கிஞ்சம் → கிஞ்சு.]*

**கிஞ்சு**[2] *kincu,* பெ.(n.) ***கிஞ்சுமாரம்*** (அக.நி.) பார்க்க; see *kiñjumāram.*

*[கிஞ்சுமாரம் → கிஞ்சு.]*

**கிஞ்சுகபரணி** *kiñjuga-paraṇi,* பெ.(n.) துளசி; holy basil (சா.அக.).

*[கிஞ்சுகம் → பரணி.]*

**கிஞ்சுகம்**[1] *kiñjugam,* பெ.(n.) 1. முண்முருக்கு (பிங்); coral tree of the western ghats. m.tr. 2. கலியாண முருக்குவகை; Indian coral tree. 3. பலாசு மரம்; Palas tree. 4. சிவப்பு (பிங்.); red crimson.

*[செம் → செஞ்சு → கெஞ்சு → கிஞ்சு → கிஞ்சுகம் (சிவப்பானது).]*

**கிஞ்சுகம்**[2] *kiñjugam,* பெ.(n.) 1. கிளி; parrot. *"கிஞ்சுக மென்று கிளிக்கும் பேர்" (திவ்.பெரியாழ். 3:7,7,வியா.பக்.716).* 2. அசுணம் (அக.நி.); aśuṇam, a creature of music supposed to possess a delicate sense of music.

*[குஞ்சு → குஞ்சுகம் → கிஞ்சுகம். குஞ்சு மென்மையான இளம்பருவத்துப் பறவையைக் குறித்த சொல். மென்மையும் அழகும் வாய்ந்த பிற பறவைகளுக்கும் பெயராயிற்று.]*

**கிஞ்சுகி** *kiñjugi,* பெ.(n.) பலாசுமரம் (தைலவ. தைல.40); palas tree.

*[குஞ்சுகம் → கிஞ்சுகி.]*

**கிஞ்சுமம்** *kiñjumam,* பெ.(n.) ***கிஞ்சுமாரம்*** பார்க்க;see *kiñjumāram.*

*[கிஞ்சுமாரம் → கிஞ்சுமம்.]*

**கிஞ்சுமாரம்** *kiñjumāram,* பெ.(n.) முதலை (யாழ்.அக.); crocodile.

*[கீள்-பிளத்தல், இழுத்தல். கீள் → கீஞ்சு. கிஞ்சு + மாரம் (கொல்வது)-கிஞ்சுமாரம்.ஒ.நோ.தெ. குஞ்சு-இழு.]*

**கிஞ்சுலிகம்** *kiñjuligam,* பெ.(n.) மண்ணுளிப்பாம்பு (இரு.நூ.);a kind of snake.

*[கீள் - கிஞ்சு → கிஞ்சுள் → கீழ்சுளிகம் (மண்ணைப்பிளந்து உட்செல்வது) → கிஞ்சுலிகம் (கொ.வ.).]*

**கிஞ்ஞா** *kiññā,* பெ.(n.) சிறிய பச்சை நிற இலைகளைக் கொண்ட புதர்ச்செடி (யாழ்ப்.); a kind of shrub with small evergreen leaf.

*[குஞ்சம் → குஞ்ஞா → கிஞ்ஞா (சொ.அக.). குஞ்சம் - குள்ளமானது, குட்டையானது.]*

**கிஞம்** *kiñam,* பெ.(n.) அறிவு (யாழ்.அக.); knowledge.

*[குல் = சுடுதல், ஒளிர்தல். குல் → குயம் → குஞம் → கிஞம் (கொ.வ.).]*

**கிட்கிந்தை** *kitkindai,* பெ.(n.) 1. எருமையூருக்கு (மைசூருக்கு) வடக்கில் உள்ள மலை; a mountain to the north of Mysore. 2. வாலி, சுக்கிரீவர் களுடைய தலைநகரம்; *Kiśkindha*, an ancient town on Mt. *Kiśkindha* the capital of *Vāli* and *Sugrīva,* the monkey chiefs of *Rāmāyana* fame.

*[குடகுன்று → குடகுந்து → கிடகிந்து → கிட்கிந்தை (கொ.வ.)]*

த. குடகுன்று >Skt. kiskinda.

வாலி என்னும் வாலியோனும், சுக்கிரீவன் என்னும் இரும்பிடர்த்தலையனும் ஆண்ட நாட்டின் மலையாகிய குடக்குன்று என்பது வடமொழியில் கிட்கிந்தை ஆயிற்று. ***குடக்குன்று*** பார்க்க; see *kuḍa-k-kunṟu.*

**கிட்கிழங்கு** *kitkiḻaṅgu,* பெ.(n.) சின்னிக்கிழங்கு; root of birch-leaved acalypha (சா.அக.).

*[குட்டிக்கிழங்கு →கிட்கிழங்கு.]*

**கிட்ட**[1] *kiṭṭa,* வி.எ. (adv.) அருகே; near, close by. *'கிட்ட வாவென' (கைவல்ய.தத்.87).*

ம. கிட்ட, கிட்டக்கெ; க. கிட்டு (கைக்கு அகப்படுதல்); துட. கிட்; து. கிட்ட; தெ. கிட்டு (அருகில்வருதல்); மா.கிடெ.

*[கிள்→கிடு →கிட்டு→கிட்ட.]*

**கிட்ட**[2] *kiṭṭa,* இடை (part.). ஐந்தாம் வேற்றுமைக்கும் ஏழாம் வேற்றுமைக்குமுரிய சொல்லுருபு; case sign of the ablative and the locative. *"சுழன்மாறி கிட்ட வாங்கி வழங்கிடுவீர்" (விறலிவிடு.901).*

*[கிட்டு →கிட்ட.]*

**கிட்டக்கல்** *kiṭṭa-k-kal,* பெ.(n.) 1. இரும்புத்துரிசு; iron dross. 2. கருக வெந்துள்ள செங்கல்; over burnt brick.

மறுவ. கிட்டம்

ம.கிட்டக்கல்

*[கிட்டம்[2] + கல்.]*

**கிட்டங்கி** *kiṭaṅgi,* பெ.(n.) பண்டசாலை (இ.வ.); store house, warehouse.

தெ.,க.கிட்டங்கி.

Malay.gadong

*[கிடங்கில் = பள்ளம். கிடங்கில் → கிடங்கி→ கிட்டங்கி (பள்ளமாகச் செய்யப்பட்ட பண்டசாலை.]*

பண்டைக் காலத்தில் நிலத்தில் குழிவெட்டிப் பூசி மெழுகித் தவசம் கொட்டிக் கற்பலகையால் மூடி வைக்கும் பழக்கம் இருந்ததால், கிடங்கில்-தவசம் கொட்டி வைக்கும் நிலவறையைக் குறித்தது.

**கிட்டடி** *kiṭṭadi,* பெ.(n.) அண்மை; proximity, vicinity.

*[கிட்ட + அடி.]*

**கிட்டத்தட்ட** *kiṭṭa-t-taṭṭa,* கு.வி.எ.(adv.) ஏறக்குறைய; nearly, about.

*[கிட்ட + தட்ட - கிட்டத்தட்ட.]*

கிட்டுதலும் தட்டுதலும் குறைபடுதல் பொருள் தருதலின் இரண்டும் இணைந்து ஒருபொருள் குறித்த மரபிணைச் சொல்லாயிற்று.

**கிட்டத்தாள்** *kiṭṭa-t-tāḷ,* பெ.(n.) அட்டைத்தாள் (இ.வ.); card-board.

*[கிட்டம் + தாள் - கிட்டத்தாள். கிட்டம் = தடிப்பு.]*

**கிட்டப்பார்வை** *kiṭṭa-p-pārvai,* பெ.(n.) அண்மை யிலுள்ளதுமட்டுந் தெரியும் பார்வைக் குறைபாடு; short sightedness.

*[கிட்ட + பார்வை.]*

**கிட்டப்பிடி-த்தல்** *kiṭṭa-p-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. அண்மையாயிருத்தல்; to keep near, as a ship

to the shore. 2. வேலை முடிவுக்கு வருதல்; to get near the end, as an undertaking.

[கிட்ட + பிடி-.]

**கிட்டம்**[1] *kiṭṭam,* பெ.(n.) அண்மை; nearness, vicinity (கொ.வ.).

ம. கிட்டம்

[கிட்டு → கிட்டம்.]

**கிட்டம்**[2] *kiṭṭam,* பெ.(n.) மாழைக்கட்டி; ore, lump of metal *"இரண்டு கிட்டஞ் சேரக் கிடக்க" (ஈடு.5:1,ப்ர).* 2. தீட்டப்படாத மணியிலுள்ள கரடு (ஸ்ரீவசன.பக்.7 ஆய்.வியா); dross or crust upon a precious stone. 3. இரும்பு முதலியவற்றின் துரு (பதார்த்த.1269.); dross, scoria, scum of metal. 4. வண்டல்; sediment, lees residuum. 5. சேறு முதலியவற்றின் ஏடு; coating, crust. 6. இறுக்கம்; state of being dry and hard.

[குள் → கிள் → கிட்டம் (திரட்சி,கட்டி).]

**கிட்டம்பிடி-த்தல்** *kiṭṭampiḍi-,* 4 செ.கு.வி.(v.i.) உலர்தல்; to be dried, as the surface of a garden bed.

[கிட்டம் + பிடி-.]

**கிட்டமுட்ட** *kiṭṭa-muṭṭa,* வி.எ. (adv.) 1. ஏறக்குறைய; nearly, about. *'அதன்விலை கிட்டமுட்ட எவ்வளவு தொகையாகும்?'* 2. அண்மையில்; near, close by, in the near past. *அவனைக் கிட்டமுட்டக் காணோம்.*

மறுவ. கிட்டதட்ட

ம. கிட்டமுட்டெ

[கிட்டு + முட்டு.]

**கிட்டலர்** *kiṭṭalar,* பெ.(n.) பகைவர்; enemies, foes.

[கிட்டு + அல் + அர் + 'அல்' எ.ம. இடைநிலை]

**கிட்டலோகம்** *kiṭṭalōgam,* பெ.(n.) உருக்குமாழை; steel (சா.அக.).

[கிட்டம் + லோகம்.]

**கிட்டாக்கிளிக்கொட்டை** *kiṭṭākkiḷi-k-koṭṭai,* பெ.(n.) சேரான்கொட்டை; marking nut (சா.அக.).

[கிட்டாக்கிளி + கொட்டை.]

**கிட்டாமாரி** *kiṭṭā-māri,* பெ.(n.) சிறுபுள்ளடி; acute oblong unifolate tick trefoil (சா.அக.).

[கிட்டா + மாரி.]

**கிட்டார்** *kiṭṭār,* பெ.(n.) பகைவர்; foes.

[கிட்டு + ஆ + அர். 'ஆ' எ.ம.இடைநிலை.]

**கிட்டாலம்** *kiṭṭālam,* பெ.(n.) செப்புப்பாத்திர வகை (சங்.அக.); a kind of copper vessel.

[கிட்டலம் → கிட்டாலம்.]

**கிட்டான்** *kiṭṭāṉ,* பெ.(n.) உருகிய இரும்புத் துண்டு; a piece of melted iron.

[கிட்டடம் → கிட்டன் → கிட்டான்.]

**கிட்டி**[1] *kiṭṭi* பெ.(n.) 1. இறுக்குங்கோல்; clamps used to press hands, feet, etc. in torture, to castrate bulls, to press out medicinal oils, etc. *'கையுந்தாள் களுங்கிட்டி யார்த்தார்' (திருவிளை. நரிபரி.9).* 2. கவரிறுக்கி; fork of a branch planted at the mouth of a fence. 3. கொல்லர் கருவி வகை; iron cramp. 4. நுகமுளை (சங்.அக.); pegs that confine the bullock's neck to the ends of the yoke in drawing carts, etc. 5. பிள்ளைகளின் விளையாட்டுக் கருவியுள் ஒன்று; cat in the game of tip-cat. 6. கைத்தாளம் (திவா.); cymbal. 7. நாழிகை வட்டில்; clepsydra. 8. ***சின்னி*** பார்க்க *"கிட்டிக்கிழங்காற் கிளர்தீபனமுண்டாம்" (பதார்த்த. 435)* ; Indian shrubby copper leaf.

ம., க., பட. கிட்டி.

[கிள் → கிட்டு → கிட்டி.]

**கிட்டி²** *kiṭṭi,* பெ.(n.) பன்றி (சூடா.); hog.

*[கிட்டு → கிட்டி.]*

**கிட்டி³** *kiṭṭi,* பெ.(n.) தலையீற்றுப் பசு (பிங்.); young cow that has calved once.

*[கிட்டு →கிட்டி.]*

**கிட்டிக்கயிறு** *kiṭṭi-k-kayiṟu,* பெ.(n.) பூட்டுக் கயிறு (யாழ்.அக.); yoke ropes, bands.

*[கிட்டி + கயிறு.]*

**கிட்டிக்கலப்பை** *kiṭṭi-k-kalappai,* பெ.(n.) தேய்ந்த சிறுகலப்பை; small kind of plough worn out by use and age.

*[கிட்டி + கலப்பை.]*

**கிட்டிக்கிழங்கு** *kiṭṭi-k-kiḻaṅgu,* பெ.(n.) சின்னிக் கிழங்கு; root of acalypha (சா.அக.).

*[கிட்டி + கிழங்கு.]*

**கிட்டிக்கொள்(ளு)¹–தல்** *kiṭṭi-k-koḻḻu-.* 16 செ.கு.வி. (v.i.) நெருங்கிச் சேர்தல்; to approach, draw near, as an evil hour.

*[கிட்டி + கொள்.]*

**கிட்டிக்கொள்(ளு)²–தல்** *kiṭṭi-k-koḻḻu-,* 16 செ.குன்றாவி. (v.t.) நெருங்கி யெதிர்த்தல்; to attack, as a robber.

*[கிட்டு → கிட்டி + கொள்.]*

**கிட்டிக்கோல்** *kiṭṭi-k-kōl,* பெ.(n.) **கிட்டி¹³** பார்க்க;see *kiṭṭi¹³*.

ம. கிட்டிக்கோல்; பட. கில்லி.

*[கிட்டி + கோல்.]*

**கிட்டிகட்டல்** *kiṭṭi-kaṭṭal,* தொ.பெ. (vb.) சாறுபிழிதல்; extracting juice by squeezing or crushing (சா.அக.).

*[கிட்டி + கட்டல்.]*

**கிட்டிகட்டு–தல்** *kiṭṭi-kaṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. இறுக்குக் கோலிட்டு வருத்துதல்; to torture with kitti. 2. நெருக்கி வருத்துதல்; to press hard, as for a debt; to screw.

*[கிட்டி + கட்டு.]*

**கிட்டிச்சன்னல்** *kiṭṭiccaṉṉal,* பெ.(n.) மரமாடிச் சுவரில் காற்று வருவதற்கு அமைக்கப்படும் சிறிய பலகணி அல்லது துளை; ventilator (செங்.வழ.) (கட்.தொ.அக.).

*[கிட்டி + சன்னல்.]*

**கிட்டிணம்** *kiṭṭiṇam,* பெ.(n.) மான்றோல் (யாழ்.அக.); antelop's kin, deer skin.

*[கீள்→கிள் (பிறத்தல், உரித்தல்)→கிட்டு→ கிட்டிணம்.]*

**கிட்டிணவல்லி** *kiṭṭiṇavalli,* பெ.(n.) நன்னாரி; Indian sarsaparilla (சா.அக.).

*[கிட்டிணம் + வல்லி.]*

**கிட்டிணவாலி** *kiṭṭiṇavāli,* பெ.(n.) குதிரைவாலி; horse tail millet; rough panic grass (சா.அக.).

*[கிட்டிணம் + வாலி. கிட்டிணம் = பிளந்தது, விரிந்தது.]*

**கிட்டிப்பந்து** *kiṭṭi-p-pandu,* பெ.(n.) சிறுவர் ஆடும் பந்து விளையாட்டு வகை; a boy's game, a kind of rounders with bat and ball.

*[கிட்டி + பந்து.]*

**கிட்டிப்பாடு** *kiṭṭi-p-pāḍu,* பெ.(n.) குறுகிய பாதை (யாழ்.அக.); narrow path.

*[கிட்டு → கிட்டி + பாடு.]*

**கிட்டிப்பிரி** *kiṭṭi-p-piri,* பெ.(n.) பனையோலைக் கூரைமீது போடப்பட்ட வைக்கோல், காற்றினால் சிதறாதவாறு வைக்கோல் நாரால் பின்னப்பட்டுக் கட்டப்பட்ட கயிறு (செங்.வழ.) (கட்.தொ.அக.);rope made of straw tied to keep the roof in place.

*[கிட்டி + பிரி.]*

**கிட்டிப்புள்** *kiṭṭi-p-puḷ,* பெ.(n.) 1. கிட்டிப்புள் விளையாட்டுள் பயன்படும் சிறுகுச்சி; a short piece of wood tapering to a point at each end in the game of tip-cat. 2. கிட்டிப்புள்ளால் ஆடும் விளையாட்டு; the game of tip-cat.

*[கிட்டி + புள்.]*

**கிட்டிப்புள்ளி** *kiṭṭi-p-puḷḷi,* பெ.(n.) ***கிட்டிப்புள்*** பார்க்க; see *kiṭṭi-p-puḷ*

*[கிட்டிப்புள் → கிட்டிப்புள்ளி.]*

**கிட்டிபூட்டு¹—தல்** *kiṭṭi-pūṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கிட்டிக்கோல் பூட்டி வருத்துதல்; to torture with clamps.

**கிட்டிபூட்டு²—தல்** *kiṭṭi-pūṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) எருதைப் பூட்ட நுகமுளை போடுதல்; to fix the yoke on the bullock's neck.

*[கிட்டி + பூட்டு-.]*

**கிட்டிமந்தாரம்** *kiṭṭi-mandāram,* பெ.(n.) மயிற்கொன்றை (சு.வை.ரத்.); peacock's crest.

*[கிட்டி + மந்தாரம்.]*

**கிட்டிமம்** *kiṭṭimam,* பெ.(n.) உவர்நீர்; salt or brackish water (சா.அக.).

*[கிட்டி → கிட்டிமம்.]*

**கிட்டிமுட்டி** *kiṭṭimuṭṭi,* து.வி.(aux.v.) மிக நெருக்கமாக; closely, pressingly near. அவன் கிட்டிமுட்டி வந்தால் வட்டியைத் தள்ளிவிட்டு முதலை மாத்திரம் வாங்குவேன் (கொ.வ.).

*[கிட்டி + முட்டி.]*

**கிட்டியடி—த்தல்** *kiṭṭiyaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கிட்டிப்புள் விளையாடுதல்; to play tip-cat. 2. வீணிற்போது போக்குதல்; to misspend or waste time as in play. 3. கிட்டிபூட்டுதல்; to torture with clamps.

*[கிட்டி + அடி-.]*

**கிட்டியிழைப்புளி** *kiṭṭi-y-iḻai-p-puḷi,* பெ.(n.) தச்சுக் கருவியாகிய இழைப்புளி வகை; joiner's plane.

*[கிட்டி + இழைப்புளி.]*

**கிட்டிரம்** *kiṭṭiram,* பெ.(n.) நெருஞ்சி (மலை.); a small prostrate herb.

*[கிள் → கிட்டி → கிட்டிரம்.]*

**கிட்டிவான்** *kiṭṭivāṉ,* பெ.(n.) எட்டி மரம்; strychnine tree (சா.அக.).

*[கிட்டி → கிட்டிவான்.]*

**கிட்டினர்** *kiṭṭiṉar,* பெ.(n.) உறவினர் (சங்.அக.); relations, friends, associates, allives.

*[கிட்டி → கிட்டினர்.]*

**கிட்டினன்** *kiṭṭiṉaṉ,* பெ.(n.) திப்பிலி; long-pepper (சா.அக.).

*[கிட்டி → கிட்டினன்.]*

**கிட்டு¹—தல்** *kiṭṭu,* 5 செ.கு.வி.(v.i.) 1. நெருங்குதல்; to draw near, in time or place. "தீவினை கிட்டிய போதினில்" (கம்பரா.விபீடண.67). 2. உறவு நெருங்குதல்; to be on friendly terms with, closely related to. 3. கிடைத்தல்; to be attained, accomplished. "கிட்டாதாயின் வெட்டென மற" (கொன்றைவே.). 4. பல்முதலியன ஒன்றுடனொன்று பூண்டு இறுகுதல்; to be clenched, as the teeth in lock jaw.

க., ம. கிட்டு.

*[குள் → கிள் → கிட்டு.]*

**கிட்டு²—தல்** *kiṭṭu,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அணுகுதல்; to approach. அவ்வூரைக் கிட்டினான். 2. எதிர்த்தல்; to attack, meet. 3. கட்டுதல் (சூடா.); to tie, bind.

தெ. கட்டு

*[குள் → கிள் → கிட்டு.]*

**கிட்டு³–தல்** *kittu,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கைக்கு அகப்படுதல்; to come to hand, get, obtain. 2. எட்டுதல்; to reach, attain.

ம. கிட்டுக; க.,தெ.,பட. கிட்டு; குட., துட. கிட்.

*[குள்→கிள் (நெருங்குதல்) (கிண்டு)→கிட்டு= நெருங்கச் செய், கைவரப்பெறு. கிட்டு→கிட்டை = நெருங்கிய பகுதி, அருகு, அண்மை. கிள் என்னும் வேரடி நெருங்குதல் நெருக்குதல் எனும் தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவானது. இதனைப் பிறவினைக்கே தெளிவாக ஆளும் பொருட்டு கிள்→கிட்டு எனத் திரிந்தது. பிள்(பிள) விள்→வெள்→வெட்டு எனும் வேரடி வளர்ச்சி, வெட்டு எனும் தெளிவான பிறவினை (பிளக்கச் செய்) வடிவு ஒற்றுமை காண்க.]*

**கிட்டை** *kittai,* வினையெச்சம்.(adv.) *கிட்ட* பார்க்க; see *kitta.*

ம. கிட்டெ

*[கிள்→ கிடு →கிட்டு→ கிட்டை.]*

**கிட்டைக்கு** *kittaikku,* வி.எ.(adv.) அருகே; near, close by.

ம. கிட்டக்கெ

*[கிட்டை+கு. நான்காம் வேற்றுமை உருபு 'கு' ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்துள்ளது.]*

**கிட¹–த்தல்** *kida-,* 2 செ.கு.வி.(v.i.) 1. ஓய்வெடுக்க அல்லது உறங்க வேண்டித் தரையில் அல்லது கட்டிலில் கை, கால்களை நீட்டிப் படுத்தல்; to be in a prostrate position, to lie, lie down. *"மால் யாழ்கேளாக் கிடந்தான்போல்" (கலித்.123).* 2. ஓரிடத்தில் இருத்தல்,தங்குதல்; to be remain, exist, to dwell. *"புலி கிடந்த தூறு" (வாக்குண்.21).* 3. மீதமிருத்தல்; to be left over, remain. 4. உயிருடன் இருத்தல், வாழ்தல்;to exist, live in, dwell.5. உறங்குதல்;to sleep, rest, reposs. *"தாவி னல்லிசைக் கருதிய கிடந்தோர்க்கு" (தொல்.பொருள்.91).* 6. நோயால் படுத்த படுக்கை யாதல்;to be bed-riddess, as from disease. அவர் நிரம்பக் கிடக்கிறாள். 7. அவமதித்து ஒதுக்குதல்;to be unworthy of any attention. அவன் கிடக்கிறான், நீ போ.

ம. கிடக்குக; க. கெடெ; குட. கடாக.

*[கிள்→கிட → கிடத்தல்.]*

**கிட²** *kida,* இடை.(part.) நிகழ்கால இடைநிலைகளுள் ஒன்று; a particle denoting present tense; உண்ணாக் கிடந்தான் (தொல்.சொல்.204,உரை).

*[கிடத்தல் = இருத்தல். உண்ணா இருந்தான் என்றாற் போன்று உண்ணாக் கிடத்தலும் ஆகின்று என்னும் வாய்பாட்டுப் பொருளதாகக் கருதப்பட்டது. ஆயின் பாவாணர் அவர்கள் இதனை வேறு வகையாகக் கருதினார். 'ஆநின்று' பார்க்க; see āninru.]*

**கிடக்க** *kidakka,* வியங். (opt.) கிடக்குமாக இருக்குமாக; let it be.

*[கிட + க. (கிடத்தல், இருத்தல்). 'க' வியங்கோள் ஈறு.]*

**கிடக்கட்டும்** *kidakkattum,* ஏ.(imp.) இருந்த இடத்தில் இருக்கலாம்; let it be as its is.

*[இருக்க+அட்டும். 'அட்டும்' ஏவல் பொருளுணர்த்திய துணை வினையீறு. இருக்க – வியங்கோள் வினைமுற்று. துணை வினையீறு பெற்று ஏவல் பொருள் உணர்த்தியது.]*

**கிடக்கிடு** *kida-k-kidu,* ஏ.(imp.) 'அதைத் தள்ளு' என்னும் புறக்கணிப்புக் குறிப்பு; never mind, let it lie. *'இச்சேனை கிடக்கிடு' (கம்பரா.குகப்.20).*

*[கிடக்க + விடு – கிடக்கவிடு → கிடக்கிடு.]*

**கிடக்கிடும்** *kidakkidum,* ஏ.(imp.) 'அதைத் தள்ளு' என்னும் புறக்கணிப்புக் குறிப்பு; never mind, let it lie. *"உம்முடைய மேன்மை கிடக்கிடும்" (திவ்.பெரியதி. 8.2:1 வியா).*

*[கிடக்கட்டும் → கிடக்கிடும்.]*

**கிடகு** *kidagu,* பெ.(n.) இருபத்து நான்கு விரல் கொண்ட முழம்; cubit of 24 finger breadthes (சர்வா.சிற்.27).

மறுவ. தச்சுமுழம், செந்தரம், மானாங்குலம் (கிஷ்கு).

*[கிழகு → கிடகு (தச்சுமுழம் எனப்படும் நீட்டல் அளவு). கிழ→கிழமை - உரிமை, தகவு. கிழகு–தகவானதாகவும் அரசனால்*

*உரிமைப்படுத்தப்பட்ட அளவாகவும் கொள்ளப்பட்ட 2¾ அடிநீளமுள்ள நீட்டல் அளவு. இது 11 அடி நீளமுள்ள கோல் என்னும் அளவில் காற்பகுதியாகும்.]*

தமிழ்நாட்டு நீட்டல் அளவுகளில் அடிப்படைச் சிற்றளவு விரல். இதன் நீளம் தற்கால ஆங்கில அளவுப்படி $1^{3}/_{8}$ விரலம் (அங்குலம்). 6 விரல் ஒரு சாண், 2 சாண் ஒரு முழம், 2 முழம் ஒரு கோல் என்ற வாய்பாட்டின்படி ஒரு கோல் அளவு 24 விரல் நீளம் என்பது தற்கால ஆங்கில 33 விரலத்திற்குச் சமம். இது தச்சு முழம் என்ற பெயரில் கடந்த 2000 ஆண்டுகளாகச் செந்தர அளவாகத் தமிழ்நாட்டில் பயன்படுத்தப் பட்டுள்ளது. இதனைக் கிட்கு (மலைமர) முழம் என்றும் அழைப்பர்.

எனினும் வேறு பல முழ அளவுகளும் தமிழ்நாட்டில் புழக்கத்தில் இருந்ததனைப் பல சிற்ப நூல்களிலிருந்து அறிகிறோம். அவையாவன:

| | | | |
|---|---|---|---|
| 1. வில் நாண்(கிஷ்க்கு) (கிடகு) | 24விரல் | 33" | 84செமீ |
| 2. பெருவிரல் (பிரஜாபத்யம்) | 25விரல் | $34^{3}/_{8}$" | 87.5 " |
| 3. வில்முடி (தனுர் முட்டி) | 26விரல் | $35^{3}/_{4}$" | 91.0 " |
| 4.வில்முனை(தனுர்கிரகம்) | 27விரல் | $37^{1}/_{8}$" | 94.5 " |
| 5. நெடுவில் (பிராச்சியம்) | 28விரல் | $38^{3}/_{4}$" | 98.0 " |
| 6. நெடுவில் முடி (சைதேகம்) | 29விரல் | $39^{5}/_{8}$" | 101.5 " |
| 7. நெடுவில் முனை (வைபுல்யம்) | 30விரல் | 41.0" | 105.0" |
| 8. முழுவில் (பிரகீர்ணம்) | 31விரல் | $42^{3}/_{8}$" | 108.5" |

**கிடக்கை**[1] *kiḍakkai,* பெ.(n.) 1. படுத்திருக்கும் நிலை; recumbent posture. கிடந்தோர் கிடக்கை கண்டும் (திவ்.திருமாலை.23). 2. படுக்கும் அணை (பிங்.); bed, couch. 3. படுக்குமிடும்; sleeping place. *"மனைபாய் கிடக்கையோ டிவ்வைந்தும்" (ஆசாரக்.55).* 4. நிலம் (பிங்.); earth. 5. பரப்பு; broad, expanse, long structure of land. *"முருகமர் பூமுரண் கிடக்கை" (பட்டினப்.37).* 6. இடம்; place. *"கரிபுறக் கிடக்கையும்" (சிலப்.11:77).* 7. உள்ளுறுபொருள்; subject-matter, contents *"உரைநூற் கிடக்கை" (மணிமே.2:31).*

ம. கிடக்க; குட. கடகெ.

*[கிட = படு, படுத்தல். கிட → கிடக்கை 'கை' தொழிற்பெயர் ஈறு.]*

**கிடக்கை**[2] *kiḍakkai,* பெ.(n.) நிலையானது; permanence, security.

*[கிட → கிடக்கை.]*

**கிடக்கைப்புண்** *kiḍakkai-p-puṇ,* பெ.(n.) படுக்கைப் புண்; a bed sore.

ம. கிடக்கப் புண்

*[கிடக்கை + புண்.]*

**கிடக்கைவிரிப்பு** *kiḍa-k-kaivirippu,* பெ.(n.) படுக்கை விரிப்பு; a bed spread.

ம. கிடக்க விரிப்பு

*[கிடக்கை + விரிப்பு.]*

**கிடங்கர்** *kiḍaṅgar* பெ.(n.) 1. அகழி; moat. 2. பெருங்கடல்; ocean. *"திரைக்கிடங்கர் குவலயப் பரப்பில்" (உபதேசகா.விபூதி.35).*

மறுவ. கிடங்கு

*[கிடங்கு[1] → கிடங்கர். கிடங்கு = பள்ளம், குழி. கிடங்கர் = ஆழ்ந்த நீர்நிலை, குழிந்த மடு, பள்ளம், அகழி.]*

**கிடங்காடு-தல்** *kiḍaṅgāḍu-,* 5 செ.கு.வி.(v.i.) சுடுகாட்டில் பிணத்தைச் சுற்றி வருதல்; to go round the corpse on the pyre just before cremation (loc.).

*[கிடங்கு = அகழி, வட்டம். கிடங்கு + ஆடு – கிடங்காடு = வட்டமாக வளைய வருதல், சுற்றி வருதல்.]*

**கிடங்கில்** *kiḍaṅgil,* பெ.(n.) 1.அகழி; moat. *"கீணீர்க் கிடங்கிலுட் தோணி போக்கி" (பெருங்.மகத.25:21).* 2. ஓர் ஊர்ப் பெயர்; a place name. *"கிளை மலர்ப் படப்பைக் கிடங்கிற் கோமான்" (சிறுபாண்.160)*

*[கிடங்கு → கிடங்கில். 'இல்' சொல்லாக்க ஈறு.]*

கிடங்கில், நல்லியக் கோடனின் தலைநகரங்களுள் ஒன்று. திண்டிவனம் அருகிலுள்ள ஊர். "ஸ்ரீ கிடங்கில் புரியார் மகனல்லி ஓட்டை கண்டது" (ஓமலூர் வட்டம் கேத்த நாய்க்கனூர் பெரிய சக்கிலிச்சி ஏரிக்கல்வெட்டு).

**கிடங்கு**[1] *kiḍaṅgu,* பெ.(n.) 1.பள்ளம்; trench. *"பூங்கிடங்கி னீள்கோவல்" (திவ்.இயற்.முதற்.77).* 2. குளம்; pond, tank (சூடா.) 3. குழி; pit, depression. 4. அகழி;moat.

ம. கிடங்ங; க. கடகு, கடங்கு; குட. கடங்கி.

*[கீழ் → கிழ → கிட → கிடங்கு. கீழ்த்தல் = தோண்டுதல், பள்ளம், ஆக்குதல், குழித்தல்.]*

**கிடங்கு**[2] *kiḍaṅgu,* பெ.(n.) பண்டசாலை; warehouse, store house. *"அரிசிக் கிடங்கு" (அக.நி).*

*[கிடங்கு[1] → கிடங்கு[2]. கிடங்கு = பள்ளம், சேமித்து வைக்குமிடம்.]*

**கிடங்கு**[3] *kiḍaṅgu,* பெ.(n.) சிறைச்சாலை (வின்.); prison, jail, dungeon (W).

*[கிடங்கு[1] → கிடங்கு[3]. கிடங்கு = பள்ளம், குழி, மூடுமிடம், சிறைச்சாலை.]*

**கிடங்குபள்ளம்** *kiḍaṅgupaḷḷam,* பெ.(n.) 1. காதி னுள்ளிருக்கும் ஆனகப் பள்ளம்; tympanic cavity. 2. காதின் புறத்தேயுள்ள பள்ளம்; glenoid cavity (சா.அக.).

*[கிடங்கு + பள்ளம்.]*

**கிடசாரி** *kiḍaśāri,* பெ.(n.) சடைச்சி என்னும் மூலிகை; matted-hair plant (சா.அக.).

*[கடைச்சி → கடசாரி→கிடசாரி.]*

**கிடத்தல்** *kiḍattal,* தொ.பெ.(vbl.n.) 1. உறங்காது படுத்திருத்தல்; to lie down on the bed sleeplessly. 2. ஒகவகையுள்ளொன்று படுத்திருக்கும் நிலை (சிலப்.14:11 உரை); recumbent posture.

*[கிட → கிடத்தல்.]*

Fin. kellia, kellattā; Q. kellakui.

**கிடத்தியள-த்தல்** *kiḍatti-y-aḷa,* 3 செ.குன்றாவி. (v.t.) தவசங்களில் அளவுக் கருவியைப் பாய்ச்சி அளத்தல் (வின்.); to measure a heap of grain by diving the measure deep into it (W.).

*[கிட → கிடத்தி + அள.]*

**கிடத்து-தல்** *kiḍattu-,*2 பி.வி. (caus.). 1. கிடக்கச் செய்தல்; to place in a recumbent posture, lay to rest, stretch oneself on the ground. *"தருப்பையிற் கிடத்தி" (மணி 23:13).* 2. விழச் செய்தல்; to cause to fall.

ம. கிடத்துக; க. கடசு, கெடைசு, கெடவு; தெ. கெடசு.

*[கிட (த.வி.) → கிடத்து (பி.வி.).]*

**கிடந்தகிடை** *kiḍanda-kiḍai,* பெ.(n.) நோயால் படுத்த படுக்கை; bed -ridden as from a disease (சா.அக.).

*[கிடந்த + கிடை.]*

**கிடந்தகிடையாய்** *kiḍanda-kiḍai-y-āi,* வி.எ.(adv.). நோயினால் படுத்த படுக்கையாய்; bed-ridden, as from a disease.

*[கிடந்த + கிடை + ஆய்.]*

**கிடந்த திருக்கோலம்** *kiḍanda-tiru-k-kōlam,* பெ.(n.) திருமாலின் பள்ளிகொண்ட நிலை; recumbent posture of *Viṣṇu,* one of the three *tiruk-kōlam.*

*[கிட → கிடந்த + திரு + கோலம். கிடத்தல் = படுத்தல்.]*

**கிடந்துருளி** *kiḍanduruḷi,* பெ.(n.) நீரிறைக்கும் கப்பி யுருளை (இ.வ.); pulley for drawing water.

*[கிட → கிடந்து + உருளி.]*



கிடந்துருளி

**கிடந்துருளு-தல்** *kiḍanduruḷu-,* 16 செ.கு.வி.(v.i.) படுத்த படுக்கையில் உருளுதல்; rolling in bed; restlessness in bed (சா.அக.).

*[கிடந்து + உருளு-]*

**கிடப்பரிணம்** *kiḍapparinam,* பெ.(n.) அடுக்குச் செம்பரத்தை; double shoe flower (hibiscus) (சா.அக.).

*[கிடப்பு + அரிணம்.]*

**கிடப்பு[1]-தல்** *kiḍappu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கிடத்துதல்; to cause to lie down, lay down. *"திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி" (புறநா.93).*

*[கிட → கிடப்பு.]*

**கிடப்பு[2]** *kiḍappu,* பெ.(n.) 1. கிடந்து துயிலுகை; resting, sleeping. மக்கள் கிடப்பிடம் (திவா.). 2. நிலை; circumstance, condition, significance. *"ஈசன்.... பால் கொடுத்த கிடப்பறிவார்" (திருவாச.43:6).* 3. மேற்போகாத நிலைமை; stationary condition, standstill. செயலைக் கிடப்பிலே போட்டுவிட்டான்.

*[கிட → கிடப்பு.]*

**கிடப்புத்தொகை** *kiḍappu-t-togai,* பெ.(n.) இருப்புத் தொகை; cash reserve.

*[கிட → கிடப்பு + தொகை.]*

**கிடவம்** *kiḍavam,* பெ.(n.) ஊமத்தை; thorn-apple (சா.அக.).

*[கிட → கிடவம்.]*

**கிடவாக்கிடை** *kiḍavā-k-kiḍai,* பெ.(n.) 1. பெருந் துன்பநிலை (வின்.); unusual hardship as from hunger, poverty etc. 2. நோய்முற்றிப் படுக்கை யிலிருக்கை; bed ridden due to extreme illness.

*[கிட + ஆ + கிடை. கிட → கிடவா + கிடை - கிடவாக் கிடை. கிடத்தல் = படுத்தல், படுத்திருத்தல். கிடவா - செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். தொடர் நிகழ்காலம் சுட்டித் தொடர்ந்து படுக்கையில் இருக்கும் நிலையைச் சுட்டியது. செய்யா, செய்யூ என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள் முறையே கன்னடத்திலும் தெலுங்கிலும் இன்னும் தொடர் நிகழ்காலம் சுட்டுதலை ஒப்பிடுக.]*

**கிடா** *kiḍā,* பெ.(n.) ***கடா[2]*** (சிலப்.14,98,உரை) பார்க்க; see *kaḍā[2].*

ம. கிடாவு

*[கடு → கடா → கிடா.]*

**கிடாக்காலன்** *kiḍā-k-kālaṉ,* பெ.(n.) எருமைக் கொம்பு (சங்.அக.); buffalo-horn.

ம. கிடாவு

*[கிடா + காலன். கடா → கிடா + காலன்.]*

கடா = எருமைக்கடா. கால் = நீட்சி. காலன் = நீண்ட ஊதுகுழல், கொம்பு.

**கிடாசு-தல்** *kiḍāsu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஆணி முதலியன அறைதல்; to drive in, as nail. 2. விட்டெறிதல்; to cast off, throw away.

க. கடாய்; ம. கிடவு

*[கடாவு → கடாசு → கிடாசு (பி.வி.).]*

**கிடாமுன்னை** *kiḍā-muṉṉai,* பெ.(n.) ஒருவகைத் தேக்கு; serrate fire-brand teak (சா.அக.).

*[கடு → கடா → கிடா + முன்னை]*

**கிடாய்[1]** *kiḍāy,* பெ.(n.) ஆண் ஆடு; male of sheep. கிடாய் விரவுகின்ற செம்மறித்திரள் (மலைபடு. 414,உரை).

*[கடு → கடா → கடாய் → கிடாய்.]*



கிடாய்

**கிடாய்**[2] *kiḍāy*, இடை. (part.) 1. ஒரு வியங்கோள் ஈறு; sign of the optative. *"கழிந்த கழிகிடாய்" (பதினொ.கைலை.பா.21).* 2. காண் என்னும் பொருளில் வரும் முன்னிலை யொருமை உரையசை; expletive used only in the 2nd pers. sing. meaning see! behold! *"சர்ப்பங்கிடாய்" (ஈடு).*

*[கிடை → கிடாய் (விளி). கிடை = இளைஞன், மாணவன்.]*

ஒ.நோ. கிடைகள் ஓதுமடங்கள் நெருங்கினவும். கிடை→ கிடாய் = மாணவனே! என்பது விளி. இதனைக் காண் என்னும் பொருளில் வந்த உரையசையாகக் கொளினும் இச்சொற்கு அது நேர்பொருளன்று. பதினோராம் திருமுறையில் (கைலை. பா.21) "கழிந்த கழிகிடாய்" என்னும் மேற்கோள்காட்டி கிடாய் - வியங்கோள் ஈறு எனச் செ.அக. காட்டியிருப்பது தவறு. "கழிகிலாய்" என்னும் பாடலின் வேறுபாடே ஏற்கத்தக்கது.

**கிடாரம்** *kiḍāram*, பெ.(n.) வாயகன்றதும், அளவில் பெரியதும் விளிம்பில் இருபுறமும் பிறைவளையம் பொருத்தப்பட்டதுமான குழிந்த பெரும்பாத் திரமான கொப்பரை; caldron boiler. *"ஸ்ரீராஜராஜ தேவர், ஸ்ரீராஜராஜீசுவர முடையார்க்கு குடுத்த பொன்னின் கிடாரம் ஒன்று, ஆடவல்லான் என்னும் கல்லால் நிறை பதினோராயிரத்து எழுநூற்று நாற்பத்து இரு கழஞ்சு" (தெ.கல். தொ.2,கல்.1).*

*[குடம் →கடம் →கடாய் →கடாரம் →கிடாரம் (வாயகன்ற பெரிய ஏனம், கொப்புளம். ஆரம் சொல்லாக்க ஈறு ஒ.நோ. கூடு→கூடாரம்]*

**கிடாரவன்** *kiḍāravaṉ*, பெ.(n.) அகில்வகை (சிலப்.14:108.உரை); eagle-wood, used as incense.

*[கடாரம் → கிடாரம் → கிடாரவன் = கடாரத்திலிருந்து கொணர்ந்த அகில் வகை.]*

**கிடாரி** *kiḍāri*, பெ.(n.) ஆவினத்தில் ஈனாக்கன்று (உ.வ.); heifer.

மறுவ. கிடேரி

*[கடாரி → கிடாரி]*

**கிடாரை** *kiḍārai*, பெ.(n.) கடாரநாரத்தை (உ.வ.); seville orange.

*[கடாரம் → கிடாரம் → கிடாரை (கடாரத்திலிருந்து வந்த நாரத்தை வகை.).]*

**கிடாவு-தல்** *kiḍāvu-*, 5 செ.குன்றாவி.(v.t.) 1. கடாவுதல்; to drive. 2. வினாவுதல்; to question.

*[கடாவு → கிடாவு]*

**கிடி** *kiḍi*, பெ.(n.) பன்றி (பிங்.); hog.

மறுவ. பன்றி, கோணவாயன்.

*[கீறி → கீடி → கிடி (கொ.வ.). கோரைப்பல்லால் கீறிக் கொல்லும் இயல்பு பற்றிக் கீறி எனப்பட்டது.கீறி பார்க்க; see kīṟi]*

**கிடிகி** *kiḍigi*, பெ.(n.) பலகணி; window.

க. கிடிகி; மகாராட். கிடாகி.

*[கிடுகு → கிடிகு → கிடிகி. கிடுகு = கேடயம். கிடிகி = கேடயம் போன்று, மிகுகாற்று, மழைச்சாரல் உட்புகாமல் தடுக்கும் இயல்புபற்றிச் சுவரில் பதிக்கும் பலகணியைக் கிடுகு என்றனர் போலும். இது கன்னட மராத்திய மொழிகளில் கிடிகி, கிடாதி எனத் திரிந்தது.]*

**கிடிகோள்** *kiḍikōḷ*, இடை.(part.) காண்மின் என்னும் பொருளில் வரும் முன்னிலைப்பன்மை உரையசை; expletive used only in the 2nd pers. pl. meaning see! behold! *'இழக்கவேண்டா, கிடிகோள்' (ஈடு.5:1,7).*

*[கிட → கிடி + கோள். கிடை = மாணவன், இளைஞன். கிடைகள் → கிடைகாள் → கிடிகோள் (விளி) மாணவர்களே' என விளித்த விளிச்சொல் அவர்களைத் தான் சொல்லுவதை செவிமடுக்கத் தூண்டுதலின் 'காண்மின்' எனப் பொருள்படுவதாகக் கருதப்பட்டது.]*

**கிடிச்செவி** *kiḍi-c-cevi*, பெ.(n.) அமுக்கிரா (சங்.அக.); Indian winter cherry.

*[கிடி + செவி. ஒ.நோ. = கிடி = பன்றி (பிங்.)பன்றியின் காது வடிவான மூலிகை.]*

**கிடிபம்** *kiḍibam*, பெ.(n.) மரத்தைத் துளைக்கும் பறவை; wood-pecker (சா.அக.).

*[கடி → கடிவம் → கிடிவம் → கிடிபம் (கொ.வ.)]*

**கிடிமம்** *kiḍimam,* பெ.(n.) ஆமையோட்டைப் போல் தடித்த சதை; a fattish raised patch of integument (சா.அக.).

*[கிடி(பன்றி) → கிடிமம்]*

**கிடியம்** *kiḍiyam,* பெ.(n.) பன்றிநெய்; lard (சா.அக.).

*[கிடி → கிடியம்]*

**கிடீர்** *kiḍīr,* இடை.(part.) ***கிடிகோள்*** பார்க்க;see *kiḍikōl. "வெண்ணெய் விலக்கினார் புக்க லோகம் புகுவீர் கிடீர்" (ஈடு.1:5,அவ.)*

*[கிடை = இளைஞன், மாணவன். கிடை+ஈர் – கிடீர். (ஈர் – மு.ப.ஈறு).]*

**கிடுக்கட்டி**[1] *kiḍukkaṭṭi* பெ.(n.) 1. ஓர் ஒலி (சங்.அக.); sound of something shaking in a hollow vessel. 2. ஒருவகை முழவு (யாழ்ப்.); small drum as an accompaniment.

மறுவ. கிடுகட்டி

*[கிடுக்கு → கிடுக்கட்டி.]*

**கிடுக்கட்டி**[2] *kiḍukkaṭṭi* பெ.(n.) இருப்பைப் பூவைப் பிறவற்றோடு வறுத்தெடுத்துச் செய்த கட்டி (சங். அக.); cake of the mahwa flower mixed with seasoning ingredients and then roasted and pounded in a mortar.

மறுவ. கிடுக்க

*[கிடு + கட்டி.]*

**கிடுக்கட்டி**[3] *kiḍukkaṭṭi* பெ.(n.) குருக்கு (இ.வ.); Mexican poppy.

*[கிடு + கட்டி.]*

**கிடுக்கு** *kiḍukku,* பெ.(n.) கிடுக்கட்டி[2] (சங்.அக.) பார்க்க; see *kiḍukkaṭṭi*

ம. கிடுக்கு

*[கிடு → கிடுக்கு.]*

**கிடுக்குக்கிடுக்கெனல்** *kidukku-k-kidukkenal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying hollow sound.

ம. கிடுக்கென

*[கிடுக்கு + கிடுக்கு + எனல்.]*

**கிடுக்கென்று** *kiḍu-k-kenṟu,* வி.எ.(adv.) உடனே, விரைவாக; suddenly, quickly.

ம. கிடுக்னெ

*[கிடுக்கு + என்று.]*

**கிடுகிடாய்–த்தல்** *kiḍu-kiḍāy-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மலைத்தல், திகைத்தல்; to be amazed, thunder struck. 2. நடுநடுங்குதல்; to tremble with fear. கிடுகிடாய்க்கும்படி பேசினான் (உ.வ.).

*[கிடுகிடு → கிடுகிடாய்-.]*

**கிடுகிடாயமானம்** *kiḍukiḍāya-māṉam,* பெ.(n.) அதிர்ச்சி; tremor.

*[கிடுகிடு + ஆய + மானம். கிடுகிடு = நடுங்குதற்குறிப்பு. அதிர்ச்சி. மானம் = தன்மை.]*

**கிடுகிடு**[1]**–த்தல்** *kiḍukiḍu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நடுங்குதல்; to tremble, shake, to totter, as a loose wall. 2. ஒலித்தல்;to sound , as the rolling of a carriage, to rumble, as a thunder cloud. 3. பல்லோடு பல் கொட்டுதல் (வின்.); to chatter, as the teeth with cold, to shiver, quake.

ம. கிடுகிடுக்குக

*[கிடு + கிடு – கிடுகிடு = ஒலிக்குறிப்புச் சொல்.]*

**கிடுகிடு**[2] *kiḍukiḍu,* பெ.(n.) 1. ஒருசிறுபறை; a small drum. *"தவளந் தப்புடனே கிடுகிடு" (திருப்பு.590).* 2. நடுக்கம் (வின்.); quaking, trembling.

**கிடுகிடுப்பு** *kiḍukiḍuppu,* பெ. (n.) 1.அசைவு; movement. 2. அச்சம்; fear. 3.நடுக்கம்; tremble.

ம. கிடுகிடுப்பு, க. கிடிகிடி, கடகடி; து.கிட்கிட்

*[கிடுகிடு→கிடுகிடுப்பு]*

**கிடுகிடுபாதாளம்** *kiḍukiḍu-pādālam,* பெ.(n.) அச்சத்தையுண்டாக்கும் மிக்க ஆழம்; abysmal depth, as causing fright.

*[கிடுகிடு + பாதாளம் (ஆழம்). கிடுகிடு = ஒலிக்குறிப்புச் சொல், அச்சம் குறித்தது.]*

**கிடுகிடெனல்** *kiḍukiḍeṉal,* பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு (பிங்.); onom, expr. signifying rumbling sound. 2. அச்சக் குறிப்பு; expr. signifying tremor. *"புலி கரடி கிடுகிடென நடுநடுங்க" (குற்றா.குற.80).* 3. விரைவுக் குறிப்பு; rapidity, quickness.

*[கிடுகிடு + எனல். கிடுகிடு = ஒலிக்குறிப்பு. விரைவும் அச்சமும் குறித்தது.]*

**கிடுகின்படம்** *kiḍugiṉ-paḍam,* பெ.(n.) தோற் கேடகம்; leather shield. *"ஏனப் படமுங் கிடுகின் படமும்" (சிலப்.14:172).*

*[கிடுகு¹ + படம். கிடுகு = கேடகம்.]*

**கிடுகு¹** *kiḍugu,* பெ.(n.) 1. கேடகம்; shield, buckles. *"வார்மயிர்க் கிடுகொடு" (சீவக.2218).* 2. சட்டப்பலகை; a wooden frame. *"பவளத் திண்காழ் கம்பலக் கிடுகி னூன்றி" (சீவக.113).* 3. தேர்மரச்சுற்று (ஞானா.7,16); boards round the body of a car.

ம. கிடுகு

*[கிடு →கிடுகு (கோத்தது, இணைத்துப் பொருத்தியது).]*

**கிடுகு²** *kiḍugu,* பெ.(n.) முடைந்த ஒலைக்கீற்று (வின்.); braided coconut leaf for thatching, etc., cadjan.

ம.கிடில்

*[கிடு → கிடுகு (இணைத்தது, பின்னியது).]*

**கிடுகு³** *kiḍugu,* பெ.(n.) வட்டவடிவான பறைவகை; an oval tabor. *"கிடுகு கொட்டின" (பாரத.அணி.15).*

*[கிடுகு = கேடயம், கேடய வடிவத்திலுள்ள பொருள். வட்ட வடிவமானது.]*

**கிடுகுபின்னு-தல்** *kiḍugu-piṉṉu-,* 5 செ.கு.வி.(v.i.) ஓலை முடைதல்; to braid coconut leaves.

*[கிடுகு² + பின்னு-. கிடுகு = முடைந்த ஓலைக்கீற்று.]*

**கிடுகோலை** *kiḍugōlai,* பெ.(n.) கீற்றுக்குரிய தென்னையோலை; coconut leaves fit for braiding.

*[கிடுகு² +ஓலை.]*

**கிடுபிடி¹** *kiḍupiḍi,* பெ.(n.) வட்டவடிவான ஒருவகை வாச்சியம் (வின்.); a tambourine of oval form.

ம.கிடுபிடி; க. கிடிப்பிடி; தெ. கிடிபிடி; மரா. கடமட.

*[கிடுகு + பிடி – கிடுகுமுடி → கிடுபிடி.]*

**கிடுபிடி²** *kiḍupiḍi,* பெ.(n.) ஆர்ப்பாட்டம் (உ.வ.); uproar, loud noise.

உரு. காட்பாட்; க. கிடிபிடி; ம. கிடுபிடி.

*[கடு + பிடி – கடுபிடி → கிடுபிடி.]*

**கிடுமுடி** *kiḍumuḍi,* பெ.(n.) ஒருவகைச் சிறுபறை; a small drum as an accompaniment. *"கொம்பு கிடுமுடி முரசம்" (அறப்.சத.63).*

மராட். கடமடா

*[கிடுகு + முடி – கிடுகுமுடி → கிடுமுடி.]*

**கிடேச்சு** *kiḍēccu,* எபெ.(n.) நெட்டி; pith.

*[கிடை → கிடேச்சு.வெண்கிடை = வெள்ளிய கிடேச்சு. (நெட்டி). கிடை பார்க்க; see kiḍai]*

**கிடேச்சை** *kiḍēccai,* பெ.(n.) **கிடேச்சு** பார்க்க; see *kiḍēccu.*

*[கிடை → கிடேச்சு → கிடேச்சை.]*

**கிடேரி** *kiḍēri,* பெ.(n.) ஆவின் ஈனாக் கன்று; heifer.

*[கிடாரி → கிடேரி]*

**கிடை[1]-த்தல்** *kiḍai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. அடைதல்; to be obtained, recovered, found, to come into one's possession. *"திங்க ளெட்டாவதிற் கிடைக்கும்" (கனா.2).* 2. இயைதல்; to join, come together. *"கரத்தொடு கரதலங் கிடைப்பப் பூட்டி" (கம்பரா.உத்த.மந்திர.100).*

ம. கிடெக்க

*[கிள்→ கிடு→ கிடை.]*

**கிடை[2]-த்தல்** *kiḍai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. அருகாதல்; to come near, approach. *"கிடந்தானைக் கிடைத்திரு தடங்கை கூப்பினன்" (கம்பரா.கிட்கிந்தை.23).* 2. எதிர்த்தல்; to encounter, oppose, meet in battle-field. *"இருபடைகளு மெதிர் கிடைக்கவே" (கலிங்.393).*

*[கிள்→ கிடு→ கிடை.]*

**கிடை[3]** *kiḍai,* பெ.(n.) 1. சடைமரம் (பிங்.); sola pith. 2. நெட்டி; pith. *"கிழியினுங் கிடையினுந் தொழில்பல பெருக்கி" (சிலப்.5:32).*

மறுவ. *கிடைச்சு, கிடேச்சு, கிடைச்சை.*

*[கிள் → கிடு → கிடை - படுக்குமிடம், தங்குமிடம்.]*

**கிடை[4]** *kiḍai,* பெ.(n.) 1.கிடக்கை; lying down. *"கிடைகொள் குசைப்புற் பள்ளியுள்" (சேதுபு. துத்தம்.18).* 2. நோய்வாய் படுகை; falling ill. 3. இருப்பிடம்; abode. *"மறையவர் கிடைக டோறும்" (குற்றா.தல.திருமால்.55).* 4. ஆட்டுக்கிடை; flock of sheep, sheepfold.

ம. கிடப்பு

*[கிட → கிடை - படுக்குமிடம், தங்குமிடம்]*

**கிடை[5]** *kiḍai,* பெ.(n.) தங்கிப் பயிலும் மாணவன்; student of a residential school.

*[கிடை[4] → கிடை[5].]*

**கிடை[6]** *kiḍai,* பெ.(n.) 1. மறை கற்பிக்கும் பாடசாலை; school for reciting *Vēdas, "மறையறா கிடையெங்கும்" (திருவிளை.வாதவூ.3).* 2. மறை கற்கும் குழாம்; band of desciples reciting *Vēda. "ஓது கிடையினுடன் போவார்" (பெரியபு. சண்டே. 17).* 3. படைக்கலம் பயிலிடம்; school where fencing is taught. *"இளங்கிடை காப்பரொடு (பெருங். உஞ்சைக்.37:11).*

*[கிடை[5] → கிடை[6].]*

**கிடை[7]** *kiḍai,* பெ.(n.) 1. உள்ளடக்கம், உட்கிடை; subject, matter, contents. *"அறநூற் கிடை நோக்கி" (சேதுபு.வேதாள.10).* 2. ஐயம்; doubt. *"பெருமை கிடையறக் கிளக்க லுற்றனனால்" (வாயுசங். இருடிகள்.பிர.4).*

*[கிடை[4] → கிடை .]*

**கிடை[8]** *kiḍai,* பெ.(n.) உவமை; comparison, match, parallel, likenss, equality. *"கீதங் கிடையிலாள் பாட" (சீவக.731).*

ம. கிட; க. கடை. கெடெ.

*[கிளை → கிடை - உறவு, ஒப்பு, உவமை.]*

**கிடைக்காரன்** *kiḍai-k-kāraṉ,* பெ.(n.) 1. ஆட்டுக் கிடைக் குரியவன்; owner of a flock of sheep. 2. ஆட்டுக்கிடை வைக்கும் நிலத்துக்குரியவன் (இ.வ.); owner of the land on which a flock of sheep or goat is penned.

*[கிடை[4] + காரன்.]*

**கிடைகொடு-த்தல்** *kiḍai-koḍu-,* 4 செ.கு.வி.(v.i.) பெற்றம் முதலியன பொலிபெருதின் சேர்க்கைக்கு இடங்கொடுத்தல்; to allow to copulate.

*[கிடை + கொடு.]*

**கிடைகொடுக்காமை** *kiḍai-koḍukkāmai,* பெ.(n.) படுக்கையில் பொருந்தாமை; restlessness in bed as of sick person (சா.அக.).

*[கிடை + கொடுக்காமை.]*

**கிடைச்சரக்கு** *kiḍai-c-carakku,* பெ.(n.) நாட்பட்ட சரக்கு; old stock of goods.

*[கிடை[4] + சரக்கு.]*

**கிடைச்சி** *kiḍaicci,* பெ.(n.) ***கிடேச்சு*** பார்க்க; see *kiḍēccu.*

*[கிடை[3] → கிடைச்சி.]*

**கிடைச்சில்** *kiḍaiccil,* பெ.(n.) 1.சண்டை; a quarrel, brawl. 2. எதிர்ப்படுதல்; encountering.

ம. கிடச்சில்

**கிடைச்சு** *kiḍaiccu,* பெ.(n.) ***கிடேச்சு*** பார்க்க; see *kiḍēccu.*

*[கிடை[3] → கிடைச்சு.]*

**கிடைச்சை** *kiḍaiccai,* பெ.(n.) ***கிடேச்சு (வின்.)*** பார்க்க; see *kiḍēccu.*

*[கிடை[3] → கிடைச்சு → கிடைச்சை.]*

**கிடைதலை** *kiḍai-talai,* பெ.(n.) இறங்குங்காலம் (யாழ்.அக.); moment of death.

*[கிடை[4] + தலை.]*

**கிடைப்படு—தல்** *kiḍai-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. கட்டுப்படுதல்; to be caught, bound, enthralled. *"கிளர்சுருதி மயக்கத்தாற் கிடைப்பட்டாலும்" (ஞானவா.முமுட்சு,26).* 2. நோயுறுதல் (வின்.); to fall sick, become ill.

*[கிடை[4] + படு.]*

**கிடைப்பாடு** *kiḍai-p-pāḍu,* பெ.(n.) நோய் (வின்.); disease.

*[கிடைப்படு → கிடைப்பாடு. படு → பாடு.]*

**கிடைப்பாய்** *kiḍaippāy* பெ.(n.) படுக்கைப்பாய்; mat.

*[கிடை + பாய்.]*

**கிடைப்பிசகு** *kiḍai-p-pišagu,* பெ.(n.) படுத்திருக்கும் போது நிலைமாறியதால் நேருஞ்சுளுக்கு; sprain from wrong position in sleep, cramp.

*[கிடை[4] + பிசகு.]*

**கிடைமறி—த்தல்** *kiḍai-maṟi-,* 4 செ.கு.வி.(v.i.) உரத்திற்காகக் கால்நடைகளை வயல்களில் கூட்டுதல்; to herd cattle in the fields for manuring.

மறுவ. கிடை வைத்தல்

*[கிடை[4] + மறி.]*

**கிடைமாடு** *kiḍai-māḍu,* பெ.(n.) ஆன்கூட்டம் (யாழ்.அக.); herd of cattle.

*[கிடை[4] + மாடு.]*

**கிடையன்** *kiḍaiyaṉ,* பெ.(n.) கிடைச்சரக்கு (யாழ்.அக.); old or shop-soiled goods.

*[கிடை[4] → கிடையன்.]*

**கிடையாடை** *kiḍai-y-āḍai,* பெ.(n.) படுக்கை விரிப்பு (அக.நி.); bed sheet.

*[கிடை[4] + ஆடை.]*

**கிடைவாய்—த்தல்** *kiḍai-vāy-,* 2 செ.கு.வி.(v.i.) வாய்ப்பான படுக்கை அமைதல்; chance to get comfortable bed.

*[கிடை[4] + வாய்.]*

**கிடைவை—த்தல்** *kiḍai-vai-,* 4 செ.கு.வி.(v.i.) ***கிடைமறி*** பார்க்க; see *kiḍai-maṟi.*

*[கிடை[4] + வை-.]*

**கிண்கிணி[1]** *kiṇkiṇi,* பெ.(n.) 1. பொற்சதங்கையால் ஆன மாலை; tinkling of gold ornament for the ankle. *"திருப்பட்டிகை கிண்கிணி பெரும் நாணும் மாங்காய் நாணுடையவும்" (தெ.கல்.தொ.2 கல்.93).* 2. காலில் அணியும் சதங்கை; tinkling ornament for the ankle. *"தவளை வாய பொலஞ்செய் கிண்கிணி" (குறுந்.148).*

ம. கிண்கிணி; Skt. *kinkini*

*[கிண்கிண் → கிண்கிணி.]*

**கிண்கிணி**[2] *kiṉkiṉi,* பெ.(n.) வெண்கலமாலை; bronze or bell-metal ore.

*[கிண் + கிண் + இ.]*

**கிண்கிணித்தாமம்** *kiṉkiṉi-t-tāmam,* பெ.(n.) ***கிண்கிணிமாலை*** பார்க்க; see *kiṉkiṉi-mālai.* "*தவளைக் கிண்கிணித் தாமஞ் சேர்த்தியும்*" *(சீவக.3126).*

*[கிண்கிணி + தாமம்.]*

**கிண்கிணிமாலை** *kiṉkiṉi-mālai,* பெ.(n.) பெண்கள் இடுப்பில் அல்லது காலில் அணிவதும் குதிரை அல்லது விலங்குகளுக்குக் கழுத்தில் கட்டுவதுமான சதங்கை மாலை; string of small tinkling bells, for the waist or ankles of woman, for the neck of horse or other animal.

*[கிண்கிணி + மாலை.]*

**கிண்கிணிவாய்க்கொள்(ளு)-தல்** *kiṉ-kiṉivāy-k-koḷ-,* 16 செ.கு.வி.(v.i.) ***கிண்கிணிவாய்செய்*** பார்க்க; see *kiṉkiṉi-vāy-cey-.* "*கிண்கிணிவாய்க் கொள்ளுங்... கழுநீர் மலர்*" *(திருக்கோ.123).*

*[கிண்கிணி + வாய் + கொள்(ளு).]*

**கிண்கிணிவாய்செய்-தல்** *kiṉkiṉi-vāy-cey-,* 1 செ.கு.வி.(v.i.) 1. சிறு சதங்கையின் வாய்போலச் சிறிதே மலரத் தொடங்குதல்; to open slightly, as the mouth tinkling bell. "*கிணிவாய் செய்த தாமரைப்பூப்போல*" *(திவ்.திருப்பா.22).*

*[கிண்கிணி + வாய் + செய்.]*

**கிண்கினெனல்** *kiṉkiṉ-eṉal,* பெ.(n.) ஓர் ஒலிக் குறிப்பு; onom. expr. signifying tinkling sound.

*[கின்+கின்+எனல்.]*

**கிண்டல்**[1] *kiṇḍal,* பெ.(n.) தூண்டிவிடுகை; stirring, setting one to do some mischief. அவன் கிண்டல் பண்ணுகிறான்.

ம. கிண்டல், கிண்டாட்டம்.

*[கிள்→ கிண்டு → கிண்டல்.]*

**கிண்டல்**[2] *kiṇḍal,* பெ.(n.) ஏளனம் (இ.வ.); redicule, banter.

*[கிண்டு → கிண்டல்.]*

**கிண்டல்கிளறல்** *kiṇḍal-kiḷaṟal,* பெ.(n.) 1. தோண்டியெடுக்கை (வின்.); digging up, as yams. 2. உட்புகுந்து கிளறுகை; prying out.

ம. கிண்டாட்டம்

*[கிண்டல் + கிளறல்.]*

**கிண்டன்** *kiṇḍaṉ,* பெ.(n.) 1. தடியன்; fat man, strong person. 2. உரப்பாலை பஞ்சுத்துணி (வின்.); a kind of coarse cotton cloth, striped or checkered gingham.

க. கிண்ட; ம. கிண்டன்.

Mhr. ganda.

*[கிண்டு + கிண்டன்.]*

**கிண்டான்** *kiṇḍāṉ,* பெ.(n.) ஒருவகை உரப்புத் துணி; Cuddalore check, red and black, used for matresses and pillows. கூடலூர்க் கிண்டான் (இ.வ.).

*[கண்டு → கிண்டு - தடிப்பு. கிண்டு→கிண்டன் → கிண்டான்.]*

**கிண்டி**[1] *kiṇḍi,* பெ.(n.) மூக்குத் துளையால் நீர்வார்க்கும் சிறுகலம்; small drinking vessel with a nozzle, used for children to drink from. "*பொற் கிண்டியைக் கொண்டு உதகம் பண்ணப்புக*" *(திவ்.திருநெடு.13,வியா.).*

ம., கோத., குட., பட. கிண்டி; க., தெ. துண்டி; து. கிண்டி, கிண்ட்டி; Mar. kindi.

*[கின் - பிளப்பு, துளை. கின்→கிண்டு→ கிண்டி.]*

**கிண்டி**[2] *kiṇḍi,* பெ.(n.) 1. துளை; hole. 2. நீர்க்கால்; canal.3. நீர்நிலை, ஏரி; tank, pool, water reservoir. 4. ஊர்ப்பெயர்; place name.

**ம.** கண்டி; **க.** கண்டி, கிண்டி. தண்டி; **குட.** கண்டி; **து.** கண்டி, தண்டி;**தெ.** கண்டி, தண்டிக; **பிரா.** கண்ட்;

*[கண்டி →கிண்டி.]*

**கிண்டிக்கிளறு-தல்** *kiṇḍi-k-kiḷaṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ***கிண்டிக்கொடு*** பார்க்க; see *kiṇḍi-k-kōḍu-.*

*[கிண்டு → கிண்டி + கிளறு-.]*

**கிண்டிக்கொடு-த்தல்** *kiṇḍi-k-koḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கிளறிக்கொடுத்தல்; to stir, keep stirring, as fire.pap. 2. தூண்டிவிடுதல்; to stir up, incite as to a quarrel. 3. நினைப் பூட்டுதல்; to prompt. அவனுக்குச் சற்றே கிண்டிக் கொடு (வின்.).

*[கிண்டி + கொடு]*

**கிண்டிப்பார்-த்தல்** *kiṇḍi-p-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. தோண்டிப்பார்த்தல்; to dig and look for, as yams. 2. ஆய்வு செய்தல்; to thoroughly investigate. சமாசாரத்தைக் கிண்டிப்பார் (உ.வ.).

*[கிண்டி + பார்.]*

**கிண்டிவிடு-தல்** *kiṇḍi-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. கொத்திக் கொடுத்தல்; to dig up, to break the ground with a hoe, to grub up. 2. தூண்டி விடுதல்; to stir up, incite, as to quarrel. 3. நினைவுப் படுத்துதல் (வின்.); to bring to notice, suggest.

*[கிண்டு → கிண்டி + விடு.]*

**கிண்டு**[1]**-தல்** *kiṇḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கிளறுதல் (பிங்.); to poke, to stir with a ladle, to scratch, as a fowl; to dig up as with a stick or iron bar, to burrow in, as rats, as worms; to penetrate, as bees into flower. 2. தோண்டுதல்; to excavate, as pit; to hoe up, hollow out, dig out, as a hole in a wall. 'மண்கிண்டி வயிறு வளர்க்கிறவன்' (வின்.). 3. ஆராய்தல்; to probe, scrutinize, investigate, inquire, pry into, search, examine. அவன் ஒவ்வொரு விஷயத்தையும் கிண்டிப் பார்க்கிறவன். 4. நினைப்பூட்டுதல் (வின்.); to remind, prompt. 5. தூண்டுதல் (வின்.); to incite, as to a quarrel.

**ம.** கிண்டு; **தெ.** செண்டு (வெட்டுதல்); **து.** செண்டாடுனி (கழித்தல்); **கோத.** கெச்; **துட.** கொச்; **கோண்.** கிட்டி; **மா.** கிண்டெ.

*[கிள் → கிண்டு.]*

*kinḍ-u,* to stir, to search, to turn up the ground. Comp. kevt-ew (*kent-eδ*), to prick, to goad, to spur on (C.G.D.F.L. Pg.592).

**கிண்டு**[2]**-தல்** *kiṇḍu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கடைதல்; to churn. *"பாம்புகயி றாய்ப் பிணித்துப் பாற்கடலைக் கிண்டாமல்" (நெல்விடு.226).* 2. கிளறிச் சமைத்தல்; to cook by constant stirring over the oven. உப்புமா கிண்டினாள் (யாழ்.அக.). 3. வெளிப்படுத்துதல் (யாழ்.அக.); to publish. 4. ஏளனப்படுத்துதல் (இ.வ.); to ridicule.

*[கிள் → கிண்டு.]*

**கிண்டு**[3]**-தல்** *kiṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கிழித்தல் (திவ்.திருச்சந். 22.வியா); to tear off.

*[கீண்டு → கிண்டு.]*

**கிண்ணகம்** *kiṇṇagam,* பெ.(n.) வெள்ளப்பெருக்கு; flood, deluge. ***"கிண்ணகத்திலிழிய அஞ்சு" (பெரியதி.3:1.1,வியா.).***

*[கிள் → கிண் + அகம்.]*

**கின்னம்** *kinnam,* பெ.(n.) 1. சிறுவட்டில்; small cup made of metal, as perhaps producing a tinkling sound when struck. *"மழக்கை யிலங்குபொற் கிண்ண மென்றலால்" (திருவாச.5:92).* 2. நாழிகை வட்டில் (பிங்.); brass bowl with a hole in the bottom placed in water so as to fill and sink in a given time, used to calculate time depsydra.

**ம.** கின்னம்; **க., பட.** கிண்ணலு; **தெ.** கின்னிய, கின்னெ; **து.** கிண்ண, கிண்ணல், திண்ணல்; **துட.** கினம்.

*[கின் → கிண் → கிண்ணம் = உட்குழிந்தது.]*

**கின்னன்** *kinnan,* பெ.(n.) கருநிறமுடையான் (நீலகேசி,76); dark coloured person.

*[கண்ணன் → கிண்ணன்.]*

**கின்னாரங்கொட்டு-தல்** *kinnārań-kottu-,* 5 செ.கு.வி. (v.i.) கின்னரம் இசைத்தல்; to play on a small fiddle or lute.

*[கின்னரம் → கிண்ணரம் + கொட்டு-.]*

**கின்னாரம்** *kinnāram,* பெ.(n.) ஒரு நரம்பிசைக் கருவி; stringed instrument, small fiddle or lute.

**ம.** கிண்ணாரம்; **Skt.** kinnara.

*[கின்னரம் → கிண்ணாரம். **கின்னரம்** பார்க்க; see kinnaram.]*

**கின்னாரிவட்டம்** *kinnāri-vattam,* பெ.(n.) சுவர்த் தூணில் அமையும் அழகு வேலைப்பாடு (கம்.வழ.); beautiful design on the pillar.

*[கிண்ணாரி + வட்டம்.]*

**கின்னி** *kinni,* பெ.(n.) 1. ***கின்னம்***[1] பார்க்க; see *kinnam*[1]. 2. ***கின்னம்***[2] (G.Sm.D.i.29) பார்க்க; see *kinnam*[2]. 3. கத்தியின் கைப்பிடியுறை (சங். அக.); cover of the hilt of a sword. 4. நண்டின் கால் (வின்.); any one of the eight small legs of a crab. 5. நாயின் கிண்ணிக்கால் (வின்.); extra claw on the hind leg of some dogs. 6. எருது, மான் முதலிய ஒருசார் விலங்குகளின் குளம்பின் மேல் உள்ள திரட்சி (யாழ்.அக.); horny protuberance above the hoof and the hind part of the leg of certain animals as the ox, deer etc.

**ம.,பட.** கிண்ணி; **க.** கிண்ணல்; **து.** கிண்ணலு.

*[கிண் → கிண்ணி.]*

**கின்னிக்கர்ப்பூரம்** *kinni-k-karppūram,* பெ.(n.) இதளிய கருப்பூரம் (சங்.அக.); sublimate of mercury. 2. தூய்மைசெய்யப்பட்ட கருப்பூரம்; refined camphor.

**மறுவ.** இதளியக் கருப்பூரம்

*[கிண்ணி + (கருப்பூரம்) கர்ப்பூரம்.]*

**கின்னிடு-தல்** *kinnidu-,* 20 செ.கு.வி.(v.i.) கிண்ணென்னும் ஒலியுண்டாதல் (யாழ்.அக.); to tinkle, ring, as in the ear.

*[கிண் + இடு.]*

**கின்னித்தேர்** *kinni-t-tēr,* பெ.(n.) மேற்பாகம் பித்தளைத் தகட்டால் அமைந்த ஒருவகைத் தேர் (வின்.); a kind of car upper part of which is decorated all over with brass plates.

*[கிண்ணி + தேர்.]*

**கின்னியெண்ணெய்** *kinni-yenney,* பெ.(n.) கிண்ணியின் உட்பக்கம் பதங்கம் ஏறும்படி அணியம் செய்த மருந்தெண்ணெய்; medicated oil where the vapour is made to condense again as a deposit on inner side of a cup or receptacle.

*[கிண்ணி + எண்ணெய்.]*

**கின்னு-தல்** *kinnu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. போதல்; to go. *"கேரளத்தை நோக்கி வைச்சுக் கிண்ணி னனே" (பஞ்ச.திருமுக.1530).* 2. நிரம்பவுண்ணுதல்; to eat to the full. *"கிச்சடியாம் வைச்சடிச்சுக் கிண்ணு வனாம்" (பஞ்ச.திருமுக. 1877).*

*[கின் → கிடி → கிண்ணு.]*

**கிண்ணெனல்**[1] *kinn-enal,* பெ.(n.) ஓர் ஒலிக் குறிப்பு; onom. expr. signifying tinkling, clinking sound. *"கிண்ணென் றிசைமுரலுந் திருக்கேதாரம்" (தேவா.1154,7).*

*[கிண் + எனல்.]*

**கிண்ணெனல்**[2] *kinnenal,* பெ.(n.) பெருத் திறுகியிருத்தற் குறிப்பு; expr. of being full and tight.குழந்தையின் வயிறு கிண்ணென்றி ருக்கிறது (இ.வ.).

*[கிண் + எனல்.]*

**கிண்ணை** *kinnai,* பெ.(n.) மரைமா என்னும் மரம்; kambala tree (சா.அக.).

மறுவ. கம்பலம், மரைமா.

**கிணகன்** *kinagan,* பெ.(n.) அடிமை (பிங்.); slave, menial.

ம. கிணகன்

*[கீழ் → கீண் → கிண → கிணகு → கிணகன்.]*

**கிணம்**[1] *kinam,* பெ.(n.) ***கிணறு*** (இ.வ.) பார்க்க; see *kinaru.*

*[கீள் → கிள் → கிண் → கிணம்.]*

**கிணம்**[2] *kinam,* பெ.(n.) தழும்பு (ஈடு.4:2:5,ஜீ); scar, scab.

*[கிணம்[1] → கிணம்[2].]*

**கிணற்றாமை** *kinarrāmai,* பெ.(n.) கிணற்றில் வாழும் ஆமைவகை; common terrapin.

*[கிணறு + ஆமை.]*


கிணற்றாமை

**கிணற்றுக்கட்டு** *kinarru-k-kattu,* பெ.(n.) கிணற்றின் சுற்றுக் கட்டடம் (வின்.); parapet wall of a well, well curb.கிணற்றுக்கட்டில் ஏனத்தை வைக்காதே? உள்ளே விழுந்துவிடும் (உ.வ.).

*[கிணறு + கட்டு.]*

**கிணற்றுத்தவளை** *kinarru-t-tavalai,* பெ.(n.) 1. தான் வாழும் சூழலுக்கு அப்பால் உள்ள எதையும் அறியாத நபர்; one who has no knowledge of things outside his or her own small sphere, innocent person (சா.அக.). அவன் ஒரு கிணற்றுத் தவளை (உ.வ.). 2. கிணற்றில் வாழும் தவளை; a kind of frog.

ம. கிணற்றுதவள

*[கிணறு + தவளை.]*

**கிணற்றுநீர்** *kinarrunīr,* பெ.(n.) கிணற்றிலிருந்து எடுக்கப்படும் நீர். இது மிகுவறட்சி, வெப்பம், உடலழற்சி, சூலை, உட்கடுப்பு, குடைச்சல், மயக்கம், வீக்கம், பித்தக்குற்றம், மூச்சுக்குற்றம் முதலியவற்றை அகற்றக்கூடியது; well water. It is said to relieve the following complaints viz:- intense thirst, constitutional heat, colic pain, internal irritation, boring pain, giddiness, swelling, bilious affections pulmonary complaints etc. (சா.அக.).

*[கிணறு + நீர்.]*

**கிணற்றுப்பொங்கல்** *kinarru-p-pongal,* பெ.(n.) கிணறு வெட்டுகையில் தண்ணீர் கண்டவுடன் பாதாளவைரவனுக்கு இடும் பொங்கல் (வின்.); boiled rice offered to Bhairava of the lower region at the sight of water in the course of sinking well.

*[கிணறு + பொங்கல்.]*

**கிணற்றுமிதி** *kinarru-midi,* பெ.(n.) கிணற்றில் நீரிறைக்கும் போது நிற்குமிடம் (வின்.); foot hold for one who draws water from a well.

*[கிணறு + மிதி.]*

**கிணற்றுவாரகம்** *kiṉaṟṟu-vāragam,* பெ.(n.) கிணறுவெட்டுவதற்காக அரசினர் உழவர்களுக்குக் கொடுக்கும் கடன்; loan of government given to farmers for sinking wells.

*[கிணறு + வாரகம்.]*

**கிணற்றுறை** *kiṉaṟṟuṟai,* பெ.(n.) மண்சரியாமல் இருப்பதற்காகக் கிணற்றுள் இருக்கும் உறை (C.E.M.); pot-ring of a well.

*[கிணறு + உறை.]*

**கிணறு** *kiṉaṟu,* பெ.(n.) நிலத்திற்கு அடியிலிருந்து நீர் எடுப்பதற்காக மண்ணை வெட்டி அகற்றி உண்டாக்கிய வட்ட வடிவான ஆழமான குழி; well. *"உவரில் கிணற்றின்கட் சென்றுண்பர்" (நாலடி,263).*

ம. கிணறு

*[கீள்→ கீண் → கிண → கிணறு]*

**கிணறெடு-த்தல்** *kiṉaṟeḍu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கிணறுவெட்டுதல்; to dig or sink a well. 2. கிணறு வெட்டுதற்கேற்ற இடந் தேர்தல் (வின்.); to select a spot for a well, with reference to the situation of house and other sourrounding objects, the nature of the soil, the depth at which water may be found, etc.

*[கிணறு + எடு-.]*

**கிணாங்கு** *kiṉāṅgu,* பெ.(n.) புல்வகை (வின்.); a species of grass.

*[கிணகு → கிணாங்கு.]*

**கிணாட்டு** *kiṉāṭṭu,* பெ.(n.) 1. ஓலை நறுக்கு; chip or nip of palm leaf. 2. மீன் செலுப்பு முதலியன; any small thing resembling an *ōla* chip, as the bony, appendage in gills of fish. 3. கதிர் முதலியவற்றின் சிறுகுலை (வின்.); small sub-division of a spike of grain or cluster of grapes.

*[குணாட்டு → கிணாட்டு.]*

**கிணி**[1] *kiṇi,* பெ.(n.) ஒருவகைக் கைத்தாளம் (வின்.); cymbal.

ம. கிணி

*[கிள் → கிண் → கிணி.]*

**கிணி**[2] *kiṇi,* பெ.(n.) நாயுருவி; Indian burr (சா.அக.).

*[குள் → கிள் → கிண் → கிணி.]*

**கிணிதி** *kiṇ-idi,* பெ.(n.) கிலுகிலுப்பை (மலை.); rattle-wort.

*[கிண் + இதி.]*

**கிணினெனல்** *kiṇiṉ-eṉal,* பெ.(n.) ***கிணீரெனல்*** பார்க்க; see *kiṇīr-eṉal. "இருமணி கிணினென விசைத்தன" (சீவக.1841).*

*[கிணின் + எனல்.]*

**கிணீரெனல்** *kiṇīr-eṉal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom, expr. signifying, tinkling, clinking sound.

*[கிணீர் + எனல்.]*

**கிணுக்குக்கிணுக்கெனல்** *kiṇukku-k-kiṇuk-keṉal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு (வின்.); onom. expr. signifying tinkling sound, as a hand-bell.

*[கிணுக்கு + கிணுக்கு + எனல்.]*

**கிணுகிணு-த்தல்** *kiṇu-kiṇu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வண்டுகளைப்போல் முரலுதல், கொசுக்களைப் போல் ஒலியெழுப்புதல்; (onom.) to hum as beas or buzz as moquitoes. 2. சிறுவர்களைப்போல் சிணுங்குதல்; to whimper. 3. முணுமுணுத்தல்; to mumble, mutter. 4. மணி முதலியன குறைவானவோசையுடன் ஒலித்தல்; tinkle. சைக்கிள் மணி கிணுகிணுத்தல்.

*[குள் → கிள் → கிண் → கிணி.]*

ம. கிணுகிணுக்குக

*[கிணுகிணு - ஒலிக்குறிப்பு]*

**கிணை** *kiṇai,* பெ.(n.) 1. ஒருவகை மருதப்பறை (பு.வெ.8:32.உரை); drum used in agricultural tract. 2. உடுக்கை; small drum shaped like an hour-glass. *"நுண்கோற் றகைத்த தெண்கண் மாக்கிணை"* (புறநா.70).

*[கிண் → கிணை.]*

**கிணைநிலை** *kiṇai-nilai,* பெ.(n.) கிணைமகன் மருதநிலத்து வேளாளனைக் கிணைகொட்டிப் புகழும் புறத்துறை (பு.வெ.8:32); theme of singing the praises of a Vēḷāḷa chief, to the accom paniment of *kiṇai-drum.*

*[கிணை+ நிலை.]*

**கிணைநிலைப் பொருநர்** *kiṇai-nilai-p-porunar,* பெ.(n.) ***கிணைப்பொருநர்*** பார்க்க; see *kiṇai-p-porunar.* *"கிணைநிலைப் பொருநர்தஞ் செல்லல் கீழ்ப்பட"* (சீவக.6).

*[கிணைநிலை + பொருநர்.]*

**கிணைப்பொருநர்** *kiṇai-p-porunar,* பெ.(n.) கிணைப்பறை கொட்டிக்கொண்டு வேளாளரைப் புகழ்ந்து பாடும் பொருநர் (சிறுபாண்.203, உரை.); dancing minstrels who sing the praises of Vēḷāḷas, to the accompaniment of a *kiṇai-drum.*

*[கிணை + பொருநர்.]*

**கிணைமகள்** *kiṇai-magaḷ,* பெ. (n.)விறலி; female minstrel of ancient times, dancing and singing to the accompaniment of a drum. *"கிணைமகட் கெளிதாற் பாடினள் வரினே"* (புறநா.111:4).

*[கிணை + மகள்.]*

**கிணைமகன்** *kiṇai-magaṉ,* பெ.(n.) கிணைப்பறை இசைப்பவன்; ministrel who palys *kiṇai* drum of ancient times. *"இரும்பறைக் கிணைமகன்"* (புறநா.388:3).

*[கிணை + மகன்.]*

**கிணையன்** *kiṇaiyaṉ,* பெ.(n.) ***கிணைமகன்*** பார்க்க; see *kiṇai-magaṉ.* *"அங்கட் கிணையன் துடியன்"* (பு.வெ.1:16).

*[கிணை → கிணையன்.]*

**கிணைவன்** *kiṇaivaṉ,* பெ.(n.) ***கிணைமகன்*** பார்க்க; see *kiṇai-magaṉ,* *"நின் கிணைவன் கூற"* (புறநா.379:11).

*[கிணை → கிணைவன்.]*

**கிணைவு** *kiṇaivu,* பெ.(n.) கிணைத்தொழில்; the profession of playing *kiṇai* drums.

*[கிணை → கிணைவு.]*

**கித்த** *kitta,* கு.வி.எ.(adv.) விரைவாக; hastily. *"கித்தக் கருங்குவளைச் செவ்வியோடிக் கெழுமினவே"* (திருக்கோ.388).

*[குள் → கிள் → கித்த.]*

**கித்தம்** *kittam,* பெ.(n.) செய்யப்பட்டது (திருக்கோ. 388, உரை); that which is made.

*[குல் → கில் → கித்தம்.]*

**கித்தா** *kittā,* பெ.(n.) துடைப்பான்; rubber (தரங்கை).

*[சீத்தல் → கீத்தன் → கித்தா.]*

**கித்து–தல்** *kittu-,* 5 செ.கு.வி.(v.i.) ஒற்றைக்காலால் தாவி நடத்தல்; to hop, leap about on one leg, as boys do in the game of *kindi-y-aḍittal.* *"கித்தி நின்றாடு மரிவையர்"* (திருவிசை.கருவூ. திருக்கீழ்க்.11). (வே.க.178).

ம. கித்துக

*[குந்து → கிந்து → கித்து–.]*

**கிந்தாதி** *kindādi,* பெ.(n.) துடரிப்பூடு; a thorny shrub (சா.அக.).

மறுவ. தொடரி

*[கீள் → கிந்து → கிந்தாதி.]*

**கிந்திகம்** *kindikam,* பெ.(n.) திப்பிலிமூலம்; root of long pepper. 2.புளிமா; sour mango (சா.அக.).

*[கிள்→கிந்து→கிந்திகம்.]*

**கிந்திநட–த்தல்** *kindi-naḍa-,* 3 செ.கு.வி.(v.i.) 1. முன்னங்காலால் நடத்தல் (வின்.); to walk on tip-toe. 2. நொண்டி நடத்தல்; to hobble, limp.

*[கிந்து → கிந்தி + நட.]*

**கிந்திநில்–தல் (கிந்திநிற்றல்)** *kindi-nil-,* 14 செ.கு.வி.(v.i.) முன்னங்காலை ஊன்றி நிற்றல் (வின்.); to stand on tip-toe.

*[கிந்து → கிந்தி + நில்.]*

**கிந்தியடித்தல்** *kindi-aḍittal,* பெ.(n.) பிள்ளைகள் நொண்டியடித்து ஒருவரையொருவர் பிடிக்கும் ஒருவகை விளையாட்டு (யாழ்ப்.); game of hopping about in a square traced on sand and trying to touch others while so engaged, a boy's game.

*[கிந்து → கிந்தி + அடித்தல்.]*

**கிந்து–தல்** *kindu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. முன்னங் கால் அல்லது விரல் குத்தி நடத்தல்; to stand or walk on toes of one foot or both, to go on tip-toe. 2. நொண்டி விளையாடுதல்; to hop, to leap about on one leg, as boys do in the game of *kindi-y-aḍittal.* 3. நொண்டி நடத்தல்; to limp, halt, hobble.

மறுவ. படங்குந்துதல்

பட. கொந்து

*[கித்து → கிந்து.]*

**கிந்துகாலன்** *kindu-kālaṉ,* பெ.(n.) கொந்தி நடப்பவன்; one who limps in his walk, who hobbles on tip-toe or on one foot.

பட. தொந்துகால

*[கிந்து + காலன்.]*

**கிம்பகம்** *kimbagam,* பெ.(n.) எட்டி; nux vomica (சா.அக.).

*[கைப்பு→ கைம்பு→ கைம்பகம்→ கிம்பகம்.]*

**கிம்பரர்** *kimbarar* பெ.(n.) கிம்புரி என்னும் அணிகலன் அணிந்த இசைவாணர்; a group among ancient Tamils, being professional singers and dancers (சா.அக.).

*[கிம்புரி→ கிம்பரர். கிம்புரரைத் தொன்மக் கதையினர் மாந்தர் முகமும் குதிரை உடலும கொண்டவராகக் கூறுவது புனைந்துரை.]*

**கிம்புரி** *kimburi,* பெ.(n.) 1. யானைக் கொம்பிலிடும் பூண்; ornamental ring on an elephant's tusk. *"சித்திரக் கிம்புரி வைரஞ் சேர்த்துநர்" (சீவக.83).* 2.முடியுறுப்புள் ஒன்று (திவா.); ornamental boss of a crown, one of five *muḍi-y-uṟuppu.* 3. நீர் விழுதற்கு சுறவ வடிவில் அமைக்கப்பெற்ற தூம்பு; spout shaped like the mouth of a shark. *"கிம்புரிப் பகுவா யம்பணம்" (நெடுநல்.96).* 4. சுறா மீனின் வாய்போன்ற அணிகலன்; a kind of ornament. *"கைவினை யேசறு கிம்புரி யெயிறு வெண்ணிலா" (கம்பரா.கடிமண.66).* 5. தோளணி (வின்.); man's ornament for the upper arm, a kind of epaulet.

*[கீள் = பிளத்தல். கீள் + புரி(வளையம்) – கீள்புரி → கிம்புரி (கொ.வ).]*

**கிம்புரிமுகம்** *kimburi-mugam,* பெ.(n.) அணிகல முகப்பின் உறுப்புள் ஒன்று (S.I.I.ii.43); ornamental knob, as part of a jewel.

*[கிம்புரி + முகம்.]*

**கிம்புருடர்** *kimburuḍar,* பெ.(n.) பதினெண் கணத்துள் ஒருவராய் கருதப்படும் தேவ இனத்தார் (சிலப்.5: 176,உரை); a class of demigods, celestial lyrists supposed to have the form of a horse and the head of a man, one of *padiṉeṉ-kaṇam.*

*[கிம்புரி → கிம்புரர் → கிம்புருடர் (கிம்புரி என்னும் அணிகலன் அணிந்தவர். இவரைக் குதிரை உடலினர் எனப் பிற அகரமுதலிகள் குறித்திருப்பது தொன்மைக் கற்பனை.]*

**கிம்புருடம்** *kimburuḍam,* பெ.(n.) கிம்புருட கண்டம், நாவல் தீவின் ஒரு பாகம்; a region of the mythical land.

*[கிம்புரர் → கிம்புருடம்.]*

**கிம்மம்** *kimmam,* பெ.(n.) துத்தம்; vitriol (சா.அக.).

*[செம் → செம்மம் → கிம்மம்.]*

**கிம்மியம்** *kimmiyam,* பெ.(n.) கொல்லங்கோவை என்னும் ஆகாய கருடன் (மூலிகை); a climbing shrub (சா.அக.).

*[கொம்பு → கொம்பியம் → கௌம்பியம் → கிம்மியம் (கொ.வ).]*

**கிம்மீரம்** *kimmīram,* பெ.(n.) செம்பட்டைநிறம்; brown colour (சா.அக.).

*[செம் → கெம் → கெம்மிரம் → கிம்மீரம்.]*

**கிமாச்சிமாவெனல்** *kimā-c-cimā-v-eṉal,* முருமுருத்தற் குறிப்பு (இ.வ.); onom. expr. signifying muttering, grumbling sound.

மறுவ. கிமாவெனல்

*[கிமா + சிமா + எனல். கிமாச்சிமா = ஒலிக்குறிப்பு, இடைச்சொல்.]*

**கிமாவெனல்** *kimā-v-eṉal,* பெ.(n.) ***கிமாச்சிமா வெனல்*** பார்க்க; see *kima-c-cima-v-enal.* கிமா வென்பாரில்லை (வின்.).

*[கிமா → எனல்.]*

**கிய்யாங்கிய்யாமெனல்** *kiyyāṅ-kiyyām-eṉal,* பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; onom, expr. signifying peeping of chickens, etc. குழந்தை கிய்யாங் கிய்யாமென்று அழுகின்றது. 2. தடுமாறுதற் குறிப்பு; expr. signifying the state of being in a fix. *"கிய்யாங் கிய்யாமென்று விழிக்க"* (இ.வ.).

*[கிய்யாம் + கிய்யாம்+எனல்.]*

**கிரக்கம்** *kirakkam,* பெ.(n.) 1. களைப்பு ; exhaustion. 2. மயக்கம் ; giddiness.3. கிறுகிறுப்பு; dizziness.

*[கில் → கிறு → கிறக்கம் + கிரக்கம்.]*

**கிரங்கு-தல்** *kiraṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) சோர் வடைதல்; to get fatigued, jaded.

*[கிறங்கு → கிரங்கு (கொ.வ.). **கிறங்கு** பார்க்க; see kiṟaṅgu.]*

**கிரந்தம்** *kirandam,* பெ.(n.) சமற்கிருதத்தை எழுத தென்னிந்தியாவில் உருவாக்கப்பட்ட எழுத்து;a script used in south india to write Sanskrit.

*[குரவன் → குரந்தை → கரந்தை → கரந்தம் > வ. கிரந்தம்.]*

எழுத்தில்லா வடமொழிக்கு வழக்கிலிருந்த தமிழ் எழுத்து வரி வடிவங்களிலிருந்து, கற்பித்துக் கொண்ட எழுத்துகளாம். பல்லவர் காலத்தில் இக்கிரந்தம் வளர்க்கப் பெற்றமையால் இது பல்லவர் கிரந்தம் என்றும் பழங்கிரந்தம் என்றும் பெயர் பெறும். இவ் வெழுத்தின் தோற்றம் கி.பி. ஆறாம் நூற் றாண்டாகும்.

கிரந்தம் என்னும் சொல் கட்டுதல், எனும் வேர்ப் பொருளுடையது. கட்டப்பட்ட ஓலைச் சுவடியாகிய நூலைக் குறித்தது என்பர். நூலில் எழுதப்பயன்படும் எழுத்து எனும் பொருளில் கிரந்தலிபி எனப்பட்டது. நூல் கற்பிக்கும் ஆசிரியனை கரந்தை என்றழைத்தனர். கரந்தைகள் ஆண்டில் ஒருக்கால் வருவது (தனிப்பா; 87, 171).

ஆசிரியன்மாறாகிய கரந்தைகள் வகுத்ததே கரந்தம் கிரந்தம் ஆயிற்று என்பதே பொருந்தும். இந்தியாவில் பதினெட்டு மொழிகளுக்குச் சமண முனிவர்கள் தனித்தனி எழுத்து வடிவங்களை உருவாக்கித் தந்தனர். அவையே புத்தக எழுத்துகளுக்குரிய பொதுப்பெயராகிய கிரந்தம் எனப்பட்டது. பல்லவர் ஆட்சியில் எழுத்தில்லாத வடமொழிக்குப் புத்தக எழுத்து தேவைப்பட்டதால் உருவாக்கப்பட்ட எழுத்து இப்பெயர் பெற்றது என கருதலாம்.

**கிரிகளா** *kiri-kaḷā,* பெ.(n.) மலைக்களா; hill carondah (சா.அக.).

*[கிரி+களா.]*

**கிரிகன்னி** *kirikanni,* பெ.(n.) 1. வெள்ளைக்காக் கணம்; white flowered mussell-shell creeper. 2. மால்கரந்தை; *Vishṇu's* plant. 3. கொற்றவை; goddess Durga (சா.அக.).

*[கரி → கிரி + கன்னி.]*

**கிரிச்செனல்** *kiriccenal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom, expr. signifying creaking sound.

*[கிரீச்சு → கிரிச்சு → எனல்.]*

**கிரிஞ்சனம்** *kiriñjanam,* பெ.(n.) 1. நரிவெங்காயம் எனப்படும் காட்டு வெங்காயம்; a small red variety of wild onion prohibited as food. 2. அனுவல்லிப் பூடு (கஞ்சா) ; tops of hemp chewed to produce inebriating effect (சா.அக.).

*[கரு → கரி → கரிஞ்சனம் + கிரிஞ்சனம்.]*

**கிரிடி** *kiriḍi,* பெ.(n.). 1. கோழி; fowl. 2. காட்டீச்சம் பழம்; the fruit of marshy date-tree (சா.அக.).

*[குரு ‹ சிவப்பு. குரு → கிரு + கிருடி → கிரிடி.]*

**கிரிமல்லி** *kirimalli,* பெ.(n.) கொடிப்பாசி என்னும் மூலிகை; creeper moss (சா.அக.).

*[குரு – கிரு + மல்லி –கிருமல்லி– கிரமல்லி.]*

**கிரிமல்லிகை** *kirimalligai,* பெ.(n.) 1. மலை மல்லிகை; tree jasmine. 2. வெட்பாலை; Conessi bark (சா.அக.).

*[குரு → கிரு → மல்லிகை.]*

**கிரிமல்லிப்பாலை** *kirimalli-p-pālai,* பெ.(n.) வெட்பாலை; Tellicherry bark (சா.அக.).

*[குரு → கிரு → கிரி + மல்லி + பாலை.]*

**கிரிமிக்கினி** *kirimi-k-kiṉi,* பெ.(n.) வாலுளுவை; spindle tree (சா.அக.).

*[கில் →கிலுமி→ கினுமிக்கி → கிரிமிக்கினி.]*

**கிரியரத்தை** *kiriyarattai,* பெ.(n.) மலையரத்தை; hill galangal (சா.அக.).

*[கிலி + அரத்தை – கிலியரத்தை → கிரியரத்தை.]*

**கிரியாம்பு** *kiriyāmbu,* பெ.(n.) அரிசிக் கழுநீர்க்காடி; Soulgruel made from the fermentation of rice water (சா.அக.).

*[கழி → கழியம் → கழியாம்பு → கலியாம்பு கிலியாம்பு → கிரியாம்பு.]*

**கிரிவாத்தியம்** *kirivāttiyam,* பெ.(n.) முடக் கறுத்தான்; palsy-curer (சா.அக.).

*[கீல் → கீலி → கிரி + வைத்தியம் → கிரிவாத்தியம் (கொ.வ.).]*

**கிரிவிளவல்லி** *kiriviḷavalli,* பெ.(n.) சிறுநன்னாரி; country sarsaparilla (சா.அக.).

*[கிலு → கிலி → கிரி → இள + வல்லி.]*

**கிரிவேம்பு** *kiri-vēmbu,* பெ.(n.) மலைவேம்பு; large hill neem (சா.அக.).

*[கரு → கரி → கிரி → வேம்பு.]*

**கிருசயம்** *kirušayam,* பெ.(n.) மலைப்பூவரசு; hill portia (சா.அக.).

*[கிலுச்சயம் → கிருசயம்.]*

**கிருசரம்** *kirusaram,* பெ.(n.) எள்; gingelly or sessamum seed (சா.அக.).

*[கரு + தாரம் → கருத்தாரம் → கிருசரம்.]*

**கிருது** *kirudu,* பெ.(n.) 1. செருக்கு; arrogance, haughtiness, self-conceit. அவனுடைய கிருதும் ஒயிலும் கட்டுக்கு அடங்கவில்லை (உ.வ.).

2. ஒய்யாரம்; affectation, foppery. வீண் செருக்கோ பெறுகிருதோ (தனிப்பா.II, 55:134).

*[குல் + கில் → கிலுது → கிருது.]*

**கிருதுக்காரன்** *kirudu-k-karan,* பெ.(n.) செருக்குடையவன்; arrogent, insolent person.

*[கிலுது → கிருது → காரன்.]*

**கிருதுநடை** *kirudu-nadai,* பெ.(n.) ஒய்யாரநடை (வின்.); proud strutting gait.

*[கிருது + நடை.]*

**கிருதுப்பேச்சு** *kirudu-p-pēccu,* பெ.(n.) செருக்கு மொழி; impertinent talk, insolent speech.

*[கிருது + பேச்சு.]*

**கில்[1]–தல்(கிற்றல்)** *kil-,*14 செ.கு.வி. (v.i.) ஆற்றல் கொள்ளுதல்; to be able. *"கிற்பன் கில்லேன்" (திவ். திருவாய். 3,2,6).*

*[குல்–பொருத்தல் கருத்துவேர். குல்→ கில்.]*

**கில்[2]** *kil,* இடை.(part.) ஆற்றலுணர்த்தும் இடை நிலை; verbal infix indicating ability. *"வெம்ப வருகிற்பதன்று கூற்ற நம்மேல்" (தேவா.1229,2).*

*[கில்[1] + கில்[2].]*

**கில்கில்லெனல்** *kil-kil-l-enal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom.expr.signifying clinking sound.

*['கில்கில்' – ஒலிக் குறிப்பு இடைச்சொல்.]*

**கில்லம்** *killam,* பெ.(n.) 1. கழுத்து (பிங்); neck. 2. தொண்டைக்குழி.(இ.வ.); the hollow just below Adam's apple.

*[கல் = பொருந்துதல். குல் → கில் → கில்லம். தோள், கழுத்து.]*

**கில்லா** *kilḷā,* பெ.எ.(adj.) இயலாதவை;not possible. *"கில்லா கேள்வி கேட்டன சிலசில" (பரி.12–39).*

*[கில்→கில்லா.]*

**கில்லாடி** *killadi,* பெ.(n.) 1. கயவன்; vagabond, scamp. 2. திறலோன்; a talented person. சொல்லாய்வில் இவரொரு கில்லாடி எனலாம் (உ.வ.).

மரா. கிலாடி : *khilādi.*

*[கிள்ளை + ஆடி → கிள்ளையாடி → கிள்ளாடி → கில்லாடி.]*

கிள்ளை = மரப்பாவை, தோற்பாவை. கிள்ளையாடி = காற்துறை கயிற்றால் மரப்பாவை அல்லது தோற்பாவைகளைப் பிணைத்து உயிருள்ளவை போல் இயக்கும் கலை நுட்பத்தில் தேர்ந்தவன். மிகுந்த திறமைசாலியும் ஏய்ப்பதில் வல்ல கயவனும் இச் சொல்லால் குறிக்கப்பட்டனர்.

**கில்லி** *killi,* பெ.(n.) ***கிட்டிப்புள்*** பார்க்க; see *kitti-p-puḷ.*

மறுவ. கில்லிதாண்டு

*[குள் → கில் → கில்ல.]*

**கில்லு–தல்** *killu-,* 5 செ.கு.வி.(v.i.) தோண்டுதல்; to dig up.

க. கில்; தெ.சீலு (C). கீன்ஞல்.

*[குல் → கில் → கில்லு.]*

**கிலாய்–த்தல்** *kilāy-,* 4 செ.கு.வி.(v.i.) 1. சினத்தல்; to be angry. பிரணயரோஷந் தலையெடுத்துக் கிலாய்ப்பதும் (ஈடு, 8.1:2). 2. துன்பம்கொள்ளுதல் (அங்கலாய்த்தல்); to be distressed afflicted, to grieve. *"தனிமையைப் பார்த்துக் கிலாய்க்கையும்" (திவ். திருநெடுந். 9, வியா).*

*[கலாய் → கிலாய்.]*

**கிலி** *kili,* பெ.(n.) 1. பயப்படுகிறபடி நடந்துவிடும் என்ற மன அச்சம்; fear, fright. 2.கவலை; worry. *"கிலி கொள் மகயுனுத்தியினால்" (இராமநா. உத். 57).*

ம. கில்லு; க.,தெ., பட.கிலி.

*[குல் → கல்→கலி → கிலி.]*

**கிலிபிடி–த்தல்** *kili-pidi*, 4 செ.கு.வி. (v.i.) மனத்திற் பேரச்சங் கொள்ளுதல்; to be frightened, alarmed. கிலிபிடித்தவன் போல் பேசுகின்றான் (உ.வ).

க., பட. திலிகிடி.

*[குல் → கல் →கலி → கிலி+பிடி .]*

**கிலிமண்டு–தல்** *kili-mandu-*, 5 செ.கு.வி.(v.i.) ***கிலிபிடி*** பார்க்க; see *kili-pidi.*

*[கிலி + மண்டு–,]*

**கிலுக்கம்** *kilukkam*, பெ.(n.) பறவை வகை; a kind of bird. *"கின்னரங் குரண்டங் கிலுக்கஞ் சிரல்"* *(கம்பரா. ஊர்தேடு.151).*

*[கிலுக்கு + கிலுக்கம்.]*

**கிலுக்கு[1]–தல்** *kilukku-*, 5 செ.குன்றாவி.(v.t.) ஒலிக்கச்செய்தல்; to ring, rattle, clink.

ம. கிலுக்குக; க. கிலுகு.

*[கிலுங்கு → கிலுக்கு.]*

**கிலுக்கு[2]** *kilukku*, பெ.(n.) 1. ஒலிக்கை (வின்.); rattling, tinkling, clinking. 2. பள்ளிசெல்லும் சிறார்கள் ஒன்பானிரவு காலத்தில் ஒலித்துக் காசு திரட்டும் கிலுகிலுப்பை; rattling stickēs of school boys, used especially in *nava-rāttiri* in soliciting presents for their teacher; children's rattle-box. என் பெயர்த்திக்கு ஒரு கிலுகிலுப்பு வாங்கிக் கொடுத்தேன்.

க.திலிகெ; தெ. கிலுக;பட.சிலிகெ.

*[கிலுங்கு + கிலுக்கு.]*

**கிலுக்குத்தடி** *kilukku-t-tadi*, பெ.(n.) அஞ்சலெடுத்துச் செல்வோர் கையிற் கொண்டு செல்லும் ஒலி செய்யும்தடி; staff with jingles at one end, used by post runners and mendicants.

ம.கிலுக்குவடி

*[கிலுக்கு + தடி.]*

**கிலுகிலி** *kilukili*, பெ.(n.) பிள்ளைகளாட்டுங் கிலுகிலுப்பை; children's rattle-box. *"கிளர்பூட் புதல்வரொடு கிலுகிலுயாடும்"* *(சிறுபாலி.61).*

*[கிலுகிலுப்பை – கிலுகிலி.]*

**கிலுகிலு–த்தல்** *kilu-kilu-*, 4 செ.கு.வி. (v.i) 1. கிலுகிலென்று ஒலித்தல்; to rattle; to make a tinkling, clinking sound. 2. ஆரவாரித்தல்; to resound with noise. *"நகர் கிலுகிலுத்தது"* *(சூளா. சுயம்.161).*

*[கிலுகில் → கிலுகிலு.]*

**கிலுகிலுப்பு** *kilu-kiluppu*, பெ.(n.) ***கிலுகிலுப்பை*** பார்க்க; see *kilu-kiluppai*

*[ கிலுகிலு → கிலுகிலுப்பு .]*

**கிலுகிலுப்பை[1]** *kilukiluppai*, பெ.(n.) 1. உருண்டையான பகுதிகளில் கற்களை போட்டு ஆட்டி ஒலியெய்யும் ஒருவகை விளையாட்டுக்கருவி; child's rattle.

மறுவ.கிலுகிலுப்பு, கிலுங்கி.

ம.கிலுகிலுப்ப; க.திலிகெ; பட. சிலிகெ.

*[ கிலுகிலு → கிலுகிலுப்பை .]*

**கிலுகிலுப்பை[2]** *kilu-kiluppai*, பெ.(n.) 1. செடிவகைகள் (குறிஞ்சிப். 88, உரை); species of rattlewort as having, when ripe, seeds that rattle in the pod. 2. கொடிவகை (K.R.); a copiously branching shrub with quadrangular stems.

க.திலிதிசிதி

*[ கிலுகிலு → கிலுகிலுப்பை - ஒலிசெய்யும் செடி, கொடிகள்.]*


கிலுகிலுப்பை செடி

**கிலுகிலுப்பைக்குட்டான்** *kilu-kiluppai-k-kuttan,* பெ.(n.) பிள்ளைகளின் விளையாட்டுக் கருவிவகை (யாழ்ப்.); children's basket-rattle.

*[கிலுகிலுப்பை + குட்டான்.]*

**கிலுகிலெனல்** *kilu-kilenal,* பெ.(n.) ஓர் ஒலிக் குறிப்பு; onom. expr., signifying rattling, tinkling, jingling sound.

*[கிலுகிலு + எனல்.]*

**கிலுங்கி** *kilunigi,* பெ.(n.) ***கிலுகிலுப்பை*** பார்க்க; see *kilu-kiluppai*

*[கிலு – ஒலி குறிப்பு. கிலு → கிலுங்கி.]*

**கிலுங்கு-தல்** *kilunigu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒலித்தல் (வின்.); to tinkle, ring, clink.

**ம.** கிலுங்குக; **க.** திலகு, திலுகு.

*[கில் →கிலு → கிருங்கி.]*

**கிலுத்தம்** *kiluttam,* பெ.(n.) 1. மணிக்கட்டு; wrist. *"கிலுத்தங் கூர்ப்பரங்க ளென்னு மிரண்டனுள்" (சீவக.1645).* 2. மக்கள் வடிவான பழமுள்ள மரவகை; a kind of tree whose fruit was said to assume human form. *"மானிடம் பழுத்தன கிலுத்தம்" (சீவக.1900).*

*[குல்- பொருத்துதல் – சேர்த்தல் வடிவுறல். குல் → குறு → கிலு →கிலுத்தம்.]*

**கிலுமொலெனல்** *kilumol-enal,* பெ.(n.) 1. வண்டு முதலியவற்றின் ஒலிக்குறிப்பு; omnom. expr. signifying buzzing, humming sound. 2. அடர்ச்சிக் குறிப்பு (வின்.); signifying crowding, swarming,as vermin, in the head, maggots in a carcass.

*[கிலு + மொது + எனல்.]*

**கிழக்கத்தி** *kilakkatti,* பெ.எ.(adj) கீழ்த்திசைக்குரிய; eastern, used in compounds as. கிழக்கத்திக் காற்று, கிழக்கத்தியான்.

*[கிழக்கு + அத்து + இ + அ. கிழக்த்திய – கிழக்கத்தி.]*

**கிழக்கத்திய** *kilakkattiya,* பெ.எ.(adj) கிழத்திசைக் குரிய; easterm

*[கிழகு + அத்து + இ + அ – கிழக்கத்திய. அத்–சாரியை. இ – எழுத்துப்பேறு. அ– பெயரச்சஈறு.]*

**கிழக்கதை** *kila-k-kadai,* பெ.(n.) பழங்கதை (வின்.); stale, old story, stories of old people.இன்றும் கிழக்கதைகளுக்குச் சிறப்புக் கிடைக்கிறது என்பதை மறுக்க முடியுமா? (உ.வ.).

*[கிழம் + கதை.]*

**கிழக்கன்** *kilakkan,* பெ.(n.) 1. ***கிழங்கான்*** பார்க்க; see *kilangan.* 2. புகையிலை வகை; a kind of tobacco.

*[கிழக்கு → கிழக்கன்.]*

**கிழக்கா** *kilakka,* பெ.(n.) ***கிழங்கான் (யாழ்ப்.)*** பார்க்க; see *kilangan.*

*[கிழங்கான் → கிழக்கா (கொ.வ.).]*

**கிழக்கிடுபொருள்** *kilakkidu-porul,* பெ.(n.) தாழ்பொருள்; lowners, plainness humbleness. கிழக்கிடு பொருளொடு ஐந்தும் ஆகும் (தொ. பொருள். 276 : 6).

*[கிழக்கு - பள்ளம், குழி. கிழக்கு + இடு + பொருள்.]*

**கிழக்கு** *kiḻakku,* பெ.(n.) 1. பள்ளமான கீழ்த்திசை (திவா.); east. 2. கீழிடம்; bottom, low place. *"கிளைஇய குரலே கிழக்கு வீழ்ந்தனவே" (குறுந். 337).* 3. இழிவு; lowness, plainness, humbleness. *"கிழக்கிடு பொருளோடு" (தொல். பொருள்.280).* 4. பள்ளம் (திவா.); depression, pit. 5. கீழ்; below. *"காணிற் கிழக்காந் தலை" (குறள், 488).* 6. கதிரவன் தோன்றும் திசை; east.

மறுவ. குணக்கு

ம. கிழக்கு

*[கீழ் → கீழக்கு → கிழக்கு.]*

'கிழக்கு' என்னும் சொல்லின் வேர்ப்பொருளே தமிழர்கள் வந்தேறிகள் அல்லர்; இந்நாட்டின் தொல்குடியினர் என்பதை நிறுவுகிறது என்பார். - சி.டி. மக்லீன்.

"Taking the Dravidians as a whole there is no evidence of a descent from the north.----The inhabitants of the extreme south of the peninsula and those shut in by the mountains of the western coast show characteristics which are probably older and more unique than those of any other nation in the world which pretends to civilisation.---- As far as present evidence goes however they are ind genous to India and perhaps specially indigenous to sothern India. The Dravidian terms indicating direction which must be very primitive are derived from the configuaration of the southern peninsula. The east is "*kiḻakku*" or "down" and the west is "*Mērku*" or "up" that is to say the country sloping to the coast and the country rising to the western ghats"— C.D.Maclean:- MANUAL OF THE ADMINISTRATION OF THE MADRAS PRESIDENCY Vol. 1;1885.

**கிழக்குக்கணவாய்** *kiḻakku-k-kaṇavāy,* பெ.(n.) 1. கிழக்குத் தொடர்ச்சிமலை (C.G.); the Eastern ghats. 2. கிழக்குத் தொடர்ச்சிமலையில் உள்ள நெருக்கமான வழி; mountain pass in eastern Ghats.

*[கிழக்கு + கணவாய்]*

**கிழக்கு வெளு-த்தல்** *kiḻakku-veḷu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கீழ்வானில் ஒளி தோன்றுதல், கீழ்த் திசையில் இருள் நீங்கத் தொடங்குதல்; to dawn, as to light the east. *"பகற்கண்டேன் என்கிற தோற்றரவுக்குக் கிழக்கு வெளுக்கிறபடி" (ஈடு 6,1,11).* கிழக்கு வெளுத்தது (உ.வ.).

*[கிழக்கு + வெளு.]*

**கிழக்கோட்டான்** *kiḻa-k-kōṭṭāṉ,* பெ.(n.) வீட்டில் நடக்கும் எல்லாச் செயல்களையும் கவனித்துக் கொண்டு இருக்கும் முதியவர்; old hag, old geezer. அந்தக் கிழகோட்டான் கண்ணில் படாமல் எடுத்துவா (உ.வ.).

*[கிழக்கு + வெளு.]*

**கிழங்கான்** *kiḻaṅgāṉ* பெ.(n.) வெண்மையும், ஒலிவப் பச்சை நிறமும் கொண்ட அடி நீளமுள்ள கடல் மீன்.(பதார்த்த. 941); whiting sea fish olive-green attaining one ft. in length.

மறுவ. கிழங்கா

*[கிழங்கு → கிழங்கான் → கிழங்கு போன்ற தோற்றம் தரும் மீன் வகை.]*



கிழங்கான்மீன்

**கிழங்கிரு-த்தல்** *kiḻaṅgiru-* 3 செ.கு.வி.(v.i) அடிமூலம் பெயர்க்கப்படாது தங்குதல்; to remain unimpaired in root. *"கீழுலகி லசுரர்களைக் கிழங்கிருந்து கிளராமே யாழிவிடுத்து" (திவ். பெரியாழ். 4.8:6).*

*[கிழங்கு + இரு.]*

**கிழங்கு** *kiḻaṅgu,* பெ.(n.) 1. செடிகொடி முதலியவற்றின் மூலம், நிலத்தின் கீழ்விளையும் திரட்சியன பகுதி; tuber, esculent or bulbous root,as potato, yam, turnip, parsnip, palmyra root. *"தீங்கனி கிழங்கு செழுங்காய் நல்லன"*

(மணிமே.17.58). 2. கரணியம்; cause. "நாபிக்கமல முதற்கிழங்கே" (திங்.திருவாய். 10.10:3).

ம. கிழங்நு; க. கிழங்கு, கெணசு; தெ. கெனச; து. கிரெங், கெரெங்க்; பட.காசு.

Chin. gen

[கீழ் → கிழக்கு → கிழங்கு.]

**கிழங்குசின்னி** *kiḻaṅgucinni,* பெ.(n.) ஒருவகைக் கிழங்குச் செடி; a medicinal root curing leucoderma and promoting apelicibe.

[கிழங்கு + சின்னி.]

**கிழங்குமஞ்சள்** *kiḻaṅgu-mañjaḻ,* பெ.(n.) மஞ்சள் வகை (வின்.);turmeric with round root.

[கிழங்கு + மஞ்சள்.]

**கிழங்கெடு-த்தல்** *kiḻaṅgeḍu-,* 4 செ.குன்றாவி. (v.t) 1.அடியோடு அழித்தல்; to destroy, root and branch. 'அநாசுரிதரைக் கிழங்கெடுத்துப் போகட்டானித்தனை' (ஈ.டு. 8.1:4). 2. கிழங்கு தோண்டியெடுத்தல்; to dig without root.

[கிழங்கு + எடு-.]

**கிழடன்** *kiḻaḍan* பெ.(n.) கிழவன்; oldman.

ம.கிழடன்

[கிழவன்→ கிழடன்.]

**கிழடு** *kiḻaḍu,* பெ.(n.) 1. முதுமை; old age, senility. "ஒரு கிழட்டந்தணன்" (உபசேதகா. சிவபுண்ணிய. 217). 2. முதியது; old thing, said of an animal, or a tree, and contemptuously, of a person. 3. முதிர்ந்தது; matured. 4. வயதான ஒருவர்; aged person.அந்தக்கிழடுக்குக் காதும் கேட்காது (உ.வ.).

ம.கிழடு

[கீழ் →கிழம் → கிழடு.]

**கிழடுகட்டை** *kiḻaḍu-kaṭṭai,* பெ.(n.). அகவை முதிர்ந்து எந்தவேலைக்கும் பயனற்றவர்களாகக் கருதப்படுவோர்; old useless persons, as a time-worn log of wood. கிழடு கட்டைகளைப் புறக் கணிப்பது நன்றன்று.

[கிழடு + கட்டை.]

**கிழடுதட்டு-தல்** *kiḻaḍu-taṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) வெளிப்படையாகத் தெரியும் வகையில் முதிர்ந்த தோற்றம் ஏற்படுதல்; age in a visible way. நண்பர் கிழடுதட்டி மிகவும் பரிதாபமாக இருந்தார் (உ.வ,).

[கிழடு+ தட்டு.]

**கிழண்டுபோ-தல்** *kiḻaṇḍu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) கிழத்தன்மையடைதல்; to grow old.

[கிழடு →கிழண்டு + போ.]

**கிழத்தனம்** *kiḻattaṉam,* பெ.(n.) முதுமை; old age, senility.

[கிழம் + தனம்.]

**கிழத்தி** *kiḻatti,* பெ.(n.) 1. உரியவள்; proprietress, she who has a right. "செம்புலக் கிழத்திக் காவி யன்னது" (பாரத. சிறப்பு.13). 2. தலைவி; mistress, lady-love. "தன்னுறு வேட்கை கிழவன் முற் கிளத்தில்... கிழத்திக்கில்லை" (தொல். பொருள்.118).

[கிழமை (உரிமை)→ கிழத்தி]

**கிழத்தியர்** *kiḻattiyar,* பெ.(n.) உரிமைமகளிர்; women having rights. "கண்ணிய காமக் கிழத்தியர் மேன" (தொல். பொருள் 149–14. 1097. நூற்பா.).

[கிழத்தி → கிழத்தியர்.]

**கிழப்பிணம்** *kiḻa-p-piṇam,* பெ.(n.) செயலற்ற முதியோர்; old person, as a living corpse. இந்தக் கிழப்பிணம் சும்மா இருக்கக் கூடாதா? (உ.வ.).

[கிழம் + பிணம்.]

**கிழம்** *kiḻam,* பெ.(n.) 1. முதுமை; old age, senility. *"கிழமுதிரிளநலம்" (கந்தபு.கடவுள்.17.).* 2. முதியோர்; aged person used as a term of contempt. குழந்தைகள் முதல் கிழங்கள் வரை விழாவுக்கு வந்தனர் (உ.வ.). 3. முதுமையடைந்தது; aged animal or thing, used as a term of contempt. இந்த மாடு கிழம், கிழமாடு.

*[கீழ் → கிழம்.]*

**கிழம்படு-தல்** *kiḻam-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) முதுமையடைதல்; to grow old, to become worn out or useless by age. *"மரங் கிழம்படுதலின்" (பிரமோத்.7:30).*

*[கிழம் + படு.]*

**கிழமழை** *kiḻa-maḻai,* பெ.(n.) பெய்து ஒயும் நிலையிலுள்ள மழை (இ. வ.); rain about to cease.

*[கிழம் + மழை.]*

**கிழமேல்** *kiḻa-mēl,* கு.பெ.எ.(adj.) கிழக்கிலிருந்து மேற்குவரை; from east to west.

ம.கிழமேல்

*[கிழக்கு + மேல் – கிழக்குமேல் = கிழமேல். கீழ்மேல் → கிழமேல்.]*

**கிழமேனி** *kiḻamēṉi,* பெ.(n.) திரைத்தமேனி இது வயது முதிர்ந்த காலத்தில் உண்டாகும்; shrunken, body with wrinkles or folds. This occurs when the muscle loses its elasticity (சா.அக.). உடம்பில் தசைநார்கள் நெகிழ்ச்சியை இழந்த காலத் துண்டாகும் உடல்தோற்றம்.

*[கிழம் + மேனி.]*

**கிழமேனிபடுகை** *kiḻa-mēṉ-ipaḍugai,* பெ.(n.) மூப்படைதற்கு முன்னமே கிழத்தன்மையடைதல்; becoming old before the natural course; becoming prematurely old (சா.அக.).

*[கிழம் + மேனி + படுகை.]*

**கிழமை**[1] *kiḻamai,* பெ.(n.) 1. உரிமை; claim, right, *"உணர்ச்சி தா னட்பாங் கிழமை தரும்" (குறள்,785.).* 2. உறவு; relation, connection. அவனுக்கும் இவனுக்கும் என்ன கிழமை? (இ.வ.). 3. நட்பு; friendship, alliance. *"எமர்நும ரெழுவர் காறு நின்றது கிழமை" (சீவக.544).* 4. ஒன்றற்கும் மற்றொன்றற்கு முள்ள தொடர்பைத் தெரிவிப்பதாகிய ஆறாம் வேற்றுமைப் பொருள் (நன்.300); relation of one thing to another as denoted by the possesive case, being of two kinds viz., தற்கிழமை, பிறிதின் கிழமை. 5. பண்பு; quality.

*[கீழ் = தொன்மை, பழமை. கீழ் → கிழமை = பழமையான உறவு, மாறாதபண்பு, உரிமை.]*

**கிழமை**[2] *kiḻamai,* பெ.(n.) 1. நாள்;day of the week. 2. ஞாயிறு, திங்கள், செவ்வாய், அறிவன், வியாழன், வெள்ளி, காரி ஆகிய ஏழுநாள்கள் கொண்டது; seven day's of the week.இன்று என்ன கிழமை ? (உ.வ.).

ம. கிழம

*[கீழ் → கிழமை (தொடர்ந்து வரும் நாட் சுழற்சி.]*

*kira-mei* (base *kira*), a week, literally property, possession, each portion of a week being astrologically regarded as the property or inheritance of some planet. Comp. Ossete *kuri, kore,* a week Georgian *kuire.* Possibly these words are derived from the Greek-*kuptakn (kuri-ake),* Sunday, the Lord's day; but whence is the Greek word derived? From *kupt-os (kuri-os),* a lord, a possessor, the bas of which may perhaps be allied to the Tamil *kira,* possession. The ultimate root of *kira* is doubtless *kir,* ordinarily lengthened to *kir,* beneath; hence *kira-mei* means that which is beneath one, under his power, in his possession (C.G.D.F.L. Pg.592).

**கிழமை**[3] *kiḻamai,* பெ.(n.) முதுமை (சூடா.); old age.

ம. கிழம

*[கீழ் → கிழம் → கிழமை.] (வ.மொ.வ.341).*

**கிழமைக்கழு-தல்** *kiḻamaikkaḻu-,* 1 செ.கு.வி. (v.i.) இறந்துபட்ட எட்டாம்நாள் துக்கங் கொண்டாடுதல்; to mourn for the dead especially on the eighth day after death.

**மறுவ.** *எட்டாந்துக்கம் (தெ.ஆ.)*

*[கிழமைக்கு² + அழு - கிழமைக் கழு.]*

இறந்தவர் நினைவாக அவர் விரும்பும், உணவு, உடை, பொருள்கள் ஆகியவற்றை வைத்து வழிபடும் நீத்தார் கடன்.

**கிழமைபிறந்த நாள்** *kiḻamai-pirandanāḷ,* பெ.(n.) இன்ன விண்மீன் இன்ன நாளில் பிறந்தது என்னும் குறிப்பு; the asterism of each of the seven days of the week. தாழியில் ஞாயிறும், நெய்ம்மீனில் திங்களும், கடைக்குளத்தில் செவ்வாயும், பறவையில் அறிவனும், துளங்கொளி தழலில் வியாழனும், முற்குளத்தில் வெள்ளியும், தொழுபஃறியில் சனியும் பிறந்தனவாகும் (கணியம்); the day of the week appropriate to the star.

*[கிழமை + பிறந்த + நாள்.]*

**கிழமையான்** *kiḻamaiyāṉ,* பெ.(n.) உரிமை யுடையவன்; owner; one who is entitled to. *"கொண் டேற்று கிழமையான் கோவலன்" (சிலப். 1:39).*

*[கிழமை + ஆன்.]*

**கிழமையோன்** *kiḻamaiyōṉ,* பெ.(n.) 1. உரிமை யுடையோன்;owner. 2.. தமையன்; elder brother. *"ஓடாப்பூட்கை நின் கிழமையோற் கண்டே" (புறநா. 165-15).*

*[கிழமை + ஆன் (ஒன்).]*

**கிழமைவட்டம்** *kiḻamai-vaṭṭam,* பெ.(n.) சுழற்சியில் வரும் நாள்கள் (மண்டலித்துவரும் வாரம்); week, as the cycle of seven *kiḻamai*

*[கிழமை + வட்டம்.]*

**கிழலை** *kiḻalai,* பெ.(n.) 1. திசை; quarter, part, region. இந்தக் கிழலையில் அவனைக் காண வில்லை. 2. மரக்கலத்தின் சாய்வுப் பக்கம்; the lower side of a vessel, the side on which the sail is hoisted.

*[கிழக்கு → கிழலை. கிழக்கு திசை.]*

**கிழவது** *kiḻavadu,* பெ.(n.) உரியது; that which pertains to. *"குழவி மருங்கினும் கிழவதாகும்" (சொல்.பொருள்.84).*

*[கிழமை → கிழவது (கிழமை - உரிமை).]*

**கிழவரி** *kiḻavari,* பெ.(n.) தண்ணீர் விட்டான் கிழங்கு; water root (சா.அக.).

*[கீழ் →கிழ + வரி.]*

**கிழவன்¹** *kiḻavaṉ,* பெ.(n.) 1. உரியவன்; owner, *"செல்லான் கிழவ னிருப்பின்" (குறள்.1039).* 2. தலைவன், கணவன்; lord, master, husband. *"கிழவனுங் கிழத்தியுஞ் சிறந்தது பயிற்றல்" (சொல். பொருள்.192.).* 3. மருதநிலத் தலைவன் (திவா.); chief of an agricultural tract.கிழவன் சேதுபதி (உ.வ.).

**ம.** கிழவன்

*[குழு → கெழு → கெழுமை → கிழமை → கிழவன்.] (வ.மொ.வ.341.)*

**கிழவன்²** *kiḻavaṉ,* பெ.(n.) அகவைமுதிர்ந்தவன்; aged man, *"மூத்துடன டுங்கி நிற்குமிக் கிழவனை" (தேவா.648:4.).*

**ம.** கிழவன்; **க.** கிழவ, களவ, கெழவ;; **பட.** கெளவ.

*[கிழம் → கிழவு→கிழவன்.]*

**கிழவன்³** *kiḻavaṉ,* பெ.(n.) எண்ணெய்க் கசடு; black sediment in oil.

*[கீழ் → கிழி → கிழவன் (கீழ்நோக்கித் தங்குவது).]*

**கிழவன்**[4] *kiḻavaṉ*, பெ.(n.) இரண்டாவது நாண் மீனாகிய தாழி(பரணி); the second naksatra.

*[கீழ் → கிழக்கு →கிழவன்.]*

**கிழவன்குடி** *kiḻavaṉkuḍi*, பெ.(n.) பற்பாடகம், மிகுதியான விதைகளோடும் பச்சைப் பூண்டாக வுள்ளதுமான ஒரு கடைச்சரக்கு; fever plant.

*[கிழவன் + குடி.]*

**கிழவன்தாடி** *kiḻavaṉtāḍi* பெ.(n.) 1. காட்டு மருக்கொழுந்து; a plant, southern wood. 2. ஒருவகை மாம்பழம், a kind of mango (சா.அக.).

**மறுவ.** பனிதாங்கி

*[கிழவன் + தாடி.]*

**கிழவி**[1] *kiḻavi*, பெ.(n.) மனைவி, தலைவி; wife, mistress,lady love. *"கிழவிநிலையே வினையிடத் துரையார்" (தொல். பொருள்.186).*

*[கிழம் → கிழவு → கிழவி.]*

**கிழவி**[2] *kiḻavi*, பெ.(n.) முதியவள்; old woman. *"கிழவி கருந்துணி மேலிடு வெண்பிட்டு (குமர.பிர. மதுரைக்.11).*

**ம.** கிழவி; **க.** கிழவி, கெழவி; **பட.** கௌவி.

**Aust.** kombona.

*[கிழம் → கிழவு → கிழவி.]*

**கிழவி**[3] *kiḻavi*, பெ.(n.) முருங்கை (மலை); horse-radish tree.

*[கிழ → கிழவி.]*

**கிழவிக்கிழங்கு** *kiḻavi-k-kiḻaṅgu*, பெ.(n.) 1. நாட்பட்ட கிழங்கு, an old root. 2. முந்தைய ஆண்டின் கிழங்கு; root of the previous year (சா.அக.).

*[கிழவி + கிழங்கு.]*

**கிழவிகாத்தட்டை** *kiḻavika-t-taṭṭai*, பெ.(n.) நாணல்தட்டை; reed (சா.அக.).

*[கிழவி + காத்தட்டை.]*

**கிழவிதானிகம்** *kiḻavitāṉigam*, பெ.(n.) முருங்கை; horse-radish tree (சா.அக.).

*[கிழவி + தானிகம்.]*

**கிழவிமஞ்சள்** *kiḻavi-mañjaḷ*, பெ.(n.) முந்திய ஆண்டின் மஞ்சள்; turmeric of the previous year (சா. அக.).

*[கிழவி + மஞ்சள்.]*

**கிழவு-தல்** *kiḻavu-*, 5 செ.கு.வி(v.i.) உரிமையுடையதாகுதல்; that which pertains to that which belongs to. *"குழவிமருங்கினும் கிழவதாகும்"*

*[கிழ → கிழவு.]*

**கிழவு** *kiḻavu*, பெ.(n.) கிழத்தன்மை; old age. *"பின்னாக் கிழவுதான் விளைக்கும்"(சீவக.379).*

**ம.** கிழவு

*[கிழம் → கிழவு.]*

**கிழவோன்**[1] *kiḻavōṉ*, பெ.(n.) 1. உரியவன்; proprietor, owner, *"பழமுதிர் சோலை மலைகிழ வோனே" (திருமுருகு.317).* 2. தலைவன்; lord, master, husband (தொல்.பொருள்.234).

*[கிழமை → கிழவோன்.]*

**கிழவோன்**[2] *kiḻavōṉ*, பெ.(n.) 1. முதியவன்; old man *"கிழவோன்றன் செயலினை" (கந்தபு. தவங்கள்.5.).* 2. தலைவன்; lover, head of the family.

*[கிழவு → கிழவோன்.]*

**கிழா அன்**[1] *kiḻāṉ*, பெ.(n.) 1. தயிர் (பிங்.); curd. 2.தயிர்த்தாழி;curd pot. *"வெண்டயிருந் தண்ட யிரும் விராய்க் கிடந்த கிழாஅன் போல" (கலிங். 506, புதுப்.).* 3. நீரிறைக்கும் சால்; water lift.

*[குள் → கில் (திரட்சி) உருண்டை → கில் →கிழ →கிழா அன்.]*

**கிழா அன்**[2] *kilaan,* பெ.(n.) கதிரவன்; sun (சா. அக.).

*[கிழன் = கிழ்த்திசையில் உதிக்கும் கதிரவன் கிழன் → கிழா அன்.]*

**கிழாத்தி** *kilātti,* பெ.(n.) 1. கடல் மீன்வகை கிணற்று அல்லது ஆற்றுக் கிழாத்திமீன்; a fresh water shark of cat-fish family. 2. நன்னீர்வாழ் பெருங்குறவை மீன்; a dark coloured fish. 3. ஒருவகைக் கடல் சுறா மீன்; a silvery sea shark. 4.ஒரு பறவை; a kind of bird (சா.அக.).

*[கிழ்→கிழான் = கிழாத்தி (திரண்ட தோற்றமுடைய மீன்.]*



கிழாத்திமீன்

**கிழார்**[1] *kilār,* பெ.(n.) வேளாளர் பட்டப் பெயர்; ancient velala title. எத்தனை யேனுங் கிழார் கிழார்க்கும் (ஈடு. 6:3.7) (தொல். பொருள். 629, உரை).

ம.கிழார்

*[குல் → கில் (திரட்சி, உருண்டை) → கில் →கிழ →கிழான்→ கிழார் (நீரிறைக்கும் சால், நன்செய் வேளாண்மை செய்யும் உழவர்).]*

**கிழார்**[2] *kilār,* பெ.(n.) 1. மாடுகளைக்கொண்டு பாசனத்திற்கு நீரை இறைக்கப் பயன்படும் பூட்டைப் பொறி; water-lift for irrigation drawn by bullocks. *"ஆம்பியுங் கிழாரும் வீங்கிசை யேற்றமும்" (சிலப். 10:110).* 2. தோட்டம்; garden. வேணாட்டார் தோட்டத்தைக் கிழாரென்றும் (நன். 272, மயிலை).

ம.கிழார்

*[குல் → கில் (திரட்சி, உருண்டை) → கில் →கிழ →கிழான் கிழார்.]*

நீரிறைக்கும் கருவி. நீர்பாயும் வயலுக்கும் நன்செய், வேளாண்மைக்கும், வேளாளர்க்கும். பன்மடி ஆகுபெயராயிற்று. *"வயல் நீறைக்கும் மென்தொடை வன்கிழார் (மது.98)* எனக் கிழாரின் தன்மை கூறப்படுகிறது.

**கிழாலை** *kilalai,* பெ.(n.) களர்நிலம் (யாழ்ப்.); hard kind of earth.

*[கிழ் →கிழல் → கிழால் →கிழாலை.]*

**கிழாள்** *kilal,* பெ.(n.) உரியவள்; proprietress, feminine of kilāṉ.

*[கிழமை → கிழாள்.]*

**கிழான்**[1] *kilāṉ,* பெ.(n.) உரியவன்: owner, proprietor. *"மங்கலக் கிழானென" (திருவிளை. வலைவீசி. 42).*

ம.கிழான்

*[கிாவன் → கிழான்.]*

**கிழான்**[2] *kilāṉ,* பெ.(n.) 1. நீரிறைக்குஞ்சாலி; water lift.2. நன்செய் நிலத்து உழவன்; a farmer of wet land.

H. kisān

*[கிழான் (நீரிறைக்குஞ்சால்) → கிழான் (உழவன்).]*

**கிழான் பச்சை** *kilāṉ-paccai,* பெ.(n.) சந்தன வகை (சிலப். 14: 108); a kind of sandal.

*[கிழான் + பச்சை.]*

**கிழி—தல்** *kili-,* 4 செ.கு.வி. (v.i.) 1.பீறுண்டு போதல்: to be torn, rent in shreds; to be scratched. 2.பிளந்து போதல்; to give way, burst out, split. 3.பேர்தல்; to be broken. *"முழந்தாள் கிழிந்தானை"*

(பழமொ.19). 4.தோல்வியுறுதல் ; to be defeated, to meet with repulse. "வானவர் போர் கிழிந்து புறந்தர" (கம்பரா. முதற்போ.65). 5. அழிதல்; to perish. "என்றுங் கிழியாதென் பாட்டு" (தமிழ்நா.53).

ம. கிளி

[கிழ்→கிழி.]

**கிழி–த்தல்** *kili-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1.பீறச் செய்தல்; to tear, rend, split, cut, pull to pieces, rip up, lacerate. "தரியி னங்கடம் மெயிற்றினாற் சிதையக் கிழிந்த பேரிறால்" (கந்தபு. ஆற்று.23). 2. பேர்த்தல்; to split, break, cleave, uproot. "நெடுங்கிரி கிழிந்து" (கம்பரா. நிகும். 88). 3.கீறுதல்; to scratch, as with claws or thorns. காலை முள் கிழித்தது. 4. கோடுவரைதல்; to mark, to line, to indent, to paint, to draw, as a line. நான் கிழித்த கோடு. 5.முடித்தல், நிலை நிறுத்தல்; to accomplish (used in contempt). செய்து கிழித்து விட்டாயோ(உ.வ.). 6. சொல்லாற் கண்டித்தல்; to rebuke. சில வசனங்கள் சொல்லிக் கிழிப்பதும் (கவிகுஞ்.2.). 7.அங்காத்தல்; to open the mouth wide. "வாயுழுவை கிழித்தது" (திருக்கோ. 72). 8. தின்னுதல்; to eat, consume. "குறுமுயற் கொழுஞ்சூடு கிழித்த வொக்கலொடு" (புறநா. 34.11).

*kir-i*, to tear. **Comp.** *khur*, Sans. to cut, to scratch.

[கிழ்→கிழி.]

**கிழி**[3] *kili*, பெ.(n.) 1. கீறு (சூடா.) piece. 2. கிழிபட்ட துகில் (திவா.);piece of cloth torn off. 3. சீலையில் எழுதிய சித்திரப்படம்; figure painted on cloth. "கிழிபிடித்து" (திருக்கோ.74). 4. வெற்றி பெறுவோர்க்குப் பரிசாகச் சீலையில் முடித்தகாதப் பொதி(திவா.); gold or other valuables tied up in a piece of cloth and exhibited as a prize inviting competition in any work of skill. 5. கதிர்க்கிழி (வின்.); first fruits of grain tied in a bunch and suspended in a temple or dwelling. 6.கீளுடை (வின்); strip of cloth tied round the waist of a mendicant, mendicant's loin cloth.

[கிழ்→கிழி.கிழ்தள் = பிளத்தல், கிழித்தல்.]

**கிழிக்கட்டு**[1] *kili-k-kattu*, பெ.(n.) துணியிற் கட்டிய பொருள், நிதி முதலியன(வின்.); prize, treasure, sacred, ashes, as tied in a strip of cloth.

[கிழி + கட்டு.]

**கிழிக்கட்டு**[2]**–தல்** *kilikkattal*, 5 செ.கு.வி.(v.i.) 1. மருந்துகளின் ஆற்றல் இறங்கும்படி எரிப்பதற் காகவோ, கரையும்படி செய்யவோ அல்லது வேறுமுறையாக செய்யவோ துண்டுத் துணியில் தளர்ச்சியாக முடிதல்; extraction of the soluable part of a drug (tied up in a piece of cloth ) by causing a liquid solvent to flow slowly through it. 2. மருந்தைத் துணியில் பொட்டலமாகக் கட்டுதல்; tying up of a medicine in a piece cloth and suspending it in a solution before heating or preparing it otherwise. 3 கரைந்து சாரம் இறங்கும்படி மருந்தைப் பொட்டலஞ் செய்து நீரில் தொங்கவிடல், hanging a medicinal bundle in a solution for extracting the essence (சா.அக.).

[கிழி + கட்டு.]

**கிழிகட்டு**[3]**–தல்** *kili-kattu-*, 5 செ.கு.வி.(v.i.) கிழியில் முடித்த பந்தயப் பொருளைப் பலருங் காணும்படி தூக்கிக் கட்டுதல்; to hang up a prize tied in piece of cloth inviting competitors.

[கிழி+கட்டு.]

**கிழிச்சல்** *kiliccal*, 5 பெ.(n.) கிழிந்த துணி; torn cloth.

[கிழித்தல்→ கிழிச்சல்]

**கிழிச்சீரை** *kili-c-cirai*, பெ.(n.) பணம் பொதிந்த சீலை, pouch containing money, purse. 'கிழிச்சீரையிலே பணங்கிடக்க' (ஈடு, 4.7:6). 2. கிழிந்தது;that which is torn, tattered garment.

ம. கிழிச் சீல.

*[கிழி +சீரை. சீலை → சீரை.]*

**கிழித்திடல்** *kili-ttidal,* தொ.பெ.(vbl.n.) அறுவை செய்தல், applying knife in the human system, i.e. operating in surgery (சா.அக.).

*[கிழி +கிழித்து + இடல்.]*

**கிழிதம்** *kilidam,* பெ.(n.) பொற்கிழி (திருக்கோ. 183, உரை); Gold or other valuables tied up in a piece of cloth.

*[கிழி → கிழிதம்.]*

**கிழிதீட்டுதல்** *kili-tittu-,* 5 செ.குன்றாவி. (v.t.) படம் வரைதல் (வின்.) to draw or paint a picture.

*[கிழி + தீட்டு-.]*

**கிழிப்பு** *kilippu,* பெ.(n.) 1. கிழிக்கை; rending, tearing, ripping. 2. பிளப்பு; cleft, as in a mountain. 3. குகை; cavern, cave. *"வரைக்கிழிப் பன்ன" (நற். 154).*

ம. கிழித்த (ஒட்டை, துளை)

*[கிழி → கிழிப்பு.]*

**கிழிப்புக்காயம்** *kilippu-k-kāyam,* பெ.(n.) கீறுண்ட புண்: lacerated wound.

*[கிழிப்பு + காயம்.]*

**கிழிமருந்து** *kilimanumtu,* பெ.(n.) சாரம் வாங்கும் பொருட்டு, கிழிக்கட்டிய மருந்து; in alchemy a medicine tied up in a piece of cloth and suspended in a solution for extracting the essence (சா. அக).

*[கிழி + மருந்து.]*

**கிழிமுறி** *kili-muri,* பெ.(n.) 1. கிழிக்கப்பட்ட ஆவணம்; mutilated or cancelled bond or indenture. 2. கிழித்த துண்டுச்சீலை; piece of torn cloth.

*[கிழி + முறி.]*

**கிழியல்** *kiliyal,* பெ.(n.) 1.கிழிவு; tear, rentin cloth. 2. கிழிந்தது; that which is torn, tattered garment. 3. பயனற்றவன் (வின்.); good - for - nothing fellow, useless sluggard.

*[கிழி → கிழியல்.]*

**கிழியற்சதை** *kiliyarcatai,* பெ.(n.) கிழிந்த தசைப்பாகம், the portion of flesh torn (சா.அக).

*[கிழியல் + சதை. தசை → சதை (இலக்கணப் போலி).]*

**கிழியறு-த்தல்** *kili-y-aru-,* 4 செ.கு.வி. (v.i.) போட்டியில் வென்று பொற்கிழி பெறுதல்; to win a contest and secure the prize, as cutting the cord with which it is suspended. *"வேதங்க ளோதி விரைந்து கிழியறுத்தான்" (திவ். திருப்பல். தனியன்).*

*[கிழி + அறு.]*

**கிழியீடு** *kili-y-idu,* பெ.(n.) பொன்முடிப்பு; valuables tied up in a piece of cloth. *"கீழ்ச்செய்தவத்தாற் கிழியீடு நேர்பட்டு" (திருவாச. 40,9).*

*[கிழி + ஈடு.]*

**கிழிவு** *kilivu,* பெ.(n.) 1. கிழிகை; rent, tear. 2. வாய்க்காமை(வின்.); failure, ill - success. 3. கீற்று; a piece (த.சொ. அக.).

*[கிழி கிழிவு.]*

**கிள்ளங்கி** *killangi,* பெ.(n.) ஒரு செடி வகை; a plant.

க. கிள்ளங்கி

*[கிள் → கிள்ளங்கி.]*

**கிள்ளட்டிகை** *killattigai,* பெ.(n.) நகக்கிள்ளு வடிவான பொன்னுருக்களமைந்த கழுத்தணி வகை; ornament for the neck made of thin gold pieces strung together.

*[கிள்ளு + அட்டிகை.]*

**கிள்ளல்** *killal,* தொ.பெ.(vbl.n.) 1. பசியெடுத்தல்; feeling hungry. பசி வயித்த கிள்ளுது(உ.வ.). 2. சிரங்கு கிள்ளல்; கொப்புளம் மறு இவற்றின் நுனியை கிள்ளி விடுதல்; nipping or pinching of the end of a pimple, pustule boil, etc..

*[கிள்ளு → கிள்ளல்.]*

**கிள்ளாக்கு[1]** *kiḷḷākku,* பெ.(n.) 1. நறுக்கிய பனையோலை; nipped piece of palam leaf used for writing. 2.கடவுச்சீட்டு முதலிய, அதிகார ஓலை, piece of palm, leaf given by a person in authority, as a passport, a warrant, a token of authority.*"கெடிகொண்டதலமாறும் மும் மண்டலத் தினுங்கிள்ளாக்குச் செல்ல" (தாயு. சித்தர்.6).*

**மறுவ.** கிள்ளாக்கை

**தெ.** கில்லாகு

*[கிள்ளு → கிள்ளாக்கு (நறுக்கிய பனை ஓலை).]*

**கிள்ளாக்கு[2]** *kiḷḷākku,* பெ.(n.)பேசிக் கொண்டே ஆடும் ஆட்டம். who continue to say something while playing

*[கிள = பேசு. கிள → கிள்ளாக்கு.]*

**கிள்ளாக்குட்டி[2]** *kiḷḷākkuṭṭi,* பெ.(n.)சிறுவரின் விளையட்டுத் தோழன்; playmate.

**ம.** கிள்ளாக்குட்டி

*[கிள்ளாக்கு + குட்டி.]*

**கிள்ளாடி** *kiḷḷāḍi,* பெ.(n.) 1. மரப்பாவை அல்லது தோற்பாவைகளை இயக்கும் பாவைக் கூத்தன்; a talented person skilled in performing puppet show. 2. ஏய்ப்பவன்; a cheat.

**மறுவ.** கில்லாடி, கிலாடி.

*[கிள்ளை • மரப்பாவை. கிள்ளை + ஆடி – கிள்ளையாடி → கிள்ளாடி.]*

**கிள்ளாப்பிறாண்டு[1]** *kiḷḷā-p-piṟāṇḍu,* பெ.(n.) ஆர்வக் குறைவோடு அளவுக்குக் குறைவாக விருந்திடுதல் (யாழ்ப்.); want of proper attention to guests at a feast, meagre distribution of food.

*[கிள்ளு(பேசு) + ஆ + பிறாண்டு (உறவு கொண்டாடல்) முகம் கொடுத்துப் பேசாமல் உறவு காட்டும் காட்சி).]*

**கிள்ளாப் பிறாண்டு[2]பண்ணு–தல்** *kiḷḷā-p-piṟāṇḍu-paṇṇu-,* செ.கு.வி.(v.i.) 1. அளவுக்குறை வாக விருந்திடுதல்; to supply too sparingly, as giving only a pinch. 2. விருந்திற் சிறுக உண்ணுதல்;to eat sparingly at a feast from modesty, delicacy. 3. சிறிதளவு அறஞ்செய்தல்; to stint in charity.

*[கிள்ளாப்பிறாண்டு + பண்ணு.]*

**கிள்ளாயம்** *kiḷḷāyam,* பெ.(n.) கப்பலின் உட்கூடு; traine of the ship.

**து.** கிளாய

*[கிள்= செறிவு. இறுக்கம். கிள் → கிள்ளாயம்.]*

**கிள்ளாரம்** *kiḷḷāram,* பெ.(n.) வயிறு; stomach.

**து.** கில்லார

*[கிள் → கிள்ளாயம். ஒட்டிய வயிறு.]*

**கிள்ளி[1]** *kiḷḷi,* பெ.(n.) சோழர்க்கு வழங்கிய சிறப்புப் பெயர்; title of some Cōlakings. *"கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி" (புறநா. 167).*

**ம.** கிள்ளி

*[கிள் → நெருங்குதல், செறிதல். கிள்ளி = வன்மை செறிந்தவன்.]*

**கிள்ளி[2]** *kiḷḷi,* பெ.(n.) 1. சிறியது; little object. 2.அரிவாள்; sickle.

**ம.** கிள்ளி

**Aust.** kiley (Boomerang).

*[கிள் → கிள்ளி.]*

**கிள்ளி[3]** *kiḷḷi,* பெ.(n.) பாக்கு மரப்பாளை மட்டையின் இருமுனைகளை மடித்துக்கட்டி குழிந்த ஏனம் போல் செய்த அமைப்பு; a container - a basin like structure made by folding and stitching the two ends of a stitching the two ends of a areca spathe.

**து.** கிள்ளி

*[கிள் (குழித்தல்)→கிள்ளி.]*

**கிள்ளிக்கட்டு-தல்** *kiḷḷi-k-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ஆலையில் இழை ஒரே சீராக வருவதற்கு அறுந்துபோன இழைகளைக் கிள்ளிக் கட்டுதல்; to join broken threads by pinching them together.

*[கிள்ளி + கட்டு.]*

**கிள்ளிக்காட்டு-தல்** *kiḷḷi-k-kāṭṭu,* 5 செ.கு.வி. (v.i) 1. குறிப்புக் காட்டுதல்; to give a hint, signal, as by pinching. 2. சிறிதளவு கொடுத்தல்; to be niggardly in giving food. அவன் திருமணப்பந்தியில் கிள்ளிக் காட்டிப் பரிமாறினான் (உ.வ.).

*[கிள்ளு → கிள்ளி + காட்டு.]*

**கிள்ளிக்காய்** *kiḷḷi-k-kāy,* பெ.(n.) நத்தை வகை (G.tn.D.22); wing shell, a mollusc .

*[கிள்ளி + காய்.]*

**கிள்ளிக் குறிச்சி** *kiḷḷi-k-kuṟicci,* பெ.(n.) ஒரு ஊரின் பெயர்; a place name.

*[கிள்ளி + குறிச்சி.]*

**கிள்ளிக்கொடு-த்தல்** *kiḷḷi-k-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) சிறுகக் கொடுத்தல்: to give a little from a great quantity, as a pinch. அள்ளிக்கொடுக்கச் சொன்னால் கிள்ளிக் கொடுக்கிறாயா? (உ.வ.).

*[கிள்ளு → கிள்ளி + கொடு.]*

**கிள்ளிக்கொடு[1]-த்தல்** *kiḷḷi-k-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) தூண்டிவிடுதல்: to stir up, instigate incite. நீ அவனைக் கிள்ளிக் கொடுக்காதே (உ.வ.).

*[கிள்ளு → கிள்ளி + கொடு.]*

**கிள்ளித்தெளி-த்தல்** *kiḷḷi-t-teḷi-,* 4.செ.கு.வி. (v.i.) சிறிது கொடுத்தல்; to give a small quantity, as a pinch. அவள் கிள்ளித் தெளிக்க மாட்டாள்.

*[கிள்ளு → கிள்ளு + தெளி.]*

**கிள்ளிநடுதல்** *kiḷḷi-naḍu-,* பெ.(n.) நடவு முறைகளில் ஒன்று; one made of transplanting crop.

*[கிள்ளி + நடு.]*

**கிள்ளிப்போடு** *kiḷḷi-p-pōḍu-,* 4 செ.கு.வி.(v.i.) நோய் தோன்றும் போதே குணப்படுத்துதல்; curing a disease in its infant stage; a nipping off in the bud as it were. முளையிலேயே கிள்ளியெறி.

*[கிள்ளி + போடு.]*

**கிள்ளியான்** *kiḷḷiyāṉ,* பெ.(n.) வலிய மருந்து; a big bird of preyfalion. பிள்ளையையுங் கிள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டுகிறாள் (உ.வ.).

ம. கிள்ளியான

*[கிள்ளி + ஆன்.]*

**கிள்ளிவிடு-தல்** *kiḷḷi-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) தூண்டிவிடுதல்; to stir up, incite, instigate. பிள்ளையையுங் கிள்ளிவிட்டுத் தொட்டிலையும் ஆட்டுகிறாள் (உ.வ.).

*[கிள்ளு → கிள்ளி + விடு.]*

**கிள்ளு[1]-தல்** *kiḷḷu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. நகத்தா லெடுத்தல்; to pinch with the finger and thumb with the nails, to pluck, nip, piece off, as a leaf. *"கற்கிள்ளிக் கையிழந் தற்று" (நாலடி. 336).* 2. தோண்டுதல்; to dig out, scoop. *"கிள்ள வெழு கின்ற புனல்" (கம்பரா.வரைக்.23).* 3. அழித்தல்; to destroy, as by nipping off the head. *"பொல்லா வரக்கனைக் கிள்ளிக் களைந்தானை" (திவ். திருப்பா.13).* 4. சிறிதளவு எடுத்தல் (வின்.); to hold, carry, as with the beak, with the fingers and thumb, to take up a little, a pinch.

ம. கிள்ளு.தெ. கில்லு;க. கில்லு; பட. சிள்ளு

*[கிள் → கிள்ளு.]*

**கிள்ளு[2]** *kiḷḷu,* பெ.(n.) 1. கிள்ளுகை; pinching, nipping. *"கீள்கொடு நகங்கொடுகிள்ளுமொன்ற"*

*(கந்தபு. சூரணமைச். 42).* 2. கிள்ளப்பட்டது; that which is nipped off, as a little piece of betel leaf or tobacco. புகையிலையில் ஒரு கிள்ளுக் கொடு (உ.வ.). 3. கண்பீளை, அழுக்கு; dirt of the eye.

**ம.** கிள்ளு

*[கிள் → கிள்ளு.]*

**கிள்ளு[3]–தல்** *killu-,* 1 செ.கு.வி.(v.i.) துணித்தல்; to cut. *“பங்கயாசனனொருதலை கிள்ளியே” (கந்தபு. கடவுள்.9)* (த.மொ.அக.).

*[குல் → கில் → கிள் → கிள்ளு.]*

**கிள்ளுக்கீரை** *killu-k-kirai,* பெ.(n.) 1. கிள்ளி யெடுக்கப்படும் கீரைவகை; feeble - rooted greens, as easily plucked. 2. எளிமையானவள்–வன்–து; anything easily handled, often used in reference to a weak man. அவன் உனக்கு கிள்ளுக் கீரையோ?.

*[கிள்ளு + கீரை.]*

**கிள்ளுக்கீரைபண்ணு–தல்** *killu-k-kirai-pannu-,* 5 செ.குன்றாவி.(v.t.) தாழ்மைப்படுத்துதல், இழிவு செய்தல்; to be little, treat insultingly.

*[கிள்ளு + கீரை + பண்ணு.]*

**கிள்ளுங்கிழியுமாய்** *killuṅ-kiliyumāy,* கு.வி.எ. (adv.) பயனற்றதாய் (வின்.); utterly useless, as shreds of anything. இந்த வேலை கிள்ளுங் கிழியுமாய்ப் போகக்கடவது.

*[கிள்ளு + கிழியுமாய்.]*

**கிள்ளுவடை** *killu-vadai,* பெ.(n.) ***காக்காய் வடை*** பார்க்க; see *kākkāy-vadai*

*[கிள்ளு + வடை.]*

**கிள்ளை[1]** *killai,* பெ.(n.) 1. கிளி; parrot. *“கிள்ளை வளைவா யுகின்” (சீவக.2439).* 2. கருங்கிளி (திவா.); a dark species of parrot.

*[கிள் → கிள்ளை (பேசும் திறம் கொண்ட பறவை, கிளி).]*

**கிள்ளை[2]** *killai,* பெ.(n.) குதிரை (திவா.); horse.

*[கிள் = கிளர்ச்சி, எழுச்சி, விரைவு. கிள் → கிள்ளை.]*

**கிள்ளை[3]** *killai,* பெ.(n.) சாதிபத்திரி என்னும் மூலிகை (மலைய.); mace.

*[கிள் → கிள்ளை.]*

**கிள்ளைச்சாதம்** *killai-c-cādam,* பெ.(n.) கிளிக்குஞ்சு; young parrot. *“செஞ்சொற் றேனினைத் தஞ்செவிப் படுத்திய கிள்ளைச் சாதமே” (இரகு.குறை.31).*

*[கிள்ளை + சாதம்.]*

**கிள்ளைமொழி** *killai-moli,* பெ.(n.) கிளிப்பேச்சு; the word uttered by a parrot. 2. இனிமையான குரல் வளம் கொண்ட பெண்; a woman having sweet words, a beautiful woman.

**ம.** கிளிமொழி

*[கிள்ளை + மொழி]*

**கிள்ளையன்** *killaiyan,* பெ.(n.) ஆண்பால் இயற்பெயர்; name of male person.

**க.** கிள்ளைய்ய

*[கிள்ளி + ஐயன் – கிள்ளியையன் →கிள்ளையன்.]*

**கிள்ளைவிடுதூது** *killai-vidu-tūdu,* பெ.(n.) தலைவி தன் காதலுக்கு உரிய தலைவனிடத்துக் கிளியைத் தூது விடுத்தலைக் கூறும் சிற்றி லக்கியம்; poem in which the heroine languishing under love sends a parrot as a messenger to her lover.

*[கிள்ளை + விடு + தூது.]*

**கிள–த்தல்** *kila-,* 3 செ.கு.வி.(v.t.) 1. ஒன்றைத் தெளிவாய்க் குறிப்பிட்டுச் சொல்லுதல்; to express clearly. *“இயற்கைப் பொருளை பிற்றெனக் கிளத்தல்” (நன்.404).* 2. விதந்து கூறுதல் (சி.போ.4,1,பக்.85,சிற்.); to make special mention of, to state specifically.

**Chin.** këng.

*[கிள் → கிள = பிள, வாய்திற, பேசு.]*

**கிளக்கல்** *kiḷakkal,* தொ.பெ.(vbl.n.) 1. எழுப்பல்; to raise up some heavy thing as with a lever. 2. சொல்லுதல்; to express their ideas.

*[கிள்→ கிள → கிளக்கல்.]*

**கிளத்தி** *kiḷatti,* பெ.(n.) 1. சொல்லி எனப் பொருள் படும் ஒரு வினையெச்சம்; kind of adverb. *"நன்னயங் கிளத்தி" (கந்தபு.திருநகர.46).* 2. நாமகள்; goddess of learning and art (த.மொ.அக.).

*[கிள்→ கிள → கிளத்தி.]*

**கிளத்து-தல்** *kiḷattu-,* 5 செ.குன்றாவி.(v.t.) புலப்படக் கூறுதல்; to express clearly. *"குல முறைக் கிளத்துப்படலம்" (கம்பரா.).*

**Fin.** kiltä; **Es.** kita; **Kuwi.** gita(word); **Mong.** gedeg, getel(tosay); **Jap.** kito.

*[கிள்→ கிள → கிளக்கல்.]*

**கிளந்தேத்து-தல்** *kiḷandēttal-,* 8 செ.கு.வி.(v.i.) மிகப் புகழ்தல்; to extol praise.

*[கிளந்து + ஏத்து.]*

**கிளப்பம்** *kiḷappam,* பெ.(n.) 1. கிளர்ச்சி; rising, heaving, swelling. *"திரைக் கிளப்பம்போலே" (திவ்.திருவாய்.5.9:3,பன்னீ.).* 2. வளர்ச்சி (த.மொ. அக.); to develop.

*[கிளம்பு → கிளப்பம்.]*

**கிளப்பு[1]-தல்** *kiḷappu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. எழுப்புதல்; to raise up some heavy thing, as with a lever. கல்லைக் கிளப்பினான். 2. சுவர் முதலியன எழச்செய்தல்; to raise, as a wall, to erect, cause to grow high. 3. நீக்குதல்; to turn out, discharge, dismiss. அவனை வேலையை விட்டுக் கிளப்பினான். 4. உண்டாக்குதல்; to excite, as a disturbance, to induce, as fever, to bring about. இந்தத் தூற்றல் சூட்டைக் கிளப்பிவிடும். 5. தூண்டிவிடுதல்; to rouse, animate. கிளப்பிவிட்டு வேடிக்கை பார்க்கிறான். 6. மிதத்தல் (த.மொ.அக.); to float.

*[கிளம்பு → கிளப்பு.]*

**கிளப்பு[2]** *kiḷappu,* பெ.(n.) 1. எழுப்புகை; raising, rousing.

*[கிளம்பு → கிளப்பு.]*

**கிளப்பு[3]** *kiḷappu,* பெ.(n.) சொல்லுகை; speech, utterance. *"கிந்தரர் பாடஞ் சீரான் கிளப்பருஞ் சிறையில் வைத்த" (பாரத.இராசசூய.87).*

*[கிள → கிளப்பு.]*

**கிளப்புறம்** *kiḷa-p-puṟam,* பெ.(n.) காற்றுப்படாத பக்கம்; leeward.

*[கீழ் + புறம் – கீழ்ப்புறம் → கிளப்புறம்.]*

**கிளம்பல்** *kiḷambal,* பெ.(n.) 1. எழுகை; rising. 2.பதிவுப் புத்தகத்தில் புதிதாகச் சேர்ந்த நிலங்களின் அட்டவணை; register of newly improved pieces of land. 3. அதிகரித்தல்;increasing. 4. உண்டாதல்; emerging. 5. எழும்பல்;rising. 6. புறப்படல்; starting. 7. வளர்தல்;growing.

*[கிளம்பு → கிளம்பல்.]*

**கிளம்பிவிடு-தல்** *kiḷambi-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. மனமின்றி ஒத்துக்கொள்ளுதல்; to be persuaded with difficulty, to agree reluctantly. 2. குடி போதல்; to leave or desert a house or village.

*[கிளம்பு → கிளம்பி + விடு.]*

**கிளம்பினவாள்** *kiḷambiṉa-v-āḷ,* பெ.(n.) அகவையால் வளர்ச்சியுள்ளவன் (வின்.); tall grown-up person.

*[கிளம்பு → கிளம்பின + ஆள்.]*

**கிளம்பினவேலை** *kiḷambiṉa-vēlai,* பெ.(n.) கட்டத்தில் எழும்பிநிற்கும் ஓவியவேலை (வின்.); bas-relief, work with figures somewhat raised.

*[கிளம்பு → கிளம்பின + வேலை.]*

**கிளம்பு—தல்** *kiḷambu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மேலெழுதல்; to rise in air or water ascend. இந்தச் செடி இப்போதுதான் கிளம்புகிறது. 2. தோன்றுதல்; to emerge from obsecurity, to be elevated. அவனுடைய பேர் கிளம்பிற்று. 3. நில மட்டத்திற்கு மேல் வருதல்; to rise above the surface. இந்தக்கட்டடம் நாற்புறமும் கிளம்பிவிட்டது. 4. மூண்டெழுதல்; to be stirred, agitated. அவன்மீது பகை கிளம்பிற்று. 5. உண்டாதல்; to crop up, break out. ஊரில் போய்கிளம்பியிருக்கிறது. 6. புறப்படுதல்; to set out, start. அந்தப் படை கிளம்பிவிட்டது. 7. அதிகப்படுதல்; to increase. விலை கிளம்பவில்லை. 8. எடுபடுதல்; to become loose, detached, as a brick that still adheres.பழங்கட்டடத்தில் செங்கல் கிளம்பிவிடும்.

**ம.** கிளம்பு; **க.** கெரளு; **தெ.** கொரலு.

**Aust.** ngowalle.

*[கிள் → கிள→கிளம்பு.]*

**கிளர்[1]—தல்** *kiḷar-,* 2 செ.கு.வி.(v.i.) 1. மேலெழுதல்; to rise, ascend. *"ஆழி கிளர்ந்ததோ" (கம்பரா. மிதிலைக்.67).* 2. மேன்மேல் வளர்தல்; to spring up, grow higher, and higher, shoot up. *"கொள்ளென்று கிளர்ந்தெழுந்த" (திவ்.திருவாய். 4.9.4).* 3. மிகுதல்; to be intense, to increase. *"பொலம்பூ வேங்கை நலங்கிளர் கொழுநிழல்" (சிலப்.பதி.4).* 4. விளங்குதல்; to shine, to be conspicuous, resplendent. *"மென்மொழியாள் கேழ்கிளரும் பாதியனை" (திருவாச.8:18).* 5. சிறத்தல் (வின்.); to be exalted, great. 6. உள்ளக்கிளர்ச்சி கொள்ளுதல்; to become spirited, fealous. *"வீடு செய்யும் கிளர்வார்க்கே" (திவ்.திருவாய்.2.9.11).* 7. சினத்தல்; to be roused, infuriated, to become angry. *"காலன் கிளர்ந்தாலும் போல்வார்" (பு.வெ.2:2).* 8. இறுமாப்புக் கொள்ளுதல் (வின்.); to become vain, conceited.

**ம.** கிளருக; **க.** கெளர்,கொளு; **தெ.** கொலு.

**Skt.** kaḍārā, karāla (wide open, gaping with projecting teeth); pali. kaḷāra.

*[கிள் → கிள → கிளர்.]*

**கிளர்[2]** *kiḷar,* பெ.(n.) ஒளி (பிங்.); light, brightness. *"கிளர்மகுட வயவேந்தர் நாண்க ளெல்லாங் கீழாக" (பாரத.திரௌபதி.நம).* 2. பூந்தாது (பிங்.); farina, pollen.

**Fin.** kieli; **Es.** keel; **Mansi.** kela; **Mordvin.** kel; **Hanti.** kol; **Mong.** kela; **Jap.** kotoba; **Q.** qaiu; **Aust.** klurtin (shine).

*[கிள் → கிள → கிளர்.]*

**கிளர்ச்சி** *kiḷarcci,* பெ.(n.) 1. எழும்புகை; rising, ascent. 2. உள்ளக்கிளர்ச்சி; enthusiasm, zeal. அவன் பேச்சைக் கேட்டபோது மனத்திற் கிளர்ச்சி யுண்டாயிற்று. 3. வளர்ச்சி; growth, increase, prosperity. அவனுக்குக் கிளர்ச்சியான காலம் (உ.வ.). 4. செழிப்பு; fertility, luxuriance. *"தண்கா வல்லையிற் கிளர்ச்சி யெய்தி" (கந்தபு.இந்திர னருச்.12).* 5.சினம்; anger. கடுஞ்செய்கையைக் கண்டு அவனுக்குக் கிளர்ச்சியுண்டானது. 6. கலவரம்; agitation. மொழித்திணிப்பு கிளர்ச்சியை உண்டாக்கும் (உ.வ.). 7. இறுமாப்பு (வின்.); conceit, vanity.

**ம.** கிளர்ச்ச

*[கிளர் →கிளர்ச்சி.]*

**கிளர்ச்சியூட்டு—தல்** *kiḷarcci-y-ūṭṭu,* 6 செ.குன்றாவி. (v.t.) கிளர்ச்சியடையச் செய்தல்; to intoxicate, enthuse.

*[கிளர்ச்சி + ஊட்டு.]*

**கிளர்த்தி** *kiḷartti,* பெ.(n.) கொந்தளித்தெழுகை; rising in tumult. *'சந்நிதாநத்தாலே கிளர்த்தியை யுடைத்தாயி ருக்கை (ஈடு.3,6:3).*

*[கிளர் →கிளர்த்தி.]*

**கிளர்த்து—தல்** *kiḷarttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. எழுப்புதல்; to raise up, rouse. 2. நிறைத்தல்; to fill, satiate.

**ம.** கிளர்த்துக

*[கிளர் → கிளர்த்து.]*

**கிளர்வரி** *kiḷar-vari,* பெ.(n.) நடுநின்றார் மாறுபட்ட இருவருக்குஞ் சந்துசொல்லக் கேட்டு நிற்பதாக நடிக்கும் நடிப்பு (சிலப். 8:101); posture assumed by an offended lover or love, when an intermediary tries to conciliate.

*[கிளர் + வரி]*

**கிளர்வி** *kiḷarvi,* பெ.(n.) கதவு (பிங்.); door.

*[கிள → கிளர் → கிளர்வி.]*

**கிளராலயம்** *kiḷar-ālayam,* பெ.(n.) ஒரு தமிழ்க் கணித நூல்; name of a mathematical work in Tamil (கணக்கதி. பாயி.).

*[கிளரல் (மேல்நிலை) + இயம் - கிளரலியம் → கிளரலியம் → கிளராலயம் (கொ.வ.)]*

**கிளவரி** *kiḷavari,* பெ.(n.) தண்ணீர்விட்டான் கிழங்கு (மலை.); common climber with many thick fleshy roots.

*[கீழ் → கிழ → கிள + வரி]*

**கிளவி** *kiḷavi,* பெ.(n.) 1. சொல்; word, term. கிளவியாக்கம் (தொல்.சொல்.). 2. பேச்சு; speech. *"அந்தீங் கிளவி" (ஐங்குறு.490).* 3. மொழி; language. *"பதினெண் கிளவி" (கல்லா.38:3).* 4. அகப்பொருட்டுறை; theme, subject, section in amatory compositions. *"களவிற் குரிய கிளவித் தொகை" (நம்பியகப்.123).* 5. பொருள்; meaning. *"பால்மயக் குற்ற வையக் கிளவி" (தொல்.சேனா.கிளவி.23).*

*[கிள் → கிள → கிளவி.]*

**கிளவிக்கொத்து** *kiḷavi-k-kottu,* பெ.(n.) கோவை என்னும் சிற்றிலக்கியத்தின் பலதுறை கொண்ட ஒரு பிரிவு; division of a *kōvai* comprising many themes. *"இவ்விருபத்தைந்தும் இந் நூற்குக் கிளவிக்கொத்து எனப்படும் அதிகாரங்களாம்" (திருக்கோ. உரை, அவ.).*

மறுவ. கிளவித்தொகை

*[கிளவி + கொத்து]*

**கிளவிக்கோவை** *kiḷavi-k-kōvai,* பெ.(n.) அகப்பொருட்கோவை; amatory poem, comprising many themes. கிளவிக்கோவையின் எடுத்துக் கோடற்கண் காட்சி முதலாயின சொல்லுதல் வனப்புடைமையின் (திருக்கோ.14,உரை).

*[கிளவி + கோவை.]*

**கிளவித்தலைவன்** *kiḷavi-t-talaivaṉ,* பெ.(n.) அகப்பொருட்டலைவன்; (கலித்.68,உரை); hero, chief male character in a love-poem.

*[கிளவி + தலைவன்.]*

**கிளவித்தலைவி** *kiḷavi-t-talaivi,* பெ.(n.) அகப்பொருட்டலைவி; heroine, chief female character in a love-poem.

*[கிளவி + தலைவி.]*

**கிளவித்தொகை** *kiḷavi-t-togai,* பெ.(n.) சொற்களின் கூட்டம்; cluster of words. *"களவிற்குரிய கிளவித் தொகையே" (அகப்.களவி.).*

*[கிளவி + தொகை.]*

**கிளவியாக்கம்** *kiḷavi-y-ākkam,* பெ.(n.)1.தொல் காப்பியச் சொல்லதிகாரத்தில் வழுவற மொழிகளையமைத்துக் கொள்ளும் முறைகளைக் கூறும் முதற்பகுதி; the first chapter in collatig aram of Tolkappiyam which deals with morhology and syntax. 2. சொற்கள் பொருள்கள் மேல் ஆமாறு உணர்த்துதல்; the chapter explaining how words express meaning in contexts.

*[கிளவி + ஆக்கம்.]*

**கிளறிப்பார்-த்தல்** *kiḷaṟi-p-pār-,* 4 செ.கு.வி.(v.i.) 1. ஆய்ந்து தெரிதல்; to search by digging up; to ran-

sack, rummage. எவ்வளவு கிளறிப் பார்த்தும் உண்மையைக் கண்டுபிடிக்க முடியவில்லை. 2. கிண்டிப்பார்த்தல்; to probe, as a wound; to pry into, as a person's affairs. 3. தூண்டிவிடுதல்; to incite, stir up. பகையைக் குறைக்காமல் கிளறிப் பார்ப்பது முறையா?

*[கிளறு + பார் – கிளறிப்பார்-.]*

**கிளறிவிடு-தல்** *kiḷaṟi-viḍu-*, 18 செ.குன்றாவி. (v.t.) 1. கிண்டிவிடுதல்; to turn up, rake up, agitate. 2. தூண்டிவிடுதல்; to stir up, incite. 3. மறைபொருளை வெளியாக்குதல் (வின்.); to disclose, expose, reveal a secret.

*[கிளறி + விடு – கிளறிவிடு.]*

**கிளறு-தல்** *kiḷaṟu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கிண்டுதல்; to poke, ransack, dig up. *"ஏனமோ டன்னமாய்க் கிளறியும் பறந்தும்" (தேவா.101:9).* 2. கலக்குதல்; to disturb, derange, confuse. 3. துழாவுதல்; to stir, as with a ladle. மாட்டுத் தொட்டியைக் கிளறினான். 4. துருவியாராய்தல்; to probe, search, pry into. 5. வெளியாக்குதல் (வின்.); to disclose, expose.

ம. கிளறுக; க.கெளர்; தெ.கெலகு.

*[கிள் → கிள → கிளறு.]*

**கிளாச்சங்கு** *kiḷāccaṅgu*, பெ.(n.) சங்குவகை (மீனவ.); a kind of conch-shell.

மறுவ. குழாய்ச்சங்கு

*[குழாய் + சங்கு – குழாய்ச்சங்கு → கிளாச்சங்கு.]*

*சங்குவகைகளில், மிகவும் சிறிய குழாய்ச் சங்கு எனும் சொல்லின் திரிபு.*

**கிளாத்தி** *kiḷātti*, பெ.(n.) கடல் மீன் வகை, கெளிறு; sea fish, silvery (மீனவ.).

*[கெளிறு → கெளித்தி → கிளாத்தி (கொ.வ.).]*

**கிளாய்** *kiḷāy*, பெ.(n.) எள்ளுக்காய்க் கோது; pods or stalks of sesamum left after threshing

*[கிள் → கிளாய்.]*

**கிளி** *kiḷi*, பெ.(n.) 1. பறவை வகை; parrot, parakeet. *"கிளிமரீ இயவியன்புனத்து" (புறநா.138,9).* 2.கிளி வகை(m.m.); rose-ringed parakeet. 3. வெட்டுக் கிளி (வின்.); grass-hopper, locust. 4. கிளிமீன் என்னும் கடல்மீன் வகை; a sea fish. 5. கிளித்தட்டு விளையாட்டில் தன் சதுரக் கோட்டெல்லையைச் சுற்றிக் கொண்டு மறிக்கப்பட்ட ஆட்டக்கா ரைத் தொட முயல்பவன்; one who goes round patrolling the squares in the game of *kiḷi-t-taṭṭu.*

தெ.சிலுக; ம.கிளி; க.,து. கிணி, கிளி; குட. கிணி; பர்.கின்; skt. kira; **Aust.** kuyulpi.

*[கிள் → கிள → கிளி (பேசுவது).]*



கிளி

**கிளிக்கத்தி** *kiḷi-k-katti*, பெ.(n.) கத்திவகை; a kind of knife, billhook.

மறுவ. புல்லரிவாள்

ம. கிளிக்கத்தி

*[கிளி + கத்தி.]*

**கிளிக்கூடு** *kiḷi-k-kūḍu*, பெ.(n.) 1. கிளியை அடைத்து வளர்க்கும் கூடு; parrot cage. 2. குற்றவாளிகளை அடைத்துத் துன்புறுத்தும் கூடு; cage with spikes pointed inward for torturing criminals.

# கிளிவகைகள்



தவிட்டுக் கிளி



கொண்டைக் கிளி



கழுகுக் கிளி



இமயக் கிளி



பச்சைக் கிளி



மரக்கிளி



கூகைக் கிளி



மஞ்சள் கிளி



ஊமன் கிளி



குட்டைக் கிளி



3. முறைமன்றத்தில் சான்று கூறுவோர் அல்லது குற்றவாளிகள் நிற்க அமைக்கப்படும் கூண்டு; witness-barer, prisoners' bar. 4.கோயிலைப் பிரித்துத் திருப்பணி செய்யும் பொழுது மூலத்திரு மேனிகளுக்குக் காப்பாகச் சுற்றியிடும் மரக்கூடு; temporary wooden enclosure for *mūlavar* or stationary idol, when the temple is under repair.

ம.கிளிக்கூடு

*[கிளி + கூடு.]*

**கிளிக்கூண்டுக்காளவாய்** *kiḷi-k-kūṇḍu -k-kāḷavāy*, பெ.(n.) 1. இலக்கம் கல் சூளை போடத்தக்க கிளிக்கூண்டு வடிவத்திலமைந்த பெரிய காளவாய்; a brick kiln shaped like a parrot cage in wich about 1 lakh bricks can be fired.

*[கிளி + கூண்டு + காளவாய்.]*

**கிளிக்கொம்பன்** *kiḷi-k-kombaṉ*, பெ.(n.) வளை கொம்புள்ள மாடு; ox with short horns turned downwards.

*[கிளி + கொம்பன்.]*

**கிளிக்கொம்பு** *kiḷi-k-kombu*, பெ.(n.) கிளிமூக்குப் போல வளைந்த விலங்குக் கொம்பு (வின்.); short and crooked horn like a parrot's beak.

க.கிளிகோலு

*[கிளி + கொம்பு.]*

**கிளிகடிகருவி** *kiḷi-kaḍi-karuvi*, பெ.(n.) தட்டை, கிளியோட்டுங் கருவி; contrivance to scare away parakeets (புறநா.49,உரை).

மறுவ. தட்டை, கிளிகடிகோல்.

*[கிளி + கடி + கருவி. கடிதல் = விரட்டுதல்]*

"மூங்கிலைக் கண்ணுக்குக்கண் உள்ளாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாக ஒன்றிலே தட்டுவதொரு கருவி" (குறிஞ்சிப். 48). தென்னை மட்டையிலும் இக்கருவி செய்வதுண்டு.

**கிளிகடிகோல்** *kiḷi-kaḍi-kōl*, பெ.(n.) கிளியோட்டுங் கருவியுளொன்று; a kind of rod to scare away parrots (உரி.நி.).

மறுவ. தட்டை

*[கிளி + கடி + கோல்.]*

**கிளிகொஞ்சு-தல்** *kiḷi-koñju-*, 5 செ.கு.வி.(v.i.) அழகியதாதல்; to be beautiful, charmings, as the talk of a parrot. வீட்டு கிளி கொஞ்சுகிறது (உ.வ.).

*[கிளி + கொஞ்சு.]*

**கிளிச்சல்** *kiliccal*, பெ.(n.) கடல்மீன் வகை; a sea-fish, bluish-green.

ம.கிளித்தி

*[கிளிஞ்சில் → கிளிஞ்சல் → கிளிச்சல்.]*

**கிளிச்சன்** *kiḷiccaṉ*, பெ.(n.) வளி முறையிற் செய்த தங்கச் செம்பு என்னும் 108 மாற்றுப் பொன்; (in alchemy) a refined concentrated gold of 108 *'māṟṟu'* equivalent to about 11x24 or 264 carats lie, about 11 times the value of pure gold available in the market (10 *māṟṟu* 24 carat) (சா.அக.).

*[கிளிச்சிறை → கிளிச்சன் (கிளிச்சிறகின் நிறம்).]*

**கிளிச்சிறை** *kiḷi-c-ciṟai*, பெ.(n.) நான்குவகைப் பொன்னுள் கிளிச்சிறகு போன்ற நிறமுள்ள பொன்வகை (திருமுருகு.18,உரை.); gold resembling the parrot's wing in colour, one of four kinds of gold (q.v.) (சிலப்.14:201.).

மறுவ. தங்கச்செம்பு, கிளிச்சன்.

*[கிளி + சிறை.]*

ஊதை (வாத) முறையால் தமிழ்ச்சித்தர்கள் செயற்கையாகச் செய்த உயர் மாற்றுப் பொன்களான ஆடகம், கிளிச்சிறை, நாவல் (சாம்பூநதம்) புல்லன் (சாதரூபம்) என்பவற்றுள் கிளிச்சிறை 108 மாற்று கொண்டது; முப்பு போன்றவற்றோடு கறுப்புக்கையாந்த

கரை சாறு சேர்த்துக் காய்ச்சினால் கிடைப்பது கிளிச்சிறைப் பொன். பொன்முசுட்டைசாறு சேர்ப்பின் 500 மாற்றுகொண்ட ஆடகப்பொன் கிடைக்கும் என்பர். நாவல் பொன் (சாம்பூநதம்) 1008 மாற்று கொண்டது எனவும் புல்லன் (சாதரூபம் - புல் நிறம்) 708 மாற்று கொண்டது எனவும் கூறுவதுண்டு.

**கிளிசெயநீர்** *kiliśeyanir*, பெ.(n.) பூநீருப்புச் செயநீர்; a pungent liquid or hydrate prepared by exposing to night's dew a solution of efflorescent salt, collected from the surface of the soil of fuller's earth.

*[கிளி + செயநீர்.]*

இது காரத் தன்மை மிகுந்த உவர் மண்ணிலிருந்து எடுக்கப்பட்ட பூநீருப்பை இரவு முழுவதும் பனியில் திறந்து வைப்பதால் பெறப்படும் - ஒரு தனிமத்துடன் சேர்ந்த நீர் (சா.அக.).

**கிளிஞ்சா** *kiliñjā*, பெ.(n.) மீன்வகை (கட.பர. க.சொ.அ.); a kind of fish.



கிளிஞ்சா

**கிளிஞ்சான்** *kiliñcan*, பெ.(n.) ***கிளிமீன்*** பார்க்க; see *kilimin*.

*[கிளிஞ்சல் → கிளிஞ்சான்.]*

**கிளிஞ்சில்** *kiliñjil*, பெ.(n.) கடல்வாழ் உயிரி வகை (தொல்.பொருள். 584.உரை); bivalve mussel or shell, oyster-shell. *"மீன்நெய் அட்டிக் கிளிஞ்சில் பொத்திய சிறுதீ விளக்கில்"* (நற்.175:3).

ம. கிளிஞ்சிலு

*[கிள் → கிளி → கிளிஞ்சில்.]*

**கிளிஞ்சிற்சிப்பி** *kiliñjircippi*, பெ.(n.) கிளிஞ் சலோடு; bivalve shell (சா.அக.).

*[கிளிஞ்சில் + சிப்பி. இரு மடிப்பிதழ்களைக் கொண்ட ஓடு.]*

**கிளிஞ்சிற்சுண்ணம்** *kiliñjir-cunnam*, பெ.(n.) ***கிளிஞ்சிற் சுண்ணாம்பு*** பார்க்க; see *kiliñjir-cunnāmbu*.

*[கிளிஞ்சில் + சுண்ணாம்பு.]*

**கிளிஞ்சிற்சுண்ணாம்பு** *kiliñjir-cunnāmbu*, பெ.(n.) கிளிஞ்சிலை நீற்றியெடுக்கும் நீறு; shell lime made from sea-shells.

மறுவ. கிளிஞ்சிற்சுண்ணம்

*[கிளிஞ்சல் + சுண்ணாம்பு.]*

**கிளித்தட்டு** *kili-t-tattu*, பெ.(n.) நிலத்திற் சதுரக்கோடு கீறி ஆடும் ஒரு வகைச் சிறார் விளையாட்டு; the game of *uppu-k-kōdu*.

ம. கிளித்தட்டு

மறுவ. உப்புக்கோடு, கிளியந்தட்டு.

*[கிளி + தட்டு.]*

**கிளிதம்** *kilitam*, பெ.(n.) உண்ணுஞ்சோறு; rice food (சா.அக.).

*[கிளி → கிளிதம். கிண்டிய சோற்றுத் திரள்.]*

**கிளிதி** *kiliti*, பெ.(n.) கிலுகிலுப்பை, பேய்மிரட்டி; rattle wort, a plant (சா.அக.).

*[கிள் → கிளிதி (கிள் - ஒலிக்குறிப்பு.).இது காய்ந்தால் உள்ளிருக்கும் விதைகள் ஒலிக்கும்.]*

**கிளிநாவல்** *kiḷināval,* பெ.(n.) கழற்சி; parrot jamboo (சா.அக.).

*[கிளி + நாவல்.]*

**கிளிப்பட்டை** *kiḷippaṭṭai,* பெ.(n.) ***கிளியூறற்பட்டை*** பார்க்க; see *kiḷi-y-ūṟaṟpaṭṭai.*

*[கிளிபட்டை → கிளிப்பட்டை.]*

**கிளிப்பாட்டு** *kiḷi-p-pāṭṭu,* பெ.(n.) 1. கிளியின் பாட்டு; song of a parrot (தொல்.பொ.559, உரை.). 2.கிளி பாடியதாகப் பாடப்படும் பாட்டு; song as told by a parrot.

**ம.** கிளிப்பாட்டு

*[கிளி +பாட்டு]*

**கிளிப்பிள்ளை** *kiḷi-p-piḷḷai,* பெ.(n.) 1. இளங்கிளி; young parrot. (தொல்.பொருள்.559, உரை). 2.கிளி; parrot சொன்னதைச் சொல்லுமாங் கிளிப்பிள்ளை (உ.வ.).

*[கிளி + பிள்ளை.]*

**கிளிப்பூச்சி** *kiḷi-p-pūcci,* பெ.(n.) சோளப்பூச்சி வகை; a pest that damages the maize crop.

*[கிளி + பூச்சி.]*

**கிளிமீன்** *kiḷi-mīṉ,* பெ.(n.) கடல்மீன்வகை; a sea fish green.

**ம.** கிளிமீன்

*[கிளி + மீன்.]*

**கிளிமுருக்கு** *kiḷimurukku,* பெ.(n.) முள்முருக்கு; thorny corel tree (சா.அக.).

**ம.** கலியாண முருக்கு

*[கிளி + முருக்கு. கிளி = கிளிமூக்கு, முள்.]*

**கிளிமூக்கன்** *kiḷi-mūkkaṉ,* பெ.(n.) 1. வளைந்த மூக்குடையவன் (வின்.); man with an aquiline nose. 2. கற்றாழை (மலை.); aloe. 3. மாங்காய் வகை (து.வ.); a kind of mango.

*[கிளி + மூக்கன்.]*

**கிளிமூக்கு** *kiḷi-mūkku,* பெ.(n.) 1. கிளிமூக்கைப் போன்றது; anything resembling parrot's beak. 2. சுவடிகளில் ஏடு விழாமல் தடுக்க வைக்கும் ஒலையீர்க்குத் துண்டு; piece of ōla-rib used to keep in the leaves of a palm leaf manuscript when strung together.

**ம.** கிளி மூக்கு; **க.** கிணிமூகு.

*[கிளி + மூக்கு.]*

**கிளிமூக்குக்கிழங்கு** *kiḷi-mūkku-k-kiḻaṅgu,* பெ.(n.) ஆகாய கருடன் கிழங்கு (வின்.); root of bryomia epegea.

**க.** கிணிமூகின கட்டெ

*[கிளி + மூக்கு + கிழங்கு.]*

**கிளிமூக்குமரம்** *kiḷi-mūkku-maram,* பெ.(n.) ஒரு வகை மரம்; parrot's bill of New Zealand, parrots beak cilanthus punicans (சா.அக.).

*[கிளி + மூக்கு + மரம்.]*

**கிளிமூக்குமா** *kiḷi-mūkku-mā,* பெ.(n.) கிளிமூக்குப் போல் நுனி வளைந்த காயையுடைய மா வகை; mango, whose fruit is of the shape of a parrot's beak.

**க.** கிணிமாவு

*[கிளி + மூக்கு + மா.]*

**கிளிமூக்கு வெற்றிலை** *kiḷi-mūkku-veṟṟilai,* பெ.(n.) கிளிமூக்கைப்போல் காம்பு வளைந்த ஒரு வகை வெற்றிலை; a species of betel the pedicle of which is bent like the beak of a parrot (சா.அக.).

*[கிளி + மூக்கு + வெற்றிலை.]*

**கிளிமூக்கெழுத்தாணி** *kili-mūkkelu-t-tāṇi*, பெ.(n.) தலைப்பக்கம் கிளிமூக்குப் போன்ற கத்தியையுடைய எழுத்தாணி வகை; a style with a hooked knife at the top for cutting olas.

*[கிளி + மூக்கு + எழுத்தாணி.]*

**கிளியட்டிகை** *kili-y-aṭṭigai*, பெ.(n.) பொற்கிளி யுருக்கள் அமையச் செய்த அட்டிகையணி; necklace of gold threads ornamented with golden parrots.

*[கிளி + அட்டிகை.]*

**கிளியந்தட்டு** *kiliyan-taṭṭu*, பெ.(n.) ***கிளித்தட்டு*** (G.TN.D.105) பார்க்க; see *kili-t-taṭṭu*.

*[கிளி + அம் + தட்டு.]*

**கிளியீடு** *kili-y-īḍu*, பெ.(n.) கிளியினாற் பொந்துகளில் சேமித்து வைக்கப்பட்ட கதிர்கள்; grain stocked by parrots in the hollows of trees.

*[கிளி + ஈடு.]*

"கிளி மரீஇய வியன்புனத்து மரனணி பெருங்குர லனைய னாதலின்" என்றது கிளியீடு வாய்த்தாற் போலவென்னும் வழக்கைப் பற்றி நின்றது (புறநா.138, உரை).

**கிளியூறற்பட்டை** *kili-y-ūraṛ-paṭṭai*, பெ.(n.) ஒருவகை மருந்துப் பட்டை; a medicinal bark used for fever. *"மணவருக்க.......... கிளியூறற் பட்டையது"* *(பதார்த்த. குண. 553).*

மறுவ. கிளிப்பட்டை

*[கிளியூறல் + பட்டை.]*

**கிளியெடு-த்தல்** *kili-y-eḍu-*, 4 செ.குன்றாவி. (v.t.) கிழியில் (துணியில்) கட்டிய மருந்தையெடுத்து வெய்யிலில் உலர்த்தல்; taking out the medicinel (tied up in a piece of cloth and kept suspended) from the solution contained in a vessel, and then drying it in the sun.

*[கிழி → (கிளி + எடு.) கிளியெடுத்து ரவியில் போடுதல் என்பது நாட்டுமருத்துவ மரபு. இது துணியிலே கட்டி முடியப்பட்டு ஏனத்திலுள்ள நீரில் தொங்கவிடப்பட்ட மருந்தை எடுத்து வெயிலில் உலரவிடுதலாகும்.]*

**கிளுகிளு-த்தல்** *kilu-kilu-*, 4 செ.கு.வி.(v.i.) 1. மகிழ்ச்சியாலுண்டாகும் ஓரொலிக்குறிப்பு; to feel joy, inwardly rejoice. *"கெண்டைத் தடங்கண்ணா ளுள்ளே கிளுகிளுத்தாள் (கம்பரா.மாயாசனக.87).*

*[கிளு + கிளு.]*

**கிளுகிளெனல்** *kilu-kileṉal*, பெ.(n.) சிரித்தல் முதலிய ஒலிக்குறிப்பு; onom expr. signifying giggling, laughing, tittering, chuckling sound. 2. செழித்தற் குறிப்பு; expr. signifying thriving, flourishing. பயிர்கள் கிளுகிளென்று வளர்ந்தன (உ.வ.). 3. ஒளிர்தற் குறிப்பு; glowing brilliance. கிளுகிளென்று விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

*[கிளு + கிளு + எனல்.]*

**கிளுவை** *kiluvai*, பெ.(n.) 1. பறவை வகை; common teal. *"பாலில்லா மாதர்கட்குப்..... அருங்கிளுவை யைத்தின்றி" (பதார்த்த.998).* 2. செடிவகை (சீவக.3076, உரை); Indian balm of gilead, common hedge plant. 3. மரவகை; hill balsam tree. 4. மீன்வகை; a kind of small fish-eel, grig.

*[கிளு → கிளுவை.]*

**வகைகள்:**

1.வெண்கிளுவை 2. செங்கிளுவை 3. முட் கிளுவை 4. பாறைக் கிளுவை 5. கர்ப்பூரக் கிளுவை 6.காட்டுக்கிளுவை 7.மலைக்கிளுவை 8. மல்லங்கிளுவை 9.பச்சைக்கிளுவை 10.மேலங் கிளுவை 11.சாம்பற் நிறக்கிளுவை 12. மாங்கிளுவை 13. செம்பலக் கிளுவை (சா.அக.).

**கிளை[1]–தல்** *kilai,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. நீக்குதல்; to remove, purge. *"மனத்து மாசு கிளைவானை" (தேவா.682:3).* 2.அரிசி களைதல் (வின்.); to wash, as rice. 3. ஆடைகளைதல்; to put off, as garments. 4. கிளறுதல் (யாழ்ப்.); to pry out, as a thorn from the flesh with a needle.

*[கிள் → கிளை.]*

**கிளை[2]–த்தல்** *kilai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. மரம் கப்புவிடுதல்; to ramify, branch out. *"விண்பெருஞ் சென்னிக் கிளைஇய காந்தள்" (குறிஞ்சிப்.196 ).* 2. பெருகுதல்; multiply, increase in number, as families. அவர்கள் கிளைத்து விட்டார்கள் (உ.வ.). 3. நெருங்குதல்; to be close, to throng, to crowd, grow thick or close, as the beard, boughs, herbage, grain. *"கிருத்திம வினம்பல குதித்தன கிளைத்தே" (இரகு.திக்கு. 113).* 4.விளைதல்; to come into being, appear *"உழுநீர் வயலுட் பொன்கிளைப்ப" (திவ்.பெரியதி.8,8:5).* 5. நிறைதல் (பிங்.); to abound, to be copious, plenteous.

ம. கிளிக்குக

*[கிளை[1] → கிளை[2]]*

**கிளை[3]–த்தல்** *kilai-,* 4 செ.குன்றாவி.(v.t.) கிளறுதல்; to dig up, to stir, scratch up us fowls, to root up, as pigs, to burrow into as rats, to excavate. *"கேழலுழுத விருஞ்சேறு கிளைப்பின்" (புறநா.176:2).*

ம. கிளய்க்குக; தெ. கெலகு; து.கிலெகுனி; குட. கள; துட. கிள்ய்; பட.கலகு.

*[கிளை[1] → கிளை[3].]*

**கிளை[4]** *kilai,* பெ.(n.) 1. மரத்திலிருந்து பிரிந்து இலை, பூ, காய் ஆகியவற்றைத் தாங்கியிருக்கும் பகுதி; branch, bough. *"தாருவின் கிளைக் ளென்ன" (கந்தபு.ஆற்றுப்.31).* கிளைகளை ஒடிக்காதே (உ.வ.). 2. தளிர் (திவா.); sprout, shoot, bud . 3 . பூங்கொத்து; bouquet, bunch of flowers. *"கிளைமலர்" (சிறுபாண்.160).* 4. சுற்றம்; kindred, relations. *"கேளாதே வந்து கிளைகளாயிற் றோன்றி" (நாலடி.30).* 5. பகுப்பு; section, division. *"கிளையமை புவன மூன்றும்" (கம்பரா. கும்பக.16).* 6. இனம்; class, group, herd, flock, shoal, company, family, horde, race. *"களிறு..... கிளைபுகலத் தலைக்கூடி யாங்கு (புறநா.17:19).* 7. மூங்கில் (பிங்.); bamboo. 8. ஒருவகை இசைக் கருவி; a kind of flute. *"தண்ணுமை யாழ்முழவங் கிளைதுந்துபி" (பெரியபு.திருநாவுக்.76).* 9. ஓர் இசை; the fifth note in the gamut. *"கிளைக்குற்ற வுழைச்சுரும்பின்" (பரிபா.11:127).* 10. அலுவலகம், கட்சி, நிறுவனம் முதலியவற்றின் பிரிவு; an institution branch. எங்கள் அலுவலக கிளை அமெரிக்காவிலும் உள்ளது (உ.வ.). 11. உட்பிரிவு; supplementary. கிளைக்கதை.

*[கிள் → கிளை.]*

*kile-ei,* a young branch. Comp. *Ossete kalius; Servian galusa;* Greek *klados*, a young shoot, a branch. The theme of the Greek word is *kla-ô,* to lop, to break; and the Tamil *kil-ei,* considered as a verbal theme, means not only to sprout, but also to pluck off. *kill-u,* to pinch, to pluck, is a collateral theme.

**கிளைக்கதை** *kilai-k-kadai,* பெ.(n.) மூலக்கதையிலிருந்து தோன்றிய, அதனோடு தொடர்புடைய தனிக்கதை; one story branching out of another, incidental narrative, episode.

*[கிளை + கதை.]*

**கிளைக்கொம்பு** *kilai-k-kombu,* பெ.(n.) பன்றியின் கோரைப்பல்; tusk of a boar (சங்.அக.).

*[கிளை + கொம்பு.]*

**கிளைக்கோரை** *kilai-k-kōrai,* பெ.(n.) கோரை வகை; a kind of sedge.

*[கிளை + கோரை.]*

**கிளைகாமிகம்** *kiḷaikāmigam,* பெ.(n.) நீர்ப்பூலா; water poola (சா.அக.).

**கிளைகூட்டு-தல்** *kiḷai-kūttu-,* 5 செ.கு.வி.(v.i.) ஆந்தைகள் கூட்டமாய் அலறுதல்; to screech simultaneously, as two or more owls together.

*[கிளை + கூட்டு.]*

**கிளைச்சங்கம்** *kiḷai-c-cangam,* பெ.(n.) துணைஅவை; branch of an association. தமிழ் மொழியைப் பரப்புவதற்கெனப் பல கிளைச் சங்கங்கள் தோன்ற வேண்டும் (உ.வ.).

*[கிளை + சங்கம்.]*

**கிளைஞர்** *kiḷaiñar,* பெ.(n.) 1. உறவினர்; kinsfolk, relation, *"காலாடு போழ்திற் கழிகிளைஞர்.... பலராவர்" (நாலடி.113).* 2. நட்பினர் (திவா.); friends, companions, *"கிளைஞரை நீட்டி யளப்பதோர் கோல்" (குறள்.796).* 3. மருதநில மக்கள்; inhabitants of an agricultural tract, husbandmen (திவா.). 4. கூட்டத்தார்; those belonging to a group, associates. *"வாமமாந் தந்திரக் கிளைஞர் போற்றாமுமே யினார்" (கந்தபு.திருநாட்டு.10).*

*[கிளை → கிளையர் → கிளைஞர்.]*

பல குடும்பங்கள் சேர்ந்த ஒருகுடியை ஒரு மரமாகக்கொள்ளின், அக்குடும்பங்கள் அதன் கிளைகளைப் போன்றிருத்தலால், இனத்திற்குக் கிளையென்றும் இனத்தார்க்குக் கிளைஞர் என்றும் பெயர் (சொல்.கட்.).

**கிளைநரம்பு** *kiḷai-narambu,* பெ.(n.) குரல், இளி, துத்தம், விளரி, கைக்கிளை என்ற யாழ்; collective name for the first, second, third, fifth and sixth notes of the gamut.

*[கிளை + நரம்பு]*

**கிளைப்பனை** *kiḷaippaṉai,* பெ.(n.) பல கிளைகள் ஒட்டிக் கொண்டுள்ள ஒருவகைப் பனை; a palmyra tree with several branches adhered together (சா.அக.).

*[கிளை + பனை.]*

**கிளைப்பு** *kiḷaippu,* பெ.(n.) 1. கப்புவிடுகை; branching, ramification. 2. கிண்டுகை; digging, scratching, burrowing. *"குப்பை கிளைப்போவாக் கோழிபோல்" (நாலடி.341).*

*[கிள் → கிளை → கிளைப்பு.]*

**கிளைப்பெயர்** *kiḷai-p-peyar,* பெ.(n.) சுற்றத்தை உணர்த்தும் பெயர்; nouns signifying kinship.

*[கிளை + பெயர்.]*

**கிளைமை** *kiḷaimai,* பெ.(n.) 1. உறவு (சீவக.330,உரை.); kinship. 2. நட்பு (த.மொ.அக.); friendship.

*[கிளை → கிளைமை.]*

**கிளைமொழி** *kiḷaimoḻi,* பெ.(n.) இலக்கண அமைப்பு, சொற்கள், பலுக்கம் ஆகியவற்றால் பொதுமொழியிலிருந்து (அல்லது தரப்படுத்தப்பட்ட மொழியிலிருந்து) சில மாறுபாடுகளுடன் ஒரு வட்டாரத்தில் அல்லது ஒரு பிரிவினரால் பேசப்படும் மொழிவகை; dialect.

*[கிளை + மொழி.]*

**கிளையடுப்பு** *kiḷai-y-aḍuppu,* பெ.(n.) கொடியடுப்பு; side-hearth.

*[கிளை + அடுப்பு]*



கிளையடுப்பு

**கிளையாமை** *kilayāmai,* பெ.(n.) இளையாமை; not to grow, lean. *"வள்ளுகிர் ஞமலி கிளையாக் கண்ணவளைகுபு நெரிதர" (குறிஞ்சிப்.132) (த.மொ.அக.).*

*[கிளை + ஆ + ஆமை.]*

**கிளையார்** *kiḷaiyār,* பெ.(n.) 1. உறவினர்; relative. அவர் எனக்கு மனைவி வழியில் கிளையார் (உ.வ.). 2. நட்பினர்; friends (த.மொ.அக.).

*[கிளை + ஆர்.]*

**கிளையாறு** *kiḷai-yāṟu,* பெ.(n.) ஓர் ஆற்றிலிருந்து பிரிந்து வேறு வழியில் செல்லும் ஆறு; river branch (த.மொ.அக.).

**மறுவ.** கிளைநதி

*[கிளை + ஆறு. கிளையாறு பார்க்க; see kiḷai-y-āṟu.]*

**கிளையிதழ்** *kilai-y-idaḷ,* பெ.(n.) புறவிதழ்; outer petal of a flower. *"கிள்ளை யோப்பியும் கிளையிதழ் பறியா" (குறிஞ்சிப்.101).*

*[கிளை +இதழ்.]*

**கிளையோடு—தல்** *kilai-y-ōḍu-,* 5 செ.கு.வி.(v.i.) ***கிளைவிடு*** பார்க்க; see *kiḷai-viḍu.*

*[கிளை + ஓடு.]*

**கிளைவழி** *kiḷai-vaḷi,* பெ.(n.) கிளைபோற் பிரிந்த இனம் (கூ.வி.21).; lineage, pedigree, family. 2. பிரியும் வழி; branching road, forked road.

*[கிளை + வழி.]*

**கிளைவாதம்** *kiḷaivādam,* பெ.(n.) ஆண்துடரி; a plant (சா.அக.).

*[கிளை + வாதம்.]*

**கிளைவிடு—தல்** *kiḷai-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) கப்பு உண்டாதல்; to ramify, branch off.

**மறுவ.** கிளைவைத்தல்

*[கிளை + விடு-.]*

**கிளைவிளக்கு** *kiḷai-viḷakku,* பெ.(n.) பல கிளைகளையுடைய மணவிளக்குவகை; lamp with many branching lights used in marriage ceremony.

*[கிளை + விளக்கு.]*

**கிளை—வைத்தல்** *kiḷai-,* 4 செ.கு.வி.(v.i.) ***கிளைவிடு*** பார்க்க; see *kiḷaviḍu.*

*[கிளை + வை.]*

**கிற்பு** *kiṟpu,* பெ.(n.) 1. வலிமை; strength, power, ability. *"கிற்புறு மாயை" (கந்தபு.திருக்கல்.61).* 2. வேலைப்பாடு; workmanship. *"கிற்புறு செய்யப் பூண் கிழியை நோக்கினான்" (கந்தபு. குமாரபுரி. 23).* 3. செய்கை (வின்.); action, act, performance. 4. அடிமைத்தனம்; slavishness. 5. கட்டுப்பாடு; discipline (த.மொ.அக.).

*[கில் → கிற்பு.]*

**கிற்புறு—தல்** *kiṟpuṟu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. எழுதுதல்; to write. 2. எழும்புதல்; to rise up. 3. கட்டுப்படுதல்; to submit oneself. *"கிற்புறு செய்ய பூண்கிழியை நோக்கினான்" (கந்தபு. குமார.24). (த.மொ. அக.).*

*[கிற்பு + உறு. கிற்பு = செய்கை, செயல்.]*

**கிற்றல்** *kiṟṟal,* பெ.(n.) 1. செய்யுந் திறங் கொள்ளுகை (சிலப்.16:183); being able to do. 2. அடிமைத்தனமுறல்; slavery. 3. கட்டுப்படுத்தல்; restraint.

*[கில் → கிற்றல்.]*

**கிறக்கம்** *kiṟakkam,* பெ.(n.) மிகுந்த தூக்கம், குடிபோதை, காம நுகர்ச்சி முதலியவற்றால் கண்கள் உள்ளிழுத்துக் கொள்ளும் மயக்க

நிலை; stupor, drowsiness, languor. தூக்கக் கிறக்கம் (உ.வ.). அவளுடைய அழகு ஏற்படுத்திய கிறக்கம் (உ.வ.).

*[கிறு → கிறக்கம்.]*

**கிறக்கு-தல்** *kiṟakku-,* 5 செ.கு.வி.(v.i.) ஒருவரை தூக்கம், காமம், குடிபோதை முதலியன நிலைதடுமாறச் செய்தல், மயக்குதல்; induce languor, stupor. தூக்கம் கிறக்குகிறது (உ.வ.) அவளுடைய நினைவு மனத்தைக் கிறக்கிற்று (உ.வ.).

*[கிறு → கிறங்கு → கிறக்கு.]*

**கிறங்கு-தல்** *kiṟaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒருவர் தூக்கம், குடிபோதை, காமநுகர்ச்சி முதலியவற்றால் நிலை தடுமாறுதல், மயங்குதல்; be in languor, stupor. போதைப் பொருள்கள் நரம்பைத் தூண்டிக் கிறங்க வைக்கும் (உ.வ.). 2.சோர்வடைதல்; get jaded dizzy. வெயிலில் நடந்து வந்ததால் குழந்தை கிறங்கிப் போய்விட்டான் (உ.வ.).

*[கிறு → கிறங்கு.]*

**கிறட்டி** *kiṟaṭṭi,* பெ.(n.) பிரண்டை; adamantine creeper, vitis quadrangular. (சா.அக.).

*[கிறு → கிறட்டி.]*

இதை உணவில் சேர்த்துக்கொள்ள வயிற்றுக் கோளாறுகள் நீங்கும் என்பர். இதைத் துவையலாக அரைத்து உண்பர்.

**கிறட்டை** *kiṟaṭṭai,* பெ.(n.) ஒரு மருந்துப் பூடு; an unknown medicinal plant (சா.அக.).

*[கிறு → கிறட்டை.]*

**கிறமுகம்** *kiṟamugam,* பெ.(n.) தென்னை போன்ற பாக்குமரம்; areca nut resembling coconut tree.

*[கிறு + முகம் – கிறுமுகம் → கிறமுகம்.]*

**கிறாகிறாவெனல்** *kiṟā-kiṟā-veṉal,* பெ.(n.) மயிலின் அகவல் போன்ற ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying calling repeatedly, crying sound, as of a peacock (w.).

*[கிறா + கிறா + எனல்.]*

**கிறாம்** *kiṟām,* பெ.(n.) குறும்பன்; mischievous person. அவன் வலுத்த கிறாம் (யாழ்ப்.).

*[கிறு + ஆன் – கிறான் → கிறாம்.]*

**கிறாம்பு-தல்** *kiṟāmbu-,* 5 செ.கு.வி.(v.i.) மெல்லச் செதுக்குதல் (யாழ்.அக.); to plane, smooth off.

*[கின் → கிறு → கிறாம்பு → கிறாம்புதல்.]*

**கிறாய்**[1] *kiṟāy,* பெ.(n.) புற்கரடு (வின்.); green clod, sod, turf (n.).

*[கிறு → கிறாய்.]*

**கிறாய்**[2] *kiṟāi,* பெ.(n.) மீனைக் காயப்போடும் உப்பள உவர் நிலம் (மீனவ.); drying yard for fish in salt pan.

*[கிறு → கிறாய்.]*

**கிறாவு-தல்** *kiṟāvu-,* 5 செ.கு.வி.(v.) மயில்போல் அகவுதல்; to cry, as a peacock.

*[கிறு → கிறவு → கிறாவு.]*

**கிறாளித்தனம்** *kiṟāḷi-t-taṉam,* பெ.(n.) கொடுமை (உ.வ.); cruelty, hard-heartedness.

*[கிறு → கிறள் → கிறாளி + தனம்.]*

**கிறி**[1] *kiṟi,* பெ.(n.) 1. வழி (பிங்.); way, path (பிங்.). 2. குழந்தைகளின் முன்கையிலணியும் சிறு பவளவடம்; coral wristlet. *"கிண்கிணிகட்டிக் கிறிகட்டி" (திவ்.பெரியாழ்.1.9:2).*

*[கிறு → கிறி.]*

**கிறி**[2] *kiṟi,* பெ.(n.) 1. பொய்; falsehood, lie. *"கிறிபேசி மடவார் பெய்வளை கொள்ளும்" (தேவா.228: 6).* 2. தந்திரம்; stratagem, artifice. *"மூவடிமண் வேண்டிச் சென்ற பெருங்கிறி" (திவ்.இயற்.திருவிருத்.91).* 3. மாயம்; deceit, fraud, playful, mischief, practical joke. *"கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்" (திருவா.8:6).*

*[கிறு → கிறி.]*

**கிறி**[3]**–த்தல்** *kiṟi-,* 4 செ.குன்றாவி (v.t.) 1. மாயஞ் செய்தல்; to play pranks. *"பொய்யர்களைப் பொய்செய்து போதுபோக்கிக் கிறிப்பானை" (தேவா.684:10).*

ம. கிளிக்குக (பல்லிளித்தல்)

*[கிறு → கிறி.]*

**கிறிகள்ளி** *kiṟi-kaḷḷi,* பெ.(n.) வெள்ளைக் காக்கணம்; white mussell-shell creeper (சா.அக.).

*[கிறி + கள்ளி.]*

**கிறிச்சல்** *kiṟiccal,* பெ.(n.) தீ முறுகற் செய்நஞ்சு( சங்.அக.); a prepared arsenic.

*[கிறி → கிறிச்சல்.]*

**கிறிச்சான்** *kiṟiccāṉ,* பெ.(n.) கிறிச்சென்று ஒலிக்குங் கருவி (வின்.); watch-man's rattle, child's rattle (w).

*[கிறிச்சு → கிறிச்சான்.]*

**கிறிச்சிடு–தல்** *kiṟicciḍu-,* 20 செ.கு.வி.(v.i.) கிறிச்சென்று ஒலித்தல்; to creak, as new shoes, a wheel, an oil mill, a door, to sound, as a watch man's rattle.

*[கிறிச்சு + இடு–.]*

**கிறிச்சு** *kiṟiccu,* பெ.(n.) ஒலிவகை; creaking sound. கிறிச்சுச் சோடு.

*[கிறி → கிறிச்சு.]*

**கிறிச்சுக்கிறிச்செனல்** *kiṟiccu-k-ki-ṟicceṉal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onam expr. signifying creaking noise.

*[கிறிச்சு + கிறிச்சு + எனல்.]*

**கிறிச்சுச்சடா** *kiṟiccu-c-caḍā,* பெ.(n.) கிறிச்சென் றொலிக்குஞ் செருப்பு வகை; creaking shoes.

*[கிறிச்சு + சடா.]*

**கிறிச்சுச்சாட்டை** *kiṟiccu-c-cāṭṭai,* பெ.(n.) இலங்கையில் கண்டி நாட்டுத் தலைமையதிகாரிகள் முன்பு கிறிச்சென்று ஒலிக்கச் செய்யுஞ் சாட்டை (யாழ்ப்.); a large whip creaked before the chief officers of the Kandyan country (J).

*[கிறிச்சு + சாட்டை.]*

**கிறிச்சுத்தலையணை** *kiṟiccu-t-talai-yaṇai,* பெ.(n.) கிறிச்சென்று ஒலியிடுந் தலையணை; creaking pillow.

*[கிறிச்சு + தலையணை.]*

**கிறித்தவம்** *kiṟittavam,* பெ.(n.) கிறித்துவின் வாழ்க்கையையும், அறிவுறுத்தல்களையும் வாழ்க்கை நெறியாகக் கொண்ட மதம்; Christianity. கிறித்தவத்தின் வழிகாட்டு நூலாக விவிலியம் (பைபிள்) துலங்குகிறது (உ.வ.).

*[கிறித்து → கிறித்தவம்.]*

**கிறு** *kiṟu,* இடை. (part). ஒரு நிகழ்கால இடைநிலை; sign of the present tense. *"ஆநின்று கின்றுகிறு" (நன்.143).*

*[செய்கு → செய்குதான் → செய்கிறான் எனக் குகர ஏவலீறும்தகர எழுத்துப்பேறும் திரிந்த இடைத்திரிபே 'கிறு' எனத் தோற்றம் தந்தது. உண்குதான் கேட்குதான் எனும் தென்பாண்டி வழக்குகளை நோக்குக.]*

**கிறுக்கட்டி**[1] *kiṟukkaṭṭi,* பெ.(n.) இலுப்பைப் பூ முதலான பூக்களை வறுத்துப் பாகில் செய்யும் பணியாரம்; confection made of fried Mahwa flowers etc.

*[கிறு + கட்டி.]*

**கிறுக்கட்டி**[2] *kiṟu-k-kaṭṭi,* பெ.(n.) கண்கட்டி; sty in the eye.

மறுவ. கட்கட்டி, கண்கட்டி.

*[கிறு + கட்டி.]*

**கிறுக்கர்மடம்** *kiṟukkar-aḍam,* பெ.(n.) மனநோயாளிகளை ஆய்வுக்காக நிறுத்தி வைக்கும் இடம்; lunatic asylum.

*[கிறுக்கர் + மடம்.]*

**கிறுக்கல்** *kiṟukkal,* பெ.(n.) 1. தாறுமாறாக எழுதுகை; scribbling, writing hastily and clumsily. 2. எழுத்தின் அடிப்பு; scoring out. 'அழகாக எழுதவும்' என்ற கட்டுரைக் குறிப்பினை இப்படியா கிறுக்குவது (உ.வ.).

*[கிறுக்கு → கிறுக்கல்.]*

**கிறுக்கன்** *kiṟukkaṉ,* பெ.(n.) தான் செய்வது இன்னதென்று அறியாதபடி இருக்கும் அறிவு கலங்கியவன், மனநோயினன்; lunatic. அந்தக் கிறுக்கன் யாரைக் கண்டாலும் கல்லால் அடிப்பான் (உ.வ.). 2. அதிகமான பற்றும், இயல்பல்லாத நடத்தையும் உடையவன்; eccentric. திரைப்பட கிறுக்கன் (உ.வ.). 3. இறுமாப்புடையவன்; conceited, arrogant fellow.

ம. கிறுக்கன்

*[கிறுக்கு + அன்.]*

**கிறுக்கு**[1]**-தல்** kiṟukku-, 5 செ.கு.வி.(v.i.) 1. எழுதுதல் (பிங்.); to write. 2. உருத்தெரியாமல் எழுதுதல்; to scribble, write illegibly. 3. வரைந்த எழுத்தை அடித்தல் (வின்.); to cancel, score out.

ம. கிறுக்க; க. கீசு; தெ. கிர்க்கு; கோத. கீர்(கோடு)

*[கீள் → கீறு → கிறுக்கு.]*

**கிறுக்கு**[2]**-தல்** *kiṟukku-,* 5 செ.கு.வி.(v.i.) தலை சுற்றுதல்; to feel giddy, to be delirious, dizzy.

*[கிறு → கிறுக்கு-.]*

**கிறுக்கு**[3] *kiṟukku,* பெ.(n.) 1. உருத்தெரியாத எழுத்து; scribble. 2. எழுதிய எழுத்தைக் கீறியடிக்கை; scoring out anything written. 3. தலைச்சுற்று; giddiness, dizziness. 4. மனநலம் குன்றியமை (பைத்தியம்) (பெருந்தொ.1301); craziness, eccentricity, lunacy . 5 மிக்க ஆசை; passion, as for a thing. 6. செருக்கு (வின்.); egoism, self, conceit.

ம. கிறுக்கு; தெ. கிறுகு (சுற்றச் செய்தல்).

*[கிறு + கிறுக்கு.]*

**கிறுக்குநாய்** *kiṟu-k-kunāy,* பெ.(n.) வெறி (பைத்தியம்) பிடித்த நாய்; a rabid dog.

*[கிறுக்கு + நாய்.] (சா.அக.).*

**கிறுக்குநோவு** *kiṟukku-nōvu,* பெ.(n.) ஒருவகை ஆட்டுநோய் (M.Cm.D.(1887) 249).; a discease of sheep.

*[கிறுக்கு + நோவு]*

**கிறுகிறு-த்தல்** *kiṟu-kiṟu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மயக்கமாதல்; to be giddy, dizzy, to swim as the head. தலை சுழன்று கிறுகிறுத்து (பிரபோத.18,54). 2. தடுமாறுதல்; to be confounded, confused, disconcerted(u.). *'கேட்டுக் கிறுகிறுத்துப் போனேனேயடா' (கவிமணி.).*

ம. கிறுஞ்சுக

*[கிறுகிறு → கிறுகிறுப்பு.]*

**கிறுகிறுப்பு** *kiṟu-kiṟuppu,* பெ.(n.) 1. தலைச்சுழற்சி; giddiness, dizziness, swimming of the head, vertigo. *"இந்த மையலுங் கிறுகிறுப்புந் தையலவர்க் குண்டோ" (குற்றா.குற.73:3).*

*[குறு → கிறு → கிறுகிறு → கிறுகிறுப்பு.] (மு.தா.276).*

**கிறுகிறெனல்** *kiṟu-kiṟeṉal,* பெ.(n.) 1. தலைசுற்றற் குறிப்பு; expr. signifying being giddy, dizzy state. 2. விரைவுக் குறிப்பு; expr. signifying moving rapidly.

*[குறு → கிறு → கிறுகிறு – எனல்.]*

**கிறுங்கு–தல்** *kiṟuṅgu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. அசைதல்; to move, stir, shake, stagger. அவன் சற்றுங் கிறுங்கவில்லை (உ.வ.).

ம. கிறுங்ஙுக; **தெ.** திரசு.

*[கிறு → கிறுங்கு.]*

**கிறுசந்திரன்** *kiṟucandiraṉ*, பெ.(n.) நீர்ப்பாசி, நீரில் வளரும் பாசியினத்தைச் சேர்ந்த செடி; water - moss, duck-weed lumnaceae (சா.அக.).

*[கிறு + சந்திரன்.]*

**கிறுசன்**[1] *kiṟušaṉ*, பெ.(n.) 1. குங்குமப்பூ (மலை.); the flower of a bulbous-rooted plant. 2. மஞ்சள் (மலை.); turmeric.

*[கிறு → கிறுசன்]*

**கிறுத்தவம்** *kiṟuttuvam*, பெ.(n.) அகில் (மலை.); eagle-wood.

*[கிறு → கிறுத்தவம்.]*

**கிறுதி** *kiṟudi*, பெ.(n.) பக்க ஊதை (பாரிசம்), கைகால்கள் இயங்கும் தன்மையை இழந்துவிடல்; paralysis (சா.அக.).

*[கிறு → கிறுதி.]*

**கிறுது** *kiṟutu*, பெ.(n.) மென்மை, இனிமை; softness, tenderness. *"கிறுதுபடு மொழிபழகி"* (திருப்பு.790).

*[கிறு → கிறுது.]*

**கிறுதுகம்** *kiṟudugam*, பெ.(n.) பீர்க்கின் உள்ளே பஞ்சுபோல், மெதுவாக இருக்கும் கொடிவகையைச் சேர்ந்த காய்; luffa-luffa amara (சா.அக.).

*[கில் → கிறு → கிறுதுகம்.]*

**கிறிது சுண்டி** *kiṟutušuṇḍi*, பெ.(n.) நீர்ச்சுண்டி; water - minmose (சா.அக.).

*[கில் → கிறுது + சுண்டி.]*

**கிறுபந்திகம்** *kiṟupandigam*, பெ.(n.) திப்பிலி; long pepper (சா.அக.)

*[கிறு + பந்திகம்.]*

**கின்று** *kiṉṟu*, இடை (part.). ஒரு நிகழ்கால இடைநிலை; sign of the present tense, as in செய்கின்றது. *"ஆநின்று கின்றுகிறு"* (நன்.143).

*[செய்கு + உந்து – செய்குந்து எனும் வாய்பாட்டினை ஒட்டி செய்குந்தான், செய்கின்றான் எனத் திரிந்த திரிபாதலின் 'கின்று' என்பதைத் தனித்த இடைநிலையாகக் கருதவியலாது. இந்தத் திரிபு இடைக்காலப் பேச்சு வழக்குத் திரிபாகும்.]*

**கின்னகம்** *kiṉṉagam*, பெ.(n.) 1. தூக்கணங் குருவிக் கூடு; nest of weaver bird. 2. தூக்கணங் குருவி; weaver bird. *"கின்னக விளக்கம்"* (இரகு.நாட்.44).

*[கில் → கின் → கின்னகம் = கவிழ்ந்த நிலையிலுள்ள கூடு கட்டும் பறவை, தூக்கணங்குருவி.]*

**கின்னம்** *kiṉṉam*, பெ.(n.) துன்பம்; affliction, sorrow, distress. *"கின்னங் குறித்தடியேன்..... செவி சொன்ன"* (கந்தரலங்.24).

*[இல் → இன் → கின் → கின்னம். இல் = குத்தல், துளைத்தல் கருத்துவேர்.]*

**கின்னரச்சுரை** *kiṉṉara-c-curai*, பெ.(n.) பாம்பாட்டிகள் ஊதும் மகுடி என்னும் காற்றிசைக் கருவி செய்யப் பயன்படும் சுரை (m.m.293); calabash climber as used by snake-charmers for a wind instrument.

*[கின்னரம் + சுரை.]*

உருண்டைச் சுரைக்காய். இது காய்ந்த ஓடு, கின்னரி, வீணை முதலிய நரம்பிசைக் கருவிகளுக்கு உதவும் (சா.அக.).

**கின்னரப்பெட்டி** *kiṉṉara-p-peṭṭi* பெ.(n.) ஒத்தியம் (ஆர்மோனியம்) போன்ற காற்றிசைக்கருவி வகை; musical instrument as harmonium, piano.

மறுவ. கின்னரர்பெட்டி

[கின்னரம் + பெட்டி.]

**கின்னரம்** *kiṉṉaram,* பெ.(n.) 1. இசையெழுப்பும் பறவை வகை; a sweet-voiced bird credited with musical powers. *"கின்னர முரலு மணங்குடைச் சாரல்" (பெரும்பாண்.494).* 2. நீர்வாழ் பறவை (பிங்.); water-fowl. 3. ஒருவகை யாழ்; a kind of lute. *"தந்தங் கின்னரந் தொடுகிலோ மென்றனரே" (திவ்.பெரியாழ்.3:6.5).* 4. ஆந்தை (பிங்.); owl, perh, ironically.

**தெ.** கின்னர, கின்னெர.

**Fin.** kannel, kantele; **Es.** kannel; **Mong.** xanggilga; **Jap.** kane, kanaderu; **Q.** kantela.

*[கின்னரம் = கின்னரம் போல் இசையெழுப்புவன.]*



கின்னரம்

**கின்னரர்** *kiṉṉarar,* பெ.(n.) யாழிசை வல்லவர்; celestial musicians *patiṉeṉ-kaṇam. "பண் ணெறிந்தாள் கின்னரருஞ் சோர்ந்தா ரன்றே" (சீவக.647).*

*[கின்னரம் → கின்னரர். கின்னரர் குதிரை முகமுடையவர் எனத் தொன்ம (புராணம்) வியலார் கூறுவது ஏற்புடைத்தன்று.]*

**கின்னரர்பிரான்** *kiṉṉararpirāṉ,* பெ.(n.) குபேரன் (பிங்.); *Kubēraṉ,* as lord of *Kiṉṉarar.*

*[கின்னரர் + (பெருமான்) பிரான்.]*

**கின்னராகம்** *kiṉṉa-rāgam,* பெ.(n.) ஒரு பெரும்பண் (பிங்.); a main musical mode.

**க.** கின்னரிகெ

*[கின்னரம் + (அராகம்) ராகம்.]*

**கின்னரி**[1] *kiṉṉari,* பெ.(n.) ஆந்தை; owl.

*[கின்னரம் → கின்னரி.]*

இரவு நேரத்தில் பறக்கும் ஒரு பறவை, இது எழுப்பும் ஓசை அலறலாகக் கேட்பதால் இதைப் பார்ப்பது தீய நிமித்தமாகக் கருதப்படும் (சா.அக.).

**கின்னரி**[2] *kiṉṉari,* பெ.(n.) 1. யாழ்வகை; a musical instrument, smaller than the viṇai. having two steel strings. *"கின்னரி வாசிப்பார்" (திருப்போ. சந்.பிள்ளைத்.சிறுபறை.8).* 2. கின்னர இனப் பெண்; celestial female chorister. இரண்டு கையுடை யராகக் கனமாகச் செய்த கின்னரிகள் இருவர் (S.I.I.II.200).

*[கின்னரம் → கின்னரி.]*

**கின்னாரர் பெட்டி** *kiṉṉarar-peṭṭi,* பெ.(n.) ***கின்னரப் பெட்டி*** பார்க்க; see *kiṉṉarap-peṭṭi.*

*[கின்னரப் பெட்டி → கின்னாரப்பெட்டி.]*

**கின்னி** *kiṉṉi,* பெ.(n.) மழைக்கிளி (வின்.); large green locust.

*[கிள்ளி → கிண்ணி → கின்னி (கொ.வ.)]*

**கின்னிக்கோழி** *kiṉṉi-k-kōḻi,* பெ.(n.) கினியா தேயத்துக் கோழி (வின்.); Guinea-fowl.

*[கின்னி + கோழி]*

**கினாகினாவெனல்** *kiṉā-kiṉā-veṉal,* பெ.(n.) குழப்பக் குறிப்பு; onam. expr. signifying confusion, disorder, disharmonry.

*[கினா + கினா + எனல்.]*

**கினி**[1]**–தல்** *kiṉi-,* 4 செ.கு.வி.(v.i.) முற்றும் கவிதல்; to envelope, engulf, swallow. *"ஒரு மேருவைக்*

கினியக் காளமேகம் படிந்தாற் போலே" (ஈடு.3,8:1).

[குல் → கில் → கினி. குல் = கவிதல்.]

**கிளிப்புல்** *kiḻi-p-pul,* பெ.(n.) 1. கினியாதேயத்துப் புல (m.m.333); tall Guinea-grass, native cf Africa. 2. கோரைப்புல்;a grass found luxuriously near wells, garden etc., (சா.அக.).

[கினியா → கினி + புல்.]

**கினை** *kiṉai,* பெ.(n.) 1. நீறு ஆக்கும்போது ஆவியாகாமல் காய்தற்குரிய காப்பு உறை; cover to prevent evaporation during calcination. 2. விளாம்பழம் (மலை.); wood apple.

[கினி → கினை.]

**கினைசாரம்** *kiṉaiśāram,* பெ.(n.) விளாம்பழம்; wood apple.

[கினை + சாரம்.]

பிள்ளையார் நான்மி (சதுர்த்தி) அன்று படைக்கப்படும் பழம். இதன் ஓட்டைப் பிளந்து உள்ளிருக்கும் பழப்பகுதியை, அக்காரத்துடன் கலந்து படைப்பர் (சா.அக.).

**கீ** *kī* க் தமிழ் நெடுங்கணக்கில் அடியண்ண எடுத்தொலிப்பு வல்லின முதல் மெய்யும் (க்) நெட்டுயிரான 'ஈகாரமும்' சேர்ந்து உயிர்மெய்யாகிய சார்பெழுத்து; The syllable formed by adding the vowel 'i' to the consonant 'k'.

[கா + ஈ – கீ.]

**கீக்கீயெனல்** *kī-k-kī-y-eṉal,* பெ.(n.) பறவையொலிக் குறிப்பு; onom. expr. signifying (a) chirping, peeping sound as a chickens : (b) screeching, screaming sound, as of birds.

க. கீகீ; தெ. கீகீ.

[கீ+கீ+எனல்.]

**கீங்கா** *kiṅgā,* பெ.(n.) **கீங்காக்கயிறு** பார்க்க; see *kiṅgā-k-kayiṟu.*

[கீங்காக்கயிறு → கீங்கா.]

**கீங்காக்கயிறு** *kiṅgā-k-kayiṟu,* பெ.(n.) வலையின் கீழ்க்கயிறு; rope of the longer end of fishing net.

மறுவ. கீங்கா

[கீழ் → கீழாங்கு → கீங்கா + கயிறு.]

**கீங்காப்பண்கயிறு** *kiṅgā-p-paṇkayiṟu,* பெ.(n.) வலையின் கீழ்ப்பகுதியில் அமைந்த செயற்கை யிழை; synthetic rope of the fishing net.

[கீழாங்கு → கீங்கு → கீங்கா + பண்கயிறு.]

**கீங்காப்பந்தல்** *kiṅgā-p-pandal,* பெ.(n.) கீழ் வலையை எடுத்துவிடுதல்; to take away the lowernet.

[கீழாங்கு →கீங்கு →கீங்கா + பாந்தல் (பந்தல் (கொ.வ.).]

**கீச்சாங்குருவி** *kiccāṅ-kuruvi,* பெ.(n.) பறவை வகை (m.m.432.); large grey shrike, which imitates the cry of small birds in order to attract and capture them

[கீச்சு + ஆம் + குருவி. அம் → ஆம் – சாரியை முதனிலைத் திரிபு.]

**கீச்சான்** *kiccāṉ* பெ.(n) 1.குழந்தை; infant (உ.வ.). 2. கீச்சாங்குருவி; large grey shrike. 3. கடல்மீன் வகை; a sea-fish greyish.

ம. கீச்சான்

[கீச்சு → கீச்சான்.]

**கீச்சான்கீச்சான்தன்புள்ளான்** *kiccāṉ-kiccāṉ-taṉpuḷḷāṉ,* பெ.(n.) மணற்குவியலில் சிறுகுச்சியை ஒளித்துவைத்துப்பின் கண்டெடுக்கும், குழந்தை விளையாட்டு; child's game of finding out a small stick hidden in a ridge of sand.

மறுவ. கீச்சுக்கீச்சுத்தம்பலம், கீச்சுக் கீச்சுத்தாம்பாளம்.

*[புள் = பறவை. கீச்சான் + கீச்சான் + தன் + புள் + ஆன். கீச்சான் = பறவை கத்தும் ஒலிக் குறிப்பு. தன்புள் = தன்பறவை. தன் பறவையைக் கண்டுபிடிப்பதென்பது குறிப்புப் பொருள்.]*

**கீச்சி** *kicci,* பெ.(n.) பாசிமணியாலான கழுத்தணி (யாழ்ப்.); necklace, commonly, of black earthern beads.

*[கரிச்சி → காச்சி → கீச்சி.]*

**கீச்சிடு-தல்** *kiccidu-,* 20 செ.கு.வி. (v.i.) கீச்சென்று ஒலியெழுப்புதல்; to chrip, as birds, lizards to twitter, chatter, as monkeys, to speak or call with a shrill sound, to speak, scream, as an infant.

ம. கீச்சுக

*[கீச்சு + இடு.]*

**கீச்சு**[1] *kiccu,* பெ.(n.) 1. அழுகையொலி; shrill crying sound, scream. 2. ஒருவகைப் புள்ளொலி; chirps of birds (w).

ம. கீச்சு; க., தெ. கீசு; து. கீச்.

**கீச்சு**[2] *kiccu,* பெ.(n.) உருகியிறுகிய இரும்பு (யாழ்ப்); scoria.

**Fin.** kytea; **Es.** kutta; **Mansi.** kus; **Jap.** kitsnen; **Q.** katab.

*[கிச்சு = நெருப்பு. கிச்சு → கீச்சு (கிச்சில் = உருகி இறுகிய இரும்பு.]*

**கீச்சுக்கிட்டம்** *kiccu-k-kittam.* பெ.(n.) இரும்புக் கிட்டம்; Iron dross.

*[கீச்சு + கிட்டம். கீச்சு = உருகியிறுகிய இரும்பு. கிட்டம் = கரிக்கட்டி.]*

**கீச்சுக்கீச்சுத்தம்பலம்** *kiccu-k-kiccu-t-tambalam,* பொ.(n.) **கீச்சான் கீச்சான் தன்புள்ளான்** பார்க்க; see *kiccan-kiccan-tanpullan*

மறுவ. கீச்சுக்கீச்சுத்தம்பாளம்

*[கீச்சு + கீச்சு + தன்புள்ளான் (தம்பலம்).]*

**கீச்சுக்கீச்சுத்தாம்பாளம்** *kiccu-k-kiccu-t-tām bāḷam,* பெ.(n.) **கீச்சான் கீச்சான் தன்புள்ளான்** பார்க்க; see *kiccan-kiccan-tanpullan.*

*[கீச்சு + கீச்சு + தாம்பாளம்.]*

**கீச்சுக்கீச்செனல்** *kiccu-k-kiccenal,* பெ.(n.) ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying screaming, squeaking, chirping, twittering sound. *"பேச்சுப் பேச்சென்னும் பெரும்பூனை வந்தக்கால் கீச்சுக்கீச் சென்னுங் கிளி" (தனிப்பா. 92,6).*

*[கீச்சு + கீச்சு + எனல்.]*

**கீச்சுக்குரல்** *kiccu-k-kural.* பெ.(n.) ஒருவகை மென்குரல்; shrill voice, feminine or childish. *"மறைமலையடிகளார்"* தம் கீச்சுக் குரலால் தமிழுலகத்தையே வென்றார் (உ. வ.).

*[கீச்சு + குரல்.]*

**கீச்சுத்தாரா** *kiccu-t-tārā,* பெ.(n.) செங்கிளுவைப் புள்; whistling teal, from its piping note when on the wing.

*[கீச்சு + தாரா.]*

**கீச்சுப்புட்டை** *kiccu-p-puttai,* பெ.(n.) அண்டவூதை (M.L.); hernia.

*[கீச்சு + புட்டை. புட்டை = ஆண் உயிரினத்தின் விதை (விதைக்காய்).]*

**கீச்சுமூச்செனல்** *kiccu-mūccenal,* பெ.(n.) கூக்குரலிடுங் குறிப்பு; onom. expr. signifying buzzing sound, noisiness as of a house, full of children, a hen and her brood.

*[கீச்சு + மூச்சு + எனல்.]*

**கீசகநாடகம்** *kiśaga-nādagam,* பெ.(n.) முறை கேடான நடத்தை; shameless, immodest behaviour as that of *Kiśagan* towards Draupadi. *"அவன் கீசகநாடகம் பண்ணுகிறான்" (வின்.).*

*[கீசகன் + நாடகம்.]*

**கீசகம்**[1] *kīšagam,* பெ.(n.) குரங்கு (பிங்.); monkey.

*[கீச்சு → கீச்சகம் → கீசகம் (கீச்சுக்குரல் எழுப்பும் குரங்கு).]*

**கீசகம்**[2] *kīšagam,* பெ.(n) மூங்கில் (திவா.); bamboo.

ம. கீசகம்; Skt. kicaka

*[கழை → கய்சகம் → கீசகம் (கொ.வ.).]*

**கீசகம்**[3] *kīšagam,* பெ.(n) தலைச்சீரா;helmet. "கீசகத்தோடே போக்குமென்னுதல்" (திவ்.திருமலை, 40. 133. வியா.).

*[கொய்சகம் → குய்சகம் → கீசகம் (கொ.வ.). கொய்சகம் = மடித்துச் சுற்றும் தலைப்பாகை, தலைப்பாகை போன்ற தலைக்காப்பீடு.]*

**கீசகன்** *kīšagaṉ,* பெ.(n.) விராடனுக்குப் படைத் தலைவனும் வீமனாற் கொல்லப்பட்டவனுமான கொடியவன் (பாரத. கீசக.14.); Kīšaga, comman-der-in-chief of Virāḍa, noted for his profligacy and slain by Bhima in one of his wicked attempts.

*[கீசகம்[3] → கீசகன்.]*

**கீசம்பறை** *kīšam-paṟai,* பெ.(n) 1. ஒருவகைப் பறை; a kind of drum. 2. பேரோசை; loud noise. 3.பெருங் குழப்பம், ஒழுங்கீனம் (யாழ்ப்.); confusion, disorder (j).

மறுவ. கீசறை

*[கீச்சம் (ஒலிக்குறிப்பு) → கீசம் + பறை.]*

**கீசரன்** *kīšaraṉ,* பெ.(n.) ***கீசரி*** பார்க்க (சங்.அக.); see *kīšari.*

*[கீசரி → கீசரன்.]*

**கீசரி** *kīšari,* பெ.(n.) சரக்கொன்றை (மலை.); Indian laburnam.

மறுவ. கீழ்ச்சரம், கீசரன்.

*[கீழ் + சரம் – கீழ்ச்சரம் → கீசரி (கொ.வ.). கீழ்நோக்கி வளைந்த பூங்கொத்துடைய சரக்கொன்றை மரம் கீழ்ச்சரம் எனப்பட்டது. கீழ்ச்சரம் பார்க்க; see kīḻccaram.]*

**கீசறை** *kīšaṟai,* பெ.(n.) கீசம்பறை; a kind of drum.

*[கீசம் + பறை → கீசறை.]*

**கீசுகீசெனல்** *kīšu-kīšeṉal,* பெ.(n.) ***கீச்சுக்கீச் செனல்*** பார்க்க; see *kīccu-k-kīcceṉal.* "கீசுகீசென்றெங்கு மானைச் சாத்தன் கலந்து பேசின பேச்சரவம்" (திவ். திருப்பா.7).

*[கீசு + கீசு + எனல்.]*

**கீடக்கினம்** *kīḍakkiṉam,* பெ.(n.) பூச்சிகளைக் கொல்லும் வன்மை வாய்ந்த கந்தகம்; sulphur so called fron its property of killing insects (சா.அக.).

*[கீள் → கீழ் → கீழம் → கீடம் = பூச்சி, புழு. கீடம் + கு + ஈனம் – கீடக்கீனம் → கீடக்கினம். ஈனம் = அழிவு.]*

**கீடப்பகை** *kīḍa-p-pagai,* பெ.(n.) வாய்விளங்கம் என்னும் மூலிகை (தைலவ.தைல.8); worm killer, common wind berry.

*[கீடம் + பகை. கீடம் = புழு.]*

**கீடம்** *kīḍam* பெ.(n.) 1. புழு (திவா.); worm, maggot, any of vermin species. 2. கோற்புழு (பிங்.); case-worm, larva of the caddis-fly. 3. வண்டு (சூடா.); beetle that makes itself an earthen house.

*[கீள் = பிளத்தல், துளைத்தல், கடித்தல். கீள் → கீழ் → கீழம் → கீடம் (புழு, பூச்சி).]*

த.கீழம் > Skt. kīṭa.

**கீடமணி** *kīḍa-maṇi,* பெ.(n.) மின்மினி (சங்.அக.); fire-fly, glow-worm.

ம. சீடமணி

*[கீடம் + மணி.]*

**கீடமாரி** *kīḍa-māri* பெ.(n.) சிறுபுள்ளடி (மலை.); scabrous ovate unifoliate tick trefoil.

ம. கீடமாரி

*[கீடம் + மாரி.]*

**கீடிமா** *kīḍimā,* பெ.(n.) துத்தம்; white vitriol.

*[கீளி → கீடி → கீடிம → கீடிமா.]*

**கீண்டல்** *kīṇḍal,* பெ.(n.) கிழிக்கை (திவா.); rending, tearing, splitting.

ம. கீண்டல்

*[கீள் → கீண்டல்.]*

**கீணம்** *kīṇam,* பெ.(n.) சிதைவு (அக.நி.); deteriora - tion, decline, growing worse.

ம. கீணம்

*[கீள் → கீண் → கீணம்.]*

**கீணர்** *kīṇar,* பெ.(n.) கீழோர் (வின்.); mean, low, vulgar people.

*[கீழ்நர் → கீணர்.]*

**கீத்துக்கட்டை** *kīttu-k-kaṭṭai,* பெ.(n) மரங்களில் துளையிடும் பகுதிகளைக் குறியிடப்பயன்படும் கருவி; a marker to indicate points to be bored in trees (தச்சு.).

*[கீறு + கட்டை - கீற்றுக்கட்டை → கீத்துக்கட்டை (கொ.வ.).]*

**கீத்துக்கொட்டகை** *kīttu-k-koṭṭagai* பெ.(n.) **கீற்றுக்கொட்டகை** பார்க்க; see *kīṟṟu-k-koṭṭagai*

*[கீற்றுக்கொட்டகை → கீத்துக்கொட்டகை.]*

**கீத்துருணி** *kītturuṇi,* பெ.(n.) கேந்திப் பூ; a flower (சா.அக.).

*[கீற்று + உருளி - கீற்றுருளி → கீத்துருணி.]*

**கீதாரி** *kīdari,* பெ.(n.) 1. இடையன்; shephered. 2. இடையர் தலைவர்; headman of shephereds.

மறுவ. கீலாரி, கூழாளி.

க. கீலாரி, மரக. கில்லாரி.

*[கூழாளி → கீலாரி → கீதாரி. மூங்கிற்குழாயில் கூழ் எடுத்துச் செல்லும் இடையன் கூழாளி எனப்பட்டான். கூழார் இடையன் எனும் சொல்லாட்சி ஒப்பிடுக. **கூழாளி** பார்க்க; see kūḷāḷi.]*

**கீயோமுய்யோவெனல்** *kīyō-muyyō-v-eṉal,* பெ.(n.) பிள்ளைகள் கூக்குரலிடுங் குறிப்பு; onom. expr. signifying screaming, squalling, as children or young people.

*[குய்யோ முறையோ → கீயோமுய்யோ + எனல்.]*

**கீர்** *kīr,* பெ.(n.) சொல்; word (திவா.) speech. ஒ.நோ. கீர்வாணி, கலைமகள்.

*[கிள் → கீள் → கீர்.]*

**கீர்கீரெனல்** *kīr-kīr-eṉal,* பெ.(n.) ஒலிக்குறிப்பு onom. expr. signifying creaking sound as that of a saw when cutting timber squeaking screaming, squalling sound, as that of an infant. *“சங்கதனைக் கீர்கீரெனவைறுக்குங் கீரனோ” (பெருந்தொ. 1397).*

*[கீர் + கீர் + எனல்.]*

**கீர்த்திக்கொடி** *kīrtti-k-koḍi,* பெ.(n.) ஈசுரமூலி; Indian birth - wort (சா.அக.).

*[சீர்த்தி → கீர்த்தி + கொடி.]*

**கீரசால்** *kīrašāl,* பெ.(n.) விதைத்த புன்செய் நிலத்தில் ஆமணக்கு அவரை போன்ற விதை களைக் கைச்சாலில் விதைப்பதற்காக ஓட்டும் இடை யிட்ட நெடுஞ்சால் உழவு; inner divisional row when ploughing meant-for crops as casrtor, bean etc.

*[கீள் → கீர் → கீர + சால்.]*

**கீரந்தை** *kirandai,* பெ.(n.) இடைச்சங்கப் புலவருள் ஒருவர் (இறை.1. உரை.); a poet of the middle.

*[கீரன் + அந்தை. கீரன் = பழையன்.]*

**கீரநாண்** *kiranāṇ,* பெ.(n.) மயிர்; hair (சா.அக.).

*[கீழ்நாளமயிர் → கீழ்நாளம் → கீழ்நாண்.]*

**கீரம்**[1] *kiram* பெ.(n.) 1. கிளி; rose-ringed parakeet. 2. கருங்கிளி (திவா.); black parrot.

*[கிள் – கிள (பேசுதல்). த. கிள > Skt. kira. கிள → கீள → கீரம்.]*

**கீரம்**[2] *kiram,* பெ.(n.) 1. பால்; milk, 2. நீர்; water.

*[கீள் = பிளத்தல், பிளந்த பட்டை. கீள் → கீளம் → கீரம் = மரப்பட்டையினின்றும் வடியும் பசை, பால் நாளடைவில் நீரையும் பாலையும் குறித்தது.]*

**கீரன்** *kiraṉ,* பெ.(n.) **நக்கீரன்** பார்க்க; see *Nakkiraṉ.* *"சங்கதனைக் கீர்கீரென வறுக்குங் கீரனோ" (பெருந்தொ.1397).*

*[கீழ் → கீல் → கீலன் → கீரன். கீழ் = தொன்மை. பழமை. கீரன் = பழையோன், பழையன், பழைய குலவரவினன்.]*

**கீரி**[1] *kiri,* பெ.(n.) **கீரிப்பிள்ளை** பார்க்க; see *kiri-p-piḷḷai.*

மறுவ. மூங்கா, ம., க. கீரி; குட. கீரி; கூ.கிர்பெனி, குவிகிராண்டு.

*[கூரி → கீரி. (கூரான பல்லுடையது.)]*

**கீரி**[2] *kiri,* பெ.(n.) 1. கருவாலி; Ceylon tea. 2. மரவகை; a species of kambala tree. 3. கள்ளி; milk hedge.

*[காரி → கீரி (கருமை படர்ந்தது.)]*

**கீரிகண்ணி** *kirikaṇṇi,* பெ.(n.) வெண்காக்கணம்; white mussell - shell creeper (சா.அக.).

*[கீரி → கண்ணி.]*

**கீரிகம்** *kirigam,* பெ.(n.) வேப்பிலை; leaves of margosa tree (சா.அக.).

*[கீர் → கீரிகம் (பிளந்த கூர்முனை இலைத் தோற்றம் கொண்டது.)]*

**கீரிநங்கை** *kirinaṅgai,* பெ.(n.) சிறுயாணங்கை; snake-root; small nangy (சா.அக.).

*[கீரி + நங்கை. (சிறியாணங்கை வேர்). கீரி தின்னும் செடி என்பது கருத்தாகச் சொல்லலாம்.]*

**கீரிநாயகம்** *kirināyagam,* பெ.(n.) 1. ஆடுதின்னாப் பாலை; worm-killer. 2. நஞ்சறுப்பான்; country ipecacuanha (சா.அக.).

*[கீரி + நாயகம். கீரியைத்தாக்கும் பாம்பின் நஞ்சினைக் குறிக்கும் மூலிகை நாயகம் ஆயிற்று.]*

**கீரிநோய்** *kiri-nōy,* பெ.(n.) வயிற்றுப்பூச்சியால் வருங் குழந்தைநோய் (பாலவா.1044); disease in children arising from thread worms.

*[கீரை + நோய்.]*

**கீரிப்பல்** *kiri-p-pal,* பெ.(n.) கூர்மையான சிறுபல்; sharp little teeth as of mungoose.

மறுவ. சீர்ப்பல்

ம. கீரிப்பல்லு

*[கீரி + பல்.]*

**கீரிப்பாம்பு** *kiri-p-pāmbu,* பெ.(n.) வயிற்றிலுள்ள ஒருவகைப் பூச்சி; a species of intestinal worms. (W.)

மறுவ. கீரிப்பூச்சி, கீரைப்பூச்சி

ம. கீரிப்பாம்பு

*[கீரை + பாம்பு.]*

**கீரிப்பிள்ளை** *kiri-p-pillai* பெ.(n.) உலிலும் வாலிலும் அடர்த்தியான முடியுடையதும் பாம்புக்குப் பகையாக இருப்பதுமான ஒரு விலங்கு; common Indian mungoose, Indian ichreuman.

*[கீரி + பிள்ளை.]*

அணில், கீரி முதலிய அஃறிணைச் சொற்களோடு 'பிள்ளை' என்னும் சொல்லைச் சேர்த்துக் கூறுவது பண்டை மரபு. அணிற்பிள்ளை, கீரிப் பிள்ளை, கிளி, பூனை ஆகிய நான்கையும் ஓடும் பிள்ளை, பறக்கும் பிள்ளை, நடக்கும் பிள்ளை, இருக்கும் பிள்ளை எனக் குறிப்பது மரபு.



கீரிப்பிள்ளை

**கீரிப்புரண்டான்** *kiri-p-purandān,* பெ.(n.) ***கீரிப் பூண்டு*** பார்க்க; see *kiri-p-pūndu.*

*[கீரி + புரண்டான்.]*

**கீரிப்பூச்சி** *kiri-p-pūcci,* பெ.(n.) ***கீரைப்பூச்சி*** பார்க்க (பாலவா.1046); see *kirai-p-pūcci.*

*[கீரைப்பூச்சி → கீரிப்பூச்சி.]*

**கீரிப்பூச்சு** *kiri-p-pūccu,* பெ.(n.) செங்கல் வரிசை களுக்கிடையே பூசப்படும் காரைப்பூச்சு (செங்கை.); cement plastering between rows of bricks.

*[கீறு → கீறி → கீரி + பூச்சு.]*

**கீரிப்பூடு** *kiri-p-pūdu* பெ.(n.) ***கீரிப்பூண்டு*** பார்க்க; see *kiri-p-pūndu.*

*[கீரி + பூடு.]*

**கீரிப்பூண்டு** *kiri-p-pūndu,* பெ.(n.) பாம்பைக் கடித்த கீரி அதன் நஞ்சு தன்னை வருத்தாதிருக்கச் சார்ந்து புரளும் ஒரு பூண்டு; Indian snake-root, belived to be resorted to by the mungoose for getting rid of snake poison.

மறுவ. கீரிப்பூடு, கீரிப்புரண்டான்

*[கீரி + பூண்டு.]*

**கீரிமரம்** *kirimaram,* பெ.(n.) நெட்டிலிங்க மரம்; Indian mast tree (சா.அக.).

*[கீழி → கீளி → கீரி + மரம்.]*

**கீரியுள்ளான்** *kiri-y-ullān,* பெ.(n.) உள்ளான் வகை; a kind of snipe, as resembling a mungoose.

*[கீரி + உள்ளான்.]*



கீரியுள்ளான்

**கீரிராசி** *kiri-rāsi,* பெ.(n.) சுறுசுறுப்பில்லாது மிகப்பருத்துள்ள குதிரை வகை (அசுவசா.14); a species of horse characteristically sluggish.

*[கீழி → கீரி + ராசி.]*

**கீருகண்ணி** *kiru-kanni,* பெ.(n.) வெள்ளைக் காக்கணம்; white mussell-shell creeper (சா.அக.).

*[கீறு → கீரு + கண்ணி.]*

**கீருகம்பளி** *kiru-kambali* பெ.(n.) பீர்க்கு; sponge-gourd (சா.அக.).

*[கீறு → கீரு + கம்பளி.]*

**கீருடன்மூலி** *kirudan-mūli* பெ.(n.) துளசி; holy basil (சா.அக.).

*[கலுழன் → கருடன் → கிருடன் → கீருடன்.]*

**கீரை** *kirai* பெ.(n.) 1. தோட்டங்களில் வளர்க்கப் படும் செடியின் அல்லது முருங்கை, அகத்தி ஆகிய மரங்களின்; greens, pot-herbs, vegetables. *"அங்குழைக் கீரையடகு மிசையினும்" (பு.வெ.10; முல்லைப். 8).* 2. இலைக்கறி பொது; common name for greens.

மறுவ. அடகு, இலைக்கறி.

ம.சீர; க.கீரை, கிரெ; தெ.கீர,கிரெ; கோத.கீர்; ஆட.கீரப்; பட.கீரெ.

**Aust.** kirra (leaf).

*[குல் - முளைத்தல், தோன்றுதல். குல் → கில் → கீல் → கீர் → கீரை.]*

**இனவகைகள்:** 1.அறைக்கீரை 2. குப்பைக்கீரை 3. செந்தண்டுக் கீரை 4. சிறுகீரை 5. குமட்டிக் கீரை 6. கோழிக் கீரை 7. துடுப்புக் கீரை 8. பருப்புக்கீரை 9. பறட்டைக் கீரை 10. பிண்ணாக்குக்கீரை 11. முள்ளிக்கீரை 12. வள்ளைக் கீரை 13. அகத்திக்கீரை 14. மின்னைக் கீரை 15. புளியாரைக்கீரை 16. புளிச்சைக் கீரை 17. முளைக் கீரை 18. புளிச்சிறுகீரை எண் 15ல் உள்ளபடியே 19.பொன்னாங்கண்ணி 20. கரிசலாங்கண்ணி 21. ஆரைக்கீரை 22. பசலைக் கீரை 23. சோகிக்கீரை 24. வெந்தயக் கீரை 25. மணித் தக்காளிக்கீரை 26. காசினிக்கீரை 27. சாணாக்கிக்கீரை இன்னொரு வகை 28. புதினாக்கீரை 29. கறிவேப்பிலை 30. பூங்கீரை 31. முக்குளிக்கீரை 32. பலவகைக்கீரை அல்லது கலவைக் கீரை 33. தண்டுக்கீரை 34. தூதுவளைக்கீரை 35. பாற்சோற்றிக்கீரை அம்மான் பச்சரிசி 36. பண்ணைக் கீரை 37. காய்ச்சரைக் கீரை 38. மான்கீரை 39. துத்திக்கீரை 40. விழுதிக்கீரை 41. முருங்கைக் கீரை அல்லது காய்க்கீரை 42. பொடு தலைக்கீரை, 43. முசுமுசுக்கைக்கீரை 44. சிகப்புத் தோட்டக்கீரை 45. குள்ளந்தண்டுக் கீரை 46. சிறுபசலைக் கீரை 47. உமரிக்கீரை 48. மணலிக்கீரை 49. சுக்கங்கீரை 50. வல்லாரைக்கீரை (சா.அக.).

**கீரைக்கலவை** *kirai-k-kalavai* பெ.(n.) பல கீரை களின் கலவை; a mixture of several greens (சா.அக.).

*[கீரை + கலவை.]*

**கீரைக்காரன்** *kirai-k-kāraṉ* பெ.(n.) கீரையைப் பயிரிட்டு விற்போன்; cultivator and seller of pot-herbs.

*[கீரை + காரன்.]*

**கீரைக்காரி** *kirai-k-kāri* பெ.(n.) கீரைவிற்பவள்; seller of pot-herbs.

*[கீரை + காரி.]*

**கீரைக்குமட்டி** *kirai-k-kumaṭṭi* பெ.(n.) குமட்டிக்கீரை, a variety of greens (சா.அக..).

*[கீரை + குமட்டி.]*

**கீரைகடை-தல்** *kirai-kaḍai-,* 2 செ.கு.வி. (v.i.) *கீரைமசி-,* பார்க்க see *kirai-maši-,*

*[கீரை + கடை.]*

**கீரைச்சிறுமி** *kiraiccirumi* பெ.(n.) சிறுகீரை; field spinach (சா.அக.).

*[கீரை + சிறுமி.]*

**கீரைத்தண்டு** *kirai-t-taṇḍu,* பெ.(n.) உணவுக்குப் பயன்படும் கீரையின் தண்டு (பதார்த்த. 584); common spinach.

*[கீரை + தண்டு.]*

**கீரைத்தண்டுபோலாதல்** *kīrai-t-tanḍu pōlātal,* (vbl.n.) மரணக்குறியாக உடம்பு சில்லிட்டுப் போதல்; body becoming chill as a symptom of death (சா.அக.).

*[கீரைத்தண்டு + போல் + ஆதல்.]*

**கீரைநார்ப்பட்டு** *kīrai-nār-p-paṭṭu,* பெ.(n.) பூசைக் காலங்களில் உடுத்திக்கொள்ளப் பயன்படும் பட்டுச் சேலை வகை; a kind of silk, sometimes worn when performing religious duties.

*[கீரை + நார் + பட்டு.]*

**கீரைப்பாம்பு** *kīrai-p-pambu,* பெ.(n.) ***கீரைப்பூச்சி*** பார்க்க; see *kīrai-p-pūcci.*

*[கீரை + பாம்பு.]*

**கீரைப்பூச்சி** *kīrai-p-pūcci,* பெ.(n.) வயிற்றி லுண்டாகும் நாகப்பூச்சி, thread worms.

*[கீரை + பூச்சி.]*

**கீரைமசி—த்தல்** *kīrai-maśi-,* 4 செ.கு.வி. (v.i.) வெந்த உணவுக்கீரையை மத்தாற் கடைந்து கூழாக்குதல்; to mash pot-herbs to pulp.

*[கீரை + மசி.]*

**கீரைமணி** *kīrai-maṇi,* பெ.(n.) கழுத்திலணியும் ஒருவகைச் சிறு பாசிமணி; tiny glass beads of various colours, worn on the neck by poor women and children dist, fr. pāla-maṇi. ***"அயலார் புன் கீரைமணி பூண்டாலு மென்கண் பொறுக்காது"*** *(அருட்பா.i. விண்ணப்.359).*

*[கீரை + மணி.]*

**கீரைமணியட்டிகை** *kīrai-maṇi-y-aṭṭigai,* பெ.(n.) சிறு பொன்மணிகளுள்ள கழுத்தணிவகை; woman's necklace of tiny gold beads.

*[கீரைமணி + அட்டிகை.]*

**கீரைமீன்** *kīrai-mīṉ,* பெ.(n.) ஒருவகைச் சிறிய மீன்; a small kind of fish.

*[கீரை + மீன்]*

**கீல்**[1] *kīl,* பெ.(n.) 1. உடற்பொருத்து (தைலவ.தைல.); joint in animal body. 2. பெட்டியின் மூடி, கதவு முதலியவற்றைத் திறந்து மூடுவதற்குப் பயன்படுத்தும் மாழை (உலோகப்)ப்பட்டை; hinge.

*[குல் → கில் → கீல்]*

**கீல்(லு)—தல்** *kīl-,* 9 செ.குன்றாவி. (v.t.) கிழித்தல் (சூடா.); to rend, tear.

ம. கீள்; க. சீள்

*[கீள் → கீல்]*

**கீல்கீலாய்** *kīl-kīlāy,* வி.எ.(adv.) சந்துசந்தாய்; joint by join, piece meal.

*[கீல் + கீலாய்.]*

**கீல்சவ்வு** *kīlcavvu,* பெ.(n.) மூட்டுகளில் இருக்கும் சவ்வு; synovial membrane (சா.அக.).

*[கீல் + சவ்வு]*

**கீல்நெட்டை** *kīlneṭṭai,* பெ.(n.) கீலிலுண்டாகும் நெட்டைச் சத்தம்; crackling of the joints (சா.அக.).

*[கீல் + நெட்டை.]*

**கீல்நோய்** *kīlnōy,* பெ.(n.) மூட்டுகளுக்கு ஏற்படும் பலவகை நோய்கள்; diseases in common of the joints (சா.அக.).

*[கீல் + நோய்.]*

**கீல்முளை** *kīḷ-muḷai* பெ.(n.) கதவில் கீல்தாங்கும் முளை; pivot on which a hinge turns.

*[கீல் + முளை.]*

# கீரை வகைகள்





அரைக்கீரை



புளிச்சக் கீரை



பொன்னாங் கண்ணிக் கீரை



அகத்திக் கீரை



மணித்தக்காளிக் கீரை

**கீல்வாதம்** *kil-vādam,* பெ.(n.) ***கீல்லூதை*** பார்க்க; see *kilūdai.*

*[கீல் + வாதம் (ஊதை).]*

**கீல்வீக்கம்** *kil-vikkam,* பெ.(n.) உடற்பொருத்து, வீங்குகை; synovitis.

*[கீல் + வீக்கம்.]*

**கீல்லூதை** *kil-ūtai,* பெ.(n.) உடற்பொருத்துகளில் உண்டாகும் ஊதை நோய்; rheumatism as in the joints.

*[கீல் + ஊதை.]*

**கீலகம்**[1] *kilagam,* பெ.(n.) 1. ஆணி; pin, bolt, wedge. 2. பொருத்து; joint, juncture (e).

*[கீல் → கீலகம்.]*

**கீலகம்**[2] *kilagam* பெ.(n.) தந்திரம்; tact, shrewdness, subtlety. *"கீலகமறிந்து பேசுகிறவன்" (சங்.அக.).*

Mhr.gillā.

*[கீல் → கீலகம்.]*

**கீலகாவகம்** *kilakāvagam,* பெ.(n.) துடரிப்பூடு; prickly buch thorn (சா.அக.).

*[கீல் – கீல + காவகம்.]*

**கீலச்சு** *kilaccu,* பெ.(n.) உருவமுண்டாக்கும் கட்டளையச்சு (C.E.M.); mandrel.

*[கீல் : பொருத்து – கீல் + அச்சு.]*

**கீலசையாமை** *kil-aśaiyāmai,* பெ.(n.) கீல்பிடிப்பு; stiff-joints (சா.அக.).

*[கீல் + அசையாமை.]*

**கீலம்**[1] *kilam* பெ.(n.) 1. ஆணி (அக.நி.); nail, pin, spike. 2. சுடர்க்கொழுந்து; lambent, shooting flame. *"மலைக்கொடி பாலாகீலா" (குமர.பிர. முத்துக்குமார. பிள். தால.9).*

ம. கீலகம்; Skt.kila

*[கீல் → கீலம்.]*

**கீலம்**[2] *kilam,* பெ.(n.) பிசின்; resin. *"வெண்பாதிரி யின் கீலம்" (தைலவ.தைல.135).*

ம. கீலகம் Skt.krishira; Pkt.cila

*[கீல் → கீலம்.]*

**கீலம்**[3] *kilam,* பெ.(n.) 1. கிழிதுண்டம்; shred, piece torn off or hanging in strips. *"கீலங்கீலமாய்க் கிழிக்க" (யாழ்ப்.).* 2. வெட்டு (வின்.); incision for salting, cutting.

*[கீல் → கீலம்.]*

**கீலம்கீலமாயறுத்தல்** *kilam-kilamāy-aru-,* செ.கு.வி. (v.i.) கூறுகூறாய் அறுத்தல்; making several incisions alternatively in a fish for pickling salting, etc., (சா.அக.).

*[கீலம் + கீலம் + ஆய் + அறு-.]*

**கீலாணி** *kil-āni* பெ.(n.) கதவு முதலியவற்றின் கீலைப் பற்றியிருக்கும் ஆணி (C.E.M.); hinge nail.

*[கீல் + ஆணி.]*

**கீலாரி** *kilāri,* பெ.(n.) இடையர் தலைவன் (E.T.); headman of the shepherd caste.

க. கிலாரி, கிதாரி; Mhr.khillāri

*[கூழ் + ஆள் + இ – கூழாளி → கூழாரி → கீலாரி (கொ.வ.). கூழ் ஊற்றிய மூங்கிற் குழாயைத் தோளில் சுமப்பவன். கூழாரிடையன் என்பது இலக்கிய வழக்கு.]*

**கீலாலம்** *kil-ālam,* பெ.(n.) 1. நீர் (திவா.); water. 2. குருதி (சூடா.); blood. 3. காடி (சூடா.); vinegar.

4. தேன் ; honey. 5. தித்திப்புக் குடிநீர்; a sweet beverage (சா.அக.).

ம. கிலாலலம்; Skt. kilāla.

*[கில் + ஆலம். ஆலம் = நீர்.]*

**kilâla,** blood. If this word is composed of **kila** and **âla**, the first meaning might be "red water", **kila** being formed of **D. ken**, etc., "redness", and **âla** being "water" (see s. D. **âli1**, and cf. D. **kennir**). The Nn. (54) gives also the meaning of "redness" to **kilâla**, and Mr. (47) that of "a blazing flame". The last one is that of Sk. **kila, kilâ,** fire, flame. *kiśa*, the sun, belongs to the same D. root; cf. especially D. **kisu2**, (**kiḍi1**); - **kilâla**, a sweet beverage, reminds one of D. *siyāḷa* (si, sweet, **âla**, water), the sweet water of the cocoa-nut (K.K.E.D. XVII).

**கிலாலயம்** *kilālayam*, பெ.(n.) தோதகத்தி; Malabar black wood (சா.அக.).

*[கிலாலம் → கிலாலயம்.]*

**கிலி** *kili*, பெ.(n.) தந்திரமுள்ளவள்; artfulttwoman. *“காமுகர் மேலிட் டேயெறி கிலிகள்” (திருப்பு.569).*

**Mhr.** gillā

*[கிள்ளாடி → கிள்ளி → கில (கொ.வ.).]*

**கீழ்¹(ழு)-தல்** *kīḻ-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. கிழித்தல்; to rend, tear. *“பழம்விழுத்து... பஃறாமரை கீழும்” (திருக்கோ. 249).* 2. பிளத்தல்; to rive, split, cleave. *“உறுகால் வரைகீழ்ந்தென” (சீவக.1157).* 3. சிதைத்தல்; to destroy, demolish. *“கிழமையைக் கீழ்ந்திடா நட்பு” (குறள், 801).* 4. தோண்டுல்; to dig. *“வேரொடுங் கீழ்ந்து வெளவி” (சீவக.2727).* 5. மீறுதல்; to break, as a promise, to transgress, as a command. *“தாய்வார்த்தை கீழாத வாண்மை” (விநாயகபு.21:19).* 6. பறியுண்ணுதல்; to be uprooted, dislocated. *“மரங்கள் வேரொடுங் கீழ்ந்தென” (சூளா.சீய.144).*

க. கீழ்

*[கீள் → கீழு-.]*

**கீழ்²(ழு)-தல்** *kīḻ*, 4 செ.கு.வி. (v.i.) 1.இழுத்தல்; to pull. 2. கோடு கிழித்தல்; to draw, as a line, a diagram.

*[கீள் → கீழ்-.]*

**கீழ்³** *kīḻ*, (பெ.(n.) 1. கீழிடம்; place or space below. 2. அடிப்பகுதி; bottom. 3. மண்ணுக்குள் இருக்கும் பகுதி; under earth. *“நள்ளுங் கீழுளு மேலுளும் யாவுளும்” (திருவாச. 5:46).* 4. கிழக்கு; east (சூடா). 5. பள்ளம் (சூடா.) ; pit. 6. முற்காலம்; former time. *“கீழ்ச் செய்தவத்தாற்கி கீழியீடு நேர்பட்டு” (திருவாச. 40 : 9).* 7. குற்றம் (பிங்.); fault, blemish, defect. 8. கயமை; inferiority, baseness, viciousness. 9. இழிந்தவன்; low caste man; vicious person. *“கீழ் தன்மனம் புரிந்த வாறே மிகும்” (நாலடி.341).* 9. நிலம்; earth.

ம., க. கீழ்; து. கீடு

*[கீள் → கீழ்]*

**கீழ்⁴** *kīḻ*, வி.எ. (adv.) கீழே; down. மாடத்திலிருந்து கீழிறங்கினாள் (உ.வ.).

*[கீள் → கீழ்.]*

**கீழ்⁵** *kīḻ*, இடை. (part.) ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு (தொல்.சொல்.83); locative case ending.

*[கீள் → கீழ்.]*

**கீழ்⁶** *kīḻ*, பெ.(n.) 1.மறதி (சூடா.); forgetfulness. 2. கடிவாளம் (வின்.) ; bridle, rein, bit.

K. kil

க. கீழ்

*[கீள் → கீழ்.]*

# கீரை வகைகள்





கண்டங்கத்தரிக் கீரை



தண்டுக் கீரை



முள்ளுக் கீரை



முளைக் கீரை



பாளைக் கீரை



சிறு கீரை

**கீழ்க்கட்டு**[1] *kil-k-kattu* பெ.(n.) வீட்டின் தரைத்தளம்; ground floor. இவ் வீட்டுக் கீழ்க்கட்டில் வீட்டின் உரிமையாளர் குடியிருக்கிறார் (உ.வ.).

மறுவ. கீழ்வீடு

*[கீழ் + கட்டு.]*

**கீழ்க்கட்டு**[2] *kil-k-kattu,* பெ.(n.) அச்சுப்பல்லைத் தீட்டிச் சமப்படுத்த உதவும் கத்தி ; file.

*[கீழ் + கட்டு.]*

**கீழ்க்கடல்** *kil-k-kadal* பெ.(n.) கிழக்கு திசையிலுள்ள கடல்; the eastern sea.

க. கிழ்கடல்

*[கீழ் + கடல்.]*

**கீழ்க்கடை** *kil-k-kadai,* பெ.(n.) 1. கடந்துபோன நாள்கள்; bygone years, the past. கீழ்க்கடையில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பல (உ.வ.). 2. இழிந்தது; that which is mean-base. 3. அடிப்பாகம்; the lower side, the under side.hat which is mean, base.

ம. கிழுக்கட, கீழ்க்கட; க. கெளகடெ

*[கீழ் + கடை.]*

**கீழ்க்கண்** *kil-k-kan,* பெ.(n.) 1. கீழ்ப்பார்வை; look from under the eyelids, ogling, indirect or sly look, looking askance. கீழ்க்கண்ணாற் பார்க்கிறான் (உ.வ.). 2. கண்ணின் கீழ்ப்பக்கம்; lower part of the eye, part below the pupil. கீழ்க்கண்ணிற் கட்டி வெடித்திருக்கிறது (உ.வ.).

*[கீழ் + கண்.]*

**கீழ்க்கண்பார்வை** *kil-k-kan-pārvai,* பெ.(n.) கீழ்ப்பார்வை; down look, a squint or awry look, looking askance (சா.அக.).

மறுவ. கீழ்க்கண்நோக்கு

*[கீழ் + கண் + பார்வை.]*

**கீழ்க்கணக்கு** *kil-k-kanakku,* பெ.(n.) 1. அடி நிமிர்வில்லாச் செய்யுள் பலவற்றால் அறம் பொருளின்பங்களைப்பற்றிக் கூறும் நூல்வகை (பன்னிருபா.346); short poems mostly in venbā metre on any of the three topics viz., அறம் பொருள், இன்பம் dist. fr. mēr-kanakku. 2. கீழ்வாயிலக்கம் (யாழ்.அக.); fraction. 3. உதவிக் கணக்கன் (இ.வ.) ; assistant accountant.

ம. கீழக்கணக்கு

*[கீழ் + கணக்கு.]*

கீழ்க்கணக்கு நூல்கள் 18. அவை

நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்

பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்

இன்னிலை காஞ்சியுட னேலாதி யென்பவே

கைந்நிலையோ டாங்கீழ்க் கணக்கு.

**கீழ்க்கணவாய்மலை** *kil-k-kanavāy-malai,* பெ.(n.) கிழக்குத் தொடர்ச்சி மலை; the Eastern Ghats.

*[கிழக்கு + கணவாய் + மலை.]*

**கீழ்க்கணு** *kil-k-kanu,* பெ.(n.) காலின் கீழாகவுள்ள கணு அல்லது காற்பொருத்து; the joint which connects the foot and the ankle (சா.அக.).

*[கீழ் + கணு.]*

**கீழ்க்கணுவெலும்பு** *kil-k-kanu-v-elumbu,* பெ.(n.) கால் கணுவிலுள்ள எலும்பு; ankle bone (சா.அக.).

*[கீழ் + கணு + எலும்பு.]*

**கீழ்க்கது** *kil-k-kadu,* பெ.(n.) 1. கட்டியின் அடிப்பாகம்; the bottom of an abscess or wort. 2. கீழ் வெடிப்பு; the fissure or rupture underneath the skin, internal rupture (சா.அக.).

*[கீழ் + கது.]*

**கீழ்க்கதுப்பு** *kīḻ-k-katuppu,* பெ.(n.) கன்னத்துக்குக் கீழுள்ள பகுதி; the lower part of the cheek (சா.அக.).

*[கீழ் + கதுப்பு]*

**கீழ்க்கதுவாய்**[1] *kīḻ-k-katuvāiy,* பெ.(n.) கட்டியின் அடிப்பாகத்தில் உண்டாகும் துளை; the opening at the bottom of an abscess. 2. வெடிப்பின் வாய்; the face of a fissure (சா.அக.).

*[கீழ் + கது + வாய்.]*

**கீழ்க்கதுவாய்**[2] *kīḻ-k-katuvāy* பெ.(n.) ***கீழ்க்கதுவாய்த் தொடை*** பார்க்க (இலக்.வி.722); see *kil-k-katuvai-toḍai*

*[கீழ் + கதுவாய்.]*

**கீழ்க்கதுவாய்த்தொடை** *kīḻ-k-katuvāy-t-toḍai,* பெ.(n.) அளவடியுள் ஈற்றயற் சீர்க்கணின்றி ஒழிந்த மூன்று சீர்க்கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது (இலக்.வி.723); versification which requires mōṉai, etc., to occur in every foot of a line except the penultimate.

**மறுவ.** கீழ்க்கதுவாய்

*[கீழ் + கதுவாய் + தொடை.]*

**கீழ்க்கம்பு** *kīḻ-k-kambu,* பெ.(n.) கோயில் கட்டடத்தை அழகுப்படுத்தும் வகைகளுள் ஒன்று (கட்டடம்.); a kind of decoration of temple.

*[கீழ் + கம்பு.]*

**கீழ்க்கருப்பை** *kīḻ-k-karuppai,* பெ.(n.) கருப்பையின் கீழ்ப்பாகம் அதாவது கழுத்து; the neck or the lower part of the uterus, cervix uteri (சா.அக.).

*[கீழ் + கருப்பை.]*

**கீழ்க்கரையாறு** *kīḻ-k-karaiyāru,* பெ.(n.) 1.கீழ்க் கரையில் பிரியும் ஆறு; river diverting from the east bank.

*[கீழ் + கரை + ஆறு.]*

**கீழ்க்கலனை** *kīḻ-k-kalaṉai,* பெ.(n.) ஊர்த்தொழிலாளி; village artisan. *"தச்சர், கொல்லர், தட்டார், கோலியர் உள்ளிட்ட கீழ்க்கலனைகளும்" (S.I.I.IV,30).*

*[கீழ் + கலனை.]*

**கீழ்க்கவடி** *kīḻ-k-kavaḍi* பெ.(n.) பரவர் விளையாடும் விளையாட்டு வகை (பரவ.); a game.

*[கீழ் + கவடி.]*

**கீழ்க்கவிசை** *kīḻ-k-kavišai,* பெ.(n.) அடிவயிற்றி லேற்படும் கவிசை (கட்டி); abdominal ascites (சா.அக.).

*[கீழ் + கவிசை.]*

**கீழ்க்காணி** *kīḻ-k-kāṇi,* பெ.(n.) 1/25600 என்னும் ஒரு கீழ்வாயிலக்கவெண்; a fraction.

**ம.** கீழ்க்காணி

*[கீழ் + காணி.]*

**கீழ்க்காது** *kīl-k-kādu,* பெ.(n.) காதடி (வின்.); bottom part of the ear.

*[கீழ் + காது.]*

**கீழ்க்காய்நெல்லி** *kīḻ-k-kāy-nelli,* பெ.(n.) கீழாநெல்லி; a small plant with slenler green main branches.

**ம.** கிழுகாநெல்லி

*[கீழ் + காய் + நெல்லி.]*


கீழ்க்காய்நெல்லி

**கீழ்க்கால்** *kīḻ-k-kāl,* பெ.(n.) 1/1280 என்னும் கீழ்வாயிலக்கவெண்; a fraction.

ம. கீழ்க்கால், கீழகால்

*[கீழ் + கால்.]*

**கீழ்க்காற்று** *kīḻ-k-kāṟṟu,* பெ.(n.) 1. கீழ்த்திசையிலிருந்து வீசும் காற்று;westward wind. 2. மலவாய்க் காற்று; gas in the intestine escaping through the anus, fart (சா.அக.).

க. கிக்காளி, கிர்காளி, கீளுகாளி

*[கீழ் + காற்று.]*

**கீழ்க்குடுமி** *kīḻ-k-kuḍumi,* பெ.(n.) கதவின் கீழ்ப் பக்கத் தமைந்த குடுமிக்கீல்; lower pin of a door serving as a hinge.

*[கீழ் + குடுமி.]*


கீழ்க்குடுமி

**கீழ்க்குத்தகை** *kīḻ-k-kuttagai,* பெ.(n.) குத்தகையெடுத்தவனிடம் எடுக்குங் குத்தகை; sub-tenancy, sub-lease.

U.guttā; ம. கீழ்க்குத்தக

*[கீழ் + குத்தகை.]*

**கீழ்க்குத்தகைக்காரன்** *kīḻ-k-kuttagai-k-kāraṉ,* பெ.(n.) கீழ்க்குத்தகை எடுத்துள்ளவன்; a sub-ordinate holder of a monopoly or contract.

ம. கீழ்க்குத்தகக்காரன்

*[கீழ் + குத்தகை + காரன்.]*

**கீழ்க்குநாளம்** *kīḻkku-nāḷam,* பெ.(n.) கீழ்ப் பாகத்திய உறுப்புகளின் அரத்தத்தை இதயத் திற்குக் கொண்டுபோகும் பெரிய அரத்தக்குழாய்; the large blood vessel which transmits the blood from the lower regions of the body to the heart-inferior venacava (சா.அக.).

*[கீழ் + கு + நாளம்.]*

**கீழ்க்குமிழி** *kīḻ-k-kumiḻi,* பெ.(n.) ஒரு வாய்க்காலின் நீர் அதன் குறுக்கே செல்லும் மற்றொரு வாய்க்காலின் கீழாகச் செல்லும்படி அமைத்த கட்டட வேலை (தஞ்சை.); syphon in the beḏ of a channel. கீழ்க்குமிழி அமைக்கும் வேலை ஒருசிலருக்கே கைவரும் (உ.வ.).

மறுவ. கீழ்ப்போக்கி

*[கீழ் + குமிழி.]*

**கீழ்க்குரல்** *kīḻ-k-kural* பெ.(n.) கீழிறங்கிய குரல்; feeble voice, low tone, bass, under tone.

ம. கீழ்க்குரல்

*[கீழ் +குரல்.]*

**கீழ்க்குரல்வளை** *kīḻ-k-kural-vaḷai,* பெ.(n.) குரல்வளையின் அடிப்பக்கம்; the lower, or the hinder portion of the larynx (சா.அக.).

*[கீழ் + குரல் + வளை.]*

**கீழ்க்குலம்** *kīḻ-k-kulam,* பெ.(n.) தாழ்ந்த குடியினர்; people of low status.

ம. கீழ்க்குலம்

*[கீழ் +குலம்.]*

**கீழ்க்குலம்** *kīḻ-k-kulam,* பெ.(n.) இழிகுலம் (நன்.226, உரை); low caste.

க., ம. கீழ்சாதி

*[கீழ் +குலம்.]*

**கீழ்க்குறண்டி** *kīḻ-k-kuṟaṇḍi,* பெ.(n.) பூடுவகை (M.M.227) ; a lowly flowering thorny shrub.

*[கீழ் + குறண்டி.]*

**கீழ்க்கையொப்பம்** *kīḻ-k-kaioppam,* பெ.(n.) பிறர் எழுதியதை யொப்புக் கொண்டு இடும் கையெழுத்து பாண்டி; counter-signature.

*[கீழ் + கை + ஒப்பம்.]*

**கீழ்கட்டை** *kīḻ-k-kaṭṭai,* பெ.(n.) மேழியைக் கலப்பை யுடன் இணைக்கும் கட்டை ; a nail like pole connecting the plough handle with the plough.

*[கீழ் + கட்டை.]*

**கீழ்காற்று** *kīḻ-kāṟṟu,* பெ.(n.) 1. கிழக்கினின்று வீசுங்காற்று; Easterly wind (திவா.). 2. ***காற்று***[3] பார்க்க; see *kāṟṟu.*

*[கீழ் + காற்று.]*

**கீழ்ச்சாதி** *kīḻ-c-cāti,* பெ.(n.) ***கீழ்க்குலம்*** பார்க்க; see *kīḻ-k-kulam.*

*[கீழ் + சாதி.]*

**கீழ்த்தட்டு** *kīḻ-t-taṭṭui,* பெ.(n.) தாழ்ந்த நிலை;interior position or status.

*[கீழ் + தட்டு.]*

**கீழ்த்தரம்** *kīḻ-t-taram,* பெ.(n.) தாழ்ந்தபடி; inferior sort, degree or class. அவன் அவ்வளவு கீழ்த்தரமாக நடப்பானென்று நான் நம்பவில்லை (உ.வ.).

ம. கீழ்த்தரம்.

*[கீழ் + தரம்.]*

**கீழ்த்தலாச்சட்டம்** *kīḻ-t-talāccaṭṭam,* பெ.(n.) ஒரு வகைச் சட்டம்; a kind of frame.

*[கீழ்த்தலை + சட்டம்.]*

**கீழ்த்தறி** *kīḻ-t-taṟi,* பெ.(n.) தரையை ஒட்டி அமைந்த தறி ; loom at floor level.

*[கீழ் + தறி.]*

**கீழ்த்தாடை** *kīḻ-t-tāḍai,* பெ.(n.) 1. அடித்தாடை; lower jaw. 2. மோவாய்க்கட்டை; the point of the under jaw, chin (சா.அக.).

*[கீழ் + தாடை.]*

**கீழ்த்திசை** *kīḻ-t-ticai,* பெ.(n.) 1. கிழக்கு (திவா.); East. 2. உலகில் கிழக்காசியப் பகுதி; East Asia oriental. கீழ்த்திசை நாடுகளில் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது (உ.வ.).

ம. கீழ்ப்பால்

*[கீழ் + திசை.]*

**கீழ்த்திசையியல்** *kīḻ-t-tišai-y-iyal,* பெ.(n.) உலகில் கிழக்கு ஆசியப் பகுதியைச் சார்ந்த மக்களின் வரலாறு கலை முதலியவற்றைப் பற்றிய படிப்பு; area studies of the Orient.

*[கீழ் + திசை + இயல்.]*

**கீழ்த்தோண்டி** *kīḻ-t-tōṇḍi,* பெ.(n.) கழுதை விதை மரம்; bloody drop ordure tree (சா.அக.).

*[கீழ் + தோண்டி.]*

**கீழ்நாலுமா** *kī*ḻ*-nālu-mā,* பெ.(n.) 1/1600 என்னும் கீழ்வாயிலக்க எண்; a fraction.

*[கீழ் + (நான்கு) நாலு + மா.]*

**கீழ்நிலை** *kī*ḻ*-nilai,* பெ.(n.) 1. தாழ்ந்த நிலைமை; low position or status. 2. கீழ்மாடம்; ground floor, lower storey. *"இழிந்து கீழ்நிலை" (சீவக.2673).* 3. நில வறை (பிங்.); underground room, cellar, opp. to mēṉilai.

ம. கீழ்நில

*[கீழ் + நிலை.]*

**கீழ்நீர்** *kī*ḻ*-nīr,* பெ.(n.) நிலத்தடி நீரூற்று; underground spring of water.

*[கீழ் + நீர்.]*

**கீழ்நெல்லி** *kī*ḻ*nelli,* பெ.(n.) ***கீழாநெல்லி*** பார்க்க; see *kī*ḻ*ānelli.*

ம. கீழ்நெல்லி

*[கீழ் + நெல்லி.]*

**கீழ்நோக்கம்** *kī*ḻ*-nōkkam,* பெ.(n.) 1. கீழ்ப்பார்வை; downward look. 2. கீழானவற்றில் மனம் விரும்புகை; vicious tendency, base inclination.

*[கீழ் + நோக்கம். கீழ்மை → கீழ் + நோக்கம்.]*

**கீழ்நோக்கி** *kī*ḻ*-nōkki,* பெ.(n.) நேர்வாளம் (மலை.); croton, as a purgative.

*[கீழ் + நோக்கி.]*

**கீழ்நோக்கித்திட்டு-தல்** *kī*ḻ*-nōkki-t-tiṭṭu-,* 12 செ.குன்றாவி. (v.t.). இழிசொற்கூறி வைதல் (வின்.); to abuse with obscene language.

*[கீழ் + நோக்கி + திட்டு.]*

**கீழ்நோக்கிராசி** *kī*ḻ*-nōkki-rāśi,* பெ.(n.) ***கீழ்நோக்கி ஓரை*** பார்க்க; see *kī*ḻ*-nokku-ōrai.*

*[கீழ் + நோக்கி + ராசி.]*

**கீழ்நோக்கு – தல்** *kī*ḻ*-nōkku-.* 15 செ.கு.வி (v.i.) 1. கீழ்முகமாதல்; to look down tend downward. 2. தரையின் கீழாதல்; to be beneath the surface, under-ground. 3. தாழ்ந்த நிலைக்குச் செல்லுதல்; to be on the decline as wealth; to go to ruin, decay, deteriorate. 4. கீழானவற்றில் மனஞ் செல்லுதல்; to be sensual, to have low or base desires. 5.கழிச் சலாதல்; to have diarrhoea.

*[கீழ் + நோக்கு–.]*

**கீழ்நோக்குஓரை** *kī*ḻ*-nōkku-ōrai,* பெ. (n) நிலத்தில் நடுகை, கிணறு வெட்டுகை முதலியவற்றுக்கேற்ற கடகம், நளி (விருச்சிகம்) என்ற ஓரைகள் (வீடும.உள்.127,உரை.); lit., a zodiacal sign with is favourable for plant esculent roots, sinking wells, etc., of which there are two viz., karkkadagam and viruccigam.

*[கீழ் + நோக்கு + ஓரை.]*

**கீழ்நோக்குநாள்** *kī*ḻ*-nōkku-nāḷ,* பெ.(n.) கிணறு வெட்டுகை முதலியவற்றுக்கேற்ற உடுக்கள் (பெரியவரு.37); lit., constellations or nakšatras that look downward, constellations that are favourable for planting esculent roots and sinking wells, numbering 9.

*[கீழ் + நோக்கு + நாள்.]*

**கீழ்ப்பகுதி** *kī*ḻ*-p-pagudi,* பெ.(n.) ***கீழ்ப்பாகம்*** பார்க்க; see *kī*ḻ*-p-pāgam.*

*[கீழ் + பகுதி.]*

**கீழ்ப்பட்டவர்** *kī*ḻ*-p-paṭṭavar,* பெ.(n.) தாழ்ந்தவர் (உ.வ.); inferiors, social inferiors.

*[கீழ் + பட்டவர்.]*

**கீழ்ப்படி–தல்** *kīḻ-p-paḍi-,* 2 செ.கு.வி. (v.i.) அடங்கி நடத்தல்; to submit, yield, obey. நீதிமன்றத்தின் ஆணைக்குக் கீழ்ப்படியாமல் இருக்கமுடியாது (உ.வ.).

ம. கீழ்பற்றுக; க. கிழ்படு

*[கீழ் + படி.]*

**கீழ்ப்படிவு** *kīḻ-p-paḍivu,* பெ.(n.) அடங்கிப் பணிகை; submission, obedience.

ம. கீழ்ப்படி

*[கீழ் + படிவு.]*

**கீழ்ப்படு[1]–தல்** *kīḻ-p-paḍu-.* 20 செ.கு.வி. (v.i.) 1. அடங்குதல்; to submit, succumb, yield. 2. இழிவுபடுதல்; to be degraded, mean, base, to become degenerate.

ம. கீழ்ப்பெருக

*[கீழ் + படு.]*

**கீழ்ப்படு[2]–த்தல்** *kīḻ-p-paḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) கீழ்மைப் படுத்துதல்; to subdue, put down. *“கிறியெலா மிகக் கீழ்ப்படுத்தாய்” (திருவாச.5:32).*

*[கீழ் + படு.]*

**கீழ்ப்பயிர்** *kīḻ-p-payir,* பெ.(n.) 1. பயிருக்குக்கீழ் உண்டாகும் பயிர் (வின்.); grain or herbage in the shade of, or overtopped by, another plant; undergrowth. 2. புன்செய்ப்பயிர்; dry crop, as inferior.

*[கீழ் + பயிர்.]*

**கீழ்ப்பல்முளை–த்தல்** *kīḻ-p-pal-muḷai-,* 4 செ.கு.வி. (v.i.) குழந்தைகட்கு முதலாகப் பாற்பல் முளைத்தல்; the dentition of stomach tooth in children (சா.அக.).

*[கீழ் + பல் + முளை.]*

**கீழ்பாகம்** *kīḻ-p-pāgam,* பெ.(n.) காழ் உள்ள பகுதி; the lower portion.

க. கெளடளக

*[கீழ் + பாடு.]*

**கீழ்ப்பாடு** *kīḻ-p-pāḍu,* பெ.(n.) கீழ்ப்பக்கம் (வின்.); lower side, lower part.

ம. கீழ்பாடு; க. கித்தட்டு.

*[கீழ் + பாடு.]*

**கீழ்ப்பாதி** *kīḻ-p-pāti* பெ.(n.) 1. அடியிலுள்ள பாதி; the lower half. 2. குடிவாரம்; tenant's share of the crop. *“சந்ததி சந்ததியே கீழ்ப்பாதி அனுபவிப்ப தாக” (T.A.S i,6).*

ம. சீழ்ப்பாதி

*[கீழ் + பாதி.]*

**கீழ்ப்பாய்ச்சல்** *kīḻ-p-pāyccal,* பெ.(n.) மலசிறுநீர் இறக்கம்; the descent of faces and urine, running down of excretions (சா.அக.).

*[கீழ்மை – கீழ் + பாய்ச்சல்.]*

**கீழ்ப்பாய்ச்சி[1]** *kīḻ-p-payccị,* பெ.(n.) ஆடவர் கீழ்வேட்டியைக் கட்டிக்கொள்ளும் முறை; fashion, among men, of tying cloth so that one corner is tucked behind while the other hangs down.

மறுவ. மூலைக்கச்சங்கட்டுதல்

*[கீழ் + பாய்ச்சி.]*

**கீழ்ப்பாய்ச்சி[2]** *kīḻ-p-pāyccị,* பெ.(n.) எருவாய் வழியாக நீர், உணவு அல்லது மருந்தைப் பாய்ச்சுங் கருவி ; a clyster employed for conveying water, nourishment or medicine through the rectum. (சா.அக.).

*[கீழ் + பாய்ச்சி.]*

**கீழ்ப்பாய்ச்சிக்கட்டு-தல்** *kīḻ-p-pāycci-k-kaṭṭu,* 5 செ.கு.வி.(v.i) மூலைக் கச்சங்கட்டுதல்; to draw one's cloth up between the legs and tuck it behind.

*[கீழ் + பாய்ச்சி + கட்டு.]*

**கீழ்ப்பார்வை** *kīḻ-p-pārvai,* பெ.(n.) 1. கீழ்நோக்குகை; low, cast down. 2. வஞ்சகப் பார்வை; deceptive, trickish look, as of an elephant.

*[கீழ் + பார்வை.]*

**கீழ்ப்பால்** *kīḻ-p-pāl,* பெ.(n.) கீழ்ப்பால் பிரிவினர்; low caste. *"கீழ்ப்பா லொருவன் கற்பின்" (புறநா.183).*

ம. கீழ்ப்பால்

*[கீழ் + பால்.]*

**கீழ்ப்பாவல்** *kīḻ-p-pāval,* பெ.(n.) மரக்கலத்தின் ஓர் உறுப்பு; the lower spare of a dōney the top of which is attached to the sail to keep it to the wind.

*[கீழ் + பாவல்.]*

**கீழ்ப்பாறை** *kīḻ-p-pāṟai* பெ.(n.) கீழறை (வின்.); sub-terranean cell or cavern.

*[கீழ் + பாறை.]*

**கீழ்ப்பிள்ளை** *kīḻ-p-piḷḷai,* பெ.(n.) முதுமரங்களின் கீழ்நடும் தெங்கு முதலியவற்றின் கன்று (யாழ். அக.); young coco-palm reared underneath old palms.

*[கீழ் + பிள்ளை.]*

**கீழ்ப்புரைச்சவ்வு** *kīḻ-p-purai-c-cavvu,* பெ.(n.) கருப்பையில் கரு உயிர்ப்பு வரையில் கருவைச் சுற்றிக் கொண்டிருக்கும் நாதப்பை; a temporary coat surrounding the ovum produced at the period of conception and thrown off from the uterus after parturition (சா.அக.).

*[கீழ் + புரை + சவ்வு.]*

**கீழ்ப்புறம்** *kīḻ-p-puṟam* பெ.(n.) 1. கீழ்ப்பக்கம்; lower side. 2. கப்பலின் சாய்வுப்பக்கம் (வின்.); the leeward or the leaning side of a vessel.

*[கீழ் + புறம்.]*

**கீழ்ப்போக்கி** *kīḻ-p-pōkki,* பெ.(n.) ***கீழ்க்குமிழி*** பார்க்க; see *kīḻ-k-kumiḻi.*

*[கீழ் + போக்கி.]*

**கீழ்புறம்** *kīḻ-puṟam* பெ. (n.) 1. தாழ்ந்த பகுதி; the lower side. 2.கிழக்குப் பக்கம்; eastern side.

ம. கீழ்புறம்

*[கீழ் + புறம்.]*

**கீழ்போகம்** *kīḻ-pōgam,* பெ.(n.) கிழங்குகளின் விளைவு (யாழ்ப்.); cultivation of edible roots.

*[கீழ் + போகம்.]*

**கீழ்மக்கள்** *kīḻ-makkaḷ,* பெ.(n.) 1. ஒடுக்கப்பட்டவர், இழிந்தோர்; low people, the base, the vulgar. *"கீழ்மக்கள் கீழாய சொல்லயக்கால்" (நாலடி. 70).*

*[கீழ் + மக்கள்.]*

**கீழ்மகன்** *kīḻ-magaṉ,* பெ.(n.) 1. ஒடுக்கப்பட்டவர், கீழ்ப்பிரிவினர் (சிலப்.15:95); low caste man. 2. இழிந்தவன்; low, mean person. 3. காரி (சனி) (திவா.); saturn.

*[கீழ் + மகன்.]*

**கீழ்மட்டம்** *kīḻ-maṭṭam,* பெ.(n.) 1. தாழ்ந்த நிலை; lower status. 2. அடிமட்டம்; base.

*[கீழ் + மட்டம்.]*

**கீழ்மடை** *kīḻ-maḍai,* பெ.(n.) 1. கடைமடை; lower most sluice of a tank. *"கீழ்மடைக் கொண்ட வாளையம்" (புறநா.42).* 2. மடைநீர் பாய்தற்குத்

தொலைமான நிலம் (C.G.); land far removed from the sluice, as last-watered opp. to mutal maḍai

*[கீழ் + மடை.]*

**கீழ்மரம்** *kīḻ-maram*, பெ.(n.) 1. அச்சுமரம்; axle-tree. *"கீழ்மரத் தியாத்த சேமவச் சன்ன" (புறநா. 102: 5).* 2. பாய்மரத்தின் அடிப்பாகம் (M.Nari.81); lower mast.

*[கீழ் + மரம்.]*

**கீழ்மாரி** *kīḻ-māri*, பெ.(n.) அடிவானத்தை அடுத்துப் பெய்யும் மழை; rain at a distance, as apparently near the horizon. *"கீழ்மாரி கொண்டு முழங்குகிறது" (வின்.)*

*[கீழ் + மாரி.]*

**கீழ்முக்கன்** *kīḻ-mukkaṉ*, பெ.(n) கற்றாழை; aloe vera.

*[கீழ் + (மூக்கன்) முக்கன்.]*

**கீழ்முக்காணி** *kīḻ-mukkāṇi*, பெ.(n) 13/25600 என்னும் கீழ்வாயிலக்கவெண்ணைக் குறிக்கும் பெயர்; a fraction.

*[கீழ் + முக்காணி.]*

**கீழ்முக்கால்** *kīḻ-mukkāl*, பெ.(n) 3/1280 என்னும் கீழ்வாயிலக்கவெண்ணைக் குறிக்கும் பெயர்; a fraction.

*[கீழ் + முக்கால்.]*

**கீழ்முந்திரி** *kīḻ-mundiri*, பெ.(n) 1/102400 என்னும் கீழ்வாயிலக்கவெண்ணின் பெயர்; the fraction of 1/102400.

*[கீழ் + முந்திரி.]*

**கீழ்மும்மா** *kīḻ-mummā*, பெ.(n) 3/1280 என்ற கீழ்வாயிலக்கவெண்ணின் பெயர்; a fraction.

*[கீழ் + (மூன்று) + மும் + மா.]*

**கீழ்மூன்றுவீசம்** *kīḻ-mūṉṟu-vīšam*, பெ.(n) 3/5120 என்ற கீழ்வாயிலக்கவெண்ணின் பெயர்; a fraction.

*[கீழ் + மூன்று + வீசம்.]*

**கீழ்மேல்** *kīḻ-mēl*, பெ.(n) தலைகீழ்; upside, down.

ம. கீழ்மேல்; க. கீள்மேலு, கௌதமேலெ.

*[கீழ் + மேல்.]*

**கீழ்மேலா-தல்** *kīḻ-mēl-a-*, 2 செ.கு.வி.(v.i.) தலை கீழாதல்; to be turned upside down, to become topsy turny. *"பள்ளந்தா முறுபுனலிற் கீழ்மேலா" (திருவாச. 5:21).*

க. கௌகெ மேலாகு

*[கீழ் + மேல் + ஆ.]*

**கீழ்மை** *kīḻmai*, பெ.(n.) 1. இழிவு; degradation. *"கடைய னாயினேன் பட்ட கீழ்மையே" (திருவா.5.91).* 2. பணிவு (சங்.அக.); humility.

ம. கீழ்ம; க. கீழதன

*[கீழ் → கீழ்மை.]*

**கீழ்வகைப் புணர்ச்சி** *kīḻ-vagai-p-puṇarcci*, பெ.(n.) விலங்குகளின் புணர்ச்சி, the copulation of animals, 2. விலங்குகளைப் போலப் புணருதல்; having intercourse like animals. 3. கீழ்வகைப் விலங்குகளுடன் சேர்தல், men's intercourse with lower animals (சா. அக).

*[கீழ் + வகை + புணர்ச்சி.]*

**கீழ்வயிற்றுக்கட்டு** *kīḻ-vayiṟṟu-k-kaṭṭu*, பெ.(n.) கீழ்வயிறு நழுவாமற் இருப்பதற்காக இறுகிக் கட்டும் கட்டு; light abdominal bandage used to prevent hanging down (worn by males.). 2. கருப் பை சுருங்கவும், நழுவாமல் இருக்கவும் கரு வுயிர்ப்புக்குப் பின் பெண்கள் வயிற்றை இறுகக் கட்டுதல்; bandage

after confinement to insure contraction of the womb and also to keep it in position (சா.அக.).

*[கீழ் + வயிறு + கட்டு.]*

**கீழ்வயிறு** *kil-vayiru,* பெ.(n.) அடிவயிறு; lower part of the abdomen.

மறுவ. அடிவயிறு

ம. கீழ்வயறு

*[கீழ் + வயிறு.]*

**கீழ்வாடை** *kil-vādai,* பெ.(n) கொண்டல், கீழ்க்காற்று (மீனவ.); eastern wind.

*[கீழ் + வாடை.]*

**கீழ்வாய்** *kil-vāy* பெ.(n.) 1. மோவாய் (யாழ்.அக.); chin, lower jaw. 2. ***கீழ்வாயிலக்கம்*** பார்க்க; see *kil-vāy-ilakkam.* 3. குய்யம்; pudendum muliebre posteriors.

*[கீழ் + வாய்.]*

**கீழ்வாய்நெல்லி** *kil-vāy-nelli,* பெ(n.) ***கீழாநெல்லி*** பார்க்க; see *kila-nelli.*

*[கீழ் + வாய் + நெல்லி.]*

**கீழ்வாய்ப்பாய்ச்சி** *kil-vāi-p-pāicci,* பெ.(n.) நோனித் துளையைத் தூய்மைப்படுத்தும் ஒரு கருவி; an instrument used for effecting a douche to the vagina (சா.அக.).

*[கீழ் + வாய் + பாய்ச்சி.]*

**கீழ்வாயிலக்கம்** *kil-vāy-ilakkam,* பெ.(n.) 1. ஒன்றுக்குக் கீழ்ப்பட்ட எண் வாய்பாடு; multiplication of fractions, dist, fr. *mēl-vāy-ilakkam.* 2. மேல் கீழாக எழுதும் பின்ன வெண்ணின் கீழ்த் தொகை; denominator of a fraction opp. to. mel-vay-ilakkam.

*[கீழ்வாய் + இலக்கம்.]*

**கீழ்வாயு** *kil-vāyu,* பெ.(n) 1. எருவாய்க் காற்று ; fart. 2.காலின் கீழ்ப்புறத்தில் காணும் காற்று; inflammation of the joints of the leg. 3. கால் பிடிப்பு; rheumatism of the joints of the legs (சா.அக.).

*[கீழ் +வாயு.]*

**கீழ்வாரப் பச்சை** *kil-vāra-p-paccai,* பெ.(n) பழைய வரிவகை; ancient tax in kind.

*[கீழ் + வாரம் + பச்சை.]*

**கீழ்வானம்** *kil-vānam,* பெ.(n) கிழக்கு திசை வானம்; the eastern sky.

*[கீழ் + வானம்]*

**கீழ்விலாஎலும்பு** *kil-vilā-elumbu* பெ.(n) சிறிய விலா எலும்பு; short rib (சா.அக.).

*[கீழ் + விலா + எலும்பு.]*

**கீழ்வீசம்** *kilvišam,* பெ.(n) 1/5120 என்னும் கீழ்வாயிலிக்க வெண்ணைக் குறிக்கும் பெயர்; a fraction.

*[கீழ் + வீசம்.]*

**கீழ்வீடு** *kilvidu,* பெ.(n) தரைத்தளவீடு; ground floor of the house (யாழ். அக.).

*[கீழ் + வீடு.]*

**கீழ்வு** *kilvu,* பெ.(n.) கீழிடம்; place below or underneath. ***"கீழ்வுற வீழ்வுறு மளவில்" (ஞானவா. சித்த.24).***

*[கீழ் → கீழ்வு.]*

**கீழ்வெட்டு** *kil-vettu,* பெ.(n.) 1. சூழ்ச்சி செய்து கெடுக்கை ; undermining, supplanting. 2. தடுத் துப் பேசுகை; refuting, speaking against. என் சொல்லுக்கு அவன் கீழ்வெட்டுச் சொல்லு கின்றான் (உ.வ.).

*[கீழ் + வெட்டு.]*

**கீழ்வெட்டுவெட்டு-தல்** *kīḻ-veṭṭu-veṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. சூழ்ச்சி செய்தல்; to undermine. 2. தடுத்துப்பேசுதல்; to refute, speak against.

*[கீழ் + வெட்டு + வெட்டு-.]*

**கீழக்கரை** *kīḻakkarai,* பெ.(n) தஞ்சாவூர் மாவட்டத்து ஓர் ஊர்; a village of Tanjavur district.

*[கீழ் + அ + கரை.]*

**கீழங்கம்** *kīḻ-aṅgam,* பெ.(n.) பின்னத்தின் கீழ்த் தொகை; denominator of a fraction.

*[கீழ் + அங்கம். அங்கம் = உறுப்பு.]*

**கீழண்டை** *kīḻ-aṇḍai,* பெ.(n) 1. கிழக்குப் பக்கம்; eastern direction. 2. கீழ்ப்புறம்; lower side.

*[கீழ் + அண்டை. அண்டை = பக்கம்.]*

**கீழது** *kīḻatu,* பெ.(n.) கீழுள்ளது; that which is under or below. *"கீழது முப்புண ரடுக்கிய முறைமுதற் கட்டில்" (புறநா. 6).*

*[கீழ் + அது.]*

**கீழரை** *kīḻ-arai,* பெ.(n) 1/640 என்னும் கீழ்வாயிலக்க வெண்ணைக் குறிக்கும் பெயர்; a fraction, half of Muntiri 1/640.

ம. கீழா

*[கீழ் + அரை.]*

**கீழரைக்காணி** *kīḻ-arai-k-kāṇi,* பெ.(n) 1/51200 என்னும் கீழ்வாயிலக்க வெண்ணைக் குறிக்கும் பெயர்; a fraction, one sixteenth part of arai-k-kāṇi.

*[கீழ் + அரைக்காணி.]*

**கீழரைமா** *kīḻaraimā,* பெ.(n) முந்திரியின் நாற்பதில் ஒரு பங்கு; one fortieth part of mundiri.

ம. கீரமா

*[கீழ் + அரை + மா.]*

**கீழறு[1]-தல்** *kīḻ-aṟu-,* 4 செ.கு.வி. (v.i.) சேனைகளின் மனப்போக்குப் பகைவரால் வேறுபடுத்தப்படுதல் (சிலப்.4:60. அரும்.) ; to be undermined, to become disaffected, to become treacherous as an army corrupted by foes. 2. பதறுதல் அல்லது அச்சப்படுதல்; to be perplexed or frightened.

ம. கீழறுக

*[கீழ் + அறு.]*

**கீழறு[2] – த்தல்** *kīḻ-aṟu-,* 4 செ.கு.வி. (v.i.) நிலத்திற் சுரங்கஞ் செய்தல்; to burrow, excavate, make a sub-terranean passage, undermine.

ம. கீழறுக்குக

*[கீழ் + அறு-.]*

**கீழறு[3]-த்தல்** *kīḻ-aṟu-,* 4 செகுன்றாவி. (v.t.) மறைமுக மாகப் பிறரைக் கெடுக்கப் பணிசெய்தல்; to injure by any underhand, treacherous means. *"பகைமை தோன்றாமல் உள்ளாயிருந்தே கீழறுத்தலின்" (குறள். 883, உரை.).*

*[கீழ் + அறு-.]*

**கீழறுப்பான்** *kīḻ-aṟuppāṉ* பெ.(n), சூழ்ச்சி செய்து பிறரைக் கெடுப்பவன்; one who injures insidiously or inperceptibily, one who undermines.

*[கீழ் + அறுப்பான்.]*

**கீழறுப்பு** *kīḻ-aṟupu* பெ.(n), மறைமுகமாகப் பிறரைக் கெடுத்தற்குச் செய்யும் செயற்பாடு; underground work.

*[கீழ் + அறுப்பு.]*

**கீழறை** *kīḻ-aṟai,* பெ.(n.) 1. கீழறுக்கை (சிலப்.5: 130,உரை) ;undermining, treachery. 2. நிலவறை

(சிலப். 10:191, உரை.) ; underground room, cellar. 3. பொந்து (வின்.); cavern, cell, hole.

*[கீழ் + அறை.]*

**கீழாக்கு-தல்** *kīḻākku,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தாழ இறக்குமாறு செய்தல்; to bring down, lower. 2. கட்டுப் பாட்டிற்குக் கொண்டு வருதல்; to subdue, bring under control.

ம. கீழாக்குக; க. கிழ்மாடு

*[கீழ் + ஆக்கு.]*

**கீழாண்டு** *kīḻāṇḍu,* பெ.(n). கடந்த ஆண்டு; last year, preceding year.

ம. கீழாண்டு

*[கீழ் + ஆண்டு.]*

**கீழாண்டைச்சிகை** *kīḻ-āṇḍai-c-cigai,* பெ.(n). செலுத்த வேண்டிய பழைய நிலுவை; arrears of past years. *"நான் படுகிற கிலேசம் போதாதென்று கீழாண்டைச்சிகை வாசியாநின்றார்" (ஈடு. 1,4:7).*

*[கீழ் + அண்டை + சிகை.]*

**கீழாதல்** *kīḻādal,* 6 செ.கு.வி.(v.t.) 1. தாழ்தல்; to become low. 2. பயனற்றுப்போதல்; to becomee useless.

து. கீட் அப்புனி

*[கீழ் + ஆ.]*

**கீழாநெல்லி** *kīḻa-nelli,* பெ.(n.) 1. மஞ்சள் காமாலைக்கு மருந்தாகும் மூலிகைச் செடி; a small plant with slender green main branches. 2. சிறிய மரவகை; forest small-leaved feather foil.

ம. கிழாநெல்லி, கிழாற் நெல்லி; து. கிளாரநெல்லி, கீளாரநெல்லி.

*[கீழ்வாய் + நெல்லி – கீழவாய் நெல்லி → கீழாநெல்லி.]*


கீழாநெல்லி

**கீழாநெல்லித்தைலம்** *kīḻa-nelli-t-tailam,* பெ.(n.) கீழாநெல்லி சமூலத்துடன் மற்றக் கடைச்சரக்கு களை நல்லெண்ணெயில் சேர்த்து இறக்கிய தலைமுழுக்கு மருந்து எண்ணெய்; a medicated oil for anoiting the head, prepared by boiling gingelly oil mixed with the nirus plant as a chief ingredient along with other appropriate bazzar drugs (சா.அக.).

*[கீழாம் + நெல்லி + தைலம்.]*

**கீழாலவத்தை** *kīḻal-avattai,* பெ.(n.) விழிப்பினின்றும் (சாக்கிரத் தினின்று) கடந்த நிலை வரையிலுள்ள ஐந்து நிலையிலும் அதன் கீழ்நோக்கி நெற்றியிலிருந்து மூலாதாரத்திற்குச் செல்லும் நிலை; state of the soul descending from the forehead to *mūlāţāram* as it passes through the five stages from *śākkiram* to the stage of absolute uncon sciousness.

*[கீழ் + ஆல் + அவத்தை.]*

**கீழாள்** *kīḻ-āḷ* பெ.(n). குற்றேவலன்; menial.

க. கீழாள், கீழாளு, கீளான், கீளாளு

*[கீழ் + ஆள்.]*

**கீழாறு** *kīḻ-āṟu* பெ.(n). நிலத்தடியில் ஓடும் ஆறு; underground stream.

*[கீழ் + ஆறு.]*

**கீழாறுகொண்டுபோ-தல்** *kī̱l-a̱ru-kōṇḍu-pō,* 8 செ.கு.வி. (v.i.) காரணம் வெளிப்படாமல் சொத்து முதலியன உள்ளூறச் சிதைதல்; to lose wealth, property, etc. imperceptibly, unaccountably, as if carried away by an underground stream.

*[கீழ் + ஆறு + கொண்டுபோ.]*

**கீழாறெடு-த்தல்** *kī̱l-āreḍu-,* 4 செ.கு.வி. (v.i.) ***கீழாறுகொண்டுபோ-,*** பார்க்க; see *kī̱la̱ru koṇḍupō.*

*[கீழ் + ஆறு + எடு-.]*

**கீழிசை** *kī̱l-iśai,* பெ.(n.) பாடுதற் குற்றங்களுள் ஒன்று; a defect in singing. *"பேசாக் கீழிசை" (கல்லா. 21:4).*

*[கீழ் + இசை.]*

**கீழிடம்** *kī̱l-iḍam,* பெ.(n). கீழான இடம்; the lower part or side.

ம. கீழிடம்; க. கிழ்நெல, கின்னெல, கிள்நெல.

*[கீழ் + இடம்.]*

**கீழிடு-தல்** *kī̱l-iḍu-,* 18 செ.குன்றாவி (v.t.) தாழ்த்துதல்; to degrade. *"தன்னை நிலைகலக்கிக் கீழிடுவானெனும்" (நாலடி. 248).*

ம. கீழிடுக

*[கீழ் + இடு.]*

**கீழிதழ்** *kī̱l-idal,* பெ.(n.) கீழுதடு (பிங்.); the lower lip.

*[கீழ் + இதழ்.]*

**கீழிரு-த்தல்** *kī̱l-iru-,* 3 செ.கு.வி. (v.i.) உட்பட்டிருத்தல்; to be under control; to submit.

*[கீழ் + இரு.]*

**கீழிருமா** *kī̱l-irumā,* பெ.(n.) 1/3200 என்னும் கீழ்வாயிலக்க எண்ணைக் குறிக்கும் பெயர்; a fraction.

*[கீழ் + இருமா.]*

**கீழிரைப்பை** *kī̱l-irai-p-pai,* பெ.(n.) கீழ்வயிறு; abdomen. 2 வயிறு; hypogastric region, the lower and front portion of the belly (சா.அக.).

*[கீழ் + இரைப்பை.]*

**கீழிறைப்பாட்டம்** *kī̱l-i̱rai-p-pāṭṭam,* பெ.(n.) மீன்பாட்டம், ஆற்றுப்பாட்டம் போன்ற சிறுவரிகள் (S.I.I.V. 365); petty leirs or taxes, such as mi̱ṉpāṭṭam, ā̱ṟruppāṭṭam, etc.

*[கீழிறை + பாட்டம்.]*

**கீழீடு** *kī̱līḍu,* பெ.(n.) 1. தலைமைக் குத்தகைக் காரரிடமிருந்து பெறும் கீழ்க்குத்தகை (T.A.S. III, 194). 2. கீழ்க்கோயில்; subordinate or subsidiary temple. *"ஆச்சிரமம் கோயில் சுசீந்திரம் கோயிலுக்குக் கீழீடு."*

*[கீழ் + இடு.]*

**கீழுக்குப்போ-தல்** *kī̱lukku-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) தாழ்நிலைக்கு வருதல்; to degenerate, to be on the decline, to be degraded, to be reduced. அவன் அறிவும் கல்வியும் வரவரக் கீழுக்குப் போகின்றன (உ.வ.).

*[கீழ் → கீழுக்கு + போ.]*

**கீழுடை** *kī̱l-uḍai,* பெ.(n.) கோவணம்; loin cloth.

மறுவ. கீறுடை

*[கீள் → கீழ் + உடை.]*

**கீழுதடு** *kī̱ludaḍu,* பெ.(n.) ***கீழிதழ்*** பார்க்க; see *kī̱lidal.*

க. கெளதுடி

*[கீழ் + உதடு.]*

**கீழுப்பு** *kī̱l-uppu,* பெ.(n.). 1. அமுரியுப்பு; uric salt 2. பாறையுப்பு; rock salt (சா.அக.).

*[கீழ் + உப்பு.]*

**கீழுலகம்** *kīḻ-ulagam,* பெ.(n.) நிலவுலகின் கீழுள்ள உலகம்; the nether world.

**க.** கெளலேக; **து.** கீள்லோக

*[கீழ் + உலகம்.]*

**கீழுலகு** *kīḻ-ulagu* பெ.(n.) 1. ***கீழேழுலகம்*** பார்க்க; see *kīḻēḻulagam.* *"கீழுலகி லசுரர்களைக் கிழங்கிருந்து கிளராமே"* *(திவ். பெரியாழ். 4.8:6).* 2. நாகலோகம் (உரி.நி.); the world of Nāgās.

**ம.** கீழுலகு

*[கீழ் + உலகு.]*

**கீழெண்** *kīḻ-eṇ* பெ.(n.) பின்னவெண்களுள் கீழிடமுள்ள இலக்கம்; denominator of a fraction.

**ஒ.நோ.** கீழ்வாயிலக்கவெண்.

*[கீழ் + எண்.]*

**கீழே** *kīḻē,* வி.எ.(adv.) தாழ; down, below.

**ம.** கீழே.; **க.** கீழெ, கெளகெ; **பட.**கீயெ

*[கீழ்→ கீழே.]*

**கீழேழுலகம்** *kīḻ-ēḻ-ulagam,* பெ.(n.) நிலவுலகின் கீழுள்ள ஏழு உலகங்கள்; (அதலம், விதலம், சுதலம், தராதலம், மகாதலம், இரசாதலம், பாதாலம்) (சூடா.); seven nether worlds, viz., Atalam, Vitalam, Sutalam, Taratalam, Mahatalam, Rasatalam, Patalam-situate one below another dist. fr. mēl-ēḻ-ulagam.

**மறுவ.** கீழுலகு, கீழுலகம்

*[கீழ் + ஏழு + உலகம்.]*

**கீழைக்கடல்** *kīḻai-k-kaḍal,* பெ.(n.) ***கீழ்க்கடல்*** பார்க்க; see *kīḻ-k-kaḍal.*

*[கீழ் + ஐ + கடல்.]*

**கீழைத்திசை** *kīḻai-t-tišai,* பெ.(n.) ***கீழ்த்திசை*** பார்க்க; see *kīḻ-t-tišai.*

*[கிழக்கு →கீழை + திசை.]*

**கீழைத்தெரு** *kīḻai-t-teru,* பெ.(n.) கிழக்குத் திசைத் தெரு; the eastern side street.

*[கீழ் + ஐ + தெரு]*

**கீழைநாள்** *kīḻai-nāḷ,* பெ.(n.) விடியற்காலம்; early hours of the morning, *"தொன்மனை கீண்டதால் வானவே றெறியக் கீழைநாள்" (கம்பரா. காட்சிப் 42).*

*[கிழக்கு → கீழை + நாள்.]*

**கீழைமொழிகள்** *kīḻaimoḻigaḷ,* பெ.(n.) கீழ்த்திசை நாடுகளில் பேசப்படும் மொழிகள்; oriental languages.

*[கிழை + மொழிகள்]*

**கீழோங்கி** *kīḻ-ōṅgi* பெ.(n.) செம்படவரிற் கீழ்த் தரத்தார் (யாழ்ப்.); inferior class of fishermen opp.to. mēlōṅgi.

*[கீழ் + ஓங்கி.]*

**கீழோசை** *kīḻ-ōšai* பெ.(n.) ***கீழிசை*** பார்க்க; see *kīḻisai.*

*[கீழ் + ஓசை.]*

**கீழோர்** *kīḻōr* பெ.(n.) 1. தாழ்ந்தோர்; persons inferior in status, the low, the vulgur. *"கீழோராயினுந் தாழ வுரை" (கொன்றைவே).* 2. இழிந்த குணமுடையவர்; a base or rude fellow. 3. உழவர்; cultivators. *"கீழோர் வயல்பரக்கும்" (பரிபா. 17.40).*

*[கீழ் → கீழோர்.]*

**கீழோன்** *kīḻōṉ,* பெ.(n.) ***கீழோர்*** பார்க்க; see *kīḻōr.*

**ம.** கீழோன்; **து.** கீடதி, கீடதெ.

*[கீழ் + ஒன். ஆன் → ஒன்.]*

**கீள்[1](ளு)தல்** *kīḷ-* 10 செ.குன்றாவி. (v.t.) கிழித்தல்; to rend, split, tear. *"கீண்டிலென் வாயது கேட்டு நின்றயான்" (கம்பரா. பள்ளி. 71).*

*[கீழ் → கீள்.]*

**கிள்²(ளு)-தல்** *kil-* 16 செ.கு.வி. (v.i.) உடைதல்; to burst, as the bund of an overfull tank; *"தெண்ணீர்ச் சிறுகுளங் கீள்வது மாதோ" (புறநா.118,3).*

**Fin.** kidutta; **Es.** kiduda; **Hung.** kikezd; **Mong.** kidu; **Jap.** kisu.

*[குல் → கில் → கீல் → கீள்.]*

**கீள்³** *kil* பெ.(n.) 1. கூறு; part, portion, section. *"கீளிரண் டாகக் குத்தி" (சீவக. 2248).* 2. அரையிற் சுட்டுந் துணியாலாகிய கோவணம்; strip of cloth used as a waist-band. *"வெளுத்தமைந்த கீளொடு கோவணமுந் தற்று" (தேவா. 811,2).*

*[குல் → கில் → கீல் → கீள்.]*

**கீளி** *kili* பெ.(n.) கடல்மீன் வகை; mullet, purplish, attaining 8½ inc. in length.

*[கீழ் → கீள் → கீளி.]*

**கீளுடை** *kil-udai* பெ.(n.) கோவணம்; loun cloth.

*[கீள் + உடை – கீளுடை (கிழித்த துணி).]*

**கீற்கதவு** *kir-kadavu,* பெ.(n.) கீல் தைக்கப்பட்ட கதவு; door turning on hinges. dist, fr, *kudumik-katavu.*

*[கீழ் + கதவு.]*

**கீற்கொண்டை** *kir-kondai* பெ.(n.) மயிர் முடித்தலின் வகை; coil or hair dressed in a special way.

*[கீல் + கொண்டை.]*

**கீற்பிடிப்பு** *kir-pidippu* ஊதைப்பிடிப்பு நோய்; rheumatism.

*[கீல் + பிடிப்பு.]*

**கீற்றரைக்கால்** *kirrarai-k-kal* பெ.(n.) து, நு. முதலிய எழுத்துகளில் உகரத்தைக் குறிக்க வளைத்தெழுதுங் குறி; the sign "ா" denoting 'உ' while writing the vowel consonants து, நு.

*[கீறு → கீற்று + அரைக்கால்.]*

**கீற்றன்** *kirran,* பெ.(n.) குறுக்குக்கோடுள்ள புடவை (யாழ்ப்.); striped cloth.

*[கீற்று + அன்.]*

**கீற்று** *kirru,* பெ.(n.) 1. வரி; mark, stroke, line. 2. துண்டு; slice, piece. 3.கூறைவேயுங் கிடுகு; part of a coconut leaf plaited for thatching. 4. வயிரக் குற்றம் பன்னிரண்டனுள் ஒன்று; a flaw in a diamond, one of 12 vaira-(k)-kurram. 5. பச்சை (மரகத)க் குற்றம் எட்டனுள் ஒன்று; a flaw in emerald one of 8 *marakada- k- kurram*

ம. கீற்று; க.து., கீது; குட. கிடி.

*[கீல் → கீறு → கீற்று.]*

**கீற்றுக்கால்** *kirru-k-kal,* பெ.(n.) வெடிப்புள்ள பாதம் (வின்.); fissured or cracked foot.

*[கீறு → கீற்று + கால்.]*

**கீற்றுக்கொட்டகை** *kirru-k-kottagai,* பெ.(n.) தென்னங்கீற்று வேய்ந்த கொட்டகை; thatched shed with plaited coconut.

*[கீற்று + கொட்டகை.]*

**கீற்றுநாமம்** *kirru-nāmam,* பெ. (n.) அந்தணருள் ஒரு சாரார் கீற்றாக நெற்றியிலிடும் முக்கோடு (நாஞ்.); thin tridental mark worn on the forehead by some sects of Smarta Brahmans.

ம. கீற்றுநாமம்

*[கீற்று + நாமம்.]*

**கீற்றுநோய்** *kirru-noy,* பெ.(n.) உடம்பில் சதை பிளந்து காணும் ஓர் தோல் நோய்; a veneral disease characterised by fissures (சா.அக.).

*[கீற்று + நோய்.]*

**கீற்றுமதி** *kirru-madi* பெ.(n.) மூன்றாம் பிறை நிலவு; crescent moon as seen on the third day from the new moon.

ம. கீற்றுமதி

[கீற்று + மதி.]

**கீற்றுவண்ணம்** *kīṟṟuvaṇṇam,* பெ.(n.) புடைவை வகை; kind of saree.

[கீற்று + வண்ணம்.]

**கீற்றுவெடிப்பு** *kīṟṟu-veḍippu,* பெ.(n.) கத்தியால் கீறியதைப் போன்ற வெடிப்பு; cleft like an incised wound (சா.அக.).

[கீற்று + வெடிப்பு.]

**கீறல்** *kīṟal,* பெ.(n.) 1. கிழிகை; tearing, scratching, *"எள்ளுபு கழிக்கும் கீறலியை பழங்கந்தை" (குசேலோ. குசே. வைசன்.).* 2. வரிவரைகை; marking, drawing, lines. 3. கீறற் கையெழுத்து; mark of a person unable to write as a cross. 4. எழுதுகை; writing, scribbling. 5. கையொப்பமிடத் தெரியாதவன்; illiterate person.

[கீறு → கீறல்.]

**கீறிக்கம்பு** *kīṟi-k-kambu,* பெ.(n.) கட்டடத்துக்குரிய மரச்சாமான்; timber for building purposes.

[கீறு → கீறி + கம்பு.]

**கீறிக்காட்டு-தல்** *kīṟi-k-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. குறிப்பாய் உணர்த்துதல் (நெல்லை.); to hint, suggest. 2. வெளிப்படையாக உணர்த்துதல்; to give out plainly. அந்தச் செய்தியைக் கீறிக் காட்டிச் சொல்லுதல் முடியாது (உ.வ.).

[கீறி + காட்டு.]

**கீறிக்காயப்போடு-தல்** *kīṟi-k-kāya-p-pōḍu,* 18 செ.குன்றாவி. (v.t.) ***கீறிக்காயவை*** பார்க்க; see *kiri-k-kāyavai*

[கீறி + காய + போடு.]

**கீறிக்காயவை-த்தல்** *kīṟi-k-kāya-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) உப்புக்கண்டம் உலர்த்துதல் (வின்.); to slit and dry in the sun, as fish or meat.

[கீறு → கீறி + காயவை.]

**கீறிப்பார்-த்தல்** *kīṟi-p-pār-,* 4 செ.கு.வி. (v.i.) ஆய்ந் தறிதல்; to dissect, as a corpse, an argument.

[கீறி + பார்-.]

**கீறியாற்றல்** *kīṟi-y-āṟṟal,* பெ.(n.) கட்டி, சிலந்தி, முதலியவைகளை அறுத்து ஆறவைத்தல்; opening an ulcer or abscess and then healing it upper (சா.அக.).

[கீறி + ஆற்றல்.]

**கீறியாற்று-தல்** *kīṟi-y-āṟṟu,* 5 செ.கு.வி. (v.i.) உட்கருத்தை வெளிப்படுத்தி மனத்தாங்கலை நீக்கிக்கொள்ளுதல் (உ.வ.); to remove misunderstanding by open discussion of the actual facts.

[கீறி + ஆற்று-.]

**கீறியுப்பிடல்** *kīṟi-y-uppiḍal,* பெ.(n.) 1. மீனைப் பிளந்து உப்பிடல்; slitting and salting fish. 2. உடம்பில் கத்தியால் அறுத்து உப்பிட்டுச் சுடுதல்; making a incision and applying salt (சா. அக.).

[கீறி + உப்பு + இடல்.]

**கீறிவை-த்தல்** *kīṟi-vai-,* 4 செ.குன்றாவி (v.t.) 1. கத்தியாலறுத்துத் திறந்து வைத்தல்; cut and open by knife. 2. கத்தியால் பிளந்து மருந்து வைத்தல்; to open and apply medicine. 3. அறுவை செய்தல்; operating. 4. காயம்படுதல்; inflicting injury (சா.அக.).

[கீறி + வை-.]

**கீறு[1]-தல்** *kīṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. வரிகீறுதல்; to draw lines. 2.எழுதுதல்; to scribble, make marks, write, engrave. 3. கிறுக்கியடித்தல்; to score out. 4.கிழித்தல்; to slit, tear, rend. 5. பறண்டுதல்; to scratch, as a cat, a fowl, to work over, as one's toes. 6. ஆய்தத்தால் அறுத்தல்; to cut, gash, lance, dissect. *"புண்கீறிய குருதிப்புனல்" (கம்பரா. பரசுராமப்.9).* 7. வகிர்தல்; to slice, cut off longitudinally. 8. குறிப்பித்தல்; to give a clue to, as a subject.

ம. கீறுக, கீளு; குட. கீறு; து. கீறுனி; தெ. கீறு, கீயு, கீளு; துட., கோத. கீற்; கொலா. கீற; கொண்., பர். கீர்; கூ.கீர; பட. கீயி.

**Fin.** kirjotta; **FD.** kiruttoa; **Es.** kirjata; **Mong.** ziru; **Q.** qilqay.

*[குல் → கில் → கீல் → கீறு.]*

**கீறு**[2] *kiṟu-,* பெ. (n.) 1. வரி; stroke, mark, line. 2. பிளப்பு; furrow, incision, cut. "அந்தச் சுவரிற் கீறுள்ளது. 3. துண்டம்; slice, piece. மாம்பழத்தில் ஒரு கீறு தா (உ.வ.) 4. எழுத்து; scrawl, writing. 5. தென்னோலை அல்லது பனங்கிழங்கின் பாதி (யாழ்ப்.); half of a coconut leaf or an esculent palmyraroot.

*[கீல் → கீறு.]*

**கீறு**[3] *kiṟu,* பெ.(n.) பன்றி; hog.

*[கீறு → கீறி.]*

**கீறுசுப்பல்** *kiṟu-šuppal,* பெ.(n.) பாவைத் தெளிவு செய்வதற்காகப் பொரும்பாவைக் கீறப் பயன்படுத்தும் கம்பி அல்லது மூங்கில் குச்சி; stick used to stir liquid.

*[கீறு + சுப்பல் (குச்சி).]*

**கீன்றல்** *kiṉṟal,* பெ.(n.) கீறுகை (திவா.); burrowing, cleaving.

*[கீல் → கீறு → கீறுகை.]*

**கீனம்** *kiṉam,* பெ.(n.) 1. இழிவு; lowness, vileness. 2. குறைவு; defect, want.

*[கீல் → கீனம்.]*

**கீனம்பிடித்தவன்** *kiṉam-piḍittavaṉ,* பெ.(n.) 1. பித்துப்பிடித்தவன், a whimsical fellow. 2. கிறுக்கன்; crazy or crambly fellow (சா.அக.).

*[கீல் → கீனம் + பிடித்தவன்.]*

**கீனன்** *kiṉaṉ,* பெ.(n.) இழிந்தவன், ஈனமானவன்; low person.

*[கீழ்→கீல்→கீனம் → கீனன்.]*

**கு**[1] *ku,* ககரமெய்யும் உகர உயிரும் சேர்ந்து உண்டாகும் உயிர்மெய் எழுத்து; the syllable formed by adding back short vowel (u) to the velar voiceless stop (k), one of the secondary alphabet of the Tamil language.

*[க்+உ=கு.]*

**கு**[2] *ku,* இடை. (part) நான்கனுருபு (தொல். சொல். 76); dative case marker.

ம. கு, க்கு; க.கெ, க்கெ, இகெ; தெ. கு, கி; பட.க, கு; து.கு; குட.க,கு; துட. க,கு; குரு.கை; கோத. கெ; எரு. கு; கை. கு.

**H.** kō; **Beng.** kē; **Sind.** khē; **Sinh.** ghai; **Tib.** gya; **Ori.** kui; **Bodo.** khō; **Turk.** ke, ka, ga, ghah; **Scy.** ka, ki, ku; **Pkt.** kiē; **Mong.** dou; **Tatar.** ke; **Fin.** le, ke; **Ost.** ga; **Mord.** va, ga; **Jap.** he, ye, e; **Sia.** ke; **Mal.** ka, ākam; **Chin.** kih; **Burm.** go.

*[குல் = கூடுதல் கருத்துவேர். குல் → கு.]*

**கு**[3] *ku,* இடை. (part.) 1. ஒரு சாரியை (கலித். 79:18); connective particle, as in அறிகுவேன். 2. (அ) பண்புப் பெயர் ஈறு; abstract noun enching as நன்கு; (ஆ) தொழிற்பெயர் ஈறு; verbal noun tending, as. போக்கு (இ) தன்மையொருமை எதிர்கால வினைமுற்று ஈறு; sufix of firite verbs in Ist pers. Sing. fut., as உண்கு. 3. இருமடி ஏவலீறு; imperative verb additional suffix.

*[குல்→கு]*

**கு**[4] *ku,* பெ.(n.) புவி (திவா.); earth.

ம., க. கு.

*[குவலயம்→கு]*

**கு**[5] *ku,* இடை.(part.) 1. குறுமை முன்னொட்டு; diminutive prefix. குக்கிராமத்தில் வாழ்ந்தார் (உ.வ.). 2.இழிவு, தாழ்வு குறித்த முன்னொட்டு; a pronom, base... a prefix implying deterioration, depreciation, deficiency.

*[குல் → கு (குல் = சிறிதாதல், தாழ்தல்) குல் + வலி – குவலி (இலந்தை). குல்+சரி→குச்சரி (ஒரு பண்). குல் + (பாகு – பாக்கு) வாகம் – குவாகம் (பாக்குமரம்). குல் + வாதம் (வாள் → வாளம் (பேசுதல்) → வாதம்) – குவாதம், குவாது (குதர்க்கம்).]*

'குல்' முன்னொட்டின் பின் வருமொழி முதலில் வல்லெழுத்துவரின் வந்த வல்லெழுத்தே மிகும். நல் + கீரன் - நக்கீரன், நல் + செள்ளை-நச்செள்ளை, நல் + பின்னை - நப்பின்னை.

'குல்' முன்னொட்டின் பின் வரும் வருமொழி வடசொல்லாயின் ஈற்றுலகரமெய் கெட்டு குல் + கிராமம் - குக்கிராமம், குல் + தர்க்கம் - குதர்க்கம் எனப் புணரும். இம்முன்னொட்டைத் தமிழினின்று வடமொழி கடன் கொண்டது.

**கு**[6] *ku*, இடை. (part) நன்மை, உயர்வு குறித்த முன்னொட்டு; prefix used in the sense of auspicious, greatness.

*[குல் = கூடுதல், பெருக்கம், மேன்மை, உயர்வு. குல் → கு.]*

**குக்கர்** *kukkar*, பெ.(n.) மிக இழிந்தோர்; contemptible or despicable persons of low birth, as a dog. *"குடிமையிற் கடமைப்பட்ட குக்கரில்" (திவ். திருமாலை. 39).*

**க.** குக்கர, குக்கல.

kurkura, a dog. Gt. makes it a reduplicated form, derived from M. Kure, T. Kurai, to sound, to make a noise. See the so-called Sk. verbal theme kur S.kurkuta (K.K.E.D.XX)

*[குக்கல் → தாழ்தல், இழிதல், குக்கல் → குக்கர்.]*

**குக்கல்**[1] *kukkal*, பெ.(n.) கக்குவான் (யாழ்ப்.); whooping cough.

*[குக்கு → குக்கன்.]*

**குக்கல்**[2] *kukkal*, பெ.(n.) நாய் (சூடா.); dog. *"குக்கலைப் பிடித்து நாவிக் கூண்டினி லடைத்து வைத்து" (விவேகசிந்.).*

**தெ., க.** குக்க.

**Skt.**kukkura

*[குல் → குக்கு = உட்கார்தல், இருத்தல். குக்கு → குக்கல் = உட்கார்ந்திருக்கும் விலங்கு (நாய்).]*

**குக்கலிங்கோ** *kukkalingō*, பெ.(n.) கொம்மட்டி; bitter melon (சா.அக.).

*[குக்கல் → குக்கலிங்கம் → குக்கலிங்கோ (கொ.வ.).]*

**குக்கன்** *kukkaṉ*, பெ.(n.) நாய்; dog (திவா.).

**க.**குக்கர, குக்கல.

*[குக்கு → குக்கல் → குக்கன். 'அன்' ஒன்றன் பாலீறு (வே.க.151).]*

**குக்கி**[1] *kukki*, பெ.(n.) வயிறு (திவா.); belly, cavity of the abdomen.

**Skt.** kukshi

*[குல் = வளைதல் கருத்துவேர். குல் → குக்கு → குக்கி.]*

**குக்கி**[2] *kukki*, பெ.(n.) கன்றுகள், கண்டவற்றை மேயாதவண்ணம் வாய்ப்பகுதிக்கு இடும் வலை, முக்காணி; mouth covering of calves made of fibre string.

*[குல் + குக்கி.]*

**குக்கிக்கழிச்சல்** *kukki-k-kaḻiccal*, பெ.(n.) வயிற்றுக் கழிச்சல்; purging, purgation (சா.அக.).

*[குக்கி → கழிசல்.]*

**குக்கிச்சுரம்** *kukki-c-curam*, பெ.(n.) வயிற்றுக் கோளாறினால் உண்டாகும் காய்ச்சல்; fever relating to the gastric disorder in the stomach (சா.அக.).

*[குக்கி + சுரம்.]*

**குக்கிசம்** *kukkišam*, பெ.(n.) இடுப்புப்பக்கம்; the hip region (சா.அக.).

*[குக்கு → குக்கிசம்.]*

**குக்கிநீர்** *kukki-nīr*, பெ.(n.) இரைப்பையினுள் உண்டாகும் செரிமான நீர்; gastric juice or fluid (சா.அக.).

*[குக்கி + நீர்.]*

**குக்கிப்பிளிகை** *kukki-p-piligai,* பெ.(n.) குடலை மூடிய சவ்வு; a membrane attached to the intestines, appendices (சா.அக.).

*[குக்கி + பிளிகை.]*

**குக்கிரம்** *kukkiram,* பெ.(n.) வயிற்றுக் கோளாற்றினால் உண்டாகும் பெருவழற்சி; acute disorder of the stomach (சா.அக.).

*[குக்கி → குக்கிரம்]*

**குக்கிராமம்** *kukkirāmam,* பெ.(n.) சிற்றூர்;small village.

ம. குக்கிராமம்

Skt.kugrāma

*[குல்(குறுமை) +கிராமம்.]*

**குக்கிரி** *kukkiri,* பெ.(n.) மண்புழு, நண்டு ஆகியவை வெளித்தள்ளிய மண்; the soil thrown out by earthworms or crabs.

ம. குக்கிரி

*[குக்கில்³ →குக்கிரி.]*

**குக்கிரேகி** *kukkiregi,* பெ.(n.) வயிற்றிலுள்ள நீர் அல்லது நீர்த்தன்மையான பொருள்களை வெளியேற்ற அல்லது உட்புகுத்தப் பயன்படும் நீர்க்குழாய்; a small pump, used for emptying the stomach or pumping some liquid into it, stomach pump (சா.அக.).

*[குக்கில் →குக்கிலகி→குக்கிரேகி (கொ.வ.).]*

**குக்கில்¹** *kukkil,* பெ.(n.) செம்போத்து; prob. onom, crow pheasant. *"குக்கிற் புறத்த சிரல்வாய" (களவழி.5.).*

*[குக்கு – ஒலிக்குறிப்பு. குக்கு → குக்கில்.]*

**குக்கில்²** *kukkil,* பெ.(n.) 1.குங்கிலிய மரம்; piney varnish tree. 2.ஒரு சிறுமரம்; Indian bdellium. 3. கருங்குங்கிலியம்; black damma tree. 4. குங்கிலி யப்பிசின் (பிங்.); black dammar-resin.

ம. குக்கில்; க. குக்குள, குக்கிள.

*[உல் → குல் → எரிதல் கருத்துவேர். குல் → குக்கு → குக்கில்.]*

**குக்கில்பால்** *kukkil-pāl,* பெ.(n.) குங்கிலியம்; resin of Indian dammer (சா.அக.).

*[குக்கில் + பால்.]*

**குக்கிலம்** *kukkilam,* பெ.(n.) அதிவிடயம் என்னும் ஒரு மருந்துச் சரக்கு (மலை.); atees.

*[குக்குல் → குக்கிலம்.]*

**குக்கிலி** *kukkuli,* பெ.(n.) செம்போத்து (கழ.தமி. கை.);crow - pheasant.

*[குக்கில்→குக்கிலி.]*

**குக்கிலிற்கண்** *kukkilirkan,* பெ.(n.) செங்கண்; blood shot eyes (சா.அக.).

*[குக்கில்(எரிதல், சிவப்பு) + இல் + கண்.]*

**குக்கிற்பொடி** *kukkir-podi,* பெ.(n.) குங்கிலியம் கலந்த ஒருவகைப்பொடி மருந்து(வின்.); a kind of medicinal powder prepared by stuffing a fowl with dammer-resin, calcinating and pulverising it.

*[குக்கில் + பொடி.]*

**குக்கு¹-தல்** *kukku-.* 5 செ.கு.வி.(v.i.) இருமுதல்; onom, to whoop, hoop, as in whooping cough. *"பிணியுற்றவனாகிக் குக்கிக் கக்கி" (திருப்பு.430).*

ம. குக்குக (கூடாதல்)

*[குக் (ஒலிக் குறிப்பு) + குக்கு.]*

**குக்கு²-தல்** *kukku-,* 5 செ.கு.வி.(v.i.) ஒடுங்குதல் ; to be restrained as the senses or the resigned, to calm down.

*[குல் → குற்கு → குக்கு.]*

**குக்கு³-தல்** *kukku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. துணிகளைத் துவைக்க மெல்ல கல்லின் மேல் அடித்தல்; to beat cloth somewhat seny by in

washing. 2. கைமுட்டியால் குத்துதல்; to strike with the first culf.

க., படை. குக்கு.

[குல் → குக்கு.]

**குக்கு[4]–தல்** *kukku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. குனிதல், வளைதல்; to bend. 2. தாழ்தல்; to become low in position. 3. கெடுதல், அழிதல்; to get ruined.

க.,தெ. குக்கு.

[குல் → குக்கு.]

**குக்கு[5]** *kukku,* பெ.(n.) **குக்கர்** பார்க்க; see *kukkar.*

[குக்கல் → குக்கு.]

**குக்குடச்சூட்டு** *kukkuḍa-c-cūṭṭu,* பெ.(n.) கோழித் தலைக் கந்தகம் (வின்.); a kind of sulphur.

*[குக்குடம் = கோழி, சேவல். சூட்டு = தலைக்கொப்பு. குக்குடம் + சூட்டு.]*

**குக்குடசருப்பம்** *kukkuda-saruppam,* பெ.(n.) பறவைநாகம்; flying snake or cobra, a winged serpent - basilik. (சா.அக.).

*[குக்குடம் +சருப்பம்.]*

**குக்குடசிவப்புக்காரம்** *kukkuda-sivappu-k-kāram,* பெ.(n.) சிவப்புச் சேவலின் கழிவு; the dung of a red cock (சா.அக.).

*[குக்குடம் +சிவப்பு + காரம்.]*

**குக்குடத்தண்டம்** *kukkuḍa-t-tanḍam,* பெ.(n.) கோழிமுட்டை; fowl's egg (சா.அக.).

க. குக்கடாண்ட

*[குக்குடத்து + அண்டம்.]*

**குக்குடதீபம்** *kukkuḍa-tipam,* பெ.(n.) கோழி வடிவாகச் செய்யப்பெற்ற கோயில்விளக்கு (பரத. ஒழிபி. 42. உரை.); a fowl-shaped lamp used in temples.

*[குக்குடம் + தீபம். குக்குடம் = கோழி.]*

**குக்குடப்பாம்பு** *kukkuḍa-p-pāmbu,* பெ.(n.) வாணாள் நீட்டித்தலால் உடல் குறைந்து கோழி பறக்குமளவு பறந்து செல்லுந்தன்மையதான பாம்பு (சீவக. 1271,உரை); winged serpent, a variety of serpents said to become shorter with age, get wings ultimately and fly like domestic fowls.

ம. குக்குடசர்ப்பம்

*[குக்குடம் + பாம்பு. குக்குடம் = கோழி.]*

**குக்குடபுடம்** *kukkua-puḍam,* பெ.(n.) கோழியின் அளவாகப் பத்து வறட்டி கொண்டு இடப்படும் புடம் (கந்தபு. மார்க்கண். 134); calcination of metals in pile of ten dried dung cakes approximating to the height of a cock.

ம. குக்குடபுடம்

*[குக்குடம் = கோழி. குக்குடம் + புடம்.]*

**புடத்தின் வகை:**

1. ஆயுர்வேதப்படி 1 சாண் உயரம் 1 சாண் ஆழமுள்ள பள்ளத்தில் காட்டு முட்டையை, புடம் போடும் மருந்திற்குக் கீழுமேலுமாக நிரப்பிப்போடும் புடம்.

2. சித்தநூலின் முறைப்படி 5 எருவைக் கோழி உயரம் அடுக்கிப் போடுதல். இதன் சுற்றளவு 16 அங்குலமெனச் சொல்லப்படும்.

3. வேறுசில நூல்களில் ஆசிரியர்கள் 10 எருவைக் கொண்டு போடும் புடமெனக் கருதுவார்கள்.

**குக்குடம்** *kukkuḍam,* பெ.(n.) 1.கோழி; gallinaceous fowl, cock, hen. *"குக்குடம் வாழ்க" (கந்தபு. வள்ளி 261).* 2. இறகுள்ள பாம்பு (பிங்.); winged serpent.

ம. குக்குடம்; க.,து.,குக்குட; **Skt.** *kukkuṭa.*

*[கொக் – ஒலிக்குறிப்பு. கோழி எழுப்பும் ஓசை. கொக் + கொக் - கொக்கொக் → குக்குக் → குக்குடு → குக்குடம்.]*

***kurkuṭa, kukkuṭa***, a cock, a wild cock; ***kukkuṭi***, a hen. *Cf.*D. *kuk, kural, koral, kugu* 1, and 2, and also Sk. ***kurkura*** (No.44). There is the Sk. verbal theme ***kur***, to sound, that has apparently been formed of the T. and M. verbs adduced s. ***kurkura***. ***Kurkuṭa*** (contracted into

*kukkuṭa*) is either a reduplication of a *kuṭakuṭa*, or more probably a composition of ***kur***, sound, cry (i.e. T. ***kural***) and D. *kuṭa*, beater, utterer (cry-beater or -utterer, i.e. crier, crower). The present and only D. word for a cock, a fowl, is *kōḷi*, q.v., which bird is found wild in the southern jungles. *Koḷi* is of course a contraction of some ancient D. term, and *kurkuṭa* and *kōḷi* certainly are cognate (K.K.D.E.XX).

**குக்குடவிருக்கை** *kukkuḍā-virukkai*, பெ.(n.) கோழியைப் போல்; sitting posture like cock. இருகால்களையும் கீழ்வைத்துக் குந்தியிருந்து ஒகஞ்செய்யும் இருக்கை வகை (திருமந்.561); sitting posture in yogic practic, the soles touching the ground like those of a cock.

*[குக்குடம் + இருக்கை. குக்குடம் = உட்கார்ந்தநிலை.]*

**குக்குடி** *kukkuḍi* பெ.(n.) 1. இலவமரம்; silk cotton tree. 2. பெட்டைக்கோழி; hen (சா.அக.).

ம. குக்குடி

*[குக்குடம் → குக்குடி.]*

**குக்குரம்** *kukkuram*, பெ.(n.) கோடகசாலை என்னும் பூடு(மலை.); a very small plant.

*[குக்குல் → குக்குரம் = தரையில் படரும் பூடுவகை.]*

**குக்குரன்** *kukkuraṉ*, பெ.(n.) நாய்; dog.

ம. குக்குரம்; து. குக்கரெ; Skt. kukkura.

*[குக்கல்→குக்குரன்.]*

**குக்குரி** *kukkuri* பெ.(n.) பெண்நாய்; a bitch.

ம., க. குக்குரி.

*[குக்கல்→குக்கலி→குக்குரி]*

**குக்குலவம்** *kukkulavam*, பெ.(n.) குக்கிலிலிருந்து எடுக்கும் எண்ணெய்; a medicated oil or ghee prepared from bedallium (சா.அக.).

*[குக்கில்→குக்குலவம்]*

**குக்குலு** *kukkulu*, பெ.(n.) 1. ஒருவகை மரம் (பதார்த்த.1120); tripterocarp dammar. 2. வெள்ளைக் குங்கிலியம்; piney varnish tree. 3. ஒருவகைப் பெருமரம்; konkani resin. 4. ஒருவகைச் சிறுமரம்; Indian bdellium.

*[குக்கில் → குட்டையானது. குக்குல் → குக்குலு.]*

**குக்குலுவம்** *kukkuluvam*, பெ.(n.) **குங்கிலியம்** பார்க்க; see *kuṅgiliyam*. *"குக்குலுவப்புகை" (கந்தபு. தேவகிரி. 29).*

மறுவ. குங்கலியம்

*[குக்கில் → குக்குலுவம்.]*

**குக்குறம்** *kukkuṟam*, பெ.(n.) குடசப்பாலை; conessi bark.

*[குக்கல் (சிறியது) → குக்குறம்.]*

**குக்குறுப்பான்** *kukkuṟuppāṉ*, பெ.(n.) **குக்குறுவான்** பார்க்க; see *kukkuṟuvāṉ*.

*[குக்குறுவான் → குக்குறுப்பான்.]*

**குக்குறுவான்** *kukkuṟuvāṉ*, பெ.(n.) கீச்சென்று ஒலிக்கின்ற பசுமை நிறமுள்ள பறவை வகை (யாழ்ப்.); a green, screeching barbet.

*[கிக் – ஒலிக்குறிப்பு. கிக் + கிக் + உறு. கிக்கிறு + அன் – கிக்கிறுவான் → குக்குறுவான்.]*


குக்குறுவான்

**குக்கூடல்** *kukkūḍal*, பெ.(n.) முட்டாக்கு; veil or covering for the head. *"பொன்னொத்த வாடைக்குக்கூடலிட்டு" (திவ். பெருமாள். 6:5).*

*[குல் – வளைதல் கருத்துவேர். குல் → குக்கு → குக்குடல் → குக்கூடல் = வளைத்துப் போர்த்துக் கொள்ளும் போர்வை]*

**குக்கூவெனல்** *kukkū-v-eṉal,* பெ.(n.) ஓர் ஒலிக் குறிப்பு; onom. expr. signifying crowing sound, as of a cock; cooing sound, as of a dove, hooting noise , as of an owl. *"குக்கூவென்றது கோழி"* *(குறுந். 157).*

*[குக் + கூ – ஒலிக்குறிப்பு) குக் + கூ + எனல்.]*

**குக்கை** *kukkai,* பெ.(n.) மூங்கிலால் முடைந்த சிறு கூடை; small basket made of bamboo.

**க.** குக்கெ, குக்கி; **து.,** பட. குக்கெ; **கோத.** கிக்.

*[குக்கு → குக்கை.]*

**குகதி** *kugadi,* பெ.(n.) முடவன்; lame person. *"குகதிகள் குருடர் மூகர்" (மேமருமந். 351).*

*[குல் + கதி]*

**குகநன்** *kuganaṉ,* பெ.(n.) 1.பாம்பு; snake. 2. எலி; rat (கோ.தமி. கை.).

*[குழி → குழை → குகை + நன். குகை = இருள், கருப்பு.]*

**குகரம்** *kugaram,* பெ.(n.) 1. மலைக்குகை; cave, cavern *"மலைக்குகரத்து" (அரிசமய. பக்தி சார. 37).* 2. சுரங்கம்; cavity, hollow, subterranean passage. *"குகர நீணெறி" (பாரத. வேத். 2).*

*[குகை → குகம் → குகரம் (கொ.வ.).]*

**குகரர்** *kugarar,* பெ.(n.) சாகத்தீவில் வாழும் ஒரு குலத்தார்; inhabitants of the annular continent, cāka-t-tivu. *"சாகத் தினெல்லை தன்னில்..... குகரராண்டு வாழ்வார்" (கந்தபு. அண்டகோ. 48.).*

*[குகன் → குகர் → குகரர். குகர் = வேடர், படகோட்டிகள்.]*

**குகவேளாளர்** *kuga-vēḷāḷar,* பெ.(n.) இராமன் கங்கை கடக்குமாறு துணைபுரிந்த குகனது மரபினராகச் செம்படவர் சிலர் வழங்கிக்கொள்ளும் குலப்பெயர் (E.T.); name assumed by a sect of *cempaḍavaṉ* tracing their descent from Kuga who ferried *Rāmā* over the Ganges.

*[குகன் + வேளாளர்.]*

**குகன்[1]** *kugaṉ,* பெ.(n.) 1. முருகன் (திவா.); God Murugan. *"ஆருயிர்க் குகைதோறும் வதிதலாற் குகனென்று" (தணிகைப்பு. நாட்டுப். 33).* 2. இராமனது நண்பனாகிய ஒரு வேடன்; a *Nisāda* ferryman and friend of *Rāmā. "கூரணிந்த வேல் வலவன் குகனோடும்" (திவ். பெரியாழ். 4.10: 4).*

*[குக்கல் = நாய். குக்கலன் →குகன் (நாயை வேட்டைக்கு உடனழைத்துச் செல்பவன், வேடன்).குகன் = வேடர்குலத்து வள்ளியை மணந்தவன், முருகன்.]*

**குகன்[2]** *kugaṉ,* பெ.(n.) ஆசிரியர், குரு (யாழ். அக.); preceptor.

*[குரவன் →குவன் → குகன்.]*

**குகு** *kuku,* பெ.(n.) 1. காருவா (அமாவாசை ); new moon. *"குகுவைத் தொடர் பூரணை" (சேதுபு. தேவிபு. 60).* 2. பத்துநாடியுளொன்று; a principal tubular vessel of the human body, one of *tacanādi. 'குகு கன்னியலம்புடை' (சிலப். 3:26, உரை.).*

**Skt.** kuhu

*[குல் → குவ் → குகு (குகை, இருள்).]*

**குகுரம்** *kuguram,* பெ.(n.) ஐம்பத்தாறு தேசங்களுள் ஒன்று; a country in Ancient India, the kingdom of Yadu, one of 56 *tēcam. "அவந்தியொடு சேதி குகுரம்" (திருவேங். சத.97).*

**ம.** குகுரம்

**Skt.** kukura

*[குகர் = வேடர், படகோட்டிகள். குகர் →குகுரம்.]*

**குகுரன்** *kuguraṉ,* பெ.(n.) நாய்; dog.

**ம.** குகுரம்

*[குக்கல் → குக்குரன் → குகுரன் (கொ.வ.).]*

**குகை** *kugai,* பெ.(n.) 1.மலைக்குகை (பிங்.); cave, mountain cavern, grotto. 2. முனிவர் இருப்பிடம் (பிங்.); hermit's cell. 3. சிமிழ்(சீவக.1906, உரை); scent box , casket. 4. மாழை களை உருக்குங் கலம்; crucible. *"கருமருவு குகையனைய காயத்தி னடுவுள்" (தாயு. 32).* 5. கல்லறை; cellar subterranean walled room for the ascetic in trance, serving as sepulchre after his death, when he is intered in it in a sitting posture. *"அந்தவுடறான் குகைசெய் திருத்திடின்"(திருமந். 1913).* 6. மலைமகள்(கூர்மபு. திருக்கலியாண.23);*Pārvati*

**மறுவ.** கெவி, அளை, குடவு, நூழை, பொதும்பு, போறை முழை, வங்கு, விடர்.

**க.,தெ., து.** கவி; **கூய்.** க்ராஉ.

**Skt.** guha

**Fin.** kāva; **Es.** kava; **Hung.** keb; **Mong.** keb; **O.Turk.** kib; **Jap.** gawab; **Q.** hawa.

*[குழி → குழை → குகை. ஒநோ. முழை → முகை.]*

**குகைக்காமன்** *kugai-k-kāmaṉ,* பெ.(n.) கல்நார் (மூ.அ.); asbestos.

*[குகை + காமன்.]*

**குகைச்சட்டி** *kugai-c-caṭṭi,* பெ.(n.) சட்டிவகை; kettle.

*[குகை + சட்டி.]*

**குகைச்சி** *kugaicci,* பெ.(n.) கறையான் புற்று (யாழ். அக.); white ant's nest.

*[குகை → குகைச்சி.]*

**குகைநமச்சிவாயர்** *kugai-nama-c-civāyar,* பெ.(n.) பதினெட்டாம் நூற்றாண்டில் திருவண்ணா மலைக் குகையில் வசித்து வந்தவரும் அருணகிரி யந்தாதி முதலிய நூல்களின் ஆசிரியருமான ஒரு முனிவர்; author of *Aruṇa-kiri-y-antāti* and other works, who lived in a cave at *Tiruvaṇṇāmalai* in the 18th c.

*[குகை + நமச்சிவாயர்.]*

**குகைப்புடம்** *kugai-p-puḍam,* பெ.(n.) மூசையில் வைத்து இடும் புடம்(வின்); calcination or refining of metal in a crucible.

*[குகை + புடம். குகை = மூசை.]*

**குங்கிப்போ-தல்** *kuṅgi-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) குறைதல்; decreasing, becoming less (சா.அக.).

**தெ.** குங்கு, கூகு, க்ருங்கு (மூழ்குதல், மறைதல்).

*[குறுகு → குக்கு → குங்கு → குங்கி+ போ.]*

**குங்கிலி** *kuṅgili,* பெ.(n.) 1. தலூரம்; bastard saul. 2. காட்டுமா; wild mango (சா.அக.).

*[குக்குல் → குங்குல் → குங்கிலி.]*

**குங்கிலிகம்** *kuṅgiligam,* பெ.(n.) 1. ஒருவகை மரம்; tripterocarp dammar. 2. வாலுளுவை; black oil.

*[குங்கிலியம் → குங்கிலிகம்.]*

**குங்கிலியக்கலய நாயனார்** *kuṅgiliya-k-kalaya-nāyaṉar,* பெ.(n.) அறுபத்து மூன்று நாயன்மாருள் ஒருவர்(பெரியபு.); name of a cononized *śaiva*saint, one of 63.

*[குங்கிலியம் + கலயம் + நாயனார்.]*

**குங்கிலியக்கலயர்** *kuṅgiliya-k-kalayar,* பெ.(n.) ***குங்கிலியக் கலய நாயனார்*** பார்க்க; see *kuṅgiliya-k-kalaya-nāyaṉār.*

*[குங்கிலியம் + கலயம் + அர் – குங்கிலியக் கலயர்.]*

**குங்கிலியக் களிம்பு** *kuṅgiliya-k-kaḷimbu,* பெ.(n.) ஆறாத புண்களுக்குப் பூச உதவும் வெள்ளைக் குங்கிலியக் களிம்பு; an ointment prepared from olibanum. It is applied for unhealed sores (சா.அக.).

*[குங்கிலியம் + களிம்பு.]*

**குங்கிலியத்தூள்** *kuṅgiliya-t-tūḷ,* பெ.(n.) குங்கி லியப்பொடி; powder of Indian olibanum (சா.அக.).

*[குங்கிலியம் + தூள்.]*

**குங்கிலியம்** *kuṅgliyam,* பெ.(n.) 1. ஒருவகை மரம் (பதார்த்த. 1120.); tripterocarp dammar. 2. சாலமரம்; bastard sal. 3. சாலவகை; sal. 4. வெள்ளைக் குங்கிலியம்; pineyvarnishtree. 5. ஒருவகைப் பெருமரம்; Konkani resin. 6. ஒரு சிறுமரம்; Indian bdellium tree. 7. மலைக்கிளுவை; downy hill balsam tree. 8. கருங்குங்கிலியம்; black dammar tree. 9. ஆத்திரேலியாவிலுள்ள மரவகை; Australian dammar.

ம. குங்கிலியம்

*[குக்கில் → குங்கிலியம்.]*



குங்கிலியம்

**குங்கு-தல்** *kuṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. குன்றுதல்; to decrease, diminish, sink; to be humbled. *"உன்பொங்கு குங்க"(யாழ்ப்.).* 2. வணங்குதல்; to bend sralute. 3. குவிதல்; to close. 4. சுருங்குதல்; to condense.

ம. குங்nுக; க. குக்கு, குங்கு; தெ. குங்கு; து. குக்குனி; துட. க்விச்; கூ. க்ரும்ப, க்ரூவ; குவி. க்ரூஇயலி; பட. குக்கு.

*[குல் → குங்கு → குங்குதல்.(தமி.வ.219).]*

**குங்குமக்காவி** *kuṅguma-k-kāvi,* பெ.(n.) செங்காவி (வின்.); saffron ochre.

மறுவ. குங்குமக்கவலி

ம. குங்குமக்காவி

*[குங்குமம் - சிவப்பு, குங்குமம் + காவி.]*

**குங்குமக்குருவிக்கார்** *kuṅguma-k-kuruvi-k-kār,* பெ.(n.) நெல்வகை(A); a kind of paddy.

*[குங்குமம் + குருவி + கார்.]*

**குங்குமக்கோதை** *kuṅguma-k-kōdai,* பெ.(n.) சிவப்புச்சத்திசாரணை; red shauranay, red trianthema. *"குங்குமக் கோதைகுடல் பிடுங்கி"* (சா.அக.).

மறுவ. குங்குமச்சத்தி

*[குங்குமம் +கோதை.]*

**குங்குமச்சம்பா** *kuṅguma-c-camba,* பெ.(n.) மஞ்சள் நிறமுள்ள சம்பா நெல் வகை(வின்.); a yellow variety of rice.

*[குங்குமம் + சம்பா.]*

**குங்குமச்சிமிழ்** *kuṅguma-c-cimiḻ,* பெ.(n.) குங்குமம் வைக்கும் பெட்டி; small casket for holding *kuṅgumam* powder.

மறுவ. குங்குமச்செப்பு, குங்குமப்பரணி

*[குங்குமம் + சிமிழ்.]*

**குங்குமச்சிவதை** *kuṅguma-c-civadai,* பெ.(n.) சிவப்புச் சிவதைக் கீரை; a red variety of cats greens (சா.அக.).

*[குங்குமம் + சிவதை.]*

**குங்குமச்சீதா** *kuṅguma-c-cīdā,* சிவப்புச் சீதா செங்கழுநீர், அல்லது சிவப்பு நெய்ச்சிட்டிக் கீரை; a red variety of ash-coloured fleabane (சா.அக.).

*[குங்குமம் + சீதா.]*

**குங்குமச்செந்தொட்டி** *kuṅguma-c-centoṭṭi,* பெ.(n.) சிவப்புச் செந்தொட்டி அல்லது சிவப்புக் காஞ்சொறி; a red variety of *kāñjoṟi* (சா.அக.).

*[குங்குமம் + செந்தொட்டி.]*

**குங்குமச்செப்பு** *kuṅguma-c-ceppu,* பெ.(n.) **குங்குமச்சிமிழ்** பார்க்க; see *kuṅguma-c-cimiḻ.*

ம. குங்குமச்செப்பு

[குங்குமம் + செப்பு.]

**குங்குமச்செம்பரத்தை** *kuṅguma-c-cembarattai,* பெ.(n.) சிவப்புச் செம்பரத்தை; flesh coloured shoe-flower (சா.அக.).

[குங்குமம் + செம்பரத்தை.]

**குங்குமச்செவ்வந்தி** *kuṅguma-c-cevvandi,* பெ.(n.) செவ்வந்தி வகை (மூ.அ.); a species of chrysanthemum.

[குங்குமம் + செவ்வந்தி]

**குங்குமச்செழுமலர்** *kuṅguma-c-ceḻumalar,* பெ.(n.) சிவப்புக்கொன்றை; a kind of red cassia tree (சா.அக.).

[குங்குமம் + செழுமலர்.]

**குங்குமச்சோரன்** *kuṅguma-c-cōraṉ,* பெ.(n.) ஒருவகைக் குதிரை (அசுவசா. 152); a species of horse.

[குங்குமம் + சோரன்.]

**குங்குமதூபம்** *kuṅguma-tūbam,* பெ.(n.) வெள்ளைப் போளம்; white myrrh (சா.அக.).

[குங்குமம் + தூபம்.]

**குங்குமப்பயறு** *kuṅguma-p-payaṟu,* பெ.(n.) பாசிப் பயறு இனத்தைச் சேர்ந்த ஒரு சிவப்புப்பயறு; a red variety of the species of green gram (சா.அக.).

ம. குங்குமப்பயறு

[குங்குமம் + பயறு.]

**குங்குமப்பரணி** *kuṅguma-p-paraṇi,* பெ.(n.) குங்குமச்சிமிழ் பார்க்க; see *kuṅguma-c-cimiḻ.*

[குங்குமம் + பரணி.]

**குங்குமப்பருத்தி** *kuṅguma-p-parutti,* பெ.(n.) செம்பருத்தி; Bengal cotton (சா.அக.).

[குங்குமம் + பருத்தி.]

**குங்குமப்பாடாணம்** *kuṅguma-p-pāḍāṇam,* பெ.(n.) குங்குமச்செய் நஞ்சு (மூ.அ.); a prepared arsenic one of 32.

[குங்குமம் + பாடாணம். Skt. pāšaṇa > த. பாடாணம்.]

**குங்குமப்பிரண்டை** *kuṅguma-p-piraṇḍai,* பெ.(n.) சிவப்புப் புளியம் பிரண்டை; heavy wild vine (சா.அக.).

[குங்குமம் + பிரண்டை.]

**குங்குமப்பூ** *kuṅguma-p-pū,* பெ.(n.) குங்குமச் செடியின் பூ; saffron flower.

ம. குங்குமப்பூ

[குங்குமம் + பூ.]

குங்கமப்பூ காசுமீரத்தில் விளைவாகி மற்ற இடங்களுக்கு ஏற்றமதியாகிறது. இது ஒரு மணப்பொருள். கருவுற்ற பெண்களுக்கு இதைக் கொடுப்பார்கள்.

**குங்குமப்பேரிகம்** *kuṅguma-p-pērigam,* பெ.(n.) சிவப்பாத்தி; crimson climbing mountain ebony (சா.அக.).

[குங்குமம் + பேரிகம்.]

**குங்குமப்பொட்டு** *kuṅguma-p-poṭṭu,* பெ.(n.) குங்குமப்பொடியால் நெற்றியிலிடும் பொட்டு; a mark of *kuṅgumam* powder worn on the fore-head.

[குங்குமம் + பொட்டு.]

**குங்குமம்** *kuṅgumam,* பெ.(n.) 1. ஒருவகைச் செடி; saffron, bulbous-rooted plant. 2. சாப்பிராவிரை; arnotto. 3. குரங்குமஞ்சணாறி; kamela. 4. செஞ் சாந்து; a kind of red paint. *"மார்பிற் கலவாக் குங்கும நிலவிய தென்ன" (கல்லா. 17:34).* 5. நெற்றியிலிடும் குங்குமப்பொடி; saffron powder worn on the forehead.6. செந்நிறம்; red colour. 7. சிவப்பு; redness.

ம. குங்குமம்; க. குங்கும, குங்குவ; தெ. குங்கும.

Skt. kuṅkuma

*[கும் + கும். (நறுமண ஒலிக்குறிப்பு) கும் + கும் + அம் – குங்குமம்.]*

**குங்கும மந்தாரை** *kuṅguma-mandārai,* பெ.(n.) சிவப்பு மந்தாரை அல்லது செம்மந்தாரை; pink and yellow mountain ebony (சா.அக.).

*[குங்கும் + மந்தாரை.]*

**குங்கும மரம்** *kuṅguma-maram,* பெ.(n.) குங்குமப் பூச்செடி (சா.அக.); saffron, bulbous-rooted plant.

*[குங்குமம் + மரம்.]*

**குங்குமவண்ணக்கல்** *kuṅguma-vaṇṇakkal,* பெ.(n.) மஞ்சட்கல்; yellow stone, saffron stone (சா.அக.).

*[குங்குமம் + வண்ணம் + கல்.]*

**குங்குமவண்ணம்** *kuṅguma-vaṇṇam,* பெ.(n.) குங்குமத்தின் நிறம், சிவப்பு நிறம்; the colour of saffron, red colour.

ம. குங்குமவர்ணம்

*[குங்குமம் + வண்ணம் .]*

**குங்குமவண்ணி** *kuṅguma-vaṇṇi,* பெ.(n.) 1.அரிதாரம்; yellow sulphuret of arsenic. 2. மஞ்சட்கல்; saffron stone.

ம. குங்குமவர்ண்ணி

*[குங்குமம் + வர்ணி.]*

**குங்குமவலரி** *kuṅguma-v-alari,* பெ.(n.) அலரிவகை, செவ்வலரி; sweet oleander or red oleander or oleander role bay, as containing a yellow poisonous resin in its root.

*[குங்குமம் = குங்குமத்தின் நிறம். குங்குமம் + அலரி.]*

**குங்குமவாடை** *kuṅguma-vāḍai,* பெ.(n.) குங்கும மணம்; saffron odour (சா.அக.).

*[குங்குமம் + வாடை.]*

**குங்குமவாணிச்சி** *kuṅguma-vāṇicci,* பெ.(n.) தாளகம் (யாழ்.அக.); yellow sulphuret of arsenic.

*[குங்குமம் + வாணிச்சி.]*

**குங்குலு** *kuṅgulu,* பெ.(n.) 1.குங்கிலிய மரம் (தைலவ. தைல.74); tripterocarp dammar. 2. ஒரு வகை நீண்டமரம்; bastard sal.

*[குங்குல் → குங்குலு.]*

**குச்சத்தின்பாதி** *kuccattiṉ-pādi,* பெ.(n.) சிறு புள்ளடி வகை (மலை.); a species of tick-trefoil.

*[குச்சம்+அத்து + இன் + பாதி.]*

**குச்சம்**[1] *kuccam,* பெ.(n.) 1.கொத்து (சூடா.); bunch of flowers, cluster, tuff. 2. அழகுக்குஞ்சம்; tassel of thred, hung as an ornament. 3. பற்படகம் (மலை.); fever plant.

*[குல் = கூடுதல் கருத்துவேர். குல் → (குலவு) குச்சம்.]*

**குச்சம்**[2] *kuccam,* பெ.(n.) ***குன்றிமணி (மலை.)*** பார்க்க; crab's eye.

*[குன்றி → குற்றி → குச்சி → குச்சம். (கொ.வ.).]*

**குச்சம்**[3] *kuccam,* பெ.(n.) ***நாணல் (மலை.)*** பார்க்க; kaus, a large and coarse grass.

*[கச்சம் + குச்சம்.]*

**குச்சம்**[4] *kuccam,* பெ.(n.) புறந்தூற்றுமொழி (வின்.); slander, as persion.

*[குற்றம் → குத்தம் → குச்சம்.]*

**குச்சரக்குடிசை** *kuccara-k-kuḍiśai,* பெ.(n.) சோலையின் இடையில் அமைக்கப்பட்ட குடிசை வீடு (கட்டடம்);thatched house in a garden.

*[குச்சரம் + குடிசை.]*

**குச்சரம்** *kuccaram,* பெ.(n.) கூர்ச்சரம்; Gujarat ***"குச்சரக் குடிகைக்குமரி" (மணிமே. 18:152).***

[குச்சரம் - ஆலமரம். அம்மரத்தின் நடந்த குச்சர வாணிகம், வணிகரின் குடிப்பெயர். வணிகரால் பெயர் பெற்ற நிலப்பகுதி]

**குச்சரர்** *kuccarar,* பெ.(n.) கூர்ச்சர நாட்டினர்; people of Gujarat. *"குலிங்க ரவந்தியர் குச்சரர் கச்சியரே" (கலிங். 33).*

*[குச்சரம் → குச்சரர்.]*

**குச்சரி**[1] *kuccari,* பெ.(n.) 1. ஒரு பண் (இராகம்); a musical mode. *"குச்சரி குறுங்கலி சொல் கொல்லியது பாடா" (இரகு. தேனு. 25).* 2. முற் காலத்து வழங்கிய துகில்வகை (சிலப். 14:100, உரை.); a kind of garment used in ancient times.

*[குல் + சரி – குச்சரி.]*

**குச்சரி**[2]**-த்தல்** *kuccarittal,* 4 செ.கு.வி.(v.i.) அருவருப்புக் கொள்ளுதல்; to feel disgusted. *"கருமச் சழக்கிற் குச்சரிப்பன்" (ஞானவா. நிருவா.11).*

*[குழை + தரு – குழை தரு → குச்சரு → குச்சரி.]*

**குச்சரிசி** *kuccariśi,* பெ.(n.) நொய்யரிசி; broken rice.

ம. குச்சரி

*[குற்றரிசி (குற்றிய அரிசி) → குத்தரிசி → குச்சரிசி.]*

**குச்சி**[1] *kucci,* பெ.(n.) 1.மரக்குச்சி; splinter, peg, stick. 2. கொண்டையூசி; hairpin. 3. ஒருவகைச் செடி (மலை.); sickle leaf.

ம., து., பர்.குச்சிழு

*[குல் → குச்சி. குல் - சிறியது.]*

**குச்சி**[2] *kucci,* பெ.(n.) 1. முகடு; highest point, crest, summit. *"உதயத்தின் குச்சிச் சென்றா னொத்துளான்" (கம்பரா.வானர.20).* 2. சிறு குடிசை; hut.

*[குள் → குறு → குற்றி → குச்சி (த.வ.47).]*

**குச்சி**[3] *kucci,* பெ.(n.) 1.மயிற்சிகைப்பூடு (யாழ். அக.); peacock-fan, a fern. 2. திறவுகோல்; key.

*[குல் → குச்சி.]*

**குச்சி**[4]**-த்தல்** *kucci-,* 4 செ.குன்றாவி.(v.t.) அருவருத்தல்; to loathe, detest. *"குச்சித்த லின்றி நுகர்ந்தாள்" (பாரத. திரௌ. 74).*

*[குல் → குச்சி.]*

**குச்சிக்கால்** *kucci-k-kāl,* பெ.(n.) தூலத்தின் மீது வீட்டுக்கூரையைத் தாங்குங் கால் (தருமபுரி); roof supporting rafter.

*[குச்சி + கால்.]*

**குச்சிகை** *kuccigai,* பெ.(n.) வீணைவகை (பரத.ஒழிபி.15); a kind of lute.

ம. குச்சிக

*[குச்சி → குச்சிகை.]*

**குச்சித்தமரத்தை** *kuccitta-maratai,* பெ.(n.) புளிச்சக்காய் மரம் (இ.வ.); bilimbi tree.

*[குச்சி + தமரத்தை.]*

**குச்சிதம்** *kuccidam,* பெ.(n.) இழிவு; contemptibleness, despicableness, loathsomeness. அவன் எப்பொழுதும் மற்றவர்களைக் குச்சிதமாய்ப் பேசுகிறான் (உ.வ.).

*[குத்து → குச்சு → குச்சி → குச்சிதம். குத்திப்பேசுதல், தவறுகளைச் சுட்டிக்காட்டி இழிவுபடுத்துதல்.]*

**குச்சிப்பதக்கம்** *kucci-p-padakkam,* பெ.(n.) பதக்க அணிவகை; jewel pendant set with small rubies.

*[குச்சி + பதக்கம்.]*

**குச்சிப்புல்** *kucci-p-pul,* பெ.(n.) **குச்சுப்புல்** பார்க்க; see *kuccu-p-pul. "தடையறவே குச்சிப்புற் சாத்தி" (சிவரக. பசாசு. மோசந.10).*

*[குச்சு + புல் – குச்சுப்புல் → குச்சிப்புல்.]*

**குச்சில்**[1] *kuccil,* பெ.(n.) சிறியவீடு; small house.

ம. குச்சில் (பெண்கள் அறை, சமையலறை)

*[குற்றில் → குச்சில் (த.வ.74).]*

**குச்சில்**[2] *kuccil,* பெ.(n.) குச்சுப்புல்; cluster-grass. *"குச்சினிரைத்த குரூஉமயிர் மோவாய்" (புறநா. 257.).*

*[குச்சு → குச்சி → குச்சில்.]*

**குச்சில்**[3] *kuccil,* பெ.(n.) குச்சரம்; Gujarat.

மறுவ. குச்சரம், கூர்ச்சரம்.

*[குச்சரம் → குச்சில்]*

**குச்சிலியப்பொட்டு** *kucciliya-p-pottu,* பெ.(n.) தளுக்குப் பொட்டு; a fancy mark of mica worn on the forehead by women.

*[குச்சிலியம் + பொட்டு.]*

**குச்சிலியர்** *kucciliyar,* பெ.(n.) குச்சர நாட்டவர்; Gujaratis, people of Gujarat. *"குச்சிலிய மாதர் குயமும்"(தனிப்பா.ii,75,190).*

*[குச்சில் → குச்சிலியர்.]*

**குச்சு**[1] *kuccu,* பெ.(n.) 1.மரக்குச்சு; splinter, plug, any bit of stick, stalk. 2. கடாவுமுளை; tent-peg. 3. கொண்டையூசி; hairpin.

**ம., க.** குச்சு; **தெ.** குட்சி; **து., பர்.** குச்சி.

*[குல் → குள் (குட்டை, சிறியது) → குச்சு.]*

**குச்சு**[2] *kuccu,* பெ.(n.) 1.சிறுகுடில்; hut, shed made of palm leaves. *"என்னிலங் குச்சல" (தனிப்பா.i, 384,34.)* 2. சிற்றறை; small room.

ம. குச்சகம், குச்சு.

*[குல் → குள் → குச்சு.]*

**குச்சு**[3] *kuccu,* பெ.(n.) 1.குஞ்சம்; tassel, bunch, collection, cluster, tuft. *"கவரி மேனிலாப்படக் குச்சொடுந் தூக்கினர்"* (உபதேசகா. சிவ புண்ணிய.63). 2. ***குச்சுப்புல்*** பார்க்க;(புறநா. 257,உரை.); see *kuccu-p-pul.* 3. ஒரு வகைக் காதணி(வின்.); small bell -shaped gold pendant worn in a girl's ear. 4. ஊராளி மகளின் கழுத்தணி வகை; pencil-shaped ornament suspended from the neck, worn by *Urāḷi* women. 5. சீலையின் முன்மடி; folds, as of a woman's cloth when worn. 6. வண்ண ஓவியன் தூரிகை; painters brush.

**Skt.** kūrca

*[கொத்து → குத்து → குச்சு (வ.மொ.வ.121).]*

**குச்சு**[4] *kuccu,* பெ.(n.) பாவாற்றி என்னும் நெசவுக் கருவி; weaver's long brush with which the warp threads when laid out between trestes are separated from one another. *"குச்சென நிரைத்த யானைக் குழாம்"(சீவக. 1153).*

*[குல் → குள் → குச்சு.]*

**குச்சுக்கட்டு—தல்** *kuccu-k-kattu-,* 5 செ.குன்றாவி (v.t.) கூந்தல் முடித்தல்(வின்.); to braid the hair.

*[குச்சு = சிறியது, சிறிய முடிச்சு. குச்சு + கட்டு.]*

**குச்சுக்கயிறு** *kuccu-k-kayiru,* பெ.(n.) நெய்தற் குரிய கைப்பிடி; handle like knot made by coconut fibre.

*[குச்சு + கயிறு.]*

**குச்சுக்காரி** *kuccu-k-kāri,* பெ.(n.) 1.சிறுகுடிலில் வாழ்பவள்; woman residing in a hut. 2. இழிந்த விலைமகள்; a low prostitute.

*[குச்சு = கூரை வீடு, குடில். குச்சு + காரி – குச்சுக்காரி.]*

**குச்சுக்கெம்பு** *kuccu-kembu,* பெ.(n.) புறவிடம் மேடான சிவப்பு மணி; ruby with convex surface.

*[குச்சு + கெம்பு. கெம்பு = செம்மணி.]*

**குச்சுப்பிடி—த்தல்** *kuccu-p-pidi,* 4 செ.குன்றாவி. (v.t.) 1.ஆடையைக் கொய்து வைத்தல்; to make

folds in cloth when putting it on. 2. குஞ்சம் வைத்தல்; to make tassels.

*[குஞ்சம் → குஞ்சு → குச்சு + பிடி.]*

**குச்சுப்புல்** *kuccu-p-pul,* பெ.(n.) 1.ஒருவகைப் புல்; cluster-grass. குச்சுப்புல் நிரைத்தாற் போன்ற நிறம் பொருந்திய மயிரினையுடைய தாடியினையும் (புறநா. 257, உரை). 2. கொத்தாயுள்ள புல்; tassel of grass.

*[குச்சு + புல்.]*

**குச்சுப்புற்சாத்து-தல்** *kuccu-p-pur-cattu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கோயிற்சிலைகளைக் குச்சுப்புல்லால் தூய்மைசெய்தல்; to wipe the temple idols with fine grass.

*[குச்சு + புல் + சாத்து.]*

**குச்சுமட்டை** *kuccu-maṭṭai,* பெ.(n.) 1.ஓவியரின் கருவி வகை; painter's coarse brush. 2. வெள்ளை யடித்தற்குரிய மட்டை; brush used in white washing.

*[குச்சு + மட்டை.]*

**குச்சுமணி** *kuccu-maṇi,* பெ.(n.) பரவ மகளிர் கழுத்தணி வகை; a neck ornament.

*[குச்சு + மணி.]*

**குச்சுவாங்கு-தல்** *kuccu-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) குச்சியிற் பதித்து ஒன்பான் மணிகளை ஒப்பஞ்செய்தல்; to polish gems after setting them in a stick.

*[குச்சு + வாங்கு.]*

**குச்சுவீடு** *kuccu-vīḍu,* பெ.(n.) சிறுகூரைவீடு; cottage.

*[குச்சு + வீடு (வேடக. 153).]*

**குச்சுள்** *kuccul,* பெ.(n.) வீட்டின் முன்பாகத்திலுள்ள அறை; a room in front portion of the house.

*[குச்சு → குச்சுள்.]*

**குச்செறி-தல்** *kucceṟi-,* 2 செ.கு.வி.(v.i.) மயிர்சிலிர்த்தல்; to horripilate.

*[குல் → குத்து → குச்சு + எறி.]*

**குச்சை** *kuccai,* பெ.(n.) கொய்சகம்; fold or plait of a woman's cloth.

*[குஞ்சு → குச்சு → குச்சை.]*

**குசக்கணக்கு** *kuša-k-kaṇakku,* பெ.(n.) **குயக் கணக்கு** பார்க்க; see *kuya-k-kanakku.*

*[குயவன்+ கணக்கு →குயக்கணக்கு → குசக்கணக்கு.]*

**குசக்கருவி** *kuša-k-karuvi,* பெ.(n.) குயவர் பயன்படுத்தும் திரிகை, கல், தட்டுப்பலகை முதலியன; tools used by the potters namely potter wheel, beating plate & stone. **குயக்கருவி** பார்க்க; see *kuya-k-karuvi.*

*[குயவன் + கருவி – குயக்கருவி → குசக்கருவி.]*

**குசக்கலத்தி** *kuša-k-kalatti,* பெ.(n.) **குயக்கலத்தி** பார்க்க; see *kuya-k-kalatti.*

*[குயம் → குசம் + கலத்தி.]*

**குசக்கலம்** *kuca-k-kalam,* பெ.(n.) **குயக்கலம்** பார்க்க; see *kuya-k-kalam.*

ம.குசக்கலம்

*[குயவன் → குசவன் + கலம் – குசக்கலம்.]*

**குசக்காணம்** *kuša-k-kāṇam,* பெ.(n.) **குயக் காணம்** பார்க்க; see *kuya-k-kāṇam.*

*[குயவன் → குசவன் + காணம் – குசக்காணம்.]*

**குசக்குழாய்** *kuša-kuḻāy,* பெ.(n.) **குயக்குழாய்** பார்க்க; see *kuya-k-kuḻāy*

*[குயவன் → குசவன் + குழாய் – குசக்குழாய்.]*

**குசத்தி**[1] *kušatti,* பெ.(n.) **குயத்தி** பார்க்க; see *kuyatti.s*

ம. குசத்தி

*[குயவன் → குசவன் → குசத்தி.]*

**குசத்தி²** *kušatti,* பெ.(n.) பூவழலை(வின்.); earth impregnated with soda.

*[குய்யம் → குயம் → குயத்தி → குசத்தி.]*

**குசத்தி³** *kušatti,* பெ.(n.) 1. சாதிக்காய்; nutmeg. 2. ஓடு; tile (சா.அக.).

*[குயத்தி → குசத்தி.]*

**குசத்தீவு** *kuša-t-tivu,* பெ.(n.) ***குசைத்தீவு*** பார்க்க; see *kušai-t-tivu.*

*[குசை → குசம் + தீவு.]*

**குசந்தம்** *kušandam,* பெ.(n.) தருப்பைப்புல்; sacrificial grass (சா.அக.).

*[குயம் → குசம் + குசந்தம்.]*

**குசந்தனம்** *kušandanam,* பெ.(n.) செஞ்சந்தனம் (மலை.); red sandalwood.

*[குரு = சிவப்பு. குரு + சந்தனம் – குருச்சந்தனம் → குசந்தனம்.]*

**குசபலம்** *kuša-palam,* பெ.(n.) 1. மாதுளை மரம்; pomegranate tree. 2. பெண்ணின் முலையைப் போன்ற பழங்கள்; fruits of the shape of the female breast. 2.விளா; wood apple (சா.அக.).

*[குயம் → குசம் + பலம். பழம் >**Skt.** palam.]*

**குசம்¹** *kušam,* பெ.(n.) 1. தருப்பை; sacrifical grass. *"ஈரக் குசங்கள் கிழிக்குந் தொழிற் கேற்ற வாலோ" (பாரத. சம்பவ. 55).* 2. நீர் (பிங்.); water.

*[குல் →குய் →குசை → குசம்.]*

**குசம்²** *kušam,* பெ.(n.) மரம் (சூடா.); tree.

*[குல் → குய் → குசம்.]*

**குசம்³** *kušam,* பெ.(n.) முலை; woman's breast. *"பாரக்குசங்கள் பலதைவரும் பான்மை நீங்கி" (பாரத.சம்பவ. 55).*

*[குல் (முளைத்தல், தோன்றுதல்) → குய் → குசம்.]*

**குசம்⁴** *kušam,* பெ.(n.) 1.காட்டுத்துளசி;wild basil. 2. தொப்புள்; navel. 3. சாமைப்புல்; millet grass. 4. மூடம்; ignorance. 5. குற்றம்; mistake (சா.அக.). 6. புறங்கூறல் (யாழ். அக.); back biting.

*[குல் → குள் → குய் → குயம் → குசம்.]*

**குசமசக்கு** *kuša-mašakku,* பெ.(n.) 1.குழப்பம்; confusion, chaotic condition. 2. செயற்சிக்கல்; intricacy, difficulty. 3. பொய்; falsehood. 4. வீண்மயக்கு; vain show

*[குயம் → மயக்கு → குயமயக்கு → குசமசக்கு.]*

**குசமண்ணாலி** *kuša-mannāli,* பெ.(n.) குசமண் நாழி, குயவன் மண்ணால் செய்த நாழி அளவைப் படி; a measure *Nāli* mad of pottery.

*[குயம்→குசம் + மண் + நாழி. நாழி →நாலி (கொ.வ.).]*

**குசலக்காரன்** *kušala-k-kāran,* பெ.(n.) 1.மந்திரக் காரன்; sorcerer, wizard. 2. ஏமாற்றுக்காரன், வஞ்சகன்; crafty person.

*[குல்→குய் →குயல் → குசல்→ குசலம் + காரன்.]*

**குசலக்காரி** *kušala-k-kāri,* பெ.(n.) மந்திர வித்தையள்; a woman supposed to display super *nalūral* powers through evil spirits, witch (சா.அக.).

*[குய் →குயலம் →குசலம்+ காரி.]*

**குசலபுத்தி** *kušala-p-putti,* பெ.(n.) 1.கூர்மையான அறிவு; sharp intelligence acuteness of intellect. 2. தந்திரவறிவு (யாழ்ப்.); crafty, cunning wit.

*[குய் →குயலம் → குசலம் + புத்தி.]*

**குசலம்** *kušalam,* பெ.(n.) 1.நலம்; well-being, prosperity. *"குசலவார்த்தை பேசி" (உத்தரரா. சம்பு. 37).* 2. நற்குணம் (பிங்.); virtue, goodness. 3. மாட்சிமை (பிங்.); excellence.4. திறமை; ability, skill, dexterity. 5. தந்திரம்; craftiness, cunning, wile, trickiness. 6. மந்திரிகம்; witchcraft, magic, sorcery.

*[குல் →குய் →குயல் →குயலம் → குசலம்.]*

**குசலம்பண்ணு-தல்** *kušalam-paṇṇu-,* 5 செ.கு.வி. (v.i.) மந்திரம் செய்தல்; to practise the black art, work magic.

*[குல் → குய் → குயலம் → குசலம் + பண்ணு.]*

**குசலவர்** *kušalavar,* பெ.(n.) இராமபிரானது இரட்டை மகனான குசனும் இலவனும் (உத்தரரா. இலவண.75); Kusa and Lava sons of Rama.

*[குசன் → இலவன் → குசலவன் → குசலவர்.]*

**குசலவித்தை** *kušala-vittai,* பெ.(n.) மகளிர்க்குரிய எண்ணல், எழுதல், இலைகிள்ளல், பூத்தொடுத்தல், யாழ்வாசித்தல் முதலிய கைத்தொழில்கள்; accomplishments of women, being five viz. *yeṇṇal, yeḻutal, ilaikiḷḷal, pūtoḍuttal, yāḻvāšittal.*

*[குல் → குய் → குயலம் → குசலம் + வித்தை.]*

**குசலவேதனை** *kušala-vēdaṉai,* பெ.(n.) இன்ப உணர்ச்சி; pleasurable sensation.

*[குல் → குய் → குயலம் → குசலம் + வேதனை.]*

**குசலவைத்தியன்** *kušala-vaittiyaṉ* பெ.(n.) நோய்களின் கூறுபாடுகளை நன்கறிந்த மருத்துவம் செய்யும் மருத்துவன் (சா.அக.); an able or expert physician skillful in diagnosis as well as treatment.

*[குயலம் → குசலம் + வைத்தியன்.]*

**குசலன்** *kušalaṉ,* பெ.(n.) 1. மிகவல்லோன் (திவா.); skilful person, expert. 2. அறிஞன் (யாழ். அக.); wiseman. 3. தந்திரசாலி (இ.வ.); artful person.

*[குயல் → குயலன் → குசலன்.]*

**குசலனி** *kušalaṉi* பெ.(n.) மாயவித்தை செய்பவன் (சா.அக.); expert in magic.

*[குயலன் → குசலன் → குசலனி.]*

**குசலி** *kušali* பெ.(n.) தந்திரமுள்ளவள்; artful woman. *"சுதைச்சிறுக்கிகள் குசலிகள்" (திருப்பு. 267, புதுப்.).*

*[குயல் → குயலி → குசலி.]*

**குசலை** *kušalai,* பெ.(n.) சுவர்த்தலையில் கட்டும் ஆரல்; coping of a wall.

*[குச்சலை → குசலை.]*

**குசவம்** *kušavam,* பெ.(n.) கொய்சகம்; folds of cloth put on by Indian women.

*[கொய்சகம் → குசவம்.]*

**குசவன்** *kušavaṉ* பெ.(n.) மண்வினைஞன், குயவன்; potter.

ம. குசவன்; து. குசவே.

*[குயவன் → குசவன். **குயவன்** பார்க்க see kuyavaṉ.]*

**குசவன்கலம்** *kušavaṉ-kalam,* பெ.(n.) சட்டி; earthern pot or vessel (சா.அக.).

*[குயவன் → குசவன் + கலம்.]*

**குசவன்கைவழித்தமண்** *kušavaṉ-kaivaḻi-t-tamaṇ,* பெ.(n.) நுண்ணிய களிமண்; fine clay clinging to a potters hand, refined clay (சா.அக.).

*[குசவன் + கை + வழித்த + மண்.]*

**குசவன்சூளை** *kušavaṉ-cūḷai,* பெ.(n.) குயவன் மட்பாண்டம் சுடுவதற்கு ஏற்பட்ட இடம்; potters kiln (சா.அக.).

*[குயவன் → குசவன் + சூளை.]*

**குசவீசம்** *kušavīšam,* பெ.(n.) காட்டாத்தி; holy mountain ebony (சா.அக.).

*[குயம் → குசம் + வீசம்.]*

**குசவோடு** *kuša-v-ōḍu,* பெ.(n.) குயவன் செய்த ஓடு; pot tile.

*[குயவன் → குசவன் + ஓடு.]*

**குசன்** *kušaṉ,* பெ.(n.) செவ்வாய் (திவா.); the planet mars, as born of the earth.

*[குய் = எரிதல், சிவப்பு. குய் → குயன் → குசன்.]*

**குசாண்டு** *kušāṇḍu,* பெ.(n.) அற்பத்தன்மை; meanness, littleness. *"நன்மை தீமைகளைக் கணக் கிட்டுப் படிவைக்குங் குசாண்டுள்ள ஈச்வர கோஷ்டியை" (திவ்.திருப்பா.4, மூவா.).*

*[குசை = புல். குசை → குசாண்டு.]*

**குசாமியம்** *kušāmiyam,* பெ.(n.) மலைமா; hill balsam tree (சா.அக.)

*[குயம் (குயவு = உயரம்) → குயாமம் → குசாமியம்.]*

**குசாரன்** *kušārāṉ,* பெ.(n.) நாரத்தை; bitter orange.

*[குய் → குயவு → குயால் → குயாலன் → குசாரன்.]*

**குசால்** *kušāl,* பெ.(n.) மனக்களிப்பு; meriment, joy. "குசாலொடு சாய்ந்து கொண்டவர்"(மதுரகவி.70). 2. நடையுடைகளின் மினுக்கு; styleshness, gaudiness, finery, as in furniture, in dress, in perfumery.

*[குல் → குய் → குயவு (இளமை, மகிழ்வு) → குயால் → குசால்.]*

**Fin.** kuje; **Es.** kuju, koju; **Mordvin.** koj; **Q.** kuyay.

த. குயால் > u.khušāl

**குசாலிங்கனம்** *kušāliṅgaṉam,* பெ.(n.) 1. களித்து விளையாடி ஒருவரை ஒருவர் தழுவிக்கொள்ளல்; sexual embrace due to excess of delight and passion. 2. ஆசையால் தழுவல்; embrace out of love (சா.அக.).

*[குசால் + ஆலிங்கனம்.]*

**குசாற்காரன்** *kušāṟkāraṉ,* பெ.(n.) 1.மனக் களிப்புள்ளவன்; a merry, care-free happy-go-lucky person. 2. ஆடம்பரக்காரன்; beau, fop.

*[குயால் → குசால் + காரன்.]*

**குசிகம்** *kušigam,* பெ.(n.) 1. குதிரைச்செவி; horse ear. 2. குங்கிலிய மரம்; Indian dammer tree. 3. ஒரு வகைக் கள்ளி; a kind of spurge the leaf of which resembles the horse ear. 4. எண்ணெய்க் கசடு; the sediment of oil. 5. தான்றி; the devil's abode (சா.அக.).

*[குய் → குசி → குசிகம்.]*

**குசினி**[1] *kušiṉi,* பெ.(n.) சிறியது(யாழ்ப்.); anything very small, tender, slender (சா.அக.).

க. குசி; தெ. கூசு.

*[குல் → குள் → குய் → குசி → குசினி.]*

**குசினி**[2] *kušiṉi,* பெ.(n.) சமையலறை; cook-room, kitchen, galley.

F. cuisine

*[குல் → குய் (எரிதல்) → குயினி → குசினி.]*

**குசினிக்காரன்** *kušiṉi-k-kāraṉ* பெ.(n.) 1.சமையற் காரன்; cook, house-keeper, as working in the kitchen. 2. குதிரைக்காரன்; syce, horseg-room.

*[குய் → குயினி → குசினி + காரன்.]*

**குசினிப்பயிர்** *kušiṉi-p-payir,* பெ.(n.) இளம்பயிர் (யாழ்ப்.); seedling, tender plant.

*[குள் → குய் → குயினி + பயிர்.]*

**குசினிமேட்டி** *kušiṉi-mētti,* பெ.(n.) சமையற் காரனுடைய உதவியாளர்; cook's matey or under-servant.

*[குசினி + மேட்டி (மேலாள், மேட்டிமைக்காரன்).]*

**குசு** *kušu,* பெ.(n.) கீழ்க்காற்று; fart, wind or gas generated in the bowels and broken downwards.

க. குசு

*[குல் → குய் → குசு.]*

**குசுகுசு-த்தல்** *kušu-kušu-,* 4 செ.கு.வி.(v.i.) காதுக்குள் முணுமுணுவென்று ஓதுதல்; to whisper.

ம. குசுகுசுக்க; க. குசு, குச; து.குசி, குசு, குச்சி, குசு, குசுகுசு; தெ. குசகுச; பட. குசுகுசு; குரு. குசமுசாநா.

*[குசு + குசு - குசுகுசு.]*

**குசுகுசுப்பு** *kušu-kušuppu,* பெ.(n.) காதுக்குள் ஒதுகை; whispering.

*[குசு + குசுப்பு.]*

**குசுகுசெனல்** *kušu-kušeṉal,* பெ.(n.) காதுக்குள் ஒதுதற்குறிப்பு; onom.expr. signifying whispering.

*[குசு + குசு + எனல்.]*

**குசுண்டம்** *kušuṇḍam,* பெ.(n.) வெண்கருங்காலி; egg fruited ebony (சா.அக.).

*[குச்சுள் → குச்சுண்டம்.]*

**குசும்பகம்** *kušumbagam,* பெ.(n.) ஒரு நச்சுப் பூச்சி; a venomous insect (சா.அக.).

*[குய் → குசும்பு → குசும்பகம்.]*

**குசும்பம்**[1] *kušumbam,* பெ.(n.) ***செந்துருக்கம்*** பார்க்க; see *sendurukkam.* "*குசும்பமலர்க் கந்தம்*"*(திருமந். 2818).*

*[குய் → குசு → குசம்பை → குசம்பம்.]*

**குசும்பம்**[2] *kušumbam,* பெ.(n.) குங்குமப்பூச்செடி; safflower (சா.அக.).

*[குய் → குசு → குசும்பம்.]*

**குசும்பா**[1] *kušumbā,* பெ.(n.) ***செந்துருக்கம்*** பார்க்க; see *sendurukkam.*

*[குய் → குசு → குசும்பம் → குசும்பா.]*

**குசும்பா**[2] *kušumbā,* பெ.(n.) 1. ஒருவகைக் குடிப்பு; a kind of drink. 2. வெண்சிவப்பு நிறம்; a whitish pink colour (சா.அக.). குசும்பா வேட்டி (யாழ். அக.).

*[குய் → குசு → குசும்பம் → குசும்பா.]*

**குசும்பாச்சேலை** *kušumbā-c-cēlai,* பெ.(n.) குசும்பாச்சாயம் ஏற்றிய சேலை; cloth dyed red in a solution of safflower seeds.

*[குசும்பா + சேலை.]*

**குசும்பாப்பூ** *kušumbā-p-pū,* பெ.(n.) குங்குமப்பூச் செடி; safflower (சா.அக.).

மறுவ. லாலாப்பூ

*[குசும்பா + பூ.]*

**குசும்பாப்பூ வெண்ணெய்** *kušumbā-p-pū-veṇṇay,* பெ.(n.) குசும்பாப் பூவினின்று வடிக்கும் எண்ணெய்; oil extracted from safflover, it brings on haemoptysis (சா.அக.).

*[குசும்பா + பூ + வெண்ணெய்.]*

**குசும்பாவெண்ணெய்** *kušumbā-veṇṇey,* குசும்பா விதையினின்று வடிக்கும் எண்ணெய்; safflower oil, used in confectionery.

*[குசும்பா + எண்ணெய்.]*

**குசும்பு** *kušumbu,* பெ.(n.) குறும்புத்தனம்; mischief.

*[குறும்பு → குதும்பு → குசும்பு(கொ.வ.).]*

**குசும்பை** *kušumbai,* பெ.(n.) ***குசும்பா*** பார்க்க;see *kušumbā.* "*குசும்பையி னறுமலர்*" *(கம்பரா. அதிகாய. 89).*

*[குய் → குசு → குசும்பை.]*

**குசும்பைமலர்மணி** *kušumbai-malar-maṇi,* பெ.(n.) ஒன்பான் மணிகளில் ஒன்று (கோவரங்கப் பதுமராகம்) (யாழ். அக.); a kind of Topaz.

*[குசும்பை + மலர் + மணி.]*

**குசுமசத்தம்** *kušumašattam,* பெ.(n.) நாணல்; reed (சா.அக.).

*[குசுமம் + சத்தம்.]*

**குசுமம்** *kušumam,* பெ.(n.) 1. பூ (திவா.); flower. 2. ***காயா (மலை.)*** பார்க்க; see *kāyā.* 3. மலையிலுப்பை (காட்டிலுப்பை); wild mowah. 4. சங்கங் குப்பி; smooth volkameria (சா.அக.).

ம. குசுமம்

*[குய் → குசு → குசுமம்.]*

**குசுமவரி** *kuśuma-v-ari,* பெ.(n.) செம்பரத்தை; Chinese rose mallow (சா.அக.).

*[குசுமம் + அரி.]*

**குசுமாகரம்** *kuśumākaram,* பெ.(n.) வெயிற்காலம்; summer (சா.அக.).

*[கும் → குசுமம் → குசுமாகரம்.]*

**குசேலன்** *kuśēlan,* பெ.(n.) கண்ணன் நண்பனும் அவரால் வறுமை நீங்கிப் பெருஞ்செல்வம் பெற்றவனுமாகிய ஒரு முனிவன் (பாகவத. 10.45:1); a poverty-stricken Brahmin sage who through the friendship of Krishna became exceedingly wealth.

*[குல் (எழுச்சி, உயர்வு, நன்மை) கு + சீலன் → குசீலன் → குசேலன். வ. கு = நல்ல.]*

குல் என்னும் தமிழ் முன்னொட்டினை வடமொழி கடன் பெற்றது.

**குசை**[1] *kucai,* பெ.(n.) ***தருப்பை*** பார்க்க; see taruppai. *"குசைசுடு மறையோர்" (பிரபுலிங். கோரக்கர்.).*

*[குல் → குய் → குயை → குசை]*

**குசை**[2] *kušai,* பெ.(n.) 1.குதிரையின் வாய்க் கருவியிற் கோத்து முடியுங் கயிறு (நெடுநல். 178. உரை); rein. 2. கடிவாளம்; bridle, bit. *"அசைவி றொடை யடி கசைகுசை" (பாரத. பதினாறாம் போ. 27).*

*[கசை → குசை]*

**குசை**[3] *kušai,* பெ.(n.) மகிழ்ச்சி; gladness, joy. *"குசைதரு விநோதம்" (ஞானவா. தாசூர. 85).*

*[குல் → குய் → குயை → குசை]*

**குசை**[4] *kušai,* பெ.(n.) குதிரைப் பிடரிமயிர் (பிங்.); horse's mane.

*[குல் → குய் → குசை]*

**குசைக்கயிறு** *kušai-k-kayiru,* பெ.(n.) குதிரையின் வாய்வடம் (திவா.); rein.

*[குசை + கயிறு.]*

**குசைக்கிரந்தி** *kucai-k-kirandi,* பெ.(n.) தருப்பைப் புனித முடிச்சு; knot in a finger-ring, made of darbha grass. *"கண்டிவிசிட்டங் குசைக்கிரந்தி கனிட்டம்" (சிவதரு. ஐவகை. 4).*

*[குசை + கிரந்தி.]*

**குஞ்சக்குறவர்** *kuñja-k-kuravar,* பெ.(n.) பாவாற்றி செய்யும் குறவர் வகையினர்(E.T.); the Kuravas who manufacture weaver's brushes from roots, and are employed as shikaris.

*[குஞ்சம் + குறவர்.]*

**குஞ்சங்கட்டு—தல்** *kuñcan-kattu-,* 5 செ.கு.வி.(v.i.) அணியழுக்காகத் தொங்கவிடுதல்; to hang up tassels as ornamentsh.

*[கும் + குஞ்சு → குஞ்சம் + கட்டுதல்.]*

**குஞ்சட்டி** *kuñJatti,* பெ.(n.) சிறுசட்டி(யாழ்ப்.); small earthen vessel.

*[குறுமை + சட்டி – குறுஞ்சட்டி → குஞ்சட்டி.]*

**குஞ்சம்**[1] *kuñjam,* பெ.(n.) 1.குறள், குள்ளம் (திவா.); dwarf. 2. கூன் (அக.நி.); hump-back. 3. குறளை (திவா.); calumny, aspersion, slander.

*[குள் → குஞ்சு → குஞ்சம்.]*

இச் சொல்லிற்கு 'குப்ஜ' என்னும் வடசொல்லை மூலமாகச் சென்னைப் பல்கலைக்கழக அகர முதலியில் குறித்திருப்பது தவறு. வளைந்தது என்பதே வடசொற்பொருள் (வே.க.150).

**குஞ்சம்**[2] *kuñjam,* பெ.(n.) 1.பூங்கொத்து; bunch of flowers. 2. தவசக் கதிர்; an ear of corn. 3. புல்லின் குச்சு; tassel, cluster of grass. 4. புடைவையகலத்தின் அரைக்காற்பாகம்; a measure in the width of cloth = 120 threads of the warp. 4. கொய்சகம்; fold of cloth.

ம. குஞ்சம்; Skt. guccha.

**குஞ்சம்**[3] *kuñjam,* பெ.(n.) ஈயோட்டி (சூடா.); chowry, bushy tail of the yak, often set in a richy decorated handle for use as a fly-flapper.

ம. குஞ்சம்

**Fin.** kassa; **Karel.** kassa, kassu; **ED.** kassa.

*[குச்சு → குஞ்சு → குஞ்சம்.]*



குஞ்சம்

**குஞ்சம்**[4] *kuñjam,* பெ.(n.) ***குன்றி*** பார்க்க (திவா.); crab's eye.

*[குறு → குறுஞ்சம் → குஞ்சம். குறுதல் = முகத்தல்.]*

**குஞ்சம்**[5] *kuñjam,* பெ.(n.) நாழி (திவா.); a measure of capacity.

*[குய் → குய்ஞ்சம் → குஞ்சம். குய்தல் = முகத்தல்.]*

**குஞ்சம்**[6] *kuñcam,* பெ.(n.) 1.***புளிநரளை (மூ.அ.)*** பார்க்க; bristly trifliate vine. 2. ***சீ***தாங்கச் செய்நஞ்சு (மூ.அ.); a mineral poison.

*[குய் → குய்ஞ்சம் → குஞ்சம்.]*

**குஞ்சம்வீசு-தல்** *kuñjam-visu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ஈயோட்டியால் காற்றுவர வீசுதல்; to fan with a chowry.

*[குஞ்சம் + வீசு.]*

**குஞ்சரக்கன்று** *kuñjara-k-kanru,* பெ.(n.) குட்டியானை; young elephant. *"நற்குஞ்சரக் கன்று நண்ணின்" (அருட்பா. காப்பு).*

*[குஞ்சரம் + கன்று.]*

**குஞ்சரத்தீ** *kuñjara-t-ti,* பெ.(n.)யானைத்தீ (சீவக. 396); a disease causing great hunger.

*[குஞ்சரம் + தீ. மிகுபசிக்கு உவமை.]*

**குஞ்சரம்**[1] *kuñjaram,* பெ.(n.) 1. கருங் குன்றிமணி; crab's eye. 2. கருமை; black. 3.யானை; elephant. *"குஞ்சர வொழுகை பூட்டி" (பதிற்றுப். 5, பதி.).* 3. ஒரு சொல்லைச் சார்ந்து உயர்வு குறிக்கும் மொழி; a epithet to denote excellence used in compounds like. கவிகுஞ்சரம்.

*[குஞ்சரம் = கருமை. கரிய யானை.]*

**குஞ்சரம்**[2] *kuñjaram,* பெ.(n.) கருங்குவளை (மலை.); blue nelumbo.

*[குஞ்சரம் = கருமை. குஞ்சரம் = கருங்குவளை.]*

**குஞ்சரமணி** *kuñcaramani,* பெ.(n.) கழுத்தணி வகை(பர.); necklace worn by women.

*[ஒருகா. குஞ்சரம் (குன்றி) + மணி.]*

**குஞ்சரவொழுகை** *kuñcara-v-olukai,* பெ.(n.) யானை கட்டிய சகடம்; elephant cart. *"குஞ்சர வொழுகை பூட்டி" (பதிற்றுப் 5.பதி.).*

*[குஞ்சரம் + ஒழுகை.]*

**குஞ்சராசனம்** *kuñjarasanam,* பெ.(n.) பார்க்க ***அரசு*** (பிங்.); pipal as elephants food.

*[குஞ்சரம் = யானை. குச்சராசனம் = யானை விரும்பித் தின்னும்இலை கொண்ட மரம்.]*

**குஞ்சரி** *kuñjari,* பெ.(n.) 1.பெண்யானை; female elephant. 2. முருகக்கடவுளின் மனைவியான தெய்வானை; a consort of Murugan. *"குஞ்சரிகுயம் புயம்பெற" (திருப்பு.).*

*[குஞ்சு → குஞ்சரி.]*

**குஞ்சலம்** *kuñjalam,* பெ.(n.) மேல்மதகுகட்டை; upper log of a sluice.

*[குஞ்சு → குஞ்சல் → குஞ்சாலம்.]*

**குஞ்சன்** *kñjan,* பெ.(n.) குறளன் (பிங்.); dwarf.

*[குஞ்சு → குஞ்சன்.]*

**குஞ்சாமணி** *kuñjā-maṇi,* பெ.(n.) ஆண் குழந்தைகளின் அரையிற்கட்டும் மணி வகை; a waist ornament of male children.

*[குஞ்சு → குஞ்சான் + மணி]*

**குஞ்சாலாடு** *kuñcālāḍu,* பெ.(n.) கடலைமாவைச் சலித்துச் செய்த சிறுமணிகளைச் சருக்கரைப் பாகிற் கலந்து செய்த உருண்டை வடிவமான ஒரு தின்பண்டம்; a kind of sweet-meat made of dough of dhal or Bengal gram flour fried in ghee, and shaped like a ball of abrus-seeds.

**ம., க.** குஞ்சாலாடு

*[குஞ்சு (சிறியது) + லாடு – குஞ்சுலாடு → குஞ்சலாடு]*

**குஞ்சான்** *kuñjāṉ,* பெ.(n.) குழந்தையின் ஆண்குறி; membrum virile, especially of a child (வே.க.149).

*[குஞ்சு → குஞ்சான்.]*

**குஞ்சி**[1] *kuñji,* பெ.(n.) 1.சிறுமையானது; anything small. குஞ்சிப்பெட்டி . 2. பறவைக்குஞ்சு; young bird, chicken. *"கரியகுஞ்சியின் றாகமார் பசி" (சி.சி.பர.மாயாவாதி மறு.1.).* 3. தாயின் தங்கை (யாழ்ப்.); mother's younger sister. 4. சிற்றப்பன் (யாழ்ப்.); father's younger brother (யாழ்ப்.). 5 ஆண்குறி; membrum virile as small.

**ம.** குஞ்சி; **க.**குன்னி (நாய்க்குட்டி), குன்ன (சிறிய); **தெ.** குன்ன (விலங்குக்குட்டி) கூன (குழந்தை); **குட.** குஞ்சி (குழந்தை); **கொலா.** குன (நாய்க்குட்டி).

*[குஞ்சு → குஞ்சி.]*

**குஞ்சி**[2]**–த்தல்** *kuñji-,* 4 செ.குன்றாவி. (v.t.) கால் தூக்கி வளைத்தல்; to upraise and bend, as the leg, to cause to bend. *"கால்குஞ்சித் தாடி னானும்" (தேவா. 521.4).*

*[குஞ்சு → குஞ்சி.]*

**குஞ்சி**[3]**–த்தல்** *kuñji-,* 4 செ.கு.வி.(v.i.) காற்படங் குந்தி நிற்றல் (சூடா.); to stand on tip-toe.

*[குஞ்சு → குஞ்சி.]*

**குஞ்சி**[4] *kuñci,* பெ.(n.) 1. கொடிநாட்டுங் குழி; pit for erecting a flagstaff *"குஞ்சி மாண்கொடி"(சீவக. 143)* 2. கொடிக்கழை; flagstaff (சீவக. 143.உரை.).

*[குள் → குஞ்சி.]*

**குஞ்சி**[5] *kuñci,* பெ.(n.) 1.குடுமி (திவா.); tuft of hair, especially man's. 2. யானை, மயில் முதலியவற்றின் உச்சி மயிர்; hair, ason the head of an elephant crest of peacock. *"குஞ்சிக்களியானை" (சீவக. 2792). "குஞ்சி மா மஞ்ஞை" (சீவக. 301.).* 3. தலை; head *``குஞ்சு குறங்கின்மேற் கொண்டிருந்து"(பதினொ. ஷேத். 5.).* 4. சிற்றணுக் கனென்னும் விருது; tassels, as insignia of royalty *``புனைமயிற்குஞ்சு பிச்சமின்றவழ் கொடியோடிட்டு"(சீவக. 437).*

**Fin.** kalki; **Jap.** ke; **Mordvin.** kalgo; **Turk.** kyl; **Q.** kili.

*[கொடிஞ்சி → கொஞ்சி → குஞ்சி.]*

**குஞ்சி**[6] *kuñci,* பெ.(n.) குன்றி; crab's eye.

*[குறு → குறுஞ்சி → குஞ்சி.]*

**குஞ்சிக்கூடை** *kuñci-k-kūṭai,* பெ.(n.) சிறுகூடை; wicker-basket, small of a basket (w.) (வே.க.150).

*[குஞ்சி + கூடை.]*

**குஞ்சிமணி** *kuñci-maṇi,* பெ.(n.) ***குஞ்சாமணி*** பார்க்க;see *kuñcāmaṇi.*

*[குஞ்சி + மணி.]*

**குஞ்சியப்பன்** *kuñci-y-appaṉ,* பெ.(n.) 1.தந்தையின் தம்பி; father's younger brother. 2. தாயின் தங்கை கணவன்; mother's younger sister's husband. 3. தாயின் இரண்டாம் கணவன்; step-father.

**ம.** குஞ்ஞப்பன்

*[குஞ்சி + அப்பன்.]*

**குஞ்சியப்பு** *kuñciyappu,* பெ.(n.) ***குஞ்சியப்பன்*** பார்க்க; see *kuñjiyappaṉ.*

*[குஞ்சி + அப்பு.]*

**குஞ்சியன்** *kuñciyaṉ*, பெ.(n.) ***குஞ்சி யப்பன்*** பார்க்க; see *kuñjiyappaṉ*.

*[குஞ்சி → குஞ்சியன்.]*

**குஞ்சியாத்தை** *kuñci-y-āttai*, பெ.(n.) ***குஞ்சி யாய்ச்சி*** *(யாழ்ப்.)* பார்க்க; see *kunjiyāycci*.

*[குஞ்சி → ஆத்தை.]*

**குஞ்சியாய்ச்சி** *kuñci-y-āycci*, பெ.(n.) 1.தாயின் தங்கை; mother's younger sister. 2. தந்தையின் தம்பிமனைவி; father's younger brother's wife. 3. தந்தையின் இரண்டாந்தாரம்; step-mother (யாழ்ப்.).

ம. குஞ்ஞும்ம

*[குஞ்சி - சிறிய, இளைய. குஞ்சி + ஆய்ச்சி.]*

**குஞ்சியாயி** *kuñci-y-āyi*, பெ.(n.) பார்க்க ***குஞ்சியாய்ச்சி*** *(யாழ்ப்.)*.

*[குஞ்சி + (ஆய்ச்சி) ஆயி.]*

**குஞ்சிரிப்பு** *kuñcirippu*, பெ.(n.) புன்னகை; smile (w.).

*[குமிண்சிரிப்பு → குஞ்சிரிப்பு.]*

**குஞ்சு** *kuñcu*, பெ.(n.) 1.பறவைக்குஞ்சு (பிங்.); young of birds. 2. எலி, அணில் முதலியவற்றின் பிள்ளை; young of any living being as fish, oysters, rats, lizards, frogs, squirrels etc. 3. ஆண்குறி; membrun virile. 4. சிறுமையானது; anything small.

ம. குஞ்ஞு, குஞ்சி; க. குன்னி (விலங்குக் குட்டி); தெ. குன்ன (விலங்குக் குட்டி), கூன (குழந்தை); கோத. குன்ச்; துட., கூக்; குட. குஞ்ஞி (குழந்தை); கொலா. கூன (நாய்க்குட்டி).

*[குள் → குய் → குய்ஞ்சு → குஞ்சு (வே.க.150).]*

**குஞ்சுக்கடகம்** *kuñju-k-kaḍagam*, பெ.(n.) சிறிய ஓலைப்பெட்டி(யாழ்ப்.); small ola basket.

*[குஞ்சு + கடகம்.]*

**குஞ்சுக்குவை-த்தல்** *kuñcukku-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) முட்டையைக் குஞ்சு பொரிக்கும்படி செய்தல் (யாழ்ப்); to set eggs for hatching.

*[குஞ்சு + கு + வை.]*

**குஞ்சு குழந்தைகள்** *kuñju-kuḻandaikaḷ*, பெ.(n.) சிறியவும் பெரியவுமான குழந்தைகள்; infants and children. குஞ்சு குழந்தைகளெல்லாம் நலந் தானே? (கொ.வ.).

*[குஞ்சு + குழந்தை + கள்.]*

**குஞ்சுங்குழுவானும்** *kuñjuṅ-kuḻuāṉvum*, பெ.(n.) 1. பூச்சித்திரள்; swarm of insects. 2. பல அகவையிலுள்ள குழந்தைகளின் கூட்டம்; a group of children of different ages. *"குஞ்சுங் குழுவானு மாக வீடு கலகலவென்றிருக்கின்றது" (கொ.வ.).*

மறுவ. குஞ்சங்குழுமானும், குஞ்சுங்குழுவும்.

*[குஞ்சு + உம் + குழுவான் + உம்.]*

**குஞ்சுச்சிப்பி** *kuñju-c-cippi*, பெ.(n.) முற்றாத முத்துச்சிப்பி; immature bivalves, as young mussels, oysters.

*[குஞ்சு + சிப்பி.]*

**குஞ்சுநறுக்கு-தல்** *kuñcu-narukku-*, 5 செ.கு.வி. (v.i.) ஆண்குறியின் நுனி மேல் தோலை நீக்குதல்; to circumcise.

மறுவ. சுன்னத்துச் செய்தல்

*[குஞ்சு + நறுக்கு.]*

**குஞ்சுப்பெட்டி** *kuñju-p-peṭṭi*, பெ.(n.) சிறிய ஓலைப்பெட்டி(யாழ்ப்.); small ōla basket.

*[குஞ்சு + பெட்டி.]*

**குஞ்சுபொரி-த்தல்** *kuñju-pori-*, 4 செ.கு.வி.(v.i.) முட்டையினின்று குஞ்சு வெளிவரல்; to hatch, produce young from eggs.

*[குஞ்சு + பொரி.]*

**குஞ்சுரம்** *kuñcuram,* பெ.(n.) குன்றிமணி; crab's eye.

*[குஞ்சு → குஞ்சுரம்.]*

**குஞ்சுவாயன்** *kuñju-vāyaṉ,* பெ.(n.) கைப்பெட்டி; small hand box (யாழ்ப்.).

மறுவ. குஞ்சுப்பெட்டி

*[குஞ்சு + வாயன்.]*

**குஞ்சுறை** *kuñjurai,* பெ.(n.) பறவைக்கூடு (சூடா.); bird's nest.

*[குஞ்சு + உறை.]*

**குஞ்சை** *kuñjai,* பெ.(n.) நெய்வோர் பாவில் தேய்க்கும் குஞ்சம்; the big broad, heavy sized brush of which the pā is twined into the venti sometimes double handled, with which men run swiftly back and forth.

*[குஞ்சு + குஞ்சை.]*

**குட்சி** *kuṭci,* பெ.(n.) வயிறு; stomach.

*[குள் → குட்டம் (குழி) → குட்சி.]*

**குட்சி²** *kuṭci,* பெ.(n.) உருட்டியாடும் கருவியில் விழும் ஒற்றைத் தாயம்; the number marked one that is turned upwards in a game played with cowries, etc. (கொ.வ.).

*[குள் → குட்சி (ஒற்றைக் குழி, ஒன்று).]*

**குட்டக்கரப்பான்** *kuṭṭa-k-karappāṉ* பெ.(n.) படர்நோய் வகை; white scabby scurf, a kind of eruption spreading over the whole surface of the body.

*[குட்டம் + கரப்பான்.]*

**குட்டக்குறடு** *kuṭṭa-k-kuraḍu,* பெ.(n.) சிறுகுறடு (வின்); a kind of brazier's pincers.

*[குட்டை + குறடு – குட்டைக் குறடு → குட்டக் குறடு.]*

**குட்டநாடன்** *kuṭṭanāḍaṉ,* பெ.(n.) குட்ட நாட்டைச் சேர்ந்தவன்; one who belonges to *kuṭṭanāḍu.*

ம. குட்டநாடன்

*[குட்டம் + நாடு + அன்.]*

**குட்டநாடு** *kuṭṭanāḍu,* பெ.(n.) திருவாங்கூர் நாட்டைச் சேர்ந்ததும், கோட்டயம், கொல்லமென்று வழங்குகின்ற நகரங்களைக் கொண்டதும் ஏரிகளை மிகுதியாக உடையதுமாகிய ஒரு கொடுந்தமிழ் நாடு; the region full of lakes, where a vulgar dialect of Tamil was spoken, corresponding to area ofthe modern towns of Kottayam and Quilon in Travancore one of 12 Koḍuntamiḻ Nāḍu. *"குட்டநாட்டுத் திருப்புலியூர்" (திவ்.திருவாய். 8.9:1).*

ம. குட்டநாடு

*[குண்டு → குட்டு → குட்டம். (வே.க.194).]*

**குட்டப்புழுதியாக்கு-தல்** *kuṭṭa-p-puḻudi-y-ākku,* 5 செ.கு.வி. (v.i.) கும்மாளமடித்தல் (நெல்லை); to be tumultuously playful.

*[குட்டம் → புழுதி + ஆக்கு.]*

**குட்டம்¹** *kuṭṭam,* பெ.(n.) 1.ஆழம்; depth, profundity. *"இருமுந்நீர்க் குட்டமும்" (புறநா. 20:1).* 2. மடு; tank, pond. *"நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து" (புறநா. 243:9).* 3. **குட்டநாடு** பார்க்க; see *kuṭṭa-nāḍu. "தென்பாண்டி குட்டம்" (நன். 272, மயிலை.).* 4. பரப்புள்ள இடம்; expanse, region. *"பெருங்கடற் குட்டத்து" (மதுரைக். 540).*

*[குள் → குட்டு → குட்டம்.]*

**குட்டம்²** *kuṭṭam,* பெ.(n.) 1.திரள்; multitude, collection, heap. 2. அவை; assembly. *"படைக்கலம் பிடித்துக் குட்டத்துக்குச் செல்லப்பெறார் (T.A.S.I, 9).*

*[கூட்டம் → குட்டம்.]*

**குட்டம்³** *kuṭṭam,* பெ.(n.) 1.சிறுமை; smallness, littleness. 2. குரங்குக்குட்டி; the young of a monkey. *"தங்குட்டங்களை... மந்திகள் கண் வளர்த்தும்"*

(திவ். பெரியாழ். 3.5:7). 3. குறைந்த சீருள்ள அடி (தொல். பொருள்.427); verse-line with less than the required number of *cir*. 4. கலிப்பாவின் உறுப்புள் ஒன்றாகிய தரவு; a member in a kali verse.

[குள் → குட்டு→ குட்டம்.(வே.க.148).]

**குட்டம்**[4] *kuttam*, பெ.(n.) 1.குட்டநோய்; leprosy. "குட்டநோய்" (சீவக.253). 2.கோட்டம் என்னும் மருந்துவேர் (மலை.); Arabian costum.

[குட்டை→ குட்டம்.]

**குட்டன்**[1] *kuttan*,பெ.(n.) 1. சிறுபிள்ளை, சிறுவன்; laddie, lassie as a term of endearment. "என் சிறுக்குட்டன்" (திவ். வெரியாழ். 14:2). "குயிலெனப் பேசு மெங்குட்டனெங்குற்றது" (திருக்கோ.224). 2. ஆட்டுக்குட்டி (திவா.); kid or lamb. 3. விலங்கின் குட்டி; young of an animal. "நாயின்வெங்கட் சிறு குட்டனை" (கம்பரா. நகர்நீ.117).

ம. குட்டன்; க. குட்ட; தெ. கிட்ட; து. கிட்டெலெ; குட. குட்டி; துட. குட்; கூ. குட; குரு. கிட்ரு; பிரா. குட்டு.

[குள் → குட்டு → குட்டன்.]

**குட்டன்**[2] *kuttan*,பெ. (n.) 1.குட்டை விரல்; a little finger. 2. பெருவிரல் அல்லது கட்டைவிரல்; toe.

[குள் → குட்டு → குட்டன்.]

**குட்டான்**[2] *kuttan*,பெ. (n.) 1. சிறுபடப்பு; small basket. 2. சிறிய ஓலைப்பெட்டி; little ola case.

[குட்டம் → குட்டான் (வே.க.152).]

**குட்டான்கட்டு-தல்** *kuttan-kattu-*, பெ.(n.) 5 செ.கு.வி. (v.i.) பறவை முதலியன கொத்தாத படியும், அணில் கடியாதபடியும் காய்களின் மீது மூடிக்கட்டுதல்(வின்.); to put a cover over fruits for protection from birds and squirrile

[குட்டான் + கட்டு-.]

**குட்டி**[1] *kutti* பெ.(n.) 1.நாய், பன்றி, புலி, நரி ஆகியவற்றின் குட்டி (தொல்.பொருள்.மரபு. 20); young of dog, pig, tiger, etc. 2. ஆட்டுக்குட்டி; lamb. 3. சிறுமி (உ.வ.); small girl. 4.கடைசிப்பிள்ளை; child, especially the youngest, in endearment (w.). 5. விலங்கின் பிள்ளைப் பொது; yound of animals. 6. கரு அல்லது சினை; embryo. குட்டிபடுதல் = சினைப்படுதல். 7. ஓரறி வுயிரிப் பெயரின் இளமைப் பொருள் முன்னொட்டு; prefix of single sense being. "குட்டிப் பிடவம், குட்டிவிளா" (பிள்ளை விளாத்தி). 8. சிற்றப்பன் சிற்றன்னையர் பெயர் முன்னொட்டு; prefix of uncle and aunt. குட்டியப்பன், குட்டியாத்தாள். 9. சிறுமைப் பெயர்; smallness. குட்டித்தொல் காப்பியம்.

ம. குட்டி; க. குட்டி.

**E.** kid, a young goat, kid, kiddy(s) Child; **ME.** kid, kidde; **Dan.,Swed.,Norw.,** kid; **ON.** kithi; **OHG.** kizzi, chizzi; **MHG., G.K.** kitze.

[குட்டு → குட்டி.]

**குட்டி**[2] *kutti* பெ.(n.) கோட்டம்; Arabian costum. "பருங்காயங்குட்டி" (தைலவ. தைல.77).

[குட்டு → குட்டி.]

**குட்டி**[3] *kutti* பெ.(n.) 1.பல்லாங்குழி முதலிய விளையாட்டில் அதிகமாகக் கூடுங்காய்(வின்.); additional coin or seed which a player gets in excess of another in games like *pallankuli*, etc., 2. பயன்; additional sum claimed or allowed in respect of a debt, as a share of the net profit. 3. காக்கைப் பலா; esculent - leaved false kamela. 4. கடிச்சை; downy-leaved false kamela.

[குள்→ குட்டி.]

**குட்டிக்கரணம்** *kutti-k-karanam*, பெ.(n.) 1.தலை கீழாக மறிந்துவிழும் ஒரு வித்தை; performing a somersault on the ground, as minor acrobatics. 2.பெருமுயற்சி; making strenuous efforts, using all possible means, taking the utmost pains. "குட்டிக்கரணம் போட்டென்னாலானமட்டும்" (இராமநா.உயுத்.77).

ம. குட்டிக்கரணம்

[குட்டி + கரணம்.]

**குட்டிக்கலகம்** *kuṭṭi-k-kalagam,* பெ.(n.) 1.சிறு கலகம்; squabble, domestic quarrel, as rising out of trifles. 2. கோட் சொல்லால் விளையும் கலகம்; quarrel rising from backbitbing, talebearing.

*[குட்டி + கலகம்.]*

**குட்டிக்கிழங்கு** *kuṭṭi-k-kiḻaṅgu,* பெ.(n.) ஒரு கிழங்கின் பக்கத்தில் அதனையொட்டி உண்டாகும் கிழங்கு; small esculent root growing by the side of a large one.

*[குட்டி + கிழங்கு.]*

**குட்டிக்கும்பிடு—தல்** *kuṭṭi-k-kumbiḍu-,*20 செ.கு.வி. (v.i.) தலையிற் குட்டிக் கொண்டு பிள்ளையாரை வணங்குதல்; to cuff the head three times, and raise the hands in worship of (Ganēša) piḷḷiyār.

*[குட்டு → குட்டி + கும்பிடு.]*

**குட்டிக்கொக்கான்** *kuṭṭi-k-kokkāṉ* பெ.(n.) சிறு கற்களைக் கொண்டு ஆடும் விளையாட்டு வகை; a kind of play with pebbles.

*[குட்டி + கொக்கான்.]*

**குட்டிச்சாத்தன்** *kuṭṭi-c-cāttaṉ,* பெ.(n.) குறளித் தேவதை; elf, imp., little goblin invoked in performing jugglery, etc.

ம. குட்டிச்சாத்தான்; க. குட் சாத.

*[குட்டி + சாத்தன்.]*

**குட்டிச்சாத்திக்காரன்** *kuṭṭi-c-cātti-k-kāraṉ* பெ.(n.) பேயோட்டும் மந்திரக்காரன்(வின்.); enchanter, sorcerer, one who is supposed to have power over familiar spirits.

*[குட்டி + சாத்திக்காரன்.]*

**குட்டிச்சுவர்** *kuṭṭi-c-cuvar,* பெ.(n.) 1.இடிந்த சிறுசுவர்; ruined wall. *"குட்டிச் சுவரெனிலோ மாடு முரைஞ்சு மறைவாகும்" (பெருந்தொ.288).* 2. பாழ் மனை; ruins of a building. அந்தக் குட்டிச்சுவரிற் கழுதை மேய்கிறது (உ.வ.). 3. பழுது; ruin, damage. காரியம் குட்டிச்சுவராயிற்று (உ.வ.).

ம. குட்டிச்சுவரு

*[குட்டி + சுவர்.]*

**குட்டிச்சுவரா(கு)—தல்** *kuṭṭi-c-cuvarā(gu),* 6 செ.கு.வி. (v.i.) பழுதாதல், அழிதல்; to ruin, damage.

ம. குட்டிச்சோராவுக

*[குட்டிச்சுவர் + ஆகு.]*

**குட்டித்தக்காளி** *kuṭṭi-t-takkāḷi,* பெ.(n.) சிறு தக்காளி (வின்.); black night shade.

*[குட்டி + தக்காளி.]*

**குட்டித்தாய்ச்சி** *kutti-t-tāycci,* பெ.(n.) சினையான விலங்கு; pregnant animal.

*[குட்டி + தாய்ச்சி. ஒ.நோ. பிள்ளைத்தாய்ச்சி.]*

**குட்டித்திருவாசகம்** *kuṭṭi-t-tiruvācagam,* பெ.(n.) கருவைச் சிவபிரான் மேல் அதிவீரராமபாண்டியர் பாடியனவாக வழங்கும் மூன்று அந்தாதிகள்; antāti, on *šiva* at Karuvai, three in number ascribed to *Ativira-rāma-pāṇḍiyan* and considered as *Tiruvāšagam* in miniature.

*[குட்டி + திருவாசகம்.]*

**குட்டித்தொல்காப்பியம்** *kuṭṭi-t-tolkāppiyam,* பெ.(n.) தொல்காப்பியத்தைத் தழுவி ஐந்திலக் கணங்களையும் கொண்டதாக வைத்தியநாத தேசிகர் இயற்றிய இலக்கண விளக்கம்; the *Ilakkaṇa* vilakkam, by *Vaittiya nāta-tēšikar,* as a compendium of the great *Tolkāppiyam.*

*[குட்டி + தொல்காப்பியம்.]*

தொல்காப்பிய மரபும் இலக்கணவிளக்க மரபும் வேறுபடுதலின் இவ்வாறு பெயரிடல் அத்துணைப் பொருத்த முடையதன்று.

**குட்டிநடிகை** *kuṭṭi-naḍigai,* பெ.(n.) சிறுபருவத்தில் நாடகம், திரைப்படம் போன்றனவற்றில் நடிக்கும்

பெண்; a small girl who acts on the stage, in films etc.

[குட்டி + நடிகை.]

**குட்டிப்பயல்** *kuṭṭippayal*, பெ.(n.) **குட்டிப்பையல்** பார்க்க; see *kuṭṭippaiyal*.

[குட்டி + (பையல்)→ பயல்..]

**குட்டிப்பல்** *kutti-p-pal*, பெ.(n.) 1. ஒட்டிமுளைக்கும் சிறுபல்; extra or dwarf tooth. 2. பாற்பல், அரும்புப்பல்; milk-tooth.

ம. குட்டிப்பல்லு

[குட்டி + பல்.]

**குட்டிப்பலா** *kuṭṭi-p-palā*, பெ.(n.) பிராய்மரம்; paper -tree.

[குட்டி + பலா.]

**குட்டிப்பாடம்** *kuṭṭi-p-pāḍam*, பெ.(n.) பொருளுணராது பாராமல் ஒப்பிக்கும்படி பண்ணும் நெட்டுரு. (மனப்பாடம்); blind recital, learning by rote.

தெ. குட்டிபாதமு

[த. குருடு > தெ. குட்டு. குட்டு→ குட்டி + பாடம்.]

**குட்டிப்பிடவம்** *kuṭṭi-p-piḍavam*, பெ.(n.) ஒருவகை மரம் (சிலப்.13:158 உரை.); bedaly emetic-nut.

[குட்டி + பிடவம்.]

**குட்டிப்பையல்** *kuṭṭi-p-paiyal*, பெ.(n.) சிறுவன்;small boy.

[குட்டி + (பைதல்) பையல்.]

**குட்டிபஞ்சரம்** *kuṭṭypañcaram*, பெ.(n.) கோயில் விமானத்தில் அமையும் கொடிய மூக்குடைய வடிவம் (மது.); a figure on a temple gopuram.

Skt. alpanāsi.

[குட்டி + பஞ்சரம்.]

**குட்டிபடல்**[1] *kuṭṭi-paḍal*, பெ.(n.) சினைப்படுகை; becoming pregnant, as a sheep, goat, dog.

[குட்டி + (படுதல்) → படல்.]

**குட்டிபடல்**[2] *kuṭṭi-padal*, பெ.(n.) விளையாட்டில் தவறியடிக்கை; striking a wrong coin or seed in games.

தெ. குட்டி

[த. குருடு > தெ. குட்டு. குட்டு→ குட்டி + படல்.]

**குட்டிபோடு**[1]**-தல்** *kutti-pōdu-*, 19 செ.குன்றாவி. (v.t.) விலங்கு குட்டியீனுதல்; to bring forth young, as beasts.

ம. குட்டிப்பெடுக (பெற்றறெடுத்தல்)

[குட்டி + போடு.]

**குட்டிபோடு**[2]**-தல்** *kutti-pōdui-*, 19 செ.கு.வி. (v.i.) விளையாட்டில் அதிகப் பந்தயம் வைத்து விளையாடுதல்; to put down a forfeited seed or coin in gambling as stakes to be played for.

[குட்டி + போடு.]

**குட்டிமணியம்** *kuṭṭi-maniyam*, பெ.(n.) உதவி மணியக்காரன்; assistant to Maṇiyakāran.

[குட்டி + மணியம்.]

**குட்டிமம்** *kuṭṭimam*, பெ.(n.) கற்பாவின தரை; paved floor, pavement, ground paved with mosaic ground smoothed and plastered. *"கோயிற் குட்டிம வன்றலத்து" (கம்பரா. கிட்கிந்.109).*

ம. குட்டிமம்

[குட்டு→ குட்டிமம்.குட்டுதல் = இடித்துச் செறித்து வலிமைப்படுத்துதல்.]

**குட்டியடி-த்தல்** *kutti-y-adi-*, 4 செ.கு.வி.(v.i.) **குட்டிவை** பார்க்க; see *kuṭṭivai*.

தெ. குட்டியடித்தல்

[குட்டி + அடி.]

**குட்டியப்பன்** *kutti-y-appan,* பெ.(n.) சிறிய தகப்பன்; father's younger brother.

ம. குட்டியச்சன்

*[குட்டி + அப்பன்.]*

**குட்டியழி–த்தல்** *kutti-y-ali-,* 4 செ.கு.வி.(v.i.) கள்ளக்கருவை மருந்திட்டுக் கரைத்தல்; to cause miscarriage, abortion of a child conceived in adultery.

*[குட்டி + அழி.]*

**குட்டியாண்டவன்** *kutti-y-āṇḍavaṉ,* பெ.(n.) பட்டினவர் வணங்கும் தெய்வம்; sea-god of Pattinavar caste, represented by a small conical heap of wet sand and mud.

*[குட்டி + ஆண்டவன்.]*

**குட்டியாத்தாள்** *kutti-y-āttāl,* பெ.(n.) சிறியதாய் (பா.); mother's younger sister.

*[குட்டி + ஆத்தாள்.]*

**குட்டியிடு–தல்** *kutti-y-iḍu-,* 20 செ.கு.வி.(v.i.) விலங்கு முதலியன கருவுயிர்த்தல் (கொ.வ.); to bring forth young, especially said of animals.

ம. குட்டியிடு

*[குட்டி + இடு–.]*

**குட்டியிடுக்கி** *kutti-y-iḍukki,* பெ.(n.) 1.சிற்றரத்தை வகை (மலை.); lesser galangal. 2. கோட்டம் (மலை.); arabian costum. 3. பயிருடன் வளரும் புல்வகை(வின்.); a kind of grass or weed in rice fields.

*[குட்டி + இடுக்கி.]*

**குட்டிவிரல்** *kutti-viral,* பெ.(n.) 1. கால்கைகளில் ஐந்துக்கு அதிகமாவுள்ள விரல்; sixth or extra finger or toe as smaller than the rest. 2. சுண்டு விரல்; a little finger or toe.

ம. குட்டிவிரல்

*[குட்டி + விரல்.]*

**குட்டிவிளா** *kutti-vilā,* பெ.(n.) 1. விளா; wood apple. 2. பார்க்க நாய்விளா; musk-deer-plant.

*[குட்டி + விளா.]*

**குட்டிவேல்** *kutti-vēl,* பெ.(n.) வேலமரவகை(இ.வ.); kind of acaua

*[குட்டி + வேல்.]*

**குட்டிவை[1]–த்தல்** *kutti-vai-,* 4 செ.கு.வி.(v.i.) 1.விளையாட்டில் தவறான காயை அடித்தல் (யாழ்ப்.); to hit the wrong coin or seed. 2. சூதிற் பந்தயமிழத்தல்; to forfeit a coin or seed in gambling.

*[த. குருடு > தெ. குட்டு. குட்டு → குட்டி + வை.]*

**குட்டினம்** *kuttiṉam,* பெ.(n.) கருஞ்சீரகம் (மலை.); black cumin.

*[குட்டு + குட்டினம்.]*

**குட்டினி** *kuttiṉi,* பெ.(n.) 1.கற்பிழந்தவள் (சூடா.); unchaste woman. 2. கூட்டிக் கொடுப்பவள்(வின்); bawd, procaress.

ம. குட்டினி

Skt. kuttiṉ

*[கூட்டினி → குட்டினி.]*

**குட்டு[1]–தல்** *kuttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கை முட்டியால் தலையில் இடித்தல்; to cuff, strike with the knuckles on the head or temples. *"அவன் தலையில் குட்டினான்"(பிங்.).* (வே.க.174).

ம. குட்டுக; க.,தெ. குட்டு; து. குட்டுனி; துட.,கோத., குட. குட்; நா., கொலா. குட்க்; பர். குடிப்; கோண். கோட்டானா; மா. குட்யெ; பிரா. குட்டிங்க்; பட. குத்து (கை முட்டியால் இடித்தல்).

**Skt.** kuṭṭayati (to bruise, Pound, strike lightly); **Pkt.** kuṭṭe; Pali oṭṭeti.

*[குள் → குட்டு. ஒ.நோ. வள் → வட்டு.]*

**குட்டு**[2] *kuṭṭu,* பெ.(n.) கைமுட்டியால் தலையில் இடிக்கை; blow with knuckles or the fist on the head, cuff (வே.க.174).

ம. குட்டு

*[குள் → குட்டு.]*

**குட்டு**[3] *kuṭṭu,* பெ.(n.) 1. மந்தணம்; secret (விறலிவிடு. 108.) 2. மானம் (வின்.); honour, dignity. அவன் குட்டு வெளிப்பட்டது (உ.வ.).

தெ. குட்டு

*[குள் → குட்டு.]*

**குட்டு**[4] *kuṭṭi,* பெ.(n.) 1.குட்டம் (தைலவ. தைல.124); leprosy. 2. கோட்டம் (தைலவ.தைல.43); Arabian costum.

*[குள் → குட்டு (குட்டம்) வ.மொ.வ.121).]*

**குட்டுணி** *kuṭṭuṇi,* பெ.(n.) பிறரால் குட்டுண்பவன்-ள்; intractable, shameless person, as cuffed about by everyone.

*[குள் குட்டு + உணி.]*

**குட்டுப்பட்டவன்** *kuṭṭu-p-paṭṭavaṉ,* பெ.(n.) ஒரு தொழிலில் இடர்ப்பட்டுப் பட்டறிவு (அனுபவம்) பெற்றவன்; one who grows wise by experiencing reverses.

*[குட்டு + பட்டவன்.]*

**குட்டுப்படு-தல்** *kuṭṭu-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) அடிக்கடி இடர்உறுதல்; to undergo reverses.

*[குட்டு + படு.]*

**குட்டுமம்** *kuṭṭumam,* பெ.(n.) பூவரும்பு; emerging bud of flower.

*[குட்டு → குட்டுமம்.]*

**குட்டுவம்** *kuṭṭuvam,* பெ.(n.) நீரைக் காயவைக்கும் பெரிய செம்பு ஏனம்; big copper pot for heating water.

ம. குட்கம்

*[குள் → குட்டு → குட்டுவம்.]*

**குட்டுவம்** *kuṭṭuvam,* பெ.(n.) கொப்பரை (இ.வ.); a large brass vessel, cauldron.

ம. குட்கம்

*[குள் → குட்டு → குட்டுவம்.]*

**குட்டுவன்** *kuṭṭuvaṉ,* பெ.(n.) 1.குட்ட நாட்டிலுள்ளவன்; inhabitant of the Kuṭṭam country. *"பல்குட்டுவர் வெல்கோவே" (மதுரைக். 105).* 2. கோட்டம் பகுதியை ஆண்ட சேரன்; Chēra king as ruling over kuṭṭam. *"எழுவுறழ் திணிதோளிய றேர்க் குட்டுவன்" (சிறுபாண்.49).*

ம. குட்டுவன்

*[குள் → குட்டு + அவன்.]*

**குட்டேறு** *kuṭṭēṟu,* பெ.(n.) 1.சிறிய காளை; small bull. *``குட்டேற்றைக் கோவர்த்தனனைக் கண்டீரே" (திவ்.நாய்ச். 14:2).* 2. எருத்தின் திமில் (கலித்.102: 24, உரை.); hump of an ox.

*[குட்டு (இளமை) + ஏறு.]*

**குட்டை**[1] *kuṭṭai,* பெ.(n.) 1.குறுகிய உருவம்; shortnesh, dwarfishness. 2. ***குட்டேறு*** பார்க்க see *kuṭṭeṟu.* 3. சிறுதுணி; kerchief, towel, small strip of cloth. 4. சிறுகுளம்; pool, small pond. 5. ***குட்டைமரம்*** பார்க்க; see *kuṭṭaimaram.* குட்டையிற் கட்டி அடித்தான். 6. குறுணி (தொல்.சொல்.400, உரை.); a dry measure of capacity. 7.தலைப்பாகை; turban.

ம. குட்ட; க. கிட்டு, குட்டு; து. கிட்ட; கூ. கூட; குரு. குட்ரு; பிரா.குட்ரு.

**Aust.** katoa (short).

*[குட்டு → குட்டை (வே.க.152).]*

**குட்டை²** *kuttai,* பெ.(n.) வெள்ளைக் குட்டம்; laucoderma, white leprsy.

*[குள் → குட்டை.]*

**குட்டை³** *kuttai,* பெ.(n.) பிரம்பு, கோரை ஆகிய வற்றைக் கொண்டு முடைந்த கூடை; a basket made of reeds or rattan. "பெரிய பிரப்பங்குட்டையும் (குருகூர்ப். 25).

ம. குட்ட

*[குள் (குறுமை) → குட்டை.]*

**குட்டைக்குறுவை** *kuttai-k-karuvai,* பெ.(n.) நெல்வகை(A); a kind of paddy.

*[குட்டை → குறுவை.]*

**குட்டைச்சி** *kuttaicci,* பெ.(n.) குள்ளமானவள்; short woman.

*[குட்டை → குட்டைச்சி.]*

**குட்டைச்சேம்பு** *kuttai-c-cēmbu,* பெ.(n.) ஒரு வகைச் சேம்பு; a variety of colocasia.

ம. குட்டச்சேம்பு

*[குட்டை + சேம்பு.]*

**குட்டைப்பாம்பு** *kuttai-p-pānbu,* பெ.(n.) செந்நிற நச்சுப்பாம்பு (மீனவ.); reddish poisonus snake

*[குட்டை + பாம்பு.]*

**குட்டைப்புடல்** *kuttai-p-pudal,* பெ.(n.) கொம்புப் புடல்; short snake-gourd, climber.

*[குட்டை + புடல்.]*

**குட்டைமரம்** *kuttai-maram,* பெ.(n.) தொழுமரம்; stocks for legs or hauds as an instrument of punishment (உ.வ.).

*[குட்டை + மரம்.]*

**குட்டையநெல்** *kuttaiya-nel,* பெ.(n.) நெல்வகை (A); a kind of paddy.

*[குட்டை + நெல் – குட்டைநெல் → குட்டையநெல்.]*

**குட்டையன்** *kuttaiyan,* பெ.(n.) குள்ளன்; dwarf, short man.

*[குட்டு → குட்டையன்.]*

**குட்டையிலடி-த்தல்** *kuttaiyil-adi-,* 4 செ.குன்றாவி. (v.t.) தொழு மரத்தில் கட்டியடித்தல்; to confine in stocks.

*[குட்டையில் + அடித்தல்.]*

**குட்டைவிரல்** *kuttai-viral,* பெ.(n.) ***குட்டிவிரல்*** பார்க்க; see *kuttaiviral.*

*[குட்டை + விரல்.]*

**குட-த்தல்** kuda-, 2 செ.கு.வி. (v.i.) வளைதல்; to curve, bend.

*[குள் → குட.]*

**குடக்கம்** *kudakkam,* பெ.(n.) வளைவு (யாழ்.அக.); bend, curve, crookedness.

*[குட → குடக்கம். (மு.தா.249).]*

**குடக்கனி** *kuda-k-kani,* பெ.(n.) பலாப்பழம்; jack fruit, as being potshaped. *"சுளைப்பழுத்த மென் குடக்கனி" (காசிக. அருணாதி.22)*

*[குடம் → குடக்கனி.]*

**குடக்கால்** *kuda-k-kāl,* பெ.(n.) குடம் போன்ற விளக்குத்தண்டு (சிலப்.6, 138, உரை.); pot shaped lamp stand.

மறுவ. குடத்தண்டு

*[குடம் + கால் → குடக்கால்.]*

**குடக்காற்று** *kuda-k-kārru,* பெ.(n.) மேல்காற்று; western wind.

*[குடக்கு + காற்று.]*

**குடக்கி** *kudakki,* பெ.(n.) 1.வளைவானது (யாழ்.அக.); that which is crooked. 2. பித்தளை (யாழ்ப்); brass.

[குடக்கு → குடக்கி. குடம் செய்யப் பயன்பட்ட பித்தளையும் குடக்கி எனப்பட்டது.]

**குடக்கியன்** *kuḍaklkiyaṉ,* பெ.(n.) கூனன்; hump - back.

[குடக்கு → குடக்கியன்.]

**குடக்கினி** *kuḍakkiṉi,* பெ.(n.) 1.காசுக்கட்டி; dowry-foliaged cutch. 2. கருங்காலி (மலை.); glabrous - foliaged cutch.

[குடக்கு → குடக்கினி.]

**குடக்கு** *kuḍakku,* பெ.(n.) மேற்கு (திவா.); west. *"தொன்றுமுதிர் பௌவத்தின் குடக்கும்"(புறநா.6).*

ம. குடக்கு

[குடத்தல் = வளைதல், மறைதல் குடம் → குடக்கு (கதிரவன் மறையும் மேற்குத் திசை).]

**குடக்குழி** *kuḍa-k-kuḻi,* பெ.(n.) நீர்க்குண்டு (யாழ்.அக.); water pond

ம. குடக்கு

[குட → குழி.]

**குடக்கூத்து** *kuḍa-k-kūttu,* பெ.(n.) தனது பேரனாகிய அநிருத்தனை வாணன் சிறைப்படுத்த, அவனது நகர வீதியிற் சென்று கண்ணன் குடமெடுத்தாடிய கூத்து; பதினோர்வகைக் கூத்துகளுள் ஒன்று (சிலப். 6,55. உரை); a dance with potrs performed by Krishna, when Vāṇan imprismed his grand son *āniruttaṉ* one of elevan *kūttu.*

[குடம் + கூத்து.]

**கூத்தின் வகைகள்:** 1. கொடுகொட்டி, 2. பாண்டரங்கம், 3. குடை, 4. துடி, 5. அல்லியம், 6 மல்லு, 7. குடம், 8. பாவை, 9. மரக்கால், 10. பேடி, 11. கடையம்.

**நின்றாடலுக்குரியவை:** கொடுகொட்டி, பாண்டரங்கம், குடை, குடம் அல்லியம், மல்லு.

**வீழ்ந்தாடலுக்குரியவை:** துடி, கடையம், பேடி.(டு), மரக்கால், பாவை.

**குடக்கூலி** *kuḍa-k-kūli,* பெ.(n.) ***குடிக்கூலி*** பார்க்க(சென்னை): see *kuḍi-k-kūli.*

ம. குடக்கூலி

[குடி → குட + கூலி.]

**குடக்கோ** *kuḍa-k-kō,* பெ.(n.) சேரன்; Cēra king, as ruling the western country. *"குடக்கோ நெடுஞ் சேரலாதற்கு" (பதிற்றுப். 60., பதி.).*

மறுவ. குடக்கோன்

[குடக்கு + கோ. குடக்கு = கதிரவன் வளையும் (மறையும்) திசை. குடம் → குடக்கு கோன் → குடக்கோ (சு.வி.72).]

**குடக்கோடுவான்** *kuḍa-k-kōḍuvāṉ,* பெ.(n.) பெ.(n.) கதிரவன்; Sun.

[குடக்கு = மேற்கு. குடக்கு + ஓடுவான்.]

**குடக்கோன்** *kuḍa-k-kōṉ,* பெ.(n.) சேர மன்னன்; Cēra king.

[குடக்கு = மேற்கு. கோன் = அரசன். குடக்கு + கோன்.]

**குடகம்**[1] *kuḍagam,* பெ.(n.) யாழ் மீட்டும் முறைகளுள் ஒன்று (சீவக. 657 உரை.); one of several modes of playing the yāḻ.

[குடக்கம் → குடகம்.]

**குடகம்**[2] *kuḍakaṉ* பெ.(n.) 1.மேற்கு; west. *"குடக வானின் வயங்கிய ... திங்கள்" (கம்பரா. ஒற்றுக் .20.)* 2. தமிழ்நாட்டின் மேற்பாலுள்ள ஒரு நாடு (நன். 272மயிலை.); Coorg, the hill country west of Mysore, forming the westem boundary of the Tamil Nadu. 3. குடகுமலை (புறநா. 166.உரை); a mountain in Coorg.

ம. குடகம்

[குடத்தல் = வளைதல், மறைதல். குட → குடக்கு, கதிரவன் மறையும் மேற்குத்திசை. குட → குடக்கு → குடகம்.]

**குடகம்**[3] *kuḍagam,* பெ.(n.) கோளகச் செய்நஞ்சு (மலை.); a mineral poison.

[கூடு → கூடகம் → குடகம் (பலவற்றைக் கூட்டிச் செய்தது.)]

**குடகரம்** *kuḍagaram,* பெ.(n.) வேலிப்பருத்தி (மலை.); hedge cotten.

[குடகம் → குடகரம்.]

**குடகன்** *kuḍagaṉ,* பெ.(n.) 1.சேரன் (சூடா.); cēra king as a ruler of *kuḍanāḍu.* 2. மேல்நாட்டான்; westerner. *"குடகர் குண கடலென் றார்த்தார்" (தமிழ்நா. 157.).* 3. குடகு நாட்டைச் சார்ந்தவன்; a coorgman.

க.கொடக

[குடகு → குடகன்.]

**குடகாற்று** *kuda-kāṟṟu,* பெ.(n.) மேல்காற்று; westerly wind. *"குடகாற்றெறிந்து கொடி நுடங்கு மறுகின்" (சிலப். 14:70).*

[குடகு → காற்று.]

**குடகு** *kuḍagu,* பெ.(n.) 1. மேற்கு; west. 2. தமிழ் நாட்டிற்கு மேற்கே அமைந்த நாடு; the coorg country. 3. குடகு மொழி; the kuḍagu language.

ம. குடகு; க., து. கொடகு; தெ. கொடுகு; குட. கொடவி

[குட → குடகு. கு – சொல்லாக்க ஈறு.]

**குடகு மலை** *kuḍagu-malai,* பெ.(n.) **குடகு மலை** பார்க்க; see *kuḍagumalai.*

[குடகு + மலை.]

**குடங்கர்**[1] *kuḍaṅgar,* பெ.(n.) 1. குடம்; waterpot. *"குடங்கர் கொணர்ந்திடா... கொண்டு கொண்டனர்" (கந்தபு. தேவகிரி.24).* 2. கும்ப ஒரை (சூடா.); a quarius, a constellation of the zodiac.

[குடம் → குடங்கர்.]

**குடங்கர்**[2] *kuḍaṅgar,* பெ.(n.) குடிசை; hut, cottage *"குடங்கரில் பாம்போடு உடன்உறைந்தற்று" (குறள்,890).*

[குடங்கு → குடங்கர்.]

வடமொழியாளர் குடிசை என்னும் பொருளில் குடங்கர் என்னும் சொல்லைக் குட்டங்கக *(kuṭṭaṅgaka)* என்று திரிப்பர். ஆட்டுக் குடில் போன்ற அரை யுருண்டை வடிவான குடிசைகளில் குறவரும், பன்றி யாடிகளும் போன்ற பழங்குடி மாந்தர் இன்றும் வதிந்து வருதல் காண்க (வே.க.159).

**குடங்கரை** *kuḍaṅ-karai,* பெ.(n.) தண்ணீர்க்குடம் வைக்கும் இடம் (யாழ்.அக.); place for keeping water-pots.

[குடம் → கரை.]

**குடங்கல்** *kuḍaṅkal,* பெ.(n.) சிறுகுடிசை; small hut.

[குடங்கு → குடங்கல்.]

**குடங்கவிழ்-தல்** *kuḍaṅ-kaviḻ-,* 2 செ.கு.வி.(v.i.) வண்டி குடஞ்சாய்ந்து விழுதல்; to be upset, be overturned, tipover, tip up on end, fall topsy-turvy as a cart.

[குடம் + கவிழ்.]

**குடங்கால்** *kuḍaṅ-kāl,* பெ.(n.) மடி; lap. *"மருவிக் குடங்காலிருந்து" (திவ்.பெரியதி.10.4:3).*

[குடங்கு → குடங்கால்.]

**குடங்கு-தல்** *kuḍaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) வளைதல் (யாழ்.அக.); to bend.

[குட → குடங்கு.]

**குடங்கை** *kuḍaṅgai,* பெ.(n.) 1. உள்ளங்கை; palm of the hand. *"தன்குடங்கை நீரேற்றான் தாழ்வு" (திவ்.இயற்.3:62).* 2. எல்லா விரலுங் கூட்டி உட்குழிக்கும் இணையா வினைக்கை (சிலப்.3:18, உரை.); a pose with a single hand in which all the fingers are joined and the palm is hollowed like a cup, one of 33 *iṉaiyā-viṉaikkai.*

ம. குடங்கை

[குடம் + கை.]

**குடச்சிப்பி** *kuḍa-c-cippi,* பெ.(n.) வளைவுள்ள இப்பி (வின்.); rounded shell.

*[குடம் + சிப்பி.]*

**குடச்சூல்** *kuḍa-c-cūl,* பெ.(n.) காற்சிலம்பு வகை (திவா.); tinkling anklet.

*[குடம் + சூல்.]*

**குடசப்பாலை** *kuḍaša-p-pālai,* பெ.(n.) 1. கசப்பு வெட்பாலை (பதார்த்த.235); conessi bark. 2. கொடிப்பாலை ; green wax-flower.3. கறிப்பாலை (வின்.); wild olive.

*[குடசம் + பாலை.]*

**குடசம்** *kuḍacam,* பெ.(n.) 1. ***குடசப்பாலை***[1] பார்க்க; see *kuḍašapālai. "வடவனம் வாகை வான்பூங் குடசம்" (குறிஞ்சிப்.67).* 2. மலைமல்லிகை (மலை.); Indian cork.

*[குட →குடசம்.]*

**குடஞ்சாய்-தல்** *kuḍañ-cāy-,* 2 செ.கு.வி. (v.i.) ***குடங்கவிழ்-தல்*** பார்க்க; see *kuḍaṅ-kaviḷ*

*[குடம் + காய்.]*

**குடஞ்சுட்டவர்** *kuḍañ-cuṭṭavar,* பெ.(n.) ஆனிரை மேய்க்கும் இடையர்; cowherds. *"புல்லினத் தார்க்கும் குடஞ்சுட்ட வர்க்கும்" (கலித்.107:2).*

*[குடஞ்சுட்டு (மாடு) + அவர்.]*

**குடஞ்சுட்டு** *kuḍañcuṭṭu,* பெ.(n.) ஆ; cow as offering a *kuḍam* of milk. *"நீரார் நிழல குடஞ்சுட் டினத்துள்ளும்" (கலித்.109:3).*

*[குடம்[1] + சுட்டு (குடம் பால் கறக்கும் மாடு).]*

**குடத்தண்டு** *kuḍa-t-taṇḍu,* பெ.(n.) ***குடக்கால்*** பார்க்க (சிலப்.6:138,உரை.); see *kuḍakkāl.*

ம. குடத்தண்டு

*[குடம் + தண்டு.]*

**குடத்தண்டு விளக்கு** *kuḍa-t-taṇḍu-viḷakku,* பெ.(n.) குடம் போன்ற வடிவில் தண்டமைந்த விளக்கு; a kind of lamp with pot-shaped stand.

ம. குடத்தண்டு விளக்கு

*[குடம் + தண்டு + விளக்கு.]*

**குடத்தி**[1] *kuḍatti,* பெ.(n.) இடைச்சி (சூடா.) குடவன்; faminine of shepherdess.

*[குடம் (பால் நிரப்பி குடம்) → குடத்தி.]*

**குடத்தி**[2] *kuḍatti,* பெ.(n.) 1. கழுதைப்புலி; hyena. 2. ஓநாய்; wolf.

*[குறம் (குன்று) குறத்தி → குடத்தி.]*

**குடத்திநாய்** *kuḍatti-nāy,* பெ.(n.) நாய்வகை (பாண்டி.); a kind of dog.

*[குடத்தி + நாய்.]*

**குடதாடி** *kuḍa-tāḍi,* பெ.(n.) தூணின்மேல் வைக்குங் குடவடிவிலான உறுப்பு (சீவக.593, உரை); capital of a pillar.

*[குடம்[1] + தாடி.]*

**குடதிசை** *kuḍa-dišai,* பெ.(n.) மேற்குப் பக்கம்;the western direction.

ம. குடதிச

*[குட + திசை.]*

**குடதேவர்** *kuḍa-tēvar,* பெ.(n.) மேற்கு மலை (பொதிய மலை)யில் இருந்த முனிவர் அகத்தியர் (S.I.I.II, introduction p.41) ; sage Agastya who stayed at western hill.

*[குட + தேவர்.குடு—மேற்கு. **குடமுனி** பார்க்க]*

**குடந்தம்** *kuḍandam,* பெ.(n.) 1. கைகூப்பி மெய் வளைத்துச் செய்யும் வழிபாடு; joining the hands together and bending the body, in worship. *"குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி" (திருமுரு.229).* 2. நால்விரல் முடக்கிப் பெருவிரல் நிறுத்தி நெஞ்சிடை வைக்கை (திருமுரு. பக்.47,

கீழ்க்குறிப்பு.);clenching the fingers and placing the ends of the thumbs on the chest. 3. குடம் (பிங்.); pot. 4. திரட்சி (அக.நி.); roundness.

ம. குடந்த

[குட → குடம் → குடந்தம்.]

**குடந்தம்படு-தல்** *kuḍantam-paḍu-*, 18 செ.குன்றாவி.(v.t.) வழிபடுதல்; to bow in reverence, make obeisance. *"குடந்தம் பட்டெதிர் நின்றிடும்..... அரசன்" (காஞ்சிப்பு.கழுவாய்.96).*

[குட → குடந்தம் + படு.]

**குடந்தை**[1] *kuḍandai,* பெ.(n.) வளைவு; curve. *"குடந்தையஞ் செவிய கோட்டெலி" (புறநா.321).*

[குட → குடந்தை.]

**குடந்தை**[2] *kuḍandai,* பெ.(n.) குடமுக்கு கும்பகோணம்; Kumbakōṇam. *"கன்னார் மதில்சூழ் குடந்தைக் கிடந்தாய்" (திவ். திருவாய்,5,8,3).*

மறுவ. குடநகர்

[குடம் → குடந்தை. குடநகர் பார்; see kūḍanagar.]

பழங்கால நகரத்தின் குடதிசையில் (மேற்கில்) இருந்த குடியிருப்பு குடந்தை எனப் பெயர் பெற்றிருத்தல் வேண்டும்.

**குடநகர்** *kuḍa-nagar,* பெ.(n.) நாடு என்ற உட்பிரிவின் மேற்குப்புறம் அமைந்த நகர்; *Kumbakōṇam. "ஜெயங் கொண்ட சோழ மண்டலத்து காலியூர்க் கோட்டத்து காலியூர் நாட்டுக் குடநகர்" (தெ.கல்.தொ.7,கல்.96).*

[குடம் = மேற்கு. குடம் + நகர்.]

**குடநாசினி** *kuḍa-nāśiṉi,* பெ.(n.) வெண்கடுகு; white mustard (சா.அக.).

[குடம் + நாசினி.]

**குடநாடன்** *kuḍa-nāḍaṉ,* பெ.(n.) சேரன் (திவா.); Cēra king.

[குடக்கு + நாடன்.]

**குடநாடு** *kuḍa-nāḍu,* பெ.(n.) 1. மேல்நாடு (புறாந.17,உரை); western region. 2. கொடுந்தமிழ் நாடு பன்னிரண்டனுள் ஒன்று (நன்.273); the region where a dialect of Tamil was spoken, probably a portion of modern Malabar, one of 12 *Koḍun-tamil-nāḍu.*

ம. குடநாடு

[குடம் - குடக்கு + நாடு. குடக்கு = கதிரவன் வளையும் திசை.]

**குடநாழி** *kuḍa-nāḻi,* பெ.(n.) கள்வரி (T.A.S.ii.67); a tax on toddy.

[குடக்கு + நாழி.]

**குடப்படை** *kuḍa-p-paḍai,* பெ.(n.) உட்கோயிலின் அடிமட்டத்திலுள்ள குடம் போன்று அமைந்த கட்டடப்பகுதி (M.E.R.143 of 1925); a horizontal section above the basement of the inner shrine of a temple.

[குடம் + படை.]

**குடப்பம்** *kuḍappam,* பெ.(n.) இருப்பை (மலை.) பார்க்க; South Indian mahua.

[குடவளாப்பம் → குடப்பம்.]

**குடப்பறை** *kuḍa-p-paṟai,* பெ.(n.) குடவடிவான பன்றிப்பறை (திவா.); pot-shaped drum.

[குடம் + பறை.]

**குடப்பனிநீர்** *kuḍa-p-paṉṉīr,* பெ.(n.) கருப்பையில் தங்கிய பனிக்குடத்து நீர்; the field inside the membrance which immediately surrounds the foetus in the womb (சா.அக.).

[குடம் + பனி + நீர்.]

**குடப்பாணா** *kuḍa-p-pāṇā,* பெ.(n.) குடவகை (யாழ்.அக.); a kind of pot.

[குடம் + பாணா]

[குடம் → பாணா]

**குடப்பாம்பிற்கையிடு-தல்** *kuḍa-p-pāmbiṟ-kai-y-iḍu-*, 20 செ.கு.வி.(v.i.) பாம்பை அடைத்த குடத்திற் கையிட்டுச் சூளுரை செய்தல்; to demonstrate by the ordeal of inserting one's hand into a pot containing a serpent.

*[குடம் + பாம்பு + இல் + கை + இடு.]*

**குடப்பாம்பு** *kuḍa-p-pāmbu,* பெ.(n.) மதிற்பொறி வகை (சிலப்.15 : 216,உரை); a machine mounted on a fort as a defence.

*[குடம் + பாம்பு.]*

**குடப்பாலை** *kuḍa-p-pālai,* பெ.(n.) ***குடசப்பாலை;*** conessi bark.

**ம.** குடப்பால; **க.** கொடசிமெ கிட; **தெ.** கொடிச செட்டு.

**skt.** kuṭajam

*[குடம் + பாலை.]*

**குடப்பிழுக்கை** *kuḍa-p-piḻukkai,* பெ.(n.) வரிக் கூத்து வகை (சிலப்.3:13,உரை); a kind of masquerade dance.

*[குடம் + இழுக்கை.]*

**குடப்பெட்டி** *kuḍa-p-peṭṭi,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[குடப்பட்டி + குடப்பெட்டி.]*

**குடபலை** *kuḍa-palai,* பெ.(n.) 1. மணித்தக்காளி (தைலவ.பாயி.57) ; black night shade. 2. இலந்தை; jujube. 3. களர்வா; toothbrush tree (சா.அக.).

*[குள்→ குட + (பலம்) பலை.]*

**குடபாசி** *kuḍa-pāśi,* பெ.(n.) 1. குடத்தைப் போன்ற பாசி; pot moss. 2. முட்டைப்பாசி; oval moss (சா.அக.).

*[குடம் + பாசி.]*

**குடபுட்பம்** *kuḍapuṭpam,* பெ.(n.) இலுப்பைப்பூ; mowah flower. 2. காட்டிலுப்பை; wild mowah (சா.அக.).

*[குடம் + புட்பம்.]*

**குடபுலம்** *kuḍa-pulam,* பெ.(n.) மேல்நாடு; western region. *"குடபுலங் காவலர் மருமான்" (சிறுபாண்.47).*

*[குடம் + புலம்.]*

**குடம்**[1] *kuḍam,* பெ.(n.) 1. மண் அல்லது மாழை (உலோகம்)யினால் செய்யும் சிறிய வாயுள்ள ஏனம் (பிங்.); water-pot. 2. கும்பவோரை (பன்னிருபா.163); aquarius, sign of the zodiac. 3. ***குடக்கூத்து*** பார்க்க; a dance of Krishna. *"நீணிலம் அளந்தோ னாடிய குடமும்" (சிலப்.6:55).* 4. ***குடதாடி*** பார்க்க ; see *kuḍa-tāḍi.* 5. வண்டிக்குடம்; hub of a wheel. 6. திரட்சி (வின்.); globe, ball, sphericity. 7. ஆன் (சூடா.); cow.

**ம.** குடம்; **க.** கொட, குடிகெ; **தெ.** குடக, குடுக; **து.** குட்கி, குட்கெ, குட்ாக; **குட.,** பட. கொட; **துட.** குட்க்ய; **மா.** குண்ட; **குரு.** குண்டா.

*[குள் (வளைவு) → குடம்.]*



குடம்

**குடம்**[2] *kuḍam,* பெ.(n.) 1. நகரம்(பிங்.); town. 2. கொடிறு (பூசம்); the eighth nakšatra.

**ம.** குடம்

**Skt.** kuṭa

*[கூடல் → கூடம் → குடம்.]*

**குடம்**[3] *kuḍam,* பெ.(n.) **குடநாடு** பார்க்க; see *kuḍa-nāḍu.* *"தென்பாண்டி குட்டங் குடங்கற்கா" (நன். 273,உரை).*

*[குடம் = மேற்கு, மேற்கிலுள்ள நாடு.]*

**குடம்**[4] *kuḍam,* பெ.(n.) கரும்புக் கட்டி (பிங்.); jaggery.

*[குடம் = வெல்லப்பாகு நிரப்பிய மட்பாண்டம், வெல்லப்பானை.]*

**குடம்**[5] *kuḍam,* பெ.(n.) சதுரக்கள்ளி (தைலவ. தைல.9); square spurge.

*[குடம் + பாற்குடம் போல் பால் சுரப்பது.]*

**குடம்**[6] *kuḍam,* பெ.(n.) தூணில் குடம்போன்று அமைந்த ஓர் உறுப்பு (கட்டடம்) ; the part of a pillar shaped like a water - poem.

*[குள் → குடம்]*

**குடம்பன்** *kuḍamban,* பெ.(n.) கருஞ்சீரகம்; black cumin (சா.அக.).

**மறுவ.** குடமணம்

*[குள் → குடம் → குடம்பின்.]*

**குடம்பை**[1] *kuḍambai,* பெ.(n.) 1. கூடு; nest. *"குடம்பைநா றெற்றி" (கல்லா. கணபதிதுதி வரி.26).* 2. முட்டை (பிங்.); egg. *"குடம்பை தனித்தொழியப் புட் பறந் தற்றே" (குறள்,338).*

**மறுவ.** உடல், உடம்பு, கூடு, மெய், யாக்கை, முடை, கட்டை

*[குடம் → குடம்பை]*

**குடம்விட்டுக்கட்டு-தல்** *kuḍam-viṭṭu-k-kaṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) திருமணத்திற்கு நடுங் காலை அடுக்குக்குடம் போலச் சீலையால் பொத்தி அழகு செய்தல்; to decorate the marriage post with stiff-ened cloth, so as to resemble a column of pots placed one over another.

*[குடம் + விட்டு + கட்டு.]*

**குடம் வைத்தல்** *kuḍam-vaittal,* பெ.(n.) முட்டியான கைகளை ஒன்றன்மேல் ஒன்றாக வைத்துத் தயிர்க்குடம், பாற்குடம் என்று கூவித் தட்டி ஆடும் பிள்ளை விளையாட்டு; playing with the fists one on another, and knocking them off in sucession, a child's play.

*[குடம் + வைத்தல்.]*

**குடமஞ்சரி** *kuḍa-mañjari,* பெ.(n.) மிளிரை என்னும் அரியப்படா மூலிகை; an unknown plant (சா.அக.).

*[குடம் + மஞ்சரி.]*

**குடமண்** *kuḍaman,* பெ.(n.) வெண்மணல்; white sand.

*[குடம் + மண்.]*

**குடமண்டூரம்** *kuḍamaṇḍūram,* பெ.(n.) அரத்த சோகைக்குக் கொடுப்பதற்கான. மண்டூரத்தில் செய்த ஆயுர்வேத மருந்து; an Aurvedic medicine prepared from hydrated oxide of iron and pre-scribed for anemia and bloodlessness (சா.அக.).

*[குடம் + மண்டூரம்.]*

**குடமணம்** *kuḍamaṇam,* பெ.(n.) கருஞ்சீரகம் (மலை.); black cumin.

**மறுவ.** குடம்பன், குடமாணகம்

*[குடம் + மணம்.]*

**குடமல்லிகை** *kuḍa-malligai,* பெ.(n.) மல்லிகை வகை; Arabian jasmine.

*[குடம் + மல்லிகை.]*

**குடமலை** *kuḍa-malai,* பெ.(n.) குடகுமலை; a moun-tain in Coorg, source of the Kāveri. *"குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு" (சிலப்.10:106).*

*[குடக்கு + மலை = குடமலை.]*

**குடமலைநாடு** *kuḍamalai-nāḍu,* பெ.(n.) குடக நாடு; Coorg. *"குடமலை நாடுங் கொல்லமுங் கலிங்கமும்" (S.I.I.II, 68)*

*[குடமலை + நாடு.]*

**குடமாடல்** *kuḍam-āḍal,* பெ.(n.) ***குடக்கூத்து*** பார்க்க; see *kuḍa-k-kūttu.*

*[குடம் + ஆடல்.]*

**குடமாணகம்** *kuḍamāṇagam,* பெ.(n.) ***குடமணம்*** பார்க்க (சா.அக.); see *kuḍa-maṇam.*

*[குடமணம் + குடமாணகம்.]*

**குடமாலை** *kuḍa-mālai,* பெ.(n.) உருட்சியான மாலை வகை; round garland.

*[குடம் + மாலை]*

**குடமிளகாய்** *kuḍa-milagāy,* பெ.(n.) மிளகாய் வகை; bell-pepper.

*[குடம் + மிளகாய்.]*

**குடமுடைத்தல்** *kuḍam-uḍaittal,* பெ. (n.) கொள்ளி வைப்பவன் பிணத்தைச் சுற்றி வந்து நீர்க்குடம் உடைக்கும் இறப்புச் சடங்கு; the ceremony of breaking water-pots before a corpse in a funeral rite. *"கொள்பெற்ற மைந்தரும் பின்வலம் வந்து குடமுடைத்தார்" (பட்டினத். திருப்பா. பொது.28).*

*[குடம் + உடைத்தல்.]*

**குடமுருட்டி**[1] *kuḍamuruṭṭi,* பெ.(n.) காவிரியின் கிளையாறுகளுள் ஒன்று; a river branch of kāviri (சா.அக.).

*[குடம் + உருட்டி.]*

**குடமுருட்டி**[2] *kuḍam-uruṭṭi,* பெ.(n.) மந்திர விச்சைக்கு உதவும் ஒரு மூலிகை; a plant with magical virtues used in preparing an amulet (சா.அக.).

*[குடம் + உருட்டி.]*

**குடமுல்லை** *kuḍa-mullai,* பெ.(n.) பெரிய பூக்கள் பூக்கும் முல்லை வகை; Arabian jasmine.

ம. குடமுல்ல

*[குடை → குட + முல்லை.]*

**குடமுழ** *kuḍa-muḻa,* பெ.(n.) ***குடமுழா*** பார்க்க; see *kuḍa-muḻā. "குடமுழ நந்தீலனை" (தேவா.1233:11).*

*[குடம் + (முழவு) முழ.]*

**குடமுழவம்** *kuḍa-muḻavam,* பெ.(n.) ***குடமுழா*** பார்க்க; see *kuḍa-muḻā. "வான் குடமுழவமாதிப் பல்லியம்" (கந்தபு. ஏமகூட.21).*

*[குடம் + முழவம்.]*

**குடமுழவு** *kuḍamuḻavu,* பெ.(n.) முழவு எனும் தோற்கருவி ; large hemispherical lovd-sounding drum. *"குடமுழவென்பது பயிற்றினோன்" (பெருங்.மகத.14 :184).*

ம. குடமுழா

*[குடம் + முழவு (முழக்கும் கருவி).]*

**குடமுழா** *kuḍa-muḻā,* பெ.(n.) ***குடமுழவு*** பார்க்க; see *kuḍamuḻa. "குடமுழாத் திமிலை மொந்தை" (சேதுபு.இராமநா. 65).*

*[குடம் + முழவு (முழா).]*

**குடமுனி** *kuḍamuṇi,* பெ.(n.) மேற்குப் பொதிய மலையில் இருந்த முனிவர், அகத்தியர் the sage Agastya, the venerable sage of the western hill.

ம. குடமுனி

*[குடம் + முனி. குட = மேற்கு.]*

குமரிநாட்டைக் கடல்கொண்டபின் பாண்டியன் தலைநகர் பெருநை (தாமிரபரணி) முகத்திலிருந்த கபாடபுரத்திற்கு மாற்றப்பட்டது. அகத்தியரும் தமது இருக்கையைப் பொதியமலைக்கு மாற்றிக் கொண்டார். பொதியம் என்பது பொதியில் என்பதன் மரூஉ. பொது + இல் = பொதியில் = அம்பலம். (இலக்கணப் போலி). அக்காலத்து ஆசிரியரெல்லாம் முனிவராதலின் மலைகளே இருக்கைகளாயிருந்தன. பொதியிலுக்கு மறுபெயர் மலையம். மலை என்னும் பொதுப் பெயரே அம்சாரியை பெற்றுப் பொதியிலைச் சுட்டுவதை மலையமுனி என்னும் தொடரிற் காண்க. மேற்குத் தொடர்ச்சி மலைகள் அக்காலத்தில் குடமலை யெனப்பட்டன. மகேந்திரமும், பொதியமும்,

குடமலைப்பகுதிகளாகும். குடதிசை யிலிருந்தது பற்றி அகத்தியர் குடமுனிவர் எனப்பட்டார். அதை யுணராதார் குடத்திற் பிறந்தவரென்று தொன்மம் (புராணங்) கட்டிவிட்டனர். அதன் பின்பு கும்பமுனி, கலசமுனி என அதன் இன மொழிகளாலும் பெயர் வழங்கத் தலைப்பட்டன (செல்வி. 1981. சிலம்பு .9, பரல் 8, பக்.379)

**குடமூக்கில்** *kuḍa-mūkkil,* பெ.(n.) **குடமூக்கு** பார்க்க; see *kuḍa-mūkku. "குடமூக்கில் கோயிலாக் கொண்டு" (திவ்.இயற்.2 : 97).*

*[குடமூக்கு → குடமூக்கில்.]*

**குடமூக்கு** *kuḍa-mūkku,* பெ.(n.) கும்பகோணம்; *kumbakōṇam. "தண்குடமூக் கமர்ந்தான்" (தேவா.431 : 11).*

**ம.** குடமுக்கு

*[குடம் + (முக்கு) மூக்கு. குடம் உடைந்த பகுதி குடமூக்கு என்பர். எனினும் பழைய நகரத்தின் மேற்கிலிருந்த குடியிருப்பு குடந்தை, குடநகர் எனப்படுதலின் குடமுக்கு →குடமூக்கு – என்னும் திரிபு பொருத்தமாகத் தோன்றுகிறது.]*

**குடமூது-தல்** *kuḍam-ūdu-,*5 செ.கு.வி.(v.i.) குடத்தினுள்ளே ஊதி ஒலி பிறப்பித்தல்; to make a sound by blowing into pots, as an accompaniment to dancing among low caste women at marriages, and in some places of temples.

*[குடம் + ஊது.]*

**குடமூலம்** *kuḍa-mūlam,* பெ.(n.) தண்டுக்கீரை வகை; a kind of garden spinach (சா.அக.).

*[குடம் + மூலம் (மூலிகை – முளைத்தது).]*

**குடர்** *kuḍar,* பெ.(n.) குழல் போன்ற உட்டுளையுள்ள உறுப்பு, குடல்; bowels. *"குடருங் கொழுவும்" (நாலடி,46).*

**ம.** குடர்

*[குடல் → குடர்.]*

**குடராசம்** *kuḍa-rāšam,* பெ.(n.) பூரான் வகை (சங்.அக.); a kind of centipede.

*[குடர் → குடராசம்.]*

**குடரி** *kuḍari,* பெ.(n.) கோடரி, யானைத் துறட்டி ; axe elephant goad.

**மறுவ.** அங்குசம்

*[குடர் → குடரி.]*

**குடல்** *kuḍal,* பெ.(n.) 1. குழல் போன்ற உட்டுளையுள்ள இரைப்பையைத் தொடர்ந்துள்ள குழாய் ; bowels, intestines, entrails. 2. காயின் குடல்; fungus matter, as in the hollow of a gourd. குடலழுகின பூசணிக்காய் (வின்.). 3. மரக்குடல் (வின்.); pith in the body of trees. 4. பழக்குடல் (வின்.); streaks running down in the interior of plantains and other fruits.

**ம.** குடல்

*[குழல் → குடல்.]*

குடல், சிறுகுடல், பெருங்குடல் என இருவகைப் பட்டாலும், குடலின் தன்மை குணம், தொழில் இவைகளைக் கருதி குடல் பலவகைப்படும்.

1. கல்குடல், 2. சிறுகுடல், 3. பெருங்குடல், 4. இரைக்குடல், 5. மணிக்குடல், 6. மலக்குடல், 7. கோழிக்குடல், (எளிதில் செரிக்கக் கூடியது), 8. ஓட்டைக் குடல் (எப்போதும் கழிச்சலாகும் குடல்), 9. தீனிக்குடல் (சா.அக.).

**குடல்காய்கை** *kuḍal-kāygai,* பெ.(n.) பசியால் வயிறு ஒட்டிக் கொள்ளுகை; shrinkage of the intestines from starvation.

*[குடல் + காய்கை.]*

**குடல்தட்டு-தல்** *kuḍal-taṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) குடலின் பிறழ்வை (குடலேற்றத்தை)த் தட்டி ஒழுங்குப் படுத்துதல்; to pat the bowels by way of massage.

*[குடல் + தட்டு.]*

**குடல்தாங்கி** *kuḍal-taṅgi,* பெ.(n.) குடல் நழுவாதபடி கட்டும் கட்டு; a bandage used in cases of rupture of the intestines. 2. குடல் கீழிறங்காவண்ணம் நிறுத்தி வைக்கும் ஓர் கருவி; an apparatus for holding up the reduced hernia and preventing it (சா.அக.).

*[குடல் + தாங்கி.]*

**குடல்திருகு-தல்** *kuḍal-tirugu,* 5 செ.கு.வி. (v.i.) 1. குடல்பிசகுதல்; derangement of the intestines. 2.குடல் நடுக்கம்; trembling of the bowels (சா.அக.).

*[குடல் + திருகு.]*

**குடல்நீர்** *kuḍal-nīr,* பெ.(n.) குடலில் சுரக்கும் நீர்; fluid secreted in the intestines (சா.அக.).

*[குடல் + நீர்.]*

**குடல்நீர்க்கமம்** *kuḍal-nīr-k-kamam,* பெ.(n.) உறுப்புத் தள்ளல்; prolapsuani (சா.அக.).

*[குடல் + நீர் + கமம்.]*

**குடல் நெளி-தல்** *kuḍal-neḷi-,* 3 செ.கு.வி.(v.i.) குடல் புழுப்போல் அசைதல்; vermicular or undulatory motion of the intestines in digestion, peristaltic motion (சா.அக.).

*[குடல் + நெளி.]*

**குடல்நோய்** *kuḍal-nōy,* பெ.(n.) 1. பொதுவாகக் குடலுக்கு ஏற்படும் நோய்கள்; diseases in general of the intestines. 2. வயிற்று வலி; intestinal colic (சா.அக.).

*[குடல் + நோய்.]*

**குடல்பதறு-தல்** *kudal-padaṟu-,* 5 செ.கு.வி.(v.i.) வருத்தம் மிகுதி முதலியவற்றால் வயிறு கலங்குதல்; to feel as if the bowels would jump out of their place, to feel frightened, to feel troubled from excessive grief.

*[குடல் + பதறு.]*

**குடல்பாகம்** *kuḍal-pākam,* பெ.(n.) மலவாய்க்கடுப்பு; inflammation of the anus (சா.அக.).

*[குடல் + பாகம்.]*

**குடல்மறுகல்** *kuḍal-maṟugal,* பெ.(n.) ***குடலேற்றம்*** பார்க்க; see *kuḍalēṟṟam* (சா.அக.).

*[குடல் + மறுகல்.]*

**குடல்மாலை** *kuḍal-mālai,* பெ.(n.) குழந்தைகள் பிறக்கும்பொழுது கழுத்தில் சுற்றிக்கொண் டிருக்கும் நஞ்சுக்கொடி; cord found round the neck of the new-born baby (சா.அக.).

*[குடல் + மாலை.]*

**குடல்முறுக்கு** *kuḍal-muṟukku,* பெ.(n.) வாந்தி செய்வதற்குமுன் காணும் உணர்வு; a twisting sensation of the stomach just before vomitting. 2. குடல்வலி; intestinal colic. 3. பெருங்குடல் முறுக்கடைந்தது போல் தோன்றுவதுடன் கொடிய வலியும் காணும் ஓர் சூலை நோய்; a kind of violent spasmodic colic in which the large intestines seen, as it were twisted into knots (சா.அக.).

*[குடல் + முறுக்கு.]*

**குடல்வர்த்தம்** *kuḍal-varttam,* பெ.(n.) மலச்சிக்கல்; constipation (சா.அக.).

*[குடல் + வர்த்தம்.]*

**குடல்வலி** *kuḍal-vali,* பெ.(n.) உணவு மிகுதி முதலியவற்றாற் குடலிற் ஏற்படும் வலி; pain in bowels, as from over-eating, indigestion etc.

*[குடல் + வலி.]*

**குடல்வளி** *kuḍal-vaḷi,* பெ.(n.) குடலின் பிதுக்கம்; protrusion of the bowels Rupture (சா.அக.).

*[குடல் + வளி.]*

**குடல்வறட்சி** *kuḍal-vaṟaṭci,* பெ.(n.) மலவறட்சி; constipation (சா.அக.).

*[குடல் + வறட்சி.]*

**குடல்வாதம்** *kudal-vātam,* பெ.(n.) ***குடலூதை*** பார்க்க; see *kudalūdai.*

ம. குடல்வாதம்

*[குடல் + வாதம்.]*

**குடல்விளக்கஞ்செய்தல்** *kudal-viḷkkam-cey-,* 1 செ.குன்றாவி. (v.t.) பிறந்த வயிற்றைப் பெருமை பெறச் செய்தல்; lit., to cause the womb to shine, to bring fame, as a son to his mother who gave him birth by himself becoming illustrious. *"குடல் விளக்கஞ் செய்த தாமோதரனை" (திவ். திருப்பா.18).*

*[குடல் + விளக்கம் + செய்.]*

**குடல்வீக்கம்** *kudal-vīkkam,* பெ.(n.) குடலில் காணும் அழற்சி, புண், சூலை முதலிய காரணங் களினால் ஏற்படும் வீக்கம்; swelling due to inflammation, ulcers, colic, etc., of the intestines enteritis. 2. குடலுப்பிசம்; distension of the bowels with gas (சா.அக.).

*[குடல் + வீக்கம்.]*

**குடல்வெப்பம்** *kudal-veppam,* பெ.(n.) ***குடலழற்சி*** பார்க்க ; see *kudal-alarci.*

*[குடல் + வெப்பம்.]*

**குடல்வேக்காடு** *kudal-vēkkādu,* பெ.(n.) ***குடலழற்சி*** பார்க்க; see *kudal-alarci* (சா.அக.).

*[குடல் + வேக்காடு.]*

**குடலண்டம்** *kudalandam,* பெ.(n.) ***குடல்லிறக்கம்*** பார்க்க; see *kudal-irakkam.*

*[குடல் + அண்டம்.]*

**குடலம்** *kudalam,* பெ.(n.) பித்தளை; brass.

*[குடல் → குடலம்.]*

**குடலழற்சி** *kudal-alarci,* பெ.(n.) குடல் வெந்து புண்ணாதல்; informmation of the intestines or bowels.

*[குடல் + அழிற்சி.]*

**குடலளைச்சல்** *kudal-alaiccal,* பெ.(n.) பெருங் குடலில் தோன்றும் நோய்வகை; uneasy sensation in the larger intestine as a result of gastric irregularities.

*[குடல் + அளைச்சல்.]*

**குடலி** *kudali,* பெ.(n.) துளையுள்ள பொருள்; hollow things.

*[குடு → குடல் → குடலி.]*

**குடலிரைச்சல்** *kudal-iraiccal,* பெ.(n.) வயிற்றிரைவு; flatulence, rumbling of the bowels.

*[குடல் + இரைச்சல்.]*

**குடலிறக்கம்** *kudal-irakkam,* பெ.(n.) குடல் தன்னிருப்பிடத்தை விட்டு நழுவி, கவுட்டியின் வழியாய் விதைப்பையில் இறங்குதல்; protruson or the descent of the bowels from its place in to the scrotum through the groin.

*[குடல் + இறக்கம்.]*

**குடலூதை** *kudal-ūdai,* பெ.(n.) குடலைப் பற்றிய ஒருவகை ஊதைநோய் ; a disease in the intestines.

*[குடல் + ஊதை.]*

**குடலெடு-த்தல்** *kudal-edu-,* 4 செ.கு.வி.(v.i.) ***குடல்தட்டுதல்*** பார்க்க; see *kudal-tattu.*

*[குடல் + எடுத்தல்.]*

**குடலெரிச்சல்** *kudal-erriccal,* பெ.(n.) 1. வயிறு காந்துகை; inflammation of bowels. 2. வயிற் றெரிச்சல் (உ.வ.); heart - burning.

*[குடல் + எரிச்சல்.]*

**குடலேற்றம்** *kudal-ērram,* பெ.(n.) குடல் இடம் மாறி மேலேறுதலால் உண்டாகும் நோய்; twisting or derangement of the intestines, especially in children.

*[குடல் + ஏற்றம்.]*

**குடலேறு—தல்** *kudal-ēru-,* 7 செ.கு.வி.(v.i.) குடல் இடம்மாறி மேலேறுதல்; to have intestinal disorder.

*[குடல் + ஏறு.]*

**குடலை** *kuḍalai,* பெ.(n.) 1. பூக்குடலை; long cylindrical basket of palm leaf for fruits and flowers. 2. கதிர்க்குடலை (யாழ்ப்.); ears of grain swollen and ready to shoot forth. 3. கிணற்றுக் குடலை (யாழ்ப்.); ring of wicker-work for a well. 4. பழக்கூடு (யாழ்ப்.); cover or screen for fruits. 5. கீற்றுக்கூடு (யாழ்ப்.); cover of palm leaf carried as a protection against rain. 6. குடல்; intestines, entrails.

*[குட → குடலை.]*



குடலை

**குடலைக்காளை** *kuḍalai-k-kālai,* பெ.(n.) இளங் காளை (வின்.); young bullock.

*[குடலை + காளை.]*

**குடலைக்கிணறு** *kuḍalai-k-kiṇaṟu,* பெ.(n.) உறைக் கிணறு வகை; welll walled with wicker - works.

*[குடலை + கிணறு.]*

**குடலைக்குழப்பு—தல்** *kuḍalai-k-kuḻappu-,* 5 செ.கு.வி. (v.i.) கக்கல் (வாந்தி) செய்யும்படி வயிற்றைப் புரட்டுதல்; to movement to stomach as to create a vomiting sensation, to produce nausea.

*[குடலை + குழப்பு.]*

**குடலைப்பிடுங்கு—தல்** *kuḍalai-p-piḍuṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. பசியால் வயிறு கிண்டப்படுதல்; to painfully affect or pinch the bowels, as hunger. பசிகுடலைப் பிடுங்குகிறது (உ.வ.). 2. வாந்தி யெடுக்க வருதல்; to cause retching. நாற்றம் குடலைப் பிடுங்குகிறது (உ.வ.). 3. அருவருப் பாதல்; to be unclean, unsightly.

*[குடலை + பிடுங்கு-.]*

**குடலைப்பூச்சி** *kuḍalai-p-pūcci,* பெ.(n.) பூச்சிவகை (யாழ்.அக.); a kind of worms.

*[குடலை + பூச்சி.]*

**குடலையாகு—தல்** *kuḍalai-y-āgu-,* 7 செ.கு.வி. (v.i.) கதிர் ஈனுதல் (யாழ்ப்.); to be ready to shoot forth as corn-ears.

*[குடலை + ஆகு-.]*

**குடலையிட்டிலி** *kudalai-yittilii* பெ.(n.) இட்டிலி வகை; a kind of ittilli

*[குடலை + இட்டிலி.]*

**குடலையுங் கதிரும்** *kuḍlai-uṅ-kadirum,* பெ.(n.) கருக்கொண்டதும் கொள்ளும் நிலையில் உள்ளது மான கதிர்; corn-ears or spikes partially shot forth.

*[குடலை + கதிர்.]*

**குடலையேற்றம்** *kuḍalai-y-ēṟṟam,* பெ.(n.) ஏற்ற வகை (வின்.); a kind of icсottah.

*[குடலை + ஏற்றம்.]*

**குடலைவயிறு** *kuḍalai-vayiṟu,* பெ.(n.) குழைந்த வயிறு; shrivelled abdomen (உ.வ.).

*[குடலை + வயிறு.]*

**குடவண்டிபோடு—தல்** *kuḍavaṇḍi-pōḍu-,* 19 செ.கு.வி. (v.i.) 1. குடங்கவிழ்தல்; to have the cart capsized. 2. தலைகீழாய்க் கவிழ்தல்; to capsize, over-turn, upset.

*[குட + வண்டி + போடு-தல்.]*

**குடவண்டியடி-த்தல்** *kuda-vandi-y-adi-,* 4 செ.கு.வி. (v.i.) ***குடவண்டிபோடு*** பார்க்க; see *kuda-vandi-pōdu.*

*[குடவண்டி + அடி.]*

**குடவண்டிவை-த்தல்** *kuda-vandi-vai-,* 4 செ.கு.வி. (v.i.) தொந்தி தள்ளுதல்; to become pot-bellied.

*[குடவண்டி + வைத்தல்.]*

**குடவப்புரசு** *kudava-p-purasu,* பெ.(n.) முதிரை; satin - wood.

*[குடவம் + புரசு.]*

**குடவம்** *kudavam,* பெ.(n.) பித்தளை; brass.

*[குடம் → குடவம்.]*

**குடவயிறன்** *kuda-vayiran,* பெ.(n.) பெருவயிறு உள்ளவன்; a pot-bellied person.

ம. குட வயறன்

*[குடம் + வயிறு + அன்.]*

**குடவயிறு** *kuda-vayiru,* பெ.(n.) குடத்தைப் போன்ற பெருவயிறு; pot-belly.

மறுவ. சட்டி வயிறு

ம. குட வயிறு

*[குடம் + வயிறு.]*

**குடவர்** *kudavar,* பெ.(n.) மேற்கிலுள்ள குட நாட்டினர்; people of the western country. *"வடவர் வாடக் குடவர் கூம்ப"(பட்டினப். 276).*

*[குட → குடவர்.]*

**குடவரை** *kuda-varai,* பெ.(n.) மேற்கில் உள்ள மலை; the western mountain. *"குடவரை நெற்றி பாய்ந்த கோளரி போன்று" (சீவக.980).*

*[குட + வரை.]*

**குடவரைவாசல்** *kuda-varai-vāšal,* பெ.(n.) கோபுரவாயில்; gateway under the tower of a temple.

*[குடை + வரை + வாசல்.]*

**குடவளப்பம்** *kuda-valappam,* பெ.(n.) இருப்பை (மலை.); South Indian mahua.

*[குட + வளப்பம்]*

**குடவறை** *kuda-v-arai,* பெ.(n.) 1. நிலவறை (யாழ்.அக.); underground cellar, cave. 2. சிற்றறை; small room.

*[குட + அறை]*

**குடவன்**[1] *kudavan,* பெ.(n.) இடையன்; cowherd, shepherd. *"ஆம்பாற் குடவர் மகளோ" (சீவக.492).*

*[குடம் + அன்.]*

**குடவன்**[2] *kudavan,* பெ.(n.) 1. பித்தளை; brass. 2. பனங்காய் முதலிய ஒற்றைக் கொட்டைக் காய்; palmyra or mahua fruit with a single stone or seed. 3. கணிகை; dancing girl. *"குடவற்குந் தாட்டிக்குங் கொத்திட்டு மாய்வ தல்லால்" (தனிப்பா.I, 87,171).* 4. குடவுண்ணி; a kind of cattle-tick. *"வாய்ப்படைக் குடவனும்" (குமர. பிர.காசிக்.57).*

*[குட → குடவன்]*

**குடவன்**[3] *kudavan,* பெ.(n.) நறுமணப்பொருள், கோட்டம் (மலை.); Arabian costum.

*[குடம் (மேற்கு) → குடவன்]*

**குடவன்செம்பு** *kudavan-cembu,* பெ.(n.) பித்தளையைக் கொண்டு அணியமாக்கும் ஒரு வகை களிம்பற்ற செம்பு; pure copper free from ally verdi-gris.

*[குடவன் + செம்பு.]*

**குடவன் பனங்காய்** *kudavan-panankāy,* பெ.(n.) ***குடவன்***[2] பார்க்க; see *kudavan*[2].

*[குடவன் + பனங்காய்.]*

**குடவன்பொடி** *kuḍavaṉ-poḍi,* பெ.(n.) 1. பித்தளை அராவிய பொடி; brasslings. 2. பித்தளை முதலிய மாழைகள் சேர்ந்த பொடி; powder of several metals with brass as chief ingredients (சா.அக.).

*[குடவன் + பொடி.]*

**குடவன்பொன்** *kuḍavaṉ-poṉ,* பெ.(n.) வேதியியல் பித்தளையைக் கொண்டு அணியமாக்கிய பொன்; gold prepared by transmiting brass through alchemical process (சா.அக.).

*[குடவன் + பொன்.]*

**குடவியிடு-தல்** *kuḍavi-y-iḍu-,*19 செ.குன்றாவி. (v.t.) வளைத்து அகப்படுத்துதல்; to coax, entice, inveigle. *"குடவியிடு மரிவையர்கள்" (திருப்பு.514).*

*[குட → குடவு. குடவி + இடு.]*

**குடவிளக்கு** *kuḍa-viḷakku,* பெ.(n.) 1. தொங்க விடுவதும் மாழையினால் அமைந்ததுமான குடவடிவுள்ள விளக்கு; hanging lamp with the oil-can shaped like a small water-pot. 2. மண வறையில் தென்கிழக்கு (நெருப்பு) மூலையில் குடத்தின் மேல் வைக்கும் விளக்கு; light placed on a pot in the south-east corner of a marriage dais.

ம. குட விளக்கு

*[குடம்' + விளக்கு.]*

**குடவு**[1]**-தல்** *kuḍavu-,* 5 செ.கு.வி.(v.i.) வளை வாதல் (வின்.); to be crooked, bent curved (w.).

*[குட → குடவு]*

**குடவு**[2] *kuḍavu,* பெ.(n.) 1. வளைவு; bend, curve. 2. குகை; cave, grotto. 3. குமரனாடிய குடைக்கூத்து (யாழ்.அக.); a dance of god kumaraṉ.

*[குட → குடவு]*

**குடவுண்ணி** *kuḍa-v-uṇṇi,* பெ.(n.) ஒருவகைப் பெரியவுண்ணி (வின்.); a large kind of tick.

*[குடம் + உண்ணி.]*

**குடவுபுரசு** *kuḍavu-purašu,* பெ.(n.) கரும்புரசு; east Indian stain wood ( சா.அக.).

*[குடவு + புரசு.]*

**குடவுழுந்தர்** *kuḍa-v-uḻundar,* பெ.(n.) ஒவ்வோர் உருவுக்கும் ஒவ்வொன்று மேனி, குடம் நிறை யுமளவும் உழுந்தையிட்டுப் பாடம் வரப் பண்ணிக் கல்வி நிரம்பியவராகச் சொல்லப்படும் ஒரு புலவர் (வின்.); a reputed poet, who in his youth took as much time in learning a lesson by rote as was required to fill a pot with uḻuntu grain, one for every time he repeated it, as an example of great perseverance.

*[குடம் + உழுந்தர்.]*

**குடவெழுத்தாணி** *kuḍa-v-eḻuttāṇi,* பெ.(n.) தலையிடம் குண்டுகுண்டாய்த் திரண்டிருக்கும் எழுத்தாணி (வின்.); iron style with knobs or balls at the top, one above another, tapering to a point.

*[குடம் + எழுத்தாணி.]*

**குடவோலை** *kuḍa-v-ōlai,* பெ.(n.) உறுப்பினர் களைத் தேர்ந்தெடுக்கக் குடத்தில் இடுஞ் சீட்டு; vote by ballot, as recorded on ōla and cast into a pot. *"குடவோலை எழுதிப் புக இடுவதாகவும்" (சோழவமி.53).*

*[குடம் + ஓலை.]*

**குடவோலைமுறை** *kuḍavōlai-muṟai,* பெ.(n.) சோழர்கால தேர்தல் முறை ; an election of cōḻā period.

*[குடவோலை + முறை.]*

**குடற்கட்டு** *kuḍaṟ-kaṭṭu,* பெ.(n.) குடல் அசைவுராமை; absence or cessation of the movements of the intestines due to the lack of stimulus to Auerbach's plexus (சா.அக.).

*[குடல் + கட்டு.]*

**குடற்கரிரோகம்** *kuḍaṟ-karirōgam,* பெ.(n.) காற்று அதிகரித்துக் குடலில் தங்குவதால் உணவு

செரியாமை. ஏப்பம், குடல்வலி முதலிய குணங் களைக் காட்டுமோர் குன்ம நோய்; a kind of dyspepsia due to wind or gas in the intestines. It is characterised by indigestion, belching intestinal colic etc. (சா.அக.).

*[குடல் + கரிரோகம்.]*

**குடற்கிருமி** *kuḍar̠-kirumi,* பெ.(n.) ஒருவகை நுண்ணுயிரி (கிருமி); a kind of worm.

**மறுவ.** குடற்புழு

*[குடல் + கிருமி.]*

**குடற்சரிவு** *kuḍar̠-carivu,* பெ.(n.) ***குடலிறக்கம்*** பார்க்க; see *kuḍalir̠akkam.*

*[குடல் + சரிவு.]*

**குடற்சவ்வு** *kuḍar̠-c-cavvu,* பெ.(n.) வயிற்றின் உறுப்பை மூடியிருக்கும் தென்சவ்வு; mentum, caul.

*[குடல் + சவ்வு. குடற்புழு பார்க்க; see kuḍarpuḻu.]*

**குடற்சூலை** *kuḍar̠-cūlai,* பெ.(n.) குடலில் ஏற்படும் சூலை நோய்; pricking pain of the intestines (சா.அக.).

*[குடல் + சூலை.]*

**குடற்படுவன்** *kuḍar̠-p-paḍuvan̠,* பெ.(n.) குழந்தை யின் குடர்நோய் வகை; an intestinal disease of children. *"திருகு குடற்படுவன் நீர்ப்பாடுந் தீரும்" (பாலவா.452).*

*[குடல் + படுவன்.]*

**குடற்பாடம்** *kuḍar̠-pāḍam,* பெ.(n.) சிறு குடலுக்கும், பெருங்குடலுக்கும் இடையில் இருக்கும் கதவு; the fold at the junction of the small and the large intestines (சா.அக.).

*[குடல் + கபாடம் (பாடம்).]*

**குடற்பிசகு** *kuḍar̠-piśaku,* பெ.(n.) குடலிருந்த இடத்தை விட்டுப் பல கரணியங்களை முன்னிட்டுப் பெயருதல்; displacement of the bowels due to various causes. 2. குடற் கோளாறு; disorder or derangement of the intestines.

*[குடல் + பிசகு.]*

**குடற்பிடுங்கி** *kuḍar̠-piḍuṅgi,* பெ.(n.) *"கக்க லெடுக்கச் செய்வதாகிய துரிசு" (சங்.அக.)*; blue vitriol, as causing vomiting sensation.

*[குடல் + பிடுங்கி.]*

**குடற்பிரிவு** *kuḍar̠pirivu,* பெ.(n.) குடல் பிறழுகை (யாழ்ப்.); dislodgement of the bowels.

*[குடல் + பிரிவு.]*

**குடற்புரை** *kuḍar̠-p-purai,* பெ.(n.) குடலின் உள்ளீடு; hollow, tubular, space inside the intestines.

*[குடல் + புரை.]*

**குடற்புழு** *kuḍar̠-puḻu,* பெ.(n.) குடலில் வாழும் ஒருவகைப் புழு ; a kind of worm.

*[குடல் + புழு.]*

**குடற்பை** *kuḍar̠-p-pai,* பெ.(n.) கருப்பை; uterus, womb.

**மறுவ.** குடற்போர்வை

*[குடல் + பை.]*

**குடற்போர்வை** *kuḍar̠-pōrvai,* பெ.(n.) கருப்பை; womb. uterus. *"குடற் போர்வைக்குள்" (சூடா. 12,20).*

*[குடல் + போர்வை.]*

**குடற்றுடக்கு** *kuḍar̠r̠uḍakku,* பெ.(n.) அரத்தக் கலப்பான உறவு; consanguinity kinship, relationship. *"இவற்றினுடைய ரட்சணம் உன் பேறாம் படியான குடற்றுடக்கையுடையவனே" (ஈடு. 4:9,2).*

*[குடல் + துடக்கு.]*

**குடனோவு** *kuḍan̠ōvu,* பெ.(n.) கொலைமுட்டி என்னும் கால்நடைநோய் (M.C.M.D(1887)24) ; a cattle disease involving congestion of the lungs

and swelling of the belly with the respiration checked.

[குடல் + நோவு.]

**குடா** *kuḍā,* பெ.(n.) 1. வளைவு; bend, curve. *"எண்கின் குடாவடிக் குருளை" (மலைபடு.501).* 2. குடைவு (வின்.); cavity, hollow, cavern. 3. குடாக்கடல் (மூன்றுபக்கம் நிலஞ்சூழ்ந்த கடல்) *மன்னார்குடா.* 4. மூலை; remote part of a large country or field.

[குட + குடா.]

**குடாக்கடல்** *kuḍā-k-kaḍal,* பெ.(n.) மூன்றுபக்கம் நிலஞ்சூழ்ந்த கடல் ; bay, gulf.

[குடா + கடல்.]

**குடாக்குடல்** *kuḍā-k-kuḍal,* பெ.(n.) குடைவுள்ள குடல்; a branch of the intestines (சா.அக.).

[குடா + கடல்.]

**குடாக்கை** *kuḍākkai,* பெ.(n.) வயலின் மூலை; corner of a field.

[குடா → குடாக்கு → குடாக்கை.]

**குடாகாயம்** *kuḍākāyam,* பெ.(n.) குடத்தால் அளவுபடுத்தப்பட்ட வானம்; space limited by a pot, a term frequently used in Indian philosophy. *"குடாகாய வாகாயக் கூத்து" (சி.போ.2.3:2).*

[குடம் + ஆகாயம்.]

**குடாசகம்** *kuḍāšagam,* பெ.(n.) 1. ஏய்ப்பு; fraud, duplicity, guile, dissimulation. 2. ஏமாற்று; deception, cheating. 3. அல்வழிப்படுத்தல்; ill advice, bad counsel.

[குடம் → குடசம் → குடாசகம்.]

**குடாசு-தல்** *kuḍāšu-,* 5 செ.கு.வி.(v.i.) ஏமாற்றுதல்; to commit fraud.

[குடத்துதல் • வளைத்தல். குடத்து – குடாத்து → குடாசு.]

**குடாது** *kuḍātu,* பெ.(n.) 1. மேற்கிலுள்ளது; that which is in the west. *"குடாஅது தொன்றுமுதிர் பௌவத்தின்" (புறநா.6).* 2. மேற்கு; west. *"குடாதுங் குணாது மவற்றுட்படு கோண நான்கும்" (பாரத.பதின்மூ.80).*

[குடக்கு → குடாத்து → குடாது.]

**குடாப்பு** *kuḍāppu,* பெ.(n.) கூடு; plaited coop for fowls, pigs, lambs, etc., shaped like a cone.

**மறுவ.** கொடாப்பு

[குடா → குடாப்பு: கோழி, ஆட்டுக்குட்டி, பன்றி, முதலியவற்றை அடைக்கும் அரையுருண்டை வடிவான கூடு.]

**குடாரம்[1]** *kuḍāram,* பெ.(n.) கோடாலி; axe, hatchet. *"மழுவுந் தறுகட் குடாரமும்" (சூளா. சீய. 72).*

[குட → குடா → குடாரம்.]

**குடாரம்[2]** *kuḍāram,* பெ.(n.) 1. தயிர் கடைவதற்கு நட்ட தறி; fixed post used to keep the churning stick in position. 2. தயிர்கடை தாழி (திவா.); churning pot.

**ம.** குடரம்

**குடாரி[1]** *kuḍāri,* பெ.(n.) 1. கோடாலி; axe. குடாஅரிக் கோவலர் (தொல்.பொருள்.329, உரை). 2. வளைந்த யானைத் தோட்டி (பிங்.); elephant-hook.

[கோடரி → குடாரி.]

**குடாரி[2]** *kuḍāri,* பெ.(n.) திப்பிலி (மலை.); long pepper.

[குடம் → குடாரி.]

**குடாவடி** *kuḍā-vaḍi,* பெ.(n.) வளைந்த அடியை யுடையதாகிய கரடி (திவா.); bear, as having crooked feet.

[குட → குடா + அடி.]

**குடாவு** *kuḍāvu,* பெ.(n.) குடைவு; cavity, hollow, cavern.

[குட – குடா → குடாவு.]

**குடான்** *kuḍāṉ,* பெ.(n.) செம்முள்ளி (மலை.); thorny nail dye.

*[குடா → குடான்.]*

**குடான்னம்** *kuḍāṉṉam,* பெ.(n.) சருக்கரைப் பொங்கல்; a preparation of boiled rice mixed with jaggery and ghee (சா.அக.).

*[குடம் + அன்னம்.]*

**குடானசம்** *kuḍāṉašam,* பெ.(n.) செம்முள்ளி; common red nail dye (சா.அக.).

*[குட → குடா → குடானசம். வளைந்த முள்ளுடையது.]*

**குடானம்** *kuḍāṉam,* பெ.(n.) 1. குடம்; pot.

**க.** குடானம்

*[குடம் + அனம் – குடானம். 'அனம்' சொல்லீறு.]*

**குடானன்** *kuḍāṉaṉ,* பெ.(n.) தாளி; ipomaea genus (சா.அக.).

*[குடு →குடம் →குடானன்.]*

**குடி[1]–த்தல்** *kuḍi-,* 4 செ.குன்றாவி.(v.i.) 1. பருகுதல்; to drink, as from a cup, from the breast. *"கடலைவற்றக் குடித்திடுகின்ற செவ்வேற் கூற்றம்" (கந்தபு.தாரக.183).* 2. உட்கொள்ளுதல்; to inhale, absorb, imbibe, as air, tobacco, smoke. புகைச்சுருட்டுக் குடிக்கிறான் (உ.வ.).

**க.** குடி (kuḍi) ; **ம.** குடி (kuṭi); **தெ.** குடுசு (kuḍušu)

*[குள் → குடி.]*

**குடி[2]** *kuḍi,* பெ.(n.) 1. பருகுகை; drinking. பால்குடி மறந்த பிள்ளை. 2. மது ; drink, beverage. 3. மது வுண்ட மயக்கம் ; drunkenness, intoxication.

**ம., க., குட., பட.** குடி; **தெ.** குடுபு; **து.** குட்செலு, குடிசெலு.

*[குள் → குடி.]*

**குடி[3]** *kuḍi,* பெ.(n.) புருவம் (பிங்.); eye brow.

*[குள் (வளைவு) → குடி.]*

**குடி[4]** *kuḍi,* பெ.(n.) 1. குடியானவன்; ryot. *"கூடு கெழீஇய குடிவயினான்" (பொருந.182).* 2.குடி யிருப்போர்; tenants. 3. ஆட்சிக்குட்பட்ட குடி மக்கள்; subjects citizens *"மன்னவன் கோனோக்கி வாழுங் குடி" (குறள்.542).* 4. குடும்பம்; family. *"ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்" (புறநா.183).* 5. கொடிவழி (பிங்.); lineage, descent. 6. குலம் (குடி.); caste, race. 7. வீடு; house, home, mansion. *"சிறுகுடி கலக்கி" (கந்தபு. ஆற்று.12).* 8. ஊர்; village. *"குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து" (திருமுரு.196).* 9. வாழ்விடம்; abode, residence. *"அடியாருள்ளத் தன்பு மீதூரக் குடியாக் கொண்ட" (திருவாச.2:8).*

**ம., குட.** குடி; **க.** குடி (கோயில்), குடில், குடிலு, குடிசலு; **தெ.** குடி (கோயில்), குடிசெ; **கொலா., து., பட., பர்.** குடி (கோயில்); **கோத.** குட்சல், குட்ள்; **துட.** குட்ய (கோயில்); **குரு.** குட்யா; **கூ.** குடி (வீட்டின் நடுவரை); **பிரா.** குடீ, குட்டீ.

**OE.** cot; **MDU., MLG., ON.** kot; **E.** cot; **OE.** cote; **MLG.** kote; **R.** cote.

**Fin.** kota; **Es.** kodu; **O.Jap.** ka; **Jap.** ko, katei, kataku; **Mong.** kote, xota.

*[குட → குடி. குட = வளைந்த.]*

**குடிக்காசு** *kuḍi-k-kāšu,* பெ.(n.) சிற்றூர்க் குடிவரி (I.M.P.Tg.1068); a village cess.

*[குடி + காசு.]*

**குடிக்காடு** *kuḍi-k-kāḍu,* பெ.(n.) சிற்றூர்; village *"ஐவர்க்கும் ஐந்து குடிக்காடு நல்குதியோ கூறு" (பாரதவெண். வாசுதேவன்றூ.69).*

*[குடி + காடு.]*

**குடிக்காணம்** *kuḍi-k-kāṇam,* பெ.(n.) குடிவரி; a fee paid by tenants. (I. M.P.Cm.22).

*[குடி + காணம். காணம் = வரி.]*

**குடிக்காணி** *kuḍi-k-kāṇi,* பெ.(n.) நிலைத்த உழவுத் தொழில் உரிமை (தஞ்சை); permanent tenancy, as of temple lands.

*[குடி + காணி.]

**குடிக்காணியாட்சி** *kuḍi-k-kāṇi-y-āṭci,* பெ.(n.) மரபு வழிச் சொத்துரிமை; inheritance, ancestral property.

*[குடிக்காணி + ஆட்சி.]*

**குடிக்காவல்** *kuḍi-k-kāval,* பெ.(n.) ஊர்க்காவல் (G.Tn.D.134); the system of village watch.

*[குடி + காவல்.]*

**குடிக்குச்சகுனி** *kuḍikku-c-caguṉi,* பெ.(n.) குடியோட்டிப் பூண்டு; prickly poppy.

*[குடிக்கு + சகுனி.]*

**குடிக்கூலி** *kuḍi-k-kūli,* பெ.(n.) 1. வீட்டுவாடகை; house rent. 2. வாடகை; hire.

மறுவ. குடக்கூலி

ம. குடக்கூலி

*[குடி + கூலி.]*

**குடிக்கூலிக்கெடு-த்தல்** *kuḍi-k-kūli-keḍu-,* 18 செ.குன்றாவி.(v.t.) வாடகைக்கு வாங்குதல்; to obtain for rent, as a house, for hire, as a cart.

*[குடி + கூலிக்கு + எடுக்கு.]*

**குடிகாரன்** *kuḍi-kāraṉ,* பெ.(n.) குடியன்; drunkard.

*[குடி + காரன்.]*

**குடிகெடு-தல்** *kuḍi-keḍu-,* 20 செ.கு.வி.(v.i.) குடும்பம் அடியோடு அழிதல்; to be utterly ruined, as a family. *"குடிகெடினு நள்ளே னினதடியா ரொடல்லால்" (திருவாச.5:2).*

ம. குடிகெடு

*[குடி + கெடு.]*

**குடிகெடுத்தோன்** *kuḍi-keḍuttōṉ,* பெ.(n.) கள், சாராயம் முதலிய போதைப் பொருள்கள்; intoxicants such as toddy, arrack or spiritious liquor (சா.அக.).

*[குடி + கெடுத்தோன்.]*

**குடிகேடன்** *kuḍi-kēḍaṉ,* பெ.(n.) தீயொழுக்கத்தால் குலத்தையழிப்போன்; one who spoils the fair name of a family by his foul deeds.

*[குடி + கேடன்.]*

**குடிகேடி** *kuḍi-kēḍi,* பெ.(n.) குலத்தை யழிப்பவ-ன்-ள்; one who is the ruin of a family. *"விலை மாதர் கள் இளைஞர்கள் குடிகேடிகள்" (திருப்பு.625).*

*[குடி + கேடி.]*

**குடிகேடு** *kuḍi-kēḍu,* பெ.(n.) குடும்ப அழிவு; ruin of a family *"குதிரையின் மேல்வந்து கூடிடுமேற் குடிகேடு கண்டீர்" (திருவாச.36:2).*

*[குடி + கேடு.]*

**குடிகை**[1] *kuḍi-gai,* பெ.(n.) ஓலைக் குடிசை; hut made of leaves, hermitage *"உண்டு கண்படுக்கு முறையுட் குடிகையும்" (மணி.6,63).* 2. கோயில்; temple. *"முதியாள் குடிகையும்" (மணிமே.24:161).*

*[குடி → குடிகை.]*

**குடிகை**[2] *kuḍigai,* பெ.(n.) ஏலவரிசி (மலை.); cardamom seed.

*[குடி → குடிகை.]*

**குடிகை**[3] *kuḍigai,* பெ.(n.) கமண்டலம்; ascetic's pitcher. *"அரும்புனற் குடிகை மீது" (கந்தபு. காவிரி.49).*

*[குடுவை → குடுகை → குடிகை.]*

**குடிகொள்ளு-தல்** *kuḍi-koḷ-,* 12 செ.கு.வி. (v.i.) நிலையாகத் தங்கியிருத்தல்; to occupy, take possession of the mind, as a deity, to haunt, infest as demons, bats snakes; to be deep-seated as a chronic disease. *"குரைகழல்கள் குறுகினம் நங்கோவிந்தன் குடிகொண்டான்" (திவ்.திருவாய். 10.6;7).*

ம. குடிகொள்ளுக

*[குடி + கொள்ளு-.]*

**குடிகோள்** *kuḍi-kōḷ,* பெ.(n.) வேண்டுமென்றே வஞ்சகம் செய்து குடியைக் கெடுக்கை; ruining a family by deep-laid schemes. *"உறுப்பறை குடிகோ ளலைகொலை" (தொ.பொருள்.258).*

*[குடி + கோள்.]*

**குடிங்கு** *kuḍiṅgu,* பெ.(n.) பறவை; bird. *"கோட்டகம் பரிதியங் குடிங்கு கூடுமே" (இரகு. நாட்டுப். 40).*

*[குள் → குடு → குடிங்கு.]*

**குடிச்சி** *kuḍicci,* பெ.(n.) 1. சாதிபத்திரி; mace. 2. செந்திராய்; Indian chickweed. 3. சீந்தில்; moon creeper (சா.அக.).

*[குள் → குடி → குடிச்சி.]*

**குடிச்செருக்கு** *kuḍi-c-cerukku,* பெ.(n.) 1. குடிப் பிறப்பாலுண்டான உயர்வெண்ணம் (கருதும்); pride of birth. 2. குடிவளம்; dense population.

*[குடி + செருக்கு.]*

**குடிசரம்** *kuḍišaram,* பெ.(n.) நீர்ப்பன்றி; hog, living in the star (சா. அக.).

*[குடி + சரம்.]*

**குடிசல்** *kuḍišal,* பெ.(n.) குடிசை; hut.

*[குடி → குடிசை → குடிசல்.]*

**குடிசனம்** *kuḍišaṉam,* பெ.(n.) குடிமக்கள்; inhabitans, subjects.

*[குடி + சனம்.]*

**குடிசாய்—தல்** *kuḍi-šāy-,* 8 செ.கு.வி. (v.i.) குடியின் அழிவு; ruin of a family.

*[குடி + சாய்-.]*

**குடிசிகை** *kuḍi-šigai,* பெ.(n.) நிலவரி நிலுவை; arrears of land revenue or rent.

*[குடி + சிகை.]*

**குடிசில்** *kuḍišil,* பெ.(n.) குடிசை; hut. *"மனைவியை யிலாக் குடிசில் (நூற்றெட்டுத். திருப்புகழ்.98).*

*[குடி + சில்.]*

**குடிசீலை** *kuḍišīlai,* பெ.(n.) கோவணம்; loin cloth.

*[குடி + சீலை.]*

**குடிசெய்—தல்** *kuḍi-šey-,* 1 செ.கு.வி.(v.i.) 1. பிறந்த குடியை யுயர்த்துதல்; to bring credit to one's family, as making it. *"குற்றமிலனாய்க் குடிசெய்து வாழ்வானை" (குறள்,1025).* 2. வாழ்தல்; to dwell, reside, settle. *"மனவாரமுடையார் குடிசெயுந் திருநலூரே" (தேவா.413:10).*

*[குடி + செய்.]*

**குடிசை** *kuḍišai,* பெ.(n.) சிறு குடில் (பிங்.); small hut, cottage.

**தெ.** குடிசெ, குடுசு; **ம.** குடிஞ்ஞில்; **க.** குடிசலு. **து.** குடிசில், குடிசல்.

**Fin.** koju; **Hung.** haj; **Jap.**koya; **E.** cot, cottage; **A.S.** cote, a small dwelling

*[குடி → குடிசில் → குடிசை]*

**குடிசைதூக்கு—தல்** *kuḍišai-tūkku-,* 5 செ.கு.வி. (v.i.) 1. **குடிசையெடுத்தல்** பார்க்க; see *kuḍišai-y-eḍu-.* 2. இருப்பிடம் மாற்றுதல்; to change habitation.

*[குடிசை + தூக்கு.]*

**குடிசையெடு—த்தல்** *kuḍišai-yeḍu-,* 4 செ.கு.வி. (v.i.) குடிசையை வேற்றிடம் மாற்றுதல்; to remove one's hut to another place.

*[குடிசை + எடு-.]*

**குடிஞை**[1] *kuḍiñai,* பெ.(n.) 1. ஆறு; river. *"கொண்மூ வரவொத் துளதக் குடிஞை" (கந்தபு.காளிந்தி.3).*

*[குள் → குடி(வளைவு) → குடிஞை.]*

**குடிஞை[2]** *kuḍiñai,* பெ.(n.) குடிசை; small hut. *"தூசக் குடிஞையும்" (பெருங்.இலாவாண. 12:43).*

ம. குடிஞ

*[குடிசை → குடிஞை.]*

**குடிஞை[3]** *kuḍiñai,* பெ.(n.) கோட்டான்; rock horned-owl. *"குடிஞை யிரட்டு நெடுமலை யடுக்கத்து" (மலைபடு.141).* 2. பறவை (பிங்.); bird.

*[குடி → குடிஞை.]*

ஒருகா. வளைந்த மூக்குடையதாகலின் கோட்டானுக்கு குடிஞை என்ற பெயர் பொருத்தமாகலாம்.

**குடிஞை[4]** *kuḍiñai,* பெ.(n.) 1. கோட்டையின் ஏவறை; bastion. நெடுமதிலுங் குடிஞைகளும் (நீலகேசி,268). 2. ஊர் (யாழ்.அக.).; town, village.

*[குடி → குடிஞை.]*

**குடிஞைக்கல்** *kuḍiñai-k-kal,* பெ.(n.) சோழர் காலத்து வழங்கிய ஒருவகை எடைக்கல்; a standard weight current during Cōla sovereignty. *"ஆட வல்லா னென்னுங் குடிஞைக் கல்லால்" (S.I.I. II, 69).*

மறுவ. குடிநற்கல்

*[குடி + நல் + கல் – குடிநற்கல் → குடிஞைக்கல்.]*

**குடிஞைப்பள்ளி** *kuḍiñai-p-paḷḷi,* பெ.(n.) கண்ணுளாளர் தங்குதற்குரிய நாடக அரங்கின் பகுதி (சிலப்.3:105,உரை); a portion in green-room occupied by *kaṇṇuḷāḷar.*

*[குடிஞை + பள்ளி.]*

**குடித்தரம்** *kuḍi-t-taram,* பெ.(n.) தனித்தனியான குடித்தீர்வை; separate assessment for each individual ryot.

*[குடி + தரம்.]*

**குடித்தனக்காரன்** *kuḍi-t-taṉakkāraṉ,* பெ.(n.) 1. பயிரிடுவோன்; cultivator, farmer. 2. ஊரில் செல்வாக்கு உள்ளவன்; man of wealth and influence in a village. அந்தச் சிற்றூரில் அவர் பெரிய குடித்தனக்காரர். 3. வீட்டுத் தலைவன் (வின்.); house - holder, land lord.

*[குடித்தனம் + காரர்.]*

**குடித்தனப்படு-தல்** *kuḍi-t-taṉappaḍu-,* 20 செ.கு.வி. (v.i.) இல்வாழ்க்கை நிலையை அடைதல்; to enter married life.

*[குடித்தனம் + படு.]*

**குடித்தனப்பாங்கு** *kuḍi-t-taṉa-p-pāṅgu,* பெ.(n.) இல்வாழ்க்கை யொழுங்கு; domestic propriety, domestic economy.

*[குடித்தனம் + பாங்கு.]*

**குடித்தனம்[1]** *kuḍi-t-taṉam,* பெ.(n.) 1. இல்வாழ்க்கை; family, domestic life; household affairs *"ஓரஞ்சொன்னவன் குடித்தனம்போல் தேய்ந்தது" (இராமநா.உயுத்.29).* 2. வாடகைக்குடி; tenancy. இந்த வீட்டில் நாலு குடித்தனம் உண்டு (உ.வ.). 3. குடிவாழ்க்கையின் ஒழுங்கு (வின்.); domestic economy, domestic order.

*[குடி → குடித்தனம்.]*

**குடித்தனவுறுப்பு** *kuḍittaṉa-v-uṟuppu,* பெ.(n.) குடும்பத்திற்கு அங்கங்களான இடம், பொருள், ஏவல் முதலியன (யாழ்ப்.); things necessary for a family as chattels, furniture, dependants, servants, cattle.

*[குடித்தனம் + உறுப்பு.]*

**குடித்திண்ணை** *kuḍittiṇṇai,* பெ.(n.) வீட்டின் உட்பகுதியில் கூடத்திலமைந்த திண்ணை (நெல்லை); a inside the house pial.

*[குடி + திண்ணை.]*

**குடித்தெய்வம்** *kuḍideivam,* பெ.(n.) குலதெய்வம்; family, deity. *"நங்குடித் தெய்வங் கண்டீர்" (சீவக.547).*

ம. குடிதைவம்

*[குடி + தெய்வம்.]*

**குடிதாங்கி** *kuḍi-tāṅgi,* பெ.(n.) குலத்தைத் தாங்குபவன்; the mainstay of a family. *"என்னிருங் கலியின் குறும்பைத் துரத்துங் குடிதாங்கியை" (பெருந்தொ.1153).*

*[குடி + தாங்கி.]*

**குடிதாங்கிக்கோல்** *kuḍi-tāṅgi-k-kōl,* பெ.(n.) ஒரு பழைய அளவுகோல் (கல்.); an ancient measuring-rod.

*[குடி + தாங்கிக்கோல்.]*

**குடிதிருத்து-தல்** *kuḍi-tiruttu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஆட்சிக்குட்பட்ட குடிகளை நன்னிலையில் நிறுத்துதல்; to secure the welfare of one's subjects. *"துளங்குகுடி திருத்திய" (பதிற்றுப்.37:7).* 2. பிறந்த குலத்தை மேம்படுத்துதல்; to advance one's family in wealth, status, reputation etc.

*[குடி + திருத்து.]*

**குடிநற்கல்** *kuḍinaṟkal,* பெ.(n.) **குடிஞைக்கல்** *(S.I.I.ii.69)* பார்க்க; see *kuḍiñai-k-kal.*

*[குடி + நல் + கல்.]*

**குடிநாட்டு-தல்** *kuḍi-nāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) குடியேற்றுதல்; to plant a colony.

*[குடி + நாட்டு.]*

**குடிநிலம்** *kuḍi-nilam,* பெ.(n.) 1. குடியிருக்கும் மனைநிலம்; house site, house premises. 2. மகட்கொடையாகக் கொடுத்த மனை; building sites, as an item in dowry.

ம. குடிநிலம்

*[குடி + நிலம்.]*

**குடிநிலுவை** *kuḍi-niluvai,* பெ.(n.) **குடிசிகை** பார்க்க; *see kuḍi-šigai.*

*[குடி + நிலுவை.]*

**குடிநிலை** *kuḍi-nilai,* பெ.(n.) வீரக்குடியின் பழமையையும் அஞ்சாமையையும் கூறும் புறத்துறை (பு.வெ.2:14); theme of extolling the greatness of a warrior's family.

*[குடி + நிலை.]*

**குடிநிலையுரைத்தல்** *kuḍi-nilai-y-uraittal,* பெ.(n.) **குடிநிலை** பார்க்க (புறநா.290); see *kuḍi-nilai*

*[குடி + நிலை + உரைத்தல்.]*

**குடிநீங்காக் காராண்மை** *kuḍi-niṅgā-k-kārāṇmai,* பெ.(n.) நிலத்தில் குடியிருப்பதோடு, பயிரிடும் உரிமையும் நிலையாகப் பெற்று ஆண்டு தோறும் உரிமையாளருக்கு உரிய தவசங்களை முறைப்படி செலுத்தும் உழவர் உரிமை;right of tenants to live and cultivate paying share of the crop. *"ஆண்டுதோறும் இரண்டாயிரத்தறுநூற்றுக்கல நெல் அட்டுவார்களாகவும், இப்பரிசு இந்நிலம் விற்றும், ஒற்றி வைச்சும் கொள்ளப் பெறுவார்களாகவும். இப்பரிசு நீங்காக் காராண்மையாக கல்மேல் வெட்டுவிச்சு" (தெ.கல். தொ.14, கல்.154).*

*[குடி + நீங்கா + காராண்மை.]*

**குடிநீங்காச்சாவாமூவாப்பேராடு** *kuḍi-niṅgā ccāvā-mūvā-p-pērāḍu,* பெ.(n.) புரக்கும் இடையர் வாரிசு மாறாதநிலையில், எண்ணிக்கையில் என்றும் குறையாத அளவில் வைத்திருக்கும் ஆடுகள்; number of sheep to be maintained perpetually by shepherds for temple use. *"இவ்வாடு இருநூற்று, தொண்ணூற்று இரண்டுங் குடிநீங்காச் சாவா மூவாப் பேராடு ஆகக் கொண்டு" (தெ.கல்.தொ.5, கல்.517).*

*[குடி + நீங்கா + சாவா + மூவா + பேராடு.]*

**குடிநீங்காத்திருவிடையாட்டம்** *kuḍi-niṅkā-t-tiruviṭaiyāṭṭam,* பெ.(n.) பயிர் செய்யுங் குடிகளோடு கோவிலுக்கு அளிக்கப்பட்ட முற்றூட்டு (P.Insc.224); endowment to a temple, of lands already in the occupation of cultivating tenants

*[குடி + நீங்கா + திருவிடையாட்டம்.]*

**குடிநீங்காத்தேவதானம்**[1] *kuḍi-niṅgā-t-tēva dāṉam,* பெ.(n.) **குடிநீங்காத்திருவிடை யாட்டம்** பார்க்க (M.E.R.45 of 1922) ; *see kuḍi-niṅkā-t-tiruviḍaiyāṭṭam.*

*[குடி + நீங்கா + தேவதானம்.]*

**குடிநீங்காத்தேவதானம்**[2] *kuḍi-niṅgā-tēvatāṉam,* பெ.(n.) பழங்குடி வாரிசு நீங்கா உழவர் வாழும் கோயிலுக்குரிய இறையிலி நிலம்; taxfree land gifted to temple, from which tillers are not removed. *"ஆகப்பாடகம் நாற்பத்திரண்டும் இவ் நாயனார்க்குடி நீங்காத் தேவதானமாக விட்டோம்" (தெ.கல்.தொ.7. கல்.402).*

*[குடி + நீங்கா + தேவதானம்.]*

**குடிநீர்** *kuḍi-nīr,* பெ.(n.) 1. குடித்தற்குரிய நீர்; drinking water, potable water. *"இட்ட குடிநீ ரிருநாழி" (பதினொ.க்ஷேத். 16).* 2.கியாழமருந்து; decoction, tincture, medicinal infusion. *"நோய்க்குத் தாயிரே குடிநீர் குடிப்பாள்" (திவ்.பெருமாள்.5.1வியா).*

**ம.** குடிநீர், குடி வெள்ளம்; **க.** குடியுவநீரு; **தெ.** குடிநீரு.

*[குடி + நீர்.]*

**குடிப்படு-த்தல்** *kuḍi-p-paḍu-,* 20 செ.குன்றாவி. (v.t.) குடும்பத்தை நல்லநிலைமையில் நிறுத்துதல்; to establish a family in good position. *"குடிப் படுத்துக் கூழீந்தான்" (ஏலா.42).*

*[குடி + படு.]*

**குடிப்படை** *kuḍi-p-paḍai,* பெ.(n.) குடிமக்களாலான சேனை; militia, volunteer corps as opposed to a mercenary army.

*[குடி + படை.]*

**குடிப்பழக்கம்** *kuḍi-p-paḻakkam,* பெ.(n.) குடிக்கும் பழக்கம்; drinking habit

**க.** குடிகதன

*[குடி + பழக்கம்.]*

**குடிப்பழி** *kuḍi-p-paḻi,* பெ.(n.) குலத்திற்கு ஏற்பட்ட நிந்தை; stigma, disgrace, slur, disrepute, on family. *"காணிற் குடிப்பழியாம்" (நாலடி.84).*

**ம.** குடிப்பழி

*[குடி + பழி.]*

**குடிப்பழுது** *kuḍi-p-paḻudu,* பெ.(n.) **குடிப்பழி** பார்க்க (வின்.); see *kuḍi-p-paḻi.*

*[குடி + பழுது.]*

**குடிப்பற்று** *kuḍi-p-paṟṟu,* பெ.(n.) குடியிருப்பு நிலம்; housing site. நிலத்தைப் பயிரிடும் உரிமை பெற்றான் அந் நிலப்பகுதியிலேயே குடியிருப்பமைத்து வாழ் வதற்கும் குடி பற்றாகும் (புதுப். கல்.195).

*[குடி + பற்று.]*

**குடிப்பறையன்** *kuḍi-p-paṟaiyaṉ,* பெ.(n.) பறையர்க்கு முடிமழிக்கும் தொழிலாளி (M.M.); barber who shaves Pariahs.

*[குடி + பறையன்.]*

**குடிப்பாங்கு** *kuḍi-p-pāṅgu,* பெ.(n.) 1. **குடித்தனப் பாங்கு** பார்க்க; see *kuḍi-taṉa-p-pāṅgu.* 2. குடியானவன் பின்பற்றுதற்குரிய ஒழுங்கு; orderly or proper conduct of a farmer. 3. குடிகளின் ஏற்பாடு (வின்.); usage, customs of cultivators or agriculturists.

*[குடி + பாங்கு.]*

**குடிப்பாழ்** *kuḍi-p-pāḻ,* பெ.(n.) 1. குடிகள் விட்டு நீங்குதலால் ஊருக்கு உண்டாகும் அழிவு; ruin of a village owing to depopulation one or three kinds of pāḻ. 2. குடிகளற்றுப் போன ஊர்; a deserted village. அந்த ஊர் குடிப்பாழ் (உ.வ.).

*[குடி + பாழ்.]*

**குடிப்பிள்ளை** *kuḍi-p-piḷḷai,* பெ.(n.) 1. பறையருள் மழிப்புவேலை செய்யும் ஒரு பிரிவினர் (E.T.); a division of the pariahs, generally doing the duty of barbers. 2. ஒரு இனத்தில் தாங்கள் சேர்த் துள்ளவர்களாக சொல்லிக் கொண்டு, அதன் பட்டப்

பெயரால் தங்களை வழங்கிக் கொள்ளும் இனத்தார் (இ.வ.); sects which trace their origin to particular castes and adopt their titles. 3. ஊர்ச் செட்டி யார்க்கு அவர் இட்ட வேலையை முடித்தற் குரிய எடுபிடி ஆள்; an errand boy for Chettiar grantee.

*[குடி + பிள்ளை.]*

**குடிப்பிறப்பாளர்** *kuḍi-p-piṟappāḷar,* பெ.(n.) உயர்குடியிற் பிறந்தோர்; persons of birth, of noble lineage. *"குடிப்பிறப்பாளர் தங்கொள்கையிற் குன்றார்" (நாலடி.141).*

*[குடி + பிறப்பாளர்.]*

**குடிப்பிறப்பு** *kuḍi-p-piṟappu,* பெ.(n.) உயர்குடியில் தோன்றுகை; noble birth, nobility, birth in a distinguished family. *"குடிப்பிறப் பழிக்கும்" (மணிமே.11:76).*

**ம.** குடிப்பிறவி

*[குடி + பிறப்பு.]*

**குடிப்பெண்** *kuḍi-p-peṇ,* பெ.(n.) 1. குலப்பெண் (யாழ்.அக.); woman of noble birth and respectability, wedded lawful wife.2. முறையாகத் திருமணமான பெண்;a lawfully wedded wife.

**ம.** குடிப்பெண்ணு

*[குடி + பெண்.]*

**குடிப்பெயர்** *kuḍi-p-peyar,* பெ.(n.) சேர, சோழ, பாண்டியர் என்றாற் போல, பிறந்த குலம் பற்றி வழங்கும் பெயர் (பன்னிருபா.145:சிலப்.1,33. அரும்.); family name as *Cēraṉ, Cōḻaṉ, Pāṇḍiyaṉ.*

*[குடி + பெயர்.]*

**குடிபடை** *kuḍi-paḍai,* பெ.(n.) குடிமக்கள் (உ.வ.); in habitants.

*[குடி + படை.]*

**குடிபுகு-தல்** *kuḍi-pugu-,* 2 செ.கு.வி.(v.i.) 1. வேறு வீட்டிற்கு வாழச் செல்லுதல்; to occuppy a new home. 2. புதுக்குடி சேர்தல்; to immigrate, settle and colnize, seek a fresh refue. *"தாமரை துறந்து குடிபுக்கா ளென" (கம்பரா.வரைக்.12).* 3. புதுமனை புகுதல்; to occupy a newly-built house with appropriate ceremonies to do house-warming.

*[குடி + புகு.]*

**குடிபோ-தல்** *kuḍi-pō-,* 8 செ.கு.வி.(v.i.) 1. வேறு வீட்டிற்குக் குடிமாறிச் செல்லுதல்; to remove one self to a new home. 2. புதுமனை புகுதல்; to occupy a newly-built house with appropriate ceromenies. 3. இருப்பிடத்தை விட்டு வெளியேறு தல்; to quit, give up, abandon, as a house. *"ஆவி குடிபோன வவ்வடிவும்" (சிலப்.20 : வெண்பா.).* 4. வலசை போதல்; to emigrate, flee from home. 5. காற்றாகவேனும் ஆவியாகவேனும் பண்டங் கரைதல்; to evaporate, escape, as essential oil camphor.

*[குடி + போ.]*

**குடிபோதை** *kuḍi-pōdai,* பெ.(n.) ***குடிமயக்கம்*** பார்க்க; see *kuḍimayakkam.*

*[குடி + போதை.]*

**குடிமக்கள்** *kuḍimakkaḷ,* பெ.(n.) 1. (ஊர்களில்) பணி செய்தற்குரிய பதினெண்வகைக் சிற்றூர்க் குடிமக்கள்; sub-caste is rendering service in a village, being 18 in number. 2. அடிமைகள்; slaves. *"இந்திரியங்களுக்குக் குடிமக்களாய் வர்த்திக்கிற லீலா விபூதி" (திவ்.திருமாலை.13,வியா.).*

*[குடி + மக்கள்.]*

வண்ணான், நாவிதன், குயவன், தட்டான், கன்னான், கற்றச்சன், கொல்லன், தச்சன், எண்ணெய் வாணிகன், உப்பு வாணிகன், இலைவாணிகன், பள்ளி, பூமாலைக்காரன், பறையன், கோவிற்குடியான், ஓச்சன், வலையன், பாணன்.

**குடிமக்கள் மானியம்** *kuḍimakkaḷ-māṉiyam,* பெ.(n.) பணி செய்யும் குடிமக்கட்கு விடப்பட்ட இறையிலி நிலம்; land given free of rent to

washermen, barbers etc., for the services rendered by them to villagers.

*[குடி + மக்கள் + மானியம்.]*

**குடிமகன்** *kuḍi-makaṉ,* பெ.(n.) 1. நற்குடிப் பிறந்தவன்; person of noble birth. *"பொருளைக் குடிமகனல்லான் கைவைத்தல்" (பழமொ.209).* 2.படியாள்; hired servant, one whose wages are paid by grain. *"குடிமகனொரு வனுக்கு ஐயனாரேறி வலித்து நலிந்த வாறே" (ஈடு, 4.6:2).*

ம. குடிமகன்

*[குடி + மகன்.]*

**குடிமதிப்பு** *kuḍi-madippu,* பெ.(n.) 1. சிற்றூர் வரித்திட்டம் (வின்.); valuation of property for purposes of taxation.2. மக்கள் தொகை கணக்கெடுப்பு; census.

ம. குடிமதிப்பு

*[குடி + மதிப்பு.]*

**குடிமயக்கம்** *kuḍi-mayakkam,* பெ.(n.) 1. குடிப் பதனால் ஏற்படும் வெறி;intocication through drunkenness; 2. குடிவெறியினாலேற் படும் மனக்கலக்கம், தடுமாற்றம் முதலியன; a form of temporary alecoholic insanity characterised by mental clouding.

*[குடு + மயக்கம்.]*

**குடிமராமத்து** *kuḍi-marāmattu,* பெ.(n.) கால்வாய், குளக்கரை முதலியவற்றைச் சீர்படுத்துவதற்காக வழக்கமாய்க் குடிமக்கள் செய்தற்குரிய பணிக் கொடை (R.F.); customary contributions of labour by ryots for petty repairs to channels, tank-bunds, sluices etc.

ம. குடிமராமத்து

*[குடி + மராமத்து.]*

**குடிமார்க்கம்** *kuḍi-mārkkam,* பெ.(n.) **குடிவழி** பார்க்க; see *kuḍivaḻi*

*[குடி + மார்க்கம்.]*

**குடிமிராசு** *kuḍi-mirāsu,* பெ.(n.) நிலவுரிமை; right or privilege of a hereditary occupant.

*[குடி + மிராசு.]*

**குடிமுழுகிப்போ-தல்** *kuḍi-muḻugi-p-pō-,* குடும்ப நிலை முதலாயின முழுவதும் அழிதல்; to ruin utterly, as a family completely washed away by flood.

*[குடி + முழுகி + போ-.]*

**குடிமுறை** *kuḍi-muṟai,* பெ.(n.) குடித்தனம் (யாழ்.அக.) ; household affairs.

*[குடி + முறை.]*

**குடிமை** *kuḍimai,* பெ.(n.) 1. உயர்குலத்தாரது ஒழுக்கம் (தொல்.பொருள்.273); manners and customs of the higher classes of nobility. 2. பிறந்த குடியை உயரச் செய்யும் தன்மை; supreme quality of advancing the status of a family. *"மடிமை குடிமைக்கட் டங்கின்" (குறள்,608).* 3. குடிப்பிறப்பு; lineage, family, descent. *"குணனுங் குடிமையும்" (குறள்,793).* 4. அரசரது குடியாயிருக்குந் தன்மை; allegiance, homage, as of subjects to their sovereign. *"குடிமை மூன்றுலகுஞ் செயுங் கொற்றத்து" (கம்பரா.நிந்தனை.37).* 5. குடித்தனப் பாங்கு; domestic economy. 6. அடிமை; slavery, servitude, feudal dependance, feudatory in reference to his chief. *"குடிமை செய்யுங் கொடும்புலையன்" (அரிச்.பு. சூழ்வினை.70).* 7. குடிகளிடமிருந்து பெறும் ஒருவகை வரி (S.I.I.III, 110); a tax, certain dues from tenants.

ம. குடிம

*[குடி → குடிமை.]*

**குடிமைப்பாடு** *kuḍimai-p-pāḍu,* பெ.(n.) ஊழியம்; service (S.I.I.III, 48).

*[குடிமை + பாடு.]*

**குடியம்பலம்** *kuḍi-y-ambalam,* பெ.(n.) குடிகள் அரசிற்குச் செலுத்தும் வரிகளின் கணக்கை

ஒழுங்குபடுத்துதற்கு உதவி செய்ய அமர்த்தப்படும் ஒரு சிற்றூர்ப் பணி; village office established with a view to assist the ryots in keeping accounts of payments made by them to the government.

*[குடி + அம்பலம்.]*

**குடியரசு** *kuḍi-y-arašu,* பெ.(n.) குடிமக்களால் நடத்தப்பெறும் அரசு; republic - a government, government by the people, democracy.

*[குடி + அரசு.]*

**குடியழிவு** *kuḍi-y-aḻivu,* பெ.(n.) 1. குடும்பக்கேடு; ruin of a family. 2. பெருங்கேடு (வின்.); great evil.

*[குடி + அழிவு.]*

**குடியன்** *kuḍiyaṉ,* பெ.(n.) குடிகாரன்; drunkard.

**ம.** குடியன்; **க.** குடக, குடிக; **து.** குட்செலெ, குடிசெலெ.

*[குடி + அன்.]*

**குடியாட்சி** *kuḍi-y-āṭci,* பெ.(n.) 1. குடித்தனத்தை நடத்துகை (யாழ்.அக.); domestic management. 2. குடியரசு; government by the people; democracy.

*[குடி + ஆட்சி.]*

**குடியாட்டம்** *kuḍi-y-āṭṭam,* பெ.(n.) குடிவாழ்க்கை (யாழ்.அக.) ; domestic life.

*[குடி + ஆட்டம்.]*

**குடியாயக்கட்டு** *kuḍi-y-āya-k-kaṭṭu,* பெ.(n.) சிற்றூர்க் குடும்பங்களின் மொத்தத் தொகை; total number of families in a village.

*[குடி + ஆயக்கட்டு.]*

**குடியாள்**[1] *kuḍi-y-āḷ,* பெ.(n.) பண்ணையாள்; tenant.

**மறுவ.** குடியால்

*[குடி + ஆள்.]*

**குடியாள்**[2] *kuḍi-y-āḷ,* பெ.(n.) தாளகம் (சங்.அக.); yellow sulphuret of arsenic.

*[குடி + ஆள்.]*

**குடியான்** *kuḍiyāṉ,* பெ.(n.) **குடியானவன்** பார்க்க; see *kuḍiyāṉavaṉ.*

**ம.** குடியான்

*[குடி + ஆன்.]*

**குடியான கவுண்டர்** *kuḍiyāṉa-kavuṇḍar,* பெ.(n.) கொங்கு வேளாளர் (G.Sm. Di, 144); koṅgu-vēḷāḷa caste

*[குடி + ஆன + கவுண்டர்.]*

**குடியானவன்** *kuḍiyāṉavaṉ,* பெ.(n.) 1. பயிரிடுவோன்; cultivator, farmer, ryot. 2. கீழ்க்குடி; caste šūdra.

**ம.** குடியானவன்

*[குடி + ஆனவன்.]*

**குடியிரு-த்தல்** *kuḍi-iru-,* 3 செ.கு.வி.(v.i.) 1. வாழ்தல்; to reside, settle down. *"எப்படியினிக் குடியிருப்பது" (உபதேசகா.சூராதி.28).* 2. குடிக் கூலிக் கிருத்தல்; to live in rented quarters.

**ம.** குடியிருக்குக

*[குடி + இரு.]*

**குடியிருக்கை** *kuḍi-y-irukkai,* பெ.(n.) 1. குடியாகத் தங்கியிருக்கை; living, residing. 2. சிற்றூர்க் குடிகள் வாழும் இடம்; quarters occupied by the ryots in a village. *"இவ்வூர் நத்தங் குடி யிருக்கையும்" (S.I.I.II, 57).*

*[குடி + இருக்கை.]*

**குடியிருப்பு** *kuḍi-y-iruppu,* பெ.(n.) 1. குடியிருக்கை; living, residing. 2. வாழ்வு; life, existence. குடியிருப்புச் சுகமில்லை (கொ.வ.). 3. சிற்றூர்; village. *"அதன் பகுதியாகிய குடியிருப்பும்" (தொல்.பொருள்.114,உரை.).* 4. சில இனத்தார்கள்

தனியாக வாழ்ந்து வரும் இடம்; quarters occupied by a special class, as ryots.

ம. குடியிருப்பு

*[குடி + இருப்பு.]*

**குடியிருப்புநத்தம்** *kuḍi-y-iruppu-nattam,* பெ.(n.) சிற்றூரில் மக்கள் வீடுகட்டி வாழும் நிலப்பகுதி; the portion of a village site where villagers have their places of residence.

*[குடி + இருப்பு + நத்தம்.]*

**குடியிலார்** *kuḍiyilār,* பெ.(n.) குடிகள் (T.A.S.); tenants, ryots.

ம. குடியிலார்

*[குடி → குடியில் + (அர்) ஆர்.]*

**குடியிறங்கு-தல்** *kuḍi-y-iṟaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) நிலைக் குடியாகத் தங்குதல்; to fix or establish permanently one's abode; to settle down, as a family.

*[குடி → இறங்கு.]*

**குடியிறை** *kuḍi-y-iṟai,* பெ.(n.) குடிகள் செலுத்தும் வரி (திவா.); tax imposed upon ryots.

*[குடி + இறை.]*

**குடியுடம்படிக்கை** *kuḍi-y-uḍampaḍikkai,* பெ.(n.) 1. உரிமைச் சீட்டு பட்டா; title-deed registry of holdings. 2. குத்தகைச் சீட்டு; lease-deed.

*[குடி + உடன்படிக்கை.]*

**குடியுந்தடியும்** *kuḍiyun-taḍiyum,* பெ.(n.) வீடும் நிலமும்; houses and lands. *"ஸம்ஸாரத்திலே குடியுந் தடியுமாயிருக்க நினைத்தார்" (திவ்.இயற். திருவிருத்.6, ஸ்வா.வியா.பக்.56).*

*[குடியும் + தடியும்.]*

**குடியெழும்பு-தல்** *kuḍi-y-eḻmbu-,* 5 செ.கு.வி.(v.i.) கலகம் முதலிய நிகழ்ச்சியால் குடிநீங்கிப் போய் விடுதல் (வின்.); to evacuate a house, leave a village, commonly from disastrous events or anticipations.

*[குடி + எழும்பு.]*

**குடியேற்றநாடு** *kuḍi-ēṟṟa-nāḍu,* பெ.(n.) மக்கள் புதிதாகக் குடியேறிய நாடு; colony.

*[குடி + ஏற்றம் + நாடு.]*

**குடியேற்றம்** *kuḍi-y-ēṟṟam,* பெ.(n.) 1. புதிதாக ஒரு நிலப்பகுதியில் குடியேறுகை; colonization, newly populating a country or land area. 2. ஓர் ஊரின் பெயர்; name of a village.

ம. குடியேற்றம்

*[குடி + ஏறு– குடியேறு → குடியேற்றம் = மக்கள் குடியேறிய ஊர். குடியேற்றம் என்பது இன்று குடியாத்தம் என மருவி வழங்குகிறது.]*

**குடியேற்று-தல்** *kuḍi-yēṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.i.) குடியேறச் செய்தல்; to people, populate colonize. *"பொன்னெடு நாட்டையெல்லாம் புதுக்குடி யேற்றிற் றன்றே" (கம்பரா.இந்திரசித்.48).*

*[குடி + ஏற்று.]*

**குடியேறு-தல்** *kuḍi-y-ēṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. தம் நாடுவிட்டு வேற்றுநாடு சென்று வாழ்தல்; to colonize, settle in a new country. 2. நிலைத்துவிடுதல்; to secure a sure place or footing, to be firmly rooted. *"சிந்தை குடியேறியிருக்கின்ற மாலொழியும்" (ஏகாம்.உலா,168).*

ம. குடியேறுக

*[குடி + ஏறு.]*

**குடியோட்டி** *kuḍi-y-ōṭṭi,* பெ.(n.) **குடியோட்டிப் பூண்டு** பார்க்க; see *kūdiyōṭṭi-p-pūṇḍu.*

*[குடி + ஓட்டி.]*

**குடியோட்டிப்பூண்டு** *kuḍi-y-ōṭṭi-p-pūṇḍu,* பெ.(n.) பூடுவகை (பதார்த்த.293); prickly poppy.

*[குடி + ஓட்டி + பூண்டு.]*

**குடிரகம்** *kuḍiragam,* பெ.(n.) துளசி; holy basil (சா.அக.).

*[குள் → குடு → குடி → குடிரம் (குட்டையானது).]*

**குடிரம்** *kuḍiram,* பெ.(n.) காரைச் செடி (மலை.); a low shrub with sharp axillary spines.

*[குள் → குடு → குடிரம்.]*

**குடில்**[1] *kuḍil,* பெ.(n.) 1. குடிசையினும் சிறிய இல், குற்றில், குடிசை; hut, shed. *"என்ன மாதவஞ் செய்ததிச் சிறுகுடில்" (பாரத.கிருட்.80).* 2. ஆட்டுக் கிடை முதலியவற்றை மூடுதற்கு உதவும் குடில்; movable, conoidal roof for sheltering beasts or stacks of straw or gate-ways from the weather. 3. வீடு; abod dwelling place. *"குடிலுறு காமர் பொன்னகர்" (கந்தபு.கடவுள்.14).* 4. தேர்ச் சக்கரங்களைத் திருப்பிச் செலுத்தற்குக் கொடுக்கும் மரக்கட்டை (இ.வ.); a cone-shaped block of wood used to prevent big cars from running fast and to turn them at street - corners.

*[குள் (வளைவு) – குடி → குடில்.]*

**குடில்**[2] *kuḍil,* பெ.(n.) வட்டவடிவமாக தோன்றும் காயம், வானம் (திவா.); space.

*[குள் (வளைவு) → குடி → குடில்.]*

**குடிலச்சி** *kuḍilacci,* பெ.(n.) 1. கருவண்டு வகை (வின்.); a black beetle. 2. ஒருவகைச் செய்நஞ்சு (சங்.அக.); a prepared arsenic.

*[குடில் → குடிலச்சி.]*

**குடிலப்பாட்டு** *kuḍila-p-pāṭṭu,* இசை; music (கழக.அக.).

*[குடிலம் + பாட்டு.]*

**குடிலம்**[1] *kuḍilam,* பெ.(n.) 1. வளைவு (திவா.); bend, curve, flexure. *"கூசும் நுதலும் புருவமுமே குடிலமாகி யிருப்பாரை" (யாப். வி. மேற்கோள்).* 2. வானம் (சூடா.); space. 3. சடை (பிங்.); tangled, matted hair. 4. வஞ்சகம்; deceit, guile, cunning. *"பெருங்குடிலமெல்லாங் குடி யிருக்குங் கருவிழி யாள்" (குற்றா.தல. தருமசாமி. 47).* 5. உள்வாங்கிப் பாடும் இசைத் தொழில்; a modulation of voice in singing. *"குடிலமுள் வாங்கிப் பாடல்" (சீவக.735, உரை)* 6. குராமரம் (திவா.); common bottle flower.

*[குடு → குடி → குடில் → குடிலம்.]*

**குடிலம்**[2] *kuḍilam,* பெ.(n.) 1. ஈயமணல்; lead ore. 2. வெள்ளீயம்; white lead.

*[குடு → குடில் → குடிலம்.]*

**குடிலம்**[3] *kuḍilam,* பெ.(n.) குதிரை நடைவகை (சுக்கிரநீதி,72); a pace of horse.

*[குடில் (வட்டம்) → குடிலகம்.]*

**குடிலை** *kuḍilai,* பெ.(n.) 1. மூலமந்திரமாகிய ஓங்காரம்; the mystic syllable Om; *"குடிலை யம்பொருட்கு" (கந்தபு. கடவுள்வா. 14).* 2. தூயமாயை (சி.போ.பா. 2:2, பக் 133, புதுப்.); pure māyā

*[குண்டலி → குடிலி.]*

குடிலை > வ. குட்டிலா (kutila)

குண்டலி, குடிலை என்னும் மெய்ப் பொருளியற் சொற்கட்கு வடமொழியில் வேர் மூலமில்லை.

"ஓங்காரத் துள்ளே யுதித்தவைம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே யுதித்த சராசரம்
ஓங்காரா தீதத் துயிர் மூன்று முற்றன
ஓங்கார சீவ பரமசிவ ரூபமே" (திருமந். 2677)

இத்திருமந்திரப்பாடல் பேருலகத் தோற்று வாய்க்குக் குடிலை என்னும் பெயர்த் தோற்றக் கரணியத்தை விளக்குகின்றது (வே.க. 162).

**குடிலைவாயு** *kuḍilai-vāyu,* பெ.(n.) விறகு கட்டுக்குள் மூஞ்சுறு உலாவுதல் போல் உடம்பில் வளைந்து வளைந்து ஓடும் ஒருவகை நாடி; alternative ascending and descending motion of pulses in the human body (சா.அக.).

*[குடிலை + வாயு.]*

**குடிவகைபாவி–த்தல்** *kuḍivagai-pāvi-,* 4 செ.கு.வி. (v.i.) குடித்துப் பழக்கப்படுத்தல்; taking to the habit of drinking (சா.அக.).

*[குடி + வகை + பாவி.]*

**குடிவருணி** *kuḍi-varuṇi,* பெ.(n.) செவ்விளநீர்; water of a red coloured tender co-conut (சா.அக.).

*[குடி + வருணி → வாரிணி (வார் + நீர்) → வருணி.]*

**குடிவா–தல், குடிவருதல்** *kuḍi-vā-,* 8 செ.கு.வி. (v.i.) குடியேறுதல்; to settle, take residence. *"மேவினன் குடிவர"* *(கந்தபு.கடவுள்.14).*

*[குடி + (வரு) வா.]*

**குடிவாங்கு[1]–தல்** *kuḍi-vāṅgu-,* 7 செ.கு.வி.(v.i.) இருப்பிடம் விட்டுப் பெயர்தல்; to remove, shift, abandon one's home, change place.

*[குடி + வாங்கு.]*

**குடிவாங்கு[2]–தல்** *kuḍi-vāṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) குடியிருத்தல்;to stay to reside. *"அடையவளைந் தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து"* *(ஈடு,1.3:9).*

*[குடி + வாங்கு.]*

**குடிவாரக்கம்** *kuḍi-vārakkam,* பெ.(n.) பயிர் செய்வோருக்குக் கொடுக்கும் விதை கூலி முதலியன; cultivation expenses. குடிவாரக் கமாய்க் குடிமேல் வைத்தெழுதி (சரவண. பணவிடு.138).

*[குடிவாரம் + (அஂகம் = தவசம்) அக்கம்.]*

**குடிவாரநிலம்** *kuḍi-vāra-nilam,* பெ.(n.) குடிகட்குப் பயிரிடும் உரிமையுள்ள நிலம்; land over which tenants have a vested right to cultivate.

*[குடி + வாரம் + நிலம்.]*

**குடிவாரம்** *kuḍi-vāram,* பெ.(n.) 1. நிலத்தை உழுது பயிரிடுவதற்குக் குடிகளுக்குரிய உரிமை; occupancy right, opp. to *mēlvāram.* 2. குடிவாரத்தில் குடியானவன் பங்குக்குரிய விளைபங்கு; the share of the produce to which a ryot having such right is entitled. opp, to *mēlvāram.*

*[குடி + வாரம். வாரம் = உரிமை.]*

**குடிவாழ்க்கை** *kuḍi-vāḻkkai,* பெ.(n.) 1. இல் வாழ்க்கை; domestic life. *"மாந்தர் குடிவாழ்க்கை ... சாந்தனையுஞ் சஞ்சலமே"* *(நல்வழி,28).* 2. குடும்ப ஆளுவம்; domestic economy, house-keeping. 3. வாழ்வின் ஒழுங்கு; life, mode or manner of life.

*[குடி + வாழ்க்கை.]*

**குடிவிட்டோடல்** *kuḍi-viṭṭōḍal,* பெ.(n.) நோய் உடம்பைவிட்டு வேரற நீங்கல்; to be completely or radically cured as in chronic disease (சா.அக.).

*[குடி + விட்டு + ஓடல்.]*

**குடிவிளங்குதல்** *kuḍi-viḷaṅgutal,* பெ.(n.) 1. குலம் முதலியன செழிக்கை; flourishing state of a family, the people of town, village, etc., 2. மக்கட்பேறு மிகுதியாதல்; increase of children.

*[குடி + விளங்குதல்.]*

**குடிவீடு** *kuḍi-vēḍu,* பெ.(n.) கருவின் மண்டை; the skull of a foetus (சா.அக.).

*[குடி + வீடு.]*

**குடிவெறி** *kuḍi-veṟi,* பெ.(n.) மது அருந்திய மயக்கம்; intoxication inebriety, drunkenness.

*[குடி + வெறி.]*

**குடிவை–த்தல்** *kuḍivai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வீட்டைக் குடிக்கூலிக்கு விடுதல்; to let a house for rent. 2. குடியை நிலைபெறச் செய்தல்; to settle or establish a family. *"அமரர் பதியினிய குடிவைத்தற் குற்ற"* *(திருப்பு.632).*

ம. குடிவய்க்குக

*[குடி + வை.]*

**குடினை** *kuḍiṉai,* பெ.(n.) குடிநற்கல்; a standard weight. *"குடினை எடைபொன் 30–ன் கழஞ்சு" (S.I.I.vii,400).*

*[குழல் → குழலை → குடினை.]*

**குடு** *kuḍu,* பெ.(n.) கள் (அக.நி.); toddy, fermented liquor.

*[குள் → குடு.]*

**குடுக்கம்** *kuḍukkam,* பெ.(n.) துணைத்தாளம் ஐந்தனுள் ஒன்று (பரத.தாள.3); a secondary time-beat, one of five *upa-tāḷam.*

*[குள் → குடு → குடுக்கு → குடுக்கம்.]*

**குடுக்கி** *kuḍukki,* பெ.(n.) காற்சட்டை; drawers; pants.

*[குள் → குடு (தைத்தல்) → குடுத்தம் → குடுத்தா → குடுக்கி]*

**குடுக்குக்குடுக்கெனல்** *kuḍukku-k-kuḍuk-keṉal,* பெ.(n.) ஓரொலிக்குறிப்பு (யாழ்.அக.); onom. expr. of rattling noise.

*[குடுக்கு + குடுக்கு + எனல்.]*

**குடுக்கை**[1] *kuḍukkai,* பெ.(n.) 1. தேங்காய் முதலிய வற்றாலான குடுவை; coconut or other hard shell used as a vessel. 2. துறவியின் கைப்பாத்திரம்; earthen or wooden pitcher of an ascetic. 3. இடக்கையென்னும் தோற்கருவி (சிலப்.3:27, உரை); a hand drum. 4. வீணையின் உறுப்பு; belly of a lute.

**ம.** குடிக்க; **க.** குடிகெ; **தெ.** குடக, குடுக; **து.** குட்கி, குட்கெ; **து.** குட்க்; **பட.**குடகெ.

*[குடு → குடுக்கை.]*

**குடுக்கை**[2] *kuḍukkai,* பெ.(n.)1. கஞ்சாக் குடுக்கை; the dried shell of a bottle gourd. 2. வாலையில் பயன்படுத்தும் ஒரு மண் ஏனம்; 3. பிடுக்கு; scrotum.

*[குடு → குடுக்கை = துளையுள்ள பொருள்.]*

வகைகள்: 1. சுரைக் குடுக்கை 2. தீக்குடுக்கை 3. தென்னங்குடுக்கை 4. வில்வக் குடுக்கை 5. வினாங் குடுக்கை 6. கஞ்சாக் குடுக்கை 7. புகைக் குடுக்கை (சா.அக.).

**குடுக்கை தாங்கி** *kuḍukkai-tāṅgi,* பெ.(n.) குடுக்கையை ஏந்தும் ஒரு கருவி; retort stand (சா.அக.).

*[குடுக்கை + தாங்கி.]*

**குடுகுடு**[1]**–த்தல்** *kuḍu-kuḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஒலித்தல்; to rumble, rattle. 2. விரைவுபடுதல்; to be in a great hurry.

**ம.** குடுகுடுக்குக

*[குடு + குடு.]*

**குடுகுடு**[2] *kuḍukuḍu,* பெ.(n.) மிக்க அகவை தளர்ந்த; of extreme old age, man or woman. 2. வயிற்றி ரைச்சல்; gurgling sound or rumbling noise of the stomach (சா.அக.).

*[குடு + குடு (நடுக்கம் குறித்த ஒலிக்குறிப்பு.]*

**குடுகுடுக்கை** *kuḍukuḍukkai,* பெ.(n.) கொப்பரைத் தேங்காய்; ripe coconut in which the kernel rattles.

*[குடு + குடுக்கை.]*

**குடுகுடுகிழவன்** *kuḍukuḍu-kiḻavaṉ,* பெ.(n.) தளர்ந்து தடுமாறி நடக்கும் கிழவன்; tottering decrepit old man.

*[குடுகுடு + கிழவன்.]*

**குடுகுடுத்தான்** *kuḍukuḍuttāṉ,* பெ.(n.) எப்போதும் எதிலும் விரைவாக இருப்பவன்; one who is always in a hurry.

*[குடுகுடு → குடுகுடுத்தான்.]*

**குடுகுடுப்பாண்டி** *kuḍukuḍu-p-pāṇḍi,* பெ.(n.) குடுகுடுப்பை அடித்துக் குறி கூறும் இரவலன்; professional beggar who goes about rattling a kuḍukuḍuppai and telling fortunes.

ம. குடுகுடுப்பாண்டி

*[குடுகுடுப்பை + ஆண்டி.]*

**குடுகுடுப்பு** *kuḍukuḍuppu,* பெ.(n.) பரபரப்பு; hurry, haste.

*[குடுகுடு → குடுகுடுப்பு.]*

**குடுகுடுப்பை**[1] *kuḍukuḍuppai,* பெ.(n.) 1. குடுகுடு என்று ஒலிக்கும் பொருள்; anything making a rattling sound. 2. குடுகுடுப்பாண்டி ஆட்டி யொலிக்கும் சிறிய உடுக்கை; a small tambourine. 2. பறவை யோட்டும் மரத்தட்டை; wodden clapper for scaring birds. 4. எப்பொழுதும் பரபரப்பாக இருப்பவன் (அவசரப்படுபவன்); a person who is always in a hurry. 5. கஞ்சாக் குடுக்கை; shell used as a raceptacle for bhang. 6. வறட்சி; dryness. தலை குடுகுடுப்பை பற்றியது.

*[குடுகுடு → குடுகுடுப்பை.]*

**குடுகுடுப்பை**[2] *kuḍukuḍuppai,* பெ.(n.) 1. குருக்கு; mexican poppy. 2. அதிகச் சுறுசுறுப்புள்ளவன்; one who is over busy. 3. ஒலிக்கும் சிறிய தோற்கருவி; a tiny musical drum.

*[குடுகுடு → குடுகுடுப்பை.]*

**குடுகுடுப்பைக்காரன்** *kuḍukuḍuppai-k-kāraṉ,* பெ.(n.) ***குடுகுடுப்பாண்டி*** பார்க்க (பரத.பாவ. 38. உரை.) ;see *kuḍukuḍu-p-paṇḍi.*

மறுவ. காலங்கொண்டாடி

*[குடுகுடுப்பை + காரன்.]*



குடுகுடுப்பைக்காரன்

**குடுகுடெனல்** *kuḍu-kuḍeṉal,* பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying gurgling, rattling sound. 2. விரைவுக் குறிப்பு; expr. signifying great haste.

*[குடு + குடு + எனல்.]*

**குடுசு** *kuḍušu,* பெ.(n.) தரையைத் தோண்டப் பயன்படும் கருவி; an instrument used to dig.

*[குடு + (குடம்) குடான் → குட்டுசு → குடுசு. (மண்வெட்டி போன்றது).]*

**குடுத்தா** *kuḍuttā,* பெ.(n.) ***குடுத்துணி*** பார்க்க; see *kuḍuttuṇi.*

U. kurtā.

*[குள் → குட்டு (தைத்தல்) குடு + துணி – குடுத்துணி → குடுத்தா (கொ.வ.).]*

**குடுத்துணி** *kuḍuttuṇi,* பெ.(n.) அரைக்கைச் சட்டை; half arm jacket, shirt without sleeves.

ம. குடுத்துணி

*[குள் → குட்டு (தைத்தல்) → குடு + துணி → குடுத்துணி தெ. குட்டு = தைத்தல்.]*

**குடுப்பம்** *kuḍuppam,* பெ.(n.) நான்கு பலமுள்ள அளவு (தைலவ.தைல.59); a dry measure of capacity - 4 palams.

*[குள் → குடு → குடுப்பம்.]*

**குடுப்புக்கார்** *kuḍuppu-k-kār,* பெ.(n.) கார்நெல் வகை; a kind of paddy.

*[குடுப்பு + கார்.]*

**குடும்பச்சுமை** *kuḍumba-c-cumai,* பெ.(n.) குடும்பத்தைத் தாங்கும் பொறுப்பு; burden or responsibility of a family.

*[குடும்பம் + சுமை.]*

**குடும்பத்தானம்** *kuḍumba-t-tāṉam,* பெ.(n.) ஓரைச் சக்கரத்தில் குடும்பத்தின் நிலைமையை உணர்த்துவதும் பிறப்பு ஓரைக்கு இரண்டாவதும் ஆகிய

இடம்; second house from the ascendant indicating the condition of one's family.

*[குடும்பம் + தானம்.]*

**குடும்பபாரம்** *kuḍumba-pāram,* பெ.(n.) குடும்பத்தைத் தாங்கும் பொறுப்பு; burden or responsibility of a family. *"இவரொடு நெடுநாட் டங்கினன் குடும்பபாரத்தில்" (ஞானவா.சித்த.20).*

*[குடும்பம் + பாரம்.]*

**குடும்பம்** *kuḍumbam,* பெ.(n.) 1. கணவனும் மனைவி மக்களும் சேர்ந்த கூட்டம், குடும்ப அமைப்பு; household, family including husband, wife and children. *"குடும்பத்தைக் குற்ற மறைப்பான்" (குறள்,1029).* 2. உறவினர்;relatives. *"குடும்பந் தாங்குங் குடிப்பிறந்தாரினே" (கம்பரா.சேதுப.53).* 3. குலம்; caste, family. அவன் என் குடும்பத்தைச் சார்ந்தவன் (உ.வ.). 4. மனைவி; wife. *"பாகத்தார் குடும்ப நீக்கி" (சீவக.1437).*

*[குடும்பு → குடும்பம்.]*

**Skt.** kuṭumba.

**குடும்பன்**[1] *kuḍumbaṉ,* பெ.(n.) 1. குடும்பத் தலைவன்; head of a family. 2. இல்வாழ்வோன், குடும்பத்தான் (சமுசாரி); house holder. *"ஏழைக் குடும்ப னாகி" (தாயு.தேசோ.4).* 3. பள்ளர் தலைவன் (வின்.); headman of the Paḷḷa caste.

*[குடும்பு → குடும்பம் → குடும்பன்.]*

**குடும்பன்**[2] *kuḍumpaṉ,* பெ.(n.)ஊரில் சாகுபடியான நிலங்களை அளப்பவன்; the person who measures the extent of land under cultivation in a village.

*[குடு → குடும்பு + அன்.]*

**குடும்பாண்டி** *kuḍumpāṇḍi,* பெ.(n.) வீடுதோறும் மணியடித்துக் கொண்டு வழிவழியாகவே (பரம்பரையாகவே) பிச்சை யெடுத்து வாழ்பவன்; professional beggar who legs from house to house ringing a bell.

*[குடும்பு + ஆண்டி.]*

**குடும்பி** *kuḍumbi,* பெ.(n.) இல்வாழ்வோன்; householder, head of a large family. *"குடும்பியெனும் குறிப்பை மாற்றி" (ஞானவா.உற்ப.69).*

*[குடும்பு → குடும்பி.]*

**குடும்பினி** *kuḍumbiṉi,* பெ.(n.) மனைவி (பிங்.); wife.

*[குடும்பு → குடும்பினி.]*

**குடும்பு**[1] *kuḍumbu,* பெ.(n.) 1. பல குடும்பங்கள் சேர்ந்த கூட்டம்; assembly of families. 2. ஊரின் உட்பிரிவு வட்டம், தொகுதி; a ward of a village or area, division. *"இவ்வாட்டை குடும்புவாரிய பெருமக்களும்" (தெ.கல்.தொ.19,கல்.179).*

*[குழும்பு → குடும்பு.]*

**குடும்பு**[2] *kuḍumbu,* பெ.(n.) 1. பூங்கொத்து; bunch of flowers. 2. காய்க்குலை; bunch of fruits (சா.அக.).

*[குழும்பு → குடும்பு.]*

**குடும்பு**[3] *kuḍumbu,* பெ.(n.) பண்டைய நகரமைப்பில் 80 சதுர கயிறு பரப்பளவு கொண்ட நிலப்பரப்பு (மயமதம்.அத்.9); an area measure of 80 square *kayiṟu,* inancient tour planning.

*[குடும்பு→ குடும்பம் (ஒரு குடும்பம் பயிர் செய்து வாழ்வதற்குப் போதுமானதாகக் கருதப்பட்ட உழவு நிலத்தின் பரப்பளவு).]*

**பண்டைய அளவைகள்:**

**நீட்டலளவு:**

கோல்(சிறு கோல், தச்சுமுழம்) = 2 ¾ அடி.

8 கோல் = I கயிறு (22 அடி)

**பரப்பளவு:**

8 கோல் (சிறுகோல்) = I காணி (8 கோல் சதுரம்)

= 22 X 22 = 484 ச.அடி.

4 காணி = I மாடம் (மாஷம்)

=88 X 22 = 1936 ச.அடி.

4 மாடம் = I பத்தி (வர்த்தனம்) - 88 X 88

= 7744 ச.அடி.

5 பத்தி = I பாடகம் (வாடிகை) = 88 X 440

=38,720 ச.அடி.

4 பாடகம் = 1 குடும்பு - 352 X 440

= 1,54,880 ச.அடி

90காணி = 1 ஏக்கர் (48, 560 ச.அடி)

320 காணி = 1 குடும்பு (3.5 ஏக்கர்)

**குடுமி**[1] *kuḍumi*, பெ.(n.) 1. ஆண்மக்களது மயிர் (திவா.); tuft of hair, especially of men. 2. மலை யுச்சி; summit or peak, of a mountain. *"வடவரைக் குடுமி" (கம்பரா.திருவவ.8).* 3. மாடத்தின் உச்சி; top of a building. *"புயறொடு குடுமி.... மாடத்து" (கம்பரா.நகர.4).* 4. தலையுச்சி; crown of the head. *"குடுமிக் கூந்தலிற் நறுநெய் பெய்து" (இறை.1, உரை).* 5. உச்சிக்கொண்டை; bird's crest. *"குடுமிக்கூகை" (மதுரைக்.170).* 6. நுனி; tip, end. *"குடுமிக் கூர்ங்கல்" (அகநா.5).* 7. தலையிற் சூடும் அணிகலன் (கிரீடம்); crown, diadem. *"குடுமி கொண்ட மண்ணு மங்கலம்" (தொல்.பொருள்.68).* 8. கதவின் குடுமி; projecting corners on which a door swings. *"தேயத் திரிந்த குடுமியவே" (பெருந்தொ.603).* 9. மேழிக்குடுமி; handle of a plough. 10. முதுகுடுமிப் பெருவழுதி என்ற பாண்டியன்; name of a Paṇḍia king. *"குடுமிக் கோமாற் கண்டு" (புறநா.64).* 11. முடிபு; determination, resolve. *"அவன் கொண்ட குடுமித்து" (புறநா.32:10).* 12. வெற்றி (பிங்.); victory, success.

ம. குடும

*[குடு - குடுமி]*

**குடுமி**[2] *kuḍumi*, பெ.(n.) பாம்பாட்டி; snake charmer and dealer in antidotes for snake-bite.

*[குட → குடு → குடுமி]*

**குடுமி**[3] *kuḍumi*, பெ.(n.) வில்; bow.

*[கொடு → குடு + குடுமி]*

**குடுமிக்கதவு** *kuḍumi-k-kadavu*, பெ.(n.) கீலின்றிக் கீழும் மேலும் உள்ள முனைகளால் ஆடி அடைக்கவும் திறக்கவும் பெறுங் கதவு; door that turns on projecting corners instead of hinges.

*[குடுமி + கதவு]*

**குடுமிக்கலியாணம்** *kuḍumi-k-kaliyāṇam*, பெ.(n.) குடுமி வைக்கும் திருமணச்சடங்கு; tonsure or tuft-providing ceremony of Hindus.

*[குடுமி + கலியாணம்.]*

**குடுமிக்காரன்** *kuḍumi-k-kāraṉ*, பெ.(n.) குடுமி மயிர் மிகுதியுள்ளவன்; one who has a luxuriant growth of hair on the head, as actors.

*[குடுமி + காரன்.]*

**குடுமிக்குயவன்** *kuḍumi-k-kuyavaṉ*, பெ.(n.) குயவர் தலைவன்; chief of potters.

*[குடுமி + குயவன்.]*

**குடுமிக்கூந்தல்** *kuḍumi-k-kūndal*, பெ.(n.) உச்சிக் கூந்தல்; hair on the crown of the head. *"குடுமிக் கூந்தலில் நறுநெய் பெய்து" (இறை.1,உரை.).*

*[குடுமி + கூந்தல்.]*

**குடுமிகளை-தல்** *kuḍumi-kaḷai-*, 3 செ.கு.வி.(v.i.) தலைமயிர் நீக்குதல்; to shave, as in caulam. *"குடுமி களைந்த நுதல்" (புறநா.77:2).* 2. மயிர்ச் சிகையைக் கூட்டி முடித்தல்; to dress and tie the kuḍumi. *"குடுமி களைந்தானெங் கோ" (பு.வெ.9:21).*

*[குடுமி + களை-.]*

**குடுமிகொள்(ளு)-தல்** *kuḍumi-koḷ(ḷu)-*, 7 செ.குன்றாவி. (v.t.) வெல்லுதல்; lit., to hold in check by forelock, to win, conquer *"புத்திசேனன்..... மன்னரைக் குடுமி கொண்டான்" (சீவக.2249).*

*[குடுமி + கொள்(ளு).]*

**குடுமிதட்டு-தல்** *kuḍumi-taṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. சண்டைக்கு அணியமாதல்; make oneself ready for starting a fight. 2. அளக்கும்போது மரக்காலின் தலையிடத்துள்ள தவசத்தைத் தட்டி வழித்தல்; to strike off the top in measuring grain.

*[குடுமி + தட்டு.]*

**குடுமிப்பருந்து** *kuḍumi-p-parundu,* பெ.(n.) உச்சிச் சூட்டுடைய ஒருவகைப் பருந்து (யாழ்ப்.); Ceylonese crested falcon.

*[குடுமி + பருந்து.]*

**குடுமியன்** *kuḍumiyaṉ,* பெ.(n.) பார்க்க ***குடுமிப்பருந்து*** பார்க்க; see *kuḍumi-p-parundu.*

*[குடுமி → குடுமியன்.]*

**குடுமியைப்பிடி-த்தல்** *kuḍumiyai-p-piḍi-,* 4 செ.கு.வி.(v.i.) சண்டையிடுதல்; to quarrel, as by grappling another's hair tuft.

*[குடுமியை + பிடி]*

**குடுமியை முடிந்துவிடு-தல்** *kuḍumiyai-mudindu-vidu-* 18 செ.குன்றா.வி.(v.t.) சண்டை மூட்டுதல்; to create a quarrel between two persons, as by tying their kuḍumi together; to set persons by the ear or at logger heads.

*[குடுமியை + முடிந்து + விடு.]*

**குடுமிவாங்கு[1]-தல்** *kuḍumi-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) தெய்வத்திற்கு நேர்ந்து கொண்ட முடியை எடுத்தல்; to have a complete shave of the head in fulfilment of a vow.

*[குடுமி + வாங்கு.]*

**குடுமிவாங்கு[2]-தல்** *kūḍumi-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அவமதித்தல்; to disgrace, divest one of office and power, as causing the removal of the kudumi.

*[குடுமி + வாங்கு.]*

**குடுமிவை-த்தல்** *kuḍumi-vai-,* 4 செ.கு.வி. (v.i.) குழந்தைக்குத் தலையணி சூட்டுமுன்னர் நடத்தும் ஒருவித மயிர் நீக்கும் சடங்கு; to perform the ceremony of providing a child with a tuft of hair on the crown after tonsure.

*[குடுமி + வை.]*

**குடுவிச்சு** *kuḍu-viccu,* பெ.(n.) 1. தேங்காய்; coconut. 2. பாளைச்செடி; any plant or tree with spathe(சா.அக.).

*[குடு + விச்சு.]*

**குடுவை[1]** *kuḍuvai,* பெ.(n.) 1. வாய்குறுகிய குண்டு ஏனம் (திவா); vessel with a small narrow mouth. 2. கமண்டலம்; pitcher of an ascetic. *"குடுவைச் செங்கையினானை" (கந்தபு.அயனைச் சிறைநீக்.9).* 3. கள்ளிறக்கும் சிறுகலசம்; small pot used in collecting palmyra juice or toddy. *"குடுவையிற் றென்னங் கள்ளும்" (குற்றா.குற.118:3).*

*[குள் → குடு → குடுவை.]*

**குடுவை[2]** *kuḍuvai,* பெ.(n.) இரண்டு அல்லது மூன்று சாக்கி பெற்றுள்ள ஓர் ஆட்டக்காரன் தான் கேள்வி கேளாமலிருந்து கேட்டவற்கு உதவிபுரிந்து விளையாடும் ஒருவகைச் சீட்டாட்டம்; a game at cards in which a player having two or more jacks is prohibited from bidding, but is given the option of assisting the bidder or remaining passive.

*[கொடு → குடுவை.]*

**குடுவைப்பறி** *kuḍuvai-p-pari,* பெ.(n.) மருந்திடு மட்பாண்டம்; a small earthern pot used for securing medicine, for purposes of calcination (சா.அக.).

*[குட → குடுவை + பறி.]*

**குடுவைப்பொறையிடு-தல்** *kuḍuvai-p-poraiyḍu,* 20 செ.கு.வி.(v.i.) குடோரியாடி குடுவை வைத்தல்; a treatment consisting in the abstraction with the aid of a cupping glass (சா.அக.).

*[குடுவை + பொறையிடு.]*

இது உடம்பினின்று அரத்தத்தை எடுக்கச் செய்ய வேண்டி செய்யும், மருத்துவமுறை.

**குடூசி** *kuḍūsi,* பெ.(n.) சீந்திற்கொடி; moon creeper (சா.அக.).

*[குள் → குடுச்சி – குடூசி]*

**குடை[1]–தல்** *kuḍai-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. கிண்டுதல்; to work through, as bees in gathering honey from flowers. *"குடைந்து வண்டுன் ணுந் துழாய் முடியானை" (திவ். திருவாய்.1.7,1).* 2. துளைத்தல்; to scoop, hollow out, to bore with a tool; to perforate, to make holes, as beetles in wood. வண்டு உத்திரத்தைக் குடைந்துவிட்டது (உ.வ.). 3. கடைதல்; to churn. *"நெய்குடை தயிரின்" (பரிபா.16:3).* 4. குடைந்தாற்போல்; to worry, harass, trouble. அவன் என்னைக் குடைகிறான் (உ.வ.). 5. வேண்டாதவற்றில் தலையிடுதல்; to meddle, interfere. ஏன் இந்தச் செய்தியிற் குடைந்து கொண்டிருக்கிறாய்? (உ.வ.). 6. துருவுதல்; to search through and through. புத்தகமெல்லாம் குடைந்து பார்க்கிறான் (உ.வ.).

ம. குடயுக; **க.** கொடபு, கொடவு; **து.** குட்புனி; **கோத.** கெட்வ்; **துட.** க்விட்ய்; **குட.** கொட, கொடக்; **பட.** கொடெ.

*[குள் → குழை → குடை.]*

**குடை[2]–தல்** *kuḍai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. உட்புகுதல்; to work one's way, penetrate. *"குடைந்துல கனைத்தையும் நாடும்" (கம்பரா. உருக்காட்.23).* 2. நீரில் மூழ்குதல்; to dive, bathe, plunge in water. *"குடைந்து நீராடு மாதர்" (கம்பரா.நீர்வி.12).* 3. உளைவு நோவெடுத்தல்; to pain, as the ear, the leg. கால் குடைகிறது (உ.வ.).

*[குழை → குடை → குடைதல்.] (வேக.193).*

**குடை[3]** *kuḍai,* பெ.(n.) 1. கவிகை; umbrella, parasol, canopy. *"குடைநிழன் மரபு" (தொல். பொருள்.91).* 2. அரசாட்சி; government. *"குடையுங் கோலும் பிழைத்தவோ" (சிலப்.27,77).* 3. குடைக் கூத்து; a dance of skanda *"குடைவீழ்த் தவர்மு னாடிய குடையும்" (சிலப்:6,53).* 4. பாதக்குறட்டின் குமிழ் (சூடா.); knob in sandals. 5. நீர் முதலியன வுண்ணும் ஒலைப்பட்டை; ōla basket for eating and drinking from. *"வேணீருண்ட குடையோ ரன்னர்" (கலித்.23).* 6. குடைவேல்; umbrella thorn babul. 7. உள்ளிடம் குடைவுபட்ட பொருள்; anything hollow.

ம.குட; **க.,** பட., **து.,** குட. கொடெ; **தெ.** கொடுகு; **துட.** க்வாட்; **கோத.**கொட்.

**Skt.** uttūṭa; **Sinh.** kuṭe.

*[குள் → குடு →குடை.]*

**குடை[3]–தல்** *kuḍai-,* 4 செ.குன்றாவி.(v.t.) அராவுதல்; to file, grate. *"அரங்குடைந்த அயில்" (கம்பரா. கும்பகர்.22).*

*[குள் → குடு → குடை.]*

**குடைக்கல்** *kudai-k-kal,* பெ.(n.) 1. கல்லறையின் மூடுகல்(M.M.); ortholithic stone with a wide cross slab used for covering graves. 2. ஊறவைத்த அரிசி, பருப்புப் போன்றவற்றை அறைக்குங்கல்; grinder.

ம.குடக்கல்லு

*[குடை + கல்.]*

**குடைக்காம்பு** *kuḍai-k-kāmbu,* பெ.(n.) 1. குடை யின் கைப்பிடி; handle of an umbrella. 2. குடை யின் நடுவில் அமைந்த நீண்ட தண்டு;the central shaft of an umbrella.

ம. குடக்கால்

*[குடை + காம்பு.]*

**குடைக்காளான்** *kuḍai-k-kāḷāṉ,* பெ.(n.) நாய்க் குடை; mushroom, as umbrella shaped.

*[குடை + காளான்.]*

**குடைக்கிழங்கு** *kuḍai-k-kiḻaṅgu,* பெ.(n.) சிற்றரத்தை (மலை.); lesser galangal.

*[குடை + கிழங்கு.]*

**குடைக்கூத்து** *kudai-k-küttu,* பெ.(n.) தன்னொடு பொருத அசுரர் பின்வாங்கித் தம் ஆய்தங்களைக் கீழே போட்ட காலத்துக் குடையைச் சாய்த்து அதனையே திரையாகக் கொண்டு ஆடிய முருகனாடல் (சிலப்.6,53,20); Skanda's dance with an umbrella, when the Asuras unable to withstand his furious onslaught threw down their weapons and beat a retreal one of 11 *küttu.*

ம. குடக்கூத்து

*[குடை + கூத்து.]*

**குடைக்கொள்¹(ளு)-தல்** *kudai-k-kollu-,* 16 செ.கு.வி. (v.i.) மேலெழுதல்; to overflow, as milk, to come to the surface, as some cakes in frying, to be pushed up as a cloth in water.

*[குடை + கொள்ளு-.]*

**குடைக்கொள்²(ளு)-தல்** *kudai-k-kol(lu)-,* 16 செ.கு.வி. (v.i.) குடஞ்சாய்தல்(யாழ்ப்.); to capsize, to be upset, as a cart (J).

*[குடை + கொள்.]*

**குடைகரி** *kudai-kari,* பெ.(n.) பொன்னுருக்கும் கரிக்குகை; piece of charcoal bored into a cup for melting small nuggets of gold or silver. *"படரிருட்குழாங் குடைகரியா..... என் பொன்னை யுருக்குமாறு" (பெருந்தொ.1278).*

*[குடை + கரி.]*

**குடைகல்** *kudai-kal,* பெ.(n.) ஆட்டுக்கல்; grinding stone.

*[குடை + கல்.]*

**குடைகவிழ்-தல்** *kudai-kavil-,* 2 செ.கு.வி.(v.i.) வண்டி குடங்கவிழ்தல்; to be upset, as a cart; to be overturned; to tip over.

*[குடை + கவிழ்.]*

**குடைச்சல்** *kudaiccal,* பெ.(n.) ஊதையால் உண்டாகும் குடைச்சல் நோவு (தைலவ.தைல.15); neuralgia, gnawing pain.

*[குள் → குடை → குடைதல் → குடைச்சல்.]*

**குடைச்சூல்** *kudai-c-cül,* பெ.(n.) 1. சிலம்பு; anklet. *"அவ்வரிக் குடைச்சூல்" (பதிற்றுப்.68.18).* 2. உள்ளிடம் குடைவுபடுகை; the state of being hollow. *"குடைச்சூற் சித்திரச் சிலம்பின்" (சிலப். 16:118).*

*[குடை + சூல். சிலம்பு, குடைச்சூல். உட் கருப்பம் உடைமை பற்றி இப் பெயர் பெறுவதாயிற்று. குடைச்சூல் – குடை படுதலென்பாருமுளர் என்பர் அடியார்க்கு நல்லார். நற்.90:48, உரை.]*

**குடைச்செலவு** *kudai-c-celavu,* பெ.(n.) எதிர்த்து வந்த பகையைத் தடுத்துக் காக்கச் செல்லுமுன் தன் கொற்றக் கொடையை நல்வேளையிற் புறவீடுவிடும் காஞ்சித்திணைத் துறை (பு.வெ.4:8) (Purap.); theme of a kind sending the royal umbrella in advance in an auspicious hour, before he actually sets out to defend his territory from an advancing enemy.

*[குடை + செலவு.]*

**குடைச்செவி** *kudai-c-cevi,* பெ.(n.) வெகுளி முதலிய கரணியத்தால் வளைவுபட்ட விலங்கு களின் செவி; ears pricked up and bent, forward as those of an elephant, tiger, horse in surprise or rage.

*[குடை + செவி.]*

**குடைந்தாடு-தல்** *kudaintādu-,* 5 செ.கு.வி.(v.i.) அமிழ்ந்து நீராடுதல்; to bathe by immersion. *"புனல் குடைந்தாடினோ மாயின்" (சிலப்.24, பாட்டுமடை.).*

*[குடைந்து + ஆடு.]*

**குடைநாட்கோள்** *kudai-nāt-köl,* பெ.(n.) பகை யரணைக் கொள்ள நினைந்து மேற்சென்ற வேந்தன்

தன் குடையை நல்வேளையிற் புறவீடு விடும் உழிஞைத்துறை (பு.வெ.6:2); theme of a king sending the royal umbrella in advance in an auspicious hour, before he actually sets out to capture his enemy's fortress.

*[குடை + நாள் + கோள்.]*

**குடைநிலை** *kuḍai-nilai,* பெ.(n.) பகைமேற்செல்லும் அரசன் தன் குடையை நல்வேளையிற் புறவீடு விடும் வஞ்சித்திணைத் துறை (பு.வெ.3:3); theme of a king sending the royal umbrella in advance in an auspicious hour, before he actually sets out on an expedition.

*[குடை + நிலை.]*

**குடைநிலைவஞ்சி** *kuḍai-nilai-vañji,* பெ.(n.) குடைநிலை பார்க்க; see *kuḍai-nilai.*

*[குடை + நிலை + வஞ்சி.]*

குடைநாட்கோள் தொப்பியத்து உழிஞைத் திணையிற் கூறி இருப்ப, வெண்பாமாலையில் வஞ்சி, உழிஞை என்னும் இருதிணைக் கண்ணும் கூறப்பட்டுள்ளது. இளங்கோ வடிகள் வஞ்சியிற் குடைநிலை கூறியது பன்னிரு படத்தைத் தழுவிய தாகும் (சிலப்.25: 141, உரை).

**குடைநிழல்** *kuḍai-niḻal,* பெ.(n.) மன்னனது ஆட்சி; reign of a king. *"கடனறி மன்னர் குடைநிழற் போலப்" (நற்.146:4).*

*[குடை + நிழல்.]*

**குடைநிழற்றல்** *kuḍainiḻaṟṟal,* பெ.(n.) உலகைக் காத்தல்; save the world. 2. குடைபிடித்தல் (கழ.அக.) (கழ.தமி.அக.).

*[குடை + நிழற்றல்.]*

**குடைநீழல்** *kudai-nīḻal,* பெ.(n.) **குடை நிழல்** பார்க்க; see *kuḍai-niḻal. "எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல்" (கலித்.9:1).*

*[குடை + (நிழல்) நீழல்.]*

**குடைப்பனை** *kuḍai-p-paṉai,* பெ.(n.) தாளிப்பனை; talipot palm.

**ம.** குடப்பன

*[குடை + பனை.]*

**குடைப்புல்** *kuḍai-p-pul,* பெ.(n.) மயிற்கொண்டைப் புல்; trail grass.

*[குடை + புல்.]*

**குடைப்பூ** *kuḍai-p-pū,* பெ.(n.) குடையைப் போன்ற பூ; flower of fulge tragacanth tree. *"புல்லிதழ் கோங்கின் மெல்லிதழ்க் குடைப்பூ" (நற்.48:3).*

*[குடை + பூ.]*

**குடைமங்கலம்** *kuḍai-maṅgalam,* பெ.(n.) நான்கு திக்கும் புகழ்மிக வீற்றிருந்த அரசனது குடையைப் புகழ்ந்து கூறும் பாடாண்டுறை (பு.வெ.9:34); theme of eulogizing the state umbrella of a king whose fame has spread far and wide.

*[குடை + மங்கலம்.]*

**குடைமிளகாய்** *kuḍai-miḷagāy,* பெ.(n.) காப்பிரி மிளகாய்(L.); bell-pepper.

*[குடை + மிளகு + காய்.]*

**குடைமுல்லை** *kuḍai-mullai,* பெ.(n.) போரில் வெற்றி கொண்ட அரசனது குடையைப் புகழ்ந்து கூறும் வாகைத்துறை (பு.வெ.8:28); theme of eulogizing the state umbrella of a king who returned from battle laden with victory.

*[குடை + முல்லை.]*

**குடைமேற்குடை** *kuḍai-mēṟ-kuḍai,* பெ.(n.) மாட்டுச்சுழிவகை; a curl mark on cattle.

*[குடை + மேல்குடை.]*

**குடையடி—த்தல்** *kudai-y-adi-*, 4 செ.கு.வி.(v.i.) பார்க்க ***குடங்கவிழ்தல்.*** see *kudań-kavil-*.

*[குடை + அடி.]*

**குடையாணி** *kudai-y-āṇi,* பெ.(n.) 1. உருண்டையான தலையுடைய ஆணி; pin or nail with round head. 2. கோயிற் குடையிற் செருகும் ஆணி; large pin used to keep a temple umbrella open.

**ம.** குடயாணி

*[குடை + ஆணி.]*

**குடையோலை** *kudai-y-ōlai,* பெ.(n.) எளிய மக்களின் உண் கலமான ஓலைப்பட்டை (திவா.); *ōla* basket out of which low-caste people eat and drink.

*[குடை + ஓலை.]*

**குடைவண்டு** *kudai-vandu,* பெ.(n.) துளைக்கும் வண்டு வகை; perforating bettle, borer.

*[குடை + வண்டு.]*

**குடைவிருத்தி** *kudai-virutti,* பெ.(n.) திருவிழாக் காலங்களில் தெய்வங்கட்குக் குடை பிடிப்பதற்காக ஏற்பட்ட முற்றூட்டு; grant of land for holding the ornamental umbrella over the village deity during festivals.

**ம.** குடவிருத்தி

*[குடை + விருத்தி.]*

**குடைவு** *kudaivu,* பெ.(n.) 1. பொந்து; hollow. 2. குகை; cavity.

*[குள் → குடை → குடைவு.]*

**குடைவேல்** *kudai-vēl,* பெ.(n.) 1. குடைவேல்மரம் (திவா.); umbrella thorn babul. 2. நீருடை மரம்; buffalo thorn cutch.

*[குடை + வேல்.]*

**குடோரம்** *kudōram,* பெ.(n.) கடூரம் (யாழ்.அக.); harshness, cruelty.

*[கடு → கடூரம் → குடோரம் (கொ.வ.).]*

**குடோரி** *kudōri,* பெ.(n.) 1. கீறுகை; slitting, scratching. 2. பாம்புக்கடி முதலியவற்றால் நின்றுபோன உயிர்ப்பு மீளுதற்கு மண்டையைக் கீறி மருந்து இடுகை; scarifying the skin of the skull and inserting mercurial or other medicinal pill to revive suspended animation. 3. வங்கமணல்; lead ore. 4. வெங்காரம்; borax. 5. வெள்ளைச் செய்நஞ்சு; a prepared arsenic.

*[கீள் → கீறு → குடுரி → குடோரி.]*

**குடோரியாடு—தல்** *kudōri-y-ādu-,* 5 செ.கு.வி.(v.i.) ***குடோரிவைத்தல்*** பார்க்க; see *kudōri-vai-,*

*[குடோரி → ஆடு.]*

**குடோரிவை—த்தல்** *kudōri-vai-,* 4 செ.கு.வி.(v.i.) மண்டையைக் கீறி மருந்து; to perform the *kudōri* operation.

*[குடோரி + வை-.]*

**குண்டக்கணிகை** *kunda-k-kaṇigai,* பெ.(n.) கற்பழிந்து வேசையானவள் (சிலப்.10:219,உரை.); prostitute.

*[குண்டு (முழுமை) → குண்ட + கணிகை.]*

**குண்டக்கம்** *kundakkam,* பெ.(n.) 1. குறளைச் சொல்; slander, calumny. 2. வஞ்சனை (யாழ்.அக.); fraud, duplicity. 3. வளைவு; bend.

*[குள் → குண்டு → குண்டகம் → குண்டக்கம்.]*

**குண்டக்கமண்டக்கம்** *kundakka-mandakkam,* பெ.(n) சுருண்டு கிடக்கும் நிலை(இ.வ.); state of lying down in a crooked manner. குண்டக்க மண்டக்கமாய்க் கிடக்கிறது (உ.வ.).

ம. குண்டக்க மண்டக்கம்

*[குண்டலமண்டலம் = சுருண்டு வளைதல். குண்டலமண்டலம் → குண்டக்க மண்டக்கம்.]*

ஒருவன் சுருண்டு கிடக்கும் நிலை குண்டக்க மண்டக்கம் எனவும், ஒருவனைத் தலையும், காலும் சுருட்டிச் சேர்த்துக் கட்டும் வகை குண்டுக்கட்டு என்றும் சொல்லப்படும் (வே.க.157).

**குண்டக்காய்ச்சி** *kuṇḍa-k-kāycci,* பெ.(n.) பானையைப் போல் காய்க்கும் ஒருவகைத் தேங்காய்; a species of rounding cocoanut resemble a pot (சா.அக.).

*[குண்டு → குண்ட → காய்ச்சி.]*

**குண்டக்கிரியை** *kuṇḍa-k-kiriyai,* பெ.(n.) ஒருவகைப் பண் (இராகம்) (பரத.இராக.56); a specific melody-type.

*[குண்டம் + கிரியை.]*

**குண்டகம்** *kuṇḍagam,* பெ.(n.) மண்பறிக்குங் கருவிவகை; garden hoe, scuffler.

தெ. குண்டக

*[குள் → குண்டு → குண்டகம்.]*

**குண்டகன்** *kuṇḍagaṉ,* பெ.(n.) கள்ளக் கணவனுக்குப் பிறந்தவன் (திவா.); son born in adultery, bastard of an adulteress.

*[குண்டு → குண்டகன்.]*

**குண்டஞ்சு** *kuṇḍañju,* பெ.(n.) கரைக்கோடு அமைந்த ஆடவர் உடுக்கும் ஆடைவகை; a kind of cloth with fine border worn by men.

*[கண்டு → குண்டு + அஞ்சு (கரை).]*

**குண்டடி-த்தல்** *kuṇḍaḍi,* 4செ.கு.வி.(v.i.) 1. கோலி, இரும்புக்குண்டு முதலியவற்றால் விளையாடுதல்; to play with marbles, small metal ballsh etc., 2. பங்கியடித்தல்; to take in bhang. 3. தேர்வு முதலியவற்றில் தவறுதல்(வின்.);to fail, as in an examination. தேர்வில் அடிக்கடிக் குண்டடிக் கிறான்.

*[குண்டு + அடி.]*

**குண்டடிகாயம்** *kuṇḍaḍi-kāyam,* பெ.(n.) 1. துப்பாக்கியினாற் சுட்ட காயம்; gun shot wound. 2. நோய் கொண்ட பெண்ணைப் புணருவதா லேற்படும் அரையாப்புக் கட்டி; a veneral bubo of the groins as a result of veneral or syphilitis contact (சா.அக.).

*[குண்டடி + காயம்.]*

**குண்டடியன்** *kuṇḍaḍiyaṉ,* பெ.(n.) ஆண்சிறுத்தைப் புலி(வின்.); male hunting leopard.

*[குண்டு + அடியன்.]*

**குண்டடுப்பு** *kuṇḍaḍuppu,* பெ.(n.) ஒருவகைக் குழியடுப்பு (இந்துபாக.); earthern oven like a pit, with a side opening for putting in fuel.

ம. குண்டடுப்பு

*[குண்டு + அடுப்பு.]*



குண்டடுப்பு

**குண்டணி** *kuṇḍaṇi,* பெ.(n.) குறளைச் சொல்; slander, calumny.

மறுவ. கோள் சொல்லுதல்

ம. குண்டனி; க. கொண்டெய, கொண்டெ, கொண்டெக; தெ. கொண்டெமு.

*[குண்டு → குண்டணி.]*

**குண்டப்பணிவிடை** *kuṇḍa-p-paṇiviḍai,* பெ.(n.) கீழ்த்தரமான ஊழியம்; menial service.

*[குண்டம் + பணிவிடை.]*

**குண்டம்[1]** *kuṇḍam,* பெ.(n.) பன்றி; pig.

*[குண் → குண்டு → குண்டம்.]*

**குண்டம்[2]** *kuṇḍam,* பெ.(n.) குளம்; tank. "சோம குண்டம் சூரிய குண்டம் துறை மூழ்கி (சிலப்.9:64).

**தெ.** குண்ட

*[குள → குண்டு → குண்டம்.]*

**குண்டம்[3]** *kuṇḍam,* பெ.(n.) 1. வேள்விப்பள்ளம் (ஓமகுண்டம்); hollow in the ground for the sacred fire of the Hindus. *"மறையவன் குண்ட முறைமுறை வாய்ப்ப" ( கல்லா.94:12).* 2. குழி; deep cavity, pit. 3. வாவி (திவா.); pool, tank. 4. குடுவை (திவா.); small hollow vessel with a narrow mouth. 5. பானை (பிங்.); pot. 6. கற்பழிந்து வேசையானவள் (சிலப்.10:219, உரை); unchaste woman.

**ம.** குண்டம்; **க.** குண்ட, குண்டெ; **தெ.** குண்ட, குண்ட; **து.** குண்ட; **குட.,** **பட.** குண்டி; **பர்.** குட்ட.

*[குண்டு → குண்டம்.]*

**குண்டம்பாய்—தல்** *kuṇḍam-pāy-,* 2 செ.கு.வி.(v.i.) நேர்ந்துகொண்டு தீக்குழியில் நடத்தல்; to walk on fire in fulfilment of a vow.

*[குண்டம் + பாய்-.]*

**குண்டரம்** *kuṇḍaram,* பெ.(n.) திரட்சியுள்ள அரம்; round file.

**மறுவ.** உருட்டரம்

*[குண்டு + அரம்.]*

**குண்டலக்கடுக்கன்** *kuṇḍala-k-kaḍukkaṉ,* பெ.(n.) வட்டக் கடுக்கன் வகை; a large ear-ring.

*[குண்டலம் + கடுக்கன்.]*

**குண்டலகேசி** *kuṇḍalakēši,* பெ.(n.) 1. பிற மதத்தாரை வாதில் வென்று தன் மதத்தை நிலைநாட்டிய ஒரு புத்தமதப் பெண்துறவி (நீலகேசி); a Buddhistic nun who stabilised Buddhism by vanquishing the representatives of other religions in disputation. 2. ஐம்பெருங் காப்பியத்துள் ஒன்றானதும் நாதகுத்தனார் இயற்றியதும் குண்டலகேசியின் வரலாறு உணர்த்துவதுமான நூல் (யாப்.வி.); an epic poem by *Nātakuttaṉār* describing the life and work of *Kuṇḍalakēci,* one of *Imperuṅkāppiyam*

*[குண்டலம் + கேசி.]*

**குண்டலகேசி விருத்தம்** *kuṇḍala-kēši-viruttam,* பெ.(n.) விருத்தப் பாவகையினால் இயன்ற குண்டலகேசி யென்னும் நூல் (மணிமே.பக்.448); the poem Kuṇḍalakēši, as composed in viruttam metre.

*[குண்டல + கேசி + விருத்தம்.]*

**குண்டலப்பாலை** *kuṇḍala-p-pālai,* பெ.(n.) 23 சிறந்த மூலிகைகளுள் ஒன்றான கற்பக மூலிகை; it is one of the 23 all healing drugs contemplated in the Siddhar's medicine (சா.அக.).

*[குண்டலம் + பாலை.]*

**குண்டலப்புழு** *kuṇḍala-p-puḻu,* பெ.(n.) **குண்டலப் பூச்சி** பார்க்க; see *kuṇḍala-p-pūcci.* *"கோழி விட்டெறி குழையினைக் குண்டலப் புழுவென்று" (திருவானைக். திருநாட்.122).*

*[குண்டலம் + புழு.]*

**குண்டலப்பூச்சி** *kuṇḍala-p-pūcci,* பெ.(n.) வளைந்து சுருண்டு கொள்ளும் புழுவகை; a kind of worm that rolls itself up. *"சுண்டுவிரலிலே குண்டலப்பூச்சி சுருண்டு கிடப்பானேன்" (குற்றா.குற.123:3).*

*[குண்டலம் +பூச்சி.]*

**குண்டலம்** *kuṇḍalam,* பெ.(n.) 1. ஆடவர் காதணி வகை; gold ear-ring worn by men. *"குண்டல மொருபுடை குலாவி வில்லிட" (சீவக.1009).*

2. வானம் (பிங்.); sky, atmosphere, heaven. 3. வட்டம்; circle. 4. சுழி; zero.

க. குண்டல, குண்டல, கொண்டலு; தெ. குண்டல்முடிபட. கொண்மாகெ.

Skt. kuṇḍala

[குள் → குண்டு → குண்டலம்.]

**குண்டலமண்டலம்** *kuṇḍala-maṇḍalam,* பெ.(n.) சுருண்டு வளைகை; coiling round.

[குண்டலம் + மண்டலம்.]

**குண்டலரேகை** *kuṇḍala-rēgai,* பெ.(n.) கைவரை வகை (திருவாரூ.குற.); a line in palm of hand.

[குண்டலம் + (வரைகை) ரேகை.]

**குண்டலவாசி** *kuṇḍala-vāśi,* பெ.(n.) விண்வெளிப் பாழில் உலவுபவன்; one who travels in the etheric region of the sky (சா.அக.).

[குண்டலம் + வாசி. வசி → வாசி.]

**குண்டலவுழுவை** *kuṇḍala-v-uḻuvai,* பெ.(n.) நன்னீரிலும் கழியிலும் வாழும் மஞ்சள் நிறமுள்ள மீன்வகை; a yellowish fish found in fresh water and in back water.

[குண்டலம் + உழுவை.]

**குண்டலன்** *kuṇḍalaṉ,* பெ.(n.) குண்டல மணிவோன்; one who wears the *kuṇḍalam.* "ஓர் குண்டலன்" *(சூடா.1:10).*

[குண்டலம் → குண்டலன்.]

**குண்டலாத்தி** *kuṇḍalātti,* பெ.(n.) சங்கன் வேர்; mistletoe berry-thorn (சா.அக.).

[குண்டலம் + குண்டலத்தி.]

**குண்டலி**[1] *kuṇḍali,* பெ.(n.) 1.தொப்புள்; umbilical region. *"குண்டலியா னனலை யோம்பி" (சி.சி.9:8).* 2. குய்யத்திற்கும் எருவாய்க்கும் நடுவில் இருப்பதாகக் கருதும் மூலாதாரம் (ஔவை.கு. நினைப்புறு.2); mystic circle situated between the anus and generative organ.

[குண்டு → குண்டலி.]

**குண்டலி**[2] *kuṇḍali,* பெ.(n.) 1. சீந்தில் (தைலவ. தைல.56); gulancha. 2. சங்கஞ்செடி (திவா.); mistletoe berry-thorn.

[குண்டலம் → குண்டலி.]

**குண்டலி**[3] *kuṇḍali,* பெ.(n.) தூயமாயை (சி.போ.பா. 2:2,பக்.133); Primal- Māyā, as the presiding power in kuṇḍali.

[குண்டல் → குண்டலி.]

**குண்டலி**[4] *kuṇḍali,* பெ.(n.) 1. பாம்பு; snake. 2. மயில்; peacock. 3. மான் (யாழ்.அக.); deer.

[குண்டல் → குண்டலி.]

**குண்டலி**[5] *kuṇḍali,* பெ.(n.) தாளகம் (யாழ்.அக.); yellow orpiment.

[குள் → குண்டு → குண்டலி.]

**குண்டலிக்கவிசை** *kuṇḍali-k-kavisai,* பெ.(n.) வயிற்றிலேற்படும் ஒருவகை வீக்கம்; abdominal dropsy (சா.அக.).

[குண்டலி + கவிசை.]

**குண்டலிக்குள் காயசித்தி** *kuṇḍalikkuḷ-kāyaśitti,* பெ.(n.) நாகதாளி; snake hood (சா.அக.).

[குண்டலி → குள் → காயம் → சித்தி.]

**குண்டலிகம்** *kuṇḍalikam,* பெ.(n.) 1. சீந்தில்; moon creeper. 2. மூலாதாரம்; the first and the lowest psycical region in the human body. 3. மான்; deer. 4.குண்டலி ஆற்றல்; serpents power. 5. தாளகம்; orpiment. 6. பாம்பு; snake. 7. மயில்; peacock.

8. தொப்புள்; the navel region. 9. சுருட்டை; carpet snake. 10. 'ஓம்' என்னும் மந்திரம்; the mystic sound 'ōm' 11. உயிர்வளி; the prana (சா.அக.).

*[குண்டலி → குண்டலிகம்.]*

**குண்டலிசக்தி** *kuṇḍališakti*, பெ.(n.) ***குண்டலினி*** பார்க்க; see *kuṇḍalini.*

*[குண்டலி(னி) + சக்தி.]*

**குண்டலிசம்பங்கி** *kuṇḍali-šambangi*, பெ.(n.) புல் சம்பங்கிப் பூ; சுருட்டைச் சம்பங்கி; a species of coiled champauk (சா.அக.).

*[குண்டலி + சம்பங்கி.]*

**குண்டலிப்பாம்பு** *kuṇḍali-p-pāmbu*, பெ.(n.) குண்டலிசக்தி, வல்லபை சக்தி; the serpent's power coiled up at the end of the spinal column (சா.அக.).

*[குண்டலி + பாம்பு.]*

**குண்டலிப்பாலை** *kuṇḍali-p-pālai*, பெ.(n.) ஒருவகைப் பாலை; a kind of paulay (சா.அக.).

*[குண்டலி + பாலை.]*

**குண்டலியோகம்** *kuṇḍali-y-ōgam*, பெ.(n.) சிவயோகம்; a kind of yoga practice (சா.அக.).

*[குண்டலி + ஒகம்.]*

**குண்டலிவளி** *kuṇḍali-vāli*, பெ.(n.) ***குண்டலினி*** பார்க்க; see *kuṇḍalini* 2. வயிற்றில் குத்தலை உண்டாக்கும் ஒருவகை வளி; a kind of flatulency due to air or gas in the stomach or the intestines. It is attended with acute pain (சா.அக.).

*[குண்டலி + வளி.]*

**குண்டலினி** *kuṇḍalini*, பெ.(n.) 1. மாமாயை (சி.சி.1:57,சிவாக்.); primal māyā. 2. மூலாதாரத்திலுள்ள பாம்பின் வடிவமைந்த ஒரு ஆற்றல் (பிரபோத. 44:20); a Sakti or principle in the form of a serpent, abiding in the *mūlādāram.*

*[குண்டலி → குண்டலினி.]*

**குண்டவண்டன்** *kuṇḍa-vaṇḍaṉ*, பெ.(n.) குள்ளமாய்த் தடித்தவன்; short, stumpy person (j.).

*[குண்டன் + வண்டன்.]*

**குண்டழி-த்தல்** *kuṇḍali-*, 4 செ.குன்றாவி.(v.t.) விலங்கின் விதையடித்தல்; castrating, depriving of virility (சா.அக.).

*[குண்டு + அழி.]*

**குண்டற்காய்ச்சி** *kuṇḍaṟkaycci*, பெ.(n.) ஒரு வகைத் தென்னை; a kind of cocoanut discriminated according to its fructility (சா.அக.).

மறுவ. குண்டற்கச்சி

*[குண்டல் + காய்ச்சி.]*

**குண்டன்**[1] *kuṇḍaṉ*, பெ.(n.) 1. விலைமகளுக்குப் பிறந்த மகன்; son born in adulery. 2. பருத்து வலுத்தவன்; strong, stout person. 3. இழிந்தோன்; man low in caste or character. *"சமண் குண்டர்" (திவ்.பெரியதி.2:6.6).*

ம. குண்டன்; க. குண்ட; தெ. குண்டடு.

*[குள் → குண்டு → குண்டன்.]*

**குண்டன்**[2] *kuṇḍaṉ*, பெ.(n.) 1. அடிமை; slave. 2. வளைந்தது; that which is bent. 3. குண்டனி, backbiter, குண்டுணி சொல்வோன், calumniator.

*[குள் → குண்டு → குண்டன் (ஒ.நோ. புள் → புண்டு).]*

**குண்டனி** *kuṇḍaṉi*, பெ.(n.) குறளை (யாழ்.அக.); calumny.

*[குள் → குண்டு → குண்டனி (வளைவு, ஒரம் சொல்லுதல்.]*

**குண்டா** *kuṇḍā,* பெ.(n.) உருண்டு திரண்ட கலம்; kind of vessel

மரா. குண்டா

*[குண்டு → குண்டா.]*

**குண்டாக்கன்** *kuṇḍākkaṉ,* பெ.(n.) தலைவன்; leader, chief. *"சமணர்க்கோர் குண்டாக்கனாய்" (தேவா.963:8).*

*[குண்டன் + குண்டாக்கன்.]*

**குண்டாங்கரணம்** *kuṇḍāṅ-karaṇam,* பெ.(n.) குட்டிக்கரணம்; somersault.

*[குண்டு + அம் + கரணம்.]*

**குண்டாச்சட்டி** *kuṇḍā-c-caṭṭy,* பெ.(n.) ***குண்டான் சட்டி*** பார்க்க; see *kuṇḍāṉ-caṭṭi.*

*[குண்டான் சட்டி → குண்டாச்சட்டி.]*

**குண்டாஞ்சட்டி** *kuṇḍāñcaṭṭi,* பெ.(n.) ***குண்டான் சட்டி*** பார்க்க; see *kuṇḍāṉ-caṭṭy.*

*[குண்டான் சட்டி → குண்டாஞ்சட்டி.]*

**குண்டாணி** *kuṇḍāṇi,* பெ.(n.) ***குடையாணி*** பார்க்க; see *kuḍai-y-āṇi.*

*[குண்டு + ஆணி.]*

**குண்டாணிக்கொடி** *kuṇḍāṇi-k-koḍi,* பெ.(n.) ***குந்தாணிக் கொடி*** பார்க்க; see *kuṇḍāṇi-k-koḍi.*

*[குண்டாணி + கொடி.]*

**குண்டாந்தடி** *kuṇḍān-taḍi,* பெ.(n.) பருத்துக் குறுகிய கைத்தடி; short stout stick.

*[குண்டு → குண்டான் + தடி.]*

**குண்டாமண்டி** *kuṇḍāmaṇḍi,* பெ.(n.) குறும்பு; mischief.

ம. குண்டாமண்டி

*[குண்டு + மண்டி.]*

**குண்டாலக்கட்டி** *kuṇḍāla-k-kaṭṭi,* பெ.(n.) செவ்வாப்புக் கட்டி; blisters in several parts of the body specially in children (சா.அக.).

*[குண்டலம் → குண்டாலம் + கட்டி.]*

**குண்டாலம்** *kuṇḍālam,* பெ.(n.) குண்டாலக்கட்டி, பார்க்க; see *kuṇḍālak-kaṭṭi.*

*[குண்டு → குண்டாலம்.]*

**குண்டாலி** *kuṇḍāli,* பெ.(n.) சங்கஞ்செடி; mistletoe berry-thorn (சா.அக.).

*[குண்டு → குண்டாலி.]*

**குண்டான்** *kuṇḍāṉ,* பெ.(n.) ***குண்டான் சட்டி*** பார்க்க; see *kuṇḍāṉ-caṭṭi.*

*[குண்டு → குண்டான்.]*

**குண்டான்சட்டி** *kuṇḍāṉcaṭṭi,* பெ.(n.) வாயகன்ற ஏன வகை; vessel with wide mouth.

*[குண்டான் + சட்டி.]*

**குண்டி** *kuṇḍḍ,* பெ.(n.) 1. உருண்டு திரண்டபுட்டம் (ஆசனப்பக்கம்) ; buttocks, posteriors, ramp of an animal, any rump-like protuberance. 2. குண்டிப் போன்ற அடிப்பக்கம்; the end of a fruit or nut opposite to the stalk, bottom as of a vessel. 3. இதயம்; heart. குண்டிக்காய். 4. சிறுநீரகம்; kidney. 5. மீன் சினை; roe of fish, spawn.

ம. குண்டி; க. குண்டெ; தெ. குட்டெ; து. குல்லிகெ;

*[குண்டு → குண்டி.]*

**குண்டிக்காய்** *kuṇḍi-k-kāy,* பெ.(n.) 1. சிறுநீரகம்; kidneys. 2.இதயம்; heart. 3. உட்காரும் பக்கம் (பிருட்டபாகம்); buttocks posteriors.

ம. குண்டிக்காய்; க. குண்டு (ஆண்குறி விதை); தெ. குண்டு; நா. குண்டுர்காய்; பர்.குன்டெர்காய்; கோண். குன்தூர்காய்.

*[குண்டி + காய்.]*

**குண்டிக்காயெரிச்சல்** *kundi-k-kāy-ericcal,* பெ.(n.) சிறுநீரகத்தில் காணும் ஒரு நோய்; inflammation of kidneys.

*[குண்டிக்காய் + எரிச்சல்.]*

**குண்டிக்கொழுப்பு** *kundi-k-koluppu,* பெ.(n.) இறுமாப்பு; lit. fatness of buttocks. Pride, wantonness, arrogance, sauciness, insolence.

*[குண்டி + கொழுப்பு]*

**குண்டிகம்**[1] *kundigam,* பெ.(n.) எரு, வறட்டி; cow dung cake. 2. பேரேலம்; large cardamon (சா.அக.).

*[குண்டு → குண்டிகம்.]*

**குண்டிகம்**[2] *kundikam,* பெ.(n.) துகள் (யாழ்.அக.); powder.

*[குள் → குண்டு → குண்டிகம்.]*

**குண்டிகம்**[3] *kundikam,* பெ.(n.) எருவறட்டி (யாழ்.அக.); dried cow-dung cake.

*[குள் → குண்டிகம் (வட்டமானது).]*

**குண்டிகாய்-தல்** *kundi-kāy-,* 3 செ.கு.வி.(v.i.) உணவின்மையால் வயிறு காய்தல்; lit. to be thinned in the buttocks. To become emacitated on account of insufficient food, etc., to grow lean.

*[குண்டி + காய்.]*

**குண்டிகுத்து-தல்** *kundi-kuttu,* 5 செ.கு.வி.(v.i.) **குத்தவைத்தல்** பார்க்க; see *kuta-vaittal.*

*[குண்டி + குத்து.]*

**குண்டிகை** *kundigai,* பெ.(n.) 1. கமண்டலம்; ascetic's pitcher. *"நான் முகன் குண்டிகை நீர்பெய்து" (திவ்.இயற்.நான்.9).* 2. குடுக்கை; cocoanut or other shell, used as a receptacle. *"குண்டிகைப் பருத்தி" (தொல்.பாயி.உரை).* 3. நூற்றெட்டு உபநிடதங்களுள் ஒன்று; one of an Upanisad among 108.

ம. குண்டிக

**Skt.** kundika

*[குண்டு → குண்டிகை.]*

**குண்டித்துணி** *kundi-t-tuni,* பெ.(n.) அரைத்துணி; waist cloth.

*[குண்டி + துணி]*

**குண்டிப்பட்டை** *kundi-p-pattai,* பெ.(n.) உருண்டு திரண்ட புட்டம்; buttocks.

*[குண்டி + பட்டை.]*

**குண்டிப்பி** *kundippi,* பெ.(n.) சிப்பி முத்து; pearl of oysters (சா.அக. ).

*[குண்டு → குண்டி → குண்டிப்பா.]*

**குண்டிப்புறம்** *kundi-p-puram,* பெ.(n.) புட்டம்; buttocks (சா.அக.).

*[குண்டி + புறம்.]*

**குண்டிமற-த்தல்** *kundi-mara-,* 3 செ.கு.வி.(v.i.) நினைவுமறதி மிகவுமுடையனாதல்; to be extremely absent-minded.

*[குண்டி + மற.]*

**குண்டிமுனை** *kundi-munai,* பெ.(n.) இடுப்பெலும்புக் கூட்டின் முன்பக்கத்துக்கு மேலிருக்கும் ஒரு முனை; the anterior upper bone of the pelvis (சா.அக.).

*[குண்டி + முனை.]*

**குண்டியம்** *kundyam,* பெ.(n.) 1. குறளை (உரி.நி.); slander. 2. மந்தணத்தை வெளிப்படுத்துகை; exposure of secrets. 3. பொய்; falsehood, lie.

*[குண்டு → குண்டி.]*

**குண்டியடி-த்தல்** *kundi-y-adi-,* 4 செ.கு.வி.(v.i.) நிலத்திலிட்ட விதைகள் மூடுமாறு உழவுமாட்டை

யோட்டுதல்; to level ploughed land by a drag, after sowing.

*[குண்டி + அடி.]*

**குண்டியெலும்பு** *kundi-y-elumbu*, பெ.(n.) இருக்கை (ஆசனம்) எலும்பு; os sacrum.

*[குண்டி + எலும்பு.]*

**குண்டில்**[1] *kundil*, பெ.(n.) 1.சிறுசெய் (திவா.); small field or plot. 2. முதுகு; back.

*[குண்டு → குண்டில்.]*

**குண்டில்**[2] *kundil*, பெ.(n.) செடிவகை (யாழ்.அக.); a shrub.

*[குண்டி + இல்.]*

**குண்டிவற்று—தல்** *kundi-varru-*, 5 செ.கு.வி.(v.i.) ***குண்டிகாய்*** பார்க்க; see *kundi-kāy*.

*[குண்டி + வற்று.]*

**குண்டு**[1] *kundu*, பெ.(n.) 1. பந்துபோல் உருண்டு கனப்பது; ball, anything globular and heavy. 2. நிறைகல் வகை (பிங்.); a standard weight. 3. துலாக்கோல் (பிங்.); scales. 4. உருண்டை வடிவான ஒருவகை ஏனம்; round vessel of medium size. 5.பீரங்கிக் குண்டு; cannon ball bullet. 6. உருண்டையான பொன்மணி; globular gold bead. *"பொன்னின் பட்டைமேற் குண்டு வைத்து" (S.I.I.ii.182).* 7. கஞ்சா முதலிய மயக்கம் தரும் உருண்டை; bolus of bhang or other narcotic drug. 8. விலங்குகளின் விதை; testicle of beasts. 9. ஆண்குதிரை (சூடா.); stallion, adult male horse. 10. காதர்ப்பசந்து என்னும் மாவகை; a kidney-shaped graft mango.

**ம.** குண்டு; **க.** குண்டு, குண்ட; **தெ., து., பட.**குண்டு; **கோத.** குண்ட்கல் (உருண்டையான கல்).

**Mar.** gunda

*[குள் → குண்டு.]*

குண்டூசி, குண்டுச்சம்பா, குண்டுமல்லிகை என்பவற்றில் குண்டு என்னுஞ் சொல் உருட்சி பற்றியது. உருட்சிக் கருத்தும், திரட்சிக் கருத்தை தோற்றுவிக்கு மாதலால், குண்டு, குண்டன், குண்டை, குண்டாந்தடி, குண்டடியன், குண்டுக்கழுதை என்பவற்றை வலைவுக் கருத்து வேரடிப் பிறந்தனவாகவும் கொள்ள இடமுண்டு (வே.க. 157).

**குண்டு**[2] *kundu*, பெ.(n.) 1. ஆழம்; depth. *"வண்டுணை மலர்ந்த குண்டுநீரிசிலஞ்" (மணிமே.8:8).* 2. தாழ்வு (சூடா.); sinking in, hollow, lowness. 3. சிறுசெய் (S.I.I.III, 105); a small field. 4. 1089 சதுர அடியுள்ள ஒரு நிலவளவு; a land measure = 1089 sq. ft. = 1/40 acre (R.F.). 5. குளம் (சங்.அக.); pool, pond. 6. உரக்குழி; manure-pit.7.நீர்நிறைந்த கிடங்கு;ditch, trench. 8.கிடங்கு; ware house,store house.

**ம.** குண்டு; **க.** குண்டி, குண்டெ; **தெ.** குண்ட, குண்ட; **து.** குண்ட, கொண்ட; **குட.** குண்டி; **பட.**குண்டி; **பர்.** குட்ட; **கோண்.** குண்ட.

**Skt.** kundam

*[குள் → குண்டு.]*

**குண்டுக்கட்டு** *kundu-k-kattu*, பெ.(n.) 1. திரளச் சேர்த்துக் கட்டுங்கட்டு; tying anything en masse. 2. ஒருவனுடைய கழுத்தையும் காலையும் ஒன்று சேர்த்துத் திரளாகக்ந் கட்டும் கட்டு; binding one's neck and heels and forcing him into a position like a ball.

*[குண்டு + கட்டு.]*

**குண்டுக்கட்டு விளக்கு** *kundu-k-kattu-vilakku*, பெ.(n.) சொட்டுச்சொட்டாக எண்ணெய் திரியில் விழுமாறு குண்டு உள்ள விளக்கு; a kind of lamp which has a driping oil bowl.

*[குண்டு + கட்டு + விளக்கு.]*


குண்டுக்கட்டு விளக்கு

**குண்டுக்கட்டை** *kundu-k-kaṭṭai,* பெ.(n.) பிளக்காத உருண்டை விறகு; unhewn or unsplit pieces of wood.

*[குண்டு + கட்டை.]*

**குண்டுக்கயம்** *kundu-k-kayam,* பெ.(n.) ஆழமான நீர்நிலை; deep-pond. *"விழுந்தோர் மாய்க்குங் குண்டு கயத்து அருகா" (மலை.220).*

*[குண்டு + கயம்.]*

**குண்டுக்கல்** *kundu-k-kal,* பெ.(n.) 1. வேலை செய்து செப்பனிடப்படாத கல்; unshaped or undressed stone, rubble. 2. துலைகோலின் நிறைகல்; weights of a balance.

*[குண்டு + கல்.]*

**குண்டுக்கலம்** *kundu-k-kalam,* பெ.(n.) 24 மரக்கால் கொண்ட அளவு(C.G.); a standard measure of capacity = 24 marakkāl (G.).

*[குண்டு + கலம்.]*

**குண்டுக்கழுதை** *kundu-k-kaḻudai,* பெ.(n.) ஆண் கழுதை (பஞ்சதந்.); he-ass.

*[குண்டு + கழுதை.]*

**குண்டுக்காயம்** *kundu-k-kāyam,* பெ.(n.) துப்பாக்கிக் குண்டு பட்டதனால் உண்டான புண்; gunshot wound.

*[குண்டு + காயம்.]*

**குண்டுக்காளை** *kundu-k-kāḷai,* பெ.(n.) பொலியெருது; bull.

*[குண்டு + காளை.]*

**குண்டுக்கிராமம்** *kundu-k-kirāmam,* பெ.(n.) 1690 ஆம் ஆண்டில் கடலூரிலுள்ள புனித டேவிட் கோட்டையிலிருந்து சுடப்பெற்ற குண்டு விழுந்த தொலைவிற்கு உட்பட்டவையும், மராட்டிய களால் கம்பெனியார்க்கு விற்கப்பட்டவையுமான 11 சிற்றூர்கள்(G.S.A. 143); villages, 11 in number included within random shot of a brass gun fired from Ft. St. David at Cuddalore in 1690, and forming the territory sold to the East Indian Company by the Maharastras.

*[குண்டு + கிராமம்.]*

**குண்டுக்குதிரை** *kundu-k-kudirai,* பெ.(n.) ஆண்குதிரை; stallion, adult male horse.

*[குண்டு + குதிரை.]*

**குண்டுக்குழல்** *kundu-k-kuḻal,* பெ.(n.) ***குண்டுக் குழாய்*** பார்க்க; see *kundu-k-kuḻāi.*

*[குண்டு + குழல்.]*

**குண்டுக்குழாய்** *kundu-k-kuḻāy,* பெ.(n.) ஒருவகைத் துப்பாக்கி; small cannon, blunderbuss.

*[குண்டு + குழாய்.]*

**குண்டுக்கெம்பு** *kundu-k-kembu,* பெ.(n.) ***குச்சுக் கெம்பு*** (C.G.) பார்க்க; see *kuccu-k-kembu.*

*[குண்டு + கெம்பு.]*

**குண்டுங் குழியுமாய்** *kunduṅ-kuḻiyumāy,* மேடும் பள்ளமுமாய்; uneven.

*[குண்டும் + குழியும் + ஆய்.]*

**குண்டுச்சம்பா** *kuṇḍu-c-cambā*, பெ.(n.) ஆறு மாதத்தில் விளையும் சம்பாநெல் வகை; a kind of cambā paddy that matures in six months.

*[குண்டு + சம்பா.]*

**குண்டுச்சுழி** *kuṇḍu-c-culi*, பெ.(n.) உயிர்மெய் யெழுத்துகளின் கொம்பில் வளைக்கும் சுழி; the circular portion of *kombu* which forms part of the symbols of certain vowel-consonants, as in கெ, கோ etc.

*[குண்டு + சுழி.]*

**குண்டுச்சூளை** *kuṇḍu-c-cūlai*, பெ.(n.) வட்டமாக அமைக்கப்படும் காளவாய் (இ.வ.); circle kiln.

*[குண்டு + சூளை.]*

**குண்டுசட்டி** *kuṇḍu-catti*, பெ.(n.) உருண்டையான சட்டிவகை; round earthen vessel. *"கூனையும் குடமும் குண்டு சட்டியும்" (தனிப்பா.I 169,20).*

*[குண்டு + சட்டி.]*

குண்டு சட்டியில் குதிரை ஓட்டுதல் என்பது ஒரே வகையான பணி செய்தல் எனப் பொருள் தரும் பழமொழி. மிகவும் பருமனாக இருப்பவனை குண்டுசட்டி என்பது நகையாட்டுக் குறிப்புமொழி. குண்டுசட்டியில் கரணம் போடுகிறான் என்பது இயலாமையைக் காட்டும் இகழ்வு.

**குண்டுசாலை** *kuṇḍu-sālai*, பெ.(n.) பெருநகரின் எல்லை; boundary of a principal town.

*[குண்டு + சாலை.]*

**குண்டுசொக்காய்** *kuṇḍu-sokkāi*, பெ.(n.) ஒருவகைச் சட்டை; a kind of jacket. *"குண்டு சொக்காய் தந்தான்" (விறலிவிடு.113).*

*[குண்டு + சொக்காய்.]*

**குண்டுணி** *kuṇḍuṇi*, பெ.(n.) 1. கலகமூட்டுகை; inciting, instigating to a quarrel. 2. கோட்சொல்; slander, calumny. 3. கோட் சொல்லுவோன்; tale bearer. யாரோடுங் குண்டுணியாய்த் திரிய வேண்டாம் (உலக.).

*[குண்டு → குண்டுணி.]*

குண்டுண்ணுதல் - ஒருவனை ஏதேனும் ஒரு நோக்கத்திற்காக அடிக்கடி அணுகி வளைய வளைய வந்து நயப்புறுத்துதல். குண்டுணிச் செயலில் ஈடுபட்டுப் பிறரை வயப்படுத்துபவன் குண்டுணி.

**குண்டுணிநாரதர்** *kuṇḍuṇi-nāratar*, பெ.(n.) கோட் சொல்லிக் கலக மூட்டுபவன்; lit. Nārada, the talabearer. Talebearere, instigator of quarrels (கொ.வ.).

*[குண்டுணி + நாரதர்.]*

**குண்டு தலையணை** *kundu-talai-y-aṇai*, பெ.(n.) வட்டத் தலையணை; small round pillow.

*[குண்டு + தலையணை.]*

**குண்டு தைரியம்** *kuṇḍu-tairiam*, பெ.(n.) முரட்டுத் துணிவு; rash courage, fool hardiness.

*[குண்டு + தைரியம்.]*

**குண்டுநீர்** *kuṇḍu-nīr*, பெ.(n.) கடல்; the sea, as being deep. *"குண்டுநீ ர் வையத்து" (நாலடி.94).*

*[குண்டு + நீர்.]*

**குண்டுநூல்** *kuṇḍu-nūl*, பெ.(n.) நுனியில் ஈயக்குண்டு கட்டப்பட்டிருக்கும் அளவுநூற் கயிறு; plumb line used by masons.

ம. குண்டுநூலு; க. குண்டு.

*[குண்டு + நூல்.]*


குண்டுநூல்

**குண்டுப்பிணையல்** *kuṇḍu-p-piṇaiyal*, பெ.(n.) கீல்வகை(யாழ்ப்.); a kind of hinge.

*[குண்டு + பிணையல்.]*

**குண்டுப்பி** *kuṇḍuppi*, பெ.(n.) சிப்பிமுத்து; pearl of oysters (சா.அக.).

*[குண்டு + இப்பி. இப்பி - சிப்பி.]*

**குண்டுப்பூக்கொன்றை**[1] *kuṇḍu-p-pū-koṉṟai,* பெ.(n.) வெள்ளைத் தகரை; sulphure flowered senna (சா.அக.).

*[குண்டு + பூ + கொன்றை.]*

**குண்டுப்பூக்கொன்றை**[2] *kuṇḍu-p-pū-k-koṉṟai,* பெ.(n.) கொன்றைவகை; sulphur-flowered senna.

*[குண்டு + பூ + கொன்றை.]*

**குண்டுபடு-தல்** *kuṇḍu-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) வெடிகுண்டால் தாக்கப்படுதல்; to be shot, to be wounded with bullet. குண்டுபட்டுச் செத்தான் (உ.வ.).

*[குண்டு + படு.]*

**குண்டுபாய்-தல்** *kuṇḍu-pāy-,* 2 செ.கு.வி.(v.i.) ஆழம்படுதல்; to become hollow. முள்ளுக்குத்திய இடம் குண்டு பாய்ந்து விட்டது (கொ.வ.).

*[குண்டு + பாய்.]*

**குண்டுபோடு-தல்** *kuṇḍu-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. அரசில் உயர்ந்த பதவியில் இருப்பவர்கள் வரும் நேரத்திலும், பிற சிறப்பு நேர்வுகளிலும் மரியாதையின் பொருட்டு வெடிபோடுதல்; to fire a salute as a sign of honor to distinguished persons etc. 2. காலத்தை உணர்த்துவதற்காக வெடிபோடுதல்; to mark the time of day by gun-fire. 3. இறத்தல்; to die. 4. தொழில், தேர்வு முதலி யவற்றில் தோல்வி யடைதல்; to fail, to be unsuccessful, as in an undertaking, examination etc.

*[குண்டு + போடு-.]*

**குண்டுமணி** *kuṇḍu-maṇi,* பெ.(n.) ***குன்றிமணி*** பார்க்க; see *kuṉṟimaṇi.*

*[குண்டு + மணி-.]*

**குண்டுமரக்கால்** *kuṇḍu-marakkāl,* பெ.(n.) எட்டுப்படி கொண்ட அளவு (G. Tn.D.I.238); a grain measure of capacity 8 paḍi.

*[குண்டு + மரக்கால்.]*

**குண்டுமரம்** *kuṇḍu-maram,* பெ.(n.) நெசவுத்தறியின் ஓர் உறுப்பு; lower half of the batten, the heavy round bottom piece of the batten of which the upper part is the palakai, which gives it its force.

*[குண்டு + மரம்.]*

**குண்டுமருந்து** *kuṇḍu-marundu,* பெ.(n.) வெடி மருந்து; bullet and powder, gun powder.

*[குண்டு + மருந்து.]*

**குண்டுமல்லிகை** *kuṇḍu-malligai,* பெ.(n.) குடமல்லிகை (மூ.அ.); tuscan jasmine.

மறுவ. குடமல்லிகை

*[குண்டு + மல்லிகை.]*

**குண்டு மாலை** *kuṇḍu-mālai,* பெ.(n.) மணி யாலமைந்த கழுத்தணி வகை(இ.வ.); necklace of beads.

*[குண்டு + மாலை.]*

**குண்டுமாற்றுக்குழிமாற்று** *kuṇḍu-māṟṟu-k-kuḻi-māṟṟu,* பெ.(n.) 1. பெண்ணைக் கொடுத்துப் பெண் எடுக்கை; exchange between families, of daughters in marriage. 2. ஏமாற்றுக் காரியம்; deceitful action.

*[குண்டுமாற்று + குழிமாற்று.]*

**குண்டுரம்** *kuṇḍuram,* பெ.(n.) குழியிற் சேர்த்து வைக்கும் சாணம் முதலிய உரம்; manure of cow-dung etc., as stored in a pit.

*[குள் → குழி → குண்டு + உரம்.]*

**குண்டுருட்டாய்க் கட்டு-தல்** *kuṇḍuruṭṭaikaṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. திரளச் சேர்த்துக் கட்டுதல்; to tie anything enmasse. 2. ஒருவனுடைய தலை கால்களை ஒன்று சேர்த்துத் திரளக் கட்டுதல்; to tie up head to heel, as rolling one into a ball.

*[குண்டு + உருட்டாய் + கட்டு.]*

**குண்டுலகரம்** *kuṇḍu-lagaram,* பெ.(n.) சுழித்துத் தொடங்குவதாகிய பொதுலகரம் (இ.வ.); the Tamil letter 'ல' as beginning with a loop.

*[குண்டு + லகரம்.]*

**குண்டுவட்டில்** *kuṇḍu-vaṭṭil,* பெ.(n.) உட்குழிந்த வட்டில்; a hollow dish.

*[குண்டு + வட்டில்.]*

**குண்டூசி** *kuṇḍūši,* பெ.(n.) தலைதிரண்டுள்ள ஊசி; pin.

ம. குண்டுசி; க. குண்டு சூசி; தெ. குண்டு சூதி.

*[குண்டு + ஊசி.]*

**குண்டெழுத்தாணி** *kuṇḍeḻuttāṇi,* பெ.(n.) தலைப் பக்கம் திரண்டுள்ள எழுத்தாணிவகை; style with knob at the top.

*[குண்டு + எழுத்தாணி.]*

**குண்டெழுத்து** *kuṇḍeḻuttu,* பெ.(n.) திரண்டு தடித்த எழுத்து; bold round hand.

*[குண்டு + எழுத்து.]*

**குண்டேறு** *kuṇḍēṟu,* பெ.(n.) மீன்வகை; a kind of fish.

*[குண்டு + ஏறு.]*

**குண்டை**[1] *kuṇḍai,* பெ.(n.) 1. எருது; bull. *"வையம் பூண்கல்லா சிறுகுண்டை" (நாலடி;350).* 2. இடபவோரை (பிங்.); taurus a sign of the zodiac. 3. குறுகித்தடித்தது; that which is short and stout. *"குண்டைக் குறட்பூதம்" (தேவா.944:1).* 4. குறுமை; shortness. *"குண்டைக் கோட்ட குறுமுட் கள்ளி" (அகநா.184).*

ம. குண்ட

*[குள் → குண்டு → குண்டை.]*

**குண்டை**[2] *kuṇḍai,* பெ.(n.) சட்டி (யாழ்.அக.); earthen pot.

*[குண்டு → குண்டை.]*

**குண்டைச்சம்பா** *kuṇḍai-c-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை(வின்.); a kind of *cambā* paddy.

*[குண்டை + சம்பா.]*

**குண்டையம்** *kuṇḍaiyam,* பெ.(n.) பிட்டு செய்யும் சுறாமீன்; shark fish.

*[குண்டு → குண்டையம்.]*

**குண்டோதரன்** *kuṇḍōtaran,* பெ.(n.) 1. பெரு வயிறும் குறுவடிவும் உடையனான சிவகணத்தவருள் ஒருவன்; a short gluttonous goblin in the host of Siva, having a capacioush round belly. *"குண்டோதரனெனு நாமம் பூண்டு" (திருவாலவா. 4:22).* 2. பெருந்தீனிக் காரன்; a stout big-bellied glutton.

*[குண்டு + உதரன் – குண்டோதரன்.]*

**குண்ணவாடை** *kuṇṇavāḍai,* பெ.(n.) வடகீழ்க் காற்று; north-east wind. குண்ணவாடை கூட்டி னாலும் கூட்டும், கலைத்தாலும் கலைக்கும் (இ.வ.).

*[குண்ணம் குணக்கு = கிழக்கு + வாடை.]*

**குண்ணி** *kuṇṇi,* பெ.(n.) குன்றிமணி; crab's eye, jeweller's bead (சா.அக.).

*[குள் → குண்ணி.]*

**குண்ணியம்** *kuṇṇiyam,* பெ.(n.) பெருக்கப்படும் எண்; multiplicand.

*[குள் → குண்ணி → குண்ணியம்.]*

**குணக்காய்ப்பேசு-தல்** *kuṇakkāy-p-pēšu-,* 5 செ.கு.வி. (v.i.) வீண்வாதஞ் செய்தல்; to talk perversely, advance captious argument.

*[குணக்கு + ஆய் + பேசு.]*

**குணக்கிராகி** *kuṇa-k-kirāgi* பெ.(n.) நற்குணத்தையே கொள்பவன்; one who recognises and appriceates the good points only (செ.அக.).

*[குணம் + கிராகி (கிரகித்துக் கொள்பவன் குணங்கொளி எனின் முற்றுந்தமிழாம்.]*

**குணக்கு[1]-தல்** *kuṇakku-*, 5செ.குன்றாவி.(v.t.) வளைத்தல்; to bend.

*[குள் + குணக்கு.]*

**குணக்கு[2]** *kuṇakku,* பெ. (n) 1. கிழக்கு; east. *"கரைபொரு தொடுகடற் குணக்கும்" (புறநா.6:3).* 2. கோணல்; crookedness, curvature. நாயின் வாளைக் குணக்கெடுக்கலாமா? (உ.வ.). 3. எதிரிடை; crossness, opposition. குணக்குப் பண்ணாதே (உ.வ.). 4. நோய்முற்றிச் சிக்கலாதல்; complicatun in sickness. அவனுக்கு உடம்பு குணக்காயிருக்கிறது.

*[குள் → குணக்கு.]*

**குணக்கு[3]-தல்** *kuṇakku-*, 5 செ.கு.வி.(v.i.) 1. பின்னிற்றல் (யாழ்.அக.); to be backward; to lag behind. 2. சிக்கலாதல்; to become etangled, as threads.

*[குள் → குணகு → குணக்க.]*

**குணக்குன்று** *kuṇa-k-kuṉṟu,* பெ.(n.) நற்குணம் மிக்கவன்; lit. a mountain of good qualities, person of noble character.

*[குணம் + குன்று.]*

**குணக்கேடன்** *kuṇa-k-kēḍaṉ,* பெ.(n.) நற்குணமற்றவன்; ill-natured person. *"இரங்காக் குணக்கேடன்" (சைவச.ஆசா.17).*

*[குணம் + கேடன்.]*

**குணக்கேடு** *kuṇa-k-kēḍu,* பெ.(n.) 1. கெட்ட பண்பு; bad disposition, ill-nature. 2. நோய் குணமாக்க முடியாத நிலைக்கு மாறுகை; unfavourable symptom in disease.

*[குணம் + கேடு.]*

**குணகண்டி** *kuṇa-kaṇḍi,* பெ.(n.) சிவதை (மலை.); Indian jalap.

*[குணம் + கண்டி.]*

**குணகம்** *kuṇagam,* பெ.(n.) பெருக்குந்தொகை; multiplier

*[குள் (கூடுதல்) → குணகு + அக.]*

**குணகர்** *kuṇakār,* பெ.(n.) கணக்கர்; accountant

*[கணி → குணி → குணகர்.]*

**குணகன்** *kuṇagaṉ,* பெ.(n.) கணக்கன்; mathematician.

*[குண்டு → குணகன்.]*

**குணகாங்கி** *kuṇakāṅgi,* பெ.(n.) **குணகாங்கியம்** பார்க்க; see *kuṇa-kāṅgiyam. "குணகாங்கி யென்னுங் கருநாடகச் சந்தமும்" (யாப்.வி.96,பக்-490).*

*[குணம் → குணகாங்கி (நற்பண்பினள்).]*

**குணகாங்கியம்** *kuṇa-kāṅgiyam,* பெ.(n.) பழைய தொரு கன்னட யாப்பு நூல்; an ancient treatise on prosody in Kanarese. *"குணகாங்கியமென்னுங் கருநாடகச் சந்தமே போல மகடூஉ முன்னிலைத் தாய்" (காரிகை, பாயிரவுரை).*

*[குணம் → குணகாங்கி →குணாகங்கியம்.]*

**குணகாரம்** *kuṇa-kāram,* பெ.(n.) பெருக்கல் (கூடா.) (Arith.); multiplication.

*[குள் →குழி(பெருக்குதல்) →குணி+காரம் – குணிகாரம் → குணகாரம்.]*

**குணகி** *kuṇagi,* பெ.(n.) குணவான் (யாழ்.அக.); person of good qualities.

*[குணகன் → குணகி]*

**குணகு[1]-தல்** *kuṇagu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வளைதல்; to become bent or crooked. 2. சோர்தல்; to sink, faint, fade, droop. 3. மனந் தளர்தல்; to be dejected. 4.மனந்தடு மாறுதல்; to feel uneasy, to be vexed.

ம. குணுகுக

*[குணக்கு → குணகு.]*

**குணகு[2]** *kuṇagu,* பெ.(n.) **குணங்கு** பார்க்க; see *kuṇaṅgu.*

*[குணக்கு → குணகு.]*

**குணகு[3]** *kuṇaku,* பெ.(n.) பூத பிசாசம்; goblin.

*[குள் → குளகு → குணகு (குள்ளமானது).]*

**குணகுணி** *kuṇa-kuṇi,* பெ.(n.) குணமும் குணமுடைய பொருளும்; an object and its attributes.

*[குணம் + குணி.]*

**குணகுணிபாவம்** *kuṇa-kuṇi-pāvam,* பெ.(n.) பண்பும் பண்பியும் போலப் பிரியாமலிருக்கும் நிலை; state of inseparableness as an object and its attributes. *"அனல் வெம்மையும் போல் ... குணகுணிபாவமாகி"(சி.சி.4:6).*

*[குணம் + குணி + பாவம்.]*

**குணகோளார்த்தம்** *kuṇa-kōlārtam,* பெ.(n.) புவியின் கிழக்குப் பாதிக்கோளம்; eastern hemisphere.

*[குணக்கு + கோளம் + அர்த்தம். அர்த்தம் - பாதி.]*

**குணங்கர்** *kuṇaṅgar,* பெ.(n.) பூதங்கள், தீக்குணப் பேய்கள்; devil, goblin, evil spirit. *"திரண்டன குணங்கரீட்டம்" (கந்தபு.முதனாட்பானு.312).*

*[குணங்கு → குணங்கர்.]*

**குணங்காட்டு-தல்** *kuṇaṅ-kāṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. இயற்கைக் குணத்தை வெளிப்படுத்துதல்; to come out in one's true colours, reveal one's true character. 2. நோய் குணமாகுங் குறிகாட்டுதல்; to show signs of cure, as discese.

*[குணம் + காட்டு.]*

**குணங்கு[1]-தல்** *kuṇaṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) வளைதல்; to bend.

*[குணகு → குணங்கு.]*

**குணங்கு[2]** *kuṇaṅgu,* பெ.(n.) பூதம், பிசாசம்; devil goblin *"குணங்கினம் கானம் பாடி" (கல்லா.34:4) (பிங்.).*

*[குணகு → குணங்கு.]*

**குணங்குறி** *kuṇaṅkuṟi,* பெ.(n.) தன்மையும் வடிவும்; form and attribute characteristics. *"குணங்குறியற் றின்பநிட்டை கூடவன்றோ" (தாயு.நின்றநிலை.3).*

*[குணம் + குறி.]*

**குணசந்தி** *kuṇa-śandi,* பெ.(n.) அ, ஆ முன், இ, ஈ வந்தால் அவ்விரண்டுங் கெட ஏகாரமும், உ, ஊ வந்தால் அவ்வாறே ஓகாரமுந் தோன்றும் வட மொழிச் சந்தி (நன்.239,உரை); sandhi or euphonic combination in Sanskrit of 'a' or 'ā' with i and 'u' short or long, resulting repectively in 'ē' and 'ō' as. தேவேந்திரன், ஞானோதயம்.

*[குணம் + சந்தி.]*

**குணசாகரர்** *kuṇa-śāgarar,* பெ.(n.) யாப்பருங்கலக் காரிகையின் உரையாசிரியர்; commentator of *Yāpparuṅgalakkārigai.*

*[குணம் + சாகரர்.]*

**குணசாலி** *kuṇa-śāli,* பெ.(n.) நற்குணமுள்ளவன்; good and virtuous person, one of noble character.

*[குணம் + சாலி.]*

**குணசீலன்** *kuṇa-šīlaṉ,* பெ.(n.) நற்குண நற்செயலுடையவன்; a man of noble character and actions.

*[குண + சீலன்.]*

**குணசைவம்** *kuṇa-šaivam,* பெ.(n.) பதினாறு வகைச் சிவசமயங்களுள் சிவபிரானை எண் குணங்களுடையவராக மனத்தில் நினைத்து அடிமை செய்பவர்க்கே வீடு என்னுங் கொள்கை யுள்ள சிவசமயம் (த.நி.போ. வாதிகள் சமயம், 200); a Saiva sect which holds that salvation is for those who contemplate Siva as having eight attributes and worship Him as His devoted slaves, one of 16 saivam.

*[குணம் + சைவம்.]*

**குணஞ்ஞன்** *kuṇaññaṉ,* பெ.(n.) பிறர் குணங்களை அறிந்து மகிழ்பவன்; one who understands and appreciates the good qualities of others. 2. இனிய குணமுள்ளவன்; pleasant, good-natured, agreeable person, one of sweet disposition (கொ.வ.).

*[குணம் + குணஞ்ஞன்.]*

**குணட்டு[1]-தல்** *kuṇaṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) மயக்கிப் பேசுதல்; to coax, wheedle speak amorously, as a courtesan.

*[குள் → குண →குணட்டு.]*

**குணட்டு[2]-தல்** *kuṇaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. செல்லங் கொஞ்சுதல்; to whine in jest, to speak saucily, as petted children. 2. குதித்து விளையாடுதல்; to caper about. 3. பகட்டுப் பண்ணுதல்(இ.வ.); to fascinate, attract by fine dress etc., (இ.வ.).

ம. குணட்டுக

**Fin.** kina; **Es.** kone; **Mong.** kina; **Jap.** kenasu; **Q.** jenjuchiy.

*[குள் → குண →குணட்டு.]*

**குணட்டு[3]** *kuṇaṭṭu,* பெ.(n.) கதிர் முதலியவற்றின் சிறுகொத்து; small bunch in a spike of grain or a cluster of grapes.

*[குள் → குணட்டு.]*

**குணத்திரயம்** *kuṇa-t-tirayam,* பெ.(n.) சால்பு (சத்துவம்), கொடுமை (இராசதம்) மடிமை (தாமசம்) என்னும் மூவகை மூலகுணங்கள்; the three-fold fundamental qualities. *"குணத்திரயங் குலஞ்சு" (மருதூ.59).*

*[குணம் → திரயம்.]*

**குணத்தீமை** *kuṇa-t-tīmai,* பெ.(n.) நன்மை தீமைகள்; virtue and vice; merits and demerits.

*[குணம் + தீமை.]*

**குணத்துக்குவா-தல் (குணத்துக்குவருதல்)** *kuṇattukku-vā-,* 8 செ.கு.வி.(v.i.) 1. சீர்படுதல்; to grow better, reform. 2. நோயினின்று நலம்பெறுதல்; to recover health, as from illness. 3. இணங்குதல்; yield, assent.

மறுவ. குணப்படுதல்

*[குணம் + அத்து + கு+ வா.]*

**குணத்தொகை** *kuṇa-t-togai,* பெ.(n.) பண்புத் தொகை (நன்.365); an appositional compound in which the first member stands in adjectival relation to the second.

*[குணம் + தொகை.]*

**குணத்தொனி** *kuṇa-t-toṉi,* பெ.(n.) வில்லின் நாணோசை; twang of a bow string.

*[குணம் (வளைவு, வில்) + தொனி.]*

**குணதத்துவம்** *kuṇa-tattuvam,* பெ.(n.) 1. விளங்காமல் நின்ற மூலப்பகுதி முக்குணமாய்ப் பகுப்படைந்து விளங்கிச் சமமாய் நின்ற நிலை (சி.போ.பா.2:2 பக்.161); condition in which the Primordial Matter manifests in itself the three-fold division of primary qualities, *satva, rājas, tāmas* in equal proportion. 2. குண தத்துவத்திற்குரிய உலகம்; the world in which the above condition prevails.

*[குணம் + தத்துவம்.]*

**குணதரன்** *kuṇadaraṉ,* பெ.(n.) 1. நற்குண முள்ளவன்; person of noble character. *"குண தரனாகிய குசனும்" (இரகு.வாகு.1).* 2. முனிவன்; sage. *"குணதரரே முனிமங்கை யரே" (திருநூற்.59).*

*[குணம் + தரன்.]*

**குணதிசை** *kuṇadisai,* பெ.(n.) கிழக்கு; east. *"குணதிசை பாதம் நீட்டி" (திவ்.திருமாலை,19).*

ம. குனதிச

*[குணம் + திசை. குணம் = கிழக்குத்திசை.]*

**குணதோடம்** *kuṇa-tōḍam,* பெ.(n.) **குணத்தீமை** பார்க்க; see *kuṇa-t-tīmai.*

*[குணம் + (தோஷம்) தோடம்.]*

**குணநாற்பது** *kuṇa-nāṟpathu,* பெ.(n.) நாற்பது பாடலாலாகிய இறந்துபட்ட ஒரு பழைய நூல் (தொல்.பொருள்.246, உரை); an ancient poem of 40 stanzas, not extant.

*[குணம் +நாற்பது.]*

**குணநிதி** *kuṇa-nidi,* பெ.(n.) நற்குணம் நிறைந்தவன்; lit., store house of good qualities; person of noble character.

*[குணம் + நிதி.]*

**குணநூல்** *kuṇa-nūl,* பெ.(n.) நாடகத் தமிழ்நூல் களுள் ஒன்று (சிலப்.3:12,உரை); an ancient treatise on the art of dancing.

*[குணம் + நூல்.]*

**குணப்படு-தல்** *kuṇa-p-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. சீர்ப்படுதல்; to change for the better, to reform. 2. நோயினின்று நலமடைதல்; to recover health, as from disease. 3. செழிப்படைதல்; to improve, grow, thrive, as crops. 4. கழிவிரக்கம் கொள்ளுதல்; to repent, to become penitent.

*[குணம் + படு.]*

**குணப்படுத்து-தல்** *kuṇa-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சீர்ப்படுத்துதல்; to make better, reform. 2. நோயைக் குணப்படுத்துதல்; to effect a cure, as of disease.

*[குணம் + படுத்து.]*

**குணப்பண்பு** *kuṇa-p-paṇbu,* பெ.(n.) தன்மை குறிக்கும் பண்புச் சொல் (சீவக.11 உரை); attributes, as qualities of objects.

*[குணம் + பண்பு.]*

**குணப்பிழை** *kuṇa-p-piḻai,* பெ.(n.) குணக்கேடு; bad temper.

*[குணம் + பிழை.]*

**குணப்பெயர்** *kuṇa-p-peyar,* பெ.(n.) 1. பண்பு குறிக்கும் பெயர்ச்சொல் (நன்.132); nouns of qualities, abstract nouns, as கருமை, அழகு. 2. பண்பினடியாகப் பிறந்த பெயர்ச்சொல்; nouns derived from abstract nouns as கரியன், அழகன். 3. சிறப்பியல்புபற்றி மக்கட்குப் புலவரால் கொடுக்கப் பட்டு வழங்கும் பெயர் (பன்னிருபா.147); names given by poets to persons on account of their special qualities .

*[குணம் + பெயர்.]*

**குணபத்திரன்** *kuṇa-pattiraṉ,* பெ.(n.) 1. அருகக் கடவுள் (யாழ்.அக.); arhat. 2. கடவுள்; God.

*[குணம் + பத்திரன்.]*

**குணபம்** *kuṇabam,* பெ.(n.) 1. பிணம்; corpse. *"கோழைய ரவரே யல்லாற் குணபம்வே றுலகத் துண்டோ" (பிரபோத.31:28).* 2. சுடுகாட்டிலுள்ள பேய் (பிங்.); spirit supposed to haunt burning-grounds.

*[குள் → குணம் → குணவம் → குணபம்.]*

**குணபலம்** *kuṇapalam,* பெ.(n.) அதிவிடையம் (மலை.); atees.

*[குணம் + பலம்.]*

**குணபாகம்** *kuṇ-a-pāgam,* பெ.(n.) 1. தன்மையான நிலை; favourable turn, as of a disease. நோய் குணபாகமாயிருக்கிறது (உ.வ.). 2. ஏற்ற பக்குவம்; suitableness of preparation, as in medicine. மருந்தைக் குணபாகமாகச் செய்க (உ.வ.).

*[குணம் + பாகம்.]*

**குணபாசி** *kuṇa-pāši,* பெ.(n.) பிணந்தின்னும் பேய்; evil spirit, demon, as devouring corpses. *"குணபாசி..... நடித்து நின்றயின்றன புறணி" (அரிசமய.பரகா.37).*

*[குணம் + பாசி.]*

**குணபாடம்** *kuṇa-pāḍam,* பெ.(n.) பதார்த்த குணநூல்; that branch of medical science which deals with medicinal drug and their uses (சா.அக.).

*[குணம் + பாடம்.]*

**குணபாடல்** *kuṇa-pāḍal,* பெ.(n.) **குணவாகடம்** பார்க்க; see *kuṇa-vāgaḍam.*

*[குணம் + பாடல்.]*

**குணபாடலியற்றுவோன்** *kuṇa-pāḍaliyaṟṟuvōṉ,* பெ.(n.) நோயின் கூறுப ாடுகளை அறிந்தவன்; one who is thoroughly acquainted with the nature of disease and their symptoms (சா.அக.).

*[குணம் + பாடல் + இயற்றுவோன்.]*

**குணபேதம்** *kuṇa-pētam,* பெ.(n.) 1. குணம் கேடுறுகை; change of disposition for the worse, degeneracy. 2. நோய் நலமாகாத நிலைக்கு மாறுகை; unfavourable symptom of a disease.

*[குணம் + பேதம்.]*

**குணபேதி** *kuṇapēdi,* பெ.(n.) ஒருவரின் பண்பை மாற்றும் மருந்து; any drugs which bring about changes in one's character such as intoxicants, stupefying drug etc (சா.அக.).

*[குணம் + பேதி.]*

**குணம்**[1] *kuṇam,* பெ.(n.) 1. பொருளின் தன்மை; attribute, property, quality. *"அதன் குணங் கருதி" (தொல்.சொல்.416).* 2. ஒழுக்கத் தன்மை; character. *"மாண்ட குணத்தொடு மக்கட்பே றில் லெனினும்" (நாலடி,56).* 3.மூலகுணங்களாகிய சால்பு (சத்துவம்), கொடுமை (ராட்சசம்), மடிமை (தாமசம்); fundamental qualities. 4. கொள்கை (திவா.); opinion, belief. 5. காப்பியத்தைச் சிறப்பிக்கும் செறிவு, தெளிவு முதலிய தன்மை; inherent excellence of style in a poetic composition. *"அவற்றுள் சொற்சுவை குணம் அலங்காரமென இரு வகைத்து" (குறள்,420,உரை).* 6. நன்மை; favourableness. காரியம் குணமாயிற்று (உ.வ.). 7. நலமாதல்; convalescence. நோய் நலமாயிற்று. 8. மேன்மை (உ.வ.); excellence merit, virtue. 9. அறிவுத் தெளிவு; soundness of intellect. 10. நிறம் (பிங்.); colour. 11. கயிறு (திவா.); rope, cord. 12. வில்லின் நாண்; bow-string. *"தன் சிலை .... குணத்தினிசை காட்டினன்" (கந்தபு. அமரர். சிறை.44).* 13. **குணவிரதம்** பார்க்க; see *kuṇa-viradam. "குணநூற்றுக் கோடியும்" (சீவக.2818).*

*[குள் →குணம் (வளைவு, அடங்கிய தன்மை, பணிவு, ஒத்துவரும் இயல்வு, நலம், மேன்மை மேம்பட்டு விளங்கும் நிறம், அறிவு).]*

**குணம்**[2] *kuṇam,* பெ.(n.) குடம் (பிங்.); waterpot, pitcher.

*[குள் (வளைவு) → குணம்.]*

**குணம்**[3] *kuṇam,* பெ.(n.) 1.கடலாற் பள்ளமான கிழக்கு; east.

*[குள் → குண் → குணம் - தாழ்ந்த கீழ்த்திசை.].*

**குணம்பாழ்** *kuṇam-pāḷ,* பெ.(n.) மிதித்தால் திகைப்புண்டாக்கும் மூலிகை; a plant supposed to cause perplexity or bewilderment when touched (சா.அக.).

*[குணம் + பாழ்.]*

**குணம்பேதி–த்தல்** *kuṇam-pēti-t-tal*, செ.கு.வி.(v.i.) பண்பு மாறுதல்; change of temprament of mind or disposition as in some diseases (சா.அக.).

*[குணம் + பேதி.]*

**குணமணி** *kuṇa-maṇi*, பெ.(n.) நற்குணமுள்ளவன்; person of excellent character.

*[குணம் + மணி.]*

**குணமா–தல்** *kuṇam-ā-*, 6 செ.கு.வி.(v.i.) நலமாதல்; to become cured, healed restored to health.

*[குணம் + ஆ.]*

**குணமாக்கு–தல்** *kuṇamākku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. நலப்படுத்துதல்; to cure, heal, restore to health. 2. சீர்திருத்துதல்; to reform, amend, correct.

*[குணம் + ஆக்கு.]*

**குணமாய்ப்பேசு–தல்** *kuṇamāy-p-pēšu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. அறிவோடு பேசுதல்; talking with reason and sense, talking banely. 2. இசிவு, மயக்கம், வலிப்பு முதலியவற்றால் நினைவு தடுமாறிப் பேசுவதினின்று தெளிந்து இயல்பாய்ப் பேசுதல்; after recovery from delirum, giddines fits, etc., involving incoherant talks (சா.அக.).

*[குணமாய் + பேசு.]*

**குணமாய்ப்போ–தல்** *kuṇamāy-p-pō*, 8 செ.கு.வி. (v.i.) நோயினின்று தெளிதல்; to recove from illness (சா.அக.).

*[குணம் + ஆய் + போ.]*

**குணமாலி** *kuṇa-māli*, பெ.(n) மாவிலிங்க மரம்; lingam tree (சா.அக.).

*[குணம் + மாலி.]*

**குணமுள்ளது** *kuṇamuḷḷadu*, பெ.(n.) நலமாகக் கூடியது; that which has curative virtues or healing power. 2. நற்பண்பு வாய்ந்தது; anything having good qualities (சா.அக.).

*[குணம் + உள்ளது.]*

**குணமுள்ளவன்** *kuṇa-muḷḷavaṉ*, பெ.(n.) நற்குணம் உடையவன்; person of noble character.

*[குணம் + உள்ளவன்.]*

**குணமுற்றவன்** *kuṇam-uṟṟavaṉ*, பெ.(n.) நற்குண பண்பு வாய்ந்தவன்; man of good qualities (சா.அக.).

*[குணம் + உற்றவன்.]*

**குணமூலி** *kuṇa-mūli*, பெ.(n.) குணமாக்கும் மருந்துகள்; drugs having healing power, curative drugs (சா.அக.).

*[குணம் + மூலி.]*

**குணலி** *kuṇali*, பெ.(n.) 1. சீந்தில்; moon creeper. 2. செவ்வகத்தி; red sesbane (சா.அக.).

*[குள் (வளைவு) → குண → குணலி.]*

**குணலை**[1] *kuṇalai*, பெ.(n.) 1. ஆரவாரத்துடன் நடிக்குங் கூத்து; a dance attended with shouting *"அந்தணர் குணலை கொள்ள"* (*திருவாலவா. 4,22*). 2. வீராவேசத்தாற் கொக்கரிக்கை; warrior's shout of triumph, valour, or defiance.

*[குணல் (வளைதல், வளைந்தாடுதல்) → குணலை → (கூத்து).]*

**குணலை**[2] *kuṇalai*, பெ.(n.) நாணத்தால் உடல் வளைகை; bending of the body through bashfulness. *"கூச்சமுமாய்ச் சற்றே குணலையுமாய்"* (*பணவிடு.310*).

*[குள் → குணல் → குணலை.]*

**குணலையிடு–தல்** *kuṇalai-y-iḍu-*, 20 செ.கு.வி. (v.i.) 1. கொக்கரித்தல்; to shout. 2. இரைந்து கூத்தாடுதல்; to dance and shout.

*[குணலை + இடு.]

**குணவதம்** *kuṇa-vatam,* பெ.(n.) 1. ***குணவிரதம்*** பார்க்க; see *kuṇa-viratam.* 2. நற்குணம்; good qualities, nobility. *"களியுணர்வி னாரைக் குணவதங் கொளுத்த லாமோ" (சீவக.378).*

*[குணம் + குணவந்தம் → குணவதம்.]*

**குணவதன்** *kuṇavataṉ,* பெ.(n.) 1. நற்குண முடையவன்; person of noble character. *"பரமன் குணவதன் பரத்தி லொளியோன்"(சிலப். 10:181).* 2. குணநோன்பை நோற்பவன் (சிலப்.10:181 உரை); one who observes *kuṇa-nōṉbu.*

*[குணம் + அந்தன்–குணவந்தன் →குணவதன்.]*

**குணவதி** *kuṇavati,* பெ.(n.) நற்குணமுள்ளவள்; woman of noble character.

*[குணம் + அந்தி–குணவந்தி → குணவதி.]*

**குணவந்தன்** *kuṇavandaṉ,* பெ.(n.) ***குணவான்*** பார்க்க; see *kuṇavāṉ.*

*[குணம் + அந்தன்–குணவந்தன்.]*

**குணவல்லபை** *kuṇa-vallabai,* பெ.(n.) அதிவிடயம்; Indian atees (சா.அக.).

*[குணம் + வல்லபை.]*

**குணவாக்கு** *kuṇa-vākku,* பெ.(n.) சிறப்பாயமைந்த பண்பு; peculiar characters.

*[குணம் + வாக்கு.]*

**குணவாகடம்** *kuna-vā-kaḍam,* பெ.(n.) மருந்தின் தன்மை, நோய்க் குறிகளைப் பற்றிக் கூறும் ஒரு மருத்துவ நூல்; a medical treatise on the symptoms of diseases. *"பேர்பெறுங் குணவாகடஞ் சோதித்து" (அறப். சத்.51).*

*[குணம் + வாகடம்.]*

**குணவாகு** *kuṇa-vāgu,* பெ.(n.) பண்பின் இயல்பு; natural disposition (சா.அக.).

*[குணம் + வாகு.]*

**குணவாகுபெயர்** *kuṇa-v-āgu-peyar,* பெ.(n.) பண்புப் பெயர் பண்பிக்கு ஆகி வருவது; noun literally signifying abstract quality used figuratively to denote the concrete object having that quality, as; நீலஞ்சூடினாள்.

*[குணம் + ஆகுபெயர்.]*

நீலஞ்சூடினாள் என்பதில் நீலம் என்னும் பண்புப்பெயர் நீலமலருக்கு ஆகிவந்தது.

**குணவாயில்** *kuṇavāyil,* பெ.(n.) கீழ்த்திசை.

*[குணக்கு + வாயில்.]*

**குணவான்** *kuṇavāṉ,* பெ.(n.) நற்குணமுள்ளவன்; man of noble character.

*[குணம் + ஆன்.]*

**குணவிலக்கணம்** *kuṇa-v-ilakkaṇam,* பெ.(n.) நோயின் பண்பைப் பற்றிய நூல்; a treatise on the nature and symptom and peculiar to a disease (சா.அக.).

*[குணம் + இலக்கணம்.]*

**குணவியன்** *kuṇaviyaṉ,* பெ.(n.) மாணிக்க வகையு ளொன்று; a kind of ruby (S.I.I.ii,78).

*[குணம் → குணவியன்.]*

**குணவிரதம்** *kuṇa-viradam,* பெ.(n.) பெரு நோன்பிற்கு (மகா விரதத்திற்கு) அடுத்தபடியாகக் கொள்ளும் ஒரு சைன நோன்பு (சீவக.2818,உரை); vow of secondary importance.

*[குணம் + விரதம்.]*

**குணவீரபண்டிதர்** *kuṇa-vira-p-paṇḍitar,* பெ.(n.) 13-ஆம் நூற்றாண்டிலிருந்த நேமிநாத நூலாசிரியர்; the author of *Nēminātam* who lived in the 13th century.

*[குணம் + வீரம் + பண்டிதர்.]*

**குணவேற்றுமை** *kuṇa-vēṟṟumai,* பெ.(n.) ஆறாம்வேற்றுமை (தொல்.எழுத்.216, உரை.); genitive case

*[குணம் + வேற்றுமை.]*

**குணன்** *kuṇaṉ,* பெ.(n.) 1. குணமுள்ளவன்; person possessing attributes, qualities used usually in compounds as. எண்குணன். 2. புழு; worm.

*[குணம் + அன்.]*

**குணனம்** *kuṇaṉam,* பெ.(n.) எண்வகைக் கணிதத்துள் ஒன்றாகிய பெருக்கல் (திவா.) ; multiplication, one of *aṭṭa-kaṇidam.*

*[குணல் → குணலம் → குணனம்.]*

**குணனீயம்** *kuṇaṉīyam,* பெ.(n.) பெருக்கற்படுந்தொகை; multiplicand.

*[குணல் → குணலியம் → குணனியம்.]*

**குணாக்கரநியாயம்** *kuṇākkara-niyāyam,* பெ.(n.) மரம், புத்தகம் முதலியவற்றில் புழுவின் அரிப்பு எழுத்தாதல் போலத் தற்செயலாக நேர்வதைக் குறிக்கும் நெறி (நுண்பொருள்மாலை.); illustration of letters formed by chance by worm-mark on wood, leaf of a book, etc., to denote any fortuitous or chance occurence.

*[குணை(புழு) + அக்கரம் (அட்சரம்) + நியாயம்.]*

**குணாகுணம்**[1] *kuṇākuṇam,* பெ.(n.) நன்மையும் தீமையும்; good and evil, merit and defect.

*[குணம் + அகுணம்.]*

**குணாகுணம்**[2] *kuṇākuṇam,* பெ.(n.) நோயின் இயல்வு இயலாமைகள் (யாழ்.அக.); curability or otherwise of a disease.

*[குணம் + அகுணம்.]*

**குணாகுணவிளக்கம்** *kuṇākuṇa-viḷakkam,* பெ.(n.) நோயின் பண்பையும் மாறுபாட்டையும் கூறும் நூல்; a book which tells the nature of a disease with its changes (சா.அக.).

*[குணம் +அகுணம் + விளக்கம்.]*

**குணாகுணா** *kuṇākuṇā,* பெ.(n.) குணுகுணு, மூக்கின் வழியாய்ப் பேசல்; speaking through the nose (சா.அக.). **குணுக்கல்** பார்க்க; see *kuṇukkal.*

*[குணுகுணு → குண, குணா.]*

**குணாசகம்** *kuṇāśāgam,* பெ.(n.) சிறுகாஞ்சொறி; small alimbing nettle (சா.அக.).

*[குணல்(வளைவு) → குணப் + சகம், குணாசகம் (கொ.வ.).]*

**குணாட்டம்** *kuṇaṭṭam,* பெ.(n.) ஒருவகை வரிக்கூத்து (சிலப்.3:13,உரை.); a kind of masquerade dance.

*[குணல் → குணலாட்டம் + குணாட்டம்.]*

**குணாதிசயம்** *kuṇādiśayam,* பெ.(n.) பண்புச் சிறப்பு; excellence of character, qualities, predominent characteristics.

*[குணம் + அதிசயம்.]*

**குணாதிதம்** *kuṇādīdam,* பெ.(n.) குணங் கடந்தது; that which is absolute, above all attributes as referring to God.

*[குணம் (அதைத்தல்) + அதிதம்.]*

**குணாது** *kuṇātu,* பெ.(n.) கிழக்கிலுள்ளது; that which is in the east. *“குணாஅது கரைபொரு தொடுகடல்”(புறநா.6:3).*

*[குணம் (கிழக்கு) – குணாது.]*

**குணாம்பி** *kuṇāmbi,* பெ.(n.) கோமாளி; ludicrous, comical, droll fellow, buffoon.

ம. குணாம்பி

*[குள் → குண → குணம்பி → குணாம்பி (குழப்புபவன், நகையாட்டு செய்பவன்).]*

**குணாம்பு[1]—தல்** *kuṇāmbu-,* 5 செ.கு.வி.(v.i.) பகடி பேசுதல்; to speak insultingly, to taunt, to use invective, irony, sarcasm.

ம. குணாப்பிக்குக

*[குள் → குண → குணம்பு → குணாம்பு.]*

**குணாம்பு[2]** *kuṇāmbu,* பெ.(n.) பகடி; merry talk, drollery, idle joke.

*[குள் → குண → குணம்பு → குணாம்பு.]*

**குணாலம்[1]** *kuṇālam,* பெ.(n.) ஒருவகை மகிழ்ச்சிக் கூத்து; riotous dancing. *"குணாலடித் திரிமினோ" (திவ்.பெரியாழ்.4:6.9).* 2. வீரத்தால் முழக்கமிடுகை; warrior's shout of trimph. *"குணாலமிடு சூரன்" (திருப்பு.185).*

*[குணல் → குணலம் → குணாலம் (வளைந்தாடுதல்.]*

**குணாலயம்[2]** *kumālayam,* பெ.(n.) ஒரு பறவை; a bird. *"காகங் குணாலஞ் சிலம்புமே"(கம்பரா. ஊர் தேடு. 151).*

*[குணலம் → குணாலம்.]*

**குணாலயன்** *kuṇālayaṉ,* பெ.(n.) குணங்களுக்கு இருப்பிடமானவன்; one who is the abode of all virtues.

*[குணம் + ஆலயன்.]*

**குணாலை** *kuṇālai,* பெ.(n.) **குணலை** (சிலப்.3:13 உரை, பக். 89) பார்க்க; see *kuṇalai.*

*[குணலை → குயாலை.]*

**குணாளன்** *kuṇāḷaṉ,* பெ.(n.)நற்குணமிக்கவன்; person of noble character. *"ரட்சிக்குங் குணாளனே" (கவிகுஞ்.10).*

*[குணன் → குணாளன்.]*

**குணானுபவம்** *kuṇāṉubavam,* பெ.(n.) பண்பின் நுகர்ச்சி; experience of nature as of diseases (சா.அக.).

*[குணம் + அனுபவம் (குணநுகர்ச்சி).]*

**குணி[1]** *kuṇi,* 1. பண்பி; object, as possessing attributes; குணத்தின் பெயர் குணிமேல் நின்றது (குறள்,53,உரை). 2. நற்குணமுடையவன்; one endowed with good qualities.

*[குணம் → குணி.]*

**குணி[2]** *kuṇi,* பெ.(n.) 1. முடமானது (சூடா.); that which is lame. 2. சொத்தைக் கையன்; person with a withered hand, useless arm. *"கஞ்சன் குணி கூனன்"(சைவச.ஆசா.10).*

*[குள்→குண→குணி]*

**குணி[3]—த்தல்** *kuṇi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கணித்தல்; to estimate calculate, compute, reckon. *"அவர்குழுக் குணிக்கின்" (கந்தபு. அசுரர்தோ.25).* 2. ஆய்தல் (ஆலோசித்தல்); to reflect, consider. *"கொணரும்வகை யாவதெனக் குணிக்கும் வேலை" (கம்மரா.திருவவ.38).* 3. வரையறுத்தல் (திவா.); to determine, define, limit. 4. பெருக்குதல்; to multiply.

*[குழித்தல் = பெருக்குதல். குழி→குணி]*

**குணி[4]** *kuṇi,* பெ.(n.) வில் (யாழ்.அக.); bow.

*[குள் + குணி]*

**குணிக்கரி—த்தல்** *kuṇikkari-,* 4 செ.கு.வி.(v.i.) பெருக்கல்; multiplicate.

*[குழி→குணி + கரி.]*

**குணிக்காரம்** *kuṇi-k-kāram,* பெ.(n.) பெருக்கல் (யாழ்.அக.); multiplication.

*[குணகு → குணிகு → குணிக்காரம்.]*

**குணிதம்** *kuṉidam,* பெ.(n.) 1. பெருக்கி வந்த தொகை; product of multiplication. 2. மடங்கு; fold, as in two-fold. *"இவற்றி னிருகுணிதஞ் செய்திடுக" (சைவச.பொது.16).*

*[குழி → குணி → குணிதம்.]*

**குணிப்பானவன்** *kuṉippāṉavaṉ,* பெ.(n.) நன்கு மதிக்கற்பாடுடையவன்; a respected person.

*[குணிப்பு + ஆனவன்.]*

**குணிப்பு** *kuṉippu,* பெ.(n.) 1. அளவு; estimate, reckoning. *"சேனையின் குணிப்பி லாமையும்" (கம்பரா.பிணிவீ.23).* 2. ஆராய்ச்சி; investigation, consideration. *"குணிப்பின்றி...... பணித்த பிரான்" (திருநூற்.23).* 3. மதிப்பு; esteem regard குணிப்பான மனிதன் (இ.வ.).

*[குழி → குணி → குணிப்பு]*

**குணிப்பெயர்** *kuṉi-p-peyar,* பெ.(n.) பண்பியைக் காட்டும் பெயர்ச்சொல்; concrete noun, dist fr. kuṇa-p-peyar as கரியன்.

*[குணம் → குணி + பெயர்.]*

**குணில்** *kuṉil,* பெ.(n.) 1. குறுந்தடி; short - stick, cudgel. *"கரும்பு குணிலா மாங்கனி யுதிர்க்கும்" (ஐங்குறு.87).* 2. பறையடிக்கும் கடிப்பு; drum stick *"குணில்பாய் முரசி னிரங்கு மருவி" (புறநா.143:9).* 3. கவண் (பிங்.); sling.

*[குள் → குணல் → குணில் (வளைவானது).]*

**குணிறு** *kuṉiṟu,* பெ.(n.) தடிக்கம்பு; stick. *"பிடித்தாயமா மடப்பாவைநீள், குணிற்றால் விடா தடித்தேகவே" (நூற்றெட்டுத்.திருப்புகழ்.12).*

*[குள் → குணில் → குணிறு]*

**குணு** *kuṉu,* பெ.(n.) 1. வளைவு ; bend. 2. புழு (அக.நி.); worm, meggot.

*[குள் (வளைவு) → குணு.]*

**குணுக்கம்** *kuṉukkam,* பெ.(n.) வருத்தம் (யாழ்.அக.); suffering, distress.

*[குள் → குணு → குணுக்கம்.]*

**குணுக்கன்** *kuṉukkaṉ,* பெ.(n.) மூக்காற் பேசுபவன் (யாழ்.அக.); one who talks through his nose.

*[குணுக்கு + அன்.]*

**குணுக்கு[1]-தல்** *kuṉukku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. வளைத்தல்; to bend. 2. நுணுக்குதல்; to powder.

*[குள் → குணு → குணுக்குதல்.]*

**குணுக்கு[2]** *kuṉukku,* பெ.(n.) 1. கடிப்பிணை என்னும் காதணி (பிங்.) ; an ear - ornament. 2. செவி வடித் தற்கு இடும் குதம்பை (சினேந்.109, உரை); ring of lead or brass suspended in the lobe of the ear to stretch it. 3. மீன்வலையின் ஈயக்குண்டு; lead for a fish-net. 4. வெள்ளி; silver. 5. பணியாரவகை; a kind of sweet meat.

ம. குணுக்கு

*[குள் → குணுக்கு.]*

காது வளர்க்கும் போது அணிவது குதம்பையும், வளர்த்தபின் அணிவது குழையும் கடிப்பிணையுமாகும். குதம்பை இன்று குணுக்கு என வழங்குகின்றது (பண்.நா.ப.64).



குணுக்கு

**குணுக்குத்தடி** *kuṇukku-t-taḍi,* பெ.(n.) இரும்புப் பூணிட்ட கனத்த கழி; club or heavy stick with an iron ferrule.

*[குணுக்கு + தடி.]*

**குணுகினி** *kuṇugiṉi,* பெ.(n.) நோய்க் குறுமி (கிருமி)க் கொல்லி; a remedy which expels worms from animal bodies (சா.அக.).

*[குணுகு → குணுகினி.]*

**குணுகு-தல்** *kuṇugu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கொஞ்சுதல்; to caress, prattle, talk pleasantly. *"குணுகியிட்டுள பொருள் பறித்து" (திருப்பு.676).* 2.வளைதல்; to bend.

க. குணுகு

*[குள் → குணு → குணுகு..]*

**குணுகுணு-த்தல்** *kuṇu-kuṇu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. மூக்காற்பேசுதல்; to speak through the nose. 2. முணுமுணுத்தல்; to whine, murmur, grumble.

ம. குணுகுணுக்குக; க. கொணகு; து. குணுகுணு, குணுகுட்டு, குனகுன

*[குணுகுணு = ஒலிக்குறிப்பு. ஒ.நோ. முணுமுணு.]*

**குணுகுணெனல்** *kuṇu-kuṇeṉal,* பெ.(n.) முணுமுணுத்தற்குறிப்பு; onom. expr. signifying whimpering, whining.

*[குணுகுணு + எனல்.]*

**குணுங்கர்** *kuṇṅgar,* பெ.(n.) 1. இழிந்தோர்; base, vile, persons. 2. புலையர்; low caste men *"கவ்வித்தோ றின்னுங் குணுங்கர்நாய்" (நாலடி,322).* 3. தோற்கருவியாளர் (திவா.); drummers. 4. குயிலுவர் (சூடா.); lute-players.

*[குணுங்கு → குணுங்கர்.]*

**குணுங்கலூர்வெட்டு** *kuṇuṅgalūr-veṭṭu,* பெ.(n.) பழையநாணயவகை (பணவிடு.32); an ancient coin.

*[குணுங்கலூர் + வெட்டு.]*

**குணுங்கு¹-தல்** *kuṇuṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) வருந்துதல் (யாழ்.அக.).; to suffer; to be in distress.

*[குள் → குணு → குணுங்கு.]*

**குணுங்கு²** *kuṇuṅgu,* பெ.(n.) 1. பேய் (உரி.நி.); devil, goblin. 2. கொச்சை நாற்றம்; smell of cattle, buffer,etc. *"வெண்ணெ யளைந்த குணுங்கும்" (திவ்.பெரியாழ்.2.4:1).*

ம. குணுக்குமணம்

*[குள் → குணு → குணுக்கு.]*

**குணேட்டம்** *kuṇēṭṭam,* பெ.(n.) அதிவிடயம் என்னும் மருந்துச் சரக்கு; a bazzar drug called Indan ateas (சா.அக.).

*[குள் → குணட்டம் → குணேட்டம்.]*

**குணேடகம்** *kuṇēḍagam,* பெ.(n.) **குணேட்டம்** பார்க்க; see *kuṇēṭṭam.*

*[குள் → குணேட்டம் → குணேடகம்.]*

**குணைவண்டு** *kuṇai-vaṇḍu,* பெ.(n.) வண்டு வகை; a kind of beetle.

*[குள் → குணை + வண்டு.]*

**குத்தகை** *kuttagai,* பெ.(n.) 1. நிலக்குத்தகை ஒப்பந்தம்; contract of lease. *"பொழில் குத்தகையாத் தந்தீர்" (குமர.பிர.திருவாரூர்.27).* 2. குத்தகைத் தொகை; lease amount.

தெ.து. குத்த க.guttige ம. குத்தக

*[கொத்து → குத்து → குத்தகை.]*

**குத்தகைக்கடை-த்தல்** *kuttagaikkaḍai-,* 4 செ.குன்றாவி. (v.t.) குத்தகைக்குக் கொடுத்தல்; to let out, farm, lease out, as land.

*[குத்தகைக்கு + அடை-.]*

**குத்தகைக்காரன்** *kuttakai-k-kāraṉ,* பெ.(n.) குத்தகை வாங்குபவன்; contractor, lessee.

*[குத்தகை + காரன்.]*

**குத்தகைச்சரக்கு** *kuttagai-c-carakku,* பெ.(n.) ஒப்பந்தம் செய்த சரக்கு; goods secured by contract.

*[குத்தகை + சரக்கு.]*

**குத்தகைச்சீட்டு** *kuttagai-c-cīṭṭu,* பெ.(n.) குத்தகை ஆவணம்; lease deed.

*[குத்தகை + சீட்டு.]*

**குத்தகைதாரன்** *kuttagai-dāraṉ,* பெ.(n.) ***குத்தகைக் காரன்*** பார்க்க; see *kuttagai-k-kāraṉ.*

*[குத்தகை + தாரன்.]*

**குத்தகைப்பொருள்** *kuttagai-p-poruḷ,* பெ.(n.) குத்தகை ஒப்பந்தப்படி கட்டவேண்டிய பொருள்; money payable by a lessee for the lease.

*[குத்தகை + பொருள்.]*

**குத்தகைமாறுதல்** *kuttagai-māṟudal,* பெ.(n.) குத்தகைக் காலம் முடிவு பெறுகை; expiry of the period of lease.

*[குத்தகை + மாறுதல்.]*

**குத்தகையெடு–த்தல்** *kuttagai-y-eḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) குத்தகைக்கு வாங்குதல்; to obtain a contract of lease.

*[குத்தகை + எடு.]*

**குத்தசி** *kuttaśi,* பெ.(n.) உயர் முத்து; superior solid pearls (சா.அக.).

*[குத்தச்சி → குத்தசி → குரு – ஒளி.]*

**குத்தம்** *kuttam,* பெ.(n.) எருது (பிங்.); bull.

*[குட்டம் + குத்தம்.]*

**குத்தரசம்** *kuttaraśam,* பெ.(n.) பெருங்காயம் (மூ.அ.); asafoetida.

*[குய்த்தல் + அசம் → குய்த்தலசம் → குய்த்தரசம்.]*

**குத்தல்**[1] *kuttal,* பெ.(n.) 1. உடம்பின் உள்நோவு; internal pain, aching, throbbing. உடம்பிற் குத்தலுங் குடைச்சலும் பொறுக்க முடியவில்லை (உ.வ.). 2. மனம் நோகச் செய்கை; hitting, wounding. அவன் பேச்சு எப்போதும் குத்தல்தான் (உ.வ.). 3. தெருவிற்கு எதிராக வீடு அமைந்திருப்பது முதலிய குற்றம்; inauspicious position, as of a house opposite to a street, a well opposite to a doorway. 4. நீர்க்குத்தலான இடம்; land or site exposed to the dash of water-currents. 5. ***குத்தலரிசி*** (இந்துபாக.54) பார்க்க; see *kuttal-ariśi.*

**ம.** குத்தல்; **து.** குத்தட, குத்தாட; **கோத.** குத்ல்; **பட.** குத்தலு

*[குத்து → குத்தல்.]*

**குத்தல்**[2] *kuttal,* பெ.(n.) கொடுக்கை (அக.நி.); giving.

*[குல் → குத்து.]*

**குத்தலம்** *kuttalam,* பெ.(n.) முக்குருந்து; wild lime (சா.அக.).

*[குற்றலம் → குத்தலம்.]*

**குத்தலரிசி** *kuttal-ariśi,* பெ.(n.) குற்றித்தீட்டிய அரிசி; husked rice. *"குத்தலரிசி இருநாழியும்" (S.I.I.III,96).*

*[குத்தல் + அரிசி.]*

**குத்தலை** *kuttalai,* பெ.(n.) மேட்டுப்பாங்கான இடத்தில் விளையும் ஒரு வகை நெல்; paddy growing on high ground.

**ம.** குத்தல

*[குத்து → குத்தலை.]*

**குத்தவை–த்தல்** *kutta-vai-,* 4 செ.கு.வி.(v.i.) குந்துதல்; to sit on the heels.

*[குந்து → குத்து → குத்த + வை.]*

**குத்தவைத்தல்** *kuttavaittal,* பெ.(n.) புட்டம் நிலத்திற் படியுமாறு உட்கார்தல் (நெல்லை); a kind of sitting position.

*[குத்து → குத்த + வைத்தல்.]*

**குத்தன்** *kuttaṉ,* பெ.(n.) 1. காப்பவன்; protector. *"விசுவ குத்தனாகி" (சேதுபு.சேதுயாத்.13).* 2. வைசியர் பட்டப்பெயர்; a Vaišya title. *"அரதன குத்த னென்னும்..... பெருங்குடி வணிகன்" (செவ் வந்திப்பு.தாயான.8).* 3. குப்த குல அரசன் (கலிங்.319, புதுப்.); king of the Gupta family.

*[காப்பன் → குப்பன் > Skt Gupta > → குத்தன்.]*

**குத்தாகம்** *kuttāgam,* பெ.(n.) 1. ஓர் அடிக்குள் வளர்வதும், சளி, காய்ச்சலுக்கு மருந்தாகும் தன்மையுடையதுமான குட்டிவிளா எனும் சிறிய பூடு; it's a small plant of the earonia genus about 1ft hight which cures cold and fever (சா.அக.). 2. மருந்துச் செடி; herbaclous plant.

*[குத்து → குத்தகம் → குத்தநாகம்.]*

**குத்தாங்கல்** *kuttāṅ-gal,* பெ.(n.) செங்குத்தாக வைக்கும் கல் அல்லது செங்கல்; stone or brick laid upright on edge.

*[குத்து + ஆம் + கல்.]*

**குத்தாணி** *kuttāṇi,* பெ.(n.) மரக்கைப்பிடியமைந்த நீண்ட ஊசி வகை; a long needle with a wooden handle.

ம. குத்தாணி

*[குத்து + ஆணி.]*

**குத்தாமணக்கு** *kuttāmaṇakku,* பெ.(n.) உரலா மணக்கு; species of castor-plant.

*[குத்து + ஆமணக்கு.]*

**குத்தாமணி** *kuttāmaṇi,* பெ.(n.) உத்தாமணி; hedge - twiner.

*[கொத்து → குத்து + ஆமணி.]*

**குத்தாமற்குத்து-தல்** *kuttāmaṟ-kuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. குறிப்பாகக் குற்றத்தைச் சொல்லிக் காட்டுதல்; to make a covert, sarcastic hit at a person. 2. காயம்படாமற் குத்துதல்; causing contusion without intlicting apparant injury (சா.அக.).

*[குத்தாமல் + குத்து.]*

**குத்தார்க்கு** *kuttārkku,* பெ.(n.) குத்தூசியால் வாங்கித் தைக்கும் பனைமட்டைநார்; palmyra with or card used for stitching with *kuttūši*

*[குத்து + ஆர்க்கு. ஈர்க்கு → ஆர்க்கு.]*

**குத்தாலம்** *kuttālam,* பெ.(n.) திருவாத்தி (மலை.); holy mountain ebony.

*[குத்து + ஆலம்]*

**குத்தாலா** *kuttāla,* பெ.(n.) கடுகுச்சிவலை (மலை.); Christmas rose.

*[குற்று + ஆல் – குற்றால் → குற்றாலா → குத்தாலா.]*

**குத்தாவகம்** *kuttāvagam,* பெ.(n.) சணல்; hemp, flas (சா.அக.).

*[குறு → குற்று + ஆவகம் – குற்றாவகம் – குத்தாவகம்.]*

**குத்தாளை** *kuttāḷai,* பெ.(n.) வானவாரியாக (மழையின் உதவியால் மட்டும்) விளையும் நெல் வகை (G.T.J.D. 1.95); a paddy growing only with the help of rain.

*[குறு + தாள் – குற்றாள் → குத்தாள் → குத்தாளை.]*

**குத்தி**[1] *kutti,* பெ.(n.) ***குற்றி*** பார்க்க; see *kuṟṟi*

*[குற்றி → குத்தி.]*

**குத்தி**[2] *kutti,* பெ.(n.) 1. கோணி மூட்டையினின்றும் அரிசி முதலியவற்றைக் குத்தியெடுக்குங் குத்தூசி; iron probe to test the contents of a sack, as of

grain, sugar, etc. 2. கலப்பைக்கூர் (செந்.4:212); coulter of a plough.

மறுவ. மூட்டைக்குத்தூசி

*[குத்து + குத்தி]*

**குத்தி**[3] *kutti,* பெ.(n.) மனம், மெய், மொழி ஆகிய முப்புலனடக்கம்; restraint, as in thought, speech, or deed. *"குற்றம் விட்டார் குத்திமூன் றுடையார்" (திருநூற்.75).*

*[குள் – குத்து (அடக்குதல்) → குத்தி]*

**குத்தி**[4] *kutti,* பெ.(n.) 1. குப்பி; bottle. *"குத்தியி லரக்குங் கள்ளும்" (குற்றா.குற.118:3).* 2. எண்ணெய் வைத்தற்குதவும் சிறுகுடுவை; cruet, vial for oil or ointment.

*[குறு → குற்றி → குத்தி]*

**குத்தி**[5] *kutti,* பெ.(n.) மண் (சூடா.); earth, ground, soil.

*[கொத்து → கொத்தி → குத்தி]*

**குத்தி**[6] *kutti,* பெ.(n.) மாறுபாடு; wrangle. *"குத்திபடும் வாதுபொரு ளொத்த மருங்கினாள்" (காளத்.உலா,427).*

*[குள் → குத்து → குத்தி]*

**குத்திக்காட்டு-தல்** *kutti-k-kāttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) ஒருவன் குற்றத்தைச் சுட்டிக் காட்டி அவன் மனத்தைப் புண்படச் செய்தல்; to wound one's feelings by bluntly pointing out his weakness.

*[குத்தி + காட்டு]*

**குத்திக்கொல்லன்** *kutti-k-kollan,* பெ.(n.) படையாளனாய்க் கருவூலங் கொண்டு செல்பவன்; a person with the *cinkāni* bow employed to carry treasure.

தெ. golla.

*[குத்தி + கொல்லன்.]*

**குத்திச்சரித்தல்** *kutti-c-cari-,* 4 செ.குன்றாவி. (v.t.) வயிற்றில் குத்திக் குடலை வெளிப்படுத்தல்; bringing out the bowels or entrails by stabbing in the abdomen (சா.அக.).

*[குத்தி + சரி.]*

**குத்திச்செருப்பு** *kutti-c-ceruppu,* பெ.(n.) குதியிற் கனமுள்ள செருப்பு; shoes with thick soles.

*[குத்தி + செருப்பு]*

**குத்திச்சேவகன்** *kutti-c-cēvagan,* பெ.(n.) படைகலம் ஏந்தி கருவூலப் பணம் எடுத்துச் செல்லப் பாதுகாப்பு அளிக்கும் பணியாளன்; a person armed with weapon employed to carry treasure.

*[குத்தி + சேவகன்.]*

**குத்திடி** *kuttiḍi,* பெ.(n.) 1. கடல்மீன்வகை; a genus of sea-fish. 2. பொன்னிறங் கொண்ட கடல் மீன்வகை; a sea-fish, more or less golden, attaining 20 inch in length.

*[குத்தி → குத்திடி]*



குத்திடி.

**குத்திப்பாய்ச்சு-தல்** *kutti-p-pāyccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) கட்டடத்தின் சந்துகளிற் சல்லிச் சுண்ணாம்பினாற் வலுப்படுத்துதல் (கட்டட.நாமா.); to underpin.

*[குத்தி + பாய்ச்சு.]*

**குத்திப்பிடுங்கு-தல்** *kutti-p-pidungu-,* 5 செ.கு.வி. (v.i.) கக்கல் உணர்வு உண்டாதல்; to have a tendency to vomit. *சோற்றைக் கண்டால் அவனுக்குக் குத்திப் பிடுங்குகிறது (கொ.வ.).*

*[குத்தி + பிடுங்கு.]*

**குத்திப்பேசு-தல்** *kutti-p-pēšu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நோவுண்டாம்படி ஒருவரைச் சுட்டிப் பேசுதல்; to make a cutting remark by using wounding words.

*[குத்தி + பேசு.]*

**குத்தியள-த்தல்** *kutti-y-aḷa-,* 3 செ.குன்றாவி.(v.t.) அளவுக் கருவியைத் தவசத்தில் பாய்ச்சியளத்தல்; to measure by diving the measure deep into the grain (கொ.வ.).

*[குத்தி + அள.]*

**குத்தியிருமல்** *kutti-y-irumal,* பெ.(n.) புகைந்து இருமும் இருமல்; coughing often due to irritation (சா.அக.).

*[குத்தி + இருமல்.]*

**குத்தியோட்டம்** *kutti-y-ōṭṭam,* பெ.(n.) இரண்டு விலாப் பக்கங்களிலும் கூரான கம்பிகளைக் குத்திக் கொண்டு கோயிலை வலம்வரும் ஒரு நேர்வு; fulfilment of a vow by going round a temple with sharp spikes thrust on the sides (இ.வ.).

ம. குத்தியோட்டம்

*[குத்தி + ஓட்டம்.]*

**குத்திரக்காரன்** *kuttira-k-kāraṉ,* பெ.(n.) வஞ்சகன்; decitful, crafty fellow.

*[குத்திரம் + காரன்.]*

**குத்திரப்பேச்சு** *kuttira-p-pēccu,* பெ.(n.) இகழ்ந்துரைக்கும் சுடுசொல்; sarcastic language,cutting speech.

*[குத்திரம் + பேச்சு.]*

**குத்திரம்**[1] *kuttiram,* பெ.(n.) 1. வஞ்சகம் (திவா.); deceit, guile, craftiness. 2. இழிவு; vilensss, baseness *"குத்திரமெய்ப் புறகத்து" (தாயு.எந்நாட். அன்புநிலை.4).* 3. ஏளனச்சொல்; sarcasam, irony, cutting speech or allusion, insinuation. 4. குரூரம்; cruelty, inhumanity.

ம. குத்திரம்

*[குத்து → குத்திலம் → குத்திரம் (இ.வ.).]*

**குத்திரம்**[2] *kuttiram,* பெ.(n.) மலை (பிங்.); hill, mountain.

*[குன்று → குற்று → குற்றிரம் → குத்திரம் (கொ.வ.).]*

**குத்திரம்**[3] *kuttiram,* பெ.(n.) பொய் (யாழ்.அக.); falsehood.

*[குள் (வளைவு–பொய்) → குட்டிரம் → குத்திரம்.]*

**குத்திரவித்தை** *kuttira-vittai,* பெ.(n.) 1. தந்திரம்; craftiness, subtlety, knavery. 2. கரும்வித்தை; sorcery, black magic.

*[குத்திரம் + வித்தை.]*

**குத்திருமல்** *kuttirumal,* பெ.(n.) கக்குவானிருமல்; whooping cough.

*[குத்து + இருமல்.]*

**குத்திலை** *kuttilai,* பெ.(n.) தொன்னை; cup made of leaf (இ.வ.);a container made of stitched leaves.

ம. குத்தில

*[குத்து + இலை.]*

**குத்திவை-த்தல்** *kutti-vai,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஊற்றுதல்; to pour. விளக்கில் எண்ணெய் ஊற்றி வைத்தல். (உ.வ.). 2. நிறுத்திவைத்தல்; to put right to street. மூட்டையைக் குத்திவை (உ.வ.).

*[குத்தி + வை.]*

**குத்தீட்டி** *kuttiṭṭi* பெ.(n.) ஈட்டி வகை; poniard.

*[குத்து + ஈட்டி.]*


குத்தீட்டி

**குத்து[1]-தல்** *kuttu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. ஊசி முதலியவற்றால் துளையிடுதல்; to puncture, pierce, bore, perforate. *"உன்னைக் காதுகுத்த" (திவ்.பெரியாழ்.2,3,1).* 2. ஊசியாற் குத்துதல்; to stab, wound. 3. தைத்தல்; to sew. *"பூம்புன னுரையும் புரையக் குத்தி" (பெருங்.வத்தவ.12:48).* 4. கொம்பினால் முட்டுதல்; to gore *"வைவாய் மருப்பினான் மாறாது குத்தலின்" (கலித்.106:12).* 5. முட்டியினாற் குத்துதல், இடித்தல்; to strike with the fist, cuff, buffet, box. *"குத்துமோதை" (கம்பரா. வாலிவ.43).* 6. புள்ளிகுத்துதல்; to insert punctuation marks, to draw a line of dots. 7. முத்திரை குத்துதல்; to stamp, impress. 8. உலக்கையால் இடித்தல்; to pound as in mortar. 9. துப்பாக்கி முதலியன கெட்டித்தல்; to ram down, as in a gun (W.). 10. பறித்தல்; to pick off, pluck, as young coconuts. குரும்பை குத்தினான் (யாழ்ப்.). 11. களைதல் (பிங்.); to remove. 12. பறவை கொத்துதல்; to peck, strike with beak, as a stork, crow. 13. தின்னுதல்; to feed on, pick up, as a bird. *"கானக்கோழி கதிர்குத்த" (பொருந.222).* 14. ஊன்றுதல்; to plant, set, fix in the ground. *"பூந்தலைக் குந்தம் குத்தி" (முல்லைப்.41).* 15. செங்கல் முதலியவற்றைச் செங்குத்தாக வைத்தல்; to set on edge, as bricks in arching terracing. கல்லைக் குத்திக் கட்டு (உ.வ.). 16. கிண்டுதல்; to dig, break up, hollow out *"வையை கொதித்த கண்கரை குத்தி" (திருவிளை. விடை.10).* 17. சுடுசொற் சொல்லுதல்; to make cutting remarks; to use wounding words. அவனை அடிக்கடி குத்தாதே (உ.வ.). 18. சிறுக வார்த்தல்; to pour out as a liquid, in small quantities (கொ.வ.). 19. வருத்துதல்; to afflict, injure. அவன் செய்த பாவம் அவனைக் குத்துகிறது (உ.வ.). 20. தடைசெய்தல்; to thwart, defeat, as a design, to appose, as a measure or scheme.

**ம.** குத்துக; **க., பட.** குத்து; **தெ.** குத்து, க்ருத்து; **து.** குத்துனி; **கோத., துட.** குத்; **குட.** குத்த்; **கூ.** குத; **குவி.** குத்தினை; **பிரா.** குத்திங்

*[குள் → குத்து.]*

**குத்து[2]-தல்** *kuttu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. தலை முதலியன குத்துநோவெடுத்தல்; to pain, ache, as the head. 2. எதிர்க்கெடுத்தல்; to puke, vomit, belch up. உண்ட சோறு நெஞ்சிற் குத்துகிறது (உ.வ.). 3. உறைமோர் ஊற்றுதல்; to pour buttermilk for curdling. *பாலில் உறைமோர் குத்திவை.*

*[குல் → குத்து.]*

**குத்து[3]-தல்** *kuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. துளித் துளியாய் விடுதல்; pouring in drops as into the ear or eye. 2. எண்ணெய் குத்தல்; letting oil in drops. 3. கத்தியாற் குத்தல்; stabing with a knife (சா.அக.).

*[குல் → குத்து.]*

**குத்து[3]** *kuttu,* பெ.(n.) 1. கைமுட்டியால் தாக்கும் இடி; blow with the fist, cuff, buffet, box. *"கைக்குத்தது படலும்" (கம்பரா.முதற்போ.176).* 2. ஈட்டி முதலிய வற்றால் தாக்குகை; thrust, stab, puncture, prick, incision, goading. 3. உரலிற்குத்துகை; pounding as in a mark. 4. புள்ளி; dot, point, stop, punctuation mark. 5. நோவு; acute pain, twing, ache. *"தலைகுத்துத் தீர்வு சாத்தற்கு" (வள்ளுவமா.11).* 6. பிடி; handful. ஒருகுத்துச் சோறு (உ.வ.). 7. செங்குத்து; perpendicularity, steepness. 8.

தெரு முதலியவற்றின் பாய்ச்சல்; inauspicious position as of a house opposite to a street, or a well opposite to a doorway.

ம. குத்து

*[குல் → குத்து.]*

**குத்து** *kuttu,* பெ.(n.) சணல்; sunn hemp.

*[குள் → குத்து.]*

**குத்துக்கட்டை** *kuttu-k-kaṭṭai,* பெ.(n.) ஒன்றைத் தாங்குவதற்கு நட்டு நிறுத்தப்படும் கட்டை; log of wood planted, as a prop.

*[குத்து + கட்டை.]*

**குத்துக்கண்டங்கத்தரி** *kuttu-k-kaṇḍaṅkattari,* பெ.(n.) கொத்துக் கொத்தாக முளைக்குங் காட்டு கண்டங்கத்தரி; cluster brinjal (சா.அக.).

*[குத்து + கண்டங்கத்தரி.]*

**குத்துக்கம்பி** *kuttu-k-kambi,* பெ.(n.) காது முதலியன குத்துங் கம்பி; wire used to pierce the ear or nose.

*[குத்து + கம்பி.]*

**குத்துக்கம்பு** *kuttu-k-kambu,* பெ.(n.) நுனி கூர்மையான கழி; stick with a sharp end.

ம. குத்துக்கம்பு

*[குத்து + கம்பு]*

**குத்துக்கரணம்** *kuttu-k-karaṇam,* பெ.(n.) குட்டிக் கரணம்; somersault (W.)

*[குட்டிக்கரணம் → குத்துக்கரணம்.]*

**குத்துக்கரந்தை** *kuttu-k-karandai,* பெ.(n.) செடிவகை; a species of fleabane.

*[குத்து + கரந்தை.]*

**குத்துக்கல்** *kuttu-k-kal,* பெ.(n.) 1. செங்குத்தான கல்; stone standing on edge. 2. செங்குத்தாக வைத்துக் கட்டுஞ் செங்கல்; bricks placed on edge, as in arching, terracing. 3. ஏரிநீரின் ஆழத்தைக் காட்டும் அளவுகல்; stone marking the depth of water in a tank.

ம. குத்துகல்லு

*[குத்து + கல்.]*

**குத்துக்கழி** *kuttu-k-kaḻi,* பெ.(n.) கட்டை வண்டியின் பாரில் இருபக்கத்திலும் நடும் கழி; short stout stokes planted on either side of a topless cart.

*[குத்து + கழி.]*

**குத்துக்காயம்** *kuttu-k-kāyam,* பெ.(n.) ஆயுதங் கொண்டு குத்துவதனால் உண்டாகிய புண்; incised wound, stab.

*[குத்து + காயம்.]*

**குத்துக்காரி** *kuttu-k-kāri,* பெ.(n.) கூலிக்கு நெல் முதலியன குற்றுபவள்; woman whose work is to pound paddy,lime etc.

*[குத்து + காரி]*

**குத்துக்காரை**[1] *kuttu-k-kārai,* பெ.(n.) காரைச் செடி வகை; a small species of *kārai* shrub.

*[குத்து + காரை]*

**குத்துக்காரை**[2] *kuttu-k-kārai,* பெ.(n.) குற்றிய கலவைச் சுண்ணாம்பு; mortar mixed and pounded.

*[குத்து + காரை]*

**குத்துக்கால்** *kuttu-k-kāl,* பெ.(n.) 1. தாங்குகால் (C.E.M.) ; upright stand of a frame, as of a car, side post; support, as of a roof. 2. நெசவுத் தறியின் ஓர் உறுப்பு (M.M.41.); upright post of a loom. 3. தடை; obstruction, impediment, hindranece. *"பணி குத்துக்காற்படாது செய்விப்பது" (T.A.S. i,6).*

*[குத்து + கால்]*

**குத்துக்காலிடு–தல்** *kuttu-k-kāl-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) காலைக் குத்திட்டு உட்காருதல்; to sit upright with folded legs.

*[குத்து + கால் + இடு.]*

**குத்துக்காற்சம்மட்டி** *kuttu-k-kāṟ-cam-maṭṭi,* பெ.(n.) செடிவகை; a plant, Indigofera pancifolia.

*[குத்து + கால் + சம்மட்டி.]*

**குத்துக்காற்சிமிட்டி** *kuttu-k-kāṟ-cimiṭṭi,* பெ.(n.) கீல்வாதம்; முழங்கால் வளி முதலிய வாதவலிக்குப் பயன்படுத்தும் ஒரு பச்சிலை; a plant useful for arthritic and rheumatic complaints (சா.அக.).

*[குத்து + கால் + சிமிட்டி.]*

**குத்துக்காற்பயறு** *kuttu-k-kāṟ-payaṟu,* பெ.(n.) உளுத்தம் பயறு; black gram (சா.அக.).

*[குத்துக்கால் + பயறு.]*

**குத்துக்குடைச்சல்** *kuttu-k-kuḍaiccal,* பெ.(n.) வளியால் (வாயுவால்) உண்டாகும் நோவு; pinching or shooting moving pain as from rheumatism.

*[குத்து + குடைச்சல்.]*

**குத்துக்குத்தாக முளை-த்தல்;** *kuttu-kuttāka-muḷai-,* 4 செ.கு.வி. (n.) கொத்துக் கொத்தாக முளைத்தல்; growing in clusters (சா.அக.).

*[குத்துகுத்தாக + முளை.]*

**குத்துக்குநில்-தல் (குத்துக்குநிற்றல்)** *kuttu-kku-nil-,* 14 செ.கு.வி.(v.i.) 1. எதிர்த்து நிற்றல்; to buffet and oppose, to contend, to contest hotly. ***உண்பான் உடுப்பான் சிவப்பிராமணன் குத்துக்கு நிற்பான் வீரமுட்டி.*** 2. வாதிடுதல்; to haggle, as in purchases.

*[குத்துக்கு + நில்.]*

**குத்துக்குமிளன்** *kuttu-kumiḷaṉ,* பெ.(n.) கண்ணில் கெட்ட சவ்வுச் சதையை வளர்ப்பிக்கும் ஒரு கடைக்கண் நோய்; a disease of the corner or angle of the eye developing a membraneous growth (சா.அக.).

*[குத்து + (குமிழன்) குமிளன்.]*

**குத்துக் குளம்பு** *kuttu-k-kuḷambu,* பெ.(n.) குதிரை முதலிய விலங்கின் நெட்டான குளம்பு; hoof of a horse or an ox, slightly vertical as indicative of its high speed in running.

*[குத்து + குளம்பு.]*

**குத்துக்கூலி** *kuttu-k-kūli,* பெ.(n.) நெல் முதலியவை குற்றுவதற்குக் கொடுக்குங் கூலி; wages for husking paddy.

ம. குத்துகூலி

*[குத்து + கூலி.]*

**குத்துக்கொம்பு** *kuttu-k-kombu,* பெ.(n.) விலங்கின் நேர்கொம்பு; straight, erect horn of animal.

*[குத்து + கொம்பு.]*

**குத்துக்கோடரி** *kuttu-k-kōḍari,* பெ.(n.) குத்திவெட்டுங் கோடரி; axe.

*[குத்து + கோடரி.]*

**குத்துக்கோரை** *kuttu-k-kōrai,* பெ.(n.) கோரை வகை; wet-land sedge.

*[கொத்து → குத்து + கோரை.]*

**குத்துக்கோல்** *kuttu-k-kōl,* பெ.(n.) 1. தாற்றுக் கோல்; goad. 2. பரிக்கோல் (திருக்கோ.111, உரை); elephant hook. 3. முனையிற் கூரிய இரும்புள்ள கோல் (சிலப்.16:142. அரும்.); pike-staff.

ம. குத்துக்கோல்

*[குத்து + கோல்.]*

**குத்துச்சண்டை** *kuttu-c-caṇḍai,* பெ.(n.) ***குத்துப்போர்*** பார்க்க; see *kuttu-p-pōr.*

*[குத்து + சண்டை.]*

**குத்துச்செடி** *kuttu-c-ceḍi,* பெ.(n.) சிறுசெடி; low shrub.

*[கொத்து → குத்து + செடி.]*

**குத்துண்(ணு)-தல்** *kuttuṇ-,* 5 செ.கு.வி.(v.i.) செங்குத்தாக நிற்றல்; to stand upright. *"இறுவரை போலக் குத்துண்டு நிற்கும் இருகரை" (பரிபா.7,உரை.).*

*[குத்து+ உண் .]*

**குத்துணி**[1] *kuttuṇi,* பெ.(n.) 1.குத்துப்பட்டவன்; one who has been stabbed. 2. இழிவுபட்டவன்; a scorn to persons, despised person.

*[குத்து + உணி – குத்துணி.]*

**குத்துணி**[2] *kuttuṇi,* பெ.(n.) பட்டுகலந்த துணிவகை; (G.Tj.D.118); a cloth woven with a silk and cotton woof.

Mhr. khutani.

*[குத்து → குத்துணி.]*

**குத்துணி**[3] *kuttuṇi,* பெ.(n.) ஆடைவகை (யாழ்.அக.); a kind of cloth.

*[குத்து + உணி → குத்துணி.]*

**குத்துத்திராய்** *kuttu-t-tirāy,* பெ.(n.) கீரைவகை (M.M.902); wild Indian chick weed edible herb.

*[குத்து + திராய்.]*

**குத்துப்பகன்றை** *kuttu-p-pagaṉṟai,* பெ.(n.) 1. குத்துச் சீந்தில்; a species of moon creeper. 2. ஒரு பகன்றைச் செடி; a species of bind-weed (சா. அக.).

*[குத்து + பகன்றை.]*

**குத்துப்பசளை** *kuttu-p-paśaḷai,* பெ.(n.) கொத்துப் பசளை; heart-leaved malabar night shae.

*[குத்து + பசளை.]*

**குத்துப்பலா** *kuttu-p-palā,* பெ.(n.) குட்டைப் பலாமரம்; a species of stunted jack. It is capable of turning milk into curd (சா.அக.). இது பாலைத் தயிராக மாற்றும்.

*[குத்து + பலா.]*

**குத்துப்பழி** *kuttu-p-paḻi,* பெ.(n.) பெருஞ்சண்டை; violent quarrel.

*[குத்து + பழி.]*

**குத்துப்பன்னீர்**[1] *kuttu-p-paṉṉīr,* பெ.(n.) குத்தாக முளைக்கும் பன்னீர்ச் செடி; dew flower plant (growing in cluster) (சா.அக.).

*[குத்து + பன்னீர்.]*

**குத்துப்பன்னீர்**[2] *kuttu-p-paṉṉīr,* பெ.(n.) மரவகை (யாழ்.அக.); a kind of tree.

*[குத்து + பன்னீர்.]*

**குத்துப்பாடு** *kuttu-p-pāḍu,* பெ.(n.) 1. பிறர் மனத்தைத் துன்புறுத்துகை; insinuation, covert insuelt. 2. குற்றம்; fault, defect. அந்த வேலைக்குக் குத்துப்பாடு சொல்லுகிறான் (உ.வ.).

ம. குத்துபாடு

*[குத்து + பாடு.]*

**குத்துப்பாரை** *kuttu-p-pārai,* பெ.(n.) குத்தப் பயன்படுத்தும் கடப்பாரை; crow bar used for digging.

க. குத்துவாரெ

*[குத்து + பாரை.]*

**குத்துப்பாலாடை** *kuttu-p-pālāḍai,* பெ.(n.) குட்டையாக வளரும் பலா மரம்; a species of stunted jack (சா.அக.).

*[குத்து + பாலாடை.]*

**குத்துப்பாறை** *kuttu-p-pāṟai,* பெ.(n.) 1. செங்குத் தான பாறை; steep rock. 2. நெற்குற்றும் பாறை; shelf of rock where paddy is pounded (இ.வ.). 3. மலைப்பக்கத்திலுள்ள செங்குத்தான கற்குவியல்; small perpendicular heap of stones in the vicinity of a rock.

ம. குத்துபாற

[குத்து + பாறை.]

**குத்துப்பிராய்** *kuttupirāi,* பெ.(n.) கும்பலாய் வளரும் ஒரு வகைப் பிராய்; cluster pirai (சா.அக.).

[குத்து + பிராய்.]

**குத்துப்புரை** *kuttu-p-purai,* பெ.(n.) நெற்குற்றும் இடம்; a shed where paddy is pounded.

ம. குத்துபுர

[குத்து + புரை.]

**குத்துப்புள்** *kuttu-p-pul,* பெ.(n.) கிட்டிப்புள் செங்குத்தாய் விழும் இடம்; the place where the pul in the game of tip-cat falls on edge when struck (J).

[கிட்டிப்புள் → குட்டிப்புள் → குத்துப்புள் (கொ.வ.).]

**குத்துப்பூகியம்** *kuttu-p-pūgiyam,* பெ.(n.) பாவட்டை; Indian pavetta (சா.அக.).

[குத்து + பூகியம்.]

**குத்துப்போர்** *kuttu-p-pōr,* பெ.(n.) 1. செங்குத்தாக வைக்குங் கதிர்ச்சூடு; the first layer of sheaves in a stack, placed with ears uppermost. 2. குத்துச்சண்டை; boxing, fisticuffs. 3. தீராப் பகை; violentenmity. அவ்விரு குடும்பத்துக்கும் எப்பொழுதும் குத்துப்போர்தான் (உ.வ.).

ம. குத்துபோர்

[குத்து + போர்.]

**குத்துமதிப்பாய்** *kuttu-madippāy,* (வி.எ.) (adv.). ஓர் அளவாய்; approximately. குத்து மதிப்பாய் அதன் விலையைச் சொல் (உ.வ.).

[குத்து + மதிப்பு + ஆய்.]

**குத்துமதிப்பு** *kuttumathi-p-pu,* பெ.(n.) தோராயமாகக் குறிப்பிடும்அளவு; an estimate by guess.

ம. குத்துமதிப்பு

[குத்து + மதிப்பு.]

**குத்துமானம்** *kuttu-māṉam,* பெ.(n.) கட்டட வளைவுக்கு (கமானுக்கு) மேல்குத்தாக வைக்கும் செங்கல் வேலை; brick-work just above an arch with bricks placed on edge.

[குத்து + மானம்.]

**குத்துமி** *kuttumi,* பெ.(n.) தவிடு சலிக்கப்பெறாத உமி; husk with bran separated from rice by pounding.

[குத்து + உமி.]

**குத்துமுள்** *kuttumul,* பெ.(n.) குதிரைமுள்; spur.

ம. குத்துமுள்ளு

[குத்து + முள்.]

**குத்துயிர்கொலையுயிர்** *kuttuyir-kolaiyuyir-,* பெ.(n.) கத்திக் குத்தினால் ஏற்பட்ட அஞ்சத்தகு நிலைமை; an endangered condition of life in a case of stabbing condition of life and death (சா.அக.).

[குற்றுயிர் → குத்துயிர் + கொலையுயிர்.]

**குத்துவல்லயம்** *kuttuvallayam,* பெ.(n.) கையிற் கொண்டு குத்துதற்கு உதவும் ஈட்டி; hand javelin.

[குத்து + வல்லயம்.]

**குத்துவலி** *kuttu-vali,* பெ.(n.) இசிவுநோவு; shooting, pinching pain. தேகமெல்லாம் குத்துவலி யாயிருக்கிறது (உ.வ.).

[குத்து + வலி. வலி - வலிப்பு.]

**குத்துவலிப்பிடிப்பு** *kuttuvali-p-pidippu,* பெ.(n.) மேகத்தினால் உடம்பின் மூட்டு அல்லது பொருத்து களில் அழற்சி கண்டு இறுகி அசைக்கவொட்டாமற் செய்யும் ஓர் வூதை (வாத) நோய்; acute articular rheumatism frequently producing ankylosis of the joints (சா.அக.).

[குத்துவலி + பிடிப்பு.]

**குத்துவலை** *kuttu-valai,* பெ.(n.) மீன்பிடிக்கும் வலை வகையுள் ஒன்று (பர.); a fishing-net.

ம. குத்துவல

**குத்துவா** *kuttuvā,* பெ.(n.) கடல்மீன்வகை; a herring, golden, glossed with purple.

*[குத்துவாய் → குத்துவா (கொ.வ.).]*

**குத்துவாகை** *kuttuvāgai,* பெ.(n.) நிலவாரை; east indian senna (சா.அக.).

*[குத்து+வாகை.]*

**குத்துவாதம்** *kuttuvādam,* பெ.(n.) ***குத்தூதை*** பார்க்க; see *kuttūdai.*

*[குத்து + வாதம்.]*

**குத்துவாதை** *kuttu-vādai,* பெ.(n.) பசிவருத்தம்; pain of hunger. *"குத்துவாதை மிக நலிந்து" (உத்தரா.இராவணன் பிறப்.18).*

*[குத்து + வாதை.]*

**குத்துவாமீன்** *kuttuvā-mīṉ,* பெ.(n.) ***குத்துவா*** பார்க்க; see *kuttuvā.*

*[குத்துவாய் + மீன் – குத்துவாய் மீன் → குத்துவா மீன்.]*

**குத்துவாய்**[1] *kuttu-vāy,* பெ.(n.) கடிவாய்; the seat of bite. 2. வெட்டுவாய்; the mouth of an incised wound (சா.அக.).

*[குத்து + வாய்.]*

**குத்துவாய்**[2] *kuttuvāy,* பெ.(n.) பூச்சி முதலியவற்றின் கடிவாய் (யாழ்.அக.); spot where a scorpion has stung or an insect has bitten.

*[குத்து + வாய்.]*

**குத்துவாள்** *kuttuvāḷ,* பெ.(n.) உடைவாள்; poniard, dagger.

*[குத்து + வாள்.]*

**குத்துவான்** *kuttuvāṉ,* பெ.(n.) ஊசி, அச்சங் காரணமாக இரவில் வழங்கும் பெயர்; needle, the word being used only at nights from a superstitious fear.

*[குத்து → குத்துவான். அச்சுறுத்தும் நோக்கில் இடப்படும் பெயர்.]*

**குத்துவிளக்கு**[1] *kuttuviḷa-k-ku,* பெ.(n.) 1. கூரான அடிமுனையை நிலத்தில் குத்தி நிலையாக நிறுத்தும் விளக்கு; standing brass lamp. *"குத்து விளக்கெரிய" (திவ்.திருப்பா.19).* 2. பாதமும், தண்டும் அகலமாக அமைந்த மாழை விளக்கு (குத்திட நிற்கும் விளக்கு); standing brass lamp. *"தொண்டைமானார் வார்ப்பித்துக் குடுத்த திருக் குத்துவிளக்கு இரண்டில்" (தெ.கல்.தொ.7கல்93).*

ம. குத்துவிளக்கு; க. குத்துவெளகு.

*[குத்து + விளக்கு.]*



குத்துவிளக்கு

**குத்துவெட்டு** *kuttuveṭṭu,* பெ.(n.) 1. சண்டையிற் படும் காயங்கள்; stabs and cuts, as in fighting with deadly weapons. 2. தீராப்பகை; violent enmity. அவனுக்கும் இவனுக்கும் குத்து வெட்டாயிருக்கிறது (உ.வ.). 3. எழுத்துக் கிறுக்கு; dots and strokes, as erasures. 4. நாணயம் முதலிய வற்றில் படும் பழுது; blemishes, as in coins from wear and tear (கொ.வ.).

*[குத்து + வெட்டு.]*

**குத்துளி** *kuttuḷi,* பெ.(n.) துளை உண்டாக்கப் பயன்படுத்தும் ஒரு வகை உளி; a kind of chrel used to make holes.

ம. குத்துளி

[குத்து + உளி.]

**குத்துளைச்சல்** *kuttuḷai-c-cal,* பெ.(n.) பூச்சி யாலுண்டாகும் காதுவலி;ear ache or acute pain in the ear due to some microbes (சா.அக.).

[குத்து + உளைச்சல்.]

**குத்துறுத்தல்** *kutturuttal,* பெ.(n.) தைத்தல்;sewing.

[குத்து + உறுத்தல்.]

**குத்துனாம்பழம்** *kuttunāmpaḻam,* பெ.(n.) பேரீச்சம்பழம்; wild date fruit (சா.அக.).

[கொத்து → கொத்தனம் → குத்தனம் + பழம் – குத்தனாம் பழம்.]

ஒ.நோ.வித்து–தெ. வித்தனம்.

**குத்துனி** *kuttuṉi,* பெ.(n.) ***குத்துணி*** பார்க்க; see *kuttuṇi* (G.Tr. 2.118).

[குத்து + உண் – குத்துண் → குத்துணி →குத்துனி.]

**குத்தூசி** *kuttūśi,* பெ.(n.) 1. குத்தித் தைக்கும் ஊசிவகை; a pricker, bradawl. 2. கூரைவேயும் ஊசி; long needle used for thatching or hedging. 3. கோணி மூட்டைகளில் நெல் முதலியவற்றைக் குத்தியெடுக்கும் கருவி; testing needle for thrusting into a sack of grain and bringing out a few grains as a specimen.

ம. குத்துசூசி; த. ஊசி > skt. sūci

[குத்து + ஊசி.]

**குத்தூதை** *kuttūdai,* பெ.(n.) ஊதை மிகுந்து உடம்பு நொந்து, சயித்தியமும் ஒக்கக் கூடி எரிச்சலையும் குத்தலையும் உண்டாக்கும் ஒரு நோய்; a kind of acute rheumatism due to the aggravated condition of vatha (wind) it is marked by bodily pain, burning sensation and piercing pain in the affected parts (சா.அக.).

[குத்து + ஊதை.]

**குத்தெனவிழு–தல்** *kuttenaviḻu-,* 2 செ.கு.வி.(v.i.) 1. தலைகீழாய் விழுதல்; to fall headlong. 2. செங்குத்தாக விழுதல்; to fall on edge or in a perpendicular position.

[குத்து + என + விழு.]

**குத்தோக்காளம்** *kuttō-k-kāḷam,* பெ.(n.) வயிற்றுப் புரட்டலோடு வரும் கக்கல்; vomiting attended with twisting pain in stomach.

[குத்து + ஒக்காளம்.]

**குதக்கு–தல்** *kuda-k-ku-,* 5 செ.குன்றாவி.(v.t.) மெல்லுதல்; to turn about edibles in the mouth munch.

[உதப்பு→ குதப்பு→ குதக்க.]

**குதக்கேடு**[1] *kudakkēḍu-,* பெ.(n.) மூலநோய்; piles.

[குதம் + கேடு.]

**குதக்கேடு**[2] *kuda-k-kēḍu,* பெ.(n.) சீர்கேடு (யாழ்.அக.); ruin; degeneration.

[குதை + குதம் + கேடு.]

**குதகீலம்** *kuda-kīlam,* பெ.(n.) மூலநோய்; piles, hemorrhoids.

[குதம் + கீலம்.]

**குதட்டு–தல்** *kudaṭṭu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1.***குதப்பு–தல்*** பார்க்க; see *kudapu-.* *"குமுதவாய் குதட்டிப் பழங்கொடத்தை"* *(கல்லா.49).* 2. குழறிப் பேசுதல்; to babble, prattle *"தீஞ்சொல்.... குதட்டியே"* *(பெரியபு.கண்ணப்.22).*

[குது → குதட்டு.]

**குதண்டகம்** *kudaṇḍagam,* பெ.(n.) ஆதொண்டை (சா.அக.);thorny creeper.

[குதண்டம் → குதண்டகம்.]

**குதநாயகம்** *kudanāyagam,* பெ.(n.) பெருமருந்து; Indian birth-wort (சா.அக.).

*[குதம் + நாயகம்.]*

**குதநெகிழ்ச்சி** *kuda-negilcci,* பெ.(n.) அண்டு தள்ளுகை ; prolapsus.

*[குதம் + நெகிழ்ச்சி.]*

**குதப்பன்** *kudappan,* பெ.(n.) சவரியாற்செய்த தேய்ப்புக்கருவி (பெரிய.24); coir brush.

*[குது + குதப்பன்.]*

**குதப்பு-தல்** *kudappu-,* 5 செ.குன்றாவி.(v.t.) மெல்லுதல்; to turn about food in the mouth, munch.

*[உதப்பு → குதப்பு.]*

**குதப்பூரிகம்** *kudappūrigam,* பெ.(n.) சம்பு நாவல்; large fruit jaumoon (சா.அக.).

*[குதுப்பு → குதுப்பூரி → குதுப்பூரிகம் → குதப்பூரிகம்.]*

**குதப்பை** *kudappai,* பெ.(n.) மலக்குடலின் உட்சவ்விலுண்டாகும் பை; sacciform muscous membrane of the rectum. 2. குதப்பைப் பிணி; sacciform disease of the anus (சா.அக.).

*[குது → குதுப்பு → குதப்பை.]*

**குதபம்** *kudapam,* பெ.(n.) 1. பதினைந்தாகப் பகுக்கப்பட்ட பகற்காலத்தின் எட்டாம் பாகம் (சங்.அக.); midday, the eighth of the 15 divisions of the daytime. 2. தருப்பை (மூ.அ.); darbha grass.

*[குத்து → குத்துவம் → குத்துபம் → குதபம் (கொ.வ.).]*

**குதபன்** *kutapan,* பெ.(n.) 1. சூரியன்; Sun. 2. தீ; fire (யாழ்.அக.).

*[குல் (எரிதல்) → குதவன் → குதபன்.]*

**குதபாகம்** *kudapāgam,* பெ.(n.) குழந்தைகளுக்கு எருவாயில் ஏற்படும் சீழ்ஒழுக்கு; suppuration in the anal region of the child (சா.அக.).

*[குதம் + பாகம்.]*

**குதம்**[1] *kudam,* பெ.(n.) வேள்வி; homa, oblation *'குதஞ்செய்யு மங்கி' (திருமந்.423).*

*[குத்து → குத்தும் → குதம் (தருப்பைப்புல் கொண்டு செய்யும் வேள்வி)]*

**குதம்**[2] *kudam,* பெ.(n.) தருப்பை (மலை.); darba grass.

*[குத்து → குத்தம் → குதம் (குத்துப்புல்).]*

**குதம்**[3] *kudam,* பெ.(n.). மலங்கழியும் வாயில்; anus. *"இலிங்கத் தொருகா லைங்காற் குதத்தில்" (காசிக. இல்லொழுக். 19).*

**தெ.** குத்த

*[குல் (துளை) குத்து → குத்தம் → குதம்.]*

**குதம்**[4] *kudam,* பெ.(n.) தும்மல்; sneeze. *"கோவின் குதமது நாசம்" ( செகராச. யாத்திரை.22: சங்.அக.).*

*[குது → குதம்.]*

**குதம்**[5] *kudam,* பெ.(n.) வெங்காயம் (மலை.); onion.

*[குது → குதம்.]*

**குதம்பு**[1]**-தல்** *kudambu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. துணியை நீரில் அலசுதல் ; to wash cloth gently in water, causing splash. 2. பனம்பழத்தின் தோலை அலசுதல்; to wash the fibre skin or other parts of palmyra fruit in order to get the pulp.

*[குது → குதும்பு → குதம்பு.]*

**குதம்பு**[2]**-தல்** *kudambu-,* 15 செ.கு.வி.(v.i.) 1. கொதித்தல்; to boil up, to bubble up, as boiling water. 2. வெகுளியடைதல்; to get angry, furious.

*[குது → குதும்பு → குதம்பு.]*

**குதம்பை**[1] *kudambai,* பெ.(n.) 1. காது பெருக்கு வதற்காக இடும் ஓலை, சீலை முதலியவற்றின் சுருள்; role of palmyra leaves or cloth worn in the ear-lobe to widen the perforation. *"சீலைக் குதம்பை யொருகாது" (திவ்.பெரியாழ்.3.3:1).* 2. காதணிவகை;

a kind of ear-ring. *"திருக் குதம்பை யொன்று பொன் இருகழஞ்சே எட்டு மஞ்சாடி"(S.I.I.II,143).*3. காதில் குதம்பை அணிந்த பெண்; lady wearing kudambai ear-ring.

*[குதம்பு → குதம்பை.]*

**குதம்பை**[2] *kudampai,* பெ.(n.) பூடு வகை (யாழ்.அக.); a shrub. 2. பெண்; women.

*[குடம்பு → குதம்பு → குதம்பை. குதம்பை = காதில் குதம்பை அணிந்தவள்).]*

**குதம்பைச்சித்தர்** *kudambai-c-cittar* பெ.(n.) தம் பெயரால் ஒரு சிறு நூல் இயற்றிய ஒரு சித்தர்; a cittar, author of a small work named after him.

*[குதம்பை + சித்தர்.]*

காதில் குதம்பை அணிந்த பெண்ணைக் குதம்பாய் என விளித்துப் பாடும் நூலியற்றியதால் குதம்பைச் சித்தர் எனப் பெயர் பெற்றார்.

**குதமூலம்** *kuda-mūlam,* பெ.(n.) எருவாயில் உண்டாகும் முளைமூலம், இதனின்று சீழும் இரத்தமும் ஒழுகும்; small round tumour situated at the verge of anus and attended with the discharge of pus and blood (சா.அக.).

*[குதம் + மூலம்.]*

**குதயந்திரம்** *kuda-yandiram,* பெ.(n.) எருவாயைச் சோதிப்பதற்காகவும், கார மருந்திடவும் பயன்படும் ஒரு கருவி; an instrument containing two apertures, one for seeing the interior of the rectum and the other for applying an alkali (சா.அக.).

*[குதம் + யந்திரம்.]*

**குதர்**[1]**–தல்** *kudar-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கோதியெடுத்தல்; to peck, at, stroke. *"சேவல்... மென்பூக்குதர் செம்மலூரன்" (திருக்கோ.369).* 2. அடியோடு எடுத்தல்; to lift up, as a stone, to throw up, as clouds on a furrow. *"திண்கோட்டின் வண்ணப் புற்றங்குதர்ந்து" (திருக்கோ .346).* 3. குதர்க்கவாதம் பண்ணுதல் (இனி.நாற்.12); to argue perversly.

*[குது → குதர்.]*

**குதர்**[2] *kudar,* பெ.(n.) பிரிவு; separation.

*[குது → குதர்.]*

**குதர்க்கக்காரன்** *kudarkka-k-kāraṉ,* பெ.(n.) வேண்டுமென்றே வழக்காடுபவன்; frivolous disputant, sophist; disputatious person.

*[குதர்க்கம் + காரன்.]*

**குதர்க்கம்** *kudarkkam,* பெ.(n.) 1. வேண்டுமென்றே புரியும் வழக்கு; fallacious, captious argument, sophistry. *"கோதுறுங் குதர்க்க மென்றே கோர வீரவாளி" (பிரபோத.34,22).* 2. குந்தகம்; impediment in business, embarrassment.

*[குது → குதுர் → குதுர்க்கம் → குதர்க்கம்.]*

**குதர்க்கி** *kudarkki,* பெ.(n.) வீண்பேச்சு பேசுபவன்; frivolous disputant, sophist.

*[குதுர்க்கம் → குதர்க்கம்.]*

**குதர்செல்(லு)–தல்** *kudar-cel-,* 13 செ.கு.வி.(v.i.) நெறிதவறிச் செல்லுதல்; to deviate from the right course, miss the way. *"குதர்சென்று கொள்ளாத கூர்மை" (இனி.நாற்.12).*

*[குது → குதுர் → குதர் + செல்.]*

**குதல்(லு)–தல்** *kudal-,* 13 செ.குன்றாவி. (v.t.) 1. குத்தல் ; to prick, pierce. 2. சினத்தல்; to dig up and scatter.

*[குல் → குத்து → குதல்.]*

**குதலை** *kudalai,* பெ.(n.) மழலைச் சொல்; lisps, prattle of children. *"இதழ்குவித்துப் பணித்த குதலையுந் தெரியாது" (கல்லா.5).* 2.இனியமொழி; soft talk, pleasant speech, as of young girls. *"குதலைச் செவ்வாய்க் குறுந்தொடி மகளிர்" (சிலப்.30:114).* 3. அறிவில்லான் (திவா.); simpleton, ignorant fellow.

*[ஒருகா. குழறு → குதரு → குதலை.]*

**குதலைமை** *kudalaimai,* பெ.(n.) 1. பொருள் விளங்காமை (திருக்கோ.140,உரை); indistinctness as in child's prattle. 2. தளர்ச்சி; failure of strength;

straitened circumstances. *"குதலைமை தந்தைக்கட் டோன்றின்" (நாலடி.197).*

*[குழறு → குதரு → குதலு → குதலை → குதலைமை.]*

**குதவளையம்** *kuda-valaiyam,* பெ.(n.) எருவாயைச் சுருக்கும் வண்ணம் வாய்ந்த வளையம்; circular or ring like muscles which close the external orifice of the anus (சா.அக.).

*[குதம் → வளையம்.]*

**குதவாய்** *kudavāy,* பெ.(n.) எருவாய்; anal orifice (சா.அக.).

*[குதம் → வாய்.]*

**குதற்கம்மல்** *kudar-kammal,* பெ.(n.) ஒரு வகைக் கண்ணோய்; an eye disease (சா.அக.).

*[குத்தல் + கம்மல் – குத்தற்கம்மல் → குதற்கம்மல்.]*

**குதற்று** *kudarru,* பெ.(n.) நெறி தவறுகை; missing the way, deviating from the right course. *"குதற்று வல்லசுரர்கள் கூற்றம்" (திவ். திருவாய். 10,1:6).*

*[குதறு → குதற்று.]*

**குதறாதி** *kudarādi,* பெ.(n.) புளி; tamarind (சா.அக.).

*[குதல் + ஆதி – குதலாதி → குதறாதி.]*

**குதறு[1]-தல்** *kudaru-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. சிதறுதல்; to dig up and scatter, to tear up; to scratch up and scatter, as fowls, to spill out. 2. கிண்டுதல்; to stir up, loosen, grub up, as earth about plants.

*[குதல் → குதறு.]*

**குதறு[2]-தல்** *kudaru-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நெறி தவறுதல் (திவ்.திருவாய்.10.1:6.அரும்.); to deviate from the right course, to go astray, to miss the way. 2. புண் மிகுதல்; to be blistered, covered with sores. 3. குலைதல்; to become loose, rough, daranged, dishevelled, as the hair, to be disturbed, inflamed; as the eyes (W.).

*[குதல் → குதறு.]*

**குதனு** *kudanu,* பெ.(n.) அழகில்லாத உடம்பு; body with disagreable appearance (சா.அக.).

*[குதல் → குதனு.]*

**குதனை** *kudanai,* பெ.(n.) **குதனைக்கேடு** பார்க்க; see *kudanai-k-kēdu.*

*[குதல் → குதனை.]*

**குதனைக்கேடு** *kudanai-k-kēdu,* பெ.(n.) 1. புறக்கணிப்பு (அலட்சியப்போக்கு); negligence, slovenliness. 2. துப்புரவின்மை; filthiness. 3. திறமையின்மை; want of dexteritty, clumsiness, awkwardness.

*[குதல் → குதனை + கேடு.]*

**குதாங்குரம்** *kudānguram,* பெ.(n.) மூலமுளை; piles.

*[குதம் → அங்குரம் (முளை) – குதங்குரம் – குதாங்குரம் (கொ.வ.).]*

**குதாம்பு[1]** *kudāmbu,* பெ.(n.) பண்டசாலை; godown.

*[குடாப்பு → குடாம்பு → குதாம்பு.]*

**குதாம்பு[2]** *kutāmpu,* பெ.(n.) அரிசி குத்தும் யந்திரசாலை; rice mill.

*[குத்து → குத்தாம்பு → குதாம்பு.]*

**குதாவடை** *kudāvadai,* பெ.(n.) **குதாவிடை** பார்க்க; see *kudāvidai*

*[குதாவிடை → குதாவடை.]*

**குதாவிடை** *kudāvidai,* பெ.(n.) 1. அலங்கோலம்; embarrassment, dislocation in business. *"காரியம் குதாவிடையாயிருக்கிறது" (ய.).* 2. காலச் சுணக்கம்; delay.

*[குதிரா + இடை – குதிராவிடை → குதாவிடை.]*

**குதானன்** *kudānan,* பெ.(n.) தாளி; convolvulus creeper; american bindweed (சா.அக.).

*[குத்து → குத்தன் → குத்தனன் → குதானன்.]*

**குதி[1]-த்தல்** *kudi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. பாய்தல் (திவா.); to jump, leap, spring, bound. 2. நீர் முதலியன எழும்பிவிழுதல்; to splash, as water, to spurt out. *"மலர் தேன் குதிக்க" (தஞ்சைவா.67).* 3. கூத்தாடுதல்; to dance with joy, frolic. 4. செருக்குக் கொள்ளுதல்; to be hautghy, arrogant. அதிகமாகக் குதிக்கிறான் (உ.வ.).

*[குது → குதி]*

**குதி[2]-த்தல்** *kudit-,* 4 செ.குன்றாவி.(v.t.) கடந்து விடுதல்; to leap over; overcome, escape from. *"கூற்றங் குதித்தலுங் கைகூடும்" (குறள். 269).*

*[குது → குதி]*

**குதி[3]** *kudi,* பெ.(n.) 1. குதிப்பு; jump, leap. ஒரு குதி குதித்தான்(உ.வ.). 2. குதிங்கால்;heel of the foot. *"குதிபந்தி னிரம்பு பேரெழில் வாய்ந்திடில்" (காசிக. மகளிர்.10).*

*[குது → குதி]*

**குதி[4]** *kudi,* பெ.(n.) முயற்சி (யாழ்.அக.); endeavour.

*[குல் → குது → குதி]*

**குதி[5]-தல்** *kudi,* 4 செ.குன்றாவி.(v.t.) காலைத் தளைதல்; to bind, as the legs of animals.

*[குல் → குத்து → குதி]*

**குதிக்கள்ளன்** *kudi-k-kallan,* பெ.(n.) குதிப் பிளவை (M.L.) ; boil or abscess on the heel.

*[குதி + கள்ளன்.]*

**குதிக்கால்** *kudi-k-kāl,* பெ.(n.) ***குதிங்கால்*** பார்க்க;see *kudi-ṅ-kāl.*

*[குதி + கால்.]*

**குதிக்கால் மேகப்புடை** *kudikkālmēga-p-pudai,* பெ.(n.) மேகத்தினால் குதிகால் எலும்பு வளர்ந்து பிதுங்கிக் காணல்; exostoses on the heal due to gonorrheal infection (சா.அக.).

*[குதிக்கால் + மேகம் + புடை.]*

**குதிக்கால்வலி** *kudi-k-kālvali,* பெ.(n.) குதிக்கால் நோவு; pain in the heel. 2. குதிக்கால் அழுந்த வைக்கும்போது தோன்றும் வலி; pain caused by pressure on the heel (சா.அக.).

*[குதிக்கால் + வலி.]*

**குதிக்கால்வாதம்** *kudi-k-kālvādam,* பெ.(n.) ***குதிக்காலூதை*** பார்க்க; see *kudi-k-kāl-udai.*

*[குதிக்கால் + வாதம்.]*

**குதிக்கால்விரணம்** *kudi-k-kālviraṇam,* பெ.(n.) குதிக்காலிற் காணும் புண்; ulcertation of the heel (சா.அக.).

*[குதிக்கால் + விரணம்.]*

**குதிக்கால்வெட்டி** *kudi-k-kālveṭṭi,* பெ.(n.) ஏமாற்றுக்காரன்; cheat, deceiver (நெல்லை.).

*[குதி + கால் + வெட்டி.]*

**குதிக்கால்வெடிப்பு** *kudi-k-kālvedippu,* பெ.(n.) குதிகாலிற் பித்தம் அல்லது பனியினாற் காணும் வெடிப்பு; crack of the heel due to bilious condition or frost-bite (சா.அக.).

*[குதிகால் + வெடிப்பு.]*

**குதிக்காலிசிவு** *kudi-k-kālišivu,* பெ.(n.) குதிகாலிற் காணும் இசிவு வலி; cramp in the heels (சா.அக.).

*[குதிக்கால் + இசிவு.]*

**குதிக்காலூதை** *kudi-k-kālūdai,* பெ.(n.) ஊன்றுவதற்கு முடியாமல் நோய் கொள்ளும் ஓர் ஊதை நோய்; a disease which unable one to rest on the heel due to neurolgic pain (சா.அக.).

*[குதிக்கால் + ஊதை (வாதம்).]*

**குதிகள்ளான்** *kudi-kallān,* பெ.(n.) ***குதிக்கள்ளன்*** பார்க்க;see *kudi-k-kallan.*

*[குதிக்கள்ளன் → குதிகள்ளான்.]*

**குதிகாளான்** *kudikāḷāṉ,* பெ.(n.) குதிக்காலி லுண்டாகும் காளானைப் போன்ற கழலை; a tumour in the heel resembling fungus (சா.அக.).

*[குதிக்கால் → குதிகாளன்.]*

**குதிகொள்(ளு)-தல்** *kudi-koḷ-,* 6 செ.கு.வி.(v.i.) 1. குதித்தல்; to jump. 2. பெருகுதல்; to increase. 3. பொலிவொடு விளங்குதல்; to be resplendent.

*[குத்து → குதி + கொள்.]*

**குதிங்கால்** *kudiṅkāl,* பெ.(n.) உள்ளங்காலின் பின்பகுதி; heel of the foot.

*[குதி + கால் = குதிக்கால் → குதிங்கால்.]*

**குதிங்காற்சிப்பி** *kudiṅkāṟcippi,* பெ.(n.) குதிக்கா லெலும்பு; heel bone.

*[குதி + கால் =குதிக்கால் → குதிங்கல் + சிப்பி.]*

**குதிச்சந்து** *kudi-c-candu,* பெ.(n.) உடலில் நாடி இயங்கும் பத்து இடங்களுள் ஒன்று; one of the ten places in the human body slected for feeling the pulsation (சா.அக.).

*[குதி+ சந்து.]*

**குதிப்பனிகம்** *kudi-p-paṉigam,* பெ.(n.) பலாவினிச் செடி அல்லது பலா வீழி; an unidentified plant (சா.அக.).

*[குதி+ பனிகம்.]*

**குதிப்பிளவை** *kudi-p-piḷavai,* பெ.(n.) குதிக்காலில் உண்டாகும் புற்றுநோய்; cancer of the heel (சா.அக.).

*[குதி + பிளவை.]*

**குதிப்பு** *kudippu,* பெ.(n.) 1. குதிக்கை; leaping, jumping. 2. கருவங்கொள்கை; haughtiness, arrogance. 3. சுதும்பு என்னும் மீன்; milk-fish.

*[குதி → குதிப்பு.]*

**குதிப்புண்** *kudi-p-puṇ,* பெ.(n.) குதிக்காலில் வரும் புண், கட்டி, பிளவை முதலியன; a common name for wound or sore, abscess, ulceration carbuncle, etc. of the heel (சா.அக.).

*[குதி + புண்.]*

**குதிப்புற்று** *kudi-p-puṟṟu,* பெ.(n.) குதிக்காலிற் காணும் புற்று; cancer of the heel (சா.அக.).

*[குதி + புற்று.]*

**குதிமுள்** *kudi-muḷ,* பெ.(n.) குதிரைமுள் ; spur.

*[குதி+ முள்.]*

**குதியன்** *kudiyaṉ,* பெ.(n.) 1. குதிப்பு; jump. 2. அதிமிதி பண்ணுகை; ostentatious.

**மறுவ.** குதிப்பு.

*[குதி → குதியன்.]*

**குதியாணி** *kudi-y-āṇi,* பெ.(n.) குதிக்காலில் உண்டாகும் புண்ணாணி; corn on the heel.

*[குதி+ ஆணி.]*

**குதிர்**[1] *kudir,* பெ.(n.) 1. ஒருவகை மரம்; a low shrub with sharp axillary spines. *"கரிகுதிர் மாரத்த கான வாழ்க்கை" (அகநா.75).* 2. நெல் முதலிய தவசங்கள் வைக்கும் கூடு; large earthern receptacle for storing grain. *"காப்பதற்கோர் குதிர்பண்ணி" (ஞானவா.மித்தை.11).*

**க.** குதிர்

*[குது - குதுர் → குதிர்.]*

**குதிர்-தல்** *kudir-,* 4 செ.கு.வி.(v.i.) தீர்மானப்படுதல்; to be settled, determined, fixed up. வீட்டின் விலை குதிர்ந்தது(உ.வ.).

**தெ.** குடுரு

*[குது → குதுர் → குதிர்.]*

**குதிர்ப்பாடு** *kudir-p-pāḍu,* பெ.(n.) தீர்மானப் படுகை; settlement, arrangement.

தெ. குடுரு பாகு

*[குதர் → குதிர் + பாடு.]*

**குதிரம்** *kudiram,* பெ.(n.) 35 கழஞ்சளவுள்ள எரியணம் (கருப்பூரம்) (கணக்கதி.); 35 kaḷañju of camphor.

*[குதிர் → குதிரம்.]*

**குதிரி** *kudiri,* பெ.(n.) அடங்காதவள்; unruly, reftractory woman, virago. *"குதிரியாய் மடலூர்துமே" (திவ்.திருவாய்.5,3,9).*

*[குதிரி → குதிரி.]*

**குதிரை**[1] *kudirai,* பெ.(n.) 1. பரி; horse *"குதிரை யுளாணினை" (தொல்.பொருள்.623).* 2. கயிறு முறுக்கு கருவி; twisting, stick for making rope, timber-frame for twisting cable. 3. யாழின் ஓர் உறுப்பு; (mus) bridge of a stringed instrument. 4. துப்பாக்கியின் உறுப்பு; cock of a gun, hammer in the lock of a fire-arm. 5. ***குதிரைத் தறி*** பார்க்க; see *kudirai-t-taṟi.* 6. பீப்பாய் முதலியன தாங்கும் சட்டம்; crate for casks. 7. ***குதிரைமரம்*** பார்க்க; gymnastic horse-bar 8. ஊர்க்குருவி (மூ.அ.); sparrow. 9. அதியமானுக்குரிய குதிரை மலை (புறநா.168); a mountain which belonged to the ancient atiyamāṉ.

க. குதுரே

*[குதி → குதிரை.]*

*kudirai,* a horse; Can. *kudur-e,* probably from *kudi,* to leap. Comp.Sans. *ghoṭa,* a horse. The Dravidian languages have borrowed *ghôṭa,* from Sans. (in Tamil gôram, *gôḍagam*), said to be from *ghuṭ,* to retaliate; but *kudirai* is regarded as an underived, indigenous Dravidian word. It is possible, however, that the two words are ultimately related. (C.G.D.F.L. Pg.584).

**குதிரை**[2] *kudirai,* பெ.(n.) நீர்ப்போக்கைத் திருப்புதற்காக அமைக்கும் மரத்தாலான தடுப்பு; a wooden contrivance to divert the course of water. *"துங்கக்கரைக் குதிரை" (பெருந்தொ.1588).*

*[குதி → குதிரை.]*

**குதிரைக்கயிறு** *kudirai-k-kayiṟu,* பெ.(n.) குதிரையின் வாய்வடம்; halter of a horse.

*[குதிரை + கயிறு.]*

**குதிரைக்கலணை** *kudirai-k-kalaṇai,* பெ.(n.) குதிரைச் சேணம் (பிங்.); horse - saddle.

*[குதிரை + கலணை.]*

**குதிரைக்கவிசனை** *kudirai-k-kavicaṉai,* பெ.(n.) குதிரையுடுப்பு (யாழ்.அக.); accoutrements of a horse.

*[குதிரை + (கவி) கவிசனை.]*

**குதிரைக்காசு** *kudirai-k-kāšu,* பெ.(n.) 1. குதிரையுருப் பதிக்கப் பெற்ற நாணயவகை; coin bearing the impression of a horse. 2. ***குதிரைப் பவுன்*** பார்க்க; see *kudirai-p-pavuṉ.*

*[குதிரை + காசு.]*

**குதிரைக்காரன்** *kudirai-k-kāraṉ,* பெ.(n.) 1. குதிரையைப் பாதுகாப்போன்; horse-keeper, groom. 2. குதிரை வைத்திருப்பவன்; a man who has horse or horses. 3. குதிரைவீரன்; mounted warrior. 4. திப்புசுல்தான் காலத்தில் கொள்ளை யடித்து வந்த குதிரைவீரன் (I.M.P.Tj.579) ; plundering trooper, cavalier of the time of Tippusultan.

க.,கு. துரெயவ, குதிரைகார.

*[குதிரை + காரன்.]*

**குதிரைக்காரன்கலகம்** *kudirai-k-kāraṉ-kalagam,* பெ.(n.) ஐதர் முதலியோர் குதிரைப்படைகொண்டு அடித்த கொள்ளை; the cavalry raid of Haidar etc.

*[குதிரை + காரன் + கலகம்.]*

**குதிரைக்கால்** *kudirai-k-kāl,* பெ.(n.) சதுரவடிவ அமைப்பில் குதிரை வடிவம் பின்னங்கால்களில் நின்று முன்னங்கால்களை உயர்த்திய தோற்ற முடன் அமைக்கப்பட்ட தூண் (கம்.வழக்.); kind of column.

*[குதிரை + கால்.]*

**குதிரைக்காலிரும்பு** *kudirai-k-kāl-irumbu,* பெ.(n.) தேய்ந்த பரட்டுப்பூண், லாடம்; worn out horse shoe (சா.அக.).

*[குதிரை + கால் + இரும்பு.]*

**குதிரைக்காலூதை** *kudirai-k-kālūdai,* பெ.(n.) குதி ஊதை, கால் ஊன்றமுடியாமல் வலிகாணும் ஒரு ஊதை; a disease which unable one to rest on the heel, owingto excessive pain (சா.அக.). ***குதிரைகாலூதை*** பார்க்க; see *kudirā-k-kāl-ūdai*

*[குதிரைக்கால் + வாதம்.]*

**குதிரைக்காவல்** *kudirai-k-kāval,* பெ.(n.) குதிரையைக் காத்தல்; tending horses.

**ம.** குதிரெகாவலு, குதிரெகாபு.

*[குதிரை + காவல்.]*

**குதிரைக்காற்சுண்டுவாதம்** *kudirai-k-kāṟšuṇḍu-vādam,* பெ.(n.) ***குதிரை வலி*** பார்க்க;see *kudirai vali.*

*[குதிரை + கால் + சுண்டு + வாதம் (வலி).]*

**குதிரைக்குளம்படி**[1] *kudirai-k-kuḷambaḍi,* பெ.(n.) ***நீர்ச்சேம்பு*** (பதார்த்த.288) பார்க்க; arrow-head.

*[குதிரை + குளம்பு + அடி.]*

**குதிரைக்குளம்படி**[2] *kudirai-k-kuḷambaṭi,* பெ.(n.) கொடி வகை; goat's-foot creeper.

*[குதிரை + குளம்பு + அடி.]*

**குதிரைக்குளம்பன்** *kudirai-k-kuḷampaṉ,* பெ.(n.) ஒருவகைப் பொற்காசு (யாழ்.அக.); a kind of gold coin.

*[குதிரை + குளம்பன்.]*

**குதிரைக்குளம்பு** *kudirai-k-kuḷambu,* பெ.(n.) 1. குதிரையின் குரம்; horse's hoof. 2. ***குதிரைக் குளம்படி*** பார்க்க;see *kudirai-k-kuḷambaḍi.*

*[குதிரை + குளம்பு.]*

**குதிரைக்கொத்திவாலி** *kudirai-k-kotti-vāli,* பெ.(n.) தவசவகை; a kind of grain, penicum frumentaceum.

*[குதிரை + கொத்து + வாலி.]*

**குதிரைக்கொம்பு** *kudirai-k-kombu,* பெ.(n.) கிடைத்தற்கரியது; anything non-existent or impossible of attainment, as a horse's horn. துன்பத்திற் குதவும் நண்பர்கள் குதிரைக் கொம்பானார்கள் (உ.வ.).

**க.** குதுரெயகொம்பு

*[குதிரை + கொம்பு.]*

உலகில் இல்லாதது, கிடைத்தற்கரியது எனும் பொருள் சுட்டியது.

**குதிரைக்கொல்லி** *kudirai-k-kolli,* பெ.(n.) ***குதிரை வாலிப்பூ*** பார்க்க; see *kudiraivālipū,* purple-wreath.

*[குதிரை + கொல்லி.]*

**குதிரைக்கோப்பு** *kudirai-k-kōppu,* பெ.(n.) சேணம்; horse-trappings.

*[குதிரை + கோப்பு.]*

**குதிரைக்கௌசனை** *kudirai-k-kaušaṉai,* பெ.(n.) குதிரைக்கு மேலிடும் அழகு போர்வை; horse-cloth, caparison.

*[குதிரை + கௌசனை.]*

**குதிரைகொடுத்தல்** *kudirai-koḍuttal,* பெ.(n.) சிறுவர் விளையாட்டில் வென்றோரைத் தோற்றோர் முதுகிற் சுமக்கை; the penalty of the defeated person carrying the victor on his back, in children's play (யாழ்.அக.).

*[குதிரை + கொடுத்தல்.]*

**குதிரைச்சம்மட்டி** *kudirai-c-cammaṭṭi,* பெ.(n.) குதிரைச் சாட்டை; horse-whip.

*[குதிரை + சம்மட்டி. சவட்டு→ சமட்டு→ சம்மட்டு → சம்மட்டி.]*

**குதிரைச்சயம்** *kudirai-c-cayam,* பெ.(n.) குதிரைக்கு வரும் ஈளை நோய்; glanders, a disease of horses.

*[குதிரை + சயம்.]*

**குதிரைச்சவரன்** *kudirai-c-cavaraṉ,* பெ.(n.) **குதிரைப்பவுன்** பார்க்க; see *kudirai-p-pavuṉ.*

*[குதிரை + சவரன்.]*

**குதிரைச்சாணி** *kudirai-c-cāṇi,* பெ.(n.) 1. குதிரைக்காரன்; horse keeper. 2. குதிரை மருத்துவன்; horse doctor.

*[குதிரை + சாணி.]*

**குதிரைச்சாலி** *kuḍirai-c-cāli,* பெ.(n.) துயிலிக் கீரை; a kind of greens (சா.அக.).

*[குதிரை + சாலி.]*

**குதிரைச்சீட்டு** *kudirai-c-ciṭṭu,* பெ.(n.) குதிரைப் பந்தயச் சீட்டு; lottery ticket in horse-races.

*[குதிரை + சீட்டு.]*

**குதிரைச்செட்டி** *kudirai-c-ceṭṭi,* பெ.(n.) குதிரை வணிகன்; horse-dealer. *"திரு முன்னின்றி கூறுவான் குதிரைச்செட்டி" (திருவாலவா.28,62).*

*[குதிரை + செட்டி.]*

**குதிரைச்செவி** *kudirai-c-cevi,* பெ.(n.) 1. குதிரைக் காதைப் போன்ற இலையுடைய ஓர் கள்ளி; a kind of spurge tree, the leaf of which resembles the horse's ear. 2. குங்கிலிய மரம்; indian dammer (சா.அக.).

*[குதிரை + செவி.]*

**குதிரைச் சேவகன்** *kudirai-c-cēvagaṉ,* பெ.(n.) குதிரைவீரன்; cavalier. *"குதிரைச் சேவகனாகிய கொள்கையும்" (திருவாச.2, வரி.45).*

*[குதிரை + சேவகன்.]*

**குதிரைச்சேவிதம்** *kudirai-c-cevidam,* பெ.(n.) சடைத்தும்பை; a kind of leucas (சா.அக.).

*[குதிரை + சேவிதம்.]*

**குதிரைத்தறி** *kudirai-t-taṟi,* பெ.(n.) நீருடைப்பை அடைத்தற்கு வைக்கோல் முதலியவற்றோடு நிறுத்தும் மரச்சட்டம்; wooden contrivance stuffed with grass and straw to close up a breach in an embankment. *"படுங்குருதிக் கடும்புனலை யடைக்கப்பாய்ந்த பலகுதிரைத் தறிபோன்ற" (கலிங்.புது.463).*

*[குதிரை + தறி.]*

**குதிரைத்தேர்வு** *kudirai-t-tērvu,* பெ.(n.) 1. குதிரை யேற்றம்; horse manship. 2. குதிரையியல்பை யறியும் விச்சை; science dealing with horses and its nature.

*[குதிரை + தேர்வு.]*

**குதிரைநடை** *kudirainaḍai,* பெ.(n.) குதிரை யோட்டத்தின் விரைவுநிலை; pace of a horse.

மறுவ. குதிரைப்பாய்ச்சல்

*[குதிரை + நடை.]*

**குதிரைநம்பிரான்** *kudirai-namirāṉ,* பெ.(n.) கோயில் ஊர்வலத்திருமேனி சுமக்கும் குதிரை ஊர்தி (வைணவ.); wooden horse used as a vehicle for carrying idols.

*[குதிரை + நம் + (பெருமான்) பிரான்.]*

**குதிரைநோய்** *kudirai-nōy,* பெ.(n.) 1. குதிரைக்குக் காணும் நோய்; disease of horse of general. 2. மனிதருக்குக் காணும் குதிரை நோய்; a mild form of glanders seen in man and contracted from horses (சா.அக.).

*[குதிரை + நோய்.]*

**குதிரைப்பசலை** *kudirai-p-pašalai,* பெ.(n.) ஒரு வகைப் பசலை; a kind of spinach (சா.அக.).

*[குதிரை + பசலை.]*

**குதிரைப்பசிரி** *kudirai-p-paširi,* பெ.(n.) சாரணை வகை; dog milk greens.

*[குதிரை + பசிரி.]*

**குதிரைப்பட்டை** *kudirai-p-paṭṭai,* பெ.(n.) 1. மேற். கூரை தாங்கும் கட்டை; beam placed underneath the roof of a house to support the tiles (இ.வ.). 2. கூரையின் ஓடு நழுவாமலிருக்கும்படி அடுக்கிய ஓட்டின் முகப்பில் பட்டையாகப் பூசப்படும் சாந்து; thick construction of lime at the edge of a tiled roof prevent tiles from slipping.

*[குதிரை + பட்டை.]*

**குதிரைப்படை** *kudirai-p-paḍai,* பெ.(n.) நால்வகைப் படையுள் ஒன்று (சூடா.); cavalry, as one of the four-fold division of an army.

*[குதிரை + படை.]*

**குதிரைப்பந்தயம்** *kudirai-p-pandayam,* பெ.(n.) குதிரைகளை ஓடவிட்டு அதன்மேல் பணம் கட்டி விளையாடும் பந்தய விளையாட்டு; horse-race.

*[குதிரை + பந்தயம்.]*

**குதிரைப்பந்தி** *kudirai-p-pandi,* பெ.(n.) 1. குதிரை நிரை; row of horses. 2. குதிரை கட்டும்கொட்டில் (லாயம்); horse stable.

மறுவ. குதிரைநிரை

*[குதிரை + பந்தி.]*

**குதிரைப்பந்தித்தேவை** *kudirai-p-pandi-t-tēvai,* பெ.(n.) குதிரைகளைக் கட்டும் கொட்டில் பராமரிப்புக்காகப் பெறும் வரி (கல்.க.சொ.அ.க.); a kind of tax.

*[குதிரை + பந்தி + தேவை.]*

**குதிரைப்பரிட்சை** *kudirai-p-pariṭcai,* பெ.(n.) ***குதிரைத்தேர்வு*** பார்க்க;see *kudirai-t-tērvu.*

*[குதிரை + பரிட்சை.]*

**குதிரைப்பல்லன்** *kudirai-p-pallaṉ,* பெ.(n.) ***வெள்ளைப்பூண்டு (மூ.அ.)*** பார்க்க; garlilc.

*[குதிரை + பல்லன்.]*

**குதிரைப்பல்லி** *kudirai-p-palli,* பெ.(n.) பெரிய பல்லையுடைய பெண்; a woman having large teeth (சா.அக.).

மறுவ. மாட்டுப்பல்

*[குதிரை + பல்லி.]*

**குதிரைப்பவுன்** *kudirai-p-pavuṉ,* பெ.(n.) குதிரை முத்திரை கொண்ட பொன்னாணயம்; sovereign bearing the stamp of a horse on one side.

*[குதிரை + பவுன்.]*

**குதிரைப்பற்செய்நஞ்சு** *kudirai-p-par-ceynañju,* பெ.(n.) கனிம செய்நஞ்சு வகை (மூ.அ.); a mineral poison, one of 32.

*[குதிரை + பல் + செய் + நஞ்சு.]*

**குதிரைப்பாடாணம்** *kudirai-p-pāḍāṇam,* பெ.(n.) குதிரைப்பற்பாடாணம் எனும் செய்நஞ்சு (வை.மூ.); a mineral poison.

*[குதிரை + பாடாணம்.]*

**குதிரைப்பாய்ச்சல்** *kudirai-p-pāyccal,* பெ.(n.) பாய்ந்து செல்லும் குதிரையின் கதி; gallop of a horse.

*[குதிரை + பாய்ச்சல்.]*

**குதிரைப்பிடுக்கன்** *kudirai-p-piḍukkaṉ,* பெ.(n.) பீநாறி மரம் (மூ.அ.); field tree.

*[குதிரை + பிடுக்கன்.]*

**குதிரைமசாலி** *kudirai-maśāli,* பெ.(n.) மரவகை; a kind of tree.

*[குதிரை + மசாலி.]*

**குதிரைமசாலை** *kudirai-maśālai,* பெ.(n.) குதிரை மருந்து; mash, a mixture, of certain ingredients used as a tonic or medicine for horses.

*[குதிரை + மசாலை.]*

**குதிரைமட்டம்** *kudirai-maṭṭam,* பெ.(n.) வேக முள்ள குட்டைக்குதிரை; a fleet-footed pony, (w.).

*[குதிரை + மட்டம்.]*

**குதிரைமரம்** *kudirai-maram,* பெ.(n.) 1. உடற் பயிற்சிக்குரிய தாண்டுமரம்; gymnastic horse-bar. 2. ***குதிரைத்தறி*** பார்க்க (கொ.வ.); see *kudiraittaṟi.* 3. மதகு கதவு (யாழ்.அக.); sluice gate. 4. நெசவிற் பாவு தாங்குதற்குரிய மரச்சட்டம்; wooden frame, shaped like the letter 'X' and fixed to the ground to support the warp stretched out.

*[குதிரை + மரம்.]*

**குதிரைமறம்** *kudirai-maṟam,* பெ.(n.) போர்க் குதிரையின் திறப்பாட்டைக் கூறும் புறத்துறை (பு.வெ.77); theme describing the prowess of a war-horse.

*[குதிரை + மறம்.]*

**குதிரைமறி** *kudirai-maṟi,* பெ.(n.) 1. குதிரைக்குட்டி; filly. 2. பெட்டைக் குதிரை; mare.

*[குதிரை + மறி.]*

**குதிரைமால்** *kudirai-māl,* பெ.(n.) அரண் மனையைச் சார்ந்த குதிரைக் கொட்டகை; royal stable.

*[குதிரை + மால்.]*

**குதிரைமாற்று[1]-தல்** *kudirai-māṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) கெடிதோறும் குதிரைகளை மாற்றிக் கொள்ளுதல்; to relieve horses by relays.

*[குதிரை + மாற்று.]*

**குதிரைமாற்று[2]** *kudirai-māṟṟu,* பெ.(n.) குதிரை முத்திரையிட்ட நாணயவகை; a coin with horse-emblem "காசாயமான குதிரை மாற்றுக்கு" (S.I.I.iv.134).

*[குதிரை + மாற்று.]*

**குதிரைமாறி** *kudirai-māṟi,* பெ.(n.) 1. குதிரை விற்பவன்; petty horse-dealer. 2. ஏமாற்றுவேலை செய்பவன்; one who works in an underhand manner.

*[குதிரை + மாறி.]*

**குதிரைமீன்**[1] *kudirai-miṉ,* பெ.(n.) குழாய் மீன்; pipe fish (சா.அக.).

*[குதிரை + மீன்.]*

**குதிரைமீன்**[2] *kudirai -miṉ,* பெ.(n.) மீன்வகை; a kind of fish. *"குதிரைமீனோ டானைமீன்" (குருகூர்ப். பக்.7).*

*[குதிரை + மீன்.]*


குதிரைமீன்

**குதிரைமுகம்** *kudirai-mugam,* பெ.(n.) 1. முழந்தாளெலும்பு; tibia, shin bone. 2. குளத்தின் கரைக் கட்டிற்கு வலியாகும் முட்டுக்கட்டடம்; prop of an embankment.

*[குதிரை + முகம்.]*

**குதிரைமுகவோடம்** *kudirai-muga-vōḍam,* பெ.(n.) குதிரையின் உருவை முகப்பிற் கொண்ட தோணி (சிலப்.13:176,உரை); boat with a horse shaped prow.

*[குதிரை + முகம் + ஓடம்.]*

**குதிரைமுள்** *kudirai-muḷ,* பெ.(n.) குதிரையை விரைவுப்படுத்துதற்கு ஏறுவோர் காலில் இட்டுக் கொள்ளும் முட்கருவி; spur used by a horsemen.

*[குதிரை + முள்.]*

**குதிரையடி** *kudirai-aḍi,* பெ.(n.) சதுரங்க விளையாட்டில் குதிரை செல்லும் வழி; knight's move in the game of chess.

*[குதிரை + அடி.]*

**குதிரையடிப்பச்சிலை** *kudirai-y-aḍi-p-pa-c-cilai,* பெ.(n.) குதிரைக்குளம்படியிலை, நீர்ச்சேம்பு ; arrow-head (சா.அக.).

*[குதிரை + அடி + பச்சிலை.]*

இதன் இலைகளை வீக்கங்களுக்குக் கட்டுவர்.

**குதிரையாட்டம்** *kudirai-yāṭṭam,* பெ.(n.) பொய்க்கால் குதிரையாட்டம்; a kind of dance using the effigy of a horse.

ம. குதிரயாட்டம்

*[குதிரை + ஆட்டம்.]*

**குதிரையாளி** *kudirai-y-āḷi,* பெ.(n.) 1. குதிரை ஏறி நடத்துவோன்; horseman. 2. வைரவன்; Bhairava.

*[குதிரை + ஆளி.]*

**குதிரையிராவுத்தன்** *kudirai-y-irāvuttaṉ,* பெ.(n.) குதிரைவீரன்; cavalier, trooper, equestrian *"கொன்றை மாலைக் குதிரையிராவுத்தன்" (திருவாலவா.46,28.).*

*[குதிரை + இராவுத்தன்.]*

**குதிரையிழைப்புளி** *kudirai-y-iḻaippuḷi,* பெ.(n.) இழைப்புளிவகை (கட்டட.நாமா.); a kind of jointers.

*[குதிரை + இழைப்பு + உளி.]*

**குதிரையுடலன்** *kudirai-y-uḍalaṉ,* பெ.(n.) குதிரையுடல் போலும் உடலுள்ள காளைமாடு; bull that has its belly pulled up straight and narrow, as that of a horse.

*[குதிரை + உடலன்.]*

**குதிரையேற்றம்** *kudirai-y-ēṟṟam,* பெ.(n.) குதிரையேறி நடத்தும் (வித்தை); (பதார்த்த.1452); horse-manship.

*[குதிரை + ஏற்றம்.]*

**குதிரையேறு-தல்** *kudirai-y-ēṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.). 1. குதிரை மேலேறிச் செலுத்துதல்; to mount a horse. 2. சிறுவர்கள் பச்சைக்குதிரை விளையாடுதல்; to play leap-frog. 3. பிறரைக் கீழ்ப்படுத்தி அடக்கியாளுதல்; to ride roughshod, domineer அவனைக் குதிரையேறுகிறான் (உ.வ.).

*[குதிரை + ஏறு.]*

**குதிரைவடிப்போர்** *kudirai-vaḍippōr,* பெ.(n.) குதிரை நடத்துவோர் (திவா.); horse-drivers.

*[குதிரை + வடிப்போர்.]*

**குதிரைவண்டி** *kudiraivaṇḍi,* பெ.(n.) குதிரையைப் பூட்டி ஒட்டும் வண்டி;a carriage drawn by horse.

ம. குதிரவண்டி; க. குதுரெகாடி.

*[குதிரை + வண்டி.]*

**குதிரைவரி** *kudirai-vari,* பெ.(n.) வரிவகை; a tax (S.I.I.iv.79).

*[குதிரை + வரி.]*

**குதிரைவலி** *kudirai-vali,* பெ.(n.) பெண்களுக்குப் பேறு காலத்தில் உண்டாகும் பெருவலி;excessive labour pains.

*[குதிரை + வலி.]*

**குதிரைவலிப்பு** *kudirai-valippu,* பெ.(n.) குதிரை யின் காற்சுண்டுவாதம் வலிப்பு (M.CM.D (1887).249); a horse disease attended with quivering in the legs.

ம. குதிரவலி

*[குதிரை + வலிப்பு.]*

**குதிரைவாய்க்கருவி** *kudiraivāy-k-k-karuvi,* பெ.(n.) கடிவாளம்; bridle of a horse.

*[குதிரை + வாய் + கருவி.]*

**குதிரைவாரப்பட்டை** *kudirai-vāra-p-paṭṭai,* பெ.(n.) வீட்டுக்கூரை இறவாணத்தின் கூடல்வாய்மரம்; hip-rafter in sloping roofs.

*[குதிரை + வாரம் + பட்டை.]*

**குதிரைவால்** *kudiraivāl,* பெ.(n.) 1. குதிரையின் வால்; the tail of a horse. 2. ஒரு வகைக் கொடி;the horse-tail creeper.

ம. குதிரவால்

*[குதிரை + வால்.]*

**குதிரைவாலி** *kudirai-vāli,* பெ.(n.) 1. ஒருவகைப் புன்செய்ப்பயிர்; poor man's horse-tail millet. 2. குதிரைவாலிப்பூ; purple wreath. 3. ஒருவகை நெல்; a kind of paddy.

ம. குதிரவாலி

*[குதிரை + வாலி.]*

**குதிரைவாலிக்கியாழம்** *kudirai-vāli-k-kiyāḻam,* பெ.(n.) குதிரைவாலிப் புல் அல்லது பூவினின்று இறங்குங் கியாழம் (சா.அக.); decoction prepared from horse tail grass or purple wrath.

*[குதிரைவாலி + கியாழம்.]*

**குதிரைவாலிகம்** *kudirai-vāligam,* பெ.(n.) 1. கொடிப்பாசி; moss creeping upon water. 2. கோரைப்புல்; horay grass (சா.அக.).

*[குதிரை + வாலிகம்.]*

**குதிரைவாலிச்சம்பா** *kudirai-vāli-c-cambā,* பெ.(n.) சம்பா நெல்வகை; a kind of paddy, like horse tail millet.

ம. குதிரவாலி

*[குதிரை + வாலி + சம்பா.]*

**குதிரைவாலிச்சாமை** *kudirai-vāli-c-cāmai* பெ.(n.) 1. ஒரு வகைச் சாமை; horse tail millet. 2. ஒட்டுப்புல்; sticking grass (சா.அக.).

*[குதிரை + வாலி + சாமை.]*

**குதிரைவாலிப்புல்** *kudirai-vāli-p-pul,* பெ.(n.) புல்வகை; a species of grass.

ம. குதிரவால்ப்புல்

மறுவ. குதிரைவாற்றல்

*[குதிரை + வாலி + புல்.]*

**குதிரைவாலிப்பூ** *kudirai-vāli-p-pū,* பெ.(n.) கொடிவகையுள் ஒன்று; purple wreath.

*[குதிரை + வாலி + பூ.]*

**குதிரைவிசிகயிறு** *kudirai-viši-kayiṟu,* பெ.(n.) குதிரைமரத்தை நிலைப்பட நிறுத்துதற்குக் கட்டும் கயிறு ; rope for fixing the kudirai-maram in position.

*[குதிரை + விசி + கயிறு.]*

**குதிரைவிட்டை** *kudirai-viṭṭai,* பெ.(n.) குதிரைச் சாணி; horse dung (சா.அக.).

*[குதிரை + விட்டை.]*

**குதிரைவிடு-தல்** *kudirai-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. குதிரையைச் சாரியாக விடுதல்; to set off in a gallop or trot. 2. குதிரைப்பந்தயம் விடுதல்; to compete in a horse race.

*[குதிரை + விடு-.]*

**குதிரைவிலாடம்** *kudirai-vilāḍam,* பெ.(n.) வரிவகை; a tax (M.E.R.86 of 1928-9).

*[குதிரை + இலாடம்.]*

**குதிரைவீரர்** *kudirai-vīrar,* பெ.(n.) குதிரைப் படையாளர்; cavalry, troopers cavaliers.

*[குதிரை + வீரர்.]*

**குதிரைவையாளிவீதி** *kudirai-vaiyāḷi-vīdi,* பெ.(n.) குதிரை செலுத்தற்குரிய செண்டுவெளி (சூடா.); the place where horses are trained in different kinds of exercise.

*[குதிரை + வையாளி + வீதி.]*

**குதிவாதம்** *kudivādam* பெ.(n.) ***குதிவூதை*** பார்க்க; see *kudi-v-ūdai.*

*[குதில் + வாதம்.]*

**குதிவூதை** *kudi-v-ūdai,* பெ.(n.) குதிங்கால் ஊதை; neuralgiac pain in the heels.

*[குதில் + ஊதை.]*

**குது** *kudi-v-ūdai,* பெ.(n.) மகிழ்ச்சி; joy.

*[குல் + குது.]*

**குதுகம்** *kudugam,* பெ.(n.) விருப்பம் (யாழ்.அக.); desire, longing.

*[குல் → குது → குதுகம்.]*

**குதுகலம்** *kudukalam* பெ.(n.) ***குதூகலம்*** பார்க்க; see *kudūkalam.* *"குதுகலம்பொங்க" (தணிகைப்பு. பிரமன்.சிருட்.83).*

*[குதூகலம் → குதுகலம்.]*

**குதுகலி-த்தல்** *kudukali-,* 4 செ.கு.வி.(v.i.) 1. களிப்பு உண்டாக்குதல்; to make joyful. *"குதுகலித் தாவியை யாகுலஞ் செய்யும்" (திவ்.நாய்ச்.5:7).*

*[குதூகலி → குதுகல.]*

**குதுகலிப்பு** *kudu-kalippu,* பெ.(n.) மகிழ்ச்சி; ecstasy, joyfulness, rapture.

*[குதுகலி → குதுகலிப்பு.]*

**குதுகுது¹-த்தல்** *kudu-kudu-,* 4 செ.குன்றாவி.(v.t.) ஆசைப்படுதல்; to desire eagarly. *"நாற்றங் குது குதுப்ப" (பரிபா.20,13).*

*[குது + குது.]*

**குதுகுது²-த்தல்** *kudu-kudu-,* 4 செ.கு.வி.(v.i.) குளிரால் நடுங்குதல்; to shiver from cold.

*[குது + குது.]*

**குதுகுதுப்பு** *kudu-kuduppu,* பெ.(n.) 1. ஆவல்; desire, eagarness. *"குதுகுதுப்பின்றி நின்று" (திருவாச.6:34).* 2. குளிரால் நடுங்குகை; shivering with cold.

*[குது + குதுப்பு.]*

**குதுகுதெனல்** *kudu-kudenal,* பெ.(n.) குளிர்சுரக் குறிப்பு; expr. signifying feverishness attended with shivering.

*[குது + குது + எனல்.]*

**குதுகுலம்** *kudugulam,* பெ.(n.) ***குதூகலம்*** பார்க்க; see *kudūgalam. "குதுகுலத் துளவின் றாமம்" (அரிசமய. பதுமை. 103).*

*[குது + குலம்.]*

**குதுகுலி–த்தல்** *kudukuli-,* 14 செ.கு.வி.(v.i.) 1. மிகுகளி கொள்ளுதல் (யாழ்.அக.); to be rapturous; to be enthusiastic. 2. மகிழ்ச்சி மிகுதியால் பூரித்தல் (யாழ்.அக.); to swell with joy. *"இளங்கொங்கை குதுகுலிப்ப" (திவ்.பெரியாழ்.3,6,2).*

*[குது + (கலி) குலி.]*

**குதும்பகர்** *kudumbagar,* பெ.(n.) தும்பை (மலை.); bilter toom-bay.

*[குதும்பு → குதும்பகர்.]*

**குதும்பை** *kudumbai,* பெ.(n.) மூக்கொற்றிப் பூ; Indian dantana indico.

*[குதும்பு → குதும்பை.]*

**குதுவை** *kuduvai,* பெ.(n.) கொதுவை ; mortage.

**தெ.** குதுவ

*[கொதுவை → குதுவை.]*

**குதூகலம்**[1] *kudūkalam,* பெ.(n.) அகக்களிப்பு; joy, delight, rapture.

*[குது + ஆகுலம் – குதாகுலம் → குதூகலம்.]*

**குதூகலம்**[2] *kudūgalam,* பெ.(n.) ***குதுகம்*** பார்க்க (யாழ்.அக.); see *kudugam.*

*[குல் → குது → குதுகல் → குதுகலம் → குதூகலம்.]*

**குதூகலி–த்தல்** *kudūkali-,* 4 செ.கு.வி.(v.i.) அகமகிழ்தல்; to rejoice, to delight in. *"அருளின் மூழ்கிக் குதூகலித் தாடுதலோடும்" (கந்தபு. வீரவாகு.51).*

*[குதூகலம் → குதூகலி.]*

**குதூணகம்** *kudūṇagam,* பெ.(n.) கண்ணொய்களு ளொன்று (யாழ்.அக.); a disease of the eye.

*[குத்துண் → குத்துணகம் → குதூணகம்.]*

**குதூனகம்** *kudūnagam,* பெ.(n.) குழந்தை களுக்குக் காணும் ஒரு கண்ணோய்; an eye, disease common in children (சா.அக.).

*[குது + (ஊனம்) ஊனகம் – குதூனகம்.]*

**குதேட்டி** *kudēṭṭi,* பெ.(n.) மயிலடிக்குருந்து; peacock's-foot tree.

*[குத்தட்டி → குதேட்டி.]*

**குதை**[1] *kudai,* பெ.(n.) 1. விற்குதை; notch at the end of a bow to secure the loop of a bow string. *"குதைவரிச் சிலைநுதல்" (கம்பரா.நகர.49).* 2. அம்பினடி (சங்.அக.); notch at the feather, end of an arrow. 3. அம்பு; arrow. *"குதை யொன்றினைத் துரந்தே" (கந்தபு.அக்கினி.85).* 4. அணிகலனின் பூட்டு; bow, loop, running not, button or clasp of a bracelet. 5. முயற்சி; effort. *"கொண்ட குதை மாறாதே" (ஈடு,6:10,2).*

*[குது – குதை.]*

**குதை**[2]**–த்தல்** *kudai-,* 4 செ.கு.வி.(v.i.) விற்குதையில் நாணைப்பூட்டுதல்; to fasten the bow-string at the notch. *"குதைக்கின்றன நிமிர்வெஞ்சிலை" (கம்பரா. இராவணன்வ.46).*

*[குது → குதை.]

**குதை³–தல்** *kudai-,* 3 செ.கு.வி.(v.i.) செலுத்துதல்; to discharge, propel. *"குதைந்தவார் பகழி வேடன்" (பிரமோத்.17,12).*

*[குது → குதை.]*

**குதை⁴–தல்** *kudai-,* 2 செ.கு.வி.(v.i.) தடுமாறச் செய்தல்; to cause bewilderment, embarrassment *"குதையும் வினையாவி தீர்ந்தேன்" (திவ்.இயற். நான்மு.81).*

*[குது → குதை.]*

**குதை⁵** *kudai-,* பெ.(n.) பசி (அக.நி.); hunger.

*[குது → குதை.]*

**குதை⁶–தல்** *kudai,* 2 செ.குன்றாவி.(v.t.) துளையிடுதல்; to perforate.

*[குல் → குத்து → குதை.]*

**குதைச்சு** *kudaiccu,* பெ.(n.) 1. சொக்காயில் பொத்தானிடும் துளை; button-hole. 2. தாலியுரு வகை; a pendant in tāli, representing the navatāli.

*[குல் → குத்து → குதை → குதைச்சு.]*

**குதைபோடு–தல்** *kudai-pōḍu-,* 19 செ.கு.வி. (v.i.) முடிச்சுப் போடுதல்; to button, to fasten as with a button.

*[குதை + போடு.]*

**குதைமணி** *kudai-maṇi,* பெ.(n.) கொக்கிவகை; a kind of hook, button.

*[குதை + மணி.]*

**குதைமுடிச்சு** *kudai-muḍiccu,* பெ.(n.) சுருக்கு முடிச்சு; button of a running knot or noose.

*[குதை + முடிச்சு.]*

**குதையாணி** *kudai-y-āṇi,* பெ.(n.) சுரையாணி; fastening pin or bolt in jewellry.

*[குதை + ஆணி.]*

**குந்தக்கம்¹** *kundakkam,* பெ.(n.) ***குந்தகம்*** பார்க்க; see *kundagam.*

*[குந்தகம் → குந்தக்கம்.]*

**குந்தக்கம்²** *kundakkam,* பெ.(n.) 1. குந்தகம், குழப்பம்; confusion. 2. குண்டக்கம், கோள்; backbiting.

*[குந்தகம் → குந்தக்கம்.]*

**குந்தக்குந்தம்** *kunda-k- kundam,* பெ.(n.) புனுகு; civet (சா.அக.).

*[குந்தம் + குந்தம்.]*

**குந்தகத்தசைநார்** *kundaga-t-tašai-nār,* பெ.(n.) தடைப்படுத்தும் தசைநார்; obturator ligament (சா.அக.).

*[குந்தகம் + தசை + நார்.]*

**குந்தகம்¹** *kundagam,* பெ.(n.) 1. தடை; obstrucle, obstacle. 2. குறைந்த விலை; low price.

**க.** குந்தகமு; **தெ.** குந்தகமு.

**தெ.** குந்தகமு; **க.** குந்தகமு; மராட்; குந்த

*[குல் → குந்து → குந்தகம்.]*

**குந்தகம்²** *kundagam,* பெ.(n.) குங்கிலியம்; Indian olibanum (சா.அக.).

*[குல் → குந்து → குந்தகம்.]*

**குந்தகன்** *kundagan,* பெ.(n.) கீழ்மகன்; low, mean, fellow. *"குந்தகனாமிந்தக் குறியுடையான்" (பஞ்ச.திருமுக.690).*

*[குண்டகன் + குந்தகன்.]*

**குந்தணை** *kundaṇai,* பெ.(n.) எண்ணெய் காய்ச்சும் போது, காய்ச்சும் கலம் சிதையுமாயின் அதிலுள்ள எண்ணெய் வீணாகாமற் காத்தற்பொருட்டு, அப் பாத்திரத்திற்கு ஆதாரமாய் வைக்கப்படும் இரும்பு அண்டா (தைலவ. பாயி.19); special iron cauldron holding the vessel in which medicinal oil is pre-

pared and serving as receptacle if the vessel gives way.

[குந்து + அணை. குந்து = பழுது, தீது. அணை = தடை, தடுப்பு.]

எண்ணெய் மருந்து (கிருதம்) காய்ச்சும் பொழுது, ஏனம் விரிந்து பழுதுண்டாகக் கூடுமெனக் கருதி, அதற்குத் துணையாக, எண்ணெய் முடியும் வரையில் பொருந்தியிருக்கும் படி வைக்கும் ஓர் ஏனம். இது மருந்து எண்ணெய் ஏனத்தின் வயிறு மட்டும் கொள்ளும்படியாக அமைந்து அடிப்பாகத்தில் கரி நெருப்பின் புகையானது வெளியே போகும்படி துளை ஏற்படுத்தி, வட்டமாயுள்ள அடிகளமைத்து அண்டாவைப்போல் இரும்பினாற் செய்யப்பட்டது (சா.அக.).

**குந்தந்தள்ளுகை** *kundan-tallugai,* பெ.(n.) கண்ணிற் குந்தநோய் விழுகை; staphy-loma.

[குந்தம் + தள்ளுகை.]

**குந்தம்**[1] *kundam,* பெ.(n.) குதிரை; horse "வெற்றிசேர் குந்தம்" (திருவிளை.நரிபரி.106).

[குருவிந்தம் → குந்தம்.]

**குந்தம்**[2] *kundam,* பெ.(n.) 1. கற்செய்நஞ்சு; mineral poison. 2. நான்கு பலங்கொண்ட ஒரு நிறை (தைலவ.தைல.100); a standard weight 4 *palam.*

[குல் → குந்து → குந்தம்.]

**குந்தம்**[3] *kundam,* பெ.(n.) வைக்கோற்படப்பு; hay stack.

[குது → குந்து → குந்தம்.]

**குந்தம்**[4] *kundam,* பெ.(n.) 1. கண்ணோய்வகை (மூ.அ.); tulercle on the cornea of the eye, staphyloma. 2. துன்பந்தருவது; that which gives distress. "மெய்குந்தமாக" (திவ்.இயற்.4:79).

[குந்து → குந்தம்.]

**குந்தம்**[5] *kundam,* பெ.(n.) 1. எறிகோல்; javelin for throwing; barbed dart. "வைவா ளிருஞ்சிலை குந்தம்" (சீவக.1678). 2. வேல்; spear, lance. "குந்தமலியும் புரவியான்" (பு.வெ.4:7). 3. குத்துக் கோல்; pike, stake. "பூந்தலைக் குந்தங்குத்தி" (முல்லைப்.41). 4. தீப்பந்தம்; torch.

ம. குந்தம்; தெ. குந்தமு.

Skt. kunta

[குல் → குத்து → குந்து → குந்தம்.]

**குந்தம்**[6] *kundam,* பெ.(n.) 1. குபேரனது ஒன்பான் நிதியங்களுள் ஒன்று; one of the nine treasures of Kubera. 2. குந்துருக்கம் ; Konkany resin.

[குருந்து → குந்து → குந்தம்.]

**குந்தம்**[1] *kundam,* பெ.(n.) 1. குருந்த மரம்; wild lime. 2. கள்; toddy. 3. ஓர் மல்லிகை; a kind jasmine. 4. குங்கிலியம்; Indian olibanum. 5. அலரி; fragrant oleander. 6.குதிரை; horse. 7. கவளம்; handful, quantity.

[குருந்தம் → குந்தம்.]

**குந்தம்புறப்படல்** *kundam-purappadal,* பெ.(n.) கண் விழியில் கொப்புளம் உண்டாதல்; the rising of a tubercle in the eye, protrusion of the eye-ball (சா.அக.).

[குந்தம் + புறப்படல்.]

**குந்தம்பூ** *kundampū,* பெ.(n.) கண்ணிலுண்டாகும் பூ; cataract in the eye (சா.அக.).

[குந்தம் + பூ.]

**குந்தமம்** *kundamam,* பெ.(n.) பூனை (யாழ்.அக.); cat.

[குந்து + அம்மை – குந்தம்மை → குந்தமம்.]

**குந்தரை-த்தல்** *kuntarai,* 4 செ.,கு.வி.(v.i.) வீணாயிருத்தல் (யாழ்.அக.); to sit idly.

[குந்து + அரை (உட்கார்ந்து பொழுதுபோக்குதல்.]

**குந்தலகீடி** *kundala-kīḍi*, பெ.(n.) பெருங்குடலில் வளரும் ஓர் நீண்ட நாகப்பூச்சி; long thread - worm inhabiting the large intestines (சா.அக.).

*[குந்தலம் + கீடி. வ. க்ரீட > த. கீடி.]*

**குந்தலவராளி** *kundala-varāḷi*, பெ.(n.) ஒரு பண் வகை (இராகம்) இசை (பரத.இராக.55); a musical mode.

*[குந்தலம் + வராளி.]*

**குந்தவை** *kundavai*, பெ.(n.) சோழப்பேரரசன் முதல் இராசராசனின் தமக்கையாரின் பெயர்; name of elder sister of the great Chōḷa Emperor, Rājarājaṉ-I. "ஸ்ரீ ராஜராஜதேவர் திருத்தமக்கையார் வல்லவரையர் வந்தியத்வேதர் மகாதேவியார் ஆழ்வார் பராந்தகன் குந்தவையார் எழுந்தருளுவித்த திருமேனிகள்" (S.I.I.ii.6).

*[குந்தம் = நறுமணமிக்க குண்டுமல்லிகை. குண்டு → குந்து → குந்தம் + அவ்வை. குந்தவ்வை → குந்தவை. குண்டு மல்லிகை மலரின் பெயரமைந்த பெண்.]*

**குந்தவை சிநாலயத்துத் தேவர்** *kundavai-ciṉālayattu-t-tēvar*, பெ.(n.) முதல் இராசராசனின் தமைக்கையாரும் வல்லவரையன் வந்தியத்தேவரின் தேவியாருமாகிய குந்தவையாரின் பெயரால் கட்டப்பட்ட சமணதெய்வக் கோயிலெழுந்தருளி யுள்ள தீர்த்தங்கரர் (தெ.கல்.தொ.2.2கல்.43); one of holy person, Arhat.

*[குந்தவை + சிநாலயம் + அத்து + தேவர்.]*

**குந்தளம்** *kundaḷam*, பெ.(n.) 1. பெண்டிர் தலை மயிர்; woman's hair. *"சந்தமலி குந்தளநன் மாதினொடு" (தேவா.107:1).* 2.மயிர்க்குழற்சி(பிங்.); hair crinkles curls. 3. குழற்கொத்து (பிங்.); woman's locks. 4. சாளுக்கியர் நாடு; country of the chālukyas.

ம. குந்தளம்; க. கூதலு; தெ. குந்தலமு.

skt. kuntala

*[கூதளம் → குந்தளம்].*

**குந்தளர்** *kundaḷar*, பெ.(n.) குந்தள நாட்டில் ஆட்சிபுரிந்த சாளுக்கிய வேந்தர்; chālukyas, as rulers of Kundaḷam *"குந்தளரைக் கூடற் சங்கமத்து வென்ற" (கலிங்.193,புதுப்.).*

*[குந்தளம் → குந்தளர்.]*

**குந்தளை** *kundaḷai*, பெ.(n.) மருந்து எண்ணெய்ப் ஏனம் வைக்கும் புரிமணை; a stand or seat made of straw for kepping medicated oil pots, any round wooden base for keeping pots (சா.அக.).

*[குந்து + குந்தளை.]*

**குந்தன்** *kundaṉ*, பெ.(n.) 1. திருமால்; viṣṇu *"வல்வினை மாய்த்தறஞ் செய் குந்தன்றன்னை" (திவ்.திருவாய்.7,9:7).* 2. தூய தன்மையுடையவன்; holy person. *"வண்டிங் கவிசெய்குந்தன்" (திவ்.திருவாய்.7.9.7).*

*[குந்து → குந்தன்.]*

**குந்தனக்காரன்** *kundaṉa-k-kāraṉ*, பெ.(n.) ஒன்பான் மணிகளை அணிகலன்களில் பதிப்போன்; one who enchases or sets precious stones.

*[குந்தனம் + காரன்.]*

**குந்தனம்** *kundaṉam*, பெ.(n.) 1. ஒன்பான் மணிகளை அணிகலன்களில் பதிக்குமிடம்; interspace for enchasing or setting gems in jewel. *"குந்தனத்தி லழுத்தின..... ரத்தினங்கள்" (திவ். திருநெடுந்.வியா.பக்.17).* 2. தங்கம் (சங்.அக.); gold, fine gold.

*[குந்து → குந்தனம்.]*

**குந்தாங்குச்சி** *kundāṅ-kucci*, பெ.(n.) சிறுவர்கள் நொண்டியாடித் தொடும் விளையாட்டு; game in which a player hops on one foot in order to touch or catch any of the other players within bounds.

*[குந்தம் + குச்சி – குந்தாங்குச்சி.]*

**குந்தாடு-தல்** *kundāḍu-*, 5 செ.கு.வி.(v.i.) நொண்டிக் கொண்டு விளையாடுதல்;to play hopping on one foot (கோவை.).

*[குந்து + ஆடு.]*

**குந்தாணி**[1] *kundāṇi,* பெ.(n.) 1. பேருரல்; large mortar. *குந்தாணி போல் இருக்கிறாள் (உ.வ.).* 2.உரலின் வாய்க்கூடு (இந்துபாக.44); protective ring placed over a mortar to prevent the grain from scattering.

*[குண்டு + ஆணி – குண்டாணி → குந்தாணி. 'ஆணி' சொல்லாக்க ஈறு.]*



குந்தாணி

**குந்தாணி**[2] *kundāṇi,* பெ.(n.) கண்ணோய்வகை; an eye disease.

*[குந்தம் + ஆணி.]*

**குந்தாணிக்கொடி** *kundāṇi-k-koḍi,* கொடிவகை; mortar-flower bindweed.

*[குந்தாணி + கொடி.]*

**குந்தாணிப்பீரங்கி** *kundāṇi-p-pīraṅgi,* பெ.(n.) வெடிகுண்டுளை மேலெறிந்துவீசும் உரல் வடிவான பீரங்கி; mortar for throwing shells at high angles.

*[குந்தாணி + பீரங்கி.]*

**குந்தாலம்**[1] *kundālam,* பெ.(n.) ***குந்தாலி***[1] பார்க்க; see *kundāli.*

*[குந்தாலி → குந்தாலம்.]*

**குந்தாலம்**[2] *kundālam,* பெ.(n.) புள்வகை (யாழ்.அக.); a kind of bird.

*[குந்து → குந்தாலம்.]*

**குந்தாலி** *kundāli,* பெ.(n.) 1. குத்தித் தோண்டும் கருவி வகை; pick-axe with one prong. pick-axe *"குந்தாலிக்கும் பாரை வலிது" (திருமந்.2909).* 2. *கணிச்சி (பு.வெ.9:38,உரை);* battle-axe.

**ம.** குந்தாலி; **க.** குத்தா, குத்தலி, குத்லி; **தெ., பட.,** குட. குத்திலி; **து.** குத்தலி, குத்தொலி; **கோத.** குதய்; **மா.**க்வாதலி.

**Skt.** kuddāla

*[குத்து → குந்து → குந்தாலி.]*

**குந்தாளி**[1] *kuntāḷi,* பெ.(n.) ***குந்தாலி***[1] பார்க்க; see *kundāli*[1].

*[குந்தாலி → குந்தாளி.]*

**குந்தாளி**[2]**-த்தல்** *kuntāḷi,* 4 செ.கு.வி.(v.i.) 1. களித்துக் கூத்தாடல்; to leap for joy. 2. முன்னங் காலைப் பதியவைத்து நடத்தல்; to tread on one's toes, to walk on tiptoe. 3.குதிப்பதற்கு முயற்சி செய்தல்; to attempt to leap.

**ம.** குந்தாளிக்குக

*[கொந்தளி → குந்தாளி.]*

**குந்தி**[1] *kundi,* பெ.(n.) கள் (திவா.); toddy.

*[குத்தி → குந்தி.]*

**குந்தி**[2] *kundi,* பெ.(n.) பாண்டு மனைவியருள் மூத்தாள் (பாரத); Kundi, the first wife of *Pāṇḍu.*

*[குள் → குந்து → குந்தி = குள்ளமானவள்.]*

**குந்திகறையோன்** *kundi-kaṟaiyōṉ,* பெ.(n.) பச்சோந்தி; green lizard (சா.அக.).

*[ஒருகா. குந்தி + (கரையோன்) கறையோன்.]*

**குந்திநட-த்தல்** *kundi-naḍa-,* 3 செ.கு.வி.(v.i.) முன்னங்காலை மாத்திரம் ஊன்றி நடத்தல்; to walk on tiptoe.

**ம.** குந்திநட

*[குந்து → குந்தி + நட.]*

**குந்திநில்-தல் (குந்தி நிற்றல்)** *kundi-nil-*, 14 செ.கு.வி. (v.i.) 1. ஒற்றைக் காலால் நிற்றல் (பிங்.); to stand on one leg. 2. முன்னங்காலால் நிற்றல்; to stand on tiptoe.

*[குந்தி + நில்.]*

**குந்தியடித்தல்** *kundi-y-adittal*, பெ.(n.) நொண்டி யடித்தல் என்னும் விளையாட்டு (யாழ்.அக.); a game.

*[குந்து → குந்தி + அடி.]*

**குந்திரம்**[1] *kundiram*, பெ.(n.) ஒரு பறவை; a bird (சா.அக.). 2. தென்னை; coconut tree.

*[குந்து → குந்திரம்.]*

**குந்திரம்**[2] *kundiram*, பெ.(n.) புல்வகை (யாழ்.அக.); a kind of grass.

*[குந்து → குந்திரம்.]*

**குந்திரா** *kundirā*, பெ.(n.) ***குந்திராத்தீவு*** பார்க்க; see *kundirāttivu.*

*[குந்திராத்தீவு → குந்திரா.]*

**குந்திராத்தீவு** *kunthirā-t-tīvu*, பெ.(n.) மாலத்தீவு; Maldive Islands.

*[குந்திரம் (தென்னை) + தீவு.]*

**குந்திராத்தோணி** *kundirā-t-tōṇi*, பெ.(n.) மாலத் தீவார் தென்னை மரத்தாற் செய்யும் படகு; canore in the Maldives constructed wholly from the coconut tree.

*[குந்திரம் + தோணி. குந்திரம் = தென்னை.]*

**குந்திவை-த்தல்** *kundi-vai-*, 4 செ.குன்றாவி. (v.t.) முன்னங்காலை மட்டும் ஊன்றி நடத்தல்; to walk on tiptoe. *“நெட்டடி குந்தி வைத்து” (பிரபோத.11:17).*

*[குந்தி + வை.]*

**குந்து**[1]**-தல்** *kundu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. இரு காலையும் ஊன்றி வைத்து உட்காருதல்; to sit on the heels with legs folded upright. 2. உட்காருதல்; to sit, squat. 3. முன்னங்கால்களை மட்டும் ஊன்றி நிற்றல்; to stand on tiptoe. *“குந்தியுறித் தயி ருண்டவர்” (பாரத. கிருட்.199).* 4. நொண்டி நடத்தல்; to hop on one leg. *“அடியொன்று கடிதோட்டிக் குந்தி வந்தனன்” (கம்பரா. கும்பக.348).* 5. வளைதல்; to bend, as a bow. *“குந்து வன்னெடுஞ் சிலைமுதற் படைகளும்” (கம்பரா. பிரமாத்.56).*

**ம.** குந்திக்குக

*[குல் → குள் → குந்து.]*

**குந்து**[2] *kundu*, பெ.(n.) 1. உட்காருகை; sitting on the heels, squatting. 2. திண்ணையொட்டு; pial or raised floor of a verandah used as a seat. 3. நொண்டுகை; hopping.

**l.**sid, sed; **A.S.** sitt; **E.** sit; **Goth.** sit; **ON.**siti; **OHG.** sizz; **Skt.** sad.

*[குல் – குள் – குந்து.]*

**குந்து**[3]**-தல்** *kundu-*, 5 செ.கு.வி.(v.i.) தவறுதல்; to fail, to miss. *“குந்தாவருந் தீமை” (திவ்.திருவாய். 2.6:1).*

*[குல் → குள் → குந்து.]*

**குந்து**[4] *kundu*, பெ.(n.) 1. பழத்தின் சிம்பு; fibre in fruits or roots. 2. கூந்தல்; hair.

*[குருத்து → குந்து.]*

**குந்து**[5] *kundu*, பெ.(n.) எலி; mouse, rat (சா.அக.).

*[குத்து → குந்து.]*

**குந்து**[6] *kundu*, பெ.(n.) தீர்த்தங்கரருள் ஒருவர் (ஸ்ரீபுராணம்.); a *tirttaṅkara.*

*[குல் → குள் → குந்து.]*

**குந்துக்கால்** *kundu-k-kāl*, பெ.(n.) இராமேசுவரம் அருகிலிருந்த பழைய முகவைத் துறைமுகம்; old mugavai-t-turaimugam near to Rameshwaram.

*[குன்று → குந்து + கால்.]*

**குந்துகால்** *kundu-kāl,* பெ.(n.) 1. முன்புற மட்டும் ஊன்றிய கால்; tiptoe. 2. குந்தியிருக்கை; squatting, sitting on the heels. 3. தாங்கி நடக்கும் கால், நொண்டிக்கால்; a limping or lame leg.

ம. குந்துகால்

[குந்து + கால்.]

**குந்துகாலன்** *kundu-kālaṉ,* பெ.(n.) 1. முன்கால் களால் நடப்பவன்; one who walks with raised heels (கொ.வ.). 2. காலை இழுத்து நடப்பவன்; one who hobbles or limps.

[குந்து + காலன்.]

**குந்துகாலி** *kundu-kāli,* பெ.(n.) முன்னங்காலால் நடப்பவள்; a woman walking on tip-toe (சா.அக.).

[குந்து + காலி.]

**குந்துகாலி** *kundu-kali,* பெ.(n.) அடிவலுவற்ற மரம் (யாழ்.அக.); post which is weak at the base.

[குள் → குந்து → காலி.]

**குந்துத்தடி** *kundu-t-taḍi,* பெ.(n.) பனைநார் உரிக்கும் முட்கருவி; stick with several prongs or forks to extract fibre from the palmyra.

[குந்து + தடி.]

**குந்துதிண்ணை** *kundu-tiṉṉai,* பெ.(n.) ஒட்டுத் திண்ணை; a small platform or pial adjoining a verandah used as a seat.

[குந்து + திண்ணை.]

**குந்துப்பு** *kundu-p-pu,* பெ.(n.) ஒற்றைக் காலால் நடந்தாடும் சிறுவர் விளையாட்டு; a boy's game of hopping on one leg.

[குந்து → குந்துப்பு.]

**குந்துமணி** *kundumaṇi,* பெ.(n.) குன்றிமணி பார்க்க; see *kuṉṟimaṇi.*

[குன்றிமணி → குந்துமணி (கொ.வ.).]

**குந்துரு** *kunduru,* பெ.(n.) **குந்துருக்கம்** பார்க்க; see *kundurukkam.*

[குந்துருக்கம் → குந்துரு.]

**குந்துருக்கம்** *kundurakkam,* பெ.(n.) 1. மேல் நாட்டுச் சாம்பிராணி; salai tree (மலை.). 2. வெள்ளைக் குங்கிலியம்; Konkany resin.

[குந்துள் → குந்துருக்கம்.]

**குந்துருக்கன்** *kundurukkaṉ,* பெ.(n.) கருங் குங்கிலியம்; black hammer (சா.அக.).

[குந்துருக்கம் → குந்துருக்கன்.]

**குந்தேசிகம்** *kundēsigam,* பெ.(n.) கோபுரக்கள்ளி; a kind of spurge tree (சா.அக.).

[குந்து + ஊசி – குத்தூசி → குந்தேசி – குந்தேசிகம்.]

**குப்பக்காட்டான்** *kuppa-k-kāṭṭāṉ,* பெ.(n.) நாட்டுப்புறத்தான்; rustic, boor.

[குப்பம் + காட்டான்.]

**குப்பக்காடு** *kuppa-k-kāḍu,* பெ.(n.) பட்டிக்காடு; rural parts, village with straggling huts.

[குப்பம் + காடு.]

**குப்பங்குடியேற்று-தல்** *kuppaṅ-kudi-yēṟṟu,* 5 செ.கு.வி. (v.i.) சிற்றூர் உண்டாக்குதல்; to establish a kuppam or petty village.

[குப்பம் + குடி + ஏற்று.]

**குப்பக்கூளி** *kuppa-k-kūḷi,* பெ.(n.) பூரான், செய்யான்; a venomous centipede (சா.அக.).

[குப்பை + கூளி.]

**குப்படம்** *kuppaḍam,* பெ.(n.) களத்தில் நெல்லடித்த பிறகு நிலக்கிழாருக்குக் கொடுக்கப்படும் விளைச்சலின் பாகம்; the portion of the produce of the lands in a village, given to the mirasdar after the grain is threshed.

[குப்பை → குப்படம்.]

**குப்பத்தம்** *kuppattam,* பெ.(n.) நில உரிமையாளருக் குரிய துண்டு வாரம்; mirasdar's share of the produce or yield.

தெ. குப்பத்தமு

*[குப்பம் → குப்பத்தம்.]*

**குப்பதம்** *kuppadam,* பெ.(n.) பூனைக்காலி; cow hage (சா.அக.).

*[குப்பை → குப்பத்தம் → குப்பதம்.]*

**குப்பம்**[1] *kuppam,* பெ.(n.) 1. ஊர் (திவா.); village. 2. செம்படவர் முதலியோர் வாழும் சிற்றூர்; small village of fishermen and other low caste people. 3.காடு (பிங்.); jungle. 4. அச்சி நாட்டு நாணயம்; a coin from Acheen.

*[குழு → கும்பு → குப்பு → குப்பம்.]*

**குப்பம்**[2] *kuppam,* பெ.(n.) 1. கூட்டம்; multitude *'குப்ப மந்திரங்களெல்லாம்' (குற்றா.தல.கவுற்சன.8).* 2. குவியல்; heap (நெல்லை.).

க.குப்பெ; தெ.குப்ப.

*[குழு → கும்பு → குப்பு → குப்பம்.]*

**குப்பம்**[3] *kuppam,* பெ.(n.) திடர் (யாழ்.அக.); mount raised earth.

*[குல் → குப்பு → குப்பம்.]*

**குப்பமரம்** *kuppa-maram,* பெ.(n.) நெசவுக்கருவி வகை; vertical peg with a hole to fit in the rounded centre in the left end of the web beam.

*[குப்பு + மரம்.]*

**குப்பமன்னி** *kuppamanni,* பெ.(n.) குப்பைமேனி; rubblish plant (சா.அக.).

*[குப்பை + மன்னி – குப்பைமன்னி → குப்பமன்னி.]*

**குப்பல்** *kuppal,* பெ.(n.) 1. குவியல்; heap, as of manure. 2. மேடு (திவா.); high ground, mound. 3. கூட்டம்; multitude, company.

*[குழு → கும்பு → குப்பு → குப்பல்.]*

**குப்பல்விளையாட்டு** *kuppal-vilaiyāttu,* பெ.(n.) பிள்ளைகளின் விளையாட்டு வகை; a children's play in sand.

*[குப்பல் + விளையாட்டு.]*

**குப்பலை**[1] *kuppalai,* பெ.(n.) ***குப்பளை*** பார்க்க; see *kuppaḷai*

*[குப்பல் → குப்பலை.]*

**குப்பலை**[2] *kuppalai,* பெ.(n.) செடிவகை (யாழ்.அக.); a shrub.

*[குல் → குப்பு → குப்பலை.]*

**குப்பளை** *kuppaḷai,* பெ.(n.) வெதுப்படக்கி; Indian birth wort (சா.அக.).

*[குப்பல் → குப்பளை.]*

**குப்பன்** *kuppan,* பெ.(n.) முன்னிரண்டு குழந்தை களுந்தவறியபின் பிறக்கும் மூன்றாம் மகனுக்கு இடும் பெயர்; name given to the son born after the death of the first two children.

*[குப்பை → குப்பன்.]*

தொடர்ந்து பிறந்த குழந்தை இறக்காம லிருக்க, குப்பையில் கிடத்தி எடுத்துக் குப்பன் எனப் பெயரிட்டால் எமன் குழந்தை உயிரைக் கவர மாட்டான் எனும் நாட்டுப்புற நம்பிக்கையில் ஆண் குழந்தைகளுக்கு இடப்படும் பெயர்.

**குப்பா** *kuppā,* பெ.(n.) மீன்கள் வந்து விழும்படி தூரிவலையிற் சேர்த்துள்ள பை; the bag forming part of a shore-net.

தெ. குப்பாசமு

*[குள் → குல் → குப்பு → குப்பாயம் → குப்பா (கொ.வ.).]*

**குப்பாசம்** *kuppāšam,* பெ.(n.) 1. மெய்ச்சட்டை; coat, bodice, jacket, cuirass. *"குப்பாசமிட்டுக் குறுக்கே

*கவசமிட்டு" (தமிழ்நா.192).* 2.பாம்புச் சட்டை; slough, cast-off skin of serpent. *"பாம்பு குப்பாசங் கழற்றின பொழுது" (சி.சி.பாயி.பக்.42).*

**க.** கபசெ; **தெ.** குப்பசமு

*[குப்பாயம் → குப்பாசம்.]*

**குப்பாசிவிதை** *kuppāśi-vitai,* பெ.(n.) சிறு சீமை துத்தி விதை; maroh mallow (சா.அக.).

*[குப்பாசி + விதை.]*

**குப்பாமணி** *kuppāmaṇi,* பெ.(n.) குப்பைமேனி; rubbish plant (சா.அக.).

**ம.** குப்பமேனி

*[ குப்பைமேனி → குப்பைமன்னி → குப்பாமணி (கொ.வ.).]*

**குப்பாயம்** *kuppāyam,* பெ.(n.) 1. சட்டை; jacket, coat *"வெங்கணோக்கிற் குப்பாய மிலேச்சனை" (சீவக.431).* 2. மெய்ச்சட்டை; bodic.

**ம.** குப்பாயம்; **க., பட.** குப்பச; **தெ.** குப்பாசமு.

**Skt.** kūrpāsa; **Pkt.** kuppāsa.

*[குள் → குவ் → குப்பு → குப்பாயம்.]*

**குப்பான்** *kuppāṉ,* பெ.(n.) மூடன்; fool.

*[குப்பை → குப்பான்.]*

**குப்பி**[1] *kuppi,* பெ.(n.) 1. ஒருவகைக் குடுவை (புறநா.56,உரை).; vial, flask, bottle. 2. கடைக் குச்சு; an ornament worn on hair-tuft. *"குருகை யூரார் தந்த குப்பியுந் தொங்கலும்" (குற்றா.குற.124).* 3. குப்பிக் கடுக்கன்; ear-ring of a particular shape. 4. சிமிழ்; jewel case. *"குப்பியில் மாணிக்கம் போலே" (ஈடு,1.8:5).* 5. வைரவகை; a species of diamond *"குருவிந்த மூன்றுங் குப்பி மூன்றும்" (S.I.I.II.429).* 6. யாழின் முறுக்காணி; adjusting screw of a lute. 7. மாட்டுக்கொம்பு முதலியவற்றிற் செருகும் பூண்; ferrule at the end of a scabbard, on the horn of an ox, on the tusk of an elephant on the end of a pestle, cover on the spout of a kettle. 8. சாணி; cowdung. மார்கழி மாதத்தில் சிறுமியர் குப்பிமுட்டைத் தட்டுவார்கள்.

**ம.** குப்பி; **க., து.** குப்பி; **தெ.**குப்பெ.

**H.**kuppī; **Pali., Pkt.** kūppa; **L.**cuppa; **It.** coppa; **F.** coupe; **A.S.,E.** heap; **G.** haufe.

*[கொப்பி → குப்பி.]*

**குப்பி**[2] *kuppi,* பெ.(n.) சங்கங்குப்பி (தைலவ.தைல. 125); smooth volkameria.

*[சங்கங்குப்பி → குப்பி.]*

**குப்பி**[3] *kuppi,* பெ.(n.) முன்னிரண்டு குழந்தைகளுந் தவறியபின் பிறக்கும் மூன்றாம் மகளுக்கு இடும் பெயர்; name given to the daughter born after the death of the first two children.

*[குப்பை → குப்பி.]*

**குப்பிக்கடுக்கன்** *kuppi-k-kaḍukkaṉ,* பெ.(n.) ஒருவகைக் கடுக்கன்; a kind of ear-ring.

*[கும்பி + கடுக்கண்.]*

**குப்பிக்கல்** *kuppi-k-kal,* பெ.(n.) குப்பி செய்வதற்காக பயன்படுத்தும் கல்; a species of glass of which fling was formerly an ingredient, used for making bottle etc. (சா.அக.).

**ம.** குப்பிக்கல்லு

*[குப்பி + கல்.]*

**குப்பிக்குட்சமைந்தகன்னி** *kuppi-k-kutcamainda-kaṉṉi,* பெ.(n.) ஐம்புட்செய் நஞ்சு; a prepared arsenic (w.).

*[குப்பி – குப்பிக்குள் + சமைந்த + கன்னி.]*

**குப்பிக்கெந்தம்** *kuppi-k-kendam,* பெ.(n.) வீட்டின் பின்புறமும் தோட்டங்களிலும் தானாக வளரும் ஒரு கீரைச்செடி; rubbish plant which grows largily in the backyards and gardens of the houses (சா.அக.).

மறுவ. குப்பைமேனி

*[குப்பி + கெந்தம். கந்தம் → கெந்தம்.]*

**குப்பிக்கேற்றல்** *kuppikkērral,* தொ.பெ.(vbl.n.) 1. புடம் போடுவதற்காக மருந்தைப் புட்டியி லடைத்தல்; securing medicine in a bottle for purposes of calcination. 2. புடம் போட்டபின் மருந்தை புட்டியிலடைத்தல்; filling in a bottle as medicine ofter calcination (சா.அக.).

*[குப்பிக்கு + ஏற்றல்.]*

**குப்பிச்சரக்கு** *kuppi-c-carakku,* பெ.(n.) குப்பியில் வைத்து நீற்றிய சிந்தூர வகை; medicinal powder prepared in bottles.

*[குப்பி + சரக்கு.]*

**குப்பிச்சாரம்** *kuppi-c-cāram,* பெ.(n.) காசிச் சாரம்; mineral salt.

*[குப்பி + சாரம்.]*

**குப்பிச்சுக்கு** *kuppi-c-cukku,* பெ.(n.) பொடி செய்து புட்டியில் அடைத்த சுக்குத் தூள்; powdered dried ginger secured in a bottle (சா.அக.).

*[குப்பி + சுக்கு.]*

**குப்பிச்செந்தூரம்** *kuppi-c-cendūram,* பெ.(n.) துப்புரவு செய்த இரசத்தை மற்ற மருந்துகளோடு கூட்டி அரைத்துக் காசிக் குப்பியில் வைத்து முறைப்படி சீலை மண் செய்து, வாலுகா எந்திரத்தில் வைத்து எரிக்க, மேற்பக்கத்தில் படிந்திருக்கக் காணும் சிவப்புச் செந்தூரம். (இரசப்பதங்கம்); sulbimate of mercury (சா.அக.).

*[குப்பி + செந்தூரம்.]*

**குப்பித்தைலம்** *kuppi-t-tailam,* பெ.(n.) நெற் குவியலிற் பல திங்களாகப் புதைத்து வைத்து வேகமாற்றி தைலம்; medicinal oil seasoned by being buried in paddy for several months.

*[குப்பி + தைலம்.]*

**குப்பிப்பூ** *kuppi-p-pū,* பெ.(n.) குரா; bottle flower tree (சா.அக.).

*[குப்பி + பூ.]*

**குப்பிப்பொங்கல்** *kuppi-p-pongal,* பெ.(n.) சுறவ (தை) மாதம் முதல் நாளில் குப்பியெருவை யெரித்துப் பொங்கல் சமைத்து உண்ணும் சிறுமியரின் பண்டிகை; feast observed by Hindu girls on the first day of the month of Tai when they prepare pongal using kuppi cakes as fuel.

*[குப்பி + பொங்கல்.]*

**குப்பிமா** *kuppi-mā,* பெ.(n.) மாக்கல் (சங்.அக.); soap-stone.

*[குப்பி + மா.]*

**குப்பிமுடி-த்தல்** *kuppi-muḍi,* 4 செ.கு.வி.(v.i.) சடைக்குச்சு என்னும் அணியைக் கூந்தலில் வைத்துப் பின்னுதல்; to fasten the *caḍaikkuccu* ornament in the hair-tuft.

*[குப்பி + முடி.]*

**குப்பிமுறை** *kuppi-murai,* பெ.(n.) பதங்கமுறை; the process of sublimation (சா.அக.).

*[குப்பி + முறை.]*

**குப்பியசாலை** *kuppiyaśālai,* பெ.(n.) பித்தளைப் பாத்திரஞ் செய்யும் இடம் (யாழ்.அக.); braziery.

*[குப்பியம் + சாலை.]*

**குப்பியம்**[1] *kuppiyam,* பெ.(n.) 1. பொன், வெள்ளி யல்லாத மற்ற மாழை; metals other than gold and

silver. 2. இழிந்த மாழை; inferior or base metal. 3. வங்க மணல்; lead mixed with sand, lead ore (சா.அக.).

*[குப்பி → குப்பியம்.]*

**குப்பியம்²** *kuppiyam,* பெ.(n.) பொன் வெள்ளி யொழிந்த மாழை (உலோகம்) (யாழ்.அக.); base metal; metal other than silver and gold.

*[குப்பி → குப்பியம் (குப்பி அல்லது குடுவைகளில் காய்ச்சும் கலப்பட மாழை).]*

**குப்பியலரி** *kuppi-y-alari,* பெ.(n.) ஈழத்தலரி; pagoda-tree.

*[குப்பி + அலரி.]*

**குப்பிராட்டி** *kuppi-rāṭṭi,* பெ.(n.) சிறுபெண்கள் தட்டும் வறட்டி; small cow-dung cakes, prepared by young girls.

*[குப்பி + வறட்டி (குப்பி = சிறிய).]*

**குப்பிராட்டிப்பொங்கல்** *kuppirāṭṭi-p-poṅgal,* பெ.(n.) தைத்திங்களில் சிறுமியரின் குப்பிப் பொங்கல்; a festivity observed by girls in the month of tai.

*[குப்பி + வறட்டி →குப்பிராட்டி + பொங்கல்.]*

**குப்பிலவணம்** *kuppi-lavaṇam,* பெ.(n.) வளையலுப்பு; a mineral salt.

*[குப்பி + லவணம்.]*

**குப்பிவயிரம்** *kuppi-vayiram,* பெ.(n.) வயிர வகை; a species of diamond. *"குப்பி வயிரம் இருபத்தாறும் பளிங்கு வயிரம் நாலும்" (S.I.I.II.431).*

*[குப்பி + வயிரம்.]*

**குப்பிவைப்பு¹** *kuppivaippu,* பெ.(n.) 1. ஒரு வேதியியல் முறை; process of chemical preparation in an alembic; a kind of sublimation. 2. வேதிச் சரக்கு; materials for chemical preparation.

*[குப்பி + வைப்பு.]*

**குப்புகுப்பெனல்** *kuppu-kuppeṉal,* பெ.(n.) தீ முதலியன மூண்டெழும்போது உண்டாகும் ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying jerking, effervescing, bubbling, crackling noise, as of flames, etc.

*[குப்பு + குப்பு + எனல்.]*

**குப்புசம்** *kuppušam,* பெ.(n.) புன்கு; puṅgam tree (சா.அக.).

*[குப்புயம் → குப்புசம்.]*

**குப்புழாய்** *kuppuḻāy,* பெ.(n.) **குப்புழை** பார்க்க; see *kuppuḻai*

*[குப்புழை → குப்புழாய்.]*

**குப்புழை** *kuppuḻai,* பெ.(n.) கால்நடைகட்கு உணவாகும் இலைகளையுடைய கொடிவகை; a creeper whose leaves serve as food for cattle.

ம. குப்புழ

*[குப்பூழ் → குப்புழை.]*

**குப்புளா** *kuppuḷā,* பெ.(n.) மீன்வகை *"மயிந்தன் குப்புளாவுடன் (பறாளை.பள்ளு.74)*; a kind of fish.

*[குப்பு → குப்புளா (சிறியது).]*

**குப்புற்றுக் கொள்(ளு)—தல்** *kuppuṟṟu-k-koḷḷu-,* 7 செ.குன்றாவி. (v.t.) குழந்தைகள் மூன்றாம் மாதத்தில் கவிழ்ந்து கொள்ளுதல்; turning or lying with the face downwards as children do in the third month (சா.அக.).

*[குப்புறு → குப்புற்று + கொள்—.]*

**குப்புறக்கவிழ்—த்தல்** *kuppuṟa-k-kaviḻttal,* 4 செ.கு.வி (v.i.) தலைகீழாய்க் கவிழ்த்தல்; turning upside down (சா.அக.).

*[குப்புற→ குப்புறம் + கவிழ்—.]*

**குப்புறக்கிட—த்தல்** *kuppuṟa-k-kiḍa-,* 3 செ.கு.வி. (v.i.) கவிழ்ந்து கிடத்தல்; to lie prone or face downwards.

*[குப்புற → குப்புறம் + கிட—.]*

**குப்புறப்பிடி-த்தல்** *kuppura-p-pidi-,* 4 செ.கு.வி. (v.i.) முகம் கவிழும்படிப் பிடித்தல்; holding anything with the face down-ward (சா.அக.).

*[குப்புற → கும்புறம் + பிடி.]*

**குப்புறல்** *kuppural,* பெ.(n.) குப்புறப்படுத்தல்; lying upon the belly (சா.அக.).

*[குப்புறு → குப்புறல்.]*

**குப்புறவிழு-தல்** *kuppura-vilu-,* 2 செ.கு.வி.(v.i.) தலைகவிழ விழுதல்; to trip and fall forward, to fall flat. on the face.

*[குப்புற + விழு-.]*

**குப்புறு[1]-தல்** *kuppuru-,* 20 செ.குன்றாவி.(v.i.) கடத்தல்; to traverse, cross. *"குப்புறற் கருமை யாலக் குலவரைச் சாரல் வைகி"' (கம்பரா. வரைக்.35).*

*[குப்பு + உறு-.]*

**குப்புறு[2]-தல்** *kuppuru-,* 20 செ.கு.வி.(v.i.) 1. பாய்ந்து கடத்தல்; to spring or leap across, *"குறுமுனி குடித்த வேலை குப்புறுங் கொள்கைத் தாதல்" (கம்பரா.கடறா.15).* 2. தலைகவிழ விழுதல்; to fall headlong. *"கதிரவனும்... குடபாற் கடலிற் குப்புற்றான்"* 3. தலைகுனிதல்; to hang one's face downs (செ.அக.)

**Fin.** kompastua; **Es.** kumistada; **Q.** kumpay.

*[கவிழ்ப்பு → கப்பு → குப்பு + உறு-.]*

**குப்பெனல்** *kuppenal,* பெ.(n.) திடீரெனல்; expr. signifying suddenness.

*[குப்பு + எனல்-.]*

**குப்பை[1]** *kuppai,* பெ.(n.) 1. குவியல்; collection, heap. *"உப்பின் பெருங்குப்பை நீர்படியி னில்லாகும்" (திரிகடு.83).* 2. கூட்டம்; clump, group. *"ஆம்பலங் குப்பையை" (கல்லா. 43,28).* - *"குன்றெனக் குவைஇய குன்றாக் குப்பை" (பொருந.244).* 4. செத்தை; sweepings, rubbish, refuse. 5. மேடு (சூடா.); mound, high ground. 6. மலம்; dung, excrement, ordure. *குப்பை எடுக்கிறவன் (இ.வ.).*

**ம.** குப்ப; **க.** குப்பெ, குப்பெ, கொப்பல்; **தெ.** குப்பம்; **து.** குப்பெ, குப்பெ, கிப்பெ; **கோத.** கிபம்; **துட.** கிப்; **கொலா.** குப்பகல் (ஒன்று சேர்த்தல்); **கூய்.** குப் (குன்று); **பர்.** குப்பம் (மேடு); **கோண்.** குப்பம்; **குரு.** கொப்பனா; **மால்.** கவொபம்; **பட.** குப்பெ

**A.S., OE., E.** heap; **O.S.** hop; **ME.** heep; **Du.** hoop; **Icel.** hopr; **Dan.** hob; **Swed.** hop; **G.** haufe; **OHG.** hwfo; **R.** kupa; **Lith.** kaupas.

*[குவி → குவிப்பு → குப்பு → குப்பை.]*

*kupp-ei,* sweepings, refuse, dung, a dung-heap. Comp. kopros, dung, dirt, a farm-yard (C.G.D.F.L. Pg.593).

**குப்பை[2]** *kuppai,* பெ.(n.) சதகுப்பை (தைலவ. தைல.24); dill.

*[கும்பு → குப்பு → குப்பை.]*

**குப்பைக்காட்சி** *kuppai-k-kātci,* பெ.(n.) பறையர் நத்தத்திற்குரிய நிலவரி (நெல்லை.); ground rent payable by parayās for putting up huts on the lands.

**ம.** குப்பக்காழ்ச

*[குப்பை + காட்சி.]*

**குப்பைக்கார்த்திகை** *kuppai-k-kārttikai,* பெ.(n.) பிற்கார்த்திகை; the day following kārttikai festival, when lamps are lit.

*[குப்பு → குப்பை + கார்த்திகை.]*

**குப்பைக்காரன்** *kuppai-k-kāran,* பெ.(n.) குப்பை வாருவோன்; street -sweeper, scavenger.

*[குப்பை + காரன்.]*

**குப்பைக்காலன்** *kuppai-k-kālaṉ,* பெ.(n.) ஆகூழ்க் காலுடையவன்; auspicious person, one who brings good fortune, even as he comes, *"ஒருவன் செய்தது வாய்த்துவரப் புக்கவாறே அவன் குப்பைக் காலன் காண்.... என்னக்கடவது" (ஈடு,7.9:9).*

*[குப்பை = செல்வம். குப்பை + காலன்.]*

**குப்பைக்கீரை** *kuppai-k-kīrai,* பெ.(n.) 1. குள்ளத் தண்டுக் கீரை; a weed of cotton soils. 2. அறைக் கீரை; a vigorous pot herb much esteemed.

ம. குப்பக்கீர

*[குப்பை + கீரை.]*

**குப்பைக்குடையாள்** *kuppai-k-kuḍaiyāḷ,* பெ.(n.) சிறுகீரை; field spinach (சா.அக.).

*[குப்பை + குடையாள்.]*

**குப்பைக்குழி** *kuppai-k-kuḻi,* பெ.(n.) குப்பைகளைப் போடும் குழி; a pit to collect rubbish and sweepings.

ம. குப்பக்குழி

*[குப்பை + குழி.]*

**குப்பைக்கூடை** *kuppai-k-kūḍai,* பெ.(n.) குப்பை களைப் போடப் பயன்படுத்தும் கூடை; dust bin made up of wicter basket.

*[குப்பை + கூடை.]*

**குப்பைக்கூளம்** *kuppai-k-kūḷam,* பெ.(n.) செத்தை முதலியன; sweepings, rubbish.

*[குப்பை + கூளம். மரபிணைமொழி.]*

**குப்பைகிளர்–த்தல்** *kuppai-kiḷar-,* 14 செ.கு.வி. (v.i.) **குப்பைகிளை...** பார்க்க; see *kuppaikiḷai.* *"குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை" (திவ். திருவாய்.3.9:5).*

*[குப்பை + கிளர்.]*

**குப்பைகிளறு–தல்** *kuppai-kiḷaṟu-,* 5 செ.கு.வி. (v.i.) ***குப்பைகிளை–,*** பார்க்க; see *kuppaikiḷai.*

*[குப்பை + கிளறு.]*

**குப்பைகிளை–த்தல்** *kuppai-kiḷai-,* 4 செ.கு.வி.(v.i.) குப்பையைக் கிண்டுதல்; to scratch up a heap of refuse, as a hen. *"குப்பை கிளைப்போவாக் கோழிபோல்" (நாலடி. 341).* 2. குற்றம் வெளிப் படுவதற்குத் துருவித் துருவி உசாவுதல்; to enquire into for exposing unsavoury details.

*[குப்பை + கிளை.]*

**குப்பைகொளுத்தி** *kuppai-k-koḷutti,* பெ.(n.) குப்பைகளைக் கொளுத்திச் சாம்பலாக்கும்படி பயன்படுத்தும் அடுப்பு அல்லது எந்திரம்; shut in fire for burning waste material, a furnace for burning rubbish to ashes (சா.அக.).

*[குப்பை + கொளுத்தி.]*

**குப்பைச்சம்பா** *kuppai-c-campā,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[குப்பை + (சம்பு) சம்பா.]*

**குப்பைத்தொட்டி** *kuppai-t-toṭṭi,* பெ.(n.) குப்பைகளைப் போட பயன்படுத்தும் தொட்டி; dust bin.

*[குப்பை + தொட்டி.]*

**குப்பைநோய்** *kuppai-nōy,* பெ.(n.) குதிரைகளுக்கு வரும் ஒருவகை நோய்; a disease attackig horses (சா.அக.).

*[குப்பை + நோய்.]*

**குப்பைப்பருத்தி** *kuppai-p-parutti,* பெ.(n.) உப்பம் பருத்திவகை; a species of cotton.

*[குப்பை + பருத்தி.]*

**குப்பைமஞ்சள்** *kuppai-mañcal,* பெ.(n.) 1. இழிந்த மஞ்சள்; an inferior kind of turmeric. 2. குரங்கு மஞ்சள்; monkey turmeric (சா.அக.).

*[குப்பை + மஞ்சள்.]*

**குப்பைமன்னி** *kuppai-manni,* பெ.(n.) 1. குப்பை மேனிக்கீரை; Indian acalypha.

*[குப்பை + மன்னி.]*

**குப்பைமுள்ளி** *kuppai-mulli,* பெ.(n.) சிவப்புமுள்ளிக் கீரை; red prickly-spinach (சா.அக.).

*[குப்பை + முள்ளி.]*

**குப்பைமூலிகை** *kuppai-mūligai,* பெ.(n.) முடக் கொத்தான்; palsy curer (சா.அக.).

*[குப்பை + மூலிகை.]*

**குப்பைமேடு** *kuppai-mēḍu,* பெ.(n.) கூளக்குவியல் (பிங்.); dung hill; heap of sweepings, of rubbish.

*[குப்பை + மேடு.]*

**குப்பைமேனி** *kuppai-mēni,* பெ.(n.) குப்பையில் வளரும் ஒரு வகைக் கீரை; indian acalypha.

**ம.** குப்பமேனி; **க.** குப்பை, குப்பெகிட; **தெ.** குப்பி, குப்பெண்டசெடு.

*[குப்பை + (மன்னி) மேனி.]*

**குப்பைமேனிமெழுகு** *kuppai-mēni-meḻugu,* பெ.(n.) குப்பைமேனியை மற்றச் சரக்குகளோடு சேர்த்துச் செய்யும் மெழுகு; a wax like preparation from rubbish plant mixed with other ingredients (சா.அக.).

*[குப்பைமேனி + மெழுகு.]*

**குப்பையலரி** *kuppai-y-alari,* பெ.(n.) ஈழத்தலரி; pagoda tree (சா.அக.).

*[குப்பை + அலரி.]*

**குப்பையன்** *kuppaiyan,* பெ.(n.) அழுக்கடைந்தவன்; slovenly person, used in contempt.

*[குப்பை + அன்.]*

**குப்பையெரு** *kuppai-y-eru,* பெ.(n.) நாட்டெரு; country manure.

*[குப்பை + எரு.]*

**குப்பைவாரி** *kuppai-vāri,* பெ.(n.) குப்பை வாருவோன்; scavenger. 2. செத்தை கூட்டுங் கருவி; stiff broom made of withes or bamboo, rake.

*[குப்பை + வாரி.]*

**குப்பைவை-த்தல்** *kuppai-vai,* 4 செ.கு.வி.(v.i.) பயிர்களுக்கு உரம்போடுதல்; to manure with sweepings, rubbish, refuse.

*[குப்பை + வை.]*

**குபிலன்** *kupilan,* பெ.(n.) அரசன் (யாழ்.அக.); king.

*[குவை → குவி → குவிரன் → குபிலன்.]*

**குபினன்** *kupinan,* பெ.(n.) வலைஞன் (யாழ்.அக.); fisherman.

*[குப்பினி (வலை) → கும்பினன் + குபினன்.]*

**குபினி** *kupini,* பெ.(n.) மீன்பிடிக்கும் வலைவகை (யாழ்.அக.); a kind of fishing net.

*[குப்பினி → குபினி.]*

**குபீரெனல்** *kubīreṉal,* பெ.(n.) வேகமாதற் குறிப்பு; onom, expr. signifying burning fiercely, rushing suddenly, flowing, forcibly. gushing out in streams. *"ஆலயத்துளிருந்து குபீர் குபீரென" (திருப்பு.296).*

*[குபீர் + எனல்.]*

**குபீலெனல்** *kubīleṉal,* பெ.(n.) ***குபீரெனல்*** பார்க்க; see *kubīreṉal.*

*[குபீலெனல் → குபீரெனல்.]*

**குபேரன்** *kubēran,* பெ.(n.) எட்டுத் திக்குப் பாலகருள் வடதிசைக்கு உரியவனும் நிதியின் கிழவனும், இயக்கர்களுக்குத் தலைவனுமான தேவன்; Kubēra

the god of wealth, lord of Yaksas, regent of the North "ஒருவனோ குபேரனின்னோ டுடன் பிறந்தவர்கள்" (கம்பரா.சூர்ப்.53). 2. பணக்காரன்; rich man. "வாக்கினால் குபேர னாக்கினான்" (தமிழ்நா.206). 3. சந்திரன்; moon. "சூரன்' குலத்தோர் குபேரன் குலத்தோர்" (பாரத. இராச.116).

*[குப்பை → செல்வம். குப்பை → குப்பையன் → குப்பரன் → குபேரன்.]*

**குபேரிகை** *kuberigai,* பெ.(n.) வட்டத்திருப்பி (தைலவ.தைல.4); sickle leaf.

*[குப்பிரிகை → குபேரிகை.]*

**கும்பக்குடம்** *kumba-k-kuḍam,* பெ.(n.) 1. தேரின் உறுப்புக்களுளொன்று; dome of a temple car. 2. கரகம்; decorated water pot carried in procession.

*[கும்பம் + குடம்.]*


கும்பக்குடம்

**கும்பகயம்** *kumbakayam,* பெ.(n.) பேய்த்தேற்றா; a bitter veriety of clearing nut (சா.அக.).

*[கும்பம் + காயம்.]*

**கும்பகருணன்** *kumbakaruṇaṉ* பெ.(n.) 1. இராவணன் தம்பியருள் ஒருவன்; kumba karuna, younger brother of Rāvaṇa, as pot-eared. "கும்பகருணனுந் தோற்று முனக்கே பெருந்துயில் தான் தந்தானோ" (திவ். திருப்பா.10). 2. பெருந் தூக்கமுள்ளவன்; sound sleeper (கொ.வ.).

*[கும்பம் + கருணன். கும்பகருணன் = குடம் போன்ற காதுடையவன்.]*

Skt. karna > *த. கருணன்.*

**கும்பகாமாலை** *kumbakāmālai,* பெ.(n.) காமாலை நோய் வகை; a kind of jaundice (சா.அக.).

*[கும்பம் + காமாலை.]*

**கும்பகாரம்** *kumbakāram,* பெ.(n.) 1. கண்ணுக்கு வலிவையும், இரப்பைகளுக்கு அழகையும் கொடுக்கும் அஞ்சனம்; a mineral substance (antimony) used as collyrium to strengethen the eyes and beauty the lashes. (சா.அக.).

மறுவ. கும்பகாரிகை

*[கும்பம் + (காரிகை)காரம்.]*

**கும்பகாரி[1]** *kumbakāri,* பெ.(n.) சிவப்பு நஞ்சு; red arsenic (சா.அக.).

*[கும்பம் + காரி.]*

**கும்பகாரி[2]** *kumbakāri,* பெ.(n.) 1. மண்பாண்டம் செய்பவள் (யாழ்.அக.); potter woman. 2. கண்ணிலிடும் மைவகை; a kind of collyrium. 3. செம்பாடாணம் எனும் செய்நஞ்சு; a mineral poison.

*[கும்பம் + காரி.]*

**கும்பகாரிகை** *kumbakārigai,* பெ.(n.) கண்ணுக் கிடும் மருந்து; collyrium for the eyes (சா.அக.).

*[கும்பம் + காரிகை.]*

**கும்பங்கம்** *kumbaṅgam,* பெ.(n.) கருங்கழுகு, கருங்கூளி; black eagle, it is so called probably of its body resembling a pot in shape (சா.அக.).

*[கும்பம் + அங்கம்.]*

**கும்பசரம்** *kumbašaram,* பெ.(n.) சிவதை; Indian jalap (சா.அக.).

*[கும்பம் + சரம்.]*

**கும்பசாதி** *kumbacādi,* பெ.(n.) பெண்களின் நாலுவகைச் சாதிகளில் ஒன்றாகிய சங்கினி சாதி; one of the four clases of women characterised according to their lust (சா.அக.).

*[கும்பம் + சாதி.]*

**கும்பசீனிதம்** *kumbacinidam,* பெ.(n.) பீநாறிச் சங்கு; smooth volkameria (சா.அக.).

*[கும்பம் + சீனிதம்.]*

**கும்பதும்பி** *kumbatumbi,* பெ.(n.) குடத்தைப் போன்ற சுரைக்காய்; a large round gourd resembling a pot (சா.அக.).

*[கும்பம் + தும்பி.]*

**கும்பந்தம்** *kumbandam,* பெ.(n.) வெண் கருங்காலி; whitish black wood (சா.அக.).

*[கும்பம் → கும்பன் →கும்பந்தம். கும்பல் = சாம்பல் நிறம்.]*

**கும்பநாயறு** *kumbanāyaru,* பெ.(n.) கும்பஞாயிறு, மாசிமாதம் கும்பராசியில் கதிரவன் நிற்கும் நிலை (கல்.க.சொ.அ.மு.).

*[கும்பம் + (ஞாயிறு) நாயிறு (கொ.வ.).]*

**கும்பநீர்** *kumbanir,* பெ.(n.) குடத்துத் தண்ணீர்; water contained in a drinking pot (சா.அக.).

*[கும்பம் + நீர்.]*

**கும்பப்புடம்** *kumba-p-pudam,* பெ.(n.) ஒரு பானையில் 40 துளைகளிட்டு, அதில் பாதிவரை அடுப்புக்கரியால் நிரப்பி, அதன்மீது மருந்தை வைத்து, அப்பானை வாயை மடக்கால் மூடி சீலைமண் செய்து உலர்த்தி அடுப்பில் ஏற்றி, அப்பானையின் மடக்கு மீது நெருப்பையிட்டு, மூன்று நாள்கள் அடுப்பில் வைத்து எரிக்கும் ஒரு முறை; a process of calcination in which a large round pot, containing 40 holes at the bottom, is half-filled with charcoal, over, which is placed the required medicine. The lid of the pot is then covered with the dish, then hermitically sealed by luting the joint with clay and then getting it dried this apparatus is placed on an oven and heated for three days continuously (சா.அக.).

*[கும்பம்+புடம்.]*

**கும்பப்பூ** *kumba-p-pū,* பெ.(n.) கும்ப (மாசி) மாதத்து அறுவடையாகும் பாசன விளைச்சல்; crop harvested in the month of māci.

*[கும்பம் (மாசிமாதம்) + பூ.]*

**கும்பம்**[1] *kumbam,* பெ.(n.) 1. குவிந்து திரண்டிருக்கும் கலம்; earthen pot, jar. 2. கும்பவடிவான மேற்கட்டிடம்; dome.3.கும்பம் போன்ற யானை மண்டை; forntal glob of an elephant's forehead. "கும்பத்தின் கரியைக் கோண்மா கொன்றென (கம்பரா. இரணியன்வ. 125). 4. கும்பவோரை; Aquarius, constellation of the zodiac. 5. கும்பமாதம்; the eleventh Indian month. 6. நெற்றி; forehead. 7. இருபுயங்களுக்கும் இடையிலுள்ள முதுகின் மேற்பக்கம்; upper part of the back between the shoulders.

*[கும் → கும்பு → கும்பம்.]*

**கும்பம்**[2] *kumbam,* பெ.(n.) 1. குவியல்; heap. 2.நூறுகோடி (திவா.); a thousand million.

*[குமு → கும்பு → கும்பம்.]*

**கும்பம்**[3] *kumbam,* பெ.(n.) ஒரு சிற்றூரின் காற்பங்கு அளவுள்ள பகுதி (சுக்கிரநீதி.27); hamlet, one-fourth the size of a kirāmam.

*[குமு → கும்பு → கும்பம்.]*

**கும்பம் செய்தல்** *kumbamceydal,* பெ.(n.) பிணத்தைப் புதைத்தல்; burying the dead.

*[கும்பம் + செய்தல். கும்பம் = தாழி.]*

**கும்பம்பாலை** *kumbam-pālai,* பெ.(n.) கோபுர முதலியற்றின்மேல் வைக்கும் ஒப்பனைக் கலசம்; pitcher-shaped finial as of a tower.

*[கும்பம் + சாலை.]*

**கும்பமாதி** *kumbamādi,* பெ.(n.) சிவதை; Indian jalap (சா.அக.).

*[கும்பம்+ஆதி.]*

**கும்பமாமுனி** *kumbamāmuṉi,* பெ.(n.) கும்பமுனி, அகத்தியர்; the sage agastya (சா.அக.).

மறுவ. அகத்தியர்

*[கும்பம்+மா +முனி.]*

குடமலை முனிவனாகிய அகத்தியனைக் குடமலையில் இருந்தவனாகக் கருதுவதே மரபு. வடவர் இதனையுணராது குடத்தில் (கும்பத்தில்) பிறந்தவன் என்று புனைந்துரைக்கும் தொல்கதை ஒரு கட்டுக் கதையாகும்.

**கும்பமீன்** *kumba-mīṉ,* பெ.(n.) கடல் நத்தை; sea snail with a fissure in the shell, at the bottom portion (சா.அக.).

*[கும்பம்+மீன்.]*

**கும்பமுத்திரை** *kumba-muttirai,* பெ.(n.) வழிபாட்டு முத்திரை வகை (சைவாநுட்.வி.12); a hand-pose, in worship.

*[கும்பம் + முத்திரை.]*

**கும்பமூர்த்தன்** *kumba-mūrttaṉ,* பெ.(n.) மாந்தரை நோயால் பீடிக்கச் செய்வதாகக் கருதப்பட்ட பேய்; a demon believed to cause diseases in human beings (சா.அக.).

*[கும்பம்+மூர்த்தன்.]*

**கும்பரேகை** *kumpa-rēkai,* பெ.(n.) கைவரை வகை (திருவாரூர்.குற.Ms.); a line in palm of hand.

*[கும்பம் + (வரைகை) ரேகை.]*

**கும்பல்**[1] *kumbal,* பெ.(n.) 1. குவியல்; heap. 2. திரள்; clump, cluster, tuft. 3. கூட்டம்; company, crowd, collection, group, mass. *"கும்பலா வொருமிக்கக் கூட்டி" (இராமநா. உயுத்.33).*

*[கும் → கும்பு → கும்பல்.]*

**கும்பல்**[2] *kumbal,* பெ.(n.) **கும்பனாற்றம்** பார்க்க; see *kumbanāṟṟam.*

*[கும்பு → கும்பல்.]*

**கும்பலக்கொடி** *kumbala-k-koḍi,* பெ.(n.) **குமிழ்** பார்க்க; see *kumiḻ.*

மறுவ. குமிழங்கொடி

*[கும்பளக்கொடி → கும்பலக்கொடி.]*

**கும்பலடி—த்தல்** *kumbalaḍi,* செ.கு.வி.(v.i.) 1. கும்ப வாசனையடித்தல்; flavour of being over-boiled. 2. சுடு நாற்றம் வீசுதல்; throwing scorched small, smell of over burnt.

**கும்பலம்** *kumbalam,* பெ.(n.) 1. குடத்தைப் போன்ற பூசணி; pumpkin so called because of its resemblance of water pot. 2. சிறு குமிழ்; bell-vervain (சா.அக.).

*[கும்பல் → கும்பலம்.]*

**கும்பலிகம்** *kumbaligam,* பெ.(n.) மூலாதாரம்; the lowest centre in the pelvic region of the human body (சா.அக.).

*[கும்பல் → கும்பலிகம்.]*

**கும்பவாதம்** *kumba-vādam,* பெ.(n.) தோள், கை மிக வலித்து, கன்னமும் கண்ணும் கடுத்து, தலையில் துடிப்புண்டாகி, வாயுக் கோளாறடைந்து, தொப்புளின் கீழ் வலி காணும் ஓர் ஊதை நோய்; a kind of rheumatisn with in the shoulder and arms,

inflammation of cheeks and eyes, tremor of the head, flatulent disorders and colicky pain below the navel (சா.அக.).

*[கும்பம்+வாதம்.]*

**கும்பளக்கொடி** *kumbaḷa-k-koḍi,* பெ.(n.) குமிழங்கொடி; kashmeretree (சா.அக.).

*[கும்பளம் (பூசணி)+கொடி.]*

**கும்பற்காடு** *kumbaṟkāḍu,* பெ.(n.). அடர்ந்த காடு; thick forest.

*[கும்பல்+காடு.]*

**கும்பற்சாதம்** *kumbaṟ-cādam,* பெ.(n.) 1. புகை சூழ்ந்த அன்னம்; smoked rice. 2. தீய்ந்த சாதம்; charred boiled rice (சா.அக.).

*[கும்பல்+சாதம்.]*

**கும்பன்** *kumbaṉ,* பெ.(n.) 1. ஓர் அரக்கன்; a rākšasa. 2. இழிந்தவன்; libertine.

*[குல் → கும்பு (எரிதல், வேதல்) → கும்பன்.]*

**கும்பனாற்றம்** *kumba-ṉāṟṟam,* பெ.(n.) தீய்ந்து போன உணவிலுண்டாகும் நாற்றம்; smell of charred rice, due to insufficient water for boiling (கொ.வ.).

*[கும்பல்+நாற்றம்.]*

**கும்பா** *kumbā,* பெ.(n.) உண்கலவகை; shaped silver or brass vessel. "கொப்பரை கிடாரநற் கும்பா" (பிரபோத.11:31).

*[கும்பு→கும்பா.]*

**கும்பாகாரம்** *kumbāgāram,* பெ.(n.) காட்டுக்கோழி; jungle fowl (சா.அக.).

*[கும்பம் + (ஆகரம்) ஆகாரம்.]*

**கும்பாசம்** *kumbāšam,* பெ.(n.) பவளக்கொடி; coral reef.

**கும்பாசாரம்** *kumbāšāram,* பெ.(n.) ***கும்பாரம்***[1] பார்க்க; *see kumbāram.*

*[கூம்பு → கும்பு + ஆசாரம்.]*

**கும்பாதிரி**[1] *kumbādiri,* பெ.(n.) பெரிய மரவகை; lac tree.

*[கும்பம் + (அத்திரி) ஆதிரி.]*

**கும்பாதிரி**[2] *kumbādiri,* பெ.(n.) அறிவுத்தந்தை; god father, sponser.

*[கும்பம் + (அத்திரி) ஆதிரி.]*

**கும்பாரம்**[1] *kumbāram,* பெ.(n.) அம்பாரம்; heap, pile.

*[கும்பு → கும்பாரம்.]*

**கும்பாரம்**[2] *kumbāram,* பெ.(n.) கும்பம் (யாழ்.அக.); pot.

*[கும்பு → கும்பாரம் (ஆரம்ப சொல்லாக்க ஈறு).]*

**கும்பாளை** *kumbāḷai,* பெ.(n.) மழையை நம்பியே விளையும் நெல்வகை(G.TJ.D.95); a paddy growing solely with the help of rain.

*[கும்பளம் → கும்பாளை.]*

**கும்பி**[1] *kumbi,* பெ.(n.) 1. சேறு (பிங்.); mud, mire or slough emitting stinking smell. 2. சுடுசாம்பல்; hot ashes.

**தெ.** கும்பி

*[கும்பு → கும்பி.]*

**கும்பி²** *kumbi,* பெ.(n.) வயிறு; belly. *"ஒருசாண் கும்பிதூர்க்கின்ற கொடியரால்" (பிரபோத. 11:13).*

*[கும்பு → கும்பி.]*

**கும்பி³** *kumbi,* பெ.(n.) யானை(திவா.); elephant.

*[கும்பு → கும்பி.]*

**கும்பி⁴** *kumbi,* பெ.(n.) 1. ***கும்பிபாகம்*** பார்க்க; see *kumbibagam "கும்பிநரகர்கள் (திவ்.திருவாய். 3,7,8.).* 2. நரகம் (திவா.); hell.

*[கும்பு → கும்பி.]*

**கும்பி⁵** *kumbi,* பெ.(n.) குவியல்(வின்.); heap

*[கும்பு → கும்பி.]*

**கும்பி⁶-த்தல்** *kumbi-,*4 செ.கு.வி.(v.i.) ஒக முறையில் மூச்சடக்குதல்; to hold or suppress the breath, suspend respiration, as a yōgi. "உட்கும்பித்து வாங்கவே" (திருமந்.572).

*[கும்பு → கும்பி.]*

**கும்பி⁷** *kumbi,* பெ.(n.) மரவகை; carey's myrtle bloom.

*[கும்பு → கும்பி.]*

**கும்பி⁸** *kumbi,* பெ.(n.) கும்பவோரை (கும்பராசி) (யாழ்.அக.); the zodiacal sign aquarius.

*[கும்பம் → கும்பி.]*

**கும்பி⁹** *kumbi,* பெ.(n.) மட்பாண்டம் (யாழ்.அக.); earthen vessel.

*[கும்பம் → கும்பி.]*

**கும்பி¹⁰** *kumbi,* பெ.(n.) தீ (யாழ்.அக.); fire.

*[குல் → கும்பு (வேதல், எரிதல்) → கும்பி.]*

**கும்பி எருசாணி** *kumbiyerucāṇi,* பெ.(n.) எரிக்கப்பட்ட உமியின் சாம்பல், மாட்டுச்சாணம் (உழ.நெ.க.அக.);ash of husk or cowding.

*[கும்பி + எரு + சாணி.]*

**கும்பிகபிடகம்** *kumbiga-piḍagam,* பெ.(n.) ஒரு கண்நோய்;an eye diesease (சா.அக.).

மறுவ. கும்பிகம்

*[கும்பிகம் + பிடகம்.]*

**கும்பிகம்** *kumbigam,* பெ.(n.) நீலோற்பல விதை; seeds of blue Indian water lily. 2. பெருங்குமிழ். 3. ஆண்குறி; male genital. 4. ஒரு பூடு; a plant. 5. கண்ணிமை ஓரத்தில் குருக்கள் எழும்புவதனால் உண்டாகும் வீக்கம்; swelling of the eye-lids, due to the number of boils (சா.அக.).

*[கும்பு → கும்பிகம்.]*

**கும்பிகவேது** *kumbiga-vēdu,* பெ.(n.) வேது பிடித்தல்; treatment by vapour (சா.அக.).

*[கும்பு→ கும்பிகம்+வேது.]*

**கும்பிகா** *kumbigā,* பெ.(n.) நாவற் கொட்டையைப் போன்ற ஒருவிதக் கல் பரு; a black wart resembling the stone or the seed of jambolin fruit in shape. 2. கழற்கொடி; bonduc-nut-creeper. 3. வெண்பாதிரி; white trumpet flower. 4. ஆகாச தாமரை; sky lotus (சா.அக.).

*[கும்பிக்காய் → கும்பிகா.]*

**கும்பிகை** *kumbigai,* பெ.(n.) வாத்தியவகை (கம்பரா. பிமாத். 5); a kind of drum.

*[கும்பிடு + அரி.]*

**கும்பிட்டுக்கட்டு-தல்** *kumbiṭṭu-k-kaṭṭu-*5 செ.குன்றாவி.(v.t.) தழுவிக்கொள்ளுதல் (யாழ்.அக.); to enfold in a close embrace.

*[கும்பு + இடு → கும்பிடு + கட்டு.]*

**கும்பிடரி** *kumbidāri,* பெ.(n.) பயிரிடுவோர் நிலக்கிழார்க்கேனும், ஆலயத்திற்கேனும் காணிக்கையாக்கும் கதிர்க்கட்டு; bundle of sheaves presented by the ryot to the chief of a village or to the temple, as a mark of respect (இ.வ.).

*[கும்பிடு + அரி.]*

**கும்பிடானை** *kumbiḍāṉai,* பெ.(n.) பிண்டம்; foetus (சா.அக.).

*[கும்பி+ (இடுவன் → இடான்) இடானை. கம்பி = வயிறு.]*

**கும்பிடு¹–தல்** *kumbidu-,* 17 செ.குன்றாவி.(v.t.) 1. கைகுவித்து வணங்குதல்; to join hands in worship, to make obeisance with the hands joined and raised. *"தலையினாற் கும்பிட்டுக் கூத்துமாடி" (தேவா. 727,3).* 2. கெஞ்சுதல்; to beg, solicit, entreat (இ.வ.).

**Fin.** kumartua; **Mordvin.** koma; **Es.** kummardada; **Hanti.** kumatali; **Mong.** kumri; **Jap.** kubomi.

*[கூப்பு → கூம்பு + இடு = கும்பிடு.]*

**கும்பிடு²** *kumbidu,* பெ.(n.) வணக்கம்; worship, obesisance with hands joined. *"நான் கும்பிடும்போ தரைக்கும்பிடாதலால்" (தாயு. கருணா. 6).*

*[கூப்பு → கூம்பு + இடு = கும்பிடு.]*

**கும்பிடுகல்** *kumbiḍu-kal,* பெ.(n.) பிண்டக்கல்; white lime stone. a secret term used in alchemy (சா.அக.).

*[கும்பி+இடு+கல். கும்பி = வயிறு.]*

**கும்பிடுகள்ளன்** *kumbidukaḷḷan,* பெ.(n.) வணக்கங்காட்டும் வஞ்சன்; servile, hypocrite, cringing dissembles.

*[கும்பிடு + கள்ளன்.]*

**கும்பிடுகற்சுண்ணம்** *kumbiḍu-kaṟ-cuṇṇam,* பெ.(n.) சுந்தரானந்தர் நூலிற் கூறியுள்ள வழலைச் சுண்ணம்; an alchamical compound of calcium referred to (Sandarananthar's) work on Tamil medicine (சா.அக.).

*[கும்பிடு + கல் + சுண்ணம்.]*

**கும்பிடுகிளிஞ்சில்** *kumbidu-kiḷñgil,* பெ.(n.) கிளிஞ்சில் வகை; a species of cokee, a bivalve shell.

*[கும்பிடு + கிளிஞ்சில்.]*

**கும்பிடுசட்டி** *kumbidu-caṭṭi,* பெ.(n.) 1. கணப்புச் சட்டி; chafing-dish or portable furnace. 2. தட்டார் நெருப்பு வைக்கும் சட்டி; potsherd in which fire is kept by goldsmiths.

*[கும்பி + இடு + சட்டி.]*

**கும்பிடுபூச்சி** *kumbidu-pūcci,* பெ.(n.) முன்னங் கால்களைக் கூட்டிக் கும்பிடுவதுபோல் தோன்றும் ஒருவகை இலைப்பூச்சி; praying wisect, as holding its auterior legs in a manner suggesting hands clasped in prayer (யாழ்ப்.)..

*[கும்பிடு + பூச்சி.]*

**கும்பிடுபோடு–தல்** *kumbidu-pōdu-,* 19 செ.கு.வி.(v.t.) கைகுவித்து வணங்குதல்; to worship with joined hands.

*[கும்பிடு + போடு.]*

**கும்பித்திரு–த்தல்** *kumbittiru-,*4 செ.கு.வி.(v.i.) ஊழ்க (சமாதி) நிலையிலிருத்தல்; being in a state in which the individuals consciousnes gets fused and is lost in the transcendental. 2. மூச்சற்றிருத்தல்; being in a state of trance or suspended animation (சா.அக.).

*[கும்பு → கும்பி→கும்பித்து + இரு.]*

**கும்பித்துப்போ-தல்** *kumbittup-pō,* 8 செ.கு.வி. (v.i.) ஊழ்க (சமாதி) புக வேண்டித் தம்பித்தல்; causing respiration to cease so as to enter samadhi. 2. மூச்சொடுக்கி நிற்றல்; being in a state of breathlessness (சா.அக.).

*[கும்பி → கும்பித்து + போ.]*

**கும்பிநாசம்** *kumbinasam-,* பெ.(n.) பாம்பு(பிங்.); snake.

*[கும்பி + நசம்.]*

**கும்பிநாசி** *kumbi-nāci,* பெ.(n.) குடத்தைப் போன்ற மூக்கு; jar nose (சா.அக.).

*[கும்பம் → கும்பி + நாசி. நாசி → நாசி.]*

**கும்பிநாற்றம்** *kumbinārram-,* பெ.(n.) **கும்பநாற்றம்** பார்க்க; see *kumbanārram.*

*[கும்பு (கும்பல்) → கும்பி + நாற்றம்.]*

**கும்பிப்போ-தல்** *kumbi-p-pō,* 8 செ.கு.வி.(v.i.) புகைசூழல்; being clouded with smoke when charred or over burnt (சா.அக.).

*[கும்பி + போ.]*

**கும்பிபாகம்** *kumbi-bāgam,* பெ.(n.) ஏழுநகரத்துள் ஒன்றானம் பாவஞ்செய்தவரைக் குயச் சூளையிற் சுடுவதுபோல் வாட்டுவதுமாகிய நரகம்; a hell in which the wicked are baked as if in potter's kiln, one of *elu-naragam. "கும்பிபாக நரகத்திடைக் குளிப்ப" (காசிக. சிவசன்மாவை.310).*

*[கும்பி + பாகம்.]*

**கும்பிமுகம்** *kumbi-mugam,* பெ.(n.) நெருப்பைப் போற் சிவந்த புண்;a red inflamed wound. 2. ஒரு சிவந்த நச்சுப்பூச்சி; a kind of red venomous insect (சா.அக.).

*[கும்பி + முகம்.]*

**கும்பியழித்தல்** *kumbi-y-alittal,* பெ.(n.) ஒரு விளையாட்டு (யாழ்.அக.); a game.

*[கும்பி + அழித்தல்.]*

**கும்பிரச்சரு** *kumbiraccaru,* பெ.(n.) பேரிலாழும்; bile of cobra snake (சா.அக.).

*[கும்பிலம் + (சுரு) சரு.]*

**கும்பிலம்** *kumbilam,* பெ.(n.) அகாலத்தில் பிறந்த குழந்தை; child begotton in undue season. 2. கரு முற்றாத குழந்தை; a child of an imperfect pregnation. 2. ஒரு மீன்; a kind of fish called gilt head. 4. முதலை; crocodile (சா.அக.).

*[கும்பு → கும்பிலம்.]*

**கும்பிலன்** *kumbilan,* பெ.(n.) திருடன் (யாழ்.அக.); house-breaker, thief.

*[கும்பு → கும்பில் (கழிவு) → கும்பிலன்.]*

**கும்பீரம்** *kum biram,* பெ.(n.) **கும்பீலம்** பார்க்க; see *kumbilam.*

*[கும்பீலம் → கும்பீரம்.]*

**கும்பீலம்**[1] *kumbīlam,* பெ.(n.) யானையையும் விழுங்கக்கூடிய பெரிய முதலை; a tramendously big crocodile capable of devouring even an elephant (சா.அக.).

*[கும்பம் → கும்பிலம் → கும்பீலம்.]*

**கும்பீலம்**[2] *kumbīlam,* பெ.(n.) முதலை (யாழ்.அக.); crocodile.

*[கும்பில் (கழிவு) → கும்பீலம்.]*

**கும்பு**[1]**-தல்** *kumpu-,* 5 செ.கு.வி.(v.i.) சமைத்த உணவு தீய்ந்துபோதல்; to become overburnt, charred, smoked, as food when boiled with insufficient water.

*[கும் → கும்பு.]*

**கும்பு**[2]**—தல்** *kumpu-*, 5 செ.கு.வி.(v.i.) திரள், குழு; crowd, collection, group.

**தெ.** கும்பு; **க.** கும்பா.

*[கும் → கும்பு.]*

**கும்புளிக்காய்** *kumbuḷi-k-kāi,* பெ.(n.) தீவுப்பகுதியில் விளையும் பருத்த தேங்காய்; a round big coconut in the Isands of Andaman and Nicobars (சா.அக.).

*[கும்பளம் → கும்புளி+காய். கும்பளம் = பூசணி.]*

**கும்பை**[1] *kumbai,* பெ.(n.) 1. சிறுமரம்; White emetic nut. 2. பெருங்கம்பளிமரம்; Broad gardenia. 3. திக்காமல்லிகை; Dikmali gum-plant.

*[கும்பு → கும்பை.]*

**கும்பை**[2] *kumbai,* பெ.(n.) சேரி; settlement, especially of Pañcamas.

**தெ.** கொம்ப

*[கும்பு → கும்பை.]*

**கும்பை**[3] *kumbai,* பெ.(n.) குடம் (யாழ்.அக.); pot.

*[கும்பம் → கும்பை.]*

**கும்பை**[4] *kumbai,* பெ.(n.) வேசி (யாழ்.அக.); prostitute.

*[கும்பில் → கும்பிலி → கும்பை.]*

**கும்பை**[5] *kumbai,* பெ.(n.) 1. ஓமகுண்டத்தின் வேதிகை (யாழ்.அக.); enclosure round a sacrificial pit. 2. குடும்பம்; family.

**க.** கொம்பெ

*[குழு → கும்பு → கும்பை.]*

**கும்பை**[6] *kumbai,* பெ.(n.) வாழைவகை (யாழ்.அக.); a kind of plantain.

*[கும் → கும்பு (கொத்து) → கும்பை.]*

**கும்பைப்பிசின்** *kumbai-p-piśin,* பெ.(n.) கும்பை மரத்தின் பிசின்; combly resin (சா.அக.).

*[கும்பை + பிசின்.]*

**கும்பைமரம்** *kumbai-maram,* பெ.(n.) கம்பிப் பிசின்; combly resin tree. It yields a yellow gum which is anti-spasmodic and insecticide (சா.அக.).

*[கும்பை + மரம்.]*

**கும்மட்டம்**[1] *kummaṭṭam,* பெ.(n.) ஒருவகைச் சிறுபறை; a small drum.

**தெ.** கும்மெட்ட

*[கும் → கும்மட்டம்.]*

**கும்மட்டம்**[2] *kummaṭṭam,* பெ.(n.) 1. காகிதத்தாலான கூட்டுவிளக்கு; globe lights made of paper, chinese lantern. 2. விமானக்கூண்டு; cupola, dome. 3. கட்டடவளைவு; arch, vault, arched roof.

*[கும் + மட்டம்.]*

**கும்மட்டி**[1] *kummaṭṭi,* பெ.(n.) 1. கும்மாளம், குதிக்கை; romping, jumping. 2. கும்மாளமடித்து ஆடுங் கூத்து; a rustic dance.

*[கும் → கும்மு → கும்மட்டி.]*

**கும்மட்டி**[2] *kummaṭṭi,* பெ.(n.) ***கும்மட்டம்***[1] பார்க்க; see *kummaṭṭam.*

*[கும்மட்டம் → கும்மட்டி.]*

**கும்மட்டி**[3] *kummaṭṭi,* பெ.(n.) நெருப்புவைக்குஞ் சட்டி (திவ்.திருக்குறுந். 5, வ்யா); chafing-dish.

**தெ.** கும்பட்டி; **க.** கும்பட்டி.

*[கும் → கும் → கும்மட்டி.]*

**கும்மட்டி**[4] *kummaṭṭi,* பெ.(n.) ***கொம்மட்டி*** பார்க்க (பதார்த்த.700); a small water-melon. see *kommaṭṭi*

*[கொம்மட்டி → கும்மட்டி.]*

**கும்மட்டி**[5] *kummaṭṭi,* பெ.(n.) 1.ஆற்றுத் தும்மட்டி; bitter apple. 2. சர்க்கரைக் கொம்மட்டி; sweet water melon. 3. கம்மாளர் நெருப்புச் சட்டி; chafing-dish especially of goldsmith (சா.அக.).

*[ஒரு கா: கும்மல் + சட்டி – கும்மட்டி.]*

**கும்மட்டிக்கீரை** *kummaṭṭi-k-kīrai,* பெ.(n.) ஒருவகைக் கறிக்கீரை; a kind of vegetable green (சா.அக.).

*[கும்பு→ கும்பல்→கும்மல் + சட்டி – கும்மல்சட்டி→ கும்மட்டி + கீரை.]*

**கும்மட்டிகுத்து–தல்** *kummaṭṭi-kuttu-,* 5 செ.கு.வி. (v.i.) குதித்து விளையாடுதல்; to jump and romp about.

*[கும்மட்டி + குத்து.]*

**கும்மல்**[1] *kummal,* பெ.(n.) ஆடையை நனைத்து நெம்புகை; washing cloth by plunging it into water and pressing it with hands.

*[குல் → கும்மு → கும்மல்.]*

**கும்மல்**[2] *kummal,* பெ.(n.) **கும்பல்** பார்க்க; see *kumbal.*

*[குழுமு → கும்மு → கும்மல்.]*

**கும்மல்**[3] *kummal,* பெ.(n.) அரிசி, உப்பு, காய்கறி முதலிய பொருள்களின் குவியல்; heap of vegetables. சந்தையில் காய்கறிகளைக் கும்மல் கும்மலாகக் குவித்து வைத்திருப்பார்கள். (உ.வ.).

*[குழுமு → கும்மு → கும்மல்.]*

**கும்மல்**[4] *kummal,* பெ.(n.) அரிவாள்; sickle.

*[குல் → குய் → கும் → கும்மல்.]*

**கும்மலி**[1]**–த்தல்** *kummali-,* 4 செ.கு.வி.(v.i.) விளையாடுதல்; to revel, sport, flutter. *"குருகினங் கூடியாங்கே கும்மலித் திறகுலர்த்தி" (தேவா.511,8).*

*[கும் → கும்மலி.]*

**கும்மலி**[2] *kummali,* பெ.(n.) பருத்தவள்; corpulent, stout woman.

*[குள் → கும் → கும்மலி.]*

**கும்மாயம்** *kummāyam,* பெ.(n.) 1. குழையச் சமைத்த பருப்பு *'பயற்றுத்தன்மை கெடாது கும்மாய மியற்றி (மணி.27,185)*; well-boiled dhal. 2. சுண்ணாம்பு; lime, mortar.

*[குய் (சுடுதல்) → கும் → கும்மாயம்.]*

**கும்மாளங்கொட்டு–தல்** *kummāḷaṅ-koṭṭu-,* செ.கு.வி.(v.i.) குதித்து விளையாடுதல்; to jump and move sportively.

*[கும்மாளம் + கொட்டு.]*

**கும்மாளம்** *kummāḷam,* பெ.(n.) 1. குதித்து விளையாடுகை; jumping, romping, moving sportively, as children, claves, etc. 2. குதித்தாடும் ஓர் அநாகரிகக்கூத்து; a rustic dance.

*[குள் → கும் → கும்மாளம்.]*

**கும்மாளி**[1]**–த்தல்** *kummāḷi-,* 4 செ.கு.வி.(v.i.) மனநோயின் விளைவாகக் குதித்தல், கை கொட்டல், தன்னை உயர்வாகப் பேசிக்கொள்ளல்; mild form of mania in which the symptoms are manifested under the form of gaiety or sport, as jumping, clapping hands and indulging in other agreeable hallucinations (சா.அக.).

*[கும்மல் → கும்மளி →கும்மாளி.]*

**கும்மாளி**[2] *kummāḷi,* பெ.(n.) கும்மாளம் (யாழ்.அக.); romp; jumping about.

*[கும்மாளம் → கும்மாளி.]*

**கும்மி** *kummi,* பெ.(n.) 1. மகளிர் கை கொட்டிப் பாடியாடும் விளையாட்டு; dance with clapping of hands to time and singing, especially among girls. 2. கும்மிப்பாட்டு; poem composed in a adapted to *kummi* dance.

*[கொம்மை → கொம்மி → கும்மி.]*

**கும்மியடி–த்தல்** *kummi-y-aṭi-*, 4 செ.கு.வி.(v.i.) பாடிக் கொண்டு கைகொட்டியாடுதல்; to play the *kummi* dance.

*[கும்மி + அடி.]*

**கும்மிருட்டு**[1] *kummiruṭṭu,* பெ.(n.) செறி விருட்டு;pitch darkness, intense darkness.

ம. குற்றாக்குற்றிருட்டு

*[கும் + இருட்டு. கும் = நெருக்கம், செறிவு ஆகியன குறிக்கும் ஒலிக்குறிப்புச் சொல்.]*

**கும்மிருட்டு**[2] *kummiruṭṭu,* பெ.(n.) காரிருள்; cimmerian, thick darkness.

*[கும் + இருட்டு.]*

**கும்மு–தல்** *kummu-*, 5 செ.கு.வி.(v.i.) கைகூடுதல், உண்டாதல்; to happen, occur. *"பண்டுநினைத்த பருவங் கும்முதடி" (கனம் கிருஷ்ணையர், கீர்த்.4).*

*[குல் → கும்மு.]*

**கும்மெனல்**[1] *kummenal,* பெ.(n.) இருளடர்ச்சி, காதடைப்பு முதலியவற்றைக் கூறுமிடத்துவரும் குறிப்பு; onom. expr. signifying being over whelmed, as by excessive darknessï or being confused, as by a sound in the ears when partly filled with water. *"கொண்டைமலரே கும்கும்கும் என்னக் கோயம்புத்தூர்நாடி நடந்துவா பின்கூடி" (நாடோடிப் பாட்டு).*

*[கும்மு → கும்மெனல் – ஒலிக்குறிப்பு.]*

**கும்மெனல்**[2] *kummenal,* பெ.(n.) மணம் வீசுதல்;to diffuseodor. *"கொண்டைமலரே கும்கும்கும் என்னக் கோயம்புத்தூர்நாடி நடந்துவா பின்கூடி" (நாடோடிப் பாட்டு).*

*[கும்மு → கும்மெனல்.]*

**குமக்கி** *kumakki,* பெ.(n.) கடுகுரோகிணி; black hellebore (சா.அக.);

*[கும் → குமக்கி.]*

**குமஞ்சம்** *kumañjam,* பெ.(n.) 1. பறங்கிச்சாம்பி ராணி; salai tree. 2. நறும்புகை; frankincense.

*[கும் + குமஞ்சம்.]*

**குமஞ்சான்**[1] *kumañjāṉ,* பெ.(n.) 1. ஆண் குமஞ்சான் அல்லது குங்கிலியம்; male frankincerse. 2. பெண்குமஞ்சான் அல்லது சாம்பிராணி; female frankincense. 3. நறுமணப் புகை வகை; different varieties of incense. 4. பறங்கிச் சாம்பிராணி; banzam in (சா.அக.).

*[கும்மல் → குமைதல் → குமைந்தான் → குமஞ்சான்.]*

**குமஞ்சான்**[2] *kumañjāṉ,* பெ.(n.) ***குமஞ்சம்*** பார்க்க; see *kumañjam.*

*[குமஞ்சம் → குமஞ்சான்.]*

**குமஞ்சி** *kumañji,* பெ.(n.) ஆந்தை; owl (சா.அக.).

*[கும் → கும்மந்தி → கும்மஞ்சி → குமஞ்சி.]*

**குமஞை** *kumañai,* பெ.(n.) ஆந்தை; owl (சா.அக.).

*[குமஞ்சி → குமஞை.]*

**குமட்டி** *kumaṭṭi,* பெ.(n.) சுரைக்கொடி; bottle gourd creeper. 2. காட்டுப் பூவம்; eye-balltree (சா.அக.).

*[கும் → கும்மந்தி → குமைந்தான் → குமஞ்சான்.]*

**குமட்டிக்காளான்** *kumaṭṭi-kāḷāṉ,* பெ.(n.) மரக்காளான்; mushrooms growing on trees (சா.அக.).

*[குமட்டி + காளான்.]*

**குமட்டிக்கீரை** *kumaṭṭi-k-kīrai,* பெ.(n.) ஒருவகைக் கறிக்கீரை; a kind of vegetable green (சா.அக.).

*[கும்மட்டி → குமட்டி + கீரை.]*

**குமட்டிக்கொண்டிரு–த்தல்** *kumaṭṭi-k-koṇḍiru-*, 3 செ.கு.வி.(v.i.) ஒக்காளித்திருத்தல்; being nausecous (சா.அக.).

*[கும் → குமட்டு → குமட்டி + கொண்டிரு–.]*

**குமட்டு¹-தல்** *kumaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வாயால் எடுத்தல்; to have vomiting sensation, keck. 2. நிறையவுண்டு தெவிட்டுதல்; to retch from over-eating. "பொழிந்த மாநிலம் புற்றாக் குமட்டிய புனிற்றா" (கம்பரா. கார்கா.47).

**குமட்டு²-தல்** *kumaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கக்குதல்; to vomit, eject. "வடவை குமட்டி யெதிரெடுத்து வயங்குஞ் சூலப்படை" (காசிக. வயிர.22). 2. அருவருத்தல்; to loathe, detest; to feel repugnant about.

*[கும் → குமட்டு.]*

**குமட்டு³** *kumaṭṭu,* பெ.(n.) அருவருப்பினால் உண்டாகும் கக்கல்; vomiting with loathing, kecking. அதை உண்டதும் ஒருகுமட்டுக் குமட்டியது.

*[கும் → குமட்டு.]*

**குமட்டுகை** *kumaṭṭugai,* பெ.(n.) குமட்டுதல்; a sudden feeling of nausea (சா.அக.).

*[குமட்டு→குமட்டுகை.]*

**குமட்டூர்க்கண்ணனார்** *kumaṭṭūr-k-kaṇṇaṉār,* பெ.(n.) பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தினை இயற்றிய புலவர்; the author of the second ten of *patiṟṟu-p-pattu.*

*[குமட்டூர் + கண்ணன் + ஆர்.]*

**குமடு** *kumaḍu,* பெ.(n.) கன்னம்; cheek.

*[கும் → குமடு.]*

**குமடெறிவான்** *kumaṭeṟivāṉ,* பெ.(n.) கருப்பூரவகை (சிலப்.14,109,உரை.); a kind of camphor.

*[குமடு → எறிவான்.]*

**குமண்டை** *kumaṇḍai,* பெ.(n.) 1. ஒருவகை மகிழ்ச்சிக்கூத்து; a dance of delight, merry dance. *"இட்டகுமண்டைய பேய்... உகளித்தனவே" (பாரத.பதினாறாம்.51).* 2. செருக்குமேலிட்டுச் செய்யும் செயல்; head strong haughty deed. *"தக்கனார் கொண்ட வேள்விக் குமண்டையது கெட" (தேவா.441,5).*

*[கும் → குமள் → குமண்டை.]*

**குமண்டையிடு-தல்** *kumaṇḍai-y-iḍu,* 20 செ.கு.வி. (v.i.) 1. மகிழ்ச்சியாற் குதித்தல்; to cut capers; to leap for joy. 2. நிறையவுண்டு தெவிட்டுதல் (யாழ்.அக.); to retch from over-eating.

*[கும் → குமள் → குமண்டை + இடு.]*

**குமணதனுசாதி** *kumaṇa-taṉu-šādi,* பெ.(n.) இச்சையின் அடிப்படையில் பிரித்திருக்கும் ஆண் சாதி நான்கு வகையுள் ஒன்று; one of the four classes of men divided according the lust (சா.அக.).

*[குமணம் + தனு + சாதி.]*

**குமணன்** *kumaṇaṉ,* பெ.(n.) தன்தலையை வெட்டி அதனை விரும்பிய தம்பி கையிற் கொடுத்து வேண்டியபொருளைப் பெறுமாறு தன்னிடம் இரந்த புலவனுக்குத் தன் வாளையீந்த ஒரு பெருவள்ளல் (புறநா.164); an ancient chief, who was so liberal as to give away his sword to a needy poet for cutting his head off and taking it over to his brother who had set a price on it.

*[கும்→கும்மல்→குமள்→குமளம்(மென்மை, இளமை, இனிமை) →குமணம் →குமணன் (இனிய பண்பினன்). குமளம் பார்க்க see kumaḷam]*

**குமம்** *kumam,* பெ.(n.) கூட்டம்; Arabian costus (சா.அக.).

*[கும்→ குமம்.]*

**குமர்** *kumar,* பெ.(n.) 1. கன்னிமை; virginity. *"குமரிருக்குஞ் சசிபோல்வாள் (குற்றா.தல. தருமசாமி.47).* 2. கன்னி; virgin; grown-up unmarried girl. 3. அழியாத்தன்மை; impregnability, unsullied condition. *"குமருறப் பிணித்த பைம்பொற்கொடி" (பாரத.இந்திரப்.32)*

*[கும் → குமர்.]*

**குமரக்கிரியை** *kumara-k-kiriyai,* பெ.(n.) சிரித்தல், சிறுநீர்க்குடித்தல், தரையைக் குத்தல், கல் பொறுக்கல் முதலிய குணங்களை யுண்டாக்கும் ஓர் அரத்தப் பிரமை; a state of unsound mind manifesting such tendencies as laughing drinking urine, striking with the feet on the ground gathering pebbles etc.,

*[குமரம் + கிரியை.]*

**குமரகச்சாணம்** *kumara-kaccāṇam,* பெ.(n.) பழைய வரிவகை; an ancient tax (S.I.I.iii,115).

*[குமரகம் + சாணம்.]*

**குமரகண்டம்** *kumara-kaṇṭam,* பெ.(n.) ஒருவகை வலிப்பு; epileptic fits attended with violent convulsions. *"குமரகண்ட வலிப்புவருஞ் சிலநேரம்" (தனிப்பா.i,264,2).*

*[குமரம் + கண்டம்.]*

**குமரகண்டவலி** *kumara kaṇḍavali,* பெ.(n.) ஓர்வகை இழுப்பு அல்லது தணுப்பினால் (சிலேட்டுமத்தால்) பிறந்து, காய்ச்சல், தலைவலி கண்டு, முன் கழுத்தையும், முகத்தையும் முறுக்கித் தோளின் பக்கம் வைத்தல் தாடை, கண், செவி, உதடு இவற்றை கோணச் செய்தல் முதலிய குறிகளோடு காணும் வலிப்புநோய்; a kind of epilipte form fits marked by fever and head ache altended with violent convulsions when neck and face are distorted to one side of the shoulder thereby twisting the face especially chin, eyes and ears. It is due to concerted action of the deranged vaycu(gas) (சா.அக.).

*[குமுறல் → குமரல் + கண்டம் + வலி. கண்டம் = தீங்கு, வலி = வலிப்பு.]*

**குமரகண்டன்** *kumara-kaṇḍaṉ,* பெ.(n.) *குமர கண்டம்* பார்க்க; see *kumara-kaṇṭam.* *"குமரகண்டன் முதலியன விடும்பையினைப் பெருக்கும்" (சேதுபு.துராசார.35).*

*[குமரம் + கண்டன்.]*

**குமரகமூலி** *kumaraga-mūli,* பெ.(n.) கோழிக்கால் கீரை,புதினாக் கீரை; Indian pepper mint (சா.அக.).

*[குமரகன் + மூலி. குமரகன் = கோழி.]*

**குமரகன்** *kumaragaṉ,* பெ.(n.) 1. கோழி; fowl. 2. சேவல்; cock.

*[குமரன் (முருகன்) → குமரகன் (முருகனின் கொடியான சேவல்).]*

**குமரகன் பூடு** *kumaragaṉ-pūḍu,* பெ.(n.) கோழிக்கால் பூடு; plant resembling the leg of fowl (சா.அக.).

*[குமரகன் + பூடு.]*

**குமரகன் பெண்டிர்** *kumaragaṉ-peṇḍir-,* பெ.(n.) வள்ளிக்கொடி; sweet potato creeper (சா.அக.).

*[குமரகன் + பெண்டிர்.]*

**குமரகுருபரர்** *kumara-kuru-parar,* பெ.(n.) நீதிநெறி விளக்கம் முதலிய சிற்றிலக்கியங்கள் இயற்றியவரும் பதினேழாம் நூற்றாண்டில் விளங்கியவருமான ஆசிரியர்; the author of nīti-neṟi-viḷakkam and other poems, 17th c.

*[குமரன் + குரு + பரர்.]*

**குமரகோட்டம்** *kumara-koṭṭam,* பெ.(n.) கச்சியிலுள்ள முருகக்கடவுள் கோயில் ; a shrine in conjeevaram sacred to Skanda. *"குமரகோட்டம்வா ழாறுமாமுகப்பிரான்" (கந்தபு.கடவுள்.18)*

*[குமரன் + கோட்டம்.]*

**குமரதண்டம்** *kumara-taṇṭam,* பெ.(n.) குமரக் கடவுளைப் படைத்தலைவராகக் கொண்ட தேவர்படை; army of gods under Skanda's command. *"குமரதண்டம் புகுந்தீண்டிய வெள்ளம்" (திவ்.திருப்பள்ளி.6).*

*[குமரன் + தண்டம்.]*

**குமரப்பாரை** *kumarappārai,* பெ.(n.) பெரிய கடல்மீன்வகை (M.M.668); horse mackerel, glossy green, attaining 5 ft. in length.

*[குமரம் + பாரை.]*

**குமரப்பிள்ளை** *kumara-p-piḷḷai,* பெ.(n.) குமரி; virgin (சா.அக.).

*[குமர் + பிள்ளை.]*

**குமரம்**[1] *kumaram,* பெ.(n.) கொம்பில்லாத விலங்கு (சூடா.); hornless animal.

*[கும் → குமர் → குமரம்.]*

**குமரம்**[2] *kumaram,* பெ.(n.) பழங்காலத்திலிருந்ததாகச் சிலர் கருதுகின்ற ஓர் தமிழ் இலக்கண நூல்; a fictitious work on tamil grammer believed to have perished.

*[குமரன் → குமரம்.]*

**குமரமூக்கன்** *kumara-mūkkaṉ,* பெ.(n.) கொம்பேறிமூக்கன்; krait.

*[கொம்பேறிமூக்கன் → குமரமூக்கன்.]*

**குமரலண்டம்** *kumara-laṇḍam,* பெ.(n.) பிடுக்கில் இரைச்சலிடும் ஒருவகை அண்டநோய்; reducible hernia (சா.அக.).

*[குமுறல் → குமுரல் + அண்டம்.]*

**குமரவலி** *kumaravali,* பெ.(n.) காக்கைவலிப்பு நோய் வகை (திருப்பு.176,புதுப்.); a kind of epileptic fit.

*[குமரம் + வலி.]*

**குமரவேள்** *kumara-vēḷ,* பெ.(n.) முருகக் கடவுள் ; Skanda *"வலவனை... குமரவேள் முன்னருய்த்தான்" (கந்தபு.ஏமகூட.6).*

*[குமரன் + வேள்.]*

**குமரன்** *kumaraṉ,* பெ.(n.) 1. இளைஞன்; young man, youth. *"இருந்த குலக்குமரர்தமை . . . பருக நோக்கி" (கம்பரா.மிதிலைக்.157).* 2. புதல்வன்; son. *"வாசவற்காகிய குமரன்" (பாரத. பதின்மூன்.191).* 3. முருகன்; Skanda, as son of Śiva. *"குன்று தோறாடிய குமரற் போற்றுவாம்" (கந்தபு. கடவுள்.16).* 4. வைரவன் (சூடா.); Bhairava.

*[கும் → குமர் → குமரன்.]*

**குமரனேறும் பச்சிலை** *kumaraṉ-ēṟum-pa-c-cilai,* பெ.(n.) மயிற்சிகைப் பூடு; peacock's crest (சா.அக.).

*[குமரன் (முருகன்) + ஏறும் + பச்சிலை.]*

**குமரனேறும் புள்** *kumaran-ēṟumpuḷ,* பெ.(n.) மயில்; pea-cock (சா.அக.).

*[குமரன் + ஏறும் + புள் (பறவை).]*

**குமரி**[1] *kumari,* பெ.(n.) 1. கன்னி; virgin, maid. *"குமரிமணஞ் செய்துகொண்டு" (திவ். பெரியாழ்.3.8:3).* 2. பருவமடைந்த பெண்; grown-up unmarried girl. 3. புதல்வி; daughter. *"தக்கனீன்ற ... குமரியான" (கந்தபு.பாயி.57).* 4. கொற்றவை; durgā. *"விழிநுதற் குமரி (சிலப்.11,214).* 5. **குமரியாறு** ; a river. *"வடவேங்கடந் தென் குமரி (தொல்.பாயி.).* 6. குமரி முனை; Cape Comorin. 7. கன்னிக் குமரிக்கடல் நீர்; sacred waters at cape Comorin. *"தென்றிசைக்குமரி யாடிய வருவோள்" (மணி.13,7).* 8. அழிவின்மை; perpetual youthhood, uncorrupt, unspoilt condition. *"குமரிக் கூட்டிற் கொழும் பல்லுணவு" (சிலப்.10, 123).* 9. கற்றாழை (திவா.); aloe.

*[கும் → குமர் → குமரி.]*

குமரிருட்டு (குமரியிருட்டு) குமரிவாழை என்பன இளமையையும், குமரி வேட்டம் குமரிப்போர் என்பன முதல் நிகழ்ச்சியையும், குமரிப்படை, குமரிமதில் என்பன அழியா நிலைமையையும் உணர்த்தும்.

குமர், குமரன், குமரி என்னும் சொற்கட்குத்

திரண்ட இளமை என்பதே அடிப்படை பொருள். ஒ.நோ. முருகு = இளமை. முருகு = முருகன், இளைஞன், குமரன் வள்ளிமணாளன், குறிஞ்சி நிலத் தெய்வம்.

வடமொழியாளர், குமரகுமரியரை ஆரியத் தெய்வமாகவும், அவர் பெயரை ஆரியச்சொல்லாகவுங் காட்டல் வேண்டி, குமரன் என்பதைக் குமார என்றும் குமரி என்பதைக் குமாரி என்றும், ஈற்றயலுயிர் நீட்டி, மகன் மகள் என்று முறையே பொருள் குறித்து, குமார என்பதைக் கு + மார என்று சிதைத்து, எளிதில் இறப்பது (easily dying) என்று பொருட்கரணியங் கூறுவர்.

குமரன் குமரி என்னுஞ் சொற்கட்குத் தமிழில் இளைஞன், இளைஞை என்றேயன்றி, மகன், மகள் என்னும் பொருளில்லை. இவ்விரு சொற்கட்கும் 'கும்' என்பதே மூலம் என்றும், ஆரியத்தொன்மக் கதைப்படி முருகன் சிவனுக்கு மகன் எனினும், காளி அவனுக்கு மகளாகாள் என்றும் எளிதிலிறப்பது குழப்பருவத்திலும், கிழப்பருவத்திலுமன்றி மழப்பருவத்திலில்லையென்றும் அறிதல் வேண்டும்.

மணமாகாத இளைஞனையும் இளைஞையை யும் செல்வன், செல்வி என்று அடை கொடுத்துப் பெயர் குறிப்பது, குமரன், குமரி என்பன வடசொல்லென்னும் அறியாமையை அடிப்படையாகக் கொண்டது. செல்வன் செல்வி என்று மணமக்களைக் குறிப்பதே மரபாதலால், Master, Miss என்னும் அடைகளை இனிக் குமரன் குமரி என்றே தமிழிற் குறிக்க.

(குமர் → குமரி (செல்வி.'78,ஏப்ரல், பக்.407))

**குமரி**[2] *kumari,* பெ.(n.) மலைநிலத்துச் செய்யும் வேளாண்மை; cultivation in hills.

*[குய் → கும் → குமரி.]*

**குமரிக்கடல்** *kumari-k-kaḍal,* பெ.(n.) குமரி யருகிலுள்ள கடல் (சிலப்.8,1, உரை); sea near *Kumari.*

*[குமரி + கடல்.]*

**குமரிக்கண்டம்** *kumari-kanḍam,* பெ.(n.) தென்கடலில் மூழ்கி விட்டதாகக் கருதப்படும் தமிழர் வாழ்ந்த நிலப்பகுதி; land submerged in the Indian Ocean where ancient Tamils suposed to have lived for a long period. *"மெய்ந்நெறி சேர்வது குமரிகண்டம்" (கந்தபு.அண்டகோ.47).*

*[குமரி + கண்டம்.]*

**குமரிக்கருப்பினி** *kumari-k-karuppiṉi,* பெ.(n.) சிறுபெண்ணாயிருக்கும் போதே கருப்பமடையும் பெண்; a young pregnant girl (சா.அக.).

**மறுவ.** குமரிக்கருவத்தி, குமரிக்கருவாளி

*[குமரி + கருப்பினி.]*

**குமரிக்கற்றாழை** *kumari-k-kaṟṟāḻai,* பெ.(n.) 1. சோற்றுக்கற்றாழை; aloe pulp. 2. செங்கற்றாழை; red aloe (சா.அக.).

*[குமரி + கற்றாழை.]*

**குமரிக்காமம்** *kumari-k-kāmam,* பெ.(n.) பெண்ணின் நாதம்; sexual discharge in women. semen muliebre. *"கொள்ளடா கொள்ளடா குமரிக்காமம். கொண்டவனே உயிர்பிழைப்பான் மற்றோன் சாவான்" (பூரணசந்திரோதயம்) (சா.அக.).*

*[குமரி + காமம்.]*

**குமரிக்கோடு** *kumari-k-kōṭu,* பெ.(n.) குமரிக்கடற் பக்கத்திருந்த ஒரு மலை; a mountain or banks of a river said to have existed near *Kumari.* "குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள" (சிலப்.11:20).

*[குமரி + கோடு.]*

**குமரிகற்பம்** *kumari-karpam,* பெ.(n.) 1. சோற்றுக் கற்றாழையிற் கொள்ளும் காயகற்ப மருந்து; medicine taken along with aloe-pulp for rejuvenation. 2. பெண்ணின் நாதத்தோடு மருந்தைச் சேர்த்துக் கொள்ளும் காயகற்ப மருந்து; a rejuvenating medicine in which the female vaginal secretion forms

the ingredient amongst other drugs used for the purpose (சா.அக.).

*[குமரி + கற்பம். கற்பம் = கலுவத்தில் (கல்வம்) இட்டரைத்த மருந்து.]*

**குமரிகாசம்** *kumari-kācam,* பெ.(n.) கண்ணுக் கேற்படும் ஒருவகைக் காசநோய் ; cataract of the eyes. It is marked by a bluish-white appearance like contrusion, intolerable pain and irritation, muco purulent discharge, piercing pain in the iris. As a result of deranged vayu (humour) It is also characterised by dilatation of the pupil, swelling due to the collection of morbid fluid in the eye and impaired vision (சா.அக.).

*[குமுறுல்→குமரல்→குமரி+காசம்.]*

இதனால் கண்கள் கலங்கித் தாங்க முடியாத கடுப்புடன் வலியுண்டாகிப் பீளை சேர்ந்து, நடு விழியில் குத்தலும், அதனுடன் கண்ணில் வலியுங் கொண்டு கண்மணி பெருத்து வீங்கித் திரண்டு நீர் கோத்துக் கொண்டு பார்வைக்குக் கெடுதி நேரிடும்.

**குமரிச்சாறு** *kumari-c-cāṟu,* பெ.(n.) கற்றாழைச் சாறு; aloe juice.

*[குமரி + சாறு.]*

**குமரிச்சீவன்** *kumari-c-cīvaṉ,* பெ.(n.) புத்திரச் சீவிப் பூடு; childs amulet tree (சா.அக.).

*[குமரி + சீவன்.]*

**குமரிச்சுறா** *kumari-c-cuṟā,* பெ.(n.) 15 அடி நீளமுள்ள குரங்கன்சுறாமீன் (M.M.851); zebra shark, tawny, attaining 15 ft. in length.

*[குமரி + சுறா.]*

**குமரிச்சேர்ப்பன்** *kumari-c-cērppaṉ,* பெ.(n.) குமரித்துறைக்குரிய பாண்டியன் (திவா.); the pandya king, as lord of cape comorin.

*[குமரி + சேர்ப்பன்.]*

**குமரிச்சோறு** *kumari-c-cōṟu,* பெ.(n.) கற்றாழைச் சோறு; aloe pulp (சா.அக.).

*[குமரி + சோறு.]*

**குமரிஞாழல்** *kumari-ñāḻal,* பெ.(n.) 1. மல்லிகை; jasmine. 2. சங்கம் பூ; cinnamon.

*[குமரி + ஞாழல்.]*

**குமரித்துறை** *kumari-t-tuṟai,* பெ.(n.) கன்னியாகுமரி நீர்த்துறை; the bathing-ghat at Cape Comorin. *"பொருநைத்துறையொடு குமரித் துறையவள் புதுநீராடுகவே" (மீனாட்.பிள்ளைத்.நீராடற்.10).*

*[குமரி + துறை.]*

**குமரித்தெய்வம்** *kumari-t-teyvam,* பெ.(n.) கன்னியாகுமரித் தெய்வம்; the goddess Kumari at Cape Comorin.

*[குமரி + தெய்வம்.]*

**குமரித்தைலம்** *kumari-t-tailam,* பெ.(n.) சோற்றுக் கற்றாழையை முதன்மையாகக் கொண்டு உண்டாக்கும் மருந்து எண்ணெய்; a medicated oil prepared with aloe as a chief - ingredients along with other drugs which is used for anointing the head (சா.அக.).

மறுவ. குமரியெண்ணெய்

*[குமரி + தைலம்.]*

**குமரிதபோதம்** *kumaridapōdam,* பெ.(n.) துயில் நிலை; the highest degree or state of the soul in which yogis attain entire quiescence (சா.அக.).

*[குமரி + இத + போதம்.]*

**குமரிநாதம்** *kumari-nādam,* பெ.(n.) குமரிக் காமம்; sexual discharge in women.

*[குமரி + நாதம்.]*

குமரிநாதம் என்பதற்கு மாதவிலக்குக் குருதி எனப் பிற மருத்துவ அகரமுதலிகளில் குறிக்கப் பட்டிருப்பது தவறு என மருத்துவர் சாம்பசிவம் பிள்ளை தெளிவாக்கியிருக்கிறார்.

**குமரிநீர்** *kumari-nīr,* பெ.(n.) 1. பெண்ணின் காமக்களைநீர் (குமரிக்காமம்);sexual discharge in women. 2. கற்றாழை நீர்; aloe juice. 3. வெடியுப்புச் செய்நீர்; nitric acid. 4. சிறுமியின் சிறுநீர்; girl's urine (சா.அக.).

*[குமரி + நீர்.]*

**குமரிநீலி** *kumari-nīli,* பெ.(n.) குமரி நஞ்சு; a kind of prepared arsenic (சா.அக.).

*[குமரி + நீலி.]*

**குமரிப்பகவதி** *kumari-p-pagavadi,* பெ.(n.) ***குமரித்தெய்வம்*** பார்க்க; see *kumari-t-teyvam.*

*[குமரி + பகவதி.]*

**குமரிப்படை** *kumari-p-paḍai,* பெ.(n.) அழியாச்சேனை; invincible army. *"குமரிப்படைதழீஇய" (புறநா.294).*

*[குமரி + படை.]*

**குமரிப்பருவம்** *kumari-p-paruvam,* பெ.(n.) கருத்தரித்தற்குரிய பருவம், பருவகாலம்; the reproductive period of a woman's life (சா.அக.).

*[குமரி + பருவம்.]*

**குமரிப்பால்** *kumari-p-pāl,* பெ.(n.) 1.குமரிச்சாறு; aloe juice. 2. பருவப் பெண்ணின் முலைப்பால்; the breast milk of a young woman (சா.அக.).

*[குமரி + பால்.]*

**குமரிப்பூ** *kumari-p-pū,* பெ.(n.) இளம் பெண்ணின் மாதவிலக்கு அரத்தம்;the menstrual blood of a virgin girl (சா.அக.).

*[குமரி + பூ.]*

**குமரிப்போர்** *kumari-p-pōr,* பெ.(n.) கன்னிப்போர்; first military engagement of a prince. *"குமரிப்போருள் . . . கொன்றதன்றே" (சீவக.806).*

*[குமரி + போர்.]*

**குமரி மஞ்சணத்தி** *kumari-mañjaṇatti,* பெ.(n.) பூசு மஞ்சள்; Indian saffron (சா.அக.).

*[குமரி + மஞ்சணத்தி.]*

**குமரிமடல்** *kumari-maḍal,* பெ.(n.) கற்றாழை மடல் (சா.அக.); leaf of aloe.

*[குமரி + மடல்.]*

**குமரிமணி** *kumari-maṇi,* பெ.(n.) பருவப் பெண்ணின் நோனி (யோனிலிங்கம்); the small elongated organ or elitoris of a young woman (சா.அக.).

*[குமரி + மணி.]*

**குமரிமதில்** *kumari-madil,* பெ.(n.) அழியாக்கோட்டை (சீவக.336); pregnable fortress.

*[குமரி + மதில்.]*

**குமரிமூ-த்தல்** *kumari-mū-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கன்னிகையாகவேயிருந்து மூப்படைதல்; to live and die as a virgin; to live one's days in virginity. *"குமரிமூத்தவக் கொடுங்குழை நல்லாள்" (மணிமே.22:143)*; pregnable fortress. 2. பயனின்றிக் கழிதல்; to be wasted, to lie fruitless. *"குமரி மூத்தவென் பாத்திரம்" (மணிமே.14:77).*

*[குமரி + மூத்தல்.]*

**குமரிமூலம்** *kumarimūlam,* பெ.(n.) கற்றாழை வேர்; aloe root (சா.அக.).

*[குமரி + மூலம்.]*

**குமரியச்சரம்** *kumariya-c-caram,* பெ.(n.) குழந்தை களுக்கு அழிற்சியினால் நாக்குக் கொப்புளிக் காமலே தடித்து, வெடித்து, சுரங்காய்ந்து, அரத்த

மாய் வயிற்றுப் போக்குடன் கக்கலையும் உண்டாக்கும் ஒரு நோய்; a kind of stomatitis due to alimentary disorder. It is marked by swollen tongue, fissure from inflammation without ulceration, fever, dysentery and vomiting (சா.அக.).

*[குமரி + அச்சரம்.]*

**குமரியன்னம்** *kumari-y-annam,* பெ.(n.) குமரிச்சோறு,கற்றாழைச் சோறு; aloe pulp (சா.அக.).

*[குமரி + அன்னம்.]*

**குமரியாடு-தல்** *kumari-y-āḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கன்னியாகுமரி நீரில் நீராடி தென்புலத்தார் கடன் முதலியவை செய்தல்; to perform sacred ablutions at cape comorin. *"தென்றிசைக் குமரியாடிய வருவோன்" (மணி.13,7).* 2. கன்னியோடு மருவுதல்; to copulate with a virgin. *"சிந்தை நலிகின்ற திருநீர்க் குமரியாட" (சீவக.2020).*

*[குமரி + ஆடு.]*

**குமரியாறு** *kumari-y-āṟu,* பெ.(n.) தமிழகத்துக்குத் தெற்கெல்லையாய்க் கடலாற் கொள்ளப்பட்டதாகக் கூறப்படுங் கன்னியாறு; the kumari river mentioned in Tamil literature as having been once the southern boundary of the Tamil land, and afterwards submerged in the Indian ocean. *"குமரியாறும் பனைநாட்டோடு கெடுவதற்கு முன்னையது" (தொல்.பொ.649, உரை).*

*[குமரி + ஆறு.]*

**குமரியிசை** *kumari-y-isai,* பெ.(n.) பேரீச்சம் பழம்; wild date fruit (சா.அக.).

*[குமரி + இசை.]*

**குமரியிருட்டு** *kumari-y-iruṭṭu,* பெ.(n.) கன்னி யிருட்டு; darkness just before dawn.

*[குமரி + இருட்டு.]*

**குமரிரு-த்தல்** *kumar-iru,* 3 செ.கு.வி.(v.i.) வீணே கழிதல்; to pass away unused; to be wasted. *"ஆத்மகுணங்கள் குமரிருந்துபோமித்தனை" (ஈடு,2.8:1).*

*[கும்மல் → குமல் → குமர் + இரு.]*

**குமரிலிங்கம்** *kumaril-iṅgam,* பெ.(n.) பெண்ணின் நோனி; clitoris of a young woman (சா.அக.).

மறுவ. குமரிமணி

*[குமரி + லிங்கம்.]*

**குமரிவளி** *kumari-vaḷi,* பெ.(n.) ஒரு காற்றுப் பிடிப்பு; a kind of windy humour (சா.அக.).

*[குமரி + வளி.]*

**குமரிவாழை** *kumari-vāḻai,* பெ.(n.) ஈனாத இளவாழை; young plantain that has not yet yielded. *"குமரிவாழையின் குருத்தகம் விரித்து" (சிலப்.16:42).*

*[குமரி + வாழை.]*

**குமரேசசதகம்** *kumarēśa-śadagam,* பெ.(n.) குமரேசனை முன்னிலைப்படுத்திக் குருபாததாசர் இயற்றிய சதகநூல்; ethical poem of 100 stanzas addressing kumarēcan, by kuru-pāta-tācar.

*[குமரேசர் + சதகம்.]*

**குமல்** *kumal,* பெ.(n.) அரிவாள் (அக.நி.); sickle.

*[கும்மல் → குமல்.]*

**குமலி** *kumali,* பெ.(n.) துளசி; holy basil (சா.அக.).

*[கும் → குமலி.]*

**குமளம்** *kumaḷam,* பெ.(n.) 1. மென்மை; softness. 2. இளமை; youthfulness. 3. இனிமை; sweetness. 4. நறுமணம்; fragrance.

**Guj.** *kumaḷa*

*[கும் → கும்மு கும்மளம் குமளம்.]*

*த. குமளம் > skt. kōmaḷa.*

**குமளம்பாசு** *kumaḷambāśu,* பெ.(n.) இரண்டடி நீளமுள்ள கடல்மீன்வகை; tawnyfish, bluish, attaining 2 ft. in length.

*[குமளம் + பாசு.]*

**குமனீம்** *kumanīm,* பெ.(n.) 1. பறங்கிச் சாம்பிராணி; Indian resin. 2. குங்குலியம்; saul dammer. 3. சாம் பிராணி; frankincemse (சா.அக.).

*[கும்மல் → கும்மலம் → கும்மலிம் →குமனீம் (கொ.வ.).]*

**குமாரகம்** *kumāragam,* பெ.(n.) ஒருவகை ஈயம்; a kind of lead. 2. மாவிலங்கம்; lingam tree. 3. பத்து, பன்னிரண்டு அகவைப் பெண்; a girl of 10 or 12 years. 4. கற்பழியாப்பெண்; a chaste woman. 5. இரட்டை மல்லிகை; double flowered jasmine (சா.அக.).

*[கும் → குமல் →குமரம் → குமாரகம்.]*

**குமாரகாலம்** *kumāra-kālam,* பெ.(n.) குமரப் பருவம்; the period of youth. "குமாரகால நிறைவுற வுய்த்து" (பெருங்.நரவாண.8,44).

*[குமரம் → குமாரம் + காலம்.]*

**குமாரசுவாமி** *kumāra-šuvāmi,* பெ.(n.) முருகக் கடவுள்; Skanda, as the son of šiva. *"நக்கீரனாரால் உரைகண்டு குமாரசுவாமியாற் கேட்கப்பட்டதென்க" (இறை.1,உரை,பக்.8).*

*[குமரன் + சுவாமி.]*

**குமாரசுவாமியம்** *kumāra-šuvāmiyam,* பெ.(n.) நல்லூர்க் குமாரசுவாமிதேசிகர் இயற்றிய ஒரு சோதிடநூல்; a treatise in astrology by *nallūr-k-kumāracuvāmi-dēšigar.*

*[குமார் + சுவாமியம்.]*

**குமாரத்தி** *kumāratti,* பெ.(n.) மகள்; daughter.

*[குமாரன் → குமாரத்தி.]*

**குமாரதந்திரம்**[1] *kumāra-tandiram,* பெ.(n.) முருகக்கடவுளின் வழிபாட்டு நெறியைத் தெரிவிக்கும் ஆகமம்; an agama in sanskrit dealing with skanda and his worship. *"குமாரதந்திர நெறிப்படி ... பூசனை புரிந்தனர்" (கந்தபு.மீட்சி.24).*

*[குமாரன் + தந்திரம்.]*

**குமாரதந்திரம்**[2] *kumāratandiram,* பெ.(n.) இராவணன் (கோகர்ணத்தில்) தவம் செய்து இயற்றிய ஓர் மருத்துவ நூல் (வடமொழியில் மொழிபெயர்க்கப்பட்ட ஆயுள் வேதத்தின் ஒரு பாகம்); one of the divisions of Ayurvēda in to sanskrit originally written by Ravana (சா.அக.).

*[குமாரம் + தந்திரம்.]*

**குமாரதெய்வம்** *kumāra-deyvam,* பெ.(n.) **குமாரசுவாமி** பார்க்க; see *kumāra-šuvami. "அவன் குமாரதெய்வம்" (இறை.1, உரை, பக்.7).*

*[குமாரன் + தெய்வம்.]*

**குமாரப்பல்லக்கு** *kumāra-p-pallakku,* பெ.(n.) சிறுபல்லக்கு; small palankeen.

*[குமரன் → குமாரன் + பல்லக்கு.]*

**குமாரப்பாறை** *kumāra-p-pārai,* பெ.(n.) 5 அடி நீளமுள்ள ஒரு கடல்மீன்; a kind of horse mackerel, its length is about 5 feet (சா.அக.).

*[குமாரம் + பாறை.]*

**குமாரபிருத்தியம்** *kumāra-piruttiyam,* பெ.(n.) குழந்தைகளுக்கும் பெண்களுக்கும் வரும் நோய்களின் காரணம், குறி, குணம், முறை முதலியவற்றைப் பற்றிக் கூறும் ஆறு மருத்துவ நூல்கள்; 6 books in Ayurveda, which tells the diseases peculiar to infants and women. It contains etymology, symptomatology etc (சா.அக.).

*[குமாரம் + பிருத்தியம்.]*

**குமாரம்** *kumāram,* பெ.(n.) உருக்கி ஓடவிட்ட பொன் (யாழ்.அக.); gold melted and refined.

*[குமர் → குமாரம்.]*

**குமாரமடைப்பள்ளி** *kumāra-madai-p-palli,* பெ.(n.) அரச குமரர்க்குச் சமையல் செய்தோரது

மரபில்வந்தவர்கள்; a sub-caste of *maṭai-p-paḷḷi* who got their name from their ancestors having been cooks of princes.

*[குமரர் → குமாரர் + மடை + பள்ளி.]*

**குமாரவாகனம்** *kumāra-vāgaṉam,* பெ.(n.) 1.மயில்; peacock. 2. யானை; elephant (சா.அக.).

*[குமாரன் + வாகனம்.]*

**குமாரவிருத்தியை** *kumāra-viruttiyai,* பெ.(n.) மருத்துவச்சி; mid-wife (சா.அக.).

*[குமாரம் + விருத்தியை.]*

**குமாரன்** *kumāraṉ,* பெ.(n.) 1. புதல்வன்; son. 2. இளைஞன்; young man. 3. முருகக்கடவுள்; Skanda, as son of Šiva. "கோயில்செல்லுபு குமார னிருந்தான்" (கந்தபு.குமார.16).

*[குமரன் → குமாரன்.]*

**குமாரி** *kumāri,* பெ.(n.) 1.புதல்வி; daughter. 2. காளி; *kāli* 3. அழியா இளமையினள்; woman of perpectual youth ever in the prime of life. *"அமர்செய் கயற்கட் குமாரியைக் காக்க" (மீனாட்.பிள்ளைத்காப்பு. 4).* 4. தங்கத்தைக் கரைக்குமோர் கரைப்பான்; solvent of gold (W.).

*[கும் → குமரி → குமாரி.]*

**குமாரிகா** *kumārika,* பெ.(n.) காய்ப்பாகல்.

*[குமரி + பாய் = குமாரிக்காய் → குமாரிகா.]*

**குமாரிகை** *kumārigai,* பெ.(n.) பத்துமுதல் பன்னிரண்டு அகவைப் பெண்; a girl of 10-12 years (சா.அக.).

*[குமரி → குமாரி + கை.]*

**குமி[1]-தல்** *kumi-,* 2 செ.கு.வி.(v.i.) திரளுதல்; to accumulate, to be heaped up, to crowd (கொ.வ.).

*[கும் → குமி-.]*

**குமி[2]-த்தல்** *kumi-,* 4 செ.குன்றாவி. (v.t.) திரளச் செய்தல்; to accumulate, heap up, to gather.

*[கும் → குமி-.]*

**குமி[3]-த்தல்** *kumi-,* 4 செ.குன்றாவி. (v.t.) அரிசி முதலியவற்றை அதிகமாகக் குற்றுதல்; to cover-pound, as rice.

*[குமி → குமி-த்தல்.]*

**குமிகை** *kumigai,* பெ.(n.) முதிராத எள்ளு (பிங்.); immature sesamum. 2. வெள்ளெள்ளு (மலை.); white sesamum.

*[கும் → குமிகை.]*

**குமிகைச் சோளம்** *kumigai-c-cōḷam,* பெ.(n.) வெண்சோளம்; white guinea-corn (சா.அக.).

*[குமிகை + சோளம்.]*

**குமிட்டி-த்தல்** *kumiṭṭi-,* 4 செ.கு.வி.(v.i.) குமிழ் போலாதல்; to swell, form as a tumour.

*[குமிழ் → குமிட்டித்தல்.]*

**குமிட்டிக்கல்** *kumiṭṭi-k-kal,* பெ.(n.) கற்கிட்டம்; over burnt brick (சா.அக.).

*[குமிட்டி + கல்.]*

**குமிட்டிக்காய்** *kumiṭṭi-k-kāy,* பெ.(n.) கறிக்குமிட்டி; a vegetable variety of kumaṭṭi (சா.அக.).

மறுவ. கல்யாணபூசணி

*[கும்மட்டி → குமட்டி → குமிட்டி + காய்.]*

**குமிட்டிமாதுளை** *kumiṭṭi-māduḷai,* பெ.(n.) கொம்மட்டி மாதுளை; melon lime-citrus (சா.அக.).

மறுவ. சீதளை

*[கொம்மட்டி → குமட்டி + மாதுளை.]*

**குமிட்டில்** *kumiṭṭil,* பெ.(n.) ஒரு கீரை; a vegetable green (சா.அக.).

*[குமிட்டி → குமிட்டில்.]*

**குமிட்டு** *kumiṭṭu,* பெ.(n.) குவியல் (யாழ்.அக.); heap.

*[கும் → குமிழ் → குமிட்டு.]*

**குமிடக்கல்** *kumiḍa-k-kal,* பெ.(n.) கிட்டம்; iron dross (W).

*[குமிடம் + கல்.]*

**குமிடு** *kumiḍu,* பெ.(n.) குன்று; hill. "காடுங் குமிடு மிடமாக" (பாடு.போற்றி.).

*[கும் → குமி → குமிடு.]*

**குமிண்சிரிப்பு** *kumiṇ-cirip-pu,* பெ.(n.) புன்சிரிப்பு; gentle smile. *"குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பும்" (தேவா.11.4).*

*[குமிழ் + சிரிப்பு = குமிண் சிரிப்பு.]*

**குமிண்டி** *kumiṇḍi,* பெ.(n.) கீரைவகை; a kind of greens. *"குமிண்டியும் பண்ணையும் கூட முளைக்கின்ற" (தனிப்பா.1, 142,38).*

*[குமுள் → குமுழ் → குமுண் → குமிண். குமுழ் = ஒருவகை மணம் வீசுதல்மட்டிக்கீரை.]*

**குமிதம்** *kumidam,* பெ.(n.) தேக்குமரம்; teak wood; Indian oak (சா.அக.).

*[கும்மு → கும்மிதம் → குமிதம் (திரண்டது).]*

**குமிலம்** *kumilam,* பெ.(n.) பேரொலி (பிங்.); uproar, tumult, great noise, roar, acclamation shout.

*[குமுல் → குமில் → குமிலம்.]*

**குமிலயம்** *kumilayam,* பெ.(n.) குப்பைமேனி. இது குப்பையில் வளரும் ஒருவகைக் கீரை; rubbish plant. It is common in indian gardens and backyards of houses (சா.அக.).

மறுவ. மயிலக்கீரை

*[குமிலி → குமிலியம் → குமிலயம்.]*

**குமிலவோதை** *kumila-v-ōdai,* பெ.(n.) பேராரவாரம்; tremendous noise, uproar. *"சாப நாணறு குமிலவோதை" (இரகு. யாக.87).*

*[குமுல் → குமில் → குமிலம் + ஓதை.]*

**குமிலி** *kumili-,* பெ.(n.) துளசி; sacred basil.

*[குமுல் → குமில் → குமிலி.]*

**குமிழ்¹-த்தல்** *kumiḻ-,* 4 செ.கு.வி.(v.i.) 1. குமிழியிடுதல்; to grow into a conical shape, to be spherical, globular, to form in to bubble. *"செழுங்குருதி கொழித்திழிந்து குமிழித்தெறிய" (திவ்.பெரியாழ். 4:8,7).* 2. மயிர்சிலிர்த்தல்; to stand on end, as hair, to horripilate.

*[கும் → குமிழ் → குமிழ்த்தல்.]*

**குமிழ்²-த்தல்** *kumiḻ,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. ஒலிக்கச் செய்தல்; to cause to sound. *"அதிர்முக முடைய வலம்புரி குமிழ்த்து" (திவ்.பெரியாழ். 4:7,3).* 2. கொழித்தல் (தைலவ. வைத்திய.12); to winnow.

*[கும் → குமிழ்.]*

**குமிழ்¹** *kumiḻ,* பெ.(n.) 1. நீர்க்குமிழி (பிங்.); water bubble. 2. உருண்டு திரண்ட வடிவம்; knob, as of wooden sandals, stud, pommel, anything round or convex, as the head of a nail. 3. எருத்தின் திமில்; hump of an ox. 4. உள்ளங்கால் வீக்கம்; swelling in the sole of the foot.

*[கும் → குமிழ்.]*

**குமிழ்²** *kumiḻ,* பெ.(n.) 1. நிலக்குமிழ்; small cashmere tree. 2. பெருங்குமிழ் (தொல்.எழுத்.386);

coomp teak. 3. நீரைச் வடிக்கும் செடிவகை; mucilaginous shrub that yields water. 4. நாணல் (மலை.); kaus, a large and coarse grass.

*[கும் → கும்மு (திரள்தல்) →குமுல் →குமில்→ குமிழ்.]*

**குமிழ்–தல்** *kumil-*, 4 செ.கு.வி.(v.i.) சித்திரவேலை செதுக்கப்படுதல்; to be embossed or worked in relief. மரத்திற் குமிழ்ந்த யானை.

*[குமி → குமிழ்.]*

**குமிழ்க்கட்டை** *kumil-k-kattai*, பெ.(n.) பாதக்குறடு; knobbed or studded wooden sandlas.

*[குமிழ் + கட்டை.]*

**குமிழ்க்கொடி** *kumil-k-kodi*, பெ.(n.) நிலக்குமிழ்; small cashmere tree.

*[குமிழ் + கொடி.]*

**குமிழ்குமிழ்–த்தல்** *kumil-kumil-*, 4 செ.குன்றாவி. (v.t.) பிறர்க்குத் தோன்றாமல் மறைத்தல்; to hide from others, hush. *"கோட்டமின் முற்றங் குமிழ் குமிழ்த் துரைப்ப" (பெருங். உஞ்சைக் 34:184).*

*[குமிழ் +குமிழ்.]*

**குமிழ்நோய்** *kumil-nōy*, பெ.(n.) குமிழ்போற் படலத்தைப் புடைப்பிக்கும் கண்ணோய் (சீவரட். 270); tubercle in the cornea of the eye.

*[குமிழ் + நோய்.]*

**குமிழ்ப்பிடி** *kumil-p-pidi*, பெ.(n.) கதவு முதலியவற்றில் தைத்த குமிழ்க் கைப்பிடி; rounded handle, knob (கொ.வ.).

*[குமிழ் + பிடி.]*

**குமிழ்ப்பு** *kumilppu*, பெ.(n.) 1. குமிழெழுகை; bubbling up. 2. மயிர்ச்சிலிர்ப்பு (உரி.நி.); hairs standing on end, horripilation. 3. கொழிக்கை (தைலவ. வைத்திய.12); winnowing.

*[குமிழ் → குமிழ்ப்பு.]*

**குமிழ்மிட்டான்** *kumul-mittān*, பெ.(n.) தண்ணீர் மிட்டான்; water root ( சா.அக.).

*[குமிழ் + (மிட்டான்) → மிட்டான்.]*

**குமிழ்ரோகம்** *kumil-rōgam*, பெ.(n.) ***குமிழ்நோய்*** பார்க்க; see *kumilnōy.*

*[குமிழ் + ரோகம்.]*

**குமிழ்வண்டு** *kumil-vandu*, பெ.(n.) வண்டு வகை; carpenter bee (வின்.).

*[குமிழ் + வண்டு.]*

**குமிழகம்** *kumilagam*, பெ.(n.) குமிழ் மரம்; kashmere commonly found in Himalayas, Nilgris in the east and west coasts including Malabar (சா.அக.).

**மறுவ.** குமிழ், கும்பிடுதேக்கு, குமிழங்கொடி.

*[குமிழ் + அகம்.]*

இது இமாலயம், நீலகிரி மலையாளம் ஆகிய இடங்களில் வளரும். இதன் நிழல் உடம்பிற்கு நன்மையைத் தரும்.

**குமிழஞ்சுளுந்து** *kumilañ-cūlundu*, பெ.(n.) குமிழங்கழியில் ஏற்றும் தீப்பந்தம் (சங்.அக); torches made of tamil sticks.

*[குமிழ் → குமிழம் + சுளுந்து. சுள் = எரிதல். சுள்→ சுளுந்து.]*

**குமிழஞ்சூழ்** *kumilañ-cūl*, பெ.(n.) ***குமிழஞ்சுளுந்து*** பார்க்க; see *kumilañ-culundu.*

*[குமிழஞ்சுளுந்து → குமிழஞ்சூழ்.]*

**குமிழம்** *kumilam*, பெ.(n.) குமிழ மரம்; a tree of teak variety.

**மறுவ.** குமிழகம், கும்பிடுதேக்கு, குமிழம், குமிழ்.

*[குமிழ் → குமிழம்.]*



குமிழம்



குங்குமப்பூ



குடசப் பாலை



குப்பைமேனி

**குமிழன்** *kumilan,* பெ.(n.) ***குமிழம்*** பார்க்க; see *kumilam.*

*[குமிழ் → குமிழன்.]*

வகைகள்: நிலக்குமிழ், பெருங்குமிழ் (சா.அக.).

**குமிழாணி** *kumiḻāṇi,* பெ.(n.) 1. தலையிற் குமிழ் கொண்ட ஆணி; stud nail (C.E.M.). 2. ***குமிழ்ப்பிடி*** பார்க்க;see *kumil-p-piḍi.*

*[குமிழ் + ஆணி.]*

**குமிழி**[1] *kumili,* பெ.(n.) நீர் முதலியவற்றிலெழுங் குமிழி; bubble. *"குமிழிவிட் டுமிழ் குருதி" (சீவக. 2239).* 2. பாதக் குறட்டின் குமிழ்; boss, knob, as of wooden sandals. 3. ஊற்றுவாய்; spring, as the source of a stream. *"கிண்ணகத்தில் குமிழிக் கீழே சாவிபோமா போலே" (ஈடு,5:3,7).*

*[கும் → குமிழ் → குமிழி.]*

**குமிழி**[2] *kumili,* பெ.(n.) ***கீழ்க்குமிழி*** பார்க்க; see (S.I.I.iii,411).

*[குமிழ் → குமிழி.]*

**குமிழி–த்தல்** *kumili-,* 4 செ.கு.வி.(v.i.) குமிழி கொள்ளுதல்; to bubble, to rise in bubbles, in pustules.

*[குமிழி → குமிழித்தல்.]*

**குமிழி நீருண்(ணு)–தல்** *kumili-nīruṇṇu-,* 12 செ.கு.வி.(v.i.) ஒரு பொருளில் ஆழங்காற்பட்டுக் கிடத்தல்; lit., to dive deep causing bubbles, to dive deep into a subject. *"கிடாம்பியாச்சானோடு அல்லாதாரோடு வாசியறக் குமிழ் நீருண்டது"* (ஈடு, 10:6,1).

*[குமிழ் → குமிழி + நீருண்–.]*

**குமிளம்** *kumiḷam,* பெ.(n.) கடைக்கண்ணின் வெள்விழியில் குமிழ்போல் கொப்புளத்தை உண்டாக்கும் ஒரு கண்ணோய்; a tubercle on the white or sclerotic coat of the eye (சா.அக.).

*[குமிழ் → குமிள் → குமிளம்.]*

**குமிளா** *kumiḷa,* பெ.(n.) மீன்வகை; a kind of fish. *"கீளி குமிளா மாசினி" (பறாளை.பள்ளு.74).*

*[குமிள் → குமிளா.]*

**குமிளி**[1] *kumiḷi,* பெ.(n.) நீர்க்குமிழி; bubble on water (சா.அக.).

*[கும் → குமிள் → குமிளி.]*

**குமிளி**[2] *kumiḷi,* பெ.(n.) குப்பி; bottle.

*[குமிழ் → குமிள் + குமிளி.]*

**குமிளிக்கண்** *kumiḷi-k-kaṇ,* பெ.(n.) குருக்கள் எழும்பிய கண்; eye marked by vesicles (சா.அக.).

*[குமிளி + கண்.]*

**குமிளிபாய்–தல்** *kumiḷipāy-,* 2 செ.கு.வி.(v.i.) நீர்க்குமிழியைப் போல் எழும்பல்; rising like bubbles (சா.அக.).

*[குமிளி + பாய்–.]*

**குமிறு–தல்** *kumiṟu-,*5 செ.கு.வி.(v.i.) ஒலித்தல் (சூடா.); to resound, roar.

*[கும் → குமிறு–.]*

**குமின்குமினெனல்** *kumiṉ-kumiṉ-eṉal,* பெ.(n.) சிலம்பு முதலிய அணிகலன்களின் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying tinkling sound, as of anklets. *"மின்னனார் குமின் குமின்னலங்காரம் பெற நடஞ்செய்" (கம்பரந்.6).*

*[குமின் + குமின் + எனல்.]*

**குமு** *kumu,* 4 செ.கு.வி.(v.i.) 1. பெருகுதல், பரவுதல்; to spread. 2. உடைதல், இடிதல்; to be broken, into pieces to fall down and perish.

*[கும் → குமு.]*

**குமுக்கு**[1] *kumukku,* பெ.(n.) 1. மொத்தம்; whole, total, lump, gross, wholesale. பண்டங்களை யெல்லாம் குமுக்காய் வாங்கினான் (உ.வ.). 2. பெருந்தொகை; lion's share; large number; considerable quantity. 3. கூட்டம்; band, clan, crowd, party (இ.வ.).

*[கும்→குமு→முக்கு.]*

**குமுக்கு**[2] *kumukku,* பெ.(n.) உதவி; aid, help, assistance. *"குமுக்குப்பண்ண"(வின்.)*

*[கும்→குமுக்கு.]*

**குமுக்கு**[3] *kumukku,* பெ.(n.) கமுக்கம்; secrecy.

**மறுவ.** கமுக்கம், மந்தணம், உள்ளாளம்.

*[கமுக்கு→ குமுக்கு.]*

**குமுக்கு**[1]**-தல்** *kumukku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. ஊமைக்காயம் படக் கையாற் குத்தல்; to beat with fists, pommel. 2. ஆடை கும்முதல்; to wash cloth by wetting and gently presshing it with hands; துணியைச் சற்று குமுக்கு (உ.வ.).

**தெ.** குமுகு

*[கும் → கும்மு → குமுக்கு.]*

**குமுகம்** *kumugam,* பெ.(n.) 1. பன்றி; hog. 2. பிரப்பங் கொடி; cane creeper, water-rattan (சா.அக.).

*[கும் → கும்மு → கும்முகம்→குமுகம் (திரட்சி).]*

**குமுகுமு-த்தல்** *kumu-kumu-,* 4 செ.கு.வி.(v.i.) மணம் மிக வீசுதல்; to spread fragrance, to send whiffs of odour. *"பசுமஞ்சள் குமுகுமுக்க" (அழகர்கல.10).*

*[கும் → குமு + குமு. கும் = பெருகு, பரவு.]*

**குமுகுமெனல்** *kumukumenal,* பெ.(n.) 1. பேரொலிக்குறிப்பு; onam. expr. signifying uproar. *"குடமுழ வாண னீராயிரங் கரங்கொண்டு குமுகுமெனவே முழக்க" (திருப்போ. சந்.பிள்ளைத். சிறுபறை.2).* 2. மணம் வீசுதற் குறிப்பு; expr. signifying sending out whiffs of odour. *"மணந்தான் குமுகுமென் றடிக்கவில்லை" (தனிப்பா. 1,389,44).*

*[குமு + குமு + எனல்.]*

**குமுங்கு-தல்** *kumungu-,* 5 செ.கு.வி.(v.i.) மசிதல்; to mash. *"உரலிற் குமுங்க விடித்து" (தைலவ.தைல.49);* 2. உள்ளாக இறங்குதல்; to sink, as a building. கட்டடம் குமுங்கி விட்டது (கொ.வ.).

*[கும் → குமு.]*

**குமுடக்கனிவழி** *kumuda-k-kani-vali,* பெ.(n.) முட்டைச் சிலந்தி; an ulcer of the size of an egg, an egg shaped veneral boil (சா.அக.).

*[குமுடம் + கனி + (முழி) வழி.]*

**குமுதகம்**[1] *kumudagam,* பெ.(n.) கட்டடத்தின் எழுதகவகை; a kind of moulding (W).

*[குமு → குமுது → குமுதகம்.]*

**குமுதகம்**[2] *kumudagam,* பெ.(n.) 1.செவ்வாம்பல்; red lily. 2. தருப்பை; sacrificial grass. 3. வெள்ளி; silver. 4. வெள்ளைநஞ்சு; a white arsenic (சா.அக.).

*[குமு → குமுதம் → குமுதகம்.]*

**குமுதபத்திரம்** *kumuda-pattiram,* பெ.(n.) பெருங்குமிழ் (சா.அக.);coomb teak.

*[குமுதம் + பத்திரம்.]*

**குமுதச் சிலந்தி** *kumuda-c-cilandi,* பெ.(n.) கொப்புளமாகாமல் சீழ் வடியும் புண்வகை

(சீவரட்.352); a kind of ulcer.

*[குமுதம் + சிலந்தி.]*

**குமுதநண்பன்** *kumuda-nanbaṉ,* பெ.(n.) நிலவு (அல்லிப் பூவிற்குத் தலைவன்); lit., lord of the water lily, moon. *"காமக் கருத்தாக் குமுதநாதன் கங்குல் வரக்கண்டும்" (தனிப்பா.1: 334,40)*

மறுவ. குமுதநாதன்

*[குமுதம் + நண்பன்.]*

**குமுதப்படை[1]** *kumuda-p-paḍai,* பெ.(n.) 1. கோயிற்கருவறையின் வெளிப்புற மதிலில் வேலைப்பாடமைந்த அடிப்பகுதி; decorated part at the bottom of the wall of the inner sanctuary of a Hindu-temple. *"குமுதப் படையிலே கல்வெட்டிக் கொடுத்தபடி" (S.I.I.I, 138).* 2. **குமுதம்[1]** பார்க்க;see *kumudam.*

*[குமுதம் + படை.]*

**குமுதப்படை[2]** *kumuda-p-paḍai,* பெ.(n.) கருங்கற் கோயில் கட்டடத்தில், அடிப்படைத் தளவரிசை மட்டத்தின் மேல், கீழ்நோக்கிய இதழ்களாக அமைக்கப்பெறும் சிற்ப வரி; floral decoration of the temple. *"இறையனார் கோயில் திருஅக்கிய மண்டபம் முன்பு திருக்கற்செய்து நின்ற குமுதப்படை மேல் – கல்லடிப்" (தெ.கல். தொ.1 கல்561).*

*[குமுதம் + படை.]*

**குமுதபதிமங்கை** *kumudapadi-mangai,* பெ.(n.) செவ்வல்லி; red-indian water lily (சா.அக.).

*[குமுதம் + பதி + மங்கை.]*

**குமுதம்[1]** *kumudam,* பெ.(n.) கருப்பூரம் (யாழ்.அக.); camphor.

*[கும் → குமுதம்.]*

**குமுதம்[2]** *kumudam,* பெ.(n.) 1. வெள்ளாம்பல் (திவா.); esculent white water-lily. 2. செவ்வாம்பல்; red Indian water-lily. *"துவரித மலர்வன குமுதம்" (கம்பரா.நாட்டுப்.43).* 3.திசை யானை; elephant at the south west quarter, one of asta-tik-kašam. 4. வெள்ளைச் செய்ந்நஞ்சு; a mineral poison. 5. கற்செய்நஞ்சு; prepared arsenic. 6. ஒரு படைப் பிரிவு; a block of army. 9 யானையும் 9 தேரும், 27 குதிரையும், 45 காலாள்களும் கொண்ட படை (பிங்.); an army consisting of 9 elephants, 9 choriots, 27 norses, and 45 infantry. 7. பல்லாயிரமம் அக்குரோணி கொண்ட சேனைத் தொகை (பிங்.); an army consisting of several thousands of akkuroni. 8. மிகுதி; abundance, as of produce, largeness, as of income (J). 9. கட்டடத்தின் எழுதகவகை; (arch.) a kind of moulding (w). 10. கருவிழியில் உண்டாகும் ஒருவகை நோய்; a disease of the pupil of the eye.

*[கும் → குமு (தோன்றுதல், பெருகுதல்) → குமுது → குமுதம்.]*

**குமுதம்[3]** *kumudam,* பெ.(n.) அடுப்பு (திவா.); oven, stove.

**தெ.,க.** கும்படி; **க.** கும்படை.

*[கும் → கும் → கும்மு (வேதல், எரிதல்) → குமுது → குமுதம்.]*

**குமுதம்[4]** *kumudam,* பெ.(n.) பேரொலி; uproar, confusion. *"கதறிமிகு குமுதமிடு பரசமயம்" (திருப்பு.948).*

*[கும் → குமு (பெருகுதல்) → கும்முது → குமுது → குமுதம்.]*

**குமுதம்[5]** *kumudam,* பெ.(n.) தருப்பைப் புல் (பிங்.); sacrificial darbha grass.

*[கும் → கும்மு → குமு → குமுது → குமுதம்.]*

**குமுதிகை** *kumudigai,* பெ.(n.) பூசணி; sweet pumpkin (சா.அக.).

*[கும் → கும்மு → கும்முதிகை → குமுதிகை.]*

**குமுதிசை** *kumudisai,* பெ.(n.) மணம் வீசும் மரம்; a fragrant tree (சா.அக.).

*[கும்→ கும்மு + திசை – கும்முதிசை→குமுதிசை. திகு (திகழ்) → திசைதல் = தெளிதல் விளங்குதல் மணம் வீசுதல். இது உங்களுக்கு விளங்கியதா என்பதை இது உங்களுக்குத் திசைஞ்சுதா என வழங்குவது நாட்டுப்புற வழக்கு.]*

**குமுதிப்பனை** *kumudi-p-panai,* பெ.(n.) கிச்சிலிப்பனை; Malayan sago palm.

*[குமுது→ குமுதி + பனை.]*

**குமுது** *kumudu,* பெ.(n.) 1. பெருக்கம், வளர்ச்சி; largeness, growth. 2. தோற்றம்; appearance.

*[கும்→ கும்மு→ கும்முது→ குமுது.]*

**குமுதை**[1] *kumudai,* பெ.(n.) 1. குமிழ்மரவகை; coomb teak. 2. பூடுவகை (யாழ்.அக.); a shrub.

*[குமுது → குமுதை.]*

**குமுதை**[2] *kumudai,* பெ.(n.) ஒரு மரம்; a tree. 2. கல் நஞ்சு; a kind of native arsenic (சா.அக.).

*[குமுது→ குமுதை.]*

**குமுந்தம்** *kumundam,* பெ.(n.) கற்செய் நஞ்சு (மூ.அ.); mineral poison.

*[குமுல்→ குமுந்தம்.]*

**குமுல்** *kumul,* 5 செ.கு.வி.(v.i.) 1. வேதல்;to boil 2. எரிதல்; to burn.

*[கும்→ குமு→ குமுல்.]*

**குமுலி** *kumuli,* பெ.(n.)1. துளசி; sacred basil (வின்.).2. பெருந்தும்பை; large leucas (சா.அக.).

*[கும்→கும்மு→குமுல்→குமிலி.ஒ.நோ. குமலி, குமிலி]*

**குமுலு** *kumulu-,* 5 செ.கு.வி.(v.i.)1. உள்ளுக்குள் நீடித்து வேதல், உட்கொதித்தல்; to boil inernally.2.வெந்து அழிதல்; to get spoiled by over boiling. 3. அழிந்து போதல்; to get ruined.

*[குமுல்→ குமிலு.]*

**குமுறக்காய்-தல்** *kumura-k-kāy-,* 2 செ.கு.வி.(v.i.) நன்றாகக் காய்தல்; to be boiling hot, as oil heated to a high degree, to boil up (இ.வ.).

*[குமுல்→ குமுறல்→குமுற + காய்-.]*

**குமுறக்காய்ச்சு-தல்** *kumura-k-kāiccu-,* 5 செ.கு.வி.(v.i.) கொதிக்கும்படி மிகுந்த தீயிட்டுக் காய்ச்சுதல்; heating any liquid to boiling point (சா.அக.).

*[குமுற + காய்ச்சு-.]*

**குமுறப்பிழி-தல்** *kumura-p-pili-,* 2 செ.கு.வி.(v.i.) இறுகப்பிழிதல்; to press out hard, as juice (இ.வ.).

*[குமுற + பிழி-.]*

**குமுறல்** *kumural,* பெ.(n.) பேரொலி (திவா.) roaring, rumbling, resounding.

*[குமுறு→ குமுறல்.]*

**குமுறலண்டம்** *kumural-andam,* பெ.(n.) அண்ட ஊதை வகை (சீவரட்.112); rupture, hernia.

*[குமுறல் + அண்டம்.]*

**குமுறவிடி-த்தல்** *kumura-vidi-,* 4 செ.குன்றாவி. (v.t.) நெல் முதலியவற்றை நன்கு இடித்தல்; to pound, comminucate forcibley in a mortar, as grain.

*[குமுறு→ குமுற + இடி-.]*

**குமுறவெரி-த்தல்** *kumura-v-eri-,* 4 செ.குன்றாவி. (v.t.) எரித்தல்; heating or boiling anything to a great heat (சா.அக.).

*[குமுற + எரி-.]*

**குமுறு-தல்** *kumuṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. அதிரொலி செய்தல்; to resound, to trumpet, as an elephant, to bellow, to rumble, crash, as thunder. *"குத்திடக் குமுறிப் பாயும்" (கம்பரா. வரைக்.34).* 2. கலப்போசை யெழுதல்; to have confused, uproar. *"குமுறுமோசை விழவு" (திவ்.திருவாய்.6:5,2).* 3. மனத்தினுள்ளேயே வருந்துதல்; to burst with distress. *"கண்கணீர் மல்க நின்று நின்று குமுறுமே" (திவ்.திருவாய். 6:5,1).* 4. பீறிடுதல்; to gush out, as milk from the breast. *"வெம்முலை குமுறு பாலுக" (கம்பரா. பள்ளி.118).* 5. கொதித்தல்; to effervesce, bubble up, as in boiling.

*[கும்→ குமுறு-.]*

**குமேதகம்** *kumēdagam,* பெ.(n.) நீர்ச்சுருக்கு; difficulty in passing urine attended with the pain and a sense of heat (சா.அக.).

*[கும்பு + உதகம் – கும்முதகம்→ குமேதகம்.]*

**குமேரு** *kumēru,* பெ.(n.) பேய், பிசாசுகளுக்கு இருப்பிடமான ஞாலத் தென்முனை (துருவம்); south pole as the region of demons.

*[குமுல்→ குமிறு→குமேறு→ குமேரு.]*

தென்கடல் வளாகத்துக் குமரிக் கண்டத்தின் படிப்படியான அழிவு காரணமாக தென்திசையும் தென்முனையும் அஞ்சத்தக்கனவாயின.

**குமை[1]-தல்** *kumai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. குழைய வேதல்; to be over-boiled, to be boiled soft to a mash, as greens. சோறு குமையச் சமைத்தாள் (உ.வ.). 2. குழம்புதல்; to be mixed up. எல்லாம் ஒன்றாய்க் குமைந்து கிடக்கின்றன (உ.வ.). 3. வெப்பத்தாற் புழுங்குதல்; to be hot, sultry. 4. கண்முதலியன இறுகிக்கொள்ளுதல்; to close together, as the eyelids from heat in the system (வின்.). 5. சோர்தல்; to faint, droop, as one in a swoon. 6. அழிதல்; to be destroyed. 7. வருந்துதல்; to distressed, worried. *"கொசுகு கடியாலுங் குமைந்தோம்" (தமிழ்நா.259).*

*[கும்→ குமை.]*

**குமை[2]-த்தல்** *kumai-,* 18 செ.குன்றாவி.(v.t.) 1. துவைத்தல்; to tread down, tread out into a mash. *"கூற்றைக் குரை கழலா லன்று குமைத்தார் போலும்" (தேவா.44:6).* 2. உரலில் வைத்து இடித்தல்; to beat or pound in a mortar.3. குழைய வேகச் செய்தல்; to over-boil, boil soft, reduce to a mash by boiling.4. வருந்துதல்; to annoy, afflct, vex. *"ஆவி திகைக்க வைவர் குமைக்கும் சிற்றின்பம்" (திவ்.திருவாய். 6:9,9).* 5. அழித்தல்;to destroy. *"வெளிற்றறி விரண்டுங் குமைப்ப" (தணிகைப்பு.விநா.காப்பு.2).*

*[கும் →குமை.]*

**குமை[3]** *kumai,* பெ.(n.) 1. அழிவு; destruction, ruin. *"குமைத்தொழில் புரிந்த வீரர்" (கம்பரா. பிரமாத்.23).* 2. துன்பம்; trouble, distress. *"ஐவராற் குமைதீற்றி" (திவ்.திருவாய். 7:1,1).* 3. அடி; blow, stroke, lash. *"குமை தின்பர்கள்" (திவ். திருவாய்.4:1,2).* 4. அழுக்குத்துணி முதலியன இடும்பெட்டி; clothes-basket (இ.வ.).

*[கும் →குமை.]*

**குமை** *kumai,* பெ.(n.) பவளம் முத்து நீங்கலாக மற்ற வயிர வகைமணிகளை நிறுப்பதற்குதவுஞ் சிறு எடை (சுக்கிரநீதி,188); smallest weight used in weighing precious stones other than corals and pearls, being the weight of a linseed.

*[கும் → குமை.]*

**குமைஞ்சான்** *kumaiñjān,* பெ.(n.) 1. ஆண் குமஞ்சான், குங்கிலியம்; male frankincense. 2. பெண் குமஞ்சான் அல்லது சாம்பிராணி; female

frankincense. 3. நறும்புகை வகை; different varieties of incense. 4. பறங்கிச் சாம்பிராணி; benzamin (சா.அக.).

*[குமை →குமைந்தான் → குமைஞ்சான்.]*

**குமைதின்(னு)-தல்** *kumai-tiṉ-,* 13 செ.கு.வி.(v.i.) அடியுண்ணுதல்; to suffer, thrashing. *"கானகம் போய்க் குமை தின்பர்கள்" (திவ்.திருவாய்.4:1,2).*

*[குமை + தின்-.]*

**குய்[1]-தல்** *kuy,* 2 செ.கு.வி. (v.i.) வேதல், எரிதல்; to bron, to boil. *"குய்ப்புகை கிமழ" (அக. நா.).*

*[குல் →குய்.]*

**குய்[2]-தல்** *kuy,* 2 செ.கு.வி. (v.i.) 1. துளைத்தல்; to make hole. 2. குத்துதல்; to pierce. *"குய்ப்புகை கிமழ" (அக. நா.).*

*[குல் →குய்.]*

**குய்[3]-த ல்** *kuy,* பெ.(n.) 1. தாளிப்பு; seasoning with spices. *"கமழ்குய் யடிசில்" (புறநா.10).* 2. தாளித்த கறி; spicy, seasoned curry. *"பொரியுங் குய்யும் வறைகளு நிவந்த வாசம்" (சீவக.2971).* 3. நறும்புகை (பிங்.); burnt odours, insense, odorous smoke. 4. சாம்பிராணி (தைலவ.தைல.94); frankincense.

*[குல் →குள் → குய் (எரிதல், வேதல்).]*

**குய்மனத்தாளர்** *kuy-maṉattāḷar,* பெ.(n.) ஏய்ப்பாளர்; deceitful persons. *"குய்மனத்தாளர் குறைப்பிணங் காட்டி" (பெருங்.இலாவண.19:57).*

*[குய் + மனம் + அத்து + ஆளர். 'அத்து' சாரியை.]*

**குய்யகர்** *kuyyagar,* பெ.(n.) தொன்மக் கதைகளில் குபேரன் நிதியைக் காவல்புரியும் தேவ கூட்டத்தார்; a class of demi gods in the service of Kubera to whose custody his treasures are comitted asper puranas.

*[குய் →குய்யகன் → குய்யகர்.]*

**குய்யகோடகம்** *kuyyakōḍagam,* பெ.(n.) கோவணம்; a piece of cloth worn in the loins to cover the genital (சா.அக.).

*[குய்யம் (குதம) + கோடகம்.]*

**குய்யதீபகம்** *kuyya-dībagam,* பெ.(n.) மின்மினிப் பூச்சி; fire fly (சா.அக.).

*[குய் →குய்ய + தீபகம்.]*

**குய்யதீயகம்** *kuyya-dīagam,* பெ.(n.) மின்மினி (யாழ்.அக.); fire-fly.

*[குய் = எரிதல், குய் → குய்ய + தீயகம்.]*

**குய்யப்பால்** *kuyya-p-pāl,* பெ.(n.) முலைப்பால்; woman's breast milk (சா.அக.).

*[குய்யம் + பால் (குய்யம் = உட்டுளை, பால் சுரக்கும் நுண்துளை, மார்பகம்).]*

**குய்யப்பத்திரம்** *kuyya-p-patiram,* பெ.(n.) அரசிலை; leaf of peepul tree (சா.அக.).

*[குய்யம் + பத்திரம். குய்யம் = துளை, துளையுள்ள மடி, முதுகு, இடுப்பின் கீழ்ப்பகுதி.]*

**குய்யப்புண்** *kuyya-p-puṇ,* பெ.(n.) 1. மலவாய்ப்புண்; ulcer of the anus. 2. ஆண்குறிப்புண்; ulceration of the penis. 3. பெண்குறிப்புண்; pudendal ulcer. 4. ஆண் பெண் இருவருக்கும் குறியில் வரும் புண்; ulceration of the male and female genitals (சா.அக.).

*[குள் → குய் → குய்யம் + புண். குய்யம் = குழி, உட்டுளை.]*

**குய்யபீதம்** *kuyya-pīdam,* பெ.(n.) எட்டி மரம்; nux-vomica tree (சா.அக.).

மறுவ. குய்ய பீசகம்.

*[குய்யம் + பீதம். பேதம்→பீதம்.]*

**குய்யபுட்பகம்** *kuyya-putpagam,* பெ.(n.) மகிழமரம்; monkey face flowered tree. 2. அத்திமரம்; fig tree soalled from the hidden blossom (சா.அக.).

*[குய்யம் + புட்பகம்.]*

**குய்யபேதி** *kuyya-pēdi,* பெ.(n.) மலவாய் வழியாய் ஏற்படும் கழிவு; discharge of foeces from the anus (சா.அக.).

*[குய்யம் (துளை, மலவாய்) பிள் →பேள்→ பேதி.]*

**குய்யம்** *kuyyam,* பெ.(n.) 1. மறைவானது (சூடா.); that which is secret, mystical, hidden, private. 2. பெண்குறி; genetive organ especially of women. *"மென்துகிற் குய்யத் தடம் படிந்து" (சூளா.சீய.49).* 3. குதம் (பிங்.); anus. 4. ஏமாற்று, ஏய்ப்பு (வஞ்சகம்); dissimilation, deceitfulness hypocirsy. *"நட்பிடைக் குய்யம் வைத்தான்" (சீவக.358).*

*[குள் →குய் (துளை, பொய், மறைவு)→ குய்யம்.]*

**குய்யமல்லிகம்** *kuyya-malligam,* பெ.(n.) அழிஞ்சில்; alangium (சா.அக.).

மறுவ. அங்கோலம்

*[குய்யம் + மல்லிகம்.]*

**குய்யன்** *kuyyan,* பெ.(n.) குயவன்; potter.

*[குய் (சுடுதல்) →குய்யம் → குய்யன்.]*

**குய்யோ முறையோவெனல்** *kuyyō-muraiyō-v-enal,* பெ.(n.) கூச்சலோடு முறையிடுதற் குறிப்பு; onom, expr. signifying loud complaint.

*[குய்யோ + முறையோ + எனல்.]*

**குயக்கணக்கு** *kuyya-k-kaṇakku,* பெ.(n.) 1. தவறான கணக்கு; wrong, clumsy reckoning pottering in calculation. 2. குயவரில் கணக்குப் பார்க்கும் ஒருவகையினர்; a sub-sect among potters, as doing the duties of an accountant.

*[குய்யன் + கணக்கு.]*

**குயக்கருவி** *kuya-k-karuvi,* பெ.(n.) 1. குயவர் பயன்படுத்தும் கருவி; potter's imlements.

*[குயவன் + கருவி.]*

**குயக்கலத்தி** *kuya-k-kalatti,* பெ.(n.) 1. மண் பாண்டவோடு; a piece of an earthenpot. 2. மண் பாண்டம்; earthenpot or vessel.

*[குயம் + கலத்தி.]*

**குயக்கலம்** *kuya-k-kalam,* பெ.(n.) குசக்கலம், மட்பாண்டம்; potter's vessel. 2. ஒரு நூல் (நன்.274,மயிலை); a treatise.

*[குயம் + கலம்.]*

**குயக்காணம்** *kuya-k-kāṇam,* பெ.(n.) 1. குயவர் செலுத்திவந்த பழையவரி (S.I.I.II.509); tax on potters.

*[குயவன் + காணம்.]*

**குயக்கால்** *kuya-k-kāl,* பெ.(n.) மட்பாண்டம் செய்யும் சக்கரம்; potter's wheel.

*[குயம் + கால்.]*

**குயக்காலம்** *kuya-k-kālam,* பெ.(n.) நிலக்கடம்பு (மலை.); common cadamba.

*[குயக்கால் + அம் – குயக்காலம்.]*

**குயக்குண்டு** *kuya-k-kuṇḍu,* பெ.(n.) குயவர் மண்ணெடுக்குங் குழி; pit where from clay is taken by potters to make pots (கொ.வ.).

*[குயம் + குண்டு. குண்டு = குழி, பள்ளம்.]*

**குயக்குழாய்** *kuya-k-kuḻāy,* பெ.(n.) சுடு மண்ணாலான குழாய்; brick tube.

*[குயவன் + குழாய்.]*

**குயத்தி** *kuyatti,* பெ.(n.) குயக்குடிப்பெண்; female potter. *"சக்கரந் தான்சுழற்றத் தகுங்குயத்தி" (சிவப்.பிரபந்.பிஷாடன.6).*

*[குயவன்–குயத்தி.]*

**குயத்தினலகை** *kuyattin-alagai,* பெ.(n.) நிலவாகை (மலை.); Tinnevelly senna.

*[குயம் = அரிவாள். குயம்+அத்து+இன்+அலகை (அலகு→அலகை) 'அத்து', 'இன்' சாரியை. அரிவாள்முனை போன்ற செடி.]*

**குயபாசியம்** *kuya-pāciyam,* பெ.(n.) பீநாறிச் சங்கு; smooth, volkameria (சா.அக.).

*[குயம் + பாசியம்.]*

**குயபேதி** *kuyapēdi,* பெ.(n.) ***குய்யபேதி*** பார்க்க; see *kuyyapēdi.*

*[குய்யபேதி → குயபேதி.]*

**குயம்**[1] *kuyam,* பெ.(n.) 1. அரிவாள்; sickle, reaping-hook, curved knife. *"கொடுவாய்க் குயத்து" (சிலப்.16:30).* 2. முடிமழிப்பாளன் கத்தி; razor. *"அருங்குயந் தான்களைந்து" (சீவக.2500).* 3. குயக்குடி; potter caste.

*[குல்→குய்→குயம்.]*

**குயம்**[2] *kuyam,* பெ.(n.) இளமை (திவா.); juvenility, youth.

*[குழ → குய → குயம்.]*

**குயம்**[3] *kuyam,* பெ.(n.) முலை; women's breast. *"குச்சிலிய மாதர் குயமும்" (தனிப்பா.ii, 75,190).*

*[குல் → குய் → குயம். குய் = துளை. குயம் = நுண்ணிய பால் சுரப்புத் துளையுள்ள மார்பகம்.]*

**குயம்**[4] *kuyam,* பெ.(n.) தருப்பை; sacrificial darbha grass.

*[குல் (முள், கூர்மை) → குய் → குயம்.]*

**குயம்பிக்கடி** *kuyambi-k-kadi,* பெ.(n.) சுரை; bottle gourd (சா.அக.).

*[குயம் → குயம்பு + கடம் – குயம்புக்கடம் → குயம்பிக்கடி (கொ.வ.).]*

*உட்டுளையும் குடம் போன்ற வடிவமும் கொண்ட சுரைக்காய்.*

**குயமயக்கு** *kuya-mayakku,* பெ.(n.) தாறுமாறு; disorder, lack of method.

*[குயம்[2] + மயக்கு.]*

**குயமாதுகம்** *kuya-mādugam,* பெ.(n.) கடுக்காய்; Indian galnut (சா.அக.).

*[குயம்[2] + (மதுகம்) மாதுகம்.]*

**குயல்** *kuyal,* பெ.(n.) தேர்ச்சி, திறமை; skill, talent.

*[குள் = கூர்மை. குள் → குய் → குயல்.]*

**குயலன்** *kuyalan,* பெ.(n.) தேர்ந்தவன்; man of great skill, dexterity. *"வஞ்சக் குயலர்க்கென்றுங் கரவனாம்" (தேவா.406,4).*

*[குயல் → குயலன்.]*

**குயவரி** *kuya-vari,* பெ.(n.) வரிப்புலி (அரிவாள் போன்ற வரிகளையுடையது); tiger, as having sickle - shaped stripes. *"வேழங் குயவரி கோட்பிழைத்து" (திணைமாலை.25).*

*[குயம் + வரி.]*

**குயவன்**[1] *kuyavan,* பெ.(n.) மட்பாண்டம் வனைபவன்; potter. *"திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்" (தேவா.736:1).*

மறுவ. குய்யன்

*[குய் (சுடுதல், எரித்தல்) → குய்யம் → குய்யன் → குய்யவன் → குயவன் (சுடுபவன்). பசு மட்பாண்டங்களைச் சூளையிலிட்டுச் சுடும் தொழில் செய்வதால் பெற்ற பெயர்.]*

**குயவன்**[2] *kuyavaṉ,* பெ.(.) மறைபொருளானவன்; God, the invisible. *"யானோர் குயவன்" (சிவப்.பிரபந்.பிட்சாடன.6).*

*[குய்யம் → குயவன்.]*

**குயவன்மனை** *kuyavaṉ-maṉai,* பெ.(n.) மட்பாண்டம் வனைய உதவும் சக்கரத்தின் அடிக்கட்டை; foot of a potter's wheel.

*[குயவன் + மனை.]*

**குயவு** *kuyavu,* பெ.(n.)1. தேர் (பிங்.); car, chariot. 2. கோங்கிலவு மரம்; false tragacanth.

*[குள் (கூர்மை)→குய்→ குயவு (கூர்மையான தேர் மொட்டு).]*

**குயா** *kuya,* பெ.(n.) கோங்கு (பிங்.) ; false tragacanth.

**மறுவ.** குயவு, குயாகம்.

*[குயவு → குயா.]*

**குயாகம்** *kuyāgam,* பெ.(n.) குயா, கோங்கிலவு; false tragacanth (சா.அக.).

*[குயவு → குயா→குயாகம்.]*

**குயிமாவதி** *kuyimā-vadi,* பெ.(n.) கொக்கிறகு; stork's feather (சா.அக.).

*[குயிமம் + அவதி.]*

**குயில்(லு)-தல்** *kuyil-,* 8 செ.குன்றாவி.(v.t.) 1. சொல்லுதல்; to utter, tell. *"பொய் குயிலினுஞ் சோம்பினும்" (சிவப்.பிரபந்.நிரஞ்.18).* 2. கூவுதல் (சூடா.); to call, whoop, halloo.

*[குயில் → குயில்லு-.]*

**குயில்(லு)-தல்** *kuyil-,* 13 செ.கு.வி.(v.i.) 1. செய்தல்; to make, execute, shape, construct. 2. நெய்தல்; to weave. *"ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" (தொல்.சொல்.74,உரை).* 3. பின்னுதல்; to plait, braid, in twine (வின்.). 4. துளைத்தல் (பிங்.); to bore, perforate, tunnel. *"குன்று குயின்றன்ன வோங்குநிலை வாயில்" (நெடுநல்.88).* 5. மணி முதலியவை பதித்தல்; to encase, set, as precious stones. *"சுடர்மணியின் பத்திகுயின்றிட்ட பழுப்பேணியில்" (கந்தபு. வள்ளி.50).*

*[குயில் → குயில்(லு).]*

**குயில்**[3]**(லு)-தல்** *kuyil-.* 15 செ.கு.வி.(v.i.) நடைபெறுதல்; to take place. *"தெய்வ நடன மெதிர்குயில" (தணிகைப்பு.அகத்திய.83).* 2. செறிதல் (திவா.); to be thick, close, crowded. 3. இசைக்கருவி ஒலித்தல்; to sound, play. *"வீணை குழலொடு குயில" (சீவக.1255).*

*[குயில் → குயில்(லு).]*

**குயில்**[4] *kuyil,* பெ.(n.) 1. சொல் (திவா.) word. 2. குயில் பறவை (திவா.); koel, Indian cuckoo.

**தெ.** குக்கின்; **க.** குகில்; **ம.** குயில்; **மகாராட்.** கொய்ல.

*[கூ → கூவு → கூயு →குயி →குயில்(கூவுவது).]*



குயில்

**குயில்**[5] *kuyil,* பெ.(n.) துளை (பிங்.); hole, perforation.

*[குல் (துளை)→ குய்→ குயில்.]*

**குயில்**[6] *kuyil,* பெ.(n.) மேகம் (சூடா.); cloud.

*[குள்→ குய்→ குயில். குள் = கூடுதல், திரளுதல்.]*

**குயில்கூவு—தல்** *kuyil-kūvu-,* 5 செ.கு.வி.(v.i.) கண்ணுக்கினிதாய்த் தோன்றுதல் (யாழ்ப்.); to present a pleasing, thriving aspect, as a field with luxuriant crop (யாழ்ப்.). அவனுக்கென்ன? தொட்டதெல்லாம் குயில் கூவுகிறது (உ.வ.).

*[குயில் + கூவு-.]*

பச்சைப்பசேலென இருக்கும் பூஞ்சோலையில் அல்லது பொதும்பரில் குயில் மகிழ்ந்து கூவும் எனும் கருத்தில் செழிப்பைச் சுட்டும் மரபுத் தொடராயிற்று.

**குயில்மொழி** *kuyil-mōli,* பெ.(n.) *அதிமதுரம்.* பார்க்க (சா.அக.);see *adimaduram.*

*[குயில் + (முழி) மொழி.]*

**குயிலண்டம்** *kuyil-andam,* பெ.(n.) துரிஞ்சில்; bat. 2. குயில் முட்டை; egg of Indian cuckoo (சா.அக.).

*[குயில் + அண்டம்.]*

**குயிலமோதி** *kuyilamōti,* பெ.(n.)அதிமதுர; liquorice (சா.அக.).

*[குயில் + (முழி →மொழி) மோதி.]*

**குயிலல்** *kuyilal,* பெ.(n.) துளைத்தல்; boring, perforating (சா.அக.).

*[குய் →குயில் → குயிலல்.]*

**குயிலாயம்**[1] *kuyil-āyam,* பெ.(n.) பறவைக்கூடு; bird's nest. 2. சுவருள் அறை; niche in a wall.

*[குயில் + ஆலயம் – குயிலாலயம் → குயிலாயம். ஆலயம் = சுற்றுச் சுவர் அமைந்த வளமனை அல்லது கோயில்.]*

**குயிலாயம்**[2] *kuyilāyam,* பெ.(n.) மட்கலம் வனையும் கூடம்; pottery, potter's workshop.

*[குய் = சுடுதல். குய்தகுயில்→குயிலாயம். மட்பாண்டம் சுடும் சூளை சார்ந்த இடம்.]*

**குயிலுவக்கருவி** *kuyilu-k-karuvi,* பெ.(n.) இசைக்கருவிகள்; musical instruments with accompaniments. *"கூடிய குயிலுவக் கருவிகண்மே டுயின்று" (மணி.7,45).*

*[குயில் = இசைத்தல், பாடுதல். குயில்→ குயிலுவம் (இசைக்கப்படுவது).]*

**குயிலுவத்தொழில்** *kuyiluva-t-tolil,* **குயிலுவம்** (பிங்.) பார்க்க; see *kuyiluvam.*

*[குயிலுவம் + தொழில்.]*

**குயிலுவம்** *kuyili-vam,* பெ.(n.) வாச்சியங்கள் வாசிக்கை (திவா.); playing on stringed musical instruments, drums, tabrets, clarionets, horns.

*[குயிலல் = பாடுதல், இசைத்தல். குயில்→ குயிலுவம் (இசைக்கப் பயன்படுவது).]*

**குயிலுவர்** *kuyiluvar,* பெ.(n.) வாச்சியம் வாசிப்போர்; players on string instruments, drums, tablets, clarionets horns. *"பயிறொழிற் குயிலுவர் நிற்ப" (சிலப்.5, 52.அரும்.)*

*[குயில்→ குயிலல் =பாடுதல், இசைத்தல். குயிலுவர் = இசைக்கருவி இயக்குபவர்.]*

**குயிற்கண்பப்பளி** *kuyir-kan-papali,* பெ.(n.) சேலைவகை; a kind of saree.

*[குயில் + கண் + பப்பளி.]*

**குயிற்கண்மணி** *kuyir-kan-mani,* பெ.(n.) வயிர மணி வகை (சௌகந்திகப்பதுமராகம்) (யாழ்.அக.); a kind of topaz.

*குயில் + கண்மணி]*

**குயிற்று**[1]**—தல்** *kuyirru-,* 5 செ.குன்றாவி.(v.t.) சொல்லுதல்; to tell, say, utter, to lay down, as rules. *"சுமார்த்தத்திற் குயிற்றுபல கருமத்தும்" (விநாயகபு.73,24).*

*[குய்→குயில்→குயிற்று. குயிலல் = பேசுதல், ஒலித்தல்.]*

# குயில் வகைகள்


கருங்குயில்


புள்ளிக்குயில்


கள்ளிக் குயில்


சுடலைக்குயில்


கொண்டைக் குயில்


அக்கா குயில்


இரட்டைவாலன் குயில்


காக்கா குயில்


வரிக்குயில்

**குயிற்று**[2]**–தல்** *kuyiṟṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. செய்தல்; to make, construct, form, perform. *"அருநடங் குயிற்று மாதி வானவனே" (பதினொ.பட்டினத். கோயினான்.32).* 2. மணி பதித்தல்; to encase, set, as gems. *"மணியொடு வயிரங் குயிற்றிய" (சிலப்.5:147).*

*[குள்→ குய் → குயில்→குயிற்று. குள் = கூடுதல், சேர்தல்.]*

**குயின்**[1] *kuyiṉ,* பெ.(n.) மேகம்; cloud. *"குயினென் கிளவிடயிதுயகை யாகும்" (தொல்.எழுத்து.235).*

*[குள்→ குய்→ குயின். குள் = கூடுதல், திரளுதல்.]*

**குயின்**[2] *kyyiṉ,* பெ.(n.) செயல் (இலக்.வி.126,உரை); deed, work.

*[குல் →குள்→ குய்→ குயின்.]*

**குயின்மூக்கெலும்பு** *kuyiṉ-mūkkelembu,* பெ.(n.) முதுகின் அடியெலும்பு (இங்.வை.4); coccyx, as resembling the koel's beak.

*[குயில் + மூக்கு + எலும்பு.]*

**குயின்மொழி** *kuyiṉ-moḻi,* பெ.(n.) 1. இன்மொழி; soft, sweet words, like the notes of the koel. 2. அதிமதுரம் (மலை.); liquorice.

*[குயில் +மொழி.]*

**குயினர்** *kuyiṉar,* பெ.(n.) மணிகள் துளையிடுவோர்; those who polish and perforate gems. *"திருமணி குயினரும்" (மதுரைக்.511).* 2. தையற்காரர் (பிங்.); tailor.

*[குயில் → குயிலு + நர் → குயினர்.]*

**குயீ** *kuyī,* பெ.(n.) ஒருவகை நாடி; a kind of artery (சா.அக.).

*[குய் குயி→ குயீ (கொ.வ.).]*

**குரக்களி–த்தல்** *kurakkaḷi-,* செ.கு.வி.(v.i.) ***குரக்குவலி*** பார்க்க; see *kurakkuvali.*

*[குரக்கு + வலித்தல் → குரக்குவலித்தல் → குரக்களித்தல்.]*

**குரக்கன்சாறு–தல்** *kurakkaṉ-cāṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கேழ்வரகு விதைத்த பின் வயலைக் கிளறிக் கொடுத்தல்; to hoe in *kurakkaṉ* grain lightly after sowing. 2. கேழ்வரகு விதைத்தல்; to sow *kurakkaṉ.*

*[குரக்கன் + சாறு–.]*

**குரக்கு** *kurakku,* பெ.(n.) குரங்கு; monkey.

*[குரங்கு → குரக்கு (வலித்தல் திரிபு).]*

**குரக்கு ஊதை** *kurakku-ūdai,* பெ.(n.) குரக்குவலி; spasmodi affection. *"குரக்குவாதம் பிடித்து வலித்து" (கலிங்.138, புதுப்.).*

*[குரக்கு + ஊதை]*

**குரக்குக்கால்கை** *kurakku-kāl,* பெ.(n.) குளிர் அல்லது வலுவின்மையால் குரக்கு வாங்கும் கால்கை; limbs affected with cramps due to cold or weakness (சா.அக.).

*[குரக்கு +கால்கை.]*

**குரக்குகை** *kurakku-k-kai,* பெ.(n.) குரக்குவலி (வாதம்) பிடித்த கை; arms affected by cramps due to weakness, cold, etc., *"குரக்குக் கைகொடு சூழ் து ழாவி" (ஈடு.9:2,4).*

*[குரக்கு + கை.]*

**குரக்குவலி–த்தல்** *kurakku-vali-,* 4 செ.கு.வி.(v.i.) குரக்குவலி உண்டாதல்; to suffer from *kurakkuvali* (கொ.வ.).

*[குராங்கு + வலி.]*

**குரக்குவலி** *kurakkuvali,* பெ.(n.) கைகால்களில் வரும் ஒருவகை வலிப்பு; pain in limbs attended with shivering, spasmodic affection.

*[குரங்குவலி → குரக்குவலி.]*

**குரக்குவாதம்** *kuraku-vādam,* பெ.(n.) **குரக்குவலி** பார்க்க; see *kurakkuvali. "குரக்குவாதம் பிடித்து வலித்து" (கலிங்.138, புதுப்.).*

*[குரக்கு + வாதம்.]*

**குரக்கொளி** *kurakkoḷi,* பெ.(n.) **குரக்குவலி** பார்க்க; see *kurakkuvali-, "கைகால் குரக்கொளி வாங்குகிறது" (இழி.)*

*[குரக்குவலி→குரக்களி → குரக்கொளி.]*

**குரகதம்** *kuragadam,* பெ.(n.) 1. குதிரை; horse. *"குரகதமுகம்புரை குலைக டூங்கிய........ வாழை" (கந்தபு.வரைபுனை,9).* 2. குதிரைப்பற் செய்நஞ்சு (மூ.அக.); a mineral poison.

*[குரகு → குரகதம்.]*

**குரகம்** *kuragam,* பெ.(n.) 1. மைனாப்புள்; common myna, starling. 2. நீர்வாழ் பறவைப் பொது; aquatic birds.

Ag.,OF. grue (crane); OHG., OS. krano, OE. cran; E. crane.

*[குரகு → குரகம் (வினை).]*

**குரகுமஞ்சள்** *kuragumañjal,* பெ.(n.) சாப்பிராவிரை; arnotto.

*[குரு → குரகு → மஞ்சள்.]*

**குரங்ககம்** *kuraṅkakam,* பெ.(n.) ஓர் அவரை; a kind of bean (சா.அக. ).

*[குரங்குதல் - வளைதல். குரங்கு → குரங்ககம்.]*

**குரங்கதம்** *kuraṅkadam,* பெ.(n.) மான்; deer (சா.அக.).

*[குரகு → குரங்கு → குரங்கதம்.]*

**குரங்கம்**[1] *kuraṅgam,* பெ.(n.) எட்டி (மூ.அ.); strychnine tree.

*[குரங்கு → குரங்கம்.]*

**குரங்கம்**[2] *kuraṅgam,* பெ.(n.) 1. மான்; deer, antelope. 2. விலங்கு; quadruped, beast.

*[குரகு - ஒலிக் குறிப்பு குரகு → குரங்கு → குரங்கம்.]*

**குரங்கம்**[3] *kuraṅgam,* பெ.(n.) மலைக்கொன்றை; darjeeling red cedar.

*[குறங்கு → குரங்கம்.]*

**குரங்கன்**[1] *kuraṅgaṉ,* பெ.(n.) குரங்கு போலக் குறும்புத்தனம் செய்பவன்; mischievous fellow, as a monkey.

*[குரங்கு → குரங்கன்.]*

**குரங்கன்**[2] *kuraṅgaṉ,* பெ.(n.) **குரங்கம்** (மலை.) பார்க்க;see *kuraṅgam.*

*[குரங்கு → குரங்கம் → குரங்கன்.]*

**குரங்கன்சுறா** *kuraṅgaṉ-šuṟā,* பெ.(n.) 1. சுறாமீன் வகை; zebra shark' tawny with spots, attaining 15ft in length. 2. ஒருவகைக் கடல்மீன்; fawn coloured shark, grey (M.M.850).

ம. குரங்கன்

*[குரங்கு → குரங்கன் + சுறா.]*



குரங்கன்சுறா

**குரங்காட்டம்** *kurangāṭṭam,* பெ.(n.) குரங்கின் கூத்து; apish tricks, anties. அவனைக் குரங் காட்டம் ஆட்டிவைக்கிறான் (உ.வ.).

*[குரங்கு + ஆட்டம்.]*

**குரங்காட்டி** *kurangāṭṭi,* பெ.(n.) குரங்கை ஆடச் செய்து வித்தை காட்டி வாழ்வோன்; one who lives by exibiting monkey.

*[குரங்கு + ஆட்டி.]*

**குரங்கி** *kurangi,* பெ.(n.) நிலவு (பிங்.); lit., on having antelop spote moon. மான்போன்ற கறையையுடையவன்(உ.வ.).

*[குரங்கு + குரங்கி.]*

**குரங்கிலை** *kurangilai,* பெ.(n.) முசுமுசுக்கை இலை; leaf of musumusukkai, leaf of bristle bryony (சா.அக.).

*[குரங்கு + இலை.]*

**குரங்கு[1]-தல்** *kurangu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வளைதல்; to bend, incline. *"பாடினாள்... இலைப்பொழில் குரங்கின"(சீவக.719).* 2. தொங்குதல்; to hang down, dangle. *"குரங்குளைப் பரிமா" (திருவிளை.மெய்க்கா.16).* 3. தங்குதல்; to repose, rest, lie. *"நிகள மூழ்கிக் கோட்டத்துக் குரங்க" (சீவக.262).* 4.குறைதல்; to diminish. *"குரங்கா வாற்ற லெம்பியோ தேய்ந்தான்"(கம்பரா.பாசப்.5).* 5. இரங்குதல் (சது.); to frelent, grieve, feel sorry. 6. தாழ்தல்; to droop, wither. *"சடப்பட்டுக் குரங்கி வெந்தது (சீவக.719)".*

*[குல் → குர → குரங்கு = குரங்குதல் = குன்றுதல் = வளைதல்.]*

**குரங்கு[2]** *kurangu,* பெ.(n.) 1.வளைவு; bending, inclining. *"குரங்கமை யுடுத்த மரம்பயிலடுக்கத்து" (சிலப்.10,157).* 2. வானரம்; monkey, ape. *"குரங்கு செய்கடற் குமரியம் பெருந்துறை" (மணி.5,37).* 3. முசுமுசுக்கை (மலை.); bristly, bryony. 4. கொக்கி (கொ.வ.); hook, clasp, like in jewelry.

**ம.** குரங்ஙு; **க.** கொரங்கு, குரங்கி, கோடக; **தெ.** கோதி, கோந்தி, கோமதி; **து.** கொடங்ச, கொடங்சு, குரங்க; **பட.** கொரங்கு; **துட.** கவரக்; **கோத.** கொர்க்.

*[குல் → குர → குரங்கு = குரங்கு = வளைவு.]*

**குரங்கு[3]-தல்** *kuranku-,* 5 செ.குன்றாவி.(v.t.) வளைத்தல்; to bend. *"தென்னிலங்கை சாரங்கமே குரங்காச்சாதித்தான்" (மான்விடு.7).*

*[குல் → குர → குரங்கு.]*

**குரங்குக்கல்** *kurangu-k-kal,* பெ.(n.) சுவரில் உத்தரம், விட்டம் தாங்க அடியிற் பதிக்கப்படும் கல் (மது.வழக்.);stone to support the beam of a roof.

*[குரங்கு + கல்.]*

**குரங்குக்கா** *kurankuku-k-kā,* பெ.(n.) முசுமுசுக்கை; leaf of bristle brynory (சா.அக.).

மறுவ. குரங்கிலை

*[குல் → குர → குரங்கு + (காய்) கா.]*

**குரங்குக்காய்** *kurangu-k-kāi,* பெ.(n.) விளாங்காய்; wood apple (சா.அ க.).

*[குல்→குர→குரங்கு + காய்.]*

**குரங்குக்கை** *kurangu-k-kai,* பெ.(n.) சூப்பிய கை; the wasting of the muscles of the hand, Ape-hand (சா.அக.).

*[குரங்கு + கை. குரங்குதல் = குன்றல், குறைதல், சூம்பிப் போதல்.]*

**குரங்குக்கொடி** *kurangu-k-kodi,* பெ.(n.) ஆனைத்திப்பிலி; monkey creeper (சா.அக.).

*[குரங்கு + கொடி.]*

**குரங்குகடியன்** *kurangukadiyan,* பெ.(n.) குரங்காலேனும், அணிலாலேனும் முனையிற் தீண்டப்பட்டு பழுதுற்ற தேங்காய்; a coconut, injured at the top, as by monkey or squirrel (யாழ்ப்.).

*[குரங்கு + கடியன்.]*

**குரங்குச்சத்துவம்** *kurangu-c-cattuvam,* பெ.(n.) பெண்களின் பத்து மெய்ப்பாடு(சத்துவம்)களுள் ஒன்று (கொக்கோ.4:27); the natural disposition of a woman, classed under the monkey type, one of pattucattuvam.

*[குரங்கு + சத்துவம்.]*

**குரங்குச்சம்பந்தம்** *kurangu-c-cambandam,* பெ.(n.) குரங்குப்பிடி முறைமை; the principle of monkey's grasp.

*[குரங்கு + சம்பந்தம்.]*

**குரங்குச்சேட்டை** *kurangu-c-cēttai,* பெ.(n.) குறும்பு செய்கை; mean, monkeyish tricks, Apish mischief.

*[குரங்கு + சேட்டை த. கெடு > செடு → சேடு → சேட்டை.]*

**குரங்குச்சொறி** *kuranguc-c-ōri,* பெ.(n.) பூனைக்காலி; monkey's itch (சா.அக.).

*[குரங்கு + (சொற்றி) சொறி.]*

**குரங்குண்டகி** *kurangundagi,* பெ.(n.) மலை நாரத்தை; trifoliate, winged lime (சா.அக.).

*[குரங்கு + உண்டகி–குரங்குண்டகி (வளைவுண்டது, வளைவுற்றது).]*

**குரங்குத்தாழ்ப்பாள்** *kurangu-t-tālppāl,* பெ.(n.) கொக்கித் தாழ்ப்பாள்; door hook.

*[குரங்கு + தாழ்ப்பாள்.]*

**குரங்குதின்னி** *kurangu-tinni,* பெ.(n.) கருங்குரங்குகளைத் தின்பவராகிய கோயம்புத்தூர் மாவட்டத்தின் மலைகளில் வாழுமோர் இன மக்கள்; A aboriginal tribe in the hills of Coimbatore, as eaters of the black monkey.

*[குரங்கு + தின்னி.]*

**குரங்குநாபி** *kurangunābi,* பெ.(n.) மான்மணத்தி (கஸ்தூரி); a strong scented substance found in a bag attached to the belly of the deer just above the navel (சா.அக.).

*[குரங்கு +(நாவி) நாபி.]*

**குரங்குப்பட்டை** *kurangu-p-pattai,* பெ.(n.) கூரை யோடுகள் கலைந்து போகாதபடி முகட்டிலிருந்து அடிவரையிற் கட்டும் சுண்ணாம்புப் பட்டை; long narrow construction of lime running parallel from the top to the base of the roof to prevent the tiles from being dislodged.

*[குரங்கு + பட்டை.]*

**குரங்குப்பலா** *kurangu-p-palā,* பெ.(n.) சிறுபலா; small jack (சா.அக.).

*[குரங்கு + பலா.]*

**குரங்குப்பிடி** *kurangu-p-pidi,* பெ.(n.) 1. விடாப்படி; lit. grasp of a monkey, firm grasp. 2. ஒட்டாரம் (பிடிவாதம்); doggedness, stubborness, pertinacity, obstinacy.

*[குரங்கு + பிடி.]*

**குரங்குப்புத்தி** *kurangu-p-putti,* பெ.(n.) நிலையற்ற மனப்பாங்கு; roving tendency, unsteadiness.

*[குரங்கு + (புலம் → புந்தி) புத்தி.]*

**குரங்குமச்சு** *kurangu-maccu,* பெ.(n.) கூரையின் கீழ் அமைக்கும் மச்சு; loft under the thathed roof of a house (இ.வ.).

*[குரங்கு + மச்சு.]*

# குரங்கு வகைகள்



முசுக் குரங்கு



கருங்கலைக் குரங்கு



ஊகைக் குரங்கு



மந்திக் குரங்கு

**குரங்கு மஞ்சணத்தி** *kuraṅgumañjaṇatti,* பெ.(n.) ஒரு வகை நுணா; a kind of dying mulberry (சா.அக.).

*[குரங்கு + மஞ்சணத்தி.]*

**குரங்குமஞ்சணாறி** *kuraṅgu-mañjaṇāṟi,* பெ.(n.) ஒருவகைச் சிறுமரம்; kamela.

*[குரங்கு + மஞ்சல் + நாறி.]*

**குரங்குமஞ்சள்** *kuraṅgumañjaḷ,* பெ.(n.) ஒருவகை மஞ்சள்; west coast turmeric.

*[குரங்கு + மஞ்சள்.]*

**குரங்குமுரசு** *kuraṇgu-murašu,* பெ.(n.) இரு குரங்கின் கை அதாவது முசுமுசுக்கை; bristle bryony (சா.அக.).

*[குரங்கு + முரசு.]*

**குரங்குமூஞ்சி** *kuraṅgu-mūñji,* பெ.(n.) 1. அழகில்லா முகம்; monkey face, ugly face. 2. ***குரங்கு மஞ்சணாறி*** பார்க்க; see *kuraṅgu mañjaṇāṟi.*

*[குரங்கு + (முகம்) மூஞ்சி.]*

**குரங்குமூஞ்சிக்காய்** *kuraṅgu-mūñji-k-kāy,* பெ.(n.) முகப்பிற் சிவந்த மாங்காய்; red-faced mango fruit (இ.வ.).

*[குரங்கு + மூஞ்சி + காய்.]*

**குரங்கு மூஞ்சிப்பாலை** *kuraṅgumuñji-p-pālai,* பெ.(n.) கணுப்பாலை; monkey face paulay (சா.அக.).

*[குரங்கு + மூஞ்சி + பாலை.]*

**குரங்குமூஞ்சிப்பூ** *kuraṅgumūñji-p-pū,* பெ.(n.) மகிழம்பூ மரம்; ape face flower (சா.அக.).

*[குரங்கு + மூஞ்சி + பூ.]*

**குரங்குமூஞ்சிமரம்** *kuraṅgumūñji-maram,* பெ.(n.) கபிலப்பொடி மரம்; monkey face tree (சா.அக.).

*[குரங்கு + மூஞ்சி + மரம்.]*

**குரங்குவலி** *kuraṅguvali,* பெ.(n.) **குரக்குவலி** பார்க்க; see *kurakkuvali.*

*[குரக்குவலி + குரங்குவலி.]*

**குரச்சை** *kuraccai,* பெ.(n.) **குரசு** (பிங்.) பார்க்க;see *kurašu.*

*[குரசு → குரச்சை.]*

**குரசு** *kurašu,* பெ.(n.) குதிரைக் குளம்பு (பிங்.); horse's hoof.

*[குல் → குர → குரசு (வளைவு, வட்டம்).]*

**குரஞ்சனம்** *kurañjaṉam,* பெ.(n.) வெண்காரம்; borax (சா.அக.).

*[குல்→குர→ குரஞ்சணம்.]*

**குரடன்** *kuraḍaṉ,* பெ.(n.) சக்கிலியன் (யாழ்.அக.); cobbler.

*[குரடு + குரடன்.]*

**குரண்டகம்** *kuraṇḍagam,* பெ.(n.) 1. மருதோன்றி; henna with green flowers. 2. பெருங்குறிஞ்சி (பிங்.); a species of conehead. 3.பழுப்புநிறம்; yellowish red colour. 4. ஒதம்; hydrocele. 5 மஞ்சள் வாடாமல்லிகை; yellow amaranth.

**ம.** குறிஞ்ஞி; **க.** கொரடெ, கோரடெ, கோரண்ட, கோரண்டி,கோரண்டெ; **தெ.** கோரண்ட, கோராட் **து.** கோரண்மெ, கோரடெட்.

**Skt.** kurunta, kuruṇṭaka; **Pkt.** koriṇta.

*[குரல் - கொத்து. குரல் → குரள்→ குரண்டு → குரண்டகம்.]*

**குரண்டநாசி** *kurandanāci,* பெ.(n.) பருத்திச்செடி; countery cotton plant (சா.அக.).

*[குரண்ட + நாசி (நாளி → நாசி).]*

**குரண்டம்**[1] *kurandam,* பெ.(n.) ***குரண்டகம்*** பார்க்க;see *kurandagam.*

*[குறல் →குரள் → குரண்டு → குரண்டகம்.]*

**குரண்டம்**[2] *kurandam,* பெ.(n.) கொக்குவகை (திவா.); Indian crane.

*[குல் →குர (வளைவு) → குரண்டு→ குரண்டம்.]*

**குரண்டி** *kurandi,* பெ.(n.) செடிவகை; a shrub.

*[குரண்டு → குரண்டி.]*

**குரணம்** *kuranam,* பெ.(n.) முயற்சி; effort, perseverance.

*[குல் → குரு → குரணம்.]*

**குரத்தம்** *kurattam,* பெ.(n.) ஆரவாரம் (சது.) noise, clamour, uproar.

*[குல் → குர → குரல் → குரற்று → குரற்றம் → குரத்தம்]*

**குரத்தி** *kuratti,* பெ.(n.) 1. குருவின் மனைவி; wife of a preceptor or priest. *"குரத்தியை நினைத்த நெஞ்சை" (திருவிளை.அங்கம்.19).* 2. குருவின் பதவியை ஏற்றிருப்பவள்; precepress priestess. 3. தலைவி (திவா.); mistress lady of the house.

*[குரவன் → குரத்தி]*

**குரத்திகள்** *kurattigal,* பெ.(n.) சமணப்பெண் துறவியர்; ஆங்கிலம் சமணப்பெண் ஆசிரியை; female ascetic of jain order. *"ஸ்ரீ திருமலைக் குரத்திகள் மாணாக்கன்" (கழுகுமலைக் கல்வெட்டுகள்).*

*[குரத்தி + கள்.]*

**குரந்திகம்** *kurandigam,* பெ.(n.) செந்நாயுருவி; red Indian purr (சா.அக.).

*[குல் → குரு = செந்நிறம். குரு → குர→ குரந்து →குரந்திகம்.]*

**குரப்பம்** *kurappam,* பெ.(n.) குதிரை தேய்க்கும் கருவி; curry comb.

**தெ.**கொரப்பழு; **க.**கொரப்ப; **ம.**குரப்ப

*[குல் → குரப்பு → குரப்பம்.]*

**குரப்புல்** *kurappul,* பெ.(n.) தருப்பைப்புல்; sacrificial grass (சா.அ க.).

*[குல் → குர → குரல் + புல் – குரற்புல் → குரப்புல்.]*

**குரப்புவெட்டி** *kurappuvetti,* பெ.(n.) வரிவகை; a tax (S.I.I.viii,322).

*[குரப்பு + வெட்டி.]*

**குரப்பூலிகம்** *kurappūligam,* பெ.(n.) சரக் கொன்றை; Indian laburnam (சா.அக.).

*[குரப்பு + ஊலிகம்.]*

**குரம்**[1] *kuram,* பெ.(n.) 1. தருப்பை; dharba grass. 2. ***பாகல்*** பார்க்க; balsam bear.

*[குல் → குர→ குரம்.]*

**குரம்**[2] *kuram,* பெ.(n.) குதிரைக் குளம்பு; horse's hoof. *"குரந்தரு விசையினீர் மொண்டு" (இரகு.இரகுவுற்.56).* 2. பசு (திவா.); cow.

*[குல் → குர → (குரசு)→ குரம் (வளைவு).]*

**குரம்பி** *kurambi,* பெ.(n.) 1. அணைக்கட்டு; artificial bank, dam, couseway, bund. 2. ஆற்றினின்று பாசனக் கால்களுக்கு நீரைத் திருப்பும் அணை; dam of sand, brushwood, loose stones, etc., running out from the banks of a river diagonally for a dis-

tance upstream, to turn the water into an irrigation channel. 3. வரப்பு; ridge in a paddy field or garden. *"மாநீர்க் குரம்பெலாம் செம்பொன்" (கம்பரா.நாட்டுப்.2).* 4. எல்லை; boundary, limit. *"குரம்பெழுந்து குற்றங் கொண்டேறார்" (நாலடி.153).*

*[குல் → குர → குரம்பு.]*

**குரம்பை**[1] *kurambai,* பெ.(n.) 1. சிறுகுடில்; small hut, hovel, shed. *"இலைவேய் குரம்பை" (மதுரைக். 310).* 2. பறவைக்கூடு; birds nest. 3. உடல்; body. *"பொருந்திய குரம்பை தன்னைப் பொருளெனக் கருத வேண்டா" (தேவா.488,1).* 4. தவசக் கூடு (தானியக்கூடு); granary, store house for grain. *"நெற்குவை குரம்பையி னிரப்பு வித்தனர்" (கந்தபு. நாட்டு.26).*

**ம.** குரவு; **க.** கொம்பெ; **தெ.** கொம்ப.

*[குல்→ குர → குரம்பு → குரம்பை.]*

**குரம்பை**[2] *kurambai,* பெ.(n.) இசைவகை; a melody type.

*[குரம்பு → குரம்பை.]*

**குரமடம்** *kuramaḍam,* பெ.(n.) பெருங்காயம்; asafoetida.

*[குல் → குரு + (மட்டு) மட்டம் → குரமட்டம் → குரமடம்]*

**குரமாலிகம்** *kuramāligam,* பெ.(n.) பாதிரி; trumpet flower tree (சா.அக.).

*[குரல் → குரம் + ஊலிகம் - குறமூலிகம் → குரமாலிகம்.]*

**குரமுளை** *kura-muḷai,* பெ.(n.) வித்தினின்று தோன்றும் முளை; shoot, sprout.

*[குரு + முளை → குரமுளை.]*

**குரமேலனிகம்** *kuramōṉigam,* பெ.(n.) கோழிக்காற் பூடு;fowl's legplant (சா.அக.).

**மறுவ.** குமரகன்பூடு

*[குறமூலிகம் → குரமேனிகம் (பர்திரிப்பூ போன்றது.]*

**குரரம்** *kuraram,* பெ.(n.) **1.** ஒரு பூடு; plant. 2. பெண் பருந்து; a female hawk or eagle. 3. பெண்ணாடு; ewe, sheep. (சா.அக.).

*[குரல் = (கொத்து, திரட்சி) திரண்ட பெண். குரல் → குரலம் → குரரம் (கொ.வ.).]*

**குரரி** *kurari,* பெ.(n.) பறவைவகை; a kind of bird. "வானிற் சிறுகுரரி நின்றொதுங்கி" (விறலிவிடு.5).

*[குரலி → குரரி.]*

**குரல்**[1] *kural,* பெ.(n.) 1. கதிர்; cornear, spike. *"வரகி னிருங்குரல்" (மதுரைக்.272).* 2. பூங் கொத்து; flower cluster. *"கமழ்குரற் றுழாய்" (பதிற்றுப்.31,8).* 3.ஒன்றோடொன்றற்குள்ள சேர்க்கை; link, tie, band. *"குரலமை யொருகாழ்" (கலித்.54:7).* 4. தினை, வாழை முதலியவற்றின் தோகை; stalk, sheath of millet or plantain. *"பருஉக்குரற் சிறுதினை" (புறநா.168:6).* 5. தினை (மலை.); Italian millet. 6. ***பாதிரி*** (மலை.) பார்க்க; see *pātiri.*

**ம.**குரல்; **க.**கொரலெ; **தெ.** கொர்ரலு; **து.**கொரலு.

**E.** Craw, the threat of fowle; **Dan.** kroe, **G.** hragen, **Scot.** craog, Sans. kreeva, the neck **E.** crop, **A.S**. crop, **Dut.** crop the craw of a bird.

*[குல் → குர → குரல் (கொத்து).]*

**குரல்**[2] *kural,* பெ.(n.) 1. பெண்டிர் தலை முடி (பிங்.); woman's hair. *"நல்லார் குரனாற்றம்" (கலித்.88).* 2. மகளிர் குழல் முடிக்கும் ஐவகையுள் ஒன்று (த.வெ 9,35, உரை.); one of the five modes in which a woman dresses her hair. 3. பறவையின் இறகு (திவா.); feather, plumage.

*[குல் → குர → குரல்(காத்து, திரள்)..]*

**குரல்**[3] kural, பெ.(n.) 1. பேச்சொலி; voice. *“சேவல் மயிற்பெடைக்குப் பேசும் சிறுகுரல் கேட்டு” (நளவெண்.சயம்வ.41).* 2. மொழி; word. *“யாவருந் தண்குரல் கேட்ப” (கலித்.142:9).* 3. குரல்வளம்; tone in singing. *“காமன் காமுறப்படுங் குரறுகுமிது” (சீவக.1218).* 4. ஏழிசையுள் முதலாவது (திவா.); first note of the Indian gainut. 5. மிடறு; throat, wind pipe. *“மணிக்குர லறுத்து” (குறுந்.263).* 6. ஓசை; sound. *“இடிகுரன் முரசு” (கம்பரா.எழுச்சி.1).* 7. கிண்கிணிமாலை (பிங்.); string of jingling bells.

**ம.**குரல்; **க.**கொரல், கொரள்; **தெ.** குர்ம, கொண்டு; **து.**குரல், குரெலு; **குட.** கொர; **கோண்.** குர்ங்கா; **பிரா.** குட் (தொண்டை).

*[குல் → குரு (தோன்றுதல், ஒலித்தல்)→குர → குரல்.]*

*kur-al*, **Tam.** noise, voice; root *kur,* to make a noise. Comp. Sans. *kar,* to shout; *gar,* to sound. Possibly the **Tam.** *kôri,* the *gallus gallinaceous,* is connected with *kur;* and if so, the word *gallus* itself will appear to be related to *kôri, gallus* being instead of *garrus;* comp. *garrulus.* The ultimate root of the **Tam.** *kur* appears to be *ku,* to sound (probably a mimetic word), as in *ku-y-il,* the Indian cuckoo (C.G.D.F.L. Pg.584).

**குரல்**[4] *kural,* பெ.(n.) 1. கற்றை; dense mass. *“குரற் கூந்தல்” (கலித்.72:20).* 2. யாழ் நரம்பு; string of a lute. 3. எழுத்து; letter.

*[குரு → குரல்.]*

**குரல்குளிறு–தல்** *kural-kaḻiru-,* 16 செ.கு.வி.(v.i.) யாழ் முதலியவற்றில் சுருதி கலைதல்; to jar, to in disharmony, as instruments out of tune.

*[குரல் + குளிறு.]*

**குரல்கம்மல்** *kuralkammal,* பெ.(n.) குரல்வளையில் உள்ளீரம் வறண்டு பேசமுடியாமல் கம்மிய பேச்சையுண்டாக்கும் ஒரு தொண்டை நோய்; a disease of the larynx due to dryness (சா.அக.).

*[குரல் + கம்மல்.]*

**குரல்கம்மு–தல்** *kuralkammu,* 5 செ.கு.வி.(v.i.) குரல் வறண்டு பேசமுடியாமல் இடர்ப்படுதல்; to inconvenience to speak because od dryness in the larynx(சா.அக.).

*[குரல் + கம்மு.]*

**குரல்காட்டு–தல்** *kural-kāṭṭu,* 5 செ.கு.வி.(v.i.) 1. அழைத்தற்பொருட்டு குறிப்பொலி காட்டுதல்; to call a person by hemming and hawking. 2. பறவை யொலித்தல்; to crow, as a cock, to screech, as an owl. 3. பெருங்கூச்சலிடுதல்; to cry aloud, whoop, roar, bellow.

*[குரல் + காட்டு–.]*

**குரல் திரிபு** *kural-tiribu,* பெ.(n.) குரலிசையில் செய்யப்படும் குரல்நிலை வேறுபாடு (கிரகபேதம்); modulation of tonal differences in vocal music.

*[குரல் + திரிபு.]*

குரல் நிலை சுருதி பெட்டியில் உள்ள குறிப்பிட்ட ஒரு நிலைக்கேற்ப குரலை நிறுத்திக்கொண்டு பாடாமல் வெவ்வேறு குரல் நிலைகளில் பாடும் திறமை குரல்திரிபு எனப்படும். இதனை வடமொழியாளர் கிரகபேதம் என்பர். பழந்தமிழரின் இசைக்கலை வளர்ச்சி நுட்பத்திற்கும் திட்பத்திற்கும் குரல்திரிபு சான்று பகர்வதாகும்.

**குரல்நெரி–த்தல்** *kuralneri,* 4 செ.குன்றாவி.(v.t.) தொண்டையை அழுத்திக் குரல்வளை முறியும்படிச் செய்தல்; fracturing the throat by pressing the anterior part of the neck (சா.அக.).

*[குரல் + நெரித்தல்.]*

**குரல்பாய்ச்சு–தல்** *kural-pāyccu-,* 5 செ.கு.வி.(v.i.) அழுகையின் குரல் நீட்டுதல்; to prolong the voice unrestrainedly in wailing (இ.வ.).

*[குரல் + பாய்ச்சு–.]*

**குரல்மாற்றம்** *kural-māṟṟam,* பெ.(n.) வேற்றுக்குரல்; change of voice in the throat due to the affection of the larynix (சா.அக.).

*[குரல் + மாற்றம்.]*

**குரல்வளை** *kuralvaḷai,* பெ.(n.) மிடற்றின் உறுப்பு; Adam's apple, projection of the thyroid cartilage of the larynx. *"மணிக்காற் குரல் வளைக் கழுத்தில்" (பெருங்.மகத.14:55).*

*[குரல் + வளை.]*

**குரல்வளைத்தபம்** *kuralvaḷai-t-tabam,* பெ.(n.) குரல்வளைக் கேற்படும் அழற்சி; affection of the larynx. 2. தொண்டைப்புண்; an acute type of inflammation of the larynx (சா.அக.). ***குரல்வளை யழற்சி*** பார்க்க; see *kuralvalai-y-aḷarcc*

*[குரல்வளை + (தாபனம்) தபம்.]*

**குரல்வளை நெரித்தல்** *kuralvaḷai-neṟittal,* பெ.(n.) தொண்டையை அமுக்கல்; squeezing the throat (சா.அக.).

*[குரல் + வளை + நெரித்தல்.]*

**குரல்வளைநோய்** *kuralvaḷai-nōy,* பெ.(n.) குரல்வளைக்கேற்படும் நோய்கள்; diseases in general of the larynx (சா.அக.).

*[குரல்வளை + நோய்.]*

**குரல்வளைமுருந்து** *kuralvaḷai-murundu,* பெ.(n.) வட்டவடிவிலான குரல் வளையிலுள்ள இளெயெலும்பு; ring like cartilage of the larynx (சா.அக.).

*[குரல்வளை+ முருந்து.]*

**குரல்வளையழற்சி** *kuralvaḷai-y-aḷaṟci,* பெ.(n.) குரல்வளையில் ஏற்படும். ஒவ்வாமை; inflammation of larynx (சா.அக.).

*[குரல்வளை + அழற்சி.]*

**குரல்வளையறு-த்தல்** *kuralvaḷai-y-aṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. பேச்சின் ஒலியை குணபடுத்த வேண்டிச் குரல் வளையில் அறுவைச் சிகிச்சை செய்தல்; an operation for opening the larynx for purposes of curing voice-defect. 2. மருந்தினால் குரல்வளையைத் தூய்மைப்படுத்துதல்; curing voice defects by application of medicine (சா.அக.).

*[குரல் + வளை + அறுத்தல்.]*

**குரல்வளையறுத்துக்கொள்ளல்** *kuralvaḷai-yaṟuttukkoḻḻal,* தெ.பெ..(v.b.l.n.) தற்கொலை புரிதல்; committing suicide by cutting the throat (சா.அக.).

*[குரல்வளை + அறுத்து + கொள்ளல்.]*

**குரல்வளையிசிவு** *kuralvaḷai-y-iśivu,* பெ.(n.) தொண்டை ஊதையினால் மிடற்றிலுண்டாகும் இசிவு; a pulling sensation in the trachea (சா.அக.).

*[குரல்உளை + இசிவு.]*

**குரல்வாங்கு-தல்** *kuralvāṅgu-,* 5 செ.கு.வி.(v.i.) குரலெடுத்துப்பாடுதல்; to raise the voice in music.

**மறுவ.** குரலெடு, குரல்விடு.

*[குரல் + வாங்கு.]*

**குரல்விடு-தல்** *kural-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) **குரலெடுத்தல்** பார்க்க; see *kuralḍu.*

*[குரல் + விடு.]*

**குரலடைப்பு** *kural-aḍaippu,* பெ.(n.) 1. குரல் கம்முகை; hoarseness. 2. பேசமுடியறாமற்போகை; loss of speech.

*[குரல் + அடைப்பு.]*

**குரலதிர்ச்சி** *kural-adircci,* பெ.(n.) குரலசைவு; vocal vibration (சா.அக.).

*[குரல் + அதிர்ச்சி.]*

**குரலி** *kurali,* பெ.(n.) 1. தொண்டைக் குழி; glottis. 2. பாதிரி மரம்; trumpet flower tree (சா.அக.).

*[குரல் + குரலி.]*

**குரலிசைக்குறியீடு** *kurališai-k-kuriyīdu,* பெ.(n.) பழந்தமிழிசையில் ஏழிசை ஒலிப்புச் சுரங்களான சரிகமபதநி என்னும் இசைநிரல் (சரளிவரிசை); sa, ri, ga, ma, pa, dha, ni the seven musical basic tones of ancient Tamil music system.

*[குரலிசை + குறியீடு.]*

குறிப்பிட்ட ஏழு பறவை விலங்கினங்களின் ஓசையை அடியொற்றி ஒலிப்பு ஒப்புமை கருதி நெருங்கிய எழுத்தொலிப்பாக ஏழிசைக்கு இடப்பட்ட குறியீடுகள் குரலிசைக் குறியீடுகள் எனப்பட்டன. குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழனுள் கைக்கிளைக்குரிய 'க' ஓசை பெருநாரையின் குரலோசையைக் குறிக்கும். ஆரியர் வருகைக்குப் பின் இசைநூல்கள் இதனைக் குதிரையின் கனைப்பொலி யாகக் குறிப்பிட்டிருப்பது ஏற்புடையதன்று.

பிற்காலத்தில் கருநாடக இசையென்று பெயர் பெற்ற பழந்தமிழிசையில் ஏழிசையின் (குரலிசையின்) குறியீடுகள் ச, ரி, க, ம, ப, த, நி என்றே இருந்தன என்பதைப் பின்வரும் சிகண்டியாரின் பஞ்சமரபு நூற்பாவிலிருந்தும் அறியலாம்.

சரிகம பதநியென் றேழெழுத்தாற் றானம்
வரிபரந்த கண்ணினாய் வைத்துத் - தெரிவரிய
ஏழிசையுந் தோன்று மிவற்றுள்ளே பண்பிறக்குஞ்
சூழ்முதலாம் சுத்தத் துளை.

மேற்கண்ட இசைக் குறியீடுகளுக்கு முறையே குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்று பெயர் சூட்டப்பட்டன. மேல்கட்டையில் (மேல் ஸ்தாயி) பாடுவதைத் தாரத்தாயி என்று இன்றும் கூறுகின்றனர். இதில் ஏழாவது பெயர் தாரம் ஆளப்படுதல் காண்க. குரல் என்பது வண்டின் ஒரு சீரான குரலை (ச) குறித்தது. துத்தம் என்பது கிளியைக் குறித்த தத்தை என்ற சொல்லின் திரிபாய் கிளியின் ஓசையைக் (ரி) குறித்தது. கைக்கிளை என்பது கூட்டமாகவோ துணைப் பறவையுடனோ காணப்படாமல் தனித்து காணப்பட்டு, கனைப்பதுபோல் ஓசையெழுப்பும் பெருநாரைப் பறவையின் ஓசையைக் (க) குறித்தது. உழை என்பது உட்டுளையுடைய துதிக்கையை உயர்த்தி எழுப்பும் யானையின் மென்மை கலந்த (ம) பிளிறல் ஓசையைக் குறித்தது. இளி என்பது அசை நடை மயில் அடங்கி அகவும் இடைவிட்ட (ப) அகவலோசையைக் குறித்தது (இளிதல் - தாழ்தல், அடங்குதல்). விளரி என்பது கன்றினை நினைந்து இனிமையாய்க் கதறும் மாட்டின் (த) குரலோசையைக் குறித்தது (விளர்தல் - கதறல்). தாரம் என்னும் நீட்சி குறித்த சொல் ஒரே ஓசையை மீண்டும் மீண்டும் நீட்டித்தொலிக்கும் ஆட்டின் குரலோசையைக் (நி) குறித்தது.

இனி, இக்காலத்தில் சரிகமபதநி என்பனவற்றி லுள்ள ஸ, க, த என்னும் ஒலிப்புகள் தமிழில் இல்லை என்பார் கூற்றும் ஏற்கத்தக்கதன்று. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே நம் முன்னோர் தமிழில் மயங்கா மரபின் எழுத்துகளைக் காட்டியுள்ளனர். ஸ தமிழ் ஒலிப்பன்று. க, த, மொழியிடையிலும், ஈற்றிலும் மெல்லொலி பெறும் மாற்றொலிகள் (allophone). எழுத்துகளுக்கு இசையில் மாத்திரை அளவே உரிய அளபாவதால் 'அலகு' எனப்படும். தமிழ் வல்லெழுத்துகளைப் பொருத்தவரை பிறங்கொலி (voiced : ka → ga) போன்றவை எத்தகைய பொருள் மாற்றமும் தருவனவல்ல; வெறும் மாற்றொலியன்களே (allophone) ஆகும்.

மாத்திரை அளவும்கூட பறவை விலங்குகளின் ஒலி ஒப்புமை கருதியே சரிகமபதநி எனக் குரலின் குறியீடுகளாகப் பழந்தமிழில் அமைக்கப்பட்டன. இதனை அறியாமல் இவற்றை வடமொழிச் சார்பு உடையன என்று கூறுவது முற்றிலும் அறியாமையால் நேர்ந்த தவறு எனலாம்.

**குரலிராவம்** *kuralirāvam,* பெ.(n.) எதிரொலி பாயும் குரலோசை; vocal resonance (சா.அக.).

*[குரல் + இராவம்.]*

**குரலின்மை** *kuralinmai,* பெ.(n.) குளிர்ச்சியால் தொண்டை கம்மல்; harsh rough, grating voice, when the throat is affected with cold (சா.அக.).

*[குரல் + இன்மை.]*

**குரலினம்** *kural-inam,* பெ.(n.) கழுதை; ass, so called from its hoarse voice (சா.அக.).

*[குரல் + ஈனம்.(அருவருப்பான குரலோசை கொண்டது).]*

**குரலுறுப்பு** *kural-uruppu,* பெ.(n.) ஓசையின் உறுப்பு; organ of voice, larynx (சா.அக.).

*[குரல் + உறுப்பு.]*

**குரலெடு-த்தல்** *kuraledu-,* 4 செ.கு.வி.(v.i.) குரலை மேலே எடுத்து நிறுத்துதல்; to lift up the voice, ascend the musical scale, maintain a high pitch in singing.

மறுவ. குரல்வாங்கு, குரல்விடு

*[குரல் + எடு-.]*

**குரவகம்** *kuravakam,* பெ.(n.) 1. ***வாடாக்குறிஞ்சி*** (பிங்.); a plant whose flower does not change colour in withering. 2. மருதோன்றி (மலை.); henna.

*[குல் → குரல் → குரவகம்.]*

**குரவகி** *kuravagi,* பெ.(n.) 1. கோழிக்கீரை; cock's greens. 2. குறிஞ்சா; scammony swallow wort (சா.அக.).

*[குரவு → குரவகி.]*

**குரவடிகள்** *kuravadikal,* பெ.(n.) சமண ஆசிரியத்துறவியர் *"ஸ்ரீ திருநறுங் கொண்ட பலதேவக் குரவடிகள் மாணாக்கர் கனகவீர அடிகள்" (கழுகுமலைக் கல்வெட்டு) (கல்.அக.).*

*[குரவு + அடிகள்.]*

**குரவம்** *kuravam,* பெ.(n.) 1. குரா; common bottle flower. *"பல குரவ மழனகுவன" (சூளா.தூது.2).* 2. பேரீந்து (மலை.); date palm. 3. கோட்டம் (சூடா.); putchock, fragrant root of the costum plant.

*[குரா → குரவம்.]*

**குரவம்பாவை** *kuravam-pāvai,* பெ.(n.) பாவையின் வடிவுடைய குரவம்பூ; common bottle-flower blossom, as shapded like a doll. *"குரவம் பாவை கொப்புளித்து" (சீவக.2690).*

*[குரவம் + பாவை. குரு → குரவம்.]*

**குரவன்** *kuravan,* பெ.(n.) அரசன், ஆசிரியன், தாய், தந்தை, தமையன் என்ற ஐங்குரவருள் ஒருவர்; elderly person, qualified by age, family connection, respectability, knowledge or authority to give advice and exercise control, any of aiṅ-kuravan. *"நிகிரில் குரவரிவர்" (ஆசாரக்.17).* 2. அமைச்சர் (பிங்.); minister. 3. அயன் (திவா.); brahma, as the father of all.

*[குரு → குருவன் → குரவன்.]*

**குரவிகம்** *kuravikam,* பெ.(n.) பேரீஞ்சு; wild date palm (சா.அக.).

*[குரவு → குரவிகம்.]*

**குரவிகா** *kuravikā,* பெ.(n.) புல்லாமணக்கு; a plant resembling castor plant (சா.அக.).

*[குரு → குருவு → குரவிகம் → குரவிகா.]*

**குரவிளிம்பு** *kuravilimbu,* பெ.(n.) பிடரி எலும்பையும் பித்திகை எலும்பையும் இணைக்கும் சுருக்கு விளிம்பு;lamboid suture which unites the occipital and the parietal bones (சா.அக.).

*[குர + விளிம்பு.]*

**குரவு**[1] *kuravu,* பெ.(n.) ***குரா*** பார்க்க; see kura. *"குரவுவார் குழன்மடவாள்" (திருவாச.5,17).*

ஒ.நோ. குரா.

*[குல் → குர → குரவு.]*

**குரவு**[2] *kuravu,* பெ.(n.) ஆசிரியத்தன்மை; office of a guru. *"அருந்தமிழ்க் குரவு பூண்ட" (காஞ்சிப்பு.கடவுள்வா.9).*

*[குரு → குருவு → குரவு.]*

**குரவு**[3] *kuravu,* பெ.(n.) நறுமணம்; fragrant smell (சா. அக.).

*[குரு → குருவு → குரவு.]*

**குரவு**[4] *kuravu,* பெ.(n.) நறுமணம் (யாழ்.அக.); fragrance.

*[குல் → குரு → குரவு.]*

**குரவுநிறமணி** *kuravu-niṟa-maṇi,* பெ.(n.) கோவரங்கப் வயிரமணி (பதுமராகம்) வகை (யாழ்.அக.); a kind of topaz.

*[குரு → குரவு + நிறம் + மணி.]*

**குரவை** *kuravai,* பெ.(n.) 1. முல்லை அல்லது குறிஞ்சிநில மகளிர் தம்முட் கைகோத்தாடும் கூத்துவகை; dance in a circle prevalent among the women of sylvan or hill tracts. *"ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை" (சிலப்.).* 2. மகளிர், விழா நாள்களில் நாவாற் குழறி இடும் மகிழ்ச்சியொலி; chorus of shrill sound madeby women by wagging the tongue, uttered on festive occassions. 3. கடல்; sea. *"பவத்தின் பரவைக் குரவையை............ கடப்பரிதால்" (வைராக.தீப.18).*

E. chorus, L. chorus. G. choros, orig. a dance in a ring. cf. of. E. coracle, a small oval rowboat. W. carwgt-corwg. anything round. Gael. eurach, a wicker-boat.

ஒ.நோ. குலவை. ம. குரவ.

*[குலவை → குரவை, குலவையிடுதல், குலடிவயிட்டு ஆடுதல்.]*

**குரவைக்கூத்து** *kuravai-k-kūttu,* பெ.(n.) ***குரவை***[1] பார்க்க (சிலப்.3,12,உரை);see *kuravai.*

*[குரவை + கூத்து.]*

**குரவைத்திகிரி** *kuravai-t-tigiri,* பெ.(n.) ஆண்துடரி என்னும் மூலிகை (சா.அக.); a shrub-useful in kidney diseasses.

மறுவ: விரகச் செடி

*[குரவை + திகிரி.]*

**குரவைப்பறை** *kuravai-p-paṟai,* பெ.(n.) ஒருவகைக் குறிஞ்சிப் பறை (இறை.1,17,உரை); a drum of the hilly tracts.

*[குரவை + பறை.]*

**குரவையிடு-தல்** *kuravai-y-iḍu-,* 20 செ.கு.வி.(v.i.) நாவாற் குழறி மகிழ்ச்சியொலி செய்தல்; to utter in chorus a shrill sound by wagging the tongue as done by women on festive and religious occasions (இ.வ.).

*[குலவை → குரவை + இடு.]*

**குரற்கந்து** *kuraṟkandu,* பெ.(n.) சர்க்கரை அல்லது தேன் சேர்த்துப் பக்குவப்படுத்திய பனிநீர்ப்பூ ரோசாப்பூ; a confection of rose prepared in sugar or honey (சா.அக.).

மறுவ. குல்கந்து

*[குரல் + கந்து. குரலை வலுப்படுத்துவது.]*

**குரற்கம்மல்** *kuraṟ-kammal,* பெ.(n.) குரல்வளையில் உள்ளீரம் வறண்டு பேசமுடியாமல், கம்மிய பேச்சையுண்டாக்கும் ஒரு தொண்டைநோய்; a dis-

ease of the larynx due to dryness and the inablity to ta!k except with hoarse voice (சா.அக.).

*[குரல் + கம்மல்.]*

**குரற்கனப்பு** *kuraṛkaṉappu,* பெ.(n.) குளிர்ச்சியால் தொண்டை கம்மல்; harsh, rough, grating voice, as when the throat is affected with cold (சா.அக.). இது காற்றுக் கோளாறினாலும் அதிகக் கூச்சலிடு வதாலும் உண்டாகி, குரல்வளையில் தங்கிப் பேச் சொலியை மாற்றும்.

*[குரல் + கனைப்பு.]*

**குரற்செப்பு** *kuraṛceppu,* பெ.(n.) குரள்வளை; glottis (சா.அக.).

மறுவ: குரல்வளை

*[குரல் + செப்பு.]*

**குரனாசனி** *kuraṉāsaṉi,* பெ.(n.) குரலோசையைக் கெடுக்கும் உணவு வகை முதலியன; food substances that affect the voice of the throat (சா.அக.).

*[குரல் + நாசனி.]*

**குரா** *kurā,* பெ.(n.) வெள்வெட்கி (குராமரம்) மரம்; common bortle flower. *"குராநற் செழும்போது கொண்டு" (திவ். இயற் 2, 31).*

*[குரல் →குரவு → குரா.]*

**குராசானிப்பூடு** *kurāsāṉi-p-pūḍu,* பெ.(n.) ஓர் ஓமப்பூடு; a plant (சா.அக.).

*[குராசானி + பூடு – குராசானி – ஊர்ப்பெயர்.]*

**குராதர்** *kurādar,* பெ.(n.) குணதத்துவ அதிபர் எண்மரில் ஒருவர் (சி.சி.8,2, மறைஞா); (Saiva) one of the eight ruling chiefs of *guṇatattuvam.*

*[குரு + ஆதர் – குராதர்.]*

**குராமரம்** *kurāmaram,* பெ.(n.) வறண்ட நிலத்தில் வளர்வதும், படகு செய்வதற்குப் பயன்படுவதுமான ஒருவகைமரம்; common bottle flower tree. It is very common in ceylon where fishing boats are made of its wood (சா.அக.).

மறுவ: வெள்வெட்சி

*[குரவு → குரா + மரம்.]*

**குரால்** *kurāl,* பெ.(n.) 1. புகர்நிறம் (திவா.); dim, tawny colour. 2. பசு; cow. *"குஞ்சர மெண்கு குராலரி யேனம்" (சேதுபு.மங்கல.27).* 3. கோட்டான்; a kind of owl. *"பலவூண் பொருந்திய குராலின் குரலும்" (மணிமே.6,76).*

*[குரு → குரால்.]*

**குராற்பசு** *kurāṛpasu,* பெ.(n.) கபிலைநிறப் பசு; tawny cow. *"குராற் பசுவைக் கொன்றான் பாவத்தை" (S.I.I.iii,121.).*

*[குரு → குரால் + பசு (பசு-பெற்றம்).]*

**குரிச்சி கட்டல்** *kuriccikaṭṭal,* பெ.(n.) கைகளால் முடக்கல்; persistent, and organic contracture of a joint in certain diseases such as small box rheumatism attended with veneral disease (சா.அக.).

*[குரிச்சி + கட்டல்.]*

**குரிசில்** *kurisil,* பெ.(n.) 1. பெருமையிற் சிறந்தோன் (திவா.); person of dignity, illustrious person. 2. வள்ளல்; philanthropist, benefactor. *"குரிசினீ நல்க யாங் கொள்ளும் பரிசில்" (பு.வெ.9,5).* 3. தலைவன்; lord, chief. *"போர்மிகு பொருந குரிசிலெனா" (திருமுரு.276).*

*[குரு → குருசில் → குரிசில்.]*

**குரிஞ்சி** *kuriñci,* பெ.(n.) 1. ஈந்து; wild date-palm. 2. குரிங்கை; cone head. 3. மருதோன்றி; common-nail dye. 4. செம்முள்ளி; throny nail dye. 5. வேங்கை; common vengai. 6. வைரமணி; chalcedony (சா.அக.).

*[குரு → குருஞ்சி → குறிஞ்சி.]*

**குரிந்தை** *kurindai,* பெ.(n.) 1. குருக்கத்தி (மலை.); common delight of the woods. 2. சிறுகுறிஞ்சா; small Indian pecauanha.

*[குரு → குருந்தை → குரிந்தை.]*

**குரிவியாலன்** *kuriviyālaṉ,* பெ.(n.) ஆலமரவகை; a common avenue-fig having stout air-roots.

ம. குர்யாலு

*[குரு → குருவி → குரிவி + துலன்.]*

**குரீஇ** *kurī,* பெ.(n.) 1. குருவி; small bird. *"குன்றத் திறுத்த குரீஇயினம்" (புறநா.19).* 2. பறவை (பிங்.); bird.

*[குல் →குறு→ குறுகு →குருவி→குரீஇ.]*

**குரிஇப்பூளை** *kurii-p-pūḷai,* பெ.(n.) ***சிறுதுளை*** பார்க்க;see *siṟutuḷai. "குரீஇப்பூளை குறு நறுங்கண்ணி" (குறிஞ்சிப்72),* wolly caper.

*[குரீஇ→பூளை.]*

**குரீரம்** *kurīram,* பெ.(n.) புணர்ச்சி, இணைவாடுதல்; copulation (சா.அக.).

*[ குரீஇ→ குரீஇலம் (குருவியின் செயல்) →குரீரம்.]*

**குரு¹-த்தல்** *kuṟu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. தோன்றுதல்; to appear. *"அதினின்று மொருபுருடன் குருத்தான்" (விநாயகபு.72,4).* 2. வேர்க்குரு உண்டாதல்; to break out, as prickly heat.

*[குல் (தோன்றல் கருத்து) → குரு.]*

**குரு²-த்தல்** *kuru-,* 4 செ.கு.வி.(v.i.) வெகுளியடைதல்; to be indignant, enraged.

*[குல் → குரு.]*

**குரு³** *kuru,* பெ.(n.) 1. அம்மை முதலிய கொப்புளங் காணும் நோய்; postule, blister, any eruptive, disease, as small-pox, measles. *"வெப்பு நோயுங் குருவுந் தொடர" (சிலப்.உரைபெறு கட்டுரை).* 2. புண்; boil, sore. *"கிருமி குருவின் மிளிர்த்தத்து" (திவ்.* இயற். திருவிருத்.48). 4. வேர்க்குரு (பிங்.); prickly heat. 4. புளகம்; horripilation. *"மயிர்க்கண் குருக்கொண்டு" (அரிச்.பு.விவாக.288).* 5. கொட்டை; nut. *"பலாவின் குரு" (இ.வ.).*

*[குல் → குரு.]*

**குரு⁴** *kuru,* பெ.(n.) 1. ஒளி; brilliance, lustre, effulgence. குருமணித்தாலி (தொல். சொல்.303, உரை.); 2. முத்துக்குற்றங்களில் ஒன்று; a flaw in pearls. *"குருவும் சுப்பிரமும் உட்பட முத்து" (S.I.I.II, 81).* 3. துரிசு (மூ.அ.); blue vitriol. 4. மாழைகளைச் சிதைக்கும் சிந்தூரம்; (Alch.) philospher's powder, a compound of various metals. 5. இதளியம்; mercury. 6. பலண்டுறுகம் என்னும் செய்ந்நஞ்சு; a mineral poison.

*[குல் → குரு.]*

**குரு⁵** *kuru,* பெ.(n.) 1. அறிவாசிரியன்; spiritual preceptor. *"பீதகவாடைப் பிரானார் பிரமகுரு வாகி வந்து" (திவ்.பெரியாழ்.5:2,8).* 2. ஆசிரியன் (சூடா.); teacher. 3. ஐங்கரணன் (புரோகிதன்); family priest. *"குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்" (கம்பரா.கையடை.16).* 4. தந்தை; father. *"குருமொழி சிரத்திற் றாங்கினான்" (காஞ்சிப்பு.இரேணு.11).* 5. அரசன் (பிங்.); king. 6.வியாழன் (திவா.); the planet jupiter, as the priest of the gods (தேவகுரு.) 7. பூசநாள்; the 8th nakšatra (விதாந. பஞ்சாங்க.18). 8. கடினத்தன்மை; heaviness,

weight. *"பசுமட் குருஉத் திரள் போல" (புறநா.32).* 9. பருமன்; largeness (வின்.). 10. பெருமை (உரி.நி.); eminence, excellence, exaltedness. 11. நெடில்; long vowel. 12. நெடிலும், நெடிலொற்றும், குறிலொற்றுமாகிய அசைகள் (வீரசோ.யாப்.26) (pros.); a syllabic instant. 13. இரண்டு மாத்திரையின் அளவு (அக.நி.); (mus.) quantity of a long note. 14. எட்டு எழுத்துக்காலங் கொண்ட தாள அங்கவகை (பரத.தாள.35) (Mus.); a variety of *aṅgam* which consists of eight *aksarakālam.*

*[குல் → குரு.]*

**குரு**[6] *kuru,* பெ.(n.) 1. குருகுலத் தலைவன்; a prince of the lunar race after whom his family was called *kuru-kulam. "குருவுமக குலத்திலங் குரித்தான்" (பாரத.குருகுல.31).* 2. குருநிலப்பகுதி; a certain continent. 3. குருக் கொடிவழியினர் ஆண்ட நாடு (சூடா.); the country of the Kurus, one of 56 *tēcam.*

*[குல் → குரு.]*

**குரு**[7]**-த்தல்** *kuru-,* 4 செ.கு.வி.(v.i.) நிறம்பெறுதல்; to glisten. *"குருக்குங் கலாமதிக் கூற்றம்" (சங்கர.அந்.32).*

*[குல் → குரு.]*

**குருக்கக் காய்ச்சல்** *kurukka-k-kāiccal,* 8 செ.குன்றாவி. (v.t.) சுண்டக் காய்ச்சுதல்; boiling down as to become thick and consistent (சா.அக.).

*[குறுக்க → குருக்க + காய்ச்சல்.]*

**குருக்கஞ்செடி** *kurukkañceḍi,* பெ.(n.) பிரமதண்டு; yellow thistle (சா.அக.).

*[குரு → குருக்கம் + செடி.]*

**குருக்கண்** *kurukkaṇ,* பெ.(n.) 1. குருட்டுக் கண்; blind eye with eruptions or vesicles. 2. பெண் முலை; woman's breast. 3. ஞானக்கண்; eye of wisdom, third eye (சா.அக.).

*[குல் (துளை) → குரு + கண்.]*

**குருக்கத்தி**[1] *kurukatti,* பெ.(n.) மாதவிக்கொடி; common delight of the woods. *"குடந்தைக் கிடந்த கோவே குருக்கத்திப்பூச் சூட்ட வாராய்" (திவ்.பெரியாழ்.2:7,7).*

*[குல் → குரு → குருக்கன் → குருக்கத்தி.]*

**குருக்கத்தி**[2] *kurukkatti,* பெ.(n.) கல்லால்; white fig.

*[குரு → குருக்கத்தி.]*

**குருக்கத்தியெண்ணெய்** *kurukkatti-y-eṇṇei,* பெ.(n.) வசந்த கால மல்லிகை எண்ணெய்; oil of spring creeper (சா.அக.).

*[குருக்கத்தி + எண்ணெய்.]*

**குருக்கம்** *kurukkam,* பெ.(n.) குறுக்கு, இடுப்பு; hip (சா.அக.).

*[குறுக்கு → குறுக்கம் → குருக்கம்.]*

**குருக்கல்** *kurukkal,* பெ.(n.) 1. குருவுண்டாதல்; breaking out of prickly heat. 2. அம்மைக் குருவெழும்பல்; rising of pocks as in small-pox (சா.அக.).

*[குல் → குரு → குருத்தல் → குருக்கல்.]*

**குருக்கள்**[1] *kuru-k-kaḷ,* பெ.(n.) 1. ஆசிரியன் (சீவக.கடவுள்வா.1,உரை); priests. 2. சிவன் கோயிலிற் பூசனை புரியும் ஆரியச்சிவனியர்; officiating Brahman priests in *śiva* temples (கொ.வ.). 3. பார்ப்பனரல்லாத சைவர்க்குக் காரியங்கள் செய்விக்கும் சைவ வேளாளர்; *śaiva vēḷāla* priests who ministered to non-Brahmins.

*[குல் → கள்.]*

**குருக்கள்**[2] *kurukkaḷ,* பெ.(n.) நூற்றவர் கௌரவர்; Kauravas as descendants of Kuru. *"குருக்கள் தமக்குப் படைத்தலைவரை வகுத்தது" (தொல். பொருள்.72, உரை,ப.231).*

*[குல் → கள். குரு – ஒரு மரபினத்தின் பெயர்.]*

**குருக்கன்** *kurukkaṉ,* பெ.(n.) காகச் செய்நஞ்சு (சங்.அக.); a prepared arsenic.

*[குரு → குருக்கன்.]*

**குருக்காணிக்கை** *kuru-k-kāṇikkai,* பெ.(n.) வேதபாடம் படித்து முடித்தபின் சீடன் தன் ஆசிரியனுக்குக் காணிக்கை தருதல்; to present to a guru by his pupil after completing his vēdic studies under him.

*[குரு+ காணிக்கை.]*

**குருக்காதி** *kurukkādi,* பெ.(n.) குரு மருந்துகள் முடிக்கப் பயன்படும் சரக்குகள்; the ingredients necessary for preparation of quintessential medicines (சா.அக.).

*[குரு → குருக்கம் + ஆதி.]*

**குருக்காரம்** *kurukkāram,* பெ.(n.) காரக்குரு; any substance added to a metal etc. (சா.அக.).

*[குரு + காரம்.]*

**குருக்கி** *kurukki,* பெ.(n.) முழங்காற்கு மேல் வீக்கங் காணும் குதிரைநோய்வகை (அசுவசா.111); a disease of the horse is which there is swelling just above the knees.

*[குருக்கு → குருக்கி.]*

**குருக்கிடை** *kurukkiḍai,* பெ.(n.) குருக்கிடை நூல் அல்லது குருமருந்து முறையைச் சொல்லும் நூல்; a treatise on the preparation of quite essential medicines or salt used in alchemy (சா.அக.).

*[குரு + இடை]*

**குருக்கிலை** *kurukkilai,* பெ.(n.) பிரமதண்டின் இலை; prickly poppy (சா.அக.).

*[குருக்கு + இலை]*

**குருக்கு**[1] *kurukku,* பெ.(n.) பிரமதண்டுச் செடி; prickly poppy. உன்வீட்டிலே எருக்கும் குருக்கும் முளைக்க (உ.வ.).

மறுவ. பிரண்டை

*[குரு → குருக்கு.]*

**குருக்கு**[2] *kururkku,* பெ.(n.) இளம்பனை முதலியவை நெருங்கிய தோப்பு; plantation thick with young palm trees (இ.வ.).

*[குல் → குரு → குருக்கு.]*

**குருக்கு**[3] *kurukku,* பெ.(n.) நெருஞ்சி; cowthorn.

*[குல் → குரு → குருக்க.]*

**குருக்குத்தி** *kurukutti,* பெ.(n.) 1. **குருக்கு** பார்க்க;see *kurukku.* 2. பயிரில் விழும் நோய் வகை; a disease causing blight to growing grain.

*[குருக்கு → குருக்கத்தி]*

**குருக்குப்பால்** *kurukku-p-pāl,* பெ.(n.) கண் வலிக்குப் பயன்படும் பிரம்மதண்டுச் செடியின் மஞ்சள் பால்; the yellow juice of prickly poppy, used in opthamalmia (சா.அக.).

*[குருக்கு + பால்.]*

**குருக்கொடு-த்தல்** *kuru-k-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கோயிற்பூசை புரிதல்; to offer puja in temples. *"குருக்கொடுக்கும் நம்பிமா ரென்றிருந் தோம்" (தமிழ்நா.216).* 2. கொடுமை செய்யத் தூண்டுதல்; to incite, commonly to evil deeds (வின்.).

*[குரு + கொடு.]*

**குருக்கொள்(ளு)-தல்** *kuru-k-koḷ-,* 16 செ.கு.வி. (v.i.) குருவின் தன்மையை மேற்கொள்ளுதல்; to arrogate the function of a teacher. *"இராசநீதி குருக்கொண்டு முதிர்ந்தனையோ" (பாரத. சூதுபோர்.241).*

*[குரு + கொள்.]*

**குருகடம்** *kurukaḍam,* பெ.(n.) அரத்தத்திலிருக்கும் அணுவுறுப்பு; blood corpuscle (சா.அக.).

*[குரு → கடம்.]*

**குருகண்டகம்** *kuru-kaṇḍagam,* பெ.(n.) முருங்கை; horse radish. 2. கண்டகச்சிலை காகிக் கருகில் கண்டகி என்னும் நதியில் கிடைக்கும் பூசைக்குரிய கல்(சா.அக.);worshipable stone obtained from kandaki viva in north india.

*[குரு + கண்டகம்.]*

# குருகு வகைகள்



குருகு



கருங்கால் வெண் குருகு



வெள்ளாங் குருகு



சிறுவெள்ளாங் குருகு



பெருங்குருகு

**குருகன்வெட்டு** *kurukaṉ-veṭṭu,* பெ.(n.) பழைய நாணயவகை (பணவிடு.135); an ancient coin.

*[குருகன் + வெட்டு.]*

**குருகாரம்** *kurukāram,* பெ.(n.) பொரி காரம்; borax. 2. குரு முறைக்குப் பயன்படுத்தும் கார மருந்து; an alkaloid used for preparing a universal medicine known as philospher's powder (சா.அக.).

*[குரு + காரம்.]*

**குருகிதம்** *kurukidam,* பெ.(n.) முருந்துகளிலிருந்து எடுக்கும் ஒரு பொருள்; a peculiar substance obtained from cartilages (சா.அக.).

*[குரு →குருகு → குருகிதம்.]*

**குருகிலை**[1] *kurukilai,* பெ.(n.) குருக்கிலை; leaves of erythrina (சா.அக.).

*[குருக்கு → குருக்கு+ இலை.]*

**குருகிலை**[2] *kurugilai,* பெ.(n.) ஒருவகை மரம்; a tree. *"பெய்ய முழங்கத் தளிர்க்குங் குருநிலை" (நான்மணி.37).*

*[குருகு + இலை.]*

**குருகிற்றாளி** *kurukiṟṟāḷi,* பெ.(n.) ஒருவகைக் கிழங்கு; a kind of root.

*[குருகு → குருகில் + தாளி.]*

**குருகு**[1] *kurugu,* பெ.(n.) 1. விலங்கு முதலியவற்றின் இளமை (சூடா.); young, as of an animal. 2. குட்டி; young of a beast. *"சிங்கக் குருகு" (திவ். திருப்பா.1,வ்யா).* 3. குருத்து; pith, as of tree or elephant's tusk. *"குருகு பறியா நீளிரும் பனைமிசை" (பரிபா.2,43). "ஆளிநன்மான் ......... வேழத்து வெண்கோடு வாங்கிக் குருத்தருந்தும்" (அகநா.381).* 4. வெண்மை (திவா.); whiteness. 5. பறவை (சூடா.); bird. 6. தாரை; heron, stork, crane. *"வான்பறைக் குருகி னெடுவரி பொற்ப" (பதிற்றுப். 83,2).* 7. கோழி (பிங்.);hen. 8. அன்றில்; the *aṉṟil* bird. *"குருகுபெயர்க் குன்றம்" (மணிமே.5,13).* 9. மூலநாள் (திவா.); the 19th naksatra 10. துருத்தி வைத்தூதும் கொல்லுலை மூக்கு; hole in the centre of the smith's forge for the nozzle of the bellows. *"ஊதுலைக் குருகி னுயிர்த்தனர்" (சிலப்.4:59).* 11. கைவளை; bracelet, armlet. *"கைகுவி பிடித்துக் குருகணி செறித்த" (கல்லா.44:22).* 12. குருக்கத்தி; common delight of the woods. *"குருகுந் தளவமும்" (சிலப்.13:155).* 13. கல்லால் வகை; white fig. 14. இடைச் சங்க நூல்களுள் ஒன்று (இறை.உரை.); a poem of the Middle Sangam.

*[குரு→ குருகு (இளமை, மென்மை).]*

**குருகு**[2] *kurugu,* பெ.(n.) கூழைக்கடா இனப்பறவை; grey pelican. *"அகன்கழி சிறகுளர்த்தும் பாரல்வாய்ச் சிறுகுருகே" (சம்பந்தர்.தேவா.321–5)*

மறுவ. கூழைக்கடா, வண்டானம்.

**Fin.** kurki; **Es.** kurg; **Mordvin.** kargo; **Tungusic.** karav; **Jap.** kari.

*[குருகு - கொல்லன் உலைமூக்கு, உலைத்துருத்தி, உலைமூக்கு போன்ற மூக்குடைய பறவை, உலைத்துருத்தி போன்று வாயின்கீழ் தோற்பை உடைமையும் ஒப்பு நோக்கத்தக்கது]*

குருகு வகைகள் : 1. குருகு 2. கருங்கால் வெண்குருகு 3. வெள்ளாங்குருகு 4. சிறுவெள்ளாங்குருகு 5. பெருங்குருகு.



குருகு

**குருகுக்கிழங்கு** *kurugu-k-kiḻaṅgu,* பெ.(n.) உண்ணுதற்குரிய இளங்கிழங்கு; very young yams or other edible roots (வின்.).

*[குருகு + கிழங்கு.]*

**குருகுணம்** *kurukuṇam,* பெ.(n.) எளிதில் செரிமானம் ஆகாமல் வயிறு, குடல்களுக்கு துன்பத்தை உண்டுபண்ணும் வன்மையான பொருள்களின் பண்பு; the nature of any substance that could not be easily digestible or one that gives trouble to the disgestive organs such as, the stomach, and the intestines. 2. மென்மை யான குணம்; sterling quality (சா.அக.).

*[குரு + குணம்.]*

**குருகுபெயர்க் குன்றம்** *kurugupeyar-k-kuṉḏram,* பெ.(n.) ***கிரவுஞ்சமலை*** பார்க்க; see *kiravuñja-malai,* a mountain. *"குருகு பெயர்க் குன்றங் கொன்றோன்" (மணிமே.5:13).*

*[குருகு + பெயர் + குன்றம்.]*

**குருகுமண்** *kurugumaṇ,* பெ.(n.) வெள்ளைமண்; white earth.

*[குருகு + மண்.]*

**குருகுமணல்** *kurugumaṇal,* பெ.(n.) வெண்பொடி மணல்; fine white sand.

*[குரு + மணல்.]*

**குருகுரகம்** *kurukuragam,* பெ.(n.) குருகுரு ஒலிப்பு; gurgling sound (சா.அக.).

*[குரு + குரு → குருகுரு → குருகுரகம்.]*

**குருகுரம்** *kurukuram,* பெ.(n.) சதையைத் துளைக்கும் புழு; a worm burrowing into the skin (சா.அக.).

*[குல் → குரு + குரம்.]*

**குருகுரு**[1]**–த்தல்** *kurukuru-,* 16 செ.கு.வி.(v.i.) வேர்க்குரு உண்டாதல்; to breat out, as prickly heat.

*[குருத்தல் - உண்டாதல். குரு → குருகுருத்தல்.]*

**குருகுரு**[2]**–த்தல்** *kurukuru-,* 16 செ.கு.வி.(v.i.) 1. நமைத்தல்; to itch and tingle. 2. நெஞ்சை உறுத்துதல்; to rankle in one's mind. அவன் பேசியது நெஞ்சில் குருகுருக்கிறது (உ.வ.).

*[குல் → குடு → குரு.]*

**குருகுரு**[3] *kurukuru,* பெ.(n.) தொண்டையில் கொப்புளிக்கும் ஓசை; gurgling sound as in throat etc. (சா.அக.).

*[குலு + குலு → குறு + குறு → குரு + குரு.]*

**குருகுலம்**[1] *kurukulam,* பெ.(n.) குருவின்கொடி வழியினர்; the Kurudynasty. *"குருகுலத்துவ ரியற்கை நன்று" (பாரத.கிருட்டிண.118).*

*[குரு + குலம்.]*

**குருகுலம்**[2] *kurukulam,* பெ.(n.) குருவின் வாழ் விடம்; residence or home of a guru.

*[குரு + குலம்.]*

**குருகுலவாசம்** *kuru-gula-vāsam,* பெ.(n.) கல்வியின் பொருட்டு மாணாக்கன் ஆசிரியன் மனையில் வாழ்கை; residence or life of a pupil in the guru's home.

*[குருகுலம் + வாசம்.]*

**குருகுளிகை** *kurukuḷigai,* பெ.(n.) பெருமை வாய்ந்த குளிகை; reputed pill (சா.அக.).

*[குரு (மேன்மை) + குளிகை.]*

**குருகூர்** *kurugūr,* பெ.(n.) சடகோபர் பிறந்த ஊராகிய ஆழ்வார் திருநகரி; Alvar Tirunagari, the birth-place of šaḍaGopar in Thoothukkudi district. *"குருகூர்ச் சடகோபன் சொல்" (திவ். திருவாய்.1:1,11).*

மறுவ. குருகை

*[குருகு + ஊர்.]*

**குருகூர் நம்பி** *kurugūr-nambi,* பெ.(n.) ***சடகோபர்*** பார்க்க (இலக்.வி.900,உரை);see *šadagōhar.*

*[குருகூர் + நம்பி.]*

**குருகை** *kurugai,* பெ.(n.) ***குருகூர்*** பார்க்க; *kurugūr* town *"குருகைக் கோன் சடகோபன் சொல்" (திவ்.திருவாய்.3:6,11).*

*[குருகு → குருகை.]*

**குருங்கடியாள்** *kuruṅkaḍiyāḷ,* பெ.(n.) தாளகம்; orpiment (சா.அக.).

*[குரு → குரும + கடியாள்.]*

**குருங்காடகம்** *kuruṅkāḍagam,* பெ.(n.) மூக்கு, கண், காது, தொண்டை ஆக இந் நான்கு துளைகளும் கூடுமிடம்; the place of union of the four cavities viz. nose, eyes, ears and throat (சா.அக.).

*[குரும் + (கூடகம்) காடகம்.]*

**குருங்காடை** *kuruṇkāḍai,* பெ.(n.) உயர்ந்த காடை; a superior kind of quail (சா.அக.).

*[குரும் + காடை.]*

**குருச்சாரகம்** *kuruccāragam,* பெ.(n.) இருள்விடு செடி; a plant (சா.அக.).

*[குரு + (சாலகம்) சாரகம்.]*

**குருச்சி**[1] *kurucci,* பெ.(n.) ***குரிச்சி*** பார்க்க; see *kuricci.*

*[குரு → குருச்சி.]*

**குருச்சி**[2] *kurušci,* பெ.(n.) சீனக்காரம்; alum (வின்.).

*[குரு → குருச்சி.]*

**குருச்சுண்ணம்** *kuru-c-cuṇṇam,* பெ.(n.) முப்பு; the mystic three salts used in alchemy. It is the quintessence salt prepared by a secret process (சா.அக.).

*[குரு + சுண்ணம்.]*

**குருச்சோவிருத்தம்** *kuru-c-cō-viruttam,* பெ.(n.) நெட்டி தளம்; an unknown plant (சா.அக.).

*[குரு + சோ + இருத்தம்.]*

**குருசகம்** *kurušagam,* பெ.(n.) வெண்தோன்றி; skyroot (சா.அக.).

*[குருசு → குருசகம்.]*

**குருசம்** *kurušam,* பெ.(n.) வெண்டோன்றி (மலை.); Malabar glory lily.

*[குரு → குருசம்.]*

**குருசாமி** *kurušami,* பெ.(n.) 1. குருவின் நெஞ்சிற் குகந்தவன்; the most revered of masters, chief of preceptors. 2. ***குருநாதன்*** பார்க்க; see *kuru-nādaṉ.*

*[குரு + சாமி.]*

**குருசாரம்** *kurušāram,* பெ.(n.) பொடிகாரம்; an alkaline powder. 2. சிவசாரம்; an alkaloid preparation as opposed to. *சத்தி சாரம்* (சா.அக.).

*[குரு + சாரம்.]*

**குருசித்தன்** *kurušittaṉ,* பெ.(n.) இதளிய (இரசவாத) முறைகளில் வல்லோனாகிய சித்தன்; a šiddha skilled in alchemy. 2. சித்தர்களிற் சிறந்தோன் அதாவது அகத்திய முனி; saga Agastya, the chief of the šiddhar's school (சா.அக.).

*[குரு + சித்தன்.]*

**குருசில்** *kurušil,* பெ.(n.) ***குரிசில்*** பார்க்க;see *kuricil. "போர்மிகு குருசில்" (பதிற்றுப்.31:36).*

*[குரு + குருசில்.]*

**குருசுரம்** *kurušuram,* பெ.(n.) உடம்பிற் றினைபோல் குருக்களை எழுப்பும் ஒருவகைக் காய்ச்சல்; an acute fever characterised by crop of pustules of the size of millet seeds (சா.அக.).

**மறுவ.** நாய்முள் காய்ச்சல்

*[குரு + சுரம்.]*

**குருசூரியன்** *kuru-šūriyaṉ,* பெ.(n.) வைரம்; diamond (சா.அக.).

*[குரு + சூரியன்.]*

**குருசெயநீர்** *kuru-šeyanīr,* பெ.(n.) பூ நீருப்பு செயநீர்; a strong pungent fluid prepared by exposing to nights dew a mixture in which the efforescent salt of the soil of the fuller's earth forms the chief-ingredients (சா.அக.).

*[குரு + செயநீர்.]*

**குருசேவை** *kuru-sēvai,* பெ.(n.) ஆசிரியனை வழிபடுகை; service to a guru, of four kinds viz; ஆத்தம் அங்கம், தானம், சற்பாவம். *"அதிகாரி செயும் குருசேவையினை" (வேதா.ஆ.11).*

*[குரு + சேவை.]*

**குருஞ்சூல்** *kuruñjūl,* பெ.(n.) அகச்சூலி; (சா.அக.).

*[குரு → குரும் + சூல்.]*

**குருட்டடி** *kuruṭṭaḍi,* பெ.(n.) சற்றும் நினைத்துப் பார்க்காமல் (யோசனையில்லாது) அடிக்கும் அடி; indiscrimenate unthinking beating (சா.அக.).

*[குருடு + அடி.]*

**குருட்டாட்டம்** *kuruṭṭāṭṭam,* பெ.(n.) கண்மூடித்தனமான செய்கை; blind, ineffective act, as the blind leading the blind. *"குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடி" (திருமந்.1680).*

*[குருட்டு + ஆட்டம்.]*

**குருட்டீ** *kuruṭṭī,* பெ.(n.) 1. மாடு முதலியவற்றின் மேல் தங்கும் ஒரு வகை ஈ; gad-fly, horse fly. 2. இருட்டிற்கண் தெரியாத ஒரு வகை ஈ; a kind of fly that cannot see in the night.

*[குருடு + ஈ.]*

**குருட்டுக்கண்** *kuruṭṭuk-kaṇ,* பெ.(n.) பார்வையில்லாக் கண்; blind eye (சா.அக.).

*[குருடு + கண்.]*

**குருட்டுக்கண்ணாடி** *kuruṭṭu-k-kaṇṇāḍi,* பெ.(n.) முகந்தெரியாத கண்ணாடி; unserviceable looking-glass, mirror that has lost its reflective power.

*[குருடு + கண்ணாடி.]*

**குருட்டுக்கல்** *kuruṭṭu-k-kal,* பெ.(n.) ஒளிமங்கின மணி; turbid or dim gem (வின்.).

ம. குருட்டுக்கல்லு

*[குருடு + கல்.]*

**குருட்டுக்கிரகம்** *kuruṭṭu-k-kiragam,* பெ.(n.) குழந்தைகளுக்குக் காணும் கோள்நிலைக் குற்றம்; a morbid condition in children due to the mal-influence of a particular planet perhaps venus (சா.அக.).

*[குருடு + கிரகம்.]*

**குருட்டுக்கொக்கு** *kuruṭṭu-k-kokku,* பெ.(n.) நொள்ளை மடையான் என்ற கொக்கு; blind heron, squident-eyed (M.M.640).

தெ. குட்டிக்கொங்க

*[குருடு + கொக்கு.]*

**குருட்டுச்சாயம்** *kuruṭṭu-c-cāyam,* பெ.(n.) மங்கலான சாயம்; faint colours in dyeing.

*[குருடு + சாயம்.]*

**குருட்டுத்தனம்** *kuruṭṭu-t-taṉam,* பெ.(n.) 1. குருட்டுத்தனம்;blindness. 2.கண்மூடித்தனம்; foolishness, recklessness (கொ.வ.).

க. குருடதன; தெ. குட்டிதன.

*[குருட்டு + தனம்.]*

**குருட்டுத்தீர்ப்பு** *kuruṭṭu-t-tīrppu,* பெ.(n.) அறிவில்லாத தீர்மானம்; undiscerning judgement.

*[குருடு + தீர்ப்பு.]*

**குருட்டுநாள்** *kuruṭṭu-nāḷ,*பெ.(n.) செவ்வாயும் சனியும் (சோதிட.சிந்.ப.36); Tuesday and Saturday, as being considered blind.

ம. குருட்டுநாள்

*[குருடு+ நாள்.]*

**குருட்டுநியாயம்** *kuruṭṭuniyāyam,* பெ.(n.) ***குருட்டு வழக்கு*** பார்க்க; see *kuruṭṭu-vaḷakku.*

*[குருட்டு + நியாயம்.(நயன் → நயம் → நாயம் > வ. நியாயம்).]*

**குருட்டுநோய்** *kuruṭṭu-nōy,* பெ.(n.) 1. காரணம் தெரியாத நோய்; diseases for which no causes could be assigned. 2. கண்குருடு; blindness (சா.அக.).

*[குருட்டு + நோய்.]*

**குருட்டுப்பக்கம்** *kuruṭṭu-p-pakkam,* பெ.(n.) அச்சடிச் சேலையின் மங்கலான பக்கம்; reverse side of printed cloth, as the blind side (இ.வ.).

*[குருடு + பக்கம்.]*

**குருட்டுப்பணம்** *kuruṭṭu-p-paṇam,* பெ.(n.) தேய்ந்த நாணயம்; worn out coin (கொ.வ.).

*[குருடு → குருட்டு + பணம்.]*

**குருட்டுப்பத்தி** *kuruṭṭu-patti-,* பெ.(n.) மூடப்பத்தி; *blind faith,* superstition.

*[குருட்டு + பத்தி]*

**குருட்டுப்பலகை** *kuruṭṭu-p-palagai,* பெ.(n.) அழுக்கடைந்த எழுதுபலகை; dirty slate (இ.வ.).

*[குருட்டு + பலகை.]*

**குருட்டுப்பனங்காய்** *kuruṭṭu-p-paṇaṅ-kāy,* பெ.(n.) உள்ளீடற்ற பனங்காய்; pulpless palmyra fruit (இ.வ.).

*[குருட்டு + பனங்காய்.]*

**குருட்டுப்பாடம்** *kuruṭṭu-p-pāḍam,* பெ.(n.) பொருளுணர்ச்சியில்லாமற் செய்யும் மனப்பாடம்; lesson blindly committed to memory without regard to the meaning, anything learnt by rote.

*[குருட்டு + பாடம்.]*

**குருட்டுப்பாலை** *kuruṭṭu-p-pālai,* பெ.(n.) நந்தியாவட்டம்; eye flower (சா.அக.).

*[குருட்டு + பாலை.]*

**குருட்டுப்பாவலி** *kuruṭṭu-p-pāvali,* பெ.(n.) ஒருவகைக் காதணி; ear ornament worn in the tragus.

*[குருடு + பாவலி.]*

**குருட்டுமருத்துவம்** *kuruṭṭu-maruttuvam,* பெ.(n.) கண்மூடித்தனமாய்ச் செய்யும் மருத்துவம்; the blind procedure and practice of a quack (சா.அக.).

*[குருடு + மருத்துவம்.]*

**குருட்டுமருத்துவன்** *kuruṭṭumaruttuvaṉ,* பெ.(n.) நூலின் முறை தெரியாத மருத்துவன்; one who *practices medicine, without the* knowedge of science (சா.அக.).

*[குருட்டு + மருத்துவன்.]*

**குருட்டுமாசு** *kuruṭṭu-māšu,* பெ.(n.) ஓடி மறைக்கும் முகில் மேகம்; blinding mist.

*[குருடு + மாசு.]*

**குருட்டுமுத்து** *kuruṭṭu-muthu,* பெ.(n.) மங்கலான முத்து; dim lustreless pearl.

*[குருட்டு + முத்து.]*

**குருட்டுமை** *kuruṭṭu-mai,* பெ.(n.) எழுத்துத் தெரியாத மசி; pale ink.

*[குருடு + மை.]

**குருட்டுயோகம்** *kuruttu-yōgam,* பெ.(n.) முயற்சி யின்றிச் செல்வமுண்டாதற்கு காரணமான ஓகம்; fluke, stroke, of fortune. ***குருட்டு ஓகம்*** பார்க்க

*[குருடு(ஓகம்) + யோகம்.]*

**குருட்டுவவ்வால்** *kuruttu-vavvāl,* பெ.(n.) பகலிற் கண்தெரியாத வாவல்வகை (M.M.156); bat, as blind at daytime.

*[குருடு + வாவல் → வவ்வால். வாவுதல் = தாவுதல்.]*

**குருட்டுவழி** *kuruttuvali,* பெ.(n.) கண்மூடித்தன மான முறை; blind procedure.

**ம.** குருட்டுவழி

*[குருடு + வழி.]*

**குருட்டுவளம்** *kuruttu-valam,* பெ.(n.) பார்வைக்குப் படாத புடவையின் உட்புறம்; inner side of a cloth or garment opp. to *pārvai-valam.*

*[குருடு + வளம்.]*

**குருட்டுவைத்தியம்** *kurutt-vaittiyam,* பெ.(n.) ***குருட்டு மருத்துவம்*** பார்க்க; see *kuruttu-maruttuvam.*

*[குருட்டு + வைத்தியம்.]*

**குருட்டுவைத்தியன்** *kurutt-vaittiyan,* பெ.(n.) ***குருட்டு மருத்துவன்*** பார்க்க; see *kuruttu-maruttuvan.*

*[குருட்டு + வைத்தியன்.]*

**குருட்டுவௌவால்** *kuruttu-vavvāl,* பெ.(n.) ***குருட்டுவவ்வால்*** பார்க்க; see *kuruttuvavvāl.*

**வகைகள்: 1. சிறகுநீண்டோன் 2. வெண் வயிற்றோன் 3. கருந் தாடியன் 4. உதடுசுருங்கி (சா.அக.).**

*[குருடு + வௌவால்.]*

**குருட்டெலி** *kurutteli,* பெ.(n.) கடித்தால் நச்சு உண்டாக்கும் ஒருவித எலி; a kind of rat, the bite of which is considered poisonous (சா.அக.).

*[குருடு + எலி.]*

**குருட்டெழுத்து** *kurutteluttu,* பெ.(n.) மங்கலான எழுத்து; indistinct script or letter (வின்.).

**ம.** குருட்டெழுத்து

*[குருடு + எழுத்து]*

**குருடகம்** *kurudagam,* பெ.(n.) கல்லுப்பனை; (சா.அக.); a kind of palmyra.

*[குருடு → குருடகம்.]*

**குருடகா** *kurudgā,* பெ.(n.) உத்தாமணி; (சா.அக.).

*[கருடகம் → குருடகா.]*

**குருடன்** *kurudan,* பெ.(n.) 1. கண்ணில்லாதவன்; blind man. *"ஏதிலா ரிற்கட் குருடனாய்" (நாலடி.58).* 2. சுக்கிரன்(அக.நி.); venus. 3 பிறவிக் குருடனாகிய திருதராட்டிரன்; dirutharāttiran, as congenitally blind.

**ம.** குருடன்; **க.** குருட, குட்ட, குரட; **தெ.**குட்டி, க்ருட்டி; **து-** குருடெ, குர்டெ, குர்ட; **கோத.** குர்ட்ண்; **மால.** க்வொட்ரி; **பட.** குருட.

*[குருடு + அன்.]*

**குருடனாசனி** *kurudanāšani,* பெ.(n.) கஞ்சாங் கோரை; white basil (சா.அக.).

*[குருடு + நாசினி.]*

**குருடி** *kurudi,* பெ.(n.) கண்ணில்லாதவள்; blind woman.

**ம.,க., பட.** குருடி.

*[குருடு → குருடி.]*

**குருடு**[1] *kurudu,* பெ.(n.). 1. பார்வையின்மை; blindness, absence of vision. *"கூனுங் குருடும்" (தமிழ்நா.58).* 2. ஒளியின்மை; dimness in gems opacity. 3. ஆடை முதலியவற்றின் குருட்டுப்பக்கம்; the wrong side of a cloth, unfinished, unpolished, undressed side of a thing (வின்.). 4. மூடன்; blind ignorant fellow used in contempt.

ம.,க., பட. குருடு; தெ. குட்டி, க்ருட்டு; து. குருடு, குர்டு; கோத. குர்ட்; நா. குட்டி.

*kuru-ḍu*, blindness, blind: ultimate base *kuru* (like kira, the ultimate base of *kiraḍu*, old). Comp. Persian *kūr;* Kurd *kor;* Ossete *kurm,* blind (C.G.D.F.L. Pg.593).

*[குல் → குரு(கருமை) → குருள் → குருடு.]*

**குருடு²** *kuruḍu,* பெ.(n.) 1. காதின் வெளிப்புறத்துள்ள செவிள்; tragus. 2. ***குருட்டுப் பாவலி*** பார்க்க;see *kuruṭṭu-p-pāvali.*

*[குல் (வளைவு) → குரு → குருள் → குருடு.]*

**குருத்தடை-த்தல்** *kuruttaḍai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நெல் முதலிய பயிர்கள் குருத்து விடாதிருத்தல்; to be stunted, as grain, putting forth no new leaves. 2. கதிர் பொதிநிரம்புதல்; to be big with sprouts (இ.வ.).

*[குருத்து + அடை-.]*

**குருத்தம்** *kuruttam,* பெ.(n.) வெள்ளியைப் போன்ற ஒரு மாழை (உலோகம்); a metal resembling silver (சா.அக.).

*[குரு → குருத்தம்.]*

**குருத்தாமரை** *kuṛu-t-tāmarai,* பெ.(n.) ஆகாசத் தாமரை; sky lotus (சா.அக.).

*[குரு + தாமரை.]*

**குருத்தானம்** *kuruttāṉam,* பெ.(n.) கோயில்களில் அருச்சனை செய்யும் குருக்கள் பணி;post of a priest. *"குருக்கள் வரந்தரும் பெருமாளுக்கு குருஸ்தானமாக" (தெ.கல்.தொ.12.கல்.222).*

*[குரு + தானம். தானம் = இடம்.]*

**குருத்திருத்தல்** *kuru-t-tiruttal,* பெ.(n.) வேர்க்குரு கொள்ளல்; breaking out of the prickly heat (சா.அக.).

*[குருத்து + இருத்தல்.]*

**குருத்திலை** *kuru-t-tilai,* பெ.(n.) பனை, தென்னை, ஈச்சை முதலியவற்றின் இளவோலை; the tender and unexpande leaves of palm trees such as palmyra, coconut, date etc. (சா.அக.).

*[குருத்து + இலை.]*

**குருத்திறகு** *kuruttiṟagu,* பெ.(n.) மெல்லிய உள்ளிறகு; soft feathers, down.

*[குருத்து + இறகு.]*

**குருத்து** *kuruttu,* பெ.(n.) 1. மரம் முதலியவற்றின் குருத்து; sprout, white tender leaves of a tree, shoots of grain and leguminous plants. *"குருத்திற் கரும்புதின்றற்றே" (நாலடி.211).* 2. காதுக் குருத்து; tender part of the internal ear, tympanum. 3. தந்தம், மூளை யிவற்றின் குருத்து; pith, as of elephant's tusk, brain matter. 4. வெண்மை (பிங்.); whiteness. 5. இளமை; tenderness.

*[குல் (முளைத்தல்) → குரு → குருத்து.]*

**குருத்துக்கக்கு-தல்** *kuruttu-k-kakku-,* 15 செ.கு.வி.(v.i.) 1. தவசக் குருத்துப் பிரிந்து அழிவுறுதல்; to part from the roots and perish, as tender shoots of grain by early flooding.

*[குருத்து + கக்கு.]*

**குருத்துக்குழந்தை** *kuruttu-k-kuḻandai,* பெ.(n.) அப்பொழுது பிறந்த குழந்தை; just born baby (சா.அக.).

*[குருத்து + குழந்தை.]*

**குருத்துத்தாளி** *kuruttu-t-tāḷi,* பெ.(n.) சிறுதாளி; hairy leaved creemy white bind weed (சா.அக.).

*[குருத்து + தாளி.]*

**குருத்துப்பூச்சி** *kuruttu-p-pūcci,* பெ.(n.) சோளப் பயிரை யழிக்கும் பூச்சிவகை; a pest that damages maize (இ.வ.).

*[குருத்து + பூச்சி.]*

**குருத்துமணல்** *kuruttu-maṇal,* பெ.(n.) பொடி மணல்; fine sand.

*[குருத்து + மணல்.]*

**குருத்துவக்கறி** *kuruttuva-k-kaṟi,* பெ.(n.) எளிதில் செரிமானம் ஆகாத புலால் அல்லது காய்; vegetable or animal food not easily digestible. 2. அதிகம் காற்றை உண்டு பண்ணும் மாவுப் பண்டம்; any substance in food promoting flatulency,starchy food (சா.அக.).

*[குருத்துவம் + கறி.]*

**குருத்துவம்** *kuruttuvam,* பெ.(n.) 1. குருவின் தன்மை; state of a guru, priesthood. 2. பெருமை; honour, nobility. *"குருத்துவமான மனத்தின்" (ஞானவா.சித்.3).* 3. உடலின் நிறை; heaviness of a body, gravity. 4. நன்றி; gratitude *"குருத்துவங் கெட்டவன்" (இ.வ.).*

*[குரு + குருத்துவம்.]*

**குருத்துவாங்கு-தல்** *kuruttu-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) குருத்து விடுதல்; to shoot forth ears. பயிர் குருத்து வாங்குகிறது (உ.வ.).

*[குருத்து + வாங்கு-.]*

**குருத்துவிடு-தல்** *kuruttu-viḍu-,* 5 செ.கு.வி. (v.t.) பனை முதலியவற்றில் புது வோலை கிளம்பல்; shooting of new leaves (சா.அக.).

*[குருத்து + விடு-.]*

**குருத்துவேலன்** *kuruttu-vēlaṉ,* பெ.(n.) முள்வேல்; thorn babool (சா.அக.).

*[குருத்து + வேல் + அன்.]*

**குருத்தெலும்பு** *kuruttelumbu,* பெ.(n.) இளவெலும்பு; cartilage.

*[குருத்து + எலும்பு.]*

**குருத்தோலை** *kuruttōlai,* பெ.(n.) பனை முதலியவற்றின் குருத்தாயுள்ள ஓலை; young, tender, unexpanded palm leaf.

ம. குருத்தோலா

*[குருத்து + ஓலை.]*

**குருத்தோலை ஞாயிறு** *kuruttōlai-ñāyiṟu,* பெ.(n.) ஞாயிறன்று கிறித்துநாதர் எருசலேம் நகர்க்குள் வெற்றி முழக்கத்துடன் நுழைந்ததைக் கொண்டாடும் கிறித்தவத் திருநாள்; Palm Sunday, the Sunday next before Easter, in commemoration of Christ's triumphal entry into Jerusalem (கிறித்.).

*[குருத்தோலை + ஞாயிறு.]*

**குருத்தோலைப் பெருநாள்** *kuruttōlai-p-perunāḷ,* பெ.(n.) ***குருத்தோலை ஞாயிறு*** பார்க்க; see *kuruttōlai-ñāyiṟu.*

*[குருத்தோலை + பெருநாள்.]*

**குருதட்சிணை** *kurutaṭciṇai,* பெ.(n.) ***குருக்காணிக்கை*** பார்க்க;see *kurukkāṇikkai.*

*[குரு + காணிக்கை.]*

**குருதாளகம்** *kuru-tāḷagam,* பெ.(n.) தாளகத்தைக் கொண்டு தயாரித்த குருமருந்து; a quintessence derived from orpiment by the process of calcination (சா.அக.).

மறுவ. தாளகக்குரு

*[குரு + தாளகம்.]*

**குருதி** *kurudi,* பெ.(n.) 1. அரத்தம் (திவா.); blood. 2. சிவப்பு ; red. *"குருதித் துகிலின் னுறையை" (சீவக.926).* 3. செவ்வாய் (திவா.); Mars. 4. மூளை; brain. ஒ.நோ.குருத்து

ம.குருதி

**Aust.** kruwe.

*[குல் → குரு(சிவப்பு) → குருதி.]*

**குருதிக்காகிதம்** *kuruti-k-kāgidam,* பெ.(n.) சருக்கரைக் கிழங்கு; ground sugar root (சா.அக.)

*[குருதி + (காய்த்தம்) காயிதம் → காகிதம்.]*

**குருதிக்காந்தள்** *kurudi-k-kāndal,* பெ.(n.) ***செங்காந்தள்*** பார்க்க ( *சீவக.1651,உரை*); malabar glory lily.

*[குருதி + காந்தள்.]*

**குருதிக்குருகடம்** *kuruti-k-kurugaḍam,* பெ.(n.) அரத்தத்திலுள்ள சிறு நுண் அணுத்துகள்; corpuscles in the blood (சா.அக.).

*[குருதி + (குருகளம்) குருகடம்.]*

**குருதிக்குழி** *kuruti-k-kuḻi,* பெ.(n.) அரத்தம் சொரியும் நோனித்துளை; the vagina of a woman serving as a channal for discharge of menstrual blood. 2. இருதயம்; heart containing blood (சா.அக.).

*[குருதி + குழி.]*

**குருதிக்கூத்தன்** *kurudi-k-kūttaṉ,* பெ.(n.) சிவப்புக் கூத்தன் குதம்பை; a red variety of கூத்தன் குதம்பை (சா.அக.).

*[குருதி + கூத்தன்.]*

**குருதிசாலம்** *kurudišālam,* பெ.(n.) அரத்த உயிரணு; blood cell (சா.அக.).

*[குருதி + சாலம்.]*

**குருதிசிந்தல்** *kurudišindal,* பெ.(n.) அரத்தம் சொரிதல்; shedding blood (சா.அக.).

*[குருதி + சிந்தல்.]*

**குருதிப்பலி** *kurudi-p-pali,* பெ.(n.) வீரன் தன் அரத்தத்தைக் கொற்றவைக்குக் கொடுக்கும் பலி (தொல்.பொருள். 59,உரை.); oblation in which a warrior makes an offering of his own blood to Durga.

*[குருதி + பலி.]*

**குருதிப்புனல்** *kurudi-p-puṉal,* அரத்தம்; blood. *"விழுந்து கொழுங்குருதிப் புனலென்று" (கலிங். புதுப்.156).*

ம.குருதிப்புனல்

*[குருதி + புனல்.]*

**குருதிமாநக்கி** *kurudi-mā-nakki,* பெ.(n.) அரத்தத்தை உறிஞ்சும் அட்டை; leech sucking blood (சா.அக.).

*[குருதி + மா + நக்கி.]*

**குருதியூட்டு-தல்** *kurudi-yūṭṭu-,* 15 செ.கு.வி.(v.i.) விலங்குகளை உயிர்ப்பலி கொடுத்தல்; lit, to feed with blood to offer animal sacrifice.

*[குருதி + ஊட்டு.]*

**குருதிரோகம்** *kurudi-rōgam,* பெ.(n.) அரத்தக் கதிப்பு, சோகை, அரத்த வேகம், அரத்தத்தைப் பற்றிய நோய்கள்; diseases relating to blood such as plethora (சா.அக.).

*[குருதி + ரோகம்.]*

**குருதிவாரம்** *kurudivāram,* பெ.(n.) செவ்வாய்க்கிழமை; Tuesday. *"புதியசீலை.......... குருதிவாரந் தனக்குக் கொஞ்ச நாளிற் கிழியும்" (அறப்.சத.61).*

*[குருதி + வாரம். வாரம் = கிழமை.]*

**குருது**[1] *kurudu,* பெ.(n.) தவசங்களைக் கொட்டி வைக்கும் குதிர்; receptacle for storing grain, granary.

*[குதிர் → குருது.]*

**குருது**[2] *kurudu,* பெ.(n.) நெய் (மூ.அ.); clarified butter, ghee.

*[குல் → குரு → குருது.]

**குருதுபலம்** *kurudu-palam,* பெ.(n.) மணப்பொருள்; Arabian costus (சா.அக.).

*[குருது + பலம்.]*

**குருதோன்றல்** *kuru-tōṉṟal,* பெ.(n.) அம்மை வார்த்தல்; appearance of pustules in small pox, chicken pox, measles etc., 2. குருவைக் கனவில் காணல்; appearance of a quru or spiritual teacher in the dream (சா.அக.).

*[குரு + தோன்றல்.]*

**குருந்தக்கல்**[1] *kuruṇda-k-kal,* பெ.(n.) ***குருவிந்தக்கல்*** பார்க்க;see *kuruvindakkal.*

*[குருந்தம் + கல்.]*

**குருந்தக்கல்**[2] *kurunta-k-kal,* பெ.(n.) குருந்தமரம்; a tree. 2. ஒரு வகை மாணிக்கம்; a kind of ruby. 3. குருவிந்தக் கல்; a variety of corundam net to diamond, distunguished for its extreme hardness. 4. வச்சிரக்கல்; diamond speat (சா.அக.).

*[குருந்தம் + கல்.]*

**குருந்தகம்** *kurundagam,* பெ.(n.) மயில்; pea-cock (சா.அக.).

*[குருந்து → குருந்தகம்.]*

**குருந்தம்**[1] *kurundam,* பெ.(n.) ***குருந்தக்கல்*** பார்க்க; see *kurunda-k-kal.*

*[குருவிந்தக்கல் → குருந்தக்கல்.]*

**குருந்தம்**[2] *kurundam,* பெ.(n.) ***குருந்து***[2] பார்க்க; see *kurundu. "குருந்தமொன் றொசித்தா னொடுஞ் சென்று" (திவ்.பெரியாழ்.4:4,7).*

*[குருந்து → குருந்தம்.]*

**குருந்தம்பொடி** *kurundam-podi,* பெ.(n.) குருந்தக் கற்பொடி; emery powder.

*[குருந்தம் + பொடி.]*

**குருந்தான்** *kurundāṉ,* பெ.(n.) காட்டெலுமிச்சை; wild lime tree (சா.அக.).

*[குரு → குருந்தான்.]*

**குருந்து**[1] *kurundu,* பெ.(n.) 1. வெண்குருத்து (பிங்.); white tender leaf, tender shoots. 2. குழந்தை; infant.

*[குருத்து → குருந்து.]*

**குருந்து**[2] *kurundu,* பெ.(n.) புனவெலுமிச்சை (பிங்.); wild lime. 2. காட்டெலுமிச்சை வகை; a species of wild lime. 3. ஒருவகைச் சிறுமரம்; a species of wild lime. 4. குருக்கத்தி (பிங்.); common delight of the woods.

*[குரு → குருந்து.]*

**குருந்து**[3] *kurundu,* பெ.(n.) ***குருந்தக்கல்*** பார்க்க; see *kurunda-k-kal.*

*[குரு → குருந்து.]*

**குருந்து**[4] *kurundu,* பெ.(n.) குருந்தமரம்; wild lime tree. இது பலவகைப்படும்; the following are the different kinds.

*[குரு → குருந்து.]*

வகைகள் : 1. செங்குருத்து 2. காட்டுக் குருந்து 3. மலைக் குருந்து 4. மாந்தக்குருந்து 5. மயிலடிக் குருந்து 6. பெருங் குருந்து 7. பேய்க் குருந்து 8. மூவிலைக் குருந்து (சா.அக.).

*[குரு → குருந்து.]*

**குருந்துழாய்** *kuruntuḷāi,* பெ.(n.) சிறுதுளசி; small leaved basil (சா.அக.).

*[குரு → குரும் + துழாய்.]*

**குருந்தூதிகம்** *kuruntūtigam,* பெ.(n.) புன்னை மரம்; Alexandrian laurel (சா.அக.).

*[குரும் + துதிகம்.]*

**குருந்தை**[1] *kurundai,* பெ.(n.) குறிஞ்சா மரம்; common delight of the woods (சா.அக.).

*[குரு → குருந்து → குருந்தை.]*

**குருந்தை**[2] *kurundai,* பெ.(n.) நாகமல்லி; broad-leaved jasmine.

*[குரு → குருந்தை.]*

**குருநகாரிலம்** *kuru-nagārilam,* பெ.(n.) விழிப்பு நிலை (சாக்கிரம்); walking state one of the stations of the soul (சா.அக.).

*[குருநாகம் → குருநாகரிலம்.]*

**குருநகை** *kuru-nagai,* பெ.(n.) புன்சிரிப்பு; smile. *"குருநகையி னந்தி மகிழ்கொள்ள" (தணிகைப்பு. நந்திப்பு.7).*

*[குரு + நகை.]*

**குருநடைகொள்ளல்** *kurunaḍaikoḷḷal,* பெ.(n.) 1. குருவழியைப் பின்பற்றுதல்; following the footsteps of a guru or spiritual teacher. 2. இரா உணவு முடிந்தவுடன், உறங்குவதற்கு முன் சிறுநடையாக 100 அடியாவது உலாவுதல்; walking about a shor distance of at least 100 ft. soon after night meals and just before retiring to bed (சா.அக.).

*[குரு + நடை + கொள்ளல்.]*

**குருநமச்சிவாயர்** *kuru-namaccivāyar,* பெ.(n.) 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்துவரும் அண்ணா மலை வெண்பாவை இயற்றியவருமாகிய ஒரு துறவி; a saint and poet, the author of Annamalai venba who lived in 16th century.

*[குரு + நமச்சிவாயர்.]*

**குருநாகம்** *kuru-nāgam,* பெ.(n.) நாகத்தினால் செய்த குருபற்பம்; the highly concentrated extract of zinc. 2. நாகப்பாம்பிலுயர்ந்தது; king of cobras (சா.அக.).

*[குரு + நாகம்.]*

**குருநாடி** *kuru-nāḍi,* பெ.(n.) 1. நாடி கொண்டு நோயியல்பு அறியும் வகைகளை உணர்த்தும் ஒரு மருத்துவநூல்; a treatise dealing with the dragnosis of disease by feeling the pulse. 2. தேவ குருவின் அருளால் இயற்றப் பெற்றதாகக் கூறும் ஆரூட நூல்; a treatise on augury believed to be inspired by Brhaspathi.

*[குரு + நாடி.]*

**குருநாடு** *kuru-nāḍu,* பெ.(n.) குருவின் கொடி வழியினர் ஆண்ட நாடு; the country of the Kurus.

*[குரு + நாடு.]*

**குருநாத்தகடு** *kurunā-t-tagaḍu,* பெ.(n.) ஒளியுள்ள ஒருவகை மெல்லிய வண்ணத் தகடு; foliated tinsel.

*[குறு + நாகம் + தகடு.]*

**குருநாதன்** *kuru-nādan,* பெ.(n.) 1. பேராசான் (பரமகுரு); exalted guru, great master . 2. தம் தந்தையாகிய சிவபெருமானுக்கு ஓம் என்னும் எழுத்தின் தன்மையை ஒருமுறை உணர்த்திய முருகக்கடவுள்; Skanda, as having once intiated his father šiva into the mystic explanation of (pranavam) 'om'. *"முகமாறுடைக் குருநாதன்" (கந்தரலங்.71).*

*[குரு + நாதன்.]*

**குருநாப்பட்டை** *kuru-nā-p-paṭṭai,* பெ.(n.) ***குருநாத்தககடு*** பார்க்க; see *kuru-nā-ttagaḍu*

*[குறுமை + நாகம் + பட்டை.]*

**குருநாள்** *kuru-nāḷ,* பெ.(n.) அறிவன் கிழமை (வியாழக்கிழமை); Thursday as Jupiter's day (தேவகுருவுக்குரியது). 2. ***பூசம்*** (பிங்.) பார்க்க; the 8th *naksatra.*

*[குரு + நாள்.]*

**குருநிந்தை** *kuru-nindai,* பெ.(n.) ஐம்பெரும் கரிசு (பாதகம்) களுள் ஒன்றாகிய குருவைப் பழித்தல்; dissrespect towards or speaking ill of, one's guru. one of *aimperum-pātagam.*

*[குரு + நிந்தை.]*

**குருநிலம்** *kuru-nilam,* பெ.(n.) குருகொடிவழியினர் நாடு; country of the Kurus. *"குருநிலத்திற் பாதி யினிக் கொடாதிருத்தால்" (பாரத. கிருட்டிண.7).*

*[குரு + நிலம்.]*

**குருநூல்** *kuru-nūl,* பெ.(n.) முதன்மையான நூல்; original work. 2. மேன்மையான நூல்; a reputed work. 3. குரு மருந்து முறைகளைப் பற்றிக் கூறும் மருத்துவநூல்; a medical work on the principles and preparation of quintessence salts (சா.அக.).

*[குரு + நூல்.]*

**குருநெய்ப்பு கொள்–ளல்** *kuru-neyppu-koḷ-,* செ.கு.வி.(v.i.) சிறுசிரங்கு சீழ் கொள்ளல்; supperation of pustules. 2. அம்மைப்பால் கொள்ளல்; pustules maturing in to small-pox. (சா.அக.).

*[குரு + நெய்ப்பு + கொள்ளல்.]*

**குருநோய்** *kuru-nōy,* பெ.(n.) அம்மை முதலிய கொப்புளங் காணும் நோய் (சிலப்.உரைபெறு.1); eruptive disease, as small pox.

*[குரு + நோய்.]*

**குருப்பட்டம்** *kuru-p-paṭṭam,* பெ.(n.) கிறித்தவ குருவுக்குக் கொடுத்தற்குரிய பட்டம்; title of an ordained Christian minister (கிறித்.).

*[குரு + பட்டம்.]*

**குருப்பட்டுக்கறுப்பு** *kuru-paṭṭu-k-kaṟuppu,* பெ.(n.) கல்லாடத்தில் சொல்லியுள்ள ஒரு கறுப்புக் குருமருந்து; a black universal medicine described in a Tamil medical treatise known as "Kallādam". 2. பட்டுக் கொளுத்திய சாம்பல்; ashes of burnt silk (சா.அக.).

*[குரு = மருந்து. குரு + பட்டு + கறுப்பு. பட்டுத் துணியைக் கொளுத்திய சாம்பல், சாம்பல் நிறமாயிருத்தலால் பட்டு கறுப்பு என்று வந்தது.]*

**குருப்பி–த்தல்** *kuruppi-,* 7 செ.கு.வி.(v.i.) பருவுண்டாதல்; to break out, as pimples.

ம. குருப்பு

*[குரு → குருப்பி.]*

**குருப்பியம்** *kuruppiyam,* பெ.(n.) துத்தநாகம்; zinc (சா.அக.).

*[குரு → குருப்பியம்.]*

**குருப்பிரசாதம்** *kuru-p-prasādam,* பெ.(n.) 1. குருவின் அருள்; favour, grace, blessing of the guru. 2. குருவுண்ட உணவின் எச்சம்; leavings of a guru's food.

*[குரு + பிரசாதம். குருவருள் பார்க்க; see kuru-v-aruḷ.]*

**குருப்பு** *kuruppu,* பெ.(n.) பரு; pimples, pustule.

தெ. குருப்பு.

*[குரு → குருப்பு.]*

**குருப்புகை** *kuru-p-pugai,* பெ.(n.) நறுமணப்புகை; a very fragrants smoke (சா.அக.).

*[குரு + புகை.]*

**குருப்பூச்சி** *kuru-p-pūcci,* பெ.(n.) புள்ளியொடு கூடிய குளவி வகை; a kind of spotted wasp (வின்.).

*[குரு + பூச்சி.]*

**குருபக்குவம்** *kuru-pakkuvam,* பெ.(n.) சிறுதும்பி அல்லது சிறுதும்பை; small laucas. It is so called from its use in calcination of metals (சா.அக.).

*[குரு + பக்குவம்.]*

**குருபடாதி** *kurupaḍādi,* பெ.(n.) புனுகு; civet (சா.அக.).

*[குரு + படாதி.]*

**குருபண்ணல்** *kuru-paṇṇal,* பெ.(n.) பொடி செய்தல்; powdering. 2. குருமுடித்தல்; the art of finding or preparing a universal remedy for curing all ailments (சா.அக.).

*[குரு + பண்ணல்.]*

**குருபத்தி** *kuru-patti,* பெ.(n.) குருவினிடம் கொள்ளும் அன்பு; reverence towards *guru.*

*[குரு + பத்தி. வற்று – பத்தி.]*

**குருபத்திரம்** *kuru-pattiram,* பெ.(n.) 1. துத்தநாகம்; zinc. 2. புளியமரம்; tamarind tree. 3. சிறிய இலை; small leaf. 4. மேன்மையான இரும்பு அதாவது காந்தம்; magnet (சா.அக.).

*[குரு + பத்திரம்.]*

**குருபதம்** *kuru-padam,* பெ.(n.) பூநீறு; the efflorescent salt gathered from the soil of fuller's earth. 2. ஐந்திலை நொச்சி (சா.அக.); five lead chaste tree.

*[குரு + பதம்.]*

**குருபரம்பரை** *kuru parambarai,* பெ.(n.) 1. (ஆசாரிய பரம்பரை) ஆசிரியப் பரம்பரை; regular succession of gurus. 2. 'ஆழ்வாராசாரியர்களின்' வரலாறு கூறும் நூல்; a hagiology of Aḻvārs and Acharyas.

*[குரு + பரம்பரை.]*

**குருபரவுணி** *kuruparavuṇi,* பெ.(n.) காட்டாமணக்கு; croton plant (சா.அக.).

*[குரு + பரல் + (உளி) உணி. சிவந்த வித்து உடையது.]*

**குருபரன்** *kurubaran,* பெ.(n.) முருகன் குருவிற் கெல்லாம் சிறந்த குரு; great, supreme guru. *"மெய்த்தவ நிலைமைத் தாய குருபரன்" (இரகு. இந்துமதி.87).*

*[குரு + பரன்.]*

**குருபற்பம்** *kurubaṟpam,* பெ.(n.) அனைத்து வகை மருந்துகள் செய்யப் பயன்படுத்தும் மருத்துவ முப்பு; in medicine quintessense of the three salt ingredients for preparing all kinds of medicines. 2. எல்லா நோய்களையும் குணப்படுத்தும் மருந்து; all healing drugs. 3. வாதமுப்பு; a universal medicine for transmuting lesser metals into gold (சா.அக.).

*[குரு + பற்பம்.]*

**குருபன்னி** *kuru-paṉṉi,* பெ.(n.) குருவின் மனைவி; wife of a guru.

*[குரு + (பத்தினி) பன்னி. Skt. patni (மனைவி.).]*

**குருபாகம்** *kuru-pāgam,* பெ.(n.) குருமூலமாய்க் கற்பிக்கப்பட்ட முறை; the method or process inspired by a guru (teacher). 2. குருமருந்தை முடிக்கும் முறை; the method of preparing an all healing drug (சா.அக.).

*[குரு + பாகம்.]*

**குருபாததாசர்** *kuru-pāda-dāšar,* பெ.(n.) குமரேச சதகம் இயற்றிய ஆசிரியர்; the author of Kumarēša-catagam.

*[குறு + பாதம் + தாசர்.]*

**குருபாரம்பரியம்** *kuru-pāramparíyam,* பெ.(n) ஆசாரிய பரம்பரை; regular succession of gurus.

*[குரு + பாரம்பரியம்.]*

**குருபீடம்** *kuru-pīdam,* பெ.(n.) குருவினது இடம்; seat or office of a guru.

*[குரு + பீடம். பீடு = பெருமை, பீடு – பீடம்.]*

**குருபுறப்படல்** *kuru-puṟappaḍal,* பெ.(n.) குரு வெழும்பல்; the breaking out of pimples, pustules etc upon the skin as rash, vesicles etc. accompanying a dišease. 2. அம்மை கொள்ளல்; being attacked with small-pox (சா.அக.).

*[குரு + புறப்படல்.]*

**குருபூசை** *kuru-pūšai,* பெ.(n.) மறைந்த குருவின் இறந்தநாளில் ஆண்டுதோறும் சைவ மடங்களில், சிவனடியார்க்குச் செய்யும் உணவளிப்புடன், அக் குருவிற்குச் செய்யும் சிறு வழிபாடு; annual worship of deceased guru on the day of his death, often accompanied with feeding of devotees, chiefly in šaiva mutts.

*[குரு + பூசை.]*

**குரும்பட்டி** *kurumpaṭṭi,* பெ.(n.) தென்னை, பனைகளின் குரும்பை; immature coconuts or palmyra nuts.

*[குரும்பை → குரும்பட்டி.]*

**குரும்பவரை** *kurumbavarai,* பெ.(n.) வெள்ளை யவரை; white bean (சா.அக.).

*[குரும்பு + அவரை.]*

**குரும்பவன்** *kurumbavaṉ,* பெ.(n.) நிலப்பனை; ground palm (சா.அக.).

*[குரும் → குரும்பு → குரும்பவன்.]*

**குரும்பி**[1] *kurumbi,* பெ.(n.) புற்றாஞ்சோறு; comb of white ant's nest. *"பாம்புறை புற்றிற் குரும்பி யேய்க்கும்" (பெரும்பாண்.277).*

*[குரு → குரும்பு → குரும்பி.]*

**குரும்பி**[2] *kurumbi,* பெ.(n.) தென்னம் பூவினின்றும் காய்க்கும் தேங்காயின் ஆரம்பநிலை (உழ.நெ.க. அக.); the stage of fruit buds of coconut.

*[குரு → குரும்பி.]*

**குரும்பிகம்** *kurumbigam,* பெ.(n.) ஒரு பூடு; stooing toombay flower plant. (சா.அக.).

*[குரும்பி → குரும்பிகம்.]*

**குரும்பை**[1] *kurumbai,* பெ.(n.) 1. தெங்கு, பனை களின் இளங்காய்; immature coconuts or palmyra nuts; fruit buds. *"இரும்பனையின் குரும்பி நீரும்" (புறநா.24,2).* 2. இளநீர்; tender coconut. *"குன்றுங் குரும்பையும் வெறுத்தநின் னிளமுலை" (கல்லா.52).* 3. குரும்பி (புற்றாஞ்சோறு); comb of white ants nest. 4. பெருங்குரும்பை (தைலவ. தைல.24); bow-string hemp.

*[குரு → குரும்பை.]*

**குரும்பை** *kurumbai,* பெ.(n.) காதினுள் திரளும் குறும்பி; ear-wax (இ.வ.).

*[குரு → குரும்பை.]*

**குருமகன்** *kuru-magaṉ,* பெ.(n.) 1. குரு; priest. *"எங்குருமக னிருந்தோ னவன்பால்" (மணி.16;64).* 2. குருவின் மகன்; priest's son.

*[குரு + மகன்.]*

**குருமணல்** *kuru-maṇal,* பெ.(n.) 1. வெள்ளி மணல்; white sand or silver ore. 2. நுண்ணிய மணல்; fine sand (சா.அக.).

*[குரு + மணல்.]*

**குருமணி** *kuru-maṇi,* பெ.(n.) குருவிற் சிறந்த குரு; exalted guru, highly esteemed guru, as a gem among gurus. *"குருமணி தன்றாள்வாழ்க" (திருவாச.1,3).*

*[குரு + மணி.]*

**குருமம்** *kurumam,* பெ.(n.) மலையிலுப்பை; oval mohwah. 2. காட்டிலுப்பை; wild mohwah (சா.அக.).

*[குரு → குருமம்.]*

**குருமருந்து** *kuru-marundu,* பெ.(n.) மருத்துவத்தில் எல்லாவகை நோய்களைக் கண்டிக்கவும், உடம்பைப் பொன் போலாக்கவும், வாதத்தில் இரும்பு, செம்பு முதலிய இழிந்த உலோகங்களைப் பொன்னாக மாற்றவும் சக்தி வாய்ந்த முதன்மையான மருந்து; a universal medicine of high potent, which cures, not only all diseases of the systems, but also transmuting inferior metals such as iron, copper etc. into gold (சா.அக.).

*[குரு + மருந்து.]*

**குருமலை** *kuru-malai,* பெ.(n.) சாமிமலை (கழ.தமி.அக.); Swamimalai.

*[குரு + மலை.]*

**குருமன்** *kurumaṉ,* பெ.(n.) ஒருசார் விலங்கு பறவைகளின் இளமைப்பெயர்; the young of certain animals and birds. குட்டிகுருமன் (உ.வ.).

*[குரு → குருமன்.]*

**குருமாத்திரை** *kuru-māttirai,* பெ.(n.) நோய்க் காகக் குழந்தைகளுக்கு முலைப்பாலில் இழைத்துக் கொடுக்கும் மான்மணத்தி (கத்தூரி) மாத்திரை; musk pills macerated in women's breast milk and given for indigestion to children. 2. உயர்ந்த மாத்திரை; superior pill. 3. சிறுமாத்திரை; small pill (சா.அக.).

*[குரு + மாத்திரை.]*

**குருமான்** *kurumāṉ,* பெ.(n.) **குருமன்** பார்க்க; see *kurumaṉ.*

*[குல் → குரு → குருமான்.]*

**குருமி-த்தல்** *kurumi-,* 4 செ.கு.வி.(v.i.) பேரொலி செய்தல்; to make a crash, as a ship dashing against a rock. *"குருமித்து மதலை பொங்கி" (சீவக.521).*

*[குல் → குரு → குருமி.]*

**குருமிளகு** *kurumiḷagu,* பெ.(n.) நல்ல மிளகு; superior pepper.

*[குரு[5] + மிளகு.]*

**குருமுகறன்** *kuru-mukaṟaṉ,* பெ.(n.) குருமுகன்; one having face pilted with small pox (சா.அக.).

*[குரு + முகறன்.]*

**குருமுகறன்** *kuru-mukaṟaṉ,* பெ.(n.) **குருமூஞ்சி** பார்க்க; see *kurumūñci.*

*[குரு (வேர்க்குரு) + முகறன்.]*

**குருமுடி-த்தல்** *kuru-muḍi-,* 1 செ.கு.வி.(v.i.) மாழைகளை (உலோகம்) நீற்றுதற்குதவும் மருந்து செய்தல் (யாழ்.அக.); to make a prepara tion helpful for calcining metals.

*[குரு + முடி-.]*

**குருமுத்து** *kuru-muttu,* பெ.(n.) சிவந்த புள்ளி களுடன் விளைந்த முத்து; pearl with red spots.

*[குரு + முத்து.]*

*முத்திற்கமைந்த குற்றங்களுள் இது ஒன்றாகும் (கல்.க.சொ.அமு.).*

**குருமுப்பு** *kuru-muppu,* பெ.(n.) பூநீறு முப்பு; an alchamical preparation called muppu of ancient Siddhars supposed to have been in practice in the Dravidian period by which metals were transmitted into gold, all diseases were redically cured, and life prolonged by rejuvenation (சா.அக.).

*[குரு + முப்பு.]*

**குருமுனி** *kurumuni,* பெ.(n.) ***அகத்தியர்*** பார்க்க (சா.அக.); see *agattiyar.*

*[குரு + முனி.]*

**குருமுனியழகி** *kuru-muni-y-alagi,* பெ.(n.) ***ஊர்க்கள்ளி*** பார்க்க (சா.அக.); see *ūrkkalli.*

*[குரு + முனி + அழகு.]*

**குருமூஞ்சி** *kuru-mūñji,* பெ.(n.) அம்மை வடுவுள்ள முகத்தவன்–ள்; one having face pitted with small pox.

**மறுவ.** குருமுகன், குருமுகறன்

*[குரு + மூஞ்சி.]*

**குருமூர்த்தம்** *kuru-mūrttam,* பெ.(n.) குருவாக ஒத வந்த கடவுட் திருமேனி; (தனிப்பா.II.246II,581); manifestation of god in the form of a guru to his devotees.

*[குரு + மூர்த்தம். **குருத்திருமேனி** பார்க்க; kuru-t-tirumēni]*

**குருமூர்த்தி** *kuru-mūrtti,* பெ.(n.) 1. குரு; guru. 2. தென்முகக்கடவுள் பார்க்க; see *tenmuga-k-kadavul.*

*[குரு + மூர்த்தி.]*

**குருமூலி**[1] *kuru-mūli,* பெ.(n.) காற்றுப்பிடிப்பு மருத்துவம் (ஓகம்), காயகற்பம் இவற்றிற்கு உதவும் தென்பொதிகையிலுள்ள மூலிகைகள். இவற்றை உட்கொள்ள ஆணவம் அடங்கி, ஞானப்பாலூறும். இது மானிடர்க்குக் கிட்டாது; rare drugs useful in yoga rejuvenations. They kill pride and inprove wisdom, they are not procurable for ordinary human beings (சா.அக.).

*[குரு + மூலி.]*

**குருமூலி**[2] *kuru-mūli,* பெ.(n.) கஞ்சா; gunjah. 2. பொற்றலை கையாந்தகரை; mary - gold verbesena (சா.அக.).

*[குரு + மூலி (ஆதி).]*

**குருமெழுகு** *kuru-melugu,* பெ.(n.) எலியிலிருந்து செய்யப்படும் ஒரு நஞ்சு மெழுகு; a wax like medicine prepared from rats bone.

*[குரு + மெழுகு.]*

**குருமை**[1] *kurumai,* பெ.(n.) நிறம் (தொல்.சொல்.303); lustre, brightness.

*[குரு → குருமை.]*

**குருமை**[2] *kurumai,* பெ.(n.) பெருமை; dignity, superiority. *"குருமை யெய்திய குணநிலை" (சீவக.2748).*

*[குரு → குருமை.]*

**குருமை**[2] *kurumai,* பெ.(n.) 1. நிறம்; lustre. 2. சிறந்த மந்திரத்திற்குப் பயன்படும் மை; a superior kind of black paint used in magic. 3. பெருமை; greatness (சா.அக.).

*[குரு + மை.]*

**குருலிங்கம்** *kuru-lingam,* பெ.(n.) ஆறுவகை சிவத்திருமேனிகளுள் ஒன்று (சித்.சிகா.201); a form of Siva, one of satvita-linkam.

*[குரு+ இலிங்கம்.]*

**குருவகம்** *kuru-v-agam,* பெ.(n.) வெண்சிவப்பு (யாழ்.அக.); pink.

*[குரு → குருவகம்.]*

**குருவங்கம்** *kuru-vaṅgam,* பெ.(n.) வங்கக்குரு; lead quintessence. 2. வெள்ளீயம்; tin (சா.அக.).

*[குரு + வங்கம்.]*

**குருவடிம்பம்** *kuru-vaḍimbam,* பெ.(n.) நெல்லிப் பருப்பு; the kernel of Indian gooseberry (சா.அக.).

*[குரு + வடிம்பு + அம்.]*

**குருவண்டு**[1] *kuru-vaṇḍu,* பெ.(n.) முப்புக்குரு; a secret name for philospher's powder (சா.அக.).

*[குரு + வண்டு.]*

**குருவண்டு**[2] *kuru-vaṇḍu,* பெ.(n.) புள்ளியுள்ள குளவி வகை; a kind of spotted wasp. வகைகள் : 1. அறுபுள்ளிவண்டு – beetle or wasp with six spot on its back. 2. கொளுஞ்சியடி வண்டு – beetle found under wild indigo tree. 3. குழிவண்டு – beetle found under the earth. 4. நீருக்குள் சுழலும் வண்டு – beetle found whirling in water. 5. எரி வண்டு – teline fly or blistering beetle. 6. துவரைச் செடிவண்டு – beetle found in the dholl plant. 7. கழுதை வண்டு – another variety of beetle (சா.அக.).

*[குரு + வண்டு.]*

**குருவண்டுப்பு** *kuru-vaṇḍuppu,* பெ.(n.) ஒரு வகைக் கல்லுப்பு; a kind of sea-salt. 2. முப்புக்குரு. (சா.அக.).

*[குரு + வண்டு + உப்பு.]*

**குருவமண்** *kuruva-maṇ,* பெ.(n.) இளகிய மண்; soft earth (கூவநூல்.) (கட்.தொ.வரி).

*[குரு → குருவம் + மண்.]*

**குருவரகு** *kuru-varagu,* பெ.(n.) வரகுவகை (விவசா.நூன்மு.4.); a kind of ragi.

*[குரு + வரகு.]*

**குருவரசன்** *kuru-v-arašaṉ,* பெ.(n.) மயில்துத்தம்; blue vitriol, copper sulphate (சா.அக.).

*[குரு + அரசன்.]*

**குருவரன்** *kuruvaraṉ,* பெ.(n.) குருபரன்; *kurubaran.* *"குருவரனிடத் துரைத்தான்" (திருவாலவா.1:2).*

*[குரு + பரன் – குருபரன் → குருவரன் (கொ.வ.).]*

**குருவரிக்கற்றாழை** *kuru-vari-k-kaṟṟāḻai,* பெ.(n.) வரிக்கற்றாழை; striped aloe, so called probably for its usefulness in calcination (சா.அக.).

*[குரு + வரி + கற்றாழை.]*

**குருவருடம்** *kuru-varuḍam,* பெ.(n.) ஒன்பது வருடங்களுள் ஒன்று; one of nava-varudam.

*[குரு + வருடம்.]*

**குருவன்** *kuruvaṉ,*பெ.(n.) குரு; priest. *"வானோர் குருவனே போற்றி" (திருவாச.5:68).*

*[குரு → குருவன்.]*

**குருவாக்கம்** *kuru-v-ākkam,* பெ.(n.) 1.குரு மருந்தைக் கொண்டு முடித்த ஊதை (வாத)ப் பொன்; gold obtained by employing the universal powder for purposes of transmutations. 2. மாற்று உயர்ந்த பொன்; alchemical gold beyond the standared test. This concentrated gold when added to silver in fusion can easily convert the whole mass into gold. 3. தங்கச்செம்பு; concentrated gold (சா.அக.).

*[குரு + ஆக்கம்.]*

**குருவாக்காலி** *kuruvākkāli,* பெ.(n.) பூனைக்காலி; cowhage plant (சா.அக.).

*[குருவாக்கம் + காலி.]*

**குருவாக்கி** *kuru-v-ākki,* பெ.(n.) பெரிய அம்மை; a kind of small-pox in which the scabs fall off.

*[குரு + ஆக்கி.]*

**குருவாக்கு** *kuru-vākku,* பெ.(n.) குருமொழி; word or command of guru.

*[குரு + வாக்கு.]*

**குருவாயரி-தல்** *kuṟuvāyari*, 2 செ.குன்றாவி.(v.t.) பொடியாகக் கத்தியால் துணித்தல்; cutting into slices with a knife (சா.அக.).

*[குரு + ஆய் + அரிதல்.]*

**குருவார்-த்தல்** *kuruvār-*, 4 செ.கு.வி.(v.i.) அம்மை வார்த்தல்; getting on, being attakked with small-pox (சா.அக.).

*[குரு + வார்.]*

**குருவாரம்** *kuru-vāram*, பெ.(n.) வியாழக்கிழமை; Thursday, as a Jupiter's day.

*[குரு + வாரம்.]*

**குருவால்** *kuru-v-āl*, பெ.(n.) இத்தி; white fig.

*[குரு + ஆல்.]*

**குருவாளி** *kuru-v-āḷi*, பெ.(n.) குருமருந்தைச் செய்து முடிப்போன்; one who is skilled in preparing an all healing drug or panacea (சா.அக.).

*[குரு + ஆளி.]*

**குருவி**[1] *kuruvi*, பெ.(n.) பறவை வகை; small bird. *"குருவிசேர் வரை" (சீவக. 2237).*

*[குல் → குரு → குருவி.]*

வகைகள்: 1. தூக்கணாங் குருவி 2. Indian tailor. கருங்குருவி - black sparrow. 3. சிட்டுக்குருவி - small sparrow. 4. ஊர்க்குருவி - village sparrow. 5. அடைக்கலாங் குருவி - house sparrow. 6. மலைக் குருவி - hill sparrow. 7. மஞ்சட் குருவி - weaver bird. 8. கள்ளிக் குருவி - white headed balbler. 9. பீக்குருவி - dung bird. 10. தாசிரிக் குருவி - southern scumitar bird. 11. தச்சன் குருவி - carpenter bird 12. வானம்பாடிக்குருவி - indian skylarh. 13. மைனாக்குருவி - indian starling. 14. கட்டலாங் குருவி - bee eater. 15. காவல் குருவி - Indian hoopoe or hood hood. 16. சீமைக் காவல் குருவி - European hoopoe. 17. சூரைக் குருவி - cholum bird. 18. விசிறிக்குருவி - white browed fan tail. 19. மீன்கொத்திக் குருவி - king fisher. 20. தவிட்டுக் குருவி - sparrow of the colour of bran. 21. வாலாட்டிக் குருவி - wag tail bird (சா.அக.).

**குருவி**[2] *kuruvi*, பெ.(n.) 1. மூலநாள் (அக.நி.). ஒ.நோ. குருகு ; the 19th nakšatra. 2. ***குன்றி*** (மலை.) பார்க்க; see *kunri*

*[குரு (சிவப்பு) → குருவி.]*

**குருவிக்கண்** *kuruvi-k-kaṇ*, பெ.(n.) 1. சிறுகண்; small eyes. 2. சிறுதுளை; small hole, eyelet.

*[குருவி + கண்.]*

**குருவிக்கல்** *kuruvi-k-kal*, பெ.(n.) ஒருவகைச் செம்மண்; red soil (இ.வ.).

*[குருவி + கல்.]*

**குருவிக்கார்** *kuruvi-k-kār*, பெ.(n.) கார்நெல்வகை; *a small kind of black paddy* (w.).

*[குருவி + கார்.]*

**குருவிக்காரன்** *kuruvi-k-kāraṉ*, பெ.(n.) 1. குருவி பிடிப்போன்; bird-catcher, bird fancier. 2. மறைந் திருந்து குருவிகளைப் போல ஒலி செய்து குருவிபிடிக்கும் ஒருவகைக் குடியினன்; a class of bird-catcher, who docoy birds by concealing themselves and successfully imitating their cries.

*[குருவி + காரன்.]*

**குருவிக்குடல்** *kuruvi-k-kuḍal*, பெ.(n.) அடிக்கடி உண்டாகும் உணவு விருப்பம்; frequent craving for food as the result of eating too little at a time (w.).

*[குருவி + குடல்.]*

**குருவிக்கூடு** *kuruvi-k-kūḍu*, பெ.(n.) குருவிகட்டும் கூடு; small bird's nest.

*[குருவி + கூடு.]*

# குருவி வகைகள்



அடைக்கலாங்குருவி



மைனாக் குருவி





தையற்சிட்டுக் குருவி



வானம்பாடிக் குருவி



மீன் கொத்திக் குருவி



வாலாட்டிக் குருவி



விசிறிக் குருவி



சிட்டுக் குருவி

**குருவிக்கொழுந்து** *kuruvi-k-koḷundu,* பெ.(n.) குன்றிமணி இலைக்கொழுந்து; tender leaves of crab's eye plant (சா.அக.).

*[குருவி + கொழுந்து.]*

**குருவிகம்** *kuruvigam,* பெ.(n.) குன்றிமணி, குன்றிக்கொட்டை; the legume of this creeper consists of 4-6 seeds, which are roundish and polished (சா.அக.).

*[குறு → குரு → குருவிகம்.]*

**குருவிச்சி**[1] *kuruvicci,* பெ.(n.) புல்லுருவி; a parasitic plant. 2. பேராமுட்டி; fragrant sticky mallow.

**மறுவ.** குருவிச்சை

*[குரு (விச்சக) → விச்சி.]*

குருவிச்சி வகைகள் 1. முள்ளுக்குருவிச்சி; prickly ivory wood. 2. பட்டைக்குருவிரசு அல்லது காட்டு வெற்றிலை; rough ivory. 3. வெள்ளைக் குருவிச்சி; white or gray ivory woods. 4. ஈட்டிமுனைக் குருவிச்சி; lance leaved ivory wood. 5. அண்டக் குருவிச்சி; oval leaved ivory wood. 6. வானிலைக் குருவிச்சி; saw leaved ivory wood (சா.அக.).

*[குரு → குருவித்தி → குருவிச்சி.]*

**குருவிச்சி**[2] *kuruvicci,* பெ.(n.) ***குருவிச்சை*** பார்க்க; see *kuruviccai.*

*[குருவிச்சை → குருவிச்சி.]*

**குருவிச்சை** *kuru-viccai,* பெ.(n.) 1. குருவிஞ்சி; 2. ஒருவகை மரம்; ovate-leaved ivory wood. 3. புல்லுருவி; a semi-parasite.

*[குரு → குருவிச்சை.]*

**குருவிஞ்சி** *kuruviñji,* பெ.(n.) 1. பேராமுட்டி; pink-tinged white sticky mallow. 2. ***குருவிப்பூண்டு*** பார்க்க; see *kuruvi-pōṇḍu.*

*[குரு + இஞ்சி.]*

**குருவிட்டம்** *kuruviṭṭam,* பெ.(n.) சுண்டைக்காய்; unarmed night shade (சா.அக.).

*[குரு → குருவித்தம் → குருவிட்டம்.]*

**குருவித்தம்** *kuru-vittam,* பெ.(n.) ஒரு பலம் பொன்; gold weighing one palam (சா.அக.).

*[குரு + வித்தம்.]*

**குருவித்தலை** *kuruvi-t-talai,* பெ.(n.) 1. சிறிய தலை; small head. 2. வில்லாளிகட்குப் பாதுகாவலா யமையும் ஞாயில் என்னும் மதிலுறுப்பு (சிலப்.15:217, உரை); inner mound of a fortification, as a protection for bowmen.

*[குருவி + தலை.]*

**குருவித்தலைப்பாக்கு** *kuruvi-t-talai-p-pākku,* பெ.(n.) பாக்கு வகை; a kind of arecanut.

*[குருவி + தலை + பாக்கு.]*

**குருவித்தலைப்பாகல்** *kuruvi-t-talai-p-pāgal,* பெ.(n.) மிதிபாகல்; small balsam pear.

*[குருவி + தலை + பாகல்.]*

**குருவித்தலைப்பாகை** *kuruvi-t-talai-p-pāgai,* பெ.(n.) சிறிய தலைக்குட்டை; small turban.

*[குருவி + தலை + பாகை.]*

**குருவித்தலையன்** *kuruvi-t-talaiyaṉ,* பெ.(n.) பேதை; an idiot having a very small head. (சா.அக.).

*[குருவி + தலையன்.]*

**குருவித்திருக்கை** *kuruvi-t-tirukkai,* பெ.(n.) கடல்மீன்வகை; ray, greenish, brown, disk about twice as wide as long, tail three times as long as disk.

*[குருவி + திருக்கை.]*

**குருவித்தேங்காய்** *kuruvi-t-tēṅgāy,* பெ.(n.) 1. சிறு தேங்காய்; small coconut. 2. ஒருவகைமரம்; a kind of tree.

*[குருவி + தேங்காய்.]*

**குருவிதம்** *kuruvitam,* பெ.(n.) பெருமுத்தக் காசு, பெருங்கோரைக் கிழங்கு; a big variety of *kōray* root (சா.அக.).

*[குரு → குருவிதம்.]*

**குருவிந்தக்கல்** *kuruvinda-k-kal,* பெ.(n.) 1. குரு விந்தம்; ruby. 2. சாளைக்கல் செய்வதற்குதவும் ஒரு வகைக்கல்; grey flint, emery. 3. காவிக்கல்; red ochre. *"இரத்தின மறியாதா னொருவன் குருவிந்தக் கல்லோ டொக்கும் இது என்றால்" (ஈடு.3:1,2).*

*[குருவிந்தம் + கல்.]*

**குருவிந்தகம்** *kuruvindagam,* பெ.(n.) காட்டு மொச்சை; a wild variety of bean (சா.அக.).

*[குருவிந்தம் → குருவிந்தகம்.]*

**குருவிந்தகன்** *kuruvindagaṉ,* பெ.(n.) கோரைக் கிழங்கு; *kōray* root (சா.அக.).

*[குருவிந்தம் → குருவிந்தகன்.]*

**குருவிந்தம்** *kuruvindam,* பெ.(n.) 1. தரக்குறை வான மாணிக்க வகை (சிலப்.14:186,உரை); inferior kind of ruby. 2. குன்றி; crab's eye. 3. வாற் கோதுமை மணி; a corn of barley. 4. சாதிலிங்கம்; vermilion. 5. முத்தக்காசு; straight sedge.

*[குரு → குருவி → குருவிந்தம்.]*

**குருவிந்துநாதம்** *kuru-vintu-nādam,* பெ.(n.) மூன்று மாதத்தைய கருப்பிண்டக் கரு; the essence extracted from a three month's old foetus (சா.அக.).

*[குரு + விந்து + நாதம்.]*

**குருவிப்பசி** *kuruvi-p-paši,* பெ.(n.) சிறுகச் சிறுக சாப்பிடுவதால் அதிகம் உண்டாகும் பசி; frequent experience of hunger due to eating a very small quantity (சா.அக.).

*[குருவி + பசி.]*

**குருவிப்பாக்கு** *kuruvi-p-pākku,* பெ.(n.) ***குருவித்தலைப் பாக்கு*** பார்க்க; see *kuruvittalai-p-pākku.*

*[குருவி + பாக்கு.]*

**குருவிப்பாகல்** *kuruvi-p-pāgal,* பெ.(n.) ***குருவித் தலைப்பாகல்*** பார்க்க; see *kuruvittalai-p-pāgal.*

*[குருவித்தலை → குருவி + பாகல்.]*

**குருவிப்பூண்டு** *kuruvippūṇḍu,* பெ.(n.) சிற்றா முட்டி; white small flowered rose mallow (சா.அக.).

*[குருவி + பூண்டு.]*

**குருவிப்பேத்தை** *kuruvi-p-pēttai,* பெ.(n.) கடல் மீன்வகை; a sea-fish, greenish, attaining 1 ft. in length.

*[குருவி + பேத்தை.]*

**குருவிபோகம்** *kuruvi-pōgam,* பெ.(n.) குருவியைப் போல் அடிக்கடி மாதரைப் புணர்தல்; having coition with a woman very frequently like sparrow (சா.அக.).

*[குருவி + போகம்.]*

**குருவிமீன்** *kuruvi-mīṉ,* பெ.(n.) குருவிக்கு இரை யான சிறிய மீன்; a greenish sea-fish (சா.அக.).

*[குருவி + மீன்.]*

**குருவியால்** *kuruvi-yāl,* பெ.(n.) ***கித்தி*** பார்க்க (சா.அக.); see *kitti.*

*[குருவி + ஆல்.]

**குருவியினம்** *kuruviyiṉam,* பெ.(n.) குருவியைச் சேர்ந்த குலம்; birds of the sparrow kind (சா.அக.).

*[குருவி + இனம்.]*

**குருவியுணவு** *kuruvi-y-uṇavu,* பெ.(n.) குறைந்த அளவாகக் கொள்ளும் சாப்பாடு; food taken in small quantity (சா.அக.).

*[குருவி + உணவு.]*

**குருவிரசு** *kuru-virašu,* பெ.(n.) 1. ஆசாதிமரம்; ivory wood. 2. ***பட்டை விரசா*** பார்க்க; see *paṭṭai-viraša.*

*[குரு + விரசு.]*

**குருவிரத்தம்** *kuruvi-rattam,* பெ.(n.) மிகச் சிவப்பு அரத்தம்; bright red blood (சா.அக.).

*[குருவி + அரத்தம்.]*

**குருவிரிஞ்சி** *kuru-viriñji,* பெ.(n.) மாதவிடாய்ச் சீலை; menstrual blood cloth (சா.அக.).

*[குரு + விரிஞ்சி.]*

**குருவிலேகியம்** *kuruvi-lēgiyam,* பெ.(n.) ஊர்க் குருவி, அடைக்கலாங் குருவி அல்லது சிட்டுக் குருவி இவற்றைக் கொண்டு தயாரிக்கும் இளகம். இது பெண் போகவிச்சையை அதிகரிக் கும்; electuary prepared with the flesh of village house or small sparrow as a chief ingredients amongst other bazzar drugs. It is considered as aphrodisiac (சா.அக.).

*[குருவி + (இளகியம்) லேகியம்.]*

**குருவிவாய்** *kuruvi-vāy,* பெ.(n.) மிகச் சிறிய வாய்; a very small mouth (சா.அக.).

*[குருவி + வாய்.]*

**குருவிவாலன்** *kuruvi-vālaṉ,* பெ.(n.) பெருநெல் வகை; a large kind of bearded paddy.

*[குருவி + வாலன்.]*

**குருவிவேர்** *kuruvi-vēr,* பெ.(n.) 1. ஒரு வாசனை வேர்; a fregrant root. 2. வெட்டிவேர்; khus-khus root (சா.அக.).

*[குருவி + வேர்.]*

**குருவினி** *kuruviṉi,* பெ.(n.) சூலி; a pregnant woman (சா.அக.).

*[குரு → குருவினி.]*

**குருவிச்சம்வேர்** *kuru-viccam-vēr,* பெ.(n.) பேரீந்தின் வேர்; root of date tree (சா.அக.).

*[குரு + ஈச்சம் + வேர்.]*

**குருவீடு** *kuru-vīḍu,* பெ.(n.) நஞ்சுக் கொடி; umbilical cord (சா.அக.).

*[குரு + வீடு.]*

**குருவுக்காதி**[1] *kuruvukkādi,* பெ.(n.) பச்சைக் கற்பூரம் (மூ.க.); crude camphor.

*[குருவுக்கு + ஆதி.]*

**குருவுக்காதி**[2] *kuruvukkādi,* பெ.(n.) குருமருந்து செய்ய உதவியாக உள்ள பொருள்கள்; in alchamy.

*[குருவுக்கு + ஆதி.]*

1. பச்சைக் கற்பூரம்; crude camphor. 2. வசநாபி; aconite. 3. வேதை செந்தூரம்; a red oxide used in alchamy. 4. கற்பூரம்; camphor cinnamomum.

**குருவுப்பு** *kuru-v-uppu,* பெ.(n.) பிண்ட உப்புச் செயநீர்; a strong alkaline liquid prepared from the salt extracted from the foetus. 2. முப்பு; the sacred three salts (சா.அக.).

*[குரு + உப்பு.]*

**குருவுபதேசம்** *kuru-v-ubatēšam,* பெ.(n.) போதனை; spiritual inspiration (சா.அக.). ***குருமொழி*** பார்க்க; see *kuru-moḻi*

மறுவ. ஆசான் அறவுரை, குருமொழி.

*[குரு + உபதேசம்.]*

**குருவெழும்பல்** *kuru-v-elumbal,* பெ.(n.) சிறு சிரங்கு உண்டாதல்; rising of eruptions or formation of pustules, vesicles etc (சா.அக.).

*[குரு + எழும்பல்.]*

**குருவெள்ளிமதியோகம்** *kuru-velli-madi-y-ōgam,* பெ.(n.) பிறப்பியத்தில் வியாழன் வெள்ளி நிலவு மூவரும் ஓர் ஓரையிலிருப்பதாலுண்டாந் நல்வாய்ப்பு (யாழ்.அக.); an ausicious combination of Juiter, Venus and Moon in the same zodiacal house in a horoscope.

*[குரு+ வெள்ளி + மதி + ஓகம்.]*

**குருவெறும்பு** *kuru-v-erumbu,* பெ.(n.) முசிறு என்னும் பெரிய சிவப்பெறும்பு; large red ant.

*[குரு[5] + உறும்பு.]*

**குருவேர்** *kuruvēr,* பெ.(n.) ***குருவிவேர்*** பார்க்க; see *kuruvi-vēr.*

*[குரு + வேர்.]*

**குருவை** *kuruvai,* பெ.(n.) ஒரு மட்ட நெல்; an inferior variety of paddy. 2. குருங்கத்தலை மீன்; small scianea (சா.அக.).

*[குறு → குறுவை → குருவை.]*

**குருவைக்குமரி** *kuruvai-k-kumari,* பெ.(n.) சிறு கற்றாழை; small Indian aloe (சா.அக.).

*[குறுவை → குருவை + குமரி.]*

**குருவைநெல்** *kuruvai-nel,* பெ.(n.) ஒரு மட்ட நெல்; there are different kinds of inferior paddy that comes from Tirunelveli and Thanjavur. வகைகள் 1. அறுபதாங் குறுவை2. கருங்குருவை; 3. கற் குருவை; stone crop yielding hard rice difficult for digestion. 4. மட்டக் குருவை; coarse paddy. 5. மைக்குருவை; jet black paddy. 6. செங்குருவை; red crop and so on (சா.அக.).

*[குரு – குருவை – குறுவை → குருவை + நெல். (குரு – சிவப்பு.]*

**குருவைப்பூசல்** *kuruvai-p-pūšal,* பெ.(n.) முப்பூவைப் பூசுதல்; a metal which is intended for transmutation will be coated with quintessence of three salts (சா.அக.).

*[குறுவை → குருவை + பூசல் (பூசுதல்).]*

**குருவையரிசி** *kuruvaiyariši,* பெ.(n. நெல்லின் அரிசி; rice from *kuruvai* paddy (சா.அக.).

*[குருவை + அரிசி.]*

**குருள்**[1] *kuru!,* பெ.(n.) 1. பெண்டிர் தலைமயிர் (பிங்.); womans's hair. 2. நெற்றியின் மயிர்ச்சுருள்; curl, lock of hair, especially on the forehead, love lock.

**LG.,Du.,OF.** krul; **G.**krol; **O.E.**crol, crul; **E.** curi.

*[குல் (குத்தல், துளை, இருள் – கருமை. கல் → குரு → குருள்.]*

**குருள்(ளு)**[2]**–தல்** *kuru!-,* 7 செ.கு.வி.(v.i.) சுருளாதல்; to curl. *"குருண்ட வார்குழல்" (திருவிளை. திருவாலி.1:3).*

**Fin.** kāria; **Es.** kāvida; **Q.** kuru; **Kuruk.** kūrnā.

*[குல் → குரு → குருள்.]*

**குருளை** *kuru!ai,* பெ.(n.) 1. நாய், பன்றி, புலி, முயல், நரி முதலிய ஒருசார் விலங்கின் இளமை (தொல்.பொருள்.564–565); animals like dog, hog, tiger, rabbit, wolf etc. young of certain animals. 2. பாம்பின் குட்டி; young of a snake. *"சிறுவெள் ளரவினவ் வரிக் குருளை" (குறுந்.119).* 3. குழந்தை; child. *"அருட்குருவாங் குருளை" (சி.சி.பரபக்.*

*பாயிரம்.4).* 4. ஆமை (மூ.அ.); tortoise.

**E.** girl, female child, **ME.** gule, girle, gerle; **LG.** gor, child; **COD., O.G**, gor, a child.

*[குல் → குரு → குருள் → குருளை.]*

**குரூஉக்கனி** *kuru-v-ūkkaṉi,* பெ.(n.) கோட்டை மதிலில் அமைக்கப்பட்டிருக்கும் துளை; a hole made in the fort wall, through which they can see the enemies and attack them.

*[குரூஉ + கனி.]*

**குரூஉப்புகை** *kurū-p-pugai,* பெ.(n.) மணமுள்ள புகை (திவா.); savoury smoke.

*[குரூஉ + புகை.]*

**குரை[1]-த்தல்** *kurai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. ஆரவாரித்தல்; to jubilate, shout. *“குவவுக் குரையிருக்கை” (பதிற்றுப்.84:20).* 2. குலைத்தல்; to bark, as a dog. *“ஞாளி குரைதருமே” (திருக்கோ.175).*

**E.** blare, neigh, crow; **A.S.** hnoegan; **Icel.** hneggja, **Scot.** nicher.**Fin.** karjua, kalijua; **Es.** karjuda; **Komi.** gorsini.

*[குரு → குரை.]*

**குரை[2]** *kurai,* பெ.(n.) ஒலி; noise, roar, shout. *“நுரைத்தலைக் குரைப்புனல்” (பொருந.240).*

*[குரு → குரை.]*

**குரை[3]** *kurai,* பெ.(n.) 1. பெருமை (ஈடு.4:9,9); augustness, majesty. 2. பரப்பு (ஈடு.4:3,6); expanse.

*[குரம் → குரு → குரை.]*

**குரை[4]** *kurai,* (இடை.) (part.) 1. ஓர் அசைநிலை (தொல்.சொல்.274); an expletive. 2.இசைநிறை (தொல்.சொல்.274); additional syllable added for the sake of metre.

*[குரு → குரை]*

**குரை[5]** *kurai,* பெ.(n.) குதிரை (உரி.நி.); horse. ஒ.நோ.குரா.

*[குதிரை → குரை (இடைக்குறை).]*

**குரைப்பு** *kuraippu,* பெ.(n.) ஓசை; noise. *“உங்காரக் குரைப்பினால்” (சேதுபு.தேவிபுர.47).*

*[குரு → குரை → குரைப்பு.]*

**குரைமுகன்** *kurai-mugaṉ,* பெ.(n.) நாய் (பிங்.); barking-mouthed dog.

*[குரை + முகன்.]*

**குரைய** *kuraiya,* (இடை.) (part.) ஓர் அசைநிலை; an expletive. *“கெடலருங் குரைய கொற்றம்” (சீவக.1914).*

*[குரு → குரை → குரைய.]*

**குரோசகம்** *kurōšagam,* பெ.(n.) துருக்கியிலுள்ள குராசன் என்னும் ஊரில் விளையும் ஓமம்; black henbane.

*[குராசன் → குரோசகம்.]*

**குரோசம்** *kurōsam,* பெ.(n.) 1. ***குரலோசை*** பார்க்க; see *kuralōsai.* 2¼ மைல் கொண்ட தொலைவு; Indian leaque, kOs = about 2¼ miles = 2000 தண்டம். 2. கூப்பிடுதூரம் (திவா.); distance of a call.

*[குரல் + ஓசை → குரலோசை → குரோசை → குரோசம். குரலோசை பார்க்க; see kuratosa.]*

**குரோசியம்** *kurōšiam,* பெ.(n.) நவரை வாழை; a species of plantain (சா.அக.).

*[குராசன் → குரோசியம்.]*

**குரோட்டம்** *kurōṭṭam,* பெ.(n.) நரி (பிங்.); jackal. 2. பன்றி; hog.

*[குருட்டம் → குரோட்டம்.]*

**குரோட்டன்** *kurōṭṭaṉ,* பெ.(n.) ஆண் நரி; male of a fox. he-jackal (சா.அக.).

*[குரு → குருட்டன் → குரோட்டன்.]*

**குரோட்டா** *kurōṭṭā,* பெ.(n.) ***குரோட்டம் (சூடா.)*** பார்க்க; see *kuroṭṭam.*

*[குரோட்டம் → குரோட்டா.]*

**குரோட்டு** *kurōṭṭu,* பெ.(n.) பன்றி; hog (சா.அக.).

*[குரோட்டம் → குரோட்டு.]*

**குரோடம்** *kurōḍam,* பெ.(n.) பன்றி (பிங்.); hog. 2. முட்பன்றி; porcupine (சா.அக.).

*[குரோட்டம் → குரோடம்.]*

*__குல்__[1] *kul,* வேர்.(v.r.) (முன்மைக் கருத்து) 1. முற்படுதல்; to move forward, to go forward. 2. அசைதல்; to move the body in a graceful and affected manner. 3. மேலெழும்புதல், உயர்தல்; to go up. 4. வளர்தல்; to grow. 5. விரைதல்; to go fast, hasten. 6. மிகுதிப்படுதல்; to become excess. 7. பரவுதல்; to spread.

**த.** குலுங்கு; **தெ.** குலுகு (அசைதல்); **குவி.** குலு (பரவுதல்), க்லை (தவசம் அடிக்கும் அகன்ற களம்); **கோத.** குல்க் (அசைத்தல்).

*[உல் → குல்.]*

*__குல்__[2] *kul,* வேர்.(v.r.) (தோன்றல் கருத்து) 1. தோன்றுதல்; to orginate, to appear. 2. முளைத்தல்; to spout. 3. மென்மைப்படுதல்; to become thin. 4. இளமையாதல், அழகாதல்; to become, young, beautiful. 5. பெரிதாதல்; to grow big. 6. மேலெழும்புதல்; to rise. 7. குதித்தல்; to jump.

**பட.** குல்லுமாடு (அடையாளம் வெளிப்படுதல்); **த.** குல் → குன்னி (குஞ்சு); நன்னி குன்னி (சின்னஞ் சிறியவை), இளங்குழந்தைகள். **து.** குல்ல ஆபுனி (எல்லோருக்கும் தெரியும்படி வெளிப்படுத்துதல்).

*[உல் → குல்.]*

*__குல்__[3] *kul,* வேர்.(v.r.) (பொருந்துதல் கருத்து) 1. பொருந்துதல்; to fit, to fix. 2. அளத்தல்; to measure. 3. எண்ணுதல்; to count. 4. சேர்த்தல், கூடுதல்; to join, to collect. 5. திரளுதல், குவிதல்; to ammulate, to heap. 6. குழுமுதல்; to assemble.

**த.** குல் → குலவு → குலம் → குழு → குடும்பு → குடும்பம் → குலை → கொலு. **கோத.** கில் (எலும்பு) பொருத்து, கதவுப் பொருத்து); **கொலா.** குல் (எண்ணிக்கை எண்ணுதல்; குல்ல் (அளத்தல்); **பர்.** குலுன்; (கைப்பிடி = கத்தியொடு பொருந்தியது).

*[உல் → குல்.]*

*__குல்__[4] *kul,* வேர்.(v.r.) (நெருங்குதல் கருத்து) 1. நெருங்குதல்; to go near, to approach. 2. தொடுதல்; to touch.3. உராய்தல்; rub. 4. எரிதல்; to burn. 5. சிவத்தல்; to become red. 6. உலர்தல்; to dry. 7. ஒளிர்தல்; to brighten. 8. வெண்மை; white.

**த.** குல் → கொல் → கொல்லன். **பிராகு.** குலி (அச்சம்) **க.,தெ.** குல்லு (பேரிரைச்சல்); **க.** குலி (கொலையாளி), குலுகு (நோய்); குல்மெ (கொல்லன் உலை); கீல் (குத்தும் ஆணி, ஆப்பு) **மால்.** கல்கெ (கடித்தல்).

*[உல் → குல்.]*

*__குல்__[5] *kul,* வேர்.(v.r.) (குத்துதல் கருத்து) 1. குத்துதல்; to pierce. 2. தோண்டுதல்; to dig. 3. துளைத்தல்; to make a hole, bore. 4. ஊடுருவுதல்; to penetrate.

**த.** குல் → கொல். **ம.க.** கொல்.

*[உல் → குல்.]*

***குல்**[6] *kul,* வேர்.(v.r.) (தாக்குதல் கருத்து) 1. அடித்தல்; to strike. 2. முழக்குதல், ஓசையெழுப்புதல்; to make noise. 3. தாக்குதல், வெட்டுதல்; to attack, to cut. 4. கொல்லுதல்; to kill. 5. துன்புறுத்துதல்; to trouble, to annoy. 6. அச்சுறுத்துதல்; to frighten. 7. கெடுத்தல், அழித்தல்; to ruin, destroy.

குல் → கொல் → கொல்லன். **பிராகு.** குலி (அச்சம்) **க. தெ.** குல்லு (பேரிரைச்சல்); **க.** குலி (கொலையாளி) குலுகு (நோய்) குல்மெ (கொல்லன் உலை), கீல் (குத்தும் ஆணி ஆப்பு) **மால்.** கல்கெ (கடித்தல்).

*[உல் → குல்.]*

***குல்**[7] *kul,* வேர்.(v.r.) (வளைதல் கருத்து) 1. வளைதல்; to bend. 2. சுற்றுதல், உலாவுதல்; to go round. 3. சுழலல்; to rotate. 4. வட்டமாதல்; to become round.

**த.** குலுக்கை (வட்டமான குதிர்); **க.** கோல்; **தெ.** கொலமு; **ம.** கோலம் (வட்டப்படகு); **பாலி.** குல்ல (படகு); **கொண்.** கல (இலைக்கலம்); **குவி.** கலி; **ம.** க.லெ. (**த.** கலம்).

*[உல் → குல்.]*

***குல்**[8] *kul,* வேர்.(v.r.) (உள்ளொடுங்கல் கருத்து) 1. உள்ளொடுங்குதல்; to become lean, to emaciate. 2. சிறிதாதல்; to become small in size. 3. தாழ்தல், கீழிறங்குதல்; to come down, to alight. 4. உள்ளடங்குதல்; to be inside. 5. ஒளிதல், மறைதல்; to hide, conceal. குல் → குள் → குளித்தல் (மூழ்குதல்).

*[உல் → குல்.]*

***குல்**[9] *kul,* வேர்.(v.r.) (கருமைக் கருத்து) 1. குழி; pit. 2. இருள்; darkness. 3. கருமை; blackness.

**குரு.** கூல் (வயிறு); **மா.** கொலி (வயிறு); **பிராகு.** கோல் (வயிறு). **து.க.,** கல்லி (பின்னிய பை).

*[உல் → குல்.]*

**குல்மம்** *kulmam,* பெ.(n.) ***குலுமம்*** பார்க்க; see *kulmam.*

*[குலுமம் → குல்மம்.]*

**குல்லகம்** *kullagam,* பெ.(n.) வறுமை; poverty.

*"குல்லக வேடங் கொண்ட வள்ளல்" (யசோதர.1:23).*

*[குல் → குல்லம் → குல்லகம்.]*

**குல்லம்** *kullam,* பெ.(n.) முறம்; winnowing basket, fan for sifting or winnowing, fanner.

*[குல் → குல்லம்.]*

**குல்லரி** *kullari,* பெ.(n.) இலந்தை பார்க்க; see ilandai jujube tree.

ஒ.நோ.குல்வலி.

*[குல் + வரி – குல்வரி → குல்லரி.]*

**குல்லாக்கட்டை** *kullā-k-kaṭṭai,* பெ.(n.) தொப்பிக் கட்டை; post set up in shallow water to indicate the existence of channel.

**மறுவ.** தொப்பிக்கட்டை

*[குல்லாய் + கட்டை.]*

**குல்லாய்** *kullāy,* பெ. (n.) 1. தலைக்கு அணியும் தொப்பி; cap. 2. பாய்மரம்; mart.

**U.** kulāh

*[குல் (வளைவு), மரம் → குல் → குல்லாய்.]*

**த.** குல்லாய் > **U.** kulāh

**குல்லாய்தோணி** *kullāy-tōṉi,* பெ. (n.) பாய்மரம் பொருத்திய தோணி; a boat with a mart.

**U.** kulāh

*[குல் (வளைவு), மரம் → குல் → குல்லாய்.]*

**குல்லாய்ப்போடு-தல்** *kullāy-p-pōdu-,* 20 செ.கு.வி. (v.t.) ஏமாற்றுதல்; lit., to cap me, to cajole, coax. 2. ***குல்லாய்ப்போடுதல்*** பார்க்க; see *kullāy-pōḍu.*

*[குல்லாய் → குல்லா + போடு.]*

**குல்லான்** *kullāṉ,* பெ.(n.) தோண்டுதற்குரிய கூர்மையான முளை; sharp pointed stake for digging (J.)

*[குல்லம் + ஆணி – குல்லாணி → குல்லான்.]*

**குல்லி** *kulli* பெ.(n.) ஒருவகைப் பூடு; a kind of shrub (j.).

*[குல் → குல்லி.]*

**குல்லியம்** *kulliyam,* பெ.(n.) ஆலோசனை (யாழ்.அக.); counsel.

*[குல் → குல்லியம்.]*

**குல்லை**[1] *kullai,* பெ.(n.) 1. புனத்துளசி (பிங்.) ; wild basil. 2. துளசி (திவா.) ; sacred basil. 3. வெட்சி (பிங்.) ; scarlet ixora. 4. கஞ்சா (அக.நி.) ; Indian hemp.

*[குல் → குல்லி → குல்லை.]*

**குல்லை**[2] *kullai,* பெ.(n.) ஏய்ப்பு; deceit. *"குல்லைத் திருடரைநீ கூடாதே" (தெய்வச்.விறலிவிடு.356).*

*[குல் → குல்லை.]*

**குல்லை**[3] *kullai,* பெ.(n.) நாய்த்துளசி; white basil.

*[குல் → குல்லை.]*

**குல்வலி** *kulvali,* பெ.(n.) இலந்தை (மலை.) ; jujube tree.

*[குல் + வரி – குல்வரி → குல்வலி.]*

**குலக்காய்** *kulakkāy,* பெ.(n.) சாதிக்காய் (தைலவ.தைல.35); nutmeg.

*[குல் → குல்லம் + காய் – குல்லாக்காய் → குலக்காய்.]*

**குலக்கு** *kulakku,* பெ.(n.) இலை, பூ, பழம் முதலியவற்றின் சிறுகொத்து; small cluster or bunch, of fruits, flowers and leaves (யாழ்ப்.).

*[குல் → குலை → குலக்கு.]*

**குலக்கொடி** *kula-k-kodi,* பெ.(n.) நற்குலத்துப் பெண்; woman of noble birth. *"வையை யென்ற பொய்யாக் குலக்கொடி" (சிலப்.13:170).*

*[குலம் + கொடி.]*

**குலக்கொழுந்து** *kula-k-kolundu,* பெ.(n.) குலத்தை விளங்கச் செய்பவன்–ள்; one who brings glory to one's family *"இராமா னுசனெனுங் குலக்கொழுந்தே" (திவ்.இராமானுச.60).*

*[குலம் + கொழுந்து.]*

**குலகம்** *kulagam,* பெ.(n.) 1. கருந்தும்பை; black toom-bay indica. 2. பேய்ப்புடல் (கழ.தமி.அக.); devils snake gourd.

*[குல் → குலகம்.]*

**குலகலகன்** *kula-kalagan,* பெ.(n.) குலம் முதலிய வற்றோடு கலகஞ் செய்து தொலைப்பவன்; one who fights and overthrows a family or sect. *"பரசமய குலகலக சிவசமய குலதிலக" (திருச்செந். பிள்.தாலப்.9.).*

*[குலம் + கலகன்.]*

**குலகாயம்**[1] *kula-kāyam,* பெ.(n.) குலவொழுக்கம்; rules or customs of caste or tribe. *இச்செயல் உனக்குக் குலகாயமா?*

*[குலம் + காயம்.]*

**குலகாயம்**[2] *kula-kāyam,* பெ.(n.) பேய்ப்புடல் (மலை.); wild snake-gourd.

*[குல் → குலகம் → குலகாயம்.]*

**குலகாலம்** *kula-kālam,* பெ.(n.) நிலக்கடம்பு (மலை.); a plant.

*[குலம் + காலம்.]*

**குலகாலன்** *kula-kālan,* பெ.(n.) குலத்தை அழிப்பவன்; one who ruins a family or tribe. *"அசுரர் குலகாலா" (திருப்பு.634).*

*[குலம் + காலன்.]*

**குலகிரி** *kula-kiri,* பெ.(n.) எண்குலமலை (பிங்.); chief mountain ranges in jambu-duipa.

மறுவ. குலபருவதம்

*[குலம் + கிரி.]*

**குலகுரு** *kula-guru,* பெ.(n.) குலத்திற்குரிய ஆசிரியன், குரு; family guru.

*[குலம் + குரு.]*

**குலங்கிழார்கள்** *kulaṇkiḻārgaḷ,* பெ.(n.) கோயில் பணிகளை நடத்தும் பொறுப்பாளர்கள், அர்ச்சகர் கள்; priests who are responsible for the conduct of temple activities. *"திருவக்கரை மகாதேவர் கோயில்காணி உடைய குலங்கிழவன் பற்பநாபந் திருவேங்கடவன்" (தெ.கல்.தொ. XVII. கல்206.) "திருவல்லிக்கேணி குலங்கிழார்கள்" (கல்வெட்டு வெளியீட்டுத் தொகுதி.8.கல்.29) (கல்.க.சொ. அ.மு.).*

*[குலம் = கோயில். குலம் + கிழார்கள். கோயிலைத் தேவகுலம், தேகுலம் என வழங்குதலும் உண்டு.]*

**குலங்கூறு[1]-தல்** *kulaṅkūṟu-,* 1. செ.கு.வி.(v.i.) 1. உயர்குடிப் பிறப்பைப் பாராட்டுதல்; to boast of high birth.

*[குலம் + கூறுதல்.]*

**குலங்கூறு-தல்** *kulaṅ-kūṟu-,* 11 செ.கு.வி.(v.t.) பிறன் குலத்தை இழித்துக் கூறுதல்; to belittle wit one, as of low perentage.

*[குலம் + கூறுதல்.]*

**குலங்கெட்டவன்** *kulaṇ-keṭṭavaṉ,* பெ.(n.) சாதியொழுக்கம் தவறியவன்; one who has disgraced his birth.

*[குலம் + கெட்டவன்.]*

**குலச்சவ்வு** *kula-c-cavvu,* பெ.(n.) தலைப் புலால்; the scalp, the skin of the top of the head (சா.அக.).

*[குலம் + சவ்வு.]*

**குலச்சிறைநாயனார்** *kula-c-ciṟai-nāyaṉār,* பெ.(n.) கூன் பாண்டியனது அமைச்சரும், திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் காலத்தவரும், நாயன்மார் அறுபத்து மூவருள் ஒருவருமாகிய அடியார் (பெரியபு.); a canonized šaiva saint minister of *kūṉpāṇḍiya,* and contemporary of Thiru ñāṉa-campanthamūrthy nāyaṉār, one of 63.

*[குலம் + சிறை + நாயனார். குலச்சிறை = கோயில் குளம்.]*

**குலசங்கு** *kulaśaṅgu,* பெ.(n.) முட்சங்கு; a species of conch with thorn-like points (சா.அக.).

*[குலம் + சங்கு.]*

**குலசங்குலம்** *kulaśaṅgulam,* பெ.(n.) நத்தைச்சூரி; bristly button weed (சா.அக.).

*[குலம் + சங்குலம்.]*

**குலசம்** *kulaśam,* பெ.(n.) செவ்வந்தி; Indian chamomile (சா.அக.).

*[குல் → குலசம்.]*

**குலசன்** *kulaśaṉ,* பெ.(n.) நற்குலத்தோன்; man of respectable family.

*[குலம் + அத்து + அன் – குலத்தன் → குலச்சன் → குலசன்.]*

**குலசேகரப்பெருமாள்** *kula-šēgara-p-perumāḷ,* பெ.(n.) சேரமன்னரும் பெருமாள் திருமொழி இயற்றியவரும் ஆழ்வார் பன்னிருவருள் ஒருவரு மாகிய அடியாள்; a Chera king, on of the 12 canonized vaišṇava saint, who was the author of *Perumal Thirumoḻi.*

*[குலசேகரன் + பெருமாள்.]*

**குலசேகரன்** *kula-sēgaraṉ,* பெ.(n.) 1. குலத்தின் புகழ்மிக்கவன்; illustrious person of a family. 2. குலசேகரப் பெருமாள்; a Chera king. *"சேரன் குலசேகரன் முடிவேந்தர் சிகாமணியே" (திவ்.பெருமாள். தனியன்.).*

*[குலம் + சேகரன்.]*

**குலசேகரன்படி** *kulašēgaraṉ-padi,* பெ.(n.) திருமால் கோயிலின் கருவறை வாயிற்படியைக் குறிக்கும் பெயர்; the stone step at the entrance to the sanctuary of a Vishnu temple.

*[குலம் + சேகரன் + படி.]*

**குலசேகராழ்வார்** *kulasēgarāḻvār,* பெ.(n.) **குலசேகரப் பெருமாள்** பார்க்க; see *kulasēgara-p-perumāḷ.*

*[குலசேகரன் + ஆழ்வார்.]*

**குலஞ்செப்புதல்** *kulañ-ceppu-,* 15 செ.கு.வி.(v.i.) தன் குலப்பெருமை கூறுதல்; to boast of one's family or birth.

*[குலம் + செப்புதல்.]*

**குலஞ்செய்–தல்** *kulaṉ-cey-,* 1 செ.கு.வி.(v.i.) குலத்தை நிலைநிறுத்துதல்; to found a family *"குலஞ்செய்த குமரர்" (சீவக.2915).*

*[குலம் + செய்–.]*

**குலட்டம்** *kulaṭṭam,* பெ.(n.) கருநீலக்கல், நீலாஞ்சனக்கல்; a blue stone used in medicine, and applied as collyrium to the eye and an astringent of sores (சா.அக.).

*[குலட்டு → குலட்டம்.]*

**குலட்டு** *kulaṭṭu,* பெ.(n.) பழக்குலை; bunch of fruit. (சா.அக.).

ஒ.நோ. குலக்கு

*[குலை → குலைத்து → குலட்டு.]*

**குலடி** *kulaḍi,* பெ.(n.) ஒருவகைச் சிவப்பு செய்நஞ்சு (யாழ்.அக.); a kind of red mineral poison.

*[குலடு → குலடி.]*

**குலடு** *kulaḍu,* பெ.(n.) குலப்பெருமை அழிப்பவள்; unchart women.

*[குலடு → குலடி.]*

**குலடை** *kulaḍai,* பெ.(n.) கற்பொழுக்கங் கெட்டவள் (யாழ்.அக.); unchaste, fallen woman.

*[குலடு → குலடி → குலடை.]*

**குலத்தம்**[1] *kulattam,* பெ.(n.) கணுக்கால்; ankle. 2. கொள்ளு; horse gram (சா.அக.).

*[குல் → குலத்தம்.]*

**குலத்தம்பயறு** *kulattam-payaṟu,* பெ.(n.) மொச்சைக் காய்; Indian bean (சா.அக.).

*[குலத்தம் + பயறு.]*

**குலத்தி** *kulatti,* பெ.(n.) இலந்தை (சா.அக.); jujube.

*[குலத்தம் → குலத்தி.]*

**குலத்திகம்** *kulattigam,* பெ.(n.) மொச்சைக்காய்; Indian bean (சா.அக.).

*[குலத்தி → குலத்திகம்.]*

**குலத்திகாலன்** *kulatti-kālaṉ,* பெ.(n.) இடுகொள் (சா.அக.); four leaved cassia.

*[குலத்தி + காலன்.]*

**குலத்திகை** *kulattigai,* பெ.(n.) காட்டுக்கொள் (சா.அக.); wild horse gram.

*[குலத்தி → குலத்திகை.]*

**குலதருமம்** *kula-tarumam,* பெ.(n.) குலவொழுக்கம்; time-honoured custom observed by a family or caste.

*[குலம் + தருமம். **குலவொழுக்கம்** பார்க்க; see kulavoḻukkam.]*

**குலதனம்** *kula-taṉam,* பெ.(n.) மேலான செல்வம், மதிப்பமைந்த செல்வம்; *"பலதனத்தொடு நிறை குலத்தனக் குவையும்" முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி) (கல்.க.சொ.அ.மு.).*

*[குலம் + தனம்.]*

**குலதிலகன்** *kula-tilagaṉ,* பெ.(n.) குலத்திற் சிறந்து விளங்குபவன்; one who adorns a family. *"சிவசமய குலதிலக தாலோ தாலேலோ" (திருச்செந்.பிள். தாலப்.9).* **குலக்கொழுந்து** பார்க்க; see *kula-k-koḻundu.*

*[குலம் + திலகன்.]*

**குலதெய்வம்** *kulateivam,* பெ.(n.) ஒரு குலத்தார் வழிவழியாக வழிபட்டுவருங் கடவுள்; family deity *"நினையாந் தொழத்தக்க குலதேவதையாய் வழிபட்டு" (சிவப்.பிரபந்.பிள்.சிற்றிற்.6).*

*[குலம் + தெய்வம்.]*

**குலந்தம்** *kulandam,* பெ.(n.) கொள்ளு; horse gram (சா.அக.).

*[குல் (வளைவு) → குலந்தம்.]*

**குலந்தெரி-த்தல்** *kulan-teri-,* 4 செ.கு.வி. (v.i.) குலப்பழி தூற்றுதல்; to dwell on another's parentage commonly in ridicule.

*[குலம் + தெரித்தல். தெரித்தல் = சொல்லுதல்.]*

**குலப்பகம்** *kulappagam,* பெ.(n.) கக்குவான்; whooping cough. 2. செம்புமணல்; copper ore (சா.அக.).

*[குலப்பு → குலப்பகம்.]*

**குலப்பகை** *kula-p-pagai,* பெ.(n.) 1.வழிவழியாக உள்ள இனப்பகை; inbred malice or hatred, as between tribes prepetuated from generation to generation. 2. பூனையெலிகளுக்கு உள்ளது போன்ற இயற்கைப் பகை; natural enmity between different species, as cats and rats.

*[குலம் + பகை.]*

**குலப்பம்[1]** *kulappam,* பெ.(n.) செப்புமணல்; sand containing copper.

*[குலப்பு → குலப்பம்.]*

**குலப்பம்[2]** *kulappam,* பெ.(n.) கக்குவான் இருமல்; whooping cough.

*[குலை → குலைப்பம். ஒ.நோ.குலைப்பன்.]*

**குலப்பரத்தை** *kula-p-parattai,* பெ.(n.) ஒருவற்கே உரிமை பூண்டொழுகும் பரத்தையர் குலத்தவள் (நம்பியகப்.113); woman of the courtesan class, who remains faithful to a single person. 2. கணிகையர் குலத்தவர்; courtesan by birth.

*[குலம் + பரத்தை.]*

**குலப்பன்** *kulappan,* பெ.(n.) குயவன்; potter.

*[குலாளன் → குலப்பன் → குலப்பன் (கொ.வ.).]*

**குலப்பெயர்** *kula-p-peyar,* பெ.(n.) குலம்பற்றி வழங்கும் பெயர்; caste names. *"பார்ப்பா ரரசர் வணிகர் வேளாளரெனப் பாற்பாடு நாற்பெயர் குலப்பெய ராகும்" (பன்னிருபா.144).*

*[குலம் + பெயர்.]*

**குலபதி** *kulapadi,* பெ.(n.) குலத்துக்குத் தலைவன்; head of a family, caste or tribe. *"முதுகவரைக் குலபதியாய்" (திவ்.பெரியதி.6:6,7).* 2. 10,000 மாணவர்க்கு உணவு முதலியன அளித்துக் கல்வி கற்பிக்கும் ஆசிரியன்; the teacher who feeds 10,000 pupils and instructs them.

*[குலம் + பதி.]*

**குலம்** *kulam,* பெ.(n.) 1. குடி; family,lineage. *"குலந்தாங்கு சாதிக ணாலினும்" (திவ்.திருவாய். 3:7,9).* 2. உயர்குலம்; noble lineage, high birth. *"குலம் வேண்டின் வேண்டுக யார்க்கும் பணிவு" (குறள்,960).* 3. சாதி; caste, tribe, nation. *"குலனுங் குடிமையும்" (நான்மணி.82).* 4. மகன்; son. *"குலத்தொடுங் கோற லெண்ணி" (சீவக.261).* 5.இனம் ( உரி.நி.); class, sort, species, genus. 6. குழு; community. "பிரபந்த குலம்" 7. கூட்டம்; her, block, school, collecton assemblage. *"மாளிகைக் குலந் துகைத்து" (தணிகைப்பு. சீபரி.373).* 8. வீடு (பிங்.); house, abode. 9. அரண்மனை (திவா.); royal place. 10. கோயில்; temple. *"நீலவனக் குலமனந்தம்" (இரகு.நகர.46).* 11. இரேவதி என்னும் இருபத்தியேழாம் விண்மீன்; the 27th naksatra part of pisces. 12. நன்மை; goodness, benevolence. *"குலதெய்வமே" (திருக்கோ. 29).* 13. அழகு (ஆ.நி.); beauty. 14. மலை; mountain. *"நீலஞ்செய் குலத்தையும்" (இரகு.சீதைவ.32).* 15. மூங்கில்; bamboo. *"தலமிசை யுயர் குலத்தைச் சார்ந்து" (திருவாலவா. நாட்டுச்.4).*

**Fin.** kyla; **Es.** kūla; **Hung.** gore; **Mong.** kyi (familyclan); **Turk.** kūl, kil; **Jap.** gara; **Q.** kailla.

*[குல் (வளைவு, சூழ்தல் → குலம்.]*

**குலம்பம்** *kulambam,* பெ.(n.) செம்பு மணல்; copper ore (சா.அக.).

*[குலம்பு → குலம்பம்.]*

**குலம்பா** *kulambā,* பெ.(n.) பேய்ச்சுரை (மலை.); wild bottle gourd.

*[குலம்பை → குலம்பா.]*

**குலம்புகுந்தவன்** *kulam-puguntavan,* பெ.(n.) சாதி மாறியவன்; one who has mingled with persons of a different caste, a term of reproach.

*[குலம் + புகுந்தவன்.]*

**குலம்பெயர்-தல்** *kulam-peyar-,* 3 செ.கு.வி.(v.i.) மாறுபாடடைதல்; to change for the better or the worse, as a tree in transplanting, to improve or degenerate (யாழ்ப்.).

*[குலம் + பெயர்.]*

**குலமகள்** *kulamagaḷ,* பெ.(n.) நற்குடியிற் பிறந்தவள்; woman of good family, of noble birth. *"குலமகடன் குலமகனை" (கலிங்.223).*

*[குலம் + மகள்.]*

**குலமகன்** *kula-magan,* பெ.(n.) 1. நற்குடியிற் பிறந்தோன்; man of good family, of noble birth. 2. குலத்திற் பிறந்த மகன்; legitimate son. *"குலமகடன் குலமகன்" (கலிங்.223).*

*[குலம் + மகன்.]*

**குலமணி** *kula-maṇi,* பெ.(n.) 1. உயர்வகை மணிக்கல் (சாதிரத்தினம்); superior, genuine gem. 2. ***குலத்திற் சிறந்தோன்*** பார்க்க; see *kulattiṟ-cirandōn.*

*[குலம் + மணி.]*

**குலமதம்** *kula-madam,* பெ.(n.) உயர்குடிப்பிறப்பால் தோன்றுஞ் செருக்கு; pride of birth.

*[குலம் + மதம்.]*

**குலமரியாதை** *kula-mariyādai,* பெ.(n.) குலத்தின் ஒழுங்கு; propriety of conduct, established rule or custom of a family.

மறுவ. குலமதிப்பு

*[குலம் + மரியாதை.]*

**குலமருது** *kula-marudu,* பெ.(n.) ஒரு வகை மருது; a kind of murudah tree (சா.அக.).

*[குலம் + மருது.]*

**குலமருது** *kula-marudu,* பெ.(n.) வெள்ளைமருது; flowering mardah.

*[குலம் + மருது.]*

**குலமாரி** *kula-māri,* பெ.(n.) சிற்றூர்த் தெய்வம்; a village goddess.

*[குலம் + மாரி.]*

**குலமீன்** *kula-mīn,* பெ.(n.) உயர்ந்த மீன்; high class fish. 2. உண்பதற்குத் தகுந்த மீன்; fish of a superior class fit for eating (சா.அக.). 3. அருந்ததி; Arundadi. *"குலமீ னருகிய கற்பும்" (கல்லா.73,1).*

*[குலம் + மீன்.]*

**குலமுதல்** *kula-mudal,* பெ.(n.) 1. கொடிவழியின் மூலகாரணன்; first ancestor, founder of a family. *"தென்னர் குலமுதல்" (சிலப்.4:22).* 2.மகன்; son. *"குலமுதலைக் கொண்டொளித்த லன்றி" (பு.வெ. 10:6).* 3. குலதெய்வம்; family god. *"மலையுரை கடவுள் குலமுதல் வழுத்தி" (ஐங்குறு.259).*

*[குலம் + முதல்.]*

**குலமுதற்பாலை** *kula-mudaṟ-pālai,* பெ.(n.) பண்வகை (சிலப்.13:109, உரை).; a musical node.

*[குலம் + முதல் + பாலை.]*

**குலமுள்ளோன்** *kulam-uḷḷōn,* பெ.(n.) நற்குடிப் பிறந்தவன் (திவா.); man of good family, of noble birth.

*[குலம் + உள்ளோன்.]*

**குலமுறை** *kula-muṟai,* பெ.(n.) 1. கொடிவழி வரலாறு (பரம்பரை); genealogy. *"குலமுறை கிளத்து படலம்"* (கம்பரா.). 2. கொடிவழியாய் வந்த குல வழக்கம்; custom of a family handed down by tradition. *குலமுறையை அனுசரிப்பதே அழகு (கொ.வ.).*

*[குலம் + முறை.]*

**குலவரி** *kula-vari,* பெ.(n.) 1. சந்தனம் ; sandal wood. 2. செஞ்சந்தனம் ; red sandal.

*[குலம் + வரி.]*

**குலவருத்தனை** *kula-varuttaṉai,* பெ.(n.) சிற்றூர் அலுவலர் குடிகளிடமிருந்தும் அரசுக்கு வரி செலுத்துபவரிடமிருந்தும் பெற்றுக்கொள்ளும் பொருள்; the perquisites of village officers, paid by farmers and by those who pay land revenue to Government.

*[குலம் + வருத்தனை.]*

**குலவரை** *kula-varai,* பெ.(n.) 1. எண்குல மலை (அட்டகுல பருவதம்) (திவா.); chief mountain ranges of Jambu-dvipa. 2. மேன்மையான மலை; lofty mountain. *"அக்குலவரைச் சாரல் வைகி" (கம்பரா.வரைக்.35).* 3. நாகம்; mineralized zinc. 4. மந்தாரச்சிலை (சங்.அக.); a black stone.

*[குலம் + வரை.]*

**குலவலி** *kulavali,* பெ.(n.) இலந்தை (சா.அக.); jujube.

*[குலவல்லி → குலவலி.]*

**குலவல்லி** *kula-valli,* பெ.(n.) இலந்தை (சா.அக.);

*[குலம் + வல்லி.]*

**குலவள்ளிநெல்** *kulavaḷḷi-nel,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[குலம் + வள்ளி + நெல்.]*

**குலவன்** *kulavaṉ,* பெ.(n.) உயர்குலத்திற் பிறந்தவன்; person of noble birth 'பனிக்கதிர்க் குலவன் பயந்தருள் பாவையை' (கல்லா.10).

*[குலம் → குலவன்.]*

**குலவாரம்** *kula-vāram,* பெ.(n.) செவ்வாய்க் கிழமை, வெள்ளிக் கிழமை; Tuesday, Friday (சோ.க.சொ.அ.மு.).

*[குலம் + வாரம்.]*

**குலவாழை** *kula-vāḻai,* பெ.(n.) 1. 7 அல்லது 8 திங்களில் விளையும் ஒருவகைச் சம்பா நெல்; a sub species of Camba paddy, taking 7 to 8 months to mature. 2. ஒருவகைப் பிசின் மரம்; a species of gamboge. 3. சிறந்த வாழை; superior kind of plantain (சா.அக.).

*[குலம் + வாழை.]*

**குலவிச்சை** *kula-viccai,* பெ.(n.) ***குலவித்தை*** பார்க்க; see *kula-vittai. "குலவிச்சை கல்லாமற் பாகம்படும்" (பழமொ.6).*

*[குலம் + வித்தை → விச்சை.]*

**குலவித்தை** *kula-vittai,* பெ.(n.) குலத்தில் வழி வழியாய் வரும் கலையறிவு (வித்தை); knowledge, learning, art, handed down in a family.

*[குலம் + வித்தை.]*

**குலவிரி** *kulaviri,* பெ.(n.) சந்தன மரம்; sandal tree (சா.அக.)

*[குலம் + விரி.]*

**குலவிருது** *kula-virudu,* பெ.(n.) 1. குலத்திற்குரிய பட்டம்; title, insigma peculiar to family. 2. கொடி முதலிய விருது; standard, banner. 3. குலப் பிறப்பால் தோன்றும் சிறப்புப் பண்பு; peculiarity or propensity in an individual which is a family trait (வின்.).

*[குலம் + விருது.]*

**குலவிளக்கு** *kula-viḷakku,* பெ.(n.) குலத்தை விளங்கச் செய்பவன்–ள்; shining light of a family. *"கொம்பனார்க் கெல்லாம் கொழுந்தே குல விளக்கே" (திவ்.திருப்பா.17).*

*[குலம் + விளக்கு.]*

**குலவு[1]–தல்** *kulavu-,* 9 செ.கு.வி.(v.i.) 1. விளங்குதல்; to shine, gleam to be conspicuous. *"குலவு கோலத்த கொடிநெடு மாடங்கள்" (தேவா.794.7).* 2. மகிழ்ச்சி கொள்ளுதல்; to rejoice. *"பாரிடங் குலவிச் செல்ல" (கந்தபு.தாரக.18).* 3. உலாவுதல்; to walk, move about. *"எமதன்னையை நினைத்தே குலவினனோ" (சிவரக.விசயை.14).* ஒ.நோ.உலவு 4. நெருங்கியுறவாடுதல்; to be on very intimate terms. *அவனோடு குலவுகிறான்* 5. தங்குதல்; to lie, remain. *"பாற்கடலில் குலவுகின்றதோர் பொருளெலாம்" (கந்தபு.குமார.4).* 6. வளைதல்; to bend, curve. *"குலவுச்சினைப் பூக்கொய்து" (புறநா.11:4).* 7. குவிதல்; to lie heaped, as sand. *"குலவு மணல்" (ஐங்குறு.153).*

*[குல் → குல → குலவு.]*

**குலவு[2]** *kulavu-,* பெ.(n.) வளைவு; bend, curve. *"குலவுக் கொடுஞ்சிலை" (பு.வெ.1:10).*

**E.** curve, a bend; **L.** curvus, crooked.

*[குல் → குலவு.]*

**குலவுகாசம்** *kulavu-kāšam,* பெ.(n.) நாணல் (மலை.) ; kaus.

*[குலவு + காசம்.]*

**குலவேல்** *kula-vēl,* பெ.(n.) கஞ்சாங்கோரை (சா.அக.); hoary basil.

*[குலம் + வேலி.]*

**குலவேளை** *kula-vēḷai,* பெ.(n.) நல்வேளை (தைலவ.தைல.100); a sticky plant growing in waste places.

*[குலம் + வேளை.]*

**குலவை** *kulavai,* பெ.(n.) பண்டிகை நாள்களில் மகளிர் நாவாற் குழறியிடும் மகிழ்வொலி; ululation chorus of shrill sounds made by women by wagging the tongue, uttered on festive occassions (G.Tn.D.135).

*[குரவை → குலவை.]*

**குலனி** *kulaṉi,* பெ.(n.) செவ்வந்தி; Indian chaomile (சா.அக.).

*[குல் → குலனி.]*

**குலா** *kulā,* பெ.(n.) மகிழ்ச்சி; joy, delight, exultation. *"நிலாவிரி முற்றத்துக் குலவோ டேறி" (பெருங்.வத்தவ.12,14).*

*[குலவு → குலா.]*

**குலாகலம்** *kulākalam,* பெ.(n.) ஒரு பூடு; a plant. 2. நாய்கள் சிறுநீர் கழிக்கும் முன் முகரும் பூடு; a plant which dogs are fond of smelling before they expell urine (சா.அக.).

*[குலவு → குலா + கலம்.]*

**குலாகுலவாரம்** *kulā-kula-vāram,* பெ.(n.) அறிவன் கிழமை; Wednesday. (சோ.க. சொ.அ.மு.).

*[குலம் + குலம் + வாரம்.]*

**குலாங்குலி** *kulāṅ-kuli,* பெ.(n.) காவட்டம் புல் (மலை.); citromella grass.

*[குலா + அங்குலி.]*

**குலாமல்லி** *kulā-malli,* பெ.(n.) முட்செவ்வந்தி; rose flower. 2. வைத்திய முப்பு; a quintessence salt used in medicine (சா.அக.).

*[குலவு → குலா + மல்லி.]*

**குலாமல்லிச்சுண்ணம்** *kulāmalli-c-cuṇṇam,* பெ.(n.) குடற்சுண்ணம். நஞ்சுக் கொடியினின்று தயாரிக்கப்படும் ஒருவகைச் சுண்ண மருந்து; an alkaline prepared from the navel cord of children (சா.அக.).

*[குலாமல்லி + சுண்ணம்.]*

**குலாயம்** *kulāyam,* பெ.(n.) 1. பறவை கட்டுங் கூடு; bird's nest. *"சேனந் தனது குலாயந்தனில்" (கைவல்ய.சத்.124).* 2.மக்களாற் செய்யப்படும் பறவைக்கூடு; bird's cage.

*[குலா → குலாயம்.]*

**குலாரி** *kulāri,* பெ.(n.) ஒருவகை வண்டி; charriot, Indian coach.

**க.**கொலாரு; **ம.** குலால்; **தெ.** கொல்லாபண்டி;

*[குள் → கொள் → கொள்ளாரி → குலாரி.]*

**குலாலம்** *kulālam,* பெ.(n.) காட்டுச்சேவல்; wild cock. 2. ஒரு ஆந்தை; owl. 3. ஒரு பூடு; a plant. 4. நீலாஞ்சனக் கல்; a blue stone applied as a collyrium to the eyes (சா.அக.).

*[குலம் → குலாலம்.]*

**குலாலன்** *kulālaṉ,* பெ.(n.) குயவன்; potter. *"குலாலற் கேற்பப் பெருங்குய மருளி" (பெருங். வத்தவ.9,48).*

*[குலவு → குலாவு → குலாள் → குலாளன் → குலாலன்.]*

**குலாவு¹-தல்** *kulāvu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. அங்கு மிங்கும் நடத்தல்; to walk or move about, haunt. 2. நட்பாடுதல்; to be on intimate terms, to be friends. *அவனோடு அதிகமாகக் குலாவுகிறான்.* 3. விளங்குதல்; to shine, to be conspicuous. 4. மகிழ்தல்; to rejoice, exult, delight. 5. நிலை பெறுதல்; to settle, rest. *"பூந்துகில்.... புகைகூடி..... குலாய கொள்கைத்தே" (சீவக.1007).*

*[குலவு → குலாவுதல்.]*

**குலாவு²-தல்** *kulāvu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கொண்டாடுதல் (பிங்.); to admire, praise, extol.

*[குலவு → குலாவு.]*

**குலாவு³-தல்** *kulāvu-,* செ.கு.வி.(v.i.) வளைதல்; to be bent, curved. *"குலாவணங்கு வில்லெயினர் கோன்" (யாப்.வி.22).*

*[குல் → குலவு → குலாவு.]*

**குலி** *kuli,* பெ. (n.) கண்டங்கத்தரி; prickly night - shade (சா.அக.).

*[குல் → குலி.]*

**குலிக்கம்** *kulikkam,* பெ.(n.) இலுப்பை; bassia (சா.அக.).

*[குல் → குலுக்கு → குலுக்கம் → குலிக்கம்.]*

**குலிகச்செப்பு** *kulika-c-ceppu,* பெ.(n.) சாதிலிங்கம் செப்பு; vexmillion box. *"குலிகச் செப்பன கொம்மை வரிமுலை" (சீவக.641).*

*[குலிகம் + செப்பு.]*

**குலிகம்¹** *kuligam,* பெ.(n.) 1. சாதிலிங்கம்; vermilion. *"பொருங்குலிக மப்பியன" (கம்பரா. வரைக்.25).* 2. சிவப்பு (திவா.); redness.

*[குலிக்கம் → குலிகம்.]*

**குலிகம்²** *kulikam,* பெ.(n.) இருப்பை (பிங்.); south Indian mahua.

*[குலிக்கம் → குலிகம்.]*

**குலிங்கம்** *kuliṅgam,* பெ.(n.) 1. ஒரு நாடு; name of a country. *"தேமரு வலங்காத குவிலங்கரில்" (பாரத.பத்தாம்.27).* 2. ஊர்க்குருவி (சூடா.); sparrow. 3. தீங்கு செய்யலாகாது என்று மற்ற உயிர்கட்குப் போதித்துத் தான் தீங்கிழைக்கும் ஒரு பறவை. (வேதாரணிய சுக்கீவ.40); a fabulous bird which preaches good behaviour, but itself persists in evil doing.

*[குல் → குலி → குலிங்கம்.]*

**குலிசக்குகை** *kuliša-k-kugai,* பெ.(n.) அதிக வெப்பத்தைத் தாங்கக் கூடிய பாத்திரம்; crucible made to stand high temperature (சா.அக.).

*[குலிச + குகை (குகை = பாத்திரம்).]*

**குலிசநாயகம்** *kuliša-nāyagam,* பெ.(n.) ஒரு லீலை; a kind of coitus (சா.அக.).

*[குலிசம் + நாயகம்.]*

**குலிசபாணி** *kulica-pāni,* பெ.(n.) 1. இந்திரன்; Indra, as armed with thunde bolt. "தெவ்வடு தீறற் குலிசபாணி" (திருக்காளத்.பு.53:25). (வைரத்தா லாகிய ஆயுதத்தைக் கையிலுடையவன்).

*[குலிசம் + பாணி.]*

**குலிசம்**[1] *kulišam,* பெ.(n.) வைரத்தாலாகிய ஆயுதம்; Indra's thunderbolt. *"குலிசத் தமரர்கோன்" (கம்பரா.நகர.4).* 2. வைரம்; diamond. *"வெயில் விடு குலிச கேயூரங்கள்" (திருப்போ.சந். திருப்பள்.9).*

*[குல் (குத்துதல்) → குலிசம்.]*

**குலிசம்**[2] *kulišam,* பெ.(n.) 1. கற்பரிச் செய்நஞ்சு; a mineral poison. 2. ***இருப்பை (மலை.)*** பார்க்க; see *iruppai* 3. ***வன்னி (மலை.)*** பார்க்க; see vanni, Indian mesquit.

*[குல் → குலிசம்.]*

**குலிசல்** *kulišal,* பெ.(n.) நாகச்செய்ந்நஞ்சு; a mineral poison.

*[குல் → குலி → குலிசல்.]*

**குலிசவேறு** *kulica-v-ēru,* பெ.(n.) வைரத்தா லாகிய ஆயுதம்; Indra's thunderbolt. *"குலிச வேற்றா லற்றசிறை" (பெரியபு.திருஞான.1015).*

*[குலிசம் → குலிசன்.]*

**குலிசன்**[1] *kulican,* பெ.(n.) இந்திரன்; Indra, as armed with kulišan (குலிசத்தை யுடையவன்.). 2.கற்பரிச் செய்ந்நஞ்சு (சங்.அக.); a mineral poison.

*[குலிசம் → குலிசன்.]*

**குலிசி** *kuliši,* பெ.(n.) குலிசத்தையுடைய இந்திரன்; Indra, as armed with kulišan. *"நேமியோ குலிசியோ" (கம்பரா.பிணிவீ.70).*

*[குலிசம் → குலிசி.]*

**குலிஞ்சன்** *kuliñjan,* பெ.(n.) உயர்குலத்தோன் (திவா.); man of noble birth.

*[குலத்தன் → குலஞ்சன் →குலிஞ்சன் (கொ.வ.).]*

**குலிஞன்** *kuliñan,* பெ.(n.) உயர்குலத்தோன்; man of noble birth..

*[குலிஞ்சன் → குலிஞன்.]*

**குலிந்தம்** *kulindam,* பெ.(n.) குளிந்தம் என்னும் நாடு (சது.); an ancient.

*[குளிந்தம் → குலிந்தம்.]*

**குலிரம்** *kuliram,* பெ.(n.) 1. நண்டு; crab. 2.புற்று நோய்; cancer (சா.அக.).

*[குல் → குலிர் → குலிரம்.]*

**குலிரவம்** *kuliravam,* பெ.(n.) கழலை; புற்றுப் போல் வளரக்கூடிய ஓர் கட்டி; an internal abscess or tumour (சா.அக.).

*[குலிர் → குலிரவம்.]*

**குலிலி** *kulili,* பெ.(n.) வீரமுழக்கொலி; shout of triumph, etc., as on a battle field. *"குலிலியிட்ட களத்தில்" (திருப்பு.271).*

*[குல் → குலில் → குலி.]*

**குலிவம்** *kulivam,* பெ.(n.) இலுப்பை; mahua tree. 2. வன்னி வயிரம்; core of vanni tree.

*[குல் → குலி → குலிவம்.]*

**குலின்** *kulin,* பெ.(n.) காசித்தும்பை; balsam flower (சா.அக.).

*[குல் → குலின்.]*

**குலீரம்** *kulīram,* பெ.(n.) பனைமரம்; palmyra tree (சா.அக.).

*[குல் → குலிர் → குலிரம் → குலீரம்.]*

**குலுக்கம்** *kulukkam,* பெ.(n.) ஒருவகைப் பறவை; an unknown bird (சா.அக.).

*[குல் → குலுக்கு → குலுக்கம்.]*

**குலுக்கி** *kulukki,* பெ.(n.) பிலுக்குபவள்; gay, dressy, mincing woman.

**தெ.** குலுக்கலாடி

*[குலுக்கு → குலுக்கி.]*

**குலுக்கு-தல்** *kulukku-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. அசைத்தல்; to shake, as a vessel, a palanquin, to shake up and down, to agitate, to shake together in a mass. *"நெடுவரை குலுக்கிய குலத்தோளை" (கம்பரா.ஊர்தேடு.* 209). 2. குலுங்கச் செய்து கலத்தல்; to mix by shaking together, as in a bottle.

*[குலுங்கு → குலுக்கு.]*

**குலுக்கு**[2] *kulukku,* பெ.(n.) 1. அசைப்பு; shake, jolt. 2.பிலுக்கு; affected gestures, foppish airs.

**தெ.** குலுக்கு, குலு; **க.** குலுக்கு.

*[குலுங்கு → குலுக்கு.]*

**குலுக்குக்காரி** *kulukku-k-kāri,* பெ.(n.) பிலுக்குபவள்; gay, dressy, mincing woman.

*[குலுக்கு + காரி.]*

**குலுக்குச்சீட்டு** *kulukku-c-cīṭṭu,* பெ.(n.) சீட்டு களைக் குலுக்கிப்போட்டு எடுத்தவருக்குத் தொகை கொடுக்குஞ் சீட்டு வகை; chit-fund conducted on basis of casting lots.

*[குலுக்கு + சீட்டு.]*

**குலுக்கெனல்** *kulikkeṉal,* பெ.(n.) சிரித்தற்குறிப்பு; onom. expr. signifying laughter. *குலுக்கென்று நகைத்தான்.*

*[குலுக்கு + எனல்.]*

**குலுக்கை** *kulukkai,* பெ.(n.) குதிர்; circular earthen bin for storing grain (இ.வ.).

*[குலுக்கு → குலுக்கை.]*

**குலுகம்** *kulugam,* பெ.(n.) நாக்கில் படிந்த வெண்படலம்; the fur of the tongue. It is a coating seen upon the tongue in various diseases (சா.அக.).

*[குல் → குலுகம்.]*

**குலுகுலு-த்தல்** *kulukulu-,* 2 செ.கு.வி.(v.i.) 1. குறுகுறுவென்று செல்லுதல்; to creep or crawl noisily, as vermin in a basket. *பாம்பு பெட்டிக் குள்ளே குலுகுலுக்கென்றது.* 2. குடுகுடென் றொலித்தல்; to make a buzzing sound, as anything in the ear. காதுக்குள் ஏதோ குலுகுலுக் கின்றது.

*[குரு + குரு.]*

**குலுகுலுப்பு** *kulu-kuluppu,* பெ.(n.) தினவு; itching (சா.அக.).

*[குலு + குலு. குலுகுலு → குலுகுலுப்பு.]*

**குலுங்கு-தல்** *kuluṅgu-,* 8 செ.கு.வி.(v.i.) 1. அசைதல்; to be shaken, agitated. *"கொங்கை குலுங்கநின் றுந்தீபற" (திருவாச.14:11);* shudder, quake with fear. 3. நிறைதல்; to abound, to be full. *அந்த மரம் குலுங்கக் காய்த்திருக்கிறது.*

*[குல் → குலு → குலுங்கு.]*

**குலுங்குடை-த்தல்** *kuluṉ-guḍai-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஏலத்தொகையை ஏறவொட்டாமல் தடுத்தல்; to conspire together against the rise of prices at an auction.

*[குலுங்கை + உடை.]*

**குலுத்தம்** *kuluttam,* பெ.(n.) கொள்ளு (திவா.); horse gram.

*[குலு → குலுத்தம்.]*

**குலுத்திகா** *kuluttigā,* பெ.(n.) **கருங்கொள்ளு** பார்க்க; see *karuṅkoḷḷu.*

*[குலுத்திகை → குலுத்திகா.]*

**குலுப்பை** *kuluppai,* பெ.(n.) தானியம் சேமித்து வைப்பதற்கான உறைவடிவக் களஞ்சியம் (கட்.தொ.வரி.); circular earthern fin for grain.

மறுவ. குலுக்கை. *[குலு → குலுப்பை.]*

**குலுமம்** *kulumam,* பெ.(n.) 1. மண்ணீரல், மலக்குடல் முதலியவற்றின் பெருக்கத்தால் உண்டாகும் வயிற்றுநோய் வகை; chornic enlargement of the spleen; grandular enlargement in the abdomen, as of the mesentric gland. 2. 45 காலாட்களும், 27 குதிரைகளும், 9 தேர்களும், 9 யானைகளும் அடங்கிய படைப்பிரிவு (சூடா.); a division of an army consisting of 45 foot, 27 horses, 9 chariots and 9 elephants.

*[குல் → குலு → குலுமம்.]*

**குலுமமூலம்** *kulima-mūlam,* பெ.(n.) இஞ்சி (மலை.); Jamaica ginger.

*[குலுமம் + மூலம்.]*

**குலுமை** *kulumai,* பெ.(n.) **குலுக்கை** பார்க்க (இ.வ.); see *kulukkai.*

*[குலு → குலுமை.]*

**குலை-தல்** *kulai-,* 1 செ.கு.வி.(v.i.) 1. அவிழ்தல்; to become loose; to be dishevelled, unravelled. *"கொண்டை குலைந்து போயிற்று."* 2. கலைதல்; to disperse, as a crowd, to scatter. *"கூட்டம் குலைந்தது."* 3. நிலைகெடுதல்; to be deranged, disordered, upset, thrown into confusion. *"கோளி பங்கய மூழ்கக் குலைந்தவால்" (கம்பரா. வரைக்.621).* 4. மனங்குழைதல்; to lose one's heart become melted, softened. *"முளரிமொட் டென்று குலையுங் காமக்குருடர்க்கு" (பட்டினத்.திருப்பா. கஞ்சித்தரு.அடி.233).* 5. நடுங்குதல்; to trumble, shudder, quiver, shiver. *"வேழம் எதிரக் குலைவரால்" (இரகு.நகர.56).* 6. அழிதல்; to be annihilated, destroyed, put an end to. *"உலகெலாங் குலைந்தன்று" (கந்தபு.திருநகரப்.11).* 7. கோபக்குறி காட்டுதல் (பிங்.); to show signs of anger.

*[குலை → குலைதல்.]*

**குலை²-த்தல்** *kulai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. அவிழ்த்தல்; to untie, loosen, dishevel. 2. பிரித்தல்; to rake down as a scaffolding, to remove, as the decorations of a car after festival. 3. தாறுமாறாக்குதல்; to derange, disturb. 4. அழித்தல்; to destroy, ruin, to violate, as chastity. 5. வீரத்தைக் குறைத்துப் பேசல்; to dishearten, discourage, disconcert. 6. அசைத்தல்; to shake agitate.

*[குலை → குலைத்தல்.]*

**குலை²-த்தல்** *kulai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நாய் குலைத்தல்; to bark, as a dog. 2. குழறிப்பேசுதல்; to talk inchoerently and confusedly (கொ.வ.).

*[குல் → குலை.]*

**குலை³-த்தல்** *kulai-,* 4 செ.குன்றாவி (v.i.) குலையாக ஈனுதல்; to shoot forth in a bunch, as a plantain. *"முல்லை குலைத்தனகாண்" (திணை மாலை.112).*

*[குலை → குலைத்தல்.]*

**குலை⁴** *kulai,* பெ.(n.) 1. கொத்து; cluster, bunch as of fruits, flowers. *"நீடுகுலைக் காந்தள்" (பெரும்பாண்.371).* 2. ஈரற்குலை முதலியன; viscera in the abdomen,intestines. *"வீரர் குலைகளற்றி" (அரிச்.4,வேட்டஞ்.48).*

*[குல் → குலை.]*

**குலை⁵** *kulai,* பெ.(n.) 1. செய்கரை; artificial bank, ridge, dam. *"நீரைக் கொடுவந்து.... குலை செய்து*

*தகையவொண் ணாதபடி" (திவ்.திருமாலை. 24.வியா.).* 2. பாலம்; bridge, causeway. *"குலை கட்டி மறுகரை யதனாலேறி" (திவ். பெருமாள்.10:7).*

*[குல் → குலை.]*

**குலை**[6] *kulai,* பெ.(n.) 1. வில்லின் குதை (பிங்.); notch in a bow to keep the string in check. 2. நாண்; bow string. *"குலையிழி பறியாச் சாபத்து" (பதிற்றுப்.24:12).*

*[குல் → குலை.]*

**குலைக்கட்டி** *kulai-k-katti,* பெ.(n.) மண்ணீரல் பெரியதாக வீங்குதல்; enlargement of the spleen (சா.அக.).

*[குலை + கட்டி.]*

**குலைக்கல்** *kulai-k-kal,* பெ.(n.) கோரோசனை; bezoar (w.).

*[குலை + கல்.]*

**குலைக்கால்** *kulai-k-kāl,* பெ.(n.) முடவாட்டுக்கால்; coral stone. 2. ஒருவகை மரம்; an unknown tree (சா.அக.).

*[குலை + கால்.]*

**குலைகுலை-தல்** *kulai-kulai-,* 4 செ.கு.வி.(v.i.) பதறுதல்; to tremble; to be agitated greatly, as at sad news, to be in a state of trepidation. *"உள்ளங் குலைகுலைந்து" (சீகாளத்.4, கன்னி.124).*

*[குலை + குலை.]*

**குலைச்சல்** *kulaiccal,* பெ.(n.) அழிவு; destruction, ruin (இ.வ.).

*[குலைத்தல் → குலைச்சல்.]*

**குலைசூலை** *kulai-šūlai,* பெ.(n.) ஈரற் குலையில் உண்டாகும் ஒரு குத்தல் நோய்; a disease of the liver. 2. நெஞ்சுவலி; chest ache (சா.அக.).

*[குலை + சூலை.]*

**குலைஞ்சி** *kulaiñji,* பெ.(n.) பனஞ்செறும்பு; palmyra spathe.

*[குலை → குலைஞ்சி.]*

**குலைத்துக்காட்டு-தல்** *kulaittu-k-kāttu-,* 11 செ.கு.வி. (v.i.) 1. குலைத்து அறிவித்தல்; to give notice, warm, as dogs by barking. 2. பூத பைசாசங்களின் வரவைக் கருநாய் குறிப்பிடுதல்; to point out demons in times of epidemics, as black dogs whose sight is supposed to be especially keen.

*[குலைத்து + காட்டு-.]*

**குலைதள்ளு-தல்** *kulai-tallu-,* 7 செ.கு.வி.(v.i.) குலையாக ஈனுதல்; to shoot forth in clustors, bunches, as fruits, flowers, etc (கொ.வ.).

*[குலை + தள்ளு-.]*

**குலைதறி** *kulai-ttari,* பெ.(n.) குலையை ஒரே வெட்டாக வெட்டுகை; cutting of a bunch of fruits at one stroke (w.).

*[குலை + தறி.]*

**குலைநெரியற்றேங்காய்** *kulai-neriyarrēngāy,* பெ.(n.) குலை நெருக்கத்தால் சிறுகிய தேங்காய்; coconut not developed to its full size on account of pressure in the bunch.

*[குலை + நெரியல் + தேங்காய்.]*

**குலைநோய்** *kulai-nōy,* பெ.(n.) **குலையெரிவு** பார்க்க; see *kulai-y-erivu.*

*[குலை + நோய்.]*

**குலைப்பதைப்பு** *kulai-p-padaippu,* பெ.(n.) நெஞ்சுத் துடிப்பு; palpitation of the heart. 2. பயம், குளிர் இவற்றால் ஈரற்குலை காணும் நடுக்கம்; a trembling movement of the internal organs, due to nervous anxiety, fear, cold or other causes (சா.அக.).

*[குலை + பதைப்பு.]*

**குலைப்பரு** *kulai-p-paru,* பெ.(n.) குலையிலுண்டாகும் பரு; a tumour or other swelling in the viscera (சா.அக.).

*[குலை + பரு.]*

**குலைப்பன்** *kulaippaṉ,* பெ.(n.) 1. குளிர்காய்ச்சல்; shivering fits in fever, rigor. 2. கக்குவான்; whooping cough.

*[குலை → குலைப்பன்.]*

**குலைப்பு**[1] *kulaippu,* பெ.(n.) நடுக்குவாதம்; shivering fits. *"முயலகன் குலைப்பொடு" (திருப்பு.252).*

*[குலை → குலைப்பு.]*

**குலைப்பு**[2] *kulaippu,* பெ.(n.) குரைக்கை; barking, snarling (கொ.வ.).

*[குலை → குலைப்பு.]*

**குலைப்புநடுக்குவாதம்** *kulaippu-naḍukku-vādam,* பெ.(n.) shaking palsy. 2. நடுக்குவலி; shivering fits. 3. குரைக்கை; bark.

*[குலைப்பு + நடுக்கு + வாதம்.]*

**குலைபடுவன்** *kulai-paḍuvaṉ,* பெ.(n.) ஈரற்குலைப் புண்; tumours, ulcers, in liver or lungs.

*[குலை + படுவன்.]*

**குலைபிடித்தல்** *kulai-p-piḍital,* 4 செ.வி. (v.t.) குலையை இழுத்துப் பிடிக்கும் ஒரு நோய்; spasm of any of the visceral organs (சா.அக.).

*[குலை + பிடி-.]*

**குலைபோடு-தல்** *kulai-podu-,* 5 செ.கு.வி.(v.i.) ***குலைதள்ளுதல்*** பார்க்க; see *kulai-taḷḷutal.*

*[குலை + போடு-.]*

**குலைமரம்** *kulai-maram,* பெ.(n.) இடலை மரம்; iḍalai.

*[குலை + மரம்.]*

**குலைமுட்டி** *kulai-mutti,* பெ.(n.) குலையெரிவு பார்க்க; see *kulai-y-erivu*

*[குலை + (முட்டு) முட்டி.]*

**குலைமுட்டிநோய்** *kulai-muṭṭi-nōy,* பெ.(n.) மூச்சுப்பை இறுகுவதனால் மூச்சுத் திணறும்படி செய்யும் கால்நடைகளுக்கு வரும் நோய்; a disease in caltle marked by congestion of the lungs with hard breathing (சா.அக.).

*[குலை + முட்டி + நோய்.]*

**குலையாத்திரம்** *kulai-y-āthiram,* பெ.(n.) தீராப்பசி; insatiable appetite, craving for food.

*[குலை + ஆத்திரம்.]*

**குலையிலுதை-த்தல்** *kulaiyilutai-,* 4 செ.கு.வி. (v.i.) வயிற்றிலுதைத்தல்; kicking in the pit of the stomach (சா.அக.).

*[குலையில் + உதை-.]*

**குலையுயிர்** *kulai-y-uyir,* பெ.(n.) இருதயத்தை விட்டுப் பிரியும் உயிர்; life expected to leave the heart, life in danger. குற்றுயிரும் குலையுயிருமாகக் கிடந்தான் (சா.அக.).

*[குலை + உயிர்.]*

**குலையெரிவு**[1] *kulai-y-erivu,* பெ.(n.) மார்பெரிச்சல் (ஆங்.மருத்.); heart burn, irritation in the chest.

*[குலை + எரிவு.]*

**குலையெரிவு**[2] *kulai-y-erivu,* பெ.(n.) செரியாமையினால் நெஞ்செரிச்சலையுண்டாக்கும் ஒரு நோய்; heart burning arising from dyspepsia. 2. வயிற்றில் ஏற்படும் ஒரு குழப்பம்; an uneasy or painful sensation in the stomach (சா.அக.).

*[குலை + எரிவு.]*

**குலையோடே** *kulai-y-ōdē,* பெ.எ.(adv.) முழுதும்; wholly without exception, root and branch *"கொத்தோடே குலையோ" (கொ.வ.).*

*[குலை + ஒடு + ஏ.]*

**குலைவட்டம்** *kulai-vaṭṭam,* பெ.(n.) 1. அம்புக் குதை; notch at the end of an arrow. *"குலைவட்டக் குருதியம்பு" (சீவக.2184).*

*[குலை + வட்டம்.]*

**குலைவயிறு** *kulai-vayiṟu,* பெ.(n.) ஈரலடி; the bottom portion of the liver, adjoining the stomach (சா.அக.).

*[குலை + வயிறு.]*

**குலைவளி** *kulai-vaḷi,* பெ.(n.) வளிநோய் வகை; poricarditis.

*[குலை + வளி.]*

**குலைவற்றல்** *kulai-vaṟṟal,* பெ.(n.) ஈரற்குலை வற்றுதல்; atrophy of the liver. ஈரல் குலை வற்றக் கத்தினேன் (சா.அக.).

*[குலை + வற்றல்.]*

**குலைவாயு** *kulai-vāyu,* பெ.(n.) ***குலைவளி*** பார்க்க; see *kuḷaivaḷi.*

*[குலை + வாயு.]*

**குலைவாழை** *kulai-vāḻai,* பெ.(n.) ஒருவகை வாழை; a species of plantain. *"குலைவாழை பழுத்த" (சீவக.1191).*

*[குலை + வாழை.]*

**குலைவெட்டி** *kulaivetti,* பெ.(n.) வரிவகை; a tax. *"குலைவெட்டியும் குரப்புவெட்டியும்" (S.I.I.viii.322).*

*[குலை + வெட்டி.]*

**குலைநோய்** *kulai-nōy,* பெ.(n.) ஈரல்நோய்; liver complaint.

*[குலை + நோய்.]*

**குலைவியாதி** *kulai-viyati,* பெ.(n.) ***குலைநோய்*** பார்க்க; see *kuḷainōy.*

*[குலை + வியாதி.]*

**குலைவிலை** *kulai-vilai,* பெ.(n.) மரத்திலிருக்கும் போதே பனங்காய்க் குலையை விற்கை; sale of palmyra fruits while on the tree.

*[குலை + விலை.]*

**குலோத்துங்கசோழனுலா** *kulōttunga-cōḻaṉ-ulā,* பெ.(n.) பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஆண்ட இரண்டாங் குலோத்துங்க சோழன்மேல் ஒட்டக் கூத்தர் பாடிய உலாச் சிற்றிலக்கியம்; a poem on the cholā king kulōttungā II by Kūttar, 12th C.

*[குலோத்துங்க சோழன் + உலா.]*

**குலோத்துங்கன்** *kulōthuṅgaṉ,* பெ.(n.) 1. குலத்திற் சிறந்தவன்; eminent person of a family. 2. சோழவரசர்கள் சிலர் பூண்ட பெயர்; name of some Chola kings (Ins.)

*[குலம் + உத்துங்கன்.]*

**குலோமம்** *kulōmam,* பெ.(n.) 1. பக்கவிலாவின் சவ்வு; costal membrance. 2. வலது பக்கத்துப் கீழ்ப் பகுதியில் குடித்த நீர், இறங்கி நிற்குமிடம்; that portion at the bottom of the stomach on the right side where the water drunk collects. (சா.அக.).

*[குலை → குலைமம் → குலோமம்.]*

**குலோமன்** *kulōmaṉ,* பெ.(n.) வலது நுரையீரல்; the right lung (சா.அக.).

*[குலை → குலைமம் → குலோமம் → குலோமன்.]*

**குலோமி** *kulōmi,* பெ.(n.) வெள்ளறுகு (மலை.); small chiretta, white doob grass.

*[குல் → குலமி → குலோமி.]

**குவங்கம்** *kuvangam,* பெ.(n.) 1. ஈயம்; lead. 2. காரீயம்; black lead (சா.அக.).

*[குருவங்கம் → குவங்கம்.]*

**குவங்கியா** *kuvangiyā,*பெ.(n.) ஈயத்தண்டுச் செடி, கிண்டல் கொடி (சா.அக.); a creeper.

*[குருவங்கியம் → குவங்கியா.]*

**குவசிவேம்பின்பட்டை** *kuvaši-vēmbin-pattai,* பெ.(n.) மலை வேம்பின் பட்டை; bark of quassia (சா.அக.).

*[குவடு → குவட்டு → குவத்து → குவச்சி → குவேசி → குவேம்பின்பட்டை.]*

**குவட்டிடைக்குச்சு** *kuvattidai-k-kuccu,* பெ.(n.) தாம்பூரச்சிகை; an unknown plant with alchemical virtues (சா.அக.).

*[குவட்டு + இடை + குச்சு.]*

**குவட்டிலுதித்தோன்** *kuvattil-udittōn,*பெ.(n.) தங்கத்தைக் கரைக்கும் வேதிப்பொருள்; a mineral - solvent of gold.

*[குவடு → குவட்டில் + உதித்தோன்.]*

**குவட்டிலுறுசாமை** *kuvattiluruśāmai,*பெ.(n.) கலைச் செம்பு (சா.அக.).

*[குவட்டில் + உறு + சாமை.]*

**குவட்டிற்புளிதம்** *kuvatir-pulidam,*பெ.(n.) சுங்கச் செய்ந்நஞ்சு; a mineral poison.

*[குவட்டில் + புளிதம்.]*

**குவட்டினியம்** *kuvattiniyam,*பெ.(n.) நீலாஞ்சனக் கல்; sulphuret of antimony (சா.அக.).

*[குவடு → குவட்டு + இன் + ஈயம்.]*

**குவட்டினுறு கண்ணி** *kuvattinurukanni,* பெ.(n.) கோவைக் கொடி; Indian creeper (சா.அக.).

*[குவட்டின் + உறு + கண்ணி.]*

**குவட்டுக்கல்** *kuvattu-k-kal,*பெ.(n.) மலையில் மேயும் ஆடுகளின் மணத்தி (கோரோசனை); bezoar found in sheep feeding in mountains (W.).

*[குவடு → குவட்டு + கல்.]*

**குவட்டுக்கூர்மை** *kuvattu-k-kūrmai,* பெ.(n.) தொட்டிச் செய்ந்நஞ்சு; a mineral poison.

*[குவடு → குவட்டு + கூர்மை.]*

**குவட்டுநுண்முலைச்சி** *kuvattu-nun-mulaicci,* பெ.(n.) ***குவட்டு முலைச்சி*** பார்க்க; see *kuvattu mulaicci.*

*[குவடு → குவட்டு.]*

**குவட்டுமுலைச்சி** *kuvattu-mulaicci,* பெ.(n.) தங்கத்தைக் கரைக்கும் ஒரு வேதிப் பொருள் (யாழ்.அக.); a mineral solvent of gold.

*[குவட்டு + முலைச்சி.]*

**குவடு** *kuvadu,* பெ.(n.) 1.திரட்சி (பிங்.); roundness, rotundity anything round. 2. மலை (திவா.); mountain hill. 3. குன்று (பிங்.); hillock. 4. மலையுச்சி (திவா.); top of a hill, peak. 5. மரக் கிளை (பிங்.); branch of a tree. 6. சங்கச் செய்நஞ்சு (சங். அக.); a mineral poison.

ம. குவடு ஒ.நோ.குவவு.

*[குவி → குவ்வு → குவடு.]*

**குவடுறு** *kuvaduru,*பெ.(n.) ***கலைச் செம்பு*** (சா.அக.) பார்க்க;see *kalaiccembu.*

*[குவடு + உறு.]*

**குவம்** *kuvam,*பெ.(n.) ஆம்பல் (மலை.); water-lily.

*[கூவம் → குவம்.]

**குவரம்** *kuvaram*,பெ.(n.) துவர்ப்பு; astringence (சா.அக.).

*[துவர் → குவர் → குவரம்.]*

**குவரி** *kuvari*, பெ.(n.) வாலுளுவை (சா.அக.);black oil tree.

*[குவர் → குவரி.]*

**குவரிகுண்டல்** *kuvarikundal*,பெ.(n.) வாலுளுவை (மலை.); black oil tree.

*[குவரி + குண்டல்.]*

**குவரியா** *kuvariyā*,பெ.(n.) பூனைக்காலி; cowhage plant (சா.அக.).

*[குவரி → குவரியா.]*

**குவலகம்** *kuvalagam*, பெ.(n.) நெய்தற் பூ; white Indian water lily (சா.அக.).

*[குவலி → குவலிகம் → குவலகம்.]*

**குவலந்தம்** *kuvalandam*,பெ.(n.) செங்கழுநீர்; red Indian water - lily (சா.அக.).

*[குவலி → குவலந்தம்.]*

**குவலம்** *kuvalam*, பெ.(n.) ஒருவகைச் செய்நஞ்சு; a mineral poison.

*[குவு → குவல் → குவலம்.]*

**குவலமயம்** *kuvala-mayam*, பெ.(n.) மருவு; organy, an aromatic shrub (சா.அக.).

*[குவலம் + அயம்.]*

**குவலயாபீடம்** *kuvalayāpīdam*,பெ.(n.) கம்சன் கண்ணனைக் கொல்லும்படி ஏவிய யானை; the elephant which *kamsā* despatched against *krishnā*. *"கூற்றமென்னமேற் றூண்டினன் குவலயாபீடம்" (பாகவத.11, கஞ்சனைக்.14).*

*[குவலயம் + பீடம்.]*

**குவலி** *kuvali*,பெ.(n.) இலந்தை (சூடா.) ; jujubetree.

*[குவல் → குவலி.]*

**குவலிடம்** *kuvalidam*,பெ.(n.) ஊர் (சது.); village.

*[குவவு → குவலிடம்.]*

**குவலியம்** *kuvalayam*, பெ.(n.) 1. நெய்தல் (திவா.); white Indian water-lily. 2. கருங்குவளை; blue nelumbu. *"குவலியத்திருமலர்" (சூடா.).* 3. செங் குவளை; purple Indian water-lily (W).

*[குவலி → குவலியம்.]*

**குவலை** *kuvalai*,பெ.(n.) 1. கஞ்சா (மலை.); Indian hemp.2. துளசி (மலை.); sacred-basil.

*[குவல் → குவலை.]*

**குவலையன்** *kuvalaiyan*, பெ.(n.) துரிசு; blue vitriol.

*[குவலை + அன்.]*

**குவவு-தல்** *kuvavu-*, 10 செ.கு.வி. (v.i.) குவிதல் (சூடா.); to be piled up. 2. குவித்தல்; to heap up, gather. *"காட்டகத் தமிர்துங் காண்வரக் குவவி" (சீவக.2110).*

*[குல் → குள் → குவ் → குவவு.]*

**குவவு**[2] *kuvavu*. பெ.(n.) 1. திரட்சி; roundness, fullness, plumpness. *"ஓங்கு மணற் குவவுத் தாழை" (புறநா.24).* 2. குவியல் (பிங்.); heap, pile. 3. கூட்டம்; assemblage, collection, clump, group army (பதிற்றுப் 84,20). 4. ஒன்றோடொன்று பிணைகை; intertwining. *"குவவுக்குர லேனல்" (மலைபடு.108).* 5. பெருமை (சூடா.); greatness, largeness. 6. நிலவுகம் (சது.); earth. 7. மேடு; mound, hillock (W).

*[குல் → குள் → குவ் → குவவு.]*

**குவளச்சி** *kuvalacci*, பெ.(n.) புற்றாஞ்சோறு (யாழ்.அக்.); comb of white ant's nest.

*[குவள் → குவளச்சி.]*

**குவளம்** *kuvaḷam,* பெ.(n.) வில்வம்; bael tree (சா.அக.).

*[குவள் + குவளம்.]*

**குவளை**[1] *kuvaḷai,* பெ.(n.) 1. கருங்குவளை; blue nelumbo. *"குவளை.... கொடிச்சி கண்போன் மலர்தலும்" (ஐங்குறு.299).* 2.செங்கழுநீர் ; purple Indian water-lily. *"விளக்கிட்டன்ன கடிகமழ் குவளை" (சீவக.256).* 3. ஒரு பேரெண்; a large number. *"நெய்தலும் குவளையும் ஆம்பலும் சங்கமும் நுதலிய செய்குறியீட்டம்" (பரிபா.2:13).*

*[குவள் → குவளை.]*

**குவளை**[2] *kuvaḷai,* பெ.(n.) 1. அணிகளில் மணி பதிக்குங்குழி; socket or bed for a gem in a jewel. 2. அக்கமணி முதலியன பதிக்குங் கடுக்கண் குவளை; socket in an ear ring for insetting *rudrākša* or other bead.3.மகளிர் கழுத்தணிகளில் ஒன்று; a neck ornament (இ.வ.). 4. கண்குழி; socket of the eye. 5. கண்ணின் மேலிமை;eyelid. 6. கண்ணின் மூக்கடி மூலை; inner corner of the eye (இ.வ.). 7. ஒருவகைப் பாத்திரம்; wide-mouthed vessel, cup. 8. பாத்திரத்தின் விளிம்பு; brim of a vessel.

*[குவள் → குவளை.]*

**குவளைக் கடுக்கன்** *kuvaḷai-k-kaḍukkaṉ,* பெ.(n.) மணியழுத்தின கடுக்கண்வகை; ear-ring with a bead or gem enchased in it.

*[குவளை + கடுக்கன்.]*

**குவளைக்காசம்** *kuvaḷai-k-kāsam,* பெ.(n.) புருவம் வலித்து குத்தலுண்டாகிக் கனத்து, கடைக்கண் வீங்கி பார்வை நீலநிறமடைந்து தலைவலி உண்டாகி, வெளிவிழியைச் சுற்றி சிறு முளைகள் எழும்பும் ஓர் கண்ணோய்; a disease of the eyes characterised by the following symptoms viz pain in the eye-brows, piercing pain and heaviness of the eye, swelling of the angle of the eye, blue tint in the lens, head-ache, and small vesicle on the white of the eye (சா.அக.).

*[குவளை + காசம்.]*

**குவளைத்தாரான்** *kuvaḷai-t-tārāṉ,* பெ.(n.) தருமன் (சூடா.); lit., one who wears kuvalai garland.

*[குவளை + தாரான். குவளை = மாலையணிந்தவன்.]*

**குவளைமலை** *kuvaḷaimalai,* பெ.(n.) காரீய மலை; mountain containing black lead-ore (சா.அக.).

*[குவளை + மலை.]*

**குவளைமாலையர்** *kuvaḷai-mālaiyar,* பெ.(n.) வேளாளர் (குவளை மாலையணிந்தோர்); lit., those who wear kuvalai garland (வின்.).

*[குவளை + மாலையர்.]*

**குவளையச்சு** *kuvaḷai-y-accu,* பெ.(n.) கடுக்கனில் குவளை அமைத்தற்குரிய அச்சு; mould for making the kuvalai of an ear-ring.

*[குவளை + அச்சு.]*

**குவளையெலும்பு** *kuvaḷaiyelumbu,* பெ.(n.) கண்குழி முன்பாக இருக்கும் எலும்பு; socket bone of the eye (சா.அக.).

*[குவலை + எலும்பு.]*

**குவளைவிப்புருத்தி** *kuvaḷaivi-p-purutti,* பெ.(n.) 1.இமை கனத்து, கடைக்கண் குத்தல், சீழ்வடிதல், தினவெடுத்தல், கண்ணுறுத்தல், விழிக்கவொட்டாமை, கண் சிவந்து எரிதல் முதலிய குணங்களைக் காட்டும் நோய்; disease of the eye lids accompanies by thickeing of the lids, pain in the corner of the eye, muco-prulent discharge intching, irritation, inablity to open the eyes. 2. இடுப்பு, முழங்கால், கைகள், விலா, நெஞ்சு, முதுகு. இவ்விடங்களில் வலியுண்டாகி, குதத்தில் குத்தலை உண்டாக்கி சீழ் ஒழுகும் ஒரு கோப்பு; a disease marked by pain in the groin, the limbs

chest and in the anus attended with discharge of pus (சா.அக.).

[குவளை + விப்புருத்தி.]

**குவளைவீக்கம்** *kuvaḷai-vīkkam,* பெ.(n.) கண் குவளை வீக்கம்; swelling over the socket of the eye. 2. இமை வீக்கம்; swelling of the eye-lid (சா.அக.).

[குவளை + வீக்கம்.]

**குவா** *kuvā,* பெ.(n.) ஆரொட்டி ; east Indian arrowroot.

[குவவு + குவா.]

**குவாக்குவாவெனல்** *kuva-k-kuvā-v-eṉal,* பெ.(n.) அறைக்குழந்தையின் அழுகைக் குறிப்பு; onom. expr. signigying squalling crying, as a new-born infant.

[குவா + குவா + எனல்.]

**குவாகம்**[1] *kuvāgam,* பெ.(n.) கமுகு (மலை.); Arecapalm.

[கமுகு → கமுகம் → குவாகம் (கொ.வ.).]

**குவாகம்**[2] *kuvāgam,* பெ.(n.) ஒரு வகைப் பிசின் மரம்; lignum-vitae.

[குவ்வு → குவ்வகம் → குவாகம்.]

**குவாகு** *kuvāgu,* பெ.(n.) பேராமல்லி; large tubed jasmine (சா.அக.).

[குவவு → குவாகு.]

**குவாகுலம்** *kuvākulam,* பெ.(n.) **ஒட்டகம்** (சா.அக.) பார்க்க; see *oṭṭagam.*

[குவாகு → குவாகிலம் (குவாகுமரம் போல் நெட்டையானது).]

**குவாசகம்** *kuvāšagam,* பெ.(n.) பூனை முட்குறண்டி; a thorny shrub (சா.அக.).

[குவ்வு + சாகம்.]

**குவாசவம்** *kuvāšavam,* பெ.(n.) மணித்தக்காளி; black-berried solanum (சா.அக.).

[குவ்வு + ஆசவம்.]

**குவசியாசக்கை** *kuvašiyācakkai,* பெ.(n.) ஒரு மரத்தின் கசப்புச் சக்கை; the bark of quassiar (சா.அக.).

[குவச்சியம் + சக்கை.]

**குவாட்சுக்கல்** *kuvāṭccukal,* பெ.(n.) படிகக்கல்; a name given to the purer variety of silica such as rock crystal etc (சா.அக.).

[குவாட்டி + கல் – குவாட்டிக்கல் → குவாட்சுக்கல் (கொ.வ.).]

**குவாட்டி** *kuvāṭṭi,* பெ.(n.) ஒரு வகைச் சிப்பி; oyster.

[கவை → கவைத்தி → கவாட்டி → குவாட்டி.]

**குவாதநூல்** *kuvāda-nūl,* பெ.(n.) வடமொழியில் எழுதப்பெற்ற ஒரு மூலிகை நிகண்டு; a herbal dixtionary in sanskrit (சா.அக.).

[குவாதம் + நூல். மருந்துச் சாறுகள் காய்ச்சி வடிப்பது தொடர்பான நூல்).]

**குவாதம்**[1] *kuvādam,* பெ.(n.) கியாழம் (தைலவ. தைல.114); decoction, extract.

[குய் + ஒதம் – குயோதம் → குயாதம் → குவாதம்.]

**குவாதம்**[2] *kuvādam,* பெ.(n.) வீண்பேச்சு; captious argument, perverse talk.

[குறு + வாதம் – குறுவாதம் → குவாதம்.]

**குவாதி** *kuvādi,* பெ.(n.) கொதிக்க வைக்கப் பயன்படுத்தும் பாண்டம்; boiling pot (சா.அக.).

[குய் + ஆதி – குயாதி → குவாதி.]

**குவாதிகம்** *kuvādigam,* பெ.(n.) பால் சேர்ந்த கியாழம்; a decoction made with milk (சா.அக.).

[குய்யாதி → குய்யாதிகம் → குயாதிகம் → குவாதிகம்.]

**குவாதிகத்திரவம்** *kuvādiga-t-tiravam,* பெ.(n.) சாராயம்; a spiritious liquor.

*[குவாதிகம் + திரவம்.]*

**குவாதிதம்** *kuvādidam* பெ.(n.) மஞ்சள், பெருங் காயம், பால் இவைகள் சேர்ந்த கியாழம்; a decoction prepared with turmeric, asafoetida and milk. 2. தேன் சேர்ந்த மது; a spiritious liquor prepared with honey (சா.அக.).

*[குவாதிகம் → குவாதிதம்.]*

**குவாது** *kuvādu,* பெ.(n.) வீண்பேச்சு; fallacious argument. *"அசடு மாதர் குவாதுசொல் கேடிகள்" (திருப்பு. 479).*

*[குறு + வாது. குறுவாது → குவாது.]*

**குவாயு** *kuvāyu,* பெ.(n.)1. நோயாளியின் உடம்பி னின்று வீசும் நச்சுக் காற்று; a volatile deletrious principle arising from the bodies of the sick. 2.நச்சுக் காய்ச்சல்; malaria (சா.அக.).

*[குல் → குறு → வாயு.]*

**குவால்** *kuvāl,* பெ.(n.) 1. குவியல் (பிங்.); heap, pile. 2. கூட்டம்; collection, group. *"மரகதக் குவாஅன் மாமணிப் பிறக்கம்" (திருவாச.3.1:24).* 3.மேடு (திவா.); mound, hillock. 4. மிகுதி; abundance, excess. *'இத்தையே திருவுள்ளத்திலே குவாலாகக் கொண்டு' (ஈடு.2.7:3).* 5. நெற்போர் (திவா.); heap of threshed paddy.

*[குவை → குவால்.]*

**குவி¹-தல்** *kuvi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. கூம்புதல்; to close, as flowers by night. *"குவிந்த வண்குமுதங் களே" (கம்பரா. கைகேசி.53).* 2.வாயினாற் கூடுதல்; to assume a circular form, as the lips in kissing or in pronouncing labial vowels. *"மணித்துவர் வாயிதழைக் குவித்து விரித்தழுது" (திருச்செந். பிள்ளைத்.வாரணைப்.5).* 3. நெருங்கக் கூடுதல் (திவா.); to crowd,press as people, as sand grain, to become conical.). 4. குவியலாதல்; to be piled up formed in heaps, as sand, grain, to become conecal. 5. உருண்டு திரளுதல்; to become round globular. *"மேருவிற் குவிந்த தோளான்" (கம்பரா.நிகும்ப.92).* 6. கூடுதல்; to be accumulated, stored up, hoarded as treasure. வேண்டிய பணம் குவிந்து விட்டது.7. சுருங்குதல்; to contract decrease. *"குவிதலுடன் விரிதலற்று" (தாயு.சின் மயா.8).* 8. ஒருமுகப்படுதல்; to coverage, to be concentrated, as the mind, to be absorbed, as in contemplation. மனம் கடவுளின் வழிபாட்டிற் குவிந்துள்ளது.

*[குல் → குள் → குவ்வு → குவி.]*

**குவி²-த்தல்** *kuvi-,4* செ.குன்றாவி.(v.t.) 1.கும்பலாக்குதல்; to heap up, to pile up, concially. 2. தொகுத்தல்; to accumulate, hoard up, as treasure. *"கத்திக் குவித்த பல்புத்தகத்தீர்" (அஷ்டப். திருவேங்கடத்-33).* 3. கைகூப்புதல்; to join hands, as in prayer. *"இரு கரங்குவித்து" (தாயு. பொருள்வன.11).* 4. கூம்பச்செய்தல்; to close, as a flower. கதிரவனின் கதிர்கள் குவளை மலரைக் குவித்தன. 5.சுருக்குதல் (வின்.); to draw in as the sun its rays in setting. 6. உதடுகளைக் கூட்டுதல்; to round the lips, as in kissing or in pronouncing 'u' or or 'U'. *"துவர் வாயிதழைக் குவித்து விரித்தழுது" (திருச்செந்.பிள்ளைத். வாராணைப்.5).*

*[குல் → குள் → குவ்வு → குவி.]*

**குவி³** *kuvi,* பெ.(n.) சுவர்; wall. *"உயர்ந்த மட்டுங் குவிவைக்கு மொட்டர்க்கும்" (தனிப்பா.ii,131,331).*

*[குவை → குவி. குவை - நீரில் பிசைந்து உருட்டிய மண் திரளை.]*

**குவிந்தமனம்** *kuvinda-manam,* பெ.(n.) ஒடுங்கிய மனம்; mind brought to a common centre, concentrated mind (சா.அக.).

*[குவி → குவிந்த + மனம்.]*

**குவிமாடம்** *kuvi-mādam,* பெ.(n.) நெடுநிலை மாடங்களில் இறுதி மாடம்; upper storey of the building.

*[குவி + மாடம் = உச்சிக் குவிந்த மேல் மாடம்.]*

**குவிமுட்கருவி** *kuvi-muṭ-karuvi,* பெ.(n.) யானையை அடக்கும் ஓர் ஆயுதம்; a kind of elephant goad. *"குவிமுட் கருவியும் கோணமும்" (மணி.18,163).*

*[குவி + முள் + கருவி.]*

**குவியல்** *kuviyal,* பெ.(n.) குவித்திருப்பது; heap, pile.

*[குவி + குவியல்.]*

**குவியாடி** *kuviyādi,* பெ.(n.) குவிந்த கண்ணாடி வில்லை; concave lens (சா.அக.).

*[குவி + ஆடி.]*

**குவிரம்** *kuviram,* பெ.(n.) காடு; forest (சா.அக.).

*[கவி → குவி → குவிரம்.]*

**குவில்** *kuvil,* பெ.(n.) 1. அறுக்கை (சது.); reaping, curting. 2. கைப்பிடியளவுள்ள கதிர்க்கொத்து (வின்.); handful of reaped grain in stalks.

*[கிள் → கிவ் → கிவுல் → குவில்.]*

**குவிவு** *kuvivu,* பெ.(n.) 1. குவியல்; heap, councical pile, accumulation. 2. கும்பவடிவு (வின்.); conicalness, anything conical in shape.

*[குல் → குள் → குவ் → குவி → குவிவு.]*

**குவேலம்** *kuvēlam,* பெ.(n.) ஆம்பல் (சா.அக.);lily.

*[குவலி → குவேலம்.]*

**குவேலயம்** *kuvēlayam,* பெ.(n.) ஆம்பல் (சா.அக.); lily.

*[குவலி → குவலயம் → குவேலயம்.]*

**குவை** *kuvai,* பெ.(n.) 1. குவியல் (திவா.); heap, conical. 2. குப்பைமேடு (திவா.); dunghill. 3. தொகுதி; collection accumulation, crowd, shoal, row. *"சிரக்குவை நெளித்தான்" (கம்பரா. மாரீச.04).* 4. கண்ணின் வெண்படலத்தில் உண்டாகும் நோய்வகை (சீவரட்.); a disease of the sclerotic or the white of the eye.

*[குல் → குள் → குவ் → குவ்வு → குவை.]*

**குவை**[2] *kuvai,* பெ.(n.) பொன்னுருக்கும் குகை; crucible, melting-pot. *"இருந்தைக் குவை யொத்தன" (தணிகைப்பு. திருநாட்டுப்.63).*

ம. குவ

*[குகை → குவை.]*

**குவையெழுச்சி** *kuvai-y-elucci,* பெ.(n.) கண்ணின் வெள்விழியில் உளுந்தைப் போல் சதை உண்டாகித் துன்புறுத்தும் ஓர் கண் நோய்; a malignant growth of flesh of the size of a black-gram on the white of the eye (சா.அக.).

*[குவை + எழுச்சி. குவை = திரட்சி, தட்டி.]*

**குழ** *kuḻa,* பெ.எ. (adj.) இளமையான; young tender. *"மழவும் குழவும் இளமைப்பொருள" (தொல்.சொல்.312).*

*[குல் → குள் → குழ.]*

**குழக்குக்குழக்கெனல்** *kuḻakku-k-kuḻa-k-kenal,* பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு (வின்.); onom. expr. signifying, rumbling sound. 2. வலியற்றுத் தொங்குதற் குறிப்பு; hanging loose, as arms with feebleness.

*[குழக்கு + குழக்கு + எனல்.]*

**குழக்குமழக்கெனல்** *kuḻakkumaḻa-k-kenal,* பெ.(n.) தடித்துப் பருத்தற்குறிப்பு; expr. signifying being fleshy and rounded, plump. அந்தக் குழந்தை குழக்குமழக்கென்றிருக்கின்றது.

*[குழக்கு + மழக்கு + எனல்.]*

**குழகயம்** *kuḻakayam,* பெ.(n.) மனோரஞ்சிதம்; cupids plant (சா.அக.).

*[குழகு → குழகயம்.]*

**குழகன்** *kuḻagaṉ,* பெ.(n.) 1. இளையோன்; youth *"நின்மணக் குழகன்" (திருவிளை.திருமண.44).* 2. அழகன்; beautiful person. *"கொட்கப் பெயர்க்குங் குழகன" (திருவாச.3,12).* 3. முருகக் கடவுள் (பிங்.); skandā. 4. பிறர்க்கு இணங்குபவன்; person of yielding or accommodating nature. *"குறவை கோத்த குழகனை" (திவ்.திருவாய்.3,6,3).*

*[குழ → குழகு → குழகன்.]*

**குழகு** *kuḻagu,* பெ.(n.) 1. இளமைச் செவ்வி; youthfulness. *"கொம்மைக் குழகாடுங் கோலவரை மார்பர்" (சீவக.2790).* 2. அழகு; beauty. *"கொன்றை சூடிக் குழகாக... விளையாடும்" (தேவா.468).* 3. குழந்தை; infant. *"குழகென வெடுத்துகந்தவுமை" (திருப்பு.106).*

*[குழ → குழகு → குழகன்.]*

**குழகு-தல்** *kuḻagu-,*6 செ.கு.வி. (v.i.) 1. கொஞ்சி விளையாடுதல்; to prattle playfully. *"கிளியோடுங் குழகேலே" (திவ்.திருவாய்.6,2,5).* 2.கவர்தல்; to coax, wheedle. *"குழகியெங்கள் குழமணன் கொண்டு" (திவ்.திருவாய்.6,2,6).*

*[குழ → குழகு.]*

**குழகுழ-த்தல்** *kuḻa-kuḻa-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நெகிழ்ந்திருத்தல்; to be mashy, pulpy. 2. மன உறுதியறுதல்; to be timid, to be chicken hearted.

*[குழ → குழகு.]*

**குழகுழத்தபுண்** *kuḻakuḻatta-puṇ,* பெ.(n.) அழுகின புண்; putrid sore-ulcer (சா.அக.).

*[குழ + குழத்த + புண்.]*

**குழகுழவெனல்** *kuḻa-kuḻa-v-eṉal,* பெ.(n.) இளகியிருக்கும் குறிப்பு; expr. signifying sliminess, softness as of *kūḻ.*

*[குழ + குழ + எனல்.]*

**குழங்கல்** *kuḻaṅgal,* பெ.(n.) கழுத்திலணியும் மாலை வகை; a kind of garland for the neck. *"குழங்கன் மாலை..... மார்பீர்" (சீவக.743).*

*[குழ → குழங்கு → குழங்கல்.]*

**குழச்சி** *kuḻacci,* பெ.(n.) பவளப் புற்று நஞ்சு; a kind of prepared arsenic. 2. சேர்ந்தாடு பாவைச் செடி; an unknown plant (சா.அக.).

*[குழ → குழச்சி.]*

**குழந்தை** *kuḻandai,* பெ.(n.) 1. கைப்பிள்ளை; infant, baby, suckling. *"குழந்தையை உயிர்த்த மலடிக்கு" (கம்பரா.உருக்கா.65).* 2.இளமைப்பருவம்; childhood, tender age. *"குழந்தை வெண்மதி" (கம்பரா.உர்தேடு.209).*

**ம.** குழந்த; **க.**கொணசு; **தெ.**கொடுகு (மகன்); கொண்டிகா; **து.**கொரை (சிறிய) **கொலா.** கொச்சை; **நா.**கொச்ச; **பர்.**கொச்; **கூ.**கோடு.

**ME.,E.** child; **OE.** cild; **Gothr.** kilthei, womb

**Fin.** kakara; **Komi.** kaga; **Gondi.** koko; **Mong.** caxa; **Q.** kaka; **Jap.** kaka.

*[குழ + குழந்தை.]*

1. கருத்துக் குழந்தை 2. அறைக் குழந்தை 3. முலையுண் குழந்தை 4. கைக்குழந்தை அல்லது இடுக்குப் பிள்ளை 5. விளை யாட்டுக் குழந்தை 6. வயதுக் குழந்தை 7. பச்சைக் குழந்தை 8. சப்பாணிக் குழந்தை 9. தேரைக் குழந்தை 10. இரட்டைக் குழந்தை 11. சவலைக் குழந்தை 12. அழிகுழந்தை 13. சாக் குழந்தை 14. தூயலைக் குழந்தை 15. பேய்க்குழந்தை 16. கன்னிக் குழந்தை 17. தலைச்சன் குழந்தை 18. இடைச்சன் குழந்தை 19. நிறைவுக் குழந்தை 20. வயிற்றுக் குழந்தை.

**குழந்தைகுஞ்சு** *kuḻandai-kuñcu,* பெ.(n.) **குழந்தை குட்டி** பார்க்க; see *kuḻandaikuṭṭi*

*[குழந்தை + குஞ்சு.]*

**குழந்தைகுட்டி** *kuḷandai-kuṭṭi,* பெ.(n.) பல அகவை யினரான குழந்தைகள்; children varying in age. அவனுக்குக் குழந்தை குட்டி அதிகம் (கொ.வ.).

*[குழந்தை + குட்டி.]*

**குழந்தைகுட்டிக்காரன்** *kuḷandai-kuṭṭi-k-kāraṉ,* பெ.(n.) பெரிய குடும்பமுடையவன்; man with a large family (கொ.வ.).

*[குழந்தை + குட்டிக்காரன்.]*

**குழந்தைச்சாமி** *kuḷandai-c-cāmi,* பெ.(n.) முருகக் கடவுள் (குழந்தைத் தெய்வம்); lit., child-god, skanda.

*[குழந்தை + சாமி.]*

**குழந்தைநீர்** *kuḷandai-nīr,* பெ.(n.) இளநீர் (தைலவ.); milk of the tender coconut.

*[குழ → குழந்தை + நீர்.]*

**குழந்தைப்பசி** *kuḷandai-p-paśi,* பெ.(n.) அடிக்கடி உண்டாகும் பசி; hunger occuring in a short duration of time (சா.அக.).

*[குழந்தை + பசி.]*

**குழந்தைப்புத்தி** *kuḷandai-p-putti,* பெ.(n.) சிறு பிள்ளையறிவு; childishness, puerility, youthful undiscretion.

*[குழந்தை + புத்தி.]*

**குழந்தைமதக்கனி** *kuḷandai-madakkaṉi,* பெ.(n.) நிலத் துளசி; holy basil (சா.அக.).

*[குழந்தை + (மணக்கனி) மதக்கனி.]*

**குழந்தையறை** *kuḷandai-y-aṟai,* பெ.(n.) 1. குழந்தை களைக் காப்பாற்றி வளர்க்குமிடம்; a place where children are nursed and taken care of. 2. குழந்தையைப் பெற்ற அறை; lying in room (சா.அக.).

*[குழந்தை + இசிவு.]*

**குழந்தையிசிவு** *kuḷandai-y-iśivu,* பெ.(n.) தெற்கித்திக் கணை; an affection in children characterised by contraction of inter-coastal muscles (சா.அக.).

*[குழந்தை + இசிவு.]*

**குழநெல்லி** *kuḷanelli,* பெ.(n.) மிகுதியாகப் பழுத்த நெல்லி; over riped gooseberry (சா.அக.).

*[குழ + நெல்லி.]*

**குழப்படி** *kuḷappaḍi,* பெ.(n.) குழப்பம்; confusion, disturbance (கொ.வ.).

*[குழப்பம் → குழப்படி.]*

**குழப்படிகாரன்** *kuḷappaḍi-kāraṉ,* பெ.(n.) 1. சண்டை செய்வோன்; quarrelsome person. 2. கலகஞ்செய்வோன்; rioter. 3. குறும்பன்; mischievous fellow.

*[குழம்பு + அடி + காரன்.]*

**குழப்பம்** *kuḷappam,* பெ.(n.) 1. தாறுமாறு; confusion, muddle, disorder, embroilment. 2. மனக் கலக்கம்; perturbation, agitation, bewilderment, indecision. 3. கலகம்; disturtance, quarrel, commotion, tumult. 4. அரசகலகம்; sedition, insurection, rebellion. 5. கொந்தளிப்பு (வின்.); squall, storm, hurricane, boisterousness of the weather or sea.

ம. குழப்பம்; க. கொழும்ப

*[குழம்பு → குழப்பு → குழப்பம்.]*

**குழப்பன்** *kuḷappaṉ,* பெ.(n.) கலகக்காரன் (யாழ்.அக.); quarrelsome fellow, anarchist.

*[குழப்பு → குழப்பன்.]*

**குழப்பு[1]-தல்** *kuḷappu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. கலக்குதல்; to mix, stir. *"சேறெலாங் குழப்பி" (காஞ்சிப்.நாட்டுப்.74).* 2. பிறழ்வித்தல்; to confuse, disturb, derange. *"நடுக்குழப்பிய நா" (குற்றா.தல. கவுற்சன.53).* 3. வியப்படையச் செய்தல்; to bewil-

der, perplex. *"கடிமனை தொறுங் குழப்பி"* *(திருவாலவா.13,9).* 4. மனத்தைக் கலக்குதல்; to disconcert, trouble, vex, annoy; to cause doubt, hesitation. 2. காரியக் கேடாக்குதல்; to frustrate, as a design, to interrupt, to hinder, to spoil, as a business. 6. குழப்பிப்பேசுதல்; to prevaricate, shuffle, evade questions.

ம. குழப்புக

*[குழம்பு → குழப்பு-.]*

**குழப்பு**[2] *kuḻappu,* பெ.(n.) 1. நீர்மங்களைக் கலக்குதல்; mixing liquids of different consistency, mixing powders with liquids. 2. கலக்க முண்டாக்குகை; agitating, confusing.

*[குழம்பு → குழப்பு.]*

**குழம்பல்** *kuḻambal,* பெ.(n.) 1. கலங்குகை; perturbation. 2. குழம்பான பொருள்; anything of a thick consistency.

*[குள் + குழ → குழம்பு → குழம்பல்.]*

**குழம்பாய்க் காய்ச்சுதல்** *kuḻampāy-k-kāy-c-cudal,* 12 செ.கு.வி.(v.t.) குழம்பாயிருக்கும்படிக் காய்ச்சுதல்; boiling down to a thick consistence (சா.அக.).

*[குழம்பு + ஆய் + காய்ச்சுதல்.]*

**குழம்பு**[1]**–தல்** *kuḻampu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கலங்குதல்; to become mixed, to be stirred up, mingled, as liquides of different consistency, as powders with liquids. 2. மனங்கலங்குதல்; to be disconcerted, troubled, confused. அவன் குழம்பி நிற்கிறான். 3.நிலைகுலைதல்; to be disturbed, agitated, to be boisterous, as the sea.

ம. குழம்புக

*[குள் → குழ → குழம்பு.]*

**குழம்பு**[2] *kuḻambu,* பெ.(n.) 1. குழம்பான பொருள்; mixture, liquid of thick consistency, as sandal paste. *"சந்தனக் குழம்பும்" (திவ்.இயற்.2:76).* 2. காய்கறிக் குழம்பு (பிங்.); thickened curry broth. 3. குழைசேறு (வின்.); mud, slime, macerated earth.

ம. குழம்பு

*[குள் → குழ → குழம்பு.]*

**குழம்புகறி** *kuḻambu-kaṟi,* பெ.(n.) 1. குழம்பிலிட்ட கறி; vegetable or meat boiled in sauce. 2. குழம்பிற்குப் பயன்படும் காய்கறி; vegetable or meat used in the preparation of sause. 3. குழம்பாகச் செய்த கறி; curry sauce (சா.அக.).

*[குழம்பு + காய்ச்சுதல்.]*

**குழம்பு காய்ச்சுதல்** *kuḻambu-kāyccudal,* 12 செ.குன்றாவி. (v.t.) குழம்பு காய்ச்சுதல்; preparing sauce for use in food (சா.அக.).

*[குழம்பு + காய்ச்சுதல்.]*

**குழம்பு கூட்டல்** *kuḻambu-k-kūṭṭal,* பெ.(n.) குழம்புக்காக வேண்டிய பொருள்களை ஒன்றாகக் கலத்தல்; mixing up curry stuffs for preparing sauce (சா.அக.).

*[குழம்பு + கூட்டல்.]*

**குழம்புசாதி** *kuḻambu-cādi,* பெ.(n.) நன்மை தீமை கலப்பில் உண்டாவதாகக் கருதப்படும் மாந்தப் பிறவி அல்லது விலங்குப்பிறவி (திவ்.திருச்சந்த.16); birth as man or animal, attributed to the joint effect of pāpa and *puṇya.*

*[குழம்பு + சாதி.]*

**குழம்புத்தான்** *kuḻambu-t-tāṉ,* பெ.(n.) குழம்பிலிட்ட வெந்த காய்கறித் துண்டு; vegetable cut up and boiled soft in curry broth.

*[குழம்பு + தான். தாள் → தாண் → தான் (கொ.வ.)]*

**குழம்புத்தாள்** *kuḷambuttāḷ*, பெ.(n.) குழம்பில் வெந்த காய்கறித் துண்டு; vegetables or meat boiled in curry broth (சா.அக.).

*[குழம்பு + தாள். தாள் = குழம்பு வைத்த ஏனத்தில் அடியில் தங்கிய காய்களின் துண்டு.]*

**குழம்புதாளித்தல்** *kuḷambutāḷittal*, பெ.(n.) கறிக்குழம்பிற் கறி மசாலையிட்டுத் தாளித்தல்; seasoning sauce with condiments for use food (சா.அக.).

*[குழம்பு → தாளித்தல்.]*

**குழம்புப்பாகு** *kuḷambu-p-pāgu*, பெ.(n.) தடித்த பாகு; thick syrub (சா.அக.).

*[குழம்பு + பாகு.]*

**குழம்புப்பால்** *kuḷambu-p-pāl*, பெ.(n.) வற்றக் காய்ச்சிய பால்; milk thicked by boiling.

*[குழம்பு + பால்.]*

**குழம்புபதம்** *kuḷambu-padam*, பெ.(n.) மருந்தெண்ணெய்ப் பதங்களுளொன்று; a stage in the preparation of medicinal oil, one of *maruntenney-p-padam*.

*[குழம்பு + பதம்.]*

**குழம்புவடகம்** *kuḷambu-vaḍagam*, பெ.(n.) கறி தாளிக்கும் வடகம்; curry condiments consisting of pulses onion, mustard curry leaf garlic etc. grounded together, made into balls or cakes and then dried in the sun. It is used for seasoning curry preparation (சா.அக.).

*[குழம்பு + வற்றல்.]*

**குழம்புவற்றல்** *kuḷambu-vaṟṟal*, பெ.(n.) குழம்பிற்கு உபயோகப்படும் மீன், கறி, காய்; dried fish or mutton or dried vegetable used for preparing sauce (சா.அக.).

*[குழம்பு + வற்றல்.]*

**குழம்புவை-த்தல்** *kuḷambu-vai-*, 4 செ.கு.வி.(v.i.) 1. குழம்பு காய்ச்சுதல்; to make thick curry. 2. குழம்பு வடிவான மருந்து காய்ச்சுதல்; to make liquid medicine of a thick consistency.

*[குழம்பு + வைத்தல்.]*

**குழமகன்** *kuḷa-magaṉ*, பெ.(n.) 1. இளம் பருவமுள்ள தலைவன்; youthful-hero, as of a poem. *"குழமகனைக் கலிவெண்பாக் கொண்டு..... விளங்க வுரைத்தாங்கு" (இலக்.வி.858).* 2. மாதர்கள் குழமகனைப் புகழ்ந்து கூறும் ஒரு சிற்றிலக்கியம் (தொ.283); A poetic composition in which women extol the worth of a youthful hero. 3. மரப்பாவை; wodden doll. *"உத்திரியம் பட்டுங் குழமகன்றனக்கு நல்கி" (பாரத.நிறைமீ. 136).*

*[குழ + மகன்.]*

**குழமணம்** *kuḷa-maṇam*, பெ.(n.) பாவைக்குச் செய்யும் திருமணம் (பிங்.); marriage of dolls.

*[குழ + மணம்.]*

**குழமணன்** *kuḷamaṇaṉ*, பெ.(n.) மரப்பாவை; wooden doll. *"எங்கள் குழமணன் கொண்டு" (திவ். திருவாய். 6:2:6).*

*[குழமணம் → குழமணன்.]*

**குழமணிதூரம்** *kuḷamaṇidūram*, பெ.(n.) வென்றவர் தம்மீது இரங்குமாறு பாடிக் கொண்டு தோற்றவர் ஆடும் ஒருவகை கூத்து (திவ்.பெரியதி. 10.3); a dance by the vanquished, accompanied with singing to excite the pity of the victors.

*[குழமணி + தூரம். குழமணி = பாவை, பதுமை, பாவைக்கூத்து. தோல் → தோரம் → தூரம் (தோற்பாவை).]*

**குழல்(லு)-தல்** *kuḷal-*, 14 செ.கு.வி.(v.i.) 1.சுருளுதல்; to curl. *"கடைகுழன்ற கருங்குழல்கள்" (சீவக.164).* 2. சுருட்டி முடிக்கப்படுதல் (வின்.); to be folded back into a roll or tried in a lock, as the hair of women in *kuḷal*.

*[குழை → குழல்.]*

**குழல்**[2] *kuḷal,* பெ.(n.) 1. மயிர்க்குழற்சி; curling hair. *"குழலுடைச் சிகழிகை" (சீவக.1092).* 2. ஐம்பாலுள் சுருட்டி முடிக்கப்படுவது; woman's hair dressed by coiling and tying up behind in a roll one of *aim-pāl.* 3. மயிர் (பிங்.); woman hair.

*[குழை → குழல்.]*

**குழல்**[3] *kuḷal,* பெ.(n.) 1. துளையுடைய பொருள் (திவா.); any tube-shaped thing. 2. இசைக்குழல் (சூடா.); flute, pipe. 3. குழலிசை; music of the pipe. *"குழலினிதி யாழினிதென்ப" (குறள்.66).* 4. உட்டுளை; tubularity, hollowness. *"குழற்கா லரவிந்தங் கூம்ப" (தமிழ்நா.63).* 5. ஒருவகைக் கழுத்தணி; a kind of neck ornament (இ.வ.). 6.மீன்வகை; milk-fish, brilliant glossy blue, attaining 3 or 4 ft. in length. *"வறற்குழற் ஆட்டின்" (சிறுபாண்.163).* 7. கடல்மீன்வகை; a sea-fish, bluish, attaining several feet in length.

*[குள் → குழ → குழல்.]*



குழல்

**குழல்**[4] *kuḷal,* பெ.(n.) துமிக்கி; gun. *"கொட்டமிடும் புலியைக் குண்டுதுன்றுங் குழலால்" (கூளப்ப.90).*

*[குள் → குழல்.]*

**குழல்சுடு-தல்** *kuḷal-cuḍu-,* 4 செ.கு.வி.(v.i.) துப்பாக்கி சுடுதல்; to fire a gun.

*[குழல் → சுடு.]*

**குழல்மாது** *kuḷalmādu,* பெ.(n.) கரிசலாங்கண்ணி; eclipse plant (சா.அக.).

*[குழல் → மாது.]*

**குழல்விசை** *kuḷalvišai,* பெ.(n.) அரத்தக் குழாயின் இழுப்பு; tension of a blood vessel (சா.அக.).

*[குழல் + விசை.]*

**குழல்விரணம்** *kuḷalviraṇam,* பெ.(n.) இரத்தக் குழலுக்கு ஏற்படும் விரணப்புண்; ulceration of blood vessels (சா.அக.).

*[குழல் + இரணம். குழற்புண் பார்க்க; see kuḷaṟpuṇ]*

**குழல்விருத்தி** *kuḷal-virutti,* பெ.(n.) குழுலூது வோர்க்கும் கொடுக்கும் சலுகை; rent-free lands assigned to pipers of a village (இ.வ.).

*[குழல் + விருத்தி.]*

**குழல்விழு-தல்** *kuḷal-viḻu-,* 3 செ.கு.வி.(v.i.) துளை யுண்டாதல்; to form a hollow, as within a horn.

*[குழல் + விழுதல்.]*

**குழல்விளக்கம்** *kuḷal-viḷakkam,* பெ.(n.) குழலைப் பற்றிய விவரம்; description of a vessel (சா.அக.).

*[குழல் + விளக்கம்.]*

**குழலப்பம்** *kuḷalappam,* பெ.(n.) பிட்டு; a sweet cylinderical confection prepared from rice flour (சா.அக.).

மறுவ. குழல்பிட்டு

*[குழல் + அப்பம்.]*

**குழலற்றகோளம்** *kuḷalaṟṟakōḷam,* பெ.(n.) 1. குழாய் இல்லாத கோளம்; ductless gland. 2. ஊரலற்ற கோளம்; a gland like body, without any known secretory function (சா.அக.).

*[குழல் + அற்ற + கோளம்.]*

**குழலாதொண்டை** *kulalātoṇḍai,* பெ.(n.) ஒருவகை ஆதொண்டை, காத்தொட்டி, கற்ப வகையிலொன்று; caper shrub. It is classified as one of the drugs used in rejuvenation (சா.அக.).

*[குழல் + ஆத்தொண்டை.]*

**குழலாள்பால்** *kulalāl-pāl,* பெ.(n.) முலைப்பால்; woman's breast milk (சா.அக.).

*[குழலாள் + பால்.]*

**குழலிசிவு** *kulališivu,* பெ.(n.) அரத்தக் குழாயின் இசிவுவலி; spasm of a vessel (சா.அக.).

*[குழல் + இசிவு.]*

**குழலிதச்சம்** *kulalitaccam,* பெ.(n.) சிறுகுறிஞ்சா; small Indians specacuanha (சா.அக.).

*[குழல் + தச்சம்.]*

**குழலூதி** *kulalūdi,* பெ.(n.) குழல் வாசிப்பவன்; one who plays flute.

ம. குழலூதி

*[குழல் + ஊதி.]*

**குழலொடுக்கம்** *kulalodukkam,* பெ.(n.) குழல் சுருக்கம்; construction o f a vessel (சா.அக.).

*[குழல் + ஒடுக்கம்.]*

**குழலோன்** *kulalōṉ,* பெ.(n.) வேய்ங்குழல் ஊதுபவன்; one who plays on an aerophone (flutist, a trumpetch etc.) flute player. *"வழுவின் றிசைக்கும் குழலோன் நானும்" (சிலப்.3,69).*

ம. குழல்காரன்

*[குழல் → குழலோன்.]*

**குழவல்லம்** *kulavallam,* பெ.(n.) முருங்கை; drum stick tree (சா.அக.).

*[குழ + வல்லம்.]*

**குழவி**[1] *kulavi,* பெ.(n.) 1. கைக்குழந்தை; infant. babe. *"ஈன்ற குழவி முகங்கண் டிரங்கி" (மணி.11,114).* 2. ஒருசார் விலங்கின் பிள்ளைப் பெயர் (தொல்.பொ.575); young of certain animals, viz. யானை, பசு, எருமை, கடமை, மரை, குரங்கு, முசு, ஊரகம். 3. புல்மர முதலிய ஓரறிவுயிரின் இளமைப் பெயர்; young of the vegetable kingdom. *"வீழில் தாழைக் குழவி" (தொல்.பொ.579,உரை).*

*[குள் → குழ → குழவி.]*

**குழவி**[2] *kulavi,* பெ.(n.) அம்மி கல்லுரல்களின் அரைக்குங்கல்; the roller of ammi and kallural, grinding pestle. *"புரையறு குழவியின்..... அரைக்குநர்" (பரிபா.10,83).*

*[குள் → குழ → குழவி.]*

**குழவி**[3] *kulavi,* பெ.(n.) பெருமை (யாழ்.அக.); greatness.

*[குழு → குழுவி → குழவி.]*

**குழவிக்கல்** *kulavi-k-kal,* பெ.(n.) ***குழவி***[2] பார்க்க; see *kulavi*

*[குழவி + கல்.]*

**குழவிகொள்பவர்** *kulavi-kolbavar,* பெ.(n.) குழந்தையை வளர்ப்பவர்; those who bring up a child. *"குழவிகொள்பவரினோம்புமதி" (புறநா.5).*

*[குழவி + கொள்பவர்.]*

**குழவிஞாயிறு** *kulavi-ñāyiṟu,* பெ.(n.) எழுஞாயிறு (தொல்.பொ.579,உரை); rising sun.

*[குழவி + ஞாயிறு.]*

**குழவித்தாய்** *kulavi-t-tāi,* பெ.(n.) 1. மிளகரணை; lopez rool. 2. குழந்தையின் தாய்; mother of a child. 3. கடுக்காய்; indian galnut supposed to protect children like mother (சா.அக.).

*[குழவி + தாய்.]*

**குழவித்திங்கள்** *kuḻavi-t-tiṅgaḷ,* பெ.(n.) இளநிலா (அல்) பிறைநிலா (தொல்.பொ.759,உரை); crescent moon.

*[குழவி + திங்கள்.]*

**குழவிதோசம்** *kuḻavidōšam,* பெ.(n.) குழந்தைக்குக் காணும் பலவகை குற்றப்பாடுகள் (தோசங்கள்); different kinds of morbid affection in children from various causes (சா.அக.).

மறுவ. குழந்தை நலி, குழந்தை நைப்பு.

*[குழவி + தோசம். **Skt.** Dōsa>த.தோசம்.]*

**குழவிப்பாம்பு** *kuḻavi-p-pāmbu,* பெ.(n.) குழிமீன்; congereel.

*[குழவி + பாம்பு.]*

**குழவிப்பிண்டம்** *kuḻavi-p-piṇḍam,* பெ.(n.) 1. இளங்கருப்பிண்டம்; tender factus, the young of an animal in its earliest stage of development (சா.அக.).

*[குழவி + பிண்டம்.]*

**குழவிழைப்புளி** *kuḻa-v-iḻaippuḷi,* பெ.(n.) இழைப் புளி வகை; a kind of smoothing plane.

*[குழைவு + இழைப்புளி. குழை விழைப்புளி → குழவிழைப்புளி.]*

**குழவு** *kuḻavu,* பெ.(n.) இளமை (தொல்.சொல்.312); young, tender age juvenility.

*[குழ → குழவு.]*

**குழவுண்டை** *kuḻavuṇḍai,* பெ.(n.) ஒரு வகைக் கொழுக்கட்டை; a kind of sweet puff or light pastery (சா.அக.).

*[குழ + (உருண்டை) உண்டை.]*

**குழற்கொத்து** *kuḻaṟkottu,* பெ.(n.) 1. கூந்தற்கற்றை (பிங்.); tuff of a woman's hair. 2. செயற்கைமுடி; false hair for dressing the head.

*[குழல் + கொத்து.]*

**குழற்கொப்புளம்** *kuḻaṟ-koppuḷam,* பெ.(n.) உடம்பின் குழலுள் காணும் கொப்புளம்; an ulcer on the walls of a vessel (சா.அக.).

*[குழல் + கொப்புளம்.]*

**குழற்சவ்வு** *kuḻaṟ-cavvu,* பெ.(n.) உடம்பினுள் இருக்கும் குழாயின் சவ்வு; tubular membrane (சா.அக.).

*[குழல் + சவ்வு.]*

**குழற்சி** *kuḻaṟci,* பெ.(n.) 1. சுருண்டிருக்கை (சீவக. 1092,உரை); curling as of woman's hair. 2. சுருட்டி முடிக்கும் கொண்டை (பின்.); roll or lock hair tied behind.

*[குபுல் → குழற்சி.]*

**குழற்சிகை** *kuḻaṟcigai,* பெ.(n.) தலைமயிர்; hair of the head. *"குழற் சிகைக் கோதை சூட்டி" (சீவக.252).*

*[குழல் + சிகை.]*

**குழற்சுருக்கம்** *kuḻaṟcurukkam,* பெ.(n.) குருதி குழுலுக்கேற்படும் சுருக்கம்; constriction or narrowing of a vessel (சா.அக.).

*[குழல் + சுருக்கம்.]*

**குழற்சேதனம்** *kuḻaṟcēdaṉam,* பெ.(n.) குருதிக் குழலைக் கத்தியால் அறுத்தல் அல்லது பிளத்தல்; the dissection of a blood vessel (சா.அக.).

*[குபுல் + சேதனம்.]*

**குழற்பிசகு** *kuḻaṟpišagu,* பெ.(n.) உடம்பினுள் குருதிக் குழல் நழுகல்; displacement of a vessel in the body (சா.அக.).

*[குழல் + பிசகு.]*

**குழற்பிட்டு** *kuḻaṟ-piṭṭu,* பெ.(n.) மூங்கிற்குழலில் வைத்து அவிக்கும் பிட்டு; a kind of soft pastry steamed in the hellow of a bamboo piece.

*[குழல் + பிட்டு.]*

**குழற்றடை** *kularradai,* பெ.(n.) குருதி குழலியக்கத் தடை; obstructions to a vessel (சா.அக.).

*[குழல் + தடை.]*

**குழற்றிறப்பு** *kularrirappu,* பெ.(n.) துளையுள்ள திறவுகோல் (சாவி); key with a hole.

*[குழல் + திறப்பு.]*

**குழற்று-தல்** *kularru,* 5 செ.கு.வி.(v.i.) குழறி யொலித்தல்; to make incoherent or indistrict sounds, as when affected with strong emotion. *"குரவையிற் குழற்றுவாரும்" (கம்பரா. ஊர்தேடு. 188).*

*[குழறு → குழற்று.]*

**குழறு-தல்** *kularu-,* 15 செ.கு.வி.(v.i.) 1. பேச்சுத் தெளிவின்றித் தடுமாறுதல்; to babble, as an infant to talk indistinctly, to gabble. *"வாய் குழறா" (திருவாச.21,10).* 2. கூவுதல்; to cry, as a bird; to crow, as a cock. *"கூகை நன்பகற் குழற" (பட்டினப்.268).* 3. கலத்தல்; to mingle, to be mixed up. *"இருடாரகை குழறிற்றென்ன.... மலர் மயிர் சொருகி" (கோயிற்பு.பதஞ்.14).* 4. கேடுதருதல்; to cause ruin, destruction. *"குழறிய கொடுவினை யிலரே" (தேவா.249,7).*

*[குழல் → குழறு.]*

**குழறுபடை** *kularu-padai,* பெ.(n.) 1. சொற்றடு மாற்றம்; incoherent talk. 2. தாறுமாறு; confusion, as in business.

*[குழறு + படு – படை.]*

**குழாஅல்** *kulāl,* பெ.(n.) கூடுகை; gathering flocking together. *"நாரை..... மரத்தொறுந் குழாஅலின்" (பதிற்றுப்.29).*

*[குழுவு → குழா → குழாஅல்.]*

**குழாங் கொண்டாடு-தல்** *kulān-kondādu-,* 12 செ.கு.வி.(v.i.) நெருங்கி உறவாடுதல்; to move closely or on intimate terms (இ.வ.).

*[குழாம் + கொண்டாடு.]*

**குழாம்** *kalām,* பெ.(n.) 1. கூட்டம்; herd, flock, swarm, shoal. *"மயிற்குழாத்தொடும் போடுகு மன்னம்" (கந்தபு.திருநகரப்.31).* 2. சபை; society, company, association. *"சான்றோர் குழாஅத்து" (குறள்.840).*

*[குழு → குழுவம் → குழாம்.]*

**குழாம்பல்** *kulāmbal,* பெ.(n.) குழம்பியிறுகிய பொருள்; any liquid of a thick consistency, as curry, mud.

*[குழம்பல் → குழாம்பல்.]*

**குழாய்**[1] *kulāy,* பெ.(n.) 1. துளையுடைய பொருள் (பிங்.); tube, pipe. 2. துளை; tubular cavity, hollow.

*[குள் → குழை → குழாய்.]*

**குழாய்**[2] *kulāy,* 1. வாயு தண்ணீர் ஆவி முதலியவை களைக் கொண்டு வரப் பயன்படுத்தும் உள்துளைக் கருவி; hollow cylindrical tube of wood, metal, etc. for the conveyance of gas, water, vapour etc. 2. உடம்பினுள் உள்ள தாரை, கால்வாய் முதலிய உட்டுளைக் கருவி; a tublar organ, passage, canal or vessel in an animal body often preceded by a defining word as mention below.

குழாய் வகைகள்: 1.காற்றுக்குழாய் 2. சுவாசக் குழாய் 3. இரத்தக் குழாய் 4. கேள்விக்குழாய் 5. கருவிழிக்குழாய் 6. கருப்பைக்குழாய் 7. நாதக்குழாய் 8. சிறுநீர்க்குழாய் 9. அன்னாசக்குழாய் 10. உதரக்குழாய் 11.ஊட்டுங்குழாய் 12. இணைக்குங்குழாய் 13.ஊதுகுழாய் 14. மூங்கிற் குழாய் 15. பீச்சுக் குழாய் 16. சோதனைக் குழாய் (சா.அக.).

*[குள் → குழை → குழாய்.]*

**குழாய்க்கந்தகம்** *kuḷāy-k-kandagam,* பெ.(n.) வாணக் கந்தகம்; roll or stick sulphur (சா.அக.).

*[குழாய் + கந்தகம்.]*

**குழாய்க்கிணறு** *kuḷay-k-kiṇaṟu,* பெ.(n.) குழாயிறக்கி உண்டாக்கிய கிணறு; Artesian well, tube-well.

*[குழாய் + கிணறு.]*

**குழாய்ப்பிட்டு** *kuḷāy-p-piṭṭu,* பெ.(n.) குழற்பிட்டு; a kind of soft pastry.

*[குழல் → குழாய் + பிட்டு.]*

**குழாய்மீன்** *kuḷāy-mīṉ,* பெ.(n.) குழல்மீன்; pipe fish (சா.அக.).

*[குழாய் + மீன்]*



குழல்

**குழாய்மூங்கில்** *kuḷāy-mūṅgil,* பெ.(n.) உள்ளே தொளையுள்ள மூங்கில்; common bamboo.

*[குழாய் + மூங்கில்.]*

**குழாயிரும்பு** *kuḷā-y-irumbu,* பெ.(n.) உருக்கி அச்சில் வார்த்த இரும்பு; cast iron (சா.அக.).

*[குழாய் + இரும்பு.]*

**குழாயோடு** *kuḷā-y-ōḍu,* பெ.(n.) உட்குழலாயுள்ள ஒருவகை ஓடு; kind of tublar tile.

*[குழாய் + ஓடு.]*

**குழி[1]-தல்** *kuḷi-,* 4 செ.கு.வி.(v.i.) உட்குழிவாதல்; to be hollowed out, as a hole, a pit, acanity; to sink, hollow. *"குழிந்தாழ்ந்த கண்ணவாய்" (நாலடி.49).*

**ம.** குழியுக; **க.** குழி; **கெ.** க்ரொய்யு, க்ரொய்யி.

**Fin.** kaivā; **Es.** kaeva; **Marl.** koem; **Turk.** kazy; **Q.** gaywi.

*[குழி → குழிதல்.]*

**குழி[2]-த்தல்** *kuḷi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. குழியாக்குதல்; to form pits, hollows, cavities, to sink, excavate. *"குழித்து நிற்பது நீர்" (நான்மணி.30).* 2. செதுக்குதல்; to inscribe, engrave. *"குழித்த மோதிரம்" (கலித்.84,உரை.).*

**ம.** குழிக்குக; **க.** குழி; **து.** குரைபுனி, குரெபினி, கொரெபுனி, கொரைபினி; **தெ.** க்ரொச்சு, க்ரெச்சு.

*[குழி → குழித்தல்.]*

**குழி[3]** *kuḷi,* பெ.(n.) 1. பள்ளம் (திவா.); pit, hole, hollow, cavity, dimple, depression, excavation. 2. நீர்நிலை (பிங்.); tank, pond. 3. கிணறு (திவா.); well. 4. வயிறு (அக.நி.); stomach. 5. பட்டைக் கிடங்கு; cavity at the bottom of a well. 6. பாத்தி; garden bed, irrigated portion of a garden. *"இன்சொற்குழியின்" (நான்மணி.16).* 7. ஓர் எண்ணின் வருக்கம்; square of a number. 8. சதுர அடி (இ.வ.); square foot. 9. கனவடி (இ.வ.); cubic foot. 10. பன்னீரடிச் சதுரக்குழி; twelve feet square in land measure. 11. 144 சதுரஅடி முதல் 576 சதுர அடிவரை பற்பல இடங்களில் வெவ்வேறாய் வழங்கும் ஒரு நிலவளவு; a land measure varying in different places from 144 sq.ft to 576 sq.fr. 12. 33 அங்குலங் கொண்ட தச்சுக்கோலின் சதுர நிலவளவை; a unit of square measurement for building sites the square of a *tacca-k-kōl* of 33 in. (G.Tn.D.239). 13. உடம்பினுள்ளாவது, அதன் உறுப்பினுள்ளாவது ஏற்படும் குழி, அவ்விடத்தைப் பொறுத்தே பெயர் பெறும்; hollow space or place with in the body or in one of its organs.

*[குல் → குள் → குழி.]*

E. hole; A.S. hol; Dut. hol; Dan. hul; G. hohl; Gk. koilos; E. hollow.

*குழி வகைகள்:* 1. வயிற்றினுட் குழி 2. பல்லிடைக்குழி 3. *பிண்டக்குழி* பார்க்க 4. அம்மைக்குழி 5. நாசிக்குழி 6. உதரக்குழி 7. செவிக்குழி 8.புண்குழி 9. கன்னக்குழி 10. இரத்தக்குழி 11. சோற்றுக்குழி 12. கசக்குழி இரத்தம் சொரியும் குழி 13.கபாலக்குழி 14. அக்குட்குழி 15. *பெருங்குழி* பார்க்க எண்.12. 16. வாய்க்குழி 17. இடைக்குழி 18. மார்புக்குழி 19. நாபிக்குழி 20. கண்குழி 21. கருப்பக்குழி அல்லது கருக்குழி 22. உச்சிக்குழி 23. கைக்குழி 24. நாற்றக்குழி 25. ஊரற்குழி 26. படுகுழி 27. ஊற்றுக்குழி 28. பிரேதக்குழி 29. புடக்குழி 30. நெற்புடக்குழி 31. சமாதிக்குழி (சா.அக.).

**குழிக்கண்** *kuḻi-k-kaṇ,* பெ.(n.) பெ.(n.) குழிவான கண்; sunken eye.

க. குழிகண், குணிகண்ணு, குளிகண்ணு, குளிகண்.

*[குழி + கண்.]*

**குழிக்கண்ணன்** *kuḻi-k-kaṇṇaṉ* பெ.(n.) குழிந்த கண்ணுள்ளவன்; a sunken eyed man.

ம. குழிகண்ணன், குழிக்கண்ணன்.

*[குழி + கண்ணன்.]*

**குழிக்கண்ணி** *kuḻi-k-kaṇṇi,* பெ.(n.) குழிவான கண்ணுள்ளவள்; woman with sunken eyes. *"பெருகு குழிக்கண்ணி செங்கண்ணி" (பரத.ஒழிபி. 39).*

ம. குழிகண்ணி, குழிக்கண்ணி.

*[குழி + கண்ணி.]*

**குழிக்கணக்கு** *kuḻi-k-kaṇakku,* பெ.(n.) ஒருவகை நிலவளவை; square measure of land.

ம. குழிக்கணக்கு

*[குழி + கணக்கு.]*

**குழிக்கல்** *kuḻi-k-kal,* பெ.(n.) ***குழியம்மி*** பார்க்க; see *kūḻi-y-ammi.*

*[குழி + கல்.]*

**குழிக்கலம்** *kuḻi-k-kalam,* பெ.(n.) குழிவாயுள்ள ஏனம்; a basin or pot with a deep hollow.

*[குழி + கலம்.]*

**குழிக்கிட்டி** *kuḻi-k-kiṭṭi,* பெ.(n.) கிட்டி விளையாட்டு; the game of tip-cat.

*[குழி + கிட்டி.]*

**குழிக்குத்து** *kuḻi-k-kuttu,* பெ.(n.) செடி முதலியவற்றைப் பிடுங்கி நடுங்குழி; pit made for transplantation.

*[குழி + குத்து.]*

**குழிங்கை** *kuḻiṅgai,* பெ.(n.) உள்ளங்கை (இ.வ.); palm of the hand.

*[குழியும் + கை – குழியுங்கை → குழிங்கை.]*

**குழிச்சட்டி** *kuḻi-c-caṭṭi,* பெ.(n.) 1. பணியாரஞ்சுடும் குழியுள்ள மண்சட்டி; earthen pan with hollow cavities for frying cakes. 2. ஆழமான மண்சட்டி; a hollow earthern cooking pot (சா.அக.).

ம. குழிகலம்

*[குழி + சட்டி.]*

**குழிச்சிலந்தி**[1] *kuḻi-c-cilandi,* பெ.(n.) குழிவிழும் ஒரு சிலந்திப்புண்; any sore or ulcer with a hole or cavity (சா.அக.).

*[குழி + சிலந்தி.]*

**குழிச்சிலந்தி**[2] *kuḻi-c-cilandi,* பெ.(n.) சிலந்திவகை; a species of spider.

*[குழி + சிலந்தி.]*

**குழிசி** *kuḻiši*, பெ.(n.) 1. பானை; pot, cooking vessel. *"சோறடு குழிசி" (பெரும்பாண்.366).* 2. மிடா (திவா.); large pot. 3. சக்கரத்தின் குடம்; hub of a wheel. *"கூடுளி முகம்பொரக் குழிசி மாண்டன" (சீவக.2229).*

*[குழி → குழித்தி → குழிசி.]*

**குழிசீலை** *kuḻi-šīlai*, பெ.(n.) கோவணம் (இ.வ.); a narrow piece of cloth wornover the privities, loin-cloth.

ம. குழிச்சீலை

*[கிழி → குழி + சீலை.]*

**குழிசோதனை** *kuḻi-sōdaṉai*, பெ.(n.) விளைந்த வயலில் குழியளவுள்ள இடத்தில் வளர்ந்த கதிரை அறுத்தளந்து விளைவு மொத்தத்தை மதிப்பீடு செய்தல் (இ.வ.); estimation of the total produce of a field from that of a single *kuḻi* harvested.

*[குழி + சோதனை.]*

**குழித்தட்டு** *kuḻi-t-taṭṭu*, பெ.(n.) தாம்பாளவகை; a kind of plate or salver (S.I.I.iii.295).

*[குழி + தட்டு.]*

**குழித்தருப்பணம்** *kuḻi-t-taruppaṇam*, பெ.(n.) இறந்த நாள் முதல் பத்தாம் நாள் முடிய இறந்தவர் பொருட்டு நட்ட கல்லுள்ள குழியில் செய்யும் நீர்க்கடன்; libation offered to the deceased, for ten days from the day of death in a pit in which is placed a stone representing the deceased.

*[குழி + தருப்பணம்.]*

**குழித்தளிகை** *kuḻi-t-taḷigai*, பெ.(n.) கோவிலிற் கறி கன் கன்னல் முதலியவற்றோடு இடும் படையல்; boiled rice and relish, offered to gods in temples.

*[குழி + தளிகை.]*

**குழித்தாமரை** *kuḻi-t-tāmarai*, பெ.(n.) கொட்டைப் பாசி (மலை.); root lees nelumbo, floating in tanks and ditches.

ம. குழித்தாமர

*[குழி + தாமரை.]*

**குழித்தாழி** *kuḻi-t-tāḻi*, பெ.(n.) கால்நடைகளுக்கு நீர் கொடுக்க பயன்படுத்தும் திண்மையான ஏனம்; a large earthern vessel used to water cattle.

ம. குழித்தாளி

*[குழி + தாளி.]*

**குழித்தி** *kuḻitti*, பெ.(n.) ***குழித்தாழி*** பார்க்க; see *kuḻi-t-tāḻi*

மறுவ. குழிதாழி

*[குழி → குழித்தி.]*

**குழித்தைலம்** *kuḻi-t-tailam*, பெ.(n.) குடத்தில் மூலிகைகளை நிரப்பி எரித்து வடிக்கும் தைலம்; lit., pit oil extracted by burying and heating the pot containing medicinal herbs. *"காந்தட் கிழங்கை குழித்தைலமாக இறக்கி" (இராசவைத். 96,உரை).*

*[குழி + தைலம்.]*

**குழிதந்தம்** *kuḻi-tandam*, பெ.(n.) நகம்; nail (சா.அக.).

*[குழி + தந்தம்.]*

**குழிதாழி** *kuḻi-tāḻi*, பெ.(n.) பூத்தொட்டி; flower pot.

*[குழி + தாழி.]*

**குழிதிற–த்தல்** *kuḻi-tira-*, 3 செ.கு.வி.(v.i.) சில விழாக்களின் முடிவில் தீயில் நடந்து சென்று நேர்ந்து கொண்டதை நிறைவேற்றுவதற்காகக் குழிகளில் தழல் பரப்பி வைத்தல்; to open the sacred fire pit with appropriate ceremonies, as in muharram feast.

*[குழி + திறத்தல்.]*

**குழிந்தம்** *kuḻindam,* பெ.(n.) நகம்; nail (சா.அக.).

*[குழி → குழிந்தம்.]*

**குழிந்திரு-த்தல்** *kuḻindiru-,* 3 செ.கு.வி.(v.i.) குழியாயிருத்தல்; being hollow like a cavity (சா.அக.).

*[குழிந்து → இருத்தல்.]*

**குழிந்தெடு-த்தல்** *kuḻindeḍu-,* 4 செ.குன்றாவி.(v.t.) ஆராய்ந்து பார்த்தல்; to scrutinize, dive deep, to be very inquistive about.

*[குழிந்து + எடுத்தல்.]*

**குழிநரி** *kuḻi-nari,* பெ.(n.) 1.குள்ளநரி; jackal. *"காயும் சிந்தைக் குழிநரிக் கள்ளத்தான்" (குற்றா. தல.வேடன்வலம்.13).* 2.மணலிற் குழி செய்து கொண்டு அதனுள் விழும் எறும்பு முதலியவற்றை உணவாகக் கொள்ளும் சிறுபூச்சி; *ant-lion,* neuropterous insect the larva of which makes in the sand a pit-fall to capture ants.

ம. குழிநரி

*[குழி + நரி.]*

**குழிநரி** *kuḻi-nari,* பெ.(n.) ***குழிப்பன்றி*** பார்க்க; see *kuḻi-panṟi.*

*[குழி + நரி.]*

**குழிநாவல்** *kuḻi-nāval,* பெ.(n.) நாவல் மரவகை; common, myrtle.

*[குழி + நாவல்.]*

**குழிப்பணம்** *kuḻi-p-paṇam,* பெ.(n.) 18ஆம் நூற்றாண்டில் மதுரைப் பகுதியில் வழங்கிவந்த ஒருவகை நாணயம்; a Madura coin, current in the 18th c (I.M.P. Mr.3-A).

*[குழி + பணம்.]*

**குழிப்பணியாரம்** *kuḻi-p-paṇi-y-āram,* பெ.(n.) பணியாரவகை; a kind of cake.

*[குழி + பணியாரம்.]*

**குழிப்பறங்கிக்காய்** *kuḻi-p-paṟaṅgi-k-kāy,* பெ.(n.) கோடைப் பூசணி (பதார்த்.699); a species of pumpkin.

*[குழி + பறங்கி + காய்.]*

**குழிப்பறை** *kuḻi-p-paṟai,* பெ.(n.) பழங்குடி இனத் தாரின் குடிப்பெயர் (வின்.); a kind of scheduled class people.

*[குழி + பறை.]*

**குழிப்பன்றி** *kuḻi-p-panṟi,* பெ.(n.) பூச்சிவகை; ant-lion.

*[குழி + பன்றி.]*

**குழிப்பன்னா** *kuḻi-p-pannā,* பெ.(n.) கடல்மீன்கள்; species of sea-fish, (a) brownish-red, attaining more than 21/2 ft. in length (b) greyish, attaining 16. in length, (c) silvery-grey, attaining 9 in. length.

*[குழி + பன்னா.]*

**குழிப்பாடி** *kuḻi-p-pāḍi,* பெ.(n.) குழிப்பாடி என்னும் ஊரில் நெய்த துணிவகைகள் (தொல்.சொல். 116,உரை); cloth made in town of *kuḻi-p-pāḍi.*

*[குழி + பாடி – குழிப்பாடி (இடவாகுபெயர்)]*

**குழிப்பாம்பு** *kuḻi-p-pāmbu,* பெ.(n.) ***குழிமீன்*** பார்க்க; see *kuḻimīn.*

*[குழி + பாம்பு.]*

**குழிப்பாறை** *kuḻi-p-pāṟai,* பெ. (n.) பாறைமீன்வகை; a kind of *pāṟai* fish.

*[குழி + பாறை.]*

**குழிப்பிள்ளை** *kuḻi-p-piḷḷai*, பெ.(n.) ஆழத்தில் நடுந்தென்னங்கன்று; young coconut tree planted deep.

*[குழி + பிள்ளை.]*

**குழிப்பு** *kuḻippu*, பெ.(n.) 1. குழி செய்கை; forming pits, hollows. 2. தாழ்வு; depression. 3. செய்யுட் சந்த வகை; a peculiar harmonic rythem in verse, as *"அணியுடன்ற பரி பரியுடண்ற கரி கரியுடன்ற கொடி".*

*[குழி → குழிப்பு.]*

**குழிப்புண்** *kuḻi-p-puṇ*, பெ.(n.) 1. குழிவிழுந்த புண்; ulcer in which holes are formed. *"கானா வாழைக்கு முலைக்கண் குழிப்பு ணாறிவிடும்" (பதார்த்த.365).* 2. வாய்ப்புண் (இ.வ.); inflammation in the mouth.

*[குழி + புண்.]*

**குழிப்பூதரம்** *kuḻippūdaram*, பெ.(n.) மீனைமரம்; a kind of tree (சா.அக.).

*[குழி + பூதரம்.]*

**குழிப்பூப்புடம்** *kuḻippū-p-pudam*, பெ.(n.) முப் பூப்புடங்களுள் மருந்தைக் குழியில் வைத்து எடுக்கும் புடவகை; calcining medicine by putting it into a closed pit or hole for some time, one of *mu-p-pū-p-puṭam.*

*[குழிப்பூ + புடம்.]*

**குழிப்பெருக்கம்** *kuḻi-p-perukkam*, பெ.(n.) ***குழி மாற்று*** பார்க்க; see *kuḻimaṟṟu.*

**மறுவ.** குழிமாற்று

**ம.** குழிப்பெருக்கம்

*[குழி + பெருக்கம்.]*

**குழிபறி-த்தல்** *kuḻi-paṟi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. குழி தோண்டுதல்; to dig a pit. *"குழிபறித்தரக்கரோடு மல்லரை யிருத்தி" (பாரத.இருட்.179).* 2. சூழ்ச்சிக் கலந்துரையாடிப் (சதியாலோசனை செய்து) பிறர்க்குத் தீங்கு செய்ய முயலுதல்; to try to ruin, undermine.

*[குழி + பறி-.]*

**குழிபறி-தல்** *kuḻi-paṟi*, 4 செ.கு.வி.(v.i.) பள்ளம் விழுதல் (யாழ்.அக.); to become hollow; to be full of its or ruts.

*[குழி + பறி.]*

**குழிமாடம்** *kuḻi-māḍam-*, பெ.(n.) சவக்குழிக்கு மேல் கட்டப்படும் கட்டடம்; a tomb.

**ம.** குழிமாடம்

*[குழி + மாடம்.]*

**குழிமாத்தி** *kuḻimātti*, பெ.(n.) மலை வேம்பு; Indian mahogany (சா.அக.).

*[குழி + (மரத்தி) மாத்தி.]*

**குழிமாந்தம்** *kuḻi-māndam*, பெ-(n) உச்சியில் குழிவிழுமாறு தோன்றும் மாந்தநோய் வகை (சீவரட்); a child's disease in which the fontanel of the head sinks.

*[குழி + மாந்தம்.]*

**குழிமாற்று** *kuḻi-māṟṟu*, பெ.(n.) 1. வருக்க வாய்பாடு; table of squares. 2. பெருக்கல் வாய்ப்பாடு; multiplication table.

**மறுவ.** குழிப்பெருக்கம்

*[குழி + மாற்று.]*

**குழிமாறு-தல்** *kuḻi-māṟu-*, 8 செ.குன்றாவி. (v.t.) 1. வருக்கித்தல் (வின்.); to square. 2. பெருக்குதல்; to multiply.

*[குழி + மாறு.]*

**குழிமாறு-தல்** *kuli-māru,* 5 செ.குன்றாவி. (v.t.) குழியை நிரப்பிப் பரப்பாக்குதல் (யாழ்.அக.); to level up.

*[குழி + மாறு.]*

**குழிமி** *kulimi,* பெ.(n.) 1. மதகு; sluice. 2. பாத்திரத்தின் மூக்கு; spout of a vessel.

*[குழி → குழிமி.]*

**குழிமிட்டான்** *kulimittān,* பெ.(n.) 1. நத்தைச்சூரி நாணல் வகை (மலை.); bristly button weed. 2. தண்ணீர் விட்டான் கிழங்குக் கொடி; a common climber with many thick fleshy roots. 3. செடிவகை; rough basil.

*[குழிமி → குழிமிட்டான்.]*

**குழிமீட்டான்** *kuli-mittān,* பெ.(n.) ***குழிமிட்டான் (பதார்த்த.295)*** பார்க்க; see *kulimittān.*

*[குழி + மீட்டான்.]*

**குழிமீண்டான்** *kuli-mindān,* பெ.(n.) உயிர் போனதாக நினைத்துக் குழியில் வைத்துப் பின்னர், எடுத்த பிள்ளை; child which with a view to avert its premature death is treated as dead, placed in a grave and then taken back.

*[குழி + மீண்டான்.]*

**குழிமீன்** *kuli-min,* பெ.(n.) பாம்பு வடிவான மீன்வகை; congereel, olive, attaining more than 10ft. in length.

*[குழி + மீன்.]*

**குழிமுசடி** *kulimusādi,* பெ.(n.) மீன் கொல்லி; fish killer (சா.அக.).

*[குழி + (மூயடி) முசடி.]*

**குழிமுயல்** *kulimuyal,* பெ.(n.) முயல்வகை; rabbit.

ம. குழிமுயல்

*[குழி + முயல்.]*

**குழிமுயல்வளை** *kulimuyal-valai,* பெ.(n.) சீமை முயல் வசிக்குமிடம்; cony burrow (சா.அக.).

*[குழி + முயல் + வளை.]*

**குழியச்சு** *kuli-y-accu,* பெ.(n.) பொன்மணி உருவாக்கும் அச்சு; mould for making gold beads.

*[குழி + அச்சு.]*

**குழியடிச்சான்** *kuli-y-adiccān,* பெ.(n.) ஆவணி புரட்டாசி மாதங்களில் விதைக்கப்பெற்று நான்கு மாதங்களில் விளையும் நெல்வகை (இ.வ.); a course paddy sown in āvani-purattāci maturing in four months.

*[குழி + அடிச்சான்.]*

**குழியடுப்பு** *kuli-y-aduppu,* பெ.(n.) தரையைத் தோண்டி உருவாக்கும் அடுப்பு; an oven dig out in the earth.

ம. குழியடுப்பு

*[குழி → குழித்தி.]*

**குழியம்** *kuliyam,* பெ.(n.) 1. திரள்வடிவு (திவா.); globular, round shape. 2. நறுமண உருண்டை (14,171 அரும்.); perfume ball.

*[குழி → குழியம்.]*

**குழியம்மி** *kuli-y-ammi,* பெ.(n.) மருந்தரைக்கும் கலுவம்; a kind of hollow stone mortar used for macerating medicines.

ம. குழியம்மி

*[குழி + அம்மி.]*

**குழியல்** *kuliyal,* பெ.(n.) 1. மாழையாற் செய்யப்பட்ட ஒருவகைக் குழிவான ஏனம்; a kind of hollow metallic vessel. 2. அகப்பை; a ladle, spoon.

ம. குழியல்

*[குழி → குழியல்.]*

**குழியவிடு-தல்** *kuḻi-y-aviḍu-,* 3 செ.குன்றாவி. (v.t.) பொன்னைக் குழியுண்டாம்படி அச்சிடுதல்; to form the halves of hollow gold beads to be after-wards soldered together, in jewellery.

*[குழி - குழியவிடு.]*

**குழியானை** *kuḻiyāṉai,* பெ.(n.) ***குழிநரி*** பார்க்க;see *kuḻinari.*

மறுவ. குழிநரி

ம. குழியான

*[குழி + யானை.]*

**குழியில் விழு-தல்** *kuḻiyilviḻu-,* 3 செ.கு.வி.(v.i.) தீநெறிப்படுதல்; lit; to fall into a pit; to fall in to evil ways, vice.

*[குழி + இல் + விழு.]*

**குழியில் வை-த்தல்** *kuḻiyilvai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1.பிணத்தைப் புதைத்தல்; burrying as the dead. 2. மருந்தப் புடக்குழியில் வைத்தல்; placing a medi-cine in a pit for purposes of calcinations (சா.அக.).

*[குழி + வை.]*

**குழியுரல்** *kuḻiyural,* பெ.(n.) 1. தரையில் பதிக்கப்பட்ட உரல்; a mortar which is fixed in the ground.

ம. குழியுரல்

*[குழி + உரல்.]*

**குழிவண்டு** *kuḻivaṇḍu,* பெ.(n.) குழியில் வசிக்கும் வண்டு; beetle living in holes under ground (சா.அக.).

*[குழி + வண்டு.]*

**குழிவயிறு** *kuḻi-vayiṟu,* பெ.(n.) 1.வயிறு; belly. 2. கருக்குழி; womb.3. பள்ளம்; cavity or depres-sion.4. புடமிடும் குழி; a pit of varied depth intended for calcination. (சா.அக.).

*[குழி + வயிறு.]*

**குழிவரியேற்று-தல்** *kuḻi-vari-y-ēṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) அரசிறையிடுதல் (S.I.I.iii,12); to levy land tax.

*[குழி + வரி + ஏற்று.]*

**குழிவாழை** *kuḻi-vāḻai,* பெ.(n.) வாழைவகை; a species of plantain.

*[குழி + வாழை.]*

**குழிவாளை** *kuḻivāḷai,* பெ.(n.) குழிவிழும் ஒரு தோல் நோய் (கிரந்தி)ப்புண்; a kind of syphilitic ulcer with a cavity or depression in the centre (சா.அக.).

*[குழி + வாளை.]*

**குழிவித்து வை-த்தல்** *kuḻivittu-vai-,* 3 செ.கு.வி. (v.i.) உழவு காலில் கொஞ்சங் கொஞ்சமாக விதையையிட்டுப் புழுதி மண்ணையிட்டு மூடி வைத்தல்; to as the land is furrowed, and cover it with dust.

*[குழி → குழிவி →குழிவித்து + வை .]*

**குழிவு** *kuḻivu,* பெ.(n.) 1. குழிந்திருக்கை; hollowness, depression. 2. மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று; a flaw in ruby. *"மாணிக்கம் குழிவும் பிரகாரமும்" (S.I.I.ii,81).*

ம. குழிவு

*[குழி →குழிவு.]*

**குழிவெட்டி** *kuḻi-veṭṭi,* பெ.(n.) பிணக்குழி தோண்டு பவன்; grave digger.

*[குழி + வெட்டி.]*

**குழிவெட்டு** *kuḻiveṭṭu,* பெ.(n.) வயல் நிலத்தைச் சமப்படுத்த மேட்டை வெட்டும் வெட்டு; digging in a field for the purpose of levelling it.

*[குழி + வெட்டு.]*

**குழிவேர்** *kuḻivēr,* பெ.(n.) நிலத்துக்குள் புதைந்த வேர்; root burried under the earth (சா.அக.).

*[குழி + வேர்.]*

**குழு**[1] *kuḷu,* பெ.(n.) 1. மக்கட்கூட்டம் (திவா.); class, society, band, assembly. 2. பெண்கள் கூட்டம் (பிங்.); assembly or gathering of women. 3. ஆடு முதலியவற்றின் கூட்டம்; flock, herd, swarm, shoal. 4. தொகுதி; bundle, heap. *"இந்தனக் குழுவை" (ஞானா.63.11).*

ம. குழு

*[குல் → குள் → குழு.]*

**குழு**[2] *kuḷu,* பெ.(n.) 1. சூழ்ச்சி, தந்திரம்; ingenuity. 2. தந்திரமான சொல்; shrewd utterance. 3. திறமையான சொல்; wit, witty, expression.

*[குல் → குள் → குழு.]*

**குழு**[3] *kuḷu,* பெ.(n.) அடங்காமை (யாழ்.அக.); intractability.

*[குல் → குல்லு → குறு → குறுவன் → குழு.]*

**குழுக்கடா** *kuḷu-k-kaḍā,* பெ.(n.) காட்டெருமை; wild buffalo (சா.அ க.).

*[குழு + கடா.]*

**குழுக்காலி** *kuḷu-k-kāli,* பெ.(n.) கட்டுக்கடங்காமற் கொழுத்திருக்கும் மந்தைமாடு (இ.வ.); well shaped intractable bull in a herd.

*[குழு + காலி.]*

**குழுக்கூலி** *kuḷu-k-kūli,* பெ.(n.) களவு போனதை மீட்டுக் கொடுப்பதற்காகப் பொருட்குரியவர் கொடுக்கும் பொருளில் இடைநின்று அச் செயலுக்கு உதவிய சிற்றூர்க் காவற்காரனுக்குரிய பங்கு; share of money paid to the village watchman for acting as intermediary and restoring the stolen property of to the owner.

*[குழு + கூலி.]*

**குழுக்கெண்டை** *kuḷu-k-keṇḍai,* பெ.(n.) வால் மீன் (மீன்பிடி.சொ.தொ.);a kind of fish.

*[குழு + கெண்டை.]*

**குழுதாடி** *kuḷu-tāḍi,* பெ.(n.) ***குழுதாழி*** பார்க்க; see *kuḷutāḷi*

*[குழு + (தாழி) தாடி.]*

**குழுதாழி** *kuḷu-tāḷi,* பெ.(n.) 1. குழுதாழி, மாட்டுத் தொட்டி; cattle trough, made of clay and burnt. 2. ***குழுதாழி*** பார்க்க; see *kuḷutāḷi.*

மறுவ. குழித்தி

*[குழு → குழு + தாழி.]*

**குழுதி** *kuḷudi,* பெ.(n.) கிரகப்பூச்சி; a kind of insect (சா.அக.).

*[குழு → குழுதி.]*

**குழுப்படை** *kuḷu-p-paḍai,* பெ.(n.) அரசனால் அமர்த்தப்பட்ட தலைவனையுடைய படை (சுக்கிரநீதி,303); forces under the command of a general appointed by the king.

*[குழு + படை.]*

**குழும்பு**[1] *kuḷumbu,* பெ.(n.) குழி; pit. *"ஆழ்ந்த குழும்பிற் றிருமணி கிளர" (மதுரைக் 273).*

*[குழு → குழும்பு.]*

**குழும்பு**[2] *kuḷumbu,* பெ.(n.) திரள்; herd, flock, swarm, crowd. *"களிற்றுக் குழும்பின்" (மதுரைக்.24).*

*[குழு → குழும்பு.]*

**குழுமல்** *kulumal,* பெ.(n.) 1. கூடுகை; assembling, crowding. *"விண்ணவர் யாவரும் குழுமலுற்று" (கந்தபு.தேவகிரி.21).* 2.கூட்டம் (பிங்.); assembly, crowd.

*[குழு → குழுமல்.]*

**குழுமு-தல்** *kulumu-,* 7 செ.கு.வி.(v.i.) 1. கூடுதல்; to collect in large numbers, as men, animals. *"மாத ரெண்ணிலார் குழுமி" (காஞ்சிப்பு. பன்னிரு.134).* 2. கலத்தல்; to gather together, mix. *"கொன் றையும் துளவ மும் குழுமத் தொடுத்த" (சிலப்.12, உரைப்பாட்டு மடைக்குப்பின் செய்யுள்.10).* 3. கூடி முழங்குதல்; to roar in company, as tigers. *"கூட்டுறை வயமாப்புலியொடு குழும" (மதுரைக். 677).*

**ம.** குழுமுக

**Fin.** kummuta; **Es.** kummuda; **Hantl.** kump; **Hung.** hab; **Jap.** kabi.

*[குழு → குழுமுதல்.]*

**குழுமுரல்** *kulu-mural,* பெ.(n.) ஒருவகை முரல் மீன்; a species of thick needle-fish.

*[குழு → குழுமுறல்.]*

**குழுமேதி** *kulumēdi,* பெ.(n.) காட்டெருமை; wild buffalo (சா.அக.).

*[குழு + மோதி. போத்து →மோத்து →மோதி →மேதி.]*

**குழுமை** *kulumai,* பெ.(n.) ஒற்றுமை, ஒன்று பாட்டுணர்வு; integrity colesion.

*[குழு →குழுமை.]*

**குழுமைக்கட்டி** *kulumai-k-katti,* பெ.(n.) 1. உமிழ்நீர்ச் சுரப்பியில் எரிச்சலை உண்டுபண்ணி, கழுத்தைச் சுற்றி வீக்கங் காணும் ஒரு நோய்; a disease consisting of inflammation of the salivary glands with swelling along its neck. 2. குளுமக் (சைத்திய) கட்டி; a tumour or swelling of the tonsils from cold (சா.அக.).

*[குளுமை →குழுமை + கட்டி.]*

**குழுவல்** *kuluval,* பெ.(n.) 1. கூடுகை; crowding, assembling. *"குமரரு மங்கைமாருங் குழுவலால்" (கம்பரா.வரைக்.28).* 2.கூட்டம்; crowd, assembly.

*[குழு → குழுவல்.]*

**குழுவன்**[1] *kuluvan,* பெ.(n.) **குளுவன் (சங்.அக.)** பார்க்க;see *kuluvan*

*[குழு → குழுவன்.]*

**குழுவன்**[2] *kuluvan,* பெ.(n.) சொற்கேளாதவன் (யாழ்.அக.); intractable person.

*[குறுவன் → குழுவன்.]*

**குழுவு-தல்** *kuluvu-,* 6 செ.கு.வி. (v.i.) 1. கூடுதல்; to assemble in large numbers, to crowd. *"மள்ளர் குழீஇய விழவினானும்" (குறுந்.31).* 2. கலத்தல்; to associate, mingle. *"இகலில ரெஃகு டையார் தம்முட் குழீஇம்" (நாலடி.137).*

*[குழு - குழுவு.]*

**குழூஉ** *kulūu,* பெ.(n.) கூட்டம்; class, assembly, crowd. *"சாதிகுழூஉ" (நன்.211).*

*[குழுவு → குழூஉ.]*

**குழூஉக்குறி** *kulū-ukkuri,* பெ.(n.) 1. சிற்சில கூட்டத்தார்க்குள் வழங்கும் குறிப்பு மொழி (நன்.267); conventional term, peculiar to a society or profession one of three *tagudi-valakku.*

*[குழூஉ + குறி.]*

**குழூஉநிலை** *kulū-u-nilai,* பெ.(n.) கோபுரமுதலிய கட்டடத்தின் தளநிலைகள்; series of stories in a building. *"குழூஉநிலைப் புதவின்" (பதிற்றுப்.53.16).*

*[குழூஉ + நிலை.]*

**குழூஉப்பெயர்** *kulū-uppeyar,* பெ.(n.) கூட்டம் பற்றி வரும் பெயர்ச்சொல்; collective noun. *"சாதிகுழூஉப்பெயர்" (நன்.211).*

*[குழூஉ + பெயர்.]*

**குழை**[1]**-தல்** *kuḻai-*, 4 செ.கு.வி.(v.i.) 1. இளகு பதமாதல்; to become soft, mashy 6, pulpy, as well-cooked *'குழையச் சமைத்த பகுப்பு' (திவ். பெரியாழ்.3, 1,3.வ்யா).* 2. மனமிளகுதல்; to melt, become tender as the mind. *"தொண்டரினம் குழையாத் தொழும்" (பதினொ.பட்டினத். திருவே.28).* 3.சோறு அளிதல்; to be overboiled, as rice. 4. நெருங்கி உறவாடுதல்; to be in close intimacy, to be hand in glove with. குழைந்து பரிமாறுகிறார்கள். 5. வளைதல்; to be bent, as a bow. *"திண்சிலை குழைய" (சூளா.அரசியற்.319).* 6. வாடுதல்; to fade, languish become spoilt, as flowers or twigs. *"மோப்பக்குழையும் அனிச்சம்" (குறள்.90).* 7. துவளுதல்; to wave, as a flag, to sway to and fro. *"குழைந்த நுண்ணிடை" (கம்பரா.சித்திர.9).* 8. தளர்தல்; to be tired to be weighed down *"கோதைசூழ் கொம்பிற் குழைந்து" (பு.வெ.12, பெண்பாற்.14).* 9. வருந்துதல்; to be troubled. *"மகளிர் குழைகின்ற குழைவை" (கம்பரா. பிரமாத்.31).*

**ம.** குழயுக; **க.** கொழெ; **தெ.** க்ருள்ளு; **து.** குறையுனி, குரைவுனி, குரிவுனி, குரியுனி; **துட.** க்வஸ்; **கோத.** கொள்வ், குத்; **குரு.** கொச்ச்னா.

**Fin.** kura; **Es.** kura; **Q.** kurpa.

*[குழை → குழைதல்.]*

**குழை**[2]**-த்தல்** *kuḻai-*, 4 செ.குன்றாவி.(v.t.) 1. குழையச் செய்தல்; to macerate, mas, reduce to fult, pulp make soft by mixing with water. சோற்றைக் குழைத்து விட்டாள். 2. மருந்துப் பொடியை தேன் முதலியனவிட்டுக் கலத்தல்; to mix, as powder with a liquid. 3. கலக்கப் பண்ணுதல்; to melt and blend in union, fuse. *"உன்னையென்னுள்ளே குழைத்தவெம் மைந்தா" (திவ்.திருவாய.2,6,9).* 4. தழையச் செய்தல்; to cause sprout or shoot forth. *"மழை குடக்கோர்பு குழைத்த சிறுகோல்"(நற்.140).* 5.திரட்டுதல்; to gather in a lump, as boiled rice. *"கருணை யாற் குழைக்கும் கைகள்" (சீவக.257).* 6.இளகுவித்தல்; to cause to melt. *"அத் தன்மெய் குழைத்தநங்கை" (கந்தபு.மேரு.16).* 7. வளைத்தல்; to bend, as a bow. *"பொன் வரை குழைத்து" (கூர்மபு. பிரமவிஷ்.உல).* 8. அசைத்தல்; to wave, as the chowry fan. to wag, as a dog its tail. *"குழைக்கின்ற கவரியின்றி" (கம்பரா.நகர்தீ.21).*

*[குழை → குழைத்தல்.]*

**குழை**[3] *kuḻai*, பெ.(n.) 1. தளிர்; tender leaf, sprout, shoot. *"பொலங்கு ழையுழிஞை" (புறநா.50).* 2. சேறு (திவா.); soft mud, mire. 3. துளை; hole. *'கோடிநுண் டுகிலுங் குழையும் (சீவக.1369).* 4. குழல் (பிங்.); tube, pipe. 5. சங்கு(பிங்.); conch. 6. காது; ear. *'மணித்தோடுங் குழையிலாட' (அஷ்டப் சீரங்க நாயகி.ஊச.3).* 7. குண்டலம்; a kind of ear-ring. *'மின்னுக் குழையும் பொற்றோடும்' (சீவக.1658).* 8. வானம் (பிங்.); sky. 9. காடு (பிங்.); jungle. 10. நெய்தல்; indian water lily.

**க.** கொளசி; **ம.** குழ.

*[குழ → குழை.]*

**குழை**[4] *kuḻai*, பெ.(n.) 1. மயிர்; hair. 2. தளிர்; tender leaf, foliage. 3. நெய்தல்; white indian water lily. 4. துளை; hole. 5. காடு; jungle. 6. காது; ear. 7. வானம், ஆகாயம்; sky. 8. குழாய்; tube (சா.அக.).

**Fin.** kurva; **Es.** kõrv; **Komi.** kõr; **Mong.** xulki; **Turk.** kulak, kulka; **O.Jap.** kura.

*[குள் →குழ→குழை.]*

**குழைக்கடி-த்தல்** *kuḻai-k-kaḍi*, 4 செ.குன்றாவி.(v.t.) குழையடித்தல் (யாழ்.அக.); to effect a cure by magic, passing a handful of neem twigs over the patient's body.

*[குழைக்கு + அடி.]*

**குழைக்காட்டான்** *kuḻai-k-kāṭṭāṉ*, பெ.(n.) நாட்டுப் புறத்தான்; rustic, boor.

*[குழைக்காடு → குழைக்காட்டான்.]*

**குழைகறி** *kuḻai-kaṟi*, பெ.(n.) குழைந்தகறி; vegetable curry softened by boiling.

*[குழை + கறி.]*

**குழைகுழை-த்தல்** *kuḻai-kuḻai-*, 4 செ.கு.வி.(v.i.) குழம்பிக்கிடத்தல்; to be confused. *"குழைகுழைத்த கல்வியினுங் கேள்வியினுங் கல்லாமை குணமே" (தண்டலை.83).*

*[குழை + குழைத்தல்.]*

**குழைச்சரக்கு** *kuḻai-c-carakku,* பெ.(n.) 1.சார மற்ற பண்டம்; worthless stuff. *"குழைச்சரக்கே யாகிலும் விடவொண்ணாத" (திவ். திருப்பா.4. வ்யா.).* 2. காக்கப்படும் பொருள்; that which is protected preserved. *"நாங்கள் உனக்குக் குழைச் சரக் கானபடி" (திவ். திருப்பா.10,வ்யா).*

*[குழை + சரக்கு.]*

**குழைச்சல்** *kuḻaiccal,* பெ.(n.) வணக்கங்காட்டுகை (கொ.வ.); obsequiousness servility.

*[குழை → குழைச்சல்.]*

**குழைச்சாந்து** *kuḻai-c-cāndu,* பெ.(n.) கட்டடம் பூசுதற்கு உதவும் கலவைச்சாந்து; softended mortar, as used in rough plastering.

*[குழை + சாந்து.]*

**குழைச்சான்** *kuḻaiccāṉ,* பெ.(n.) எப்பொழுதும் குழைந்து பணிந்து நிற்பவன், அடிமைக் குண முள்ளவன்; slavery person.

*[குழை → குழைச்சான்.]*

**குழைச்சான் கொட்டுக் கொட்டு-தல்** *kuḻaiccāṉ koṭṭu-k-koṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) அடிமை போல் வணக்கவொடுக்கமாய் நடத்தல்; to behave in a servile or obseduious manner.

*[குழைச்சான் + கொட்டு + கொட்டுதல்.]*

**குழைச்சி**[1] *kuḻaicci,* பெ.(n.) புற்றாஞ்சோறு (சங்.அக.); comb of white ant's nest.

*[குழை → குழைச்சி.]*

**குழைச்சி**[2] *kuḻaicci,* பெ.(n.) **குழைச்சு** பார்க்க;see *kuḻaiccu.*

*[குழை → குழைச்சி.]*

**குழைச்சி**[3] *kuḻaicci,* பெ.(n.) மண்வெட்டியின் காம்பு (முகவை);handle of spade.

*[குழை → குழைச்சி.]*

**குழைச்சு** *kuḻaiccu,* பெ.(n.) 1. கயிற்றுச் சுருக்கு; loop, noose in a string or cord. 2. முடிச்சு; tie, knot. 3. உடம்பிலுள்ள எலும்பின் சந்து; joint of the body, especially the socket joint of the shoulder or thigh. 4. ஆயுதக் குளசு; eye or socket of a hoe, adze, etc.

*[குழை → குழைச்சு.]*

**குழைச்சுப்படு-தல்** *kuḻaiccu-p-paḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சுருக்கிப்படுதல்;to be coiled, looped, as a rope. 2. சிக்குப்படுதல்; to be knotted, tangled.

*[குழைச்சு + படுதல்.]*

**குழைச்சு மண்வெட்டி** *kuḻaiccu-maṇ-veṭṭi,* பெ.(n.) மண்வெட்டிவகை; hoe with a socket for the handle.

*[குழைச்சு + மண்வெட்டி.]*

**குழைச்சுவிடு-தல்** *kuḻaiccu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. உடல்மூட்டு விடுதல்; to be disjointed, dislocated. 2. மண்வெட்டியின் காது முறிதல்; to be broken, as the socket of hoe.

*[குழைச்சு + விடுதல்.]*

**குழைசேறு** *kuḻai-cēṟu,* பெ.(n.) கலங்கற்சேறு (திவா.); softmire, slime.

*[குழை + சேறு.]*

**குழைந்தசோறு** *kulainda-cōṟu,* பெ.(n.) அதிகமாக வெந்து குழைந்த சோறு; over boiled rice (சா.அக.).

*[குழை → குழைந்த + சோறு.]*

**குழைந்தநீர்** *kulaindanīr,* பெ.(n.) இளநீர்; water of tender coconut (சா.அக.).

*[குழை → குழைந்த + நீர்.]*

**குழைந்தபதம்** *kulainda-padam,* பெ.(n.) அழிந்த பதம்; over boiled condition (சா.அக.).

*[குழை → குழைந்த + பதம்.]*

**குழைந்தவன்னம்** *kulainda-vaṉṉam,* பெ.(n.) குழைந்தசோறு; over boiled rice. (சா.அக.).

*[குழைந்த + வன்னம். வரைநெல் → வன்ன → வன்னம் (மூங்கிலரிசிச் சோறு).]*

**குழைநாற்றம்** *kulai-nāṟṟam,* பெ.(n.) அழுகிய இலைநாற்றம்; rotten smell of a leaf (சா.அக.).

*[குழை + நாற்றம்.]*

**குழைப்பாசி** *kulai-p-pāśi,* பெ.(n.) இலைப்பாசி; large leaved moss (சா.அக.).

*[குழை + பாசி.]*

**குழைபிடி-த்தல்** *kulaipiḍi-,* 4 செ.கு.வி.(v.i.) ஒரு செயலைத் தடைசெய்தல்; lit., to hold a bough, to obstruct an affair.

*[குழை + பிடித்தல்.]*

**குழைமறைவு** *kulai-maṟaivu,* பெ.(n.) 1. பார்வையை மேற்செல்ல விடாது தடுக்கும் தழையின் செறிவு; dense foliage, shrubbery or trees, as intercepting vision. 2. மறைந்து ஒதுங்குகை; skulking, evading.

*[குழை + மறைவு.]*

**குழைமுகப்புரிசை** *kulaimuga-p-puriśai,* பெ.(n.) அந்தப்புரம்; lit., the apartment guarded by women. women's apartment in a palace,harem zenana. *"குழைமுகப் புரிசையும் குரிசிறானகப்பட" (சீவக.275).*

*[குழைமுகம் + புரிசை.]*

**குழைமுகம்** *kulai-mugam,* பெ.(n.) கட்டட அமைப்பு வகை; a type of building construction.

*[குழை + முகம்.]*

**குழையடி-த்தல்** *kulai-y-aḍi-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. வேப்பிலையால் உடம்பில் அடித்து மந்திரித்து நோய் தீர்த்தல்; to effect a magic cure by passing a handful of neem twigs over the body. 2. வயப்படுத்த சூழ்வினை (தந்திரஞ்) செய்தல்; to wheedle, use artful means to secure a selfish interest. 3. தழையை உரமாக இடுதல்; to apply green manure to paddy fields.

*[குழை + அடித்தல்.]*

**குழையல்** *kulaiyal,* பெ.(n.) குழைந்தபொருள்; that which is mashed or softened, as over boiledrice குழையற் சோறு (உ.வ.).

*[குழை → குழையில்.]*

**குழையவடி-த்தல்** *kulaiya-vaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) சிறிது இளக்கமாகச் சோறு வடித்தல்; boiling down rice so as to be soft when eating (சா.அக.).

*[குழை → குழைய+ வடி.]*

**குழையற்கறி** *kulaiyaṟ-kaṟi,* பெ.(n.) 1. குழைய வெந்தகறி; mashy or pulpy curry. 2. அதிகமாக வெந்தகறி; curry overboiled.

*[குழையல் + கறி.]

**குழையற்பனாட்டு** *kulaiyar-panāttu,* பெ.(n.) பனம்பழச்சாற்றின் இறுகல்; juice of palmyra fruits, dried in to a jelly.

*[கழையல் + பனாட்டு.]*

**குழையாணி** *kulai-y-āṇi,* பெ.(n.) கொண்டையாணி; stub-nail.

*[குழை + ஆணி.]*

**குழையுரம்** *kulai-y-uram,* பெ.(n.) மரக்குழையாகிய உரம்; green manure.

*[குழை + உரம். குழை = இலை, தழை.]*

**குழைவாயிரு-த்தல்** *kulai-vāyiru-,* 3 செ.கு.வி. (v.i.) 1. மெதுவாயிருத்தல்; being soft (சா.அக.). 2. மென்மையாகவும் பக்குவமாகவும் நடந்து கொள்ளுதல்; to behave gently and obediently.

*[குழைவு + ஆய் + இரு.]*

**குழைவு** *kulaivu,* பெ.(n.) 1. நெகிழ்கை (சூடா.); mashy condition. 2. இரக்கம்; tenderness of mind, pity. *"கொடுமை தலைக்கொண்டு சற்றுங் குறைவிலாமல்" (சிவரக.சித்திரகேது.1).* 3. வாடுகை; fading, languishing. *"கொடி போலுருவாள் குழைவுற்றனளோ" (சிவரக. கணபதிவந்.4).*

*[குழை → குழைவு.]*

**குழைவு** *kulaivu,* பெ.(n.) 1. அணைவு; embrace. 2. கலப்பு; mixture, combination. 3. வளைவு; bend.

*[குள் → குழை → குழைவு.]*

**குழைவுசீனி** *kulaivu-šiṉi,* பெ.(n.) வெள்ளைச் சருக்கரை; refined, white sugar.

*[குழைவு + சீனி.]*

**குழைவுதிரணை** *kulaivu-tiraṇai,* பெ.(n.) வளைவாகவுள்ள திரணை (கட்டட.நாமா.); cordon work.

*[குழைவு + திரணை.]*

**குழைவுப்பலமுனை** *kulaivu-p-palamuṉai,* பெ.(n.) வளைவான பகுதிகளில் கல்லிழைக்கப் பயன்படும் பலமுனை உளிவகை (மது.வழ.) (கட்.தொ.வரி.); a kind of chisel.

*[குழைவு + பல + முனை.]*

**குழைவுளி** *kulai-v-uli,* பெ.(n.) உளிவகை (C.E.M.); socket chisel.

*[குழைவு → குள்ள + குடை.]*

**குள்ளக்கார்** *kullakkār,* பெ.(n.) குள்ளம், சித்திரைக்கடப்பு என்னும் நெல்; a kind of paddy.

*[குள்ளம் + கார்.]*

**குள்ளக்குடைச்சல்** *kulla-k-kudaiccal,* பெ.(n.) ஆழ்ந்தவலி; deep seated pain (சா.அக.).

*[குள்ள + குடைச்சல்.]*

**குள்ளக்குடை-தல்** *kulla-k-kudai-,* 3 செ.கு.வி. (v.i.) நீருள் மிகவும் குடைந்து மூழ்குதல் (அகநா.63, உரை); to dive deep, plunge.

*[குள்+ குடைச்சல்.]*

**குள்ளக்குளிர்-தல்** *kull-k-kulir-,* 3 செ.கு.வி.(v.i.) மிகக் குளிர்ந்திருத்தல்; to be intensely cool and refreshing. *"குள்ளக்குளிரக்குடைந்து நீராடாதோ" (திவ்.திருப்பா.13).*

*[குள்ளம் + குளிர்தல்.]*

**குள்ளக்குறுகவிரு-த்தல்** *kulla-k-kuruga-viru-,* 3 செ.கு.வி.(v.i.) மிகக்குட்டையாக இருத்தல்; to be very short dwarf-fish.

*[குள்ளம் + குறுக + இருத்தல்.]*

**குள்ளக்கெண்டை** *kulla-k-keṇḍai,* பெ.(n.) குறுங்கெண்டை மீன்வகை; carp, silvery, small.

*[குள்ளம் + கெண்டை.]*

**குள்ளக்கேழ்வரகு** *kuḷḷā-k-kēḻvaragu,* பெ.(n.) மூன்று மாதத்தில் விளையும் கேழ்வரகுப் பயிரில் ஒரு வகை (உ.ழ.நெ.க.அக.);a kind of *rāgi* crop.

*[குள்ளம் + கேழ்வரகு.]*

**குள்ளத்தண்டுக்கீரை** *kuḷḷa-t-taṇḍu-k-kīrai,* பெ.(n.) குப்பைக்கீரை; a weed of cotton soils.

*[குள்ளம் + தண்டு + கீரை.]*

**குள்ளத்தாரா** *kuḷḷat-tārā,* பெ.(n.) ஒருவகைச் சிறுவாத்து; a species of short duck.

*[குள்ளம் + தாரா.]*

**குள்ளநரி** *kuḷḷanari,* பெ.(n.) நரிவகை; jackal.

**Fin.** kettu; **Karel.** kettu; **Jap.** kitsune; **Tulu.** kudige.

*[குள்ளம் + நரி.]*



குள்ளநரி

**குள்ளநரிக்குசு** *kuḷḷanari-k-kušū,* பெ.(n.) திகைப் பூச்சி; an insect causing perplexity of mind when touched or otherwise come in contact with it. (சா.அக.).

*[குள்ளநரி + குசு.]*

**குள்ளப்புடலை** *kuḷḷa-p-puḍalai,* பெ.(n.) குள்ளப் புடலங்காய்; a short or stunted snake-gourd (சா.அக.).

*[குள்ளம் + புடலை.]*

**குள்ளம்** *kuḷḷam,* பெ.(n.) 1. குறள்; shortness in stature, dwarfishness. 2. கொடுமை; wickedness, cruelty (W.) 3.தந்திரம்; craft, cunning.

**க.** குள்ளு

*[குள் → குள்ளம்.]*

**குள்ளம்பாய்-தல்** *kuḷḷam-pāy,* 3 செ.கு.வி.(v.i.) 1. குறுகிக் கொண்டு வருதல்; to become shorter and shorter. 2. பிறர் அறிய முடியாதபடி தந்திர மாயிருத்தல்; to be crafty and cunning beyond detection. கள்ளனுக்குள் குள்ளம் பாய்தல்.

*[குள்ளம் + பாய்தல்.]*

**குள்ளல்** *kuḷḷal,* பெ.(n.) குள்ளம்; shortness in stature, dwarfishness.

*[குள் + அல் – குள்ளல்.]*

**குள்ளவண்டு** *kuḷḷavaṇḍu,* பெ.(n.) 1. சிறுகரு வண்டு; small black bee. 2. செயலில் விரைவுள்ளவன்; prompt and deligent person. one who is swift and business like.

*[குள்ளம் + வண்டு.]*

**குள்ளவாளை** *kuḷḷa-vāḷai,* பெ.(n.) ***குழிவாளை*** பார்க்க; see *kuḻi-vāḷai.*

*[குள்ளம் + வாளை.]*

**குள்ளன்** *kuḷḷaṉ,* பெ.(n.) 1. குறளன்; short, under-sized man, dwarf. 2. தந்திரக்காரன்; artful, cunning fellow.

**ம.**குள்ளன்; **க.,பட.**குள்ள; **கோத.**குள்ளன்.

*[குள் + அன்.]*

**குள்ளன்கம்பு** *kuḷḷankambu,* பெ.(n.) அரிசிக்கம்பு; a short species of kambu.

*[குள்ளன் + கம்பு.]*

**குள்ளாரால்** *kuḷḷārāl,* பெ.(n.) ***சேற்றாரால்*** பார்க்க; see *cērrārāl.*

*[குள்ளம் + ஆரால்.]*

**குள்ளி** *kuḷḷi,* பெ.(n.) குள்ளமானவள்; a short-statured woman.

ம., து., பட. குள்ளி.

*[கள் → குள்ளி.]*

**குள்ளிக்கோழிமீன்** *kuḷḷi-k-kōḻimīṉ,* பெ.(n.) பவளக் குன்றுகளிலும் பவளச்செடி நிறைந்த கடல் ஓரங்களிலும் அகப்படும் ஒரு வகை வண்ணாத்தி மீன்; a smalll sturgeon fish found usually in coral reefs on the sea-coasts (சா.அக.).

*[குள்ளி + கோழி + மீன்.]*

**குள்ளிதாச்சான்** *kuḷḷitāccāṉ,* பெ.(n.) குளியிடிச்சான், நெல்வகை; a kind of paddy.

*[குள்ளி + தாச்சான்.]*

**குள்ளிமல்லிகை** *kuḷḷi-malligai,* பெ.(n.) ஒரு வகை மல்லிகை, சிறு மல்லிகை; very small jasmine (சா.அக.).

*[குள்ளி + மல்லிகை.]*

**குள்ளிருமல்** *kuḷḷirumal,* பெ.(n.) கக்கிருமல்; whooping-cough.

*[குள் + இருமல். குள் – ஒலிக்குறிப்பு.]*

**குளக்கட்டியெனல்** *kuḷa-k-kaṭṭi-y-eṉal,* பெ.(n.) ஊறுதியற்றுத் தளர்தலை யுணர்த்தும் குறிப்பு; expr. signigying the falling of anything infirm or loosely set, as the head of an infant.

*[குளக்கட்டி + எனல். 'குளக்கட்டி' ஒலிக்குறிப்புச் சொல்.]*

**குளக்கட்டு** *kuḷa-k-kaṭṭu,* பெ.(n.) 1. குளத்தின் கரையைக் கட்டுகை; constructing the bund of a tank. 2. குளத்திற்குக் கட்டப்பட்ட கரை; artificial bund of a tank.

*[குளம் + கட்டு.]*

**குளக்கடவு** *kuḷa-k-kaḍavu* பெ.(n.) குளத்தில் இறங்கிக் குளிக்கும் படித்துறை; a bathing ghat.

மறுவ. படித்துறை

ம. குளக்கடவு

*[குளம் + கடவு.]*

**குளக்கமலம்** *kuḷa-k-kamalam,* பெ.(n.) வைப்பரி தாரம்; a prepared orpiment (சா.அக.).

*[குள் → குள + கமலம்.]*

**குளக்கன்** *kuḷakkaṉ,* பெ.(n.) மீன்வகை; a kind of fish. *"பறவையுறவி குளக்கன்றோகை" (பறாளை. பள்ளு.15).*

*[குள் → குளக்கன்.]*

**குளக்கால்** *kuḷak-kāl,* பெ.(n.) குளத்துக்கு நீர்வரும் வாய்க்கால்; fedding channel of a tank.

*[குளம் + கால்.]*

**குளக்கிழாத்தி** *kuḷakkiḻātti,* பெ.(n.) ஒரு ஆற்றுமீன் (மீன்.பிடி.சொ.தொ.); a river fish.

*[குளம் + கிளாத்தி.]*

**குளக்கீழ்** *kuḷa-k-kīḻ,* பெ.(n.) குளத்தின் மதகை யடுத்துள்ள வயல்; field in front of the sluice gate of a tank.

*[குளம் + கீழ்.]*

**குளக்குத்தல்** *kuḷa-k-kuttal,* பெ.(n.) குளத்தை அடுத்திருப்பதால் மனைகட்கு உண்டாகும் கேடு; insecurity to a house from its proximity to a tank.

*[குளம் + குத்தல்.]*

**குளக்குரிமையாசான்** *kuḷakkurimai-y-āšāṉ,* பெ.(n.) செம்பருந்து; red kite (சா.அக.).

*[குளம் + கு + உரிமை + ஆசான்.]*

**குளக்குருவி** *kuḷa-k-kuruvi,* பெ.(n.) 1. நண்டு; crab living in tanks. 2. ஆற்று நண்டு; rivier crab. (சா.அக.).

*[குளம் + குருவி.]*

**குளக்கெழுத்தி** *kuḷa-k-keḻutti,* பெ.(n.) 1. ஆற்று மீன் வகை; large river-fish, silvery, attaining more than 4 ft. in length. 2. மீன்வகை; cat-fish.

*[குளம் + கெழுத்தி.]*

**குளக்கொட்டி** *kuḷa-k-koṭṭi,* பெ.(n.) ஒருவகை நீர்ப் பூடு; a tankplant.

*[குளம் + கொட்டி.]*

**குளக்கொட்டு** *kuḷa-k-koṭṭu,* பெ.(n.) களைக் கொட்டு; kind of small hoe or spade for cutting weeds.

*[குள்ள → குள + கொட்டு.]*

**குளக்கோரை** *kuḷa-k-kōrai,* பெ.(n.) பெட்டிக் கோரை ; a glabrous rush like sedge.

*[குளம் + கோரை.]*

**குளகபயம்** *kuḷagapayam,* பெ.(n.) 1. முட்துளசி; prickly basil. 2. சுணையுள்ள துளசி; bristly or sharp basil (சா.அக.).

*[குள் → குளக + பயம்.]*

**குளகம்[1]** *kuḷagam,* பெ.(n.) 1. மரக்கால் (பிங்.); standard grain measure. 2. ஆழாக்கு; dry or liquid measure 1/8 *nāḻi* (V.).

ம. குளகம்; க.கொளக; தெ.கொல; பட.கோக.

*[குளகு → குளகம்.]*

**குளகம்[2]** *kuḷagam,* பெ.(n.) பல பாடல்கள் ஒருவினை கொள்ளும் அமைதி (தண்டி.3); combination of three or more stanzas having single finite verb, dist. fr. muttakam.

ம. குளகம்

*[குளகு → குளகம்.]*

**குளகம்[3]** *kuḷagam,* பெ.(n.) குற்றெழுத்துத் தொடர்ந்த செய்யுள் (பிங்.); a poem consisting only of short sounds.

*[குள் → குள்ளகம் → குளகம்.]*

**குளகம்[4]** *kuḷagam,* பெ.(n.) ***குராம்*** பார்க்க; see *kurām.*

*[குள் → குளகம்.]*

**குளகறி** *kuḷa-kari,* பெ.(n.) வெஞ்சனவகை (பணவிடு.275); a relish.

*[குளகு + கறி.]*

**குளகன்** *kuḷagaṉ,* பெ.(n.) இளமையோன்; youth. *"குளகன் வந்துழி" (கந்தபு.குமார.1).*

*[குழகன் → குளகன்.]*

**குளகு** *kuḷagu,* பெ.(n.) 1. விலங்கின் இலையுணவு; herbs, grass, anything that serves as food for herbivorous animals. *'வாரணமுன்குளகருந்தி' (கலித்.42).* 2. குறிஞ்சி நில மகளிர் உடையாகக் கொள்ளும் தழை; foliage,sewing as clothes for women of the hill tract. *"குளகரைச் சுற்றியி குறமடந்தையர்" (காசிக.44:16).* 3. இலைக்கறி; greens, porherbs.

ஒ.நோ.குழை.

**Fin.** kiltti;**FD.** killi;**Koraga.** killi(small); **Mong.** kili.

*[குள் → குளகு.]*

**குளகுள-த்தல்** *kuḷa-kuḷa-,* 4 செ.கு.வி.(v.i.) நெகிழ்ந்திருத்தல்; to grow soft, as jaggery, to become pulpy, to be loosely set.

*[குள + குள.]*

**குளகுளத்தபுண்** *kuḷakuḷatta-puṇ,* பெ.(n.) அழுகிய புண்; putrid or rolton sore (சா.அக.).

*[குள + குள – குளகுள → குளகுளத்த புண்.]*

**குளகுளவெனல்** *kuḷa-kuḷa-v-eṉal,* பெ.(n.) குளகுளெ என்னும் ஒலிகுறிப்பு; onom. expr. குளகுளவென்று கொதிக்கிறது.

*[குள + குள + எனல்.]*

**குளகுளெனல்** *kuḷa-kuḷeṉal,* பெ.(n.) 1. ஓர் ஒலிக்குறிப்பு; onom. expr. signifying gurgling sound, as water when boiled. 2. நெகிழ்ந் திருக்கை; growing soft, as jaggery, becoming pulpy.

*[குள + குள + எனல்.]*

**குளங்கரை** *kuḷaṅkarai,* பெ.(n.) தடாகத்தின் கரை (சீவக.1488,உரை.); bank or bund of a tank.

*[குளம் + கரை.]*

**குளங்காந்தம்** *kuḷaṅgāndam,* பெ.(n.) நச்சுப் பாலை; a kind of milky plant, used as an antidote to snake pite (சா.அக.).

*[குள் + அம் + காந்தம்.]*

**குளங்கி** *kuḷaṅgi,* பெ.(n.) குன்றி; snake fruit (சா.அக.).

*[குள் → குள்ளங்கி → குளங்கி.]*

**குளங்கோவை** *kuḷaṅgōvai,* பெ.(n.) நீர்ப்பிடியில் உண்டாகும் குளநெல் சாகுபடி; cultivation in the bed of a tank.

*[குளம் + கோவை.]*

**குளச்சம்பு** *kuḷa-c-cambu,* பெ.(n.) பத்தியத்திற்கு உதவும் குளத்து நத்தை; tank snail useful in diet (சா.அக.).

*[குளம் + சம்பு.]*

**குளச்சிப்பி** *kuḷaccippi,* பெ.(n.) குளத்திலகப்படும் சிப்பி; oyester shell found in tanks (சா.அக.).

*[குளம் + சிப்பி.]*

**குளச்சு** *kuḷaccu,* பெ.(n.) ***குழைச்சு*** பார்க்க; see *kuḷaiccu.*

*[குழைச்சு → குளச்சு.]*

**குளச்செந்நெல்** *kuḷa-c-cennel,* பெ.(n.) ***குளநெல்*** பார்க்க; see *kuḷanel.*

*[குளம் + செந்நெல்.]*

**குளச்சேம்பு** *kuḷa-c-cēmbu,* பெ.(n.) ஒருவகைச் சேம்பு; a kind of colocasia.

ம. குளச்சேம்பு

*[குளம் + சேம்பு.]*

**குளசு** *kuḷaśu,* பெ.(n.) ***குழைச்சு*** பார்க்க; see *kuḷaiccu.*

*[குழைச்சு → குளசு.]*

**குளஞ்சி** *kuḷañci,* பெ.(n.) கிச்சிலி ; sylhet orange.

*[கொழுஞ்சி → குளஞ்சி.]*

**குளத்தடி** *kuḷattaḍi,* பெ.(n.) குளத்தருகிலுள்ள வயல்; paddy field adjoining a tank.

ம. களத்தடி

*[குளம் + அத்து + அடி.]*

**குளத்தாங்கரை**[1] *kuḷattāṅ-karai,* பெ.(n.) குளத்தின் கரை; bank or bund of a tank.

ம. குளங்கரை

*[குளம் + அத்து + கரை.]*

**குளத்தாங்கரை**[2] *kuḷattāṅ-karai,* பெ.(n.) ***குளத் தங்கரை*** பார்க்க; see *kuḷattaṅkarai*

*[குளம் + அத்து + கரை.]*

**குளத்தி** *kuḷatti,* பெ.(n.) நாறு கரந்தை; Indian- globe thistle. 2. சிவகரந்தை; ceylon toolsy (சா.அக.).

*[குள்ளம் → குளம் → குளத்தி (சிறியது).]*

**குளத்தியா** *kuḷattiyā*, பெ.(n.) கொடி முந்திரி வகை; grapes (சா.அக.).

*[குளத்தி (சிறியது) → குளத்தியாள் → குளத்தியா.]*

**குளத்தில் நிற்கும்துளசி** *kuḷattil-niṟkum-tuḷāši*, பெ.(n.) அரத்த மண்டலிப்பூடு (சா.அக.); a herb.

*[குளத்தில் + நிற்கும் + துளசி.]*

**குளத்திலமர்ந்த மரத்தி** *kuḷattil-amarnda maratti*, பெ.(n.) நாக சிங்கி; a tree supposed to be found growing in tanks (சா.அக.).

*[குளத்தில் + அமர்ந்த + மரத்தி.]*

**குளத்துக்கடவு** *kuḷattu-k-kaḍavu* பெ.(n.) குளத்தில் இறங்கிக் குளிக்க ஏதுவாக அமைந்த இடம்; a bathing ghat.

ம. குளக்கடவு

*[குளம் +அத்து + கடவு.]*

**குளத்துக்கிழங்கு** *kuḷattu-k-kiḻaṅgu*, பெ.(n.) குளத்தில் முளைக்குங் கொட்டிக் கிழங்கு; small bulbous root of an aquatic plant (சா.அக.).

*[குளத்து + கிழங்கு.]*

**குளத்துக்குப்போ—தல்** *kuḷattukku-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) மலங்கழித்தல் (கொ.வ.); lit., to go to a tank, to go to a stool, evacuate.

*[குளம் + அத்து + கு + போதல்.]*

**குளத்துக்குருவி** *kuḷattu-k-kuruvi*, பெ.(n.) **குள நண்டு** பார்க்க; see *kuḷanaṇḍu.*

*[குளம் + அத்து + குருவி.]*

**குளத்துக்குள் உருத்திராக்கம்** *kuḷattukuḷ-uruttirākkam*, பெ.(n.) நத்தை; snail (சா.அக.).

*[குளம் + அத்து + கு + உள் + உத்திராக்கம்.]*

**குளத்துக்குள் குறத்தி** *kuḷattukkuḷ-kuṟatti*, பெ.(n.) 1. நீரறளி; water gannaire. 2. வல்லாரை; Indian penny-wort (சா.அக.).

*[குளம் + அத்து + கு + உள் + குறத்தி.]*

**குளத்துக்கொக்கு** *kuḷattu-k-kokku* பெ.(n.) ஒரு வகைப் பறவை; the pond-heron.

ம. குளக்கொக்கு

*[குளம் + அத்து. கொக்கு.]*

**குளத்துக்கோரை** *kuḷattu-k-kōrai*, பெ.(n.) குளத்தில் முளைக்கும் கோரைப்புல்; a species of sedge - grass found in tanks (சா.அக.).

*[குளத்து + கோரை.]*

**குளத்துக்கோழி** *kuḷattu-k-kōḻi*, பெ.(n.) நீரில் வாழும் ஒருவகைப் பறவை; the water fowl.

ம. குளக்கோழி

*[குளம் + அத்து + கோழி.]*



குளத்துக்கோழி

**குளத்துச்சிப்பி** *kuḷattu-c-cippi*, பெ.(n.) கிளிஞ்சில்; bi-valve shell (சா. அக.).

*[குளத்து + சிப்பி.]*

**குளத்துத்திடல்** *kuḷattu-t-tiḍal*, பெ.(n.) கிளிஞ்சில்; bi-valve shell so called from its being found on or collected from tank beds (சா.அக.).

*[குளத்து + திடல்.]*

**குளத்துநீர்** *kulattu-nir,* பெ.(n.) வாத நோயை உண்டுபண்ணும் குளத்துத் தண்ணீர்; tank water promoting rheumatism (சா.அக.).

*[குளம் + அத்து + நீர்.]*

**குளத்துப்படி** *kulattu-p-padi,* பெ.(n.) குளத்தில் இறங்கி வருவதற்கு ஏதுவாக அமைக்கப்படும் படிக்கட்டு; the paved steps of a pond.

ம. குளப்படட, குளப்படவு.

*[குளம் + அத்து + படி.]*

**குளத்துமுட்டை** *kulattu-muttai,* பெ.(n.) காய்ந்த எரு; dried cow dung found in grazing plains or maidans (சா.அக.).

*[குளத்து + முட்டை.]*

**குளத்துள்வாய்** *kulattulvāy,* பெ.(n.) 1. குளத்தின் உள்ளிடம்; bed of a tank. 2. குளத்தின் மடையருகில் ஆழ்ந்துள்ள உள்ளிடம்; deep part of a tank near the flood gate (W.).

*[குளத்து + உள் + வாய்.]*

**குளத்தோண்டி** *kulattōndi,* பெ.(n.) 1. குளம் தோண்டும் தொழிலாளி; one who makes a living by digging wells, ponds, etc. 2. அழிக்கும் வேலை செய்பவன்; one who ruins.

*[குளம் + தோண்டி.]*

**குளநண்டு** *kulanandu,* பெ.(n.) நண்டு வகை; pond crab.

*[குளம் +நண்டு.]*



குளநண்டு

**குளநாவல்** *kulanāval,* பெ.(n.) குளத்தில் வசிக்கும் நண்டு; pond crab (சா.அக.).

*[குளம் + நாவல்.]*

**குளநெல்** *kulanel,* பெ.(n.) குளத்தின் நீர்ப்பிடியில் தானாக விளையும் நெல்; wild rice, growing, spontaneously in the bed of a tank. *"மெல்விரல் மெலியக் கொய்த குளநெல்லும்" (சீவக.355).*

ம. குளப்பாண்டி

*[குளம் + நெல்.]*

**குளநெல்லி** *kulanelli,* பெ.(n.) குளத்து நீரால் பயிராகும் நெல்; paddy growing in ponds without cultivation (சா.அக.).

*[குளம் + (நெல்) நெல்லி]*

**குளப்பச்சை** *kula-p-paccai,* பெ.(n.) குளத்தின் வடிவாகக் கையில் ஊசியால் குத்தியெழுதும் பச்சைக்குத்து; tattoo on the arm in the shape of a tank.

*[குளம் + பச்சை.]*

**குளப்படி** *kulappadi,* பெ.(n.) 1. குளம்பு படிந்த சுவடு; hoof-marks. *"குளப்பிடி நீருமளப்பருந் தன்மைப் பிரளய சலதியும்" (பதினொ. திருவிடைம. 7).* 2. குளம்புச் சுவட்டில் தேங்கிய நீர்; puddles in hook-marks. *"அவர்கள் வியசனம் குளப்படியென்னும்படி" (அஷ்டாதச.தத்வத்.ஈசு.11).*

*[குளம்பு + அடி – குளம்படி – குளப்படி.]*

**குளப்படிக் கோரை** *kulappadi-k-kōrai,* பெ.(n.) குளக்கரையில் உண்டாகும் கோரை வகை; a sedge growing on the banks of a tank.

*[குளம் + படி + கோரை.]*

**குளப்படுகை** *kuḷa-p-paḍugai,* பெ.(n.) குளத்துக்கு அருகில் உள்ள நிலம்; lands adjacent to tanks.

*[குளம் + படுகை.]*

**குளப்பண்ணை** *kuḷappaṇṇai,* பெ.(n.) காட்டுக் கொளுஞ்சி; orange tree (சா.அக.).

*[குள்ள → குள + பண்ணை.]*

**குளப்பயறு** *kuḷappayaṟu,* பெ.(n.) பயறுவகை; a kind of pulse.

*[குளம் + பயறு.]*

**குளப்பற்றுநெல்** *kuḷa-p-paṟṟu-nel,* பெ.(n.) ***குளநெல்*** பார்க்க; see *kuḷanel*

*[குளம் + பற்று + நெல்.]*

**குளப்பறிப்பு** *kuḷa-p-paṟippu,* பெ.(n.) ஏரியின் வெட்டுக் கிடங்கு; hollow dug out in the bed of a tank. *"குளமும் குளப்பறியும் உட்பட்ட நிலத்தில்" (கல்வெட்.).*

*[குளம் + பறிப்பு.]*

**குளப்பாகல்** *kuḷa-p-pāgal,* பெ.(n.) மிதிபாகல் ; balsam pear.

*[குளம் + பாகல்.]*

**குளப்பாடு** *kuḷa-p-pāḍu,* பெ.(n.) ***குளப்படுகை*** பார்க்க; see *kuḷa-p-paḍugai.*

**ம.** குளப்பாடு

*[குளம் + பாடு.]*

**குளப்பாலை இலை** *kuḷappālai-yilai,* பெ.(n.) கசப்பு வெட்பாலை இலை; leaves of bilter cleander (சா.அக.).

*[குடசப்பாலை → குடப்பாலை → குளப்பாலை + இலை.]*

**குளப்பாலை** *kuḷa-p-pālai,* பெ.(n.) குடசப்பாலை; (பதார்த்த.234); conessibark.

*[குடசப்பாலை → குளப்பாலை.]*

**குளப்புக்கூறுகொள்(ளு)-தல்** *kuḷappu-k-kūṟu-koḷ-,* 16செ.குன்றா.வி.(v.i.) பெருந்துன்பமுறுத்துதல்; lit, to trample with hoofs, to cause, great missery *"திருமாலாற் குளப்புக் கூறு கொளப்பட்டு" (திவ். நாய்ச்.13,6).*

*[குளம்பு → குளப்பு.]*

**குளப்புரவு** *kuḷa-p-puravu,* பெ.(n.) குளத்தின் நீர்பாய்ந்து சாகுபடியாகத் தகுந்த நிலம்; the whole extent of land irrigable under a tank.

**ம.** குளப்புரவு

*[குளம் + புரவு.]*

**குளப்பூ** *kuḷappū,* பெ.(n.) ஓர் வகை முட்செவ்வந்தி; damask persian rose (சா.அக.).

*[குளம் + பூ.]*

**குளப்பொருக்கு** *kuḷa-p-porukku,* பெ.(n.) ஏரிக்குள் உண்டாகும் கரம்பைமண்; chapped mud in a tnak, used for mannure.

*[குளம் + பொருக்கு.]*

**குளபாகம்** *kuḷabāgam,* பெ.(n.) மிக அழகானச் செய்யுள் நடை; lit., sugar-like style easy flowing style of composition.

*[குளம் + பாகம்.]*

**குளம்** *kuḷam,* பெ.(n.) 1. தடாகம் (பிங்.); tank, pond, reservoir. 2. ஏரி; lake. ***"குளக்கீழ் விளைந்த....... வெண்ணெல்" (புறநா.33,5).*** 3. சிலை, மார்கழி (பரிபா.11,76உரை.); the month of *mārkaḻi* 4. நெற்றி; forhead. ***"திருக்குள முளைத்த கட்டாமரை" (கல்லா.31,9).***

ம.குளம்; க.கொலி, கொளகெ., கொண; தெ.கொலனு, கொலகு, கொலகுவு; து.குள, கொள; பட.கொள; பிரா.கும்பு; Skt. kūla.

*kūla*, a pond. Cl. (p.456) and Gt. (p.521) refer the word to *D.kōla* 2 (*kuḷa*), which may be right. They think *kōḷa* or *kuḷa* comes from T., M. *kuḷi*, to bathe; this is wrong, as *kōḷa* means "a hold, a reservoir" (of *kōḷ*, etfc.; cf. *kuḷa2, kuḷu*). *kūḷa* might also be referred to *d. kuḷi* 1 and 2 ; *cf.* Sk. *cuḍâ*, a small well, and *cuṇṭi*, etc (No.150) (K.K.E.D.XXVI).

*[குள் → குளம்.]*

**குளம்**[2] *kuḷam*, பெ.(n.) 1. சருக்கரை (திவா.); sugar. 2. வெல்லம் (சூடா.); jaggery.

*[உள் → குள் → குளம்.]*

**குளம்படி** *kuḷampaḍi*, பெ.(n.) குதிரை, ஆடு, மாடு, கழுதை முதலியவற்றின் பாதம்; the hoofs of horse, sheep, cattle, ass etc. (சா.அக.).

*[குளம்பு + அடி.]*

**குளம்பல்** *kuḷambal*, பெ.(n.) சந்தனக் குழம்பு; semi solid sandal paste (சா.அக.).

*[குளம்பு → குளம்பல்.]*

**குளம்பழுகல்** *kuḷambaḷugal*, பெ.(n.) கால்நடையின் குளம்பு நோய்வகை (கால்.வி.132); foot-rot, ulcer in the feet of sheep and goats.

*[குளம்பு + அழுகல்.]*

**குளம்பாசி** *kuḷambāsi*, பெ.(n.) குளத்தில் மீன் பிடிக்கும் உரிமை; fishing right in a tank.

*[குளம் + பாசி.]*

**குளம்பு** *kuḷambu*, பெ.(n.) ஒருவகை விலங்குகளின் காலடி; hoof of an animal. *"வெள்ளுளைக் கலிமான் கவிகுளம் புகள" (புறநா.15).*

ம.குளம்பு; க.கொளக, கொளகு, கொணகு; கோத.கொள்க; பட.கோகு.

*[குள் → குளம்பு.]*

**குளம்புக்களிம்பு** *kuḷambu-k-kaḷimbu*, பெ.(n.) குளம்பிலிடும் பூச்சு மருந்து (கால்.வி.132); ointment for hoof.

*[குளம்பு + களிம்பு.]*

**குளம்புகிள்ளு-தல்** *kuḷambukiḷḷu-*, 15 செ.கு.வி. (v.i.) கன்றின் குளம்பு முனையைச்சீவுதல்; to clip off the edge of a calf's hoof as soon as it is born.

*[குளம்பு + கிள்ளுதல்.]*

**குளம்புச் சிலந்தி** *kuḷambu-c-cilandi*, பெ.(n.) கால்நடைகளின் குளம்பிலுண்டாகும் சிலந்தி வகை (கால்.வி.132)l; foul, a hoof disease.

*[குளம்பு + சிலந்தி.]*

**குளம்புச்சீவல்** *kuḷambu-c-cīval*, பெ.(n.) துண்டு துண்டாக சீவியெடுத்த கொம்பு; thin slices pared of hoofs (சா.அக.).

*[குளம்பு + சீவல்.]*

**குளம்வளா** *kuḷamvaḷā*, பெ.(n.) குளப்பரப்பு; area of the tank.

*[குளம் (வளவு) வளா.]*

**குளமச்சம்** *kuḷamaccam*, பெ.(n.) கோரை; sedge grass (சா.அக.).

*[குளம் + மச்சம்.]*

**குளமருது** *kuḷamarudu*, பெ.(n.) ஆற்று மருது, நீர் மருது; narrow leaved myrolaban of Travancore (சா.அக.).

ம. குளமருது

*[குளம் + மருது.]*

**குளமழி-தல்** *kuḷam-aḻi-*, 3 செ.கு.வி.(v.i.) மீன் பிடிக்கும்படி குளம் நீர் வற்றுதல்; to have the water in a tank considerabley reduced to allow easy fishing.

*[குளம் + அழிதல்.]*

**குளமீன்** *kuḷamīṉ,* பெ.(n.) குளத்துமீன்; tank fish which is useful in cases of fever and dropsy (சா.அக.).

*[குளம் + மீன்.]*

**குளமூடிகம்** *kuḷa-mūḍigam,* பெ.(n.) தொடரிச் செடி; an unknown plant supposed to possess magic virtue (சா.அக.).

*[குளம் + ஊடிகம்.]*

**குளவஞ்சி** *kuḷavañji,* பெ.(n.) வஞ்சிக்கொடி; slender rattan (சா.அக. ).

*[குளம் + வஞ்சி.]*

**குளவட்டை** *kuḷavaṭṭai,* பெ.(n.) நீரட்டை; small kind of leech.

ம. குளயட்ட

*[குளம் + வட்டை.]*

**குளவடம்பு** *kuḷavaḍambu,* பெ.(n.) குளத்தி லுண்டாகுங் கொடிவகை; a creeper in tanks.

*[குளம் + அடம்பு.]*

**குளவடை** *kuḷa-v-aḍai,* பெ.(n.) பழைய ஏரிவரி; an ancient tax on tanks (S.I.I.ii.247).

*[குளம் + அடை.]*

**குளவடைக்கடமை** *kuḷavaḍai-k-kaḍamai,* பெ.(n.) ஏரிக்குளங்களைப் பராமரிப்பதற்கு உரியதாகப் பெறும்வரி (கல்.க.சொ.அக.).

*[குளம் + அடை + கடமை.]*

**குளவரகு** *kuḷavaragu,* பெ.(n.) வரகுவகை; tank millet.

*[குளம் + வரகு.]*

**குளவல்லிமா** *kuḷavallimā,* பெ.(n.) தழுதாழை; wind killer (சா.அக.).

*[குளம் + வல்லி (மாய்) மா.]*

**குளவாழை** *kuḷavāḻai,* பெ.(n.) ஆடவை மடங்கல் (ஆனி, ஆவணி) மாதங்களில் விதைக்கப் பெற்று ஆறுமாதத்திற் பயிராகும் குளநெல்வகை; a coarse tank-paddy, sown in āni-āvaṇi, maturing in six months.

*[குளம் + வாழை.]*

**குளவாழை** *kuḷavāḻai,* பெ.(n.) ஒரு மட்ட நெல்; a coarse paddy grown in tank bed. 2. புளி, மாங்காய்; narrow medium leaved gambogo (சா.அக.).

*[குளம் + வாழை.]*

**குளவி** *kuḷavi,* பெ.(n.) 1. கொட்டுமியல்புள்ள ஈ வகை; wasp, clay-building fly. *"சுற்றுங் கடுங்குளவிச் சூரைத் தூறு"* (தனிப்பா.107,44). 2.வண்டுவகை; carpenter bee. 3. காட்டு மல்லிகை; wild jasmine. *"கரந்தை குளவி கடிகமழ் கலிமா"* (குறிஞ்சிப்.76). 4.மலைமல்லிகை வகை; indian cork. *"கூதளங்க கவினிய குளவி"* (புறநா.168,12). 5.பச்சிலைமரம் ; mysore gamboge.

ம.குளவி; க.கொளவி.

*[குள் → குள்ளகம் → குளகம்.]*



குளவி

**குளவிக்கூடு** *kuḷavi-k-kūḍu,* பெ.(n.) குளவி கட்டிய கூடு, தேனில் குழைத்துக் கொடுக்க வாந்தியை நிறுத்தும்; wasps nest, when mixed with honey stops vomitting (சா.அக.).

*[குளவி + கூடு.]*

**குளவிக்கூண்டுக் கருக்கு** *kuḷavi-k-kūṇḍu-k-karukku,* பெ.(n.) குளவிக் கூட்டின் களிமண்ணை நீரில் போட்டு இறக்கிய கியாழம்; the decoction prepared from the clay of the wasp which arrests hiccough (சா.அக.).

*[குளவி + கூண்டு + கருக்கு.]*

**குளவிக்கொட்டு** *kuḷavi-k-koṭṭu,* பெ.(n.) குளவி கடித்தல்; the sting of a wasp (சா.அக.).

*[குளவி + கொட்டு.]*

**குளவித்தேன்** *kuḷavi-t-tēṉ,* பெ.(n.) குளவி கட்டுந் தேன்; honey extracted from bee hive (சா.அக.).

*[குளவி + தேன்.]*

**குளவிதைப்பு** *kuḷa-vidaippu,* பெ.(n.) குளநெற் சாகுபடி; sowring in a tank bed.

*[குளம் + விதைப்பு.]*

**குளவிந்தம்** *kuḷavindam,* பெ.(n.) மருந்தாக உதவும் மஞ்சள்வகை; a kind of turmeric, used medicinally.

*[குளம் + விந்தம்.]*

**குளவிமண்** *kuḷavimaṉ,* பெ.(n.) குளவிக் கூட்டு மண்; mud in a warsp's nest.

*[குளவி + மண்.]*

**குளவிமெழுகு** *kuḷavimeḻugu,* பெ.(n.) குளவிக் கூட்டின் மெழுகு; bees wax (சா.அக.).

*[குளவி + மெழுகு.]*

**குளவுரி** *kuḷavuri,* பெ.(n.) சந்தனம்; sandal wood (சா.அக.).

*[குள + உரி.]*

**குளவெட்டு** *kuḷa-veṭṭu,* பெ.(n.) 1. ஏரியைப் பழுது பார்த்தல்; tank repair. 2. ஏரி பழுது பார்த்தலுக்குக் குடிகள் செலுத்தும் வரி; a cess paid by the ryots to the land-holders on account of tank repair.

*[குளம் + வெட்டு.]*

**குளவெட்டுமானியம்** *kuḷa-veṭṭu-māṉiyam,* பெ.(n.) ஏரிவெட்டுக்கு ஆள் அமர்த்த விடப்படும் சலுகை நிலம்; inam granted for the service of procuring workmen for tank repair.

*[குளவெட்டு + மானியம்.]*

**குளவெள்ளரி** *kuḷa-veḷḷari,* பெ.(n.) ஏரியின் உள்வாயில் விளையும் வெள்ளரி; cucumbers raised in tank beds.

*[குளம் + வெள்ளரி.]*

**குளறி** *kuḷaṟi,* பெ.(n.) முகைப்புல்; couch-grass (சா.அக.).

*[குளறு → குளறி.]*

**குளறிப்பேசு—தல்** *kuḷarippēšu,* 12 செ.குன்றாவி (v.t.) தடுமாறிப் பேசுதல்; indistinctness in utterance especially due to cleft palate (சா.அக.).

*[குளறு → குளறி + பேசு.]*

**குளறியடி—த்தல்** *kuḷaṟi-yaḍi-,* 4 செ.கு.வி.(v.i.) மார்பில் அடித்தழுதல்; to wail and beat the breasts in mourning.

*[குளறி + அடித்தல்.]*

**குளறு—தல்** *kuḷaṟu-,* 6 செ.கு.வி.(v.i.) அச்சம் முதலியவற்றால் மொழி தடுமாறுதல்; to stammer through fear, anger, confussion of mind. 2. நரிமுதலியன ஊளையிடுதல்; to howl, yell, make a hideous noise, as jackals.

ம. குளறுக

*[குழறு → குளறு.]*

**குளறு-தல்** *kuḷaṟu-*, 11 செ.குன்றாவி.(v.t.)1. தடுமாறிப்பேசுதல்; to falter to stumble in one's speech *"பயனின் மொழிகள் குளறாமுன்" (சிவப். பிரபந்.வெங்கைக்கலம்96).* 2. கெடுத்தல்; to spoil காரியத்தைக் குளறாதே.

*[குழறு → குளறு.]*

**குளறுபடி** *kuḷaṟu-paḍi,* பெ.(n.) *குழறுபடை* பார்க்க; see *kuḷaṟupaḍai*

*[குளறு + படி.]*

**குளறுபடை** *kuḷaṟu-paḍai,* பெ.(n.) 1. சொல் தடுமாற்றம்;incoherent talk. 2. குழப்பம்;confusion. *"நானானெக் குளறுபடை புடைபெயர்த்திடவும்" (தாயு.மௌன.5).*

*[குழறு → குளறு + படை.]*

**குளறுவாய்** *kuḷaṟuvāi,* பெ.(n.) நாக்குக் குளறும் வாய்; mouth with faltering tongue. 2. குளறிப் பேசல்; defective utterances (சா.அக.).

*[குழறு → குளறு + வாய்.]*

**குளாம்பல்** *kuḷambal,* பெ.(n.) குளத்தில் தோன்றும் ஆம்பல் (நன்.256,மயிலை.); water-lily.

*[குளம் + ஆம்பல்.]*

**குளி[1]-த்தல்** *kuḷi-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நீராடுதல்; to bathe. *"களிப்பர் குளிப்பர்" (பரிபா.6:103).* 2. கழுத்துவரை குளித்தல்;to wash one's body up to the neck. 3. மாதவிலக்குக் குளியல்; to take purificatory bath after menstruation. *அவள் குளித்து நான்கு மாதம் ஆயிற்று (கொ.வ.).* 4. தைத்தல்; to pierce, as an arrow. *"கூர்ங்கணை குளிப்ப" (பு.வெ.10, சிறப்பிற்,10,கொளு.).* 5. அழுந்துதல்; to press against. *"மென்கொங்கை யென் னங்கத் திடைக்குளிப்ப" (திருக்கோ.351).* 6.வலிய உட்புகுதல்; to enter the thick of a fight *"கடற்படை குளிப்ப மண்டி" (புறநா.6).* 7. மறைதல்; to hide, conceal oneself. *"யானறித லஞ்சிக் குளித்து" (கலித்.98).* 8. தோல்வியுறுதல்; to be defeated. *"மீன் குளிக்குங் கற்பின்" (சீவக.2141).*

ம. குளி

*[உள் → குள் → குளி.]*

**குளி[2]-த்தல்** *kuḷi-,* பெ.(n.) 4 செ.குன்றாவி.(v.t) முத்துகளை மூழ்கியெடுத்தல்; to dive for pearls. *"பணிலம் பலகுளிக்கோ" (திருக்கோ.63).*

*[உள் → குள் → குளி.]*

**குளி[3]** *kuḷi,* பெ.(n.) குளியல்; bath, ablution. *"இது எத்தனை குளிக்கு நிற்கும்" (ஈடு.4: 5,1).* 2. முத்துக் குளி; diving, as for pearls or chanks.

ம. குளி

*[உள் → குள் → குளி.]*

**குளிககாலம்** *kuḷiga-kālam,* பெ.(n.) திருமணச் சடங்குகளுக்கு மங்கலமானதும், இறப்புச் சடங்குகளுக்கு அமங்கலமானதும் ஒவ்வொரு நாளும் குளிகன் தோன்றும் நேரத்திலிருந்து 3 3/4 நாழிகை வரை உள்ளதுமான காலம்; the period of time in each day extending to an hour and half from the rising of kulikan or kulikai considered auspicious for marriage ceremonies and inauspicious for funeral ceremonies.

மறுவ. குளிகைக்காலம்

*[குளிகன் + காலம்.]*

குளிகன் என்பது காணாக் கோள்களுள் ஒன்று. அதற்குரிய காலத்தைக் குளிகன்காலம் அல்லது, குளிகக்காலம் என்பதே பொருந்தும். குளிகைக்காலம் என்பது தவறு. குளிகை என்பது உருண்டையான மாத்திரையைக் குறிப்பதாகும்.

**குளிகம்** *kuḷigam,* பெ.(n.) மருந்தின் பொது; medicine in general (சா.அக.).

*[குளி → குளிகம்.]*

**குளிகன்** *kuḷigaṉ,* பெ.(n.) 1. எண்பெரு நாகத் தொன்று; a divine serpent, one of *astamānāgam* *"குளிகாதி... வெங்கணாகம்" (கம்பரா. நாகபா.62).* 2. காணாக் கோள்களுள் ஒன்று; name of an invisible planet.

*[குளி → குளிகன்.]*

**குளிகாரன்** *kuḷigāraṉ,* பெ.(n.) முத்துக்குளிப்பவன்; diver for pearls or chanks.

*[குளி + காரன்.]*

**குளிகுளி-த்தல்** *kuḷi-kuḷi-,* 4 செ.கு.வி.(v.i.) பிள்ளை பெறல்; to be delivered of a child.

*[குளி → குளித்தல்.]*

**குளிகை[1]** *kuḷigai,* பெ.(n.) 1. மாத்திரை; pill. 2. மந்திர வலிமையுள்ள மாத்திரை; magic pill supposed to have supernatural powers *"குளிகையிட்டுப் பொன்னாக்குவன்" (திருமந்.2709).*

*[குள் → குளி → குளிகை (உருண்டை).]*

**குளிகை[2]** *kuḷigai,* பெ.(n.) ***குளிகன்காலம்*** பார்க்க; see *kuḷigāṅkālam.*

*[குளிகன் → குளிகை.]*

**குளிகைக்கட்டு** *kuḷigai-k-kaṭṭu,* பெ.(n.) 1. பாவு கீறிச் சுற்றப்படும் முன், சிறு நூலால் சில குளிகைகள் சேர்த்துக் கட்டப்படுவது; fastening some globules with thread while fixing warp. 2. தறியில் சில குளிகைகள் சேர்ந்து இழைகள் நீட்டிக் கட்டும் கலணைக் கோலுடன் சேர்த்துக் கட்டப்படும் கட்டு; fastening some globules when attaching warp thread to loom.

*[குளிகை + கட்டு.]*

**குளிகைக்கலை** *kuḷigai-k-kalai,* பெ.(n.) உயிர் வளியை இட மூக்குத்துளை வழியாகச் செலுத்தும் நிலவுக் (சந்திர)கலை; the vital air (prāṉ) passing through the left nostril (சா.அக.).

*[குளிகை + கலை.]*

**குளிகைக்காலம்** *kuḷigai-k-kālam* பெ.(n.) ***குளிககாலம்*** பார்க்க; see *kuḷigakālam.*

*[குளிகன் + காலம் → குளிகைக்காலம் → குளிகைக்காலம்]*

**குளிகைகட்டுக்கயிறு** *kuḷigai-kaṭṭu-k-kayiṟu,* பெ.(n.) கட்டு கட்டும் இடங்களில் பயன்படுத்தப் படும் இருவகையான கயிறுகள்; two kinds of strings used to make knobs when fastening poles etc. (உ.வ.நெ.க.அக.). 2. குளிகை கட்டிய பிறகு உயிர் கொடுத்தல்; the process of consolidating mercury into a pill and then animating it. (சா.அக.).

*[குளிகை + கட்டு + கயிறு.]*

**குளிகைகட்டு-தல்** *kuḷigai-kaṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. மாத்திரை செய்தல்; to make pills. 2. சித்திக் குளிகையை உடலில் கட்டிக் கொள்ளுதல்; to fasten a magical pill on the body, either as an amulet against poisonous bites or as a means to attain supernatural power such as flying through the air.

*[குளிகை + கட்டு.]*

**குளிகைகூட்டு-தல்** *kuḷigai-kūṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) குளிகையாகச் செய்தல்; making into a pill (சா.அக.).

*[குளிகை + கூட்டு-.]*

**குளிகைகோடிடல்** *kuḷigai-kōḍiḍal,* பெ.(n.) குளிகைக்கு உறையிடல்; giving a coating to pills (சா.அக.).

*[குளிகை + கோடிடல்.]*

**குளிகைசித்தர்** *kuḷigai-śittar,* பெ.(n.) சித்தரில் தேர்ந்தோர்; skilled men amongst Śiddhars, who

could perform miracles. 2. இதளிய (இரச)க் குளிகையைக் கொண்டு வானம் பாயும் சித்தர்கள்; Šiddhar's skilled in or capable of flying in the sky with the aid of animated mercurial pill (சா.அக.).

*[குளிகை + சித்தர்.]*

**குளிகைசித்தி** *kuḷigai-šitti,* பெ.(n.) இரசகுளிகை முதலியவற்றாற் கூடியதாகக் கருதும் வானுலாவும் வல்லமை; the power of flying in the air believed to be acquired by means of mercurial pills.

*[குளிகை + சித்தி.]*

**குளிகைப்போக்கு** *kuḷigai-pōkku,* பெ.(n.) சத்துத் தீர்ந்த குளிகையின் தன்மை, வேகம், வலி முதலியன; the nature, force, or power etc. of an animated mercurial pill (சா.அக.).

*[குளிகை + போக்கு.]*

**குளிகைபாடம்** *kuḷigai-pāḍam,* பெ.(n.) இதளிய (இரச)க் குளிகையைச் செய்யும் முறைகளையும் அதற்குச் சாரணை கொடுக்கும் விதிகளையும் பற்றிய நூல்; a treatise on the method of preparing mercury pills and the principles to be observed in giving life to then. 2. இதளிய (இரச)க் குளிகை இட்ட சாரணை; animation imparted to mercury pill (சா.அக.).

*[குளிகை + பாடம்.]*

**குளிகைபோடல்** *kuḷigai-pōḍal,* பெ.(n.) இதளிய (இரச)க் குளிகையை வாயிலடக்கிக் கொள்ளுதல்; securing a mercurial pill in the mouth. 2. அபினி உட்கொள்ளல்; swallowing opium pill (சா.அக.).

*[குளிகை + போடல்.]*

**குளிகைமணி** *kuḷigai-maṇi,* பெ.(n.) இதளியமணி (இரசமணி); mercurial pill (சா.அக.).

*[குளிகை + மணி.]*

**குளிகையந்திரம்** *kuḷigai-yandiram,* பெ.(n.) மருந்து மாத்திரைகள் செய்யுமோர் கருவி; a machine for preparing pills (சா.அக.).

*[குளிகை + இயந்திரம்.]*

**குளிகையாட்டல்** *kuḷigai-yāṭṭal,* பெ.(n.) மாத்திரை செய்தல்; making or preparing pills (சா.அக.).

*[குளிகை + ஆட்டல்.]*

**குளிகையாடல்** *kuḷigai-yāḍal,* பெ.(n.) சத்துத் தீர்ந்த இதளிய (இரச)க் குளிகையை வாயிலடக்கிக் கொண்டு வானத்தில் காற்றினூடே பறத்தல்; flying in the atmosphere or aerial region by securing in the mouth the animated mercurial pill. 2. அண்டம் பாய்தல்; flying in the etheric region from one planet to another with the aid of mercurial pill (சா.அக.).

*[குளிகை + ஆடல்.]*

**குளிகையிடு-தல்** *kuḷigai-y-iḍu,* 20 செ.கு.வி.(v.i.) சித்திக் குளிகையை உடம்பைக் கீறி உட்புகுத்துதல்; to insert a pill in an incision made in the body in order to counter act the influence of poisonous bites or to communicate supernatural power.

*[குளிகை + இடு-.]*

**குளிகையோட்டம்** *kuḷigai-y-ōṭṭam,* பெ.(n.) குளிகையின் வேகம்; the dynamic force or power of mercury pill (சா.அக.).

*[குளிகை + ஓட்டம்.]*

**குளிகைவேகம்** *kuḷigai-vēgam,* பெ.(n.) குளிகையின் வேகம்; the dynamic force or power of mercury pill (சா.அக.).

*[குளிகை + வேகம்.]*

**குளிகைவேதை** *kuḷigai-vēdai,* பெ.(n.) இதளிய (இரச)க் குளிகையைக் கொண்டு செய்யும் வேதிமுறை; the art of making gold with the aid of consolidated mercurial pill (சா.அக.).

*[குளிகை + வேதை.]*

**குளிகோமணம்** *kuḷi-kōmaṇam,* பெ.(n.) நீர்ச்சீலை; a kind of loin-cloth.

*[குளி + (கோவணம்) கோமணம்.]*

**குளிசங்கட்டல்** *kuḷišaṅ-kaṭṭal,* பெ.(n.) கோள் (கிரக) குற்றங்களை நீக்கம் செய்ய வேண்டி தாயத்து மந்திரித்துக் குழந்தை அல்லது பெண்களுக்கு உடம்பில் கட்டுதல்; tying an amulet to a child or woman after performing necessary ceremonial rites and chanting of mastrams so as to be free from morbid affections (சா.அக.).

*[குளிசம் + கட்டல்.]*

**குளிசங்கு** *kuḷi-šaṅgu,* பெ.(n.) நீரூட் குளித் தெடுத்த சங்கு; chank obtained by diving (W).

*[குளி + சங்கு.]*

**குளிசம்**[1] *kuḷišam,*பெ.(n.) 1. பாதுகாப்பிற்காகக் கட்டிக் கொள்ளும் ஒருவகைத் தகடு; amulet (G.Sm.D.I.J. 145). 2. காப்புக் கட்டிற்குரிய மெல்லிய மாழைத்தகடு; thin piece of metal with magical characters worn as a charm against evil spirits or disease. 3. பாம்பாட்டிகள், நஞ்சு இறக்குவோர் முதலானோர் கையில் காப்பிற்காகக் கட்டிக் கொள்ளும் வேர்; root tied round the finger of a snake-charmer or poison charmer, as an amulet. 4. சில மூலிகைகள் நன்றாகப் பயன்படுவதற்கு மந்திரமாகச் செய்யும் காப்பு; magical rites for securing the full medicinal efficacy of certain plants.

*[குள் → குளி → குளிசழ்.]*

**குளிசம்**[2] *kuḷišam,* பெ.(n.) **குளிகை** பார்க்க (இ.வ.); see *kuḷigai*

*[குள் → குளி → குளிசம்.]*

**குளிசம்**[3] *kuḷišam,* பெ.(n.) வளையம் (யாழ்.அக.); ring.

*[குளிகை → குளிசம்.]*

**குளிசமாடல்** *kuḷiša-māḍal,* பெ.(n.) மந்திரித்துத் தகடு எழுதிக் கட்டல் ; tying a talisman or as amulet after necessary incantations. It is done in the case of persons suffering from diseases or from the evil influence of demons, devils or other spirits (சா.அக.).

*[குளிசம் + ஆடல்.]*

**குளிசிங்கி** *kuḷi-šiṅgi,* பெ.(n.) பேச்சினால் வயப்படுத்துகை; coaxing.

**குளிசீலை** *kuḷi-šīlai,* பெ.(n.) கோவணம் (கொ.வ.); loin cloth.

*[குளி + சீலை.]*

**குளித்தல்** *kuḷittal,* பெ.(n.) நீராடல் ; having a bath, which removes lethargy bodily heat, sense of fatigue etc. 2. சூதகமாதல்; menstruating (சா.அக.).

*[குளி → குளித்தல்.]*

**குளித்தாமரை** *kuḷi-t-tāmarai,* பெ.(n.) ஆகாயத் தாமரை; a herbal plant (சா.அக.).

*[குளிர்+ தாமரை–குளிர்தாமரை→ குளித்தாமரை (கொ.வா).]*

**குளித்திப்பூடு** *kuḷitti-p-pūḍu,* பெ.(n.) இதன் இலைகள் வீக்கங்களுக்குக் கட்டப் பயன்படும் பூண்டு; arrow head, its leaves are applied to swelling (சா.அக.).

மறுவ. குதிலைக்குளம்படி

*[குளித்தி + பூடு.]*

**குளிதுறை** *kuḷi-turai,* பெ.(n.) குளியல்துறை; bathing ghat. *"குளிதுறையிற் சிதடனார்க்கு வலம்புரியின் மணி கிடைத்தவாறு"* (குற்றா.தல. திருமால்.84).

*[குளி + துறை.]

**குளிப்பச்சை** *kuḷi-p-paccai,* பெ.(n.) ஆற்றுப் பச்சைக் கல்; a green stone.

*[குளி + பச்சை].*

**குளிப்பாட்டு¹–தல்** *kuḷippāṭṭu-,* 5 செ.குன்றாவி (v.t.) நீராட்டுதல்; to bath or wash. *"பொருநைநீர் குளிப்பாட்டி" (காஞ்சிப்பு.தழுவ.288).*

*[குளிப்பு + ஆட்டு–.]*

**குளிப்பாட்டு²–தல்** *kuḷippāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) புகழ்ந்து வயப்படுத்துதல்; to win over, by flattery.

*[குளிப்பு + ஆட்டு–.]*

**குளிப்பிடப்பாறு** *kuḷippiḍa-p-pāṟu,* பெ.(n.) முத்துக் குளிக்குந் துறை; the banks of a pearl or chank fishery.

*[குளிப்பு + இடம் + பாறு. (பாறு = அகன்ற இடம், கரையோரக் கடற்பகுதி).]*

**குளிப்பித்தல்** *kuḷippittal,* பெ.(n.) நீராடச் செய்வித்தல்; causing to bathe (சா.அக.).

*[குளி → குளிப்பித்தல்.]*

**குளிப்பு** *kuḷippu,* பெ.(n.) நீராடுகை; washing, bathing.

*[குளி → குளிப்பு.]*

**குளிமீட்டான்** *kuḷi-miṭṭāṉ,* பெ.(n.) 1. நத்தைச் சூரி; bristly button-weed. 2.தண்ணீர்விட்டான் கிழங்கு; water root (சா.அக.).

*[குளி → குளிமீட்டான்.]*

**குளியம்¹** *kuḷiyam,* பெ.(n.) வேங்கைப்புலி (அக.நி.); man-eater.

மறுவ. வரிப்புலி

*[குளி → குளியம் (உருட்சி, திரட்சி, வலிமை).]*

**குளியம்²** *kuḷiyam,* பெ.(n.) 1. உருண்டை (அக.நி.); ball, globe. 2. மருந்து (பிங்.); medicine.

*[குளி → குளியம் (உருட்சி, திரட்சி.]*

**குளியல்** *kuḷiyal,* பெ.(n.) நீராடுகை; bathing *"காலை மாலைக் குளியல்" (பதார்த்த. 1307, தலைப்பு.).*

*[குளி → குளியல்.]*

**குளியலாட்டல்** *kuḷiyal-āṭṭal,* பெ.(n.) நீராட்டல்; giving a bath (சா.அக.).

*[குளியல் + ஆட்டல்.]*

**குளியாமலிரு–த்தல்** *kuliyāmal-iru-,* 2 செ.கு.வி. (v.i.) கருப்பமாயிருத்தல் (கொ.வ.); lit., to be without menstrual bath, to be pregnant.

*[குளியாமல் + இரு–.]*

**குளியாள்** *kuḷi-y-āḷ,* பெ.(n.) முத்துக் குளிப்போன்; pearler, chank diver.

*[குளி + ஆள்.]*

**குளியிடிச்சான்** *kuli-y-iḍiccāṉ,* பெ.(n.) நெல்வகை (விவசா. நூன்.2)); a kind of paddy.

*[குளி + (இடித்தான்) இடிச்சான்.]*

**குளியோடு–தல்** *kuḷi-y-ōḍu-,* 5 செ.கு.வி.(v.i.) முத்துச்சிப்பி முதலியவை எடுத்தற்காகக் குளித்தல்; to dive for pearls or chanks.

*[குளி + ஓடு–.]*

**குளிர்¹–தல்** *kuḷir-,* 2 செ.கு.வி.(v.i.) 1. பனிக்காற்று உறைத்தல்; to feel cold, chilly, as breeze. *குளிர்வாடை.* 2. குளிர்ச்சியுறுதல்; to be cool, refreshing. *"சிங்கி குளிர்ந்துங் கொலும்" (நீதி நெறி.59).* 3. உடம்பு சில்லிடுதல்; to get numbed, as in death. 4. கண்முதலிய பொறிகளுக்கு இனியதாதல்; to be pleasant to the sense of touch, sight or hearing. *"என்புறக் குளிரு

நெஞ்சுருகும்" (கம்பரா.விபீடண.21). 5. கருணையால் முகங்கனிதல்; to be benignant, as the countenance. 6. ஆறுதலடைதல்; to be consoled, conforted; to be satisfied. *இப்போதுதான் என் மனம் குளிர்ந்தது.* 7.சின்னம்மை முதலியவற்றால் இறத்தல்; to die, as of an epidemic like smallpox. *குழந்தை அம்மை போட்டுக் குளிர்ந்து போயிற்று (இவ.).*

**ம.** குளிர்; **க.** குளிர்.

*[குள் → குளி → குளிர்.]*

**குளிர்²–தல்** *kuḷir-,* 2 செ.கு.வி. (v.i.) தங்குதல்; to seat, rest. *"குளிரு மரப்பலகை" (சீவக.1782).*

*[குள்→குளி→குளிர்.]*

**குளிர்³** *kuḷir,* பெ.(n.) 1. குளிர்ச்சி (திவா.); coldness, chilliness. 2. சுரக்குளிர்; ague, cold fits. 3. பனிக்காற்று (திவா.); dewy chill blast. 4. நடுக்கம்; shivering, trembling, shuddering, as with fear. *என்னைக் கண்டால் அவனுக்குக் குளிர்தான்.* 5. வெண்குடை (சூடா.); white umbrella. 6. மீனொழுங்கு (சூடா.); shoal, school of fish.

**து.** குளிர்பு; **படீ.** கொரவு.

*[குள் → குளி → குளி–.]*

**குளிர்⁴** *kuḷir,* பெ.(n.) தங்குகை (சூடா.); seating, resting.

*[குள் → குளி → குளிர்.]*

**குளிர்⁵** *kuḷir,* பெ.(n.) 1. குடமுழவு (திவா.); kettle-drum. 2. கிளிகடி கருவி; contrivance to scare away parrots. *"தட்டையும் குளிரும்" (குறிஞ்சிப். 43).* 3. கவண் (பிங்.); sling.

**ம.** குளிர்; **க.** குளிர்.

*[குளிறு → குளிர் (குளிறு = ஒலி, ஒலித்தல்.)]*

**குளிர்⁶** *kuḷir,* பெ.(n.) 1. மழு (சூடா.); battle-axe. 2. சூலம்; trident. 3. அரிவாள்; sickle. *"குளிர்புரை கொடுங்காய்" (மலைபடு.110).* 4. இலைமூக்கரி கத்தி (திவா.); knife for cutting the stems of leaves.

*[குள் → குளி → குளிர்.]*

**குளிர்⁷** *kuḷir,* பெ.(n.) 1. நண்டு (பிங்.); crab, lobster. 2. கடக ஓரை (ராசி) (திவா.); cancer, a sign of the zodiac. 3. கடகத்திங்கள் (ஆடிமாதம்) (தைலவ.பாயி); the month Āḍi.

*[குளி → குளிர்.]*

**குளிர்காணல்** *kuḷir-kāṇal,* பெ.(n.) 1. குளிர்ச்சி தாக்குகை; being affected with cold. 2. உடம்பு நோயாற் சில்லிடுகை (வின்.); becoming cold, as the body in serious illness.

*[குளிர் + காணல்.]*

**குளிர்காந்தி** *kuḷir-kāndi,* பெ.(n.) நிலவுக் (சந்திர) காந்தி; a flowering plant that turns towards the moon (சா.அக.).

*[குளிர் + காந்தி.]*

**குளிர்காய்–தல்** *kuḷir-kāy-,* 2 செ.கு.வி.(v.i.) குளிர் வருத்தாதபடி வெப்பம் பிடித்தல்; to bask in the sun, to warm oneself.

*[குளிர் + காய்–.]*

**குளிர்காய்ச்சல்** *kuḷir-kāyccal-,* பெ. (n.) குளிரொடு தோன்றும் காய்ச்சல் நோய் (பதார்த்த. 842); ague fever attended with chill.

**மறுவ.** குளிர்ச்சுரம்

*[குளிர் + காய்ச்சல்.]*

**குளிர்காலம்** *kuḷir-kālam,* பெ.(n.) பனிக்காலம்; cold season.

*[குளிர் + காலம்.]*

**குளிர்காற்று** *kuḷir-kāṟṟu,* பெ.(n.) கூதற்காற்று; cold wind. குளிர்காற்றைப் பொறுக்க முடிய வில்லை (உ.வ.).

*[குளிர் + காற்று.]*

**குளிர்குளிர்ந்துபோ-தல்** *kuḷir-kuḷirndu-pō-*, 8 செ.கு.வி.(v.i.) 1. குளிர்ச்சியால் உடல் விறைத்துப் போதல்; to be benumbed of cold. 2. உடம்பு சில்லிடுதல்; to become cold, as a dying person.

*[குளிர் + குளிர்ந்து+ போ-.]*

**குளிர்குளிரல்** *kuḷir-kuḷiral*, பெ.(n.) குளிரால் விறைத்தல்; being benumbled with cold. 2. சில்லிடுதல்; being attacked with chillness of the extremities, as a dying person in cholera (சா.அக.).

*[குளிர் + குளிரல்.]*

**குளிர்கொள்ளல்** *kuḷir-koḷḷal*, பெ.(n.) 1. தணுப்புறல், சீதளமடைதல்; becoming chill. 2. குளிரால் வருந்தல்; suffering from cold (சா.அக.).

*[குளிர் + கொள்ளல்.]*

**குளிர்கோணிகம்** *kuḷir-kōṇigam*, பெ.(n.) பூளைச் செடி; woolly herb (சா.அக.).

*[குளிர் + கோணிகம்.]*

**குளிர்ச்சி** *kuḷircci*, பெ.(n.) 1. குளிர்மை; coolness, cold, coldness. 2. மனங்குளிரச் செய்தல் (சீவக.1810, உரை); the act of cooling, refreshing with cordials, fans, etc. 3. இனிமையானது; that which is sweet, gratifying or pleasing. 2. மரத்துப் போய்ச் சில்லிடுகை; numbness, frigidity, as in death. உடம்பில் குளிர்ச்சி கண்டுவிட்டது (உ.வ.).

*[குளிர் → குளிர்ச்சி.]*

**குளிர்ச்சித்தைலம்** *kuḷircci-t-tailam*, பெ.(n.) சந்தனாதியைப் போல் தலைக்குக் குளிர்ச்சியை உண்டாக்கும் மருந்து எண்ணெய்; medicated oil affording cooling effects to the brain, as sandal wood oil (சா.அக.).

*[குளிர்ச்சி + தைலம்.]*

**குளிர்ச்சிப்பாண்டம்** *kuḷircci-p-pāṇḍam*, பெ.(n.) குளிர்ச்சி தரும் பொருள்; cooling substance (சா.அக.).

*[குளிர்ச்சி + பாண்டம்.]*

**குளிர்ச்சிமருந்து** *kuḷircci-marundu*, பெ.(n.) வெப்பத்தைக் குறைக்கும் மருந்து; cooling medicine.

*[குளிர்ச்சி + மருந்து.]*

**குளிர்ச்சியாயிரு-த்தல்** *kuḷircciyāy-iru-*, 4 செ.கு.வி.(v.i.) 1. சில்லென இருத்தல்; being cool. 2. குளிர்ச்சியை உணர்தல்; to feel refreshing (சா.அக.).

*[குளிர்ச்சி + ஆய் + இருத்தல்.]*

**குளிர்சுரம்** *kuḷir-šuram*, பெ.(n.) **குளிர்காய்ச்சல்** பார்க்க; see *kuḷir-kāyccal.*

*[குளிர் + சுரம்.]*

**குளிர்த்தி**[1] *kuḷirtti*, பெ.(n.) குளிர்ச்சி; coolness *'நாற்றங் குளிர்த்தி மென்மைகளைக் கொண்டு' (ஈடு,1.2:2).*

*[குளிர்ச்சி → குளிர்த்தி.]*

**குளிர்த்தி**[2] *kuḷirtti*, பெ.(n.) பூசை வகை (யாழ்.அக.); a kind of propitiation.

*[குளிர் → குளிர்த்தி.]*

**குளிர்த்திக் குடிநீர்** *kuḷirtti-k-kuḍinīr*, பெ.(n.) தாகத்திற்கு அருந்தும் குளிர்ந்த நீர்; cool drink (சா.அக.).

மறுவ. தண்ணருந்தம்

*[குளிர்த்தி + குடிநீர்.]*

**குளிர்த்திப்பூண்டு** *kuḷirtti-p-pūṇḍu*, பெ.(n.) இலைகளை வீக்கங்களுக்குக் கட்ட உதவும் நீர்ச்சேம்பு; arrow head (சா.அக.).

மறுவ. குளித்திப்பூடு, குதிரைக் குளம்படி.

*[குளிர்த்தி + பூண்டு.]*

**குளிர்தாமரை** *kuḷir-tāmarai,* பெ.(n.) ஆகாயத் தாமரை; flotting lotus, sky lotus (சா.அக.).

*[குளிர் + தாமரை.]*

**குளிர்திகா** *kuḷirtiga,* பெ.(n.) கருங்கொள்; (சா.அக.); black horse gram .

*[குளிர்த்திகை → குளிர்திகா (கொ.வ.)]*

**குளிர்தேசம்** *kuḷir-dēšam,* பெ.(n.) **குளிர்நாடு** பார்க்க; see *kuḷir-nāḍu.*

*[குளிர் + தேசம்.]*

**குளிர்ந்த அரத்தம்** *kuḷirnda-arattam,* பெ.(n.) உறைந்த குருதி; clotted blood (சா.அக.).

*[குளிர்ந்த + அரத்தம்.]*

**குளிர்ந்தகுரல்** *kuḷirnda-kural,* பெ.(n.) இனிய குரல்வளம்; pleasant or delectable voice, as in singing.

*[குளிர்ந்த + குரல்.]*

**குளிர்ந்தகொள்ளி**[1] *kuḷirnda-koḷḷi,* பெ.(n.) ஏய்ப்புக் கள்ளன் (நயவஞ்சகன்); lit, exiguous extinguish ed fire-brand, honey tongued villain, person with a fair exterior but a foul interior. 2. வெளிக்கு அமைதியாகவும், உள்ளே கொடுமையாகவும் உள்ள பெண்; a mischievous woman apearing mild but cruel in her activities (சா.அக.)

*[குளிர்ந்த + கொள்ளி.]*

**குளிர்ந்தநிறம்** *kulirnda-niṟam,* பெ.(n.) கண்ணுக் கினிய நிறம்; agreeable, pleasant, fine colour.

*[குளிர்ந்த + நிறம்.]*

**குளிர்ந்த நீர்** *kuḷirnda-nir,* பெ.(n.) 1. பச்சைத் தண்ணீர்; cold water. 2. சுடவைத்து ஆறின நீர்; water cooled after boiling. 3. ஒன்பான் மணிகளி லுள்ள நீரோட்டம்; fine glittering in gems (S.I.I. II,451)

*[குளிர்ந்த + நீர்.]*

**குளிர்ந்த பார்வை** *kuḷirnda-pārvai,* பெ.(n.) இனிய நோக்கம்; benignant look, lookfull of sweetness.

*[குளிர்ந்த + பார்வை.]*

**குளிர்ந்த பேச்சு** *kuḷirnda-pēccu,* பெ.(n.) இனிய பேச்சு; sweet words, pleasant, comforting, soothing words.

*[குளிர்ந்த + பேச்சு.]*

**குளிர்ந்தமணம்** *kuḷirnda-maṇam,* பெ.(n.) நறுமணம்; fragrant smell (சா.அக.).

*[குளிர்ந்த + மணம்.]*

**குளிர்ந்தமனம்** *kuḷirnda-maṉam,* பெ.(n.) இரக்கமுள்ள நெஞ்சம்; kind, benevolent, heart.

*[குளிர்ந்த + மனம்.]*

**குளிர்ந்தமுகம்** *kuḷirnda-mugam,* பெ.(n.) அருள் விளங்கும் முகம்; benignant countenance.

*[குளிர்ந்த + முகம்.]*

**குளிர்ந்துகிட–த்தல்** *kuḷirndu-kiḍa-,* 3 செ.கு.வி. (v.i.) 1. சூடாறியிருத்தல்; to become-cool, as water after boiling. 2. கைகால் சில்லிடுதல்; to become cold, as a dying person. 3. இறத்தல்; to die, used euphemistically.

*[குளிர்ந்து + கிடத்தல்.]*

**குளிர்ந்துபோதல்** *kuḷirndu-pō-,* பெ.(n.) சில்லிட்டுப் போதல்; getting cold and stiff just before death.

*[குளிர்ந்து + போதல்.]*

**குளிர்ந்து வருதல்** *kuḷirndu-varudal,* பெ.(n.) காய்ச்சல் கொள்ளுதல்; feeling feverish (சா.அக.).

*[குளிர்ந்து + வருதல்.]*

**குளிர்நடுக்கம்** *kuḷir-naḍukkam,* பெ.(n.) குளிரால் ஏற்படும் நடுக்கம்; shivering from cold (சா.அக.).

*[குளிர் + நடுக்கம்.]*

**குளிர்நாடு** *kuḷir-nāḍu*, பெ.(n.) குளிர்ச்சி மிகுந்த நாடு; cold country.

*[குளிர் + நாடு.]*

**குளிர்நாவல்** *kuḷir-nāval*, பெ.(n.) தேவ நாவல்மரம்; a kind of superior jaumoon tree (சா.அக.).

*[குளிர் + நாவல்.]*

**குளிர்ப்பித்தல்** *kuḷir-p-pittal*, 4 செ.குன்றாவி(v.t.) தண்ணீர், நறுமணப் பொருள் முதலியவற்றால் குளிர்ச்சி செய்தல்; refresing with water, perfumes etc. 2. உடம்பின் சூடு போக்கல்; allaying the heat in the system (சா.அக.).

*[குளிர் → குளிர்ப்பி]*

**குளிர்ப்பு** *kuḷirppu*, பெ.(n.) ***குளிர்மை*** பார்க்க; see. *kuḷirmai.*

*[குளிர் → குளிர்ப்பு.]*

**குளிர்மை** *kuḷirmai*, பெ.(n.) 1. குளிர்ச்சி; coolness. 2. அன்பு; kindness, benevolence. அவர்கள் குளிர்மையில்லாதவர்கள் (உ.வ.).

**ம.** குளிர்ம்ம

*[குளிர் → குளிர்மை.]*

**குளிர்மைக்கட்டி** *kuḷirmai-k-kaṭṭi*, பெ.(n.) பொன்னுக்கு வீங்கி; mumps.

*[குளிர்மை + கட்டி.]*

**குளிர்மை கொள்(ளு)தல்** *kuḷirmai-koḷḷu-*, 16 செ.கு.வி. (v.i.) நடுங்குதல்; to shiver.

*[குளிர்மை + கொள்ளுதல்.]*

**குளிர்விடு-தல்** *kuḷir-viḍu-*, 20 செ.கு.வி.(v.i.) அச்சம் நீங்குதல்; to be freed from fear. அவனுக்கு குளிர்விட்டுப் போயிற்று (உ.வ.).

*[குளிர் + விடு-.]*

**குளிர்வீக்கம்** *kuḷir-vīkkam*, பெ.(n.) குளிரா லேற்படும் வீக்கம்; inflammation or swelling caused in cold weather (சா.அக.).

*[குளிர் + வீக்கம்.]*

**குளிரநோக்கு-தல்** *kuḷira-nōkku-*, 5 செ.கு.வி. (v.i.) அருளோடு பார்த்தல்; to cast a gracious look on. *"திருக்கண்களாலே குளிர நோக்கி" (ஈடு,1.10:10).*

*[குளிர + நோக்கு.]*

**குளிரப்பண்ணல்** *kuḷira-p-paṇṇal*, பெ.(n.) குளிர்ச்சியடையும்படி செய்தல்; cooling, refreshing (சா.அக.).

*[குளிர + பண்ணல்.]*

**குளிரம்** *kuḷiram*, பெ.(n.) நண்டு (சூடா.); crab (சா.அக.).

**மறுவ.** குளிர்

*[குள் → குளி (சேற்றில் ஒளிதல்) குளிர் → குளிரம்.]*

**குளிரவை-த்தல்** *kuḷira-vai*, 4 செ.குன்றாவி.(v.t.) விளக்கை அணைத்தல்; to put out, extinguish, as a light. விளக்கைக் குளிரவை (இ.வ.).

*[குளிர் → குளிர + வை.]*

**குளிரி**[1] *kuḷiri*, பெ.(n.)1. பீலிக் குஞ்சம் (பிங்.); fan made of peacock's feathers. 2. நீர்ச்சேம்பு;arrow head, aquatic plant.

*[குளிர் → குளிரி (குளிர்ச்சித்தருவது).]*

**குளிரி**[2] *kuḷiri*, பெ.(n.) குடமுழவு; kettle drum. *குளிரிப் புடைப்பொலி (தஞ்சைவா.73).*

*[குளிறு → குளிரி.]*

**குளிரிக்குடம்** *kuḷiri-k-kuḍam*, பெ.(n.) பன்னீர்க்குப்பி (திவ்.நாய்ச்.7:4 வியா.); rose-water bottle.

*[குளிர + பண்ணல்.]*

**குளிவை** *kuḷivai,* பெ.(n.) ***குளுவை*** பார்க்க; see *kuḷuvai. "குளிவையும் புதாவும்" (பெருங்.உஞ்சைக். 51,70).*

*[குளுவை → குளிவை. குளுவை = நீர்ப்பறவை.]*

**குளிறு¹-தல்** *kuḷiṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒலித்தல் (திவா.); to sound, rattle.

*[குளிர் → குளிறு-தல்.]*

**குளிறு²** *kuḷiṟu,* பெ.(n.) 1. ஒலி (சூடா.); sound, rattling noise. 2. குடமுழவு; kettle drum. 3. எறும்பு; ant.

*[குளிர் → குளிறு.]*

**குளிறு³** *kuḷiṟu,* பெ.(n.) நண்டு; crab. *"எழுகுளிறு மிதித்த வொரு பழம் போல" (குறுந்.24).*

*[குளி (சேற்றில் மறைதல்) → குளிர் → குளிறு.]*

**குளுகுளு-த்தல்** *kuḷukuḷu-,* 4 செ.கு.வி.(v.i.) 1. செழித்து வளர்தல்; to grow luxuriantly. *பயிர்கள் குளுகுளுத்திருக்கின்றன.* 2. சோகை பற்றுதல்; to become pale, sallow, wan, bloated, as in jaundice; to become weak through morbid state of the body. 3. அழுகிப்போதல்; to become rotten, putrid, as fruits.

*[குளு + குளு-]*

**குளுகுளுப்பை** *kuḷu-kuḷu-p-pai,* பெ.(n.) காமாலை நோய்; the state of being pale and bloated in countenance, a kind of jaundice.

*[குளு + குளுப்பை.]*

**குளுகுளெனல்** *kuḷu-kuḷeṉal,* பெ.(n.) கொதித்தற்குறிப்பு; onom. expr. of boiling. *"பார்ப்பான் குண்டிகை யிருந்த நீரும் குளுகுளு கொதித்ததன்றே" (கம்ப. வருணனை.61).*

*[குளு + குளு + எனல்.]*

**குளுத்தியெண்ணெய்** *kuḷutti-y-eṇṇey,* பெ.(n.) சூடுதணிக்கும் மருந்தெண்ணெய்; a cooling medicine in the form of oil.

*[குளிர்ச்சி → குளுத்தி + எண்ணெய்.]*

**குளுந்தண்ணீர்** *kuḷun-daṇṇir,* பெ.(n.) முளைத் தண்ணீர் (உழ.நெ.க.அக.). watering the seeds to sprout.

*[குளு → குளுந்தண்ணீர்.]*

**குளுந்தை** *kuḷundai,* பெ.(n.) கொள் போன்ற மான்மணத்தி வகை (பதார்த்த.1081); musk that resembles horse gram, one of 5 kinds of kasturi.

*[கொள் → குளு → குளுந்தை.]*

**குளுப்பை** *kuḷuppai,* பெ.(n.) நோயால் முகம் ஊதுகை; being bloated, as the face in jaundice.

*[குளு → குளுப்பை.]*

**குளுப்பைதட்டு-தல்** *kuḷuppai-taṭṭu,* 5 செ.கு.வி. (v.i.) நோயால் முகம் ஊதித் தோன்றுதல்; to become bloated as the face in jaundice அவன் முகம் குளுப்பை தட்டியிருக்கிறது (உ.வ.).

*[குளுப்பை + தட்டு-.]*

**குளுப்பை பாய்-தல்** *kuḷup-pai-pāy-,* 2 செ.கு.வி (v.i.) நோயால் கன்னம் கதித்தல்; becoming turgid through disease as the cheeks (சா.அக.).

*[குளுப்பை + பாய்தல்.]*

**குளுப்பைமுகம்** *kuḷuppai-mugam,* பெ.(n.) அதைத்த முகம்; bloated face (சா.அக.).

*[குளுப்பை + முகம்.]*

**குளும்பாறை** *kuḷum-bāṟai,* பெ.(n.) ஒருவகைக் கடல்மீன்; horse mackerel, greenish, attaining 28 in. in length.

*[குளு → குளும்பாறை.]*

**குளுமி** *kuḷumi,* பெ.(n.) மதகு (P.T.L.); sluice.

*[குள் → குளுமி]*

**குளுமை** *kuḷumai,* பெ.(n.) குளிர்ச்சி; coldness, chillness.

**Fin.** kylma; **Es.** kulm; **Mordvin.** kelma; **Mong.** kolmy; **Jap.** shimo; **Q.** culi.

*[குளிர்மை → குளுமை.]*

**குளுமைகொள்ளல்** *kuḷumai-koḷḷal,* பெ.(n.) நீர் கொள்ளுதல்; catching cold (சா.அக.).

*[குளுமை + கொள்ளல்.]*

**குளுமைமூலம்** *kuḷumai-mūlam,* பெ.(n.) இஞ்சி; ginger (சா.அக.).

*[குளுமை + மூலம்.]*

**குளுவன்** *kuḷuvaṉ,* பெ.(n.) குறவனுடைய பாங்கன்; a fowler's attendant. *"குளுவச்சிங்கன் வந்தான்" (குற்றா.குற.792.9).*

**மறுவ.** குழுவன்

*[குளு → குளுவை → குளுவன். (குளுவைப் பறவை வேட்டைக்குத் துணையானவன்.]*

**குளுவை** *kuḷuvai,* பெ.(n.) ஊரற் பறவை (சிலப்.10:117,உரை); a water-bird.

*[குளு → குளுவை (சிறிய பறவை).]*

**குளூரி** *kuḷūri,* பெ.(n.) குளிரி, நீர்ச்சேம்பு; water archer (சா.அக.).

*[குளிரி → குளூரி (கொ.வ.)]*

**குளைச்சக்கரம்** *kuḷai-c-cakkaram,* பெ.(n.) ஒடு (சங்.அக.); tile.

*[குள் → குளை + சக்கரம். ஒருகா. சூளைச்சக்கரம்.]*

**குளைச்சு** *kuḷaiccu,* பெ.(n.) நாலிலொன்று; one-fourth.

*[குள் → குளை → குளைச்சு.]*

**குளைஞ்சி** *kuḷaiñji,* பெ.(n.) வஞ்சிக்கொடி; slender rattan (சா.அக.).

*[குள் → குளை → குளைஞ்சி.]*

**குளையாள்** *kuḷaiyāḷ,* பெ.(n.) பெண் காமக்களை; secretion from ovary in women (சா.அக.).

*[குள் → குளை → குளையாள்.]*

**குற்சலை** *kuṟcalai,* பெ.(n.) அவுரி; indigo plant (சா.அக.).

*[குறு + சாலை - குறுசாலை → குற்சலை (கொ.வ.).]*

**குற்பகம்** *kuṟpagam,* பெ.(n.) நாணல் (மலை.); kaus, a large and coarse grass.

*[குற்று + பூகம் - குற்றுப்பூகம் → குற்பகம் (கொ.வ).]*

**குற்பம்** *kuṟpam,* பெ.(n.) பரடு; ankle (சா.அக.).

*[குல் (பொருத்து) → குல்பு → குற்பு → குற்பம்.]*

**குற்பாதம்** *kuṟ-pādam,* பெ.(n.) குறண்டிக்கால்; குறைந்த கால்; club-foot (சா.அக.).

*[குறு → குறை + பாதம் - குறைபாதம் → குற்பாதம். (கொ.வ).]*

**குற்றங்காட்டு-தல்** *kuṟṟaṅ-kāṭṭu,* 5 செ.கு.வி.(v.i.) குற்றத்தை எடுத்துச் சொல்லுதல்; to expose faults.

*[குற்றம் + காட்டு-.]*

**குற்றங்காண்(ணு)-தல்** *kuṟṟaṅ-kāṇ-,* 5 செ.கு.வி. (v.i.) தவறு கண்டுபிடித்தல்; to find fault, pick holes.

*[குற்றம் + காணு-.]*

**குற்றச்சாட்டு** *kuṟṟa-c-cāṭṭu,* பெ.(n.) குற்றவாளியாக்குதல்; to accusation, charge.

*[குற்றம் + சாட்டுதல்.]*

**குற்றஞ்சாட்டு-தல்** *kuṟṟañ-cāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **குற்றஞ்சுமத்து-தல்** பார்க்க; see *kuṟṟañ-cumattu-.*

*[குற்றம் + சாட்டு.]*

**குற்றஞ்சுமத்து-தல்** *kuṟṟañ-cumattu-,* 5 செ.குன்றாவி.(v.t.) ஒருவன்மீது குற்றத்தை ஏற்றுதல்;

nate.

*[குற்றம் + சுமத்து-.]*

**குற்றத்தண்டம்** *kurra-t-tandam*,பெ.(n.) செய்த குற்றத்திற்குரிய தண்டனை; penalty (I.M.P.N.A. 341:2).

*[குற்றம் + தண்டம்.]*

**குற்றந்தீர்-த்தல்** *kurrantir-*, 4 செ.குன்றாவி. (v.t.) துப்புரவு செய்தல்; cleaning the impurities as from metals and metallic compounds ( சா.அக.).

*[குற்றம் + தீர்-.]*

**குற்றப்படு-தல்** *kurrap-padu-*, 5 செ.கு.வி.(v.i.) குற்றத்திற்கு உள்ளாதல்; to be in fault, be guilty. *"குடிக்குற்றப்பட்டாரை" (சிலப். 14:146,உரை).*

*[குற்றம் + படுதல்.]*

**குற்றப்படுத்து-தல்** *kurrap-paduttu-*, 5 செ.குன்றாவி. (v.t.) குற்றம் ஆக்குதல்; to defile, befoul, pollute.

**ம.** குற்றப்படுத்துக

*[குற்றம் + படுத்து. 'படு' த.வி. 'படுத்து' பி.வி.]*

**குற்றப்பத்திரம்** *kurra-p-pattiram*,பெ.(n.) குற்றச் சாட்டு ஏடு (குற்றப்பத்திரிகை); charge sheet.

*[குற்றம் + பத்திரம்.]*

**குற்றப்பாட்டேடு** *kurra-p-pāttēdu*,பெ.(n.) முறை மன்றத்தில் ஒருவன் மீது குற்றத்தின் விவரங் காட்டிப் படிக்கப்படும் ஆவணம்; charge sheet.

*[குற்றம் + பாடு + ஏடு.]*

**குற்றப்பாடு** *kurra-p-pādu*,பெ.(n.) 1. குற்றத்திற்கு உட்படுகை; being in fault, being accused. 2. குற்றம்; fault, crime.

**ம.** குற்றப்பாடு

*[குற்றம் + (படு) பாடு.]*

**குற்றப்பிடிப்பு** *kurra-p-pitippu*, பெ.(n.) குற்றங் களைத் தெரிந்தெடுக்கை; censorship.

*[குற்றம் + பிடிப்பு.]*

**குற்றம்**[1] *kurram*, பெ.(n.) 1. பிழை; fault, moral or physical blemish, defect, flaw, error. *"ஏதிலார் குற்றம்போல் தங்குற்றம் காண்கிற்பின்" (குறள்.190).* 2. பழி; reproach, stigma, blame. *"குற்றமின் முனிவரும்" (கந்தபு. வரைபுனை.218).* 3. துன்பம்; pain, distress. *"குடும்பத்தைக் குற்ற மறைப்பான்" (குறள், 1029).* 4. அங்கக்குறை; bodily deformity. உறுப்புக் குற்றமுள்ளவன். 5. தீங்கு; crime, offence. *"கோடாத வேதனுக் கியான்செய்த குற்றமென்" (கந்தரலங்.76).* 6. தெய்வத்தின் சினம் முதலியவற்றிற்குக் காரண மான தீட்டு; impurity, ceremonial or moral defilement, as cause of offence to the deity. 7. தண்டம்; penalty, mulcting, fine. குற்றமிறுத்தல்.

**ம.** குற்றம்; **க.** கொரதெ, குத்த; **தெ.** கொரத; **குட.** கொரு, கொரவு; **துட.** க்வர்; **கோத.** கொர்வ்.

*[குல் → குறு → குற்றம்.]*

**குற்றம்**[2] *kurram*, பெ.(n.) 1. துப்புரவின்மை, குப்படை (அசுத்தம்); impurities; 2. களங்கம்; stain, blemish. 2. குறைவு; defect, fault; 4. துன்பம்; distress; 5. தீட்டு; defilement; 6. நோய்; disease. 7. கோள்குற்றம்; morbid affectious. 8. முக்குற்றம் - காமம், வெகுளி, மயக்கம்; three kinds of guilt, lust, wrath and confusion; 9. ஐங்குற்றம்; the five unbecoming behaviours in a person. 1. கொட்டாவி; yawning, gaping. 2. நெட்டை; knacking with the fingers or in walking. 3. குறட்டை; snoring. 4. கூன் கிடை; lying shrivelled. 5. தூங்கி விழுதல்; nodding in drowsiness (சா.அக.).

*[குல் → குறு → குற்றம்.]*

**குற்றம்பாராட்டு-தல்** *kurram-pārāttu-*, 5 செ.கு.வி. (v.i.) பிறர் குற்றத்தை மிகுதிப்படுத்துதல்; to exaggerate one's faults, dwell too much upon one's faults, magnify guilt.

*[குற்றம் + பாராட்டு-.]*

**குற்றம்போடு—தல்** *kuṟṟam-pōḍu-,* 7 செ.கு.வி. (v.i.) தண்டம் விதித்தல் (வின்.); to impase fine, mulct.

*[குற்றம் + போடு–.]*

**குற்றல்** *kuṟṟal,* பெ.(n.) 1. நெரித்தல்; creeking. 2. பறித்தல்; plucking (சா.அக.). *"வித்துக்குற் றுண்ணா விழுப்பம் மிக வினிதே" (இனி.நா.).*

*[குற்று → குற்றல்.]*

**குற்றவாளி** *kuṟṟavāḷi,* பெ.(n.) குற்றஞ்செய்தோன்; delinquent, offender, culprit, criminal. 2. குற்றஞ் சாட்டப்பட்டவன்; (legal) accused person.

**ம.** குற்றவாளி

*[குற்றம் + ஆள் → ஆளி.]*

**குற்றவீடு** *kuṟṟa-vīḍu,* பெ.(n.) காமம், வெகுளி முதலிய குற்றங்கள் நீங்குகை; faultlessness, sinlessness, suppression of human passions. *"குற்றவீடெய்தி" (மணிமே. 26:51).*

*[குற்றம் + விடு → வீடு.]*

**குற்றவுணர்வு** *kuṟṟa-vuṇarvu,* பெ.(n.) தவறு இழைத்ததால் அல்லது தவறு இழைத்ததாக நினைத்துக் கொள்வதால் உண்டாகும் மனநிலை;guilt complex.

*[குற்றம் + உணர்வு.]*

**குற்றாக்குரவையர்** *kuṟṟā-k-kuravaiyar,* பெ.(n.) ஆண்குழந்தைகளுக்குக் காதுகுத்துதல் சடங்கை முந்நூல் அணிவிக்கும்வரை செய்யாதிருக்கும் ஒருசார் பார்ப்பன வகுப்பினர்; a sect of Tamil speaking Brahmins who postpone the ear-boring ceremony of their boys till *munnūl*(upanaya ṇam).

*[குற்றா + குரவையர். குல + ஐயர் - குலவையர் → குரவையர்.]*

**குற்றாய்** *kuṟṟāy,* பெ.(n.) மீன் வகை; a kind of fish.

**ம.** குற்றால்

*[குற்றால் → குற்றாய்.]*

**குற்றால்** *kuṟṟāl,* பெ.(n.) மீன் வகை; a kind of fish.

**ம.** குற்றால்

*[குறு → குற்றால்.]*

**குற்றாலகம்** *kuṟṟālagam,* பெ.(n.) மலையாறு; mountain river. (சா.அ க.).

*[குன்று + ஆலி (குளிர்நீர், பனிநீர்)– குன்றாலி → குற்றாலி → குற்றாலகம்.]*

**குற்றாலம்**[1] *kuṟṟālam,* பெ.(n.) அருவியால் பெயர் பெற்றதும் உடல் நலத்திற்கேற்றதும் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ளதுமான ஒரு சிவத்தலம்; a village in Tinnavelly district, sacred of Siva and famous for its waterfalls, a sanatorium. *"குற்றாலத்துறை கூத்தன்" (தேவா.1181. உற்றா.).*

**மறுவ.** குற்றாலம்

*[குன்று (குற்று) + (ஆலி)ஆலம் → குற்றாலம் (குளிர்ந்த மலையருவி).]*

குட்டையான ஆலமரம் (குறு + ஆலம்) என்னும் பொருளில் குற்றாலம் எனப் பெயர் வந்ததாகக் கூறுவர். எனினும் குளிர்ந்த மலையருவிக்குக் குற்றாலகம் (ஆலி = பனிநீர்) எனப் பண்டுதொட்டே பெயர் வழங்கியுள்ளது கருதத்தக்கது.

**குற்றாலம்**[2] *kuṟṟālam,* பெ.(n.) ஆடவை (ஆனி) முதல் கன்னி (புரட்டாசி) வரையுள்ள மாதங்களில் விதைக்கப் பெற்று ஐந்து மாதத்தில் விளையும் ஒரு வகை நெல்; a kind of paddy, sown between *Āni*, and *Puraṭṭāśi* maturing on five months.

**ம.** குற்றாலன்

*[குற்றி + நெல் – குற்றிநெல் → குற்றால் → குற்றாலம்.]*

**குற்றி**[1] *kuṟṟi,* பெ.(n.) மரக்கட்டை; stump, slab, stack, block, log. *"கொல்லை யிரும்புனத்துக் குற்றி யடைந்த புல்" (நாலடி. 178).*

**ம.** குற்றி; **க.** குசி; **து.** குத்தி; **பர்.** குச்சி; **கோண்.** குத்திய

*[குறு → குற்றி.]*

**குற்றி**[2] *kuṟṟi,* பெ.(n.) வாய் குறுகிய சிறு ஏனவகை; a kind of small narrow-necked vessel. *"சுண்ணக் குற்றியும்" (பெருங். உஞ்சைக். 38:168).*

*[குறு → குற்றி.]*

**குற்றிசை**[1] *kuṟṟišai,* பெ.(n.) 1. குறுகிய சந்தம் (வின்.); short metre in *viruttam* verse, opp. to *neṭṭišai.*

*[குறு + இசை. குறு = குறுமை, சிறுமை.]*

**குற்றிசை**[2] *kuṟṟišai,* பெ.(n.) தலைவன் தன் மனைவியோடு இறுதிக்காலம் வரையில் வாழாமல் துறவு வாழ்க்கை மேற்கொள்ளும் குறுகிய புகழ் தக்கதன்று என்று கூறும் புறத்துறை (பு.வெ.12, இருபாற்.17); (puṟap.) theme describing the impropriety of the hero of a poem in neglecting his wife seeking fame and name by leading a saintly life.

*[குறு + இசை – குற்றிசை. இசை = புகழ்.]*

வாழ்நாள் வரையில் கூடி வாழ்வதற்காக அமைந்த வாழ்க்கைத் துணைவியாகிய மனைவியை, துறவு மேற்கொண்டு புகழ் பெறுவதற்காக விட்டு நீங்குவதும் தவறு என்று இடித்து அறம் கூறுவது குற்றிசை என்னும் துறையாம். எக்காரணத்தைக் கொண்டும் மனைவியைப் பிரிவது அறங்கண் மாறுவதாகக் கருதப்பட்டது. இதனை

"பொற்றார் அகலம் புல்லிய மகளிர்க்கு அற்றாங் கொழுகா தறங்கண் மாறின்று" (பு.வெ.12.கொளு.86) என்று புறப்பொருள் வெண்பாமாலை கூறும். காண்மாறுதல் = மறுத்தல்.

உரையாசிரியர் இதனை மேலும் விளக்கும் முகத்தான், 'குற்றிசை - குறுகிய புகழ். அஃதாவது காமஞ் சான்ற கடைக் கோட்காலை ஏமஞ் சான்ற மக்களொடும் மனைவியொடுமிருந்து சிறந்தது பயிற்றாது பிறர் முற்றத் துறந்தார் என்று புகழும் சிறு புகழையே விரும்பி அறங்கண் மாறிக் கற்புடை இல்லாளைக் கைவிடுவாரும் உளராகலின், அக்குறுகிய புகழைப் பழித்துக் கூறலின், இது குற்றிசை எனப்பட்டது' என்று கூறுகின்றார். குற்றிசை என்னும் துறைப்பொருள் உணராது சென்னைப் பல்கலைக்கழக அகராதி 'தலைவன் மனைவியைப் புறக்கணித்து அறநெறிப்பிறழ்ந்து ஒழுகுவதைக் கூறும் புறத்துறை என்று கூறியிருப்பது பொருள் விளக்கம் போதாதது.

இக்கருத்தினை மேற்கோள் பாடல் தெளிவு படுத்துகிறது.

"கரிய பெருந்தடங்கண் வெள்வளைக்கை யாளை
மரிய கழிகேண்மை மைந்த - தெரியின்
விளிந்தாங் கொழியினும் விட்டகலார் தம்மைத்
தெளிந்தாரில் தீர்வது தீது".
(பு.வெ.கொளு.86 மேற்கோள்.)

மனைவியை நீத்துத் துறவறம் மேற்கொள்வது அறமாகாது; புகழுமாகாது. அதைப் புகழ் என்று சொல்வதாயின் மிகச்சிறிய புகழே! குற்றிசையாகிய அச்சிறிய புகழைவிட மனைவியைப் பிரியாது வாழ்வதே முற்றிசை என்னும் பெரும் புகழைத் தரும். இதுவே தமிழ் மரபு. இதனைத் தொல்காப்பியரும்

"காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனுங் கிழத்தியுஞ்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"
(தொல்.பொருள்.கற்பு.51)

என்று கூறுகின்றார்.

முதுமைக் காலத்துத் துறவு மேற்கொள்வதாயினும் வாழ்க்கைத் துணைவர் இருவரும் துறவு மேற்கொள்ள வேண்டும் என்பதே மரபு.

**குற்றிப்பிராய்** *kuṟṟi-p-pirāi,* பெ.(n.) குற்றிப்பலா; stunted jack (சா.அக.).

*[குறு→குற்றி + பிராய், பலா → பிலா → பிரா → பிராய் (கொ.வ.).]*

**குற்றிமரம்** *kuṟṟi-maram,* பெ.(n.) கோக்காலி மரம்; plank placed in a house parallel to a wall as a support for utensils.

*[குற்றி + மரம்.]*

**குற்றியலிகரம்** *kuṟṟiya-ligaram,* பெ.(n.) சார்பெழுத்துகளுள் ஒன்றாய், அரைமாத்திரையாகக் குறுகிய இகரம் (தொல். எழுத்து.2); shortend 'இ' having only half a *mättirai* as in words கேண்மியா, நாகியாது, one of *šārbeḷuttu.*

*[குறு + இயல் + இகரம்.]*

**குற்றியலுகரம்** *kuṟṟiya-lugaram,* பெ.(n.) சார்பெழுத்துகளுள் ஒன்றாய்ப் பெரும்பாலும் மொழிகளின் ஈற்றில், அரைமாத்திரையாய்க் குறுகி

வரும் உகரம்; shortened 'உ' having only half of a *mattirai* found generally at the end of words, one of *cārbeluttu* (தொல்.எழுத் 'உ';2).

**மறுவ.** குற்றுகரம்

*[குறு + இயல் + உகரம்.]*

**குற்றிருமல்** *kuṟṟirumal,* பெ.(n.) சிணுக்கிருமல்; whooping cough. 2. மென்மையான இருமல்; slight cough (சா.அக.).

*[குறு + இருமல்.]*

**குற்றிவிளா** *kuṟṟi-viḷā,* பெ.(n.) நாய்விளா; dog wood apple (சா.அக.).

*[குறு → குற்றி + விளா.]*

**குற்று[1]-தல்** *kuṟṟu-,* 5 செ.குன்றாவி (v.t.) 1. இடித்தல் (சூடா.); to pound. 2. தாக்குதல்; to strike, hit, butt. *"மூரற் பகுவாயிற் குற்றா நிற்கும் சிலவரை" (கந்தபு.சிங்கமு.139).* 3. நெரித்தல்; to crush, as lice. 4. ஊடுருவிக் குத்துதல்; to punch, prick, pierce.

*[குல் → குறு → குற்று-.]*

**குற்று[2]** *kuṟṟu,* பெ.(n.) உள்ளே பாயும்படியான குத்தல்; puncture (சா.அக.).

*[குல் → குறு → குற்று-.]*

**குற்றுக்காயம்** *kuṟṟu-k-kāyam,* பெ.(n.) கூரான கத்தி அல்லது வேறு விதக் கருவியால் துளையுறும் படிக்குத்துவதினால் ஏற்பட்ட காயம்; wound caused by pricking or piercing with a knife or other pointed instrument (சா.அக.).

*[குற்று + காயம்.]*

**குற்றுகரம்** *kuṟṟugaram,* பெ.(n.) **குற்றியலுகரம்** பார்க்க; see *kuṟṟiya-lugaram (தொல்.எழுத்.45, உரை.).*

*[குறு + உகரம்.]*

**குற்றுடைவாள்** *kuṟṟuḍaivāḷ,* பெ.(n.) சுரிகை; small poniard. *"குற்றுடை வாள் ஆசுங் கண்டமும் பொன் கட்டிற்று" (S.I.I.II,185).*

*[குறு + உடை + வாள்.]*

**குற்றுநெல்** *kuṟṟu-nel,* பெ.(n.) நெற்குற்றுதற்கு ஏற்பட்ட ஒரு பழைய வரி; cess paid for pounding paddy (I.M.P.cg.1000).

*[குற்று + நெல்.]*

**குற்றுமி** *kuṟṟumi,* பெ.(n.) குற்றிநீக்கிய உமி (வின்.); broken husk.

*[குற்று + உமி.]*

**குற்றுயிர்** *kuṟṟuyir,* பெ.(n.) 1. குறையுயிர்; state of being half - dead . 2. குற்றெழுத்து ; short vowel *"குற்றுயி ரளபி னீறாம்" (நன்.108).*

*[குறுமை + உயிர்.]*

**குற்றுவாகை** *kuṟṟu-vāgai,* பெ.(n.) சிறுவாகை; stinted or mall sirissa (சா.அக.).

*[குறு → குற்று + வாகை.]*

**குற்றுவாய்** *kuṟṟu-vāy,* பெ.(n.) கடல்மீன் வகை; a herring, golden glossed with purple fish.

**மறுவ.** குத்துவாய்

*[குற்று + வாய்.]*

**குற்றுழிஞை** *kuṟṟuḻiñai,* பெ.(n.) பகைவரது கோட்டை மதிலின்மேல் வீரன் ஒருவன் தனியனாகவே நின்று தன் திறல் பெருமையைக் காட்டுவது கூறும் புறத்துறை (பு.வெ.6,13); (Purap) theme of a warrior standing on the enemy's fortification all alone and displaying his valour and prowess.

*[குறு + உழிஞை.]*

**குற்றூசி** *kuṟṟūsi,* பெ.(n.) உடம்பில் குத்தும் ஊசி; injection needle (சா.அக.).

*[குறு + ஊசி.]*

**குற்றெழுத்து** *kuṟṟeḻuttu,* பெ.(n.) ஒரு மாத்திரையுள்ள உயிரெழுத்து (தொல்.எழுத்து.3.); short vowel.

ம. குற்றெழுத்து

[குறு + எழுத்து.]

**குற்றேத்தம்** *kuṟṟēttam* பெ.(n.) ஆறு, பெருங்கால், குளம், ஏரி ஆகியவற்றின் கரையில் குத்திட்டு நிறுத்திய மரத்தின்வழி நீர் இறைக்க அமைக்கப் பெறும் ஏற்றம்; a well sweep or picottah set near water source for irrigational purpose. *'இவ்வாய்க்கால்கள் கன்னியர் குறங்கறுத்துக் குத்தவும் விலங்கடைக்கவும் குற்றேத்தம் பண்ணவும் – பெறாதாகவும்' (பெரியலெய்டன் செப்பேடுகள்).*

மறுவ. குற்றேற்றம்

*[குறு + ஏற்றம் – குற்றேற்றம் → குற்றேத்தம்.]*

**குற்றேல்** *kuṟṟēl,* பெ.(n.) குற்றேவல்; menial service. *"குலங்கெழு குமரரைக் குற்றே லருளி" (பெருங்.உஞ்சைக். 32,15).*

*[குறு + ஏவல் – குற்றேவல் → குற்றேல் (கொ.வ.). குற்றேவல் பார்க்க; see kuṟṟēval.]*

**குற்றேவல்** *kuṟṟēval,* பெ.(n.) பணிவிடை; menial service. *"குற்றேவ லெங்களைக் கொள்ளாமற் போகாது" (திவ்.திருப்பா.29).*

*[குறு + ஏவல் – குற்றேவல்.]*

**குற்றேற்றம்** *kuṟṟēṟṟam,* பெ.(n.) சிறு ஏற்றம்; small picottah *(தெ.இ.கல்.தொ.1:151).*

*[குறு + ஏவல் – குற்றேவல்.]*

**குற்றொற்று** *kuṟṟoṟṟu,* பெ.(n.) குற்றெழுத்தின் பின்வரும் மெய்யெழுத்து; (Gram.) consonant succeeding a short vowel.

*[குறுமை + ஒற்று – குற்றொற்று.]*

**குற[1]–த்தல்** *kuṟa-,* 4 செ.குன்றாவி.(v.t.) வெளிப் படுத்துதல்; to emit, give out. *"கொந்தக் குழலைக் குறந்த புழுகட்டி" (திவ். பெரியாழ். 2.5:8).*

*[குல் → குறு → குற]*

**குற[2]–த்தல்** *kuṟa-,* 4 செ.குன்றாவி.(v.t.) வார்த்தல்; to pour. *"புண்ணிலே புளியைக் கறந்திட்டால் கரிக்குமாபோலே" (திவ். பெரியாழ். 2.9:1, வியா. பக்.451).*

*[குல் → குற]*

**குறக்கம்** *kuṟakkam,* பெ.(n.) நாணல்; bulrush. (சா.அக.).

*[குற → குறக்கம்.]*

**குறக்கூத்து** *kuṟa-k-kūttu,* பெ.(n.) குறவராடுங் கூத்து; dance of *kuṟavar.*

*[குறம் + கூத்து.]*

**குறக்கெஞ்சு** *kuṟa-k-keñju,* பெ.(n.) குற்றஞ்செய்த குறவன் கெஞ்சுஞ்செயல்; cringing attitude of *kuṟavaṉ.*

*[குறம் + கெஞ்சு.]*

**குறகுளம்** *kuṟakuḷam,* பெ.(n.) வெள்ளிலோத்திரம்; the lodh tree (சா.அக.).

*[குறகு → குறகுளம்.]*

**குறங்கறு–த்தல்** *kuṟaṅgaṟu-,* 4 செ.கு.வி.(v.i.) கால்வாயினின்று வேறு தனிக்கால் பிரித்தல்; to branch out, as channels. *"கண்ணன் வாய் நின்றும் இவ்வூர் நிலத்தாறே குறங்கறுத்துப் புறவூர்க்கு நீர் பாயும் வாய்க்காலும்" (S.I.I.ii.57,13).*

*[குறங்கு + அறு–.]*

**குறங்கன்** *kuṟaṅgaṉ,* பெ.(n.) மலைக்கொன்றை (L); shingle tree.

*[குறங்கு + அன்.]*

**குறங்கு[1]** *kuṟaṅgu,* பெ.(n.) 1. தொடை; thigh. *"செறிந்த குறங்கின்.... அஃதை" (அகநா.96).* 2. கிளைக்கால்; branch channel. (S.I.I.ii, 352). 3. கொக்கி; clasp, catch link.

*[குறு → குற → குறங்கு (ஒ.நோ. உறு → உற → உறங்கு).]*

**குறங்கு[2]** *kuṟaṅgu,* பெ.(n.) மலையடிவாரம்; foot of a mountain. *"கட்டி க் குறங்கைக் குறங்காலு மோதி" (தக்கயாகப்.540).*

*[குல் → குற → குறங்கு]*

**குறங்குச்சம்பா** *kurangu-c-campā,* பெ.(n.) கட்டைச்செம்பாளை நெல்; a kind of coarse *campā* paddy.

*[குறங்கு + சம்பா.]*

**குறங்குசெறி** *kurangu-šeri,* பெ.(n.) தொடையணி; ornament for the thigh *"குறங்கு செறிதிரள் குறங்கினிற் செறித்து" (சிலப். 6:86).*

*[குறங்கு + செறி.]*

**குறங்கொட்டி** *kuran-kotti,* பெ.(n.) துலா முதலிய வற்றோடு இணைக்கும் மரக்கட்டை; short piece or strip of wood tied to the end of a well-sweep, to a rafter or to the broken leg of a chair.

*[குறங்கு + ஒட்டி.]*

**குறங்கொன்றகம்** *kuran-konragam,* பெ.(n.) பெருங்கோரைக் கிழங்கு; the root of a big variety of *kōray* grass (சா.அக.).

**மறுவ.** பெருமுத்தக்காசு

*[குறும் + கொன்றகம்.]*

**குறச்சாதனை** *kura-c-cādanai,* பெ.(n.) குற்றஞ் செய்த குறவனைப் போற் செய்யும் வன்செயல்; stubborn inflexible nature, as of a *kuravan.*

*[குறம் + சாதனை.]*

**குறஞ்சால்** *kurañjāl,* பெ.(n.) குறையுழவுடைய நிலம் (யாழ்.அக.); land partially ploughed.

*[குறும் + சால் – குறுஞ்சால் → குறஞ்சால்.]*

**குறஞ்சி** *kurañji,* பெ.(n.) 1. மருதோன்றி (மலை.) ; henna. 2. செம்முள்ளி (மலை.) ; common yellow nail dye. 3. ஈந்து (மலை.); date palm.

*[குறிஞ்சி → குறஞ்சி.]*

**குறட்டரியம்** *kura-t-tariyam,* பெ.(n.) குறையை மெல்ல வெளியிடுகை; complaint, murmur, expression of dissatisfaction or discontent. *அவன் குறட்டரியம் பண்ணுகிறான் (இ.வ.).*

*[குறு → குறட்டு + அரியம்.]*

**குறட்டாழிசை** *kura-t-tālišai,* பெ.(n.) நாற்சீரின் மிக்க சீர்களால் வரும் அடியிரண்டாய் ஈற்றடி குறைந்து வருவனவும் வேற்றுத்தளை தட்டுக் குறள் வெண்பாவிற் சிதைந்து வருவனவுமாகிய பாவினம் (காரிகை, செய். 9,உரை); verse of two unequal lines, of five or more feet, the second line being always shorter than the others.

*[குறள் + தாழிசை.]*

**குறட்டிழுப்பு** *kura-t-tiluppu,* பெ.(n.) ***குறட்டுவலி*** பார்க்க;see *kurattuvali.*

*[குறள் → குறட்டு + இழுப்பு.]*

**குறட்டின்கண்** *kurattinkan,* பெ.(n.) குறட்டின் துளை; fenestrum or opening of forceps (சா.அக.).

*[குறடு + இன் + கண்.]*

**குறட்டுக்கம்பு** *kurattu-k-kambu,* பெ.(n.) தலைப்பக்கத்தில் குமிழுள்ள கம்பு; cane with head. *"முரட்டும் குறட்டுக் கம்பாலே யடிபடிவோ" (குரு.கூர்ப்.8.).*

*[குறடு +கம்பு]*

**குறட்டுச்சுவர்** *kurattu-c-cuvar,* பெ.(n.) மண்தாங்கிச் சுவர் (CEM); retaining wall.

*[குறடு + சுவர்.]*

**குறட்டுச்செருப்பு** *kurattu-c-ceruppu,* பெ.(n.) பெருவிரலில் மாட்டத்தக்க மோதிரமுள்ள செருப்பு; a kind of sandals with a loop to admit the great toe.

*[குறடு + செருப்பு.]*

**குறட்டுப்பாக்குவெட்டி** *kurattu-p-pākku-vetti,* பெ.(n.) பாக்குவெட்டி வகை; arecanut - cracker with a forked mouth.

*[குறடு + பாக்கு + வெட்டி.]*

**குறட்டுவலி** *kurattu-vali,* பெ.(n.) உடல் நலிவாற் காணும் இழுப்பு; a spasmodic painful contraction of the limb or muscle through weakness (சா.அக.).

மறுவ. குறட்டிழுப்பு

*[குறடு + வலி.]*

**குறட்டுவாங்கல்** *kurattu-vāṅgal,* பெ.(n.) குறட்டு வலியை நீக்குதல்; curing cramps (சா.அக.).

*[குறடு → குறட்டு + வாங்கல்.]*

**குறட்டுவாதம்** *kurattu-vādam,* பெ.(n.) வலிப்பு நோய்வகை; a kind of spasm, convulsion.

*[குறட்டு + வாதம்.]*

**குறட்டெழுதகம்** *kuratt-eludagam,* பெ.(n.) வாசல் நிலையில் அமைந்த அழகிய மரவேலை (கட்.தொ.வரி); a kind of nice wood work on door frame.

*[குறடு → குறட்டு + எழுதகம்.]*

**குறட்டை[1]** *kurattai,* பெ.(n.) 1. சவரிக்கொடி; bitter snake gourd. 2. காக்கணங்கொவ்வை; mussel shell creeper. 3. எலிவகை; a kind of rat.

*[குறடு → குறட்டை.]*

**குறட்டை[2]** *kurattai,* பெ.(n.) உறக்கத்தில் மூச்சு விடும் ஒலி; snoring, snorting. *"கோட்டுவாயோடி வடியக குறட்டைவிட்டு" (இராமநா.உயுத்.32).*

**Fin.** korista; **Es.** koriseda; **Q.** jorjuy.

*[குல் → குறட்டு → குறட்டை.]*

**குறட்டைவிடல்** *kurattai-vidal,* பெ.(n.) தூக்கத்தில் விடும் ஒலி மூச்சு; breathing with a rough, hoarse noise in sleep (சா.அக.).

*[குறட்டை + விடல்.]*

**குறட்பா** *kuratpā,* பெ.(n.) குறள்வெண்பா; kural venbā, a two line metre in Tamil prosody. *"வள்ளுவனா ரோது குறட்பா" (வள்ளுவமா.43).*

*[குறள் + பா.]*

**குறடா** *kuradā,* பெ.(n.) குதிரைச் சவுக்கு; horse whip.

**க.**கொரடா

*[குறடு → குறடா (கொ.வ.).]*

**குறடு[1]** *kuradu,* பெ.(n.) 1. கம்மியரது பற்றுக்குறடு; pincers, tongs, forceps. *"கொட்டி யுண்பாரும் குறடுபோற் கைவிடுவர்" (நாலடி.208).* 2. சுவடி தூக்குங் கயிற்றுக் குறடு; satchel-pin, hook for hanging up school boy's *ōla* books. 3. நண்டு; crab. 4. பாதக்குறடு (யாழ்.அக.); sandals.

**தெ.**கொரடு

*[குறு → குறள் → குறடு (வளைந்தது).]*


குறடு

**குறடு[2]** *kuradu,* பெ.(n.) 1. மரத்துண்டு; small block or clump of wood. *"சந்தன மென்குறடு" (வாக்குண்.28).* 2. பலகை (சூடா.); plank, board. 3. இறைச்சி கொத்தும் பட்டடை மரம்; block for cutting meat. *"ஊனமர் குறடு போல" (சீவக. 2281).* 4. தேர் முதலியவற்றின் அச்சுக் கோக்கும் இடம்; axle-box of a cart. *"நோன்குறட் டாரஞ் சூழ்ந்த.... நேமி" (சிறுபாண்.252).* 5. சந்தனக் கல்; grinding-stone for preparing sandal perfume. *"செழுமலைக் குறடுரிஞ்சிச் செய்ய சந்தனத்தின்" (சேதுபு. திருநாட்.26).*

**ம.** குரடு; **க., தெ., பட.** கொறடு; .

**Fin.** kurkihirsi; **Q.** kurku.

*[குறு → குறள் → குறடு (குட்டையானது, சிறியது).]*

**குறடு[3]** *kuradu,* பெ.(n.) 1. திண்ணையொட்டு; edge of a veranda, extension of varandah. 2. திண்ணை (பிங்.); raised floor or verandah, pial; pedestal. 3. சுவர் முதலியவற்றிலுள்ள எழுதகம்; cornice on a wall or column. 4. பறை வகை; a kind of drum. *"கும்பிகை திமிலை செண்டை குறடு" (கம்பரா. பிரமாத்.5).*

ம. குரண்டி; க. கொரட; தெ., து. கொறடு.

[குறள் → குறடு (சிறியது).]

**குறண்டல்** *kurandal,* பெ.(n.) 1. குரக்குவலி; cramps. 2. இசிவுண்டாதல்; being attacked with convulsion (சா.அக.).

[குறண்டு → குறண்டல்.]

**குறண்டல்வாதம்** *kurandal-vādam,* பெ.(n.) ஒருவகை வலிப்புநோய்; (j.) a kind of rheumatic affection attended with spasms.

[குறண்டல் + வாதம்.]

**குறண்டற்கிழவன்** *kurandar-kilavan,* பெ.(n.) கூனற்கிழவன் (j.); hunch-backed old man.

[குறண்டல் + கிழவன்.]

**குறண்டற்சுறுக்கம்** *kurandar-curukkam,* பெ.(n.) குழுப்பு வலி; spasmodic contraction (சா.அக.).

[குறண்டல் + சுறுக்கம்.]

**குறண்டற்பனங்கிழங்கு** *kurandar-panan-kilangu,* பெ.(n.) சுருங்கிய அல்லது சுருண்டு வளைந்துள்ள பனங்கிழங்கு; palmyra root withered and bent (சா.அக.).

[குறண்டல் + பனங்கிழங்கு.]

**குறண்டி**[1] *kurandi,* பெ.(n.) செவ்வழிப் பண்வகை (பிங்.); a secondary melody-type of the *śevvali* class.

[குறண்டு → குறண்டி (குறைப்பண்வகை)]

**குறண்டி**[2] *kurandi,* பெ.(n.) 1. முட்செடி வகை; a thorny shrub. 2. தூண்டில் முள்; barb of fish hook.

[குறு → குறண்டு → குறண்டி.]

**குறண்டிப்பிடி-த்தல்** *kurandi-p-pidi-,* 4 செ.கு.வி. (v.i.) மிகவும் கருமியாய் இருத்தல்; to be close fisted, grasping, miserly.

[குறண்டி + பிடி-.]

**குறண்டிப்போ-தல்** *kurandi-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) கூனலாதல்; to grow crooked, to be bent, hunch-backet.

[குறண்டி + போ-.]

**குறண்டிவளையம்** *kurandi-valaiyam,* பெ.(n.) தொட்டிற் சங்கிலி மாட்டும் வளையம்; double hooks, fixed to a roof beam for hanging a cradle.

[குறண்டி + வளையம்.]

**குறண்டினகால்** *kurandinakāl,* பெ.(n.) குறைந்த கால்; club foot. 2. சப்பைக்கால்; short and distorted foot, of congenital origin (சா.அக.).

[குறண்டி + கால் → குறண்டினகால்.]

**குறண்டு-தல்** *kurandu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வளைதல்; to be crooked or bent, as horns, fingers, limbs, fruits. 2. வலிப்பு கொள்ளுதல்; to be convulsed, to have spasms. 3. சுருண்டு கொள்ளுதல்; to coil up, as a small reptile.

[குறடு → குறண்டு.]

**குறத்தனம்** *kurattanam,* பெ.(n.) பாசாங்கு; pretence, dissimulation.

[குறம் + தனம்.]

**குறத்தி**[1] *kuratti,* பெ.(n.) குறிஞ்சிநிலப் பெண்(இறை.1, உரை.); woman of the hilly tract. 2. குறச்சாதிப் பெண்; woman of the *kurava* tribe.

[குறம் → குறத்தி.]

**குறத்தி**[2] *kuratti,* பெ.(n.) 1. நிலப்பனை (மலை.); a ground palmplant common in sandy tracts.

மறுவ. குறத்திகை, குறத்திகா.

[குறம் → குறத்தி.]



குறத்தி

**குறத்திகம்** *kurattigam,* பெ.(n.) குடசப்பாலை (சா.அக.); a kind of plant.

*[குறம் → குறத்திகம்.]*

**குறத்திகள்** *kurattigaḷ,* பெ.(n.) 1. ***குரத்திகள்*** பார்க்க; see *kurattigaḷ.* 2. சமணப்பெண் துறவியர்; female ascetics of Jain order. *"ஸ்ரீதிருமலைக் குறத்திகள் மாணாக்கன் ஏனாதி குத்தனஞ் சாத்திச் செய்வித்த படிமம்" (தெ.கல்.தொ.5.கல். 370) (கல்.க.சொ.அக.).*

*[குரவன் (ஆசிரியன்) → குரத்தி + கள் – குரத்திகள் → குறத்திகள் (கொ.வ.).]*

**குறத்திகா** *kurattigā,* பெ.(n.) ***குறத்திகை*** பார்க்க; see *kurattigai.*

*[குறத்திகை → குறத்திகா.]*

**குறத்திகை** *kurattigai,* பெ.(n.) நிலப்பனை; ground palm (சா.அக.).

*[குன்றம்→குறம்→குறத்தி→குறத்திகை.]*

**குறத்திப்பாசி** *kuratti-p-pāśi,* பெ.(n.) வெண்மையும் உருட்சியுமான காய்களையுடைய புல்வகை (M.M.669); job's tears, a small coarse grass, having large, round, white, shining fruits.

**மறுவ.** பூனாச்சிப்புல் (சா.அக.).

*[குறத்தி + பாசி.]*

**குறத்திப்பாட்டு** *kuratti-p-pāṭṭu,* பெ.(n.) தலைவிக்கு அவளது காதல் பற்றி குறத்தி குறி சொல்வதாகக் கூறும் ஒரு வகைச் சிற்றிலக்கியம் (தொன்.வி.283); a poem in which a *kurava* woman is represented as describing to a maiden her fortune in her love affair.

*[குறத்தி + பாட்டு.]*

**குறத்திமுலைப்பால்** *kuratti-mulai-p-pāl,* பெ.(n.) தேன்; honey (சா.அக.).

*[குறத்தி + முலை + பால். குறத்திமுலை = மலைமுகடு.]*

**குறப்பாசாங்கு** *kura-p-pāśāṅgu,* பெ.(n.) குற்றஞ் செய்த குறவன் ஒன்றும் அறியாதவன்போல் காட்டும் போலி நடிப்பு; pretended simplicity or feigned innocense, as the trick of a *kuravar.*

*[குறம் + பாசாங்கு.]*

**குறம்** *kuram,* பெ.(n.) 1. குறக்குடி; *kurava* tribe. 2. குறத்தி சொல்லும் குறி (சங்.அக.); palmistry, fortune-telling. 3. குறவர் கூற்றாக வரும் கலம்பக வுறுப்புள் ஒன்று; a theme in Kalampagam as representing the speech of *kuravaṉ.* *"தவங்குற மறம் பாண்" (இலக்.வி.812).* 4. ***குறத்திப்பாட்டு*** பார்க்க; see *kuratti-p-pāṭṭu.* மீனாட்சியம்மை குறம்.

*[குன்று → குன்றம் → குறம்.]*

**குறம்படை** *kuram-paḍai,* பெ.(n.) கோட்டை; fort. குறம்படை மழவர் (அக.நா.35).

*[குறம் + படை.]*

**குறமகளிளவெயினி** *kura-magaḷ-iḷa-veyiṉi,* பெ.(n.) புறநானூற்றில் 157 ஆம் பாடலியற்றியவரும் குறச்சாதியினருமான ஒரு பெண்பாற்புலவர்; a *Kurava* poetess who composed the 157th stanza in *Puranāṉūṟu.*

*[குறமகள் + இளவெயினி.]*

**குறவஞ்சி** *kuravañji,* பெ.(n.) 1. குறிசொல்லும் குறமகள்; woman of the kurava tribe; fortune-teller. 2. குறத்திப்பாட்டு; a kindof dramatic poem.

*[குறம் + வஞ்சி → குறவஞ்சி.]*

**குறவணவன்** *kuravaṇavaṉ,* பெ.(n.) எருக்குவியலில் தோன்றும் வெண்புழு (யாழ்ப்.); large white grub found in dung heaps.

*[குறு (வெள்) + வெண்வன் – குறுவணவன்.]*

**குறவம்** *kuravam,* பெ.(n.) கோட்டம் என்னும் நறுமண வேர்; Arabian costus (சா.அக.).

*[குழு→குழுவம்→ குறவம் (கொ.வ.).]*

**குறவழக்கு** *kura-vaḻakku,* பெ.(n.) 1. தீரா வழக்கு; complicated, involved lawsuit. 2. வலக்காரமாய்

ஒட்டாரம் பிடித்து (பிடிவாதமாய்) மேற்கொள்ளும் முறையற்ற வழக்கு; lawless contention obstinately maintained.

*[குறம் + வழக்கு.]*

**குறவன்** *kuṟavaṉ,* பெ.(n.) 1. குறிஞ்சிநில மகன்; inhabitant of the hilly tract. *"குறவரு மருளுங் குன்றத்து" (மலைபடு. 275).* 2. பாலைநிலமகன் (பிங்.); in habitant of the desert tract. 3. வலை வைத்தல், பாம்பு பிடித்தல், கூடைமுடைதல், குறி சொல்லுதல் முதலிய தொழில்கள் செய்யும் குடியினன்; *kuṟava,* a caste of fowlers, snake catchers, basket-makers and fortune-tellers. 4. பாசாங்கு பண்ணுகிறவன்; pretended cringing hypocrite. 3. இதளியம் (மூ.அக.); mercury, quicksilver.

*[குன்றம் → குறம் + அன் → குறவன்.]*

**குறவாணர்** *kuṟa-vāṇar,* பெ.(n.) மலைக்குறவர்; the kuṟava tribe of the mountain. *"முடிந்த பொழுதிற் குறவாணர்" (திவ்.இயற்,3,89).*

*[குன்றம் → குறம் + (வாழ்நர்) வாணர்.]*

**குறவான்** *kuṟavāṉ,* பெ.(n.) ஒருவகைக் கடல்மீன்; a sea fish known as file or trigger fish (சா.அக.).

*[குறவன்→குறவான்.]*


குறவான்

**குறவி** *kuṟavi,* பெ.(n.) குறக்குடிப் பெண்; a woman of *kuṟava* caste, fem.of *kuṟavaṉ.* *"குறவிதோண் மணந்த செல்வக் குமரவேள்" (தேவா.758:3).*

*[குறவன் → குறவி (பெண்பால்).]*

**குறவிளிம்பு** *kuṟa-viḷimbu,* பெ.(n.) மண்டைப் பொருத்து; lamboidal suture (சா.அக.).

*[குறம் + விளிம்பு.]*

**குறவை**[1] *kuṟavai,* பெ.(n.) பத்தியத்திற்கு உதவும் குறவைமீன்; spotted doke, It is useful in diet.

***வகைகள்:*** 1. பெருங்குறவை 2. கற்குறவை 3. கருங் குறவை 4. மணியாங் குறவை 5. பறக்குறவை (சா.அக.).

*[குறம் + வை → குறவை.]*

**குறழ்–தல்** *kuṟaḻ-,* 2 செ.கு.வி. (v.i.) குனிதல் (வழூஉப்பொருள்); to stoop, bend low. *"அவனாங்கே பாராக் குறழா" (கலித். 65:10).*

*[குழறு → குழறா →குறழா (குறழ்) – சொல்வழு.]*

'குழறா' என்பது எழுதுவோரால் 'குறழா' எனப் பிறழ எழுதப்பட்டு அதற்குக் குனிதல் என்னும் பொருளும் நச்சினியார்க்கினியரால் தரப்பட்டுள்ளது. குறழ்தல் என்னும் சொல் பண்டை இலக்கியத்தில் யாண்டும் 'குனிதல்' என்னும் பொருளில் பயின்றிலது. இச்சொல்லும் பொருளும் தவற்று வடிவினவாம். கலித்தொகையில் (65:10) 'குறழா' எனும் சொல் 'குழறா' எனத் திருத்தப்படல் வேண்டும்.

**குறள்**[1] *kuṟaḷ,* பெ.(n.) தமிழ் மறையாகிய திருக்குறள்; Tirukkuṟaḷ, the sacred book of the Tamils. *"உலகெலாங் கொள்ள மொழிந்தார் குறள்" (வள்ளுவமா.33).*

*[குறு → குறள்]*

**குறள்**[2] *kuṟaḷ,* பெ.(n.) பாதிரி; trumpet flower tree (சா.அக.).

*[குறு → குறள்]*

**குறள்**[3] *kuṟaḷ,* பெ.(n.) 1. குறுமை; shortness, dwarfishness. *"குண்டைக் குறட்பூதம்" (தேவா. 944:1).* 2. ஈரடி உயரமுள்ள குள்ளன்; dwarf, about 2ft. high-dist, fr.*cindu.* *"தேரை நடப்பன போற் குறள்" (சீவக.631).* 3. பூதம் (பிங்.); imp, goblin. 4. சிறுமை; smallness. *"வரகின் குறளவிழ்ச் சொன்றி" (பெரும்பாண். 193).* 5. குறளடி; short venbā

(இலக்.வி.730:270). 6. *குறள் வெண்பா* (இலக்.வி.730);see *kuralvenbā*.

*[குறு → குறள்.]*

**குறள்செய்** *kuralcei*, பெ.(n.) குறுகிய நன்செய் நிலம், புன்செய் நிலத்தின் ஊடே வெட்டி அமைக்கப் படும் நன்செய்நிலம்; area of irrigated field formed amidst dry land.

*[குறள் + செய்.]*

**குறள்வெண் செந்துறை** *kural-ven-sendurai*, பெ.(n.) குறள் வெண்பாவினினமாக, எவ்வகைச் சீர்தளையடிகளாலும் செம்மையாகிய ஓசையும் பொருளுமுடையதாய்த் தம்முள் அளவொத்த இரண்டடியால் வரும் செந்துறை;a *sendurai* metre of *kural venbā* type of prosody comprising of various components and combination of syllabic cir ad talai with rythmic stanzas. *"கொன்றைவேந்தன் செல்வனடியினை என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே" (கொன்றை. காப்பு).*

*[குறள் + வெண் + செந்துறை.]*

**குறள்வெண்பா** *kural-venbā*, பெ.(n.) முதலடி நாற்சீரும், இரண்டாமடி முச்சீருமாகி வரும் ஈரடி வெண்பா (இலக்.வி.730,உரை); distich of *venbā metre*, the first line consisting of four and the second of three *cir*.

*[குறள் + வெண்பா.]*

**குறளடி** *kural-adi*, பெ.(n.) இருசீரான் வரும் அடி (இலக்.வி.719); a line consisting of two *cir*.

*[குறள் + அடி.]*

**குறளடி வஞ்சிப்பா** *kural-adi-vañji-p-pā*, பெ.(n.) குறளடியால் மூன்றுமுதற் பலவடி கொண்டு தனிச் சொல்லும் சுரிதகமும் பெற்றுவரும் வஞ்சிப்பா (காரிகை.செய்.24); a kind of *vañji* verse consisting of three or more lines of *kuraladi*, with a detached foot and *agavarcuridagam*.

*[குறள் + அடி + வஞ்சி + பா.]*

**குறளன்** *kuralan*, பெ.(n.) 1. குள்ளன்; short person, dwarf. 2. வாமனனாக உருவெடுத்த திருமால்; Visṇu, as a dwarf.

ம. குறளன்

*[குறள் → குறளன்.]*

**குறளி**[1] *kurali*, பெ.(n.) 1. குறியவள்; dwarfish woman. *"ஒருதொழில் செய்யுங் குறளி வந்து" (சீவக. 1653, உரை).* 2. குறளிப்பிசாசு; dwarf goblin. *"வாயிலிடிக்குது குறளி யம்மே" (குற்றா.குற.71).* 3. குறளிவித்தை;trick of a dwarf goblin. 4. கற்பிழந்தவள் (சூடா.); unchaste woman.

*[குறள்→ குறளி.]*

**குறளி**[2] *kurali*, பெ.(n.) குறும்பன்; mischievous person.

*[குறள் → குறளி.]*

**குறளிக்கூத்து** *kurali-k-kūttu*, பெ.(n.) குறும்புச் செயல்கள்; mischievous devilish act.

*[குறளி + கூத்து.]*

**குறளிப்பந்தம்** *kurali-p-pandam*, பெ.(n.) குறளிப் பேயால் வீடு கொளுத்த இடப்படுவதாகக் கருதப்படும் தீப்பந்தம்; burning ball of rags supposed to be used by the *kurali* devil to set fire to houses.

*[குறளி + பந்தம்.]*

**குறளிப்பிசாசு** *kurali-p-piśāśu*, பெ.(n.) மாயவித்தை செய்யும் பேய்வகை; dwarf-demon supposed to revel in black magic performances.

*[குறளி + பிசாசு.]*

**குறளிவித்தை** *kurali-vittai*, பெ.(n.) குறளியின் உதவியாற் செய்யப்படும் மாயவித்தை; magical tricks, legerdemain, as aided by the *kurali* devil.

*[குறளி + வித்தை.]*

**குறளை** *kuṟaḷai,* பெ.(n.) 1. கோட்சொல்; calumny, aspersion, backbiting. *"பொய்யே குறளை கடுஞ் சொல் பயனில் சொல்லென" (மணிமே.30:68).* 2. வறுமை; poverty, adversity. *"குறளை யுணட்பளவு தோன்றும்" (திரிகடு.37).* 3.நிந்தனை; sarcastic expressions, censure, reproach. 4. குள்ளம்; dwarfishness.

*[குறு → குறள் → குறளை.]*

**குறாவிப்போதல்** *kuṟāvi-p-pōdal,* பெ.(n.)1. மெலிதல்; growing lean. 2. ஒடுங்குதல்; being reduced (சா.அக.).

*[குறாவு → குறாவி + போ.]*

**குறாவு-தல்** *kuṟāvu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வாடுதல்; to sink, as the spirit by disappointment, hunger; to droop, as plants by drought. 2. ஒடுங்குதல் (யாழ்.அக.); to shrink, contract, recede. 3. மெலிதல் (யாழ்.அக.); to become reduced, lean, as a person, animal. 4. புண் ஆறி வடுவாதல்; to heal, as a sore, cicatrice.

*[குறு → குறுகு → குறுவு → குறாவு.]*

**குறாள்** *kuṟāḷ,* பெ.(n.) 1. கன்னி; virgin. 2. பெண் ஆட்டுக்குட்டி; Ewe lamb.

*[குறு + ஆள்.]*

**குறி[1]-த்தல்** *kuṟi-,* 4 செ.கு.வி. (v.i.) 1. கருதுதல்; to design, intend, contemplate, consider, think. *"கொலைகுறித் தன்ன மாலை" (அகநா.364).* 2. ஊழ்கம் செய்தல்; to meditate. *"ஞானியர்தாங் குறியெட்டக் கரத்தார்" (அட்டப். திருவேங்கடமா. 57).* 3. வரையறுத்தல் (பிங்.); to determine, ascertain. 4. கோடு வரைதல்; to draw, as a line. *'புழுக்குறித்தது எழுத்தானாற் போல' (ஈடு,2.4:3).* 5. குறித்துக் கொள்ளுதல்; to note down, to make the first draft in writing, to sketch an outline in painting, to trace. இந்நூலின் அரும்பதங்களைக் குறிக்க. 6. சுட்டுதல்; to refer to, denote, suggest, specify. 6. பற்றுதல்; to pertain, relate to, *எதைக் குறித்துப் பேசினாய்?"* 8. இலக்கு வைத்தல்; to aim at, as in shooting. *"வெய்யோன் குறித்தெறி பிறங்கல்" (கந்தபு.கயமுகன்வ.38).* 9. அடைதல்; to reach, attach oneself to. *"குரவன் பதத்தைக் குறித்து" (சைவச. பொது.125).* 10. பாவித்தல்; to regard, fancy. *"குறித்துச் சிவனெனக் கோபுரத்தை" (சைவச.பொது.126).* 11. சொல்லுதல்; to narrate briefly, tell. *"உற்றதுங் குறித்தான்" (கம்பரா.அகலிகை.41).* 12. முன்னறி வித்தல்; to foretell, predict, forebode. தீச்சகுனம் பொல்லாங்கைக் குறிக்கும். 13. ஊதியொலித்தல்; to blow, as a conch; to sound *"வலம்புரி குறித்து" (பாரத. பதினேழாம்.12).*

ம., க. குறி; தெ.,கு. குறி.

*[குல் → குறு→ குறி.]*

**குறி[2]** *kuṟi,* பெ.(n.) 1. அடையாளம் (பிங்.); mark, sign, stamp, emblem. 2. இலக்கு; aim, mark to shoot at. *"கூரிய குணத்தார் குறிநின்றவன்" (தேவா. 356:3).* 3. குறியிடம் (தொல்.பொருள்.130); (Akab.) secret appointment by lovers. 4. நினைத்த இடம்; goal, destination. *"சென்று மீளாக்குறி" (கம்பரா. கடிமண.49).* 5. நோக்கம்; motive, intention. 6. குறிப்பு; suggestion,hint, insinuation. 7.மதக்கொள்கை; doctrine. *"குறிபலவுங் கொளுவினார்" (பெரியபு.திருநா.38).* 8. முன்னறிந்து கூறும் தன்மை; omen, presage, prognostic. *"குறியிறைப் புதல்வரோடு" (குறுந்.394).* 9. கூட்டம், சபை; assembly, village council. *"மத்யஸ்தரைக் கொண்டு குறிகூட்டி" (சோழவமி.55).* 10. தடவை; turn, occasion. *"ஒருகுறி கேட்போன்" (நன்.42).* 11. காலம்; time, days, season, as in, இக்குறி–now-a-days. 12. ஒழுக்கம்; character, principle of conduct. 13. ஆண்குறி அல்லது பெண்குறி; generative organ. 14. அடி; stripes, lashes.15. இலக்கணம்; definition, accurate description. *"குறியறிந் தோரே" (தொல்.பொருள்.47).*

*[குல் → குறு→ குறி.]*

**குறி[3]** *kuṟi* பெ.(n.) குறியாடு; a sheep.

**Fin.** karista; **FD.** karoo; **Mong.** xuray.

*[குறு → குறி.]*

**குறி⁴** *kuṟi,* பெ.(n.) உணர்தல், தெளிதல் என்னும் இரு வகையில் நோயின் தன்மை அறிவிக்கும் சின்னங்கள்; symptoms of diseases they are of two kinds subjective and objective (சா.அக.).

*[குல் → குறு → குறி.]*

**குறி⁵** *kuṟi,* பெ.(n.) அளவு "ஸர்வேஸ்வரனுக்கும் கைக்குறி யாப்பை வாங்குவது இங்கேயிறே" (ஈடு.1,4,6); measure.

*[குல் → குறி.]*

**குறிக்கடை** *kuṟikkaḍai,* பெ.(n.) குறி, அளவுகோல்; measure.

*[குறிக்கு + அடை - குறிக்கடை.]*

**குறிக்கொட்டாங்கச்சி** *kuṟi-k-koṭṭāṅkacci,* பெ.(n.) குறி வைத்தலுக்குரிய தேங்காய்க் கண்மூடி அளவு (உழ.நெ.க. அக.);coconut shell used as a marker.

*[குறி + கொட்டாங்கச்சி (கொட்டான்காய் + சில்).]*

**குறிக்கொள்(ளு)¹-தல்** *kuṟi-k-koḷ-,* 16 செ.குன்றா.வி (v.t.) 1. கைக்கொள்ளுதல்; to grasp, seize, hold. *"கோது படலில்ல குறிக்கொண்டு" (சீவக. 499).* 2. மனத்துக் கொள்ளுதல்; to comprehend, understand. *"ஏத்த நில்லா குறிக்கொண்மினிடரே" (திவ்.திருவாய்.8:6,6).* 3. கவனித்துப் பாதுகாத்தல்; to guard carefully. *"பறவை யரையா வுறகல் பள்ளியறை குறிக்கொண்மின்" (திவ்.பெரியாழ். 5:2,9).* 4. ஒன்றையே குறியாகப் பற்றுதல்; to fix the mind steadily on one subject, to concentrate. *"குறிக்கொள் ஞானங்களால்" (திவ்.திருவாய், 2:3,8).*

க. குறிக்கொள்

*[குறி + கொள்.]*

**குறிக்கொள்(ளு)²-தல்** *kuṟi-k-koḷ-,* 16 செ.கு.வி.(v.i.) மேன்மைப் படுதல் ; to be remarkable, distinguised.

*[குறி + கொள்.]*

**குறிக்கொள்வோன்** *kuṟi-k-koḷvōṉ,* பெ.(n.) ஒன்றையே இடைவிடாது சிந்திப்பவன் (பிங்.); one who sets his heart on one pursuit or object, one who concentrates his attention on one thing.

*[குறி + கொள்வோன்.]*

**குறிக்கோள்** *kuṟi-k-kōḷ,* பெ.(n.) 1. மனவொருமை (திவா.); single-minded devotion, concentration. 2. நினைவில் வைக்கை (திவா.); cherishing in memory, remembering. *"குறிக்கோட் டகையது கொள்கெனத் தந்தேன்" (சிலப். 30:63).* 3. அறியுந் திறம்; comprehension or power of understanding. *"என்றுணரும் குறிக்கோ ளில்லா" (கம்பரா.சூர்ப். 140).* 4. உயர்ந்த கருதுகோள்; ideal. *"குறிக்கோளி லாது கெட்டேன்" (தேவா. 632:9).* 5. நல்லுணர்வு; wisdom, good sense, sagacity. *"கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோளொன் றிலாமையினால்" (திவ்.பெரியதி. 1:9,3).* 6. யாழ் மிடற்றுதலிற் கருத்தோடு செய்ய வேண்டிய பண்ணல் முதலிய தொழில்கள்; acts needed to play upon a violin properly, numbering-8, viz, பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு. 7. மேன்மைப்பாடு (வின்.); the state of being distinguished or illustrious.

*[குறி + கொள் - குறிக்கொள் → குறிக்கோள்.]*

**குறிகண்டுநோதல்** *kuṟi-kaṇḍu-nōdal,* பெ.(n.) பிள்ளைப்பேற்றின்போது (பிரசவத்தில்) பனிக்குடமுடைந்து நோய் காணுதல்; commencement of labour after the discharge of liquor amni.2. வீங்கி வலித்தல்; pain from swelling (சா.அக.).

*[குறி + கண்டு + நோதல்.]*

**குறிகண்டுவடித்தல்** *kuṟi-kaṇḍu-vaḍittal,* பெ.(n.) மருந்து, எண்ணெய் முதலியவற்றைப் பதம் பார்த்து இறுத்தல்; filtering at the proper stage as medicated oil etc. during their preparation (சா.அக.).

*[குறி + கண்டு + வடித்தல்.]*

**குறிகாண்(ணு)-தல்** *kuṟi-kāṇ-,* 12 செ.கு.வி.(v.i.) 1. அறிகுறி தோன்றுதல்; to appear, as symptoms, signs. 2. குறிப்பிடுதல்; to forebode, betoken, typify. 3. பிள்ளைப் பேற்றுக்குரிய குறி தோன்றுதல்; to have slight discharge at or before the presentation at child birth.

*[குறி + காண்.]*

**குறிகாரன்** *kuṟi-kāraṉ,* பெ.(n.) 1. குறிப்பாக அடிப்பவன்; good marksman. 2. குறி சொல்வோன்; sooth sayer, diviner.

*[குறி + காரன்.]*

**குறிகூடு-தல்** *kuṟi-kūḍu-,* 12 செ.கு.வி.(v.i.) நோக்கம் நிறைவேறுதல்; to realise,achieve, as an object *"கும்பிடவே குறிகூடும்" (தேவா. 314:5).*

*[குறி + கூடு-.]*

**குறிகூறுபவன்** *kuṟi-kūṟubavaṉ,* பெ.(n.) குறி சொல்வோன்; sooth sayer (சா.அக.).

மறுவ. குறிகாரன்

*[குறி + கூறுபவன்.]*

**குறிகெட்டவன்** *kuṟi-keṭṭavaṉ,* பெ.(n.) நெறி யற்றவன்; dishonest, shameless, unprincipled man.

*[குறி + கெட்டவன்.]*

**குறிகேள்-தல் (குறிகேட்டல்)** 4 செ.கு.வி.(v.i.) 1. குறிசொல்லுமாறு குறிசொல்பவனை வினாவுதல்; to consult a fortune-teller, diviner. 2. குறிகாரன் சொல்வதைச் செவிமடுத்தல்; to hear what the diviner foresays.

*[குறி + கேள்-.]*

**குறிகோள்** *kuṟikōḷ,* பெ.(n.) 1. மெய்யறிவு; wisdom. 2. மனவொருமை; concentration of mind (சா.அக.).

*[குறி + கோள் (வினைத்தொகை) குறிகோள் : மனத்துட் கொண்ட கோட்பாடு.]*

**குறிச்சி**[1] *kuṟicci,* பெ.(n.) 1. குறிஞ்சி நிலத்தூர்; village in the hilly tract. *"குறிச்சி புக்க மான்போலவும்" (இறை.1, உரை). 2. ஊர் (திவா.);* village.

ம. குறிச்சி க.குறிகை.

*[குறிஞ்சி → குறிச்சி (வலித்தல் திரிவு).]*

**குறிச்சி**[2] *kuṟicci,* பெ.(n.) குழந்தைக்கு வருங் குத்திருமலுக்கு காப்பாக (இரட்சையாக)க் கட்டும் ஓலைச்சுருள்; an *ōla* amulet tied to a child's waist and believed to ward off attacks of whooping cough.

*[குறி → குறிச்சி.]*

**குறிச்சிப்பி** *kuṟi-c-cippi,* பெ.(n.) சிப்பிமுத்து; oyster -pearl (சா.அக.).

*[குறி + சிப்பி.]*

**குறிச்சூத்திரம்** *kuṟi-c-cūttiram,* பெ.(n.) ஒரு நூலிற் பயின்றுவரும் குறியீடுகளைத் தெரிவிக்கின்ற நூற்பா (தமி.இல.க.சொ. அக.); sutra mentioning technical terms in a work.

*[குறி + சூத்திரம்.]*

**குறிசாடு-தல்** *kuṟi-sāḍu,* 19 செ.கு.வி.(v.i.) 1. குறி தவறாது துப்பாக்கியாற் சுடுதல்; to shoot with out missing the mark. 2. மாட்டுக்குச் சூடு இடுதல் (வின்.); to brand marks upon cattle.

*[குறி + சாடு-.]*

**குறிசாற்றல்** *kuṟi-sāṟṟal,* பெ.(n.) கொம்பை ஊதிச் சிற்றூர் அவையைக் கூட்டுதல்; convening a meeting of the village assembly by blowing a horn.

மறுவ. சங்கூதல்

*[குறி + சாற்றல்.]*

**குறிசொல்(லு)-தல்** *kuṟi-sol-,* 8 செ.கு.வி.(v.i.) ஒருவரது ஆகூழ் முதலியவற்றைப் பற்றிக்

குறிபார்த்துக் கூறுதல்; to tell one's fortune, to divine.

*[குறி + சொல்-.]*

**குறிசொல்வோன்** *kuṟi-śolvōṉ,* பெ.(n.) 1. மந்திரக் காரன்;magician foretelling events. 2. ஆருடம் சொல்வோன்; fortune teller. 3. சேவல்; cock, fowl (சா.அக.).

*[குறி + சொல்வோன்.]*

**குறிஞ்சா**[1] *kuṟiñjā,* பெ.(n.) 1. குருக்கத்தி; common delight of the woods. 2. பெருங்குறிஞ்சா; a species of scammony swallow wort. 3.நஞ்சறுப்பான்; Indian ipecacunha. 4. குடசப் பாலை; green wax-flower. 5. குறிஞ்சி நிலத்தில் விளையும் பூடு; any plant growing on inferior hilly soil.

*[குறிஞ்சி → குறிஞ்சா.]*

குறிஞ்சா வகைகள் : 1. சிறுகுறிஞ்சா 2. பெருங்குறிஞ்சா 3. கருங்குறிஞ்சா 4. நீர்க்குறிஞ்சா 5. மலைவண்ணக்குறிஞ்சா 6. பவளக் குறிஞ்சா 7. எருமைக் குறிஞ்சா 8. சுணைக் குறிஞ்சா 9. அழகுக்குறிஞ்சா 10. வாணக் குறிஞ்சா (சா.அக.).

*[குறிஞ்சி → குறிஞ்சா.]*

**குறிஞ்சி**[1] *kuṟiñji,* பெ.(n.) 1. ஐவகை நிலத்துள் ஒன்றாகிய மலையும் மலைசார்ந்த நிலமும்; hilly tract, one of five kinds of *nilam.* 2. குறிஞ்சிப் பண்; a specific melody-type. *“குறிஞ்சி பாடி” (திருமுருகு.239).* 3. புணர்தலாகிய உரிப்பொருள்; clandestine union of lovers assigned by poetic convention to the hilly tract. *“குறிஞ்சி சான்ற... மலை” (மதுரைக். 300).* 4. குறிஞ்சிப்பாட்டு ; a poem. *"கோல்குறிஞ்சி பட்டினப்பாலை" (பத்துப்பா. தனிப்பா.).* 5. மருதோன்றி (மலை.); henna. 6. பெருங்குறிஞ்சி ; a species of conehead. 7. சிறுகுறிஞ்சி ; a species of conehead. 8. செம் முள்ளி (சூடா.); thorny nail dye. 9. பூடுவகை; conehead, shrub. 10. மரவகை; square branched conehead. 11. ஈந்து (மலை.); dwarf wild date palm.

*[குன்றம் → குறம்→ குறும்பு → குறிஞ்சி.]*

**குறிஞ்சி**[2] *kuṟiñji,* பெ.(n.) குறிஞ்சிப்பூ; *kuṟiñji* flower. *“கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே” (குறுந்.3).*

மறுவ. குறிஞ்சிப்பூ, குறிஞ்சிமலர்.

ம. குறிஞ்ஞி

*[குன்றம்→குறம் → குறஞ்சி→ குறிஞ்சி.]*

குறிஞ்சி மலர்களுள் ஐம்பது வகைகள் உள்ளன. இவை, வெண்மை, பொன்மை, செம்மை, நீலம், செந்நீலம் என்னும் ஐந்து நிறங்களில் மிகுதியாகப் பூப்பதால் ஐவண்ணக் குறிஞ்சி எனப்படும். இவற்றுள் செந்நீலக் குறிஞ்சி எனப்படும் வாடாக் குறிஞ்சி பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் இயல்புடையது. மூன்றாண்டுக்கு ஒருமுறையும் ஆண்டுக்கு ஒருமுறையும் பூக்கும் வகைகளும் உள்ளன.

வகைகள்: 1. செங்குறிஞ்சி 2. மஞ்சட் குறிஞ்சி 3. வாடாக் குறிஞ்சி 4. வெண்குறிஞ்சி 5. கருங்குறிஞ்சி 6. சின்னக்குறிஞ்சி 7. பெருங் குறிஞ்சி 8. காட்டுக்குறிஞ்சி 9. மேக வண்ணக் குறிஞ்சி 10. மோர்க் குறிஞ்சி 11. பவளக்குறிஞ்சி அல்லது சீனப்பூ 12. சிறுகுறிஞ்சி 13. கெட்டிக் குறிஞ்சி (சா.அக.).

**குறிஞ்சிக்கருப்பொருள்** *kuṟiñji-k-karu-p-poruḷ,* பெ.(n.) குறிஞ்சி நிலத்தின் தன்மையும் குணமும்; nature and properties peculiar to a hilly tract and its soil (சா.அக.).

*[குறிஞ்சி + கருப்பொருள்.]*

**குறிஞ்சிக்கல்** *kuruñji-k-kal,* பெ.(n.) மலையில் உள்ள சுக்கான் கல்; mountain lime stone (சா.அக.).

*[குறிஞ்சி + கல்.]*

**குறிஞ்சிக்கிழவன்** *kuṟiñci-k-kiḻavaṉ,* பெ.(n.) குறிஞ்சிநிலத்துத் தெய்வமான முருகக் கடவுள் (பிங்.); Murugan, as the god of the hilly tracts.

மறுவ. குறிஞ்சிக் கிறைவன், குறிஞ்சிமன்.

*[குறிஞ்சி + கிழவன்.]*

**குறிஞ்சிக்கிறைவன்** *kuṟiñji-k-kiṟaivaṉ,* பெ.(n.) ***குறிஞ்சிக் கிழவன்*** (பிங்.); பார்க்க; see *kuṟiñji-k-kiḻavaṉ.*

*[குறிஞ்சிக்கு + இறைவன்.]*

# குறிஞ்சி வகைகள்

**வெண்குறிஞ்சி**

குறிஞ்சி மலர் வகைகளுள் ஒன்று.



**நீலக்குறிஞ்சி**



**செந்நீலக்குறிஞ்சி**

ஐம்பது வகைக் குறிஞ்சி மலர்களுள் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறைப் பூக்கும் செந்நீலக் குறிஞ்சி மலர் வெயில் படும்போது இளஞ்சிவப்பாக ஒளிரும் (படம் 1994).

**குறிஞ்சித்திணை** *kuriñjittiṇai,* பெ.(n.) ஐவகை நிலத்துள் ஒன்றாகிய மலையும் மலையைச் சார்ந்த இடமும்; hilly tract..

*[குறிஞ்சி + திணை]*

**குறிஞ்சித்தினை** *kuriñji-t-tiṉai,* பெ.(n.) மலைப் பகுதியில் விளையும் தினை; millet growing in hilly tracts (சா.அக.).

*[குறிஞ்சி + தினை.]*

**குறிஞ்சிநீர்** *kuriñji-nīr,* பெ.(n.) மலைத் தண்ணீர்; mountain water. 2. சுனை நீர்; hill spring water (சா.அக.).

*[குறிஞ்சி + நீர்.]*

**குறிஞ்சிப்பண்** *kuriñji-p-paṇ,* பெ.(n.) நால்வகைப் பெரும்பண்களுள் ஒன்று (பிங்.); one of the four melody - types.

மறுவ. குறிஞ்சியாழ்

*[குறிஞ்சி + பண்.]*

**குறிஞ்சிப்பறவை** *kuriñji-p-paravai,* பெ.(n.) மலைப் பகுதியில் வாழும் நாட்டு மயில், கிளி முதலிய பறவைகள்; birds peculiar to hilly tracts as pea-cock, parrot etc. (சா.அக.).

*[குறிஞ்சி + பறவை.]*

**குறிஞ்சிப்பறை** *kuriñji-p-parai,* பெ.(n.) குறிஞ்சி நிலத்துக்குரிய தொண்டகப்பறை; a kind of drum peculiar to *kuruñji.*

*[குறிஞ்சி + பறை.]*

**குறிஞ்சிப்பாட்டு** *kuriñji-p-pāṭṭu,* பெ.(n.) பத்துப் பாட்டுள் ஒன்றானதும், தலைவியின் வேற்றுமை கண்டு வருந்திய செவிலிக்குப் பாங்கி அறத்தொடு நிற்குங் கூற்றாகக் கபிலர் பாடியதுமான செய்யுள்; a poem in *Pattu-p-pāṭṭu,* by Kabilar treating of the tactful way in which the confidante communicates to the foster mother, the heroine's love affair.

*[குறிஞ்சி + பாட்டு.]*

**குறிஞ்சிப்புள்** *kuriñji-p-puḷ,* பெ.(n.) குறிஞ்சிப் பறவை; hilly birds like pea-cock, parrots etc. (சா.அக.).

*[குறிஞ்சி + புள்.]*

**குறிஞ்சிப்பூ** *kuriñji-p-pū,* பெ.(n.) குறிஞ்சி நிலத்துப்பூ; flowers peculiar to hilly regions. 2. கார்த்திகைப் பூ (சா.அக.);flowers of plough-root plant.

*[குறிஞ்சி + பூ.]*

**குறிஞ்சிமரம்** *kuriñji-maram,* பெ.(n.) குறிஞ்சி நிலத்தில் முளைக்கும் சந்தனமரம், வேங்கை, அகில், தேக்கு முதலியன; trees in general growing in hilly tracts such as kino, east Indian kino, sandal wood tree, eagle wood, teak etc. (சா.அக.).

**குறிஞ்சிமன்** *kuriñji-maṉ,* பெ.(n.) ***குறிஞ்சிக் கிழவன்*** பார்க்க(திவா.); see *kuriñji-k-kiḻavaṉ.*

*[குறிஞ்சி + மன்.]*

**குறிஞ்சியாழ்** *kurinji-yāḻ,* பெ.(n.) ***குறிஞ்சிப்பண் (பிங்.)*** பார்க்க; see *kuriñji-p-paṉ.*

மறுவ. குறிஞ்சிப்பண்

*[குறிஞ்சி + யாழ்.]*

**குறிஞ்சியாழ்த்திறம்** *kuriñji-yāḻ-t-tiram,* பெ.(n.) குறைந்த சுரங்கள் கொண்ட எண்வகைக் குறிஞ்சிப்பண் (திவா.); secondary melody-type of the *kuriñji* class played on a reduced scale, of which there are 8, viz. நைவளம், காந்தாரம், படுமலை, பஞ்சுரம், மருள், அயிர்ப்பு, அரற்று, செந்திறம்.

*[குறிஞ்சி + யாழ் + திறம். (திறம் = ஐந்து சுரங்களைக் கொண்ட பண்வகை).]*

**குறிஞ்சியுணவு** *kuriñji-y-uṇavu,* பெ.(n.) குறிஞ்சி நிலமக்கள் கொள்ளும் உணவாகிய கிழங்கு, தினை, தேன், மூங்கிலரிசி முதலியன; articles of food or staple food for those living in hilly tracts as bulbous roots, millet, honey, bamboo rice etc. (சா.அக.).

*[குறிஞ்சி + உணவு.]*

**குறிஞ்சியுரிப்பொருள்** *kuriñji-y-uri-p-porul,* பெ.(n.) குறிஞ்சிநில மக்களின் காம ஒழுக்கம்; the essential characteristics of lovers in sexual inter course, the subject matter of *kuriñji* poetry (சா.அக.).

*[குறிஞ்சி + உரிப்பொருள்.]*

**குறிஞ்சில்** *kuriñjil,* பெ.(n.) தொட்டிச் செய்ந்நஞ்சு (மூ.அக.); a prepared arsenic.

*[குறிஞ்சி + இல் – குறிஞ்சில்.]*

**குறிஞ்சிலி** *kuriñjili,* பெ.(n.) காதில் அணிதற்குரிய பூவகை; a kind of flower worn as an ear-ornament. *"காதிடைக் குற்றமில் குறிஞ்சிலிக் கொத்தும்" (திருவாலவா.54:20).*

*[குறிஞ்சி → குறிஞ்சில் → குறிஞ்சிலி.]*

**குறிஞ்சிலைக்கல்** *kuriñcilai-k-kal,* பெ.(n.) ஈரக்கல் (வின்.); red stone.

*[குறும் + சிலை + கல்.]*

**குறிஞ்சிவேந்தன்** *kuriñji-vēndan,* பெ.(n.) ***குறிஞ்சிக் கிழவன் (சூடா.)*** பார்க்க; see *kuriñji-k-kilavan.*

*[குறிஞ்சி + வேந்தன்.]*

**குறிஞன்** *kuriñan,* பெ.(n.) வறியன் (அக.நி.); poor person.

*[குறு → குறிஞன்.]*

**குறித்தகள்ளன்** *kuritta-kallan,* பெ.(n.) பேர் பெற்ற பழந்திருடன்; notorious robber or thief.

*[குறித்த + கள்ளன்.]*

**குறித்தழை-த்தல்** *kurittalai-,* 4 செ.குன்றாவி.(v.t.) 1. கூட்டத்திலுள்ள ஒருவனைக் குறிப்பிட்டழைத் தல்; to call or beckon one out of an assembly. 2. பாதுகாக்கும்படி அழைத்தல்; to call upon one for protection. 3. நேரில் வந்து காட்சி தரும்படி தேவதையைப் பேராலழைத்தல்; to invoke a deity by name to appear.

*[குறித்து + அழை-.]*

**குறித்து** *kurittu,* வி.எ. (adv.) தொடர்புற்று நோக்கி; with the intention of; towards.

*[குறி → குறித்து-.]*

**குறிநட்டு** *kurinattu,* பெ.(n.) கணுக்கால் எலும்பு; ankle bone (சா.அக.).

*[குதிநாட்டு → குறிநாட்டு → குறிநட்டு (கொ.வ.).]*

**குறிநிலையணி** *kuri-nilai-y-ani,* பெ.(n.) ஒரு பொருளைப் புகழும் சொற்களால் குறித்தற்குத் தகுதியாகிய பிறிதொரு பொருளையும் சொல்லும் அணி (அணியி.73); a figure of speech in which an object worth knowing is referred to by association in the course of extolling a different object.

*[குறி + நிலை + அணி.]*

**குறிநோய்** *kuri-nōy,* பெ.(n.) ஆண்குறி அல்லது பெண்குறி நோய்; disease of the male or female genital.

*[குறி + நோய்.]*

**குறிப்பறி-தல்** *kurippari-,* 2 செ.கு.வி.(v.i.) நோக்கமறிதல்; to take the clue, to guess one's intentions. *"குறிப்பறிந்து காலங்கருதி" (குறள்.696).*

*[குறிப்பு+ அறி-.]*

**குறிப்பாளி** *kurippāli,* பெ.(n.) உய்த்துணர்பவன்; person of quick discernment, one who shrewdly reads hints and signs.

*[குறிப்பு + ஆளி.]*

**குறிப்பி-த்தல்** *kurippi-,* பி.வி. (caus.) குறிப்பினால் நினைப்பூட்டுதல்; to remind, call to mind by sign or hint.

*[குறி → குறிப்பி-.]*

**குறிப்பிடம்** *kurippidam,* பெ.(n.) 1. குறித்த இடம்; ppointed place, the place of assignation. 2. சுருக்கம் (யாழ்.அக.); summary, compendium, epitome. 3. கிறித்து பட்ட பாடுகளைக் காட்டும்

படிமம் (R.C.); image representing the sufferings of Chirst 4. வினாவிடையாயமைந்த சமய அறிவுறூஉ நூல் (கிறித்து); Catechism.

*[குறிப்பு + இடம்.]*

**குறிப்பிடைச்சொல்** *kurip-pidai-c-col,* பெ.(n.) ஆங்கிலத்தில் ஒரு பொருளைச் சுட்டிக்காட்ட உதவும் உரிச்சொல்வகை; demonstrative.

*[குறிப்பு + இடைச்சொல்.]*

**குறிப்பு**[1] *kurippu,* பெ.(n.) 1. உள்ளக்கருத்து; intention, inmost thought, real purpose or motive. *"இனியென் திருக்குறிப்பே" (திவ்.பெரியாழ்.5:4:1).* 2. பொறியானன்றி மனத்தாற் குறித்துணரப் படுவது (தொல்.சொல்.297,சேனா); object of mental apprehension dist, fr.*panbu.* 3. ஒன்பது வகைச் சுவைகளில் உண்டாகும் மனநிலை (சிலப். 3:13 உரை) (Rhet.); mental response to the nine sentiments. 4. மனவொருமை (பிங்.); concentration of thought. 5. குறிப்பறிதல், இங்கிதம்; internal emotion attended with external gestures. *"குறிப்பறிந்து" (குறள்.696).* 6. சைகை; gesture, significant look or word. *"உணர்த்தியே குறிப்பால்" (கந்தபு.கணங்கள்.29).* 7. பிறர் கருதியதனைக் காணவல்ல கூரிய அறிவு;capacity to read into the minds of others, sharp, penetrative intellect. *"குறிப்பிற் குறிப்புணரா வாயின்" (குறன்.705).* 8. சுருக்கம்; summary, abstract.ம. குறிப்பு. 9. ஓசை, நிறம் முதலிய பொருளைக் குறிப்பது; work suggestive of sound or colour etc. *"வினையே குறிப்பே யிசையே பண்பே" (தொல்.சொல்.260).* 10. வெளிப்படையாகவின்றிப் பொருளுணர்த்துஞ் சொல்; (Gram.) that which is implied or understood, opp. to *veli-p-padai* *"இன்ன பிறவுங் குறிப்பிற் றருமொழி" (நன்.269).* 11. அடையாளம்; mark, sign (க.குறிப்பு). 12. கைக் குறிப்புப் புத்தகம்; memorandum. 13. நாட்குறிப்பு; journal, in book-keeping. 14. பிறப்புக்குறிப்பு; horosope. 15. சிறப்பியல்பு; description, distinguishing marks or characteristics. 16. குறிப்புக் குறியீடு; symbolic terms abbreviations, shorthand writing. 17. இலக்கு (சங்.அக.); aim, mark, target. 18. ஐந்து கந்தங்களுள் ஐம்பொறிகளும் மனமுமாகிய ஆறன் தொகுதி (Buddh); mind and the five senses, as elements of a being. one of *pañja-kantam. "உருவ நுகர்ச்சி குறிப்பே பாவனை" (மணிமே.30:189).* 19. ஓவியத்தில் ஒருவகைக் குறிப்பு; sketch in painting, outlines, tracings (வின்.).

*[குறி → குறிப்பு.]*

**குறிப்பு**[2] *kurippu,* பெ.(n.) சான்று, எடுத்துக்காட்டு; example, illustration. *"இது திருமந்திரார்த் தானுஸந்தானத்திற்குக் குறிப்பாக அப்புள்ளார் அருளிச் செய்த விரகு" (ரஹஸ்ய.153).*

*[குறி → குறிப்பு.]*

**குறிப்புக்கட்டை** *kurippu-k-kattai,* பெ.(n.) ஏதத்தை (ஆபத்தை)க் காட்ட நீரில் நடும் மரம்; a post or block at a ford to indicate danger from quicksand etc.

*[குறிப்பு + கட்டை.]*

**குறிப்புக்காரன்** *kurippu-k-kāran,* பெ.(n.) ***குறிகாரன்,*** பார்க்க; see *kurikāran.*

*[குறிப்பு + காரன்.]*

**குறிப்புச்சொல்** *kurippu-c-col,* பெ.(n.) சொல்லுவோன் குறிப்பினால் நேர்பொருளன்றி வேறு பொருளை உணர்த்தும் சொல் (குறள்,711,உரை); (Gram.) word indicating a meaning by implication.

**மறுவ.** குறிப்பு நிலை, குறிப்புமொழி.

*[குறிப்பு + சொல்.]*

**குறிப்புத்தொழில்** *kuri-p-pu-tolil,* பெ.(n.) குறிப்பாகச் செய்யும் செய்கை; significant gesture. *"இவன்செய்த இக்குறிப்புத் தொழிலால்" (பரிபா. 12:90–92,உரை).*

*[குறிப்பு + தொழில்.]*

**குறிப்புநிலை** *kurippu-nilai,* பெ.(n.) ***குறிப்புச்சொல்,*** (நன்.460–.மயிலை.) பார்க்க; see *kurippu-c-col.*

*[குறிப்பு + நிலை.]*

**குறிப்புப்பெயரெச்சம்** *kuri-p-pu-p-peya-reccam,* பெ.(n.) செயலையும் காலத்தையும் வெளிப்படை யாகக் காட்டாத பெயரெச்சம்; (Gram.) relative participle of an appellative verb.

*[குறிப்பு + பெயர் + எச்சம்.]*

**குறிப்புப்பொருள்** *kurippu-p-porul,* பெ.(n.) குறிப்பாலுணரப்படும் பொருள் (நன்.259,விருத்.) (Gram.); implied meaning.

*[குறிப்பு + பொருள்.]*

**குறிப்புமுற்று** *kurippu-murru,* பெ.(n.) குறிப்பு ***வினைமுற்று*** (நன்.351) பார்க்க; see *kurippu-vinai-murru.*

*[குறிப்பு + முற்று.]*

**குறிப்புமொழி** *kurippu-moli,* பெ.(n.) ***குறிப்புச் சொல்*** பார்க்க; see *kurippu-c-col.* *"எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிப் பொருட்புறத்ததுவே குறிப்புமொழி யென்ப" (தொல்.பொருள்.491).*

*[குறிப்பு + மொழி.]*

**குறிப்புருவகம்** *kurippuruvagam,* பெ.(n.) குறிப்பினாற் பெறப்படும் உருவகவணி (குறள்,1030, உரை); implied metaphor.

*[குறிப்பு + உருவகம்.]*

**குறிப்புவமை** *kurippuvamai,* பெ.(n.) குறிப்பா லுணரப்படும் உவமையணி (தொல்.பொருள். 278,உரை); (Rhet.) implied simile, metaphor.

*[குறிப்பு + உவமை.]*

**குறிப்புவினை** *kurippu-vinai,* பெ.(n.) பொருட் பெயர், இடப்பெயர் முதலியவற்றின் அடியாகப் பிறந்து செயலையும் காலத்தையும் வெளிப்படை யாகக் காட்டாமல் வினைத் தன்மையைக் கொண்டுள்ள சொல் (நன்.321.உரை); (Gram); appellative verb.

*[குறிப்பு + வினை.]*

**குறிப்புவினைமுற்று** *kurippu-vinai-murru,*பெ.(n.) ***குறிப்புவினை*** பார்க்க (வின்.323,உரை.); see *kurippuvinai.*

மறுவ. குறிப்புமுற்று

*[குறிப்பு + வினை + முற்று.]*

**குறிப்புவினையாலணையும் பெயர்** *kurippu-vinaiyāl-anaiyam-peyar,* பெ.(n.) முன்பு குறிப்பு வினையாய்ப் பின்பு பொருள்களைக் குறித்தற்கு வரும் பெயர் (நன்.321.விருத்.) (Gram.) appellative verb declined as a noun, as பண்டைச் செல்வனைக் கண்டேன்.

*[குறிப்பு + வினை + ஆல் + அணையும் + பெயர்.]*

**குறிப்புவினையெச்சம்** *kurippu-vinai-y-eccam,* பெ.(n.) தொழில் காலங்களைக் குறிப்பாகக் காட்டும் வினையெச்சம் (நன்.342,உரை); (Gram.) verbal participle of an appellative verb.

*[குறிப்பு + வினை + எச்சம்.]*

**குறிப்புற்று** *kuri-p-purru,* பெ.(n.) ஆண் பெண் குறியில் மேக நோய்த் தொடர்பாய் ஏற்படும் புற்றுப்புண்; hard industrated or infecting sore or ulcer on the genital of a male or female arising from the veneral causes (சா.அக.).

*[குறிப்பு + புற்று.]*

**குறிப்பெச்சம்** *kurippeccam,* பெ.(n.) கூறிய சொற்களைக் கொண்டு அவற்றின் கருத்தாகக் கொள்ளும் பொருள் (குறள்.411, உரை); suggested sense.

*[குறிப்பு + எச்சம்.]*

**குறிப்பெழுத்து** *kurippeluttu,* பெ.(n.) சுருக்கெழுத்து; abbreviation, contraction of names, words, etc. as எ—று for என்றவாறு.

*[குறிப்பு + எழுத்து.]*

**குறிப்பெழுது—தல்** *kurippeludu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கருத்துச் செய்திக்குறிப்பு எழுதுதல்; to write memoranda, notes, index, etc. 2. பிறப்புக்

குறிப்பெழுதுதல்; to note down the date, hour, etc., of a child's birth. 3. பேரேட்டில் எழுதுவதன் முன்னர் கணக்கைக் குறிப்புப் புத்தகத்தில் எழுதுதல்; to make entries in day book.

*[குறிப்பு + எழுது-.]*

**குறிப்பேடு** *kurippēḍu,* பெ.(n.) 1. நாள்தோறும் வரவு செலவுக் கணக்குகளைப் பதியும் புத்தகம்; day-book, the items of which are transferred to ledger. 2. நினைவுக் குறிப்பேடு; memorandum book.

*[குறிப்பு + ஏடு.]*

**குறிப்போலை** *kurippōlai,* பெ.(n.) 1.கணக்குக் குறிப்பு எழுதிய ஓலை; old record of a child's birth, for casting its nativity.

*[குறிப்பு + ஓலை.]*

**குறிபார்-த்தல்** *kuri-pār-,* 4 செ.கு.வி.(v.i.) 1. நிமித்தம் பார்த்தல்; to observe signs, omens. 2. நன்மை தீமைகளைக் குறிபார்த்துச் சொல்லுதல்; to tell fortunes. 3. இலக்குப் பார்த்தல்; to aim at a mark.

*[குறி + பார்-.]*

**குறிபிழை-த்தல்** *kuri-pilai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. இலக்குத் தவறுதல்; to miss the mark, as in shooting. 2. மழைக்குறி தோன்றியும் மழை பெய்யாது விடுதல்; to fail, as signs of rain.

*[குறி + பிழை-.]*

**குறிபோடு-தல்** *kuri-pōḍu-,* 19 செ.கு.வி.(v.i.) 1. அடையாளம் இடுதல்; to mark, sign. 2. எண்ணுதற்குக் கோடு இடுதல்; to make marks for helping calculation.

*[குறி + போடு-.]*

**குறிமோசம்** *kuri-mōsam,* பெ.(n.) தவசக்குவிய லிலிருந்து சிறிதளவு திருடிக்கொண்டு பின்பு அக்குவியலில் திருட்டுக்குறி இடுவது (W.G.); a fraudulent mark put upon a stock of grain after removing a portion of it clandestinely.

*[குறி + மோசம்.]*

**குறியன்** *kuriyaṉ,* பெ.(n.) 1. மடையான் பறவை; paddy bird. 2. நாரை; crane (சா.அக.).

*[குறு → குறி→ குறியான்.]*

**குறியிடம்** *kuri-y-iḍam,* பெ.(n.) தலைவனும் தலைவியும் கூடுதற்குக் குறித்த இடம்; (Akap.) place of assignation by lovers, tryst.

*[குறி + இடம்.]*

**குறியிடையீடு** *kuri-y-iḍai-īḍu,* பெ.(n.) தலைவனும் தலைவியும் குறித்தவிடத்துக் கூடாதவாறு நேரும் இடையூறு (நம்பியகப்.155); (Akap.) obstacles preventing lovers from meeting at the place of assignation

*[குறி + இடையீடு.]*

**குறியீடு** *kuri-y-īḍu,* பெ.(n.) குறியாக இட்டாளும் பெயர்; name given to a thing or concept, technical term. *"அளபெடை யென்னும் குறியீடே" (நன்.91,விருத்.).*

*[குறி + ஈடு.]*

**குறியெதிர்ப்பு** *kurie-y-edirppu,* பெ.(n.) அளவு குறித்து வாங்கி வாங்கியவாறே எதிர்கொடுப்பது; exact return of things borrowed. *"மற்றெல்லாங் குறியெதிர்ப்பை நீர துடைத்து" (குறள்.221).*

*[குறி + எதிர்ப்பு.]*

**குறியோன்** *kuriyōṉ,* பெ.(n.) 1. குள்ளன்; person of short stature. 2. அகத்தியன்; Agastya, as short *"குறியோ னிருந்த மலைபயில் வார்தமிழ்" (தஞ்சைவா.109).*

ம. குறியவன்

*[குறி → குறியோன்.]*

**குறில்** *kūril,* பெ.(n.) 1. குற்றெழுத்து (நன்.64) (Gram.) short vowel, opp. to *nedil.* 2. குறுமை; shortness, dwarfishness. *"குறினெடி லளவு சான்ற கூளியும்" (கந்தபு. விண்குடி. 44).*

*[குறு → குறில்.]*

**குறிலவணம்** *kurilavaṇam,* பெ.(n.) சோற்றுப்பு; common salt (சா.அக. ).

*[குறு→ குறி + லவணம்.]*

**குறிவில்லு** *kurivillu* பெ.(n.) பழுவெலும்பு; rib-bone (சா.அக.).

*[குறி + (எல்லு) வில்லு.]*

**குறு[1]-தல்** *kuru-,* 8 செ.குன்றாவி (v.t.) 1. பறித்தல்; to pluck. *"பூக்குற் றெய்திய புனலணி யூரன்" (ஐங்குறு. 23).* 2. மேலிழுத்து வாங்குதல்; to pull up. *"கயிறுகுறு முகவை" (பதிற்றுப். 22:14).* 3. ஒழித்தல்; to abandon, leave off, give up. *"இச்சைமற் றாச்சிரயங் குற்றோன்" (ஞானா. 61,19).* 4. நெல் முதலியன குற்றுதல்; to pound in a mortar, husk. *"வெதிர்நெற் குறுவாம்" (கலித். 42).*

*[குல் → குறு]*

**குறு[2]-த்தல்** *kuru-,* 4 செ.கு.வி.(v.i.) அளவிற் குறுகுதல்; to become short; to contract,diminish, shrink

தெ., க., ம. குறு.

*[குல் → குறு]*

**குறுக்கடி** *kuruk-kadi,* பெ.(n.) 1. குறுக்கு வழிப்பாதை; short cut. 2. நேர்வழியாலன்றிக் குறுக்கே புகுந்து செய்யுஞ்செயல்; anything done by way of short cut or in a compendious method. 3. ஒழுங்கற்ற பேச்சு; short, abrupt speech, unreasoned talk. குறுக்கடியாய்ப் பேசுகிறான் (உ.வ.).

*[குறுக்கு + அடி.]*

**குறுக்கம்[1]** *kurukkam,* பெ.(n.) 1. குறுகிய நிலை; shortness. 'ஐ' ஔக் குறுக்கம்' (நன். 99). 2. சுருக்கம்; abridgement, albreviation, contraction, epitome, summary. 3. 3/4 முதல் 7 ஏக்கர் வரை பலவிடங்களில் பல்வேறு வகையாக வழங்கும் புன்செய் அளவு வகை; measure of dry land varying in different parts of Tamil country from 3/4 acre to 7 acres (R.F.). 4. கௌரி செய்நஞ்சு; a prepared arsenic.

*[குறுகு → குறுக்கம்.]*

**குறுக்கம்[2]** *kurukkam,* பெ.(n.) 1. சுருக்கம்; reduction. 2. கௌரி நஞ்சு; a native arsenic (சா.அக.).

*[குல் → குறு → குறுக்கம்.]*

**குறுக்கல்** *kuru-k-kal,* பெ.(n.) 1. குறைக்கை; reduction, contraction. 2. நெடிலைக் குறிலாக்குஞ் செய்யுள் திரிபு (நன். 155); (Gram.) shortening a long vowel.

*[குறுக்கு → குறுக்கல்.]*

**குறுக்களவு** *kuru-k-kaḷavu,* பெ.(n.) குறுக்குத் தூரம்; measurement across, diameter. *அந்த வீட்டின் குறுக்களவு என்ன?*

*[குறுக்கு + அளவு.]*

**குறுக்கன்** *kurukkan,* பெ.(n.) 1. குள்ளநரி; jackal. 2. கேழ்வரகு; ragi (சா.அக.).

*[குறு → குறுக்கு → குறுக்கன்.]*

**குறுக்கி** *kurukki,* பெ.(n.) நாறம், நாதம்; ovarian secretion in woman (சா.அக.).

*[குல் → குறு → குறுக்கி.]*

**குறுக்கிடு-தல்** *kurukkidu-,* 18 செ.கு.வி.(v.i.) 1. குறுக்கே செல்லுதல்; to pass across, as animals of bad omen. *பூனை குறுக்கிட்டது.* 2. பிறர் செயலில் தலையிடுதல்; to interfere in another's affair. 3. தடையாக எதிர்ப்படுதல்; to crossthe path of, to intervene. *"மீன்களைக் குறுக்கிட்டு மறித்துப் படுக்கும் வலையை யுடைய பரதவர்" (சிலப்.6:142, உரை).*

*[குறுக்கு + இடு-.]*

**குறுக்கிணைப்பு** *kurukkiṇaippu,* பெ.(n.) ஒரு மரத்தை மற்றொரு மரத்தின் குறுக்கு வாட்டத்தில் இணைக்கும் இணைப்பு (தச்.பொறி.);a wooden piece fixed cross-wise.

*[குறுக்கு + இணைப்பு.]*

**குறுக்கீடு** *kuru-k-kīḍu,* பெ.(n.) குறுக்கிடுகை; crossing, intervention, interference.

*[குறுக்கிடு → குறுக்கீடு.]*

**குறுக்கு[1]-தல்** *kurukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. குறையச் செய்தல்; to shorten, curtail, reduce, contract, lessen, retrench. செலவைக் குறுக்க வேண்டும். 2. சுருக்குதல்;to abbreviate, abridge, epitomise, abstract. அந்நூலைக் குறுக்கி யெழுதுக. 3. நெருங்கச் செய்தல்; to cause to draw near, to bring within easy reach. *"திருநாவாய் குறுக்கும்வகை யுண்டுகொலோ" (திவ். திருவாய். 9:8:1).*

**ம.** குறுக்குக; **க.** கொரெ; **து.** குந்தாவுனி; **கோத.,** **துட.** குர்க்.

*[குறுகு → குறுக்கு.]*

**குறுக்கு[2]-தல்** *kurukku-,* 5 செ.கு.வி.(v.i.) அண்மை யாதல்; to be near, close by. *'திருநாவாய் எத்தனையிடம் போகுமென்று எதிரே வருகின்றார் சிலரைக் கேட்டருள குறுக்கும் என்றார்களாய்' (ஈடு, 9.8:1).*

*[குறுகு → குறுக்கு.]*

**குறுக்கு[3]** *kurukku,* பெ.(n.) 1. நெடுமைக்கு மாறான அகலம்; transverseness, breadth. 2. குறுக்களவு; diameter. *"நெடுமையுங் குறுக்கு நூற்றெட் டங்குலம்" (காசிக. சிவ. அக.17).* 3. குறுமை; shortness of distance. *"நீண்ட நெடுமையும் அகலக் குறுக்கும் காட்டா" (தாயு. சிதம்பர. 13).* 4. சுருக்கம்; contraction. 5. மாறு; opposition, objection, hindrance. *அவன் எதற்குங் குறுக்குப் பேசுகிறவன்.* 6. இடுப்பு; hips, lions. *குறுக்கு வலிக்கிறது.*

**ம.** குறுக்கு

**Fin.** kesi(centre,middle); **Es.** kesk; **Q.** kuskan.

*[குறுகு → குறுக்கு.]*

**குறுக்குக்கட்டு** *kurukku-k-kaṭṭu,* பெ.(n.) பெட்டி முதலியவற்றைக் குறுக்காகக் கயிற்றாற் கட்டும் கட்டு; tying transversely or crosswise, as in fastening a case. 2. மகளிர் நீராடும்போது மார்புக்கு மேலே கட்டும் சேலைக்கட்டு; tying a cloth a little above the breasts and around the body, as women while bathing.

*[குறுக்கு + கட்டு.]*

**குறுக்குக்கால்** *kurukku-k-kāl,* பெ.(n.) நடக்கும் போது கால்கள் குறுக்காகப்படும் குற்றம்; cross-leg deformity.

*[குறுக்கு + கால்.]*

**குறுக்குக்கிளை** *kurukku-k-kiḷai,* பெ.(n.) பக்கக்கிளை; lateral branch.

*[குறுக்கு + கிளை.]*

**குறுக்குக்கேள்வி** *kuruku-k-kēḷvi,* பெ.(n.) 1. முறைமன்ற வழக்கில் சான்றாளியை மடக்கிக் கேட்கும் கேள்வி; cross-questioning, cross-examination. 2. ஒழுங்கற்ற கேள்வி; irrelevant question, perverse question. 3. இருவர் வினாவிக் கொண்டிருக்க இடையில் பிறனொருவன் கேட்கும் கேள்வி; question by way of interruption or intrusion.

*[குறுக்கு + கேள்வி.]*

**குறுக்குச்சட்டம்** *kurukku-c-caṭṭam,* பெ.(n.) 1. குறுக்காகப் போடும் சட்டம்; cross piece in a frame. 2. கூரையின் குறுக்குக் கட்டை; brace to connect a pair of rafters. 3. குறுக்காக இடும் உத்தரம்; cross beam.

*[குறுக்கு + சட்டம்.]*

**குறுக்குச்சார்** *kuṟukku-c-cār,* பெ.(n.) வீட்டின் குறுக்கிடம் (யாழ்ப்.); short or cross side of a house, raised floor on either side of the shorter wall of a house.

*[குறுக்கு + சார்.]*

**குறுக்குச்சால்** *kuṟukku-c-cāl,* பெ.(n.) முதலில் உழவு செய்யப்பட்ட திசைக்குக் குறுக்காக மறு உழவு செய்தல். (உழ.நெ.க.அக); cross ploughing.

*[குறுக்கு + சால்.]*

**குறுக்குச்சாலோட்டு-தல்** *kuṟukku-c-cāl-ōṭṭu-,* 5 செ.கு.வி.(v.i.) தன்னலங் கருதிப் பிறர் செயலில் இடையிடுதல், ஊடு விழுதல்; lit; to run a furrow transversely, to interfere with another's work for gaining one's own ends.

*[குறுக்கு + சால் + ஓட்டு-.]*

**குறுக்குச்சுவர்** *kuṟukku-c-cuvar,* பெ.(n.) பாகஞ் செய்து கொண்ட மனையில் எல்லை குறித்தற்குக் குறுக்கே இடும் (C.E.M.) சுவர்; partition-wall.

*[குறுக்கு + சுவர்.]*

**குறுக்குச்சூத்திரம்** *kuṟukku-c-cūttiram,* பெ.(n.) குறுக்கு நூற்பா (வின்.); formula, brief comprehensive rule, theorem, expressing the shortest method of performing a calculation.

*[குறுக்கு + சூத்திரம். குறுக்கு நூற்பா பார்க்க; see kuṟukku-nūṟpā.]*

**குறுக்குத்தசைநார்** *kuṟukku-t-tasai-nār,* பெ.(n.) குறுக்கே ஓடும் தசைநார்; transverse muscular fibre (சா.அக.).

*[குறுக்கு + தசை + நார்.]*

**குறுக்குத்தெரு** *kuṟukku-t-teru,* பெ.(n.) பெரிய தெருவிலிருந்து பிரிந்து செல்லும் சிறிய தெரு (பொ.வழக்.);side street cutting across big street.

*[குறுக்கு + தெரு.]*

**குறுக்குநிமிர்-தல்** *kuṟukku-nimir-,* 2 செ.கு.வி. (v.i.) 1. அளவுக்கு மிஞ்சி வேலை வாங்குதல்; to have one's powers over taxed, to be overworked. 2. சோம்பேறியாதல்; to grow lazy. வேலை யில்லாமல் குறுக்கு நிமிர்ந்துவிட்டான்.

*[குறுக்கு + நிமிர்-.]*

**குறுக்குநூற்பா** *kuṟukku-nūṟpā,* பெ.(n.) கணிதத்தில் சுருக்கமாய் அறிதற்கு ஏற்ற வழியைத் தெரிவிக்கும் நூற்பா; formula, brief comprehensive rule, theorem, expressing the shortest method of performing a calculation.

மறுவ. குறுக்குச் சூத்திரம்

*[குறுக்கு + நூல் + பா.]*

**குறுக்குநோய்** *kuṟukku-nōy,* பெ.(n.) இடுப்புநோய்; hip pain. 2. சந்துப்பிடிப்பு; hip gout (சா.அக.).

*[குறுக்கு + நோய்.]*

**குறுக்குப்பாடு** *kuṟukku-p-pāḍu,* பெ.(n.) குறுக்கான பக்கம்; transverse direction.

*[குறுக்கு + பாடு.]*

**குறுக்குப்பாதை** *kuṟukku-p-pādai,* பெ.(n.) குறுக்கு வழி; short cut.

*[குறுக்கு + பாதை.]*

**குறுக்குப்பிண்டம்** *kuṟukku-p-pinḍam,* பெ.(n.) பேறு (பிரசவ) காலத்தில் கருப்பத்தில் குறுக்காய்ப் பாய்ந்த குழந்தை; any abnormal presentation requiring the manual turning of the foetus in delivery (சா.அக.).

*[குறுக்கு + பிண்டம்.]*

**குறுக்குப்பிறப்பு** *kuṟukku-p-piṟappu,* பெ.(n.) இருகுல (சாதி)ப் பிறப்பு; a person or an animal produced from a male or female of different race or castes or different breeds (சா.அக.).

*[குறுக்கு + பிறப்பு.]*

**குறுக்குப்புத்தி** *kurukku-p-putti,* பெ.(n.) கோணலறிவு; cross-grained mentality.

*[குறுக்கு + புத்தி]*

**குறுக்கும்நெடுக்கும்** *kuṟukkum-neḍukkum,* பெ.(n.) இங்குமங்கும்; lit.lengthwise and breathwise, here and there.

*[குறுக்கும் + நெடுக்கும்.]*

**குறுக்குமறுக்கு** *kuṟukku-maṟukku,* பெ.(n.) குறுக்கே மறுத்துப் பேசுகை; interrupting a person when he is speaking and contradicting him. *"மணியக்காரன் கணக்குப் பார்க்கிறதும் அதற்குக் கோவில்குருக்கள் குறுக்குமறுக்குச் சொல்வதும்!" (தாசில்.தார்நா.27).*

*[குறுக்கு + மறுக்கு.]*

**குறுக்குமறுக்கும்** *kuṟukku-maṟukkum* வி.எ. (adv.) ***குறுக்குநெடுக்கும்*** பார்க்க; see *kuṟukkum-neḍukkum.*

*[குறுக்கும் + மறுக்கும்.]*

**குறுக்குவரி** *kuṟukku-vari,* பெ.(n.) ஒரு சதுரத்தின் அல்லது நீட்டத்தின் குறுக்காகச் செல்லும் கோடு (இ.வ.); diagonal.

*[குறுக்கு + வரி.]*

**குறுக்குவலி[1]-த்தல்** *kuṟukku-vali-,* 4 செ.கு.வி.(v.i.) பேறுகால வேதனைப்படுதல்; to suffer from labour-pains.

*[குறுக்கு + வலி-.]*

**குறுக்குவலி[2]** *kuṟukku-vali,* பெ.(n.) இடுப்புவலி; labour pain (சா.அக.).

*[குறுக்கு + வலி.]*

**குறுக்குவழி** *kuṟukkuvaḻi,* பெ.(n.) 1. குறுக்குப் பாதை; short way. 2. கோணல்வழி; crooked way, path of evil.

ம. குறுக்குவழி

*[குறுக்கு + வழி.]*

**குறுக்குவாதம்** *kuṟukku-vādam,* பெ.(n.) இடுப்பு ஊதை நோய் (வாதம்); pain in the loin due to aggravated vayu in the system (சா.அக.).

*[குறுக்கு + வாதம்.]*

**குறுக்குவிசாரணை** *kuṟukku-viśāraṇai,* பெ.(n.) முறைமன்ற வழக்கில் சான்றாளியை மடக்கிக் கேட்கும் கேள்வி; cross examination.

மறுவ. குறுக்குக்கோட்பாடு, குறுக்கு உசாவல், குறுக்கு உசாவணை, குறுக்கு வினா.

*[குறுக்கு + விசாரணை. **குறுக்கு உசாவல்** பார்க்க; see kuṟukku-uśāval.]*

**குறுக்குவிட்டத்தூலக்கட்டு** *kuṟukku-viṭṭat-tūlak-kaṭṭu,* பெ.(n.) கூரையின் மேற்கோப்பு அமைப்புகளுள் ஒருவகை (கட்.தொ.வரி.);a kind of shape of top of thatched roof.

*[குறுக்கு + விட்டம் + தூலம் + கட்டு.]*

**குறுக்குவிட்டம்** *kuṟukku-viṭṭam,* பெ.(n.) அச்சுமரத்தின் மேற்பகுதிக்குக் கீழுள்ள சட்டம் (உழ.நெ.ச.அக.);a cross bar cutting across the axis.

*[குறுக்கு + விட்டம்.]*

**குறுக்குவினா** *kuṟukku-viṉā* பெ.(n.) குறுக்குக் கேள்வி; cross examination.

*[குறுக்கு + வினா.]*

**குறுக்குவெட்டுத்தோற்றம்** *kurukku-veṭṭut-tōṟṟam,* பெ.(n.) கட்டடக் குறுக்குவெட்டு அமைப்பினை விளக்கும் வரைபடம் (பொ.வழக்.) (கட்.தொ.வரி.); transverse view shown in building plan.

*[குறுக்கு + வெட்டு + தோற்றம்.]*

**குறுக்கெலும்பு** *kuṟukkelumbu,* பெ.(n.) இடுப் பெலும்பு; hip bone (சா.அக.).

*[குறுக்கு + எலும்பு.]*

**குறுக்கே** *kuṟukkē,* வி.எ. (adv.) 1. இடையே; cross-wise, transversely, athwart, across. பூனை குறுக்கே போயிற்று (உ.வ.). 2. நடுவில்; between, in the middle. பெரியோர்கள் பேசுகையில் குறுக்கே பேசலாகாது (உ.வ.). 3. எதிராக; in opposition to. நான் சொல்வதற்கெல்லாம் அவன் உறுக்கே சொல்லுகிறான் (உ.வ.).

ம. குறுக்கனெ

*[குறுக்கு + ஏ.]*

**குறுக்கேநில்–தல் (குறுக்கே நிற்றல்)** *kuṟukkē-nildal,*5 செ.கு.வி.(v.i.) இடையூறாக இருத்தல்; to be obstructive, to be a hindrance. காரியம் முடிய வொட்டாமல் அவன் குறுக்கே நிற்கிறான் (உ.வ.).

*[குறுக்கே + நில்.]*

**குறுக்கேமடக்கு–தல்** *kuṟukkē-maḍakku-,* 1. இடையிற்பேசி வாயடக்குதல்; to interrupt rudely and refute; interrupt and silence one by a curt reply. 2. ஒரு பொருளை நினைத்துக்கொண் டிருக்கும் பொழுது மயங்க அடித்தல்; to create confusion in the mind of a person while he is thinking out a question.

*[குறுக்கே + மடக்கு–.]*

**குறுக்கேமுறி[1]–த்தல்** *kuṟukkē-muṟi,* 4 செ.குன்றாவி.(v.t.) ஒரு செயலை இடையே விட்டொழித்தல்; to break off in the middle of a business, to leave a work unfinished.

*[குறுக்கு + ஏ + முறி–.]*

**குறுக்கேமுறி[2]–த்தல்** *kuṟukkē-muṟi,* 4 செ.குன்றாவி. (v.t.) வெறுப்பால் கூட்டத்தினின்று இடையே பிரிதல்; to leave a company in displeasure.

*[குறுக்கு + ஏ + முறி–.]*

**குறுக்கே விழு–தல்** *kuṟukkē-viḻu-,* 2 செ.கு.வி. (v.i.) ஒரு செயலின் இடையே தலையிடுதல்; to interfere, meddle.

*[குறுக்கே + விழு–.]*

**குறுக்கேற்றமாய்** *kuṟukkēṟṟamāy,* வி.எ.(adv.) பொருத்தமில்லாமல்; irreleventiy at a tangent.

*[குறுக்கு + ஏற்றமாய்.]*

**குறுக்கை[1]** *kuṟukkai,* பெ.(n.) அட்டவீரட்டங்களுள் ஒன்றானதும் சிவபிரான் காமனை எரித்ததுமான சோழநாட்டுத்தலம்; a shrine in *Tañjāvūr* district where Siva burnt *kāmaṉ* to ashes one of *aṭṭa-viraṭṭam "குறுக்கைவீ ரட்டனாரே" (தேவா. 191:1).*

*[குறுக்கு → குறுக்கை.]*

**குறுக்கை[2]** *kuṟu-k-kai,* பெ.(n.) 1. புலி (பெருங். இலாவாண. 18,18.அரும்); tiger. 2. உடைவாள்; dagger, poniard. *"குறுக்கை புக்க கொளுவமை கச்சையன்" (பெருங். இலாவாண. 18:18).* 3. சுருங்கிய கை; withered handy (ச.அக.).

*[குறு + கை – குறுங்கை → குறிக்கை.]*

**குறுக்கையர்** *kuṟukkaiyar,* பெ.(n.) வேளாள மரபில் திருநாவுக்கரசு நாயனார் பிறந்த குடியைச் சார்ந்தவர்; member of the family in the *Vēḷāḷa* caste to which *Thirunāvukkarasar* belonged, *"வேளாண் குலத்தின் கண் வரும் பெருமைக் குறுக்கையர்தங் குடி விளங்கும்" (பெரியபு. திருநாவுக். 15).*

*[குறுக்கை + அர். குறுக்கை = புலி.]*

**குறுகக்காய்ச்சு–தல்** *kuṟuga-k-kāyccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சுண்டக்காய்ச்சுதல் (யாழ்ப்.); to boil down a liquid.

*[குறுகு → குறுக...]*

**குறுகநறுக்கல்** *kuṟuga-naṟukkal,* பெ.(n.) பொடியாய் நறுக்குதல்; crushing into small pieces (சா.அக.).

*[குறுக + நறுக்கல்.]*

**குறுகப்பிடி–த்தல்** *kuṟuga-p-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சுருக்குதல்; to make short; to curtail; as expenses; to retrench, to shorten, as a story. 2. கிட்டப்பிடித்தல்; to hold near or close to.

*[குறுக + பிடி–.]*

**குறுகல்** *kurugal,* பெ.(n.) 1. குறைதல்; growing short in stature through old age as in கூனிக்குறுகல். 2. குறுகுதல்; decreasing. (சா.அக.). 3. குறுகிய பொருள் (வின்.); that which is short, dwarfish, stunted.

*[குறுகு → குறுகல்.]*

**குறுகல்முத்து** *kurugal-muttu,* பெ.(n.) இரட்டை முத்து; double pearl.

*[குறுகல் + முத்து.]*

**குறுகலர்** *kurugalar,* பெ.(n.) பகைவர்; enemies, foes. *"குறுகல ரூர்" (திருக்கோ. 13).*

*[குறுகு + அல் + அர்.]*

**குறுகவரிதல்** *kuruga-v-aridal,* 2 செ.குன்றாவி. (v.t.) பொடியாய் கத்தி கொண்டு அரிதல்; cutting into very small or minuite pieces (சா.அக.).

*[குறுக + அரிதல்.]*

**குறுகவிடி–த்தல்** *kuruga-v-iḍittal,* 4 செ.கு.வி.(v.i.) தூளாகும் படி செய்தல்; reducing to fine powder.

*[குறுக + இடி–.]*

**குறுகன்னி** *kuru-kaṉṉi,* பெ.(n.) சிறுதுவரை; a small kind of dholl (சா.அக.).

*[குறு + கன்னி.]*

**குறுகாதவர்** *kurugātavar,* பெ.(n.) பகைவர்; enemies. *"குறுகாதவரூர்.... சரத்தாற் செற்றவன்" (தேவா. 169:1).*

மறுவ. குறுகலர், குறுகார்.

*[குறுகு + ஆ (எதிர்மறைப் பின்னொட்டு) + த் + அ + அர்.]*

**குறுகார்** *kurugār,* பெ.(n.) பகைவர்; enemies. *"குறுகார் தடந்தோ ளிரண்டுந் துணிந்து" (பாரத. முதற்போ.29).*

*[குறுகு + ஆ + ஆர்.]*

**குறுகு[1]–தல்** *kurugu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. குள்ள மாதல்; to grow short, stumpy, dwarfish. *"குறுகுறுகென விருத்தி" (கந்தபு. திருக்குற்றாலப். 15).* 2. சிறுகுதல்; to shrink, contract; to be reduced; to decrease, diminish, decline. *"உரைகுறுக நிமிர்கீர்த்தி" (கம்பரா. குலமுறை.4).* 3. மாத்திரை குறைதல்; (Gram.). to be shortened as a long vowel. *"இடைப்படிற் குறுகு மிடனுமா ருண்டே" (தொல். எழுத்து. 37).*

*[குல் → குறு → குறுகு.]*

**குறுகு[2]–தல்** *kurugu-,* 5 செ.கு.வி.(v.i.) அணுகுதல்; to approach, draw near. *"இளங்கோ வேந்தனி ருப்பிடங் குறுகி" (மணிமே. 18:42).*

*[குல் → குறு → குறுகுதல்.]*

**குறுகு[3]** *kurugu,* பெ.(n.) குறிஞ்சா; clustered gaertnera (சா.அக.).

*[குறு → குறுகு.]*

**குறுகுதாளி** *kurugu-tāḷi,* பெ.(n.) சிறுதாளி (மலை.); hairy-leaved creamy-white bind weed.

*[குறுகு + தாளி.]*

**குறுகுறு–த்தல்** *kuru-kuru-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வெறுப்புத் தோன்ற முணுமுணுத்தல்; to mutter in displeasure, murmur. 2. மனம் உறுத்திக் கொண்டிருத்தல்; to be pricked by conscience. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுக்கும் (பழ.). 3. அச்சம் உறுத்திக்கொண்டிருத்தல்; to be perturbed by fear of detection. 4. தினவுறுதல்; to feel an itching or irritating sensation, as in the ear, in a sore. காது குறுகுறுக்கிறது (உ.வ.).

ம. குறுகுறுக்குக; க. குர்ருகுர்ரு.

*[குல் → குறு–.]*

**குறுகுறுநட–த்தல்** *kuru-kuru-naḍa-,* 3 செ.கு.வி. (v.i.) குறுகக் குறுக நட ந்து செல்லுதல்; to wobble with short steps, as a child. *"குறுகுறு நடந்து சிறுகை நீட்டி" (புறநா. 188).*

*[குறு + குறு + நட–. குறுகுறு – இரட்டைக்கிளவி ஒலிக்குறிப்பு.]*

**குறுகுறுப்பு**[1] *kuṟu-kuṟuppu,* பெ.(n.) 1. விருப்ப மின்மை தோன்ற முருமுருக்கை; muttering in displeasure. 2. குறட்டை; snoring, stertorous breathing. **தெ.** குர்ர்ரு. 3. அச்சக்குறி காட்டுகை; showing, signs of perturbation with fear.4. சுறுசுறுப்பு; briskness, bustling activity.

*[குறுகுறு → குறுகுறுப்பு.]*

**குறுகுறுப்பு**[2] *kuṟu-kuṟuppu,* பெ.(n.) கண்டத்திலும், மார்பிலும் கோழை கட்டுவதால் உண்டாகும் சத்தம்; an abnormal rattling noise in the ear (சா.அக.).

*[குறுகுறு → குறுகுறுப்பு.]*

**குறுகுறுப்பை** *kuṟu-kuṟuppai,* பெ.(n.) குறட்டை (வின்.); snoring, stertorous breathing.

*[குறுகுறுப்பு → குறுகுறுப்பை.]*

**குறுகுறென்றிழுத்தல்** *kuṟukuṟeṉ-ṟiḻuttal,* பெ.(n.) சாகுங்காலத்தில் தொண்டையில் கோழை கட்டியிழுத்தல்; ratling noise due to obstruction of phlegm in the throat of dying persons (சா.அக.).

*[குறுகுறு + என்று + இழுத்தல். குறுகுறு - ஒலிக்குறிப்பு.]*

**குறுகுறென்று விழி—த்தல்** *kuṟu-kuṟeṉṟu-viḻi-* 4 செ.கு.வி.(v.i.) திருட்டுவிழி விழித்தல்; to have a look of fear, a thievish look. புதுத்திருடன் குறுகுறென்று விழிக்கிறான் (உ.வ.).

*[குறுகுறு + என்று + விழி-.]*

**குறுகுறெனல்** *kuṟu-kuṟeṉal,* பெ.(n.) 1. விரைவுக் குறிப்பு; onom, expr. signifying (or) showing signs of haste. *அவன் குறுகுறென்று நடக்கிறான்.* 2. தினவுக் குறிப்பு; tingling, as in the ears, a sore. *காது குறுகுறென்கிறது.* 3. சினக்குறிப்பு; muttering in displeasure. 4. அச்சக்குறிப்பு; being perturbed with fear. *புலியைக் கண்டால் மனம் குறுகுறென்கிறது.* 5. சுறுசுறுப்பாயிருத்தற் குறிப்பு; being brisk and active. குழந்தை குறுகுறு வென்றிருக்கிறது (உ.வ).

*[குறுகுறு + எனல்.]*

**குறுகூலி** *kuṟukūli,* பெ.(n.) நெல்லைக் குற்றி அரிசி யாக்குதற்குரிய கூலி; wages given for pounding and dehusking paddy. *"குறுகூலி நெல் நாடுரியும்"* *(தெ.கல்.தொ. 5, கல் 642 , 693) (நன்.400 மயிலை).*

மறுவ. குறுங்கூலி

*[குல் → குறு + கூலி. குறுதல் = குற்றுதல்.]*

**குறுங்கண்**[1] *kuṟuṅ-kaṇ,* பெ.(n.) பலகணி, சாளரம்; a kind of lattice-window, with small apertious *"குறுங்க ணடைக்குங் கூதிர்க் காலையும்" (சிலப். 14: 101).*

மறுவ. பலகணி, மான்கண், காலதர்.

*[குறு → குறும் + கண்.]*

**குறுங்கண்**[2] *kuṟuṅ-kaṇ,* பெ.(n.) நெருங்கின கணுவுடையது; that which is closely jointed, knotty. *"குறுங்கண்ணான பசு மஞ்சளை" (திவ்.பெரியாழ். 1.1:6, வ்யா.பக்.14).*

*[குறும் + கண்.]*

**குறுங்கண்ணி** *kuṟu-ṅ-kaṇṇi,* பெ.(n.) முடியில் அணியும் மாலை; wreath for the tuft. *"குழவித் திங்களைக் குறுங்கண்ணியாக வுடைய" (இறை. களவி. 1,உரை).*

*[குறும் + கண்ணி.]*

**குறுங்கணக்கு** *kuṟuṅkaṇakku,* பெ.(n.) உயிர் பன்னிரண்டும் மெய் பதினெட்டுமாகிய முதலெழுத்து; basic letters of the Tamil alphabet,

viz., 12 vowels and 18 consonants, opp. to *neḍuṅ-kaṇakku.*

ம. குறுங்கணக்கு (குறுகிய அல்லது எளிய கணக்கு)

*[குறுமை + கணக்கு.]*

**குறுங்கருசம்** *kuṟuṅ-karušam,* பெ.(n.) வீச்சுவலி; clonic spasm (சா.அக.).

*[குறும் + கருசம்.]*

**குறுங்கலி**[1] *kuṟuṅ-kali,* பெ.(n.) பாலையாழ்த் திறத்தொன்று (திவா.); an ancient melody type of the *pālai* class.

*[குறுமை + கலி.]*

**குறுங்கலி**[2] *kuṟuṅkali,* பெ.(n.) மனைவியைக் கைவிட்டுப் பிறமகளிரை நயக்கும் காமம் கெடுமாறு அறிவுரைக்கும் புறத்துறை; *(Puṟap)* theme of addressing a hero with a view to turn him away from his illicit loves.

*[குறும் + கலி. கலி = கேடு. குறு = சிறுமை.]*

ஒருவன் மனத்தெழுந்த சிறுமைக் குணம் கெடக் கூறுதலின் இது குறுங்கலி எனப்பட்டது. இதனை "நாறிருங் கூந்தல் மகளிரை நயப்ப வேறுபடு வேட்கை வீயக் கூறின்று" (பு.வெ.12.கொளு.87) என்னும் நூற்பாவாலும் அறியலாம். இதனை விளக்கும் மேற்கோள் செய்யுள் :

"பண்ணவாம் தீஞ்சொல் பவளத் துவர்ச் செவ்வாய்ப்
பெண்ணவாம் பேரல்குற் பெய்வளை - கண்ணவாம்
நன்னலம் பீர்பூப்ப நல்காய் விடுவதோ
தொன்னலம் உண்டாய் தொடர்பு".
(பு.வெ.12.கொளு.87 மேற்கோள்.)

குற்றிசையும் குறுங்கலியும் அகப்பொருட் துறைகளாயினும் அன்பின் ஐந்திணையைத் தழுவாது அறநெறி பிறழ்ந்த வாழ்க்கை முறைகளாதலின் பெருந் திணைக்குரியனவாகிப் புறத்திணை சார்ந்தனவாயின. அதனால் இவை புறப்பொருள் வெண்பாமாலையில் இடம் பெற்றன.

தமிழர் பண்பாட்டில் திருமண வாழ்க்கை என்பது, இளமை நலம் நுகரவும் மகப்பேற்றுக்கும் மட்டுமாக அமைந்ததன்று. உண்மையான அன்பு நீரோட்டத்திற்கு அகவை என்னும் அணைக்கட்டுகள் இல்லை. காதல் என்பது உயிரன்பு; உயிருக்கப்பாலும் நீடிப்பது; உயிரோடு உயிர் இணைந்து பல பிறப்பிலும் வேர் கொண்டு விழுது வீழ்ப்பது. அதனால் தான் அன்பு முதிர்ந்து அறமாகக் கனியும் காதல் வாழ்க்கை இல்லறம் எனப்பட்டது. தமிழர் பண்பாட்டில் இல்லற வாழ்க்கை உடல் நுகர்வு மட்டும் நோக்காமல் உயிர் நுகர்வைப் பெரிதாக நோக்கியது. மனைவியை நீத்துக் கணவன் துறவு மேற்கொள்ளும் பௌத்த நெறியும் செல்வன் அல்லது அரசன் பல மனைவியரைக் கொள்ளலாம் என்னும் சமண இலக்கிய நெறியும் தமிழ்ச் சான்றோரால் ஏற்கப்படவில்லை. இராமகிருட்டிணரும் சாரதா தேவியும் போல இருவரும் துறவு மேற்கொள்வது மறுக்கப்படவு மில்லை.

**குறுங்கலித்தொகை** *kuṟuṅ-kali-t-togai,* பெ.(n.) கலித்தொகை (புறநா. முகவுரை.); an ancient Tamil classic.

*[குறும் + கலி + தொகை. பாலையாழ்த்திறத்தில் அமைந்த குறுங்கலித் துறை சார்ந்த பாடல் தொகுதி யாகலாம்.]*

**குறுங்கற்றலை** *kuṟuṅ-kaṟṟalai,* பெ.(n.) கடல்மீன் வகை; a sea fish, silvery-grey, attaining 1ft. in length.

*[குறுமை + கல் + தலை.]*

**குறுங்காடு** *kuṟuṅ-kāḍu,* பெ.(n.) சிறுகாடு; thicket, small forest or jungle, copse, underwood. *"குறுங்காட் டின்னகை மனையோள்" (ஐங்குறு. 410).*

ம. குறுங்காடு

*[குறுமை + காடு.]*

**குறுங்கார்** *kuṟuṅ-kār,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[குறும் + கார்.]*

**குறுங்காலெலி** *kuṟuṅ-kāleli,* பெ.(n.) எலிவகை (வின்.); a rat.

*[குறும் + கால் + எலி.]*

**குறுங்கிண்ணி** *kuṟuṅ-kiṇṇi,* பெ.(n.) வெண்கலம் (யாழ்.அக.); bell metal.

*[குறுமை + கிண்ணி.]*

**குறுங்குடியாள்** *kuṟu-ṅ-kuḍi-y-āḷ,* பெ.(n.) தாளகம் (மூ.அக.); yellow sulphuret of arsenic.

*[குறும் + குடி + ஆள்.]*

**குறுங்கூலி** *kuṟuṅ-kūli,* பெ.(n.) நெல் முதலியன குற்றுங் கூலி (நன். 400. மயிலை); husking wages.

பழவ. குறுகூலி

*[குறும் + கூலி. குறுதல் = குற்றுதல்.]*

**குறுங்கெண்டை** *kuṟuṅ-keṇḍai,* பெ.(n.) 1. நன்னீரில் வாழும் மீன்வகை; a fresh water fish, silvery, attaining 5 inches in length. 2. ஆற்று மீன்வகை; a small river-fish, silvery.

*[குறும் + கெண்டை.]*

**குறுங்கொள்ளி** *kuṟuṅ-koḷḷi,* பெ.(n.) ஒரு பகுதி எரிந்து போன கொள்ளிக்கட்டை, குறைக் கொள்ளி; fire brand partially consumed.

*[குறுமை + கொள்ளி.]*

**குறுங்கோல்** *kuṟuṅ-kōl,* பெ.(n.) 1. சிறிய கோல்; a tiny rod, small stick. *"குறுங்கோ லெறிந்த நெடுஞ் செவிக் குறுமுயல்" (புறநா. 339).* 2. ஒரு நீட்டலளவைக் கோல்; a yard-measure.

ம. குறுங்கோல்

*[குறும் + கோல்.]*

**குறுஞ்சம்பா** *kuṟuñjambā,* பெ.(n.) சம்பா நெல் வகை; a sub-species of *cambā*, paddy. *"குறுஞ் சம்பா பித்தங் குடியிருக்கச் செய்யும்" (பதார்த்த. 812).*

*[குறும் + சம்பா.]*

**குறுஞ்சாண்காடை** *kuṟuñ-cāṇkāḍai,* பெ.(n.) குறுகிய சாண் நீளமுள்ள காடை; short quail about a span in length (சா.அக.).

*[குறும் + சாண் + காடை.]*


குறுஞ்சாண்காடை

**குறுஞ்சாலி** *kuṟuñjāli,* பெ.(n.) இளமரம்; young tree (சா.அக.).

*[குறும் + சாலி.]*

**குறுஞ்சாலிகை** *kuṟuñjāligai,* பெ.(n.) சாலிமரம்; arrow thorn tree (சா.அக.).

*[குறும் + சாலிகை.]*

**குறுஞ்சிரிப்பு** *kuṟuñ-cirippu,* பெ.(n.) புன்சிரிப்பு; smile.

*[குறும் + சிரிப்பு.]*

**குறுஞ்சிலைக்கல்** *kuṟuñ-cilai-k-kal,* பெ.(n.) ஈரக்கல் (சங்.அக.); red stone.

*[குறும் + சிலை + கல்.]*

**குறுஞ்சீட்டு** *kuṟu-ñ-ciṭṭu,* பெ.(n.) குடத்தில் இட்டுக் குலுக்கியெடுக்கும் சீட்டு; chits cast into a pot and taken at random.

*[குறும் + சீட்டு.]*

**குறுஞ்சீர்வண்ணம்** *kuṟuñ-cīr-vaṇṇam,* பெ.(n.) குற்றெழுத்துப் பயின்றுவரும் சந்தம் (தொல். பொருள்.533); (Pros.) a rhythem effect by using only short syllables.

*[குறும் + சீர் + வண்ணம்.]*

**குறுஞ்சுருட்டை** *kuṟuñ-curuṭṭai,* பெ.(n.) சுருட்டைப் பாம்பிற் சிறிய இனவகை; variety of echis carinata, short carpet snake, as being the smallest.

*[குறும் + சுருட்டை.]*

**குறுஞ்சூலி** *kuruñ-cūli* பெ.(n.) ஒருவகைப் பூடு (நன். 259, மயிலை.); a kind of shrub.

*[குறும் + சூலி.]*

**குறுணல்** *kuruṇal,* பெ.(n.) குறுநொய் (வின்.); broken rice, bruished grain, grit.

*[குறுநொய் → குறுணை → குறுணல்.]*

**குறுணி** *kuruṇi,* பெ.(n.) எட்டுப்படி கொண்ட தவச அளவு; a grain measure = 1 *marakkāl* or 8 measures (ஙு).

*[குறு → குறுணி.]*

**குறுணிப்பாடு** *kuruṇi-p-pāḍu,* பெ.(n.) குறுணி விதைப்பாடுள்ள நிலம்; land requring one *kuruṇi* of paddy to sow it.

*[குறுணி + பாடு.]*

**குறுணை** *kuruṇai,* பெ.(n.) குறுநொய்; broken rice, grit.

மறுவ. குறுநொய், குருணல்

*[குறு + நொய்.]*

**குறுத்தவன்** *kuruttavaṉ,* பெ.(n.) குள்ளன் (யாழ்.அக.); dwarf.

*[குறு → குறுத்தவன்.]*

**குறுந்தட்டி** *kurun-taṭṭi,* பெ.(n.) குறுந்தொட்டிச்செடி; a plant (சா.அக.).

*[குறுந்தோட்டி → குறுந்தட்டி.]*

**குறுந்தடி** *kurun-taḍi,* பெ.(n.) 1. சிறிய கழி (திவா.); short stick. *"கோழிவெண் முட்டைக் கென் செய்வ தெந்தாய் குறுந்தடி" (திவ். பெரியதி. 10: 9,7).* 2. பறையடிக்குங்கோல்; drum stick. *'கன்றைக் குறுந்தடியாக் கொண்டு' (சிலப். 17, பாட்டு, 1, உரை.).* 3. தாங்குதூண்; supporting pillar.

ம. குறுந்தடி

*[குறும் + தடி.]*

**குறுந்தடிப்பு** *kurun-taḍippu,* பெ.(n.) சிறிய தடிப்பு; small raised patches on the surface of the skin (சா.அக.).

*[குறும் + தடிப்பு.]*

**குறுந்தறி** *kuru-n-taṟi,* பெ.(n.) 1. அணிவகையாகச் செய்யப்பெற்ற கற்றூண் (போதிகை); ornamental capital of a column or pillar. 2. சிறு முளை; stake. 3. உத்தரத்தைத் தாங்கும்படி சுவரோடு ஒட்டித் தூண்போல் எழுப்பிய கட்டடம்; blocks built in a wall to support timbers.

*[குறும் + தறி.]*

**குறுந்தாள்**[1] *kuru-n-tāḷ,* பெ.(n.) குறுகிய படிக்கட்டு; narrow steps. *"குறுந்தாள் ஞாயில்" (பதிற்றுப். 71: 12).*

*[குறும் + தாள்.]*

**குறுந்தாள்**[2] *kuruntāḷ,* பெ.(n.) சிற்றடி; small step (சா.அக.).

*[குறும் + தாள்.]*

**குறுந்தாளி** *kuru-n-tāḷi,* பெ.(n.) சிறுதாளி ; hairy leaved creamy-white bind weed.

*[குறும் + தாளி.]*

**குறுந்திரட்டு** *kuru-n-tiraṭṭu,* பெ.(n.) தத்துவராயர் தொகுத்த ஒரு வேதாந்த நூல்; an anthology by *Tattuva-rāyar*, treating of *Vēdānta*, dist-fr. *Peru-n-tiraṭṭu.*

ம. குறுந்திரட்டு (கணக்குச் சுருக்கம்)

*[குறும் + திரட்டு.]*

**குறுந்துழாய்** *kuru-n-tuḻāy,* பெ.(n.) குறுந்துளசி (மலை.); a small species of basil.

மறுவ. குறுந்துளசி

*[குறுமை + துழாய்.]*

**குறுந்துளசி** *kurun-tulaśi,* பெ.(n.) சிறுதுளசி (மலை.); a small species of basil.

*[குறும் + துளசி.]*

**குறுந்தேங்காய்** *kurun-tēṅgāy,* பெ.(n.) சிறு தேங்காய் போல் தோற்றமளிக்கும் ஒருவகைப் பழம்; a fruit resembling a small coconut.

*[குறும் + தேங்காய்.]*

**குறுந்தை** *kurundai,* பெ.(n.) பூவன் வாழை; royal banana (சா.அக.).

*[குறு → குறுந்தை.]*

**குறுந்தொகை** *kuru-n-togai,* பெ.(n.) அகப் பொருளைப் பற்றியதும் அகவற்பாக்கள் 402 கொண்டு பூரிக்கோ என்பவரால் தொகுக்கப் பெற்றதும், எட்டுத் தொகையில் சேர்ந்ததுமாகிய ஒரு நூல்; an ancient anthology of Tamil stanzas 402 in number, compiled by *Pūrikō* treating of *aga-p-poruḷ,* one of *eṭṭu-t-togai.* *"நற்றிணை நல்ல குறுந்தொகை" (புறநா. முகவுரை. ப.1).*

*[குறும் + தொகை.]*

**குறுந்தொகை நானூறு** *kuru-n-togai-nāṉūṟu,* பெ.(n.) ***குறுந்தொகை*** பார்க்க (இறை.பாயி.பக்.5); see *kuṟuntogai.*

*[குறுந்தொகை + நானூறு.]*

**குறுந்தொட்டி** *kuru-n-toṭṭi,* பெ.(n.) 1. சிற்றாமுட்டி; rose-coloured sticky mallow. 2. சிறுகாஞ்சொறி (மலை.); small climbing nettle.

ம. குறுந்தோட்டி

*[குறும் + தொட்டி.]*

**குறுந்தொடி** *kuru-n-todi,* பெ.(n.) சிறு வளையலைப் பூண்ட பெண்; maiden wearing small bracelets. *"தொடலைக் குறுந்தொடி" (குறள், 1135).*

*[குறும் + தொடி.]*

**குறுந்தோட்டி** *kuṟun-tōṭṭi,* பெ.(n.) சிறிய அங்குசம்; short goad, dist, fr. *neḍu-n-tōṭṭi.* *'குறுந்தோட்டி யையும் நெடுந்தோட்டியையும் தம்மிற் பிணைத்து' (சீவக, 1835, உரை).*

*[குறும் + தோட்டி.]*

**குறுநகை** *kuṟu-nagai,* பெ.(n.) புன்சிரிப்பு; smile. *"குருபரன்.... குறுநகை கொண்டு கூறும்" (பிரபுலிங். வசவண்ணர்கதி, 30).*

*[குறுமை + நகை.]*

**குறுநடை** *kuṟu-naḍai,* பெ.(n.) குழந்தை நடை; child's walk. 2. சிறுக அடி வைத்து நடக்கும் தளர் நடை; a short walk with a short pace, as of children for pleasure (சா.அக.). *"குதலைச் செவ்வாய் குறுநடைப் புதல்வர்க்கு" (மணிமே.7:57).*

*[குறு + நடை.]*

**குறுநடைகொள்ளல்** *kuṟunaḍai-koḷḷal,* பெ.(n.) நோயாளிகள் அல்லது நலிந்தோர் (பலவீனர்கள்) சிறுக அடி வைத்து சிறிது தொலைவு செல்லல்; taking a short walk with a short pace, as of patients or convalescents (சா.அக.)

*[குறு + நடை + கொள்ளல்.]*

**குறுநண்டுக்கால்வெட்டு** *kuṟunaṇḍu-k-kālveṭṭu,* பெ.(n.) பழைய நாணய வகை (பணவிடு.136); an ancient coin.

*[குறு + நண்டுக்கால் + வெட்டு.]*

**குறுநணி** *kuṟu-naṇi,* பெ.(n.) மிக்க அணிமை; close proximity. *"நம்முட் குறுநணி காண்குவ தாக" (புறநா. 209:15).*

*[குறுமை + (நண்ணு) நணி.]*

**குறுநர்** *kuṟunar,* பெ.(n.) களை முதலியன பறிப்போர்; pluckers, as of weeds. *"குறுந ரிட்ட குவளை" (சிலப். 10:86).*

*[குறு (பறித்தல்) → குறுநர்.]*

**குறுநரி** *kuru-nari,* பெ.(n.) குள்ளநரி; fox. *"ஏதில் குறுநரி பட்டற்றால்" (கலித்.65).*

ம. குறுநரி

*[குறு + நரி.]*

**குறுநறுங்கண்ணி** *kuru-naru-ṅ-kaṇṇi,* பெ.(n.) குன்றிமணிப்பூ ; crab's eye flower. *"குரீஇப் பூளை குறுநறுங் கண்ணி" (குறிஞ்சிப். 72).*

மறுவ. குன்றிப்பூ

ம. குறுநறுங்கண்ணி

*[குறும் + நறும் + கண்ணி.]*

**குறுநாத்தகடு** *kuru-nā-t-tagaḍu,* பெ.(n.) பொன் போல் ஒளிரும் மெல்லிய தகடு; foliated tinsel.

மறுவ. குறுந்தகடு

*[குறு + நாகம் + தகடு - குறுநாகத்தகடு → குறுநாத்தகடு. நாகம் = துத்தநாகம்.]*

**குறுநாப்பட்டை** *kuru-nā-p-paṭṭai,* பெ.(n.) ***குறுநாத் தகடு*** பார்க்க; see *kurunāt-tagaḍu.*

*[குறு + நாகம் + பட்டை]*

**குறுநிகழ்ச்சி** *kuru-nigaḻcci,* பெ.(n.) ஏழுசெங்கழு நீரிதழை ஒரு குறட்டிலடுக்கி வலுவுள்ளவன் ஒருவன் மிகவும் கூரியதோருளி வைத்துக் கூடமிட்டுப் புடைத்தால் ஆறாம் புரையற்று, ஏழாம் புரையிற் செல்லுதற்கு வேண்டும் மிக நுண்ணிய அளவுள்ள காலம்; short duration of time taken by a sharp chisel to pass from the sixth lotus leaf to the seventh in a bunch of seven lotus leaves placed on a stone when the chisel is forcibly thrust into it by a strong man, opp to *neḍunigaḻcci.* ***"கணிகமெனுங் குறுநிகழ்ச்சியும்" (மணிமே.27:191).***

*[குறுமை + நிகழ்ச்சி.]*

**குறுநிலமன்னன்** *kuru-nila-maṉṉaṉ,* பெ.(n.) சிற்றரசன் (பிங்.); petty, tributary chief.

ம. குறுநிலமன்னன்

*[குறுநிலம் + மன்னன்.]*

**குறுநிலைவழக்கு** *kuru-nilai-vaḻakku,* பெ.(n.) குழூஉக்குறி வழக்கு (நேமி.சொல்.10,உரை); terms peculiar to any class; conventional terms.

*[குறுநிலை + வழக்கு.]*

**குறுநெளிப்பு** *kuru-neḷippu,* பெ.(n.) போலிப்பு நகையாட்டுக்காக (கேலியாக) உடலை நெளித்துக் காட்டுகை (யாழ்.); affected twisting of the body, as in mimicry.

*[குறு + நெளிப்பு.]*

**குறுநெறி** *kuru-neṟi,* பெ.(n.) குறுகிய மயிர் நெறிப்பு; wave of curls of hair. *"குறுநெறிக் கொண்ட கூந்தல்" (பெரும்பாண்.162).*

ம. குறுநிற

*[குறு + நெறி.]*

**குறுநை** *kuru-nai,* பெ.(n.) ***குறுநொய்*** பார்க்க; see *kurunoy.*

*[குறுநொய்→குறுநை.]*

**குறுநொய்** *kuru-noy,* பெ.(n.) அரிசி முதலிய வற்றின் சிறுநொய்; broken rice, bruised grain, grit.

மறுவ. குருணை

*[குறு + நொய்.]*

**குறுநோவு** *kuru-nōvu,* பெ.(n.) உடலின் கழிவு; bodily secretiod (சா.அக.).

*[குறு + நோவு.]*

**குறுப்பாலை** *kuruppālai,* பெ.(n.) 1. சிறுபாலை; small paulay of the mimusops genus. 2. புத்திர சீவி; grey barked nageia (சா.அக.).

*[குறு + பாலை.]*

**குறுப்பி** *kuruppi,* பெ.(n.) பொன்னிமிளை; ஒரு pyrites (சா.அக.).

*[குறு → குறுப்பி.]*

**குறுப்பிகம்** *kuruppigam,* வெண்கொய்யா; white guava (சா.அக.).

*[குறு → குறுப்பிகம்.]*

**குறும்படி** *kuru-m-padi,* பெ.(n.) வாசற்படி; threshold, sill. *நிலையும் குறும்படியும் (இ.வ.).*

*[குறும் + படி.]*

**குறும்படை** *kurum-padai,* பெ.(n.) கோட்டை; fort *"குறும்படை மழவர்" (அகநா.35).*

*[குறும்பு + அடை.]*

**குறும்பர்** *kurumbar,* பெ.(n.) 1. குறுநிலமன்னர்; petty chieftains. *"குறும்பருங் குழீஇய" (பெருங். உஞ்சைக். 43: 55).* 2.ஒரு பழமையான குடியினர்; an aboriginal tribe. 3. வேடர்; hunters, those who live by chase. *"கோண்டரு குறும்பர் வெம்போர்" (சீவக. 1079).* 4. இடையருள் முரட்டுக் கம்பளி நெய்யும் ஒரு பிரிவினர்; a caste of shepherds who weave coarse blankets. 5. பள்ளருள் ஒரு பிரிவினர் (G.J.D.i.90); a subdivision of the *Palla* caste.

**ம.** குறும்பன்; **க.** குறுப; **தெ.** குருப; **து.** குருபி.

*[குறும்பு → குறும்பர். குறும்பு = சிறுகுன்றம், கரடு, வலிய கோட்டை.]*

**குறும்பர் கோட்டம்** *kurumbar-kottam,* பெ.(n.) குறும்பரின் கோட்டை(வின்.); stronghold of the *Kurumbas.*

*[குறும்பர் + கோட்டம்.]*

**குறும்பலா** *kurum-pala,* பெ.(n.) 1. ஒருவகைக் கூழைப்பலாமரம்; a kind of short jack tree. 2. திருக்குற்றாலத்திலுள்ள சிவாலயம்; Siva shrine at *Thirukkurralam. "குறும்பலா மேவிய கொல்லேற் றண்ணல்" (தேவா. 911:11).*

*[குறும் + பலா.]*

**குறும்பறை** *kuru-m-parai,* பெ.(n.) பறவைப்பேடு; hen, female of the feathered kind as probably short in stature. *"குறும்பறை யசைஇ" (புறநா. 67:9)*

*[குறும் + பறை.]*

**குறும்பன்** *kurumban,* பெ.(n.) 1. குறும்பு; mischief. 2. குறும்புக்காரன்;mischief maker.

**ம.** குறும்பன்; **க.** குறும்புகார.

*[குறும்பு + அன்.]*

**குறும்பனைநாடு** *kurum-panai-nadu,* பெ.(n.) முற்காலத்தில் குமரிக்குத் தெற்கே கடல் கொள்ளப்பட்ட தமிழ்நாட்டுப் பகுதிகளுள் ஒன்று; an ancient province of the Tamil land believed to have been submerged by sea of kumari. *'ஏழ்குறும்பனை நாடும்' (சிலப். 8.1 உரை.)*

*[குறும் + பனை + நாடு.]*

**குறும்பாட்டம்** *kurumbattam,* பெ.(n.) குறும்புத் தனம்; vileness, wickedness, mischievousness.

*[குறும்பு + ஆட்டம்.]*

**குறும்பாடு**[1] *kurumbadu,* பெ.(n.) குறும்பாட்டம்; wickedness. *"குறும்பாட்டையு மோதிடும்" (அழகர் கல.41).*

*[குறும்பு + ஆடு.]*

**குறும்பாடு**[2] *kurumbadu,* பெ.(n.) ஒருவகை ஆடு; short, woolly sheep with twisted horns. *"குறும்பாட்டை மோதிடும்" (அழகர்கல.41).*

*[குறும்பு (குன்றம்) + ஆடு.]*

**குறும்பி** *kurumbi,* பெ.(n.) 1. காதுள் அழுக்கு; ear wax. *"உள்ளுங் குறும்பி யொழுகுங் காதை" (பட்டினத். திருப்பா. கச்சித்திருவகவல், வரி 37).* 2. மலம், சிறுநீர் முதலியன. excretion of the body, as urine and faeces *"குறும்பி யூர்வதோர் கூட்டகத் திட்டு" (தேவா. 370:6).*

**ம.** குரும்பி

*[குல் → குறு → குறும்பு → குறும்பி.]*

**குறும்பிடி** *kuṟum-piḍi,* பெ.(n.) 1. சிறுகைப்பிடி; a very short handle. 2. உடைவாள்; short scimitar. *"குறங்கிடைப் பதித்த சூர்நுனைக் குறும்பிடி" (மதுரைக் 637).*

*[குறும் + பிடி.]*

**குறும்பி முடங்கு-தல்** *kuṟumbi-muḍaṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) காதில் அழுக்குச் சேர்தல்; collection of the ear-wax. (சா.அக.).

*[குறும்பி + முடங்கு-.]*

**குறும்பிவாங்கி** *kuṟumbi-vāṅgi,* பெ.(n.) காதுக் குறும்பி எடுக்குங் கருவி; ear pick.

*[குறும்பி + வாங்கி.]*

**குறும்பிவாங்கு-தல்** *kuṟumbivāṅgu-,*5 செ.குன்றாவி. (v.t.) காது அழுக்கை நீக்கல்; cleaning the dirt of the ear (சா.அக.).

*[குறும்பி + வாங்கு-.]*

**குறும்பின்மை** *kuṟumbiṉmai,* பெ(n.) துன்பம் விளைக்கும் குறும்பரசர் இல்லாமையாகிய நாட்டமைதிவகை (பிங்.); freedom from petty troublesome chieftains, as promoting the prosperity of a state.

*[குறும்பு + இன்மை.]*

**குறும்பு**[1] *kuṟumbu,* பெ.(n.) 1. குன்றம்; hill. 2. பாலை நிலத்தூர் (பிங்.); village in a desert tract.

*[குன்றம் → குறம் → குறும்பு.]*

**குறும்பு**[2] *kuṟumbu,* பெ.(n.) 1. ஊர் (திவா.); village. 2. குறுநிலமன்னர்; petty chieftains. *"குறும் படைந்த வரண்" (புறநா. 97).* 3. பகைவர்; enemy. *"இருட்குறும் பெறியும் வெய்யோன்" (கூர்மபு. பதிக.10).* 4. அரண்; stronghold. *"குறும்பல் குறும்பிற் றதும்ப வைகி" (புறநா. 177).* 5. வலிமை; strength, power. *"அரவுக் குறும்பெறிந்த சிறுகட் டீர்வை" (மலைபடு. 504).* 6. தென்னாட்டிலுள்ள தொன்மையான மக்களுள் ஒரு பிரிவினர்; a class of tribes supposed to form a part of the aborigines of South India, divided into. காட்டுக்குறும்பு, நாட்டுக்குறும்பு. 9. போர்; battle, fight, war.

*[குல் → குறு (குற்றுதல், தாக்குதல், வலிமை) → குறும்பு.]*

**குறும்பு**[3] *kuṟumbu,* பெ.(n.) 1. போக்கிரித் தனம்;wickedness. 2. நையாண்டி, வசை;mischief. 3. தொல்லை; obstinacy. 4. துடுக்குத்தனம்; insolvence.

ம., க. குறும்பு

*[குறு → குறும்பு.]*

**குறும்பு**[4] *kuṟumbu,* பெ.(n.) 1. சிறிய துணுக்கு; small pieces, as tobacco. *"புகையிலைக் குறும்பு" (இ.வ.).* 2. அழுக்கு; dirt.

ம. குறும்பல்

*[குல் → குறு → குறும்பு.]*

**குறும்புக்காரன்** *kuṟumbu-k-kāraṉ,* பெ.(n.) குறும்பு செய்பவன்; mischief maker.

க. குறும்பு கார

*[குறும்பு + காரன்.]*

**குறும்புத்தனம்** *kuṟumbu-t-taṉam,* பெ.(n.) குறும்பு செய்தல்; wickedness, mischief.

*[குறும்பு + தனம்.]*

**குறும்புவன்னியன்** *kuṟumbu-vaṉṉiyaṉ,* பெ.(n.) வன்னியருள் ஒருவகையார் (வின்.); a sub-caste of *Vaṉṉiya* tribe.

*[குறும்பு + வன்னியன்.]*

**குறும்புழை** *kuṟum-puḻai,* பெ.(n.) சிறிய வாயில்; trap-door, small entrance. *"குறும்புழை போயினன்" (பெருங். உஞ்சைக். 36: 371).*

*[குறுமை + புழை.]*

**குறும்புள்** *kuṟum-puḷ,* பெ.(n.) காடை; quail (சா.அக.).

*[குறும் + புள்.]*

**குறும்பூழ்** *kuṟum-pūḻ,* பெ.(n.) பெ.(n.) காடை; quail *"குறும்பூழ்போற் கொழுங்கான் முகை சுமந்தன" (சீவக. 1651).*

*[குறுமை + பூழ்.]*

**குறும்பெறி-தல்** *kuṟum-beṟi-,* 2 செ.குன்றாவி. (v.t.) காவலோடு இருந்த பகைவரின் சிற்றூரினை அழித்தல், தொல்லை தரும் பகைக்குழுவினை அழித்தல்; to destroy the settlement of the enemy, to destroy enemy force. *"காவேரிக்கு வடகரையில் கஞ்சனூரகத்திலே விட்டுக் கொடு இருந்த குறும்பெறிந்து நிரைகொண்ட ஆடும், மாடும் எருமையும் கிடாவும்" (தெ.இ.கல்.தொ. VIII: 284:6,7).*

*[குறும்பு + எறி-.]*

**குறும்பொறி** *kurum-poṟi,* பெ.(n.) ஒட்டியாணம் girdle; sash. *"குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்" (திருமுருக. 213).*

*[குறும் + பொறி.]*

**குறும்பொறை** *kuṟum-poṟai,* பெ.(n.) 1. சிறுமலை (பிங்.); hillock. *"வரையக நண்ணிக் குறும்பொறை நாடி" (பதிற்றுப். 74:7).* 2. குறிஞ்சிநிலம் (பிங்.); the hilly tract. 3. குறிஞ்சிநிலத்தூர் (பிங்.); town in a hilly tract. 4. காடு; forest, jungle *"குருந்தவிழ் குறும்பொறை" (நற். 321).*

*[குறும் + பொறை. பொறை = கற்பாங்கான மலை.]*

**குறும்பொறைநாடன்** *kuṟum-poṟai-nāḍaṉ,* பெ.(n.) முல்லைநிலத் தலைவன் (இறை. 1,18); chief of the Sylvan tract.

*[குறும்பொறை + நாடன்.]*

**குறும்போக்கு** *kuṟu-m-pōkku,* பெ.(n.) யாழ் மீட்டும் முறைகளுள் ஒன்று (சீவக. 657, உரை.); a mode of playing on the lute.

*[குறும் + போக்கு.]*

**குறும்போது** *kuṟum-pōdu,* பெ.(n.) மலரும் பருவமுள்ள அரும்பு (பெருங். இலாவாண. 15,21); bud about to blossom.

*[குறும் + போது.]*

**குறும்விரியன்** *kuṟum-viriyaṉ,* பெ.(n.) குட்டையான விரியன்; short viper of the viperidae genus (சா.அக.).

*[குறும் + விரியன்.]*


குறும்விரியன்

**குறுமக்கள்** *kuṟu-makkaḷ,* பெ.(n.) சிறுபிள்ளைகள் (சூடா.); children, youngsters.

மறுவ. குறுமாக்கள்

ம. குறுமர், குறுமாரு.

*[குறுமை + மக்கள்.]*

**குறுமகள்** *kuṟu-magaḷ,* பெ.(n.) 1. இளம்பெண்; girl, young woman. *"வண்டிமிர் சுடர்நுதற் குறுமகள்" (ஐங்குறு. 254).* 2.மனைவி; wife. *"மெல்லியற் குறுமகள்" (புறநா. 196:14).*

*[குறுமை + மகள்.]*

**குறுமடல்** *kuṟu-maḍal,* பெ.(n.) திருநீறு வைக்கும் சிறிய மடல்; small receptacle for sacred ashes. *"குறுமடல் ஒன்று பொன் இருபதின் கழஞ்சரை" (S.I.I. II, 144).*

*[குறும் + மடல்.]*

**குறுமண்பூமி** *kuruman-būmi,* பெ.(n.) இளகிய மண்தன்மையுடைய நிலம் (கட்.தொ.வரி.);ground with fine loose soil.

*[குறு + மண் + பூமி.]*

**குறுமணல்** *kuru-maṇal,* பெ.(n.) வெள்ளி கலந்த மணல்; sand containing minute particles of silver.

*[குறும் + மணல்.]*

**குறுமல்** *kurumal,* பெ.(n.) பொடி (பிங்.); powder.

ம. குறும்பல்

*[குறு → குறுமு → குறுமல்.]*

**குறுமாக்கள்** *kuru-mākkaḷ,* பெ.(n.) சிறு பிள்ளைகள்; children. *"ஊர்க்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்" (புறநா.94).*

மறுவ. குறுமக்கள்

ம. குறுமார், குறுமாரு.

*[குறுமை + மாக்கள்.]*

**குறுமாந்தம்** *kuru-māndam,* பெ.(n.) குழந்தை நோய்வகை (ஆங்.மருத்.); croup.

*[குறும் + மாந்தம்.]*

**குறுமாடி** *kuru-māḍi,* பெ.(n.) வீட்டின் முகட்டுறுப்பு (கட்.தொ.வரி.); portico.

*[குறு + மாடி.]*

**குறு மீன்** *kuru-mīṉ,* பெ.(n.) பொடி மீன்; small fish (அயிரை) (சா.அக .).

ம. குறுமீன்

*[குறு + மீன்.]*

**குறுமுட்டன்** *kuru-muṭṭaṉ,* பெ.(n.) முரடன் (வின்.); one daringly insolent, brute, savage.

*[குறுமுட்டு → குருமுட்டன்.]*

**குறுமுட்டான வேலை** *kuru-muṭṭāṉa-vēlai,* பெ.(n.) வேண்டிய கருவிகளின்றிச் சுருக்கமாகச் செய்யப்படும் வேலை; work on a very small scale with insufficient materials.

*[குறுமுட்டு + ஆன + வேலை.]*

**குறுமுட்டு** *kuru-muṭṭu,* பெ.(n.) 1. அளவு கடந்த செருக்கு; gross insolence, impertinence. 2. ஒரு தொழிலைச் செய்யாமலே சுணக்கமாயிருந்து இறுதியில் முடித்தற்கு விரையும் விரைவு; great urgency, as for business put off until the last moment. 3. ஒடுக்கம்; narrowness, closeness. 4. வலுக்கட்டாயம்; coercion, compulsion. 5. திடீரென்று எதிர்ப்படுகை; sudden encounter, as at a corner.

*[குறு + முட்டு.]*

**குறுமுடிகுடி** *kuru-muḍi-kuḍi,* பெ.(n.) சிற்றரசுரிமை யுடைய குலம்; family of petty chiefs. *'குறுமுடி குடிப்பிறந்தோர் முதலியோருமாய்' (தொல். பொருள்.50. உரை.).*

*[குறு + முடி + குடி.]*

**குறுமுத்து** *kuru-muttu,* பெ.(n.) பிறப்பிலேயே வடிவில் சிறியதாக அமைந்த முத்து; a diminutive pearl. *"ஸ்ரீராஜராஜ தேவர் ஸ்ரீபாத புஷ்பமாக அட்டித் திருவடி தொழுத ஒப்பு முத்தும், குறுமுத்தும்" (தெ.கல்.தொ.2. கல்.59).*

*[குறு + முத்து.]*

**குறுமுயல்** *kuru-muyal,* பெ.(n.) **குழிமுயல்** பார்க்க; see *kuḻi-muyal.*

*[குறு + முயல்.]*

**குறுமுள்ளி** *kuru-muḷḷi,* பெ.(n.) கொட்டைக்களா; small sweet thorn (சா.அக.).

*[குறு + முள்ளி.]*

**குறுமுறுவல்** *kuru-muṟuval,* பெ.(n.) புன்சிரிப்பு; smile.

*[குறு + முறுவல்.]*

**குறுமுனி** *kuru-muṉi,* பெ.(n.) குறுமுனிவன் அகத்தியன்; sage Agattiya. *"அகப்பொரு ளமுதினைக் குறுமுனி தேறவும்" (கல்லா. 62:20).*

ம. குறுமுனி

*[குறு + முனி.]*

**குறுமுனிவன்** *kuru-muṉivaṉ,* பெ.(n.) அகத்தியன் (குறுகிய வடிவுடையவன்); lit. dwarfish sage, Agastya. *"படிநேர் நிறுவவரு குறுமுனிவன்" (சேதுபு. நாட்டுப்.1).*

*[குறு + முனிவன்.]*

**குறுமூச்சு** *kuru-mūccu,* பெ.(n.) திணறின மூச்சு (இ.வ.); hard breathing.

*[குறு + மூச்சு.]*

**குறுமை** *kurumai,* பெ.(n.) 1. குறுகிய தன்மை; shortness, brevity, conciseness. *"குறுமையாய் நெடுமையாகி" (கர்சிக.ஓங்காரவிலிங். 22).* 2. குள்ளம்; dwarfishness, low stature. 3. குறைவு; defectiveness, imperfection. *"ஒருதான் மண்டிய குறுமையும்" (தொல். பொருள். 67).* 4. அண்மை (பட்டினப்.28); nearness, closeness, proximity.

**ம.** குறும்; **க.** குறுசு; **தெ.** கொர, கொறுவ; **து.** கொறதெ; **கோத.** கொர்வ்; **துட.** க்வர்சில்; **குட.** கொறு, கொறவு.

*[குறு + மை.]*

**குறுமொழி** *kuru-moḻi,* பெ.(n.) கொச்சை வழக்கு; slang.

*[குறு + மொழி.]*

**குறுமொழிக்கோட்டி** *kuru-moḻi-k-kōṭṭi,* பெ.(n.) பிறரை இகழ்ந்து நகையாடுதலையே பொழுது போக்காகவுடைய கீழ்மக்கள்கூட்டம்; band of riff-raffs who spend their time in mocking and reviling others. *"குறுமொழிக் கோட்டி நெடு நகைபுக்கு" (சிலப். 16:64).*

*[குறு + மொழி + கோட்டி.]*

**குறுவஞ்சி** *kuru-vañji,* பெ.(n.) படையெடுத்து வந்த பெருவேந்தனுக்குச் சிறுவேந்தன் பணிந்து திறை கொடுத்துத் தன் குடிகளைப் புரக்கும் புறத்துறை (பு.வெ.3,17); (Purap.) theme of a petty king securing the welfare of his kingdom by paying tri bute to an invading monarch.

*[குறு + வஞ்சி.]*

**குறுவட்டம்** *kuru-vaṭṭam,* பெ.(n.) குறுக்களவு (கணக்கதி); diameter.

*[குறு + வட்டம்.]*

**குறுவளை** *kuru-vaḷai,* பெ.(n.) கடல்மீன்வகை; a sea-fish, greenish.

ம. குறுவல

*[குறு + வளை.]*

**குறுவா** *kuruvā,* பெ.(n.) வரிக்கற்றலை மீன்; a sea-fish.

*[குறு + வாய் – குறுவாய் → குறுவா.]*

**குறுவால்** *kuru-vāl,* பெ.(n.) இச்சி மரம்; joined ovate leaved fig.

*[குறு + ஆல்.]*

**குறுவாழ்க்கை** *kuru-vāḻkkai,* பெ.(n.) 1.ஏழைமை (திவா.); poverty. 2. சின்னஞ்சிறு கால இன்பம்; short-lived enjoyment.

*[குறுமை + வாழ்க்கை.]*

**குறுவியர்** *kuru-viyar,* பெ.(n.) குறுவேர்வை; slight perspiration. *"குறுவியர் பொடித்த கோலவாண் முகத்தள்" (மணிமே. 18:40).*

*[குறு + வியர்.]*

**குறுவிரியன்** *kuru-viriyaṉ,* பெ.(n.) விரியன் பாம்பிற் சிறியவகை (M.M.); short viper.

*[குறு + விரியன்.]*

**குறுவிலை** *kuru-vilai,* பெ.(n.) பண்டங்கள் விலைக்கு அரிதாகக் கிடைத்தல் (வின்.); scarcity, dearth.

*[குறு + விலை.]*

**குறுவிழிக்கொள்**[1] **(ளு)–தல்** *kuru-viḻi-k-koḷ,* 21 செ.கு.வி.(v.i.) இதழ்குவிதல்; to close, as eye-lids, flowers. *"குவளை யஞ்சிக் குறுவிழிக் கொள்ளும் வாட்கண்" (சீவக. 2998).*

*[குறு + விழி + கொள்.]*

**குறுவிழிக்கொள்**[2] **(ளு)–தல்** *kuru-viḻi-k-koḷ-,* 21 செ.கு.வி.(v.i.) அரைக்கண்ணாற் பார்த்தல் ; to see with eyes half-closed. *"குறுவிழிக் கொண்டு வந்தார் போனார் நிழலாட்டம் பார்த்துக் கொண்டு கிடக்கையாலே" (திவ்.பெரியாழ்.2:5:3, வ்யா.பக். 340).*

*[குறு + விழி + கொள்.]*

**குறுவிழிவிழி–த்தல்** *kuru-viḻi-viḻi-,* 4 செ.கு.வி. (v.i.) வெகுளி, அச்சம் முதலியவற்றால் வெறித்துப் பார்த்தல்; to stare, look intently through anger or fear.

*[குறு+ விழி–.]*

**குறுவீற்று** *kuru-vīṟṟu,* பெ.(n.) அடுத்தடுத்து ஈனும் பசு; cow that calves frequently.

*[குறு + ஈற்று. ஈன் → ஈன்று → ஈற்று.]*

**குறுவெண்பாட்டு** *kuru-veṇ-pāṭṭu,* பெ.(n.) இரண்டடியானும் மூன்றடியானும் வரும் அளவடிக்குரிய பாட்டு (இளம்.தொல்.செய்.114). (உரை.சொ.களஞ்.); verse with stanza each of two or three lines.

*[குறு + வெண் + பாட்டு.]*

**குறுவெறும்பு** *kuru-v-eṟumbu,* பெ.(n.) பெரிய சிவப்பெறும்பு; a large red ant (சா.அக.).

*[குறு + எறும்பு. குறு - சிவப்பு.]*

**குறுவேர்** *kuru-vēr,* பெ.(n.) ஒருவகை நறுமணவேர்(M.M.225); black cuscus grass.

*[குறு + வேர்.]*

**குறுவேர்வை** *kuru-vērvai,* பெ.(n.) அச்சம் முதலியவற்றால் சிறிதாகத் தோன்றும் வியர்வை; slight perspiration through fear or any strong emotion. *"முகங் குறுவேர் பொடித்த வாறும்" (திருவாச. 6:57).*

*[குறு + வேர்வை.]*

**குறுவை** *kuruvai,* பெ.(n.) 1. விடை மாதத்தில் (வைகாசியில்) விதைத்து இரண்டு மாதத்தில் அறுவடையாகும் கறுப்பு நெல்வகை; a dark species of paddy sown in vaikāci, and reaped in two months. 2. மூன்று மாதத்தில் பயிராகும் ஒருவகைச் செந்நெல்; an inferior reddish paddy, maturing in three months.

ம. குறுவ, குர்வ்வ.

*[குறு → குறுவை.]*

**குறுவைக்கிளையான்** *kuruvai-k-kiḷaiyāṉ,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy. *"மட்டுப்படாத குறுவைக்கிளையான்" (நெல்விடு.180).*

*[குறுவை + கு + இளையான்.]*

**குறுவைநோவு** *kuruvai-nōvu,* பெ.(n.) கால்நடைகட்குத் தொண்டையில் உண்டாகும் நோய்வகை; malignant sore throat, a disease of cattle.

*[குறுவை + நோவு.]*

**குறுவைமிளகாய்நெல்** *kuruvai-miḷagāy-nel,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[குறுவை + மிளகாய் + நெல்.]*

**குறை**[1]**–தல்** *kuṟai-,* 2 செ.கு.வி.(v.i.) 1. சிறுகுதல்; to diminish, decrease, wane, divindle, decline. *"மன்னுயிர் கண்முற்று நாடொறுங் குறைந்த*

*வன்றே" (கந்தபுமேரு.28).* 2. மதிப்பு, இடம், பொருள், ஏவல் முதலியவற்றால் தாழ்தல்; to be reduced, in value, in estimation, in circum-stances,in rank *அவன் பெருமை குறைந்து விட்டது.* 3. பற்றாமற் போதல்; to be wanting, to prove insufficient, to be short,in weight, measure, or number. பொருள் வாங்கக் கையிற் பணம் குறைவாயுள்ளது. 4. அரைகுறையாதல்; to be inperfect, unfinished, defective, deficient. இதுகுறை வேலை. 5. விலையேறும்படி பண்டம் அருகுதல்; to be dear, difficult of attainment, scarce. 6. எழுத்துக் கெடுதல்; (Gram.) to be dropped, elided, as a letter. *"ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே" (நன்.156).* 7. வருத்தி உயிரொடுங்குதல்; to droop in affliction. *"கணவன் குறையக் குறைவாள்" (கம்பரா. நகர்நீங்.53).* 8. குறைவுற்று வருந்துதல்; to languish from worries. *"நாளுமிகும் பணிசெய்து குறைந்தடையு நன்னாளில்" (பெரியபு. திருநாவு. 45).* 9. துணிவு குன்றுதல்; to lose courage. *"அரிகுரலோசை யஞ்சி.... ஆனை குறையு மனமாகி" (தேவா. 883:9).* 10. வெட்டப்படுதல்; to be cut off. *"கையுறிற் கால்குறையும்"* (நாலடி. 84). 11. தோல்வியுறுதல்; to suffer, defeat. *"எத்தனை போரிடைக் குறைந்தான்" (கம்பரா. யுத். மந்திரப் 112).* 12.அழிதல்; to be ruined, destroyed. *"அன்னார் குறைவது சரதம்" (கம்பரா. நிந்தனை, 56).*

**Fin.** kerita; **EO.** kere; **Mordvin.** ker; **Hung.** ker; **Mong.** kerei; **Q.** guru.

*[குறை → குறைதல்.]*

**குறை²-த்தல்** *kurai-,* 4 செ.குன்றாவி (v.i.) 1. சுருக்குதல்; to lessen, shorten, curtail. செலவைக் குறைத்தான். 2. தறித்தல்; to cut, fell, hew down, *"மாந்தர் குறைக்குந் தனையும் குளிர் நிழலைத் தந்து மறைக்குமாங் கண்டீர் மரம்" (வாக்குண்.30).* 3. அறுத்தல்; to reap, as a crop. *"கதிர்ச்சாலி குறைக்குநர்" (காஞ்சிப்பு. இருபத்.60).* 4. அராவுதல்; to file. *"இருப்பரங் குறைத்திடும் எஃகவேல்" (கந்தபு. கடவுள் 12.).* 5. முகத்தல்; to draw, as water. *'மேகந்தான் அதனைக் குறைத்து அதன்கட் பெய்யாது விடுமாயின்'* (குறள்.17, உரை).

*[குறை → குறைத்தல்.]*

**குறை³** *kurai,* பெ.(n.) 1. குறைபாடு; deficiency, imperfection, want, default. *"குறைதவிர் நிலைமையாற் குயிற்றுஞ் சாலையுள்" (கந்தபு. வரைபுனை.20).* 2. குற்றம்; fault, defect, flaw. *"என்பாற் குறையை நினைந்து மறாது" (தஞ்சைவா. 388).* 3.வறுமை (பிங்.); indigence, poverty. 4. எஞ்சியது; complement, balance, arrears, remainder. *"நிறைதவத்தின் குறை முடித்து" (கம்பரா. சூர்ப்ப. 114).* 5. மனக்குறை; dissatisfaction, grievance. *"என்னகுறை நமக்கே" (திவ்.திருவாய். 6:4,1).* 6.நேர்த்திக்கடன்; vow requiring fulfilment. *திருப்பதிக்குக் குறை செலுத்தப்போனேன்.* 7. இன்றியமையாப் பொருள்; that which is indispensable. *"வினைக்குறை தீர்ந்தாரின்" (குறள். 612).* 8. காரியம்; business that has to be done. *"கொற்றநீ கொடுக்கல் வேண்டுங் குறையென" (சீவக.1647).* 9. வேண்டுகோள்; request. *"எம்மனந் தெளியக் காட்டுதல் குறையென" (பெருங். மகத. 5.37).* 10. வேண்டுவது; needs *"உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறின்" (குறள்,680).* 11. துண்டம்; piece, section. *"கருப்புக் குறையும்" (சேதுபு. முத்தீர்.18).* 12. ஆற்றிடைக் குறை; small isle, ait in a river. *"குறையெலாஞ் சோலை" (கம்பரா. பூக்கொய்.2).* 13. சொல்லின் எழுத்துக் குறை; (Gram.) omission of a letter, as syncope, apocope, aphaeresis. *'கடைக்குறை' (நன்.156).* 14. ஆறாம்வேற்றுமை; (Gram). genitive case. *"விளிகுறை யிரண்டையும் விட்ட வேற்றுமை கள்" (இலக். கொத். 14).* 15. உண்ணுவதற்குப் பக்குவப்படுத்திய தசை; piece of flesh, as prepared for table. *"வல்லோனட்ட பல்லூன் கொழுங்குறை" (பெரும்பாண். 472).* 16. ஒரு தாக்குடைய மிடற்றுப்பாடல் வகை; a kind of vocal music. *"நிறைகுறை தோன்ற" (பரிபா. 17:18).* 17. அரசிறை (வின்.); tribute, revenue.

க.கொறெ; தெ.கொடி.

**குறைக்கருமம்** *kurai-k-karumam,* பெ.(n.) முடியாது எஞ்சிய செயல்; unfinished part of a business, affair etc. *"உறுகுறைக் கருமம் உள்ளக மருங்கின்" (பெருங். இலாவாண. 10:27).*

*[குறை + கருமம்.]*

**குறைக்காரியம்** *kuṟai-k-kāriyam,* பெ.(n.) காரியத்தின் முடியாத பகுதி; unfinished part of business, affair, etc. அரைகுறையாய் இருக்கும் காரியம் (உ.வ.).

*[குறை + காரியம்.]*

**குறைக்கொள்ளி** *kuṟai-k-koḷḷi,* பெ.(n.) 1. பாதி வெந்த கட்டை; fire - brand partially consumed. 2. வீடுகளில் தீவைப்பதாகக் கருதப்படும் ஒருவகைப் பேய் (இ.வ.); imp that is believed to set fire to houses.

*[குறை + கொள்ளி.]*

**குறைகண்** *kuṟai-kaṇ,* பெ.(n.) குறைந்த பார்வை; short sight (சா.அக.).

*[குறை + கண்.]*

**குறைகண்ணுறங்கு** *kuṟai-kaṇṇuṟaṅgu,* 5 செ.கு.வி. (v.i.) 1. கண் செருகல்; sleeping slightly. 2. அரைக்கண் தூக்கங் கொள்ளல்; being half a sleep, sleeping with eyes partially closed.

*[குறை + கண் + உறங்கு.]*

**குறைகரகரப்பு** *kuṟai-karakarappu,* பெ.(n.) கரகரவென மெதுவாய்க் கேட்கும் ஓசை; a low creaching noise (சா.அக.).

*[குறை + கரகரப்பு.]*

**குறைகால்** *kuṟai-kāl,* பெ.(n.) அங்கப்பழுதுள்ள கால்; defective leg (சா.அக.).

*[குறை + கால்.]*

**குறைகுடம்** *kuṟai-kuḍam,* பெ.(n.) கல்வி கேள்விகளால் நிரம்பாதோன்; lit, a pot half-filled with water. A self conceited person, lacking in sound education and good manners, opp. to *niṟai-kuḍam.* அவன் ஒரு குறைகுடம்.

*[குறை + குடம்.]*

**குறைகை** *kuṟai-gai,* பெ.(n.) ஊனப்பட்ட சிறுகை; deformed short arm (சா.அக.).

*[குறை + கை.]*

**குறைகொள்(ளு)-தல்** *kuṟai-koḷ-,* 11 செ.கு.வி. (v.i.) 1. மனக்குறையைப் பாராட்டுதல்; to take a thing amiss; to be piqued; to feel aggrieved; to complain. 2. தன் குறையைக் கூறிக்கொள்ளுதல்; to represent one's wants needs. *"மந்திரி குறைகொண் டிரப்ப" (பெருங். மகத. 21:124).*

*[குறை + கொள்ளு-.]*

**குறைகோள்** *kuṟai-kōḷ,* பெ.(n.) இரத்தல் (சூடா.); begging, petitioning, mendicancy.

*[குறை + கோள்.]*

**குறைச்சல்** *kuṟaiccal,* பெ.(n.) 1. குறைவு; deficiency, scarcity, as of an article; curtailment. அவனுக்குச் செலவு குறைச்சல் (உ.வ.). 2. இழிவு; discredit, disparagement. என்னைப்பற்றிக் குறைச்சலாய்ப் பேசினான் (உ.வ.).

*[குறை → குறைச்சல்.]*

**குறைச்சால்** *kuṟai-c-cāl,* பெ.(n.) உழவு நிலத்தில் சாலோடாத இடம் (வின்.); balk in ploughing.

*[குறை + சால்.]*

**குறைச்சிஃறாழிசைக் கொச்சகம்** *kuṟaiccik-ṟāḻišai-k-kōccagam,* பெ.(n.) ஈற்றடி குறைந்து சில தாழிசைகளால் வருவது; a kind of *koccagam.*

*[குறை + சில் + தாழிசை + கொச்சகம்.]*

**குறைசெய்-தல்** *kuṟai-šey-,* 1 செ.குன்றாவி (v.t.) 1. மதிப்புத் தாழ்வு பண்ணுதல்; to treat with disres pect. 2. வெட்டுதல்; to cut off, disfigure by cutting off. *"எனைச் செங்கை தீண்டிக் குறைசெய்து போவதுவோ" (கந்தபு. அசமுகிபுலம்.10).*

*[குறை + செய்-.]*

**குறைசொல்(லு)-தல்** *kuṟai-šol-,* 6 செ.கு.வி.(v.i.) 1. மனத்திலுள்ள குறையைப் பிறர் அறியக் கூறுதல்; to complain, state grievances, pray for redress,

express, dissatisfaction. 2.தனக்கு வேண்டுவனவற்றைச் சொல்லிக் கொள்ளுதல்; to represent one's wants. 3. குற்றஞ்சாட்டுதல்; to charge with fault, censure, criiticise, blame.

*[குறை + சொல்லு-.]*

**குறைஞ்சால்** *kuṟai-ñ-cāl,* பெ.(n.) ***குறைச்சால்*** பார்க்க (யாழ்.அக.) ; see *kuṟai-c-cāl.*

*[குறைசால் → குறைஞ்சால் (கொ.வ.).]*

**குறைத்தலை** *kuṟai-t-talai,* பெ.(n.) தலையில்லாத பிணம்; headless body, belived to dance on the battle field. *"குரங்குபட மேதினி குறைத்தலை பட" (கம்பரா. யுத்த மந்திரப். 61).*

*[குறை + தலை.]*

**குறைதீர்[1]-தல்** *kuṟai-tīr-,* 2 செ.கு.வி.(v.i.) 1. மனக் குறை நீங்குதல்; to have wants supplied, to be satisfied. *"குறைதீர்ந்த கொடையே பகையைப் யுறவாக்கும்" (காஞ்சிப்பு. புராணவர.15).*

*[குறை + தீர்-.]*

**குறைதீர்[2]-த்தல்** *kuṟai-tīr-,* 4 செ.கு.வி.(v.i.) 1. வேண்டியவற்றை உதவுதல்; to supply, as one's wants or needs; to satisfy. 2. கடமையைச் செய்து முடித்தல்; to fulfil, as an obligation.

*[குறை + தீர்.]*

**குறைநய-த்தல்** *kuṟai-naya-,* 3 செ.கு.வி.(v.i.) குறை தீர்க்க வேண்டுதல்; request to redress grivances. *"கொலைவேற் கண்ணனி குறை நயந்தது" (திருக்கோ. 158, கொளு).*

*[குறை + நய.]*

செ.அக. முதலியில் குறை நயத்தலைக் குறை நேர்தலாகக் குறித்திருப்பது தவறு.

**குறைநரம்பு** *kuṟai-narambu,* பெ.(n.) குறைந்த சுரமுள்ள யாழ்த்திறம் (திவா.); lit, lute with less than the normal number of strings. A musical mode deficient in notes, opp. to *niṟainarambu.*

*[குறை + நரம்பு.]*

**குறைநாடோன்** *kuṟai-nāḍōṉ,* பெ.(n.) கருநொச்சி (சா.அக.); willow leaved justicia.

*[குறை + (நாடன்) நாடோன்.]*

**குறைநாள்** *kuṟai-nāḷ,* பெ.(n.) நாள், மாதம், ஆண்டு, வாழ்நாள் இவற்றில் மீதியிருக்குங் காலம்; ramaining portion of the day, month, year or lifetime. குறைநாளும் கழிக்க வேணும் (உ.வ.).

*[குறை + நாள்.]*

**குறைநிறை** *kuṟai-niṟai,* பெ.(n.) 1. ஏற்றமும் குறைவும்; defect and excess. 2. குடும்பத்திலுள் நலந்தீங்குகள்; domestic wants and comforts.

*[குறை + நிறை.]*

**குறைநேர்-தல்** *kuṟai-nēr-,* 2 செ.கு.வி.(v.i.) குறையை நீக்க உடன்படுதல்; to consent to make up one's wants. *"முனியுமக் குறைநேர்ந்தான்" (பாரத. சம்ப.10).*

*[குறை + நேர்-.]*

**குறைநோக்கு** *kuṟai-nōkku,* பெ.(n.) குறைந்த பார்வை; short sight ( சா.அக.).

*[குறை + நோக்கு-.]*

**குறைநோய்** *kuṟai-nōy* பெ.(n.) குட்டநோய்; leprosy, as eating away one's limbs.

*[குறை + நோய்.]*

**குறைநோய்ப்புண்** *kuṟai-nōy-p-puṇ* பெ.(n.) பெருநோயிற் காணும் அழிபுண்; rottlen or putrid ulcers in leprosy (சா.அக.).

*[குறை + நோய் + புண்.]*

**குறைப்பக்கம்** *kuṟai-p-pakkam,* பெ.(n.) தேய்பிறைநாள்; dark fortnight, period of waning moon. *"குவைசேரவுற்று வருங் குறைபக்கச் சதுர்த்தசி பின்" (விதாந. பஞ்சாங்க.26).*

*[குறை + பக்கம். த. பக்கம்>Skt. paksa.]*

**குறைப்பஃறாழிசைக் கொச்சகம்** *kuṟai-p-pakrāḻišai-k-koccagam,* பெ.(n.) ஈற்றடி குறைந்து பல தாழிசைகளால் வருவது; a kind of koccagam.

*[குறை + பல் + தாழிசை + கொச்சகம்.]*

**குறைப்பட்டவர்** *kuṟai-p-paṭṭavar,* பெ.(n.) குடும்பத்தில் நேர்ந்த இறப்பு முதலிய நிகழ்வுகளால் துன்பப்பட்டவர்; lit., persons bereaved of their near relations. Persons who have suffered great affection.

*[குறை + பட்டவர்.]*

**குறைப்பட்டவள்** *kuṟai-p-paṭṭavaḷ,* பெ.(n.) கைம்பெண்; widow.

*[குறை + பட்டவள்.]*

**குறைப்படு-தல்** *kuṟai-p-paḍu,* 20 செ.கு.வி.(v.i.) மனக்குறையுறுதல்; to be displeased, discontented. *"குறைப்பட்டுக் கொண்டிருக்கிறான்" (பெருங்.இலாவாண. 19:7).*

*[குறை + படுதல்.]*

**குறைப்பிண்டம்** *kuṟai-p-piṇḍam,* பெ.(n.) முதிர்ச்சியடையாத பிண்டம்; undeveloped or immature foetus; 2. காலத்திற்கு முன்னதாகவே வெளிவரும் பிண்டம்; foetus coming out before the full term or the time of maturity (சா.அக.).

*[குறை + பிண்டம்.]*

**குறைப்பிணம்** *kuṟai-p-piṇam,* பெ.(n.) அரை குறையாய் எரிந்து கிடக்கும் பிணம்; half-burnt corpse. *"கும்மனத்தாளர் குறைப்பிணங் காட்டி" (பெருங். இலாவாண. 19:7).*

*[குறை + பிணம்.]*

**குறைப்பிள்ளை** *kuṟai-p-piḷḷai,* பெ.(n.) பருவம் நிரம்புமுன் பெற்ற கருப்பிண்டம்; undeveloped foetus delivered before time. *அவள் குறைப்பிள்ளை பெற்றாள்.*

*[குறை + பிள்ளை.]*

**குறைப்பேர்** *kuṟai-p-pēr,* பெ.(n.) 1. மற்றவர்; other persons, rest, as of a company. *நீ வந்தாயே, குறைப் பேரெல்லாம் எங்கே? (உ.வ.).* 2. சுருக்கிக் கூறும் இயற்பெயர்; abbreviated name, as *kiṭṭu* for Krishnan.

*[குறை + பேர்.]*

**குறைப்பொழுது** *kuṟai-p-poḻudu,* பெ.(n.) 1. செல்ல வேண்டிய காலம்; unexpired portion of time. 2. காலக்குறைவு; the remaining portion of the day, month, year, etc.,

*[குறை + பொழுது.]*

**குறைப்போக்கு** *kuṟai-p-pōkku,* பெ.(n.) மாதவிடாய்க் காலத்தில் பெண்களுக்குக் காணும் குறைவான குருதி; scanty discharge in menstruation (சா.அக.).

*[குறை + போக்கு.]*

**குறைபடு[1]-தல்** *kuṟai-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. குறைவாதல்; to be wanting, to diminish, to become scarce. 2. துணிபடுதல்; to be broken into pieces, to be shivered into fragments. *"நீர்கல் குறைபட வெறிந்து" (பரிபா. 20).*

*[குறை + படுதல்.]*

**குறைபடு[2]-த்தல்** *kuṟai-paḍu-,* 4 செ.கு.வி.(v.i.) குறைவுண்டாக்குதல்; to fail in rendering what is due, to cause deficiency.

*[குறை + படு-.]*

**குறைபடு[3]-த்தல்** *kuṟai-paḍu-,* 4 செ.குன்றாவி (v.t.) 1. முகத்தல்; to draw up, as water by the clouds. *"கடல்குறைபடுத்தநீர்" (பரிபா. 20).* 2. மதிப்புக் குறைவுண்டாக்குதல்; to put one to shame.

*[குறை + படு-.]*

**குறைபாடு** *kuṟai-pāḍu,* பெ.(n.) 1. குறைவு; deficiency, defect. *"ஈசன் பூசை யியற்றினேன் குறைபாடின்றி" (பிரமோத். 17,19).* 2. மனக்குறை; want, need, discontent.

*[குறைபடு → குறைபாடு.]*

**குறைமகன்** *kuṟai-magaṉ,* பெ.(n.) நிலைமை யிழந்தவன்; one who has lost his status in life. *"செல்வ நீத்த குறைமகன்" (பெருங். இலாவாண. 8,32).*

*[குறை + மகன்.]*

**குறைமதி** *kuṟai-madi,* பெ.(n.) தேய்பிறை; waning moon. *"குறைமதி நீரோ நின்போராற்றல்' (கந்தபு. அசமுகிபு.11).*

*[குறை + மதி. மதி = நிலவு.]*

**குறைமாதக்கருப்பம்** *kuṟai-māda-k-karuppam,* பெ.(n.) பத்து மாதமும் (40 வாரம்) கடவாத கருப்பம்; the period of pregnancy, in which the full term of 40 weeks is not completed (சா.அக.).

*[குறை + மாதம் + கருப்பம்.]*

**குறைமாதக்காரி** *kuṟai-māda-k-kāri,* பெ.(n.) மாத அளவு நிரம்புமுன் பிள்ளை ஈன்றவள்; woman who has given birth to a child prematurely.

*[குறை + மாதம் + காரி.]*

**குறைமாதப்பிள்ளை** *kuṟai-māda-p-piḷḷai,* பெ.(n.) மாத அளவு நிரம்பு முன் பிறந்த பிள்ளை; child born prematurely.

*[குறை + மாதம் + பிள்ளை.]*

**குறைமாதம்** *kuṟai-mādam,* பெ.(n.) 1. மாதத்தின் மீதி; remaining part of the month. 2. கருமுற்றிப் பேற்றிற்குரிய கால அளவிற் குறைவுபட்ட மாதம்; deficiency in the period required for the full development of foetus, as in premature delivery.

*[குறை + மாதம்.]*

**குறையணி கொள்(ளு)-தல்** *kuṟai-y-aṇi-koḷ-,* 16 செ.கு.வி.(v.i.) அரைகுறையாக ஒப்பனை செய்து கொள்ளுதல்; to be imperfectly dressed or adorned. *"குறையணி கொண்ட வாறே" (சீவக. 2537).*

*[குறையணி + கொள்ளு-.]*

**குறையரவு** *kuṟai-y-aravu,* பெ.(n.) குட்டையான பாம்புவகை; a kind of serpent, as being short. *"குறையரவு தீண்டி" (சீவக. 1271).*

*[குறை + அரவு.]*

**குறையலாளி** *kuṟaiyal-āḷi,* பெ.(n.) திருமங்கை மன்னன்; *Thirumaṅgai-ālvār,* as the chief *of Kuṟaiyal. "மங்கையர் கோன் குறையலாளி" (திவ். பெரியதி. 4,4,10).*

*[குறையல் + ஆளி.]*

**குறையவை** *kuṟai-y-avai,* பெ.(n.) அறிவு குணங்களாற் குறைவுபட்டார் கூடிய அவையம் (யாப்.வி.96,515); assembly of inferiors, opp. to *niṟai-y-avai.*

*[குறை + அவை.]*

**குறையறு[1]-தல்** *kuṟai-y-aṟu-,* 2 செ.கு.வி.(v.i.) மனக்குறை நீங்குதல்; to be freed from wants, anxiety etc.

*[குறை + அறுதல்.]*

**குறையறு[2]-த்தல்** *kuṟai-y-aṟu-,* 4 செ.குன்றாவி (v.t.) குறைநீங்கக் கொடுத்தல்; to bestow liberally and free one from wants anxiety, etc. *'சோறுந் தண்ணீரும் குறையறுத்துக் கொண் டிருக்குமா போலே' (ஈடு, 9.3:1).*

*[குறை + அறு-.]*

**குறையாக்கேள்வி** *kuṟaiyā-k-kēḷvi,* பெ.(n.) நிரம்பிய அறிவு; perfect learning, sound erudition. *"குறையாக் கேள்வி மாடலன்" (சிலப். 28:111).*

*[குறை + ஆ + கேள்வி. ஆ - எதிர்மறைப் பின்னொட்டு.]*

**குறையிர— த்தல்** *kuṟai-y-ira-,* 3 செ.குன்றாவி. (v.t.) தன் குறைகூறி வேண்டுதல்; to beg, supplicate, petition for one's wants. *"மாலைக் குறையிரந்து" (திவ். இயற்.2:17).*

*[குறை + இரத்தல்.]*

**குறையுடல்** *kuṟai-y-uḍal,* பெ.(n.) தலையில்லாத உடல்; headless body believed to dance on the battle field. *"குறையுடலும் கும்பிட்டு நிற்கு மாலோ" (கலிங். 97).*

*[குறை + உடல்.]*

**குறையுணவு** *kuṟai-y-uṇavu,* பெ.(n.) 1. பத்திய உணவு; food restricted by diet. 2. அற்ப உணவு; simple food. 3. பசி தீர்க்காத குறைந்த உணவு; food not ordinarily satisfying hunger. 4. துறவியர் கொள்ளும் ஒருவேளை உணவு; yogi's diet. 5. கெடுதியான உணவு; faulty diet such as indigestible food etc. (சா.அக.).

*[குறை + உணவு.]*

**குறையுறவு** *kuṟai-y-uṟavu,* பெ.(n.) மனக்குறை கொண்டிருக்கை; being in distress. *"தோழியிடைச் சென்று...... பின்னும் குறையுறவு தோன்ற நின்று" (திருக்கோ. 90,அவ.).*

*[குறை + உறவு.]*

**குறையுறு—தல்** *kuṟai-y-uṟu,* 18 செ.குன்றாவி (v.t.) குறைகூறி வேண்டுதல்; to beg, entreat, supplicate for one's wants. *"இரந்து குறையுற்ற கிழவனை" (தொல். பொருள். 237).*

*[குறை + உறு-.]*

**குறையொற்றுமை உருவகம்** *kuṟai-y-oṟṟumai-uruvagam,* பெ.(n.) உருவகத்திலோர் குறை தோன்றச் சொல்வது;metaphor with one component modified. நெற்றி விழியில்லாச் சங்கரன் (கழ.தமி.அக.).

*[குறை + ஒற்றுமை + உருவகம்.]*

**குறைவங்கம்** *kuṟai-vaṅgam,* பெ.(n.) குறையுறுப்பு; defective organ (சா. அக.).

*[குறைவு + அங்கம்.]*

**குறைவயிறு** *kuṟai-vayiṟu,* பெ.(n.) 1. உணவு குறைவாகக் கொண்ட வயிறு; stomach partially filled with food. 2. அரைவயிறு; half filled belly. *அரைவயிறு குறை வயிறாக உண்பவன் (கொ.வ.).*

*[குறை + வயிறு.]*

**குறைவறு—த்தல்** *kuṟaivaṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) ***குறைதீர்*** பார்க்க (பெரியபு.கழறிற்.95); see *kuṟaitīr.*

*[குறை + தீர்.]*

**குறைவறுப்பு** *kuṟai-v-aṟuppu,* பெ.(n.) 1. அரண்மனைக்குரிய பண்டச்சுமை; head-load of articles, intended for the palace. *"குறைவறுப்பு எடுக்கவும்" (S.I.I.vi.29).* 2. மதிப்புரவாக அனுப்பும் பண்டங்கள்; supplies made, as to a superior. (பெரியபு.திருஞான.1072).

*[குறைவு + அறுப்பு.]*

**குறைவாளர்** *kuṟai-v-āḷar,* பெ.(n.) குறையுடைய வர்; persons in want. *"மாதா பிதாக்கள் ப்ரஜைகளில் குறைவாளர் பக்கலிலேயிறே இரங்குவது" (ஈடு. 4:5,8).*

*[குறைவு + ஆளர்.]*

**குறைவிரல்** *kuṟai-viral,* பெ.(n.) 1. குட்ட நோயால் குறைந்த விரல்; mutilated digit in leprosy. 2. விரற் பழுது; short deformed fingers (சா.அக.).

*[குறை + விரல்.]*

**குறைவிரிவு** *kuṟai-virivu,* பெ.(n.) 1. முழுவதும் விரியாதது; partial distension as of cellular membrane. 2. முழுவதும் பூக்காதது; not fully blossomed (சா.அக.).

*[குறை + விரிவு.]*

**குறைவில்** *kuṟai-vil,* பெ.(n.) வானவில்; rainbow. *"வானத்துக் குறைவி லேய்ப்ப" (பெரும்பாண். 292).*

*[குறை + வில்.]*

**குறைவிலறிவுடைமை** *kuṟaivil-aṟivuḍaimai,* பெ.(n.) குறைவில்லாத அறிவைக் கொண்டிருத்த லாகிய இறைவன் எண்குணத்துள் ஒன்று (பிங்.); possession of unlimited wisdom, one of God's eight attributes.

*[குறைவு + இல் + அறிவுடைமை.]*

**குறைவு** *kuṟaivu,* பெ.(n.) 1. குறைபாடு; lack, want, deficiency, dearth, limit *"நாடக நடித்ததோ குறைவில்லை" (தாயு. எங்குநிறை.5).* 2. குற்றம்; defect, default. 3. குறைந்த அளவுள்ளது; little, small, quantity. 4. ஏழ்மை (திவா.); indigence, poverty. 5. காரியபலன்; use, value, profit. *"மாறாளன் கவராத மணிமாமை குறைவிலமே" (திவ். திருவாய். 4:8,1).*

*[குறை → குறைவு.]*

**குறைவுபடு-தல்** *kuṟaivu-paḍu,* 20 செ.குன்றாவி (v.t.) குறைவாக விருத்தல்; falling short (சா.அக.).

*[குறை → குறைவு.]*

**குறைவேண்டுநர்** *kuṟai-vēṇḍuṉar,* பெ.(n.) நன்மையான செயல்களை விரும்புவோர்; persons petitioning for their wants. *"முறைவேண்டுநர்க்கும் குறைவேண்டு நர்க்கும்" (பெரும்பாண். 443).*

*[குறை + வேண்டுநர்.]*

**குறோக்கை** *kuṟokkai,* பெ.(n.) குறட்டை; snoring. *"குரங்கு குத்தி கொண்டு குறோக்கை கத்தி" (ஒழிவி. யோக.10).*

மறுவ. குறட்டை

தெ. குரக

*[குறக்கு (ஒலிக்குறிப்பு) → குறக்கை → குறோக்கை. குறக்கை பார்க்க; see kuṟakkai]*

**குறோட்டை** *kuṟōṭṭai,* பெ.(n.) 1. காக்கணம்; mussell shell creeper. 2. பீச்சு விளாத்தி; a species of wood-apple tree giving out fetid smell.

*[குறட்டை → குறோட்டை.]*

**குன்பாண்டு** *kuṉ-pāṇḍu,* பெ.(n.) வெண்பாதிரி; white trumpet flower (சா.அக.).

*[குல் + பாண்டு – குல்பாண்டு → குன்பாண்டு. பாண்டு = வெண்மை.]*

**குன்மக்கட்டி** *kuṉma-k-kaṭṭi,* பெ.(n.) வயிற்றில் உண்டாகும் ஒருவகைக் கட்டி; glandular enlargement in the abdomen, tumour.

*[குன்மம் + கட்டி.]*

**குன்மக்கழிச்சல்** *kuṉmakkaḻiccal,* பெ.(n.) செரியாமையினால் ஏற்படும் கழிச்சால்; diarrhoea due to indigestion (சா.அக.).

*[குல் → குன்மம் + கழிச்சல்.]*

**குன்மக்காசம்** *kuṉma-k-kāšam,* பெ.(n.) குன்ம நோயினால் ஏற்பட்ட காசநோய்; *kāsam* arising due to dyspepsia(சா.அக.).

*[குன்மம் + காசம்.]*

**குன்மக்காமாலை** *kuṉmak-kāmālai,* பெ.(n.) குன்ம நோயினால் உண்டான காமாலை; jaundice connected with dyspepsia due to obstruction of the liver (சா.அக.).

*[குன்மம் + காமாலை.]*

**குன்மக்குடோரி** *kuṉma-k-kuḍōri,* பெ.(n.) குன்மத்தைப் போக்க வல்ல ஒருவகை நீர்ப்பூடு (பதார்த்த. 244); a water-plant capable of curing chronic dyspepsia.

*[குன்மம் + (கோடாலி) குடோரி.]*

**குன்மக்கோடாலி** *kuṉma-k-kōḍāli,* பெ.(n.) மரத்தைக் கோடாலி கொண்டு வேரறப் பிளப்பது போல், உடம்பிலுள்ள நோயை வேரறக் களைந்து குணமாக்கும் மருந்து; a medicine capable of curing radically diseases in the system in the same way as a tree is uprooted with an axe severing all connections with the ground (சா.அக.).

*[குல் + குன்மம் + கோடாலி.]*

**குன்மக்கோளாறு** *kuṉma-k-kōḷāṟu,* பெ.(n.) செரியாமையினால் ஏற்படும் குற்றங்கள்; dyspeptic disorders (சா.அக.).

*[குன்மம் + கோளாறு.]*

**குன்மச்சூலை** *kuṉma-c-cūlai,* பெ.(n.) குன்மத்தினால் வயிற்றில் உண்டாகும் குத்தல் நோய்; colicky pain in the abdomen experienced in case of dyspepsia.

*[குன்மம் + சூலை.]*

**குன்மச்சூலை** *kuṉma-c-cūlai,* பெ.(n.) ***குன்மம்***[1] பார்க்க (இங்.வை.); see *kuṉmam*[1].

*[குன்மம் + சூலை.]*

**குன்மத்தலைவலி** *kuṉma-t-talaivali,* பெ.(n.) குடல் ஈரல் போன்ற உறுப்புகள், குன்மக் கோளாறடைவதினால் ஏற்படும் தலைவலி; head-ache arising from the derangment of the stomach, bowel or liver due to dyspepsia (சா.அக.).

*[குன்மம் + தலைவலி.]*

**குன்மத்தைப்போக்கி** *kuṉmattai-p-pōkki,* பெ.(n. மான்செவிக் கள்ளி; leafy tree-spurge. It is so called from its virtue of curing dyspepsia (சா.அக.).

*[குன்மம் + அத்து + ஐ + போக்கி.]*

**குன்மப்போக்கு** *kuṉma-p-pōkku,* பெ.(n.) குன்மத்தினால் உண்டாகும் வயிற்றுப்போக்கு; diarrhoea due to indigestion (சா.அக.).

*[குல் - கூடுதல் கருத்துவேர். குல் → தண்டு → குன்மம்.]*

**குன்மம்**[1] *kuṉmam,* பெ.(n.) செரிமானமின்மை, வயிற்றுவலி முதலியன காணும் வயிற்றுநோய் (சீவரட்.); chronic dyspepsia; glandular enlargement in the abdomen, as of the mesenteric gland, causing indigestion, colic and emaciation. 2. 9 யானை, 9 தேர், 27 குதிரை, 45 காலாள்கள் கொண்ட படைவகுப்பு (சூடா.); a division of an army consisting of elephants, 9 chariots, 27 horses and 45 foot soldiers. 3. அடர்ந்த தூறு (சூடா.)l; dense thicket, bush.

*[குல் (குத்தல், வலி) → குன்மம்.]*

**குன்மம்**[2] *kuṉmam,* பெ.(n.) 1. புரளச் செய்தல்; causing to roll. 2. உள்கட்டி; internal tumour. 3. அடி வயிற்றுக் கட்டி; abdominal tumour (சா.அக.).

*[குல் → குல்மு → குன்மு → குன்மம்.]*

**குன்மம்**[3] *kuṉmam,* பெ.(n.) பித்தம் அதிகரித்து, செரியாமையினால் ஏப்பத்தோடு வலியை உண்டாக்கும் ஒரு நோய்; dyspepsia arising from chronic enlargement of the spleen.

*[குல் (குத்தல், வலி) → குன்மம்.]*

வகைகள் : 1. எரிகுன்மம்கை2. வலி குன்மம் 3. சத்தி குன்மம் 4. காசகுன்மம் 5. தொந்தகுன்மம் 6. கன்னிகுன்மம்; 7. வாய்நீர் குன்மம் 8. புரட்டு குன்மம் 9.பித்த குன்மம் 10. வாதகுன்மம் 11. சிலேட்டும குன்மம் 12. கரிக் குன்மம் 13. புளிப்புக் குன்மம் (சா.அக.).

**குன்மை** *kuṉmai,* பெ.(n.) சிறுகாஞ்சொறி; small climbing nettle (சா.அக.).

*[குல் → குன்மு → குன்மம்.]*

**குன்றக்கூற்றம்** *kuṉṟa-k-kūṟṟam,* பெ.(n.) திருச்சிராப்பள்ளி மாவட்டம் உடையார்பாளையம் வட்டம் நடுநாட்டின் தென் எல்லைப் பகுதியில் குன்றம் என்னும் ஊரைத் தலைநகரமாகக் கொண்டுள்ள கூற்றமாகும் (கல்.க.சொ.அ.மு.); name of a *kūṟṟam* in *uḍayāpālayam* taluk.

*[குன்றம் + கூற்றம்.]*

**குன்றக்கூறல்** *kuṉṟa-k-kūṟal,* பெ.(n.) பத்துவகை நூற்குற்றங்களுள் கூற வேண்டியதைக் குறைவு படச் சொல்லுகையாகிய குற்றம் (தொல். பொருள். 664); incomplete statement, a defect in composition one of ten *nūṟ-kuṟṟam.*

*[குன்றுதல் - குறைதல். குன்று → குன்ற + கூறல்.]*

**குன்றகத்தலை அறு-த்தல்** *kuṉraga-t-talai-aṟu,* 4 செ.குன்றாவி. (v.t.) பெரிய தலையைத் தானே அறுத்தல்; *"ஸ்ரீகம்பருமற்கு யாண்டு இருபதாவது – படாரிக்கு நவகண்டங் குடுத்து குன்றகத்தலை அறுத்துப் பிடலிகைமேல் வைத்தானுக்கு திருவான் மூர் ஊரார் வைத்த பரிசாவது" (தெ.கல்.தொ.12, கல்.106) (செங்கம் நடுகல்).*

*[குன்றகம் + தலை + அறு-.]*

செஞ்சோற்றுக் கடன் தப்பாமல் தன் அரசனுக்கு வெற்றி வேண்டி வீரன் தன்னைத் தானே பலியிடல். இச்செயலை, புறப்பொருள் வெண்பாமாலை வாகையுள் - அவிப்பலி என்று சிறப்பித்துக் கூறும். தமிழகத்தில் வட ஆர்க்காடு மாவட்டத்திலுள்ள செங்கம் நடுகற் பொறிப்பு இதனைப் புலப்படுத்தும்.

**குன்றபலம்** *kuṉra-palam,* பெ.(n.) ஒருவகைக் கருந்தினை; a kind of black millet (சா.அக.).

*[குன்று + பலம் (தவசம்) – குன்றபலம்.]*

**குன்றம்** *kuṉram,* பெ.(n.) மலை; hill, mountain. *"பொதியிற் குன்றத்துக் கற்கால் கொண்டு" (சிலப். 25:122).*

*[குன்று → குன்றம்.]*

**குன்றர்** *kuṉrar,* பெ.(n.) குன்றவாணர்; hill tribes *"குன்றர் முழங்குங் குரவை" (திருக்கோ. 127).*

*[குன்று + அர் – குன்றர்.]*

**குன்றல்** *kuṉral,* பெ.(n.) 1. குறைகை; diminishing, decreasing. 2. கெடுதல் விகாரம் (Gram.); elision, omission. *"மெய்பிறி தாதல் மிகுதல் குன்ற லென்று" (தொல். எழுத்து. 109).*

*[குன்று → குன்றல்.]*

**குன்றவர்** *kuṉravar,* பெ.(n.) ***குன்றவாணர்*** (திவா.) பார்க்க; see *kuṉravāṉar.*

ம. குன்னவன்

*[குன்று → குன்றவர்.]*

**குன்றவாணர்** *kuṉra-vāṉar,* பெ.(n.) குறிஞ்சிநில மக்கள்; mountaineers, inhabitants of the hilly tract. *"இருங்குன்ற வாண ரிளங்கொடியே" (திருக்கோ. 15).*

*[குன்றம் + வாணர்.]*

**குன்றவில்லி** *kuṉra-villi,* பெ.(n.) சிவன் (திவா.); Śiva, as having Mt. *Mēru* for his bow. *மேரு மலையை வில்லாகக் கொண்டவன்.*

*[குன்றம் + வில்லி.]*

**குன்றாவாடை** *kuṉrā-vāḍai,* பெ.(n.) வடகீழ்க் காற்று; north-east wind.

*[குன்று + ஆ + வாடை. ஆ – எதிர்மறை.]*

**குன்றி[1]-த்தல்** *kuṉri-,* 4 செ.கு.வி.(v.i.) 1. குன்று போல் குவித்தல், ஒன்றாகக் கூட்டுதல்; to heap up, make a lump of, to hill. 2. வளர்தல்; to be increased, grow (சேரா.நா.).3. குன்றிமணி வளர்தல்; to be increased, grow (சேரா.நா.).

ம. குன்னிக்குக

*[குல் → குன் → குன்றி.]*

**குன்றி[2]** *kuṉri-,* பெ.(n.) 1. குன்றிச் செடி; crab's eye creeper. 2. ***குன்றிமணி[1]*** பார்க்க;see *kuṉrimaṇi[1].* 3. ***குன்றிமணி[3]*** பார்க்க;see *kuṉrimaṇi[3].* *"குன்றுவ குன்றி யனைய செயின்" (குறள்.965).* 4. மனோ சிலை (வின்.); a mineral poison.

*[குல் → குன்று → குன்றி.]*

**குன்றிநிறக் கண்ணன்** *kuṉri-niṟa-k-kaṇṇaṉ,* பெ.(n.) 1. குன்றிமணி போற்சிவந்த கண்ணு டையவன்; one whose eyes are as red as the *kuṉri.* 2. சிவந்த கண்களையுடைய காட்டுப்பன்றி; Indian wild hog.

*[குன்றி + நிறம் + கண்ணன்]*

**குன்றிநேசி** *kuṉri-nēśi,* பெ.(n.) வீட்டுப்பல்லி; house lizard (சா.அக.).

*[குன்றி + நேசி.]*

**குன்றிப்பிரமாணம்** *kuṉṟi-p-piramāṇam,* பெ.(n.) குன்றிமணியளவு; as big as crab's eye.

மறுவ. குன்றியளவு

*[குன்றி + பிரமாணம். **குன்றியளவு** பார்க்க; see kuṉṟi-y-aḷavu.]*

**குன்றிப்போ–தல்** *kuṉṟi-p-pō-,* 8 செ.கு.வி.(v.i.) மெலிவுறல்; being emaciated, as through disease or mental worry (சா.அக.).

*[குன்று → குன்றி + போ–.]*

**குன்றிபோல்செடிச்சி** *kuṉṟi-pōl-ceḍicci,* பெ.(n.) தொழுகண்ணிச் செடி; a medicinal plant resembling liquorice plant (சா.அக.).

இது குன்றிச் செடியைப் போலிருப்பதால் இப்பெயர் பெற்றது.

**குன்றிமணி** *kuṉṟi-maṇi,* பெ.(n.) 1. குன்றிச் செடியின் சிவப்பு வித்து; the red seed or crab's eye. 2. ***குன்றி***[1] பார்க்க;see *kuṉṟi*[1].3. 4 நெல் அல்லது 1/2 மஞ்சாடி எடையுள்ள பொன் நிறுக்கும் நிறைவகை (கணக்கதி.); a standard weight for gold = paddy grains = 2 gr. troy = *mañjaḍi* = 1/12 pagoda. 4.அதிமதுரம்; liquorice.

*[குன்றி + மணி.]*

**குன்றிமணிச்சம்பா** *kuṉṟi-maṇi-c-cambā,* பெ.(n.) செந்நிறமுள்ள சம்பா நெல்வகை (பதார்த்த. 319); a kind of reddish *cambā-paḍḍy.*

*[குன்றி + மணி + சம்பா.]*

**குன்றிமேனி** *kuṉṟi-mēṉi,* பெ.(n.) நிழல்பட்டால் தலை கவிழ்ந்திருக்கும் ஒரு பூடு; an unknown plant having a peculiar virtue of drooping when shade falls on it (சா.அக.).

*[குன்றி + மேனி.]*

**குன்றியலுகரம்** *kuṉṟiya-lugaram,* பெ.(n.) குற்றியலுகரம்; shortened 'u' *"குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமொடு" (நன். 331).*

*[குன்று + இயல் + உகரம்.]*

**குன்றிவேர்** *kuṉṟi-vēr,* பெ.(n.) அதிமதுரம் (தைலவ. தைல. 4); liquorice root.

*[குன்றி + வேர்.]*

**குன்று**[1]**–தல்** *kuṉṟu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. குறைதல்; to decrease, diminish, become reduced. 2. அழிவடைதல்; to be ruined. *"குன்றா முது குன்றுடையான்" (சிவப். பிரபந். பிக்ஷாட.2).* 3. நிலை கெடுதல்; to fall from high position. *"குன்றின் அனையாரும் குன்றுவர்" (குறள், 965).* 4. எழுத்துக் கெடுதல் (தொல்.எழுத்து.109) (Gram.); to be omitted, as a letter. 5. வாடுதல்; to droop, languish to be dispirited. *அவன் துயரத்தால் மனங் குன்றினான்.* 6. வளர்ச்சி யறுதல்; to become stunted to be arrested in growth. சிறுகன்றுகளின் முதுகிற் கையை வைத்தாற் குன்றிவிடும் (இ.வ.).

**ம.** குன்னுக; **க., தெ.** குந்து; **து.** குந்துனி; **குட.** கொறு; **கோத.** குர்க்; **துட.** குறக்; **கூ.** கோக்; **பட.** குக்கு.

*[குல் → குன்று.]*

**குன்று**[2] *kuṉṟu,* பெ.(n.) 1. குறைவு (சூடா.); deficiency. 2. சிறுமலை; hill. *"குன்றுமலை நாடுகாடு" (புறநா. 17).* 3. மலை (திவா.); mountain. 4. சிறுகுவடு (திருக்கோ. 95, உரை); hill top. 5. சதய விண்மீன் (பிங்.); the 24th nakstra.

**ம.** குன்னு; **க., தெ., குற.** கொண்ட; **குட.** குந்தி; **பர்.** கொந்தி; **கோண்.** குறு.

**Fin.** kunnas; **Es.** kangar; **Q.** kancha.

*[குல் → குன்று.]*

**குன்றுகூப்பிடு–தல்** *kuṉṟu-kūppiḍu-,* 20 செ.கு.வி.(v.i.) குன்றானது எதிரொலி செய்யுமாறு கூவி விளையாடுதல்; to rouse the echoes of the hill by shouting in play.

*[குன்று + கூப்பிடு–.]*

**குன்றுபயன்** *kuṉṟu-payaṉ,* பெ.(n.) களவொழுக்கம்; clandestine union, as of lovers. *"கொள்ளாரிக் குன்றுபயன்" (பரிபா. 9:26).*

*[குன்று + பயன்.]*

**குன்றுமுத்துக்கொடி** *kuṉṟu-muttu-k-koḍi,* பெ.(n.) கொடிவகை (விவசா.6); a creeper.

*[குன்று + முத்துக்கொடி.]*

**குன்றுவர்** *kuṉṟuvar,* பெ.(n.) 1. குறிஞ்சிநிலமக்கள் (தொல். பொருள். 20, உரை); people of the hilly tract, mountaineers. 2. பழனிமலையிற் பயிரிட்டு வாழும் ஓர் இனத்தார்; name of the principal cultivating caste on the Palani hills.

*[குன்று → குன்றுவர். குன்று → குன்றவர் என்பதே மரபு எனினும் குன்று → குன்றுவர் என்பது குன்றவர் என்னும் பொருளில் வழக்கூன்றிய இடவழக்கு.]*

**குன்றுவாடை** *kuṉṟu-vāḍai,* பெ.(n.) வடமேல் காற்று; north west wind dist. fr. *kunṟā-vāḍai* (கடல்வ).

*[குன்று + வாடை.]*

**குன்றெறிந்தோன்** *kuṉṟerindōṉ,* பெ.(n.) முருகக் கடவுள் (பிங்.); lit., one who clove a mountain with his lance. *குன்றத்தைத் தனது வேலால் எறிந்தவன்.*

*[குன்று + எறிந்தோன்.]*

**குன்றைத்தான்** *kuṉṟaittāṉ,* பெ.(n.) துரிசு; blue vitriol (சா.அக.).

*[குன்று → குன்றைத்தான்.]*

**குன்றை வில்லாக்கினோன்** *kuṉṟai-villākkiṉōṉ,* பெ.(n.) துரிசு (சங்.அக.); blue vitriol.

*[குன்றை + வில்லாக்கினோன்.]*

**குன்னம்** *kuṉṉam,* பெ.(n.) 1. மதிப்புக்குறைவு; disgrace, dishonour. *"இங்கே யொருத்திநா னிருந்ததே பெருங்குன்னம்" (இராமநா.).* 2. பழி; scandal. *"கன்னிமேலே யெறிந்தாற் குன்னஞ் சொல்வாரோ" (இராமநா. உயுத். 82).*

*[குல் → குன்னம்.]*

**குன்னல்** *kuṉṉal,* பெ.(n.) சளி சுரத்தோடு மாட்டுக்கு வரும் நோய்; a cattle disease with cold and fever.

*[குல் → குன் → குன்னல்.]*

**குன்னாங்குருச்சியாக** *kuṉṉāṅ-kurucci-y-āga,* பெ.(adv.) ஏகாந்தமாக; privately, secretly. *"இது தன்னைக் குன்னாங்குருச்சியாக வன்றிக்கே எல்லாருமறியும்படி ப்ரஹித்தமாகச் சொன்னேன்" (திவ்.பெரியாழ்.2.2:5, வியா.பக்.259).*

*[குன்னா + குருச்சியாக.]*

**குன்னா-த்தல்** *kuṉṉā-,* 6 செ.கு.வி.(v.i.) குளிரால் உடம்பு கூனிப் போதல் (நெடுநெல்.9, உரை); to shrink and crouch with cold, to contract limbs and look small.

*[குல் → குன்னு → குன்னா-.]*

**குன்னான்** *kuṉṉāṉ,* பெ.(n.) ஒரு வகை எலி; a kind of rat.

*[குல் → குன் → குன்னான்.]*

**குன்னி** *kuṉṉi,* பெ.(n.) குன்றிமணி; crabis eye, jewellers lead (சா.அக.).

மறுவ. குண்டுமணி

**Fin.** kovyt; **Es.** kebi; **Hung.** keves; **Mong.** gopi; **Jap.** kuwashii. **O.Jap.** kupasi.

*[குல் → குன் → குன்றி → குன்னி (கொ.வ.).]*

**குனக்காசிகம்** *kuṉa-k-kāśigam,* பெ.(n.) கடைச் சரக்குகளைச் சேர்த்து செய்யும் ஒரு மருந்து; a medicine prepared by bazar drug (சா.அக.).

*[குனம் + காசிகம்.]*

**குனகம்** *kuṉagam,* பெ.(n.) நகங்கறுத்துக் கெட்டியாகி விடுதல்; a condition of nail in which it is discoloured and becomes hard (சா.அக.).

*[குல் → குன் → குனகம்.]*

**குனகு-தல்** *kuṉagu-,* 5 செ.கு.வி.(v.i.) கொஞ்சிப் பேசுதல்; to prattle sweetly. *"குனகியல ருடனிருந்து" (திருப்பு. 20).*

*[குல் → குன் → குனகு.]*

**குனட்டம்** *kunaṭṭam,* பெ.(n.) ***அதிவிடையம்*** (மலை.) பார்க்க; see *adividayam*

*[குனட்டு → குனட்டம்.]*

**குனடி** *kunaḍi,* பெ.(n.) நேப்பாளத்திருந்து வரும் ஒரு கடைச்சரக்கு; a bazar drug exported from Nepal (சா.அக.).

*[குல் → குன் → குனடி.]*

**குனாவகம்** *kunāvagam,* பெ.(n.) கூத்தன் குதம்பை; pointed leaved hog weed (சா.அக.).

*[குல் → குன் → குனவு → குனவகம் → குனாவகம்.]*

**குனி-தல்** *kuni-,* 2 செ.கு.வி.(v.i.) 1 வளைதல்; to bend, as a bow. *"குனிவளர் சிலை" (சீவக. 486).* 2. வணங்குதல் (சூடா.); to bow, make obeisance. 3. தாழ்தல் (சூடா.); to stoop; to descend low. *"குனிந்த வூசலிற் கொடிச்சி" (கம்பரா. சித்திர. 24).* 4. வீழ்தல்; to fall, as in battle. *"குஞ்சரங் குனிய நூறி" (சீவக. 2293).* 5. இரங்குதல் (சது.); to pity, commiserate, relent.

ம.குனி; க.குனி; தெ.குங்கு.

*[குல் → குன் → குனி. குல் : வளைதல்.]*

**குனி[1]-த்தல்** *kuni,* 4 செ.குன்றாவி. (v.t.) வளைத்தல்; to bend, curve. *"குனித்த புருவமும்" (தேவா.11:4).*

*[குனி → குனித்தல்.]*

**குனி[2]-த்தல்** *kuni-,* 4 செ.கு.வி. (v.i.) 1. ஆடுதல்; to dance. *"அன்பரென் பூடுருகக் குனிக்கும் பாம்பலங் காரப்பரன்" (திருக்கோ.11).* 2.குரல் நடுங்குதல்; to quaver, quiver, shake, as the voice in singing.

*[குனி → குனித்தல்.]*

**குனி[3]** *kuni,* பெ.(n.) 1. வளைகை; curvature *"குனிகொள் பாக வெண்மதி" (சீவக. 704).* 2. வில் (சதுர.); bow.

*[குல் → குன் → குனி.]*

**குனிப்பம்** *kunippam,* பெ.(n.) ஆடல்; dance. *"கொம்பனைய மாதர் குனிப்பமிட" (சொக்க. உலா.73).*

*[குனி → குனிப்பம்.]*

**குனிப்பாய்ப்பார்-த்தல்** *kunippāy-p-pār-,* 4 செ.கு.வி. (v.i.) கவனமாய் உற்றுப்பார்த்தல்; looking with special attention (சா.அக.).

*[குனிப்பு + ஆய் + பார்-.]*

**குனிப்பு[1]** *kunippu,* பெ.(n.) வளைகை; bending.

*[குனி → குனிப்பு.]*

**குனிப்பு[2]** *kunippu,* பெ.(n.) 1. ஆடல்; dance. *"ஆனந்தத் தேன் சொரியும் குனிப்புடையானுக்கே" (திருவாச. 10:3);* 2. கூத்துவகை (பிங்.); a kind of dance.

*[குல்→குனி → குனிப்பு.]*

**குனிவி-த்தல்** *kunivi-,* பி.வி.(cas.v.) வளைத்தல்; to bend. *"கொன்படைத் தகுனிவிற் குனிவித்தே" (கந்தபு.தாரக.122).*

*[குனி→ குனிவி]*

**குனுகு-தல்** *kunugu-,* 5 செ.கு.வி.(v.i.) **குனகு** பார்க்க; see *kunagu.*

*[குனகு→ குனுகு]*

**குனை** *kunai,* பெ.(n.) கூர்மையான பக்கம்; the sharp point or tip of a thing. *"பிரம்பின் குனை படலால்" (அஷ்டப். திருவரங்.மா.88).*

*[குல்→குனை]*

**குனைப்புல்** *kunai-p-pul,* பெ.(n.) மேம்புல்; the tip of grass (சா.அக.).

*[குனை + புல்.]*

**கூ**[1] *kū,* பெ.(n.) உயிர்மெய் எழுத்து; the syllable formed by adding back long vowel (u) to the velar voiceless stop (k), one of the secondary alphabet of the Tamil language.

*[க் + ஊ –கூ]*

**கூ**[2] *kū,* பெ.(n.) புவி; earth. *"கூநின் றளந்த குறளென்ப" (வள்ளுவமா. 14.).*

ம.,க. கூ

*[ஒருகா. குவலயம்→குவயம்→குவை→கூ.]*

**கூ**[3] *kū,* பெ.(n.) 1. குயில் கூவும் ஒலி; cooing, as of koel. 2. கூவிளம் வாய்ப்பாட்டில் நேரசையைக் குறிக்கும் எழுத்து; a letter of *kūviḷam* tables, *nērašai.* 3. கூக்குரல் (முறையீட்டொலி); piteous cry. 4. ஒரு பெண் பேய் (த.சொ.அக.); female devil.

*[கூ - விளிக்குரல், ஒலிக்குறிப்பு, பேசிரைச்சல், அரற்றும் பெண்பேய்.]*

**கூ**[4] *kū,* பெ.(n.) கூழ்; porridge.

*[கூழ்→ கூ (கொ.வ.).]*

**கூ**[5] *kū,* பெ.(n.) 1. உடற்கழிவு (மலம்) (த.சொ.அக.); excretion of the body. 2. உடற்கழிவை வெளியேற்றுவகை (மலங்கழிக்கை) (யாழ்.அக.); evacuating, passing stools.

*[கூளம்→ கூள்→ கூ.]*

**கூஉய்** *kūuy,* வி.எ.(adv.) 1. கூவியெனப் பொருள்படும் அளபெடுத்த தெரிநிலை வினையெச்சம்; elongated adverb denoting the meaning "having beckoned". *"நம்பி தன்னைக் கூஉய்க் கொணர்மி னென்றான்" (சீவக. 1282).*

*[கூவு →கூவி→ கூஉய்.]*

**கூக்குரல்**[1] *kū-k-kural,* பெ.(n.) 1. பேரொலி; shout, outcry, uproar, clamour. *"நும்மேங்கு கூக்குரல் கேட்டுமே" (திவ்.திருவாய்.9,5,3).* 2. குறைதீர்க்க வேண்டி முறையிடும் ஒலி; Piteous cry, as in seeking redress.

*[கூவு + குரல் – கூவுகுரல் → கூக்குரல்.]*

**கூக்குரல்**[2] *kū-k-kural,* பெ.(n.) 1. குழந்தைகள் கத்துவது போன்ற கூவென்னும் ஒலி; cry, as of children or koel. *"குழவி யேங்கிய கூஉக் குரல் கேட்டு" (மணிமே.13,17).*

*[கூவு + குரல் – கூவுகுரல் → கூக்குரல்.]*

**கூக்கேட்டல்** *kū-k-kēṭṭal,* பெ.(n.) ஏவல் கேட்கை; lit., responding to a call, waiting one's command, serving. *"நாடொரு வழித்தாய்க் கூக்கேட்ப" (பு.வெ.6:31).*

*[கூ + கேட்டல்.]*

**கூகத்தாள்** *kūgattāḷ,* பெ.(n.) புன்னை; common *puṉṉai* (சா.அக.).

*[கூகம் (மறைவு, நிழல்) → கூகத்தாள்.]*

**கூகம்**[1] *kūgam,* பெ.(n.) மறைவு, உன்னிப்பு, மந்தணம்; the state of being hidden, disguised, secret. கூகமாய்ச் சொன்னான் (நெல்லை.).

**கூகம்**[2] *kūgam,* பெ.(n.) 1.கோட்டான் (Poṇḍ.); rock horned-owl. 2. ஆந்தை (யாழ்.அக.); owl.

*[கூ → கூகம். கூ - கூவுதல்.]*

**கூகமானம்** *kūga-māṉam,* பெ.(n.) மறைபொருள் (யாழ்.அக.); hidden or secret thing.

*[ஊகம் →கூகம் → மானம்.]*

**கூகனகம்** *kūgaṉagam,* பெ.(n.) இழிவழக்கு (யாழ்.அக.); indecent language.

*[கூகனம் → கூகனகம்.]*

**கூகனம்** *kūgaṉam,* பெ.(n.) 1. மறைந்த பொருளுடைய சொல் (வின்.); a term of hidden significance. 2. இழிவழக்கு, கீழ்த்தரமான மொழி; indecent term. 3. மாய்மாலம் (யாழ்.அக.); pretence deceit.

*[கூகல்→கூகலம் → கூகனம்.]*

**கூகாகம்** *kū-kāgam* பெ.(n.) கமுகு (மலை.); Areca-palm.

*[கா – கூ (உயரம்) + (கமுகு → காகு) காகம்.]*

**கூகாரி** *kūgāri,* பெ.(n.) காக்கை; crow (சா.அக.).

*[கூ (கூவு) + காரி (சனி).]*

**கூகாவெனல்** *kū-kā-v-enal,* பெ.(n.) 1. பேரொலிக் குறிப்பு; bawling, screeching. *"கூகாவென வென்கிளை கூடியழ"* (கந்தரனு.11). 2. முறையிடு தற்குறிப்பு; complaining, lamenting.

*[கூ + கா + எனல்.]*

**கூகு** *kūgu,* பெ.(n.) எட்டு அகவைப் பெண்; eight years old girl.

*[குழ → குழுகு → கூகு.]*

**கூகூ** *kū-kū,* பெ.(n.) 1. ஒலிக்குறிப்பு வகையு ளொன்று; onom. clamour, outcry. *"ஏற்றெழுந்த கூகூவொலித் திரள்" (காஞ்சிப்பு. அரிசாப.4).* 2. அச்சப்பொருள் தரும் ஓர் இடைச்சொல் (த.சொ.அக.);particle denoting fear.

*[கூ + கூ.]*

**கூகூவெனல்** *kū-kū-v-enal,* பெ.(n.) ***கூகாவெனல்*** பார்க்க; see *kū-kā-v-enal. "நல்லடிக் கன்பாகா தவரெனக் கூகூவென்று" (வெங்கைக்கோ. 210).*

*[கூ + கூ + எனல்.]*

**கூகை**[1] *kūgai,* பெ.(n.) 1. கோட்டான்; rock horned-owl. *"கோழி கூகை யாயிரண் டல்லவை" (தொல். பொருள்.மரபு.56).* 2. குரங்கு முகமும் மஞ்சள் நிறமும் உடைய ஆந்தை; barn owl. *கூகைகள் குரலெழுப்பும் பாழ்மண்டபம்.* 3. ஒருவகைப் பருந்து; a species of kite (சா.அக.).

**ம.** கூமன்; **க.** கூகி, கூகெ, கூம்பெ; **தெ.** கூம்பி, கூம்ப; **து.**கும்ம, கூகெ; **பட.** கும்ம; **கொலா.** கூப; **பர்.** குஞ்ஞி; **கூ.** குஞ்சி. **Skt.** ghūka; **Mar.** ghubaḍ.

*[கூவல் → கூகு → கூகை.]*

*சாகப் போகின்றவரை கூப்பிடும் பறவை என்பது பழங்காலக் கருத்து.*



கூகை

**கூகை**[2] *kūgai,* பெ.(n.) கூவைச் செடி; east Indian arrow root. *"கூகையுங் கோட்டமும் ..... பரந்து"* (சீவக. 1905). *"சாவோப் பயிருங் கூகையின் குரலும்" (மணிமே.6:75).*

*[கூவை → கூகை]*

**கூகைக்கட்டு** *kūgai-k-k-kaṭṭu,* பெ.(n.) கூகை போல முகத்தை வீங்கச் செய்யும் 'பொன்னுக்கு வீங்கி' என்னும் புட்டாளம்மைக்கட்டு; mumps, as making the face look like an owl.

**மறுவ.** பொன்னுக்கு வீங்கி, புட்டாளம்மை, கூகை நீர்க்கட்டி, கூகைவீக்கம்.

*[கூகை + கட்டு.]*

**கூகைக்கிழங்கு** *kūgai-k-kiḻaṅgu,* பெ.(n.) ***கூகை நீறு*** பார்க்க; see *kūgai-nīṟu* (சா.அக.).

*[கூகை + கிழங்கு.]*

**கூகைக்கோழியார்** *kūgai-k-kōḻiyār,* பெ.(n.) புறநானூறு 364 ஆம் பாடலைப் பாடிய புலவர்; Sangam poet.

*[கூகை + கோழி + ஆர்.]*

**கூகைகுழறு—தல்** *kūgai-kuḻaṟu-,* 5 செ.கு.வி.(v.i.) ஆந்தை அலறுதல்; to hoot, as an owl.

*[கூகை + குழறு-.]*

**கூகைதாளி** *kūgai-tāḷi,* பெ.(n.) 1. தாளி வகையைச் சார்ந்ததும், தொட்டிகளில் வைத்துப் பயிர் செய்வதும், கழிச்சல், வாந்தி இவற்றை உண்டாக்கு வதுமான தேவதாளி; a kind of the convolvulus genus. If is an emetic and purgative; and can cure piles, leprosy etc. 2. நுரைபீர்க்கு; snack luffa (சா.அக.).

*[கூவை→கூகை + தாளி.]*

**கூகைநீர்** *kūgai-nīr,* பெ.(n.) கூகைக்கிழங்குச் சாறு; the juice of arrow root plant (சா.அக.).

*[கூகை + நீர்.]*

**கூகைநீர்க்கட்டி** *kūgai-nīr-k-kaṭṭi,* பெ.(n.) ***கூகைக்கட்டு*** (வின்.) பார்க்க; see *kūgai-k-kaṭṭu.*

*[கூகை + நீர் + கட்டு.]*

**கூகைநீலி** *kūgai-nīli,* பெ.(n.) கொடிச்சிணுங்கி; a kind of sensitive creeper (சா.அக.).

*[கூகை + நீலி]*

**கூகைநீறு** *kūgai-nīṟu,* பெ.(n.) கூவைக் கிழங்கின் மாவு; arrow-root flour. *"கூகை நீற்றால் ... மார்புநோ யண்டுமோ" (பதார்த்த. 1013).*

*[கூகை + (நூறு) நீறு.]*

**கூகைநீறு வகைகள்:** 1. சிவப்புக்கூவை 2. பெருங்கூவை 3. மலையிஞ்சிக்கூவை 4. சினக்கூவை 5. மலைக் கூவை 6. மரவள்ளிக்கிழங்கு 7. மஞ்சள் மரவள்ளிக் கிழங்கு 8. சீமை மரவள்ளிக்கிழங்கு (சா.அக.).

**கூகைமஞ்சள்** *kūgai-mañjaḷ,* பெ.(n.) மலை வசம்பு (L.); sweet costus.

*[கூகை + மஞ்சள்.]*

**கூகைவீக்கம்** *kūgai-vīkkam,* பெ.(n.) ***கூகைக்கட்டு*** (வின்.) பார்க்க; see *kūgai-k-kaṭṭu.*

மறுவ. புட்டாளம்மை, பொன்னுக்கு வீங்கி.

*[கூகை + வீக்கம்]*

**கூச்சக்கண்** *kūcca-k-kaṇ,* பெ.(n.) கூசுங்கண்; tender eyes or eyes sensitive to light (சா.அக.).

*[கூசும் + கண்.]*

**கூச்சக்காரன்** *kūcca-k-kāraṉ,* பெ.(n.) 1. வெட்கப் படுபவன்; shy, bashful, person. 2. உடற் கூச்சமுள்ளவன்; ticklish person.

*[கூச்சம் + காரன்]*

**கூச்சங்காட்டு—தல்** *kūccaṅ-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) உடற்கூச்சம் உண்டாக்குதல்; to tickle, titillate.

*[கூச்சம் + காட்டு-.]*

**கூச்சத்தம்** *kūccattam,* பெ.(n.) கூக்குரல் (யாழ்.அக.); out cry.

*[கூ + சத்தம்.]*

**கூச்சப்பார்வை** *kūcca-p-pārvai,* பெ.(n.) மந்தப் பார்வை; sight dimmed by light (சா.அக.).

*[கூச்சம் + பார்வை.]*

**கூச்சம்**[1] *kūccam,* பெ.(n.) 1. நாணுகை; shyness, bashfulness, modesty, delicacy, shame. *"கைதொழூஉங் கூச்சங் களைந்து"* (சைவச. ஆசாரிய. 68). 2. உடல் கூசுகை; ticklishness. 3. கண், பல் முதலியன கூசுகை; delicacy, as of on eye; unpleasant tingling, as of a tooth. 4. அக்குட் கூச்சம்; titilation. 5. மனமெழாமை; hesitating, shrinking. அந்தக் கொடியவனது வீட்டிற் புகக் கூச்சம் உண்டாயிற்று (உ.வ.). 6. அச்சத் தாலுண்டாகும் நடுக்கம்; tremulousness; timidity, fear. அவனைப் பார்க்கும் போதே கூச்சமெடுக் கிறது (உ.வ.). 7. அச்சம்; fear *"கூச்சமாநு ஷிகமென்று கூட்டமாட்டார்" (போ.நிக.568).*

*[கூசு → கூச்சம்.]*

**கூச்சம்**[2] *kūccam,* பெ.(n.) 1. கட்டடத்திற்கு உதவும் சிறு மரக்கட்டை (இ.வ.); small-sized post, used in building. 2. தருப்பைப்புல்; sacrifical grass.

க. கூசுஇ கூச; தெ. கூசமு, குஞ்ச; து. குச்சி, குச்ச.

**கூச்சமயிர்** *kūcca-mayir,* பெ.(n.) சிலிர்த்த மயிர்; erectile hairs (சா. அக.).

*[கூச்சம் + மயிர்]*

**கூச்சல்** *kūccal,* பெ.(n.) 1. பேரொலி; outcry, clamour, hue and cry. 2. கக்கல் (வாந்தி), வயிற்றுப்போக்கு (இ.வ.); epidemic cholera.

ம. கூச்சல்

*[கூவு → கூச்சல்.]*

**கூச்சி** *kūcci,* பெ.(n.) விளாம்பழத்தின் சதைப் பற்று (வின்.); the pulp of the fruit of wood-apple.

ம. கூஞ்ஞு, கூஞ்ஞி, கூஞ்ஞை; து. கூஞ்சி, கூஞ்சி.

*[கூசு → கூச்சி.]*

**கூச்சிதம்** *kūccidam,* பெ.(n.) 1. **கூச்சிரம்** (வின்.) பார்க்க; see *kūcciram.* 2. நிலக்கடம்பு (சா.அக.); ground cadamba.

*[கூச்சிரம் → கூச்சிதம்.]*

**கூச்சிரம்** *kūcciram,* பெ.(n.) வெண்கடம்பு (மலை.); seaside, Indian oak or common Indian oak.

*[கூச்சு → கூச்சிரம்.]*

**கூச்சிலகம்** *kūccilagam,* பெ.(n.) கோப்பிரண்டை; a kind of adamantine creeper (சா.அக.).

*[குச்சு → கூச்சில் → கூச்சிலகம்.]*

**கூச்சு**[1] *kūccu,* பெ.(n.) கூரிய முனை; sharp point, cone shaped point as in developed abscess.

தெ.கூசி

*[கூ → கூச்சு.]*

**கூச்சு**[2] *kūccu,* பெ.(n.) 1. மயிர்ப்புளகம்; horripilation. *"மயிர்க் கூச்சுமறா"* (திவ்.பெரியாழ்.5:3:5). 2. விசைப்பிசின்; India rubber (சா.அக.).

*[குச்சு → கூச்சு.]*

**கூச்சுத்தலை** *kūccu-t-talai,* பெ.(n.) கோபுரத்தலை; steeple - head (சா.அக.).

*[கூச்சு[1] + தலை.]*

**கூசம்**[1] *kūšam,* பெ.(n.) கூச்சம்; shyness. *"பேசுமின் கூசமின்றி"* (திவ். திருவாய். 10:2:4).

*[கூசு → கூசம்.]*

**கூசம்**[2] *kūšam,* பெ.(n.) கொங்கை (யாழ்.); female breast.

*[கூச்சு[1] → கூசம்.]*

**கூசல்**[1] *kūšal,* பெ.(n.) 1. நாணம், கூச்சம்; shyness. *"பேசிடீர் கூச லின்றி" (திருவாலவா. 27:72).* 2. மனங்குலைகை (பிங்.); perplexity, confusion. 3. அச்சம் (திவா.); fear. *"கூசலின்றிக் குற்றேவல் கொண்டனரோ" (கந்தபு.மேரு.71).*

ம.கூசல்

*[கூசு → கூசல்.]*

**கூசல்**[2] *kūšal,* பெ.(n.) கூச்சல், பேரொலி; outcry, clamour.

*[கூவு → கூசல்.]*

**கூசணம்** *kūšaṇam,* பெ.(n.) மதியாமை (யாழ்.அக.); nonchalance.

*[கூசல் → கூசணம்.]*

**கூசாக்கல்** *kūša-k-kal,* பெ.(n.) சிற்பம் முதலிய வேலைக்குப் பயன்படுத்தாத கல் (இ.வ.); undressed stone.

*[கூச்சு → கூசா + கல்.]*

**கூசான்மலி** *kūšanmali,* பெ.(n.) பட்டுநூல் மரம்; silk-worm tree; Indian mulberry tree.

*[கூசான் + மலி]*

**கூசி** *kūši,* பெ.(n.) கரிக்கோல் (எழுதுகோல்) (யாழ்.அக.); pencil.

*[கூச்சு¹ → கூசு → கூசி.]*

**கூசிக்கரி** *kūši-k-kari,* பெ.(n.) காரீயக் கல்; black lead (சா.அக.).

*[கூசி + கரி.]*

**கூசிகை** *kūšigai,* பெ.(n.) கரிக்கோல் (எழுதுகோல்); pencil.

*[கூசி → கூசிகை]*

**கூசிதம்** *kūšidam,* பெ.(n.) 1. பறவைகளின் ஒலி (யாழ்.அக.); bird's cry. 2. ஓசை (த.சொ.அக.); sound.

*[கூச்சு¹ → கூசு → கூசி.]*

**கூசிப்பார்-த்தல்** *kūši-p-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ***கூசிவிழி*** பார்க்க; see *kūšivili.* 2. அரைக் கண்ணால் பார்த்தல்; looking with half-closed eyes.

*[கூசி + பார்-.]*

**கூசிவிழி-த்தல்** *kūši-vili-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கண் கூச்சத்துடன் நோக்குதல்; to look with dazzled eyes. 2. அருளுடன் பார்த்தல் (வின்.); to look with eyes of grace.

*[கூசி + விழி.]*

**கூசுகண்¹** *kūšukan* பெ. (n.) 1. ***கூசிவிழி-த்தல்*** பார்க்க; see *kūšivili-.*

*[கூசு → கண்.]*

**கூசுகண்²** *kūšu-kan,* பெ.(n.) இடுங்கிப் பார்க்கும்படி செய்யும் கண்ணோய் வகை (வின்.); a kind of near-sightedness, causing one to keep the eyes nearly shut.

*[கூசு → கண்.]*

**கூசு¹-தல்** *kūšu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நாணுதல்; to be shy, bashful. *"அச்சமுங் கொண்டு கூசி" (திருவிளை. திருநாட். 31).* 2. உடல் கூச்சங் கொள்ளுதல்; to be ticklish. 3. கண், பல் முதலின கூசுதல்; to be tender, weak, sensitive, as an eye, a limb; to be set on edge, as a tooth. *"காணக்கண் கூசுதே" (தனிப்பா.).*

ம. கூசுக

*[கூ → கூசு.]*

**கூசு²-தல்** *kūšu-,* 5 செ.கு.வி.(v.i.) 1.அஞ்சிப் பின் வாங்குதல்; to recoil, shrink back as from fear. *"கூசின வல்ல பேச நாணின" (கம்பரா. பால பூக்கொய். 6).* 2. நிலைகுலைதல் (பிங்.); to be routed as on army.

*[கூ → கூசு.]*

**கூசுமாண்டர்** *kūšumāṇḍār,* பெ.(n.) நிரைய (நரக) வுலகின் தலைவர்; lord of hells. *"கூசுமாண்டர் முப்பத்திரண்டு நரகங்களுக்கும் அதிபதியாய்" (சி.போ.பா.2:3, பக்.204).*

*[கூசு + மாண்டர்.]*

**கூட்டக்கட்டு** *kūṭṭa-k-kaṭṭu,* பெ.(n.) ஒற்றுமையோடு உதவக் கூடிய சுற்றத்தாரின் கட்டுப்பாடு; ties of blood, the bond of union among relations.

*[கூட்டம் + கட்டு.]*

**கூட்டக்கலகம்** *kūṭṭa-k-kalagam,* பெ.(n.) மாந்தர் கூட்டமிட்டு விளைக்கும் கலகம்; riot.

*[கூட்டம் + கலகம்.]*

**கூட்டக்கொள்ளை** *kūṭṭa-k-kollai,* பெ.(n.) கூட்டமாகச் சேர்ந்து புரியுங் கொள்ளை; dacoity.

ம. கூட்டக்கவர்ச்ச

*[கூட்டம் + கொள்ளை.]*

**கூட்டச்சாலை** *kūṭṭa-c-cālai,* பெ.(n.) நிழற்சாலை, இரு பக்கங்களிலுமுள்ள மரநெருக்கத்தால் நிழல் செறிந்த பாதை (வின்.); public road shaded with thickly grown trees on its sides, avenue.

மறுவ. நீழற்சாலை

[கூட்டம் + சாலை.]

**கூட்டடி** *kūttadi,* பெ.(n.) அளத்தில் உப்பைக் குவியலாக இட்டிருக்கும் இடம்; place in a salt-pan where salt is heaped up.

[கூட்டம் + அடி.]

**கூட்டத்தார்** *kūttattār,* பெ.(n.) 1. பழங்குடியைச் சார்ந்த ஒரு வகுப்பினர்; members of a tribe. 2. குழுகாயத்தின் ஒரு பிரிவினர்; members of a society.

[கூட்டம் → கூட்டத்தார்.]

**கூட்டநாட்டம்** *kūtta-nāttam,* பெ.(n.) மாந்தர் கூடுதற்குரிய நிலைமை; possibility of people gathering.

[கூட்டம் + நாட்டம்.]

**கூட்டப்பிராய்** *kūtta-p-pirāi,* பெ.(n.) குற்றிப்பலா; stunted jack (சா.அக.).

[கூட்டம் + பிராய்.]

**கூட்டம்**[1] *kūttam,* பெ.(n.) 1. கூடுகை; union, combination, meeting. 2. திரள் (திவா.); crowd, flock, clump, swarm, group. 3. மந்தை; herd. 4. அவை (பிங்.); association, society, assembly, confederation. *"கூட்டம் பாவையு மன்னவன் றொண்டு செய் கூட்டம்" (கந்தபு.திருநகர.44).* 5. இனத்தார்; kindred, relations, tribe. 6. நட்பினர் (சூடா.); friends, companions.

ம. கூட்டம்; க., து., பட. கூட; தெ. கூடமு; கோத., துட. கூட்ம்; குட. கூடி.

[கூடு → கூட்டம்]

**கூட்டம்**[2] *kūttam,* பெ.(n.). 1. வகை (வின்.); class, kind, series, set, species, genus. 2. *கூட்டவணி* (திவா.) பார்க்க; see *kūtta-v-ani.* 3. போர் (திவா.); battle, fighting. 4. மெய்யுறு புணர்ச்சி; copulation, sexual intercourse. *"எல்வளையாள் கூட்டம் புணராமல்" (பு. வெ. 11, ஆண்பாற்,8).* 5. மிகுதி (வின்.); abundance, numerousness. 6. பிண்ணாக்கு (அக. நி.); oil-cake.

ம. கூட்டம்; க., து., பட. கூட; தெ.கூடமு; கோத., துட. கூட்ம்; குட. கூடி.

[கூடு → கூட்டம்.]

**கூட்டம்**[3] *kūttam,* பெ.(n.) மலையுச்சி (பிங்.); summit of mountain, peak.

[கூடு → கூட்டம்.]

**கூட்டமாமூலி** *kūttamāmūli,* பெ.(n.) ஆயிரத்தெட்டு மூலி; a classification consisting of a group 1008 plants or herbs (சா.அக.).

[கூட்டம் + ஆ (ஆயிரம்) + மூலி.]

**கூட்டமை**[1]**-தல்** *kūttamai-,* 2 செ.கு.வி.(v.i.) பலவகை உறுப்புகளும் சேர்ந்தமைதல்; to be mixed, as the ingredients of sandal paste, to be set in order, as the different parts of a musical instrument. *"கூட்டமை வனப்பிற் கோடபதிக் குரல்" (பெருங். வத்தவ. 3:123).*

[கூட்டு + அமை-.]

**கூட்டமை**[2] *kūttamai,* பெ.(n.) காய்கறியமுது (பிங்.); cooked vegetable food.

[கூட்டு + அமை.]

**கூட்டமைதீ** *kūttamai-ti,* பெ.(n.) திருமணத்தின் போது கூட்டும் வேள்வித்தீ; sacrificial fire at the wedding ceremony. *"கூட்டமை தீமுதற் குறையா நெறிமையின்" (பெருங். வத்தவ. 17:113).*

[கூட்டு + அமை + தீ.]

**கூட்டமைவு** *kūttamaivu,* பெ.(n.) கூடியிருக்கை; residing together. *"அவளொடு பின் கூட்டமைவும்" (பெருங். இலாவாண. 17,16).*

[கூட்டு + அமைவு.]

**கூட்டர்** *kūṭṭar,* பெ.(n.) 1. தோழர்; companions. 2. இனத்தார்; members of the same clan or tribe. *"உன் கூட்டரா மரக்கர்" (கம்பரா. சடாயுவு. 84).*

ம. கூட்டர்

*[கூட்டு → கூட்டார்.]*

**கூட்டரக்கு** *kūṭṭarakku,* பெ.(n.) செவ்வரக்கு; *"கூட்டரக் கெறிந்த பஞ்சின்" (சீவக. 1166).*

*[கூட்டு + அரக்கு.]*

**கூட்டரவு** *kūṭṭaravu,* பெ.(n.) 1. கூடுகை; uniting, joining. 2. உடனுறைகை; association, acquaintance. *"போதமிக்கவர் கூட்டரவு" (ஞானவா. முமுட். 25).* 3. பொருட்கூட்டம் (வின்.); collection aggregate, series. 4. சேர்க்கை; combination, union. *"இவற்றின் கூட்டரவின் ஒருணர்வுண்டாம்" (சி.போ.பா.அவையடக். ப.36).*

*[கூடு → கூட்டு +அரவு.]*

**கூட்டரளி** *kūṭṭaraḷi,* பெ.(n.) பார்க்க ***இரட்டையலரி*** (சா.அக.);see *iraṭṭai-y-alari.*

*[கூட்டு +அரளி.]*

**கூட்டரிசி** *kūṭṭarisi,* பெ.(n.) கறியிற் கூட்டுவதற்கு அரைத்த அரிசிமா (யாழ்.அக.); rice flour used in preparing curry.

*[கூடு → கூட்டு +அரிசி.]*

**கூட்டல்** *kūṭṭal,* பெ.(n.) 1. கூடுகை, இணைகை; uniting, joining. 2. வலிய அரசனது துணையைத் தேடுகை; seeking the alliance of powerful kings. *"கூடினாரைப் பிரித்தல் கூட்டல்" (பு.வெ.9,37,உரை.).* 3. எண்களை ஒன்றோடொன்று கூட்டுதலாகிய கணிதவகை; addition (Arith.).

ம. கூட்டல்

*[கூடு → கூட்டல்.]*

**கூட்டவணி** *kūṭṭa-v-aṇi,* பெ.(n.) ஒரு காலத்திலுண்டாகும் பல தொழில்களின் கூட்டத்தைக் கூறுவதாகவேனும், தனித்தனியே தொழிலை விளைத்தற்குரிய பல காரணங்களை ஒன்று கூடியதால் ஒரு தொழில் பிறப்பதாகக் கூறுவதாக வேனும் வரும் அணிவகை; (அணியி.55) a figure of speech which consists in enumerating together various actions or causes associated with some common object or result.

*[கூட்டம் + அணி.]*

**கூட்டவியல்** *kūṭṭaviyal,* பெ.(n.) காய்கறிகள், தயிர் முதலியவற்றால் செய்யப்படும் ஒருவகை கூட்டுக்கறி; a kind of curry in semiliquid form made of vegetables, curd etc.

*[கூட்டு + அவியல்.]*

**கூட்டற்றவன்** *kūṭṭaṟṟavaṉ,* பெ.(n.) 1. சேரத்தகாதவன் (வின்.); one unfit for company. 2. ஒன்றுக்கும் பயனற்றவன்; useless person. 3. இனத்தினின்று விலக்குண்டவன்; outcaste excommunicated person.

*[கூட்டு + அற்றவன்.]*

**கூட்டாக்கு-தல்** *kūṭṭākku-,* 5 செ.குன்றாவி (v.t.) பொருட்படுத்துதல் (திருநெல்.); to take into account, to mind.

*[கூட்டு + ஆக்கு.]*

**கூட்டாக்குழப்பம்** *kūṭṭā-k-kuḻappam,* பெ.(n.) தாறுமாறு (வின்.); confusion of things, disorder.

*[கூட்டா + குழப்பம்.]*

**கூட்டாஞ்சோறு** *kūṭṭāñ-jōṟu,* பெ.(n.) 1. கூடியுண்ணும் உணவு (இ.வ.); common meal, as at a picnic. 2. காய்கறிகளைச் சேர்த்துப் பொங்கிய சோறு (நெ.வ.); rice boiled with vegetables. ஆடிப்பெருக்கு நாளன்று கூட்டாஞ்சோறு உண்டோம் (உ.வ.).

*[கூட்டு + ஆம் + சோறு.]*

**கூட்டாணி** *kūṭṭāṇi,* பெ.(n.) மரப்பலகை முதலியவற்றை இணைக்கும் ஆணி; nail for joining two or more pieces of wood.

*[கூடு → கூட்டு + அணி.]*

**கூட்டாளன்** *kūṭṭāḷaṉ,* பெ.(n.) ***கூட்டாளி*** பார்க்க; see *kūṭṭāḷi.* *"கூட்டாளா சிவகாமக் கொடிக் கிசைந்த கொழுநா" (அருட்பா. vi, அருள்வி. 14).*

ம. கூட்டாள்

*[கூட்டு + ஆளன்.]*

**கூட்டாளி** *kūṭṭāḷi,* பெ.(n.) 1. நண்பன்; associate, companion. 2.பங்காளி; partner in trade, co-partner. 3. பணவணிக முகவர்; agent of money lending business. 4. உடனொத்தவன்; equal compeer. *என் கூட்டாளியானால் அக்காரியம் எளிதில் முடியும்.* 4. இணையி லொன்று (வின்.); fellow, one of a pair, as oxen, horses.

ம. கூட்டக்காரன்

*[கூட்டு + ஆளி.]*

**கூட்டிக்கட்டு-தல்** *kūṭṭi-k-kaṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சேர்த்துக் கட்டுதல்; to gather and tie together. 2. பிறர்நிலத்தைத் தன்னதாகச் சேர்த்துக் கொள்ளுதல்; to encroach on another's land.

*[கூட்டு → கூட்டி + கட்டு]*

**கூட்டிக்கொடு-த்தல்** *kūṭṭi-k-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. முன்னிருந்ததோடு சேர்த்துக் கொடுத்தல்; to give more, increase, add to. 2. பெண்களைப் பரத்தமைக்குக் கூட்டிவிடுதல்; to play the pimp, pander.

*[கூட்டி + கொடு.]*

**கூட்டிக்கொள்ளு-தல்** *kūṭṭi-k-koḷḷu-,* 16 செ.குன்றாவி. (v.t.) 1. கூட்டமுதலியவற்றில் சேர்த்துக் கொள்ளுதல்; to take, admit one as into society, company etc. 2. மருந்து உணவு முதலியவற்றில் வேண்டும் பொருள்களைச் சேர்த்தல்; to add ingredients, as in medicine food, etc. 3. உணவு உட்கொள்ளுதல்; to take in, as food. இன்று என்ன கூட்டிக் கொண்டாய்? (உ.வ.).

*[கூட்டி + கொள்.]*

**கூட்டிப்பிடி-த்தல்** *kūṭṭi-p-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. சேர்த்துப்பற்றுதல்; to hold together, as by the hand. 2. பிறர்க்குரிய நிலத்தைத் தன்னதாக்குதல் (வின்.); to encroach upon, as another's lands. 3. துணி முதலியவற்றை அதிகமாக அளப்பதற்கு இழுத்துப்பிடித்தல் (வின்.);to grasp too much, as in measuring cloth. 4. ஒருவனை மன்னித்து ஏற்றுக்கொள்ளுதல் (இ.வ.); to receive and treat with kindness, as a repenting prodigal.

*[கூட்டி + பிடி.]*

**கூட்டிப்பேசமுடியாமை** *kūṭṭi-p-pēśa-muḍiyāmai,* பெ.(n.) சொற்களைச் சேர்த்துத் தொடர்ச்சியாகப் பேசக்கூடாமை; inablity to arrange words into sentences synthetically (சா.அக.).

*[கூட்டி + பேச + முடியாமை.]*

**கூட்டிப்போ-தல்** *kūṭṭi-p-pō-,* 15 செ.குன்றாவி. (v.t.) கூட அழைத்துக்கொண்டு செல்லுதல்; to take along.

*[கூட்டி + போ.]*

**கூட்டிமுடி-த்தல்** *kūṭṭi-muḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கூந்தல் முதலியவற்றைச் சேர்த்துக் கட்டுதல்; to gather and tie, as hair. 2. முற்றுவித்தல்; to accomplish, achieve.

*[கூட்டி + முடி.]*

**கூட்டியுரை-த்தல்** *kūṭṭi-y-urai-,* 4 செ.குன்றாவி (v.t.) ஒரு சொல்லை மற்றோரிடத்தும் சேர்த்துப் பொருள் கூறுதல் (புறநா. 140, உரை .); to construe a sentence by imparting into it a word or phrase from a neighbouring passage.

*[கூட்டி + உரை.]*

**கூட்டிவிடு-தல்** *kūṭṭi-viḍu-*, 20 செ.குன்றாவி.(v.t.) 1. கூட்டியனுப்புதல்; to send one along with another. 2. ***கூட்டிக்கொடுத்தல்*** பார்க்க; see *kūṭṭi-k-koḍu-*. 3. ***கூட்டிவை*** பார்க்க; see *kūṭṭi-vai-*.

*[கூட்டி + விடு-.]*

**கூட்டிவிழுங்கல்** *kūṭṭiviḻuṅgal,* ஒன்றுசேர்த்து விழுங்குதல்; swallowing after collecting the fragments in the mouth (சா.அக.).

*[கூட்டி + விழுங்கல்.]*

**கூட்டிவை-த்தல்** *kūṭṭivai-*, 4 செ.குன்றாவி (v.t.) 1. சேர்த்து வைத்தல்; to accumulate, lay up, hoard. 2. வேண்டியன புரிந்து நன்மை செய்தல்; to bless with success, to bestow prosperity on one. கடவுள் உனக்குக் கூட்டி வைப்பார். 3. மாறுபட்டாரை இணங்கி யொன்றுபடச் செய்தல்; to effect reconciliation, as between hostile parties.

*[கூட்டி + வை-.]*

**கூட்டு[1]-தல்** *kūṭṭu-*, 5 செ.குன்றாவி(v.t.) 1. இணைத்தல்; to unite, join, combine, connect. *"திருவடிக்கட் கூட்டினை" (திவ்.திருவாய்.4:9,9).* 2. கலத்தல்; to compound, mingle, mix, amalga mate. 3. அதிகப்படுத்துதல்; to increase *பேசியதற்குமேல் வட்டி கூட்டித்தர வேண்டும்.* 4. தொகை கூட்டுதல்; to add, sum up. 5. அவை கூட்டுதல்; to convene, convoke, as an assembly. 6. துடைப்பத்தாற் பெருக்குதல்; to gather up with a broom. 7. முடித்தல்; to finish. *"கூறுமாக்கதை கூட்டுமுன்" (பிரமோத். 22-23).*

**ம.** கூட்டுக

*[கூடு → கூட்டு.]*

**கூட்டு[2]-தல்** *kūṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) சீழ் முதலியன உண்டாதல் (யாழ்ப்.); to form, as pus.

*[கூடு → கூட்டு.]*

**கூட்டு[3]-தல்** *kūṭṭu-*, 5 செ.கு.வி.(v.i.) அருளுரை வழங்குதல்; to teach. *"உஜ்ஜீவிக்க வாராயென்று தம் திருவுள்ளத்தோடே கூட்டுகிறார்"* (ஈடு. 1:1,1).

*[கூடு → கூட்டு.]*

**கூட்டு[4]** *kūṭṭu,* பெ.(n.) 1. ஒரினமான பொருள்; persons or things of the same class. *"மனுஷ்யர்களுக்குக் கூட்டல்லர்" (ஈடு. 9:8,9)* 2. நட்பு; companionship, fellowship, friendship. *"அம்புக்குங் காலனுக்கு மென்ன கூட்டா!" (இராமநா.உயுத்.31).* 3. துணை; assistance, help *"கூட்டொருவரையும் வேண்டா" (கம்பரா. வாலிவ.81)* 4. உறவு (வின்.); relationship, consanguinity. 5. ***கூட்டு வாணிகம் (கொ.வ.)*** பார்க்க; see *kūṭṭu-vāṇigam.* 6. திரள்; horde, throng. *"கொடியணிதேர் கூட்டணங்கும் போழ்தின்" (பு.வெ.10, பொதுவியற்.2).* 7. பிறன்மனை சேர்தல்; illicit intercourse. 8. ஒப்புமை; likeness, comparison. *"மடங்கல் கூட்டுற வெழுந்தெரி வெகுளியான்" (கம்பரா. அதிகாய.).*

*[கூடு →கூட்டு]*

**கூட்டு[5]** *kūṭṭu,* பெ.(n.) 1. கலப்பு; compound, mixture. 2. கறி உசிலை; curry stuffs ground together. 3. கூட்டுக்கறி; curry boiled in semiliquid form. 4. நீராற் பதப்பட்ட மண்திரள்; clod, lump of moist clay. *"கூட்டுற முறுக்கிவிட்ட குயமகன் றிகிரி போல"* (சீவக. 786). 5. வண்டி முதலியவற்றின் சக்கரத்துக்கும் இடும் மை (சீவக.786);grease applied to wheels and carts etc.

**ம.** கூட்டு

*[கூடு →கூட்டு]*

**கூட்டு[6]** *kūṭṭu,* பெ.(n.) பொருள் மிகுதி; plenty, abundance. *"புணர்கூட் டுண்ட ... சிறப்பின்" (மதுரைக். 762).* 2. திறை; tribute. *"தார்மன்னருங் கூட் டளப்ப" (பு.வெ. 8,29).* 3. அரையிற் கட்டுந் துகிலாகிய அரைஞாண்; strip of cloth used as a waist-band *"கூட்டு மகப்படக் கோவண நெய்து"* (பதினொ.

நம்பியாண்.திருத்தொண்டர் திருவந்.80) 4. வீட்டின் மேற்கோப்பு, கீழ்க்கோப்பு முதலியன (இ.வ.); roof-frame, etc., of a house.

*[கூடு → கூட்டு.]*

**கூட்டுக்கச்சவடம்** *kūṭṭu-k-kacca-vaḍam,* பெ.(n.) ***கூட்டு வாணிகம்*** பார்க்க; see *kūṭṭu-vāṇigam.*

*[கூட்டு + கச்சவடம்.]*

**கூட்டுக்கணக்கு**[1] *kūṭṭu-k-kaṇakku,* பெ.(n.) கூட்டல்; addition.

*[கூட்டு + கணக்கு.]*

**கூட்டுக்கணக்கு**[2] *kūṭṭu-k-kaṇakku,* பெ.(n.) 1. பலர் ஒன்று சேர்ந்து வரவுசெலவு செய்யுங் கணக்கு; joint account. 2. கூட்டு வணிகக் கணக்கு (இ.வ.); partnership account.

*[கூட்டு + கணக்கு.]*

**கூட்டுக்கலவை** *kūṭṭu-k-kalavai,* பெ.(n.) பல மருந்துகளைக் கூட்டிக் கலந்தது; compound mixture (சா.அக.).

*[கூட்டு + கலவை]*

**கூட்டுக்கறி** *kūṭṭu-k-kaṟi,* பெ.(n.) 1. காய்கறியும் பருப்புங் கலந்து செய்த கறியுணவு; a vegetable curry in semiliquid form. *"கூட்டுக்கறியி லே கலந்த பேராசை" (அருட்பா.VI, அவாவறு.4).*

*[கூட்டு + கறி.]*

**கூட்டுக்காரன்** *kūṭṭu-k-kāraṉ* பெ.(n.) கூட்டாளி; partner, associate.

ம. கூட்டுக்காரன்

*[கூட்டு + காரன்.]*

**கூட்டுக்கால்** *kūṭṭu-k-kāl,* பெ.(n.) பாய்ந்தோடுகை; gallop *குதிரை கூட்டுக்காலிற் செல்லுகிறது இ.வ.).*

*[கூட்டு + கால்.]*

**கூட்டுக்கால்கட்டு-தல்** *kūṭṭu-k-kāl-kaṭṭu,* 5 செ.கு.வி. (v.i.) 1. விலங்கின் முன்னங்கால்களைக் கூட்டிக் கட்டுதல்; to tie a beast's fore-legs together. 2. வலியற்ற தூணிற்கு முட்டுக்கொடுத்தல் (இ.வ.); to set up an additional prop as a support to a weak pillar.

*[கூட்டு + கால் + கட்டு.]*

**கூட்டுக்கீரை** *kūṭṭu-k-kīrai,* பெ.(n.) கலவைக்கீரை (Pond.); edible greens, mixed together and cooked as a dish.

*[கூட்டு + கீரை.]*

**கூட்டுக்குடிநீர்** *kūṭṭu-k-kuḍi-nīr,* பெ.(n.) பலவகை மருந்து சேர்ந்த கருக்கு (கியாழம்) அல்லது பழுகு சாறு; a mixture of medicine taken in (சா.அக.).

*[கூட்டு + குடி + நீர்.]*

**கூட்டுக்குடும்பம்** *kūṭṭu-k-kuḍumbam,* பெ.(n.) பிரிவினையாகாத தனிப்பெருங் குடும்பம் (இ.வ.); joint family.

ம. கூட்டுகுடும்பம்

*[கூட்டு + குடும்பம்.]*

**கூட்டுக்குளிகை** *kūṭṭu-k-kuḷikai,* பெ.(n.) பல மருந்துகள் சேர்ந்த மாத்திரை; a compound pill (சா.அக.).

*[கூட்டு + குளிகை.]*

**கூட்டுக்கூட்டு-தல்** *kūṭṭu-k-kūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) சந்தனத்தில் நறுமணஞ்சேர்த்தல் (இ.வ.); to mix scents in preparing sandal paste.

*[கூட்டு + கூட்டு.]*

**கூட்டுச்சரக்கு** *kūṭṭu-c-carakku,* பெ.(n.) மருந்தில் சேர்க்க வேண்டிய கடைச்சரக்குகள்; bazar drugs that are necessary to drugs to be added (சா.அக.).

*[கூட்டு + சரக்கு.]*

**கூட்டுச்சீட்டு** *kūttu-c-cīttu,* பெ.(n.) பலர் ஒருங்குசேர்ந்து குறித்த தவணைகளில் பணங்கட்டி, ஏலமூலமாகவோ, குலுக்குச்சீட்டு மூலமாகவோ உறுதிசெய்யப்பட்டவருக்கு ஒரே தொகையாகக் கொடுக்கும் சீட்டுவகை; association chit-fund where the amount of the bid or the sum total of the premia is paid periodically either to be lowest bidder or to one whose name is decided casting lots.

*[கூட்டு + சீட்டு.]*

**கூட்டுண்டாக்கு-தல்** *kūttundā-k-ku-,* 5 செ.குன்றாவி. (v.t.) கூடும்படிசெய்தல்; effecting a union (சா.அக.).

*[கூட்டு + உண்டாக்கு.]*

**கூட்டுண்டாகல்** *kūttundāgal,* பெ.(n.) கலவி செய்தல்; having copulation. 2. கலவியேற்படல்; the happening or occurence of a sexual act. (சா.அக.).

*[கூட்டு + உண்டாகல்.]*

**கூட்டுண்(ணு)[1]-தல்** *kūttun(n)-,* 12 செ.குன்றாவி. (v.t.) 1. கூடியுண்ணுதல்; to dine together, as at a feast. *"வரிவண்டு பண்ணலங் கூட்டுண்ணும் (பு. வெ.9:49).* 2. முழுமையாகக் கலவியின்பம் நுகர்தல்; to enjoy to the full. *"என்னுண்ணலங் கூட்டுண்டான்" (பு.வெ. 9:49).*

*[கூட்டு + உண்-.]*

**கூட்டுண்(ணு)[2]-தல்** *kūttun(n)-,* 12 செ.குன்றாவி. (v.i.) 1. திறைகொள்ளுதல்; to accept tribute. *"கொடித்திண்டேர் மன்னராற் கூட்டுண்டு வாழ்வார்" (பழ. 266).* 2.கலவி செய்தல்; to have sexual intercourse *"கூட்டுண்டு நீங்கிய ........ கண்ணன்" (திவ். திருவாய். 9:5.7).*

*[கூட்டு + உண்-.]*

**கூட்டுத்தட்டு** *kūttu-t-tattu,* பெ.(n.) கறிக்குரிய குழம்புப் பொடிகள் வைக்கும் பல அறை களையுடைய தட்டு (வின்.); tray with a set of compartments for holding curry powders.

*[கூட்டு + தட்டு.]*

**கூட்டுநீர்** *kūttu-nīr,* பெ.(n.) மருந்து கலந்த நீர்; lotion (சா.அக.).

*[கூட்டு + நீர்.]*

**கூட்டுப்பங்கு** *kūttu-p-pangu,* பெ.(n.) வாணிகத்தில் சேர்ந்துகொள்ளும் பங்கு (இ.வ.); share in a partnership concern.

*[கூட்டு + பங்கு.]*

**கூட்டுப்படகு** *kūttu-p-padagu,* பெ.(n.) 16, பயணிகள்வரை செல்லுதற்கோ, மூன்று முதல் 7 கல்லெடை (டன்) பொருள்களை யேற்றுவதற்கோ பயன்படுவதும், மேற்கூடுள்ளதுமான தோணிவகை (M.M.915); boats provided with movable tops, to carry about 16 passengers or cargo varying from 3 to 7 tons.

*[கூட்டு + படகு.]*

**கூட்டுப்படை** *kūttu-p-padai,* பெ.(n.) துணைப்படை (ஈடு. 10:3.5); auxiliary force.

*[கூட்டு + படை.]*

**கூட்டுப்பயிர்** *kūttu-p-payir,* பெ.(n.) பிறருடன் சேர்ந்து செய்யும் வேளாண்தொழில் (இ.வ.); joint cultivation.

*[கூட்டு + பயிர்.]*

**கூட்டுப்பல்லக்கு** *kūttu-p-pallakku,* பெ.(n.) செருகு கதவுள்ள பல்லக்கு; palan quin with sliding doors.

*[கூட்டு + பல்லக்கு .]*

**கூட்டுப்புழு** *kūttu-p-pulu,* பெ.(n.) முத்தோன்றிப் புழு (திரியவதாரப் புழு). இது கூட்டைப் பின்னிக் கொண்டு அதனுள் அசையாமற் சிலநாள் வரை இரைகொள்ளாமல் இருந்து பூச்சியாக மாறும்; an insect or moth which assumes the state of metamorphosis before changing from the larva, to the winged state (சா.அக.).

*[கூட்டு +புழு.]*

**கூட்டுமரம்** *kūttu-maram,* பெ.(n.) பாய்மரத்தைச் சார்ந்த மரம் (Pond.); mast.

*[கூட்டு + மரம்.]*

**கூட்டுமருந்து** *kūṭṭu-marundu,* பெ.(n.) கலவை மருந்து; a compound of different ingredients blended together (சா.அக.)

*[கூட்டு + மருந்து.]*

**கூட்டுமா** *kūṭṭu-mā,* பெ.(n.) கறியிற் சேர்க்கும் மா (இ.வ.); flour used in curry.

*[கூட்டு + மா.]*

**கூட்டுமாறு** *kūṭṭu-māṟu,* பெ.(n.) விளக்குமாறு (இ.வ.); broom.

*[கூட்டு + மாறு.]*

**கூட்டுமூட்டு** *kūṭṭu-mūṭṭu,* பெ.(n.) 1. ஒரு செயலைச் செய்வதற்குப் பலருங் கூடுகை (வின்.); combination and co-operation of persons for effecting an object. 2. சூழ்ச்சி செய்யுமுன் கூடும் ஆய்வுக்கூட்டம்; league, confederacy, conspiraey. 3. பழிப்புரை; slander, aspersion calumny.

*[கூட்டு + மூட்டு.]*

**கூட்டுவட்டி** *kūṭṭu-vaṭṭi,* பெ.(n.) கடாவு வட்டி (இ.வ.); compound interest.

*[கூட்டு + வட்டி]*

**கூட்டுவண்டி** *kūṭṭu-vaṇḍi,* பெ.(n.) மேற்கூடுள்ள வண்டி (இ.வ.); cart with hood or curved top, opp. to *moṭṭai-vaṇḍi.*

*[கூண்டு → கூட்டு + வண்டி]*


கூட்டுவண்டி

**கூட்டுவருக்கம்** *kūṭṭu-varukkam,* பெ.(n.) நறுமண மருந்து எண்ணெயின் கலவை; a mixture of several odoriferous ointments (சா.அக.).

*[கூட்டு + வருக்கம்.]*

**கூட்டுவாணிகம்** *kūṭṭu-vāṇigam,* பெ.(n.) பலர் கூடிச் செய்யும் வணிகம்; joint concern, partnership in trade.

*[கூட்டு + வாணிகம்]*

**கூட்டுவாய்** *kūṭṭu-vāy,* பெ.(n.) செம்பு, ஏனம் முதலியவற்றின் பொருத்து (இ.வ.); dove-tail joint in a metal vessel, etc.

*[கூட்டு + வாய்.]*

**கூட்டுவான்** *kūṭṭu-vāṉ,* பெ.(n.) 1. கறியிற் கூட்டப்படும் கறியமுது வகைகள் (இ.வ.).; condiments. 2. கறி; curry.

ம. கூட்டான், கூட்டுவான்; க. கூடு.

*[கூட்டு → கூட்டுவான்]*

**கூட்டுவிரல்** *kūṭṭu-viral,* பெ.(n.) ஒன்றுசேர்ந்த விரல்கள்; toes or fingers united by a membrane (சா.அக.).

*[கூட்டு + விரல்.]*

**கூட்டுறவாக்கல்** *kūṭṭuṟavākkal,* பெ.(n.) மருந்துகள் ஒன்றோடொன்று கலக்கும்படி வேதியியற் கூட்டாகச் செய்தல்; causing medicines to combine chemically (சா.அக.).

*[கூட்டு + உறவாக்கல்]*

**கூட்டுறவினியக்கம்** *kūṭṭuṟaviṉiyakkam,* பெ.(n.) கூட்டுறவுத் தொடர்பால் ஒன்றுக்கேற்படும் இயக்கத்தினால் மற்றவை தானாகவே இயங்கு நிலைமை; the coincident movement voluntarily taking place in others, when the primary one is affected (சா.அக.).

*[கூட்டுறவின் + இயக்கம்.]*

**கூட்டுறவு**[1] *kūṭṭuṟavu,* பெ.(n.) 1. நெருங்கிய உறவு; intimate connection. *"கொள்ளை வினைக் கூட்டுறவால்" (அருட்பா, VI, அருள்விள.84).* 2. நட்பு; friendship,alliance.

*[கூட்டு + உறவு.]*

**கூட்டுறவு**[2] *kūṭṭuṟavu,* பெ.(n.) ஒற்றுமையாய் வேலைசெய்கை (Mod.); co-operation.

*[கூட்டு + உறவு.]*



கூட்டுறவு

**கூட்டுறவுக்கழகம்** *kūṭṭuṟavu-k-kaḻagam,* பெ.(n.) பலர் இணைந்து செயற்படும் கூட்டமைப்பு (mod.); co-operative society.

*[கூட்டுறவு + கழகம்.]*

**கூட்டுறவு முறைமை** *kūṭṭuṟavu-muṟaimai,* பெ.(n.) இயற்பியல் அல்லது வேதியல் முறைப்படி மாற்றம் அடையும் முறைமை; the system of chemical or al-chemical combination (சா.அக.).

*[கூட்டுறவு + முறைமை.]*

**கூட்டெழுத்து** *kūṭṭeḻuttu,* பெ.(n.) 1. விரைவாகக் கூட்டியெழுதும் எழுத்து; cursive writing, running hand. 2. எழுத்துகளைச் சேர்த்தெழுதும் எழுத்து; two or more letters written conjointly. 3. இரண்டு முதலாகிய மெய்கள் இணைந்த வடவெழுத்து (நன். 146, மயிலை.); conjunct consonants as க்ஷ (ks).

*[கூட்டு + எழுத்து.]*

**கூட்டை** *kūṭṭai,* பெ.(n.) கூத்துவகையுளொன்று (அக.நி.); a kind of dance.

*[கூடு → கூட்டை]*

**கூட்டோடு** *kūṭṭōḍu,* வி.எ. (adv.) அடியோடு; completely, root and branch. *"கொன்றான்காண் புறமூன்றுங் கூட்டோடே சாழலோ" (திருவாச. 12:16).*

*[கூடு → கூட்டு + (ஒடு) ஓடு.]*

**கூட்டோடுகளை-தல்** *kūṭṭōḍu-kaḷai-,* 2 செ.குன்றாவி. (v.trans) வேரற அல்லது அடியோடு நீக்கல்; uprooting or curing radically as diseases in the system (சா.அக.).

*[கூட்டோடு + களைதல்.]*

**கூட்டோடு கைலாசம்** *kūṭṭōḍu-kailāšam,* பெ.(n.) உயிரோடு உடல் மறைதல்; disappearig or vanishing of the body with the soul (சா.அக.).

*[கூட்டோடு + கைலாசம்.]*

**கூட்டோடுபோ-தல்** *kūṭṭōḍu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) உயிரோடு உடல் மறைதல்; disappearance or vanising of the body with the soul (சா.அக.).

*[கூட்டோடு + போதல்.]*

**கூட்டோடுவிழு-தல்** *kūṭṭōḍu-viḻu,* 2 செ.கு.வி. (v.i.) மயிர் திரட்சியாய் உதிரல்; falling of the hair in patches (சா.அக.).

*[கூட்டோடு + விழல்.]*

**கூட**[1] *kūḍa,* வி.எ.(adv.) 1. உடன்; with together, with. *"கூடநின்று" (குற்றா. தல. கவுற்சன. 65).* 2. மேற்பட; more than due, more than enough, in addition to.

ம. கூடெ; க., தெ., து. கூட; பட. கோட.

*[கூடு → கூட]*

**கூட**[2] *kūḍa,* இடை. (part.) உம்மைப்பொருள் தரும் இடைச்சொல்; a particle having the force of also,

even. *"பிரியமொடு பகையாளி கூட வுறவாகுவன்" (குமரேச. சத. 67).*

*[கூடு→ கூட.]*

**கூடக்கீரை** *kūḍa-k-kīrai,* பெ.(n.) கலவைக்கீரை; a mixture of various greens (சா.அக.).

*[கூடு→ கூட + கீரை.]*

**கூடகம்** *kūḍagam,* பெ.(n.) வஞ்சகம்; fraud, deceit. *"கூடகத் தொழில்செய்யுங் கொடியனை" (குற்றாதல. கவுற்சன. 65).*

*[குள்→ குடு → குடகம் → கூடகம்.]*

**கூடகவெலும்பு** *kūḍaga-v-elumbu,* பெ.(n.) நாசியறை இரண்டின் பிற்பகுதியில் குறுக்கே இலம்பாயுள்ள தகட்டெலும்பு; the bone across the nostrils in the back of the nose (சா.அக.).

*[கூடகம் + எலும்பு.]*

**கூடகாரம்**[1] *kūḍagāram,* பெ.(n.) 1. மேன்மாடம் (இறை. 21,112); hall in the topmost floor of a house. 2.மாளிகையின் நெற்றிக் கூடு (சீவக. 2328, உரை); balcony.

**மறுவ.** கூடாகாரம்

*[கூடம் + கரம் – கூடகரம்→ கூடகாரம்.]*

**கூடகாரம்**[2] *kūḍagāram,* பெ.(n.) கூடம்; mansion, house. *"கூடகாரத்திற்குத் துப்பாகும்" (புறத்திரட்டு. 1104).*

*[கூடம் + கரம் – கூடகரம்→ கூடகாரம்.]*

**கூடங்கம்** *kūḍaṅgam,* பெ.(n.) மறைவான அங்கம்; hidden body. 2. ஆமை; tortoise (சா.அக.).

**மறுவ.** கூடாங்கம்

*[கூடு + அங்கம்]*

**கூடச்சித்திரி** *kūḍa-c-cittiri,* பெ.(n.) ***சதுரக்கள்ளி*** (சங்.அக.) பார்க்க; see *square spurge.*

*[கூடம் + சித்திரி]*

**கூடசதுக்கம்** *kūḍa-šadukkam,* பெ.(n.) நான்காமடியிலுள்ள எழுத்துகள் யாவும், ஏனை மூன்றடிகளுள்ளும், மறைந்து நிற்குமாறு பாடப்பெறுஞ் சித்திரகவி (தண்டி. 95); stanza of four lines in which the letters constituting the last line are all found amongst the first three lines.

*[கூடம் + சதுக்கம்]*

**கூடசம்** *kūḍašam,* பெ.(n.) வெட்பாலை; dysentary rosebery (சா.அக.).

*[கூடு→ கூடசம்]*

**கூடசன்மலி** *kūḍasaṉ-mali,* பெ.(n.) முள்ளிலவு நிரம்பிய நிரையம்; a hell abounding in thorny red silk-cotton. *"கூட சன்மலிக் கும்பியிற் றள்ளி" (குற்றா.தல.கவுற்சன. 65).*

*[கூடம் + சன்மலி]*

**கூடசாரன்** *kūḍasāraṉ,* பெ.(n.) மந்தணத்தூதுவன் (யாழ்.அக.); secret emissary.

*[கூடு → கூடம் + (சரம்) சாரன்]*

**கூடசாலம்** *kūḍa-šālam,* பெ.(n.) எழுநிரையத் தொன்று (சூடா.); a hell.

*[கூடசன்மலி → கூடசாலம்]*

**கூடப்பிறத்தல்** *kūḍa-p-piṟattal,* பெ.(n.) பிறவன் பிறவிமாருடன் பிறத்தல்; being born with brothers and sisters (சா.அக.).

*[கூட + பிறத்தல்]*

**கூடப்பிறந்தவன்** *kūḍa-p-piṟandavaṉ-,* பெ.(n.) உடன் பிறந்தவன்; brother.

**ம.** கூடப்பிறந்தவன்

*[கூட + பிறந்த + அவன்]*

**கூடப்பிறப்பு** *kūḍa-p-piṟappu,* பெ.(n.) உடன்பிறப்பு; brother or sister. 2. இரட்டைப்பிறப்பு, அதாவது ஒன்றுசேர்ந்து பிறத்தல்; being born together as twins (சா.அக.). உனக்குக் கூடப் பிறந்தவர் எத்தனையர்?

ம. கூடப்பிறப்பு

*[கூட + பிறப்பு]*

**கூடப்பொன்** *kūḍa-p-poṉ,* பெ.(n.) கலப்புப் பொன்; an alloy of gold (சா.அக.).

*[கூடு → கூட + பொன்]*

**கூடபாகலம்** *kūḍa-pāgalam,* பெ.(n.) யானைக்கு வரும் கடுஞ்சுரநோய்; bilious fever which elephants are subject to. *"கூடபாகலந்தெளிந்து மெல்லக்கயந் தெளிவுற்ற தென்ன" (பாரத. பதின்மூ.159).*

*[கூடு → கூட + பாகலம்]*

**கூடபூரி** *kūḍapūri,* பெ.(n.) ஒரு வகை நாரை; a kind of crane (சா.அக.).

*[கூடு → கூட + பூரி]*

**கூடம்**[1] *kūḍam,* பெ.(n.) 1. வீடு (பிங்.); house. 2. வீட்டின் கூடம்; drawing room, hall. 3. தாழ்வாரம் (இ.வ.); verandah. 4. யானைச்சாலை; elephant-stall. *"மதிலைநட் டமைத்ததன் பழங்கூடம்" (கல்லா. 60,22).* 5. மேலிடம்; top. *"கூடக் கூம்பு" (பெருங். உஞ்சைக். 40:72).* 6. கோபுரம் (பிங்.); temple tower. 7. அரண்மனைக் கோபுரம்; palace tower. 8.மன்றாக அமைந்த தேவகோட்டம்; open space under trees, considered as a shrine. *"கூடஞ்செய் சாரல்" (திருக்கோ. 129).*

*[கூடு → கூடம்]*

**கூடம்**[2] *kūḍam,* பெ.(n.) 1. சம்மட்டி (பிங்.); blacksmith's sledge. 2. மலையுச்சி (பிங்.); mountain peak. 3.அண்ட கோளகை (பிங்); shell supposed to envelope the world. 4. திரள் (விரி.நி); heap, multitude.

*[குள் → குடு → கூடு → கூடம்]*

**கூடம்**[3] *kūḍam,* பெ.(n.) 1. மறைவு (பிங்.); concealment, privacy, secrecy. 2. மறைபொருள்; secret, anything hidden, concealed, mysterious.

*[குள் (மறைதல்) → குடு → கூடு → கூடம்]*

**கூடம்**[4] *kūḍam,* பெ.(n.) 1. ஏய்ப்பு; fraud, deception. *"கூடம் மடியோம்பு மாற்றலுடைமை" (ஏலா. 17).* 2. பொய்; false-hood, untruth. *"கூட சாட்சியார்" (வேதாரணி. நிரையவ. 18).*

*[குள் (ஒளிதல்) → குடு → கூடு → கூடம்]*

**கூடம்**[5] *kūḍam,* பெ.(n.) இசை வாராது ஓசை மழுங்கல்; dullness of tone in lute strings. *"செம்பகை யார்ப்பே கூட மதிர்வே" (சிலப். 8:29).*

*[கூடு → கூடம்]*

**கூடம்**[6] *kūḍam,* பெ.(n.) கோளக வைப்புநஞ்சு (சங்.அக.); a mineral poison. 2. எள் (வின்.); sesame.

*[குள் (சிறியது) → குடு → கூடு → கூடம்]*

**கூடம்பில்** *kūḍambil,* பெ.(n.) சுரை (மலை.); calabash.

*[குடம் → குடம்பில் → கூடம்பில்]*

**கூடமாட** *kūḍa-māḍa,* வி.எ.(adv.) செயற்றுணையாய்; as a helping hand. *"கூடமாடக் கொஞ்சம் நின்று வேலை செய்" (இ.வ.).*

*[கூடு → கூட + மாட (எதுகை மரபிணைச் சொல்).]*

**கூடல்**[1] *kūḍal,* பெ.(n.) 1. பொருந்துகை (உரி.நி.); joining, uniting. 2. புணர்ச்சி; sexual union. *"கூடற்கட் சென்றதென் னெஞ்சு" (குறள், 1284).* 3. ஆறு கடலில் கலக்குமிடம்; mouth of a river. *"மலியோதத் தொலி கூடல்" (பட்டினப்.98.).* 4.ஆறுகள் ஒன்றோடொன்று கூடுமிடம்; confluence of rivers. 5. தேடுகை (பிங்.); seeking. 6. தலைவனைப் பிரிந்த மகளிர் அவன் வரும் நிலையறிதற் பொருட்டுத்

தரையில் சுழிக்குஞ் சுழிக்குறி (அகப்.); loops drawn on sand by a love-lorn lady for divining the safe arrival of her lord. *"வசுதேவர்தங் கோமகன் வரிற் கூடிடு கூடலே" (திவ்.நாய்ச்.3).*

ம. கூடல்

*[கூடு → கூடல்]*

**கூடல்**[2] *kūḍal,* பெ.(n.) 1. மதுரை; Madurai *"கூடனெடுங் கொடி யெழவே" (கலித். 31.).* 2. அடர்த்தியான தோப்பு; thick grove, commonly of palmyras. *"செயலைக் கூடலே" (இரகு.தேனுவந். 70).*

*[கூடு → கூடல்]*

**கூடல்கிழான்** *kūḍal-kiḻāṉ,* பெ.(n.) வேளாளர் குடிகளுள் ஒருவகை (சேக்கிழார். 4:12); a sub-sect of the *vēḷāḷa* caste.

*[கூடல் + கிழான்]*

**கூடல்சரம்** *kūḍal-šaram,* பெ.(n.) இரண்டு கைமரங்களின் இணைப்பு (செங்.வழக்); joint of two wooden rafters.

*[கூடல் + சரம்]*

**கூடல்நாரத்தை** *kūḍal-nārattai,* பெ.(n.) கடார நாரத்தை; lemon citron (சா.அக.); a kind of *nārattai.*

*[கூடல் + நாரத்தை]*

**கூடல் வளைத்தல்** *kūḍal-vaḷaittal,* பெ.(n.) மகளிர் விளையாட்டில் ஒன்று (சா.அக.);a game of young girls.

*[கூடல் + வளைத்தல்]*

**கூடல்வாசரம்** *kūḍal-vāsaram,* பெ.(n.) ஓடுவேய்ந்த வீட்டில் பக்கவாட்டில் வரும் மரச்சட்டம் (செங். வழக்) (கட்.தொ.வரி.); wooden frame used to support tailes in tiled roof

*[கூடல் + (வாய்ச்சரம்) வாசலம்]*

**கூடல்வாய்** *kūḍal-vāy,* பெ.(n.) கூரையின் சேர்க்கை மூலை(இ.வ.); hip of a roof.

*[கூடல் + வாய்]*

**கூடல்வாயோடு** *kūḍal-vāy-ōḍu,* பெ.(n.) கூடல்வாய் மூலையை மூட உதவும் ஒடு (C.E.M.); gutter tiles used to cover hip of a roof.

*[கூடல் + வாய் + ஒடு]*

**கூடலர்** *kūḍalar,* பெ.(n.) ***கூடாதார்*** பார்க்க; see *kūḍādār.* *"கூடலர் குடர்மாலை சூட்டி" (பு.வெ.2:9,கொளு).*

ம. கூடலர்

*[கூடு + அல் + அர்]*

**கூடலி-த்தல்** *kūḍali-,* 4 செ.கு.வி.(v.i.) கிளர்ந்து வளைதல்; to over hang, as the eye brows *"குறுபெயர்ப் புருவங் கூடலிப்ப" (திவ்.பெரியாழ். 3: 6,8).*

*[கூடல் → கூடலி]*

**கூடலிழை-த்தல்** *kūḍal-iḻai-,* 4 செ.கு.வி.(v.i.) கூடற்சுழி வரைதல்; to draw *kūḍal* on sand. *"நீடலந் துறையிற் கூடலிழைத்து" (திருக்கோ. 186).*

*[கூடல் + இழை]*

**கூடலூர்கிழார்** *kūḍalūr-kiḻār,* பெ.(n.) முதுமொழிக்காஞ்சி இயற்றியவரும், ஐங்குறுநூறு தொகுத்தவருமான புலவர்; the poet who composed *mudumoḻi-k-kāñji* and compiled *Aiṅguṟu-ṉūṟu.*

*[கூடலூர் + கிழார்]*

**கூடவிமானம்** *kūḍa-vimāṉam,* பெ.(n.) சதுரமான அடித்தளமுள்ள மேற்கட்டு (விமானம்) (பொ.வழக்) (கட்.தொ.வரி.); temple tower with a square base.

*[கூடல் + விமானம்]*

**கூடற்குறி** *kūḍar-kuṟi,* பெ.(n.) தலைமகன் பிரிந்துழித் தலைவி பார்க்குங் குறி; divination resorted by heroine when seperated from her lover.

*[கூடல் + குறி]*

**கூடற்கோ** *kūḍarcō,* பெ.(n.) பாண்டியன்; any king of the Pandiya dynasty (இரு.நூ. அக).

*[கூடல் + கோ]*

**கூடற்கோமான்**[1] *kūḍar-kōmāṉ,* பெ.(n.) பாண்டியன் (திவா.); *Pāṇḍya* the king of Madura.

*[கூடல் + கோமான்]*

**கூடற்சுரை** *kūḍar-curai,* பெ.(n.) பேய்ச்சுரை; false calabash (சா.அ க.).

*[கூடல் + சுரை]*

**கூடற்பற்றை** *kūḍar-paṟṟai,* பெ.(n.) புதர் (யாழ்ப்.); thicket.

*[கூடல் + பற்றை]*

**கூடற்றெய்வம்** *kūḍar-ṟeyvam,* பெ.(n.) கூடற்சுழிக்குரிய பெண் தெய்வம் (திருக்கோ. 180, உரை.); the deity of *kūḍalcuḻi.*

*[கூடல் + தெய்வம்]*

**கூடனை** *kūḍaṉai,* பெ.(n.) பீலிக்கண் (யாழ்.அக.); eye of pea-cock feather.

*[கூடு → கூடனை]*

**கூடா-தல்** *kūḍā,* 6 செ.கு.வி.(v.i.) 1. உயிர் நீங்கிய வெற்றுடம்பாதல்; becoming a lifeless body. 2. இறத்தல்; dying. *"கூடலான் கூடா யினான்" (சிலப். 20:2 வெண்.).*

*[கூடு + ஆதல்]*

**கூடாக்கு**[1] *kūḍākku,* பெ.(n.) **குடாக்கு** (வின்.) பார்க்க; see *kuḍākku.* ball of tobacco etc. used in hookah.

*[கூடு + ஆக்கு]*

**கூடாக்கு**[2] *kūḍākku,* பெ.(n.) உக்கா புகையிலை; tobacco used in hookah. (சா.அக.).

*[கூடு → கூடாக்கு]*

**கூடாகாரம்** *kūḍāgāram,* பெ.(n.) மேல்வீடு (யாழ்.அக.); upper storey.

*[கூடம் + கரம் – கூடகரம் → கூடாகாரம்.]*

**கூடாங்கம்** *kūḍāṅgam,* பெ.(n.) ஆமை (யாழ்.அக); tortoise.

*[கூடு + அங்கம்]*

**கூடாதார்** *kūḍādār,* பெ.(n.) **கூடார்** பார்க்க; see *kūḍār. "கூடாதா ர் சேனை" (சினேந். 379).*

*[கூடு + ஆ + த் + ஆர். 'ஆ' எ.ம.இ.நி. 'த்' சாரியை.]*

**கூடாநட்பு** *kūḍā-naṭpu,* பெ.(n.) அகத்தாற் கூடாது புறத்தாற் கூடியொழுகும் நட்பு (குறள். அதி.83); insincere and unreal friendship.

*[கூடா (த) + நட்பு]*

**கூடாப்பெண்** *kūḍā-p-peṉ* பெ(n.) கலவியறியாக் கன்னி; a woman who has no carnal knowledge of man (சா.அக.).

*[கூடு → கூடா(த) + பெண்]*

**கூடாமகளிர்** *kūḍā-magaḷir,* பெ.(n.) புணரக்கூடாத அல்லது தகாத பெண்கள்; women unfit to visit and they are classified.

*[கூடா + மகளிர்]*

**கூடாமையணி** *kūḍāmai-aṇi,* பெ.(n.) அணிவகையு ளொன்று (அணியி.36); figure of speech in which an impossibility is predicated to have occurred.

*[கூடாமை + அணி]*

**கூடார்** *kūḍār,* பெ.(n.) பகைவர்; enemies, foes. *"கூடா ரரணெரி கூட " (திருக்கோ. 161).*

**மறுவ.** கூடாதார்

*[கூடு + ஆ + ஆர். 'ஆ' எ.ம.இ.நி. புணர்ந்து கெட்டது.]*

**கூடார்த்தம்** *kūḍārttam,* பெ.(n.) மறைந்து கிடக்குங் கருத்து; hidden meaning. *"தாம் உபதேசித்தருளிய கூடார்த்தத்தை வெளியிடலாகா தென்று சொல்லியிருந்தும்" (திவ்யசூரி.213).*

*[கூடா (த) (கிடைக்காத) + அர்த்தம்.]*

**கூடாரக்கட்டில்** *kūḍāra-k-kaṭṭil,* பெ.(n.) மூடுகட்டில் (யாழ்ப்.); bed with tent and curtains.

*[கூடா ரம் + கட்டில்]*

**கூடாரப்பண்டி** *kūḍāra-p-paṇḍi,* பெ.(n.) ***கூடார வண்டி*** (சிலப். 6,120. அரும்.) பார்க்க; see *kūḍāra vaṇḍi.*

*[கூடாரம் + (வண்டி) பண்டி]*

**கூடாரப்பண்டிகை** *kūḍāra-paṇḍigai,* பெ.(n.) கிறித்துவம் கொண்டாடும் திருநாள் (கிறித்.); feast of tabernacles.

*[கூடா ரம் + பண்டிகை]*

**கூடாரப்பல்லக்கு** *kūḍāra-p-pallakku,* பெ.(n.) மூடுபல்லக்கு (யாழ்.அக.); closed palanquin.

*[கூடாரம் + பல்லக்கு]*

**கூடாரம்**[1] *kūḍāram,* பெ.(n.) 1. கூம்பு வடிவான கூரையையுடைய குடில், படவீடு, படுக்கை; tent pavilion, tabernacle, booth, awning, tent covering for a bed. 2. வண்டிக்கூடு (இ.வ.); hood covering of a cart.

**ம.** கூடாரம்; **க., து., பட.** கூடார; **தெ.** கூடாரமு.

**skt.** kuṭaru

*[கூடு → கூடாரம்]*

**கூடாரம்**[2] *kūḍāram,* பெ.(n.) மாளிகையின் உப்பரிகை; balcony of the palace. *"கூடார மாடமயில் போல" (சீவக. 2328).*

*[கூடு → கூடாரம்]*

**கூடாரம் போடு-தல்** *kūḍāram-pōḍu-,* 19 செ.கு.வி.(v.i.) 1. படவீடு அமைதல்; to pitch a tent. 2. வண்டிக்கு மேற்கூடு இடுதல் (இ.வ.); to put a covering or hooded top over a cart.

*[கூடாரம் + போடு]*

**கூடாரமாடம்** *kūḍāra-māḍam,* பெ.(n.) கோபுர உறுப்புகளுள் ஒன்று (கட்.தொ.வரி.); a detail on temple towers.

*[கூடாரம் + மாடம்]*

**கூடாரவண்டி** *kūḍāra-vaṇḍi,* பெ.(n.) மேற்கூடுள்ள வண்டி (இ.வ.); cart with hooded top.

*[கூடாரம் + வண்டி]*

**கூடாவியற்கை** *kūḍā-v-iyaṟkai,* பெ.(n.) பெண்களைப் புணருவதற்கு ஆண்மையற்ற தனம்; functional impotency. (சா.அக.).

*[கூடா (த) + இயற்கை]*

**கூடாவுவமை** *kūḍa-v-uvumai,* பெ.(n.) ஒரு பொருட்கு இயல்பில்லாதவற்றை உள்ளதாகச் சொல்லி, அதனை ஒன்றற் குவமையாக்கி உரைப்பது; a simile in which the comparison is made with a thing having only a hypothetical existence (இரு.நூ.அக.). (எ.கா.) *"காமுகர்க்குத் தண் மதியந் தீக்கால்வ போலும்".*

**மறுவ.** மருட்கை உவமை

*[கூடா (த) + உவமை]*

**கூடாவெலும்பு** *kūḍā-v-elumbu,* பெ.(n.) பொருந்தாத எலும்பு; a bone which does not unite (சா.அக.).

*[கூடா (த) + எலும்பு]*

**கூடாவொழுக்கம்** *kūḍā-voḻukkam,* பெ.(n.) தகாத ஒழுக்கம் (குறள், அதி.28); improper or immoral conduct, as in appropriate to one's mode of life.

*[கூடா (த) + ஒழுக்கம்]*

**கூடிநாடித்திரி-தல்** *kūḍi-nāḍi-t-tiri-,* 2 செ.கு.வி. (v.i.) பிறருடன் விடாது சேர்ந்திருத்தல்; to be always in the company of.

*[கூடி + நாடி + திரி]*

**கூடியமட்டும்** *kūḍiya-maṭṭum,* வி.எ.(adv.) ***கூடியவரை*** பார்க்க; see *kūḍiya-varai.*

*[கூடிய + மட்டும்]*

**கூடியவரை** *kūḍiya-varai,* பெ.(n.) இயன்றவரை (கொ.வ.); as far as possible, as much as one is able, to the utmost.

*[கூடிய + வரை]*

**கூடியற்பெயர்** *kūḍiyaṟ-peyar,* பெ.(n.) கூட்டத்தைக் குறிக்கும் பெயர் (நேமி.சொல். 31); collective noun.

*[கூடு + இயல் + பெயர்]*

**கூடியாடு-தல்** *kūḍiyāḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கூடிச்சேர்ந்து ஆடுதல்; to dance or dally together. 2. சேர்ந்து பணியாற்றுதல்; to mingle with, come in touch with, work in company with.

ம. கூடியாடுக

*[கூடு +ஆடு]*

**கூடியிருக்கை**[1] *kūḍi-y-irukkai,* பெ.(n.) புணர்ச்சியாயிருத்தல்; being in the act of copulation (சா.அக.).

*[கூடு → கூடி + இருக்கை]*

**கூடியிருக்கை**[2] *kūḍi-y-irukkai,* பெ.(n.) 1. இணையர் (கணவன் மனைவி) வாழ்க்கை; living as husband and wife. 2. ஒன்றாக வாழுகை; living together.

*[கூடு → கூடி + இருக்கை]*

**கூடிவா-தல் (கூடிவருதல்)** *kūḍi-vā-,(kūḍi-varu,)* 18 செ.கு.வி.(v.i.) 1. சேர்ந்து வருதல்; to accompany, to move in company. 2. கைகூடி வருதல்; to succeed, be prosperous, as in an undertaking. 3. மிகுதியாதல்; to increase. அவனுக்கு நாளுக்கு நாள் பொருள் கூடிவருகிறது (கொ.வ.).

*[கூடி + வரு (வா)]*

**கூடினரைப்பிரி-த்தல்** *kūḍiṉarai-p-piri-,* 4 செ.குன்றாவி.(v.t.) பகையரசர்களைத் தம்முட் பிளவுண்டாக்கிப் பிரிக்கை (பு.வெ. 9,37.உரை.); separating enemy-kings by creating dissensions between them.

*[கூடி →கூடு →கூடின + அவர் + ஐ + பிரி]*

**கூடு**[1]**-தல்** *kūḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. ஒன்று சேர்தல்; to come together, join, meet, to become one as rivers. *"அங்கை மலர்கூடத் தலைமேற் குவித்தருளி".* 2. திரளுதல்; to collect, crowd together, assemble, congregate, muster. *"கூடிய வண்டினங்காள்"* (திவ். திருவாய். 6:8,3). 3. பொருந்துதல் (திவா.); to combine, coalesce, reunite, as broken bones. 4. கிடைத்தல்; to be available. *"உவமை இவ்வுலகிற் கூடுமோ"* (கம்பரா. உருக்கா.44). 5. இயலுதல்; to be possible, practicable, attainable. *"ஈவது கூடா வெல்லை"* (கந்தபு. மேரு. 20). 6. நேரிடுதல்; to come, to pass, to happen. *"திருவாறன்விளை கைதொழக் கூடுங் கொலோ" (திவ்.திருவாய்.7:103.).* 7. இணங்குதல்; to become reconciled, pacified, conciliated. 8. தகுதியாதல்; to be fit, suitable, appropriate, proper, decent, expedient. 9. தொகை சேர்தல்; to accumulate, to be hoarded, stored up. 10. மிகுதியாதல், வீங்குதல்; to abound, swell, increase. *"உள்ளங் கூடின துயரம்" (கந்தபு. காமத. 97).* 11. தொடங்குதல் (வின்.); to commence, be-

gin. 12. கைகூடுதல்; to be achieved. 13. உடன் படுதல்; to agree, consent. *"கொன்றிடக் கூடாதுள்ளம்" (திருவாலவா. 1:15).*

**ம.** கூடுக; **க., தெ., பட., கொலா.** கூடு; **கோத., துட., கூ.** கூட்.

*[குல்→குள்→கூடு]*

**கூடு[2]-தல்** *kūḍu-,* 5 செ.குன்றாவி (v.t.) 1. ஒன்றுகூடி அன்பு பாராட்டுதல், நட்பாயிருத்தல்; to associate or be friend. *"கூடிப்பிரியேல்" (ஆத்திசூடி).* 2. புணர்தல்; to cohabit. *"கொம்மைத் துணை மென்முலை யண்ணலைக்கூட" (கந்தபு. மகாசத். 17).* 3.அடைதல்; to reach,arrive at.*"நகரங் கூடினான்" (பிரமோத். 13:64).*

*[குல்→ குள்→கூடு]*

**கூடு[3]** *kūḍu,* பெ.(n.) 1. பறவை முதலியவற்றின் கூடு (திவா.); nest, bird-cage, coop, hive, cocoon, shell. 2. விலங்குக் கூடு; pen, sty, kennel, cage for animals. *"கூடார் புலியும்" (சீவக. 2328).* 3. நெற் கூடு; receptacle for grain. 4. உருண்டு திரண்டு கூடு போலுள்ளது; hollow, globular or prismatical as a balloon, as the lamp of a light house. 5. கட்டடத்தின் முகடு (கட்டடக்); dome, cupola. 6. ஆயுதம் முதலியவற்றின் உறை; quiver, sheath, case, envelope. *"கோறுவக்கும் கூடுகுறைந்த கொடுமதனை" (சிலப்.பிர.வெங்கைக் கலம்.93).* 7. மைக்கூடு; small receptacle, as an ink stand. 8. வண்டிக்கூடு; covering or top of a cart. 9. தூரப்பணக் கூடு; top of the drill for boring holes.

**ம.** கூடு; **க., தெ., து., பட.** கூடு; **குட.** கூடி; **கோத., துட.** கூட்; **கோண்., பர்.** கூட; **கட.** கூடெ; **கூ.** கிரேந்து; **குவி.** கூத.

*[குல்→குள்→ கூடு]*

**கூடு[4]** *kūḍu,* பெ.(n.) 1. மீன்பறி; basket for catching fish. 2. சான்றாளர் கூண்டு; witness box. 3. கழுந்துக்கூடு (வின்.); mortise groove, in carpentry. 4. உடம்பு; body, as the sheath, encasing the soul. *"கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே" (தேவா. 376:2).*

*[குல்→ குள்→ கூடு]*

**கூடு[5]** *kūḍu-,* பெ.(n.) வயிறு; stomach. *"உண்டுழியெங் கூடாரப் போதுங்கொல்" (கலிங். 217).*

*[குள்→கூடு]*

**கூடுகொம்பன்** *kūḍu-kombaṉ,* பெ.(n.) முனைப்பகுதி தம்முட்கூடிய கொம்புகளுள்ள மாடு (வின்.); ox whose horns almost meet at the points.

*[கூடி+ கொம்பன்]*

**கூடுங்கொடிச்சி** *kūḍuṅ-koḍicci,* பெ.(n.) தொழுகண்ணி; telegraph plant (சா.அக.).

*[கூடும்+ கொடிச்சி]*

**கூடுதல்[1]** *kūḍu,* பெ.(n.) 1. மிகுதி, அதிகம்; excess. அவனுக்கு கூடுதலாகவே கொடுத்திருக்கிறது (உ.வ.). 2. வெற்றி; sucess. அவனுக்கு எல்லாம் கூடுதலாயிருக்கிறது (உ.வ.).

*[கூடு → கூடுதல்]*

**கூடுதல்[2]** *kūḍudal,* பெ.(n.) 1. மொத்தம் (இ.வ.); total. 2. பெருமம் மேலெல்லை; maximum. *கூடுதல் எட்டணா கூலி கிடைக்கும்.*

*[கூடு → கூடுதல்]*

**கூடுதலை** *kūḍudalai,* பெ.(n.) அறச்சாலை (இ.வ.); an asylum.

*[கூடு + தலை (இடம்)]*

**கூடுபூரி-த்தல்** *kūḍu-pūri-,* 4 செ.குன்றாவி (v.t.) நிரப்புதல்; to fill up, stuff. அதிருஷ்டத்துக்குத் தாரித்ரயத்தைக் கூடுபூரித்த இத்தனை (திவ். திருமாலை. 6. வியா.33).

*[கூடு + பூரி]*

**கூடுவாய்** *kūḍu-vāy,* பெ.(n.) இரண்டு மரச்சட்டங்கள் பொருந்தும் இடம்;joint of two wooden pieces.*கூடுவாய் சரிபார்த்துப் பொருத்து-வழக்கு. (தச்சு.தொ.வரி).*

*[கூடு + வாய்]*

**கூடுவாய்மூலை** *kūḍuvāy-mūlai,* பெ.(n.) மேற்கூரையிணையும் மூலை; the ridge of a roof.

*[கூடு + வாய் + மூலை]*

**கூடுவிட்டுக்கூடுபாய்-தல்** *kūḍu-viṭṭu-k-kūḍu-pāy-,* 2 செ.கு.வி.(v.i.) தன்னுயிரை மற்றொரு உடலிற்கு மாற்றிக் கொள்ளும் மந்திரக்கலை; the magic art of leaving one's own body and entering another body at will.

*[கூடு + விட்டு + கூடு + பாய்]*

**கூடுவிட்டுப்போ-தல்** *kūḍu-viṭṭu-p-pō-,* 8 செ.குன்றாவி. (v.i.) இறத்தல்; dying (சா.அக.).

*[கூடு + விட்டு + போ.]*

**கூடுவிடு-தல்** *kūḍu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. இறத்தல்; to die. lit., to leave the body. *"கூடுவிட்டிங் காவிதான் போயினபின்"* (நல்வழி, 22). 2. எலும்பு தோன்ற இளைத்தல்; being to be reduced to a skeleton as in wasting diseases. அவனுடைய மார்பு கூடுவிட்டிருக்கிறது (உ.வ.).

*[கூடு + விடு]*

**கூடுவிழு-தல்** *kūḍu-viḻu-,* 2 செ.கு.வி.(v.i.) 1. இறத்தல் (யாழ். அக.); to die. 2. ஆணிச்சிதல் விழுதல்; droping off the polypus in the anus. 3. நோயின் வேர் கழலுதல்; being rooted out as diseases.

*[கூடு + விடு]*

**கூடுவை-த்தல்** *kūḍu-vai-,* 4 செ.கு.வி.(v.i.) 1. ஆணிச்சிதல் காய்ந்து சவ்வுபற்றுதல் (யாழ்.அக.); to begin to heal, after the dropping of the core of an ulcer. 2.நோய் வேர்வைத்துப் பலத்தல் (யாழ்.அக.); to become critical, as the conditiion of a patient. 3. புண் புரையோடுதல் (இ.வ.); to form a running sore.

*[கூடு + வை]*

**கூடை**[1] *kūḍai,* பெ.(n.) 1. பிரம்பு முதலியவற்றாற் பின்னப்படும் பெட்டி; basket made of rattan, ōla or bamboo. 2. மழைநீர் படாதபடி உடல்மேல் இட்டுக்கொள்ளும் சம்பைக் கொங்காணி; palm-leaf cover worn over the person as a protection from rain.

ம. கூட; க. கூடெ, கூட; தெ. கூட; து. பட. கூடெ; கோத., துட. கூட்; கோண். கூல.

**Fin.** kaha; **Jap.** katama; **Gondi.** kūca.

*[கூடு + கூடை]*

**கூடை**[2] *kūḍai,* பெ.(n.) 1. முத்திரைக்கை வகை (சிலப். 3:20); a kind of hand-pose. 2. ***கூடைப்பாடல்*** பார்க்க; see *kūḍai-p-pāḍal.*

*[கூடு + கூடை]*

**கூடைக்காரன்** *kūḍai-k-karaṉ,* பெ.(n.) 1. கூடையிற் காய்கறி விற்போன்; one who sells vegetables, carrying them in a basket. 2. கூடையிற் பண்டமெடுத்து வருங் கூலிக்காரன்; coolie with a basket for carrying goods.

*[கூடை + காரன்]*

**கூடைக்குத்தகை** *kūḍai-k-kuttagai,* பெ.(n.) மதிப்பாகத் தீர்மானிக்கும் குத்தகை (C.G.); lit. lease by the basket. Rental fixed on a rough estimate.

*[கூடை + குத்தகை]*

**கூடைச்சோறு** *kūḍai-c-cōṟu,* பெ.(n.) திருமணத்தில் மண உறவினர் (சம்பந்திகள்) தம் வீடு செல்லும்பொழுது அவர்களுக்கு பெண் வீட்டார் அனுப்பும் சிற்றுணா (இ.வ.); basketfuls of food and dainties presented by the bride's people to the bridegroom's party when the latter depart homeward.

*[கூடை + சோறு]*

**கூடைப்பணியாரம்** *kūḍai-p-paṇiyāram,* பெ.(n.) திருமணத்தில் மணையிலுள்ள மாப்பிள்ளைக்கு முன் கூடைகளில் வைக்கும் தின்பண்டம் (இ.வ.); basketfull of confections presented to the bridegroom by the bride's people at the time of marriage.

*[கூடை + பணியாரம்]*

**கூடைப்பாடல்** *kūḍai-p-pāḍal,* பெ.(n.) சொற்செறிவும் இசைச்செறிவுமுடைய பாடல் (சிலப்.3:67, உரை); a song which combines wealth of words with richness of melody.

*[கூடை + பாடல்]*

**கூடையன்** *kūḍaiyaṉ,* பெ.(n.) பருத்தவன் (யாழ்.அக.); corpulent person.

*[கூடை + அன்]*

**கூண்டடுப்பு** *kūṇḍaḍuppu,* பெ.(n.) அனலடுப்பு (இந்துபாக.67); *analaḍuppu* covered brick over.

*[கூண்டு + அடுப்பு]*

**கூண்டா—தல்** *kūṇḍā-,* 8 செ.கு.வி.(v.i.) மயிர் சிக்குப்படுதல்; to get matted or interlocked, as the hair.

*[கூண்டு + ஆ(கு)]*

**கூண்டு** *kūṇḍu,* பெ.(n.) கூடு; nest.

*[குள்→ குண்டு→கூண்டு→ கூடு]*

**கூண்டு—தல்** *kūṇḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. கூடுதல்; to accrue, to be added., *"கூண்ட வெட்டாதாள்" (அழகியநம்பியுள.90).* 2. குழுமுதல் (இ.வ.); to assemble.

*[குள்→ குண்டு→கூண்டு]*

**கூண்டுப்புழு** *kūṇḍu-puḻu,* பெ.(n.) புழுவகை; chrysalis.

*[கூண்டு+ புழு]*

**கூண்டெலும்பு** *kūṇḍelumbu,* பெ.(n.) rib bone. 2. உடம்பின் கோவை எலும்பு; skeleton (சா.அக.).

*[கூண்டு + எலும்பு]*

**கூத்தக்காணி** *kūtta-k-kāṇi,* பெ.(n.) கோயில் திருவிழாநாளில் கூத்தாடும் குழுவினர்க்கு அளிக்கப்பெறும் இறையிலி நிலம்; land gifted to those who stage dramas in temple festivals. திருநாளுக்குக் கூத்தாடுகைக்குக் காணியாக அளிக்கப்பெறும் நிலம் (புதுக்.கல். 139). (கல்.க.சொ.அ.மு.).

*[கூத்தன் + காணி]*

**கூத்தச்சாக்கையன்** *kūtta-c-cākkaiyaṉ,* பெ.(n.) கூத்து நிகழ்த்தும் சாக்கையர் குலத்தான்; a person of *cākkaiya* caste whose profession is dancing and acting. *"கொட்டிச்சேதம்.... .... பறையூர்க் கூத்தச் சாக்கைய னாடலின்" (சிலப். 28:77).*

*[கூத்தன் + சாக்கையன்.]*

**கூத்தநூல்** *kūtta-nūl,* பெ.(n.) ஆடற்கலை முத்திரை பற்றிய நூல் (சீவக. 124, உரை.); treatise on gesticulation in dancing.

*[கூத்து + நூல் – கூத்துநூல்→ கூத்தநூல். 'அ' ஈறு ஆறன் உருபு. ஒ.நோ. (ஆறன் உருபு 'அது' என்பதன் ஈற்றுக்குறை.]*

**கூத்தப்பள்ளி** *kūtta-p-paḷḷi,* பெ.(n.) அரண்மனையைச் சார்ந்த நாடகவரங்கு (இறை.21, ப. 112.); theatre hall attached to a palace.

*[கூத்து + பள்ளி]*

**கூத்தம்பலம்** *kūttambalam,* பெ.(n.) வளைக்கை பிடித்தாடுதற்குரிய கோயிலரங்கு (T.A. S.II.143); theatre hall in temple.

*[கூத்து + அம்பலம்.]*

**கூத்தர்** *kūttar,* பெ.(n.) கூத்து நடிப்போர்; actors, dancers. *"கூத்தரும் பாணரும்" (தொல். பொருள்.91).*

*[கூத்து + அர்.]*

**கூத்தராற்றுப்படை** *kūttarāṟṟu-p-paḍai,* பெ.(n.) பரிசில் பெறச் செல்லும் கூத்தனைப் பரிசில் பெற்றவன், ஒரு தலைவனிடம் ஆற்றுப்படுத்தும் புறத்துறை (பு.வெ.9: 29); theme of a dancer, himself a recipient of unstinted favours at the hands of a king or chieftain, directing and exhorting his brother in the profession to avail himself of the

royal bounty. 2. பத்துப்பாட்டினுள் பத்தாவதாகிய மலைபடுகடாம் (தொலை. சொல். 462, சேனா.); the tenth poem of the *Pattu-p-pāṭṭu.*

*[கூத்தர் + ஆற்று + படை.]*

**கூத்தரிசி** *kūttariši,* பெ.(n.) கைக்குத்தலரிசி; hand pounded rice as distinguished from milled rice. It is a corrupt form for *kuttalariši* (சா.அக.).

*[குற்று + அரிசி – குற்றரிசி → கூத்தரிஇ (கொ.வ.).]*

**குத்தரிசிக்காரி** *kuttariši-k-kāri,* பெ.(n.) அரிசி குற்றி விற்பவள் (வின்.); woman who pounds and sells rice.

*[குத்து + அரிசி + காரி.]*

*இதனைக் கூத்தரிசிக்காரி என வின்சுலோ அகரமுதலி குறித்திருப்பது தவறு.*

**கூத்தவாதி** *kūttavāti,* பெ.(n.) சிவனார் வேம்பு; Shiva's neem (சா.அக.).

*[கூத்த(ன்) + ஆதி.]*

**கூத்தறுப்பு** *kūttaṟuppu,* பெ.(n.) பிறர் பயிரைத் திருட்டுத்தனமாக அறுத்துக்கொண்டு போகை (இ.வ.); clandestine removal of crops.

*[கூத்து (விளையாட்டு) + அறுப்பு.]*

**கூத்தன்** *kūttaṉ,* பெ.(n.) 1. நாட்டியக்காரன்; dancer, actor. *"குழியும்ப ரேத்துமெங் கூத்தன்"* (திருக்கோ. 135). 2. ஆதன் (ஆன்ம) வாழ்வாகிய பெருநாடகத்தை நடத்துவிப்பவன்; lit. the stage manager who enacts the great drama of life, soul, spirit. *"கூத்தன் புறப்பட்டக்கால்" (நாலடி. 26).* 3. சிவன்; Šiva, *"சிற்றம்பலத்து மாணிக்கக் கூத்தன்" (திருக்கோ. 23).* 4. ஒட்டக்கூத்தர்; *oṭṭak-kūttar,* the famous poet. *"கூத்தன் கவிச்சக்கரவர்த்தி வாழியே" (தக்கயாகப்பரணி, முடிவு).* 5. துரிசு (சங்.அக.); suplhate of copper.

*[கூத்து → கூத்தன்.]*

**கூத்தன் குதம்பை** *kūttaṉ-kudambai,* பெ.(n.) மூக்கொற்றி; pointed-leaved hogweed.

*[கூத்தன் + குதம்பை.]*

**கூத்தன்செம்பு** *kūttaṉ-šempu,* பெ.(n.) துரிசுச் செம்பு; copper extracted from blue vitriol (சா.அக.).

*[கூத்தன் + செம்பு.]*

**கூத்தனம்** *kūttaṉam,* பெ.(n.) தில்லை மரம்; tiger's milk tree (சா.அ க.).

*[கூத்து → கூத்தனம்.]*

**கூத்தாட்டு** *kūttāṭṭu,* பெ.(n.) நடிப்பு; dancing, acting on the stage. *"கூத்தாட் டவைக்குழாத் தற்றே" (குறள். 332).*

*[கூத்து + ஆட்டு.]*

**கூத்தாடி** *kūttāḍi,* பெ.(n.) 1. நாட்டியக்காரன்; dancer, player, actor *"கூத்தாடிப் பையலுக்கோ"* (தனிப்பா. II. 7,14). 2. கழைக்கூத்தன்; pole dancer, acrobat. 3. மனம்போனபடி நடப்பவன்; reckless, self willed, unprincipled person.

*[கூத்து + ஆடி.]*

**கூத்தாடிச்சி** *kūttāḍicci,* பெ.(n.) 1. கூத்து நடிப்பவள்; dancing-girl. 2. அடங்காது ஓலமிட்டுத் திரிபவள் (இ.வ.); boisterous, unruly woman.

*[கூத்து + ஆடிச்சி.]*

**கூத்தாடு-தல்** *kūttāḍu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. நடித்தல் (சிலப். 12, ப.319); to dance, act on the stage. 2. மகிழ்ச்சி மிகுதல் (வின்.); to be elacted with success, etc. 3. செழித்திருத்தல்; to prosper, thrive. அவ்வீட்டில் செல்வம் கூத்தாடுகிறது. 4. வலிந்து வேண்டுதல்; to importune, persistently request. தனக்கு அது வேண்டுமென்று கூத்தாடு கிறான் (உ.வ.).

**ம.** கூத்தாடுக; **க., து.** கூதாடு.

*[கூத்து + ஆடு.]*

**கூத்தாடுசன்னி** *kūttāḍu-caṉṉi,* பெ.(n.) 1. கூத்தாடச் செய்யும் வலிப்பு நோய் (சன்னி); dancing mania. 2. பருவப் பெண்களுக்கு காணும் ஒருவகை சூலக வலிப்பு; dancing chorea (சா.அக.).

*[கூத்தாடு + சன்னி.]*

**கூத்தாண்டவர்** *kūttāṇḍavar,* பெ.(n.) சிற்றூர்ச் சிறுதெய்வம் (இ.வ.); a village deity.

*[கூத்து + ஆண்டவர்.]*

*குறிப்பாகப் பேடுகளும் அலிகளும் வழிபடும் சிற்றூர்த் தெய்வமாகக் கருதப்படுகிறது.*

**கூத்தி** *kūtti,* பெ.(n.) 1. நாடகக்கணிகை (திவா.); female actor, dancer, dancing. 2. விலைமகள் (கொ.வ.); courtesan, prostitute. 3. வைப்பாட்டி; concubine, kept mistress. *“நட்டணைசேர் கூத்திமா ரோடு” (பணவிடு.225).*

*[கூத்து → கூத்தி.]*

**கூத்திக்கள்ளன்** *kūtti-k-kaḷḷan,* பெ.(n.) கூத்திகளோடு மிகவும் உறவாடுபவன் (இ.வ.); whoremonger.

*[கூத்தி + கள்ளன்.]*

**கூத்தியார்** *kūttiyār,* பெ.(n.) வைப்பாட்டி (கொ.வ.); concubine, kept mistress.

*[கூத்து→கூத்தி + ஆர்.]*

**கூத்து** *kūttu,* பெ.(n.) 1. நளிநயம், நடனம்; dance, dancing. *“ஆடுதுங் கூத்தே” (திவ். திருவாய், 1:5).* அல்லியம், கொட்டி, குடை, குடம், பாண்டரங்கம், மல், துடி, கடையம், பேடு, மரக்கால், பாவை என்னும் பதினொருவகைக் கூத்து; divine dances, eleven in number. viz alliyam, *koṭṭi, kūḍai, kudam, paṇḍaraṅgam, mal, tuḍi, kaḍaiyam, pēḍu, marakkāl, pāvai. “கொட்டியிவை காண் பதினோர் கூத்து” (சிலப். 3:14, உரை.).* 3. நாடகம்; dramatic performance, action. *“பிறவி மாமாயக் கூத்தினையே” (திவ். திருவாய் 8:4,11).* 4.விந்தைச் செயல்; strange event or incident. அங்கே ஏதாவது கூத்து நடக்கும் (உ.வ.). 5. கேலிக்கூத்து; roll or ludicrous action, as a pantomime. 6. குழப்பம்; confusion. 7. நாடகம் பற்றியமைந்த ஒரு கடைக்கழக நூல் (இறை.1 ப.5); a treatise of the last Sangam, on the art of dancing.

ம., க. கூத்து; துட. கூத்.

skt. kūrdda

*[குல் → குத்து → கூத்து (பலவகைகளில் கால் குத்திட்டு ஆடுவது).]*

**கூத்துக்களரி** *kūttu-k-kaḷari,* பெ.(n.) நாடகச்சாலை; play-house, theatre.

*[கூத்து + களரி.]*

**கூத்துக்காரன்** *kūttu-kāraṉ,* பெ.(n.) 1. கூத்தாடுவோன்; actor, dancer. 2. கூத்தாட்டுவோன் (வின்.); dancing-master. 3. நகையாடி (வின்.); buffoon, mimic, comical person.

ம. கூத்துகாரன்

*[கூத்து + காரன்]*

**கூத்துப்பண்ணு–தல்** *kūttu-p-paṇṇu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வேடிக்கைபண்ணுதல்; to make fun, to do a droll or funny action. 2. குழப்பஞ்செய்தல் (வின்.); to confound, derange.

*[கூத்து + பண்ணு.]*

**கூத்துப்பாட்டு** *kūttu-p-pāṭṭu,* பெ.(n.) நாடகப்பாடல் (வின்.); songs sung in dancing and dramatic performances.

*[கூத்து + பாட்டு]*

**கூத்துப்பொட்டல்** *kūttu-p-poṭṭal,* பெ.(n.) நாடகவெளி; maiden or the open space for dramatic performances.

*[கூத்து + பொட்டல்]*

**கூத்துவிடு–தல்** *kūttu-viḍu-,* 20 செ.கு.வி.(v.i.) 1. நாடகக் கதை மாந்தரை அவைக்கு அறிவித்தல்

(வின்.); to introduce the actors in a play. 2. வேடிக்கை செய்தல் (யாழ்ப்.); to say something odd or droll, to do a funny or humorous thing to amuse an audience.3. தெருக்கூத்து நடத்துதல்; to arrange for a street play.

*[கூத்து + விடு.]*

**கூத்துள் படுவோன்** *kūttuḷ-paḍuvōṉ*, பெ.(n.) ஆடலாசிரியன்; one who teaches dancing. *"கூத்துள் படுவோன் காட்டிய முறைமையின்.... இருங்கல நல்கி" (சிலப். 26:125).*

*[கூத்து + உள்படு + (ஆன்) ஒன்.]*

**கூதம்** *kūdam*, பெ.(n.) 1. குதம்; anus. 2. தூதுவளை; three lobed night shade. 3. வெள்ளரிக்காய்; cucumber.

*[குள் → குது → குதம்.]*

**கூதல்** *kūdal*, பெ.(n.) 1. குளிர்; sensation of cold, chillness. *"கூர்மழை போற் பனிக்கூதல்" (திவ். பெருமாள். 6:1).* 2. காய்ச்சற் குளிர் (வின்.); chills before intermittent fever.

*[குது → குதல் → கூதல்.]*

**கூதல்விறை-த்தல்** *kūdal-viṟai-*, 4 செ.கு.வி.(v.i.) குளிரினால் விறைத்தல்; being stiffened with cold. (சா.அக.).

*[கூதல் + விறை-.]*

**கூதளச்சான்** *kūtaḷaccāṉ*, பெ.(n.) பெருங்கோரை; a kind of *kōray* grass (சா.அக.).

*[குதள் → கூதள் + அச்சன்.]*

**கூதளம்** *kūdaḷam*, பெ.(n.) 1. தூதுவளை (மலை.); three-lobed night shade. 2. **கூதாளி** பார்க்க; see *kūdāḷi*. *"கூதளங் கவினிய குளவிமுன்றி"* (புறநா. 168,12). 3. வெள்ளரி; mottled melon.

*[கூதள் → கூதளம்.]*

**கூதற்காய்-தல்** *kūdaṟ-kāy-*, 2 செ.கு.வி.(v.i.) குளிர்காய்தல் (இ.வ.); to warm oneself.

*[கூதல் + காய்]*

**கூதற்காற்று** *kūdaṟ-kāṟṟu*, பெ.(n.) சில்லென்று அடிக்குங் குளிர்காற்று ; chill breeze in cold weather (சா.அக.)

*[கூதல் + காற்று.]*

**கூதறை** *kūdaṟai*, பெ.(n.) 1. இழிந்தது (இ.வ.); that which is mean, base, vulgar. 2. இழிந்த குணமுடையவன்-ள்; base, vulgar, disreputable. *"மாண்ட மனமுடைய ராகாத கூதறைகள்" (பழ.106).* 3. கிழியல் (சங். அக.); mutilation.

*[குள் → குது → கூது → கூதறை.]*

**கூதாரி** *kūdāri*, பெ.(n.) வெள்ளரி (மலை.); mottled melon.

*[கூதல் → கூதாரி.]*

**கூதாளம்** *kūdāḷam*, பெ.(n.) **கூதாளி** (திவா.) பார்க்க; see *kūdāḷi*.

*[கூதளம் → கூதாளம்.]*

**கூதாளி** *kūdāḷi*, பெ.(n.) 1. செடிவகை (திவா.); convolvulus. 2. தூதுவளை (வின்.); three lobed night shade.

*[கூதளம் → கூதாளி.]*

**கூதி** *kūdi*, பெ.(n.) பெண்குறி; pudendum muliebre.

மறுவ. துள், பூக்கு, புண்டை.

ம., து. கூதி

*[குள் (துளை) → குத்து → கூதி.]*

**கூதிர்** *kūdir*, பெ.(n.) 1. பனிக்காற்று (பிங்.); chill wind. 2. காற்று (பிங்.); wind. 3. சாரற் காலமெனப்படும் துலை (ஐப்பசி) நளி (கார்த்திகை) மாதங்கள் (தொல். பொருள். 6); autumn, the months of *Aippaśi* and *Kārttigai*, one of six seasons. 4. குளிர் (வின்.); sensation of cold.

*[கூதல் → கூதிர்.]*

**கூதிர்ப்பாசறை** *kūdir-p-pāšarai,* பெ.(n.) போர்மேற் சென்ற அரசன் கூதிர்காலத்தில் தங்கும் படைவீடு (தொல். பொருள்.76); winter encampment of a king waging war.

*[கூதல் → கூதிர் + பாசறை.]*

**கூதை** *kūdai,* பெ.(n.) காற்று (திவா.); wind.

*[ஊதை → கூதை]*

**கூதைசெய்தல்** *kūdai-cey-,* 1 செ.குன்றாவி (v.t.) காதை மூளியாக்குதல்; to mutilate the ear. *"காது செய்வான் கூதை செய்து" (திவ். திருவாய். 9:1.9).*

*[கூதை + செய்.]*

**கூந்தல்[1]** *kūndal,* பெ.(n.) 1. பெண்டிர் தலைமயிர் (பிங்.); long flowing tresses of a woman. 2. மயிற்றோகை; peacock's tail. *"கூந்தன் மென்மயில்" (கம்பரா.சித்திரகூட.31).* 3. குதிரைப் பிடரிமயிர்; horse's mane. *"கூந்தற் குதிரை" (கலித். 163: 53).* 4. யானைக் கழுத்து மயிர்; hair of an elephant's neck. *"கூந்தலம் பிடியின்" (நைடத. அன்.தூது.23).* 5.குதிரை; horse. *"கூந்த லென்னும் பெயரொடு" (பரிபா. 3:31).*

**ம.** கூந்தல்; **க.** கூதல்; **து.** கூசல்.

**skt.** kūndala

*[குல் → குய் → குய்ந்தல் (கருமை) → கூந்தல்]*

**கூந்தல்[2]** *kūndal,* பெ.(n.) கேசியென்னும் அரக்கன்; an *Asura* slain by *Krishnan.* *"கூந்த லெரிசினங் கொன்றோய்" (பரி.பா.3:31).*

*[கூந்தன் → கூந்தல்]*

**கூந்தல்[3]** *kūndal,* பெ.(n.) 1. தலையிடம்; head, as of plants. *"கூந்த லேந்திய கமுகங் காய்க்குலை" (சீவக. 2403).* 2. **கூந்தற்பனை** (வின்.) பார்க்க; see *kūndar-panai,* jaggery palm. 3. கமுகு பனை இவற்றின் ஓலை (வின்.); leaves of palmyra and areca palms. 4. விழாக்காலங்களில் வாயிலை அழகுபடுத்தும் குருத்தோலைத் தோரணம் (யாழ்ப்.); tender coconut leaves formed into festoons and used to decorate arched portals on festive occasions. 5. கமுகங்குலைக் கூந்தல் (வின்.); spathe of arecanut trees. 6. பூ முதலியவற்றின் மெல்லியதோர் உறுப்பு; filaments, treads, fibres, fringes. 7. குதிரைவாற்சாமை (தைவெ.தைல.17); horse-tails millet.

*[கூந்தல் = கூந்தல் போன்றது, கூந்தல் உள்ள இடம்]*

**கூந்தல்[4]** *kūndal,* பெ.(n.) காரைக்குட்டிமீன்; seafish, pale, dull-read, attaining 1ft. in length.

*[குந்தல் → கூந்தல்]*

**கூந்தல்[5]** *kūndal,* பெ.(n.) 1. தேங்காயை மூடியிருக்கும் நார் (திருநெல்.); the fibrous covering of coconut. 2. கமுகு (அகி.நி.); areca palm.

*[கூந்தல்[1] + கூந்தல்[3].]*

**கூந்தல்கொள்(ளு)-தல்** *kūndal-kol-,* 16 செ.கு.வி. (v.i.) மகளிரைத் தழுவுதல்; lit., to lay hold of a woman's tresses, to embrace a woman. *"யாரிவனெங் கூந்தல் கொள்வான்" (கலித். 89).*

*[கூந்தல் + கொள்-.]*

**கூந்தல்சேகம்** *kūndal-šēkam* பெ.(n.) தென்னை மரத்தின் மட்டை; the stem of coconut leaves (சா.அக.).

*[கூந்தல் + சேகம்]*

**கூந்தல்தொடு-தல்** *kūndal-todu-,* 20 செ.கு.வி.(v.i.) **கூந்தல்கொள்(ளு)-தல்** பார்க்க; see *kūndal-kol-,* *"பூங்கோதை வேண்டேங் கூந்தல் தொடேம்" (சீவக. 1229).*

*[கூந்தல் + தொடு-.]*

**கூந்தல்மாரி** *kūndalmāri,* பெ.(n.) தேவதாரு; deccani deodar (சா.அக .).

*[கூந்தல் + மாரி.]*

**கூந்தல்முள்ளி** *kūndal-mulli,* பெ.(n.) நீண்ட முட்களையுடைய ஒருவகை முள்ளி; a thishts with long thorns (சா.அக.).

*[கூந்தல் + முள்ளி.]*

**கூந்தல்வேல்** *kūndal-vēl* பெ.(n.) ஒருவகை வேலமரம்; சாலி; elephant thorn (சா.அக.).

*[கூந்தல் + வேல்.]*

**கூந்தலழகி** *kūndalalagi,* பெ.(n.) ஒரு மரம்(சா.அக.); a tree.

*[கூந்தல் + அழகி.]*

**கூந்தலறுகு** *kūndalarugu,* பெ.(n.) அறுகம் புல்வகை (வின்.); hairy-grass.

*[கூந்தல் + அறுகு.]*

**கூந்தலாற்று-தல்** *kūndal-ārru-,* 5 செ.கு.வி.(v.i.) ஈரமயிரைக் கோதி உலர்த்துதல்; to loosen and dry one's hair after bathing.

*[கூந்தல் + ஆற்று.]*

**கூந்தலெழில் மாணிக்கம்** *kūndalelil-māṇikkam* பெ.(n.) மயிர்மாணிக்கம்; morning mallow (சா.அக.).

*[கூந்தல் + எழில் + மாணிக்கம்.]*

**கூந்தளம்பாவை** *kūndalam-pāvai,* பெ.(n.) பூவகை; convolvulus flower. *"காந்தமணி கூந்தளம் பாவை நீண்டு" (சீவக.1671).*

*[கூந்தல் + அம் + பாவை.]*

**கூந்தற்கணவாய்** *kūndar-kaṇavāy,* பெ.(n.) மீன்வகை (வின்.); a species of cuttlefish.

*[கூந்தல் + கணவாய்.]*

**கூந்தற்கமுகு** *kūndar-kamugu,* பெ.(n.) 1. கமுகு வகை(பிங்.); Areca palm. 2. தாளிப்பனை (இராட்.); talipot palm.

*[கூந்தல் + கமுகு.]*

**கூந்தற்பனை** *kūndar-panai,* பெ.(n.) 1.தாளிப்பனை (பிங்.); talipot palm. 2. திப்பிலிப்பனை; jaggery palm.

*[கூந்தல் + பனை.]*

**கூந்தற்பனைக்கள்** *kūndar-panai-k-kal,* பெ.(n.) கூந்தற்பனையின் பாளையினின்று எடுக்கும் கள்; toddy extracted from the spathe of the blastered sag tree (சா.அக.).

*[கூந்தல் + பனை + கள்.]*

இதனைப் புளிக்க வைத்து வாலையிலிட்டுக் காய்ச்சி ஒரு வித வெறிநீர் இறக்கலாம். இதை மருந்தில் பயன்படுத்துவர். இது மலச்சிக்கலைப் போக்கும். இக்கள்ளைக் காய்ச்சி எடுக்கும் வெல்லம் கூந்தல் வெல்லம்.

**கூந்தற்பனைச்சாராயம்** *kūndar-panai- c-cārāyam,* பெ.(n.) **கூந்தற்பனைக்கள்** பார்க்க; see *kūndar-panai-k-kal.*

*[கூந்தற்பனை + சாராயம்.]*

**கூந்தற்பனைவெல்லம்** *kūndar-panai-vellam,* பெ.(n.) கூந்தற்பனையின் சாற்றினின்று எடுக்கும் வெல்லம்; jaggery obtained from the sap of bastard sags tree (சா.அக.).

*[கூந்தற்பனை + வெல்லம்.]*

**கூந்தற்பாசி** *kūndar-pāsi,* பொ.(n.) நீர்ப்பூடுவகை (யாழ்.அக.); trailing moss.

*[கூந்தல் + பாசி.]*

**கூந்தற்பூகம்** *kūndar-pūgam,* பெ.(n.) **கூந்தற் கமுகு**[1] பார்க்க; see *kūndar-kamugu.*

*[கூந்தல் + பூகம்.]*

**கூந்தன்மா** *kūndaṉ-mā,* பெ.(n.) குதிரை; horse. *"கூந்தன்மாவென்று கண்டார் சொல்லும்படி" (பரிபா. 3.31, உரை.).*

*[கூந்தல் = பிடரி மயிர். கூந்தல் + மா.]*

**கூந்தாலம்** *kūndālam,* பெ.(n.) ***கூந்தாலி*** பார்க்க; see *kūndāli.*

*[கொந்து → குந்தாலம் → கூந்தாலம்.]*

**கூந்தாலி** *kūndāli,* பெ.(n.) கடப்பாரை (வின்.); crow-bar, pick-axe.

**ம.** குந்தாலி

*[கொந்து → கொந்தாலி → கூந்தாலி.]*



கூந்தாலி

**கூந்தியாவுழுந்து** *kūndiyā-vuḻundu,* பெ.(n.) உழுந்துவகையு ளொன்று (நாஞ்சி.); a kind of black-gram.

*[கொத்து → கொந்து → கொந்தியம் → கூந்தியம் + உழுந்து.]*

**கூந்து** *kūndu,* பெ.(n.) ***கூந்தல்***[3,4] பார்க்க; see *kūndal. "கூந்திளம் பிடி" (சூளா. நாட்டு. 19).*

*[குல் → கூல் → கூந்து.]*

**கூப்பாடு**[1] *kūppāḍu,* பெ.(n.) பேரொலி; great noise, up roar (சா.அக.). மெதுவாகப் பேசுவதை விட்டு ஏன் கூப்பாடு போடுகிறாய்? (உ.வ.).

*[கூ[3] + பாடு – கூப்பாடு.]*

**கூப்பாடு**[2] *kūppāḍu,* பெ.(n.) 1. கூப்பிடுகை; call, summoning. 2. பேரொலி; clamour, great noise.

**ம.** கூப்பாடு

*[கூ + பாடு – கூப்பாடு.]*

**கூப்பாடுதூரம்** *kūppāḍu-tūram,* பெ.(n.) ***கூப்பிடு தூரம்*** பார்க்க; see *kūppiḍu-tūram.*

*[கூப்பாடு + தூரம்.]*

**கூப்பிடாரொட்டி** *kūppiḍāroṭṭi,* பெ.(n.) கரு நொச்சி (சா.அக.); a plant.

*[கூப்பு + இடர் + ஒட்டி – கூப்பிடாரொட்டி.]*

**கூப்பிடு**[1]**–தல்** *kūppiḍu-,* 9 செ.குன்றாவி(v.t.) 1. அழைத்தல்; to call, call by name, summon. 2. வரவழைத்தல்; to invite.

**Fin.** kutsua; **Hunti.** kutta; **Lap.** goccot; **Jap.** kuch; **Q.** jotokay.

*[கூவு → கூவிடு → கூப்பிடு.]*

**கூப்பிடு**[2]**–தல்** *kūppiḍu-,* 19 செ.கு.வி.(v.i.) 1. அச்சம், துயரம் முதலியவற்றாற் கத்துதல்; to call out, cry out, halloo, shriek. 2. உதவி வேண்டிக் கரைதல்; cry for help.

**ம.** கூப்பிடுக

*[கூவு → கூவிடு → கூப்பிடு.]*

**கூப்பிடு**[3]**–தல்** *kūppiḍu-,* 20 செ.குன்றாவி.(v.i.) தொழுதற்குக் கைகுவித்தல்; to join hands in worship. *"கூப்பிட்டேன் சொல்கைதனை"* (தனிப்பா.II, 98,251).

*[கூ + இடு – கூவிடு → கூப்பிடு.]*

**கூப்பிடு**[4] *kūppiḍu,* பெ.(n.) 1. முறையீடு; calling for aid supplication. *"எழுந்தன ணமரர் கூப்பிட்டால்" (உத்தரரா. வரையெடு.77).* 2. கூப்பிடு தொலைவு; calling distance *"கூப்பிடு கடக்குங் கூர்நல லம்பின்" (மலைபடு. 421).*

*[கூப்பிடு[1] → கூப்பிடு[4]]*

**கூப்பிடுதூரம்** *kūppiḍu-tūram,* பெ.(n.) **கூப்பிடு தொலைவு** பார்க்க; see *kuppiḍu-tolaivu.*

*[கூப்பிடு + தூரம்.]*

**கூப்பிடுதொலைவு** *kūppiḍu-tolaivu,* பெ.(n.) கூப்பீடு, ஒரு குரோசவளவு (திவா.); lit., the distance at which a shout can be heard Indian league. ஒருவன் கூப்பிட்டாற் பிறன் கேட்குந்தொலைவு.

**மறுவ.** கூப்பிடுதொலைவு

*[கூப்பிடு + தொலைவு.]*

எண்சாண் கோல் ஐந்நூறு கொண்ட தொலைவு ஒரு கூப்பீடு (குரோசம்) எனப்படும்.

**கூப்பிடுவான்** *kūppiḍuvāṉ,* பெ.(n.) கதறிக் கொண்டே இறக்கச் செய்வதாகிய ஆட்டுநோய் (யாழ்ப்.); a kind of lung disease especially among goats, causing continuous bleating and sudden death.

*[கூவிடு → கூப்பிடு → கூப்பிடுவான்.]*

**கூப்பில்** *kūppil,* பெ.(n.) பூசுணைக்காய்; pumpkin (சா.அக.).

**மறுவ.** கும்பளம்

*[கும்பு → கூம்பு → கூப்பில்.]*

**கூப்பீடு** *kūppīḍu,* பெ.(n.) 1. கூப்பாடு; call, whoop. *"வருந்திக் கூப்பிடுங் கூப்பீட்டைக் கேட்கவும்"* (புறநா.44, உரை). 2. கூப்பிடுதூரம்; calling distance. *"முழநான்குகோல் அக்கோலைஞ்ஞூறு கூப்பீடு" (வீரசோ.யாப்.33,உரை).*

*[கூப்பிடு → கூப்பீடு.]*

**கூப்பு[1]-தல்** *kūppu-,* 18 செ.குன்றாவி.(v.t.) 1. கைகுவித்தல்; to join hands as in worship. *"வாளொடுங் கோலொடுங் கூப்பு" (சீவக. 430).* 2. குவித்தல்; to heap up, as sand or grain. *"கூப்பிய கனக மாழையால்" (சீவக. 913).* 3.சுருக்குதல்; to close, contract, shut in, as an umbrella, to withdraw, draw in, as the sun his rays. *சூரியன் கிரணங்களைக் கூப்பிட்டுக் கொண்டு மறைந்தான் (வின்.).*

**ம.** கூப்புக

*[குவிப்பு → கூப்பு.]*

**கூப்பு** *kūppu,* பெ.(n.) குவியச் செய்கை; joining hands as in worship. *"என் கைகூப்புச் செய்கையே" (திவ். திருவாய். 4:3,2).*

*[குவி → குவிப்பு → கூப்பு.]*

**கூப்புரம்** *kūppuram,* பெ.(n.) **கூப்புறம்** பார்க்க; see *kūppuṟam.*

*[குவி + புறம் – குவிபுறம் → கூப்புறம் (கொ.வ.).]*

**கூப்புறம்** *kūppuṟam,* பெ.(n.) முழங்கை; elbow (சா.அக.).

*[குவி + புறம் – குவிபுறம் → கூப்புறம் (கொ.வ.).]*

**கூபகம்[1]** *kūbagam,* பெ.(n.) இடுப்பிலுள்ள எலும்புக் கூட்டின் குழிவிடம் ( இங்.வை.13); pelvis.

*[குள் → குவ் → கூவல் → கூவகம் → கூபகம்.]*

**கூபகம்[2]** *kūbagam,* பெ.(n.) மலைநாட்டிற் கொல்லத்தைத் தலைநகராகக் கொண்ட ஒரு நாடு; name of a country whose capital was Quilon. *"கூபக மிரட்ட மொட்டம்" (பாரத. படை.19) (T.A.S.II.16).*

*[கூவல் → கூபம் (பள்ளம், பள்ளத்தாக்கு) → கூபகம்.]*

**கூபம்** *kūbam,* பெ.(n.) 1. கிணறு; well. 2. ஊற்றுக் குழி; spring (சா.அக.).

*[கூவல் → கூவம் → கூபம்.]*

**கூபரம்** *kūbaram,* பெ.(n.) முழங்கை; elbow.

*[கூப்புறம் → கூபரம் (கொ.வ.).]*

**கூம்பல்** *kūmbal,* பெ.(n.) குமிழமரம் (திவா.); coomb teak.

**ம.** கூம்பன்

*[கூம்பு → கூம்பல்.]*

**கூம்பு[1]–தல்** *kūmbu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. குவிதல்; to close, to shut, as a flower *"செய்ய கமல மலர்கூம்ப" (நைடத. சந்திரோ.2).* 2. ஒடுங்குதல், சுருங்குதல் (சூடா.); to contract, shrink. 3. ஊக்கங் குறைதல்; to lose courage, zeal or enthusiasm. *"வடவர் வாடக் குடவர் கூம்ப" (பட்டினப். 276).* 4. சேறு (வின்.); mud. கூம்பினிற் புதைத்த கல் (W.).

**ம.** கூம்புக

*[குவி → கும்பு → கூம்பு.]*

**கூம்பு[2]** *kūmbu,* பெ.(n.) 1. பாய்மரம்; mast of a vessel. *"கூம்புமுதன் முறிய வீங்குபிணி யவிழ்ந்து" (மணிமே. 4.30).* 2. தேர்மொட்டு (திவா.); cone shaped pinnacle of a chariot. 3. பூமொட்டு; bud. *"தாழைக் கூம்பவிழ்ந்த வொண்பூ"* (ஐந்.ஐம்.49).

*[குழும்பு → கும்பு → கூம்பு.]*

**கூம்பூரணம்** *kūmbūraṇam* பெ.(n.) கொள்ளுக் காய்வேளை; purple wild indigo (சா.அக.).

*[கூம்பு + பூரணம்.]*

**கூமம்** *kūmam,* பெ.(n.) நீர்நிலை (யாழ்.அக.); pond, pool.

*[கூவல் → கூபம் → கூமம் (கொ.வ.).]*

**கூமரை** *kūmarai,* பெ.(n.) ***காட்டிலவு*** (மலை.) பார்க்க; see *kāṭṭilavu.*

*[கூம்பு + உறை – கூம்புறை → கூவுரை → கூமரை (கொ.வ.).]*

**கூமா** *kūmā,* பெ.(n.) ***கூவமா*** (யாழ்ப்.) பார்க்க; see *kūvamā.*

*[கூவமா → கூமா.]*

**கூமுட்டாள்** *kūmuṭṭāḷ,* பெ.(n.) பெருமூடன் (இ.வ.); stupid, fool, a term of abuse.

**மறுவ.** கூமுட்டை, கூழ்முட்டை

*[கூழ் + முட்டை + ஆள். கெட்டுப்போன முட்டை போன்று பயன்படாத ஆள்.]*

**கூமுட்டை** *kūmuṭṭai,* பெ.(n.) ***கூழ்முட்டை*** (இழி.வ.) பார்க்க; see *kūḻ-muṭṭai.*

*[கூழ்முட்டை → கூமுட்டை.]*

**கூர்[1]–தல்** *kūr-,* 16 செ.கு.வி.(v.i.) 1. மிகுதல்; to be abundant, excessive. *"பெருவறங் கூர்ந்த கானம்" (பெரும்பாண். 23).* 2. விருப்பங்கொள்ளுதல்; to covet hanker after. *"எங்கையர் தோள் கூடினான்பின் பெரிது கூர்ந்து" (திணைமாலை. 124).* 3. வளைதல்; to bend. *"மெய்கூர்ந்த பனியொடு" (கலித். 31:6).* 4. அளவு குறைதல், குன்னாத்தல் (நெடுநல், 9 உரை); to contract with cold.

*[குல் → கூடல் → கூழ். குல் = கூடுதல் கருத்து வேர் மிகுதல், மேற்செல்லுதல், வளைதல், சுருங்கல் பொருள்களில் விரிந்தது.]*

**கூர்–த்தல்** *kūr-,* 12 செ.கு.வி.(v.i.) 1. மிகுதல்; to be abundant, excessive. *"கூர்ப்புங் கழிவு முள்ளது சிறக்கும்"* (தொல்.சொல். 314). 2. கூர்மையாதல்; to be sharp, as the edge or point of an instrument *"கூர்க்குநன் மூவிலைவேல்" (தேவா.367:8).* 3. அறிவு நுட்பமாதல்; to be keen, acute, penetrating, as the intellect. 4. உவர்த்தல்; to be saltish, brackish. *"மென்று றைப்புனல் கூர்ப்புறக் கடலேறி"* (தணிகைப்பு. திருநாட்.164). 5. சினத்தல்; to be enraged, become furious. *"கூர்த்துநாய் கவ்விக் கொளக்கண்டும்" (நாலடி.70).*

*[குல் → கூல் → கூர்.]*

**கூர்[3]** *kūr,* பெ.(n.) 1. மிகுதி; exuberance, abundance. *"கூரி லாண்மைச் சிறியேன்" (புறநா.75:4).* 2. கூர்மை; sharpness, as of a point or edge. *"கூர்வேற் கோன்"* (திவ்.பெரியாழ்.4:2,7). 3. கூர்மை

யுள்ள நுனி (இ.வ.); pointed edge. 4. குயவன் சக்கரத்தைத் தாங்கும் ஓர் உறுப்பு; the stand or support of a potter's wheel. *"கூரினை யிழந்து போய்க் குலாலன் சக்கர நீர்மைய தானது"* (கந்தபு. தாரக.136). 5. இலையின் நடுநரம்பு (யாழ்ப்.); fibre, leaf rib, as of the neem. 6. கதிர்க்கூர் (வின்.); awn, beard of grain. 7. கதவுக்குடுமி; projecting pivots on which a door swings. 8. காரம்(வின்.); pungency. 9. குத்துப்பாடான பேச்சு; cutting or sarcastic speech.

**Fin.** karki; **Es.** kark; **Mong.** gurca.

*[குல் → கூல் → கூர்.]*

*kūr*, a sharp point. Comp. HEB. *kūr*, to pierce, to bore; SANS. *khur*, to cut.

**கூர்**[4] *kūr*, பெ.எ.(adj.) 1. மிக்க; intense, excessive *"கூரிருட் பிழம்பே"* (*நைடத.மாலை. 11*). 2. சிறந்த; fine *"கூர்ஞ்செக்கரே"* (திருக்கோ. 346).

*[குல் → கூல் → கூர்.]*

**கூர்க்கறுப்பன்** *kūr-k-kaṟuppaṉ*, பெ.(n.) உயர்ந்த நெல்வகை (வின்.); a kind of bearded paddy of superior quality.

*[கூர் + கறுப்பன். (கறுப்பன் = தாடியுடைய கறுப்பன் தெய்வம்).]*

**கூர்கெட்டுப்போ-தல்** *kūr-keṭṭu-pō-*, 8 செ.குன்றாவி (v.t.) அறிவு மழுங்குதல்; becoming dull witted through old age (சா.அக.). கூர்கெட்டவனாயிருக்காதே.

*[கூர் + கெட்டு + போ-.]*

**கூர்கெடல்** *kūr-keḍal*, பெ. (n.) அறிவு மழுங்கல்; becoming dullwitted (சா.அக.).

*[கூர் + கெடல்.]*

**கூர்கெடு-தல்** *kūr-keḍu-*, 20 செ.கு.வி.(v.i.) 1. நுனி மழுங்குதல்; to become blunt, dull, to lose point, as a tool. 2. அறிவு மழுங்குதல்; to become dull-witted, to lose one's sharpness of intellect, as in old age.

*[கூர் + கெடு.]*

**கூர்கேவு** *kūr-kēvu*, பெ.(n.) ***வெண்கடுகு*** (மலை.) பார்க்க; see *veṉ-kaḍugu.*

*[கூர் + கேவு. கடுகு → கடுவு → கேவு (கொ.வ.).]*

**கூர்ங்கண்** *kūr-ṅ-kaṇ*, பெ.(n.) ஊடுருவிப் பார்க்குங் கண்; sharp, piercing eyes.

*[கூர் → கூர்ம் + கண்.]*

**கூர்ச்சகம்** *kūr-c-cagam*, பெ.(n.) பல்லுக்குச்சி (யாழ்.அக.); tooth brush.

*[கூர் + (சாகம்) சகம்.]*

**கூர்ச்சசேகரம்** *kūrccacēgaram*, பெ.(n.) தென்னை மரம்; coconut tree ( சா.அக.).

*[கூர் → கூர்த்த (உயரமான) → கூர்ச்ச + சேகரம். செம் + கேரம் – செங்கேரம் → சேகரம் (தென்னை).]*

**கூர்ச்சம்**[1] *kūrccam*, பெ.(n.) கட்டடத்திற்கு உதவுஞ் சிறுகால் (இ.வ.); small-sized post used in building.

*[கூர் → கூர்த்தம் (நெடுங்கழி) → கூர்ச்சம் (கொ.வ.).]*

**கூர்ச்சம்**[2] *kūrccam*, பெ.(n.) 1. தருப்பை (பிங்.); darbha grass. 2. மறை (வேதக்)க் கருமங்களிற் பயன்படுத்தும் தருப்பைக் கொத்து; bundle of darbha grass used in ceremonies and sacrifices *"கோலும் புல்லும் ஒரு கையிற் கூர்ச்சமும்"* (*தேவா.497:8*).

*[கூர் → கூர்த்தம் (நெடும்புல்) → கூர்ச்சம்.]*

**கூர்ச்சரம்** *kūrccaram*, பெ.(n.) 1. குச்சர மாநிலம்; Gujarat state. 2. ஐம்பத்தாறு நாடுகளுளொன்று; (திருவேங்.சத.97); Gujarat, one of 56 ancient countries.

Gur, Gujjar, Gujari, Gurjar

*[குச்சரம் → கூச்சரம்: குச்சரம் = ஆலமரம். அம்மரத்தின் கீழ் நடந்த குச்சரர் வாணிகம், வணிகரின் குடிப்பெயர், வணிகரால் பெயர் பெற்ற நிலப்பகுதி.]*

**கூர்ச்சரி** *kūrccari,* பெ.(n.) பண்வகையு ளொன்று (பரத.இராக.56); a specific melody-type.

*[குச்சம் → குச்சரி = இடுப்பில் கட்டிக் கொள்ளும் மணி, அம் மணியோசைக்கு ஏற்ப ஆடும் ஆடல்.]*

**கூர்ச்சாரம்** *kūrccāram,* பெ.(n.) சிவச்சாரம் (சா.அக.); sivacāram.

*[கூர் + சாரம்.]*

**கூர்ச்சி**[1] *kūrcci,* பெ.(n.) ***குருச்சி***[1] பார்க்க; see *kurucci.*

*[குருச்சி → கூர்ச்சி.]*

**கூர்ச்சி**[2] *kūrcci,* பெ.(n.) கூர்மை; sharpness, keenness, pointedness. *"கூர்ச்சிவா யரவம் வீழ்த்தி" (குற்றா.தல.கவுற்.10).*

*[கூர் → கூர்ச்சி.]*

**கூர்ச்சிகை** *kūrccigai,* பெ.(n.) 1. பூவரும்பு; flower-bud. 2. ஊசி; needle (சா.அக.). 3. தூரிகை கரிக்கோல் (எழுதுகோல்) (யாழ்.அக.); pencil, painter's brush.

*[கூர் → கூர்ச்சி → கூர்ச்சிகை.]*

**கூர்ச்சு** *kūrccu,* பெ.(n.) ***1. கூர்ச்சி***[2] பார்க்க; see *kūrcci*[2] 2. கூரிய முளை; pointed stick, stake. *கூர்ச்சுக் கட்டையாய்ப் போயிற்று (இ.வ.).*

*[கூர் → கூர்ச்சு.]*

**கூர்ச்சுக்குல்லா** *kūrccu-k-kullā,* பெ.(n.) நெடுங்குல்லா (வின்.); conical shaped cap.

*[கூர்ச்சு + குல்லா.]*

**கூர்சீவியபாக்கு** *kūr-šiviya-pākku,* பெ.(n.) இழைத்த பாக்குச் சீவல்; scraped betel nut (சா.அக.).

*[கூர் + சீவிய + பாக்கு.]*

**கூர்சீவு**[1]**-தல்** *kūr-šivu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கூராக்குதல்; to sharpen, make pointed. 2. சீவுதல்; to scrape, slice of as areca nut. *கூர்சீவின பாக்கு (இ.வ.).*

*[கூர் + சீவு.]*

**கூர்சீவு**[2]**-தல்** *kūr-šivu-,* 10 செ.கு.வி. (v.i.) 2. கொம்பு சீவுதல்; to sharper the horn of an ox to pierce the opponent. 2. பகை மூட்டுதல் (இ.வ.); to incite, as to a quarrel.

*[கூர் + சீவு-.]*

**கூர்த்தல்** *kūrttal,* பெ.(n.) மிகுதியாதல்; being excessive. 2. உவர்த்தல்; being saltish (சா.அக.).

*[கூர் → கூர்த்தல்.]*

**கூர்த்தலை** *kūr-t-talai,* பெ.(n.) 1. கூர்மையான தலை; cone head, tower head. 2. உள்ளங்கால், உள்ளங்கையின் மேற்பாகம்; the upper part of the palm of the hand and the sole of the feet (சா.அக.).

*[கூர் + தலை.]*

**கூர்த்திகை** *kūrttigai,* பெ.(n.) 1. மட்டிப்படைக்கலம் (திவா.); a weapon shaped like a sledge - hammer. 2. படைக்கலம்; arms, weapons.

*[கூர் + திகை.]*

**கூர்துளைஇணைப்பு** *kūr-tuḷai-eṇaippu,* பெ.(n.) இழைத்த இரு சட்டங்களிலும் 'நல்புறம்' வரைந்து இணைக்கும் இணைப்பு (தச்.தொ.வரி.); a mode of joining two wooden frames in joinery.

*[கூர் + துளை + இணைப்பு.]*

**கூர்ந்த பஞ்சமம்** *kūrnda-pañjamam,* பெ.(n.) மருதயாழ்த்திற வகை (பிங்.); an ancient secondary melody type of Marudam class.

*[கூர் → கூர்ந்த + பஞ்சமம்.]*

**கூர்நாடி** *kūr-nāḍi,* பெ.(n.) கடு (துரித) நாடி; sharp pulses (சா.அக.).

*[கூர் → கூர்ந்த + பஞ்சமம்.]*

**கூர்ப்பகழி** *kūr-p-pagaḻi,* பெ.(n.) 1. கனிம நஞ்சு (சங்.அக.); a mineral poison. 2. கூரான அம்பு; sharp arrow.

*[கூர் + பகழி.]*

**கூர்ப்படைதறை** *kūrppaḍaitaṟai,* பெ.(n.) கீழ்க்காய் நெல்லி; small leaved feather foil (சா.அக.).

*[கீழ்ப்படு + (அத்துறு) அத்துறை – கீழ்ப்படைத்துறை → கூர்ப்படைதறை (கொ.வ.).]*

**கூர்ப்பம்** *kūrppam,* பெ.(n.) புருவநடு; middle of the eye-brows (சா.அக.).

*[கூர் → கூர்ப்பம்.]*

**கூர்ப்பரம்** *kūrpparam,* பெ.(n.) முழங்கை (பிங்.); elbow.

*[கீழ் + புறம் – கீழ்ப்புறம் → கூர்ப்பரம் (கொ.வ.).]*

**கூர்ப்பிஞ்சு** *kūr-p-piñju,* பெ.(n.) மிதிபாகற் பிஞ்சு; ground bitter gourd creeper (சா.அக.).

*[கூர் + பிஞ்சு.]*

**கூர்ப்பிடு-தல்** *kūrppiḍu-,* 20 செ.கு.வி.(v.i.) தீட்டிக் கூர்மையாக்குதல்; to sharpen, as a tool. *"படையைக் கூர்ப்பிடுத லோடும்" (சீவக. 2303).*

*[கூர் → கூர்ப்பு (கூர்மை) + இடு.]*

**கூர்ப்பு** *kūrppu,* பெ.(n.) 1. உள்ளது சிறந்து மிகுகை (தொல்.சொல்.314); abundance, excess, improvement. 2. கூர்மை; sharpness, pointedness. *"கூர்ப்புக் கொண்டகட் கொடிச்சியர்"* (கந்தபு. திருநாட்டு.45). 3. அறிவுக்கூர்மை; keenness of perception, acuteness of intellect *"கூர்ப்பில்லா மனுடனும்"* (சூடா.11:132). 4. உவர்ப்பு; brackishness, saltness.

**ம.** கூர்ப்பு; **க., து.** கூர்பு

*[கூர் → கூர்ப்பு.]*

**கூர்மக்கருடமூலி** *kūrma-k-karuḍa-mūli,* பெ.(n.) வெள்ளை நாயுருவி; a white species of *nāyuruvi* (சா.அக.).

*[கூர்மம் + கருடன் + மூலி.]*

**கூர்மக்கை** *kūrma-k-kai,* பெ.(n.) பெருவிரலை நீட்டி மற்றை விரல்களை வளைத்துக் கீழ்நோக்கிப் பிடிக்கும் நாட்டிய முத்திரைக் கை (பரத.பாவ.39); gesticulation in dancing, in which the thumb is held straight and the other fingers are bent and pointed downwards.

*[கூர்மம் + கை.]*

**கூர்மகன்னியான்** *kūrma-k-kaṉṉiyāṉ,* பெ.(n.) சிவனார் வேம்பு; šhiva's neem (சா.அக.).

*[கூர் → கூர்மம் + (கண்ணி) கன்னி + ஆன்.]*

**கூர்மச்சக்கரம்** *kūrma-c-cakkaram,* பெ.(n.) ஓவியப்பா வகையுளொன்று (யாப்.வி.497); a kind of *cittirakavi.*

*[கூர்மம் + சக்கரம். கூர்மம் = ஆமை.]*

**கூர்மத்தானம்** *kūrma-t-tāṉam,* பெ.(n.) சம்மணம் அல்லது கால்மேல் கால் போட்டு உட்காருகை; a posture with folded legs (சா.அக.).

*[கூர்மமம் + தானம்.]*

**கூர்மத்தோடு** *kūrmattōḍu,* பெ.(n.) ஆமையோடு; the shell of a turtle (சா.அக.).

*[கூர்மம் + அத்து + ஓடு.]*

**கூர்மபுத்தி** *kūrma-putti,* பெ.(n.) நுண்ணிய அறிவு; keen intellect (சா.அக.).

*[கூர்மம் + புத்தி. புலம் → புந்தி → புத்தி.]*

**கூர்மம்** *kūrmam,* பெ.(n.) ஆமை; tortoise.

**மறுவ.** ஆமை, யாமை

*[குல் (வளைதல், தாழ்தல், பின்வாங்குதல்) கூல் → கூர் → கூர்மம். (கால்களை உள்ளிழுத்துக் கொள்வது. ஒ.நோ. கூர்மிகை (பின்முனை வளைந்த வீணை).]*

**கூர்மமகோதரம்** *kūrma-magōdaram,* பெ.(n.) காற்றுத் திரட்சியால் வயிற்றில் கட்டியைப்போல் வீக்கங் கண்டு, சோறு செல்லாமல் ஆமைபோல் வயிறு விம்மி இரைச்சலை உண்டாக்கும் ஒருவகை நோய்; a kind of abdominal dropry, swelling or enlargement of the abdomen resembling, the shape of a turtle (சா.அக.).

*[கூர்மம் + மகோதரம். **ஆமைவயிறு** பார்க்க; see āmaivayiṟu.]*

**கூர்மமுனிமுறிப்பு** *kūrma-muni-muṟippu,* பெ.(n.) மாழைகளை (உலோகங்களை)ச் செய்வதற்கான கூர்மமுனி சொன்ன முறை; the method in the works of the sage Kurmarishi for alterning the virtues of metals for the purposes of purifying them (சா.அக.).

*[கூர்மம் + முனி + முறிப்பு. கூர்மம் = நுண்ணறிவு.]*

**கூர்மல்லி** *kūr-malli* பெ.(n.) ஊசிமல்லிகை (சா.அக.); slender jasmine.

*[கூர் + மல்லி.]*

**கூர்மவளி** *kūrma-vāḷi,* பெ.(n.) மயிர்க் கூச்செறிப் பையும், விழி இமைப்பையும் உண்டாக்கும் பத்து வளிகளில் ஒன்று; one of the ten vital airs of the system causing the hairs stand in the ends, and winking of the eye lids (சா.அக.).

**மறுவ.** கூர்மன்

*[கூர்மம் + வளி.]*

**கூர்மவாயு** *kūrmavāyu,* பெ.(n.) ***கூர்மவளி*** பார்க்க; see *kūrma-vaḷi*

*[கூர்மம் + வாயு.]*

**கூர்மவிருக்கை** *kūrmā-v-irukkai,* பெ.(n.) சம்மணம் அல்லது கால்மேல் கால் போட்டு உட்காருகை; a posture with folded legs (சா.அக.).

*[கூர்மம் + இருக்கை.]*

**கூர்மாசனம்** *kūrmāšaṉam,* பெ.(n.) ***கூர்ம விருக்கை*** பார்க்க; see *kūrma-v-irukkai*

*[கூர்மம் + ஆசனம்.]*

**கூர்மிகை** *kūrmigai,* பெ.(n.) வீணைவகை யுளொன்று (பரத.ஒழிபி.15); a kind of lute.

*[கூர்மி → கூர்மிகை.]*

**கூர்முக்கோணம்** *kūr-mukkōṇam,* பெ.(n.) ஒவ்வொரு கோணமும் நேர்கோணத்துக்குக் குறைந்ததாயுள்ள முக்கோணம் (வின்.); acute-angled triangle.

*[கூர் + முக்கோணம்.]*

**கூர்முள்** *kūr-muḷ,* பெ.(n.) குதிரை செலுத்துங் கருவி; spurs. *"கூர்முட் பிடித்துத் தேர்மு னின்ற திசைமுகன்" (சிலப். 6:44,உரை.).*

**ம.** கூமுள்ளு (ஒரு மருந்துச் செடி)

*[கூர் + முள்.]*

**கூர்மை** *kūrmai,* பெ.(n.) 1. படைக்கலன் முதலிய வற்றின் கூர்; sharpness, pointedness. *"கூர்மை யின் முல்லை யலைக்கு மெயிற்றாய்" (நாலடி, 287).* 2. நுண்மை (திவா.); keenness of sight, acuteness, intellect, penetration, subtlety சிறப்பு (திருக்கோ. 346,உரை); excellence, superiority. 4. கல்லுப்பு (சங்.அக.); rock-salt. 5. வெடியுப்பு (சங்.அக.); saltpetre.

**ம.** கூர்மை

*[கூர் → கூர்மை.]*

**கூர்மைக்கரிவாள்** *kūrmai-k-karivāḷ,* பெ.(n.) வழலை (சவர்க்காரம்) (வின்.); soap.

*[கூர்மை + கரிவாள் (கரிப்புள்ளது).]*

**கூர்மைச்சி** *kūrmaicci,* பெ.(n.) குதிரைக் காதைப் போன்ற இலையுடைய ஒரு கள்ளி; a kind of spurge tree, the leaf of which resembles the horse's ear (சா.அக.).

*[கூர்மை → கூர்மைச்சி.]*

**கூர்மைநாரி** *kūrmai-nāri,* பெ.(n.) கெந்திலவணம் என்னும் உப்புவகை; a kind of salt (சா.அக.).

*[கூர்மை + நாரி.]*

**கூர்மைப்பார்வை** *kūrmai-p-pārvai,* பெ.(n.) நுட்பமான பார்வை; sharp sight.

*[கூர்மை + பார்வை.]*

**கூர்மைபார்[1]-த்தல்** *kūrmai-pār-,* 14 செ.கு.வி.(v.i.) படைக்கலனின் கூர்மையைச் சரிபார்த்தல்; to try the sharpness of an instrument.

மறுவ. கூர்பார்

*[கூர்மை + பார்.]*

**கூர்மைபார்[2]-த்தல்** *kūrmai-pār-,* 4 செ.குன்றாவி (v.t.) ஒருவன் திறமையைத் தெரிவு செய்தல்; to test one's acuteness of intellect or ability.

மறுவ. கூர்பார்

*[கூர்மை + பார்.]*

**கூர்மைமணல்** *kūrmai-maṇal,* பெ.(n.) வெள்ளி மணல்; white sand or silver ore. 2. நுண்ணிய மணல்; fine sand.

மறுவ. நுண்மணல்

*[கூர் + மணல்.]*

**கூர்மையில்லோன்** *kūrmai-y-illōṉ,* பெ.(n.) அறிவற்றவன், மந்தன் (பிங்.); dullard, stupid person.

*[கூர்மை + இல்லோன்.]*

**கூர்மையுப்பு** *kūrmai-y-uppu,* பெ.(n.) கல்லுப்பு; salt (சா.அக.).

*[கூர்மை + உப்பு.]*

**கூர்வலகம்** *kūrvalagam,* பெ.(n.) நாணல் (சா.அக.); kaus, a large and coarse grass.

*[கூர் + அலகு + அம்.]*

**கூர்வாங்கு-தல்** *kūr-vāṅgu-,* செ.குன்றாவி. (v.t.) படைக்கலன் முதலியவற்றைக் கூர்மையாக்குதல் (இ.வ.); to sharpen the edge, whet.

*[கூர் + வாங்கு.]*

**கூர்வாயிரும்பு** *kūr-vāy-irumbu,* பெ.(n.) அரிவாள் மணை (பிங்.); knife blade fastened to a piece of wood for cutting vegetables.

மறுவ. அரிவாள்மணை

*[கூர் + வாய் + இரும்பு.]*

**கூர்வாலி** *kūr-vāli,* பெ.(n.) செம்பருந்து; red hawk (சா.அக.).

*[கூர் + வாலி.]*

**கூர்வை** *kūrvai,* பெ.(n.) கப்பலின் குறுக்குக்கட்டை (கடற்.); transom, beam across the stern post of a ship.

*[கூர் + கூர்வை.]*

**கூரணம்** *kūraṇam,* பெ.(n.) 1. ***கோடகசாலை*** (மலை.) பார்க்க;see *kōḍagaśālai.* Coromandel gendarussa. 2. பாகல் (யாழ்.அக.); balsam pear.

*[கூர் → கூரணம். கூர் = பகுதி, கசப்பு மிகுதி.]*

**கூரம்[1]** *kūram,* பெ.(n.) யாழ்; a kind of, stringed musical instrument. *"கூர நாண் குரல்" (பரிபா.19:44).*

*[குல் → கூல் (வளைவு) → கூர் → கூரம்.]*

**கூரம்**[2] *kūram,* பெ.(n.) கூரணம் (மலை.) ; very small plant.

[கூரணம் → கூரம்.]

**கூரம்**[3] *kūram,* பெ.(n.) 1. கொடுமை; cruelty, severity. "கூரமிக்கவன்" (தேவா.893.5). 2. பொறாமை (திவா.); envy. jealousy. 3. அழிவு; destruction.

[கூல் (அழித்தல், கெடுத்தல்) → கூரம். கூர் = மிகுதல், பொங்குதல், கெடுதல்.]

**கூரம்பாகம்** *kūrampāgam,* பெ.(n.) கோடகசாலை (சா.அக.);

[கூரம் + பாகம்.]

**கூரம்பு** *kūrambu,* பெ.(n.) நிரையம்; a hell. "கூரம்பு வெம்மணல்" (ஏலா.67).

ம. கூரம்பு

[கூர் → கூரம்பு.]

**கூரரம்** *kūraram,* பெ.(n.) முழங்கை; elbow (சா.அக.).

[கீழ்ப்புறம் → கூர்ப்புறம் → கூரரம் (கொ.வ).]

**கூரல்**[1] *kūral,* பெ.(n.) 1. பெண்களின் தலைமயிர் (பிங்.); woman's hair. 2. இறகு (பிங்.); feathers.

[குரல் (கொத்து) → கூரல்.]

**கூரல்**[2] *kūral,* பெ.(n.) குடலினின்று பண்ணை என்னும் கூழ்ப்பசை செய்யப் பயன்படும் மீன்வகை; a large fish from the intestines of which a glue is made. 2. பறவையிறகு; plume of bird; feather.

ம. கூரல்

[குரல் (கொத்து) → கூரல்.]

**கூரறுக்கும்வாள்** *kūr-arukkum-vāl,* பெ.(n.) அரம்பவகை (c.) dovetail saw.

[கூர் + அறுக்கும் + வாள்.]

**கூரன்**[1] *kūran,* பெ.(n.) நெல்வகை (வின்.); a bearded kind of paddy.

[கூர் → கூரன்.]

**கூரன்**[2] *kūran,* பெ.(n.) நாய் (பிங்.); dog.

[குக்கல் → குக்கரன் → கூரன்.]

**கூரன்** *kūran,* பெ.(n.) ஆண்பாற் பெயர்வகை (யாப்.வி.537); a term indicative of the masculine gender.

[கூர் + அன்.]

**கூராக்கு–தல்** *kūrākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) கத்தி முதலியவற்றைக் கூர்படுத்துதல்; ; to make point, shaper.

ம. கூர்ப்பிடுக

[கூர் + ஆக்கு.]

**கூராணி** *kūr-āṇi,* பெ.(n.) ஆணிவகை (வின்.); sharp nail or pin.

ம. கூராணி

[கூர் + ஆணி.]

**கூராம்பிளாச்சு** *kūrām-pilāccu,* பெ.(n.) மண் கொத்தும் மரக்கருவி (யாழ்ப்.); a kind of pointed wooden shovel for grubbing up the earth.

[கூர் + ஆம் + பிளாச்சு.]

**கூரான்** *kūrān,* பெ.(n.) 1. குல்லான் (யாழ்.அக.); sharp pointed stake for digging. 2. பூடுவகை; a shrub.

[குல் → கூல் → கூர் → கூரான். குல் = குத்துதல்.]

**கூரியகண்** *kūriya-kan,* பெ.(n.) கூர்மையான கண்; keen eye (சா.அக.).

[கூர் → கூரிய + கண்.]

**கூரியபரணி** *kūriya-parani,* பெ.(n.) சிறுகுறிஞ்சா; small indian ipecacuanha (சா.அக.).

[கூரிய + பரணி.]

**கூரியம்**[1] *kūriyam,* பெ.(n.) கை, கால்; certain parts of the body as hands, feet etc. (சா.அக.).

*[கூறு → கூறியம் → கூரியம்.]*

**கூரியம்**[2] *kūriyam,* பெ.(n.) கூர்மை (யாழ்.அக.); sharpness.

*[கூர் → கூரியம்.]*

**கூரியவன்னி** *kūriya-vaṉṉi,* பெ.(n.) கொடிவேலி (சங்.அக.); ceylon leadwood.

*[கூர் → கூரி + வன்னி.]*

**கூரியன்** *kūriyaṉ,* பெ.(n.) 1. கூர்மையுள்ளவன்; sharp, clever person *"கூரியருங் கூரியரை யல்லாரை"* (சிவதரு. பாயிர. 6). 2. அறிவன் (புதன்); mercury. *"சுக்கில பக்க மேவுங் கூரியன்" (சேதுபு. இராமனரு.87).*

*[கூரி → கூரியன்.]*

**கூரியலவணம்** *kūriya-lavaṇam,* பெ.(n.) துரிசு; blue vitriol (சா.அக.).

*[கூரிய + லவணம்.]*

**கூரியவான்** *kūriyavāṉ,* பெ.(n.) நுண்ணறிவுள்ளோன்; man of acute intelligence, genius (சா.அக.).

*[கூர் → கூரியவன் → கூரியவான்.]*

**கூரிலவணம்** *kūr-ilavaṇam,* பெ.(n.) அமரியுப்பு (வின்.); salt taken from urine.

*[கூரி + லவணம்.]*

**கூருமி** *kūrumi,* பெ.(n.) உமி மூக்கு (வின்.); sharp tip of the husk.

*[கூர் + உமி – கூருமி (உமி மூடிய கூர்முனை).]*

**கூரெள்** *kūreḷ,* பெ.(n.) எள்வகை; a variety of sesame.

*[கூர் + எள்.]*

**கூரெள்ளெண்ணெய்** *kūr-eḷḷ-eṇṇai,* பெ.(n.) கூரெள் ஆட்டிய எண்ணெய்; oil extracted from the sesamum seed (சா.அக.).

*[கூர் + எள் + எண்ணெய்.]*

**கூரை** *kūrai,* பெ.(n.) 1. இறக்கச்சரிவு; sloping roof, commonly thatched with grass or palm leaf. *"குறுங்கூரைக் குடிநாப்பண்" (பட்டினப்.81).* 2. குடில் (பு.வெ.10,முல்லைப். 9,உரை); small hut, shed, cottage.

ம. கூர; பிரா. உர (வீடு)

*[கூர் → கூரை (கூர் முனை வடிவான வீட்டு முகடு, முகடு கொண்ட வீடு).]*

**கூரைக்கட்டு** *kūrai-k-kaṭṭu,* பெ.(n.) கூரை வீடு(வின்.); thatched house.

*[கூரை + கட்டு.]*

**கூரைக்கொட்டில்** *kūrai-k-koṭṭil,* பெ.(n.) மாட்டுக்கொட்டில்; thatched cattle shed.

*[கூரை + கொட்டில்.]*

**கூரைச்சால்** *kūrai-c-cāl,* பெ.(n.) மணப்பந்தலில் வைக்குந் தண்ணீர்ச்சால் (இ.வ.); water-pot placed on a marriage dais.

*[கூரை + சால்.]*

**கூரைத்தகடு** *kūrai-t-tagaḍu,* பெ.(n.) கூரையை மூடப் பயன்படும் இரும்புத்தகடு அல்லது மாழை (உலோக)த் தகடு (கட்.தொ.வரி.); metal sheets used as roofing material.

**கூரைதட்டு-தல்** *kūrai-taṭṭu-,* 5 செ.கு.வி.(v;i.) ஆண்பிள்ளை பிறந்தமைபற்றி மாமனோ அல்லது மற்ற உற்றாரோ மகிழ்ச்சிக் குறியாகக் கூரை யைத் தட்டுதல் (யாழ்ப்.); to tap the roof for joy, as the uncle or other relations do when a male child is born.

*[கூரை + தட்டு-.]*

**கூரைமானம்** *kurai-mānam,* பெ.(n.) கூரைப் பகுதியை மூடப் பயன்படும் ஓடு, புல், தகடு முதலிய பொருள்கள் (பொ.வழக்.); tiles, grass, thatch etc. used as roofing materials.

மறுவ. கூரைச்சாதனம்

*[கூரை + மானம்.]*

**கூரையில்லாச்சுவர்** *kūrai-y-illā-c-cuvar,* பெ.(n.) சவர்க்காரம்; washing soda (சா.அக.).

*[கூரை + இல்லா + சுவர். மரஞ்செடி கொடி நிழலின்றிக் கட்டாந்தரையாகக் காணப்படும் (சுவம்) சவுள் நிலம்.]*

**கூரைவீடு** *kūrai-vīḍu,* பெ.(n.) ஓலையாலேனும் புல்லாலேனும் வேய்ந்த வீடு; thatched house.

*[கூரை + வீடு.]*

**கூல்(லு)-தல்** *kūl(u),* 5 செ.கு.வி.(v.i.) 1. அழிதல்; to ruin, to destroy. 2. இடிந்து விழுதல்; to fall down.

**க., தெ.** கூலு

*[குல் → கூல்]*

**கூல்** *kūl,* பெ.(n.) 1. கூர்மை; sharpness. 2. நீட்சி; length.

*[குல் → கூல்]*

**கூலக்கடை** *kūla-k-kaḍai,* பெ.(n.) பலதவசக் கடை (சிலப்.14,211,உரை.); grain shop.

*[கூலம் + கடை.]*

*இன்று கூலக்கடை வீதியில் பொன் வாங்கலாம் (நெ.வழ.)*

**கூலகம்** *kūlagam,* பெ.(n.) கறையான் புற்று; ant hill (சா.அக.).

*[குல் → கூல் → கூலகம்.]*

**கூலத்தாடிகம்** *kūla-t-tāḍigam,* பெ.(n.) நாறு கரந்தை; sweet basil (சா.அக.).

*[கூலம் + தாளிகம் – கூலத்தாளிகம் → கூலத்தாடிகம்.]*

**கூலம்**[1] *kūlam,* பெ.(n.) மூங்கில் நெல், மணல் நெல் (ஐவனம்), நெல், புல், வரகு, தினை, சாமை, இறுங்கு (சோளம்), துவரை, இறகி, எள்ளு, கொள்ளு, பயறு, உழுந்து, அவரை, கம்பு, காராமணி, குதிரைவால் முதலிய பதினெண்வகைப் பண்டம்; grains specially of 18 kinds, viz., nel, pul, varagu, tiṉai, sāmai, iṟungu, tuvarai, īrāgi, eḷḷu, koḷḷu, payaṟu, uḻundu, avarai, kaḍalai, moccai *"கூலங்குவித்த கூல விதியும்" (சிலப்.14:211).*

**Fin.** kylvä; **Karel.** kulva; **Es.** kulvata; **Hung.** koles (millet).

*[குல் → கூல் (நீட்சி, கூரான கதிர்) → கூலம்.]*

**கூலம்**[2] *kūlam,* பெ.(n.) சோறு, உணவு ; boiled rice.

*[த.கூலம் >Skt. kūra. கூழ் → கூல் → கூலம்.]*

**கூலம்**[3] *kūlam,* பெ.(n.) கடைத்தெரு; street having shops and stalls on either side, bazaar street *"விளக்கொலி பரந்த வெறிகமழ் கூலத்து" (பெருங். உஞ்சைக் 33:82).*

*[கூல் → கூலம். கூலம் விற்கும் இடம், கடைத்தெரு.]*

**கூலம்**[4] *kūlam,* பெ.(n.) பண்ணிகாரம் (பிங்.); confectionery.

*[கூல் → கூலம்.]*

**கூலம்**[5] *kūlam,* பெ.(n.) பாகல் (திவா.) ; balsam pear.

*[கூல் → கூலம்.]*

**கூலம்**[6] *kūlam,* பெ.(n.) 1. நீர்க்கரை (திவா.); bank of a river or tank, seashore. 2. வரம்பு (பிங்.); ridge in a paddy field. 3. முறை; regulation, rule. *"கூல நீங்கிய விராக்கதப் பூசுரர்" (கம்பரா.பிரமாத்.164).*

*[குல் → கூல் → கூலம். கூல் = நீட்சி.]*

**கூலம்**[7] *kūlam,* பெ.(n.) 1. மாடு, ஆன் (பசு) (பிங்.); cow. 2. மரை (வின்.); elk. 3. மான்; deer.

*[கூழ் → கூழ்ம் → கூலம் (புல் மேய்வது). கூழ் = பயிர்வகை, புல்வகை.]*

**கூலம்**[8] *kūlam,* பெ.(n.) நெல், எள்ளு, துவரை முதலியவற்றிற்கு விதிக்கும் வரி (S.I.I. 157); a tax on grains and pulses.

*[குல் → கூல் → கூலம்.]*

**கூலம்**[9] *kūlam,* பெ.(n.) 1. விலங்கின் வால்; tail of animals in common. 2. மந்தி; a female monkey. 3. செங்குரங்கு; red faced monkey. 4. முசு; male monkey (சா.அக.).

*[கூல் (நீட்சி, வால்) → கூலம்.]*

**கூலவாணிகன் சாத்தனார்** *kūla-vāṇigaṉ cāttaṉār,* பெ.(n.) கூலவாணிகஞ் செய்தவரும் மணிமேகலையை இயற்றியவருமான கழகப்புலவர்; the trade-poet who wrote-Maṇimēgalai. kūlavāṇigam means one who trades inprains.

*[கூலம் + வாணிகன் + சாத்தன் + ஆர்.]*

**கூலவிந்து** *kūla-vindu,* பெ(n.) காஞ்சிரை; nux vomica (சா.அக.).

*[கூலம் + விந்து.]*

**கூலி**[1] *kūli,* பெ.(n.) 1. வேலைக்குப் பெறும் ஊதியம்; wages, pay. *"முயற்சி மெய்வருத்தக் கூலிதரும்" (குறள்,619).* 2. வாடகை (வின்.); fare, hire, freight.

**தெ.,து.** கூலி

*[கூலம் → கூலி.]*

உடலுழைப்புத் தொழிலாளர் தம் உழைப்புக்கு ஈடாகத் தவசமாக (கூலமாக)ப் பெற்று வந்த ஊதியம் நாளடைவில் நாணயமாகப் பெறும் ஊதியத்தையும் குறித்தது.

**கூலி**[2] *kūli,* பெ.(n.) கூலிக்காரன்; worker on daily wage.

**ம., க.தெ.,து.பர்.கோண்.** கூலி

*[கூலம் – கூலி. கூலமாக ஊதியம் பெறுபவன்.]*

**கூலிக்காரன்** *kūli-k-kāraṉ,* பெ.(n.) கூலிக்காக வேலை செய்பவன்; cooly, day-labourer.

**மறுவ.** கூலியாள் **ம.** கூலிக்காரன்; **க.** கூலிகார; **து.** கூலிதாயெ; **கோத.** கூலிகார்ன்; **பட.** கூலிகார

*[கூலி + காரன்.]*

**கூலிக்குமாரடி–த்தல்** *kūlikku -mār-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) மனமின்றித் தொழில் செய்தல் (கொ.வ.); lit., to beat the breasts for hire at a funeral, to work insincerely.

*[கூலி + கு + மார் + அடி.]*

தொடர்பில்லாத பிணத்தருகில் கூலிப்பணத்திற்காக மாரடித்து ஒப்பாரி வைத்து அழும் மகளிர் செயல் போன்ற போலித் தொழில்.

**கூலிச்சேவகன்** *kūli-c-cēvagaṉ,* பெ.(n.) 1. கூலிப் படையாளன் (M.E.R.262/195); mercenary soldeir. 2. கூலிக்கு வேலை செய்வோன் (திவ். அமலனாதி.5,வியா.ப.68); hired labourer.

*[கூலி + சேவகன்.]*

**கூலிப்படை** *kūli-p-paḍai,* பெ.(n.) 1. கூலிக்கு அமர்த்தும் சேனை (குறள்,762,உரை.); mercenary. 2. கூலிக்காக அமர்த்தப்படும் அடியாள்கள்; men employed to attack the enemy.

*[கூலி + படை.]*

**கூலிப்பாடு** *kūli-p-pāḍu,* பெ.(n.) ***கூலிப்பிழைப்பு*** பார்க்க; see *kūli-p-piḻaippu.*

*[கூலி + பாடு. பாடு = உழைப்பு.]*

**கூலிப்பிழைப்பு** *kūli-p-piḻaippu,* பெ.(n.) அற்றைக் கூலி பெற்று நடத்தும் வாழ்க்கை (வின்.); life of a hired labourer, making a living by day-labour.

*[கூலி + பிழைப்பு.]*

**கூலியாள்** *kūli-y-āḷ,* பெ.(n.) கூலிக்காரன்; hired labourer cooly. *"கூலியா ளாய்வன் கரை யடைப்பா ரில்லை" (திவருவாத.பு.மண்சுமந்த.28).*

**மறுவ.** கூலியாள்

*[கூலி + ஆள்.]

**கூவகர்** *kūvagar,* பெ.(n.) கூபக நாட்டார்; inhabitants of Kūpaga country. *"கூவகர் சாவகர்"* (கலிங்.புதுப்.316).

**மறுவ.** கூபகர்

*[கூவகம் → கூவகர்.]*

**கூவநூல்** *kūva-nūl,* பெ.(n.) ***கூவனூல்*** (சங்.அக.) பார்க்க; see *kūva-ṉūl.*

*[கூவல் + நூல். கூவல் = கிணறு.]*

**கூவம்** *kūvam,* பெ.(n.) கிணறு; well. *"கூவத்தின் சிறுபுனலைக் கடலயிர்த்த தொவ்வாதோ" (கம்பரா. விபீடண.103).*

*[கூவல் → கூவம்.]*

**கூவமா** *kūvamā,* பெ.(n.) மரவகை (யாழ்ப்.); a kind of tree.

**மறுவ.** கூமா

*[கூவல் + மா. மா = மரம்.]*

**கூவரகு** *kū-varagu,* பெ.(n.) காட்டுவரகு (சித்.வை.); a kind of millet.

*[கூழ் + வரகு – கூழ்வரகு → (கூவரகு).]*

**கூவல்**[1] *kūval,* பெ.(n.) கூவுகை; crying aloud, bawling, crowing. *"தேவி மாரொடுங் கூவல்செய் தொழிலினர்"* (கம்பரா.சடாயுவுயிர்.31).

**ம.** கூகல்

*[கூ → கூவு → கூவல்.]*

**கூவல்**[2] *kūval,* பெ.(n.) 1. கிணறு; well *"கூவலன்ன விடரகம்"* (மலைபடு. 366). 2. குழி (வின்.); hollow, hole, pit.

*[குல் + குள் → குவ் → குவ்வல் → கூவல்.]*

**கூவனூல்** *kūva-ṉūl,* பெ.(n.) கிணறு வெட்டுதற் குரிய இடமுதலியவற்றை யுணர்த்தும் நூல்; science of determining sites suitable for sinking wells.

**மறுவ.** கூவநூல்

*[கூவல் + நூல்.]*

**கூவனூலோர்** *kūva-ṉūlōr,* பெ.(n.) கிணறுவெட்டும் கலையில் வல்லவர் (திவா.); persons skilled in science of kūvaṉūl.

*[கூவல் + நூலோர்.]*

**கூவியர்** *kūviyar,* பெ.(n.) 1. உணவு சமைப்போர் (திவா.); cooks. 2. அப்பவாணிகர்; pancake sellers *"தீஞ்சேற்றுக் கூவியர் தூங்குவன ருறங்க" (மதுரைக். 627).*

*[குவ்வு → கூவு → கூவி (குழியப்பம்) → கூவியர்.]*

**கூவிரம்**[1] *kūviram,* பெ.(n.) 1. வில்வம் (பிங்.); bael. 2. மலை மரவகை (குறிஞ்சிப்.66); a mountain tree.

*[குவி → குவிரம் → கூவிரம்.]*

**கூவிரம்**[2] *kūviram,* பெ.(n.) 1. தேரில் இருக்கைக்கு எதிராக நடப்பெற்று கையாற் பற்றிக்கொள்ளு தற்குப் பயன்படுவதும், தாமரை மொட்டு வடிவில் அமைந்ததுமான ஓர் உறுப்பு; ornamental stake in the form of a lotus bud, fixed in front of the seat in a chariot and held by the hand for support. *"கூவிரஞ்செறி.... தேரொடும்"* (கம்பரா.இராவ.176). 2. தேர் (பிங்.); chariot, car. 3. தேர்க்கொடி (சூடா.); streamers or banners of car. 4.தேரின் அழகு படுத்தப்பட்ட தலைப்பகுதி; decorated pinnacle of a chariot *"கூவிரத்திகிரி யூர்வோன்"* (ஞானா. 7:17).

*[குவி → குவிரம் → கூவிரம்.]*

**கூவிரி** *kūviri,* பெ.(n.) 1. தேர் மொட்டு கொண்டது கூவிரத்தை யுடையது; lit., one having *kūviram.* 2. தேர் (திவா.); chariot, car.

*[கூவிரம் → கூவிரி.]*

**கூவிளக்குடுக்கை** *kūviḷa-k-kuḍukkai,* பெ.(n.) பழக் குடுக்கை; empty shell of bael fruit (சா.அக.).

*[கூவிளம் + குடுக்கை.]*

**கூவிளங்கனி**[1] *kūviḷaṅkaṉi,* பெ.(n.) நேர் நிரை நிரை குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப்.7,உரை.); mnemonic for the metrical foot of *nēr-nirai-nirai.*

*[கூவிளம் + கனி.]*

**கூவிளங்கனி**[2] *kūvilaṅ-kaṉi,* பெ.(n.) வில்வப்பழம்; beal fruit (riped) (சா.அக.).

*[கூவிளம் + கனி.]*

**கூவிளங்காய்** *kūviḷaṅ-kāy,* பெ.(n.) நேர்நிரை நேர் குறிக்கும் வாய்பாடு (காரிகை.உறுப்.7,உரை.); mnemonic for the metrical foot of *nēr-nirai-nēr.*

*[கூவிளம் + காய்.]*

**கூவிளந்தண்ணிழல்** *kūviḷan-taṇṇiḻal,* பெ.(n.) நேர் நிரை நேர் நிரை குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப். 8,உரை.); mnemonic for the metrical foot of *nēr-nirai-nēr-nirai.*

*[கூவிளம் + தண் + நிழல்.]*

**கூவிளந்தண்பூ** *kūviḷan-taṇ-pū,* பெ.(n.) நேர் நிரை நேர் நேர் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப்.8, உரை.); mnemonic for the metrical foot of *nēr-nirai-nēr-nēr.*

*[கூவிளம் + தண் + பூ.]*

**கூவிளநறுநிழல்** *kūviḷa-naṟu-niḻal,* பெ.(n.) நேர் நிரை நிரை நிரை குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப்.8.உரை); mnemonic for the metrical foot of *nēr-nirai-nirai-nirai.*

*[கூவிளம் + நறு + நிழல்.]*

**கூவிளநறும்பூ** *kūviḷa-naṟum-pū,* பெ.(n.) நேர் நிரை நிரை நேர் குறிக்கும் வாய்பாடு (காரிகை. உறுப்.8, உரை); mnemonic for the metrical foot of *nēr-nirai-nirai-nēr.*

*[கூவிளம் + நறும் + பூ.]*

**கூவிளம்**[1] *kūviḷam,* பெ.(n.) 1. வில்வம் (குறிஞ்சி. 65); bael. 2. பெரியமாவிலங்கம் (L.); a species of garlic pear.

*[கோ + விளம் – கோவிளம் → கூவிளம்.]*

**கூவிளம்**[2] *kūviḷam,* பெ.(n.) நேர்நிரை குறிக்கும் வாய்பாடு (காரிகை, உறுப்.7,உரை); mnemonic for the metrical foot of *nēr-nirai.*

*[கூ + விளம்.]*

**கூவிளம்**[3] *kūvillam,* பெ.(n.) கோளகவைப்பு நஞ்சு (சங்.அக.); a mineral poison.

*[குய் → குய்வு → குய்வுளம் → கூவுளம் → கூவிளம்.]*

**கூவிளம்பத்திரி** *kūviḷam-pattiri,* பெ.(n.) வில்வ இலை; beal leaf. It is not only capable of cooling the system, but also tends to invigorate it and this is very well explained in the verses of Thirumular.

*"பச்சிளங் கூவிளம் பத்திரி யுண்டிர்*
*நிச்சயம் சொன்னோம் நெருப்புங் குளிர்ந்திடும்*
*அச்சமுமில்லை அழகாந் திருமேனி*
*வச்சிரம் போல வந்திடும் விந்துவே" (திருமந்திரம்).*

*[கூவிளம் + பத்திரி.]*

**கூவிளமாதிகம்** *kūviḷamādigam,* பெ.(n.) விளா; wood-apple tree (சா.அக.).

*[கூவிளம் + ஆதிகம்.]*

**கூவிளி** *kūviḷi,* பெ.(n.) 1. கூப்பிடும் ஓசை; long continuous roar or trumpet, as of an elephant. *"நிறையழி யானை நெடுங்கூமே விளியும்" (மணி.7:67).* 2. கூப்பிடுதொலைவு; calling distance. *"அஞ்சு கூவிளிச் சேய்த்தென்ன"* (திருவிளை. யானை.29).

*[கூவு + விளி – கூவுவிளி → கூவிளி.]*

**கூவிளித்தல்** *kūvilittal*, பெ.(n.) உண்ணுதல்; eating (சா.அக.).

*[கவ்வளித்தல் → குவ்வளித்தல் → குவளித்தல் → கூவிளித்தல்.]*

**கூவிளை** *kūvilai*, பெ.(n.) 1. கூவிளம்[1] (திவா.) *kūvilam*. 2. வில்வமரம்; beal tree (சா.அக.).

*[கூவிளம் → கூவிளைவு.]*

**கூவு[1]–தல்** *kūvu-*, 5 செ.கு.வி.(v.i.) 1. பறவை கூவுதல்; to crow; as a cock, to scream, as peacocks to cry, as a cuckoo or birds in general. *"கூவின பூங்குயில்"* (திருவாச.20:3). 2. கதறுதல், ஒலி யெழுப்புதல்; to call out, whoop, hallow. 3. யானை முதலியன பிளிறுதல்; to trumpet, as an elephant *"கூங்கை மதமா"* (பரிபா.10:49). 4. ஓலமிடுதல்; to cry out for help. *"வந்த வீரன் கூவிய சசியை நோக்கி"* (கந்தபு.மகாகாளர்.6).

ம.கூகுக; **க.**, பட. கூகு; **தெ.** கூயு; **து.** கூகுனி; குட. கூ; **கொலா.** நா.கூக்;**பர்.** கூய், கூப்; **கோண்.** கூச்சானா; **கூ.** கூப்க; **ம.** கூக்ரெ.

*[கூ → கூவு-.]*

**கூவு[2]–தல்** *kūvu-*, 5 செ.குன்றாவி (v.t.) அழைத்தல்; to call, summon. *"மழலை முற்றாத விளஞ் சொல்லா லுன்னைக் கூவுகின்றான்" (திவ். பெரியாழ்.1:4,5).*

**Aust.** cooee.

*[கூ → கூவு.]*

**கூவு[3]** *kūvu*, பெ.(n.) வெள்ளைக் கரும்பு; white sugar-cane (சா.அக.).

*[குருவு → கூவு.]*

**கூவுதூரம்** *kūvu-tūram*, பெ.(n.) கூப்பிடு தொலைவு (இ.வ.); calling distance.

மறுவ. கூப்பிடுதொலைவு, கூவுதொலைவு.

*[கூவு + தூரம்.]*

**கூவுவான்[1]** *kūvu-vāṉ*, பெ.(n.) 1. கூவுதல் செய்வோன்; lit., that which crows. 2. சேவல்; cock.

*[கூவு → கூவுவோன் → கூவுவான்.]*

**கூவை[1]** *kūvai*, பெ.(n.) செடிவகை; East Indian arrow root *"புலவுவிற் பொலிகூவை" (மதுரைக்:142).*

*[கூவல் (பள்ளம்) → கூவை.]*

**கூவை[2]** *kūvai*, பெ.(n.) கூட்டம்; crowd, horde, gathering. *"விற்கூளியர் கூவை காணின்" (மலைபடு. 422).*

*[குழு → குழுவு → கூவு → கூவை.]*

**கூவைக்கட்டு** *kūvai-k-kaṭṭu*, பெ.(n.) பொன்னுக்கு வீங்கி, புட்டாளம்மை எனும் அம்மைநோய்; mumps (சா.அக.).

மறுவ. கூகைக்கட்டு

*[கூவை + கட்டு.]*

**கூவைக்கார்** *kūvai-k-kār*, பெ.(n.) கார் நெல்வகை (A); a kind of *kārpaddy*.

*[கூவை + கார்.]*

**கூவைச்சம்பா** *kūvai-c-cambā*, பெ.(n.) சம்பா நெல்வகை (A); a kind ofcambāpaddy.

*[கூவை + சம்பா.]*

**கூவைநீறு[1]** *kūvainīṟu*, பெ.(n.) கிழங்கின் மாவு; (சா.அக.); flour of kūvai root.

*[கூவை + (நூறு) நீறு.]*

**கூவைநீறு[2]** *kūvai-nīṟu*, பெ.(n.) **கூகை நீறு** பார்க்க; see *kūgai-nīṟu*. *"கூவை நீறுங் கொழுங்கொடிக் கவலையும்" (சிலப்.25:42).*

*[குய் → குய்வு → குய்வுளம் → கூவுளம்.]*

**கூவைவல்லி** *kūvai-valli*, பெ.(n.) ஒரு நோய்; an unknown disease (சா.அக.).

*[கூவை + வல்லி.]*

**கூவைவாய்மணி** *kūvai-vāi-maṇi,* பெ.(n.) பலவித மாக உண்டாகும் முத்துகள்; many kinds of pearls.

*[குவவு → கூவு → கூவை + வாய் + மணி.]*

**கூழ்**[1] *kūḻ,* பெ.(n.) மாவு முதலியவற்றால் குழையச் சமைத்த உணவுவகை (திவா.); thick gruel, porridge, semi liquid food. 2. பலவகை உணவு; food. *"கொளக்கொளக் குறைபடாக் கூழுடை வியனகர்" (புறநா.70:7).* 3. பயிர்(திவா.); growing crop. 4. பொருள்; wealth. *"கூழுங் குடியு மொருங் கிழக்கும்" (குறள்,554).* 5. பொன் (திவா.); gold.

*[கூல் (கூலம், தவசம்) → கூள் → கூழ்.]*

**கூழ்**[2] *kūḻ,* பெ.(n.) கலக்கம்; doubt, confusion. *"தத்துவநூல் கூழற்றது" (திவ்.இராமநூச.65).*

*[குல் → குள் → கூழ் → கூழ்த்தல்]*

**கூழ்**[2]**-த்தல்** *kūḻ-,* 4 செ.குன்றாவி (v.t.) ஐயுறுதல்; to doubt, suspect *"அவனிவனென்று கூழன் மின்" (திவ்.திருவாய்.3:6,9).*

*[குழத்தல் → கூழ்த்தல்]*

**கூழ்க்கஞ்சி** *kūḻ-k-kañji,* பெ.(n.) மாவுக் கஞ்சி; porridge prepared from flour.

*[கூழ் + கஞ்சி.]*

**கூழ்க்கெளுத்தி** *kūḻ-k-keḷutti,* பெ.(n.) குள்ளக் கெளிற்று மீன்; cat fish of stunted growth (சா.அக.).

*[குழை + கெளுத்தி → கூழைக்கெளுத்தி → கூழ்க் கெளுத்தி.]*

**கூழ்ப்பசை** *kūḻ-p-pašai,* பெ.(n.) 1. கஞ்சிப்பசை; rice gruel for starching cloths. 2. மாப்பசை; paste.

*[கூழ் + பசை.]*

**கூழ்ப்பண்டம்** *kūḻ-p-paṇḍam,* பெ.(n.) சாம்பற் பூசணிக்காய், கலியாணப்பூசணி; a variety of white pumpkin (சா.அக.)

*[கூழ் + பண்டம்.]*

**கூழ்ப்பதம்** *kūḻ-p-padam,* பெ.(n.) பாம்பு (அக.நி.); snake.

*[குள் → குழ் → கூழ் + பதம். கூழ் = தெளிவில்லாத, கண்ணுக்குத் தெரியாத. பதம் = பாதம், கால்.]*

**கூழ்ப்பு** *kūḻppu,* பெ.(n.) ஐயம்; doubt, suspicion. *"எல்லை யிலாதன கூழ்ப்புச் செய்யுமத்திற நிற்க" (திவ்.திருவாய. 8,2:6).*

*[குள் → குழ் → கூழ் → கூழ்ப்பு.]*

**கூழ்படு-தல்** *kūḻ-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) கலக்க முண்டாதல், தெளிவின்றியிருத்தல்; to be confused *"செல்படை யின்றிக் கூழ்பட வறுப்ப" (பெருங்.மகத.27:31).*

*[கூழ் + படு.]*

**கூழ்மணத்தான்** *kūḻ-maṇattān,* பெ.(n.) வெண் கழுகு; white coloured vulture.

மறுவ. கூழமணத்தான், கூழிச்சந்தான்

*[கூழை → கூழ் + மணத்தான்.]*

**கூழ்முட்டை** *kūḻ-muṭṭai,* பெ.(n.) கெட்டுப்போன முட்டை; addled egg.

*[கூழ் + முட்டை.]*

**கூழ்முன்னை** *kūḻ-muṉṉai,* பெ.(n.) தென்னாட்டி லுள்ள ஒரு சிறு மரவகை (மலை.); ovate leave firebrand teak of the deccan.

மறுவ. கூழாமணி

*[கூழ் + முன்னை.]*

**கூழ்வட்டு** *kūḻ-vaṭṭu,* பெ.(n.) ***கூழ்வடகம்*** பார்க்க; see *kūḻ-vaḍagam.*

*[கூழ் + வட்டு. வட்டு = வட்டமாக வார்த்தது.]*

**கூழ்வடகம்** *kūḻ-vaḍagam,* பெ.(n.) அரிசிமாக் கூழால் செய்யப்படும் வடக வற்றல்; water cakes of flour, seasoned and dried in the sun.

மறுவ. கூழ்வடாம்

*[கூழ் + வடகம். (வட்டு → வட்டகம் → வடகம்.]*

**கூழ்வடாம்** *kūḻ-vaḍām,* பெ.(n.) ***கூழ்வடகம்*** பார்க்க; see *kūḻvaḍagam.*

*[கூழ்வட்டு + கூழ்வட்டகம் → கூழ்வடகம் → கூழ்வடாம்.]*

**கூழ்வரகு** *kūḻ-varagu,* பெ.(n.) ***கேழ்வரகு*** (மலை.) பார்க்க; see *kēḻ-varagu.*

*[கேழ்வரகு → கூழ்வரகு.]*

**கூழக்கெளுத்தி** *kūḻa-k-keḷutti,* பெ.(n.) கெளுத்தி மீன்வகை; a river fish, silvery, altaining 4ft. in length.

*[கூழை + கெளுத்தி – கூழைக்கெளுத்தி → கூழக் கெளுத்தி.]*

**கூழகம்** *kūḻakam,* பெ.(n.) எள்ளு; gingelly seed (சா.அக.).

**மறுவ.** கூழம்

*[கூழ் → கூழகம்.]*

**கூழங்கை** *kūḻaṅ-kgai,* பெ.(n.) முடமான கை; maimed hand. *"கூழங்கைத் தம்பிரான்" (இ.வ.).*

*[கூழை + கை – கூழைக்கை → கூழங்கை.]*

**கூழம்** *kūḻam,* பெ.(n.) எள் ; sesame.

*[கூழ் → கூழம் (உணவாக அமைவது).]*

தரைவழியாகவும் கடல் வழியாகவும் செல்வோர் எள்ளுருண்டைகளை உணவாக எடுத்துச் செல்லுவதால் இது உணவு எனப்பட்டது.

**கூழமணத்தான்** *kūḻa-maṇattāṉ,* பெ.(n.) வெள்ளைக் கூளி; white coloured vulture (சா.அக.).

*[கூழை → கூழ + மணத்தான்.]*

**கூழன்**[1] *kūḻaṉ,* பெ.(n.) ***1. கூழன்பலா*** பார்க்க; see *kūḻaṉ-palā.* **2. *கூழான்*** (சங்.அக.) பார்க்க; see *kūḻāṉ.*

*[கூழை → கூழன்.]*

**கூழன்**[2] *kūḻaṉ,* பெ.(n.) தெளிந்த அறிவில்லாதவன் (பெருங்.பக்.732, நீலகேசியுரை); one devoid of clear understanding.

*[கூழை + அன் – கூழையன் → கூழன்.]*

**கூழன்பலா** *kūḻaṉ-palā,* பெ.(n.) பலாவகை (யாழ்ப்.); a kind of jack tree.

*[கூழை → கூழன் + பலா. கூழை = குட்டையானது.]*

**கூழா**[1]**–தல்** *kūḻa-,* 7 செ.கு.வி.(v.i.) சோறு குழைதல் (கொ.வ.); to be over-boiled, as rice. 2. முட்டை பதனழிதல்; to become addled, as eggs.

*[கூழ் + ஆ–.]*

**கூழா**[2] *kūḻā,* பெ.(n.) நறுவிலி (யாழ்ப்.) ; sebesten.

*[கூழை → கூழா.]*

**கூழாங்கல்**[1] *kūḻāṅ-kal,* பெ.(n.) வழவழப்பான சிறுகல் வகை; shingles, loose pebbles, especially those on the sea-shore.

*[கூழை + கல் – கூழைக்கல் → கூழாங்கல்.]*

**கூழாங்கல் ஒட்டு–தல்** *kūḻāṅ-kal-oṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) சுவர்களில் அழகு வேலைக்காக சில உருண்டையான பழுப்பு மற்றும் பல வண்ணக் கற்களை ஒட்டுதல். (பொ.வழக்.) (கட்.தொ.வரி.); fixing pebbles etc. to cover walks, as a mode of decoration.

*[கூழாங்கல் + ஒட்டு.]*

**கூழாம்பாணி** *kūḷām-pāṇi,* பெ.(n.) சர்க்கரை கரைந்து கூழ் போலுள்ள நீர் (யாழ்.); treacle, molasses.

*[கூழ் + ஆம் + பாணி.]*

**கூழாமட்டி** *kūḷā-maṭṭi,* பெ.(n.) மந்த அறிவும் அச்சமும் உள்ளவன் (வின்.); dull and cowardly man.

*[கூழை → கூழா + மட்டி.]*

**கூழாமணம்** *kūḷā-maṇam,* பெ.(n.) சமையற்காரர் பயன்படுத்தும் பிடிதுணி (இ.வ.); bit of cloth or piece of gunny used by cooks.

*[கூழ் + ஆமணம். ஆவணம் (சுற்றுத்துணி) → ஆமணம்.]*

**கூழாமணி** *kūḷā-maṇi,* பெ.(n.) ***கூழ்முன்னை*** பார்க்க; see *kūḷ-muṉṉai.*

*[கூழ்முன்னை → கூழாமணி (கொ.வ.).]*

**கூழாள்** *kūḷ-āḷ,* பெ.(n.) உணவின் பொருட்டு எவர்க்கேனும் தன்னை எழுதிக் கொடுப்பவன்; one who sells himself for livelihood. *"கூழாட்பட்டு நின்றவர்களை" (திவ்.திருப்பல்.3).*

*[கூழ் + ஆள்.]*

**கூழான்**[1] *kūḷāṉ,* பெ.(n.) கண்டகிக்கல், கூழாங்கல் (யாழ்.அக.); salagram, a kind of stone found in the Gaṇḍagi.

*[கூழை → கூழான்.]*

**கூழான்**[2] *kūḷāṉ,* பெ.(n.) இராவணன் மீசைப்புல் (சா.அக.); a kind of grass.

*[கூழை (கட்டை, தடிப்பு) → கூழான்.]*

**கூழிச்சந்தான்** *kūḷicandāṉ,* பெ.(n.) ***கூழமணத்தான்*** பார்க்க; see *kūḷa-maṇattaṉ* (சா.அக.).

*[கூளி → கூழி + (சந்தன்) சந்தான்.]*

**கூழை**[1] *kūḷai,* பெ.(n.) 1. பெண்டிர் தலைமயிர்; woman's hair. *"கூழை விரித்தல்"* (தொல்.பொ. 262). 2. இறகு (திவா.); feathers, plumage. 3. மயிற்றோகை (பிங்.); peacock's tail. 4. வால்; tail. *"புன் கூழையங் குறுநரி"*

*[குழை (கொத்து) → கூழை.]*

**கூழை**[2] *kūḷai,* பெ.(n.) நடு(திவா.); middle, centre.

*[உள் → குள் → கூள் → கூழ் → கூழை.]*

**கூழை**[3] *kūḷai,* பெ.(n.) 1. குட்டையானது; that which is short. *"நாய் கூழைவாலாற் குழைக்கின்றது போல" (திவ்.திருவாய்.9:4,3).* 2. அறிவுக்குறைவு; dullness of intellect, stupidity. *"கூழைமாந்தர்தஞ் செல்கதி" (தேவா.462:9).*

*[குள் → குழ் → கூழ் → கூழை.]*

**கூழை**[4] *kūḷai,* பெ.(n.) 1. கூழைத்தொடை ; a mode of versification. *"ஈறிலி கூழை" (காரிகை, உறுப்.19).* 2. கூழைப்பாம்பு (சங்.அக.); dwarf snake.

*[குள் → கூழ் → கூழை.]*

**கூழை**[5] *kūḷai,* பெ.(n.) சேறு; mud, mire. *"கூழை பாய்வயக்" (தேவா.473:8).* 2. பொன் (அக.நி.); gold.

*[குழை → கூழை.]*

**கூழை**[6] *kūḷai,* பெ.(n.) படையின் பின்னணி; rear of an army. *"கூழைதார் கொண்டியாம் பொருதும்" (புறநா.88,J).* 2. கடைசி வரிசை; hindmost row, as of a herd of cows. *"அவன்றான்..... பிற்கூழையிலே நிற்குமாய்த்து" (ஈடு. 9:9.ப்ர).*

*[குள் → கூழ் → கூழை.]*

**கூழை**[7] *kūḷai,* பெ.(n.) முரசு (அக.நி.); drum.

*[குழை → கூழை. குழை = இழைதல், அதிர்தல்.]*

**கூழைக்கடா** *kūḷai-k-kaḍā,* பெ.(n.) நீர்வாழ் பறவை; pelican. *"கொக்கு கோழி கூழைக் கடாமுகம்" (பரத.பாவ.36).*

*[கூழை + கடா.]*

**கூழைக்கிடா** *kūḻai-k-kiḍā,* பெ.(n.) 1. நீர்வாழ் பறவை வகை; pelican, as tailless. 2. வாலில்லாத எருமைக் கடா; tailless he-buffalo.

*[கூழை + (கடா) கிடா.]*

**கூழைக்கும்பீடு** *kūḻai-k-kumbīḍu,* பொய் வணக்கம்; hypocritical, insincere obeisance.

*[கூழை + (கும்பிடு) கும்பீடு.]*

*கூழைக்கும்பிடு போட்டு ஏமாற்றாதே*

**கூழைக்குரங்கு** *kūḻai-k-kuraṅgu,* பெ.(n.) வாலில்லாக் குரங்கு; tailless monkey (சா.அக.).

*[கூழை + குரங்கு.]*

**கூழைக்குறும்பு** *kūḻai-k-kuṟumbu,* பெ.(n.) பிறர் அறியாமற் செய்யுங் குறும்பு; secret mischief.

*[கூழை + குறும்பு.]*

**கூழைக்கை** *kūḻai-k-kai,* பெ.(n.) குறைக்கப்பட்ட கை; maimed hand.

*[கூழை + கை.]*

**கூழைக்கையன்** *kūḻaikaiyaṉ,* பெ.(n.) குட்டைக்கை உள்ளவன்; a person with a maimed hand (சா.அக.).

*[கூழை + கையன்.]*

**கூழைக்கொம்பன்** *kūḻai-k-kombaṉ,* பெ.(n.) மழுங்கின கொம்புள்ள மாடு; ox with blunt horns.

*[கூழை + கொம்பன்.]*

**கூழைத்தண்டுக்கீரை** *kūḻai-t-taṇḍu-k-kīrai,* பெ.(n.) கீரைவகை (விவசா.4); a kind of greens.

*[கூழை + தண்டு + கீரை.]*

**கூழைத்தனம்** *kūḻai-t-taṉam,* பெ.(n.) பொய்மை வேடம் பூண்டு குழைந்து காட்டுகை; false humility, dissimulation. *"நீங்கள் கோயிற் கூழைத்தனம் அடிக்கிறபடி இதுவோ" (திருவிருத். 99,வியா.468).*

*[கூழை + தனம்.]*

**கூழைத்தொடை** *kūḻai-t-toḍai,* பெ.(n.) அளவடியுள் இறுதிச் சீர்க்கணன்றி ஒழிந்த மூன்று சீர்க் கண்ணும் மோனை முதலாயின வரத் தொடுப்பது (இலக்.வி.723, உரை); versification which requires *mōṉai,* etc., to occur in the first three feet of a four-footed line of a verse.

*[கூழை + தொடை.]*

**கூழைநரி** *kūḻai-nari,* பெ.(n.) வால் குட்டையான நரி; short tailed fox.

*[கூழை + நரி.]*

**கூழைப்பாம்பு** *kūḻai-p-pāmbu,* பெ.(n.) தலைக்கும் உடலுக்கும் இடையில் கழுத்தின்றி ஒன்றுபோல் தடித்துள்ள குள்ளமான பாம்புவகை (M.M.224); dwarf snake, whose head is not marked off from the body by constriction of neck.

*[கூழை + பாம்பு.]*

**கூழைப்பார்வை** *kūḻai-p-pārvai,* பெ.(n.) ஏமாற்றுப் பார்வை; sly look. *"இன்றுணை நாரைக் கிரை தேடிக் கூழைப் பார்வைக் கார்வயல் மேயும்" (திவ். பெரியதி.9:6,3).*

*[கூழை + பார்வை.]*

**கூழைமுட்டை** *kūḻai-muṭṭai,* பெ.(n.) அழுகின முட்டை (R.); rotten egg.

**மறுவ.** கூழ்முட்டை, கூமுட்டை

*[குழை → கூழ் → கூழை + முட்டை.]*

**கூழைமை** *kūḻaimai,* பெ.(n.) 1. கடமை; duties fusiners. *"கூத்தனுக் காட்பட் டிருப்ப தன்றோ நந்தம் கூழைமையே"* (தேவா.11:5). 2. குழைந்து நடக்கை; fondling, caressing. *"கொவ்வைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்யாமே" (திவ்.பெரியாழ். 3:2,5).*

*[குழை → கூழை → கூழைமை.]*

**கூழையன்** *kūlaiyaṉ,* பெ.(n.) 1. குள்ளன்; short, stunted person. 2. முழு மடையன்; dolt, idiot.

*[கூழை + அன்.]*

**கூழைவாலன்** *kūlai-vālaṉ,* பெ.(n.) குட்டையான பாம்புவகை (M.M.224); short-tailed snake which lives underground belonging to the family of uropeltidce.

*[கூழை + வாலன்.]*

**கூள்(ளு)-தல்** *kūḷ-,* 16 செ.கு.வி.(v.i.) திரளுதல்; to crowd together, assemble, muster. *"கூண்டன கரிகள்" (இரகு.மீட்சி.42).*

*[குள் → கூள்.]*

**கூளப்படை** *kūḷa-p-paḍai,* பெ.(n.) பலவகையினர் கலந்த கூட்டுப்படை (ஈடு.6:6,1,அரும்); army constituted of various classes of persons.

*[குள் → கூள் → கூளம் + படை.]*

**கூளம்** *kūḷam,* பெ.(n.) 1. சண்டு; broken pieces of straw, of hemp chaff. 2. திப்பி (யாழ்.); sediment, lees, dregs, chips.

**Chin.** kū.

*[குள → கூள் → கூளம் (கூடுவது அல்லது திரள்வது).]*

**கூளன்** *kūḷaṉ,* பெ.(n.) பயனற்றவன்; worthless, useless person *"ஊனடி பேணாக் கூளன்" (திருப்பு. 109).*

*[உள் → குள் → கூள் → கூளன்.]*

**கூளி**[1] *kūḷi,* பெ.(n.) 1. கூட்டம் (பிங்.); company, multitude. 2. குடும்பம் (பிங்.); family. 3. படைத் தலைவன் (சூடா.); commander of an army.

*[கூள் → கூளி.]*

**கூளி**[2] *kūḷi,* பெ.(n.) 1. பேய்; devil, demon. *"கணங் கொள் கூளியொடு"* (பட்டினப் 259); dwafish malformed race of goblins constifuting the army of śiva. 2. பெருங்கழுகு (வின்.); large species of eagle.

*[குல் (கொல்) → கூல் → கூளி (கொல்லுவது).]*

**கூளி**[3] *kūḷi,* பெ.(n.) 1. குள்ளம் (அக.நி.); dwarfishness, shortness. 2. கற்பில்லாதவள் (சூடா.); unchaste woman.

*[குள் → கூள் → கூளி (குட்டை, சிறுமை, இழிவு).]*

**கூளி**[4] *kūḷi,* பெ.(n.) 1. எருது (பிங்.); ox. 2. பொலி யெருது (பிங்.); stud bull.

*[கூள் (கூடுதல்) → கூளி.]*

**கூளிப்பனை** *kūḷi-p-paṉai,* பெ.(n.) தாளிப்பனை (சங்.அக.) talipot palm.

*[கூளி + பனை.]*

**கூளியர்** *kūḷiyar,* பெ.(n.) 1. படைவீரர் (பிங்.); soldiers, warriors. 2. வேட்டுவர்; hunters, those who live by chase. *"காய்சின முன்பிற் கடுங்கட் கூளியர்" (மதுரைக். 691).* 3. வழிப்பறி செய்யும் கள்வர்; highway robbers, plunderers. *"குரங்கன்ன புன்குறுங் கூளியர்" (புறநா. 136:13).* 4. குறவர் (பிங்.); mountaineers. 5. ஏவல் செய்வோர்; attendants. *"வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்" (திருமுருகு.282).* 5. நண்பர் (சூடா.); friends.

*[குள் → கூள் (கூடுதல், கூட்டம்) → கூளி → கூளியர்.]*

**கூற்கேவு** *kūṟkēvu,* பெ.(n.) கடுகு; mustard (சா.அக.).

*[கூழ் → கூல் + கு + அவி. (அவி = தாளிப்பதற்கு உதவும் கடுகு). கூற்கவி → கூற்கேவு (கொ.வ.).]*

**கூற்றம்**[1] *kūṟṟam,* பெ.(n.) 1. பகுதி; species, class. *"கூற்றங்கள் பலவுந் தொக்க கூற்றத்தில்" (சீவக. 1143).* 2. உயிரை உடலினின்று பிரிப்பவன்; lit., one who separates soul from body. 3. எமன்; Yama. *"மாற்றருங் கூற்றம்" (தொல். பொருள்.79).* 3. அழிவுண்டாக்குவது; that which ruins, destroys. *"அல்லவை செய்வார்க் கறங்கூற்றம்"* (நான்மணி. 84). 4. பழங்காலத்தில் நாட்டின் ஒரு பகுதி; division

of a country, in ancient times. *"மிழலைக் கூற்றத்துடனே ... முத்தூற்றுக் கூற்றத்தைக் கொண்ட"* (புநறா. 24,உரை).

*[கூறு → கூற்று → கூற்றம். கூறு = பங்கு.]*

**கூற்றம்**[2] *kūṟṟam,* பெ.(n.) சொல்; word. *"அறைகின்ற கூற்றமு மொன்றே"* (திருவிளை. பழியஞ்.27).

*[கூறு = பேசு. கூறு → கூற்றம்.]*

**கூற்றரிசி** *kūṟṟariśi,* பெ.(n.) குத்தலரிசி; pounded rice. *"எற்சோறு கூ ற்றரிசி"* (Insc.).

*[குற்று + அரிசி – குற்றரிசி → கூற்றரிசி.]*

**கூற்றன்** *kūṟṟaṉ,* பெ.(n.) எமன்; the god of death. *"வெட்டுங் கடாமிசைத் தோன்றும் வெங்கூற்றன்"* (கந்தரலங் .65).

*[கூறு → கூற்று → கூற்றன். உடலையும் உயிரையும் கூறுபடுத்துபவன் கூற்றன்.]*

**கூற்றன் கொலையோன்** *kūṟṟan-koiaiyōṉ,* பெ.(n.) துரிசு (சங்.அக.); blue vitriol.

*[கூற்றன் + (கொலையான்) கொலையோன்.]*

**கூற்றன்வாய்** *kūṟṟaṉ-vāy,* பெ.(n.) தலைமதகு; main sluice. *"கூற்றன்வாய்மீதே உவன்றி செய்து நீர்கொண்டு போந்து"* (S.I.I.II,521).

*[கூற்றன் + வாய்.]*

**கூற்றிலக்கை** *kūṟṟilakkai,* பெ.(n.) ஊர்ப் பொது விடத்தில் செயல் நிகழ்த்துவதற்குரியதாக இடங் கொள்ளுகைக்குச் செலுத்தும் காணிக்கை வரி; a tax paid for conducting function at the common space of a village.

*[கூற்று + இலக்கை.]*

**கூற்று**[1] *kūṟṟu,* பெ.(n.) 1. கூறுகை; utterance, declaration, proclamation. 2. மொழி, சொல்; word, speech. *"கூற்றுக் கிளியே"* (ஞானா.பாயி.1,8). 3. கூறத்தக்கது; that which is fit to be spoken. *"திருநாமங் கூறுவதே யாவர்க்குங் கூற்று"* (திவ்.இயற்.நான்.49).

*[கூறு → கூற்று.]*

**கூற்று**[2] *kūṟṟu,* பெ.(n.) 1. எமன்; Yama, the god of death. *"கூற்றுடன்று மேல்வரினும்"* (குறள், 765). 2. காலன் (பிங்.); Kāla, the chief attendant of Yama.

மறுவ. கூற்றுவன், கூற்றம்

*[கூறு → கூற்று.]*

**கூற்றுதைத்தோன்** *kūṟṟudaittōṉ,* பெ.(n.) சிவன் (எமனைக் காலால் உதைத்தவன்); lit., one who trampled Yama under foot, Siva, *"கூற்றுதைத் தார் நெல்வேலி குறுகினாரே"* (பெரியபு. திருஞான.886).

*[கூற்று + உதைத்தோன்.]*

**கூற்றுநெல்லு** *kūṟṟu-nellu,* பெ.(n.) தவசக் கடமைகளுளொன்று (S.I.V.196); a tax in grain.

*[கூறு → கூற்று + நெல்லு.]*

**கூற்றுவநாயனார்** *kūṟṟuva-nāyaṉār,* பெ.(n.) அறுபத்து மூவர் நாயன்மாருள் ஒருவர் (பெரியபு.); a cononized Saiva Saint, one of 63.

*[கூற்றுவன் + நாயனார்.]*

**கூற்றுவன்** *kūṟṟuvaṉ,* பெ.(n.) எமன்; Yama, the god of death. *"இவன் வெங்கூற்றுவன்"* (நைடத. நளன்றூது.16).

மறுவ. கூற்று, கூற்றம்.

*[கூறு → கூற்று → கூற்றுவன்.]*

**கூற்றுவன்தங்கைச்சி** *kūṟṟuvaṉ- taṅgaicci,* பெ.(n.) சிறுகீரை (சங்.அக.) amaranth.

*[கூற்றுவன் + (தங்கை) தங்கைச்சி.]*

**கூறடை-த்தல்** *kūṟaḍai-,* 4 செ.குன்றாவி.(v.i.) பகுதியாகப் பிரித்தல்; to divide into lots. *"கூறடைத்த பரிசே"* (S.I.I.I,65).

*[கூறு + அடை-.]*

**கூறாப்பு** *kūṟāppu,* பெ.(n.) கவிந்த மேகம் (திருநெல்.); gathering clouds, cloudy sky.

*[குதுப்பு → குறுப்பு → கூறாப்பு (கொ.வ.).]*

**கூறி** *kūṟi,* பெ.(n.) கறுப்பு மட்டிவாய் மீன்; black rock-cod, silvery-grey attaining 30 in length.

*[குதுப்பு = திரட்சி, கூடம், குதுப்பு → குறுப்பு → கூறாப்பு (கொ.வ.).]*

**கூறிட்டுமொழிதல்** *kūṟiṭṭu-moḻidal,* பெ.(n.) வினாக்களுக்கு ஏற்பப் பகுத்துக் கூறும் விடை; answering questions seriatim. *"கூறிட்டு மொழிதலென விளம்புவர்" (மணிமே.30:243).*

*[கூறு + இட்டு + மொழிதல்.]*

**கூறிடு-தல்** *kūṟiḍu-,* 20 செ.குன்றாவி (v.t.) 1. துண்டாக்குதல்; to cut into pieces or slices, bisect, divide. 2. பங்கிடுதல்; to distribute in portions. *"மலைந்தார்க்கு மொற்றாய்ந் துரைத்தார்க்கும்.... புலவர்க்கும்... கூறிட்டார் கொண்ட நிரை" (பு.வெ.1, 14).*

*[கூறு + இடு.]*

**கூறியதுகூறல்** *kūṟiyadu-kūṟal,* பெ.(n.) முன் மொழிந்ததனையே பயனின்றிப் பின்னும் மொழிவதாகிய நூற்குற்றம்; tautology, a defect in literary composition, one of ten *nūr-kuṟṟam. "கூறியது கூறன் மாறுகொளக் கூறல்" (தொ.பொருள்.664).*

*[கூறியது + கூறல்.]*

**கூறியான்** *kūṟiyāṉ,* பெ.(n.) பல்லக்கி லேறிச் செல்லும் செல்வனது சிறப்புப் பெயர்களை யெடுத்துக் கூறுவோனாகிய சிவியார் பிரிவினரின் தலைவன் (யாழ்ப்.); headman of the Civiyār or palanguin bearers proclaiming the titles of the person seated in it.

*[கூறு → கூறியான் (கூறுபவன்).]*

**கூறு[1]-தல்** *kūṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) 1. சொல்லுதல்; to speak, say, declare, assert. *"கூறிய முறையின்" (தொல்.சொல்.70).* 2. விலை கூறுதல்; to cry out the price, as an auctioner. 3. உரத்த குரலில் அறிவித்தல் (வின்.); to cry aloud. promulgate, proclaim.

**Fin.** kerota; **Es.** kordus; **Hung.** kerd, keres; **Mong.** gere; **Jap.** kuringoto (repeat).

*[குல் → கூல் → கூறு. குல் = பொருந்து (பொருத்தமாய் சொல்).]*

**கூறு[2]-தல்** *kūṟu-,* 5 செ.குன்றாவி.(v.t.) கூறு செய்தல்; to divide. *"இது பண்டாரங் கூறுமாறு கூறிற்று" (குறள்.386,மணக்.).*

*[குல் → கூல் → கூறு. குல் = குத்து, வெட்டு, பங்கிடு]*

**கூறு[3]** *kūṟu,* பெ.(n.) 1. கூறுபாடு; section, division, classification. *"கூறிட்டு மொழிதல்" (மணிமே.30, 236).* 2. பங்கு; part, portion, lot, share. *"காற்கூறு காய்நீரால்"* (பதார்த்த.78). 3. பிளவுபட்ட துண்டு; broken pieces of anything. *"நெஞ்சம் கூறாகி யோடாத இத்துணையே"* 4. பாதி (பிங்.); half. 5. தன்மை; properties, as of heat, effects, characteristic symptoms, as of disease நோயின் கூறு அறிந்து மருந்து கொடு (உ.வ.).

*[குல் → கூல் → கூறு. குல் = குத்து, வெட்டு, பங்கிடு, பிரி.]*

**கூறு[4]** *kūṟu,* பெ.(n.) எள் (மலை.) ; sesame.

*[குல் → கூல் → கூறு.]*

**கூறுகம்** *kūṟugam,* பெ.(n.) எள்; sesame.

*[கூறு[4] → கூறுகம்.]*

**கூறுகாசு** *kūṟu-kāśu,* பெ.(n.) பங்குத்தொகை (இ.வ.); share-money.

*[கூறு + காசு.]*

**கூறுகிள்ளல்** *kūṟu-kiḷḷal,* பெ.(n.) குழி தோண்டிக் கால்நடும்போது கடப்பாரையின் மறுமுனையால்

கம்பைச் சுற்றியுள்ள மண்ணைக் கிட்டித்தல் (நெல்லை.); ramming the earth around a pole erected in the earth.

மறுவ. கூறுகுத்துதல்

*[கூறு + கிள்ளல். கிள்ளல் = கிட்டித்தல், கெட்டிப் படுத்துதல்.]*

**கூறுகுத்து–தல்** *kūṟu-kuttu-,* 5 செ.கு.வி. (v.i.) நட்ட காலைச் சுற்றியுள்ள மண்ணைக் குத்தி வலுப்படுத்துதல்; to ram the earth around a pole, erected in the earth.

*[கூறு + குத்து–.]*

**கூறுகெட்டுப்போ–தல்** *kūṟu-keṭṭu-p-pō-,* 8செ.கு.வி. (v.i.) முதுமை காரணமாக மனத் தடுமாற்றம் ஏற்படல்; mental disorder coming on in aged person.

*[கூறு + கெட்டு + போ–.]*

**கூறுகெடல்** *kūṟu-keḍal,* பெ.(n.) கூறுகெட்டுப் போதல்; mental, disorder due to old age (சா.அக.).

*[குல் → கூல் → கூறு + கெடல்.]*

**கூறுகொள்(ளு)[1]–தல்** *kūṟu-koḷ(ḷ)-,* 10 செ.குன்றாவி. (v.t.) வாயில் திணித்துக் கொள்ளுதல்; to stuff, cram. *"குழந்தை மண்ணைக் கூறு கொள்ளு கிறது" (வின்.).*

*[கூறு + கொள்.]*

**கூறுகொள்(ளு)[2]–தல்** *kūṟu-koḷ-,* 10 செ.குன்றாவி (v.t.) தனதுடைமையாக்கிக் கொள்ளுதல்; to appropriate. *"கூனி மருந்திட்டுக் கூறு கொண்டாள்" (விறலிவிடு.883).*

*[கூறு + கொள்–.]*

**கூறுசட்டம்** *kūṟu-caṭṭam,* பெ.(n.) நல்ல மாதுளை; sweet pomagranate (சா.அக.).

*[கூறு + சட்டம்.]*

**கூறுசீட்டு** *kūṟu-c-cīṭṭu,* பெ.(n.) பிரிவினை ஆவணம் (இ.வ.); deed of partition.

மறுவ. பாகக்பிரிவினை ஆவணம்

*[கூறு + சீட்டு. கூறு = பங்கு, பாகம்.]*

**கூறுசெய்[1]–தல்** *kūṟu-cey,* 1 செ.குன்றாவி. (v.t.) 1. துண்டாக்குதல்; cut in pieces, divide. 2. பங்கிடுதல்; to distribute in portions or small quantities.

*[கூறு + செய்–.]*

**கூறுசெய்[2]–தல்** *kūṟu-cey-,* 1செ.கு.வி.(v.i.) மணியம் பண்ணுதல்; to exercise authority as in the assessment of taxes, etc., *"கூறு செய்த ஊரிலே குறும்பு செய்து" (அஷ்டாதச.71).*

*[கூறு + செய்–.]*

**கூறுசெய்வான்** *kūṟu-ceyvāṉ,* பெ.(n.) மணியகாரன்; lit., one who apportions, village revenue officer. *"ராஜாக்கள் ஊர்தோறுங் கூறு செய்வார்களை வைக்குமா போலே" (ஈடு.5:2,8).*

*[கூறு + செய்வான். தனக்குரிய ஊர்களில் நிலவரி தண்டுபவன்.]*

**கூறுபடியான ஊர்கள்** *kūṟu-paḍi-y-āṉa-ūrgaḷ,* பெ.(n.) பாடி காவலுக்குரியதான பங்குப்படி பிரிக்கப்பட்ட ஊர்கள்; apportionment of villages for kāval. *"குலோத்துங்கச் சோழகச் சிராயனேன் – என் கூறுபடியான ஊர்களில் இத்தேவர் தேவதானம்" (தெ.கல்.தொ.8, கல் 319) கல்.க. சொ.அ.மு.).*

*[கூறு + படி + ஆன + ஊர்கள்.]*

**கூறுபடு–தல்** *kūṟu-paḍu-,* 20 செ.கு.வி.(v.i.) பிரிவுபடுதல்; to be divided.

*[கூறு + படு–.]*

**கூறுபடுத்து–தல்** *kūṟu-paḍuttu-,* 4 செ.குன்றாவி. (v.t.) பிரிவு செய்தல்; to divide, analyse, classify.

*[கூறு + படுத்து.]*

**கூறுபாட்டு வேதியல்** *kūrupāṭṭu-vēdiyal,* பெ.(n.) பொருள்களின் இயற்பியல் வேதியல் பகுதிகளைப் பற்றிக் கூறும் நூல்; analytical chemistry.

*[கூறுபாடு → கூறுபாட்டு + இதனியம்.]*

**கூறுபாடல்** *kūru-pādal,* பெ.(n.) வாய்ப்பாட்டு; vocal music *"கூறுபாடலுங் குழலின் பாடலும்" (கம்பரா.நாட்டுப்.56).*

மறுவ. வாய்ப்பாட்டு, குரலிசை

*[கூறு + பாடல்.]*

**கூறுபாடு** *kūru-pāḍu,* பெ.(n.) 1. பாகுபாடு; division, sub division, classification. 2. பகுதி (திவா.); portion, section. 3. தன்மை; quality, nature. *நோயின் கூறுபாடு தெரிந்து மருந்து கொடுக்க.*

*[கூறு + பாடு.]*

**கூறுவசம்** *kūru-vašam,* பெ.(n.) ஓமம்; Indian dill seed.

*[கூறு + வசம்.]*

**கூறுவிக்குறு[1]-தல்** *kūruvikkuru-,* 20 செ.குன்றாவி (v.t.) பிறரைக் கொண்டு சொல்வித்தல்; to make another speak on one's behalf. *"கொத்தவிழ் கோதையாற் கூறுவிக்குற்றது" (திருக்கோ.263, கொளு.).*

*[கூறு → கூறுவிக்கு.]*

**கூறை** *kūrai,* பெ.(n.) 1. ஆடை; cloth, cloths, garment *"அத்திட்ட கூறையரைச் சுற்றி"* (நாலடி, 281). ***2. கூறைப்புடைவை*** பார்க்க; see *kūrai-p-puḍaivai.*

*[கூறை - ஊர்ப்பெயர். அவ்வூரில் நெய்த புடவை கூறை நாடு எனக் கூறுவது மரபு.]*

**கூறைகோட்படு-தல்** *kūrai-kōṭpaḍu-,* 20 செ.கு.வி. (v.i.) ஆடையைப் பறிகொடுத்தல்; to be robbed of one's cloths. *"இக்காட்டிற் போகிற் கூறை கோட்பட்டான்" (நன்.383,மயிலை.).*

*[கூறை + கோள் + படு.]*

**கூறைநாடு** *kūrai-nāḍu,* பெ.(n.) மயிலாடுதுறைக்கு அருகில் சேலைகள் மிகுதியாக நெய்யப்படும் ஓர் ஊர்; a village near Mayilāḍutūrai noted for the manufacture of sarees.

*[கூறை + நாடு.]*

**கூறைப்பாய்** *kūrai-p-pāy,* பெ.(n.) தோணிப்பாய் (வின்.); canvas sail.

*[கூறை + பாய்.]*

**கூறைப்புடைவை** *kūrai-p-puḍaivai,* பெ.(n.) தாலி கட்டும் நேரத்திற்கு முன் மணமகளுக்கு மணமகன் வீட்டார் கொடுக்கும் சேலை; clothe presented to the bride by the bridegrooms's parents and worn by her before *tāli* is tied.

*[கூறை + புடவை. கூறை = புத்தாடை, துணி, புதுப்புடவை.]*

**கூறைப்பை** *kūrai-p-pai,* பெ.(n.) 1. துணியாற் செய்த பணப்பை; purse, made of cloth. 2. சேலை கள் வைக்கும் பை; bag for keeping sarees. *"தானே கூறைப்பையும் சுமந்து கொண்டு போய்" (ஈடு.4:1,2).*

*[கூறை + பை.]*

**கூறையுடுத்தல்** *kūrai-y-uḍuttal,* பெ.(n.) நாத்தூணார் மணமகட்குக் கூறைப்புடைவை உடுத்துகை; dressing bride with the wedding cloth by the bridegroom's sister.

*[கூறை + உடுத்து-.]*

**கூன்** *kūṉ,* பெ.(n.) 1. வளைவு; bend, curve. *"கூனிரும்பினிற் குறைத்து" (நைடத.நாட்டுப்.10).* 2. உடற்கூனல் (திவா.); humpon the back of the body. 3. கூனன்; hump-back. *"சிறுகுறுங் கூனுங் குறளுஞ் சென்று" (சிலப்.27:214).*

ம.,க.,துட. கூன்; தெ.,து.,பட.. கூனு;

*[குல் → குன் → கூன்.]*

**கூன்**[2] *kūṉ,* பெ.(n.) 1. நத்தை (திவா.); snail. 2. ஆந்தை (உரி.நி.); owl. 3. கொப்பரை கடாரம்; cauldron. *"குருதி சாறெனப் பாய்வது குரைகடற் கூனில்"* (கம்பரா.கிங்கர.40). 4. செய்யுளில் அளவுக்கு மேல்வரும் அசையுஞ் சீரும்; extra detached foot of a verse. *"சீர் கூனாத னோரடிக் குரித்தே" (தொல்.பொருள்.361).*

*[குல் → குன் → கூன்.]*

**கூன்**[3] *kūṉ,* பெ.(n.) ஒருவகை வளைந்த கத்தி; a kind of curved sword. கூன்மாறன் (கூன் என்னும் வாள் தாங்கிய பாண்டியன்)

*[குல் → கூல் → கூன்.]*

**கூன்கிடை** *kūṉ-kiḍai,* பெ.(n.) ஐவகை மெய்க் குற்றங்களுள் ஒன்றாகிய உடல் கூனிக்கிடக்கை (பிங்.); lying with the body disposed in a crooked posture, one of five *mey-k-kuṟṟam.*

*[குல் → குன் → கூன் + கிடை.]*

**கூன்பாண்டியன்** *kūṉ-pāṇḍiyaṉ,* பெ.(n.) திருஞானசம்பந்தர் காலத்து அரசு செய்த பாண்டியன்; the hunch backed Pāṇḍya king, who was a contemporary of Tirunāṉa-Sambandar.

*[கூன் + பாண்டியன்.]*

**கூன்முதுகு** *kūṉ-mudugu,* பெ.(n.) 1. கூனலான முதுகு; lit., back with a hunch. 2. ஆமையோடு (மூ.அக.); tortoise shell.

*[கூன் + முதுகு.]*

**கூன்வாள்** *kūṉ-vāḷ,* பெ.(n.) வளைவான வாள் (பிங்.); scimitar, sickle.

*[கூன் + முதுகு.]*

**கூனல்** *kūṉal,* பெ.(n.) வளைவு; bend, curve.

ம. கூனன்; க. கூன,கூன; பட. கூன

*[கூன் → கூனல்.]*

**கூனலங்காய்** *kūṉalaṅkāy,* பெ.(n.) புளியங்காய்; green tamarind. *"கூனலங்காய் தினையவரை" (திருவிளை.நாட்டு.42).*

*[கூனல் + அம் + காய்.]*

**கூனற்கிழவன்** *kūṉaṟkiḻavaṉ,* பெ.(n.) உடல் வளைந்த மூதாளன்; bend old man. *"கூனற்கிழவன் கொடுக்கும் பண்யமதில்" (விறலிவிடு.).*

*[கூனல் + கிழவன்.]*

**கூனன்** *kūṉaṉ,* பெ.(n.) கூனலுள்ளவன் (பிங்.); humpback.

*[கூன் + அன்]*

**கூனன்முதுகு** *kūṉaṉ-mudugu,* பெ.(n.) **கூன்முதுகு** பார்க்க; see *kūṉ-mudugu.*

*[கூனல் + முதுகு.]*

**கூனாள்** *kūṉāḷ,* பெ.(n.) கூனி (நன். 276, மயிலை.); hunch backed woman.

*[கூன் + (அள்) ஆள்.]*

**கூனி**[1] *kūṉi,* பெ.(n.) 1. கூனலுள்ளவள்; hunch-backed woman. *"கூனி தன்னொடு மணமனை புக்கு" (சிலப்.3:171).* 2. இராமபிரான் முடிசூடு தலைச் சூழ்ச்சி செய்து தடுத்த மந்தரை; Mandarai a slave of Kaikēyi, who intrigued with her mistress on the day of Rāmā's coronation and prevented it. 3. வானவில்; rainbow. *"கிழக்கில் ஆனிமாதம் கூனிபோட்டால் அறுபதுநாள் மழையில்லை" (யாழ்ப்.).* 4. **கூனியிறால்** பார்க்க; see *kūṉiyiṟāl,* *"கூனிகொத்தி... கொக்கிருக்கும் பண்ணை" (குற்றா.குற.94).*

ம. கூனி; க. ககூனி,கூனி; தெ. கூனிதி; து. கடன, கூனெ; பட. கூனி

*[கூன் → கூனி.]*

**கூனி**[2] *kūṉi,* பெ.(n.) மீனமாதம் (பங்குனி); Paṅguṉi, the 12th Tamil month. March-April. *"ஆனி அடிகோலாதே கூனி குடிபோகாதே"*

*[கூன் → கூனி.]*

**கூனி**[3] *kūṉi,* பெ.(n.) கொலையாளி (இ.வ.); murderer.

*[குல் (கொல்) → குன் → கூனி.]*

**கூனிக்குயம்** *kūṉi-k-kuyam,* பெ.(n.) அரிவாள் (அக்.நி.); sickle.

*[கூனி (வளைந்த) + குயம். (கொய் → குய் → குயம்).]*

**கூனிப்பொடி** *kūṉi-p-poḍi,* பெ.(n.) ***கூனியிறால்*** பார்க்க; see *kūṉi-y-iṟāl.*

*[கூனி + பொடி.]*

**கூனிப்போ-தல்** *kūṉo-p-pō-,* 7 செ.கு.வி.(v.i.) மூப்பு முதலியவற்றால் உடல் வளைதல்; to be bent with age, to stoop from infirmity.

*[கூனி + போ.]*

**கூனியிறால்** *kūṉi-y-iṟāl,* பெ.(n.) இறால்மீன்வகை (M.M.373); common shrimp, as hunch backed.

**மறுவ.** கூனிப்பொடி

*[கூனி + இறால்.]*

**கூனிரும்பு** *kūṉ-irumbu,* பெ.(n.) 1. வளைந்த இரும்பு; lit., curved iron. 2. அரிவாள்; sickle. *"கூனிரும்பினிற் குறைத்து" (நைடத.நாட்டுப்.10).*

*[கூன் + இரும்பு.]*

**கூனு-தல்** *kūṉu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. வளைதல்; to curve, to become crooked, to bend down. *"கூனிக் குயத்தின் வாய்நெல் லரிந்து" (பொருந. 242).* 2. முதுகு வளைதல்; to become hunch-backed.

ம. கூனுக; க. கோத., கூட. கூனு; தெ.பட.கூனு; து கூனு; கூரு;

*[கூன் → கூனு.]*

**கூனை** *kūṉai,* பெ.(n.) 1. மிடா; large earthen boiler. *"கரும்பேந்திரத் தொழுகு சாறகன் கூனையின்" (கம்பரா. ஆறுசெல்.49).* 2. நீர்ச்சால்; baling bucket *"விழுந்த பேரைக் கூனைகொண் டமிழ்த்துவார் போல்" (குற்றா.குற.28).*

*[கூல் → கூன் → கூனை (வளைந்த மிடா).]*

**கூனைவண்டு** *kūṉai-vaṇḍu,* பெ.(n.) பூச்சிவகை (இ.வ.); a kind of small insect.

*[கூனை + வண்டு.]*

